ஓம்

பரப்பிரஹ்மணேநம:

ஆரியர் திவ்வியதேச யாத்திரையின் சரித்திர
இரண்டாம் பாகமாகிய

# தக்ஷண இந்தியா சரித்திரம்.

இஃது
கோயமுத்தூர் கலாநிதியின் பத்திரிகாசிரியரும், ஸ்ரீ பெரும்பூதூர்,
திருநாராயணபுரம், திருப்பதி, காஞ்சி, காசி, அவந்திகாதி திவ்ய
ஸ்தல மகத்துவங்கள், ஆஸ்திகமத சித்தாந்தம் முதலான மத
விருக்ஷம், கலியுகதர்மம், புனர்விவாஹ புண்ணியம்,
வேதாந்த சூரியோதயம், கோதையர் கொம்மி,
பெண்களின் சரித்திரம், பூர்வ இந்து சமயம்,
பிரம்மோபாசனு பத்ததி, ஆரியர் சங்
கீத சாஸ்திரம், சாமுத்திரிகா சாஸ்
திரம், தருக்கசாஸ்திரம்,
வட இந்தியா,
தக்ஷண இந்தியா
திவ்வியதேச
சரித்திரம், பலிஜவாரி
புராணம், இந்து பைபில் என்னும்
ஆரியர் சத்திய வேதம், விவசாய சாஸ்திரம்,
ஆரியர் பிரம்மசமய சரித்திரம், ஆரியர் ஆசாரம்,
ஷடி சித்தாந்தம் முதலிய கிரந்தங்களின் கர்த்தரும்,
மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஓர் அங்கத்தினருமாகிய

சேலம்-பகடால நரசிம்மலு நாயுடவர்களால்
இயற்றப்பெற்றது.


மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்பு செட்டிவீதி சென்னை.
1919
விலை ரூபா 5




நதுங்கு,
ழங்கிவந்தா
தல விவரங்
ிரயாணையால்
, வடநாடுகளை
தீர்த்ததலங்கள்

# முகவுரை



திவ்யதேச யாத்திரையினால் உண்டாகும் பெரும் பயனைப்பற்றி இப்புத்தகத்தின் முதற்பாகம் நூன்முகத்தில் விவரமாகவும், இப்புத்தகத்தின் நூன்முகத்திற் சங்கிரகமாகவும் எழுதியிருக்கின்றனன். இப் பயனைக் கருதியே நான் பரதகண்டத்தின் வடக்கு, கிழக்கு, மேற்குப் பாகங்களில் யாத்திரை செய்வதற்கு முன்பே, இத் தக்ஷிணதேசமாகிய இத் தென் இந்தியாவிலுள்ள அநேக சைவ வைணவ க்ஷேத்திரங்களுக்கு நேராகப் போய்க் கண்டும் கேட்டும் ஆநந்தித்து, அவற்றின் சில விசேஷ ஸ்தலங்களுடைய சரித்திர சாரங்களை எனது கலாநிதிப் பத்திரிகையில் பதிப்பித்துவந்ததன்றியில், ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம், ஸ்ரீபெரும்பூதூர், திருப்பதி, திருநாராயணபுரமென்னும் மேல்கோட்டை முதலான சில விசேஷ ஸ்தலங்களின் மஹத்துவங்களைப் புத்தகரூபமாகவும் பதிப்பித்தேன். அப்புத்தகங்களையும், ஆரியர் திவ்ய தேசயாத்திரை என்னும் வடதேச யாத்திரைப் புத்தகத்தையும் வாசித்த அன்பர்கள், இத்தக்ஷிண தேச திவ்ய ஸ்தலங்களின் சரித்திரத்தையும் எழுதிப் பதிப்பித்துத் தரும்படி நேரிலும், கடித மூலமாகவும் எழுதிக் கேட்டுக்கொண்டுவருவதால், அவர்கள் திருப்தியின் பொருட்டு இப்போது இந்த இரண்டாம் பாகத்தையும் பதிப்பித்தனன். வடதேசங்களில் ஹிந்தி, ஹிந்துஸ்தானி, பங்காளி, ரோகில்குந்தி, குஜராத்தி, மராட்டி முதலான பாஷைகள் வழங்கிவருவதால், அந்நாட்டிலுள்ள தீர்த்ததல மூர்த்திதல மகிமை முதலான விஷயங்களைத் தமிழ்நாட்டார் அறிந்துகொள்வது கஷ்டசாத்தியமென்றெண்ணி, அவற்றின் விஷயங்களைச் சற்று விவரமாக எழுதித் தெரிவிக்க நேர்ந்தது. தக்ஷிணதேசமாகிய இத்தென்னாட்டில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலான பாஷைகள் வழங்கிவந்தாலும், அப் பாஷைகளில் திவ்ய தீர்த்த திவ்ய ஸ்தல விவரங்களைப்பற்றிய விஷயங்கள் சகலரும் சுலப பிரயாசையால் அறியக்கூடியவைகளா யிருக்கிறபடியாலும், வடநாடுகளைவிட இத்தென்னாட்டில் மூர்த்திதலம் தீர்த்ததலங்கள்

ஏராளமாயிருப்பதாலும், இதை இதன் முதற் புத்தகத்தைப் போல விரித்து எழுதாமல் சங்கிரகமாகவே எழுதியிருக்கின்றனன். நான் தென்தேச திவ்ய ஸ்தலங்களில் யாத்திரை செய்தபிறகு, யாத்திரைக்காரர்களுக்கு உபயோகமாகச் சில சைவ வைணவ க்ஷேத்ர மான்மியங்கள் பதிப்பிக்கப்பட்டன. ஆயினும், அவைகளில் பெரும்பான்மையும் புராணங்களிற் கண்ட சங்கதிகள் மாத்திரம் இருக்கின்றனவேயொழிய, அவ்வவ் ஸ்தலத்தின் பூர்வஸ்திதி, அவைகளுக்குப் போக்குவரத்து செய்யும் வசதிகள் முதலியன சொல்லப்படவில்லை.

மேற்காட்டிய குறைவுகளை ஒருவாறு நீக்கக் கருதியே இப்புத்தகத்தை முக்கியமாகப் பதிப்பித்தனன். இப்புத்தகத்திற் கண்ட பெரும்பான்மையான ஸ்தலங்களுக்கு நான் நேரில் போய்க் கண்டும் கேட்டும் வந்திருப்பதோடு, கோயிற்புராணம், அநேக ஸ்தல புராணங்கள், திருப்பணி மாலை, அபிதானகோசம், அபிதானசிந்தாமணி, சிறப்புப் பெயரகராதி, கோயிலொழுகு, கங்காயாத்திரை தீபிகை, சிவக்ஷேத்ர மஞ்சரி, சிவக்ஷேத்ரமான்மியம், விஷ்ணு க்ஷேத்ரமான்மியம் முதலான நூல்களின் உதவியைக் கொண்டும், நேரில் போய்ப் பார்த்துவந்த சிலருடைய அநுபவங்களைக்கொண்டும் இதைப் பதிப்பித்தனன். இப்படிப் பதிப்பித்ததில் முன் புராணங்களிற் கண்ட சில ஸ்தலங்கள் மறைந்தும், சில அதிகமுமாயிருக்கின்றதற்குப் பின் வரும் கவியே போதுமான சாக்ஷியுமாகும்.

"ஈண்டு புகழ்ச்சோ ணாட்டி லொருநூற்றுத்
தொண்ணூ றீழத்திரண்டு
பாண்டியி னீரேழ் மலைநாட் டொன்று
கொங்கேழ் மகத மிருபத்திரண்டு
பூண்ட தொண்டை நன்னாட் டெண்ணான்கு
துளுவொன்று வடபுலத் தைந்தாக
வாண்ட சிவதல மிருநூற் றெழுபத்து
நான்கு தொகையு மன்றே."

இவற்றின் விவரம்:

(1) காவிரிக்கு வடகரையிலுள்ளவை 63, தென்கரையிலுள்ளவை 127.

(2) ஈழநாடு (இலங்கைத்தீவு) ஸ்தலங்கள் 2.

(3) பாண்டியநாடு (மதுரை, திருநெல்வேலி, ஜில்லாக்கள்) ஸ்தலங்கள் 14.

(4) மலைநாடு (மலையாளம் ஜில்லா) ஸ்தலம் 1.

(5) கொங்குநாடு (சேலம் கோயமுத்தூர் ஜில்லாக்கள்) ஸ்தலங்கள் 7.

(6) நடுநாடு (தென்னாற்காடுஜில்லா) ஸ்தலங்கள் 22.

(7) தொண்டைநாடு (செங்கற்பட்டு, வடஆற்காடு, ஜில்லாக்கள்) ஸ்தலங்கள் 32.

(8) துளுவநாடு (தென்கன்னடம் ஜில்லா) ஸ்தலம் 1.

(9) வடநாடு (ஹிமோத்கிரிகண்டம்) ஸ்தலங்கள் 5.

ஆக சிவஸ்தலங்கள் 274.

என்று சொல்லப்பெற்றிருக்கிறது. ஆனால், சில கிரந்தங்களில் 1008 சிவஸ்தலங்களென்று சொல்லப்பெற்றிருக்கிறது. இந்த 1008-ல் 274 போக, பாக்கி 734 ஸ்தலங்கள் மறைந்திருக்கும் இடங்கள் தெரியவில்லை. மேலும், 274 ஸ்தலங்களில் பாடல்பெற்ற ஸ்தலங்களும் பாடல் பெறாத ஸ்தலங்களும் சேர்ந்திருக்கின்றன. நிற்க,

இனி வைணவ ஸ்தலங்களின் விவரங்களை இதனடியிற் கண்ட கவிகளில் காணலாம்.

## அஷ்டசுயம்பு ஸ்தலங்கள்.

"சுயம்புத் தலங்கள்வை ணவக்ஷேத்தி ரத்திற்
சொல்லிய விருநான்காகுஞ் சாளக்கி ராமம்
நயமுள்ள வானமா மலைதிருவ ரங்கம்
நைமிசா ரணியமும் வதரியாச் சிரமம்
புயங்கபூ ஷணர்வாழும் வேங்கடமா மலையும்
புட்கரமும் ஸ்ரீமுஷ்ண மெனவெட்டு மிவற்றுள்
வயங்குமிறு தியில்ரெண்டு தலங்களாழ் வாரால்
மங்களா சாசனமி லாதவவை தாமே."

## மங்களாசாசனத் தொகை.

"திருநாட்டி லொன்றுபனி ரெண்டுவட பதியிற்
றிகழ்தொண்டை யிருபானி ரெண்டுமக தத்தின்
மருவுதல மிரண்டாஞ்சோ ணாட்டுவட கரையில்
வளரிருபத் தாறுந்தென் கரைதனிலீ ரேழுந்

## முகவுரை

தருநிகரும் பாண்டியின்மூ வாறுபதின் மூன்றுந்
நடுவரையி லாகவெழு நாட்டினிலாழ் வாரால்
பெருமைபெறு மங்களா சாசனம் பெற்ற
பேரின்ப மருடலங்க ளொருநூற்றி யெட்டே.”

### மங்களாசாசன ஸ்தலக்கோவை.

“மங்களாசா சனம்பெற்ற தலங்கள்பே ருரைக்கின்
மாதவர்வாழ் திருநாட்டில் வைகுண்ட மொன்றே
பிங்கலத்திற் பாற்கடலுஞ் சாளக்கி ராமம்
பேசரிய வதரியாச் சிரமம யோத்தி
கங்கைக் கரைக்கண்ட நைமிசா ரணியங்
கருதுதிரு வாய்ப்பாடி மதுரை திருப்பிரதி
சிங்கவேள் குன்றத்து டன்துவார கையும்
திருமலையோ டீராறுந் தொண்டைநாட்டிற் கேளே.”

“அத்திகிரி யடிவார மட்டபுயங் கத்தே
டாந்தன்கா வேளுக்கை பாடகநீ ரகமுஞ்
சித்திநிலாத் திங்கடுண்ட மூரகம் வெஃகாவும்
திருக்கார கங்கார்வா னங்கள்வ னூரே
வத்துபர மேஸ்வரவிண் ணகரமொடு பவழ
வண்ணம்புட் குழிகடிகை திருவெவ்வு ளூரே
நித்தநின்ற வூரல்லிக் கேணிவிட வெந்தை
நீர்மலையுங் கடன்மல்லை யிருபானி ரண்டே.”

“மகதத்திற் கோவலூர் வயிந்த்ரபுர மிரண்டே
மகிழ்வுதரு சோணாட்டு வடகரையிற் றில்லை
புகழ்பெற்ற திருக்காழி மணிமாடக் கோயில்
போற்றினரைக் காக்குமவை குந்தவிண் ணகரம்
செகம்புகழு மரிமேய விண்ணகர மன்பில்
செம்பொறசெய் கோயில்வண் புருஷோத்தத் துடனே
அகந்துலக்கும் நந்திபுர விண்ணகரந் தெற்றி
யம்பலமு மணிக்கூடந் தேவனூர் தொகையே.”

“திருக்காவ ளம்பாடி திருப்பார்த்தன் பள்ளி
திருவாலி வெள்ளக்கு ளம்இந்த ளூரே
திருவெள்ளி யங்குடிபுள் ளம்பூதங் குடியும்
திருவாத னூர்கூட லூர்கவித் தலமும்
திருப்பேர நகராரங்கம் பெரிய கோயில்
திருக்கரம்ப னூர்வெள்ள றையிருபத் தாறே

இருங்கா விரிக்குத் தென்கரையி லுறையூரு
மானதஞ்சை கண்டியூர் குடந்தையழுந் தூரே."

"சிறுபுலியூர் தலைச்சங்க நாண்மதியம் நறையூர்
திருவாழும் விண்ணகரம் கண்ணபுரம் நாகை
மறுவிலாக் கண்ணங்குடி திருக்கண்ண மங்கை
மானவர்வாழ் திருச்சேறை யுடனொருபா னான்கே
இறுதியிலாப் பாண்டிவள நன்னாட்டி லியம்பில்
எழில்சேருந் திருமெய்யம் திருக்கோட்டி யூரோ
டுறுதிதரும் புல்லாணி திருமாலிருஞ் சோலை
உயர்திருமோ கூர்கூடல் திருத்தண்கா லூரே."

"பதிதரைப்பா வனராக்கும் ஸ்ரீவில்லிப் புத்தூர்
பாங்குளவை குந்தந்தொலை வில்லிமங் கலமும்
கதியருளும் வரகுணமங் கைப்புளிங் குடியும்
காசினியிற் புகழ்பெற்ற திருக்குடந்தை நகரும்
மதிதவழுந் தென்திருப் பேரைதிருக் கோளூர்
மார னுதித்த திருக்குருகூர் வரமங்கை
நிதியளிக்கும் குறுங்குடியோ டொரொன்பா னாகும்
நீள்வரைநாட் டுத்தலங்கள் நிகழ்த்திடுவன் மாதே."

"திருவனந்த புரத்துடனே திருவண்பரி சாரம்
தேற்றுதிருக் காட்கரையுந் திருமூழிக் களமே
திருப்புலியூர் திருச்செங்குன் றூர்திருநா வாயே
திருவல்ல வாழ்திருவண் வண்டூர்வாட் டாறு
திருவிற்று வக்கோடு தேறுகடித் தானம்
தேடரிய வாறன்விளை யோடொருபான் மூன்றே
மருவினிய வெழுநாட்டி லாழ்வாரா தியரால்
மங்களசா சனம்பெற்ற தலநூற்றி யெட்டே."

மேற்கண்ட கவிகளால் விஷ்ணுஸ்தலங்கள் 108 என ஸ்பஷ்டமாகும். வேறு சில கிரந்தங்களில் பின்னும் பல ஸ்தலங்களிருப்பதாகச் சொல்லப்பெற் றிருக்கின்றன.

கால பேதத்தினால் சில ஸ்தலங்கள் மறைந்தும் சில ஸ்தலங்கள் அதிகரித்தும் இருக்கினும் இப்போது இத் தென் தேசத்தில் அடியிற்கண்ட சைவ வைணவ ஸ்தலங் களை பிரதானமானவைகளென்று கொண்டாடுகிறார்கள்.

சைவ ஸ்தலங்களில் பிரதானமானவை:- திருவொற்றி யூர், திருவேகம்பம் அல்லது காஞ்சி, சீகாளத்தி, திருவண்

ணுமலை, திருத்தணிகை, ஸ்ரீ ஜம்புகேஸ்வரம், தஞ்சை பிருகுதீஸ்வரர், திருவையாறு, சிதம்பரம், மதுரை மீனுட்சிசொக்கநாதர், பழனி, நஞ்சன்குடி, இராமேஸ்வரம், திருக்கழுக்குன்றம் முதலானவைகளாம். இச் சிவஸ்தலங்களைப்பற்றிப் பின்வரும் கவிகளை படிக்க விவரமாகும்.

திருவெண்காட்டுப் புராணத்தில்
அடியிற் கண்டபடி சொல்லப்பட்டிருக்கின்றன.

சிவஸ்தல சம்பந்தமான பாடல்கள்.

1. "தில்லைவனங் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனங் கூடல் முதுகுன்றம் நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும்."

2. "தெரிச னஞ்செயத் தில்லையிற் கமலையிற் செனிக்க
மரண மாய்விடக் கங்கைசூழ் வாரணு சியிலே
அருணை மாநகர் நினைத்திட முத்தியஞ் செழுத்தும்
பிரண வத்தொடெம் பேர்களு முரைக்கினும் பெறலாம்."

பாண்டிநாட்டு ஸ்தலங்கள்.

3. "கூடல் புனவாயில் குற்ருலம் ஆப்பனூர்
ஏடக நெல்வேலி யிராமேசம்—ஆடானை
தென்பரங்குன் றஞ்சுழியல் தென்திருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணம்."

அஷ்டவீரட்டங்கள்.

4. "பூமன் சிரங்கண்டி, அந்தகன்கோவல், புரம்அதிகை
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மாவழுவூர்
காமன் குறுக்கை, யமன்கட வூர், இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையு நதிகளுஞ் சூடிதன்சேவகமே."

சப்தவிடங்க ஸ்தலங்கள்.

5. "சீரார் திருவாரூர் தென்னுகை நள்ளாறு
காரார் மறைக்காடு காருயில்—பேரான
ஒத்ததிரு வாய்மூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்."

## சப்தஸ்தான க்ஷேத்திரங்கள்.

6. "நெய்த்தானம் பூந்துருத்தி நேர்கண்டி வேதிகுடி
துய்த்தார்சேர் சோற்றுத் துறைபழனம் மெய்த்தான
மானதிரு வையா றதனோ டெழுதலங்கள்
மானதிரு மத்தன் மனே."

விஷ்ணு ஸ்தலங்களில் பிரதானமானவை:- ஸ்ரீ பார்த்தசாரதி சன்னதி, காஞ்சிவரதராஜ சன்னதி, திருவெவ்வுளூர், ஸ்ரீ பெரும்புதூர், திருப்பதி வேங்கடாசல சுவாமி, சோழங்கிபுரம், ஸ்ரீரங்கம், உறையூர், வானமாமலை, ஸ்ரீ வில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, இராஜமன்னார் கோயில், கும்பகோணம், ஜனார்த்தனம், சிங்கப்பெருமாள் கோயில், ஸ்ரீவைகுந்தம், திருநாராயணபுரம், திருவநந்தபுரம், அஹோபிலம் திருக்கோயிலூர், திருக்கோட்டியூர் முதலானவைகளாம்.

## மங்களாசாசனத் தோகுதி.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய பத்து ஆழ்வார்கள், ஆண்டாள் ஆகிய இப் பதினொருவரால் மங்களாசாசனம் பெற்றவை 108 திவ்விய தேசங்கள். ஆனல் இந்த 108 ஸ்தலங்களுள் 70 ஸ்தலங்களுக்குத்தான் பதிகங்க ளிருக்கின்றன. மற்ற ஸ்தலங்களுக்குத் தனிப்பதிகங்க ளில்லை. ஆயினும், "வானிளவரசு வைகுந்தக் குட்டன் வாசுதேவன் மதுரைமன்னன்" இந்தப் பாசுரம் வைகுந்தத்துக்கும் வடமதுரைக்கும் ஒதியதாக எடுத்துக்கொள்கின்றனர். இப்படியே ஆங்காங்கு வரும் பாடல்களுக்கு இவ்விதம் பொருள்கொண்டு 108 ஸ்தலங்களுக்கும் ஆழ்வார்கள் பாடலை அமர்த்தியிருக்கின்றனர். மேற்சொல்லிய பதினொருவரால் ஒருதலமும், பதின்மரால் ஒருதலமும், எழுவரால் ஒருதலமும், ஐவரால் நான்கு ஸ்தலங்களும், நால்வரால் ஏழு ஸ்தலங்களும், மூவரால் ஒரு ஸ்தலமும், இருவரால் இருபத்தொரு ஸ்தலங்களும், ஒருவரால் ஏழுபத்திரண்டு ஸ்தலங்களும், ஆக நூற்றெட்டு ஸ்தலங்களும் மங்களாசாசனம் பெற்றிருக்கின்றன.

கோயமுத்தூர்
கலாநிதி
ஆச்சிரமம்.

இங்ஙனம்:
☞ செ. ப. நரசிம்மலு நாயடு.

---

# நூன்முகம்

ஆரியர் திவ்யதேச யாத்திரைச் சரித்திரம் என்னும் இதன் முதற் புத்தகத்தில் ஆரிய நாடாகிய இந்தியாவின் வடக்கு, கிழக்கு, மேற்கு பாகங்களிலுள்ள திவ்யதீர்த்த திவ்ய ஸ்தல திவ்ய பர்வதங்களின் சரித்திரத்தைச் சங்கிரகமாகச் சொல்லியிருக்கிறோம். இந்த இரண்டாம் புத்தகத்தில் ஆரிய நாட்டின் தென்பாகமாகிய டக்கனி அல்லது தென் இந்தியாவிலுள்ள திவ்யஸ்தல திவ்யதீர்த்த திவ்ய பருவதாதி பிரதேசங்களின் விவரங்களைச் சொல்லுகின்றோம். அப்படிச் சொல்லுமுன் இந்தத் தென்னிந்தியா மகம்மதிய ஆங்கிலேய அரசர்களுக்குச் சுவாதீனமாகுமுன் இது தொண்டைநாடு, மத்ய அல்லது மகதநாடு, சேரநாடு, சோழநாடு, தெலுங்குநாடு, பாண்டியநாடு, ஈழநாடு, பன்றிநாடு, புனல்நாடு, துளுவநாடு என்றுதி பெயர்களால் பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டுச் சுதேச மன்னர்களால் ஆளப்பட்டுவந்தது. பிறகு ஆங்கிலேயரால் இதற்குச் சென்னை ராஜதானி என்றும், இதற்குப் பிரதானபட்டணம் சென்னை நகரம் என்றும் வழங்கி வருவதால் இந்த ராஜதானியின் விவரத்தைச் சற்றுச் சங்கிரகமாகச் சொல்லவேண்டி வந்தது.

### சென்னை ராஜதானியின் சங்கிரக விவரம்.

இச் சென்னை ராஜதானி வடகிழக்குக்கோடிமுதல் தென்மேற்குக் கோடிவரையில் 950 மைல்கள் நீளமுள்ளதாயும், அதிகமாய் அகன்றிருக்கிற இடத்தில் அதன் அகலம் 450 மைல்கள் உள்ளதாயும், வடக்கில் பம்பாய் இராஜதானி, ஐதராபாத்து, மத்திய மாகாணங்கள், வங்காளக் கீழ் மாகாணங்களையும், மேற்கில் அரபிக்கடலையும், தெற்கில் இந்து சமுத்திரத்தையும், கிழக்கில் வங்காளக் குடாக் கடலையும், எல்லைகளாக உடையதாயும், ஆங்கிலேயர் ஆளுகைக் குட்பட்ட கஞ்சம், விசாகபட்டணம், கோதாவரி, கிருஷ்ணை, குண்டூர், நெல்லூர், சென்னைப்பட்டணம், செங்கற்பட்டு, தென் ஆற்காடு, தஞ்சாவூர், மதுரை, திருநெல்வேலி, தென் கன்னடம், மலையாளம், பல்லாரி, அனந்தபுரம், கடப்பை, கர்நூல், நீலகிரி, வட ஆற்காடு, சேலம்,

கோயமுத்தூர், திருச்சிராப்பள்ளி என்றுதி 22 ஜில்லாக்களையும், ஆங்கிலேய இராஜாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட கலெக்டர் முதலான காரியஸ்தருடைய ஆளுகைக்குள்ளான ஏஜென்ஸி டிராக்ட்ஸ் (Agency Tracts) என்று வழங்கும் கஞ்சம், விசாகப்பட்டணம், கோதாவரி இந்த ஜில்லாக்களின் சில பாகங்களையும், சுதேச மன்னர்க் குட்பட்ட திருவனந்தபுரம், கொச்சி, புதுக்கோட்டை, சேன்டூர் முதலான பாகங்களையும் உடையதாயும், சுமார் 1750 மைல் கடற்கரை நீளமுள்ளதாயும் இருக்கிறது. மேலும், கிழக்குக்கணவாய் மேற்குக்கணவாய் என்னும் மலைத்தொடர்ச்சிகளும், அத் தொடர்ச்சிகளில் சில சிறந்த சிகரங்களும், அவற்றிலிருந்து உற்பத்தியாகும் சில சிறந்த நதிகளும் இருக்கின்றன.

## இந்த ராஜதானியிலிருக்கும் முக்கியமான மலைகளும் ஆறுகளும்.

இந்த ராஜதானியில் கிழக்கு மேற்குக் கணவாய்களில் முக்கியமான மலைகள் எவையெனில்:—

நீலகிரிமலை:—இது கோயமுத்தூரை யடுத்த நீலகிரி ஜில்லாவில் இருக்கிறது. இதன் உன்னத சிகரமாகிய தொட்டபெட்டா என்பது 8728 அடிகள் உயரமுள்ளது. தென்மேற்குப் பாகத்தில் குண்டா (Kunda) என்னும் மலைத் தொடரும் இருக்கிறது. இந்த நீலகிரியைச் சார்ந்த உதகமண்டலம், குன்னூர், கோதகிரி முதலான விடங்களில் காப்பி தேயிலை சின்கோனு முதலானவை விசேஷமாக விளைவிக்கப்படுகின்றன.

உதகமண்டலமானது இந்த ஜில்லாவிற்குப் பிரதான பட்டணம். அங்கே டிஸ்ட்றிக்ட் கலெக்டர், சப் ஜட்ஜ் முதலானவர்களின் கச்சேரிகள் இருக்கின்றன. இது ராஜதானியின் கவர்ன்மெண்டுக்குக் கோடைகால வாசஸ்தானமாய் இருக்கிறது. அநேக ஐரோப்பிய தோட்டக்காரர்களும் வர்த்தகர்களும் இங்கு வசித்து வருகிறார்கள்.

சேர்வராயன்மலை:-இது சேலத்துக்கு அருகில் இருக்கிறது. இதின் சிகரமாகிய ஏற்காடு 5400 அடிகளுக்கு மேல் இருப்பதால் இதில் காப்பிக்கொட்டை முதலானவை

விளைவிக்கப்படுகின்றன. கோடை காலத்தில் அநேக ஐரோப்பியர்கள் வந்து தங்குகின்றார்கள். இங்கே ஒரு சப் மாஜிஸ்டிரேட் கச்சேரி இருக்கிறது. இதன் தொடர்ச்சியில் காளேரி, பச்சைமலை, ஜவ்வாதுமலை என்ற மலைச் சிகரங்கள் இருக்கின்றன. காளேரிமலை, 4000 அடிகள் உயரமுள்ளது. பச்சைமலை, 2000 முதல் 3000 அடிகள் உயரமுள்ளது. ஜவ்வாதுமலை, 5400 அடிகள் உயரமுள்ளது.

கோடைகானல் மலை, அல்லது வாரகமலை என்று சொல்லப்படும் பழனிமலை மதுரை ஜில்லாவில் இருக்கிறது. இதன் சிகரம் 8000 அடிகள் உயரமுள்ளது. இது இந்த ஜில்லாவின் வடகிழக்குத் திசையில் 54 மைல்கள் நீளமுள்ளது. இவ்விடத்தில் அநேக ஐரோப்பியர்கள் கோடைகாலத்தில் வந்து வசிக்கிறார்கள். இங்கு கவர்ன் மெண்ட் நக்ஷத்திர ஆபீசும், சப் மாஜிஸ்ட்ரேட்டு கச்சேரியு மிருக்கின்றன. இம்மலைத் தொடருக்குக் கிழக்கே சிறுமலை என்னும் சிகரம் இருக்கிறது. இது 3500 அடிகள் உயரமுள்ளது. இவ்விடத்தில் ஒருவித விசேஷமான வாழைப் பழங்கள் விளைகின்றன.

திருவண்ணாமலை:-இது தென் ஆற்காடு ஜில்லாவில் இருக்கிறது. இதன் உன்னத சிகரம் 2700 அடிகள் உயரமுள்ளது. இதில் ஒரு புறத்தில் கோட்டையும் மற்றொரு புறத்தில் சிறந்த தேவாலயமும் இருக்கின்றன.

திருப்பதி என்னும் திருவேங்கடமலை:—இது வட ஆற்காடு ஜில்லாவில் இருக்கிறது. இது 2500 அடிகள் உயரமுள்ளதாயும், சிறந்த விஷ்ணு தேவாலய முடையதாயும் இருக்கிறது.

கம்பாக்கம் மலை: இது செங்கற்பட்டு ஜில்லாவில் இருக்கிறது. இது 2500 அடிகள் உயரமுள்ளது.

வெலிக்கோண்டாமலை:-இது நெல்லூர் ஜில்லாவில் இருக்கிறது. இதன் உன்னத சிகரம் உதயகிரி 2000 அடிமுதல் 3000 அடிகள் வரையில் உயர்ந்திருக்கிறது.

பாபிகோண்டாமலை:-இது கோதாவரி ஜில்லாவில் இருக்கிறது. இது 3000 அடிகள் உயரமுள்ளது இதில் விசேஷ தேக்குமரங்களும் பாக்குமரச் சோலைகளும், அடர்ந்த காடுகளும் இருக்கின்றன.

பாலகோண்டா:-இது விசாகபட்டணம் ஜில்லாவில் இருக்கிறது. இது 5000 அடிகள் உயரமுள்ளது. இதற்குச் சமீபத்தில் கோல்கோண்டா என்னும் மலையும் இருக்கிறது.

மலையபருவதம்:-இது கஞ்சம் ஜில்லாவில் இருக்கிறது. இது சுமார் 3000 அடிகள் உயரமுள்ளது.

பச்சைமலை:-இது திரிசிராப்பள்ளி ஜில்லாவில் வடமேற்கில் இருக்கிறது. இது 2500 அடிகள் உயரமுள்ளது.

ஆனைமலை:-இது கோயமுத்தூர்க்குத் தெற்கே உள்ளது. இதன் சிகரம் 8800 அடிகளுக்குமே லிருக்கிறது. இதைச் சார்ந்த ஏலக்காய்மலையென்னும் ஒரு உன்னத பர்வதமும் இருக்கிறது.

குதிரைமுகம்:-இது தென்கன்னடம் ஜில்லாவில் இருக்கிறது. இது 6200 அடிகள் உயரமுள்ளது.

சந்தூர்மலை: இது பல்லாரி ஜில்லாவிற்கு மேற்கே உள்ளது. இதின் சிகரம் ராமதுர்க்க மெனப்படும்.

நல்லமலை: இது கர்நூல் ஜில்லாவில் இருக்கிறது. இதன் முக்கிய சிகரம் வேளிகோண்டாமலை. இது சுமார் 8800 அடிகள் உயரமுள்ளது. இதன் தென் பாபத்தில் அகஸ்தியர்மலை இருக்கிறது. இது 6200 அடிகள் உயரமுள்ளது.

வெள்ளியங்கிரிமலை அல்லது முத்திகுளம்மலை:-சுமார் 5000 அடிகள் உயரமுள்ளது. கோயமுத்தூருக்கும் மலையாளத்திற்கும் மத்தியில் இருக்கிறது.

பிளிகிரிரங்கன்மலை:-கோயமுத்தூர் ஜில்லாவைச் சேர்ந்த சத்தியமங்கலம், கொள்ளேகாலம் தாலுக்காக்களுக்கு மத்தியில் இருக்கிறது. இது சுமார் 3000 அடிகளுள்ளது. இவைகளன்றியில் மருதமலை, சென்னிமலை, தாயுமானவர் மலை, சின்ன திருப்பதிமலை முதலானவைகள் மிகச் சிறிய மலைகளேயாம்.

---

## காவிரி நதி.

கங்கை வட இந்தியாவிற்குப் பெரிய நதியாயினது போலக் காவிரி இந்த ராஜதானிக்குப் பெரிய நதியாம். குடகு நாட்டிலே மேற்குமலைத்தொடரைச் சேர்ந்த பிரமகிரியில்,

தலைக்காவிரி என்னும் இடத்தில் அது உற்பத்தியாகி, அந்த நாட்டின் ஊடாக வந்து, மைசூரின் தென்பாகங்களின் வழியாய்ப் பாய்ந்து, கோயமுத்தூரையும் சேலத்தையும் பிரிக்கும் எல்லையாகி, திரிசிராப்பள்ளி மார்க்கமாய்த் தஞ்சாவூரில் புகுந்து, பற்பல கிளையாய்ப் பிரிந்து, இந்து சமுத்திரத்திலே விழுகின்றது. இதன் நீளம் நானூற்று எழுபத்தைந்து மைல்கள். தென் தேசங்களுக்கெல்லாம் கங்கை போன்று இருத்தலால், இதனைத் தக்ஷிண கங்கை என்பர். இது போகும் வழி முழுவதும் பரிசுத்த ஸ்தானமாக மதிக்கப்படும். வருஷா வருஷம் துலா மாதத்தில், கங்காநதி பூமிக்கு உள்ளாக வந்து, காவிரியில் படிந்து தன்பால் தீர்த்தமாடிப் பாவ நிவர்த்தி செய்த யாத்திரைக் குழாங்களால் தனக்கு நேரும் தோஷத்தைப் பரிகரிக்கின்றதென்பது புராண வார்த்தை. காவிரிபுராணம் என்னும் ஒரு நூல் உள்ளது. அதில் காவிரி நதியின் பூர்வ சரித்திரம் பின் வருமாறு கூறப்பட்டிருக்கின்றது:—

அகத்திய முனிவர் முற்காலத்தில் மேலை மலைகளில் வசித்திருந்தபோது கவீரர் மகளாகிய காவிரியை மணம் புரிய விரும்பினார். காவிரி முனிவர் பிரமகிரியிலே ஐம்புலனையும் அடக்கி யோகத்தில் இருந்தார். காவிரி தன் பிதாவிற்கு உலகத்திலே பெருங் கீர்த்தி உண்டாகவும், சகல ஜனங்களும் அவரைத் துதிக்கவும் தக்கதாய்த் தான் ஒரு நதியாய் அவதரித்து, பூமிக்கு நன்மை பயக்கும்படி மிக்க ஆசை பூண்டிருந்தாள். இந்த வரம் தனக்கு அளிக்குமாறு கடவுளைப் பிரார்த்தித்தாள். கடவுளும், அவள் வேண்டியபடி ஒரு பெரு நதியாய்ப் பிரகாசிக்க வரம் அளித்தனர். அகஸ்தியர் அவளைத் தனக்கு மனையாளாகும்படி வருத்தியபோது, அவள் தன் மனக்கோளை மாற்றப் பிரியம் இல்லாமல் முதலிலே மறுத்தாள். பின்னர், தன்னை எந்நாளாயினும் அவர் தன்னந் தனியாயிருக்க வருவாராயின், தான் அவரை விட்டு அகலுதற்கு அவரிடம் விடை பெற்றுக்கொண்டு சம்மதித்தாள்.

நெடுங்காலம் அகஸ்தியர் தமது வாக்கு அழியாமல் அவளைப் பிரியாமல் இருந்தார். ஒருதினம் வீட்டிலே தமது சிஷ்யரை வைத்துவிட்டு, அவர் பிரமகிரியிலே தமது திருக்குளத்திற்குச் சமீபத்திலுள்ள நதியில் நீராடப்போனார். போனவுடனே, அவர் மனைவி குளத்திலே விழுந்து மறை

ந்து, ஒரு திவ்விய நதியாயினள். அது குளத்தினின்று வழிந்து பெருகத் தொடங்கியது. அகத்தியருடைய சிஷ்ர் அதனை ஓடாமல் சிறைசெய்ய முயல, அது தரையின் கீழாய் ஊடுருவிப்பாய்ந்து சிறிதுதூரம் சென்று வெளியே புறப்பட்டது. அகத்தியர் ஓடோடி வந்து தம்மை மன்னித்து இல்வாழ்க்கையை நடத்தியிருக்கும்படி தமது பத்தினியை இரந்தார். அவள் ஒருபுறம் தன் விருப்பை ஒழிக்கவும், மறுபுறம் அகத்தியர் மனத்தை வருத்தவும் மாட்டாதவளாய் இறுகினாள். ஒருகூறு காவேரி நதியாய்ப் பெருகியது. மற்றைக் கூறு அகத்தியர்தம் பத்தினி வடிவாய் அவர்பால் தங்கியது.

இக்கதை ஸ்காந்தத்தில் உள்ளதாகக் காவிரி புராணம் சொல்லினும், ஸ்காந்தம் சங்கரசங்கிதை சிவரகசியகண்டம் அசுரகாண்டத்தில், அது வேறுவிதமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. அதனை இங்கே கூறுகின்றோம்:—

அகத்தியர் பொதியமலையிலே வசிக்கும்படி தக்ஷிணம் நோக்கி வந்தபோது தமது நித்திய பூஜாகிரியைகளுக்கு உபயோகிக்கும்பொருட்டும், பரிசுத்ததீர்த்தம் தென்றிசைக்கும் ஒன்று உண்டாகும்பொருட்டும், பரமசிவன் உத்தரவு பெற்றுக் கயிலாயத்திலிருந்த சப்த நதிகளில் ஒன்றான பொன்னி நதியைத் தமது கமண்டலத்தில் அடைத்துவந்தார். அக்காலத்தில் சூரனது கொடுமைக்கு அஞ்சி, வேற்றுரு அமைந்துவந்து, இந்திரன் சீகாழியில் ஒரு புஷ்பவனம் வைத்து, அதன் மலர்களால் சிவபெருமானை அர்ச்சித்துக்கொண்டிருந்தான். மழை இன்மையால் வனத்தில் உள்ள மரம் அனைத்தும் வாடி இந்திரனுடைய பூஜைக்குப் புட்பம் இல்லாமற்போயிற்று. அகத்தியர் பொன்னிநதியை ஒரு கமண்டலத்தில் அடைத்துக்கொண்டு கொங்குதேசம் வரைக்கும் வந்திருப்பதை அவன் நாரதரால் அறிந்து, அக்கமண்டலத்தைக் கவிழ்த்துத் தன் நந்தவனத்திற்கு நீர் பெருகிவரச் செய்யுமாறு விநாயகரை வணங்கி வேண்ட, அவர் ஒரு காக்கை வடிவாய்க் கமண்டலத்தில் உட்கார்ந்து அதனைக் கவிழ்த்துவிட்டார். அதிலிருந்து நீர் பெருகிக் காவிரியாய்ப் பாய்ந்துகொண்டிருக்கிறது.

காவிரியாறு ஓர் தடாகத்தில் உற்பத்தியாவதற்கும், தரையின்கீழ்ச் சிறிதுதூரம் போய் அப்புறம் வெளிவந்து பாய்வதற்கும், அகத்தியர் வசத்திலிருந்து தோற்றியதற்

கும் இணங்க காவிரிபுராணக் கதை முற்காலத்தில் ஏற்பட்டிருக்கலாம்.

தக்ஷிண தேசத்தின்கண் உள்ள சகல ஜாதியாருக்கும் காவேரி ஒரு திவ்யதீர்த்தமாய் இருப்பினும், அதன் உற்பவஸ்தானமான தலைக்காவிரி குடகமலையில் இருப்பதனால், காவிரியுற்சவம் குடகநாட்டாரால் மகா முக்கியமாகக் கொண்டாடப்படுகின்றது. மற்றெந்த உற்சவத்திலும் அதுவே அவர்களுக்கு விசேஷமானது.

காவிரி உற்சவம் ஐப்பசிமாதத்தில் நடக்கும்; அது தான் மலையாள தேசத்தாருக்கு மழைகால இறுதி. குடகநாட்டாருக்கு அதுவே மிகக்கொடிய மாரியாம். அது மாறி, தக்ஷிணயனமுடிவாகிய பழைக்காலத்தில் வெகு நாளைக்குக் கண்ணுக்குத் தோற்றாத சூரியன் அப்பொழுது நல்ல பிரபைகொண்டு ஒளிர்வன். கழனிகளெல்லாம் நெல் விளைந்து தலை சாய்ந்து பார்த்தவர் மனம் களிக்கச்செய்யும். தேசம் முழுதும் மலைகளிலும் காடுகளிலும் புல் வளர்ந்து பச்சென்றிருக்கும். புதுச்சல வரவினால் நீர் ஊற்றுக்கள் யாவும் உன்னதமாய்ப் பாய்ந்து ஒலிக்கும். உற்சவத்திற்குக் குடகநாடு முழுவதிலும் ஒவ்வொரு வீட்டிலுமிருந்து இரண்டொருவரேனும் தலைக்காவேரிக்கு வராமலிரார்.

மலையாளம் துளுவம் மைசூர் என்ற இத்தேசங்களிலிருந்து அத் திவ்யக்ஷேத்திரத்திற்கு யாத்திரைக்காரர் ஆயிரக்கணக்காக வந்தபடியே இருப்பார்கள். அவர்களுள் அநேக பிராமண விதவைகள், தமது அமங்கலிய நிலைமைக்கேற்கக் கறுப்புப்புடவையாவது, ஊதாப்புடவையாவது தரித்துக்கொண்டு முண்டிதமாய் வருவார்கள். இவர்களும், சோலைகளிலும் ஆற்றங்கரைகளிலும் முன்வந்து இறங்கி இருந்தவர்களும் பசுமையான மலைச்சாரலின் வழியாக ஏறிப் பவனி செல்வார்கள். செல்லும்போது தலைக்காவிரிமலை கண்ணிலே தென்படும். பின்பு மலையடிவாரத்தில் தாமிர ஒட்டால் வேய்ந்த பாகமண்டலாலயம் தெரியும். போகிறவர்கள் பல்லாயிரம், வருகிறவர்கள் பல்லாயிரமாக அவர்கள் இரைச்சல் கடல் முழக்கிலும் அதிகமாய் ஒலிக்கும். பாதை இருபக்கமும் கைக்கூடாரங்களிலும் பாய்ப் பந்தல்களிலும் சிறு கடைக்காரர் தம் வியாபாரப் பொருள்களைத் தமக்கு முன்னே பரப்பிவைத்துக்கொண்டிருக்கக் காணலாம்.

நாழிகைக்கு நாழிகை ஜனத்திரள் மேன்மேலும் அதிகமாகும். அடர்ந்த காடுகளூடாகவும் மலைச் சிகரங்களுக்கு நடுவாகவும் அநேக நடைவழிகள் அங்கே வருவதற்கு உண்டு. ஆதலால் நாலுதிக்கிலுமிருந்து பல பாதையாலும் ஜனங்கள் இறங்கிவந்தவண்ணமே இருப்பார்கள். யாத்திரை வருபவர்கள் 'நாராயணா! ஓ நாராயணா!' என்று கூவ, மலை முழுவதிலும் உள்ளவர்களெல்லாம் அதை அடுத்துச் சொல்ல, பின்னே வரும் கூட்டங்களும் அதையே கூற, நாராயண சப்தமே எங்கும் வியாபித்து அதிர்ந்து ஒலிக்கும். ஆற்றின் அடி ஊற்றினைச் சூழ நான்கு பக்கமும் கல்லினால் அணை கட்டியிருக்கிறது. அதிலிருந்து ஜலம் முப்படிச் சதுரமுள்ள ஒரு குளத்தில் இரண்டரையடி மட்டத்திற்குத் தண்ணீர் எப்பொழுதும் நிறைந்திருக்கும். அதற்குப் பக்கத்தில் கணபதீசுவரருக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஒரு சிறிய சதுராலயம் உளது. தீர்த்தம் முகூர்த்தம் வந்த அளவில், அது எப்போது வரும் எப்போது வருமென்று ஆவலோடு காத்திருந்த ஜனங்களுக்கு ஆசாரியர் சைகை காட்டுவர். உடனே இளையோரும் முதியோருமாகிய ஆண் பெண் அனைவரும் தாறுமாறாய் ஒருவரோடு ஒருவர் இடிபட நெருங்கி ஓடி, தீர்த்தத்தில் இறங்கி, மும்முறை மூழ்கி மும்முறை ஆசமனம்பண்ணி எழுந்து, கோயில் வாசலில் உட்கார்ந்திருக்கும் ஆசாரியரை வணங்கி ஏதோ தக்ஷிணை நல்குவார். அவ்வாறு வணங்கினோர் அனைவர் தலையிலேயும் ஆசாரியர் தீர்த்தம் புரோக்ஷித்து ஆசீர்வதிப்பார். அவ்விடம்விட்டு அகலுமுன் அவர்களில் அநேகர் நாடியுடையதோர் வாடித்தண்டிலே அந்தத் தீர்த்தத்தில் சிறிது ஜலம் எடுத்து அடைத்துத் தமது வீட்டார் இனத்தாருக்குக் கொண்டுபோய்க் கொடுப்பர். தீர்த்தமாடப்போகாது வீட்டிலிருப்போரும் குடகுநாட்டிலே அன்றையதினத்தை ஒரு பொருளாகக் கொண்டாடி ஆசரிப்பார். அரிசிமாவிலே வாழைப்பழம் கலந்து பிசைந்து தோசை சுட்டு, சில தோசையை நெற்கழனிகளிற் கொண்டுபோய், காவிரிக்குக் காணிக்கையாகக் கோல்களிற் கோத்து நிறுத்திவைப்பார். மிகுந்த தோசையையே அன்றைக்கு வீட்டில் யாவரும் ஆகாரமாக உண்பது. அத்தினத்தில் யாவரும் ஒரு லௌகிகவேலையும் செய்வதில்லை. அநேக கிருகங்களில் பசுவிற்குத் தோத்திரமாகக் கோவின்கதை ஓதப்படும். அக்கதையை இங்கே சுருக்கிச் சொல்வோம். முன் ஒருகாலத்தில் காட்டி

லே பசுக்கூட்டம் ஒன்று புல் மேய்துகொண்டு இருக்கும்போது கூட்டம் முழுதும் பயந்து திகிலடைய, ஒரு வேங்கைப்புலிவந்து பசுக்களுக்கிடையிலே பாய்ந்தது. பயம் அதிகரித்துத் தடுமாறி, அவை அனைத்தும் போன போன திசையிலே ஓடிவிட, ஒருபசுமாத்திரம் புலி வாயில் அகப்பட்டுக்கொண்டது. அப்பசு மனோதிடத்துடன் புலியை நோக்கி 'நீ என்னைத் தின்ன விரும்பினாய். அப்படியே செய். ஒருகணப்பொழுது எனக்கு விடைகொடு. நான் என் கன்றினிடம் போய், கடைசியாய் அது என் பால் உண்ணுமாறு ஊட்டி, அதைப் பார்த்துக்கொள்ளும்படிக்கு என் சிநேகிதரிடம் ஒப்புவித்து வருகிறேன்' என்றது. புலி தன் வாய்க்கு இரையாய் அகப்பட்ட பசு பேசிய தைரியத்தைப் பார்த்து அதிசயமுற்று, சற்றே மனம் இரங்கி, கன்றுக்குப் போய்ப் பால் அருத்தி ஒழுங்கு செய்தவுடனே அது மீளவும் தன்னிடம் வருகிறதாகச் சத்தியம் பண்ணித் தரும்படி கேட்டது. 'சிறிது பொழுதில் மீள்வேன்' என்று காவிரி நதியின்பேரில் ஆணையிட்டுக்கொடுத்து, பசு தனது கன்றினிடம் போயிற்று. போய்க் கன்றுக்குப் பாலூட்டி, தன்னிடம் நண்புள்ள சில பசுக்கள் வசம் கன்றை ஒப்புவித்து, இது பால் குடிக்கும்படிப் பின்புறமாய் வந்தால் காலால்உதைக்காமலும் முன்புறமாய் வரின் கொம்பால் முட்டாமலும் இருக்கும்படி அவைகளை வேண்டிக்கொண்டு, புலியிடம் போகத் திரும்பிற்று. அப்பொழுது மற்றைப் பசுக்கள் அதனைப் 'போகவேண்டாம்' என்று மிக இரந்து வேண்டியும், அது 'காவேரியின் பேரால் செய்த சத்தியத்தை மீறுவதிலும் சாதலே மேலானது' என்று சொல்லி, புலியின்பால் வந்து, தான் இப்படித் தாமதம்செய்து அதனை அதுகாறும் பசியாயிருக்கவைத்ததைப்பற்றித் தன்னை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டது. இவ்வளவு யோக்கியமும் சற்குணமும் உள்ள ஆவினது சன்னிதியில் புலிக்கு பயம் மேலிட்டது. முன்செய்த கொடுமைகள் யாவும் ஒன்றன்பின் ஒன்றாக அணிஅணியாய் ஒரு சங்கிலிக்கோவைபோல அப்புலியின் மனத்தில் தோன்றின. தான் கொன்று தின்ற பசுத்தொகை முற்றும் அதன் ஞாபகத்தில் வரலாயிற்று. சன்மார்க்கமே உருவாகக்கொண்டு ஜன்மம் எடுத்தாற்போன்ற இப்பசுவை வதைத்தால் தன் பாவங்கள் ஒரு வழியாலும் பரிகரிக்கப்படா என்று சொல்லி, அக் கொடிய புலி பசுவை மறுபடியும் அதன் கன்றினிடம் போகுமாறு உத்தரவு செய்து

தன் உடம்பின் வலியெல்லாம் சேர்த்துமேனோக்கி ஆகாயத்தில் உயரப்பாய்ந்து, அப்பசுவின் பாதத்திலே விழுந்து இறந்தது" என்று ஒரு கதை சொல்லப்பட்டு வருகின்றது. இதனால் இக் காவிரிநதியின் மகத்துவம் ஸ்பஷ்டமாகும்.

---

## தலைக்காவேரிக்கருகிலிருக்கும்
## ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்தலம்.

தலைக்காவேரியிலிருந்து காட்டு மார்க்கமாய்ச் சுமார் 35 மைல்கள் தூரத்திலும் அங்கிருந்து வண்டி மார்க்கமாக 50 மைல்கள் தூரத்திலும் இந்த சுப்பிரமணியர்கோயிலிருக்கின்றது. இக் கோயிலைச் சுற்றிலும் பயங்கரமான வனங்களும் காடுகளும் இருக்கின்றன. அவைகளிலிருந்து வடிந்து வரும் சாருணாநதி இக்கோயிலைச்சுற்றி யோடுகின்றது. இந்தக்கோயில் பிராகாரத்திற் குள்ளாக அநேகர் வந்து சந்தர்ப்பணம் செய்து போகிறார்கள். பஞ்சவடியைப்போல இங்கு அநேக பிராமணர்கள்வந்து சுப காலக்ஷேபம் செய்கிறார்கள். இது தபசு செய்வோர்களுக்குச் சிறந்த ஸ்தலமென்று சொல்லலாம்.

## காவிரி நதியின் தற்கால ஸ்திதியும் உபயோகமும்.

இந்தக் காவிரியானது குடகு நாட்டில் உற்பத்தியானாலும் அதன் ஜலம் அந்த நாட்டின் பயிர் பச்சைகளுக்கு விசேஷமாக உபயோகப்படுகிறதில்லை. பிறகு அது மைசூர் இராஜாங்கத்தில் பிரவேசித்து வரும்போது அந்த இராஜாங்கத்தாரால் அதற்குச் சுமார் 12 அணைகள் கட்டப்பட்டும், அவைகளால் தேக்கப்பட்ட ஜலத்தைச் சுமார் 1,12,000 ஏகரா நிலத்திற்குப் பாய்ச்சப்பட்டும், அதனால் அந்த இராஜாங்கத்தாருக்குப் பிரதிவருஷம் 7 லக்ஷம் ரூபாய் வருமானத்தைத் தருகிறது.

பிறகு இந்தக் காவிரியானது சிவசமுத்திரத்திற் கருகில் இங்கிலீஷ் இராஜாங்கத்தில் பிரவேசித்து, கோயமுத்தூர் சேலம் ஜில்லாக்களுக்கு எல்லையாக ஓடினாலும் அவ்விரண்டு ஜில்லாக்களும் மேட்டுப்பாங்கான நிலமானபடியால் அந்த நதியின் ஜலம் உபயோகப்படுகிறதில்லை.

பிறகு இந்த நதியானது பவானி அமராவதி மணி முத்தாறு முதலான கிளை நதிகளின் ஜலத்தைப் பெற்று பல்கிப் பெருகி, மோகனூர்க் கருகில் அகண்ட காவிரி என்னும் பெயரைப் பெற்றுத் திரிசிராப்பள்ளி ஜில்லாவைச் சார்ந்த எலமனூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சில பர்லாங்கு தூரத்தில் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து வடபிரிவு காவிரி என்னும் பெயராலும் - இடபிரிவு கொள்ளிடம் என்னும் பெயராலும் ஓடி, திருச்சி-தஞ்சை-தென் ஆற்காடு ஜில்லாக்களின் 90,000 ஏக்ரா நிலத்திற்கும், பிரான்சு கவர்ன்மெண்டு இலாகாவில் 27,000 ஏக்ரா நிலத்திற்கும் தண்ணீர் பாய்ச்சப்பட்டு வருகிறது.

எப்படியெனில், இந்தக் காவிரியானது இப்படிப் பிரியுமிடத்தில் ஒரு மேலணையானது கட்டப்பெற்றிருக்கிறது. இந்த அணைக்குக் கீழே சுமார் 18 மைல்கள் தூரத்திலும் திருவரம்பூர் ஸ்டேஷனுக்கு ஐந்து மைல்கள் தூரத்திலும் பூர்வத்தில் ஒரு சோழராஜனால் கட்டப்பெற்ற பெரிய அணை இருக்கிறது. மேலே சொன்ன மேலணைக்கும் இந்தப் பெரி அணைக்கும் இடையில் காவிரியின் ஜலமானது பல வாய்க்கால்களின் வழியாய் வெள்ளாறோடு சேர்ந்து பல விடங்களுக்கும் நீர் பாய்ச்ச $6\frac{1}{2}$ அடிகள் உயரமும் 55 மதருகளுடன் 1830ல் சர் ஆர்தர் காட்டன் என்பவரால் கட்டப்பட்டிருக்கின்றன. இதற்குக் கீழே சுமார் 60 மைல்கள் தூரத்தில் ஒரு கீழணை கட்டப்பட்டு அங்கு தேக்கும் ஜலம் கொள்ளிடத்தின் இடதுபாகத்தில் 1,10,000 ஏக்ரா நிலத்திற்குப் பாய்ச்சப்படுகிறது. காவிரியின் வலதுபக்கத்துக் கால்வாய்களின் ஜலத்தினால் சீயாழி தாலுக்காவில் சுமார் 24,000 ஏக்ரா நிலம் பாய்ச்சப்படுகிறதும் அன்றியில் இடது பக்கத்து வாய்க்கால்களின் ஜலம் வீராணமென்னும் பெரிய குளத்தில் விழுந்து அதற் கருகிலிருக்கும் சுமார் 50,000 ஏக்ரா நிலத்திற்குப் பாய்ச்சப்படுவதோடு அருகிலிருக்கும் சத்திய தோப்புக்குப் பக்கத்தில் சுமார் 35,000 ஏக்ரா நிலத்திற்குப் பாய்ச்சப்படுகிறது.

இத்யாதி விவரங்களினால் இந்தக் காவிரியின் ஜலமானது சுமார் 11,34,000 ஏக்ரா அதாவது சற்றேறக்குறைய 12 லக்ஷம் ஏக்ரா நிலத்திற்குப் பாய்ந்து லக்ஷக்கணக்கான குடிகளைக் காப்பாற்றி வருவதோடு கவர்ன்மெண்டாருக்கும் அதிக வருமானத்தைக் கொடுத்துவருகிறது. இந்தக்

காவிரியின் ஜலம் இப்படிச் செல்வாகிவிடச் சீகாழிக்கடுத்த காவிரிப்பட்டணம் அல்லது காவிரி சமுத்திர சங்கமத்தில் ஒரு சிறு சாக்கடைபோல் ஓடி சமுத்திரத்தில் விழுகிறது. இப்படி உபயோகமாகும் காவிரியின் ஜலத்தை இப்போது மைசூர் ராஜாங்கத்தார் கண்ணம்பாடி என்னும் இடத்தில் சுமார் 15,000,000 ரூபாய் செலவில் ஒரு பெரிய அணையைக் கட்டி, 3700 கோடி கன அடி ஜலத்தைத் தேக்கி அதனால் மின்சார சக்திபெற்று அச் சக்தியை கோலார் முதலான விடங்களிலுள்ள பொன் சுரங்கங்களுக்கு உபயோகப்படுத்தி, அந்தத் தேக்கமான தண்ணீரினால் ஏராளமான ஏக்ரா பூமிக்குப் பாய்ச்சிப் பயிரிடப் போகிறார்கள். இதன் விவரம் இதனடியில் காணலாம்.

---

## காவிரியின் கண்ணம்பாடி நீர்த்தேக்கம்.

மைசூர் சமஸ்தானத்தில் கண்ணம்பாடி என்கிற இடத்தில் மைசூர் கவர்ன்மெண்டார் கட்டிவரும் நீர்த்தேக்கத்தைப்பற்றி அதன் சாராம்சத்தை இங்குப் பதிப்பிக்கிறோம்.

காவிரியாற்றின் நீரைத் தேக்குவதற்காகக் கண்ணம்பாடியில் மைசூர் கவர்ன்மெண்டார் கட்டிவரும் பெரிய தேக்கத்தைப்பற்றி அந்த கவர்ன்மெண்டுக்கும் சென்னை கவர்ன்மெண்டுக்குமுள்ள விவாதத்தைத் தீர்ப்பதற்காக நியமிக்கப்பட்ட மத்தியஸ்தர் செய்த தீர்ப்பை இந்தியா கவர்ன்மெண்டின் அனுமதியைப் பெற்ற பிறகு பகிரங்கப்படுத்துவதாகச் சென்னை கவர்ன்மெண்டார் யோசித்துக் கொண்டிருக்கிறார்களென்று சமீபத்தில் உதகமண்டலத்திலிருந்து வந்த தந்தி சமாச்சாரமொன்றால் தெரிந்தது. முக்கியமான எல்லா தஸ்தாவேஜிகளையும் வெளியிடுவார்களென்று நம்புவோம். சென்னை மாகாணத்தின் நீர்ப்பாய்ச்சல் வசதிக்கும் பிரஸ்தாப அணைக்குமிருக்கும் சம்பந்தத்தை உத்தேசித்து, அந்தப் பிரமாண்டமான வேலையின் முக்கியாம்சங்களையும், இரண்டு கவர்ன்மெண்டுக்குமுள்ள தகராறுகளையும், அந்த வேலையையும் மத்யஸ்தரின் தீர்ப்பையும்பற்றித் தஞ்சாவூர் திரிசிராப்பள்ளி மிராசுதார்களுக்குத் தெரிவிக்கவேண்டிய முக்கிய அம்சங்கள் என்னவென்பதையும் இன்னொரு தடவை எடுத்துச் சொல்வது பொருத்தமாகவிருக்கும். தீர்ப்பின்மேல்

சென்னை கவர்ன்மெண்டார் அப்பீல்செய் திருப்பதாகச் சில காலமாகத் தெரியும். தீர்ப்பின் சில அம்சங்களைப்பற்றி மைசூர் கவர்ன்மெண்டாரும் அப்பீல் செய்திருக்கிறார்கள். அப்பீலைத் தயார் செய்யும்படி நியமிக்கப்பட்ட மிஸ்டர் S. D. பியேர்ஸ் என்றவர் என்ன செய்திருக்கிறாரென்று பொது ஜனங்களுக்குத் தெரிய வழியில்லை. மத்யஸ்த நடவடிக்கை நடந்துகொண் டிருந்தபொழுது, 1892-ம் வருஷத்தில் இரண்டு கவர்ன்மெண்டுகளுக்கும் நடந்த எக்ரிமெண்டை எப்படி அருத்தம் செய்கிறதென்ற விஷயத்தில் அதிக கவனத்தைச் செலுத்திச் சட்ட சம்பந்தமாக உள்ள வாதங்களை அசட்டை செய்துவிட்டதாகத் தெரிகிறபடியால், இப்பொழுதேனும் இந்தியா கவர்ன்மெண்டார்முன் சட்ட சம்பந்தமான வாதங்களை வற்புறுத்த வேண்டியது அவசியமாகும். வியவகாரத்தைக் குறுக்கிவிட்டது மைசூர் கவர்ன்மெண்டாரின் தப்பல்ல. மத்தியஸ்த நடவடிக்கை ஆரம்பித்த காலத்தில் எக்ரிமெண்டையே புனராலோசனை செய்யும்படி அவர்கள் வற்புறுத்தியதாகத் தெரிகிறது.

## அணை கட்டும் மாதிரி.

அணையைப்பற்றிச் சிலவிவரங்கள் அடியிற் சொல்லப் படுகின்றன. இப்பொழுது மைசூர் திவானாக விருக்கும் மிஸ்டர் விசுவேசுவரய்யா மைசூர் சீப் எஞ்சினீரா யிருந்த காலத்தில் எழுதிய ரிபோர்ட்டி லிருந்தும், அணையைக் கட்டும் விஷயத்தில் சீப் எஞ்சினீயராக விருக்கும் மிஸ்டர் L. சுப்பராவின் ரிபோர்ட்டிலிருந்தும் இந்த விவரங்கள் சேகரிக்கப்பட்டன.

காவிரியாறு மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகிறது. குடகு நாட்டின் முக்கிய பட்டணமாகிய மேர்காரா என்கிற இடத்திலிருந்து தென்மேற்குத் திக்கில் அதன் உற்பத்தி ஸ்தானம் 20 மைல்தூர மிருக்கிறது, மைசூர் சமஸ்தானத்தில் மாத்திரம் ஆற்றின் நீளம் 150 மைல். மேலேசொன்ன மேர்காரா என்கிற இடத்துக்கு 20 மைல் தூரத்தில் தென்மேற்குத் திக்கில் தலைக்காவேரி என்கிற இடத்தில் காவிரி உற்பத்தியாகி, குடகுவழியாக 50 மைல் தூரஞ்சென்று, பிரேஸர்பேட்டை என்கிற இடத்தில் மைசூர் சமஸ்தானத்துக்குள் நுழைகிறது. அங்கிருந்து மைசூர் நாட்டின் வழியாகத் தென்கிழக்காக 150 மைல் தூரம் ஓடி, சிவசமுத்திரத்தி லிருந்து அர்க்காவதி சங்க

மம் வரையில் மைசூர் நாட்டுக்கும் சென்னை மாகாணஜில்லாக்களுக்கும் எல்லையாக 30 மைல்தூரம் ஓடுகிறது. கண்ணம்பாடிக்குச் சற்று மேலாக ஹேமவதியும் லட்சுமணதீர்த்தமும் காவிரியில் கலக்கின்றன. அவ்விரண்டாறுகளும், காவிரியைப்போலவே மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகின்றன. அந்த இரண்டு நதிகளும் காவிரியுடன் சங்கமமாகும் இடத்துக்குக் கீழ் எடத்தூரிலிருந்துதான் பிரஸ்தாபத் தேக்கம் ஏற்படும். அதற்கு ஆதரவாகக் கண்ணம்பாடியில் குறுக்கணை ஒன்று ஏற்படும். குறுக்கணைக்குத் தெற்காக ஒரு சுவர் கட்டப்படும். அதிலுள்ள துவாரங்களின் வழியாகவும் அதன்மேல் வழிந்தும் தேக்கம் நிறைந்த பிறகு அதிக ஜலமானது வெளிப்படவேண்டும். சிவசமுத்திரத்திலிருந்து கண்ணம்பாடி 50 மைல்தூரத்திலிருக்கிறது. எடத்தூரிலிருந்து ஆற்றின் கரையோடு சென்றால் 9 மைல்தூரத்திலிருக்கிறது. மைசூர் நாட்டிலுள்ள மலைநாடு என்ற பிராந்தியத்தில் பெய்யும் மழை எல்லாம் காவிரியில்தான் விழுகிறது. அங்கு மழைத்தட்டு ஏற்படுகிறதே இல்லை. ஆகையால், மற்ற இடங்களில் மழை தட்டும்போதுகூட அங்கு மழைபெய்யு மாகையால், ஜூன்மீ மத்தியிலிருந்து அக்டோபர் ஆரம்பிக்கும் வரையில் ஆற்றில் வெள்ளம் ஓடிக்கொண்டே யிருக்கும்.

காவிரியில் வருஷம் முழுமையும் நீரோட்டமுண்டு. ஜூன் மாத மத்தியில் குடகில் மழை பெய்ய ஆரம்பிப்பது முதல் ஜூலை முடிய ஆற்றில் வெள்ளம் பெருகிக்கொண்டே யிருக்கும். இந்த வெள்ளம் அநேகமாக ஆகஸ்டு மாதம் முடியவும் நிற்கும். அதிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக வெள்ளம் குறையும். ஐப்பசி மாதத்துப மழை ஆரம்பித்த வுடனே மறுபடியும் ஆற்றுநீர் பெருகி, அக்டோபர், நவம்பர் முடிய ஓடும். அதுமுதல் சிறுகச் சிறுகக் குறைந்து ஏப்ரல் மாதத்தில் மிகக் கம்மிப்பட்டுப் போகிறது. மைசூர் சமஸ்தானத்திலும் ப்ரிட்டிஷ் ஜில்லாக்களிலும் பாய்ச்சலுக்காக உபயோகித்தது போக, பாக்கி வெள்ளமெல்லாம் கடலில் வடிந்து விடுகிறது. திரிசிராப்பள்ளிக்கு 10 மைல் மேற்கிலுள்ள மேல் அணை வழியாக வருஷமொன்றுக்குச் சராசரி நாலாயிரம் லட்சம் கன அடி முதல் ஆறாயிரம் லட்சம் கன அடி வரையில் ஜலம் செல்லுகிறது. (ஒரு அடி நீளம், ஒரு அடி அகலம், ஒரு அடி உயரம் கொண்டதற்கு

கன அடி என்று பெயர்.) இதில் இரண்டாயிரம் லட்சம் கன அடி ஜலமே பாய்ச்சலுக்காக உபயோகப்படுகிறது. பாக்கி வீணாகக் கடலுக்குப் போய் சேருகிறது. நீர்த்தேக்கம் ஏற்படும் இடத்தைச் சுற்றி 4100 சதுரமைல் விஸ்தீரணமுள்ள பூமியில் பெய்யும் மழையெல்லாம் காவிரி ஆற்றில்தான் வடிகிறது.

ஆறு ஏற்பட்டிருக்கும் இடமானது பாய்ச்சலுக்கும் மின்சார உற்பத்திக்கும் மிகப் பொருத்தமாக விருக்கிறது. "அணைகளையும் வாய்க்கால்களையும் கொண்டு எவ்வளவோ காலமாக ஆற்றுநீரைப் பாய்ச்சலுக்கு உபயோகப்படுத்தி வந்திருக்கிறார்கள். அணைக்கட்டுகள் தாழ்ந்திருப்பதால், அவைகளைக்கொண்டு ஜலத்தைத் தேக்கவே முடியவில்லை. வாய்க்கால்களில் எதுவும் விசேஷ நீளமுள்ளதல்ல. அல்லாமலும் ஆற்றைச் சேர்ந்தாற்போலவே வாய்க்கால்கள் ஓடுகிறபடியால், ஆற்றுக்கும் அவைகளுக்கு மிடையிலுள்ள மிகக் குறுகலான பூமியின் நீர்ப் பாய்ச்சலுக்கே உதவுகின்றன. இப்பொழுது ஒரு லட்சத்து எண்ணாயிரம் ஏகரா பூமியில் நெல் சாகுபடி செய்யப்படுகிறது. அந் நிலங்களுக்கு ஜூன் முதல் ஜனவரி வரையில் நீர் வேண்டும். இன்னும் அதிக பூமியைச் சாகுபடிசெய்யலாமென்றாலோ, ஆற்றுநீர் போதவில்லை; அல்லாமலும் சாகுபடி முடிவுகாலத்தில் ஜலம் ஒழுங்காய்க் கிடைக்கப்போகிறதுமில்லை என்று மைசூர் ரிபோர்ட்டில் சொல்லப்பட்டிருக்கிறது.

## காவிரிநீரை உபயோகித்தல்.

சிவசமுத்திரம் என்ற இடத்தில் காவிரி நீரானது உயரவிருந்து திடீரென்று பள்ளத்தில் விழுகிறபடியால் 1902-ம் வருஷமுதல் அங்கு மின்சாரசக்தி உற்பத்தி செய்யப்பட்டுவருகிறது. பதினோராயிரம் குதிரை சக்தியுள்ள மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டு, கோலார் தங்கச் சுரங்கங்களுக்கும் பெங்களூர் மைசூர் நகரங்களுக்கும் கொண்டுபோகப்படுகிறது. ஜலத்தட்டினால் பாய்ச்சலைக் காட்டிலும் மின்சார உற்பத்திக்குக் குந்தகம் ஏற்படக்கூடியதா யிருக்கிறதாம். ஒவ்வொரு கோடையிலும் அப்போதைக்கப்போது ஏதேனும் ஏற்பாடு செய்து ஆற்றோட்டத்தை அதிகப்படுத்த வேண்டியிருக்கிறதாம். மின்சார உற்பத்திக்குக் குந்தகம் ஏற்படாமல் பந்தோபஸ்து செய்ய

வேண்டியது அதிக அவசியமாய்விட்டதால், பாய்ச்சலாதாரத்தைக்கூட அவ்வளவு முக்கியமாகக் கவனிக்கவில்லையாம். பாய்ச்சலுக்காகட்டும், மின்சார உற்பத்திக்காகட்டும் காவேரி நீரை எவ்வளவு உபயோகிக்க முடியுமோ அவ்வளவும் உபயோகப்படுத்தியாய்விட்டது. இப்பொழுதைக் காட்டிலும் அதிகமாகப் பிரயோஜனம் தேடுவதானால், பழைய வழியை விட்டுவிட்டு, வேறு வழியைத்தான் பின்பற்ற வேண்டிய தவசியமாம்.

"புதுவழி யென்னவென்றால், நீரைத் தேக்கி வைக்கப் பெரியதோர் தேக்கமும், விஸ்தாரமான சமபூமிக்குப் பாயக்கூடிய வாய்க்கால்களும், கணக்குப்படி ஜலத்தை வினியோகம் செய்ய ஒரு ஏற்பாடும், மின்சாரசக்தி உற்பத்தியை அதிகப்படுத்திக்கொண்டேபோக ஒரு ஏற்பாடும் வேண்டும்; இவைகளே புதியவழியாகும்" என்று மிஸ்டர் விசுவேசுவரய்யா 1911-ம் வருஷத்தில் எழுதினர். ஆற்றின் நீரோட்டம் ஒரு நீதியாயிருப்பதில்லை. மழைகாலத்தில் சிவசமுத்திரம் என்ற இடத்தில் ஒரு வினடிப்பொழுதில் ஆற்றில் 3 லட்சம் கன அடி ஜலம் செல்லுகிறது. அருங்கோடையிலோ 100 கன அடிக்கும் குறைந்துவிடுகிறது. "ஆற்றில் சாதாரணமாக வரும் ஜலம் போதாமலிருக்கக் கூடிய காலத்தில் உதவும்படி வேண்டிய அளவு நீரைத் தேக்கி வைத்துக்கொண்டால், ஜாஸ்தி பூமியைச் சாகுபடி செய்யக்கூடியதுடன், மின்சார உற்பத்தியையும் அதிகமாக்கலாம். இந்த வேலைகளால் கவர்ன்மெண்டுக்கு உண்டாகக்கூடிய லாபம் ஒருபுறமிருக்க, சமஸ்தானத்தின் வியசாய விருத்தியையும் தொழில் விருத்தியையும் உத்தேசித்து மேற்கண்ட வேலைகளைச் செய்யவேண்டியது மிக அவசியமாகிறது." என்று மைசூர் ரிபோர்ட்டில் சொல்லியிருக்கிறது.

## மைசூர் வேலையின் திட்டம்.

உத்தேசவேலை முழுமைக்காகவும் 253 லட்சம் ரூபாய் 1911 வருஷத்தில் மைசூர் கவர்ன்மெண்டால் சாங்க்ஷன் செய்யப்பட்டது. மைசூர் எக்ஸிகூடிவ் எஞ்சினீருடைய ரிபோர்ட்டில் கண்டபடி விபரங்கள் பின்வருமாறு:—

(i) ஆற்றின் மணல் மட்டத்துக்குமேல் 124 அடி உயரத்தில் ஒரு குறுக்கணை கட்டிவருகிறார்கள்.

(2) 110 அடி உயரத்துக்குமேல் நீர்வழிந்தோடும்படி பக்க அணை ஒன்று கட்டப்படும்.

(3) வண்டலை வடிக்கட்டவும், வெள்ள காலத்தில் அதிக ஜலத்தை வெளிவிடவும், குறுக்கணையில் 26 மதகுகள் கட்டப்படும்.

(4) காவிரியாற்றின் வடைகரையில் உள்ள பிரதேசத்துக்கு நீர் பாய்ச்சுவதற்காக வாய்க்காலில் தண்ணீரைக் கணக்காய் விடும்பொருட்டு ஆற்றின் இடது கரையில் மதகு ஒன்று கட்டப்படும்.

(5) மேற்கண்ட மாதிரியே வலதுபக்கத்திலும் ஒரு மதகு கட்டப்படவேண்டும் (ஆனால் வாய்க்கால் இப்பொழுது வெட்டப்படமாட்டாது).

(6) ஆற்றின் வடபக்கத்தில் $1\frac{1}{4}$ லட்சம் ஏகராமுதல் $1\frac{3}{4}$ லட்சம் ஏகரா வரையில் நீர்ப்பாய்ச்சக் கூடியதாக ஒரு வாய்க்கால் வெட்டப்பட்டு அந்த நீரை அருகிலிருக்கும் ஒருமலையைக் குடைந்து $2\frac{1}{4}$ மைல்கள் நீளமுள்ள ஒரு இரும்புக் குழாய் மூலமாய்க் கொண்டுபோகப்பட்டு நீர் பாய்ச்சப்படுமாம்.

(7) 5000 குதிரை சக்தி மின்சார உற்பத்தி செய்யத் தேவையான இயந்திரங்கள் சிவசமுத்திரத்தில் ஏற்படுத்தப்படும்.

வேலைசெய்ய ஆரம்பிக்கும்போதே முழுவேலைக்கும் தக்கபடி குறுக்கணையை எவ்வளவு அகலமாகக் கட்டவேண்டுமோ அவ்வளவு அகலத்துக்கும் தக்கவாறு அஸ்திவாரம் போட்டு, மணல் மட்டத்திலிருந்து 80 அடி உயரம் குறுக்கணை கட்டப்படும். அணை முழுமையும் கட்டப்பட்டால் அது 124 அடி உயரமும் 6300 அடி நீளமுமிருக்கும். அதாவது ஒண்ணே மூன்று வீசம்மைல் நீளம். பக்க அணை 2300 அடி நீளமிருக்கும். இரண்டுமாகச் சேர்ந்து 8900 அடி நீளமிருக்கும்; அதாவது சற்றுக்குறைவாக ஒண்ணே முக்கால் மைல். இவைகளைத் தவிர பல உள் விபரங்களுக்குத் திட்டமேற்பட்டிருக்கிறது. 118 அடி உயரம்வரையில் ஜலம் தேங்கினால் 4150 கோடிகள் அடி ஜலம் கொள்ளும். மேற்கண்டபடி ஜலம் தேங்குவதால் 27 ஆயிரம் சொச்சம் ஏகரா நிலம் மூழ்கிப்போகும். அதில் ஆறுயிரம் சொச்சம்

ஏகரா நன்செய் நிலமாகவும், பதினோராயிரத்துச் சொச்சம் ஏகரா புன்செய் நிலமாகவும், 650 ஏகரா தோட்டக்காலாக வும், மூவாயிரத்துச் சொச்சம் ஏகரா ஒரு சாகுபடிக்கும் லாயக்கில்லாத கரம்பாகவு மிருக்கும். 17 கிராமங்களும் மேற்கண்ட நிலக்காரர்களுக்கு 16 லட்சம் சொச்சம் ரூபாய் நஷ்ட ஈடு கொடுக்க நேரிடுமென்று திட்டமேற்பட்ட போதிலும், அதைவிட மிகவும் ஜாஸ்தியாகுமென்று இப் பொழுது உத்தேசிக்கப்படுகிறது.

## சாகுபடி

வருஷ முழுமையும் சாகுபடிக்கு ஜலம் விடப்படும். 50 மைலுக்குக் குறையாமல் 70 மைல் நீளமுள்ளதாகக் கால் வாய் ஒன்று வெட்டப்படும். அதனல் நேராக ஒன்றேகால் லட்சம் ஏகரா சாகுபடி செய்யப்படும். இப்பொழுதிருக்கும் ஏரிகளுக்கு அந்தக் கால்வாயிலிருந்து நீர்விட்டு அவைகளைக் கொண்டு 25 ஆயிரம் ஏகரா அதிகசாகுபடி செய்யப்படுமாம்.

## தேக்கத்தின் மின்சார உற்பத்தி

சிவ சமுத்திரத்தில் இப்பொழுது 11 ஆயிரம் குதிரை சக்தியுள்ள மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. இன் னொரு 3300 குதிரை சக்தியுள்ள மின்சாரம் உடனே உற் பத்தி செய்யப்படும். இப்பொழுது தேக்கப்படும் தண்ணீரி லிருந்து 8000 குதிரை சக்தி மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும். எல்லாமாக 20 ஆயிரம் குதிரை சக்தி மின்சாரம் உற்பத்தி செய்யப்படும். திட்டப்படி முழுவேலையும் நடந்து விட்டால் 25 ஆயிரம் குதிரை சக்தியுள்ள மின்சாரம் உற் பத்தி செய்யக்கூடும். இதன்றியில் சிவசமுத்திரத்திலிரு ந்து, 4 மைல் தூரத்திலுள்ள ஷிம்ஸா என்கிற இடத்தி லும் மின்சாரம் உற்பத்திசெய்ய ஒரு கால்வாய் வழியாக ஜலத்தைக் கொண்டுபோய்த் தேக்குவதாக உத்தேசம். 15 ஆயிரம் குதிரை சக்தியுள்ள மின்சாரத்தை அங்கு உற்பத்தி செய்ய வேறு 30 லட்சம் ரூபாய் செலவிடவேண்டி யிருக்கு மென்று திட்ட மேற்பட்டிருக்கிறது. பிறகொரு காலத்தில் ஷிம்ஸாவில் எப்பொழுதும், 40 ஆயிரம் குதிரை சக்தி மின்சாரமும், ஆகஸ்டு மாதத்துக்குப் பிறகு 50 ஆயிரம் குதிரை சக்தி மின்சாரமும் உற்பத்தியாகக் கூடும். இவ் வளவு ஏராளமான சக்தியையும் உபயோகிக்கும் பொருட் டுத் தொழிற்சாலைகளை ஆதரித்து வளப்படுத்தவேண்டியது

கவர்ன்மெண்டின் கடமையாகவிருக்கிறது. ஆயிரம் குதிரை சக்தி மின்சாரத்தை உபயோகத்துக்குக் கொண்டுவருவதால், கவர்ன்மெண்டுக்கு வருஷத்தில் லட்சம் ரூபாய் கிஸ்தி கிடைக்கக் கூடியதுடன, 10 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள சரக்கைத் தொழிற்காரர்கள் செய்துமுடிக்கக்கூடும்.

## சென்னை மாகாணத்தின் நீர்ப்பாய்ச்சல்.

இப்படிக் காவிரிநீரை மைசூரில் தேக்கிவிடுவதால் தஞ்சாவூர் திருச்சினுப்பள்ளி ஜில்லாக்களின் நீர்ப்பாய்ச்சலுக்கு என்ன நேரிடக்கூடுமென்பதைப்பற்றி மைசூர் சீப் எஞ்சினீர் ரிபோர்ட்டில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:

தஞ்சை திருச்சி ஜில்லாக்களில் இப்பொழுது 10 லட்சத்து 65 ஆயிரம் ஏகராவும், மைசூரில் ஒருலட்சத்து எண்ணுயிரம் ஏகராவும் காவிரிநீரைக்கொண்டு சாகுபடி செய்யப்படுகின்றன. ஆகையினுல் பிரிட்டிஷ் ஜில்லாக்களில் எவ்வளவு விஸ்தீரணம் சாகுபடி செய்யப்படுகிறதோ அதில் ஒன்பதில் ஒரு பங்குக்குக் குறைவாகவேதான் மைசூரில் சாகுபடி செய்யப்படுகிறது. ஆனுல் ஆற்றில் ஒருவருஷத்தில் எவ்வளவு ஜலம் போகிறதோ அதில் முக்கால்பங்கு ஜலம் ஆறு மைசூர் நாட்டைத் தாண்டும்போது அதிலிருக்கிறது. மைசூர் சமஸ்தானத்தில் எவ்வளவு விஸ்தீரணமுள்ள பூமியில் பெய்த மழை காவிரியில் விழுகிறதென்று கவனித்தாலும் சரி, அல்லது இந்த நாட்டின் வழியாக அது எவ்வள ஜலத்தைக் கொண்டுபோகிறதென்று கவனித்தாலும் சரி, அதில் போகிற அதிகப்படி ஜலத்துக்கு மைசூர் சமஸ்தானத்துக்குத்தான் முதல் பாத்யம். ஆயினும், சென்னை கவர்ன்மெண்டார் 3 லட்சத்து 30 ஆயிரம் ஏகரா பூமியைப் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வரும்படி எண்ணுயிரம் கோடி கன அடி பிடிக்கக் கூடிய ஒரு தேக்கத்தைக் கட்டத் திட்டம் போட்டிருப்பதால், அதில் பாதியளவுள்ள ஒரு தேக்கத்தை மைசூர் கவர்ன்மெண்டார் கட்டுவதில் ஆட்சேபனை இருக்க முடியாது என்று மைசூர் ரிபோர்ட்டில் சொல்லப்பட்டிருக்கிறது.

மேலே சொல்லியுள்ள விபரங்களைக் கொண்டு மைசூர் கவர்ன்மெண்ட்டின் யோசனை விளங்கும். 253 லட்சம் ரூபாய் செலவிட்டு, ஒன்றரை லட்சம் ஏகரா பூமியைச் சாகுபடிக்குக் கொண்டுவரவும், சிவசமுத்திரத்தில் 5000

குதிரை சக்தியுள்ள மின்சாரத்தை உற்பத்தி செய்யவும் திட்டமேற்பட்டிருக்கிறது. இன்னொரு 30 லட்சம் ரூபாய் செலவிட்டுவிட்டால், இன்னம் 15 ஆயிரம் குதிரை சக்தியுள்ள மின்சாரம் உற்பத்தி செய்யப்படும். வேறு கவர்ன்மெண்டின் உரிமையையும் வேறு மிராசுதார்களின் பாத்யங்களையும் சௌகர்யங்களையும் பாதிக்கக்கூடியதாகிய பிருமாண்டமான வேலையை ஆரம்பிக்கையில் நன்றாய் ஆலோசித்துச் சம்பந்தப்பட்ட எல்லோருடைய சம்மதத்தையும் பெற்றே தொடங்கியிருக்கவேண்டும். தங்களுடைய திட்டத்தை அங்கீகரிக்கும்படி முடிவில் செய்துவிடலாமென்ற நம்பிக்கையுடன், எப்படியாவது வேலையைச் செய்து முடித்துவிடுகிறதாக மைசூர் கவர்ன்மெண்டார் தீர்மானித்துவிட்டார்கள் போல் தோன்றுகிறது. அணைவேலையின் பொருட்டு இதுவரையில் 43 லட்சம் ரூபாய் செலவாய்விட்டது.

---

(1) அமராவதி:—இது ஆனைமலையில் உற்பத்தியாகி கோயமுத்தூர் ஜில்லாவில் சுமார் 140 மைல்கள் தூரம் ஓடிக் காவேரியோடு சேர்கிற ஒரு பெரிய உபநதி.

(2) பவானி:—இது முத்திகுளம் முதலான மலைகளில் உற்பத்தியாகிக் கோயமுத்தூர் ஜில்லாவில் ஓடி, காவேரியோடு சேர்கிற ஒரு உபநதி.

(3) நொய்யல்:—இது வெள்ளிங்கிரி மலையில் உற்பத்தியாகிக் கோயமுத்தூர் ஜில்லாவின் வழியாய்ச் சுமார் 108 மைல்கள் தூரம் ஓடி, காவேரியில் கலக்கிற ஒரு உபநதி.

(4) திருமணிமுத்தாறு:—இது சேர்வகிரிமலையில் உற்பத்தியாகிச் சேலம் ஜில்லாவின் வழியாய் ஓடிக் காவேரியில் கலக்கிற உபநதி.

இவைகளன்றியில்,

(5) மாயாறு:—இது நீலகிரிமலையில் உற்பத்தியாகி வடக்காக ஓடிப் பவானியில் சேர்கிறது.

(6) வடபெண்ணை யென்னும் பினாகினி:— இது மைசூர் மலைகளில் உற்பத்தியாகித் தென்னாற்காடு கடப்பை கர்நூல் பல்லாரி ஜில்லாக்களின் வழியாய் 350 மைல் தூரம் ஓடி வங்காளா விரிகுடாவில் விழுகிறது. செய்யாறு, பாபாக்கினி, சித்திராவதி என்பவை இதன் உபநதிகள்.

(7) தென்பெண்ணை:—மைசூர் இராஜ்ஜியத்தைச் சார்ந்த நந்திதுர்க்கத்தில் உற்பத்தியாகி அந்த ராஜ்ஜியத்திலும் தென் ஆற்காடு ஜில்லாக்களிலும் பாய்ந்து கூடலூருக்கருகில் வங்காளாக்குடாக்கடலில் விழுகிறது.

(8) பாலாறு:—மைசூர் ராஜ்ஜியத்தைச் சார்ந்த நந்திதுர்க்கத்தில் உற்பத்தியாகி அந்த ராஜ்ஜியத்திலும் வட ஆற்காடு செங்கற்பட்டு வேலூர் ஜில்லாக்களின் வழியாய் 230 மைல்கள் ஓடி வங்காளாக்கடலில் விழுகிறது.

(9) கூவம் அடையாறு:—சென்னபட்டணத்திலும் செங்கற்பட்டிலும் ஓடுகின்றன. வெய்யில் காலத்தில் ஜலம் வற்றிப்போகும்.

(10) வெள்ளாறு:—கூடலூர் ஜில்லாவில் ஓடி கூடலூருக்கருகில் கடலில் விழுகிறது. இதன் நீளம் 75 மைல்.

(11) வைகரையாறு:—மேற்குத் தொடர்ச்சிமலையில் உற்பத்தியாகி மதுரை வழியாக ஓடிக் கடலில் விழுகிறது.

(12) பொன்னானி:—ஆனை மலையில் உற்பத்தியாகி மலையாளம் ஜில்லா வழியாய் ஓடிப் பொன்னானி என்னும் துறைமுகத்துக்கருகில் சமுத்திரத்தில் விழுகிறது.

(13) தாம்பிரவர்ணி:—இது சென்னிறமான பூமியில் ஓடுகிறபடியால் இதற்கு இப்பெயர் வந்தது. இது குற்றாலம் பாபவிநாசம் என்னும் இடங்களில் ஆகாச கங்கையாய் விழுந்து திருநெல்வேலி பாளையங்கோட்டை வழியாய் 80 மைல்கள் ஓடிக் கடலில் விழுகிறது.



ஓம்

பரப்ரஹ்மணேநம:

# திவ்விய தேசயாத்திரையின் சரித்திரம்

## 2-ம் பாகத்தின்

# விஷய சூசிகை.

திவ்வியதேசயாத்திரை 2-ம் பாகத்தின் விஷய சூசிகை முற்றிற்று.

இந்நூலில் சொல்லப்பட்டுள்ள

# நாடுகளின் அட்டவணை

உ

கடவுள் துணை.

# திவ்விய தேசயாத்திரையின் சரித்திரம்.

## கடவுள் வணக்கம்.

ஆரியர் திவ்யதேசம் வாசியின் கண்ணமர்ந்த
சீரியர் போற்றுமூர்த்தி தலமோடு தீர்த்தம்சேர்த்துப்
பாரினில் வாழுமாந்தர் படித்துய்யச் சொல்லிந்நூற்த
கூரியர் மனத்துளோங்கும் குணக்கடல் துணையதாமே.

## குரு வணக்கம்.

ஒரு கிரந்தம் எழுதுவோர் அது விக்கினமின்றி முடிவு பெறவும், முடிவு பெற்றதைப் பலரும் படித்துங் கேட்டும் பயனைப் பெற்றுய்யவும் அந்த கிரந்த கர்த்தாவின் இஷ்ட தேவதையை முன்னர் வணங்கிப் பின்னர்த் தம திஷ்ட குருவை வணங்கல் வழக்கன்றோ? இப்புராதன வழக்கத்தை யனுசரித்துக் கடவுள் வணக்கமாக இந்நூலுக்கு ஒரு செய்யுளைச் சேர்த்திருக்கின்றனம். இதேமாதிரியாகக் குருவணக்கத்திற்கும் ஒரு செய்யுளை எழுதலாமென்றெண்ணில், இத் தென்னாடுகளிலுள்ள மூர்த்தி, தலம், தீர்த்தம் இவற்றின் பிரபாவங்களைப் பெருமைப்படுத்திய குருமார்கள் அநேகர் ஆவர். இந்த ஆரியவர்த்தத்தின் வடக்கு, கிழக்கு, மேற்கு ஆகிய இப்பாகங்களில் யாம் யாத்திரை செய்ததில் ஆங்காங்கு ஹிமாசலம், விந்தியம் முதலிய சில விசேஷ பர்வதப் பிரதேசங்களும்-கங்கை, யமுனை முதலிய சில விசேஷ தீர்த்தங்களும் - காசி, கயா, பிரயாகை, பிருந்தாவனம், மதுரை, பண்டலிபுரம் முதலிய மூர்த்தித் தலங்களும்

தீர்த்தங்களும் சொற்பமாயிருக்க, இத்தென்தேயத்தில் மாத்திரம் திருப்பதிமலை, அண்ணுமலை, பிளகிரிரங்கன்மலை, தாயுமானவர்மலை, சென்னிமலை, மருதமலை முதலான பர்வதப் பிரதேசங்களும்; கிருஷ்ணு, கோதாவரி, துங்கபத்ரா, காவிரி, பவானி, வைகை, தாம்பிரபரணி முதலிய பல தீர்த்தங்களும், இத்தீர்த்தக் கரைகளிலும் இடைநாடுகளிலும் ஏராளமான சைவ வைணவ மூர்த்தித் தலங்களும் பரக்கப் பிரகாசிப்பதற்குக் காரணம் வடநாடுகளைவிட இத்தென்னுடுகளில் மூர்த்தி தல தீர்த்தங்களை மஹிமைப்படுத்திய மஹாத்மாக்கள் அநேகர் அவதரித்திருப்பதே போதுமான சான்ரும். ஆகவே, இத்தென்னுட்டைச் சிறப்பித்த சைவ வைணவமத சித்தாந்த ஸ்தாபகர்களனைவரையும் குருமாராகக் கொண்டு அவர்களிற் சிறந்த சிலருடைய சரித்திர சார சங்கிரகங்களை வசனகாவியமாய் இதனடியிற் பதிப்பித்திருக்கின்றனம். ஆனதுபற்றி, இந்நூலை வாசிப்போர் இம்மதாசாரியர்களுடைய சரித்திர சார சங்கிரகங்களை முன்னதாகப் படித்து அவர்களுக்கு நன்றியறிந்த வந்தனம் செலுத்திப் பிறகு இந்நூலை வாசிக்கவும், பிறர் வாசிக்கக் கேட்கவும் ஆரம்பித்தல் நலமாம்.

---

## சைவசமய சம்ஸ்கிருத குருமார்கள் வணக்கம்.

### அத்வைத சித்தாந்த பிரபாகரர் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் சரித்திர சங்கிரகம்.

சாரதாபீடம் சங்கராசாரியார் பிறந்த இடம், காலம் இன்னதென்று வியக்தமாகத் தெரிவிக்கும் சரித்திரங்கள் கிடையா; ஆயினும் அவர் கி. பி. ஏழாம் நூற்ருண்டில் மலையாள நாட்டில், காலாத்தி என்கிற அக்கிரஹாரத்தில், ஆத்திரேய கோத்திரம் நம்பூரி பிராமணர் சிவகுரு நம்பூத்திரிபாதரது கற்புடைய மனைவி மஹாதேவியாரிடத்துப் பிறந்ததாகப் பல நூற்களால் பிரத்தியக்ஷமாகிறது. இந்தச் சிவகுரு நம்பூத்திரிபாதர், சங்கரர் மூன்ருவது வயதை அடையுமுன் சிவபத மடைந்தபடியால், இவர் தாயாரே இவரைக் கண்ணை இமை காப்பதுபோல் பாதுகாக்க வளர்ந்தார். கர்பாஷ்டகத்தில் உபநயனம் செய்விக்கப்பட்ட இவர், தமது பனிரெண்டாவது ஆண்டு நிறையுமுன்னே சகல சாஸ்திரங்களைக் கற்றுத் தெளிந்து பாரங்கதரானபடி-

யால், பாரின்பப் பாழ்ங்கும்பியில் விழாமல் பிறப்பறுத்துப் பேரின்பத்தைப் பெற்றுய்ய விரும்பிச் சந்நியாச ஆச்சிரமத்தை அநுஷ்டித்தார். இது விஷயத்தில் இவரது உத்தம மாதாவுக்கு விருப்பமில்லாமலிருக்க, அவருக்கு வேதாந்த உண்மையைக் காட்டித் திருப்தியாக்கினார். பாலசந்நியாசியாகிய இவர் எப்போதும் வேதாந்தவிசாரம் செய்து, அக்காலத்தில் மலிந்திருந்த புத்தர், சமணர், சாக்கியர் முதலானவர்களைக் கண்டித்தும், ஹிமசேது பரியந்தமுள்ள பல திவ்விய தீர்த்த க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செய்தும், ஆங்காங்குள்ள பண்டிதர்களைச் சந்தித்துத் தர்க்கித்து ஜயித்தும், ஒப்பும் உவமையுமற்ற வித்துவசிகாமணியாகப் பிரகாசித்தார். வியாசமுனிவர் வேதங்களையெல்லாம் கடைந்தெடுத்துச் சொல்லிய உத்திரமீமாஞ்சை என்னும் பிரம்ம சூத்திரத்திற்குப் பாஷ்யத்தை (பனரிஸ் என்னும் காசி பட்டணத்தி லிருந்தபோது) செய்தருளினர்.

இவரியற்றிய தஸோபநிஷத்பாஷ்யம், கீதாபாஷ்யம், நரஸிம்மதாபிநிபாஷ்யம், சஹஸ்ரநாமபாஷ்யம், ஆநந்தலகிரி, ஹரிமிடே, சிவபுஜங்கம், விஸ்ணுபுஜங்கம், விவேகசூடாமணி, ஆத்மபோதம், கநகதாரை, அமரசதகம் முதலான சிறந்த கிரந்தங்களின் வாக்கியரசனையும், திராக்ஷாபாகமுடைய பெருமையும் இக்காலத்தாரும் கண்டு வியந்து கலைமகளே கலியுகத்தில் ஸ்ரீ சங்கரராக அவதரித்தாரோ என்று சொல்லும்படி இருக்கின்றன. இவர் சைவம் வைஷ்ணவம் என்னும் பேதம் பாராட்டாமல் ஸ்மார்த்தமத சம்பிரதாயப்படி சர்வ சமய சமரச வேத சித்தாந்த சிரோபூஷணராயும், மனமொழி மெய்களாற் செய்பத்தக்கனவற்றைச் செய்தும், சர்வாந்தரியாமியாகிய ஜகதீசுவரனை எங்குமாய் யாவுமாய்ப் பார்த்துப் பேரானந்த மடைந்திருந்தாரென்று இவரியற்றிய நூல்களில் பரக்கக் காணலாம். இந்தச் சர்வ சமய சமரச ஞானத்தைத் தாம் அனுபவித்து ஆநந்திப்பதைப்போலவே, பிரபஞ்சத்தாரும் அநுபவிக்க வேண்டுமென்ற கிருபாநோக்கம் கொண்டு ஜகந்நாதம், துவாரகை, பதரிகாச்சிரமம், சிருங்கேரி முதலான விடங்களில் கி. பி. 1200 வருஷங்களுக்கு முன்னே மடங்களை ஸ்தாபித்தும், அம்மடங்களுக்கு முறையே பதுமபாதர், ஹஸ்தாமலகர், சுரேஸ்வராசாரியர், ஆநந்தகிரியர் முதலானவர்களைச் சீடர்களாக நியமித்துப் பலவிடங்களிலும் பிரசங்

கம் செய்யச் செய்தனர். அக்காலத்தில் காஷ்மீரநாட்டில் பல புலவர் சிகாமணிக ளிருந்தமையால் அங்கும் போய் அவர்களை வென்று புலவர் பெருமானாகிய இவரை அச்சபை நடுவே கலைமகளுக்காக இட்டிருந்த நவரத்தின கசிதமான சாரதாபீடத்தில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டாடினார்கள். இப்படிக்கு இவர் இளமை முதல் ஐம்புலனை வாட்டி உடம்பை ஒடுக்கிப் பல தேசசஞ்சாரம் செய்து நொந்ததால் மூலவியாதி கண்டு வருந்திப் பதரிகாச்சிரமத்தை அடைந்து சிலநாள்த ளிருந்து பிறகு இமயமலையின் உன்னத கொடுமுடியாகிய கேதார நாட்டை அடைந்து தமது முப்பத்திரண்டாம் வயதில் பரிபூரணரானார். இவர் தமது அந்தம தசையில் எங்கும் நிறைந்த பரம்பொருளைத் தியானித்த பிரார்த்தனை இது:—

"எம்பெருமானே! பாவி யான் செய்த பிழைகள் மூன்றையும் பொருத்தருளும்; உருவமில்லாத உன்னைத் தியானிப்பதின் பொருட்டு (விக்கிரகமாக) மூர்த்தீகரித்தேன்; மனோவாக்குக்கு எட்டாத உன்னை (அவதாரமாக) துதிசெய்தேன்; நீ எங்கும் நிறைந்திருக்கிறாய் என்பதை எண்ணாது தீர்த்தயாத்திரை செய்தேன்" என்பதேயாம். இந்த மஹாத்மா அவதரித்த இடமாகிய மலையாளத்தைச் சார்ந்த காலட்டி அல்லது காலடி என்னுமிடத்தில் அவர் ஞாபகத்துக்காக ஒரு கோயிலையும் அவரது இஷ்ட தேவதையாகிய ஸ்ரீ சாரதாம்பாள் கோயிலையும் 2, 3-வருஷங்களுக்கு முன்பு இப்போதிருக்கும் ஸ்ரீங்கேரி மடத்து ஆசாரியர் கடைசிகாலத்தில் மைசூர் மஹாராஜ ரவர்களுடையவும் ஷை சமஸ்தான மந்திரி முதலானவர்களுடையவும் பிரேரேபணையினாலும் பொருளுதவியினாலும் கட்டப்பெற்றுப் பிரபலமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அவ்வுற்சவத்திற்கு ஷை மஹாராஜா அவர்களும் மற்றும் பெரிய மனுஷர்களும் வித்வான்களும் உத்யோகஸ்தர்களும் போய்ப் பார்த்து ஆனந்த மடைந்தனர்.

---

## ஸ்ரீ வித்யாரண்யசுவாமிகள் சரித்திரம்

இந்த ஆதி சங்கராசாரியருக்குப் பிறகு அவருடைய சிருங்கேரி மடத்தின் ஓர் ஆசாரியரா யிருந்த ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள்: சைவமதாபிமானியாயும், அத்வைத

சித்தாந்த போதகராயும், வித்யாநகரம் அல்லது விஜயநகர சமஸ்தானத்தை ஸ்தாபித்தவராயும், அச்சமஸ்தானபதிகளாகிய ஸ்ரீ அரிஹரராயிலுக்கும், புக்கதேவராயிலுக்கும் மந்திரியாகவும் இருந்து அந்த சமஸ்தானத்தைப் பிரபலப் படுத்தினவராயும் இருந்தார். இவர் துங்கபத்ரா நதிதீரத்தில் பம்பாநகரத்தில் தெலுங்கு பிராம்மணகுலத்தில் பிறந்து வளர்ந்தவர். இவரது தந்தையின் பெயர் மாயனர். இவரது சகோதரர் சாயனர், சோமநாதர். இவருடைய தமையனர் பாரத்துவாஜ கோத்திரத்தைச் சார்ந்தவர். வேதாகம புராண இதிகாசங்களைக் கரைகண்டுணர்ந்து இல்லறம் புக இவரது உத்தம பத்தினியார் சிறுபிராயத்திலே பரமபதமடைந்ததனால் இவர் உலக ஆசையை விட்டொழித்துச் சந்நியாச ஆச்சிரமத்தை வகித்து, நல்லொழுக்கம், சீலம், சிவபக்தி, பரோபகாரம், தேசோபகாரம் முதலான குணங்களிற் சிறந்திருந்தார். வேதாந்தமத சித்தாந்தியாகிய இவ்விப்பிரர் 108 உபநிஷத்துகளுக்கு அத்வைதபரமாகப் பாஷ்ய மெழுதியும், பராசரமாத்வீயம், காலமாத்வீயம், சங்கரவிஜயம், வித்யாரண்யம், சர்வதரிசன சங்கிரஹம், மாதவநிதானம், காலஞானம் முதலான கிரந்தங்களை இயற்றி மஹா மாதவாசாரியர் என்று மகிமைபெற்றும், ஸ்ரீசங்கராசாரியர் பீடத்தைப் பெற்றவர். இவர் முழு சரித்திரத்தைத் தெலுங்கு நாட்டில் ஸ்தல சரித்திரத்திற் காணலாம்.

---

## மஹா வித்வசிம்மமணியாகிய ஸ்ரீ அப்பய தீக்ஷிதர் சரித்திரம்.

இவர் காஞ்சிபுரத்திற்கு அருகில் கி. பி. 1600 வருஷங்களுக்குமுன் நாராயண தீக்ஷிதர் மனைவி வயிற்றிற் பிறந்தவர். சிறுவயதிலேயே சுருதி, ஸ்மிருதி, புராண, இதிகாசாதிகளைக் கற்றுத் தெளிந்து பென்னுகொண்ட சமஸ்தானத்தில் வெங்கிட்டராயரிடம் ஆச்ரியம் பெற்றார். இவர் சைவ சித்தாந்தத்தைப் பலவிதத்திலும் பிரபலமாக்கி, சிவோச்சாரண சந்திரிகா, காளிதாஸ ரியற்றிய குவலயானந்தம் என்னும் நூலுக்கு உரை, சிவதத்துவவிவேகம், சிவமணிதீபிகை, அதரபானம் முதலான அநேக கிரந்தங்களை எழுதினதன்றியில், பிரபோத சந்திரோதயம் என்னும் விநோதமான கிரந்தத்தையும் எழுதினர். பிறகு தக்ஷிண தேசயாத்

திரை செய்தும், அநேக ராஜாக்களை வசமாக்கிக்கொண் டும், காசியாத்திரை செல்ல யோசித்திருக்கையில், சிதம் பரத்திலிருக்கும் பிராமணர்கள் இவரைச் சிதம்பரத்திலே யே இருக்கவேண்டுமென்று வருந்தி வேண்டினமையால், இவர் ஆயுள்பரியந்தம் அவ்விடமே இருந்தனர். இவர் இறக் கும்போது வயது 90. இவரது இரண்டு மனைவிகளும் பதி னொரு பிள்ளைகளைப் பெற்றார்கள். இவருடைய பிரபோத சந்திரோதயத்தினால் இவரும் சங்கரரைப்போலவே ஸ்வ ரூப அத்வைதியென்றே சொல்லவேண்டி யிருக்கிறது. இவருக்குப் பிற்பாடு போதுமான படிப்பும் சக்தியுமுள்ள பக்திமான்கள் தோன்றிய சங்கதி விவரமாகத் தெரிய வில்லை. ஆயினும், பம்பாயிக்கடுத்த கலியாணிபுரத்தி லிரு ந்த சின்ன பெத்த பசவரென்பவர்கள் வீரசைவர்களாகி ஜாதிபேதத்தையும், பிராமணப் பெருமைகளையும் நீக்கப் பாடுபட்டார்கள். அவர்களிற் சிறந்தவர் அல்லமாப்பிரபு.

---

## ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் சரித்திரம்.

இவர் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் காலத்தவரென்று தெரியவருகிறது. இவர் கோகர்ணத்திற் பிறந்த தெலுங்கர். சைவ ஆகமாதி சாஸ்திரங்களைக் கற்றுத் தெளிந்தவராகி ஸ்ரீ வியாசருடைய பிரம்மசூத்திரத்திற்குச் சைவபரமாகப் பாஷ்யம் செய்தவர். இவர் செய்த பாஷ்யத்திற்கு நீல கண்ட பாஷ்யம் என்று பெயர் இவருடைய பாஷ்யத்திற்கு ஸ்ரீ ஹரதத்தாசாரியர் 'சமர்தனம்' என்கிற வியாக்கியா னம் செய்தனர்.

---

## ஸ்ரீ ஹரதத்தாசாரியர் சரித்திரம்.

இவர் கஞ்சனூரிலே மதுசூதனாசாரியருக்குப் புதல்வ ராக அவதரித்தவர். இவர் முதலில் வைணவராக இருந்து பிறகு சைவ சமய நூல்களைக் கற்றுத் தெளிந்து சைவராயி னர். இவர் பழுக்கக் காய்ச்சிய இரும்புப் பீடத்திலேறிச் சிவபரத்துவத்தைச் சாதித்தவர். சதுர்வேத தாற்பரிய முதலான கிரந்தங்களை இயற்றியவரு மிவரே.

---

## தென்தேசத்தில்
## சில விசேஷ சைவசமய தமிழ் சித்தாந்திகள்.



1. மெய்கண்டதேவர். 2. உமாபதி சிவாசாரியர். 3. அருணந்திதேவர். 4. மறைஞானசம்பந்தர்.

---

### திருவிசைப்பா அருளினவர்கள்.

1. திருமாளிகைத் தேவர். 2. சேந்தனர். 3. கருவூர்த் தேவர். 4. பூந்துருத்தி நம்பிகாடநம்பி. 5. கண்டராதித்தர். 6. வேணாட்டடிகள். 7. திருவாலியமுதனர். 8. புருடோத்தமநம்பி. 9. சேதிராயர்.

---

### நம்பியாண்டார்நம்பி சரித்திரம்.

இவர் சோழநாட்டில் திருநாரையூரில் ஆதிசைவப் பிராம்மண குலத்தில் அவதரித்து மறைமுதல் பல கலைகள் பயின்று வருநாளில் அவ்வூர்ப் பொல்லாப்பிள்ளையாரைத் தினம் ஆராதிக்கிற தன் பிதா ஓர் ஊருக்குச் செல்ல, இவரன்போடு திருமஞ்சன முதலானவை செய்து நிவேதனத்தை முன் வைத்து, "பிள்ளையாரே! அமுது செய்யும்" என, அவர் கொள்ளாதிருப்பக் கண்டு, தன் தலையை மோதப்புகுங்கால் "நம்பி பொறு" என்று சொல்லி நிவேதன மெல்லாம் அருந்த, நம்பியார் உவந்து, "ஐயனே! நேரமானதால் பள்ளிக்கேகில் தேசிகர் அடிப்பாராதலின் பாடம் நீரே ஓதிவையும்" என, அப்படியே ஓத வுணர்ந்து இப்படிப் பலநாளுஞ் செய்து வருவதை அனபாய சோழ மகாராஜன் அறிந்து, நம்பியாண்டார் நம்பியை வணங்கி, "சுவாமி! சமயாசாரியர் மூவர்கள் சரித்திரமும் உலகில் விளங்கவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்ய, இந்த நம்பியாரும் மூன்று திருத்தொண்டர்களுடைய சரிதையைத் திருவந்தாதியாகப் பாடியருளி நெடுநாள் வாழ்ந்திருந்து சிவபத மடைந்தனர்.

---

### சேக்கிழார் சுவாமிகள் சரித்திரம்.

தொண்டைமண்டலத்திலே குன்றத்தூரிலே வேளாள குல சேக்கிழார் வம்சத்தில் அவதரித்து, அருள்மொழித்தேவர் எனத் திருநாமம் கொண்டு, பல கலைகளோதி யுணர்ந்து,

சிவபக்தி அடியார்பக்தியிற் பயின்றபின், அனபாய சோழ மகாராஜனுக்கு முதன் மந்திரியாகி வாழுநாளில், அந்தச் சோழன் சமணமதத்தர் பாடிய சீவகசிந்தாமணியை மெய் யென்று விரும்பியிருக்க, சேக்கிழார் அவரை நோக்கி, "இக்கதை மறுமைக்காகாது; இம்மை மறுமைப்பயனைத் தருங்கதை திருத்தொண்டர் திவ்ய சரிதை" என்றும், "அதை ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் 11 திருப்பாடல்க ளாகவும், நம்பியாண்டார்நம்பி திருவந்தாதியாகவும் செய் திருக்கிறார்கள்" என்றும் சொல்ல, அரசன் கேட்டு மகிழ்ந்து "அந்தத் திருத்தொண்டர் சரிதையை உலகத்தார் உய்யும் படி விரித்துப் புராணமாகச் செய்துகொடுக்கவேண்டும்" என்று சொல்ல, உடனே சேக்கிழார் சிதம்பரம் சென்று நடேசரை வணங்கி அன்போடு துதிக்க, 'உலகெலாம்' என்று யாவரு மறிய அசரீரி பிறக்க அதையே முதலடி யாகக் கொண்டு திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணத்தைத் திருவாய்மலர்ந்தருளி, சேர சோழ பாண்டியர் முதல் அநேக மடாதிபதிகள் முன்பாகத் தாமே ஷை புராணத்தைப் பிரசங்கித்து அரங்கேற்றிய பின்பு துறவறம் பூண்டு, சிவனடியார்தம்முடன் அருந்தவத்திலிரு ந்து அம்பலவாணன் திருவடிநிழ லெய்தினர்.

---

## தொகையடியார் ஒன்பதின்மர்.

(1) தில்லைவாழந்தணர். (2) பொய்யடிமையில்லாத புல வர். (3) பத்தராய்ப்பணிவார். (4) பரமனையே பாடுவார். (5) சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார். (6) திருவாரூர்ப் பிறந்தார். (7) முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார். (8) முழுநீறு பூசிய முனிவர். (9) அப்பாலும் அடிச்சார்ந்தார்.

---

## சைவசமய குரவர்கள்.

(1) திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள். (2) திரு நாவுக்கரசு சுவாமிகள். (3) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள். (4) ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்.

---

## அறுபத்துமூன்று நாயன்மார்கள்.

(1) திருநீலகண்ட நாயனர். (2) இயற்பகை நாயனர். (3) இளையான்குடிமாற நாயனர். (4) மெய்ப்பொருணய னர். (5) விறன்மிண்ட நாயனர். (6) அமர்நீதி நாயனர். (7)

எறிபத்த நாயனர். (8) ஏனாதி நாயனர். (9) கண்ணப்ப நாயனர். (10) குங்கிலியக்கலய நாயனர். (11) மானக்கஞ்சாற நாயனர். (12) அரிவாட்டாய நாயனர். (13) ஆனாய நாயனர். (14) மூர்த்தி நாயனர். (15) முருக நாயனர். (16) உருத்திரபசுபதி நாயனர். (17) திருநாளைப்போவார் நாயனர். (18) திருக்குறிப்புத்தொண்ட நாயனர். (19) சண்டேசுர நாயனர். (20) திருநாவுக்கரசு சுவாமிகள். (21) குலச்சிறை நாயனர். (22) பெருமிழலைக்குறும்ப நாயனர். (23) காரைக்காலம்மையார். (24) அப்பூதியடிகள் நாயனர். (25) திருநீலநக்க நாயனர். (26) நமிநந்தியடிகள் நாயனர் (27) திருஞானசம்பந்த சுவாமிகள். (28) ஏயர்கோன் கலிக்காம நாயனர். (29) திருமூல நாயனர். (30) தண்டியடிகள் நாயனர். (31) மூர்க்க நாயனர். (32) சோமாசிமாற நாயனர். (33) சாக்கிய நாயனர். (34) சிறப்புலி நாயனர். (35) சிறுத்தொண்ட நாயனர். (36) சேரமான்பெருமா ணயனர் (37) கணநாத நாயனர். (38) கூற்றுவ நாயனர். (39) புகழ்ச்சோழ நாயனர். (40) நரசிங்கமுனையரைய நாயனர். (41) அதிபத்த நாயனர். (42) கலிக்கம்ப நாயனர். (43) கலிய நாயனர். (44) சத்தி நாயனர். (45) ஐயடிகள் காடவர்கோ ணயனர். (46) கணம்புல்ல நாயனர். (47) காரிணயனர். (48) நின்றசீர் நெடுமாற நாயனர். (49) வாயிலார் நாயனர். (50) முனையடுவார் நாயனர். (51) கழற்சிங்க நாயனர். (52) இடங்கழி நாயனர். (53) செருத்துணை நாயனர். (54) புகழ்த்துணை நாயனர். (55) கோட்புலி நாயனர். (56) பூசலார் நாயனர். (57) மங்கையர்க்கரசியார். (58) நேசநாயனர். (59) கோச்செங்கட்சோழ நாயனர். (60) திருநீலகண்டயாழ்ப்பாண நாயனர். (61) சடைய நாயனர். (62) இசைஞானியார். (63) ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்பவர்களாம்.

இவ்வாறு அறுபத்துமூன்று நாயன்மார்களில் பலவருணத்தாருமுண்டு. அவர்களுள் சைவசமயகுரவர் நால்வராவர். அவர்களுடைய சரித்திரத்தை இதனடியில் சுருக்கமாகத் தெரிவிப்போம்.

---

## திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரம்.

இவர் திருமுனைப்பாடி நாட்டில் சிறந்த திருவாமூரில் வேளாளர் குலத்தாராகிய புகழனர் மனைவியார் மாதினியார் வயிற்றில் அவதரித்து மருள்நீக்கியாரெனப் பெயர்பெற்றுக் கலைகள் பயின்றுவந்தார். இவருக்கு முன் பிறந்த திலக

வதியாரென்னும் ஓர் சகோதரி உண்டு. அந்த அம்மை, தாய் தந்தையர் மரித்ததனாலும், தான் விரும்பிய கணவன் கிடையாமையாலும், கன்னிகாமடத்தைச் சார்ந்து சிவபக்தியில் மூழ்கித் திருவதிகைவீரட்டானத்தை யடைந்து, சிவபெருமானுக்குப் பிரீதியான காரியங்களைச் செய்துகொண்டு வந்தனர். இங்ஙன மிருக்க, இவர் தம்பியாகிய மருள் நீக்கியார் ஜனோபகாரமாகத் தரும சத்திரங்கள் முதலானவற்றைச் செய்துவரும்போது அருகமதஸ்தர்களாகிய சமணர்களுடைய கோட்பாடு பிரபலமாகப் பரவி வருவதைத் தெரிந்து அந்த அருகமத சித்தாந்தத்தை யறிந்து அம்மதத்தையே சார்ந்துகொண்டார். இவரது கல்வி, ஞானம், நடை முதலியவற்றைக் கண்டு அருகமதஸ்தர்கள் இவருக்குத் தருமசேனர் எனப் பெயரிட்டு இவரையே குருவாகக் கொண்டுவணங்கினார்கள். இவர் அம்மதத்திலிருந்து பௌத்தம் முதலிய பல மதங்களை வென்று விளங்கினார்.

இங்ஙன மிருக்க, ஆங்குத் திலகவதியார் வேண்டுகோளால் சிவாஞ்ஞையின்படி இந்தத் தருமசேனருக்குச் சூலை நோய்கண்டு மிக வருந்த, அவ்வியாதியை நீக்கச் சமணர்களுடைய மந்திர தந்திர மருந்துகளினால் முடியாமையைப் பற்றிச் சிந்தித்துப் பின் இவர் சதா சிவபக்தியில் மூழ்கி யிருக்கும் தமது தமக்கையார் திலகவதி யம்மையிடம் சென்றனர். அந்த அம்மையார் அன்புடன் தம்பியை நோக்கி, "நீ சிவமதத்தைச் சார்ந்து சிவபெருமானைத் துதிப்பாயானால் வியாதி நீங்கும்" என்று செப்பியபடியே அவரும் கோயிலுக்குச் சென்று வணங்கிப் பதிகம் பாடவும் வியாதி நீங்கிவிட்டதன்றியில் திருநாவுக்கரசு என அசரீரி பிறந்தது. அன்றுமுதல் சைவராகி அச்சிறப்புப் பெயர் பூண்டு அநேக அடியார்களோடு பரமனையே துதித்துக்கொண்டிருந்தனர். இப்படி இவர் சைவமதத்தை யவலம்பித்ததைப் பற்றிச் சமணர்கள் அரசனைக் கொண்டு அவரை நீற்றறையில் வைத்தும், நஞ்சமுதூட்டியும், யானையைக் கொண்டு மிதிப்பிக்கத் தூண்டியும், இவ்விதம் பலவகையில் இம்சித்தும் இறவாததினால், அவரைக் கருங்கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலில் விட, அதுவே தெப்பமாக, அதன் மூலமாய்த் திருப்பாதிரிப்புலியூ ரடைந்து சுவாமி தரிசனஞ் செய்து பதிக மோதிப் பல திவ்விய ஸ்தலங்களுக் கேகி, ஆங்காங்கேபல திருப்பதிகங்களைப் பாடி, திருஞானசம்பந்த

சுவாமிகளால் அப்பர் எனத் திருநாமம் பெற்று, அப்பூதி நாயனாருடைய மகனை அரவந் தீண்ட அவ்விஷத்தை நீக்கி, ஐயாற்றில் ஸ்ரீ கயிலாய தரிசனங் கண்டு மகிழ்ந்து, பின்னர் அநேக சிவஸ்தலங்களைத் தரிசித்துத் திருத்தாண்டகம், திருநேரிசை, திருக்குறுந்தொகை, திருவிருத்தம் முதலிய 307 பதிகங்கள் திருவாய்மலர்ந்து சைவசமயத்தை விருத்தியாக்கி, பிரமசாரியாக எண்பத்தொரு வயதிருந்து திருப்பூம்புகலூரைச் சேர்ந்து, திருப்பணி செய்து திருத்தாண்டக மோதிச் சிவானந்த வடிவமாய்ப் பரமன் திருவடி நீழலி லமர்ந்தனர். இவர் திருநட்சத்திரம் சித்திரைசதயம்.

---

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம்.

இவர் திருநாவலூரில் பிராம்மண குலத்தில் சடையனார் மனைவி இசைஞானியார் வயிற்றில் அவதரித்துச் சகல கலைகளையும் கற்றுத் தெளிந்து திருமணப்பருவ மெய்தி, புத்தூர் சடங்கவி சிவாசாரியர் பெண்ணை விவாகம் பண்ண எத்தனிக்கும்போது சிவபிரான் விருத்தப் பிராமணரைப்போல் வந்து ஓலையைக் காட்டித் தடுத்தாட்கொண்டபின் சிவபெருமானால் வன்றொண்டர் எனப் பெயர் பெற்று, திருவாரூரில் பரவைநாச்சியாரை மணம் புரிந்து விறல்மிண்ட நாயனார் திறல் கண்டு திருத்தொண்டத் தொகை அருளி, திருப்புகலூரில் செங்கல்லைப் பொன்னாகச் செய்து, விருத்தாசலத்தில் முத்தாநதியி லிட்ட பொருளைத் திருவாரூர்த் திருக்குளத்தி லெடுத்து, திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரை விவாகஞ் செய்து பிரமாணந் தவறுதலால் இரண்டு கண்களும் மறைய, ஓர் கோலைக் கொண்டு திருக்காஞ்சிபுரத்துக் கேகி, ஏகாம்பரநாதரால் ஓர் கண் பெற்று மற்றொரு கண்ணைத் திருவாரூரில் பெற்று, சுவாமி தரிசனம் செய்து பதிகமோதி, சேர சோழ பாண்டிய நாடுகளிற் சென்று பல சிவ ஸ்தலங்களைப் பணிந்து, திவ்யமான பதிகங்களைப் பாடி சைவசமயத்தை விருத்தியாக்கினார். இவர் திருப்புக்கொளியூரில் முதலையால் பிடிபட்ட பிள்ளைக்குப் பிராணன் கொடுத்ததன்றியில், அநேக அற்புதங்களைச் செய்து, பதினெட்டாம் வயதில் வெள்ளையானையின் மீதேறிச் சேரமான்பெருமான் நாயனாரோடு திருக்கைலையைச் சார்ந்தார்.

---

## திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்.

இவர் சீர்காழிநாட்டில் பிராமண குலத்தில் சிவபாத விருதயர் மனைவி பகவதியார் வயிற்றில் திருவவதாரஞ் செய்தவர். மூன்றுவயதான காலத்தில் தகப்பனார் இவரை ஒரு குளக்கரையில் நிறுத்தி ஸ்நானம்செய்யும்போது இவரழுததைப் பற்றிப் பார்வதி தேவியாரால் ஞானப்பால் கொடுக்கப் பெற்றுண்டனர். பிறகு திவ்விய ஸ்தலங்களுக்குச் சென்று திருப்பதிகங்களைப் பாடிப் பொற்றாளம் பெற்றும், (சிதம்பரத்துக்குப் போனபோது) முத்துச்சிவிகை, முத்துக்குடை, பொற்சின்னம் முதலான விருதுகளைப் பெற்றும், ஓ ரரசன் மகளுடைய குமரகண்டவலியை நீக்கியும், தந்தைக்காக வளர்கிழி பெற்றும், வணிகனை அரவுதீண்ட அவ்விடத்தைத் தீர்த்தும், பாண்டியன் மனைவி மங்கையர்க்கரசியார் வேண்டுகோளின்படி மதுரைமாநகர் வந்து அருகமதஸ்தனாகிய பாண்டியனுடைய வெப்பும் கூனும் நீக்கியும், அந்த அரசனையும் பாண்டியநாட்டி லுள்ளாரையும் சிவபக்தர்களாக்கியும், நெருப்பிலிட்ட ஏடு வேகாமலிருக்க எடுத்தும், ஆற்றி லிட்ட ஏடு எதிர்வந்தணையவு மெடுத்தும், அருகர் - சமணர் முதலானவர்களுடைய மதங்களைத் தருக்கங்களால் கண்டித்தும், அவர்களைக் கழுவேற்றினார். பிறகு திருமயிலையில் பாம்பினாற் கடிக்கப்பட்டிறந்து சாம்பலான ஒரு பெண்ணையும் பிழைப்பித்து அநேக அற்புதங்களைச் செய்துவந்தார். கடைசியாக 16-ம் வயதில் திருமணம் செய்யப்பட்டுப் பெற்றார் உற்றார் இன்னும் அநேக திருத்தொண்டர் புடை சூழ்ந்துவர கோயிலுட் சென்று ஆங்குத் தோன்றிய சோதியில் கலந்தனர்.

---

## ஸ்ரீ மாணிக்கவாசகர் சரித்திரம்.

இவர் ஸ்ரீ மதுரைமாநகர் வைகைநதிக்கரையிலுள்ள திருவாதவூரில் ஆமாத்திய பிராமணகுலத்தில் அவதரித்து 16 வயதிற்குள் சகல கலைகளையும் ஓதியுணர்ந்திருத்தலை அரிமர்த்தன பாண்டியன் கேள்வியுற்று அவரை அழைப்பித்துத் தனக்கு முதன் மந்திரியாக இருக்கும்படி செய்ய, விமரிசையாய் ராஜ்யத்தைப் பரிபாலித்து வரும்போது, நித்தியாநித்திய வஸ்து விவேகம் மனத்தில் தோன்ற, உடையானாகிய தன்னையும், உடைப்பொருளாகிய என்னையும் அறிவிக்கின்ற போதகக் குரு வீருவதெப்போ

தெனச் சிந்தித்திருக்கு நாளில், அந்த அரசனுடைய சேனைக்குக் குதிரைகள் வேண்டியிருந்ததனால் மந்திரியாகிய இவரிடம் பொருள் கொடுத்துக் கடற்றுறையில் வந்திறங்கும் நல்ல புரவிகளை வாங்கிவரும்படி அனுப்ப, இவர் சேனைசூழ் திருப்பெருந்துறை வழியாகச் செல்லும்போது ஆங்கிருந்த குருந்தமரத்தின் கீழ்ச் சிவபெருமான் பிராமணராக வீற்றிருந்து சிவாகம தத்துவங்களைப் போதித்தருள, இவர் தாம் கொண்டுபோன பொருள்களை யெல்லாம் சிவபெருமான் கோயில்களைக் கட்டிப் புதுப்பித்ததில் செலவிட்டுவிட்டார். பாண்டியன், 'குதிரைகளெங்கே?' என்று கேட்க, மந்திரியாராகிய இவர் சிவபெருமானைத் துதித்தார். உடனே சிவபெருமான் நரிகளைக் குதிரைகளாக்கிக் குதிரைக்காரனாகத் தாம் தோன்றி அரசனுக்கு ஒப்புவித்துப் போயினர். அன்றிரவே பரிகளெல்லாம் நரிகளாகி ஊரைப் பாழ்படுத்திக் காடுகளுக் கேகிவிட்டபடியால் அரசன் மறுபடியும் மந்திரியை வருத்த, சிவ ஆஞ்ஞையால் வைகை ஆற்றில் பிரவாகம் வந்து நாட்டை நாசமாக்கிவிட்டது. பிறகு இவர் பாடும் பாசுரங்கள் மாணிக்கம்போல் பிரகாசித்ததால் திருவருளால் மாணிக்கவாசகர் என்கிற சிறப்புப் பெயர்பெற்று அநேக சிவஸ்தலங்களுக்கேகி, திவ்யமான திருப்பதிகங்களைப் பாடி, சிதம்பரத்தில் சந்நியாசியாகக் காலங்கழித்தார். ஈழதேசமென்கிற யாழ்ப்பாண தேசத்தில் அப்போது குடிகொண்டிருந்த புத்தர்களை வாதில்வென்று, அவர்கள் அரசனுடைய ஊமைப்பெண்ணைப் பேசவைத்து, அவ்வரசன் முதலானவர்களைச் சைவர்களாக்கி, சைவமதத்தை ஸ்தாபித்தார். இவர் வேத சிக்ஷாமணி என்கிற பாடலைப் பாடினதாகச் சிலர் சொன்னாலும் இவருடைய திருவாசகம் என்னும் நூல் பலவிதத்திலும் சிறந்தது. இவர் 32-ம் வயதில் சிதம்பரத்தில் சிவனருளாம் சோதியிற் கலந்தனர். இது நிற்க, சமீபகாலத்துக்கு முன்பு தாயுமானவர், பட்டினத்தார், பத்திரகிரியார், திருப்புகழ்பாடிய அருணகிரிநாதர், இராமலிங்கசுவாமிகள் முதலான அநேக சிவபக்தர்கள் எழுந்தருளினார்கள்.

---

## தாயுமானவர்.

சோழநாட்டில் தாயுமானவர், வேளாளர் குலத்தில் கேடிலியப்பப் பிள்ளையின் மனைவியார் திருவயிற்றில் திரிசிர

புரத்துத் தாயுமானேசுவரர் அருளால் அவதாரஞ் செய்து தாயுமானவர் என்று திருநாமம் பூண்டு, நற்குண நற்செய்கைகளோடு கல்விப் பயிற்சியிலே சிறந்து, தத்துவப் பொருளையே விரும்பி, மௌனதேசிகரால் உபதேசம் பெற்றுத் தினந்தோறும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே நிஷ்டை செய்துகொண்டு மகா பக்த சிரோமணியாக இருந்தார். இவருடைய திருப்பாடல்களுக்குச் சமானமானவை வேறு மதஸ்தரிடம் காண்பதருமையே.

மேற்சொல்லிய மஹாத்மாக்களாலும் ஏனையோராலும் ஸ்தாபிக்கப்பட்ட சைவசித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கு. அவையாவன:—

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞானசித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்பவைகளே.

அகப்பேய்சித்தர், பாம்பாட்டிச்சித்தர் முதலான 18 சித்தர்களும் சைவமதத்தைச் சார்ந்தவர்களென்று சொல்வார்கள். ஆனால் அவர்களில் பெரும்பான்மையோர் வைத்திய வாகடாதிகளில் காலங்கழித்து அத்வைதமதத்தை யவலம்பித்தவர்களாகத் தோற்றுகிறது.

---

### பட்டணத்துப்பிள்ளையார்.

இவர் காவிரிப்பூம்பட்டணத்திற் பிறந்த வணிகர். இவருடைய ஆதிப்பெயர் திருவெங்கட செட்டியார் என்பதாம். ஒரு அதிதியாகிய சன்னியாசி எழுதிக் கொடுத்த ஓலை நறுக்கினால் ஞானம் பெற்றுச் சந்நியாசியாகி, சில சிவஸ்தலங்களைத் தரிசித்து, கவிகளைப் பாடித் துதித்தார். உடற்கூற்று வண்ண முதலான கிரந்தங்களை யியற்றியவர் இவரே. இவரது காலம் கி. பி. 16-ம் நூற்றாண்டென்த் தெரிகிறது. இவருடைய ஆப்தர் பத்திரகிரியார்.

---

### பத்திரகிரியார்.

இவர் ஓர் அரசர். ஆனால் இவர் பிறந்த இடம் காலம் தெரியவில்லை. இவர் பட்டணத்துப்பிள்ளையால் உபதேசம்

பெற்று ஞானவானுகி 332 உருக்கமான கண்ணிகளைப் பாடினர்.

---

## அருணகிரிநாதர்.

இவர் பிறந்த இடமும் காலமும் சரியாகத் தெரியவில்லை. ஆயினும், திருவண்ணுமலைக் கோயிலைத் தமதுறைவிடமாகக்கொண்டு சுப்பிரமணியர்மீது கந்தரனுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, வேல்விருத்தம், திருவகுப்பு, திருப்புகழ் முதலான கிரந்தங்களை இயற்றி ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வாரை வென்றவர்.

---

## இராமலிங்க சுவாமிகள்.

இவர் மருதூரில் கருணீகர் வகுப்பில் இராமயபிள்ளை மனைவியார் சின்னம்மை வயிற்றில் கி. பி 1823௵ அக்டோபர்மீ 5௳ பிறந்து காலமுதிர கல்வி கற்றுத்தெளிந்து, சிலகாலம் இல்லறவாசியாக விருந்து, பிறகு துறவியாகி, ஆறு திருமுறைகளோடுங் கூடிய திருவருட்பாவையும் அநேக சில்லரைக் கவிகளையு மியற்றி, சிதம்பரத்தை யடுத்த வடலூரில் ஞானசபையை ஸ்தாபித்து, கலியுகாப்தம் 4978௵ தைமீ 14௳ பரமபத மடைந்தார். இவருடைய கவிகள் மிக்க உருக்கமும் இனிமையுமானவை.

---

## ஆறுமுகநாவலர்.

இவர் யாழ்ப்பாணம் நல்லூரில் வேளாள ஜாதியில் கி. பி. 1822௵ மார்கழிமீ கந்தப்பிள்ளை மனைவி சிவகாமியாரால் பெறப்பெற்றவர். சிறுவயதில் தமிழ் இங்கிலீஷ் கற்று, கனம் பெர்சிவல் அவர்களுக்கு முன்ஷியாகிப் பிறகு வண்ணார்பண்ணை, புலோலி, சிதம்பர முதலான இடங்களில் சைவசமய பாடசாலைகளை ஸ்தாபித்தும், இலக்கண இலக்கிய சைவ கிரந்தங்கள் சுமார் அறுபதுவரையில் சீர்திருத்தி அச்சிட்டும் உலகிற்கு உதவினர்.

---

## வீரசைவம்.

இந்த வீரசைவ மதத்திற்கு முக்கியர் பசுவர். அவர் ஸ்ரீ சைலத்தின் மேற்கேயிருக்கும் இங்குலீசுவர பார்வதி அக்கிரகாரத்தில் வதிந்த மாதிகராயர், மாதலரசி என்ப

வர்களுக்கு நந்தியே அவதாரமாகப் பிறந்தவர். அப்போது கலியாணபுரத்துக்கு அரசனாயிருந்த விஜ்ஜலராஜனிடம் தண்டநாயக மந்திரியாக இருந்து அவருடைய புத்திரி கங்கம்மாளை விவாகம் செய்து, சங்கமேசுவரத்திற்குப் போய்ச் சுவாமியினால் அருள் பெற்றிருக்க, குலாசார விதிப்படி பூணூல் தரிக்காமல், உருத்திராக்ஷம் விபூதி இலிங்கம் இவற்றைத் திரித்தார். பிறகு தன் மாமனார் தண்டநாயகர் இறந்தபிறகு, இராஜ மந்திரவேலையை வகித்து வருநாளில், சர்க்கார் பணத்தை யெடுத்துச் சிவதருமம் செய்ததாகச் சிலர் சாக்ஷி சொல்ல, இராஜன் வந்து கஜானாவைச் சோதிக்கத் தொகை குறையாதிருக்கக் கண்டு ஆச்சரியப்பட்டு அவரைக் கொண்டாடினான். பிறகு இவர் அநேக அற்புதங்களைச் செய்துவந்தனர். இவருடைய அதிக ரூபலாவண்ணியமுள்ள தங்கையாகிய பத்மாவதியை விஜ்ஜலராசன் விவாகம் செய்துகொண்டதாக டாக்டர் ஆபோர்ட்டு சாஸ்திரி எழுதியிருந்தாலும் அந்தப் பத்மாவதியின் குமாரன் சின்னபசுவர் அம்மதத்தை அதிக பிரபல மாக்கினதாகப் பசுவபுராணம் கூறுகின்றது. அவர் காலத்தில் ஜயினர்களும் தோற்கப்பட்டார்களாம். அப்போது மச்சய்ய, பொம்ம தேவய்ய, கின்னரா கன்னதான பொம்மதேவ, காகய்ய, மசநய்ய, கோலகில பொம்மதேவ, கேசிராகய என்பவர்கள் முக்கிய சீடர்களாம். ஒருநாள் மஹாதேவல மச்சய்யா என்பவர், ஒரு சிசுவைக் கொன்ற குற்றத்திற்குத் தண்டிக்கும்படி மந்திரிக்கு விஜ்ஜலராஜன் கட்டளையிட, அதற்கு மந்திரி சம்மதிக்காதிருக்க, ஜகதேவியின் உத்தரவுப்படி மல்லயா பொம்மயா என்பவர்கள் ஒரு விருஷபத்தோடு ராஜசபைக்குப் போய் இராஜனைக் கொன்றுவிட்டார்களாம். பிறகு பசுவர் சங்கமேசுவரருக்குள் அடக்கமாகிவிட்டாராம். இலிங்க மதஸ்தர்களுக்குள் ஜாதி பேதம் கிடையாது. இப்போது மைசூர், கனரா, கலியாணி முதலான இடங்களில் வீரசைவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள்.

---

# தென்தேயத்து வைஷ்ணவ சித்தாந்த தமிழ் பாஷா ஆழ்வார்கள்.

## பொய்கை ஆழ்வார்.

துவாபரயுகம் 8,62,982-ல் சித்தாத்திரி வூல ஐப்பசிமீ பிறந்தவர். இவர் ஆழ்வார்களில் முதன்மையானவராகவும், விஷ்ணுவின் ஆயுதமாகிய சங்கே அவதாரமாகக் காஞ்சிபுரத்தில் ஒரு தடாகத் தாமரையிலிருந்து எழுந்தருளி வேதங்களின் கருத்துக்களை முதல் திருவந்தாதியாகப் பாடியருளினர்.

## பூதத்தாழ்வார்.

இவர் முற்கூறிய ஆழ்வார் பிறந்த மறுதினம் தொண்டைமண்டலத்தில் திருக்கடன்மல்லையில் விஷ்ணுவின் கதாயுதத்தின் அம்சமாய் அவதரித்து, இரண்டாந் திருவந்தாதியை அருளிச்செய்தனர்.

## பேயாழ்வார்.

இவர் முற்கூறிய ஆழ்வாருதித்த மறுநாள் சென்னைமாநகருக்கடுத்த மைலாப்பூரில், விஷ்ணுவின் நந்தகமென்கிற வாட்படையின் அம்சமாய் அவதரித்து, மூன்றாந் திருவந்தாதியை அருளிச்செய்தனர்.

## திருமழிசை ஆழ்வார்.

இவர் திருமழிசை யென்னுமிடத்தில் முதலாழ்வார்கள் ஜனித்த யுகவூல தைமாதம் பார்க்கவர் மனைவி வயிற்றில் விஷ்ணுவின் சக்கரமே அவதாரமாக அவதரித்து, திருவாளனென்னும் வேடனால் பிரம்புப் புற்றிலிருந் தெடுத்து வளர்க்கப்பட்டு, கற்றுத் தெளிந்து பல சமயங்களைத் தழுவின பின்பு வைணவராகி 4,700வூல வாழ்ந்து நான்காந் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் இயற்றிய தன்றியில், அடுத்த திவ்ய ஸ்தலங்களின்பேரில் அநேக பாசுரங்களைப் பாடினர்.

### நம்மாழ்வார்.

கலியுகம் பிறந்த 43-ம் நாளில் பிரமாதிஸு வைகாசி மாதம் சுக்கிரவாரத்தில் தென்னாட்டிற் சிறந்த திருக்குருகூரில் காரியென்பவர் மனைவியுடைய நங்கையின் வயிற்றில் சேனைமுதலியார் நம்மாழ்வாராக அவதரித்து, திருவாய்மொழி, திருவிருத்தம், திருவந்தாதி முதலான திவ்யப் பிரபந்தங்களை யருளி விஷ்ணுவோடு வைகுண்டத்தைச் சார்ந்தார்.

---

### மதுரகவியாழ்வார்.

துவாபரயுகம் 8,63,879-ல் ஈசுவரஸு சித்திரைமீ ஒரு பூர்வசிகைப் பிராமணருடைய மனைவி வயிற்றில் அவதரித்து, திவ்விய தேசங்களைச் சேவித்து, கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலான கிரந்தங்களை இயற்றி நம்மாழ்வார் வைபவத்தை விருத்தியாக்கினார்.

---

### குலசேகராழ்வார்.

மலையாள தேசமாகிய கேரளதேசத்தில் வஞ்சிவேந்தன் மனைவி வயிற்றில் கலியுகம் பிறந்த 28-ல் பராபவஸு மாசிமீ வெள்ளிக்கிழமை விஷ்ணுவின் ஆபரணமே அவதாரமாக வந்து, பக்தியினால் பாம்புக்குடத்தில் கைவிட்டும், ஸ்ரீரங்கம் முதலான திவ்விய க்ஷேத்திரங்களைச் சேவித்தும், உபயகவியெனப் பெயர் பெற்றும், அநேக ஸம்ஸ்கிருத திராவிட கிரந்தங்களையும் இயற்றியருளினார்.

---

### பெரியாழ்வார்.

ஸ்ரீ வில்லிபுத்தூரில் முகுந்தாசாரியர் மனைவி பதுமை வயிற்றில் கலியுகம் 47-ல் குரோதன வருடம் ஆனிமாதம் கருடபகவானே அவதாரமாகப் பிறந்து, அநேகம் குளம் குட்டை நந்தவனங்களை உண்டாக்கி, அவற்றி லுண்டாகும் புஷ்பங்களைக் கொய்து மாலைகளாகக் கட்டிப் பெருமாளுக்குச் சாத்திவரும்போது பாண்டியநாட்டார் உண்மையான மதத்தை ஸ்தாபித்துப் பொற்கிழியைக் கட்டிச் சகல மதஸ்தர்களையும் தருவித்து மேற்படி கிழியை அறுக்கச் சொல்ல, சமணர் சாக்கியர் சைவர் ஆகியவர்களால் முடியாமல் பெரியாழ்வார் அதைத் தமது பக்திபலத்தினால் அறுபட்டு

விழச்செய்து, விசிஷ்டாத்வைதத்தை ஸ்தாபித்தார். பிறகு திருப்பல்லாண்டு, திருமொழி ஆகிய பிரபந்தங்களைச் செய்தருளினர்.

---

## ஆண்டாள்.

இந்த அம்மையார் கலியுகம் 97-க்குமேல் நளவருடம் ஆடிமாதம் பெரியாழ்வாருடைய நந்தவனத்தி லிருக்கும் துளசிச் செடியின் கீழ் இலக்குமி அம்சமே பெண்ணுருவாக அவதரித்து ஷை ஆழ்வார் தொடுத்துவைத்த பூமாலைகளை இந்த அம்மையார் முதலில் தன் கூந்தலிற் சூடி அழகு பார்த்துப் பிறகு பெருமாளுக்கு அனுப்புகையில், அம்மாலைகளில் மயிர் முதலானவைக ளிருக்கக்கண்டு அர்ச்சகர் ஆழ்வார் முதலானவர்கள் விசனப்படும்போது விஷ்ணு மேற்படியார் சொப்பனத்தில் எழுந்தருளி, சூடிக்கொடுத்த புஷ்பங்களே நமக்கு உவப்பானவைகளென்று சொல்ல, அவர்கள் மகிழ்ந்து அந்த அம்மையாரை ஸ்ரீரங்கருக்கு விவாகஞ் செய்துவைத்தார்கள். கோதை, சூடிக்கொடுத்தாள் என்னும் பெயர்களுமுண்டு. திருப்பாவை இயற்றியவர் இந்தம்மையே.

---

## தொண்டரடிப்பொடியாழ்வார்.

திருமண்டங்குடி யென்னும் நகரத்தில் கலியுகம் 289-ல் பிரபவஸு மார்கழிமீ செவ்வாய்க்கிழமை வைஜயந்தி யென்னும் வநமாலையின் அம்சமாய் அவதரித்துப் பருவம் வந்தபோது கல்வியைக் கற்று விவாகம் செய்துகொண்டார். பிறகு விஷ்ணு பக்தியினால் சகல ஆடம்பரங்களையும்வெறுத்து, திருமாலை, திருப்பள்ளியெழுச்சியென்ற திவ்விய நூல்களை இயற்றி அழகிய மணவாளனோடு சேர்ந்தார்.

---

## திருப்பாணாழ்வார்.

கலியுகம் 342-ல் துர்மதிஸு கார்த்திகைமீ புதன்கிழமை உறையூருக் கருகிலிருக்கும் நெஞ்சாலிப் பயிரினிடமாக நெற்கதிரில் ஸ்ரீதரனது ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய் அவதரித்துப் பாணரால் வளர்க்கப்பட்டார். இவர் வீணை வாசிப்பதில் வல்லவராகையால் விஷ்ணுபிரான் மகிழ்ந்து இவர் ஜாதிக்குறைவைப் பாராட்டாமல் சிறந்த பக்தராக்கிக்கொண்டார். இவர், 'அமலனாதி பிரான்' என்னும் திவ்விய பிரபந்தத்தைப் பாடியருளினர்.

---

## திருமங்கையாழ்வார்.

திருவாலிக் கடுத்த திருக்குறையிலூரில் கலியுகாதி 397-ல் நளஹூ கார்த்திகைமீ வியாழக்கிழமை ஸ்ரீ சாரங் காம்ஸமே உருவாக அவதரித்துப் பலவித வித்தை களைக் கற்றுக் குமுதவல்லியென்னும் தேவ கன்னிகையை இச்சித்து அக்கன்னிகையின் விஷயமாகச் சைவமதத்தை விட்டொழித்து வைணவராகி அந்தக் கன்னிகையை விவா கஞ் செய்துகொண்டார். பிறகு அந்தக் கன்னிகையின் இஷ்டப்படி சேர சோழ பாண்டிய இராஜ்ஜியங்களில் கொள்ளையடித்துக் கிடைத்த பொருளால் வைணவ சத் கைங்கரியங்களைச் செய்துகொண்டு வருகையில், ஒருநாள் மஹாவிஷ்ணுவே பரிசோதனைக்கு வந்து வேடம் பூண்டு நிற்க, அவர் காலிலிருந்த மோதிரத்தை வாயால் கவ்விக் கடித்திழுக்க ஞானம் உண்டாகி, அநேக திவ்விய தேசங் களைத் தரிசித்துப் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்ட கம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் திவ்விய நூல்களைத் திருவாய்மலர்ந்தருளி, ஸ்ரீரங்கத்தில் கோபுர மதில்களைக் கட்டி ஆநந்த மடைந்தார்.

---

## தென்தேசத்தின் ஸம்ஸ்கிருதம் அல்லது தமிழ் ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்கள் சரித்திரம்.

(1) பெரிய பெருமாள். (2) பெரிய பிராட்டியார். (3) சேனைமுதலியார். (4) நம்மாழ்வார். இந் நால்வரும் தம்தம் அடிகளிலே ஆச்ரயித்தவர்களாம். ஸ்ரீ மதுரகவிகள் நம் மாழ்வார் திருவடிகளில் ஆச்ரயித்தார்.

---

## 5. ஸ்ரீமத் நாதமுனிகள்.

இவர் கலி 3648-ல் சோபகிருதுஹூ ஆனிமீ சுக்கில திரையோதசி, புதன்கிழமை, ஈசுவர பட்டாழ்வாருக்கு வீரநாராயணபுரத்தில் ஜனித்தும், கல்விகற்றும், வங்கி புரத்தாச்சியார் குமாரத்தி அரவிந்தத்தை மணந்தும், பல திவ்வியதேசங்களைச் சேவித்தும், திவ்வியப் பிரபந்த கால க்ஷேபத்தைப் பிரபலப்படுத்தியும், தமது 340ஹூத்தில் பரமபத மடைந்தார். இவருடைய முக்கியமான சீடர்கள் உய்யக்கொண்டார், குருகை காவலப்பன், நம்பி கருணாக

தாஸர், ஏறுதிருவுடையார், திருக்கண்ணமங்கை யாண்டான், வானமாமலை தெய்வநாயக ஆண்டான், உருப்பட்டூர் ஆச்சான்பிள்ளை, சொக்கத்தூராழ்வான், மேலையகத்தாழ்வான், கீழையகத்தாழ்வான், ஆகிய பத்துப் பெயர்களாம். வைஷ்ணவ ஆழ்வார்களுக்குப் பிறகு அவர்களின் பெருமையைப் பிரபலப்படுத்தியவர்களில் முக்கியர் இவரேயாம்.

---

## ஆளவந்தார் (யமுனைத்துறைவர்).

இவர் வீரநாராயணபுரத்தி லிருந்த ஸ்ரீ நாதமுனிகளின் குமாரராகிய ஈசுவரமுனிகளுக்குக் கலியுகம் 417-ல் தாதுவருஷ ஆடிமீ பௌர்ணமி புதன்கிழமையன்று அவதரித்து, கல்வி கேள்விகளிற் சிறந்தவராகி, அத்தேச அரசன் புரோஹிதரான ஆக்கியாழ்வானைக் கல்வியினால் ஜயித்து, அந்த அரசன் மனைவியால் ஆளவந்தார் என்ற பெயரையும் அரசனால் இராஜ்ஜியத்தில் அரைப்பாகமும் பெற்று வாழும் நாளில், மணக்கால் நம்பியால் ஞானோபதேசம் பெற்று, விஷ்ணுமதத்தைப் பிரபலமாக்கித் தமது 120-வது வயதில் பரமபத மடைந்தார். இவர் ஆத்மசித்தி, ஸம்வித்சித்தி, ஈசுவரசித்தி, ஆகமப்பிராமாண்யம், புருஷவிலக்ஷணம், சதுசுலோகி, கீதார்த்த சங்கிரகம், ஸ்தோத்திர ரத்தினம், ஆகிய பிரபந்தங்களை இயற்றியருளினார். இவருடைய முக்கியமான சிஷ்யர்கள்: பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி, மாரனேர் நம்பி, திருக்கச்சி நம்பி, ஆளவந்தாராழ்வான், திருமாலையாண்டான், வானமாமலையாண்டான், தெய்வவாரியாண்டான், ஈயாண்டான், திருமோகூரப்பன், திருமோகூர்நின்றான், தெய்வப்பெருமாள், மாறனேரி நம்பி, திருக்குருகூர் தாஸர், ஈங்கச்சோளாண்டான், ராஜபத்நியான திருவரங்கத்தம்மை, திருக்கச்சி நம்பி ஆகியவர்களாம்.

---

## ஸ்ரீ இராமாநுஜாசாரியார் சரித்திரம்.

தென்தேசத்தின் வைணவர்களில் சிறந்தவர்கள் அநேகர் இருக்கினும் இவர்களில் சிறந்தவர் ஸ்ரீ ராமாநுஜாசாரியர் ஆகையால், அவருடைய சரித்திரத்தை மாத்திரம் இங்கு எழுதுகிறோம்.

பௌத்தர் ஜயினர் சாக்தேயர்களாலும், ஸ்ரீ சங்கருடைய ஸ்வரூப அத்வைத மதஸ்தர்களாலும் இந்துதேசத்

துக் குடிகள் மயங்கித் தத்தளித்துத் தவிக்கும்போது, அவர்களுக்குச் சமரச ஞான சுலப சித்தாந்தத்தை ஸ்தாபித்து, நிம்மதி அல்லது சாந்தமான வாழ்வைக் கொடுக்க எந்த அவதார புருஷர் ஜனிப்பரோ என்று ஏக்கங்கொண்டிருக்குங் காலத்தில், ஸ்ரீ ராமாநுஜாசாரியர் சென்னையம்பதிக்குச் சுமார் 26 மைல் தூரத்திலுள்ள ஸ்ரீ பெரும்பூதூரில் (கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் அல்லது) கலியுகம் 4118 ஆகிய பிங்கள ஹு சித்திரைமீ சுக்கிரவாரத்தில் பிராமண குலத்தாராகிய ஸ்ரீ ஆசூரி கேசவாசாரியார் மனைவி பூதேவியாருடைய வயிற்றில் அவதரித்து, காஞ்சீபுரத்தில் கல்வியைக் கற்று வைஷ்ணவ சமயத்தை உலகப்பிரசித்தம் செய்யப் பிரவேசித்தார். இவர் அழகுள்ளவரும் ஆஜாநுபாவருமாயிருந்தார். பல தேசங்களைப் பார்த்தவர். இவர் பெருமையறிந்த அக்காலத்துச் சிறந்த வித்வானாகிய யமுனைத்துறைவர் என்னும் ஆளவந்தாருடைய முக்கிய கருத்தை நிறைவேற்ற முதலில் திரிசிரபுரத்துக் கடுத்த ஸ்ரீரங்கத்திற்குச் சென்று அரங்கநாதரைச் சேவித்துச் சில கிரந்தங்களைச் செய்தார். பிறகு திவ்ய தேசங்களுக்குச் சென்று பெருமாள் தரிசனம் செய்துகொண்டு, அக்காலத்தில் நாட்டில் மலிந்திருந்த மாயாவாத ஸ்வரூப அத்வைதத்தினால் மயங்கித் தவிக்கும் ஜனங்களைச் சீர்திருத்தியதோடு, சமணர், சாக்கியர், பௌத்தர் முதலான சமயத்தாரோடு வாதம் செய்து வெற்றி பெற்றும், அக்காலத்துச் சைவர்களி லநேகரை வைஷ்ணவராக்கினார். திருப்பதி ஸ்தலத்தை வைஷ்ணவஸ்தலமாகச்சிறப்பித்தும், மறுபடியும் ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பிவந்தபோது வைஷ்ணவர்களுக்கும் சைவர்களுக்கும் உக்கிரமான வாதங்கள் நடந்து வந்தன. அக்காலத்திருந்த கரிகால சோழனும், அவனுக்குப் பின் வந்த கிருமிகண்ட சோழனும் சைவசமயத்தாராகையால், அவர்களுடைய இராஜ்யத்திலிருந்த வைஷ்ணவர்கள் எல்லாரையும் மிரட்டிச் சிவபெருமானுக்குப் பரத்துவமுண்டெனக் கையெழுத்துப் போடச் சொல்ல, அவர்க ளுட்படாமையால் இராமாநுஜரைப் பிடித்து வரும்படிச் சேனைகளை யனுப்பினார்கள். ஆனால், அவர் தமது சிடர்களுடைய உதவியினால் அகப்படாமல், கணவாயேறி மைசூரில் ஜைநர் வேளாள சமய ராஜனாகிய விட்டலதேவ ராஜாவின் ஆதீனமானார். அங்கு அந்த ராஜாவின் புத்திரிக்குக் கண்டிருந்த வியாதியை நீக்கியும், பிடித்திருந்த பிரம்மராக்ஷதனை யோட்டியும்

அவ்வரசனை வசமாக்கி அவரைவைஷ்ணவ சமயத்தை யனுஷ்டிக்கச் செய்தும், அவருக்கு விஷ்ணுவரதனென்ற பெயரையுமிட்டார். மேலும், யாதவகிரி என்னும் மேல்கோட்டையில் அரசனால் கட்டப்பட்ட கோயிலில் பன்னிரண்டு வருஷ மிருந்து, பிறகு இவருடைய விரோதிகளாகிய சோழராஜர்கள் இறந்த சங்கதி தெரிந்து ஸ்ரீரங்கத்துக்கே வந்து தமது ஆயுள்காலம்வரையில்வைஷ்ணவத்தைவிருத்தியாக்குவதிலேயே விடாமுயற்சிகளைச் செய்துவந்தார். இவர் விவாஹஞ் செய்துகொண்டு இல்லறத்தைச் சார்ந்தவராகச் சிலநாள் கழித்தும், தமது மனைவியார் தமதிஷ்டப்படி நடவாமையால் சந்நியாசத்தைத் தழுவினர்.

இவர் பெரிய நம்பி, யாதவ பிரகாசர், திருக்கச்சி நம்பி முதலானவர்களால் கற்றுத் தெளிந்து, பகவத் போதாயினர், திரமிடாசாரியார், டங்காசாரியார், குஹதேவர், ஆசாரிய பாருசி, ஆசாரிய குபவத்தி, நாதமுனிகள், யாமுனாசாரியார் ஆகியவர்களுடைய கிரந்தங்களினால் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை யறிந்தும், பிறகு திருக்கோட்டியூர்நம்பிகளிடம் பலவித கஷ்டங்களுக் குட்பட்டு சரம சுலோகார்த்தாதி இரகசியாதி தத்துவங்களையும் கற்றுத் தெளிந்தும், ஸ்ரீ சம்பிரதாய மென்னும் கோட்பாட்டை கி. பி. 1150ஸு ஸ்தாபித்தார். பார்க்கவ புராணத்தின்படி இவர் ஆதிசேஷனே யவதாரமாக வந்தாரென்று சொன்னாலும், கனரா தேசத்தில் இவர் சரித்திரம் திவ்விய சரித்திரமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஸ்ரீரங்கம் முதலான திவ்வியஸ்தலங்களி லிப்போது நடக்கும் நித்திய நைமித்திய உற்சவங்களை இவரே கர்த்தராக விருந்து நியமித்தார். நானே பிரம்மமென்னும் ஸ்வரூப அத்வைத சித்தாந்தத்தைக் கண்டித்து விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை ஸ்தாபித்து, வியாசர் பிரம்ம சூத்திரங்களுக்கு ஸ்ரீபாஷ்யத்தை இயற்றியருளினர். இந்த விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப்பற்றி எனது ஆஸ்திகமத சித்தாந்த நூலில் விவரமாகச் சொல்லப்பட்டிருப்பதால் அதை வாசித்துப்பார்த்தால் தெரியவரும். இராமாநுஜர் காலத்தில் பிராமணஜாதி குலங் கட்டுப்பாடுகள் பலவிருந்தாலும், விஷ்ணுவை வணங்கும் வைஷ்ணவர்களுக்குள் ஜாதிபேதத்தை நீக்கி, மேல்கோட்டையில் சக்கிலியர், பறையர் முதலானவர்கள் அபேதமாகக் கோயிலுக்குள் நுழைந்து வணங்கி வரவும், திருமந்திராதி

இரகஸியங்களைச் சகல ஜாதியாரும் அறியும்படிப் பகிரங்கப்படுத்தியும், சகலரும் சமரசமாகச் சர்வ சுவாமியை வணங்கச் சுதந்திரமுண்டெனக் கூறி ஜாதிபேதத்தைக் கண்டித்தார். இவர் இளையாழ்வார், எதிராஜர், எம்பெருமானார், உடையவர் என்கிற பல பெயர்களால் புகழப்படுகின்றார். இவர் வைஷ்ணவத்தைப்பரவச் செய்ய ஹிமஸ்ஸேதுவரையிலுள்ள திவ்விய தேசங்களுக்குப் போய், வித்வான்களோடு வாதஞ் செய்து ஜயித்தும், அவர்களை வைஷ்ணவர்களாக்கியும் காஷ்மீரதேசத்தில் ஸ்ரீ சாரதாபீடமேறி ஸ்ரீ பாஷ்யகாரர் என்னும் பெயரைப் பெற்றும், டில்லி பாதுஷாவினிடம் செல்வப்பெருமாளைப் பெற்றும், அநேக புது திவ்விய ஸ்தலங்களை ஸ்தாபித்தும், ஸ்ரீ வியாச சூத்திரங்களுக்கு ஸ்ரீ பாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்த சாரம், வேதாந்த சங்கிரகம், கீதாபாஷ்யம், கத்தியத்திரயம், நித்திய கிரந்தம் முதலான அநேக கிரந்தங்களை இயற்றியருளினார். பிறகு தமது சமரசமான வைஷ்ணவ சித்தாந்தத்தை உலகில் பிரபலமாகும்படி 74 சிம்ஹாசனாதிபதிகளென்னும் ஆசாரிய புருஷர்களை நியமித்தார்.

---

## எழுபத்து நான்கு சிம்ஹாசனாதிபதிகள்.

1. திருக்குருகைப் பிரான் பிள்ளான்.
2. கூரத்தாழ்வான்.
3. நடாதூராழ்வான்.
4 எங்களாழ்வான்.
5. தெற்காழ்வான்.
6. இளையாழ்வான்.
7. கோமடத்தாழ்வான்.
8. சேட்டலூராழ்வான்.
9. வேதாந்தி ஆழ்வான்.
10. அநந்தாழ்வான்.
11. நடுவிலாழ்வான்.
12. மிளகாழ்வான்.
13. நெய்யுண்டாழ்வான்.
14. உக்கலாழ்வான்.
15. திருக்கோவலூராழ்வான்.
16. திருமோகூராழ்வான்.
17. கோயிலாழ்வான்.
18. அருணபுரத்தாழ்வான்.
19. கணியனூர் சிறியாழ்வான்.
20. திருமலைநல்லான்.
21. கிடாம்பியாச்சான்.
22. வங்கிப்புரத்தாச்சான்.
23. ஈச்சம்பாடியாச்சான்.
24. கொங்கிலாச்சான்.
25. திருகண்ணபுரத்தாச்சான்.
26. எச்சான்.
27. சிறிய கோவிந்தப் பெருமாள்.
28. வீரவல்லிப்பெருமாள்.
29. கிடாம்பிப் பெருமாள்.
30. அம்மங்கிப் பெருமாள்.
31. ஆஸூரிப் பெருமாள்.
32. பிள்ளையப்பன்.
33. பிள்ளை திருமலை நம்பி.

34. வங்கிப்புரத்து நம்பி.
35. சொட்டை நம்பி.
36. முடும்மை நம்பி.
37. பராங்குஶ நம்பி.
38. திருக்குறுங்குடி நம்பி.
39. தொண்டனூர் நம்பி.
40. அருணபுரத்து நம்பி.
41. மருதூர் நம்பி.
42. மழையூர் நம்பி.
43. வடுகநம்பி.
44. குரவிநம்பி.
45. புண்டரீகாக்ஷர்.
46. முதலியாண்டான்.
47. கந்தாடையாண்டான்.
48. மாருதியாண்டான்.
49. மதுரையாண்டான்.
50. ஈயுண்ணியாண்டான்.
51. சோமாசியாண்டான்.
52. சீயராண்டான்.
53. ஈசாண்டான்.
54. பெரியாண்டான்.
55. சிறியாண்டான்.
56. அம்மங்கியாண்டான்.
57. ஆளவந்தாராண்டான்.
58. சுந்தரத்தோளுடையார்.
59. உக்கலம்மாள். [ள்.
60. பருத்திக்கொல்லையம்மா
61. சொட்டையம்மாள்.
62. முடும்பையம்மாள்.
63. வைத்தமாநிதியார்.
64. பராசரபட்டர்.
65. சீராமப்பிள்ளைபட்டர்.
66. சிறுப்பள்ளி தேவராஜ
பட்டர்.] [யார்.
67. பிள்ளையுறைந்த யுடை
68. பிள்ளைத்திருவாய்மொ
[ழி யரையர்.
69. பிள்ளை ராஜமஹேந்த்ரப்
பெருமாளரையர்.
70. அதிகாரிப்பிள்ளை.
71. திருநகரிப்பிள்ளை.
72. கொமாண்டூர்பிள்ளை.
73. அநந்தஸோமயாஜியார்.
74. காஞ்சிஸோமயாஜியார்.

---

## ஜீயர்கள்.

ஸ்ரீரங்க நாராயண ஜீயர், ஈச்சம்பாடி ஜீயர், கோவிந்த ஜீயர், சட்டம்பள்ளி ஜீயர், திருமழிசை ஜீயர், திருவெள்ளரை ஜீயர், திருப்புட்குழி ஜீயர், ஆட்கொண்ட வல்லி ஜீயர், திருமாலிருஞ்சோலை ஜீயர் முதலான ஜீயர்களும், 700 நம்பி குருந்தேவபரமேகாந்திகளும், 12,000 தூய முனி முதலான கைங்கரியபரர்களும், திருவரங்கமாயோன் காவலதிகாரிகளும், பிள்ளையுறங்காவல்லி முதலான தாசர்களும், திருவனந்தபுரத்தம்மை முதலானவர்களும் இவ்வுடையவருடைய காரியங்களைச் செய்து வந்தனர். இப்படிச் சமரச உத்தாரணம் செய்துவந்த உடையவர் தமது 120 - ம் வயதில் - சகாப்தம் 1009ஹு - பிங்கள வருஷம் மாசி மாதம் சுக்கில தசமி திருவாதிரை தினம் பரமபத மடைந்தார்.

---

## ஸ்ரீ மணவாளமாமுனிகள்.

இவர் கலியுகாதி 4472-வது வருஷம் - சாதாரணவூல ஐப்பசிமீ சுக்லபக்ஷம் சதுர்த்தசி வியாழக்கிழமை தினம் ஜனித்து, சிக்கில்கெடார மென்கிற கிராமத்தில் வளர்ந்து வர, தகப்பனர் இவருடைய அழகைக் கண்டு அழகிய மணவாளன் என்று பெயரிட்டார். இவர் சமஸ்கிருதம் தமிழ் ஆகிய இருபாஷைகளையும் வழுவறக் கற்றுத் தெளிந்து 32 இலக்கணங்களைத் தெரிந்தவரென்ற பெயரையும் புகழையும் பெற்றார். பிறகு செஞ்சிக்குப் போய் அங்கு மகமதியர்கள் பயத்திற்காக மறைத்து வைத்திருந்த ஸ்ரீரங்கநாதர் உற்சவ விக்கிரகத்தை மறுபடியும் ஸ்ரீரங்கத்துக்கே கொண்டுவந்து சேர்த்தார். பிறகு உடையவருடைய திருவடிகளைப் பெற்று, யதிராஜவிம்ஸதி என்னும் கிரந்தத்தை இயற்றினர். அதனால் திந்திரபிரணவர் என்ற பெயரும் உண்டாயிற்று. அப்போது இவருக்கு முக்கிய சிநேகிதராயிருந்தவர் திருவாய்மொழிப்பிள்ளை என்பர். அந்தத் திருவாய்மொழிப்பிள்ளை திருமொழி வியாக்கியானம், ஸ்ரீவசண பூஷண வியாக்கியானம், வியாப்தி அநுசந்தானம் முதலான கிரந்தங்களை இயற்றி வைகாசிமீ வைகுண்ட மடைந்தார். பிறகு பெரிய ஜீயரென்னும் அழகிய மணவாளமாமுனிகள் அநேக திவ்விய தேசங்களைத் தரிசித்தும், அநேகரை வைணவ சமயத்தைத் தழுவும்படி செய்தும், சில வைணவ ஆசாரிய மடங்களை ஸ்தாபித்தும் வந்ததன்றியில் அநேக கிரந்தங்களையும் இயற்றினர். அவற்றுள் இரகசியத்ரய வியாக்கியானம், தத்துவத்ரய வியாக்கியானம், ஆசார்ய ஹிருதய வியாக்கியானம், பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம், நூற்றந்தாதி யுரை, ஞானசார வியாக்கியானம், பிரமேயசார வியாக்கியானம், ஏழுபாட்டு வியாக்கியானம், கீதாதாத்பரிய தீபம், தத்வத்ரயத்திற்குப் பிரமாணத் திரட்டு, முப்பத்தாறாயிரப்படிக்குப் பிரமாணத் திரட்டு, உபதேசரத்நமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, எதிராஜ விம்சதி, இயல்சாற்று, ஆர்த்திப்ரபந்தம், தனிக்கவி, விடுதி சுலோகங்கள் முதலானவை சிறந்தவைகளாம். அப்போது இவரைச் சூழ்ந்திருந்த வானமாமலை ஜீயர், கோயில் கந்தாடையண்ணன், என்றும்பியப்பன், திருமலை எம்பெருமானர் ஜீயர், பட்டர்பிரான் ஜீயர், அப்பிள்ளை, அப்பிள்ளான், பிரதிவாதி பயங்கரமன்னன் ஆகிய எண்மரும்

அஷ்டகஜங்களாவர். இவர் உடையவராகிய ஸ்ரீ ராமாநுஜருக்குப் பிரதிநிதியைப்போல் அவதரித்து அவர் கருத்தை வெளியாக்கி, தமது 73-வது வயதாகிய உருத்ரோத்காரிஸு மாசிமீ கிருஷ்ணபக்ஷம் துவாதசி திருவோணத்தில் பரமபத மடைந்தார். வைஷ்ணவ தென்கலை வகுப்பாருக்கு இவர் சிரேஷ்டராவர்.

இவ்விதம் தக்ஷண தேசத்தில் வைஷ்ணவ மதத்தைப் பன்னிரண்டாழ்வார்களும், பன்னிரண்டு ஆசாரியர்களும் அவதரித்துத் தமது கல்வி கேள்விகளினால் பிரபலப்படுத்திய பிறகு, அம்மதத்தைப் பின்னும் பிரகாசமாக்கப் பல புத்திமான்கள் அவதரித்தாலும், அவர்களில் சிரேஷ்டரும் ஸம்ஸ்கிருதம் தமிழ் பாஷைகளில் மஹா பண்டித சிகாமணியும், சர்வ சுதந்திரரென்னும் பெயரைப் பெற்றவருமாகிய வேதாந்த தேசிகரேயாம்.

---

## வேதாந்ததேசிகர்.

இவர் காஞ்சிபுரத்தில் கலி 4371ஸு சுக்கில வருஷம் கன்யாமீ தசமி புதன்கிழமை கி. பி 1600-ம் வருஷத்திற் பிறந்து, வேதசுருதியாதி கருத்துக்களைக் கொண்டு வைணவத்தை வடகலை சம்பிரதாயமாக ஸ்தாபித்து, பல திவ்ய தேசங்களுக்குப் போய் வைஷ்ணவத்தைப் பரிபாலித்து, அநேக தர்க்க தத்துவ கிரந்தங்களை யியற்றினர். அவருடைய கிரந்தங்களில், வியாசரா லியற்றப்பட்ட வேதாந்த சாஸ்திரங்களுக்கும், பகவத்கீதைக்கும் சிறந்த பாஷ்யங்களையும், சங்கல்ப சூரியோதய மென்னுந் தத்துவநாடகத்தையும், பரமபத தரிசனம், வைராக்கிய பஞ்சகம் முதலான அநேக சிறந்த கிரந்தங்களையு மியற்றி, அநேக திவ்விய தேசங்களைத் தரிசித்துக் கடைசியாகத் தமது மனைவியைப் பெற்றோர் வீட்டுக் கனுப்பிவிட்டுத் தாம் சந்நியாச ஆச்சிரமத்தை யனுசரித்து, நூறுவது வயதாகிய சௌமிய நாமஸு பரமபதமடைந்தார். இவரியற்றிய 120 கிரந்தங்களில் ஸ்தோத்திரங்கள் 32, காவியங்கள் 3, அனுஷ்டான சாஸ்திரங்கள் 28, இரகசியங்கள் 32, ஸம்பிரதாய பிரபந்தங்கள் 24, பகவத் விஷயமான கிரந்தம் 1. இவருக்கு வரதர் என்னும் சீடரொருவ ரிருந்தார். காஞ்சிபுரத்தில் 16-ம் நூற்றாண்டில் பிறந்த வெங்கடாசாரியர் என்னும் மகாகவி,

சங்கல்ப சூரியோதயம் முதலானவைகளுக்குப் பொருள் எழுதினர்.

இந்த வேதாந்த தேசிகருக்கு முன்னும் பின்னும் சில வைஷ்ணவர்கள் அவதரித்தாலும் அவர்களில் பெரும்பாலார் கேவலம் கவிவாணர்களே தவிர வைஷ்ணவ மதோத்தாரணர்களென்று சொல்லப் பொருந்தார். அவர்களில் முக்கியமான சில வித்வான்கள் யாவரெனில்,

1. வில்லிபுத்தூராழ்வார். 2. பிள்ளைப்பெருமாள் ஐயங்கார். 3. வேணுகோபாலய்யங்கார். 4. ஸ்ரீநிவாச ஐயங்கார். 5. கம்பர். 6. நல்லாப்பிள்ளை முதலானவர்களே.

---

## துவைத சித்தாந்த பிரபாகரர் ஸ்ரீ மத்துவாசாரியர் சரித்திர சார சங்கிரகம்.

மத்துவாசாரியர் கி. பி. 1119ளு ஆகஸ்டு மாதத்துக்குச் சரியான கலியுகாப்தம் 4420-க்குச் சரியான சாலிவாஹனம் 1040, விளம்பிளு ஆஷாடபஹுளம் 4உயன்று துளுவநாட்டில் உடுப்பிக்கருகில் பாஜாக க்ஷேத்திரத்தில் அநந்தேசுவர கிராமத்தில் அவதரித்தார். முக்கிய பிராணதேவனென்ற வாயுவே, இராமாவதாரத்தில் ஆஞ்சநேயராகவும், கிருஷ்ணாவதாரத்தில் பீமசேனனாகவும், கலியுகத்தில் மத்துவாசாரியராகவும் அவதரித்தாரென்று சொல்லுவாருமுண்டு. இவர் தந்தையாகிய மத்தியகேஷபத்தர் இவருக்கு உபநயனமானவுடனே விவாகம் செய்ய யோசித்திருந்தார்; இவரோ சந்நியாச ஆசிரமத்தில் சேர்ந்து ஜனோபகாரமாக உழைக்கப் பிரவர்த்தித்தார்.

இவருக்கு முதலில் வசுதேவாசாரியர், ஆநந்த தீர்த்தாசாரியர் என்ற பெயர்களுமுண்டு. தமது ஒன்பதாவது வயதிலேயே அச்சுதபிரகாச ஸ்வாமிகளாகிய ஆசாரியருக்குச் சீடராகிக் கங்கா யாத்திரை செய்ய ஆரம்பித்தார். ஆனால் ஆசாரியருடைய அநுக்கிரகத்தினால் ஷை கங்கையே இந்த இடத்திற்கு வர அதில் அனைவரும் குளித்து அகமகிழ்ந்தார்கள். அது இன்றளவும் "மாத்துவ ஸரோவரம்" என்னும் பெயர் பெற்றிருக்கிறது. இவரது 17-வது வயதில் ஆசாரியர் இறந்துபோக இவர் பதரிகாச்சிரமத்துக்குப் போய் வியாஸ பகவானைத் தரிசித்தும், தத்துவ

ஞானம் பெற்றும், எட்டு சாலக்கிராமங்களுடன் உடுப்பிக்கு வந்தும், அவைகளுக்கு எட்டு மடங்களை ஸ்தாபித்தும், வழியில் கோபிசந்தனத்தி லகப்பட்ட ஒரு கிருஷ்ண விக்கிரகத்தைக் கொண்டு வந்து உடுப்பியில் ஒரு கிருஷ்ணர் கோயிலைக் கட்டியும்வைத்தார். இவர் ரிக்பாஷ்யம், தசோபநிஷத்பாஷ்யம், கீதாபாஷ்யம், பிரம்மசூத்திரபாஷ்யம், பாரத தாத்பரிய நிர்ணயம், பாகவததாத்பரியநிர்ணயம், கிருஷ்ணமிருதமஹார்ணகம், தந்திரசாரம், அநுவேதாந்தம் முதலான முப்பத்தேழு பெரிய கிரந்தங்களை இயற்றி; தமது மடத்தாருக்குப் போதித்து அவைகளை உலக ஜனங்களுக்குப் போதிக்கும்படியாக ஆக்ஞாபித்து தமது 79-வது வயதாகிய கி. பி. 1198 ௵ பிப்ரவரிமீ" த்துக்குச் சரியான சாலிவாகன 1120௵-பிங்கள௵ மாகமீ" மறுபடியும் பதரிகாச்சிரமத்துக்குப் புறப்பட்டுப் போனார். அப்படிப்போனவர் இதுவரையிலும் திரும்பி வராமையால் அவரிப்போதும் அந்த ஆச்சிரமத்திலேயே ஸ்ரீ வியாசபகவானிடம் இருப்பதாக இம்மதஸ்தர்கள் சொல்லுகிறார்கள்.

---

## ஆலயங்கள்.

---

[இனி நமது ஆலயங்களைச் சுத்திசெய்து புனிதமாக்கும் மகிமையைப் பற்றியும், அப்படியே அவைகளின் ஆராதனை மகிமையைப் பற்றியும், புஷ்ப - தூப - தீப - நிவேதன - கற்பூர - சாளக்கிராமாதி மகிமையைப்பற்றியும், ஸ்ரீமான் ஆசூரி ரங்காசாரியர் எழுதிய கிரந்தத்தில் கண்ட சில விசேஷ விஷயங்களை இதனடியிற் காட்டியிருக்கின்றனம்.]

### ஆலயங்களின் மகிமை.

1. ஆராதனையில்லாமல் கிலமாகப் போய்விட்ட கோவில்களை ஆராதனை நிவேதனம் வுண்டாகும்படிச் செய்வித்தாலும், அல்லது ஜீரணமாய்ப்போயிருந்து அதைக் கட்டி வைத்தாலும் அல்லது கட்டி வைக்கும்படி செய்வித்தாலும், கட்டுகிறவனுக்கு உதவி செய்தாலும், இப்படிப்பட்ட புண்ணியவான்கள், சகல சாம்பிராஜ்ஜிய வைபவங்களை அனுபவித்து, பின்பு ஜகஜ்ஜோதியான விமானத்தில் ஏறிக்கொண்டு எதேச்சையாய்ச் சுவர்க்கலோகம், பிரம்மலோகம் முதலான எல்லா லோகங்களிலும் உண்டான சுகங்களை

அனுபவித்துத் தன்னுடைய வம்சத்தார்கள் இருபத்தொரு தலைமுறையி லுள்ளவர்கள் நரகத்தி லிருந்தாலும் அவர்களும் சாயுஜ்ஜிய பதவியை அடைவார்கள்.

2. தேவாலயங்களி லிருக்கிற குப்பை செத்தைகளை அன்றாடம் சுத்தம் செய்கிறவர்கள் அல்லது செய்விக்கிறவர்கள், தங்களுடைய பாவங்கள் நசித்து அதிக சுகங்களை அனுபவித்து அந்தியத்தில் விமானரூடராய்ச் சுவர்க்கத்தில் அதிக சுகம் அனுபவிப்பார்கள்.

3. புண்ணிய காலங்களில் புருஷசூக்தத்தினால் பகவானுக்குத் திருமஞ்சனம் செய்விக்கிறவன், உதவியாக இருந்து நடத்துகிறவன், பரிசுத்தமான நல்ல வஸ்திரத்தினால் வடிக்கட்டின நல்ல ஜலத்தினாலும், பரிமளங்கள் சேர்த்த தீர்த்தத்தினாலும், இளநீரினாலும், பசுவின் பாலினாலும், நல்ல பரிசுத்தமான தேன் - பழம் - சர்க்கரை முதலானவைகளும் சேர்த்துச் செய்த அந்த பஞ்சாமிர்தத்தினாலும், பரிமளமுள்ள நல்ல கந்தத்தினாலும் சுவாமிக்குத் திருமஞ்சனம் விதம் விதமாகச் செய்வித்தால், அவர்களுடைய தாய் வம்சமும், தகப்பன் வம்சமும், மனைவி வம்சமும், அவர்களைச் சேர்ந்த பந்துக்களின் வம்சமும், இவர்களெல்லாம் அதிக சுகங்களை அனுபவித்து அந்தியத்தில் திவ்ய விமானத்தில் ஏறிக்கொண்டு, சுவர்க்கம் முதலான லோகங்களில் சென்று தேவதைகள் முதலானவர்களால் சூழப்பட்டு யமாதிலோகம் சென்று யமாதிகளால் ஆராதிக்கப்பட்டுப் பின்பு விஷ்ணுலோகம் சென்று சாயுஜ்ஜிய பதவியை யடைவார்கள்.

4. தேவாலயங்களில் த்வஜ ஸ்தம்பம் செய்து அல்லது இருந்ததை நடுவித்து சம்புரோக்ஷணை செய்விக்கிறவர்கள் பாபநிவாரணமாகிச் சகல சம்பத்தும், தீர்க்காயுசும், புத்திர பாக்கியமும் அடைந்து, மங்களகரமாய் வாழ்ந்து பின்பு விமானரூடராய்ச் சுவர்க்கம் முதலான உலகங்களிலுள்ள சுகங்களை அனுபவித்துப் பின்பு சாயுஜ்ய பதவியை அடைவார்கள்.

5. ஹரிஹரருடைய பூமி தோட்டம் முதலான எந்தச் சொத்தையாகிலும் அபகரிக்கிறவன், பதினாயிரம் பிரம்மஹத்தி செய்த மகா பாபியாகின்றான். அவர்களுடைய நரக

வேதனையைச் சொல்லமுடியாது. நரகங்களின் விவரம் சேஷதர்மத்தில் 18, 19, 20, 21-வது அத்தியாயங்களிலும் அநுசாசநீகபர்வம் முதலான கிரந்தங்களிலும் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

6. சுவாமிக்குச் சாத்துவதற்குப் புஷ்பச்செடிகள் தன்னால் கூடியவரையில் சொற்பமாகவாகிலும் வைத்து அல்லது வைப்பித்துத் தண்ணீர் கொட்டி வேலி கட்டுக் காப்பாற்றுகிறவனுடைய 21 தலைமுறையிலுள்ளவர்கள் நரகத்திலிருந்தாலும் அவர்களும் விமானாரூடராய்ச் சுவர்க்கம் முதலான எல்லா உலகங்களிலுள்ள சுகங்களை அநுபவித்து, பின்பு அழிவில்லாத சாயுஜ்ஜிய பதவியை அடைவார்கள். இவர்களுடைய பாக்கியம் சொல்லத்தரமன்று.

7. ஆராதனை செய்யும் தேவாலயங்களைக் கண்டால் பிரதக்ஷணம் செய்து தண்டன் சமர்ப்பிக்கவேண்டியது. ஒரு பிரதக்ஷணம் செய்யலாகாது. ஒரு பிரதக்ஷண முதல் 6 பிரதக்ஷணம் வரையில் பிரதிநாளும செய்கிறவன் அதிக சுகங்களை அநுபவித்துப் பின்பு விமானாரூடராய்ச் சுவர்க்காதி போகங்களை அநுபவிக்கிறான். பிரதிதினமும் 7 பிரதக்ஷணம் வீதம் செய்துவந்தால் எல்லாப் பாங்கியங்களையும் அநுபவித்துப் பின்பு சுவாமிக்குத் தாசனாய்விடுகிறான்.

பிரதிதினமும் 8, 9 பிரதக்ஷணம் வீதம் செய்து வந்தால், அதிக சுகங்களை அநுபவித்து வைகுண்டத்தில் சாலோக பதவியை அடைவான்.

10-11-12 வரையில் பிரதிநாளும் பிரதக்ஷணம் செய்துவந்தால் கோரின சுகங்களெல்லாம் அநுபவித்து அழிவில்லாத சாயுஜ்ஜிய பதவியை அடைவான். மோக்ஷத்தைக் கோருகிறவர்கள் நிர்ணயமில்லாமல் பிரதக்ஷணம் செய்யலாம்.

8. தருமத்திற்காக வைத்திருக்கிற பூந்தோட்டத்திலிருந்து புஷ்பங்களைத் தேவதார்ச்சனைக்கு உபயோகப்படுத்த வேண்டியது. அதில் சம்பந்தப்பட்ட எவராகிலும் புஷ்பங்களை விக்கிரயம் செய்தாலும், இதர வீண்செலவுகள் செய்தாலும் இவர்களுடைய குடும்பத்துடன் இவர்கள் வம்சஸ்தர்களும் அநேக யுககாலம் கடினமான நரக வேதனைகளை அநுபவிப்பார்கள்.

9. பூந்தோட்டத்திலிருக்கும் புஷ்பங்களைச் சுவாமிக்குச் சாத்தி, அப்படிச் சாத்தின புஷ்பங்களைக் காலில் மிதிக்கலாகாது. கோவிலுக்காக நியமித்திருக்கிற புஷ்பங்களையாவது, துளசியையாவது வீட்டில் ஆராதனைக்குக் கொண்டுபோய் உபயோகப்படுத்தக்கூடாது. இந்த மகத்துவத்தைப் பிரதிதினமும் பக்தியாய் வாசிக்கப்பட்டவர்கள் அஷ்ட ஐஸ்வரியமும் அனுபவித்துப் பின்பு சுவர்க்காதி போகங்களையும் அனுபவிப்பார்கள்.

## சகல ஜனங்களும் அவரவர்களுடைய வீட்டில் சுவாமியைக் கொண்டாடவேண்டிய விஷயங்கள்.

1. பிரதி மனிதரும் எந்தெந்தத் தெய்வத்தின்பேரில் அன்பு வைத்திருக்கிறார்களோ அந்தத் தெய்வத்தை வீட்டில் படங்களை வைத்துக்கொண்டாவது, விக்கிரஹங்களை வைத்துக்கொண்டாவது, சாளக்கிராமம் முதலானவைகளை வைத்துக்கொண்டாவது ஆராதிக்கவேண்டியது.

2. ஆராதனை செய்யும்போது கந்தம், புஷ்பம், தூபம் சமர்ப்பிக்கவேண்டியது. சுவாமியினிடத்தில் 2 தீபம் ஏற்றி வைக்கவேண்டியது. அந்தத் தீபங்கள் ஒரு முகூர்த்த காலத்துக்குக் குறையாமல் எரியவேண்டியது. எந்தப் பதார்த்தங்களும், அன்னமும் பக்ஷ்யமுதலானவையும் சுவாமிக்கு நிவேதனம் சமர்ப்பிக்கவேண்டியது. சமர்ப்பிக்கும்போது அன்னசுத்தி, அதாவது எல்லாப் பதார்த்தங்களிலும் நெய் சேர்க்கவேண்டியது. வெற்றிலை, பாக்கு, பழம் சமர்ப்பிக்கவேண்டிது. கற்பூரார்த்தி சமர்ப்பிக்கவேண்டியது. சத்திர சாமரங்கள் முதலானவை சமர்ப்பிக்கவேண்டியது.

## புஷ்பஜாதிகளின் மகிமை.

3. கமகமவென்று வாசனையாக இருக்கப்பட்ட பல கோடி புஷ்பங்கள் உண்டு. வெள்ளைப் புஷ்பங்களால் பிரதிதினமும் அர்ச்சனை செய்தாலும், சரம் சரமாகச் சாத்தினாலும், மாலை கட்டிச் சமர்ப்பித்தாலும், தைரியமும் வீரவிஜயமும், சம்பத்தும், ஆயுராரோக்கியமும் அடைவார்கள். முடிவில் அவர்கள் அடையும் பேறு சொல்லத்தரமன்று. இந்தப் புஷ்பங்கள் யாவும் கல்வி, ஞானம் கொடுத்துச் செல்வ போகம் அடுத்து அந்தியத்தில் மோக்ஷவீடு போவதற்கு முதற்படியா யிருக்கும்.

4. சிவப்புப் புஷ்பத்தினால் பிரதிதினமும் அர்ச்சனை செய்தாலும், சரம் சரமாகச் சாத்தினாலும், மாலை கட்டிச் சமர்ப்பித்தாலும், நினைத்த போகபாக்கியங்களெல்லாம் கைகூடும்; சத்துரு ஜயமாகும்; நீடூழிகாலம் வாழ்ந்து நித்திய பதம் பெறலாகும்.

5. மஞ்சள் புஷ்பத்தினால் பிரதிதினமும் சுவாமிக்கு அர்ச்சனை செய்தாலும், சரம் சரமாகச் சாத்தினாலும், மாலை கட்டிச் சமர்ப்பித்தாலும், பாபரகிதனாய், மைந்தர், மனைவாழ்க்கை, மாடு, கன்று, நிலம், பலம், குலம், தலம் ஆகிய எல்லாம் பெருமைகளையும் அடைந்து, தரும கலியாணங்கள் பண்ணிவைத்துத் தன்னியராவார்கள்.

6. கருப்புப் புஷ்பத்தினால் சுவாமிக்குப் பிரதிதினமும் அர்ச்சனை செய்தாலும், சரம் சரமாகச் சாத்தினாலும், மாலை கட்டிச் சமர்ப்பித்தாலும், பாபரகிதனாய் வியாபார சிந்தையில் ஈட்டிய பொருளுடையவனாய், அஞ்ஞானம், ஆசையுடையவனாய்ப் பூமியில் வாழ்ந்து அந்தியத்தில் விக்கியானம் மேலிட்டு மேன்மைபெற்று மேலுலகம் அடைவான்.

## சந்தனத்தின் மகிமை.

7. நல்ல பரிமளமுள்ள கட்டையினால் சந்தனம் அரைத்து உருண்டையாக்கி நாள்தோறும் பகவானுக்கு மார்பில் சாத்தினாலும் சாத்தும்படி செய்வித்தாலும் தீராத மகா பாதகங்களெல்லாம் தீரும். மறுநாள் சுவாமிக்குச் சாத்தும் போது பழைய சந்தனத்தை நல்லவர்களுக்குக் கொடுத்துத் தானும் உபயோகப்படுத்திக்கொள்ளலாம்.

8. சந்தனத்தூள் எடுத்துப் பிரதிதினமும் சுவாமிக்குத் தூபங்கள் கொடுத்துவந்தால், பிரம்மஹத்தி முதலிய தோஷங்கள் நீங்கும். தருமத்துக்கும் நீதிக்கும் இருப்பிடமாவார்கள்.

## சாம்பிராணியின் மகிமை.

9. நல்ல சாம்பிராணியைப் பொடிசெய்து சுவாமிக்குத் தூபங் காட்டினால் சொல்லி முடியாத அதிபதித்துவமும் நல்ல கதியும் அடைவார்கள். ஜீவன்முக்தர்களுடைய தரிசனமும் கிடைக்கும்.

## கற்பூரத்தின் மகிமை.

10. பிரதிதினமும் சுவாமிக்கு இடைவிடாமல் கற்பூர ஹாரத்தி செய்தாலும், செய்வித்தாலும் பாபங்கள் நசித்துக் கியாதியாக வாழ்ந்து, அகண்ட சாம்பிராஜ்ஜிய பட்டாபிஷேகம் பெறுவார்கள். பின்பு விமானரூடராய்ச் சுவர்க்காதி போகங்களை அனுபவித்துப் பின்பு சாயுஜ்ஜிய பதவியை அடைவார்கள்.

## தீபத்தின் மகிமை.

11. சுவாமிக்குப் பிரதிதினமும் தீபங்கள் ஏத்தி வைத்தால், அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும், பொன், பாக்கிய பூஷணாதிகளுடன் புவியாண்டுப் பிறகு அரிதாகிய மேலான பதவியை அடைவார்கள். தீபங்களுக்குப் பசுவின் நெய்யாலும், பருத்திப்பஞ்சாலும் அல்லது தாமரை நூலினாலும் தீபங்கள் விளங்கவைத்தால், ஜன்மாந்திரங்களில் செய்த சகல வினைகளும் தீர்ந்து, ஐஸ்வரியம் பெறுகி, வியசன முதலானவை மாய்ந்து, தரித்திரமும் காதவழிக்கப்பால் பாய்ந்து தேய்ந்து, கனமும் இனமும் தனமும் நல்ல மணமும் பெறுவார்கள். மோக்ஷவீடு முன்னே நிற்கும்.

## நைவேத்தியத்தின் மகிமை.

12. சுவாமிக்கு நைவேத்தியம் வைக்கச் சமயனுக்கு ஆரம்பிக்கும்போது அமிந்திரியில் கல், நெல், புல் முதலிய மலினமில்லாத அன்னங்களைப் பதார்த்தத்துடன் அன்ன சுத்தி செய்து (அதாவது ஏழுபரிக்கைப் பிரசாதம் நனையும்படி ஏழு பொட்டுக்குக் குறையாமல் நெய்விட்டால் அது தான் அன்னசுத்தியென்று பெயர்) நைவேத்தியம் பண்ணினவர்கள் அடையும் தனத்தைப்போல் வேறு தவமில்லை. மோக்ஷத்தைத் தருகின்ற ஜகதீசுவரனை ஆராதிப்பதற்குச் சமானம் ஒன்றுமில்லை.

13. தேவதார்ச்சனையும் நைவேத்தியமு மில்லாமலு மிருக்கிற போஜனத்தைப் புசிக்கலாகாது. தேவதார்ச்சனை செய்துவிட்டு நைவேத்தியமு மில்லாமல் இருக்கக்கூடாது. தேவதார்ச்சனை செய்யாமல் தீபம் ஏற்றலாகாது; நைவேத்தியமும் செய்யக்கூடாது. ஆராதனை செய்து தூபமும் நைவேத்தியமும் கொடுத்துத் துளசிதீர்த்தம் வாங்கிக்

கொண்டு போஜனம் உண்ணவேண்டும். ஆராதனை செய்து நைவேத்தியமான பிறகு கற்பூர ஆர்த்தி செய்து பின்பு ஆராதனையான துளசிதளத்துடன் தீர்த்தம் வாங்கிக்கொள்ள வேண்டியது. ஆராதனை இல்லாமல் சாப்பிட்டால் புழுவுக்கும் விஷத்துக்கும் சமானம். பிச்சையிடாத உலோபிகளின் வீட்டில் சாப்பிட்டால் புழுவுக்குச் சமானம். இப்படிப் பட்டவர்கள் வீட்டில் யாசிக்கவு மாகாது.

14. சுவாமிக்குத் தீபம் ஏற்ற ஏழைகளுக்கு நெய் அகப்படாது. ஏழைகள் நல்ல பஞ்சு தாமரை நூல் இவைகளில் வத்தி செய்து, நல்லெண்ணெயினால் தீபம் ஏற்றி வைத்தால் பணக்காரன் நெய்யினால் ஏற்றின பலன் இந்த ஏழைக்கும் உண்டு. தீபத்துக்குத் துணிநூலினால் வத்தி செய்து தீபம் ஏற்றலாகாது.

15. பிரதி வெள்ளிக்கிழமையிலும் பசுவின் கோமயத்தினாலும், சாணத்தினாலும் வீடுவாசல்களைச் சுத்திசெய்து, மொக்கிட்டு, மாவிலைத் தோரணங் கட்டிப் படங்கள், விக்கிரகங்கள் முதலானவைகளில் எது இருக்கிறதோ அந்தச் சுவாமிக்குப் புஷ்பங்களினால் ஆராதித்துச் சரம் சரமாக மாலைகட்டிச் சமர்ப்பித்த பிறகு தூபம் தீபம் நைவேத்திய முதலானவையும் சமர்ப்பித்து வருவாராகில், ஸ்ரீ மகாலட்சுமி அவ்விடத்தில் மகா பிரியத்துடன் இருந்து அஷ்ட ஐஸ்வரியமான பாக்கியத்தைக் கொடுக்கிறாள்.

16. கோவில்களிலும், பிரதி வெள்ளிக்கிழமை தப்பாமல் மஹா லக்ஷ்மியை மண்டபத்தில் எழுந்தருளப்பண்ணி உத்ஸவம் செய்யவேண்டியது. விதம் விதமான பரிமளமுள்ள திருமஞ்சனங்களும் நடத்திப் புஷ்பங்களால் அலங்கிருதம் செய்து அர்ச்சனை முதலானவையும் செய்விக்க வேண்டியது. அமிருத மகா நிவேதனங்கள் சமர்ப்பிக்க வேண்டியது. அப்படி நடத்திவரப்பட்டவர்களுடைய பாக்கியம் இன்னதென்று சொல்லமுடியாது.

17. 3-வது இலக்கமுதல் 12-வது இலக்கம் வரையில் சொல்லியிருக்கிறபடி புஷ்பம், தூபம், தீபம் முதலானவைகளைக் கோவில்களிலும் நடக்கும்படி செய்யவேண்டியது. அப்படி நடத்திவரப்பட்டவர்களுடைய பாக்கியம் சொல்லத்தரமன்று. அவர்கள் அடையும் பலனும் எழுதி முடியாது.

18. ஆராதனை செய்யப்பட்ட பிராமணனுக்கு ஒரு சாளக்கிராமம் தானம் செய்தால் நான்கு கடலுக்குள்பட்ட பூமியைத் தானம் செய்தால் என்ன பலனோ அப்பேர்ப் பட்ட பலனை அடைவார்கள்.

19. சாளக்கிராமம் இருக்கிறவிடம் பரிசுத்தமானது. துளசி தளங்களால் ஆராதனை முதலானவைகளைச் செய்தா லும் அல்லது செய்வித்தாலும், தீபங்கள் ஏற்றி அல்லது ஏற்றி வைக்கும்படி செய்தாலும், நிவேதனம் முதலானவைகள் செய்தாலும், இப்பேர்ப்பட்டவர்களுடைய பாக்கியம் சொல் லத்தரமன்று. யோகசித்தியும் விமலமான ஞானத்தையு மடைந்து சுகங்களெல்லாம் அனுபவித்துப் பின்பு விமானா ரூடராய்ச் சுவர்க்கம் முதலான உலகங்களிலுள்ள சுகங்களை அபவித்துப் பின்பு சாயுஜ்ஜிபதவி யடைவார்கள்.

20. சுவர்க்க மத்திய பாதாளத்தி லிருக்கிற தேவதை கள், ரிஷிகள், பெரியாழ்வார் முதலானவர்க ளெல்லோரும் ஆராதனையானது துளசிதீர்த்தத்துக்கும், நைவேத்தியமான போஜனத்திற்கும் சமானம் ஒன்றுமில்லையென்று போற்றிப் பாபங்களைப் போக்கிக் கரையேறலாமென்று கூறியிருக்கிற வேதாகம விதியைத் தேடி மேலானார்கள் என்று சொல்லப் பட்டிருக்கின்றது.

---

# சென்னை இராஜதானி.



இந்த இராஜதானி 1891-ம் வருட கணக்கின்படி தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் என்கிற பஞ்ச திராவிடமென்னும் ஐந்துவித பாஷைகளை வழங்கி வரும் 3,92,80,000 ஜனங்களை உடையதாயும், அநேக கோயில் கோபுர கட்டிடங்களை உடையதாயும் பிரகாசிக்கின்றது.

இதில் யாத்திரை செய்வோர்க்கு நூற்றுக்கணக்கான ரோட்டுகளும், பரசல் படகு, கப்பல்முதலான வசதிகளும் இருப்பதோடு அநேக ரயில் பாதைகளும் போடப்பட்டுப் போக்குவரவு வசதிக்கு அநேக இருப்புப்பாதை வண்டிகள் இரவும் பகலும் ஓயாது ஓடிக்கொண்டேயிருக்கின்றன.

அவை எவையெனில், தென்னிந்தியா இருப்புப்பாதை, தென் மஹாராஷ்டிர இருப்புப்பாதை, கிழக்குக்கரை இருப்புப்பாதை. தென்னிந்தியா இருப்புப்பாதை சென்னப்பட்டணத்தினின்று ஆரம்பித்துத் தென்முகமாய்ச் செங்கற்பட்டு, தென்னாற்காடு, திருச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களின் வழியாய்ச் சென்று கரைதுறைப் பட்டணமாகிய தூத்துக்குடியில் முடிகிறது. இப்போது அந்த தொடர்ச்சியைச் சுமார் 22 மைல்கள் தூரத்திலிருக்கும் இலங்கைத் தீவுக்கும் புகைவண்டி, ராமேஸ்வரம் தலைமன்னார் தனுஸ்கோட்டி தீவுகளின் வழியாகப் போய்வரும்படி பிரயத்தனம் செய்து 70 லக்ஷம் ரூபாயில் ஒரு இருப்புப் பாலம் கட்டப்பட்டு 1914வரு பிப்ரவரிமீ 23உ அந்த பாலத்தில் வண்டிகள் போய்வர ஆரம்பிக்கப்பட்டன. இப்பெரிய பாதையிலுள்ள செங்கறபட்டு ஸ்டேஷனிலிருந்து ஒரு சிறு கிளை காஞ்சீபுரம் வழியாய் அரக்கோணத்திற்குச் சென்று அங்குச் சென்னை இருப்புப்பாதையுடன் கலக்கிறது. விழுப்புரத்திலிருந்து கிழக்குத் திக்காய் ஒரு கிளை புதுச்சேரிக்குப் போகிறது. இவ்விழுப்புரத்தினின்றே வேறொருகிளை வேலூர்வழியாய்ச்சென்று தென்மேற்காய்ச் செல்லுகிறது. சென்னை இருப்புப்பாதையைக் காட்பாடியில் குறுக்கிட்டுக்கொண்டு, பாக்காலா-திருப்பதி இவைகளின் வழியாய் ரேணிகுண்டாவுக்குப் போய் அவ்விடத்தில் வட

மேற்காய்ச் செல்லும் சென்னை இருப்புப்பாதையுடன் கலந்து, பின்பு வடக்கு முகமாய்ப் போய் நெல்லூர் ஜில்லாவிலுள்ள கூடூரில் கிழக்குக் கரை இருப்புப்பாதையுடன் கலக்கிறது. இக்கிளையிலுள்ள பாக்காலாவினின்று ஒரு கிளை வடமேற்காய்ச் சென்று தர்மாவரத்தில் தென் மஹாராஷ்டிர இருப்புப்பாதையைச் சந்திக்கிறது. மாயவரத்தினின்று ஒரு கிளை தெற்குமுகமாய்த் திருவாலூர்-முத்துப்பேட்டை வழியாய்ப் பட்டுக்கோட்டைக்குச் செல்லுகின்றது. தஞ்சாவூரினின்று ஒரு கிளை நேர் கிழக்காய் நாகூர் வரையில் போகின்றது. திரிசிராப்பள்ளியிலிருந்து ஒரு கிளை மேற்கு முகமாய்ப் போய் ஈரோட்டில் சென்னை தென்னிந்தியா இருப்புப் பாதையுடன் கலக்கிறது. மணியாச்சியினின்று ஒரு கிளை திருநெல்வேலி வரையில் செல்லுகிறது. மதுரையினின்று ஒரு பிரிவு இராமநாதபுரம் வழியாய்ப் பாம்பனுக்குப் போகின்றது.

## சென்னப்பட்டணம்.

இந்த இராஜதானிக்குப் பிரதான பட்டணமாகிய சென்னப்பட்டணம் கொரமண்டல் கடற்கரை யோரமாய் ஒன்பது மைல் நிகளமும், மூன்றரை மைல் நிலமாயும், இருபத்தேழு சதுரமைல் விஸ்தீரண முள்ளதாயும் இருக்கிறது. இது சந்திரகிரியிலுள்ள ஆந்த்ர சந்த்ரகுல ஸ்ரீரங்க ராயருடைய சமஸ்தானத்திற் குட்பட்ட மீன் பிடிக்கும் ஓர் கரை தீரஸ்தலமாயிருந்தது. 1639ஹு அதை ஆங்கிலேய ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் ஒரு வர்த்தக ஸ்தலம் கட்டுவதற்காக மிஸ்டர் பிரான்ஸிஸ் டே என்பவர் ஸ்ரீரங்கராயரவர்களைக் கேட்க, அவர் தமது ஏஜண்டாகிய தாமராத வெங்கடாத்திரி நாயுடுக்கு அளந்து கொடுக்க உத்தரவு செய்ய, அவரும் அந்த இடத்தில் தனது தகப்பனார் பெயராகிய சென்னப்ப நாயுடு பட்டணமென்று வழங்கிவரும்படிக் கொடுத்தார். ஆகவே, அந்த இடத்திற்குச் சென்னப்ப நாயுடு பட்டணம் அல்லது சென்னப்பட்டணம் என்று பெயரிடப்பெற்றது. மேலும், அதற்கு ஆங்கிலேய பாஷையில் மதராஸ் என்று வழங்கிவருகிறது. அப்படியானதற்குக் காரணம், அப்போது ஜார்ஜ் டவுனில் கட்டப்பட்ட ஆர்மீனியன் சென்ட் மேரி கோவிலுக்கு மேட்ரிடையஸ் என்ற பெயர் வழங்கிவந்தமையால் அப்பெயரை அநுசரித்து மதராஸ் என்ற பெயரைப் பெற்றதாகத்

தோன்றுகிறது. அதன் வடபக்கத்தில் தண்டையார்ப் பேட்டை, வியாசர்பாடி, இராயபுரம் என்னும் உட்பிரிவுக ளிருக்கின்றன. அவைகட்குத் தெற்கே முத்தியாலுப் பேட்டை அல்லது கருப்பர்பேட்டை அல்லது இப்போது வழங்கும் ஜார்ஜ் டவுன் என்னும் சுமார் $1\frac{1}{2}$ சதுரமைல் உள்ள பாகம் ஏராளமான சுதேச ஜனங்கள் வசிக்கும்படி யானதாயும், $1\frac{1}{2}$ மைல் கடற்கரை யோரமானதாயும் அக் கடற்கரையோரத்தில் வர்த்தக வசதிக்கேற்ற பாங்கிகளும், வர்த்தக சுங்க ஆபீஸ்களும், துறைமுக ஆபீஸ்களும், ஹை கோர்ட்டும், சட்ட கலாசாலையும், தபால் டெல்லகிராப் ஆபீஸ்களும், ஐரோப்பிய வர்த்தகக் கம்பெனி கட்டடங்க ளும் இருக்கின்றன. கடற்கரைமுகமாக சுமார் இரண்டு மைல் நிகளமும், முக்கால் மைல் அகலமுமுள்ள மைதான த்தில் போர்ட் செண்ட் ஜார்ஜ் கோட்டையும், அதற்குள் கவர்ன்மெண்ட் கட்டடங்களும், தீவும், சில கவர்ன்மெண்ட் ஆபீஸ்களும், சர்வகலாசாலைகளும், பட்டங்கள் கொடுக்கும் கட்டடமும், சேப்பாக்கம் என்ற பாகமும் இருக்கின்றன. கல்வி விஷயமாக 1842ஞு ஸ்ரீபச்சையப்ப முதலியாரவர்க ளால் ஒரு கலாசாலை ஸ்தாபிக்கப்பட்டது. அதற்கு வருஷம் 1-க்கு வட்டியினுல் வரவு 2,01,750 ரூபாய். இந்தத் தர்மத் தோடு கோவிந்தப்பநாயுடு, செங்கல்வராயநாய்க்கர் தர்மங்க ளும் சேர்த்து நடத்தப்பட்டு வருகிறது. பழைய இடம் போதாமையால் சேத்துப்பட்டியில்சுமார்1,50,000ரூபாயில் ஒரு கட்டடம் கட்டத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஜார்ஜ டவுனுக்கு மேற்கே வேப்பேரி, புரசைவாக்கம், பெரம்பூர், கீழ்ப்பாக்கம் இவை இருக்கின்றன. அதிக ஜன நெருக்கமு ள்ள இந்து யுரேஷியர் குடியிருக்கும் திருவல்லிக்கேணி, மை லாப்பூர், இராயப்பேட்டை, செண்ட் தாமஸ் இருக்கின்றன. அங்குப் பெரிய ரோமன் கேதிலியர் கோயிலும் இருக்கின் றது. எழும்பூர், சேத்துப்பட்டு, நுங்கம்பாக்கம், தேனும் பேட்டை என்னு மிடங்களில் ஏராளமான ஐரோப்பியர் வதிந்துவருவதோடு தென்னிந்தியா இருப்புப்பாதையின் தங்கும் பெரிய ஸ்டேஷன் கட்டடமும், அனுதர் பாடசாலை யும், பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் கோர்ட்டும், போலீஸ் கமிஷனர் ஆபீசும், சித்திரக் கைத்தொழில் சாலையும், சர்க் கார் கண்காட்சிச் சாலையும், சர்க்கார் மருத்துவ ஆஸ்பத்திரி யும், சர்க்கார் கண் வைத்தியசாலையும், சென்னைக் கிளப்பும், செண்ட் ஜார்ஜ் கோயிலும், காய்கறி கண்காட்சித் தோட்ட

மும், ககோள சாஸ்திரக் கட்டடமும் இருக்கின்றன. தெற்கேயிருக்கும் அடையார் என்னும் ஆதியூரில் ஆங்கிலேயருடைய சில சிறந்த வீடுகளும், கிளப்புகளும், படகுக் கிளப்பும், படகுச் சாலையும், தியாசாபிகள் கட்டடங்களும், தோட்டங்களும் இருக்கின்றன. மேலும், ஐரோப்பியருக்கும், சுதேசிகளுக்கும் உபயோகமான அநேக ஓட்டல்களும், சத்திரங்களும் இருக்கின்றன. அவ்வகளில் முக்கியமானவை மணியக்காரர் சத்திரமும், வெங்கடகிரி ராஜா சத்திரமும், ஸர். ராஜா இராமசாமி முதலியாரவர்கள் சத்திரங்களுமாம்.

பிரயாணிகளுடைய சௌகர்யத்திற்காக 5 நிமிஷத்திற் கொருதடவை போக்கு வரவு செய்யும் டிராம்வே வண்டிகள் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. அவ்வண்டிகள் கடற்கரையோரம் கடற்சாவடி, இராய்புரம், செண்ட் பீட்டர் கோயில், சிந்தாத்திரிப்பேட்டை, மௌண்ட் ரோட், இராயப்பேட்டை, செண்ட் தோம், ஹாரிஸ் பாலம், திருவல்லிக்கேணி, பச்சையப்பன் பாடசாலையிலிருந்து புரசைவாக்கம், வண்ணாரப்பேட்டை முதலான இடங்களுக்குப் போய்வந்துகொண் டிருக்கின்றன. அன்றியும் அநேக கோச் வண்டிகளும், பீட்டன் வண்டிகளும், மோடார் வண்டிகளும், ஜட்கா வண்டிகளும் இருக்கின்றன.

இந்த வண்டி வசதிகளால் அநேக உத்தியோகஸ்தர்கள் காலக்கிரமமாக தம் ஆபீஸ்களுக்குப் போய்வர அநுகூலமா யிருப்பதோடு அநேக வர்த்தகர்களும், யாத்திரைக்காரர்களும் போய்வர அநுகூலமாயிருக்கின்றன. இப்போது சென்னை முனிசிபல் எல்லைக்குள் சுமார் 400 மைல்கள் நீளமுள்ள ரோட்டுகள் போடப்பட்டிருக்கின்றன. இங்குக் கூவம், அடையாறு என்னும் சிற்றாறுகள் இருக்கினும் அவைகளில் போதுமான நல்ல ஜலவசதி இல்லாததைக் கருதிச் சுமார் 7 மைல்தூரத்திலிருக்கும் புழலேரியிலிருந்து நல்ல தண்ணீர் கொண்டுவந்து பல குழாய்களின் மூலமாகப் பட்டணம் எங்கும் நல்ல ஜலம் கொடுக்கப்பட்டு வருகிறது.

சென்னையானது இந்த இராஜதானிக்குப் பிரதான பட்டணமா யிருப்பதால் மாட்சிமை தங்கிய கவர்னரவர்களும், அவர்களுடைய கௌன்சிலர்களும் வருஷத்தில் ஆறு மாதங்கள் தங்கி ஆட்சி செய்யும்படியான இடமாயும் அவருக்கு உதவியாக 3000 காப்புச் சேனைகளும், அவர்களில்

1000 பெயர் ஆங்கிலேய போர்வீரரும், போலீஸ் கமிஷனரும், அஸிஸ்டென்ட் கமிஷனரும், டிப்டி கமிஷனரும், அநேக இன்ஸ்பெக்டர்களும், கான்ஸ்டேபில்களும், சுமார் 36 கமிஷனர்க ளடங்கிய முனிசிபாலிடியாரும், பின்னும் ரெவினியூ யோர்டு முதலான பெயர்கள் வசிக்கும் இடமாயுமிருக்கின்றது. இவைகளன்றிக் கிறிஸ்து மதஸ்தர்களுக்குச் சொந்தமான அநேக கோயில் கட்டடங்களு மிருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை: 1815 வருஷத்தில் கட்டிய சென்ட் ஜார்ஜ் கோயிலும், 1680 வருஷத்தில் கட்டிய சென்ட் மேரி கோயிலும், சென்ட் ஆண்ட்ரூஸ் கோயிலும், சென்ட் மெத்யூ கோயிலும், சென்ட் தோம் கோயிலும், இம்மாநுவேல் கோயிலும், ஆர்மீனியர் கோயிலும், 1785 வருஷத்தில் கட்டிய ரோமன் கத்தோலிக் கோயிலும் ஆகியவைகளாம். இவைக ளன்றியில்,

1859ஞ கவர்னர் சர் சார்லெஸ் டிரிவிலியர் அவர்களுடைய முயற்சியினால் ஸ்தாபிக்கப்பட்ட ஜனசமூஹ உத்யானவனம் (The People's Park) என்னும் தோட்டம் பூந்தமல்லிக்குப் போகிற ரோட்டில் சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்திலிருக்கிறது. இது 116 ஏக்கர் விஸ்தீரணமுள்ளதாயும், $5\frac{1}{2}$ மைல் நீளமுள்ள ரோட்டுகளையுடையதாயும், 5 குளம் குட்டைகளை யுடையதாயும், அநேகவித விருக்ஷங்களாலும் செடி கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டதாயும், குரங்கு புலி சிங்கம் கரடி காட்டானை கல்யானை கடல்யானை முதலான மிருகங்களினாலும், கருடன் முதலான பக்ஷிகளாலும் பிரகாசிக்கின்றது. இந்த தோட்டத்திற்குள் 1887ஞ 179000 ரூபாய் செலவில் கட்டப்பட்ட விக்டோரியா நகர மண்டபமும், மூர்மார்க்கெட் என்கிற காய்கறி முதலானவைகளை விற்கும் பெரியகடையும் கட்டப்பட்டிருப்பதோடு சமீபகாலத்தில் முனிசிபல் ஆபீஸ் என்று விளங்கும் ரிப்பன் கட்டடத்தை 7, 8-லக்ஷம் ரூபாய் செலவில் கட்டியிருப்பதோடு உத்தியான வனத்தின் மத்தியில் பிரதி புதவாரம் இங்கிலீஷ் வாத்யம் செய்யும் Bandstand என்னும் கொட்டகையும் கட்டப்பட்டிருக்கிறது. கவர்ன்மெண்ட் அரண்மனைக்கும் கோட்டைக்கும்மத்தியில் 180000 ரூபாய் செலவில் செய்து வைக்கப்பட்ட தர்மப் பிரபுவான சர் தாமஸ் மன்றோ குதிரைமேல் சவாரிபோகும் பாவனையாக ஓர் விக்கிரகம் செய்து வைக்கப்பட் டிருக்கிறது.

1866௵ இராஜதானியின் கவர்னராயிருந்த நேப்பியர் பிரபுவின் தோட்டமும் ஷை பிரபுவின் உதவியினால் ஸ்தாபிக்கப்பட்ட பெண்பாடசாலையு மிருக்கிறது. 1857௵ உண்டான சிப்பாய் கலகம் தென்னிந்தியாவில் பரவாதபடி பிரார்த்தனை செய்த குடிகளின் குதூகலத்தைக் கருதி கட்டிய மெமோரியல் ஹால் என்னும் பொதுஜனக் கட்டடமு மிருக்கிறது. 1850௵ ஸ்ரீபச்சையப்பமுதலியார் அவர்களுடைய தர்ம ரொக்கத்தினால் கட்டப்பட்ட சர்வ கலாசாலையிருக்கிறது. இப்போது நவீனமாய்க் கட்டிய சட்ட கலாசாலையும், மதராஸ் பாங்கியும் ஹைகோர்ட்டும் மிகவும் சிறந்தவைகள். இந்த ஹைகோர்ட்டுக்குள் ஸ்ரீ முத்துசாமி அய்யர் அவர்களுடைய வெள்ளை விக்கிரகம் வைக்கப்பட்டிருக்கிறதன்றியில் அந்தக் கோர்ட்டின் ஒரு பக்கத்தில் புதிய லயிட் ஹௌஸ் வெளிச்சக் கூண்டு கட்டப்பட்டிருக்கின்றது. அதன் உச்சியில் மாலைப் பொழுதுகளில் பிரகாசிக்கும் தீபமானது 18,000 மெழுகுவத்திப் பிரகாசமுள்ளதாயிருக்கிறது. போர்ட் செண்ட் ஜார்ஜ் என்னும் கோட்டைக்குள் காப்புச்சேனை தங்குவதற்கு வேண்டிய கட்டடங்களும், அநேக சரித்திர சாதனங்களையுடைய செண்ட் மேறி கோயிலும், செக்ரிடேரி ஆபீஸும், மருந்து கிடங்குகளும், இன்னும் சில ஆபீஸ் கட்டடங்களும் இருக்கின்றன. முன் இந்தக் கோட்டைக்குள் வைக்கப்பட்டிருந்த சீரங்கப்பட்டணம் ஜெயசீலனாகிய லார்ட் காரன்வாலீஸின் சிலையும், திப்பு சுல்தான் மக்களுடைய உருவங்களைக் காட்டும் சிலையும் சமுத்திரக் காற்றினால் கெட்டுவருவதைக் கண்டு அவற்றை இப்போது கண்காட்சிச் சபைக் கட்டடத்தில் வைத்திருக்கிறார்கள். இவைக ளன்றியில், கவர்ன்மெண்ட் ஹௌஸ், சேபாக் அரண்மனை, பட்டபிருதுகள் கொடுக்கும் கட்டடம், சர்வகலாசாலை இவை சிறந்தவைகள். இவைகளில் கவர்ன்மெண்ட் அரண்மனைக்குள் லேடி நேபியர், லார்ட் கிளைவ், ஜெனரல் வெல்லஸ்லி, மூன்றாவது ஜார்ஜ் முதலானவர்களுடைய படங்கள் வைக்கப்பட்டிருக்கிறதன்றியில், நடன கச்சேரி முதலானவைகளுக் குபயோகமாக 80 அடி நிகளமும், 60 அடி அகலமுமுள்ள பாங்க்வெட்டிங் ஹால் என்னும் கட்டடமும் கட்டப்பட்டிருக்கிறது. சேபாக் பாலெஸ் என்பது ஆர்க்காட் நவாப்புகளின் கடைசி சந்ததிகளுக்குப் பிறகு கவர்ன்மெண்டார் வசமாகியது. அது மகம்மதியர் மாதிரியாகக் கட்டப்பட்ட அழகிய கட்டடம்

அதில் ரெவினியூ போர்ட்ஆபீசும், இஞ்சினியர் இலாகா ஆபீசுகளு மிருக்கின்றன. 1851ஸு பேந்தியன் ரோட்டில் கட்டப்பட்டிருக்கும் கண்காட்சிச் சாலையில் தென்தேசத்தைச் சார்ந்த பற்பல ஜாதி, செடி, கொடி, மட்டை, மரம், பூச்சி, புழு, பக்ஷி, மிருகம், தானியம், காய்கறி, மீன் முதலானவைகளையும்; புராதன ஆயுதங்கள், ஆபரணங்கள், நகைகள், விக்கிரகங்கள் முதலானவைகளையும் சேகரித்து வைத்திருப்பதோடு அடுத்த கட்டடத்தில் புராதன.கதை காவிய கையெழுத்துக் கிரந்தங்களையும், எதிரில் நூதனமாய்க் கட்டப்பட்ட கன்னிமாராக் கட்டடத்தில் அநேக அற்புதமான புத்தகங்களையும், அதன் முன் பக்கத்தில் நடனக் கச்சேரி மண்டபத்தையும் சேர்த்திருக்கிறார்கள். அந்தக் கட்டடத்தின் ஒரு பக்கத்தில் சென்னை வித்தியா விர்த்திப் புத்தகசாலையும் இருக்கிறது. அதில் 40,000 புத்தகங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. இவைக ளன்றியில், சென்னையில் பார்க்கத்தக்கவைகள் பல இருக்கினும் அவைகள் அவ்வளவு விசேஷமானவைகளல்ல. ஆயினும் சைவர்களுக்காகக் கட்டப்பட்ட திருவொற்றியூர் என்னும் சிவக்ஷேத்திரமும், வைஷ்ணவர் கொண்டாடும் திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் தேவாலயமும் பார்க்கத்தக்கவைகள்.

சென்ற கானிஷ்வார் கணக்கின்படிச் சென்னைமாநகரில் 5,18,660 ஜனங்கள் வசித்துவந்தார்கள். இப்போது 7லக்ஷம் ஜனங்கள் வதிந்துவருவதாக மதிப்பிட்டிருக்கிறார்கள். இந்தச் சென்னையும், இதன் ஜில்லாவாகிய செங்கற்பட்டும், காஞ்சிபுர முதலானவைகளும் மேற்சொன்ன தொண்டைநாட்டைச் சார்ந்தவைகள். ஆகவே அத்தொண்டைநாட்டின் பூர்வபெருமையையும், அதிலுள்ள சைவ வைஷ்ணவ க்ஷேத்ராதிகளின் பெருமையும்பற்றி இதனடியிற் சங்கிரகமாகச் சொல்லுவோம்.

## தொண்டைமண்டலம்.

"வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—பூமியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து.

என்று ஔவையாராற் புகழப்பட்ட இந்நாடு கிழக்கே கடலும், மேற்கே பவளமலையும், வடக்கே திருவேங்கடமும், தெற்கே பினாகிநதியு மெல்லையாகவுடையது. இதற்கு

இராஜதானி காஞ்சிபுரம். இந்நாடு பூர்வத்திலே சோழ நாட்டைச் சேர்ந்தது. நாகபட்டினத்துச் சோழன் நாக லோகஞ் சென்ற காலத்திலே நாககன்னிகையை மணம் புரிந்து அவள் வயற்றிலே பிறக்கும் புத்திரனுக்குத் தனது நாட்டில் பாதி கொடுப்பதாக மீண்டான். மீளும்போது நாககன்னிகை தன் புத்திரனை எவ்வாறென்று வினவ, அவன் "தொண்டைக்கொடியை அடையாளமாகக் கட்டித் தெப்பத்திலிட் டனுப்பக்கடவை?" என்றான். அவ்வாறே அப்புதல்வன் தொண்டைத் தழை சூடிக்கொண்டு திரையாற் செலுத்தப்பட்டு நாகபட்டினக் கரையை யடைந்தான். சோழன் அவனை வளர்த்து இந் நாட்டைப் பிரித்து அவனுக்குக் கொடுத்துத் தொண்டைமான் என்னும் பெயரும் முடியுஞ் சூட்டினான். தொண்டைமான் ஆண்டமையின் அது தொண்டைமண்டல மென்னும் பெயர்த்தாயிற்று. இது நெடுங்காலம் உப நாடாகவுஞ் சிலகாலந் தனி நாடாகவு மிருந்து பெரும்புகழ் பெற்றது. இந்நாட்டிலே திருவள்ளுவர், கச்சியப்பர், கம்பர், பரிமேலழகர், ஒட்டக்கூத்தர், இராமாநுஜாசாரியர், வேதாந்த தேசிகர், சேக்கிழார், இரட்டையர், அருணகிரிநாதர், பவணந்தி, படிக்காசுப் புலவர், அப்பையதீக்ஷிதர் முதலிய வித்துவ சிகாமணிகளும், அதிகமான், கறுப்பன், சடையப்பமுதலி முதலியமகெளதாரியப் பிரபுக்களும், உத்தமகுண அரசர்களும், விளங்கின ரென்றால் அதன் பெருமை எடுத்துக் கூறவேண்டா. இத்தொண்டை நாட்டுப் பெருமையைப் படிக்காசுப் புலவர் பாடினர். பிறகு நாட்டிந்த நாடகாசிரியர் காசி விஸ்வநாத முதலியாரும், சிறந்த பிரம்மவாதியும் பிரமக்கியானியுமான வம்பாக்கம் இராஜகோபாலாசாரியரும், சட்டசாஸ்திரத்தில் நிபுணராகிய சடகோபாசாரியரும், ஆங்கிலம் தமிழ் இலக்கிய இலக்கண கணிதசாஸ்திர நிபுணராகிய அரங்கநாத முதலியாரும், தர்ம பிரபுவாகிய பச்சையப்ப முதலியாரும், மற்றும் அநேக வித்வசிகாமணிகளும் பிரபுக்களும் பிறந்து வாழ்ந்த இடமாயும் இருக்கிறது.

## தக்ஷண இந்துதேச சரித்திரம்.

இந்தியா தேசத்தின் வடபாகத்தை மவுரியா ஜாதியார் ஆண்டுவரும்போது, தென்மதுரையில் பாண்டியர்களும், வடதென்கிழக்குப் பாகங்களில் சோழர்களும், வட

மேற்குப் பாகங்களில் சேரர் அல்லது கேரளரும் ஆண்டுவந்தார்கள். இப்படி ஆண்டகாலம் கிறிஸ்து பிறப்பதற்கு நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னும். மகாஸ்தின் (Magasthin) காலத்தில் (கி. மு. 302ஹு) மவுரியா ஜாதியார்கள் 188ஹு வரையி லாண்டார்கள். அசோகராஜன் சாசனத்தினால் சேர சோழ பாண்டியர்கள் ஒரே காலத்தில் (கி. மு. 302ஹு) ஆண்டு வந்ததாகவும், அவர்களில் சேரர் தென்மேற்குப் பாகங்களையும், சோழர் தென்கிழக்குப் பாகங்களையும் ஆண்டுவர, மத்தியநாடு தண்டகாரணியமாக இருந்தது. ஆயினும், இராமாயணம் IV-41-வது அத்தியாயத்தில் துங்கபத்திரா நதிக்குத் தெற்கே மேகலர், உத்கலர், தாரங்கர், விதர்ப்பர், ரிஷிகள், மஹிஷிகள், கலிங்கர், காஸிகர், ஆந்திரர், புரந்தரர், சேர சோழ பாண்டியர் இருந்து அரசாண்டதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

அசோகனுக்குப் பிறகு காஞ்சீபுரமுதல் ஒரிசா வரையிலுமுள்ள கிழக்குக் கரையோரங்களில் சாளுக்கியஜாதியார் ஓர் விசேஷ ஜாதியாராகி, சோழர்களும் பயப்படும்படி கி. பி. 5-ம் நூற்றாண்டில் அதிக பிரபலமாக ஆண்டுவந்தார்கள். கி. மு. 188–77ஹு சங்க ஜாதியார், மவுரி ஜாதியாரை ஜயிக்க, கி. மு. 76–31ஹு கனவஜாதியார் சங்க ஜாதியாரை ஜயித்தனர். இந்தக் கனவஜாதி அரசரைக் கொன்று கி. மு. 31–436ஹு ஆந்திரர் ஜயசிலரானார்கள். இவர்கள் அப்போது புத்த மதஸ்தர்கள். அமராவதியில் கட்டப்பட்ட ஸ்தூபம் இவர்கள் கட்டியது.

கி. பி. 5-ம் நூற்றாண்டில் சாளுக்கிய ஜாதியார் தென்மேற்கில் பிரபலமாகிப் பிறகு நாலார், மவுரியர், சந்திகாள், மதங்காள், கடாக்சூரிகள், மைசூர் கங்காள், (பம்பாயின் தெற்கில்) அலுவர் என்னும் ஜாதியார் தோன்றினர். கி. பி. 7-ம் நூற்றாண்டில் சாளுக்கிய ஜாதியார் கிருஷ்ணகோதாவரிக்கு மத்திய நாட்டில் வெங்குநாட்டை யாண்ட பல்லவரை ஜயித்து, கி. பி. 1028ஹு வரையி லாண்டார்கள். மேற்கு சாளுக்கியர் மேற்குத் தக்ஷணத்தில் ஆண்டார்கள்.

கி. பி. 629–645 வருஷம் இந்தியாவுக்கு யாத்திரையாக வந்த (Hoven Thaskiang) எவன் தாஸ்கியாங்கு என்பவர் சாளுக்கியரைச் சிறப்பித்து எழுதியிருக்கிறார்.

இந்தக்காலத்தில் தென்னிந்தியாவின் தென்மேற்கில் மைசூருக்கு வடக்கே கதம்பஜாதியார் தோன்றிக் காஞ்சி

புரத்தில் பல்லவரைப் பட்டாதபாடுபடுத்தி ஜயித்தார்கள். கி. பி. 758—974-ல் இரஸ்தர கூட்டர் என்ற ஜாதியார் தோன்றி ஷெ சாளுக்கியரை வருத்திவர, கி. பி. 974ஹூ மேற்கு சாளுக்கியர் அந்த ரஸ்தர கூட்டத்தை அடித்துத் துரத்திவிட்டார்கள்.

பிறகு சில ஹா ஜாதியாரும், சிந்தாரிகரும் எழும்பி அட்டகாசம் செய்ய, இவர்களை கி. பி. 1220ஹூ தேவகிரி யாதவர் முறியடித் தோட்டினார்கள். பிறகு பாண்டியர்களும், சோழர்களும் பிரபலரானார்கள். கொங்கு இராஜர்கள் சேரநாடாகிய மலையாள நாட்டின் கிழக்குப் பாகங்களைப் பிடித்து ஆண்டுவர, ஹயிசாலர் என்னும் ஜாதியார் எழும்பிச் சுற்றுப்பக்கத்து மன்னர்களை ஜயித்து ஆண்டார்கள்.

கி. பி. 1023ஹூ சோழர்களுக்கும், சாளுக்கியருக்கும் விவாக சம்பந்த மானதில், கீழ்நாட்டு சாளுக்கியநாடு சோழருக்கு வசமாகியது. இதனால் கி. பி. 1064–1113ஹூ இராஜேந்திர சோழன் பல்லவரையும் பாண்டியரையும் ஜயித்து, மதுரையில் சோழ பாண்டிய சமஸ்தானத்தை ஸ்தாபித்தான். பிறகு மைசூர் மலையடிவாரத்தில் ஐசால பல்லால இராஜாக்கள் என்கிற ஒரு ஜாதியார் எழுந்து கி. பி. 13-ம் நூற்றாண்டில் கொங்குநாட்டாரைக் கண்டித்து, கதம்பர் காலசருக்க ஜாதியாரையும் ஜயித்து, கி. பி. 1184ஹூ மேற்கு சாளுக்கியர் நசிக்கவே, சோழராஜ்யம் ஓரங்கல் கணபதி ராஜாக்களால் தம் வடமாகாணங்களை இழக்கச் சம்பவித்தது. பதின்மூன்றாம் நூற்றாண்டில் சோழ பாண்டியர்களுடைய சக்தி குன்றிவர, ஹைசாலர் பல்லாலர் விருத்தியானார்கள்.

பல்லவர் மிதமிஞ்சிய சக்தியைப் பெற்று வரவே, கி. பி. 1193ஹூ குஜினிகோரி என்னும் மகமதியர் டில்லியைப் பிடித்தார்கள். அந்த இராஜ்யம் 1288ஹூ வரையில் இருந்தது. 1258–1231ஹூ கில்ஜ ஜயமடைந்து 1306ஹூ அலாவுதின் கில்ஜி மலிகாபூ தளகர்த்தரைத் தென்னாடுகளின் மீது அனுப்ப, அவனும் வந்து தேவகிரி, ஓரங்கல் ஸமஸ்தானங்களை அடிக்க, சோழ பாண்டிய நாடுகளும் அரசற்றுத் தத்தளித்தன.

கானபதிராயர்கள் இந்த மகமதியர்களைத் தடுத்தாலும் 1347ஹூ தக்ஷணதேசத்து மகமதியர் கிளம்பி பாமி

னித் குடும்பத்தை ஸ்தாபித்தார்கள். 1023–1070௵ சோழர்களுடைய ஜயகாலமென்று சிலர் எண்ணினாலும், கி. பி. 1310௵ மகமதியருடைய ஜயகாலமென்றும் சொல்லலாம். இந்த மகமதிய பாமினி ஜாதியர் இந்து சமஸ்தானங்களைத் தலைநீட்டாதடித்துவரவே, ஹைசாலபல்லாலர் முதலான ஜாதிகளிலிருந்து விஜயநகர ஸமஸ்தானத்தார் கிளம்பி மகமதியரை 200௵ வரையில் தலையெடுக்காதபடி தடுத்து வந்தார்கள். ஆகவே, இக்காலத்தில் வடக்கே மகமதியரும், தெற்கே விஜயநகரத்தாருமே ஜயசீலர்களாகச் சிறந்து விளங்கினார்கள். 15-ம் நூற்றாண்டின் கடைசியில் தக்ஷிணநாட்டு 5 மகமதியர் குடும்பத்தார்கள் பிரபலமாகவே பாமினி ராஜ்யம் படுத்தது. இப்படி மகமதியருக்குள்ளேயே பொறாமை மிகுந்து சண்டை யுண்டாகவே விஜயநகர ஸமஸ்தானம் பிரபலமாகியது.

1487௵ விஜயநகர நரசிங்க தேவராயலு சக்கிரவர்த்தியாகி சோழபாண்டிய நாடுகளை ஜயித்து, 1328–1427௵ கொண்டவாடு ரெட்டிகள் திருவனந்தபுர மன்னர்களையும் ஜயித்தார். 16-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் கிருஷ்ணதேவராயலு காலத்தில் தப்பித்தவறி இருந்த குறுநில மன்னர்களையும் பிடித்துப் பிரபலரானார்கள். 1564௵ தக்காணத்து மகமதியர்கள் ஒரே கட்டுப்பாடாக எழுந்து விஜயநகரத்தாரை எதிர்க்க, சில்லரை ராஜாக்களும் பல பாளையக்காரர்களும் எழுந்து பலபக்கத்துக் குடிகளை வருத்திவந்தார்கள். இப்படிப்பட்ட காலத்தில்தான் நாயுடு சமஸ்தானம் ஜனித்துச் சோழ பாண்டியர்களை ஜயித்து ஆண்டுவர, மைசூராரும் சுதந்திரம் பெற்றார்கள்.

பிறகு துங்கபத்திராவுக்குத் தெற்கே மகமதியருக்கும் (கி. பி. 1674௵) தஞ்சாவூரில் மஹாராஷ்டியருக்கும் சண்டையுண்டாக 1736௵ மகமதியர் மதுரையைப் பிடித்தார்கள். 1799௵ திப்பு சுல்தான் காலத்தில் தென்னிந்தியா முழுதும் இங்கிலீஷ்காரர் வசமாகியது.

சென்னப்பட்டணமானது 1639௵ ஸ்ரீரங்கதேவராயரால் பெற்றதாக முன்னமே சொல்லியிருக்கிறோம். 1702௵ அவுரங்கசீப்பினுடைய சேனைத்தலைவர் தாவுத்கான் இதைச் சில வாரங்கள் தாக்க 1741௵ மஹாராட்டியர்கள் வந்து தாக்கி ஜெயம் பெற்றார்களில்லை. 1743௵ இக்கோட்டையை விசாலப்படுத்திப் பலப்படுத்தினார்கள்.

1746ஆு லபோர்டனே என்னப்பட்ட வீரன், கோட்டை யைப் பிடித்தான். இரண்டு வருஷம் கடந்த பிற்பாடு கோட்டை இங்கிலீஷ்காரர் வசமாகியது. 1758ஆு லாலி என்னும் பிராஞ்சுத் தலைவன் முத்தியாலுப்பேட்டையைப் பிடித்துக் கோட்டையைத் தாக்கினான். 1769ஆு ஹைத ரலி குதிரை வீரர்கள் வந்து தாக்கப் பார்த்ததைக் கண்டு பிராஞ்சுக்காரர் போய்விட, அன்றுமுதல் சென்னைமாநகரம் சுதந்தர சுகவாழ்வைப் பெற்றுவருகிறது.

## செங்கற்பட்டு.

செங்கற்பட்டானது இந்த ஜில்லாவுக்குப் பிரதான பட்டணமாயும், 11626 குடிகள் வசிக்கப்பட்டதாயும், தேக ஆரோக்கியத்திற்குத் தகுதியாயுமுள்ள பட்டணம். நாட்டின் நாலாபக்கங்களிலும் 500 அடிகளுக்கு மேற்படாத சிறு மலைகளால் சூழப்பட்டதாயும், பாலாறு என்னும் நதி பாயப்பட்டதாயும் இருக்கிறதன்றியில், பெரிய குளமும், சிறிய தடாகங்களும் கண்காட்சிக்கு இரமணீயமா யிருக்கின்றன. இங்கிருக்கும் பெரிய தடாகமானது 2 மைல்கள் நிகளமும், ஒரு மைல் அகலமும் உள்ளது. அதன் அணைக் கட்டினால் வடபாகத்தில் சுமார் 10 மைல்கள் தூரம் தண்ணீர் பாய்ச்சப்படுகின்றது. மஹாபலிபுரத்திற்குப்போவோர் இந்த ஸ்டேஷனுக்கு வந்துதான் போவது வழக்கம். இங்கே சில இந்துமதக் கோயில்களும், கிறிஸ்துமதக் கோயில்களும் இருக்கின்றன. இது சென்னையிலிருந்து 34½ மைல்கள் தூரத்திலிருக்கிறது.

## மதுராந்தகம்.

இது செங்கற்பட்டு ஜில்லாவைச் சார்ந்த ஒரு தாலுக்காவின் தலைமைப்பட்டணம். சென்ற கானிஷ்வார் கணக்கின்படி 6442 பிரஜைகள் குடியிருக்கிறார்கள். பிராம்மணர்களில் பெரும்பான்மையோர் வைஷ்ணவர்கள். இது சென்னைக்கு 49¾ மைல்கள் தூரத்தில் இருக்கிறது. ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் 2 பர்லாங்கு தூரத்தில் மதுராந்தகமும், அரை மைல் தூரத்தில் 1½ மைல்கள் நிகளமும், பூர்ணஜலம் பெற்றபோது 7 மைல்கள் சுற்றளவுமுள்ள ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதன் வடபாகத்தில் விநோத செங்கல் கட்டடம், பாறைக்கற்களில் செதுக்கு வேலைசெய்து கட்டப்பட்டிருக்கின்றது.

# தொண்டை நாடு.

(இதிலுள்ள விசேஷமான சைவ வைஷ்ணவ க்ஷேத்திரங்களின் விவர சங்கிரகம்.)

## 1. திருவொற்றியூர்.

(இது சென்னைக்கு வடக்கே 5 மைல் தூரத்தி லிருக்கிறது.)

[படம்பக்கநாதர், மாணிக்கத்தியாகேசுரர், வடிவுடையம்மை, கிருபாதீர்த்தம், அலைவாய்தீர்த்தம், மகிழவிருக்ஷம்.]

இது ஆதிசேடன் பூசித்த ஸ்தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சங்கிலிநாச்சியாரைத் தமக்குத் திருமணஞ் செய்விக்கும் பொருட்டுச் சிவபெருமானை வேண்ட, சிவபெருமான் இராவிற் சங்கிலிநாச்சியாருக் கறிவித்து அவரனுமதியால் சுந்தரமூர்த்தி சுவாமிகளை மகிழடியிற் பிரமாணஞ் செய்வித்துப் பின்னர் மணப்பித்த ஸ்தலம்.

### கலிய நாயனார்.

இது, வாணியர் குலத்தில் வைகாசிமீ அசுவினியில் திருவவதாரஞ் செய்தருளித் திருவிளக்குப் பணிபுரிந்து வருபவர், இறுதியிற் பொருளின்மையால் தமது திருப்பணி தடைப்படுவதறிந்து மனைவியை விலை கூறியும் கொள்வாரில்லாமையால் தாம் தொடுத்த பணி முட்டுருவண்ணம் உதிரத்தை வார்த்தாவது தீபமேற்றக் கருதித் தமது கண்டத்தைச் சேதித்த பத்தியைச் சிவபெருமான் வியந்து ஆடிமாதக் கேட்டை நாளில் தமது சாலோகபதவி யருளிய ஸ்தலம். ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திர வெண்பா பாடிய ஸ்தலம்.

### பட்டணத்துப்பிள்ளையார்.

பூம்புகா ரென்கிற காவிரிப்பூம் பட்டணத்தில் வைசிய குலத்தில் திருவவதாரஞ் செய்தருளித் திருவெண்காடர் என்கிற நாமத்தோடு கப்பல் வாணிப முதலிய பெரும் பொருளுடையோராய்ச் சிவபத்தியோடு வாழுநாளில், திருவிடைமருதூரிற் சிவபூசை செய்யும் அர்ச்சகர் தம் மனைவி பிறந்தமைபூற்றிப் புனர்விவாகம் செய்ய மருதப்பரைப் பொருள் வேண்ட, அவர் ஒரு பார்ப்பன வடிவமெடுத்து மருதவாணர் என்றும் பெயரோடு பதினறுவயதுடை

யோராய் எதிர் தோன்றித் தம்மை விற்று வரும் பொருளாற் கலியாணம் செய்துகொள்ளக் கட்டளையிட்டருளிய படி, பட்டினத்துப்பிள்ளையாரிடத்து ஆவணமெழுதி மருதவாணரை விற்று நம்பியார் அப்பொருள்கொண்டு செல்ல, மருதவாணர் சிலகாலம் பட்டினத்துப் பிள்ளையாருக்குப் பிள்ளைபோல் நடந்து பொருளீட்டுவந்து, பின்னர்ப் பட்டினத்துப் பிள்ளையாரைத் துறவியாக்கக் கருதிக் காதற்ற ஊசியை சரட்டோடு மடித்து அன்னை கையிற் கொடுப்ப அதனைப் பெற்ற திருவெண்காடர் அதன் வழித்தாய் ஞானமுதிப்பத் துறவுபூண்டுழி, தமது திருவடி யடைந்த சேந்தனுரை இச்சைவழி நிற்ப ஏவித் தம்முடன் பிறந்தாள் நஞ்சு கலந்த அப்பந் தர அதனை வீட்டில் வைத்தெரித்து, சிதம்பரம், திருவிடைமருதூர், சீர்காழி, திருவதிகை, திருவண்ணுமலை, திருவேகம்பம், திருக்காளத்தி முதலிய ஸ்தலங்களைத் தரிசித்து, கோவில் நான்மணிமாலை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபஃது முதலிய பிரபந்தங்களும் தனிப்பாடல்களும் அருளிச்செய்தது இத்லத்தின்கண். கடற்கரையிற் சிறுவராற் செய்யப்பட்ட மணற்கேணியில் இலிங்கமாய் விளங்கிய ஸ்தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ள ஸ்தலம். பிறகு திருவருட்பா பாடிய சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் முதலானவர்களால் பற்பல பாடல்கள் பெற்ற ஸ்தலம். சென்னையிலுள்ள சைவர்களுக்கு ஓர் சிறந்த ஸ்தலம்.

## திருவொற்றியூர் கிருபாதீர்த்தக் கரையில் செய்த பிரார்த்தனை.

ஓ தியாகராயா! இவ்வுலகத்தில் அநேகர் தமக்கு வேண்டியவைகளைப்பற்றிப் பிறரிடம் பிரார்த்தனை செய்கிறுர்கள். அப்பிரார்த்தனையின்படித் தாம் வேண்டியவைகளைச் சிலர் பெற்றுய்கிறுர்கள். சிலர் பெறுமல் தவிக்கிறுர்கள். அதற்குக் காரணம் மானவஜாதியார் பரதந்திரரும் அபரிபூரணருமாயிருப்பதனுல் கொடுப்போர் வெகு சிலராயும் பெறுவோர் அதிலும் அதிகமாயும் இருக்கிறுர்கள். நீயோ பூரணனுயும், சுதந்தரனுயும், அன்பே உருவாயும், கருணைக் கடலாயும் இருப்பதால் அடியாருடைய உண்மையான பிரார்த்தனைக் கிரங்கி அவர்கள் வேண்டும் இகபர சுகங்களைத் தந்தருளுகின்றுய். ஆகவே உனக்குத் தியாகராயன் என்று சிறந்த

பெய்யருண்டாகியது. சுந்தரமூர்த்திகள், கலியநாயனூர், பட்டினத்தடிகள் முதலான மஹான்கள் விரும்பிய வரங்களைக் கொடுத்தருளியதாக எண்ணி ஏராளமான ஜனங்கள் இங்குவந்து துதிக்கிறார்கள். அவர்கள் தோத்திரம் சத்விஷயமானதாயும் உண்மையானதாயும் இருக்கும் பக்ஷத்தில் பலனைத் தருமென்பது திண்ணம் திண்ணம். கேவலம் உலகாடம்பரமான இகலோக சுகத்தைத் தரும்படி வேண்டுவதைப் பார்க்கிலும் ஆத்மோன்னதியை விர்த்தியாக்க வேண்டுவதே உத்தமமானதென்று பெரியோர் உரைத்திருக்கின்றனர். ஆகவே, ஆத்மோன்னதியை அடைய, காமக் குரோத லோபாதி விருப்பங்களை விட்டொழித்துச் சத்யம், சாந்தி, பக்தி, ஞானம், யோகம் முதலான சாதனங்களை அடைய வரமீவாய். இந்தக் கிருபாதீர்த்தமும் சுற்றிலும் இருக்கும் காக்ஷிகளும் கம்பீரமாகவும், நின் கிருபையைப் பெறுவதற்குத் தூண்டுதல்களாகவும் இருப்பதால் இன்று இங்குப் பிரார்த்தனை செய்கிறேன். எனது பிரார்த்தனைக் கிரங்கி அருள்புரிவாயாக. ஓம் தத் சத்.

---

## 2. திருமயிலை.

(இது சென்னைக்குத் தெற்கே 4 மைல் தூரத்தில் இருக்கிறது. இதனை மயிலாப்பூர் எனவும் வழங்குவர்.)

[கபாலீச்சுரர், கற்பகவல்லியம்மை, கபாலிதீர்த்தம், புன்னைவிருக்ஷம்.]

இது, பார்வதி தேவியார் மயிலாயிருந்து பூசித்த ஸ்தலம். திருஞானசம்பந்த சுவாமிகள் செய்தருளிய அற்புதங்களைக் கேள்வியுற்றவரான வைசியகுலத்தில் சிவனடியாரிற் சிறந்த சிவனேசர் தமதருமைப் பெண்ணையும், நிதிக்குவியலோடு தம்மையும் அவ்வாளுடைய பிள்ளையாருக்குத் தத்தமாகக் கொடுக்கக் கருதிப் பக்திசெய்து வருங்காலத்தில் பெதும்பைப் பருவமுள்ள தமது அருமைத் திருமகளார் மலர்கொய்யும் பொழுது அரவுகடித் திறந்தவரைத் தகனஞ்செய்து சாம்பரோடுகூடிய என்பைக் கடத்திலிட்டுப் பூசித்து வரும்போது அங்குத் திருஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளிப் பூம்பாவைத் திருப்பதிகம் பாடி அவ்வங்கத்தை மங்கையாக்கிய ஸ்தலம்.

வாயிலார் நாயனூர் வேளாளமரபில் பங்குனிமீ உத்திரட்டாதியில் அவதரித்துச் சிவபணிவிடை முதலியவை

செய்ய நினைத்தும் தனமின்மையால் உளமென்னும் ஆலயத்துட் பரமசிவனை யிருத்தி ஞானபூசை செய்துகொண்டிருந்து மார்கழிமீ இரேவதியில் திருக்கயிலை யடைந்த ஸ்தலம்.

ஐயடிகள் காடவர்கோனயனர் க்ஷேத்திரவெண்பா பாடிய ஸ்தலம். தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனர் எழுந்தருளிய ஸ்தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ள ஸ்தலம்.

---

## 3. திருவல்லிக்கேணி.

(இது சென்னைக்குத் தெற்கே 3 மைல் தூரத்தில் இருக்கிறது.)

[திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிப்பெருமாள் ஆலயம் தொண்டைநாட்டு விஷ்ணு ஆலயங்களி லொன்று. மன்னதப்பெருமாள், நரசிங்கப்பெருமாள், ஸ்ரீராமர், பார்த்தசாரதிப்பெருமாள், வரதராஜப்பெருமாள், வேதவல்லித்தாயார், இலட்சுமிதேவி, ஜானகிப்பிராட்டி, உருக்குமணிதேவி, பெருந்தேவித்தாயார், சேஷவிமானம், இந்திரதீர்த்தம், ஹோமதீர்த்தம், மீனதீர்த்தம், கைரவணி தீர்த்தம் முதலிய தீர்த்தங்கள்.]

இலட்சுமிதேவியார் பிருந்தாவனத்திற் றிருவவதாரஞ் செய்தருளி, பிருகுமகாரிஷியால் வேதவல்லித் தாயாரெனத் திருநாம மிடப்பெற்று, அவராச்சிரமத்தில் வளர்ந்து மன்னதப் பெருமாளை விவாகம் செய்துகொண்ட ஸ்தலம்.

அத்திரிமுனிவருக்கும், விகடனுக்கும் நரசிங்க உருவத்தோடு மேற்கு முகமாய் வீற்றிருந்த கோலத்துடன் சேவைசாதித்த ஸ்தலம்.

மதுமந்தனுக்கு ஸ்ரீராமாவதாரமாய், தெற்கு முகமாக நின்ற கோலத்துடன் தரிசனந் தந்தருளிய ஸ்தலம்.

ஆத்திரேயரிஷி பார்த்தசாரதிப்பெருமாளைப் பிரதிஷ்டை செய்து பூசித்த ஸ்தலம். இம்மூர்த்தியை வழிபட்ட சுமதி யென்னும் அரசனுக்குச் சித்திரைமாதம் காட்சி கொடுத்து அவனால் அம்மாதத்தில் பிரமோற்சவம் நடத்தி வைத்த ஸ்தலம். இப்போது மப்படியே நடந்து வருகிறது. கிழக்கு முகமாக நின்ற கோலம்;

சர்ப்பரோமனுக்கு வரதராஜப்பெருமா ளுருவமாய்க் கிழக்குமுகமாகச் சேவை சாதித்த ஸ்தலம்.

முத்கலமுனிவரால் கைரவணி தீர்த்தத்தில் மச்ச மில்லாதிருக்கப்பெற்ற ஸ்தலம்.

மார்க்கண்டேயர், மரீசி, சாலிமுதலிய அநேக ரிஷிகள் தவஞ்செய்த ஸ்தலம்.

பார்த்தனுக்குப் பிரத்தியட்சமான ஸ்தலம்.

இதற்கருகிலிருக்கும் திருமயிலையில் பேயாழ்வார் திரு வவதாரம் செய்தருளினர். தொண்டைமான் சக்கரவர்த்திக் குப் பிரத்தியட்சம்.

பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ் வார் மங்களாசாசனம்.

இது சென்னையிலுள்ள வைஷ்ணவர்களுக்கு ஒரு விசேஷ ஸ்தலமாகையால்,நித்ய நைமித்யக விசேஷ உற்சவ காலங்களில் ஏராளமான ஜனங்கள்வந்து பூசிக்கும் ஸ்தலம். ஸ்ரீ பராங்குசர் முதலிய பக்த சிரோமணிகளால் பாடிப் புகழ்பெற்ற ஸ்தலம்.

### திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிப்பெருமாள் சந்நிதியின் ஓர் மண்டபத்தில் செய்த பிரார்த்தனை.

ஓ பார்த்தசாரதியே! இப்பூவுலகில் பெருந்தன்மை பெற்றோர்க்குச் சிறியோர் தொண்டு செய்து உற்சாகப்படு வது உலகப்பிரசித்தம். நீயோ இராஜாதிராஜர்களுக்கும் சக்கரவர்த்திகளுக்கும் சிறந்த இராஜனாயும் சக்கரவர்வதியா யும் இருக்கக் கேவலமான அர்ஜ்ஜுனனுடைய இரதத்தை யோட்டி உதவிசெய்து உற்சாகப்படுத்தியதாகக் கிரந்தங்கள் முறையிடுகின்றன. இதனால் தோழர்களுக்கும் தொண்டர் களுக்கும் அவர்களுடைய அந்தஸ்தைக் கருதாமல் உழை த்து உதவி புரிவது நினது வழக்கம்போலும். அடியார்க்கு அடிமையாக நின்று அவர்களுக்குவேண்டிய இகலோக பர லோக சுகங்களை ஈவது நினது சிறந்த லக்ஷணம் போலும். இத்தர்மமே இவ்வுலகிலுள்ள எல்லாத் தருமங்களிலும் சிற ந்ததாகும். பிருகு, அத்திரி, மார்க்கண்டேயர், வாமதேவர், மரீசி, சப்தரோமா, சாலி முதலான முற்கால ரிஷிகளும், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார்

முதலான மத்யகாலத்து மஹான்களும் இங்கு வந்து நின்னைப் பிரார்த்தித்துத் தாம் வேண்டிய வரங்களைப் பெற்றதாக அநேக கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இப்படிப்பட்ட திவ்ய ஸ்தலத்தில் வந்து நின்னைப் பிரார்த்திக்கப் பாக்யம் பெற்றேன். பாவ எண்ணங்களும் பாவச் செயல்களும் கூடிய எனது மனோரதத்தை யோட்டி நின்னது பக்தியைப் பெறும்படியான வன்மையைப் பிரசாதித்தருள்வாய். அடியார்க்கு அடியானாக இருந்து ஆதரிக்கும் அச்சுதனே! அநுக்ரகனே! ஆபத்பாந்தவனே! அடியேனுடைய பிரார்த்தனையைப் பரிபூரணமாக்கிப் பாது காப்பாய். ஓம் தத்ஸத்.

---

## 3. திருவேகம்பம் அல்லது காஞ்சி.

[ஏகாம்பரநாதர், காமாக்ஷியம்மை, காமகோடிபீடம், கம்பாநதிதீர்த்தம்.]

திருவேகம்பம் தொண்டைநாட்டிலுள்ளது. இது காஞ்சிபுரமெனவும் வழங்கும். முத்தித்தலங்கள் ஏழனுளொன்று. வேதங்களே விருக்ஷமாகிக் கம்பாநதிக்கரையி லிருக்கப் பெற்றது. பன்னிரு திருநாமங்களும், சித்திதீர்த்த முதலிய பலதீர்த்தங்களு முடையது. இவ்வாலயத்தில்பிரமன்பூசித்த வெள்ளக்கம்பமும், விஷ்ணு பூசித்த கள்ளக்கம்பமும், உருத்திரன் பூசித்த நல்லக்கம்பமும், வண்டாசுரன் பிரமனிடம் பெற்றவரத்தால் உயிர்களோறும் விரவிநின்று வீரியம் உண்டமையால் மெலிந்த தேவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி, சிவபிரான் உயிர்களை யாககுண்டத் தவியாக்கி வண்டாசுரனைச் சங்கரித்த திருமயானமும், வாலிபூசித்துத் தன்னை எதிர்த்தோர் வலியிற் பாதியைப்பெற வரம்பெற்ற வாலீச்சரமும் ஆகிய ஐந்தும் சிறந்தன. அன்றியும், இந்நகரில், திருக்கச்சபாலயம், காரோணம், பணாதரீச்சுரம், சுரகரீசம், பராசரீசம், வீராட்டகாசம், மாணிசம், உருத்திரகோடீசம், மகாசாத்தன்றளி யென்னு மிவையும்; திருக்கச்சிநெறிக் காரைக்காடு, திருமேகம்பம், திருக்கச்சிமேற்றளி, திருஅநேகதங்காவதம், திருஓணகாந்தன்றளி முதலியனவும் பிறவுமுள. இவற்றுள் இறுதியிலுள்ள ஐந்து தலங்கட்குத் தனித் திருப்பதிகங்களுள.

இக்காஞ்சியானது உமாதேவியார் ஏகம்பநாதரை மிருத்திகையாற் ருபித்துப் பூசிப்ப, எம்பெருமான் அவர் அன்பினைச் சோதிக்கக் கம்பாநதியைப் பெருகுவிப்ப, அம்மையார் அன்பு மேலீட்டினால் தழுவிக்கொள்ள, சிவபெருமான் மனமுருகி அம்மையாரது முலைச்சுவடும் வளைத் தழும்பும் பெற்ற ஸ்தலம். இது வெகுகாலம் பிரபல ராஜதானியாக விருந்தது. உமாதேவியார் இருநாழி நெற்கொண்டு முப்பத்திரண் டறங்களும் வளர்த்தருளியவிடம். அம்மையாருக்குக் காமகோட்டம் என்னும் ஆலயமும், முருகக் கடவுளுக்குக் குமரகோட்டம் என்னும் ஆலயமுமுள.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் "வாழ்ந்து போதிரே" எனப் பதிகமோதி ஒருகண் பெற்றதும், திருக்குறிப்புத்தொண்ட நாயனார் அவதரித்து முத்தியடைந்ததுமாகிய ஸ்தலம். ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திரவெண்பாவும், மூவர் பதிகமும் பெற்றது. இதற்குப் பன்னிரு திருப்பதிகங்களுள.

இத்தலத்தில், அதிசயத்தையும் விநோதத்தையும் விளைக்கும் விஷயங்களுள. அவற்றுள் ஒவ்வொன்றை யடைந்தோர் நான்கு வேதங்களிலும் நிபுணராகி, முறையே ஆரியன், பிரமதேவன், ஸ்ரீமகாவிஷ்ணு, சாம்பமூர்த்தி இவர்களைத் தரிசிக்க அருகராகிப் பின்பு சாயுச்சிய மடையத்தக்க நான்கு சிங்காசனங்களும்;

பூர்வபுண்ணிய மிகுந்த மனிதர் பிரவேசித்தமாத்திரத்தில் முறையே சர்வாபரணுதி அலங்கிருதராதல், தேவேந்திரபோக முதலிய வனுபவித்தல், விருத்தாப்பியர் பாலியராதல், ஊமைகள் சகல கலாவல்லவராதல், அழகில் மிகுந்தவராதல், ஆகியவற்றைப் பெற்று முடிவில் சாயுச்சிய மடைதல் ஆக்கவல்ல ஐந்து வேதிகைகளும்;

சதாகாலம் அமிர்தஞ் சொரிகின்ற மாமரம், பூவில்லாமல் காய்க்கிற புளியமரம், தங்கசொரூபமான அத்திமரம், இவற்றின் பலனை யனுபவிப்பவர் காயசித்தியடைகின்றனர்; நிழலில்லாத பொன்மரம், விருட்சமுழுவதும் புட்பமாகவேயிருக்கும் இலுப்பைமரம், இவற்றின் ஸ்மரிசம் பட தேககாந்தி யடைவர். இத்தகைய ஐந்து விருக்ஷங்களும்;

தன் தொனியினால் ஆகாயத்திலிருந்து மேகங்களை வரவழைக்கும் மயில் ஒன்று, வேதாந்தக்கியான முடைய

தாகிக் கோவிந்த சப்தத்தை ஸ்மரிக்கும் ரிஷிகள்கூட்டத்திற் சேர்ந்து வாசஞ் செய்கின்ற பச்சைக்கிளி யொன்று, சோதிடசாத்திரத்தில் தேர்ந்த மைனுபட்சி யொன்று, சர்வக்கியான முள்ளதும் சாதுஜனங்களுக்குப் பிரீதியுடையதுமாகிய புரு ஒன்று, சர்வசங்கீத கியானமுள்ளதும், அநேக வர்ணமுள்ளதுமாகிய கோருவங்க (மைனு) பட்சி ஒன்று, சர்வாபீஷ்டங்களையும் கொடுத்துவரும் சக்கரவாளப்பட்சி ஒன்று, ஆகிய ஆறுபக்ஷிகளும்;

தம்மில் முழுகினேருக்கு முறையே பொன்னிறக் காந்தி, நவரத்தினக் காந்தி, அபீஷ்டசித்தி, சிரேஷ்டவிருத்தி, மோட்சவிருத்தி, ஞானவிருத்தி, பாபநிவர்த்தி, வியாதி நிவர்த்தியைத் தரும் ஏழு சரசுகளும்;

தம்மில் முழுகினவருக்கு ஒன்றினல் பகற்காலத்தில் சந்திரதரிசனமும், மற்றொன்றினல் இராக்காலத்தில் சூரிய தரிசனமும், வேறொன்றினல் உதயத்தில் தங்க நிறமாயும்-மத்தியானத்தில் வெள்ளி நிறமாயும்-சாயங்காலத்தில் சிகப்பு நிறமாயும் பிரகாசிக்கும் மூன்று காம்புகளையுடைய ஒரு தாமரைப் புட்பதரிசனமும், மற்றொன்றினல் குரங்கு முகமும், வேறொன்றினல் பாபமிகுதியாதலும், பிறிதொன்றினல் சிநேகரைச் சத்துருக்களாக்கலும், மற்றொன்றால் சத்துருக்களைச் சிநேகராக்கலும், மற்றொன்றால் புண்ணியவான்களாக்கலும் கிடைக்கவல்ல எட்டுத் தடாகங்களும்;

ஸ்பரிசமாத்திரத்தில் சர்வ உலோகங்களையும் தங்கமாக்கும் ஒன்பது சித்த லிங்கங்களும்;

சதா நவரத்தினங்கள் பொழிந்திருக்கும் ஒன்பது ஆராமங்களும்;

இலிங்கங்களைத் தரிசிப்பவர்க்கு முறையே தேவர்களாதலும், விஷபாதை யில்லாமையும், சர்வ சித்துகளுமுண்டாதலும், மரணமில்லாமையும், போகவிவகாரங்களை மறுத்தலும், பாபபுண்ணிய மில்லாத நடுநிலையுண்டாதலும், உடைந்த என்பை ஒன்றாகப் பொருந்தவைக்கிற திறமையும், தேகம் இரண்டு மூன்று துண்டுகளாய் வெட்டுப்பட்டு வேறானாலும் அவற்றைக் கூட்டிவைக்கும் சக்தியும், ஆத்மக்கியானந்தமும் இத்தகைய ஒன்பது லிங்கங்களும்;

உடனே தவசித்தி யடைந்து நினைத்த மாத்திரத்தில் அநேக கோடி பிதுர்க்களைப் பார்த்தலும், அநேக ஜன்ம மாதாக்களைத் தரிசித்தலும், அநேக கோடி மனைவிகளையும்-புருடர்களையும்-குமாரர்களையும் - குமாரத்திகளையும் - சோதரர்களையும் தரிசித்தலும், தேவசம்பாஷணைகளைக் கேட்டலும், தேவலோகத்துத் துந்துபி முதலிய நாதகீதங்களைக் கேட்டலும், முயலுக்கு யானையைத் துரத்தும்படியான வல்லமை யுண்டாதலும், பாதாள உலகத்தார் சம்பாஷணையைக் கேட்டலும், எண்ணெய் இல்லாத விளக்குப் பிரகாசித்தலும், தெய்வலோக தரிசனங் கிடைத்தலும், திக்குப்பிரமை யுண்டாதலும் ஆகிய பிராப்திதரும் பத்து ஸ்தானங்களும்;

பாபங்களை விருத்தி யாக்குதலும், ஊமைகளாதலும், வினோத திருட்டில் கியான முண்டாதலும், சகல வித்தைகளிலும் திறமை யுண்டாதலும், கோரின ரூபத்தைக் கொடுத்தலும், அமிர்தத்தைப் பொழிதலும், நாகலோகத்தை யடையச் செய்யலும், அட்டதிக்குகளிலு முள்ளவர்கள் கண்டு மோகிக்கும்படிச் செய்தலும், சொர்ண நவரத்தினங்களைச் சொரிதலும், இரவும் பகலும் விபரீத பிரமைகளைக் கொடுத்தலும் ஆகிய இவைகளுண்டாகும் பத்து சபைகளும்;

தயிர், பால், நெய், கருப்பஞ்சாறு, தேன் இவை முதலியவற்றால்நிறைக்கப்பட்டுத்தரிசித்தோருக்குத்தேககாந்தி தேக திடம், தேகசித்தி ஆகிய யாவற்றையுங் கொடுக்கும் பன்னிறு கிணறுகளுமாம். இன்னும் அநேக விசித்திர விஷயங்கள் இருக்கின்றன. இவை மூன்று யுகங்களில் எல்லோருக்கும் அகப்பட்டு, இக் கலியுகத்தில் பயிரவமூர்த்தி ஆக்கினைக்குள்ளிருந்து சில புண்ணியவான்களுக்கே காணப்பட்டு வருகின்றன எனக் காஞ்சிப்புராணங் கூறும்.

பிற்காலத்தில் ஆங்கில தமிழ் வித்வ சிகாமணியாகிய ஸ்ரீ அரங்கநாத முதலியாரவர்களால் கச்சிக் கலம்பகமும், பின்னும் பல வித்வான்களால் பல பாடல்களும் பெற்ற ஸ்தலம். இப்போது நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களால் ஆலய முதலான கட்டடங்கள் தக்கபடி புதுப்பிக்கப்பட்டு, வைதீகதானம் வித்யாதானம் செய்யப்படுகிற ஸ்தலம்.

---

## ஸ்ரீ காஞ்சி விஷ்ணு க்ஷேத்திர மகத்துவம்.

சென்னையம்பதிக்கு மேற்குத் திசையில் சுமார் 60 மயில்தூரத்தில், புஷ்கரம், நைமிசாரணியம், சித்தாஸ்ரமம், அஹோபிலம், கோவர்த்தனம், சித்திரகூடம், குருக்ஷேத்திரம், கயா, பிரயாகை, பஞ்சவடி, பத்மநாபம், ஸ்ரீகூர்மம், நாரசிம்மம், ஜநார்த்தனம், அஜாமீளம், ஸ்ரீமுஷ்ணம், கும்பகோணம், ஸ்ரீரங்கம், வ்ருஷபாத்திரி, யாடவிபர்வதம், பாண்டுரங்கம், ஜகந்நாதம் முதலான இருபத்திரண்டு க்ஷேத்திரங்களுக்கும்,

அயோத்தியாதி சப்தபுரங்களுக்கும் மேன்மையான பலன்களைப் பிரசாதிக்கும் சத்திவரத க்ஷேத்திரமென்றும், பாஸ்கரக்ஷேத்திரமென்றும், வராஹ க்ஷேத்திரமென்றும், நாரசிம்ம க்ஷேத்திரமென்றும், காஞ்சி க்ஷேத்திரமென்றும், அஸ்தகிரியென்றும் ஆறு பெயர்களால் பிரகாசிக்கும் ஒரு புண்ணிய க்ஷேத்திரம் இருக்கின்றது. அது, ஸ்ரீதேவி பூதேவி சமேதரான ஸ்ரீ வரதராஜ சுவாமிக்கு நிவாசா யோக்கியமான புண்ணியகோடி விமானத்துடனும், அநேக கோபுர பிராகார மண்டபங்களுடனும், காமகோஷ்ட பிலத்துடனும், இருபத்துமூன்று தீர்த்தங்களுடனும், அஸ்வ கம்பாதி சப்தமஹாநதிகளுடனும், பதினெட்டு ஸ்ரீவிஷ்ணு ஆலயங்களுடனும் பிரகாசிக்கின்றது.

---

## ஸ்ரீ சாரங்கபாணிசுவாமி மகத்துவம்.

சிருஷ்டியாதி காலத்தில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் அம்ஸரூபமாகி வந்தபோது பிரமதேவன் அவரைப் பார்த்து, "நீர் யாவர்?" என்று வினவ, அப்போது பகவான், "நான் சகல ஜீவர்களின் இரக்ஷகனுகும் பரமாத்துமாவாகிய நாராயணன்; இந்த உலகங்களைச் சிருஷ்டிக்கும் பொருட்டு உம்மை எனது நாபிக்கமலத்தில் ஜனிப்பித்தேன்; ஆகையால் நீர் எப்போதும்போல உலகங்களை உண்டாக்கச் செய்யும்" என்று ஆக்ஞாபித்து மறைந்துநின்றார். அதன் பிறகு மலரவன் சமஸ்தலோகங்களையும் சிருஷ்டித்துத் தான் முன் கண்ட பகவானுக்குச் சங்கு சக்கிர கதா கவுஸ்துவாபரணங்களைத் தரித்து இலக்ஷ்மி சமேதராக வீற்றிருக்கும்போது சேவிக்கவேண்டுமென்று எண்ணி, பிரயாகை க்ஷேத்திரத்தில் நூறு அசுவ

மேதயாகங்களைச் செய்தும், ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைக் காணக்கூடாமல், பத்தாயிரம் வருஷங்களாகத் தபசு செய்கையில் ஆகாசவாணி பிரமதேவனைப் பார்த்து, "ஓ சதுர்முகனே! நீ ஆயிரம் அசுவமேதயாகங்களைச் செய்தால் மாத்திரம் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் பிரசன்னமாவார். ஆகவே நான் ஒரு உபாயம் சொல்லுகிறேன் கேளும்: அதாவது, ஜம்புத்வீபத்தி லிருக்கும் சத்தியவிரதக்ஷேத்திரத்தில் ஏதாவது ஒரு தருமகாரியத்தை ஒரு தரம் செய்வாயாகில் அது ஆயிரம் தரம் செய்த பலனைக் கொடுக்கும். ஆகையால், நீ அந்த க்ஷேத்திரத்திற்குப் போய் அவ்விடம் ஒரு அசுவமேதயாகம் செய்வாயாகில், உனக்கு ஸ்ரீமந் நாராயணமூர்த்தி பிரசன்னமாவார்" என்று சொல்ல, அதைக் கேட்ட அந்த பிரம்மதேவன் ஸத்தியவிரத க்ஷேத்திரத்திற்கு வந்து விஸ்வகர்மாவை யழைத்து, தான் யாகஞ் செய்வதற்கு அவ்விடம் ஓர் பட்டணம் நிர்மிக்கவேண்டுமென ஆக்ஞாபிக்கையில், அந்த விஸ்வகர்மாவும் அந்த க்ஷேத்திரத்தில் பத்துக் காதம் நீளமும் பத்துக் காத அகலமு முள்ள பட்டணத்தை உண்டாக்கி, அதில் அநேக தேவாலயங்களையும், வாபி கூப தடாகங்களையும், சதுர்வர்ண ஜனங்களையும், அநேக திவ்விய திருமாளிகைகளையும் நிர்மித்து, அந்தப் பிரம்மதேவனுடைய ஆக்ஞையின்படி அநேக சரோவரங்களில் ஸ்நானம் செய்தும், வாஸ்துகாம நிமித்தியமாக ஒரு பூதத்தை நிருமித்தும், அதை அர்ச்சித்தும், மாமிஸங்களினால் திருப்தி யுண்டாக்கியும், அந்த வாஸ்துவை எடுத்துக்கொண்டுபோய்த் தேவப் பிராம்மணர்களுடன் அந்த யாகசாலையைப் பிரதக்ஷணமாகச் சுற்றிவந்தும், பிறகு அந்த அஸ்தலைலத்துக்கு ஈசானியபாகத்தில் இரண்டு யோஜனை தூரத்தில் ஓர் பெரிய பள்ளத்தை யுண்டாக்கியும், அதில் அந்தப் பூதத்தை நுழையவைத்தும், பிறகு அநந்த சரோவர ஜலத்தினால் அபிஷேகஞ் செய்வித்தும், பற்பலவித மாமிஸ போஜனம் பலி கொடுத்தும், அந்தப் பூதத்தின் ஜீவனுதாரமாக அவ்விடத்தில் ஓர் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்வித்தும், திரியம்பக பலியிட்டும், பின் பக்கம் திரும்பிப்பாராமல் பிரம்மதேவன் சந்நிதிக்கு வந்தான். அந்தப் பூத மிருந்த பள்ளமானது அநந்த சரோதக சம்பந்தமாகிறபடியால், அது அநந்த தீர்த்தமென்று சொல்லப்படுகிறது. பிறகு பிரம்மதேவன் அந்தப் பட்டணத்தைப் பார்த்துச் சந்தோஷப்

பட்டு "இது முதற்கொண்டு இந்த நகரமானது காஞ்சிபுரமென்று பிரகாசித்து, இதை நினைக்கும் மானவ ஜாதியாருக்குச் சகல பாவங்களையும் போக்கவேண்டும்" என்று வரங் கொடுத்து, சித்திரைமீ சுத்தபவுர்ணமி சோமவாரங் கூடிய சுப முகூர்த்தத்தில் அசுவமேதயாகஞ் செய்கையில், இந்திராதி சமஸ்த தேவர்களும், சகல அசுரர்களும் வரவே, அந்த யாகத்தில் தேவர்கள் அசுரர்களுக்கு மரியாதை செய்யாதிருந்ததைக் கண்டு, சகல அசுரர்களும் யோசனை செய்து தேவர்களுடன் யுத்தம் செய்கையில் பிரம்மதேவன் தனது யாகத்துக்குக் குந்தகம் நேரிட்டதென்று கண்டு, அந்த யாகத்தை இரக்ஷிக்கும்படியாக ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தியானிக்க, அப்போது அந்தப் பகவான் சங்கு, சக்கிர கதா சாரங்கதாரியாக அவதரித்து, அந்தச் சாரங்கத்தில் அநேக பாணங்களைப் புகட்டி, அந்தப்பாணங்களினால் அந்த அசுரர்களை அஸ்தகிரிக்கு நிருதி திக்குக்கு யோட்டினமையால் அந்தச் சுவாமி சாரங்கதர சுவாமியென்று சொல்லப்படுகிறது.

---

## தீபப்பிரகாசசுவாமீ மகத்துவம்.

மேலும், அவ்விடத்தில் பூர்வம் பிரம்மதேவன் செய்த அசுவமேத யாகத்தில் தேவர்களுடன் யுத்தம் செய்த அசுரரை ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர், சாரங்கதர அவதாரத்தில் துரத்துகையில், அந்த அசுரர் பகவானுக்குப் பயந்து நான்கு திசைகளிலும் ஓட, சிலர் அஸ்தகிரியி லிருந்த பிலத்தில் பிரவேசிக்க, அந்தப் பிலத்தின் மத்தியில் பூர்வத்தில் இரணியனைக் கொன்று வசிக்கும் நரசிம்மமூர்த்தியானவர் எழுந்து கர்ஜித்து அவர்களை ஓட்டினார். அதன் பிறகு அந்த அசுரர்கள் செம்பாசுரனிடம் யோசித்து ஸ்ரீ சைலத்திற்குப் போய் அவ்விடம் சிவாராதனை செய்கையில், அந்த ஈசுவரர் அவர்களுக்குப் பிரசன்னராகி, "உங்களுக்கு வேண்டுவதென்ன?" என்று கேட்க, அவர்கள், "எங்கள் சத்துருவாகிய நரசிம்மனைக் கொல்ல வேண்டும்" என்று பிரார்த்திக்க, அப்போது அந்த ஈசுவரர் எட்டுபாதங்களுள்ள சரபாவதார மெடுத்தும், அந்த அசுரர்களுடன் சத்தியவிரத க்ஷேத்திரத்திற்கு வந்தும், தமது மாய்கையால் உலகமே இருளாகும்படி செய்விக்க, அப்போது பிரம்மதேவன் செய்துகொண்டிருந்த யாகம்

ஒன்றும் தெரியாதிருக்க, அப்போது பிரம்மதேவன் பார்த்து இது சிவமாய்கையென்று கண்டு, இந்த அந்தகாரத்தை நீக்கும்படி ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைப் பிரார்த்திக்க, அப்போது அவர் தீபம்போலப் பிரகாசித்துக்கொண்டு உதித்தார். அவரது தேககாந்தியால் அந்த அந்தகாரம் நீங்கியபடியால், அந்தச் சுவாமி தீபப்பிரகாசர் என்று சொல்லப்படுகிறார்.

---

## அஷ்டபுஜசுவாமி மகத்துவம்.

மேலும், அவ்விடம் பூர்வத்தில் ஒரு காரணத்தைப் பற்றி அசுரர்களால் பிரார்த்திக்கலான ஈசுவரனாகிய சரபன் அஸ்தகிரி பிலத்திலுள்ள நரசிம்மசுவாமியைக் கொல்லும் பொருட்டு எட்டுப் பாதங்களைக் கொண்டு அந்த நரசிம்ம சுவாமிக்குச் சமீபத்தில் வர, அந்தச் சுவாமியானவர் தாம் எட்டுப் புஜங்களைக் கொண்டு கருடவாகனமீதேறி எட்டுப் புஜங்களிலும் சக்கரம், சங்கம், பாசம், பாணம், கதம், தனுசு, டால், கத்தி ஆகிய எட்டு ஆயுதங்களைக் கொண்டு அந்தச் சரபரூபியான ஈசுவரனுடன் சண்டை செய்து ஜயிக்க, அப்போது தன்னருகில் பயந்து நிற்கும் சரபனைப் பார்த்து, "நீ இந்த அஸ்தகிரிக்கு வாயு திக்கில் வசித்து பிரம்ம யாகத்தைப் பாதுகாத்து வருவாய்" என்று நியமனஞ் செய்தார். அன்றுமுதற்கொண்டு அஸ்த சைலத்துக்குப் பஸ்சிமத்திலிருப்பவர் அஷ்டபுஜசுவாமியென்று சொல்லப்படுகிறார்.

---

## எதோத்காரசுவாமி மகத்துவம்.

மேலும், அவ்விடம் பூர்வத்தில் பிரம்மதேவனுடைய யாகத்தைக் கெடுக்கும்படி சரஸ்வதிதேவி நதிரூபமாக வருகையில், அந்த நதியைத் தடுக்க ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் சேஷசயனமாகக் குறுக்கே படுத்துக்கொள்ள, அந்தச் சரஸ்வதியானவள் பாதாள மார்க்கமாகப் புறப்பட்டு வேறு பிரதேசத்தின் வழியாகப் பிரவேசிக்க, அப்போது ஸ்ரீ விஷ்ணுவானவர் மறுபடியும் படுக்க, அந்தத் தேவி கண்டு, "சுவாமி! நான் பிரம்மதேவனுடைய யாக குண்டத்தில் ஜனிக்கிறேன்; தாங்கள் எனக்கு அவ்விடம் தரிசனை சாதிக்கவேண்டும்" என்று விண்ணப்பம் செய்து தான் பாதாள மார்க்கமாக அந்த யாகசாலைக்கு வந்து அந்த

யாககுண்டத்தில் ஸ்திரீரூபமாக ஜனிக்க, அப்போது பகவானவர் சங்கு சக்கர கதாதாரராகி அந்த அம்மைக்குச் சேவை சாதித்து, "இன்றுமுதல் நாம் இவ்விடம் ஏதோத்கார சுவாமியாக வதிந்திருப்போம்" என்று திருவுள்ளம் பற்றியருளினர்.

---

### ஸ்ரீ வரதராஜசுவாமி மகத்துவம்.

மேலும், பூர்வத்தில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தரிசனை செய்யும்படிக்குப் பிரம்மதேவன் தான் செய்யும் அசுவமேத யாகத்தில் பசுவின் வபசை ஆஜ்யத்தில் நனைத்து அக்கினியில் ஸ்ரீமந் நாராயண பிரீதியாக ஓமம் செய்கையில் அந்த அக்கினியின் மத்தியில் பிரமதேவன் செய்த ஓமபலனை பக்ஷித்துக்கொண்டு சூரியகோடி பிரகாசத்தோடு ஜனித்த புண்ணியகோடி விமானத்தின் மத்தியில் சங்கு சக்கர கதாதரராகிய பரமாத்துமாவாகும் ஸ்ரீ விஷ்ணுவானவர் ஸ்ரீதேவி பூதேவி சமேதராக ஜனிக்க, அப்போது பிரமதேவன் கண்டு மகிழ்ந்து பற்பல விதமாகப் பிரார்த்திக்க, அப்போது அந்தப் பகவான் கண்டு சந்துஷ்டியினால் "உனக்கு வேண்டுவதென்னை?" என்று வினவ, பிரமதேவன் கேட்டு, "சுவாமீ! தங்களுடைய திவ்வியரூப தரிசனையைக் காண அசுவமேதயாகம் செய்தேன். இவ்விடம் தங்களுடைய திவ்வியரூப தரிசனை கிடைத்தது. தன்னியனானேன். ஆனால், தாங்கள் இந்தத் திவ்விய ஸ்வரூபத்துடன் இந்த அஸ்தகிரி சிகரத்தில் அர்ச்சாவதாரமாகச் சர்வகாலம் வசித்துத் தங்களைச் சேவிக்கும் மானவஜாதியார் கோரும் வரங்களைக் கொடுத்து, வரதர் என்னும் சிறப்புப் பெயருடன் பிரகாசிக்கவேண்டும்" என்று விண்ணப்பம் செய்ய, அந்தப் பகவானும், "அப்படியே செய்வோம்" என்று வரமளித்து அந்த அஸ்தகிரி சிகரத்தில் அர்ச்சாவதாரமாக நிவாசஞ்செய்துவருகிறார். அவ்விடம் ஸ்ரீ வரதராஜசுவாமி நிவாசிக்கும் விமான சிகரத்தைத் தரிசனை செய்யும் மானவ ஜாதியாருடைய சகல பாவங்களும் நசித்து அநேக புண்ணியங்களுண்டாகிறபடியால் அது புண்ணியகோடி விமானமென்று சொல்லப்படுகிறது. இந்த ஸ்தலத்தில் நித்தியோத்ஸவமும், பஞ்சபர்வ உத்ஸவங்களும், பிரம்மோத்ஸவங்களில் விசேஷமான கருட உத்ஸவமும் நடந்து வருகிறது.

---

## சேஷாகார விஷ்ணு மகத்துவம்.

அவ்விடம் பூர்வகாலத்தில் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியானவர், பலிச்சக்கரவர்த்தியை, வாமனுவதாரமாகி மூன்றடி பூமிக்கு யாசித்துப் பிறகு திரிவிக்கிரம சொரூபத்தைக் கொண்டு சகல புவனங்களையும் மூன்று அடிகளால் அளந்து அந்தப் பலிச்சக்கரவர்த்தியைப் பாதாளத்தில் அமிழ்த்தித் தாம் வாமனரூபதாரியானுர். அந்தப் பாதாளப் பிலத்துவாரத்தில் நிவசிக்கும்போது ஒருநாள் பலிச்சக்கரவர்த்தி பாதாளத்தில் வாமன சுவாமியை நமஸ்கரித்து, "சுவாமி! தாங்கள் என்னிடம் பூமிக்கு யாசித்து, பிறகு தரித்த திரிவிக்கிரம சொரூபத்தை இப்போதுங் காண அபேக்ஷிக்கின்றேன்" என்று விண்ணப்பஞ் செய்ய, அந்த வாமனரூபர், "ஓ பலி! நீ ஆயிரம் அசுவமேதயாகஞ் செய்வாயாகில் அந்தத் திரிவிக்கிரமரூபம் தரிசனையாகும்; அதற்கு ஒரு உபாயம் சொல்லுகிறேம்; அதாவது, நீ ஜம்புத்வீபத்தைச் சார்ந்த சத்தியவிரத க்ஷேத்திரத்தில் ஒரு யாகஞ் செய்வாயாகில் உனக்கு ஆயிரம் யாகஞ்செய்த பலன் கிடைக்குமாகையால் அவ்விடம் போவாயாக" என்று ஆஞ்ஞாபிக்க, அப்போது பலிச்சக்கரவர்த்தி கேட்டு, "சுவாமி! அந்த க்ஷேத்திர மிருக்கும் இடந் தெரியாதாகையால், அடியேனை அவ்விடம் அழைத்துப்போகத் திருவுள்ளம் பற்றவேண்டும்" என்று பிரார்த்திக்க, அப்போது வாமனமூர்த்தியானவர் "ஓ பலி! நீ கண்களை மூடிக்கொண்டு நம்மைத் தியானிப்பாயாகில் உன்னை அவ்விடம் அழைத்துக்கொண்டு போவோம்" என்று ஆஞ்ஞாபிக்க, அப்போது பலிச்சக்கரவர்த்தி கண்களை மூடிக்கொண்டு தியானம் செய்து அந்த வாமனமூர்த்தியைத் தொடும்போது அந்தப் பகவான் சேஷாவதாரமாகி அந்த இடமுழுமையும் சுற்றிக்கொண்டு பூமியைப் பேதிக்கச் செய்யாமல் காஞ்சிபுரத்துக்குவந்து அந்தப் பலிச்சக்கரவர்த்தியை அழைத்துக் கண்களைத் திறக்கும்படி ஆஞ்ஞாபித்தபடியே, கண்களைத் திறந்துப் பார்க்க, "இந்தச் சர்ப்பம் யாது?" என்று கேட்க, அப்போது பகவானனவர் பலியைப் பார்த்து, "ஓ பலி! இந்தச் சர்ப்பமானது சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியாகும். நீ இந்தப் பகவானுக்குப் பிரீதி உண்டாகும்படி யாகஞ் செய்யவேண்டும்" என்று ஆஞ்ஞாபிக்க, அந்தப் பலிச்சக்கரவர்த்தியும் அசுவமேதத்திற்குக் குதிரையை யனுப்ப, அக்குதிரை

யை யாரும் தடுக்காதபடி அச்சேஷபகவானும் கூடப்போய் அந்தக் காமகோட்ட பிலத்திற்கு ஆக்கினேய பாகத்தில் சேஷாகார விஷ்ணுவென்னும் நாமத்தினால் பிரகாசிக்கிறார்.

---

### மேஹவர்ண சுவாமி மகத்துவம்.

அவ்விடம் பூர்வத்தில் பலிச்சக்கிரவர்த்தி அசுவமேத யாகஞ் செய்யவே இந்திராதி தேவர்கள் கூடி "இவன் முன்னமே யாகங்களைச் செய்து அவைகளா லுண்டான பலத்தினால் சமஸ்த தேவர்களையுஞ் ஜயித்து இப்போதும் அசுவமேத யாகத்தைச் செய்கிறானுகையால் அது நிறைவேறாதபடி செய்யவேண்டும்" என்றெண்ணி அந்தக் காஞ்சிநகரத்துக்கு ஆக்கிநேய அஸ்திரத்தைப் பிரயோகித்து அவ்விடமிருந்த வாவி கூப தடாக நதிகளில் ஜலமில்லாமற் போகச்செய்ய அந்தப் பட்டணத்தின் ஜனங்கள் யாவரும் பலிச்சக்கரவர்த்தியினிடம் ஓடிவந்து "வேந்தே! நாங்கள் யாவரும் ஜலமில்லாமல் மடிந்துபோகிறோம்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள்; அந்தப் பலிச்சக்கரவர்த்தி சுவாமியைப் பார்த்து, "சுவாமி! ஜனங்களுக்கு ஜலங் கொடுப்பதாக வாக்குத்தத்தம் செய்தேன்; ஆனால் எங்கும் ஜலம் அகப்படவில்லையே; என் செய்வேன்? இனி இந்த அக்கினியில் விழுந்து இறப்பதே யுக்தமென் றிருக்கிறேன்" என்று விண்ணப்பஞ் செய்ய, அப்போது வாமன மூர்த்தியானவர், "ஓ பலி! உனக்கு எதிரில் தோன்றும் நீலமேகத்தை வணங்குவாயாக" என்று சொல்ல, அந்தப் பலியும் அப்படியே வணங்கப் போதுமான மழை பொழிந்தது. பிறகு அந்த மேகத்தின் மத்தியில் சங்கு சக்ர கதாதாரராகப் பகவான் பிரசன்னமானார். அப்போது பலிச்சக்கரவர்த்தி அந்தப் பகவானைப் பார்த்துப் பலவிதமாகப் பிரார்த்தித்து, "தாங்கள் இந்த காஞ்சிபுரத்தில் மேகவர்ணசுவாமி யென்னும் பெயரால் பிரகாசிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொள்ள, அந்தப் பகவானும் அந்த வரத்தைக் கொடுத்து அவ்விடம் சேஷபிலமாகிய காமகோஷ்டியில் தென்கிழக்குப் பாகத்தில் நிவாசித்து வருகிறார்.

---

### திரிவிக்கிரமசுவாமி மகத்துவம்.

மேலும், அவ்விடத்தில் பலிச்சக்கரவர்த்தி அசுவமேதயாகஞ் செய்த பிறகு யவபுரத ஸ்நானஞ் செய்து

வாமன சுவாமியை ஸ்தோத்திரஞ் செய்கையில் அந்தப் பகவான் அவனுக்குப் பூர்வம் வரம் கொடுத்தபடியே ஒரு பாதத்தைப் பூமியிலும், ஒரு பாதத்தை ஆகாயத்திலும வைத்துக்கொண்டு கோடி சூரிய சமான காந்தியுடன் திரிவிக்கிரம ரூபத்தைக் காட்டி, "உனக்கு வேண்டுவது என்ன?" என்று வினவ, அந்தப் பலிச்சக்கிரவர்த்தி கேட்டுத் தாங்கள் இந்தத் திவ்வியரூபத்துடன் சகல ஜனங்களுக்கும் தரிசனம் சாதித்துக்கொண்டு இந்தக் காஞ்சி நகரத்திலிருக்கவேண்டும்" என்று விண்ணப்பம் செய்ய, அந்தப் பகவானும் அந்த வரத்தைக் கொடுத்து அந்த சேஷாகார விஷ்ணுவினுடனும், மேகாகார விஷ்ணுவினுடனும் திரிவிக்கிரம சுவாமியென்று சொல்லப்படுகிறார்.

---

## வாமன சுவாமி மகத்துவம்.

பூர்வத்தில் வாமனசுவாமியானவர் சேஷாவதாரமாகிப் பாதாளத்திலிருந்து பலிச்சக்கரவர்த்தியை அழைத்துக் கொண்டும், பூமியைப் பிளந்துகொண்டு காஞ்சிநகரத்திற்கு வந்தும், பலிச்சக்கிரவர்த்திக்கு ரிஷ்டசித்தியை உண்டாக்கி, அந்தச் சேஷபிலத்திற்குத் தக்ஷண பாகத்தில் அதற்கு அதிஷ்டான தெய்வமாகி, சகல பாகவதர்களுக்கும் சர்வாபீஷ்டங்களைக் கொடுத்துக்கொண்டு நிவாசஞ் செய்கிறார்.

---

## சந்திரகண்ட சுவாமி மகத்துவம்.

பூர்வம் கைலாசத்தில் பார்வதி பரமேசுவரர் இருவருங் கூடிச் சூதாட்டமாடும் அவசரத்தினால், ஈசுவரன் பார்வதியை ஜயித்துப் பரிகாசஞ் செய்யவே, அந்தப் பார்வதியானவர் கோபித்து, ஈசுவரனைப் பார்த்து, "திரிவிக்கிரம அவதாரம் கொண்டு தமது பராக்கிரமத்தைக் காட்டிய உத்தம தேவரான ஸ்ரீமந் நாராயணமூர்த்தி இப்படிப்பட்ட பரிகாசம் செய்ததில்லை; நீரோவெனில், கேவலமான ஸ்திரீயைச் சூதாட்டத்தில் வென்று பராக்கிரமத்தைப் பாராட்டுகிறீர். உமது வேஷ சுவாபமெல்லாம் விஷங்கள்" என்று நிந்திக்கையில், அப்போது சிவபெருமான் கோபங் கொண்டு பார்வதியைப் பார்த்து, "மஹா தேவராகிய நம்மை நீ அவமதித்தபடியால் விகாரமான கண், கை, கால்களுடன் ஜனிப்பாய்" என்று சபிக்க, அப்போது பார்வதியானவர் பயந்து, ஈசுவரனைப் பார்த்து, "சாபவிமோசனம்

ஆக்கவேண்டும்" என்று விண்ணப்பம் செய்ய, அப்போது சிவபெருமான் பார்வதியைப் பார்த்து, "நீ பூலோகத்திற் போய்க் காஞ்சி நகரத்தில் காமகோஷ்ட பிலத்துவாரத்தில் நிவசிக்கும் ஸ்ரீ வாமன சுவாமியைத் தரிசிப்பாயாகில் சாபம் நீங்கி மறுபடியும் நீ என்னை வந்து அடைவாய்" என்று அனுக்கிரகித்தார். அதன்மேல் பார்வதிதேவியானவர் ஸ்கந்த விநாயக சப்தமாத்ருகாத பரிவாரத்துடன் அவ்விடம் வந்து பஞ்ச தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, காமகோஷ்ட பிலத்துவாரத்தி லிருக்கும் வாமனமூர்த்தியைச் சேவித்துப் பிரதக்ஷிணமாக வந்து நமஸ்கரித்து அருகிற் சென்று ஒரு காலால் நின்று இருகரங் கூப்பிக் கோரமான தபசு செய்கையில், வாமனமூர்த்தி பரிதபித்து, "ஓ பார்வதீ! உனது தபசுக்கு மெச்சினேன். சிவசாபத்தினால் உனக்குச் சம்பவித்த விகார ஸ்வரூபம் நீங்கியும் நல்ல நேத்திரங்களை யுடைய சுந்தரவதியாகியும் எனது சந்நிதிக் கருகில் காமாக்ஷி யென்னும் பெயர் பெற்றுச் சதா நிவசித்து நின்னை வணங்குவோருக்கு எனது அனுக்கிரகத்தினால் சகல வரங்களையும் கொடுத்துக்கொண்டு வருவாயாகில், சில காலத்துக்குள் சிவபெருமான் இவ்விடம் வந்து உன்னை விவாகம் செய்துகொள்வார்" என்றதைக் கேட்டு அந்தத் தேவியார் பல நூற்றாண்டுகளாக நிவசித்துக் கைலாசபதியின்மேல் விரகத்தைச் சகிக்கக்கூடாமல் வாமனமூர்த்தியின் அனுக்கிரகத்தினால் காமகோஷ்ட பிலத்திற்குச் சமீபமாக வாயு திக்கில் ஒரு பிருதிவி லிங்கத்தை யுண்டாக்கி ஈசுவரனைத் தியானித்து அநேக விதங்களாகப் பூஜிக்கையில் சிவபெருமான் அந்த அம்மையின் பக்தியை யறியும்படிக் கோடி சூரிய தேஜஸ்ஸோடு அவ்விடம் வந்து அந்தக் காமாக்ஷி தேவியின் தேகத்தைச் சுடுகையில், அந்த அம்மையார் அந்த உஷ்ணத்தைச் சகிக்கமுடியாமல் சுவாமியைத் தியானிக்க, அந்தப் பகவான் ஒரு மாமரத்தை நிர்மிக்க, அந்த மரத்தடியில் நின்று சிவலிங்க பூஜை செய்கையில் மறுபடியும் சிவபெருமான் தனது நெற்றிக் கண்ணினால் அந்த விருக்ஷத்தைப் பஸ்பமாக்க, அந்தக் காமாக்ஷிதேவியார் அந்த உஷ்ணத்தைச் சகிக்கக்கூடாமல் வாமனமூர்த்தியைத் தியானித்துக்கொண்டு மூர்ச்சையாகித் தரையில் விழப் போகும்போது அப்போது வாமனமூர்த்தியானவர் கருணையால் உடனே சந்திரபிம்ப ஸ்வரூபராகி அந்த இடத்திற்கு வந்து தமது திவ்விய சுதா வருஷத்தினால் அந்த மரத்தை

மறுபடியும் தழைத்தோங்கச்செய்து, அந்தக்காமாக்ஷிதேவியின் மூர்ச்சையைத் தெளியவைத்தார். பிறகு அந்தத் தேவியானவர் எழுந்து கண்களைத் திறந்து தனக்கு எதிரில் சந்திரபிம்ப மத்தியில் சங்கு சக்கர கதாரூடரான திவ்விய மங்கள விஷ்ணுவைப் பார்த்துப் பலவிதமாகப் போற்றிப் பயமற்று நிற்கையில் அப்போது அந்தத் தேவர் தமது பெயரால் ஒரு தீர்த்தத்தை நிர்மித்து, அந்த அம்மையைப் பார்த்து, "நீர் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து சிவலிங்க பூஜையைச் செய்துகொண்டிரும்" என்றும், நாம் சமீபத்திலிருந்து இரக்ஷிப்போம்" என்றும் அநுக்கிரகித்து அந்தச் சந்திர தீர்த்தத்துக்கு மேற்குத் தீரத்தில் மேற்கு முகமாகி, சகல ஜனங்களுடைய தாபத்திரியங்களைப் போக்கிக்கொண்டு அவ்விடம் நிவசித்துவருகிறார். ஆகையால், அவர் சந்திரகண்டசுவாமியென்று பெயர்பெற்றுப் பிரகாசிக்கிறார்.

---

## பாண்டவதூதசுவாமி மகத்துவம்.

பூர்வம் பாண்டவர் குலத்தில் ஜனித்த ஜனமேஜய மகாராஜன் வைசம்பாயன முனிவரால் பாரதகதையெல்லாம் கேட்டுப் பிறகு ஷை முனிவரை நோக்கிச் "சுவாமி! அருச்சுனனுக்குச் சாரதியாகவிருந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை யான் எப்படிப் பார்க்கலாம்? அதற்கு உபாயமேது?" என்று பிரார்த்திக்க அந்த முனிசிரேஷ்டர் கேட்டு, "ஓ ஜனமேஜயா! நீ சத்தியவிரத க்ஷேத்திரத்தில் அசுவமேத யாகஞ்செய்வாயாகில் அந்தக் கிருஷ்ணர் சந்துஷ்டியடைந்து வேதகோட்டி யென்னும் விமானத்தின்மீது ருக்குமணி சத்தியபாமா சமேதராகவந்து தரிசனை கொடுப்பார்" என, அந்த இராஜனும் அப்படியே செய்ய ஸ்ரீ கிருஷ்ணரும் சேவை சாதித்தார். அப்போது அந்த ராஜன் பலவிதமாகத் துதித்துத் "தாங்கள் இந்த ரூபமாகவே இந்தக் காஞ்சிநகரத்தில் நிவசிக்க வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய, அதற்குக் கண்ணன் இசைந்து அவ்விடம் நிவசித்து வருகிறார். ஆகையால் அந்த விஷ்ணுமூர்த்தியானவர் பாண்டவதூதசுவாமி யெனப்படுகிறார்.

---

## வைகுண்டநாதசுவாமி மகத்துவம்.

பூர்வத்தில் விரோசன் என்னும் ஒரு இராஜன் தருமமார்க்கத்தில் இராஜ பரிபாலனம் செய்து கொண்டிருந்து

தனுக்குக் குமாரர்களில்லாமற் போனதைப்பற்றிச் சிந்திக்கையில் பல பெரியோர்களை யழைத்துத் "தனக்கு எப்படிப் புத்திரசம்பத்து உண்டாகும்?" என்று கேட்க, அந்தப் பெரியோர்கள் "ஓ இராஜனே! நீ கைலாச நாதனாகிய சாம்ப மூர்த்தியை யாராதிப்பாயாகில் புத்திர சம்பத்து உண்டாகும்" என்று கூற, இராஜன் கேட்டுத் தான் "பூலோகத்திலிருந்து கைலாயத்திற்குப் போகும் உபாயம் ஏது?" என்று பிரார்த்திக்க, அந்தப் பெரியோர்கள் இராஜனைப் பார்த்து, "நீ காஞ்சி நகரத்துக்குப் போய் அவ்விடம் சிவாராதனையைச் செய்வாயாகில் கைலாச நாதருடைய தரிசனை கிடைக்கும்" என்று சொல்லக் கேட்டு, அந்த இராஜன் தனது மனைவியுடன் காஞ்சி நகரத்துக்கு வந்து சிவாராதனையைச் செய்தான். அப்போது ஈசுவரர் பிரசன்னமாகி அந்த இராஜனுக்கு சாக்ஷாத் கயிலாசத்தைக் காட்டி "இன்னும் வேண்டியது என்ன?" என்று வினவ, அந்த இராஜன் "எனக்குப் புத்திர பாக்கிய முண்டாகவேண்டும்" என்று கேட்க, அப்போது பரமேசுவரர் மகிழ்ந்து "ஓ இராஜனே! உனக்குச் சில காலங்களுக்குப் பிறகு சனகாதிகளுடைய சாபங்களினால் பூமியில் இராக்ஷதர்களாக ஜனித்தும் இப்போது வைகுண்டத்தில் துவாரபாலகராக விருக்கும் ஜய விஜய ரென்னும் இருவர் உனக்குக் குமாரர்களாக ஜனிக்கப் போகிறார்கள். அவர்களுக்கு நாம் உனக்குக் கைலாசத்தைக் காட்டியதைப்போல அப்புத்திரர்களுக்கு மகா விஷ்ணுவானவர் வைகுண்டத்தையும் காட்டுவார்" என்று வரங்கொடுத்து மறைந்தார். அதன்பிறகு விரோசன மஹாராஜனுக்கு ஜய விஜயாள் இருவரும் புத்திரர்களாகப் பிறந்து பல்லவ வில்லபாளென்ற பெயர்களால் பிரகாசித்துத் தேவப் பிராமண பக்தர்களாகி இராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டிருந்து கலியுகாதியில் காஞ்சிபுரத்துக்கு வந்து விஷ்ணுபிரீதியாக அசுவமேதயாகஞ் செய்யவே விஷ்ணுவானவர் மகிழ்ந்து அவர்களுக்கு வைகுண்டத்தைப் பிரத்தியக்ஷமாகக் காட்டிப் "பின்னும் வேண்டுவதென்ன?" என்று வினவ, அவர்கள், "சுவாமி! தாங்கள் வைகுண்டத்தி லிருக்கும் ரூபத்துடன் ஸ்ரீ காஞ்சி நகரத்தில் நிவசித்துப் பாகவதர்களுக்கு மோக்ஷமளிக்க வேண்டும்" என்று கேட்க, திருமாலும் சம்மதித்து அந்த க்ஷேத்திரத்தில் வைகுண்டநாதர் என்று பிரசித்திபெற்றுப் பிரகாசிக்கிறார்.

---

### விஜயராகவசுவாமி மகத்துவம்.

மேலும், அஸ்தகிரிக்கு மேற்குத் திசையில் 5 மைல் தூரத்தி லிருக்கும் ஜடாயுதீர்த்த தீரத்தில் விஜயராகவ சுவாமியென்னும் ஒரு விஷ்ணுவானவர் பிரகாசிக்கிறார்.

---

### பிரளய ரோதகசுவாமி மகத்துவம்.

அவ்விடம் பூர்வத்தில் பிரம்மதேவனுடைய யாகத்தை நாசமாக்கும்பொருட்டுஸரஸ்வதிதேவியானவர் நதிரூபமாக வருகையில் அந்தப் பிரவாகத்தை ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் தடுத்துவிட்டமையால் அந்த விஷ்ணுவானவர் ஜடாயு தீர்த்தத்திற்கு மேற்குத் திசையில் நான்கு மைல் தூரத்தில் பிரளயரோதக சுவாமியென்று சொல்லப்பட்டு பிரகாசிக்கிறார்.

---

### சுதாகார பிரவாளாகார ஹேமவர்ணசுவாமி மகத்துவம்.

[மூன்று ஸ்தானங்கள்.]

மேலும், அவ்விடத்தில் பிருகுமஹாமுனிவர், ஒரு காரணத்தைப்பற்றிக் காஞ்சீபுரத்துக்கு விஜயம் செய்து காமகோஷ்ட பிலத்தி லிருக்கும் வாமனமூர்த்தியை ஆராதித்து அவரது அனுக்கிரகத்தினால் தத்துவத்தை யறிந்து அந்தப் பகவானிடம், "சுவாமீ! தாங்கள் சுவவேததீபவத்திலும், க்ஷீரசமுத்திரத்திலும், வைகுண்டத்திலும் நிவசிக்கா நின்ற திவ்ய ஸ்வரூபத்தை அடியேனுக்குக் காட்டவேண்டும்" என்றும் பிரார்த்திக்க, அப்போது அநேககோடி சூரியப்பிரகாசத்துடன் மூன்று தேஜஸ்ஸுகளோடு புறப்பட்டு அந்தக் காமகோஷ்ட பிலமத்தியில் தோன்ற, அப்போது அந்த முனிவர் அதைக் காணக்கூடாமல் "அடியேனுக்குக் கிரேத திரேத துவாபர யுகங்களில் தாங்கள் தரித்துக் கொண்ட திவ்விய ரூபங்களைக் காட்டவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அந்தச் சுவாமியானவர் பூர்வம் கிரேதாயுகத்தி லுண்டான சிவப்பு வர்ணத்துடனும், திரேதாயுகத்திலுண்டான வெள்ளை வர்ணத்துடனும், துவாபரயுகத்திலுண்டான மஞ்சள் வர்ணத்துடனும் பிரசன்னமானார். அப்போது பிருகுமுனிவர் பார்த்துப் பலவிதமாக ஸ்தோத்திரஞ் செய்து, "சுவாமீ! தாங்கள் இந்த மூன்று ரூபங்களால் பிரகாசித்துக்கொண்டு இந்தக் காஞ்சீபுரத்தில் நிவா

சஞ் செய்து சகல ஜனங்களுக்கும் தரிசனம் சாதிக்கவேண்டும்” என்று வேண்டுகையில் அந்தப் பகவானும் மகிழ்ந்து அவ்விடம் சுதாகார சுவாமியென்றும், பிரவாளாகார சுவாமியென்றும், ஹேமவர்ண சுவாமியென்றும் பிரகாசிக்கிறார்.

---

### சயனேச சுவாமி மகத்துவம்.

மேலும், அவ்விடத்தில் சதுர்முகன் செய்யும் யாகத்தைக் கெடுக்க நதிரூபமாகி வந்த சரஸ்வதியைத் தடுக்கும் பொருட்டு ஸ்ரீமந் நாராயணர் சேஷசயனராகிப் படுத்துக் கொண்டிருக்கிறார். ஆகையால், அந்தப் பகவானுக்குச் சயனேசுவர சுவாமியென்று சொல்லப்பட்டு, பாபநாச தீர்த்தத்திற்கு மேற்குத் திசையாக மூன்றுகாததூரத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கிறார்.

---

### நரசிம்ம சுவாமி மகத்துவம்.

பூர்வத்தில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் நரசிம்மாவதாரம் எடுத்து இரணியனைக் கொன்று பிறகு அவனுடைய மந்திரிகளையும் சேனைகளையும் துரத்திக்கொண்டு வந்து வழியில் ஆயாசத்தினால் அஸ்தகிரிக்கு வாயு திக்கில் சுமார் இரண்டு காததூரத்தி லிருக்கும் ஒரு பருவதத்தில் ஒரு நாழிகை காலம் நிவசித்துவந்தார். ஆகவே அந்தப் பருவதத்திற்குக் கடிகாசலமென்று சொல்லப்பட்டு அவ்விடம் நரசிம்மசுவாமி பிரகாசிக்கிறார்.

---

### வீரராகவசுவாமி மகத்துவம்.

பூர்வத்தில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி ஸ்ரீராமாவதாரம் எடுத்துத் தண்டகாரணியத்தில் அசுரர்களை வதைத்து அவ்விட மிருக்கும் சாலிஹோத்திர தீர்த்ததீரத்தில் சில காலம் சயனித்தார். ஆகவே அந்தப் பகவான் அஸ்தகிரிக்கு இரண்டுகாத தூரத்தில் ஈசானிய பாகத்தில் வீரராகவரென்று பிரகாசிக்கிறார்.

---

### தங்கபல்லிகளின் உற்பத்தி.

பூர்வகாலத்தில் உபமன்யு வென்னும் ஓர் பிராம்மணர் தம் குடும்ப சமேதராகத் தீர்த்தயாத்திரை செய்கையில், ஒருநாள் கோதாவரி தீர்த்தத்துக்கு வந்து அவ்விட மிருக்

குழ் பிராம்மணர் திருமாளிகைகளில், ஐந்து பிடி அரிசியை உபாதானமாகச் சம்பாதித்தும், அந்த அரிசியை உபாசனம் செய்யும்படித் தனது மனைவிக்கு ஆஞ்ஞாபித்தும், தான் கோதாவரியில் ஸ்நான மத்திய நிகம்பிரம்ம யாகங்களைச் செய்து பிறகு தேவாராதனையை முடித்து அந்தந்தத் தளிகையை மூன்று பாகங்களாக வகுத்தும், அதில் தன் குமாரனுக்கு ஒரு பாகமாகவும், தனக்கு ஒரு பாகமாகவும், தனது மனைவிக்கு ஒரு பாகமாகவும் வகுத்து, முதலில் வாலிபனுக்கு அன்ன மிட்டுத் தான் போஜனம் செய்யப் போகையில், ஒரு அதிதி வந்து தனக்குப் பசியாயிருப்பதால் அன்ன மிடும்படியாகக் கேட்க, அந்தப் பிராமணர் தனது பாகத்தை அந்த அதிதிக்குக் கொடுத்தார். அதை அந்த அதிதியானவர் உண்டு இன்னமும் வேண்டுமென்று கேட்க, அந்தப் பிர்ாமணர் தன் மனைவியின் பாகத்தையும் கொடுக்க, அதையும் அதிதியானவர் உண்டு திருப்தியடைந்தார். அப்போது அந்தப் பிராமணன் அதிதி உண்ட உச்சிட்டங்களை யெடுத்து ஒரு குழியில் போட, அந்த உச்சிட்டம் மேல் விழுந்த மாத்திரத்தில் அவ்விட மிருந்த ஆண் பெண் பல்லிகள் தங்கச் சிரசுகளுடன் பூர்வ ஜனன ஞானமுண்டாகி அந்தப் பிராமணரைப் பார்த்து, "சுவாமீ! தாங்கள் மஹாத்துமாவாக்கும், எங்களை இரக்ஷிக்கவேண்டும்" என்று கேட்க, அந்தப் பிராமணர் கேட்டு, "நீங்கள் யாவர்? உங்களுக்கு எப்படி இந்தப் பல்லி ஜன்மம் வந்தது?" என்று கேட்க, அப்போது ஆண் பல்லியானது பிராமணரைப் பார்த்து, "பூர்வத்தில் சகரசக்கரவர்த்தியின் குமாரனாகிய யகமஞ்சனாகவிருந்து அந்த ஜன்மத்தில் அநேக பாலர்களைக் கொன்று பிறகு சம்சாரத்துடன் வனத்திற்குப் போய் அவ்விடம் நாங்க ளிருவரும் அநேக பாவங்களைச் செய்து சூகரமார்ஜால சுவனாதிகளிடம் பிறந்து பிறகு இந்த பல்லி ஜனன மெடுத்தோம்" என்றும், "பிறகு தங்களது போஜன உச்சிஷ்டம் மேலே விழுந்ததனால் சிரங்கள் தங்க ஸ்வரூபம் ஆயிற்று" என்றும், "தாங்கள் மஹாத்துமாவாகையால் பின்னும் இரக்ஷிக்கவேண்டும்" என்றுஞ் சொல்ல, அதைக் கேட்டு, உபமன்னியு என்னும் பிராமணர் அந்தப் பல்லிகளைப் பார்த்து, "நீங்கள் ஸமஸ்த தீர்த்த யாத்திரைகளைச் செய்தால் இந்தப் பல்லி ஜன்மம் போகும்" என்று சொல்ல, அந்தப் பல்லிகளும் அப்படியே செய்தும் அந்த ஜன்மம் நீங்கா திருப்பதை அந்தப் பிராமணர் கண்டு

சிந்திக்கையில் வழியில் மார்க்கண்டேயர் காணப்பட்டார். அவரைப் பார்த்து நமஸ்கரித்தும் இந்த பல்லிகளின் விருத்தாந்தங்களை யறிவித்தும் "இதற்கு உபாயம் ஏது?" என்று கேட்க, அந்த மார்க்கண்டேயர் கேட்டு, பிராமணனைப் பார்த்து, "நீ சத்யவ்ரத க்ஷேத்திரத்திற்குப் போய் இந்தப் பல்லிகளை அநந்தசரசு தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வித்தும், அவைகளுக்கு வரதராஜ சுவாமியின் சேவையைச் செய்வித்தும் வைப்பாயாகில் அந்த வரதராஜ சுவாமியின் சேவையினால் பல்லி ஜனனம் நீங்கும்" என்று சொல்ல, அந்த உபமன்னியுவானவர் அந்த க்ஷேத்திரத்திற்கு வந்து அந்தப் பல்லிகளை அநந்தசரசு தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து வைத்து வரதராஜ சுவாமியின் தரிசனத்தையுஞ் செய்து வைத்தார். அப்போது அந்தப் பல்லிகள் திவ்விய தேகங்களைப் பெற்று, அந்தச் சுவாமியைத் துதிக்க, அவர் பிரசன்னராகி; "உங்களுக்கு வேண்டுவதென்ன?" என்று வினவ, அந்தப் பல்லிகள் எங்களைவிட்டு நீங்கிய இந்தப் பல்லி தேகங்களை அஸ்தகிரியில் தங்களது ஆலய பிரதக்ஷணத்தி லிருக்கும் சுவற்றில் பிரகாசிக்கச் செய்வித்து எவராகிலும் வரதராஜர் தரிசனையைச் செய்து பிரதக்ஷணஞ் செய்யும்போது எங்கள் தேகங்களைத் தொடுவார்களாகில், அவர்களுடைய சகல பாவங்களையும் நீக்கி இலக்ஷ்மி கடாக்ஷமு முண்டாக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, அந்த வரதராஜ சுவாமியானவர் அந்த வரத்தைக் கொடுத்து மறைந்தார். ஆகையால் அந்தப் பல்லிகள் இப்போதும் அவ்விடம் பிரகாசிக்கின்றன.

---

### அநந்த தீர்த்தம்.

பூர்வத்தில் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர் வராஹ அவதாரத்தில் ஹிரணியாக்ஷனைக் கொன்று அந்த க்ஷேத்திரத்திற்கு வந்து ஆயாசத்துடன் தேகத்தைக் குலுக்குகையில் உரோமங்களி லிருந்த ஜலம் கீழே விழுந்தோட, அப்போது அவ்விடம் அவர் வசித்து வந்தமையால் அந்த ஜலம் அநந்ததீர்த்தமென்று பிரகாசிக்கிறது.

---

### அக்கினி தீர்த்தம்.

மேலும், அவ்விடம் பூர்வத்தில் பிரமதேவன் யாகஞ் செய்ய அரனைத் துதிக்கையில், அவ்விடம் அக்கினி ஜனிக்க

அப்போது பிரம்மதேவன் அந்த அக்கினியில் அக்ஷதையை யும், ஜலத்தையும் போட்டு வசித்துவந்தமையால் அஸ்த கிரிக்கு ஆக்கினேய திக்கில் அக்கினிதீர்த்தம் பிரகாசிக் கிறது.

---

## பவுரந்திர தீர்த்தம்.

பூர்வத்தில் புரந்தரன் கௌதமருடைய சாபத்தை நிவர்த்திசெய்துகொள்ளும் பொருட்டுக் காஞ்சீபுரத்திற்கு வந்து ஒரு தீர்த்தத்தை யுண்டாக்கி, அவ்விடம் ஸ்நானஞ் செய்தும் தபசு செய்தும் தனது கோரிக்கையை நிறை வேற்றிக்கொண்டான். ஆகவே அது பவுரந்திர தீர்த்த மென்று அஸ்தகிரிக்கு வாயுதிக்கில் பிரகாசிக்கின்றது.

---

## குச தீர்த்தம்.

பூர்வம் சதுர்முகன் யாகஞ் செய்து அந்த வேதிகையி லிருக்கும் பூர்ணபாத்திர ஜலத்தை குசத்தோடு அவ்விடம் வைத்தார். ஆகையால், அஃது நிருதி திசையில் குசதீர்த்த மென்று பிரகாசிக்கின்றது.

---

## வாமன தீர்த்தம்.

மேலும், பூர்வத்தில் பலிச்சக்கரவர்த்தி செய்த யாகத் தைப் பார்க்கவந்த வாமனமூர்த்தியால் நிருமிக்கப்பட்டபடி யால் வாமனதீர்த்தமென்று பிரகாசிக்கின்றது.

---

## மங்கள தீர்த்தம்.

ஒரு காரணத்தைப்பற்றிப் பூர்வம் கங்காநதி பார்வதி தேவியாரால் சபிக்கப்பட்டு அமங்கலியாகி அந்தச் சாபத்தி னால் தனக்குச் சம்பவித்த அபரிசுத்தத்தைப் போக்கிக் கொள்ளும்படி சத்தியவரத க்ஷேத்திரத்திற்கு வந்து அவ் விடம் ஓர் தீர்த்தத்தை ஏற்படுத்தி ஸ்நானம் செய்தும் தபசு செய்தும் மங்களவதியானபடியால் அது மங்கள தீர்த்தமென்று பிரகாசிக்கிறது.

---

## சிவகங்கை தீர்த்தம்.

மேலும், அவ்விடத்தில் ஒரு காரணத்தைப்பற்றிப் பார் வதிதேவியாரால் சபிக்கப்பட்ட கங்கை சிவபெருமானுடைய

ஜடையில் பிரவாகித்தபடியால் சிவகங்கையென்று பிரகாசிக்கின்றது.

---

## சர்வ தீர்த்தம்.

பூர்வம் கங்காநதி பார்வதிதேவியாரால் சபிக்கப்பட்டு அந்த க்ஷேத்திரத்தில் தபசு செய்கையில், அந்தக் கங்கையைப் பரிசுத்தவதியாக்க வேண்டுமென்று சகல தீர்த்தங்களும் அந்த க்ஷேத்திரத்திற்கு வந்து ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் துதித்தபடியால் அது சர்வதீர்த்தமென்று பிரகாசிக்கிறது.

---

## பாண்டவ தீர்த்தம்.

பூர்வம் பாண்டவர்குலத்தில் உற்பவித்த ஜனமேஜய மகாராஜன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பிரத்தியக்ஷ தரிசனையைக் கோரி அவ்விடம் யாகஞ் செய்கையில், அந்த இராஜனால் ஓர் தீர்த்தம் நிருமிக்கப்பட்டதனால் சர்வதீர்த்தத்துக்கு தக்ஷண திசையில் பாண்டவ தீர்த்தம் ஒன்று பிரகாசிக்கின்றது.

---

## ஜ்வரஹர தீர்த்தம்.

முன்பு அவ்விடம் ஒரு யோகியினால் ஒரு காரணத்தைப்பற்றி நிருமிக்கப்பட்டு அவ்விடம் ஸ்நானம் செய்வதனால் சகல ஜ்வரரோகங்கள் நசித்துப் போகிறபடியால் ஜ்வரஹர தீர்த்தமென்று ஆக்னேய பாகத்தில் பிரகாசிக்கின்றது.

---

## கருட தீர்த்தம்.

அவ்விடம் பூர்வத்தில் கருடன் கஜகஸ்வரூபிகளாக இரண்டு பிராம்மணர்கள் சாப விமோசனத்தைக் கோரி அவ்விடம் ஒரு தீர்த்தத்தை நிரும்த்தபடியால் கருட தீர்த்தமென்று பிரகாசிக்கின்றது.

---

## பஞ்ச தீர்த்தம்.

பூர்வம் பிருகுமஹரிஷி சத்வ பிரதாபரென்னும் தேவரால் ஓர் தீர்த்தத்தை அறியும்படி கயிலாசத்துக்குப்

பேர்க்கையில் சிவபெருமான் பார்வதிதேவியாருடன் கூடி அஹோராத்திரம் உணவும் உரக்கமுமில்லாமல் திகம்பரியாகிப் புணருகையில், அப்போது பிருகுரிஷியைப் பார்த்துப் பார்வதிதேவியார் வெட்கிப்போய் மறைந்து நிற்க, சிவபெருமான் அதிக கோபங்கொண்டு அந்தப் பிரம்மருஷியை வுதைக்க வந்ததை அந்த முனிவர் கண்டு, "நீர் தாமஸ குணமுடையவராதலால் லிங்காகாரத்தை வஹித்துப் பூலோகத்தில் நரஜீவிகளால் பூஜிக்கப்படுவீர்" என்று சபித்தும், பிறகு பிரம்மலோகத்துக்குப் போய் அவ்விடத்தி லிருக்கும் சபாமத்தியில் தன் குசலத்தைக் கேட்ட இராஜசகுண பிரதானராகிய பிரம்மாவைப் பார்த்து, "நீர் பூலோகத்தில் பூஜையற்றவராகக்கடவீர்" என்று சபித்தும், பிறகு வைகுண்டத்திற்குப் போய் அவ்விடம் சேஷசயனத்தில் படுத்துக்கொண்டிருந்த ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் பார்த்து, தனக்கு எதிரில் வந்து மரியாதை செய்யவில்லையென்ற கோபத்தினல் அந்தத் தேவருடைய வச்சஸ்தலத்தில் பாதத்தினல் உதைக்கையில், அப்போது ஸ்ரீ தேவியார் கோபித்து "நீர் பிரம்ம தேஜோபலங்களை இழந்துவிடுவீர்" என்று சபித்தார். அப்போது அந்த ஸ்ரீமந் நாராயணமூர்த்தி எழுந்து அந்த முனிவருடைய பாதங்களைக் கரங்களால் பிடித்தும், திவ்விய ஜலத்தினல் சுத்தி செய்தும், அநேக உபசாரங்களைச் செய்தும், "உம்மைக் காலாந்தரத்தில் வாமனரூபியாக அனுக்கிரகிப்போம்" என்று சொல்லியும், இலக்ஷ்மிதேவியைப் பார்த்து, "நீர் எனது ஆக்கினையில்லாமல் எனது பக்தனுகிய பிராமணனுக்குச் சாபமிட்டபடியால் நீ பூலோகத்தில் அவருக்குப் புத்திரியாக அவதரிக்கக்கடவாய்" என்றும் நியமித்தார். இக்காரணத்தைப்பற்றி நாரதவாக்கியத்தினல் சத்தியவரத க்ஷேத்திரத்திற்கு வந்து அவ்விடம் பூர்வத்தில் விஷ்ணு ஸ்வரூபியான ஆதிசேஷனல் பஞ்சபாதக நாசமாகும்படி ஓர் தீர்த்தத்தை நிருமிக்க, அந்தத் தீர்த்தக்கரையில் பலிச்சக்கரவர்த்தியால் யாகஞ் செய்வித்தும் தனது நிஜ திவ்விய ஸ்வரூப தரிசனம் கொடுக்கும் வாமனமூர்த்தியைப் பார்த்தும், அவரது அனுக்கிரகத்தினல் ஸ்ரீ மஹாலக்ஷ்மி தனது புத்திரியாகவேண்டுமென்று காமேஷ்டஞ் செய்தும், அந்த அக்கினிவேதிகையில் கன்னியாரூபமாக அவதரித்த இலக்ஷ்மிதேவியைப் பார்த்து ஆமோதிக்க ஆதிசேஷ, பலி, பிருகு, வாமன, இலக்ஷ்மிதேவியாராகிய ஐவர் அவ்விடம் வசித்து வந்தமையால்

அவர்கள் ஐவர் பெயர்களால் பஞ்ச மஹா பாதகங்கள் போகும் காரணத்தைப்பற்றிப் பஞ்ச தீர்த்தமென்று பிரசித்தியாகிப் பிரகாசிக்கின்றது.

---

## ஹேமாம்போஜ தீர்த்தம்.

பூர்வம் ஒரு காரணத்தினால் அவ்விடம் ஸ்ரீ மகாலட்சுமி பிருகுமஹாமுனிக்குக் குமாரத்தியாக அவதரித்து யவ்வனதசையை யடைந்து, தந்தையின் ஆக்கினைக்குள் காமகோஷ்டபிலத்துக் கருகிலிருக்கும் வாமனமூர்த்தி தன்னை விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்று விரும்பிப் பஞ்சஸரஸில் ஸ்நானஞ் செய்து தபசு செய்துகொண்டிருக்கையில், அந்த வாமனமூர்த்தியானவர் பிரசன்னமாகி இலட்சுமி தேவியைப் பார்த்து, "ஓ பார்க்கவீ! நான் அஸ்தகிரியில் வரதராஜ நாமதேயத்தோடு நிவிசிக்கிறபடியால் நீ அவ்விடத்திற்குப் போய் அந்தப் பகவானை பூஜை செய்து விவாஹஞ் செய்துகொண்டு சுகத்தை யனுபவிப்பாய்" என்று வரமளிக்க, அந்த இலட்சுமிதேவியார் பிருகுரிஷியாருடன் அந்த அஸ்தகிரிக்குப் போய் அவ்விடம் ஒரு புண்ணிய ஸரசை நியமித்தும், அந்த வரதராஜ சுவாமியை அருச்சித்தும், அவரது கிருபா கடாட்சத்தைப் பெற்றும், அந்த சுவாமியை விவாகம் செய்துகொண்டார். ஆகவே, அந்தத் தீர்த்தம் இலக்ஷ்மி தேவியாரால் நிருமிக்கப்பட்டதனால் இலக்ஷ்மி தீர்த்தமென்றும், அவ்விடம் தங்க தாமரைப் புஷ்பங்கள் இருந்தமையால் ஹேமாம் போஜமென்றும் திவ்ய நாமங்களால் பிரகாசிக்கிறது.

---

## குண்ட தீர்த்தம்.

மேலும், அவ்விடத்தில் வாமனமூர்த்தி பிருகுமஹா முனிவருக்கு யாகத்தை நிறைவேற்றிக் கொடுத்து அந்த யாகக் குண்டத்தில் மகா இலக்ஷ்மி தேவி ஜனித்த பிறகு யாகத்தை முடித்து இலக்ஷ்மி தேவிக்கு ஜனனஸ்தானமாகிய அந்த அக்கினி குண்டத்தைப் புண்ணிய தீர்த்தமாக்கும் பொருட்டு வாமனமூர்த்தியானவர், தன் கையிலிருந்த கமண்டல ஜலத்தை அதில்விட்டு "அந்தப் பாண்ட தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து என்னைத் தரிசனம் செய்யும் மானவ ஜாதியாருக்கு வேண்டிய மனோபீஷ்டங்களைக் கொடுப்

பேரம்" என்று வாக்களித்தபடியால் காமகோஷ்ட பிலத்திற்குச் சமீபத்தில் குண்டதீர்த்தம் பிரகாசிக்கின்றது.

---

### சந்திர தீர்த்தம்.

பூர்வம் ஒரு காரணத்தைப்பற்றிக் காமாக்ஷிதேவி வாமன மூர்த்தியாருடைய ஆஞ்ஞையினால் பிருதிவி லிங்கத்தைப் பூஜிக்கும்போது அந்த அம்மையின் மனதைச் சோதிக்கும்படி ஈசுவரன்செய்யும் விக்கினங்களுக்குப் பயந்து அந்த வாமன சுவாமியைத் துதிக்க அந்தச் சுவாமியானவர் சந்திரரூபமாகி அவரைப் பாதுகாத்து விக்கினங்களைப் போக்கியும், அவ்விடம் ஒரு தீர்த்தத்தை நிருமித்தும், அவ்விடம் ஸ்நானம் செய்யப்பட்டவர்களுக்குச் சகல பாவங்களும் நீங்கும்படி வரங்கொடுத்தார். அந்தத் தீர்த்தம் காமகோஷ்ட பிலத்திற்கு வாயுதிக்கில் சந்திர தீர்த்தமென்று பிரகாசிக்கின்றது.

---

### சித்தி தீர்த்தம்.

பூர்வம் தேவேந்திரன் முதலான ஸமஸ்த தேவர்களும் விருத்திராசுரனைக் கொல்லுவதற்காக ஆயுதமில்லாமல் ததீசியின் முதுகெலும்பைக் கேட்கையில் அந்தத் ததிசி முனிவர் கொடுக்காமையால் வச்சிராயுதத்தை யடைவதற்கு அந்த க்ஷேத்திரத்திற்கு வந்து பாண்டவ தீர்த்தத்திற்கு ஈசானிய திக்கில் ஒரு தீர்த்தத்தை ஸ்தாபித்து அதில் ஸ்நானஞ் செய்தும் தபசு செய்தும் ஆயுதத்தையும் இஷ்டசித்தியையும் பெற்றதனால் சித்திதீர்த்தமென்று பிரகாசிக்கிறது.

---

### காயாரோஹண தீர்த்தம்.

பூர்வம் திரிசங்கு மஹாராஜன் குருபுத்திரர்களுடைய சாபத்தினால் சண்டாலத்தை யடைந்து துக்கிக்கையில் விசுவாமித்திரர் அந்த அரசனைச் சுவர்க்கலோகத்திற்கு அனுப்புவதாகப் பிரதிக்கினை செய்து அந்தத் திரிசங்குவினால் யாகத்தைச் செய்விக்க, அந்த யாகத்துக்குத் தேவர்கள் யாவரும் வராமையால், அந்த விசுவாமித்திரர் தன் தபோபலத்தினால் அந்த அரசனைச் சுவர்க்கலோகத்துக்கு அனுப்பினார். அப்போது இந்திரன் பார்த்து, சண்டாளத்

தன்மையடைந்த அந்த அரசனைப் பூமியில் தள்ள, அப்போது அந்த அரசன் யாகசாலைக் கருகிலிருக்கும் அக்கினி குண்டத்தில் விழ, விசுவாமித்திரர் அந்த அக்கினி குண்டத்திலிருந்த தீயை ஜலமாக்கி, அந்த அரசனைப் பிழைக்க வைத்துத் தன் தபோபலத்தினால் அநேக இராக்ஷதர்களைப் படைத்து இந்திரனுடன் சண்டைக்கு அனுப்ப, அப்போது இந்திராதி சமஸ்த தேவர்களும் விசுவாமித்திரருக்குச் சமீபத்தில் வந்து அந்தத் திரிசங்கு மஹாராஜனைச் சொர்க்கத்துக்கும் பூமிக்கும் மத்தியில் விட்டு அவனிருக்கும் இடத்தை ஓர் சொர்க்கமாகச் செய்து, "இன்றுமுதல் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யப்பட்டவர்கள் பொந்தியோடு சொர்க்கத்துக்குப் போகக்கடவர்" என்று வரமளித்துச் சொர்க்கத்துக்குப் போனபடியால் அது காயாரோஹணி தீர்த்தமெனப் பிரகாசிக்கிறது.

---

## கஜேந்திர தீர்த்தம்.

பூர்வம் அவ்விடம் கஜேந்திரனால் ஒரு காரணத்தைப் பற்றி நிருமிக்கப்பட்டதனால் காயாரோஹண தீர்த்தத்தின் கிழக்குத் திசையில் கஜேந்திர தீர்த்தம் பிரகாசிக்கின்றது.

---

## ஜடாயு தீர்த்தம்.

பூர்வம் இராவணனுடன் சண்டை செய்து பரமபதமடைந்த ஜடாயுவுக்குத் திரிலோகத்தைக் கொடுக்கும்படி ஸ்ரீராமமூர்த்தி அஸ்தகிரிக்கு மேற்குத் திக்கில் ஐந்து மைல் தூரத்தில் நிருமித்தபடியால் அது ஜடாயு தீர்த்தமென்று பிரகாசிக்கின்றது.

---

## ஸரஸ்வதி தீர்த்தம்.

பூர்வம் அவ்விடம் பிரம்மதேவன் செய்யும் யாகத்தைக் கெடுக்க ஸரஸ்வதி நதிரூபமாக வருகையில் அதைத் தடுக்க ஸ்ரீமந் நாராயணமூர்த்தி குறுக்கே சகளித்தபடியால் அது பாபநாச தீர்த்தத்தின் மேற்குத் திசையில் மூன்றுகாத தூரத்தில் ஸரஸ்வதி தீர்த்தமென்று பிரகாசிக்கின்றது.

---

## ஹிருதய தாபநாச தீர்த்தம்.

அஸ்தகிரிக்கு ஈசானிய திக்கில் இருகாத தூரத்தில் சாலிஹோத்திர மஹாரிஷி ஆச்சிரமத்திற்கு விச்சாரணியத்தி லிருக்கும் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வோருக்கு ஹிருதய தாபங்களைப் போக்குவதால் அது ஹிருதய தாபநாச தீர்த்தமென்று பிரகாசிக்கின்றது.

## பிரம்ம தீர்த்தம், வசிஷ்ட தீர்த்தம்.

பூர்வம் ஒரு காரணத்தினால் அஸ்தகிரிக்கு வாயு திக்கில் இரண்டரை காததூரத்தில் கடிகாசல பருவதத்திற்கு அடியில் பிரமதேவனால் நிருமிக்கப்பட்ட தீர்த்தமொன்றும், வசிஷ்டமகாமுனிவரால் நிருமிக்கப்பட்ட தீர்த்தமொன்றும் பிரகாசிக்கின்றன.

## சப்த மஹா நதிகள்.

மேலும், அவ்விடம் அசுவ மஞ்சுள கம்ப ஹரித்திரவிராஜ க்ஷீரா வேகவதி என்னும் ஏழு மகாநதிகள் பிரகாசிக்கின்றன.

## காஞ்சி க்ஷேத்திரத்தின் பெயர்.

சத்திய சப்த வாச்யனாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியால் நிவசிக்கப்பட்டதாகையால் அந்தப் பிரதேசத்தை சத்தியவரத க்ஷேத்திரமென்றும் அநேக புண்ணிய நதி தடாக பருவதாரம்பங்களும், சகல தேவர்களும், அநேக ரூபங்களாகும் விஷ்ணு மூர்த்திகளும் பிரகாசிப்பதால் பாஸ்கர க்ஷேத்திர மென்றும், வராஹ சுவாமியால் நிவசிக்கப்படுவதால் வராஹ க்ஷேத்திரமென்றும், பூர்வம் ஸ்ரீமஹாவிஷ்ணுவானவர் நரசிம்மாவதாரத்தில் ஹிரணியனைக் கொன்று அவனுடைய மந்திரிகளையும் கொல்ல வருகையில் அந்த மந்திரிகள் சத்தியவரத க்ஷேத்திரத்தில் சத்தியநாத சுவாமியைப் பூஜைசெய்தும் சமாப்தியை யடையாமையால், நரசிம்ம சுவாமிக்குப் பயந்து அஸ்தகிரிக்குப் பூர்வம் வராஹ சுவாமியாற் செய்யப்பட்ட பிலத்தில் பிரவேசித்துப் பாதாளத்திற்குப் போகையில் அந்த ராக்ஷதரைப் பின் தொடர்ந்து வந்து துரத்தும்போது அந்தப் பிலத்துக்கே வந்து,

"அவர்கள் மறுபடியும் வந்தால் கொல்லுவோம்" என்று இப்போதும் அவ்விடம் வாசம் செய்வதால் நரசிம்ம க்ஷேத்திரமென்றும், விசுவ கர்ம நிருமிதமாகி ககார வாச்சியனுகிய பிரம்மாவினுலும், அந்த வருணவாச்சியமான கைவல்யத்திலிருக்கும் இஞ்சிதமாய், பூஜ்யமாகவிருப்பதால் காஞ்சி நகரமென்றும், அநேக யானைகளால் நிவசிக்கப்பட்டு வந்த காரணத்தைப்பற்றி ஒருகாலத்தில் கஜேந்திரன் அவ்விடம் நிவசித்து அவ்விடத்திலிருந்த சுவாமியைப் பூஜை செய்ய அக்காரணத்தினுல் அஸ்தகிரியென்றும் சொல்லப்படுகின்றது.

முன் சொன்ன திவ்விய தீர்த்த பருவகாலங்களில் ஸ்நானஞ் செய்து தேவ பிதுர்தேவர்களுக்கு சந்திரபனஞ் செய்து ஸ்ரீ வரதராஜஸ்வாமி தரிசனையைச் செய்பவர்களுக்கு மனேபீஷ்ட பலங்கள் சித்திப்பதால் இப்படிப்பட்ட மஹா க்ஷேத்திரத்தில் வரதராஜ சுவாமி கிருதயுகத்தில் பிரம்மதேவனுலும், திரேதாயுகத்தில் கஜேந்திரனுலும், துவாபாரயுகத்தில் பிரஹஸ்பதியாலும் பிரம்மோற்சவங்களால் பூஜிக்கப்பட்டும், பிரகிருத கலியுகத்தில் ஆதிசேஷனுலும் அநேக புண்ணிய இராஜாக்களினுலும் பூஜிக்கப்பட்டும், அநேக மானவஜாதியாருக்குச் சர்வாபீஷ்டங்களைக் கொடுத்துக்கொண்டும் வருகிருர். இதன் விவரத்தைப் பிரம்மாண்ட புராணத்தில் அபரிஷமஹாராஜனுக்கு நாரதமஹாரிஷி இருபத்தேழுமஹா அத்தியாயங்களில் சொல்லியிருக்கின்றுர். இப்படிப்பட்ட புண்ணிய க்ஷேத்திரத்தில் ஸ்ரீ வரதராஜ சுவாமிக்குப் பிரம்மோற்சவத்தில் நடக்கும் விசேஷமான கருட உற்சவத்திற்கு அநேக மைல்கள் தூரங்களிலிருந்து ஜனங்கள் வருகிருர்கள்.

---

## காஞ்சீபுரத்தின் மத்யகாலஸ்திதி.

இந்தக் காஞ்சீபுரம் ஒரு காலத்தில் தொண்டைமான் சக்கரவர்த்தியாகிய சோழனுக்குப் பிரதான பட்டணமாயிருந்ததென்று முன் சொன்னேம். ஆயினும் சில சரித்திர சாசனங்களை ஆராய்ந்ததில் இது ஏழாம் நூற்றுண்டில் புத்த மதஸ்தர்களுக்கும், 8-ம் நூற்றுண்டில் ஜைனமதஸ்தர்களுக்கும் ஒரு விசேஷ ஸ்தலமாக இருந்ததாகத் தெரியவந்தாலும், கி. பி. 489 வரு சாளுக்கிய ராஜவம்ஸத்தைச் சார்ந்த புலகேசரி ராஜன் அந்தச் சோழனை ஓட்டிவிட்டுப் பட்டணத்தைச் சுவாதீனம் செய்துகொண்டதாகவும், பிறகு

இது பல்லவ ராஜாக்கள் வசமாகிப் பிரதான பட்டணமாக இருந்ததாகவும், பிறகு 14-ம் நூற்றாண்டில் தொண்டைமான் ராஜாக்கள் வசமாகியதாகவும், அனந்தரம் 1644ஹு விஜயநகர சமஸ்தானம் மங்கவடைய கோல்கொண்ட மகம்மதியர் வசமாகியதாகவும் தெரியவருகிறது. 1751ஹு இதை பிரான்ஸுக்காரரிடமிருந்து கிளைவ் என்றவர் பெற்றதாகவும், இந்நகரை அதே வருஷம் ராஜாசாஹிபு பிடித்துக்கொள்ள, அடுத்த வருஷம் கிளைவ் என்பவர் மறுபடியும் பிடித்துக்கொண்டதாகவும் தெரியவருகிறதன்றியில், 1757ஹு பிரான்ஸுக்காரர் இதன் கோயிலைப் பிடித்தும், நகரத்திற்கே நெருப்பு வைத்துச் சுட்டும் வருத்த, 1759ஹுமறுபடியும் ஆங்கிலேயர் இதைமீட்டுக்கொண்டார்கள். பிறகு 1780ஹுஹைதர்ஆலிபடையெடுத்துவந்து தாக்கிக் கொள்ளையடிக்க யோசிக்கையில் ஹிந்துக்கள் பயந்து வரதராஜர், ஏகாம்பரர், காமாக்ஷியம்மன் முதலான உற்சவ விக்கிரகங்களுக்குப் பிணங்களைப்போல் வேஷம்போட்டு எடுத்துக் கொண்டுபோய்த் திரிசிரபுரத்திற் கடுத்த உடையார் பாளையத்தின் ஓர் காட்டில் மறைத்து வைத்தார்கள். அப்போது தங்க விக்கிரகமாகிய காமாக்ஷியம்மனைத் தஞ்சாவூர் ராஜா கொண்டுபோய்விட்டார். பிறகு (1799ஹு ஸ்ரீரங்கப்பட்டணம் பிடிபட்ட பிறகு) ஸ்ரீ மன்றோதுரை அவர்களுடைய உதவியைக்கொண்டு செல்லம்மா பட்டரென்னும் பிராமணரால் ஏகாம்பரர் முதலான சைவ விக்கிரகங்கள் மறுபடியும்இங்குக்கொண்டுவந்துவைக்கப்பட்டன. மேலும் சாலிவாகன சகாப்தம் (கி. பி. 1799) தாதுஹு பங்குனிமீ ௩௦உ சனிவாரம் அத்தான் ஜீயருடைய சீடராகிய லவிதேந்திர மல்லாஜி என்பவரால் உடையார் பாளையத்திலிருந்த வரதர் உற்சவ விக்கிரகம் காஞ்சி க்ஷேத்திரத்திற்குக் கொண்டுவரப்பட்டது. பிறகு ஆங்கிலேய ராஜ்ஜியம் இங்கு ஊர்ஜ்ஜிதமாகக் குடிகளுக்குச் சுதந்தர சுகவாழ்வு ஸ்திரமாக்கப்பட்டது.

---

## காஞ்சீபுரத்தின் தற்காலஸ்திதி.

இந்தக் காஞ்சீபுரமானது 1830ஹு வரையில் இந்த ஜில்லாவில் கஸ்பாவாகவிருந்த கருங்குழிக்குப் பதிலாக இதுவே கலெக்டர் வசிக்கும் கஸ்பாவாக விருந்ததன்றியில் கலெக்டருடைய கஜானாவும் ரிகார்டுகளும் 30ஹு காலம்

வரையில் இவ்விடமே யிருந்தன. இப்போது இந்தக் காஞ்சிபுரமானது செங்கற்பட்டு ஜில்லாவைச் சார்ந்த ஒரு தாலுக்காவும் அத்தாலுக்காவின் தலை நகராகி, சுமார் 44 சதுரமைல் விஸ்தீரண முள்ளது. நதியோரங்களில் தென்னை, பனை, புளியமரங்கள் விசேஷமாக வளர்ந்து வருகின்றன. நஞ்சை, புஞ்சை தானியங்கள் சாதாரணமாக வளருகிறதும் அன்றியில் சிலவிடங்களில் அவுரியும் பயிராகின்றது. இந்தத் தாலுக்காவில் ரயத்துவாரி விஷயமாக 352 கிராமங்களும், 58 ஜமீன்தார் கிராமங்களும், 32 மானிய கிராமங்களுமாக 461 கிராமங்கள் இருக்கின்றன. இத்தாலுக்காவில் 1871௵ 1,68,036 ஜனங்கள் இருந்தார்கள். அப்போது காஞ்சீபுரத்தில் மாத்திரம் 37,326 ஜனங்கள் இருந்தார்கள். அவர்களில் 1,60,058 ஹிந்துக்களும், 3498 மஹம்மதியர்களும், 44,462 கிறிஸ்தவர்களும் இருந்தார்கள். பாலாறு முதலான ஆற்றுப் பாய்ச்சல்களினாலும், கம்பு கால், காவிரிபாக்கம் முதலான ஏரிகளினாலும், பயிர்களுக்கு வேண்டுமான ஜலம் பாய்வதால் வருஷாந்திரத்தில் சுமார் 44,000ரூபாய்ரெவினியூ வசூலாகிறது. இவ்விடம் 1867௵ முனிசிபல் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. பிறகு வீதிகளின் இருபக்கங்களிலும் தென்னை முதலிய மரங்கள் பயிரிடப்பட்டுச் சுமார் 5-6 மைல்கள் நீள முள்ளவைகளாகவும் இருக்கின்றன. 1875-76௵ இந்த முனிசிபாலிடிக்கு 22,436 ரூபாய் வருமானமும், 19,151 ரூபாய் செலவுமாக விருந்து இப்போது அதிக வருமானமும் செலவுமாகி வருகிறது. இந்த முனிசிபாலிடியானது முதலில் ஸ்தாபிக்கப்பட்ட போது 2388 ஏக்ரா விஸ்தீரண முள்ளதாயும், வடகிழக்கு முதல் தென்மேற்காக 5 மைல் நீளமும் சற்றேறக்குறைய மூன்றுமைல் அகலமு முள்ளதாக இருந்திருந்தாலும் இப்போது, ஜனவிர்த்தியினால் அதிக விஸ்தீரண முள்ளதாகி ஜனானுகூலமாகத் தண்ணீர்க் குழாய்கள், தீபஸ்தம்பங்கள், பாடசாலைகள், வைத்திய சாலைகள், சத்திரங்கள் முதலான வசதிகள் ஸ்தாபிக்கப் பெற்றிருக்கின்றன. இங்கு அநேக பாடசாலைகள் இருக்கினும் பச்சையப்ப முதலியார் அவர்கள் தர்மத்தில் ஒரு பாடசாலையை 1846௵ ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதும் அன்றியில் பெங்களூர் தர்மரத்னாகரம் ராய் பஹதூர் நாராயணசுவாமி முதலியார் அவர்களால் ஒரு தர்ம பெண் பாடசாலையும் ஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. இங்கு யாத்திரைக்காரர்களுக்கு அநேக தர்ம சத்திரங்கள் இருக்

கிலும் அவைகளிற் சிறந்தவை பச்சையப்ப முதலியார், டி. யி. வெங்கய்யர், கொல்லா கன்னைய செட்டியார், கெங்காபாயி லாலாபாயி முதலானவர்களுடைய சத்திரங்களேயாம். இதில் சப் கலெக்டர், தாசில்தார், முனிசிப் முதலானவர்களுடைய கோர்ட்டுக் கச்சேரிகள் இருக்கின்றன. சென்ற கானிஷ்வார் கணக்கின்படி 53,864 ஜனங்கள் வசிக்கிறார்கள்.

ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள், ஸ்ரீ ராமானுஜ சுவாமிகள், ஸ்ரீ வேதாந்த தேசிகர் முதலான மஹான்கள் இதை ஸ்ரீ லக்ஷ்மிதேவி, ஸ்ரீ சரஸ்வதி தேவி முதலானவர்களுக்கு ஜெனனதேசமென்றும், மோக்ஷம் தரும் சத்தபுரிகளில் ஒன்றென்றும், தக்ஷண காசியென்றும் கொண்டாடி வந்ததும் அன்றியில், காளிதாசகவியும் இதை "நகரேஷு காஞ்சி" என்று சிறப்பித்துப் பாடியிருக்கிறார். வலங்கை இடங்கை கக்ஷிகள் உற்பத்திக்கு இதுவே பிறப்பிடமென்று தெரிய வருகிறது. அதாவது, கரிகால சோழனுடைய காலத்தில் இந்த வலங்கை இடங்கை கக்ஷிகள் உண்டாகிச் சலவநாயகரென்னும் பிராமணர் வலங்கையார் பக்கம் தலைவரா யிருந்தார். வலங்கையார்க்கு 98 ஜாதிகளும் இடங்கையார்க்குச் சில ஜாதிகளும் சேர்ந்து அடிக்கடி சண்டை சச்சரவு செய்துகொண்டு இருந்தார்கள். இது சென்னை தென் இந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 56 மைல் தூரத்திலும், அரக்கோணம் ஜங்ஷனிலிருந்து 18¾ மைல் தூரத்திலும் இருக்கிறது.

---

## தேவஸ்தானங்களின் தற்கால ஸ்திதி.

இந்தக் காஞ்சிபுரத்தில் 1008 சிவாலயங்களும், 108 திருப்பதிகளும் இருப்பதாகப் புராணங்களில் எழுதப்பட்டிருந்தாலும், இப்போது பூஜாயோக்கியமாயும், யாத்திரை செய்யும் பரஸ்தலத்தார் முதலானவர்களால் தரிசிக்கத்தக்க விசேஷமானதாயுமுள்ள சில ஸ்தலங்களினுடைய விவரங்களை இதனடியில் எழுதுகிறோம்.

இந்தக் காஞ்சீபுரமானது சின்னகாஞ்சீபுரமென்றும், பெரிய காஞ்சீபுரமென்றும் இப்போது பிரிக்கப்பட்டிருக்கின்றது.

சின்னகாஞ்சிபுரத்திலிருக்கும் ஸ்ரீவிஷ்ணுகாஞ்சி வரத ராஜசுவாமி சன்னதி (இதற்குத் தேவராஜர் சன்னதி யென்றும் சொல்லுவதுண்டு.)

கி. பி. பதினோராம் நூற்றாண்டில் காஞ்சி நகரத்தில் இராஜனாக விருந்த குண்டகோபாலராயர் தன் மனைவி மக்களின்றி மலிடியாக விருந்தமையால், திருமாலின் அருளால் மகப்பேறுண்டாகில் பெரிய கோயிலைக் கட்டிவைப்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்ட பிரகாரம், புத்திர சந்தானமுண்டாக அருகிலிருந்த சிவாலயத்தின் சில பாகங்களை இடித்துக் கொண்டுவந்து இந்தக் கோயிலைக் கட்டியதாக மிஸ்டர் குரோல்துரை அபிப்பிராயப்படுகிறார். இது அஸ்தகிரி மலையென்னும் உன்னத மேட்டின்மேல் கட்டப்பட்ட திவ்வியமான ஐந்து பிரகாரங்களையுடைய கோயில். இதற்குள் ஐந்து தீர்த்தங்க ளிருப்பதன்றியில் மலையின்மேல் தேவராஜ சுவாமி, சூடிக்கொடுத்த நாச்சியார், மலையாள நாச்சியார், சேனைமுதலியார், விநாயகர், அளகசிங்கர், கருடாழ்வார், திருவனந்தாழ்வான், கரிய மாணிக்கப்பெருமாள், மடப்பள்ளி நாச்சியார், உக்கிராண நாச்சியார், பெருந்தேவியார், குஞ்சுமணி, கிருஷ்ணர், இராமர், வராகசுவாமி, சக்கரத்தாழ்வான், வேதாந்தாசாரியர், பொய்கையாழ்வார், திருப்பாணியார், தொண்டரடியார், பெரியாழ்வார், நம்மாழ்வார், நாதமுனிகள், மதுரகவி, திருமங்கைமன்னன், மணவாளமாமுனிகள், திருமழிசையாழ்வார், ஆளவந்தார், எம்பெருமானார், குலசேகரர் முதலானவர்களுடைய சன்னதிகளும்; கோபுரவாசலுக்கு வெளியில் திருவடி கோவிலும்; தென்னண்டை மாடவீதியில் சஞ்சீவிராயன், கூரத்தாழ்வான், திருக்கச்சிநம்பி, சந்நிதிகளும்; வடவண்டை மாடவீதியில் கிருஷ்ணர் சன்னிதியும், தேரடியில் சஞ்சீவிராயன் சன்னிதியும், கெங்கைகொண்டான் மண்டபத்தில் சஞ்சீவிராயன் சன்னிதியும், இதைச் சார்ந்த பின்னும் சில சன்னிதிகளு மிருக்கின்றன.

---

## இந்தக் கோவிலின் வரவு செலவு விவரம்.

வருஷாந்திர சர்க்கார் வருமானம் ரூபாய் 10237-1-6-ம், சுரோத்திரிய வருமானம் ரூ. 4019-15-1-ம், வெங்கடகிரி இராஜா தோட்டத்தின் வருமானம் 200 ரூபாயும், ஆக

144457-0-7 வசூலாகி, நித்தியகோஷ்டியில் 50 ஜனங்களுக்கும், பஞ்சபருவத்தில் 70 ஜனங்களுக்கும், மர்ட உற்சவத்தில் 60 ஜனங்களுக்கும், பிரம்மோற்சவத்தில் 500 ஜனங்களுக்கும், தளிகை முதலானவைகள் கொடுத்து வருகிறதாக ஒரு ஜாப்தாவினுல் நமக்குத் தெரியவந்தாலும், மிஸ்டர் குரோல் துரையின் மானியூல் புத்தகத்தினுல் இந்தத் தேவஸ்தானத்துக்கு ஏழு சுரோத்திரிய கிராமங்களில் ரூ 3000-ம், கவர்ன்மெண்டாரால் எடுத்துக்கொண்ட நிலங்களுக்காக ரூ 9961-ம், உபயவிஷயமாக ரூ 2209-ம், ஆக ரூ 15170 வருமானமென்று தெரியவருகிறது.

உபயச் செலவு.

| | ரூ. அ. பை. |
|---|---|
| வெங்கடகிரிராஜா-கருட உற்சவத்திற்கு ... | 800—0—0 |
| ஆரணி ஜாகிர்தார்-பவுர்ணமிக்கு... ... | 87—8—0 |
| இராஜகுளம் தெப்பல் உற்சவத்திற்கு ... | 175—0—0 |
| இராஜகோபாலாசாரியர்-சித்திராபவுர்ணமிக்குத் தண்ணீர் ... ... ... | 140—0—0 |
| நவாஜிபேட்டை உற்சவத்திற்கு... ... | 52—8—0 |
| சுதேசி சீனிதாதாசாரியர், கிருஷ்ணசுவாமி தாதாசாரியர்-தோட்ட உற்சவத்திற்கு | 70—0—0 |
| பருத்திப்பேட்டை கனகம்மாள்-வசந்த உற்சவத்திற்கு ... ... ... | 70—0—0 |
| முத்தியாலுப்பேட்டை கவரைகள்-கார்த்திகைக்கு ... ... ... ... | 17—8—0 |
| பரணிசெட்டிகள்-கார்த்திகைக்கு ... | 3—8—0 |
| இராஜம்பேட்டைச் செட்டிகள், மளிகைக் கடைக்காரர்கள்-கஜேந்திரமோக்ஷ உற்சவத்திற்காக ... ... ... | 35—0—0 |
| வெள்ளாளர் செட்டிகளால்-தீபாவளி உற்சவம் | 63—0—0 |
| திருவடிகோயில் கடைகளினுல் ... ... | 4—0—0 |
| பச்சையப்பமுதலியார் ததியாராதனத்திற்கு | 360—0—0 |
| செட்டி புண்ணியம் இராஜகோபாலாசாரியர்-ததியாராதனத்திற்கு ... ... | 150—0—0 |
| ஆ மொத்தம் ரூ | 2028—0—0 |

உபயமாக வருவதன்றியில் திருக்கழுக்குன்றம் மகாதேவசெட்டி ஆனைவாகனத்திற்கு ரூ. 600-ம், நான்கு தெரு

வின் ரெட்டிகள் கூடி ரூ. 200-ம், 5-வது மோஹினி வேஷத்திற்கு 18 திருப்பதிகளின் வரும்படி ரூ.900-ம் வருமானமாகிற தன்றியில், இப்போது பின்னும் அநேக விதங்களில் வருமானங்களுண்டு. இந்தச் சன்னிதிக்கு விலையற்ற அநேக நகைக ளிருக்கின்றன. அவைகளுக்கு 1,06,935 ரூபா விலை மதிப்பிட்டிருக்கிறார்கள். லார்டு கிளைவு என்னும் (Lord Clive) இங்கிலீஷ் பிரபு செய்துவைத்த மகாகண்டியின் விலை ரூபாய் 3682 கலெக்டர் மிஸ்டர் பிலெஸ் (Mr. Place) என்பவர் 30,32 ரூபா விலையுள்ள நகைகளைச் செய்து வைத்தார். கலெக்டர் மிஸ்டர் காரோ (Mr. Garrow) என்பவர் 371 ரூபாய் விலையில் ஒரு சந்திரஹாரத்தைச் செய்துவைத்தார். சமீபகாலத்துக்கு முன் வெங்கடாத்திரி சுவாமி யென்னும் ஒரு பாகவதர் யாசகஞ் செய்து 24,000 ரூபாய்கள் சேர்த்துத் திவ்வியமான மூன்று திருமுடிகளைச் செய்து வைத்திருக்கிறார். இந்தக் கோயிலுக்கு ரூபா 34,466 விலையுள்ள 10 திவ்யமான கிலிட்டு வாகனங்கள் இருக்கின்றன. இஃது வடகலை சன்னிதி. பூர்வத்தில் தென்கலை சந்நிதியாக விருந்ததாம். வடகலையார், தாதாசாரியருடைய விக்கிரகத்தை ஸ்தாபித்துப் பூஜை முதலானவைகளைச் செய்யப் பிரயத்தனப்பட்டதனால் தென்கலையாருக்கும் வடகலையாருக்கும் சண்டையுண்டாகி யாரோ சிலர் மணவாளமாமுனி விக்கிரகத்தைக் கொண்டுபோய்க் கிணற்றில் போட்டுவிட்டதனால் இருகக்ஷியாருக்கும் இன்றளவும் மனஸ்தாபம் நீங்கவில்லை. வடகலை தென்கலை அத்தியாபகாள் கோஷ்டியாக வரும்போது சண்டை சச்சரவுகள் உண்டாகுமோவென்கிற பயத்தினால் கோஷ்டிக்கு இடையில் போலீஸ் பந்தோபஸ்தும், சிப்பந்தி கோஷ்டியும் வருகின்றன. இதைப் பார்க்கும் அநேக பாகவதர்களுக்கு விசனமுண்டாகாமற் போகாது. சர்வ சுவாமியின் சன்னிதியில் சகலரும் சமாதானமாக விருக்கவேண்டியிருக்க, சண்டை சச்சரவுகள் செய்தல் சாதுக்களுக்கு அழகல்லவே. கோயிலுக்குள் போதுமான வெளிச்சம் முதலான சாதனங்கள் இல்லாமையால் திருடர் பயமும் அதிகம். கி. பி. 1515௵ கிருஷ்ண தேவராஜரவர்களால் கட்டப்பட்ட நூறுகால் மண்டபமும், அருகிலிருக்கும் புண்ணியகோடி விமானமும் தீர்த்தமும் அழகமைந்தவைகள். இப்போது ஸ்ரீமான்களாகிய கிருஷ்ண தாதாசாரியரவர்கள், கிருஷ்ணசுவாமி தாதாசாரியரவர்கள், வேங்கடவரதாசாரியரவர்கள் தர்மகர்த்தர்களாக விரு

ந்து தேவஸ்தான காரியங்களை நடத்திவருகிறார்கள். இந்த வரதராஜருடைய கருட உத்ஸவந்தான் பிரபலமானது. இது வைகாசிமாதம் (மே, ஜூன் மாதங்களில்) நடந்தேறி வருகிறது. அக்காலத்தில் எண்ணிறந்த ஜனங்கள் கூடிச் சேவிக்கிறார்கள். பிரம்மோத்ஸவம் பத்துநாளிலும் வரதர் சில்லரைத் தேவர்களுக்குச் சேவை சாதிக்கும் பொருட்டுச் சிவகாஞ்சிக்கு வருவதன்றியில், வரதருடைய மைத்துனராகிய ஸ்ரீ ஏகாம்பரநாதரை ஆறும் உத்ஸவத்தில் சிவ க்ஷேத்திரத்துக்கு வந்து கண்டுபோவதாகச் சொல்லுகிறார்கள். இது பலவிதத்திலும் சிறந்தது. உத்ஸவ காலங்களில் ஜனக்கூட்டம் அதிகமானபடியால் சில சமயங்களில் திருடர் பயமும் பிராணபயமு முண்டு. இந்த உத்ஸவங்களுக்கு வெகு தூரதேசங்களிலிருந்து ஜனங்கள் வருகிறார்கள்.

---

## ஸ்ரீ ஏகாம்பரநாதர் சந்நிதி.

இஃது பெரிய காஞ்சி யென்னும் சிவகாஞ்சியில் (சுமார் 17 காணி விஸ்தீரணமுள்ள அழகிய பெரிய தேவாலயம். இந்தத் தேவாலயத்திற்குள் பெரிய கோபுரம் 188 அடிகள் உயரமுள்ளது. இது 1509வது ஸ்ரீ கிருஷ்ணதேவ ராயரால் கட்டப்பட்டது. மேலண்டை சுப்பிரமணியர், கிழண்டை விக்கினேசுவரர், ஆயிரக்கால் மண்டப விக்கினேசுவரர், ஷை இடத்தில் சுப்பிரமணியர், விஷ்ணு, ஈசுவரர், ரிஷப ஈசுவரர், தீர்த்த பிள்ளையார், சிவகங்கை விக்கினேசுவரர்; நூறுகால் மண்டபத்தில் வாலீசுவரர், கச்சிமயான ஈசுவரர், அகத்தீசுவரர், நூற்றெட்டு சிவாலயம், சுப்பிரமணியர்; இரட்டைத் திருமாளிகையில் சிவாலயம் 130, ஜகதீசுவரர், கௌரீசுவரர், மாவடியார், லிங்கீசுவரர், நவக்கிரக சந்நிதி, திரியம்பக சந்நிதி, பிரளயங்காத்தார், வாசற்படி விக்கினேசுவரர், இரண்டு துவாரபாலகர், செப்பு வாசற்படி நாகேசுவரர், விநாயகர், சந்தான விக்கினேசுவரர், சௌபாக்கிய விநாயகர், முத்தீசுவரர், பல்லீசுவரர், சத்தியகணபதி, காசிவிசுவநாதர், அறுபத்துமூவர் வரிசை, சுப்பிரமணியர், கள்ளகம்பர், காளப்பர், சொந்த ஏகாம்பரர், சந்திரகண்ட மூலஸ்தான ஏகாம்பரநாதர், சுவர்ண விக்கினேசுவரர், வெள்ளைக்கம்பர், நூற்றெட்டுச் சிவாலயம், உத்ஸவர், ஏலவண்டுரையம்மன், சண்டிகேசுவரர், சபாநாயகர் ஆகிய சந்நிதிகளும், விக்கிரகங்களும் இப்

போது பிரகாசிக்கின்றன. இந்தத் தேவாலயத்தை நாட்டுக் கோட்டைச் செட்டிமார்கள் ஏராளமான பணச் செலவு செய்து ரிபேர் செய்திருக்கிறதன்றியில், தர்ம பாடசாலை முதலியவைகளையும் ஸ்தாபித்திருக்கின்றனர்.

இந்த ஸ்தலத்தின் வரவு செலவு விவரம்.

| | | | |
|---|---|---|---|
| மேறைபாபத்து மிராசினால் | ... | ... | 626—12—2 |
| சுரோத்திரிய வரும்படியால் | ... | ... | 1574—7—7 |
| தோட்ட வரும்படியால் | ... | ... | 454—8—0 |
| | | ஆக ரூபா | 2655—11—0 |

என்று ஒரு ஜாப்தாவினால் தெரியவந்தாலும், டிஸ்டிரிக்ட் மானியூலின்படி சுரோத்திரிய வருமானம் ரூபா 1,100, சர்க்காரால் எடுத்துக்கொண்ட நிலங்களுக்காக ரூபா 705, ஆக ரூபா 1,805 வருமானமாக எழுதப்பட்டிருக்கிறது. இந்தக் கோவிலுக்கு ரூபா 20,000 விலையுள்ள நகைகளும், ரூபா 10,000 விலையுள்ள வாகனங்களும் உண்டு. 1845ஸ்ரு சில திருடர்கள் புகுந்து லக்ஷம் ரூபா நகைகளைத் திருடிக் கொண்டுபோய்விட்டார்கள். இரண்டு வருஷம் கடந்தபிறகு ஒரு திருடன் சேலத்தில் அகப்பட்டான். ஆறுபேர் வாந்திபேதியால் போய்விட்டார்கள். நான்குபேர் சிக்ஷிக்கப்பட்டார்கள்.

உபயங்கள்.

பெரிய கோபுரவாசல் விநாயகர், சுப்பிரமணியர் ஆகிய இரண்டு சந்நிதிகளுக்கும் ஆடிசன்பேட்டைக் கடைக்காரர் மாமூலாய் 24 ரூபாயும், மற்ற சந்நிதிகளுக்குக் காலை சந்திக் கட்டளைகளுக்காக மல்லாப கந்தப்பசெட்டி, கேசவசெட்டி இவர்களால் 576 ரூபாயும், உச்சிக்கால கட்டளைக்குத் தர்மகர்த்தர் பாலசுப்பிரமணிய முதலியாரால் 360 ரூபாயும், சாயங்கால கட்டளைக்கு இரங்கைய நாயக்கர், மாணிக்கவேலு முதலியார் இவர்களால் 814 ரூபாயும், அர்த்தஜாம கட்டளைக்கு வெங்கடகிரி ராஜா, பச்சையப்ப முதலியார் இவர்கள் தர்மபண்டியிலிருந்து 300 ரூபாயும், கார்த்திகைசோமவாரத்திற்காகச் செட்டிகளால் 50 ரூபாயும், முத்து முனியப்ப முதலியாரால் வனபோஜன செலவுக்கு 150 ரூபாயும், பஞ்சுபேட்டை கன்னடியரால் ஆருத்திரா தரிசனத்திற்கு 40 ரூபாயும், தெப்பல் உத்ஸவத்திற்குக் கதிரப்பூர் கிராமத்

தாரால் 80 ரூபாயும், தைப்பூசத்திற்கு அரப்பணஞ்சேரி கிராமத்தாரால் 150 ரூபாயும், மாசிமாதம் திரு ஊசலுக்கு ரெட்டி தாங்கள் கிராமத்தாரால் 300 ரூபாயும், புரட்டாசி மாதம் நவராத்திரிவண்ணிபூசைக்கு 178 ரூபாயும், மாசிமீ தவன உத்ஸவத்திற்குப் பழவேற்காடு இரத்தின முதலியா ரால் 25 ரூபாயும், பங்குனிமீ பிரம்மோத்ஸவ கொடி ஏற் றத்திற்குச் சாலியரால் 35 ரூபாயும், மூன்றும் உத்ஸவத் திற்கு ஆடிசன்பேட்டையாரால் 300 ரூபாயும், 4-ம் உத்ஸ வத்திற்கு வாசு ரெட்டி வகையராக்களால் ரூபா 118-8-0 ம், 5-ம் உத்ஸவத்திற்குக் கணக்கு சேணியரால் ரூபா 10-8-0-ம், 8-ம் உத்ஸவத்திற்கு நூல் மளிகையாரால் 70 ரூபாயும், 9-ம் உத்ஸவத்திற்கு இராஜம்பேட்டையாரால் 21 ரூபாயும், 10-ம் நாள் திருக்கலியாணத்திற்காக வாணிய ரால் 122 ரூபாயும், 11-ம் திருநாளுக்கு வன்னியரால் 250 ரூபாயும், 12-ம் திருநாளுக்கு ஆடிசன்பேட்டை ஜவு ளிக்கடைக்காரர்களால் 70 ரூபாயும், சித்திரைமீ அமீனு சோமகுருக்கள் தோட்ட உத்ஸவத்திற்காக 20 ரூபாயும், வைகாசிமீ சர்வதீர்த்தம் தெப்பலுக்காகச் சென்னைக் கன் னிகாபரமேசுவரி கோமுட்டி செட்டிகளால் அதிகாரநந்த வனம் பெருமாள் கோவில் வரவு 46 ரூபாயும், ஆனித் திரு மஞ்சனத்திற்காக அப்பாவு பண்டாரத்தால் 20 ரூபாயும் வருமானமாக வருகிறதன்றியில், தர்மகர்த்தா கந்தப்ப முத லியார்விட்ட சென்னைப்பெத்துநாய்க்கன்பேட்டைஇராஜப்ப செட்டி வீதியில் கடைவாடகையில் 48 ரூபாயும், வெங்கட கிரிராஜா அவர்களால் சித்திரா பருவத்திற்காக 160 ரூபா யும், ஆனைவாகனத்திற்கு 50 ரூபாயும், அர்த்தசாம கட்ட ளைக்கு 390 ரூபாயும், குஜராத்தி சத்திர வரும்படியில் ஏகாம்பரர் வன்னிபூஜைதினம் சத்திரத்தோட்ட மண்டபம் அபிஷேகத்திற்கு 35 ரூபாயும், பச்சையப்ப முதலியார் சத் திரத்தால் 420 ரூபாயும் வரும்படியாகின்றன. இந்தத் தேவஸ்தானத்தின் முதல்கோபுரம் பெருத்துக் கம்பீரமாக விருக்கின்றது. சமீபகாலத்திற்கு முன் ரிபேர் செய்யப்பட் டது. உள்கோபுரங்களில் சிலதும், மதில்களில் சிலதும் இல மாய்க் கிடக்கின்றன. இந்த ஸ்தலம் மாமரத்தடியில் ஜனி த்ததாகப் புராணத்தில் சொல்லியிருக்கிறது. இந்த ஆலயம் சோழராஜாக்களால் கட்டப்பட்டாலும் கி. பி. 1509ஆ விஜயநகரத்தில் இராஜனக விருந்த கிருஷ்ணராயலு ராஜ ரால் பெரிய கோபுரம் கட்டிவைக்கப்பட்டது. விசேஷமான

பிரம்மோத்ஸவம் பங்குனிமீ 15 நாள்களில் கொண்டாடப்படுகின்றது. இந்த ஸ்தலபுராணத்தில் சிவபெருமான் சிருஷ்டி ஸ்திதி லயாதி காரியங்களைச் செய்கையில் பார்வதி தேவியானவர் சிவபெருமானுடைய கண்களை மூடும்போது உலகமே இருள் கொண்டதினால் சிவபெருமான் கோபம் செய்து தேவியாரைச் சபித்தார். அதன்மேல் பார்வதிதேவியார் தேவஸ்தானத்துக்குள்ளிருக்கும் கம்பாநதியின் கரையில் ஆறு மாதம் தபசு செய்த பிறகு சிவபெருமான் அங்கீகரித்தாராம். இஃது பத்தாம் திருநாள்; வெகு விநோதமாக விருக்கும். இது பிருதுவிலிங்கம்; அபிஷேகம் கிடையாது. இப்போது பலமாக விருக்கும்படி கம்பிகளாற் கட்டியிருக்கிறார்கள். பரமாத்துமாவே பிருதிவிரூபமாக வந்ததாய் ஐதிகம்.

---

## உலகளந்த பெருமாள் சன்னிதி.

இஃது பெரிய காஞ்சிக் கருகில் அரையே அரைக்கால் காணி விஸ்தீரணமுள்ள அழகிய புராதன தென்கலை க்ஷேத்திரம். இதற்குள் மூலஸ்தான சன்னிதி, ஊரகத்தான், ஆண்டாள், கருடன், நாச்சியார், காரகன் பெருமாள், மடப்பள்ளி நாச்சியார், சேனைமுதலியார், நீரகம்பெருமாள், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், திருமழிசைப்பிரான், நாதமுனிகள், நம்மாழ்வார், மதுரகவியார், குலசேகரர், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், பெரியாழ்வார், திருமங்கைமன்னன், ஆளவந்தார், எம்பெருமானார், திருகச்சிநம்பியார், கூரத்தாழ்வார், மணவாளமாமுனிகள் முதலான சன்னிதிகள் இருக்கின்றன. மூலவராகிய உலகளந்த பெருமாள், மஹா பெரிய விக்கிரகம், பலிச்சக்கரவர்த்தியின் தலையின்மேல் பாதத்தை வைத்தபாவனையாக விளங்குகிறார். கோயிலுக்குள் இருட்டு அதிகம்.

## இந்த ஸ்தலத்தின் வரவு செலவு விவரம்.

கோனேரிகுப்பம் பூந்தோட்டத்தினால், ரூ 7-3-0-ம், ஏனாத்தூர் மணியம் 7 ரூபாயும், திருப்பதிக்குள் தோட்டத்தினால் 50 ரூபாயும், கோயிலின் தோட்டத்தினால் ரூ 10-8-0-ம், மனைகள் வரும்படி 15 - ரூபாயும், அருத்துவகஞ்சி வாணியரால் 100 ரூபாயும், வக்கீல் இராமசுவாமி நாயக்கரால் 70 ரூபாயும், சாவியாரால் ரூ 3-8-0-ம், கேசவராமா

னுஜதாசரால் 15 ரூபாயும், வந்தவாசி கண்ட்ராக்டர் ஸ்ரீனிவாசலு செட்டியாரால் அதிக நித்தியபடி 700 ரூபாயும், இராகவபட்டர் பிரம்மோற்சவத்திற்காக 180 ரூபாயும், ஆட்டுப்புத்தூர் இராமானுஜ பிள்ளையால் சுக்கிரவாரத்துக்காக 2 ரூபாயும், தாமோதர முதலியாரால் 2 ரூபாயும், ஆடிசன்பேட்டை நூல்கடைக்காரர்களால் ரூ 1-8-0-ம், நாலவது டிவிஜனர்களால் 2 ரூபாயும் வருமானமாகிப் பஞ்சபருவத்தில் 20 பாகவதர்களுக்கும், பிரம்மோற்சவத்தில் 100 ஜனங்களுக்கும் தளிகை முதலானவைகள் கொடுக்கப்பட்டு வருகின்றன.

---

## கச்சுகேசுபரர் சன்னிதி.

இஃது அழகிய சிவக்ஷேத்திரம். (இதில் திவ்வியமான தெப்பக்குளம் இருக்கின்றதன்றியில் கச்சுகேஸ்பரர் சன்னிதி, சூரியமூர்த்தி, மந்தார பிள்ளையார், முருக்கடியில் மகாவிஷ்ணு பூஜை செய்தார்,) பாதாளஈசுவரர், பவளவண்ணர், லிங்கையர், பஞ்சவருணீசுவரர், அரசமரத்தடியில் நார்பிரதக்ஷணர், இஷ்டசித்தீசுவரர், சண்டிகேசுவரர், குளக்கரையில் தீர்த்தகிரீசுரர், துர்க்கையம்மன், அஞ்சிசஞ்சிவிநாயகர், பைரவர், ஐயனாரப்பன், சபாபதிசுவாமி, சுப்பிரமணியர், சதுர்முகீசுரர், கைகந்தநாதர், கச்சி உற்சவர், சுவர்ணலிங்கர், காமுகேசுவரர், இரட்டைப்பிள்ளையார், சந்தானகணபதி, சவுபாக்கிய கணபதி, பிரதோஷ நாயகர், நூற்றெட்டு லிங்கம், ஆயிரத்தெட்டு லிங்கம், வாலீசுவரலிங்கம், இராமலிங்கம், குந்தீசுவரர், அகத்தீசுவரர், மணிகண்டீசுவரர், நாகலிங்கம், சிவலிங்கர், சித்திவிநாயகர், ஆறுமுக சுவாமி, வள்ளியம்மன், கச்சிகச்சாலை, நெடிய சுப்பிரமணியர், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலிய சன்னிதிகளும் விக்கிரஹங்களும் இருக்கின்றன.

### இந்த ஸ்தலத்தின் வரவு விவரம்.

நித்தியபடி 20 ரூபாயும், பஞ்சபருவத்திற்கும் விசேஷ பருவத்திற்கும் பிரம்மோற்சவத்திற்கும் 200 ரூபாயும், கோனேரிக்குப்ப மானியம் ரூபா 13-4-2-ம், ஊர்தோட்டத்தில் 200 ரூபாயும், அர்த்தஜாம உத்ஸவத்திற்குப் பிள்ளையார்பாளையத் தோட்டத்திலிருந்து 14 ரூபாயும், தீபம் சாலைபோகத் தோட்டத்திலிருந்து 35 ரூபாயும், கல்பாக்கம் கிராம காணியாளரால் 4 ரூபாயும், குண்டுகுளம்

சுரோத்திரியத்தால் ரூபா 14-8-0-ம், கீழ்க்கதிரையூர் மானியக்கீர்ணியால் ரூபா 22-8-0-ம், புத்தேரி மானியத்தால் 20 ரூபாயும், சிவகாட்டப்பாக்கத்தில் 2 ரூபாயும், பெரிய காஞ்சி நாட்டுமானியத் தோட்டத்திலிருந்து 6 ரூபாயும், தருமராஜாம்பேட்டையில் உச்சிக்கால கட்டளைக்குச் சுந்தர பண்டாரத் தோட்டத்தில் 40 ரூபாயும், தோட்டக்கால் கொல்லையில் 10 ரூபாயும், ஐயம்பேட்டையில் 10 ரூபாயும், புத்தேரியில் 20 ரூபாயும், ஆடிஸன்பேட்டைக் கட்டிட வீட்டிலிருந்து 12 ரூபாயும், ஷை தேவஸ்தானம் தருமகர்த்தர், பிள்ளைப்பாக்கம் வகையராக்கள், தணிகைமலை முதலியார் வகையராக்களால் தரி ஒன்றுக்கு இரண்டரையணு வீதமாக வருவதில் 200 ரூபாயும் வருமானமாகி வெகு விமரிசையாக உத்ஸவங்கள் நடந்து வருகின்றன. சமீபகாலத்துக்கு முன் திருடர்கள், சன்னிதியில் புகுந்து சில ஆபரணங்களைத் திருடிக்கொண்டு போய்விட்டார்களாம்.

---

## சில்லரைச் சன்னிதிகள்.

காஞ்சி க்ஷேத்திரத்தில் 1008 சிவாலயங்களும் இருப்பதாகக் காஞ்சிப்புராணத்தில் சொல்லியிருந்தாலும், இதனடியிற் கண்ட தேவஸ்தானங்களுக்கு மாத்திரம் இப்போது பூஜை முதலானவைகள் நடந்து வருகின்றன. அவைகளாவன:—கோட்டாரபாளையம் பிள்ளையார்கோயில், மாதவசுக்கல்பேட்டைக் கற்பகப்பிள்ளையார், கணிகண்டீசுவரர், ஆறுபாளையம் முச்சீசுவரர், ஷை தீபாகாஞ்சீசுவரர், செட்டிகுளம் பிள்ளையார், இராமலக்ஷ்மணர், நாராயணபாளையம் பிள்ளையார், புண்ணியகோடீசுவரர், சேகிரிப்பேட்டை சாலைப்பிள்ளையார், தருமராஜர், நடுத்தெருப்பிள்ளையார், சஞ்சீவிராயன், குளமாயி அஷ்டபுஜ கஜேந்திரர், உலகளந்தவீதி சிக்கீசுவரர், சித்திரபுத்திரர், சப்பாணிப் பிள்ளையார், திருவடிகோயில், சோலீசுவரர், கச்சிவிநாயகர், திருவேகம்பன் பிள்ளையார், பிள்ளைபாளையம் கன்னிமார், செல்லப்பராயன், வைரவன், அங்காளம்மன், வீரமாகாளி, ஆதீசுவரர், ருத்திரீசுவரர், ஆனந்தருத்திரர், சிந்தாமணிப் பிள்ளையார், நாலுவீதிப் பொது விஸ்வநாதர், திருமதிலீசுவரர், காசிப்பிள்ளையார், வீரபத்திரர், ருத்திரகோடீஸ்வரர், சிதம்பரீசுவரர், லிங்கப்பர், படவெட்டம்மன், சதாசிவர், படமலீசர், படமாளியார், ஏரம்பர், ஆண்டிப்பிள்ளையார், பளமுடீசர், சண்டி

கேசுவரர், தக்ஷணாமூர்த்தி, காசிவிசுவநாதர், கணிகண்டீசுவரர், மகாகாளி, நம்மாழ்வான், ஆலைபசிகொண்ட அரசத்தாள், குமரகோட்டம் சுப்பிரமணியர், ஐராவதீசுரர், துர்பிகை கற்பகப்பிள்ளையார், சத்தியநாதர், சொல்வாழியம்மாள், அநந்தபத்மநாபர், சுவயம்புவம்மாள், நாகிசுவரர், பத்திரகாளி, சாந்தீசுவரர், மன்னூர்சாமி, பிடாரி, பொன்னேரி விசுவேசுவரர், கரிகாளளந்தாள், வழக்கறுத்தாள், செல்லப்பிள்ளை, மாரியம்மாள், எல்லம்மாள், குருநாதர், கோவிலாத்தாள் முதலான கோயில்க ளிருப்பதன்றியில், அஜரத்துஹார அமீர் அவர்ஜா என்னும் பீஜப்பூர் பக்கீரவர்களுடைய மஸ்ஜீது ஒன்றிருக்கின்றது. இதற்கு பூஸ்திதியினால் 200 ரூபாயும், சர்க்காரினால் 1559 ரூபாயும் வருஷாந்திர வருமான முண்டு. கடைசியாக இந்தக் காஞ்சீபுரம் ஒரு காலத்தில் ஜைனமதஸ்தருடைய ஆதீனத்தி லிருந்ததென்று சிலர் சொல்வது முண்டு. இப்போது காஞ்சீபுரத்தைச் சார்ந்த பள்ளபாளையத்திற்கு அடுத்த இரண்டு மைல் தூரத்திலிருக்கும் திருப்பரங்குன்றத்தில் திவ்வியமான ஜைனர் கோயி லொன்றிருக்கிறது. அதில் திரிலோகநாத சுவாமி விக்கிரக மிருக்கிறது இதற்கு 14, 15, 16-ம் நூற்றூண்டுகளில் விஜயநகரம் இராயர்களால் அநேக உபயங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இப்படிப் பலவித கோயில்களினாலும் தீர்த்தங்களினாலும் உத்ஸவங்களினாலும் புகழ்பெற்ற இந்தக் காஞ்சீபுரமானது அயோத்தியா, மதுரை, காசி முதலான யாத்திரை ஸ்தலங்களுள் ஒன்றென்றும், தக்ஷணகாசியென்றும், வைஷ்ணவரின் 108 திருப்பதிகளில் சிறந்த நான்கி லொன்றென்றும், இலட்சுமி - சரஸ்வதி அம்மைகளின் ஜனனதேசமென்னும், சகலராலுங் காஞ்சனமாக அல்லது பிரியமாகக் கொண்டாடக் கூடியதென்றும் புராணங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றதன்றியில், நகரங்களி லெல்லாம் சிறந்தநகரமென்றும், காளிதாசமஹாகவியால் கொண்டாடப்பட்டதாயு மிருப்பதால் இந்துக்கள் தமது உலக வாழ்நாட்களில் ஒருநாளாவது வந்து பார்க்கத் தக்கதேயாம்.

---

## காஞ்சீபுரம் கம்பாநதிக்கரையில் செய்த பிரார்த்தனை.

பரதகண்டத்தில் முத்திதரும் ஏழு ஸ்தலங்களில் சிறந்ததும், காளிதாசனால் நகரங்களில் சிறந்த நகரமென்று

சொல்லப்பெற்றதும், ஸ்ரீ பூதத்தாழ்வார் என்ன, ஸ்ரீ திருமங்கை ஆழ்வார் என்ன, ஸ்ரீ ஆதி சங்கராசாரியர் என்ன, ஸ்ரீராமானுஜாசாரியரென்ன, ஸ்ரீவேதாந்ததேசிகர் என்ன, ஸ்ரீ சுந்தரசுவாமிகள் என்ன, ஸ்ரீபட்டணத்தடிகள் என்ன, இன்னும் பல மஹான்களால் விரும்பிச் சேவித்த ஸ்தலமாகிய இந்தக் காஞ்சீபுரத்தில் வந்து கருணைநிதியாகிய நின்னைப் பிரார்த்திக்க இன்று பாக்கியனானேன். இப்பட்டணம் தொண்டைமான் சோழன் முதலான இராஜாக்களுக்கு இராஜதானியாக இருந்ததன்றியில், இப்போதும் எங்கு பார்த்தபோதிலும் கோயில் கோபுரம் மண்டபம் மாடமாளிகைகளால் அமைக்கப்பெற்று இவைகளைக் காண்பவர்க்கு நின்னிடத்துப் பக்தியையும் சிரத்தையையும் விருத்தியாகத் தூண்டுகின்றன. நீ பக்தகோடிகள் விரும்பும் வரங்களைத் தருவாய் என்றெண்ணிப் பல பக்கத்தின் ஜனங்கள் வந்து 'வரதா! வரதா!!' என்று கூவித் துதிக்கின்றனர். சிலர் 'ஏகம்பனே! காமாட்சி!' முதலான பெயர்களால் துதித்துக் கொண்டாடுகின்றனர். போதுமான பகுத்தறிவு இல்லாதவர்கள் உன்னைப் பிம்பாகாரமாக விக்கிரகங்களைச் செய்துவைத்து வணங்குகின்றனர். புத்திமான்களான ஞானிகள் நினது சொரூபம் இங்குக் காணும் எல்லாப் பொருளிலும் இருப்பதாகக்கொண்டு தியானிக்கின்றனர். இப்படி இருதிறத்தாருக்கும் நின் இருப்பில் நம்பிக்கை உண்டாகி வணங்கும் இத்தலம் எவ்வளவு சிறந்த புண்ணிய க்ஷேத்திரம். இப்படிப்பட்ட ஸ்தலத்தில் உன்னை வணங்க வந்திருக்கின்றேன். எனது பர்வ தாபங்களைப் போக்கி ஸ்ரீ சங்கராருக்கிருந்த கல்விஞான சக்தியையும், ஸ்ரீ இராமானுஜருக் கிருந்த பக்தியையும், பரஸ்பர ஸ்நேக பாவத்தையும், ஸ்ரீ வேதாந்த தேசிகருக்கிருந்த கவிதர்க்க சக்தியையும், ஸ்ரீ பட்டணத்தாருக்கிருந்த சுத்த சந்நியாசத்தையும் எனக்குப் பிரசாதித்தருள்வாய். ஓம் தத்சத்.

---

## 5. செருத்தணி (திருத்தணி).

(முருகப்பிரானது விசேட ஸ்தலங்களில் ஒன்று).

[தணிகாசலபதி, தெய்வயானையம்மை, வள்ளிநாயகியம்மை.]

செரு - உயுத்தம், தணி - தணிந்தது; செருத்தணி - உயுத்தம் தணிந்தது என்று பொருள். அதாவது, முருகக்

கடவுள் சூரனோடு யுத்தஞ் செய்து தணிந்திருந்த இடமென்று பொருளாகும். இத்தலத்தில் ஓர் சுனையாகிய அர்ப்புதத் தீர்த்தமுள்ளது. அதில் தினந்தோரும் பூசிக்கும் பொருட்டுத் தேவேந்திரனால் நீலோற்பல மலர் உண்டு பண்ணப்பட்டிருக்கிறது. அதில் காலையில் ஒரு புஷ்பமும், உச்சியில் ஒரு புஷ்பமும், மாலையில் ஒரு புஷ்பமும் தினமும் மலர்ந்துகொண் டிருக்கும்படியான பல மகிமைகளைப் பொருந்திய ஸ்தலம். தேவர்கள் பூசிக்கும் ஸ்தலம். கிருத்திகை நக்ஷத்திர காலத்தில் சென்னை முதலான இடங்களிலிருந்து ஏராளமான ஜனங்கள் வருகின்றனர்.

---

## 6. திருக்கள்ளில் (திருக்கள்ளம்).

(இது சென்னைக் கிழக்குக்கரை ரெயிலில் 22 மைல் பொன்னேரிக்குப் போய், அங்கிறங்கி தென்மேற்காக 12 மைல் தூரத்தி லிருக்கிறது.)

[சிவாநந்தேசுரர், ஆநந்தவல்லியம்மை, திருநந்தி தீர்த்தம்.]

பிருகுரிஷி பூசிக்கத் தக்ஷணாமூர்த்தி சொரூபமாகத் தரிசனங் கட்டளையிட்டருளிய ஸ்தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## 7. திருக்கச்சிமேற்றளி.

(இது காஞ்சீபுரத்தின் மேற்குப் பாகமாகிய பிள்ளைப் பாளையத்திலிருக்கிறது.)

[திருமேற்றளிநாதர், காமாட்சியம்மை, விஷ்ணுதீர்த்தம்.]

மகாவிஷ்ணு சிவசாரூபம் பெறும்பொருட்டுத் தவஞ்செய்து சிவாஞ்ஞைப்படி திருஞானசம்பந்த சுவாமிகள் காலத்தில், திருப்பதிகத்தால் சிவசாரூபம் பெற்ற ஸ்தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாலும், சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

---

## 8. திருக்கச்சி அநேகதங்காபதம்.

(இது காஞ்சீபுரத்திற்கு வடமேற்கிலுள்ள புத்தேறித் தெருவுக்கு மேற்கில் கழனி வெளியின் மத்தியிலுள்ளது.)

[அநேசதங்காபதேசுரர், காமாட்சியம்மை, காமிதாய தீர்த்தம்.]

கணபதியும் குபேரனும் பூசித்த ஸ்தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## 9. திருவலிதாயம் (பாடி).

(இது சென்னையிலிருந்து வில்லிவாக்கம் ரெயில் ஸ்டேஷனுக்குப் போய்த் தென்மேற்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது.)

[வலிதாயநாதர், தாயம்மை, அநுமதீர்த்தம்.]

பாரத்துவாஜர், பிரகஸ்பதி, அனுமன் இவர்கள் பூசித்த ஸ்தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## 10. வடதிருமுல்லைவாயில்.

(இது சென்னையிலிருந்து 13 மைலிலுள்ள ஆவடி ஸ்டேஷனுக்கு வடகிழக்கு $2\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது.)

[மாசிலாமணீசுரர், கொடியிடையம்மை, சக்கரதீர்த்தம்.]

தொண்டைமான் சக்கரவர்த்தியினது யானைக்காலிற் சுற்றிய முல்லைக்கொடியைக் கோபித்து வெட்டும்பொழுது திருமேனி வடுப்பட்டு வரமருளித் திருநந்தி தேவரைச் சக்கரவர்த்தி பின்னனுப்ப, இன்றுந் திருநந்திதேவர் புறங்காட்டி வீற்றிருக்கின்ற ஸ்தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சங்கிலிநாச்சியார் பொருட்டுக் கண்ணிழந்தமைபற்றிப் பதிகமோதிய ஸ்தலம். திருப்பதிகம்-க.

---

## 11. திருவேற்காடு.

(சென்னை ஆவடி ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து பூவிருந்தவல்லிக்கு $3\frac{1}{2}$ மைல் சென்று கிழக்கே பாலாற்றுக்கரையி லிருக்கிறது.)

[வேற்காட்டீசுரர், வேற்கண்ணியம்மை,
வேலாயுத தீர்த்தம்.]

சுப்பிரமணியசுவாமி பூசித்த ஸ்தலம். மூர்க்கநாயனார் வேளாளமரபில் மார்கழிமாதப் புனர்பூசத்தில் திருவவதாரஞ் செய்தருளித் தமது செல்வங் குறைந்தும் சிவனடியாருக்கு அமுதூட்டலைக் குறைவுபடுத்தாவண்ணம் சூதமாடியமுதருத்திவந்து கார்த்திகைமாத மூலநாளில் முத்திபெற்ற ஸ்தலம். திருஞானசம்பந்தர் திருப்பதிகம்-க.

---

## 12. திருப்போரூர்.

(இது செங்கற்பட்டுக்குக் கிழக்கே போகும் ரோட்டிற்கு அருகில் இருக்கிறது.)

[சுப்பிரமணியசுவாமி, தெய்வயானையம்மை, வள்ளிநாயகி யம்மை, வேலாயுத தீர்த்தம், சமுத்திர தீர்த்தம்.]

இது முருகப்பிரானது குன்றுதோறாடலி லொன்று. அநேக சித்தர்கள், தேவர்கள் பூசித்து நல்வரம் பெற்ற ஸ்தலம்.

---

## 13. திருஇடைச்சுரம்.

(இது செங்கற்பட்டிலிருந்து கிழக்கே திருப்போரூருக்குச் செல்லும் பாதையில் 5 மைல் தூரம் சென்றால் வடக்கே ½ மைல் தூரத்தில் உள்ளது.)

[இடைச்சுரநாதர், ஞானபுரீசுரர், இமையமடக்கொடி யம்மை, இந்திர தீர்த்தம்.]

---

## 14. திருக்கழுக்குன்றம்.

(இது செங்கற்பட்டு ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே 9 மைல் தூரத்தில் இருக்கிறது.)

[வேதகிரீசுரர், பெண்ணினல்லாளம்மை, மலைச்சொக்கநாயகி, சங்குதீர்த்தம், வசுதீர்த்தம், இந்திரதீர்த்தம், பட்சிதீர்த்தம்.]

அஷ்டவசுக்கள், திருநந்திதேவர், இந்திரன், திருமால் முதலாயினோர் பூசித்த ஸ்தலம். யசு வராகம் முதலியவை பிரதக்ஷணம் வந்து தேவ உருப்பெற்ற ஸ்தலம். கிரேதாயுகத்தில் சண்டன் பிரசண்டனென்னும் கழுகரசர்களும், திரேதாயுகத்தில் சம்பாதி சடாயுவென்னும் கழுகரசர்களும், துவாபரயுகத்தில் சம்புசித்தன் மாகுத்தனென்னும் ரிஷிகள் சத்தி பெரிது சிவம் பெரிதெனத் தர்க்கித்து, அவ்விருவரும் வந்து கூறியதையும் சம்மதியாமற் பெற்ற சாபவசத்தால் கழுகுரு வுடையோராயிருந்த அக்கழுகுகளும் பூசித்து முத்தியடைந்தன. அதுபோலவே

கலியுகத்தில் பூடா விருத்தாவென்னும் இரண்டு தவசிகள் சிவபெருமான் அருளிய வார்த்தையை மறுத்து உடனே முத்தி வேண்ட, எதிர் மொழிந்த தப்பிதத்திற்காக கழுகு ரூபம் பெற்றுக் கலியிற்றில் முத்தியடைய வழிபட்டுக் கொண் டிருக்கும் ஸ்தலம். சமயாசாரியராகிய ஸ்ரீமான் மாணிக்கவாசக சுவாமிகள் குருவடிவந் தொழப்பெற்று, 'காட்டினாய் கழுக்குன்றிலே' எனத் திருவாசகம் பாடியரு ளிய ஸ்தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகங்கள் பெற் றுள்ளன. திருப்பதிகங்கள்-ந.

---

## 15. சங்கமங்கை.

[சங்கமங்கைநாதேசுரர், உலகநாய்கியம்மை, அற்புததிர்த்தம்.]

சாக்கியநாயனூர் ஐப்பசிமாத திருவோணத்திற் புத்த மதத்தில் திருவவதாரம் செய்தருளி அம்மதத்தார் வழி யொழுகுவார்போல் நடித்து உள்ளன்பால் சிவபெருமான் மீது கல்லெறியும் நியமம் பூண்டு கல்லே மலராக அர்ச் சித்து மார்கழிமாதம் பூராடத்தில் முத்திபெற்ற ஸ்தலம்.

---

## 16. அச்சிறுபாக்கம்.

(இது சென்னை ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து தெற்கே 59 மைல் தூரத்தில் இருக்கிறது.)

[பாக்கபுரேசர், சுந்தரநாயகி, தேவதீர்த்தம், கோன்றைவிருக்ஷம்.]

சிவபெருமான் திரிபுரதகனஞ் செய்யும் பொருட்டுத் தேவர்கள் சமைத்த தேரில் எழுந்தருளினபோது அத் தேவர்கள் விநாயகமூர்த்தியை நினையாத காரணத்தால் தேரின் அச்சு இற்றது (முறிந்தது.) அந்தக் காரணத்தால் இந்த ஸ்தலத்திற்கு அச்சிறுபாக்கம் எனப் பெயருண்டா யிற்று. திருஞானசம்பந்த சுவாமிகளால் திருப்பதிகம் பெற்ற ஸ்தலம். திருப்பதிகம்-க.

---

## 17. திருஎவ்வுளூர்.

(இது திருஎவ்வுளூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சுமார் 2 மைல் தூரத்தில் இருக்கிறது.)

[வீரராகவப்பெருமாள், கனகவல்லித்தாயார், விஜயகோடி விமானம், இருத்தாபநாசினிதீர்த்தம், புஜங்கசயனம், வீக்ஷாரண்யக்ஷேத்திரம், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.]

இது தொண்டைநாட்டு விஷ்ணு ஸ்தலங்களி லொன்று. பிரத்யும்னனென்னும் அரசன் தவஞ்செய்து முத்தி யடைந்த ஸ்தலம். கௌசிகனென்னும் வேதியன் சண்டாள சாங்கத்திய பாவத்தைப் போக்கிய ஸ்தலம். அருகிலுள்ள ஈக்காடென்னுங் கிராமத்தில் தருமசேனனிடம் கனகவல்லியென்னும் பெயரோடு அவதரித்த இலக்ஷ்மி தேவியை யுக்தவயதில் திருமால் மணங்கொண்டனர். சாலிகோத்திர முனிக்குப் பிரத்தியக்ஷம்.

### தத்கால ஸ்திதி.

இந்தத் திருவெவ்வுளூரானது செங்கற்பட்டு ஜில்லாவைச் சார்ந்த பெத்தபாளையம் தாலுக்காவின் ஒரு விசேஷ கிராமம். இந்தத் தாலுக்காவில் 195 கிராமங்களும், அவைகளில் 13835 காணிபூமியில் நஞ்சைப் பயிரும், 8163 காணி பூமியில் புஞ்சைப் பயிரும் விளைவாகி அவைகளால் கவர்ன்மெண்டுக்கு 1,11,970 ரூபாய் 1855ஆம் வருஷம் வசூலாகியது. இப்போது பயிரிடும் பூமி விஸ்தீரண மானதாயும் வளப்பமானதாயு மாகிவிட்டபடியால் சர்க்கார் வருமானம் அதிகமாயிருக்கவேண்டும். அதன் கிராமங்களிலெல்லாம் விசேஷமான கோயில் கோபுரங்கள் அடங்கிய இந்த திருஎவ்வுளூர் தொண்டைநாட்டில் ஒரு விசேஷ வைஷ்ணவஸ்தல மாகையால் பிரதி அமாவாசை காலங்களிலும், முக்கியமாக தைமீ அமாவாசை காலத்திலும் நாலாபக்கங்களிலிருந்தும் பெரும்பாலும் சென்னையிலிருந்தும் ஏராளமான யாத்திரைக்காரர்கள் வந்து வெல்லக் கட்டிகளைத் தெப்பக்குளத்தில் கரைத்தும் சங்கல்பாதி கர்மங்களைச் செய்தும் சுவாமியை வணங்கி வருகிறார்கள். யாத்திரைக்காரர் தங்குவதற்கு அநேக சத்திரங்களும் உணவுக்கு வேண்டிய ஹோட்டல்களும் இருக்கின்றன. இது சென்னையிலிருந்து 26 மைல்கள் தூரத்திலுள்ள (Railway Station) ரெயில்வே ஸ்டேஷன் உள்ள

தாயும், மெயில் வண்டியில் போக 5 அணு சார்ஜ்ஜுமும்; மற்றப் புகை வண்டிகளில் போக 0-4-6-ம் கொடுக்கவேண்டும். இதற்கு 4 மைல்கள் தூரத்திலிருக்கும் திருப்பாசூர் என்னுமிடத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரால் கட்டப்பட்ட ஒரு புராதன கோட்டை யிருக்கிறது. இத் திருஎவ்வுளூருக்கு 10 மைல்கள் தூரத்தில் ஸ்ரீ பெரும்பூதூரென்னும் விசேஷ விஷ்ணுஸ்தல மிருப்பதால் அதைப்பற்றி இதனடியிற் காணலாம்.

## 18. ஸ்ரீ பெரும்பூதூரின் மஹத்துவம்.

### பூர்வ ஸ்திதி.

சென்னையம்பதிக்கு மேற்குத் திசையாக ஐந்துகாத தூரத்தில் பிரகாசிக்கும், ஸ்ரீ காஞ்சீபுரத்திற்கு ஈசானிய பாகமாகி இரண்டு யோஜனை தூரத்தில் அரணாரணிய மென்று பூர்வம் பிரகாசித்துப் பிறகு புதூர் என புராணப் பிரசித்தமாகி இப்போது சமஸ்த ஜனங்களால் சாதாரணமாக ஸ்ரீ பெரும்பூதூரென்று சொல்லப்பட்ட ஒரு நகர மிருக்கிறது. அவ்விடத்தில் ஸ்ரீ தேவியாரோடு கூடி ஸ்ரீ கேசவஸ்வாமி யென்னும் பெயரால் ஸ்ரீ விஷ்ணுவானவர் வசிக்கும் ஒரு திவ்விய மந்திரமும அநந்தசரஸு என்னும் தீர்த்தமும் பிரகாசிக்கிறது. பூர்வத்தில் சூரிய வம்ஸத்தில் பிறந்து வில் வித்தைகளில் பராக்கிரம சாலியாகியும், தருமம், தயை, நீதி முதலான குணங்களிற் சிறந்து செங்கோல் செலுத்திய ஹரிதொண்டன் என்னும் ஓர் இராஜன் ஓர் நாள் சதுரங்க பலத்துடன் வேட்டைக்குப் போய்ப் புலி சிங்க முதலான வனமிருகங்களைச் சம்ஹரித்து வருகையில் அங்கோரிடத்தில் ஓர் பசுவானது, பெரிய புலியால் பிடிக்கப்பட்டு அப்புலி செய்த உபத்திரவத்தினல் வாடிப் பசுவானது கதறுகிறதைக் கண்டு அதைக் காக்கும்பொருட்டு அப்புலியின்பேரில் பாணப் பிரயோகஞ்செய்ய அப்புலியானது ஷை பசுவுக்கு இராஜன் அபயங்கொடுக்க வந்ததைக்கண்டு கோபத்தினல் அந்தப் பசுவை முதலில் கொன்று தானும் பிராணனை விட்டது. அப்போது அரசன், இந்த சம்பவத்தைக் கண்டு "அந்தோ! நம்மாலல்லவோ இந்தப் பசுவானது இறக்கச் சம்பவித்தது," என்று வியாகூலத்துடன் தனது நகருக்குத் திரும்பிப்போய்த் தனது மந்திரிகளையும் புரோஹிதராகிய வசிஷ்ட மஹாமுனியையும் தருவித்து

அவர்களுடன் தான் ஆரணியத்திற்குப் போனதையும், போனவிடத்தில் பசுவைக் காக்கப்போய்க் கோஹத்தி சம்பவித்ததையும், அந்தக் கோஹத்தி எப்படி நீங்குமென்றும் கேட்க, அந்த வசிஷ்ட மஹாமுனிவர் சொல்லுகிறார்: "ஓ இராஜனே! நீர் ஏன் விசனப்படுகிறீர்? தக்ஷணதேசத்தில் பிரபலமாகப் பிரகாசிக்கும் சேஷாசலத்திற்குத்தெற்கே மூன்று யோசனை தூரத்தில் அரணாரணிய மென்னும் ஓர் வன மிருக்கிறது. நீர் அவ்விடத்திற்குப் போய் அவ்விட மிருக்கும் அநந்தஸரஸில் ஸ்நானஞ் செய்து, அந்தத் தீர்த்தத்தில் வாசுதேவனைப் போற்றிப் பாராயணஞ் செய்வாயாகில் பகவானுடைய அனுக்கிரகத்தினால் உமது பாவம் பரிஹாரமாகும்," என்று சொல்ல, அந்த ஹரிதொண்ட மகாராஜன் கேட்டுச் சந்தோஷத்துடன் இராஜ்ஜிய பரிபாலனத்தைத் தனது மந்திரிமார்கள் வசத்தில் விட்டுவிட்டு, அரணாரணியத்திற்குச் சென்று அவ்விட மிருக்கும் அநந்த ஸரஸில் ஸ்நானஞ் செய்து நித்திய கடமைகளை முடித்துக் கொண்டு அநந்த ஸரசுக்குக் கிழக்குத் திசையில் ஓர் பர்ணக சாலையில் சில வருஷங்களாக அகோரமான தபசு செய்கையில் ஓர்நாள் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியே பிரசன்னமாகி "ஓ இராஜனே! உனது கடுமையான தபசைக்கண்டு வியந்தேன்; வரங் கொடுக்க வந்தேன்; உனக்கு வேண்டுவதென்ன?" என்று வினவ, அப்போது இராஜன் கண்களைத் திறந்து பார்க்க, ஸ்ரீமந்நாராயண மூர்த்தியே சங்கு சக்கர கதாருடராகி லக்ஷ்மி சமேதராக வீற்றிருப்பதைக் கண்டு அஞ்சலியஸ்தனாகிப் பலவிதமாகப் போற்றிசெய்து "எனது பாவங்களைப் போக்கவேண்டும்" என்று பிரார்த்திக்க, அந்த ஸ்ரீமந் நாராயணமூர்த்தி மனமகிழ்ந்து, "ஓ இராஜனே! இன்றுடன் உனது க்ஷத்திரிய ஜன்மம் நீங்கிப் பிராம்மணனாவாய்" என்றும், "உனது மக்களும் பிராம்மணராவார்கள்" என்றும், "நீர் செய்த பிரார்த்தனைகளை எவர் இங்கு முக்காலமும் பாராயணஞ் செய்கிறார்களோ அவர்கள் வைகுண்ட பதவியை யடைவார்கள்" என்றும், மேலும் "பூதங்களால் உண்டாக்கப்பட்ட இந்த நகரத்தில் நாம் வசிக்கும் திருக்கோயிலை ஜீரணோத்தாரணஞ் செய்து இப்போது நாம் பிரசன்னமாகிய இந்த சித்திரைமாதம் சுக்கில பக்ஷம் சப்தமி முதல் பவுர்ணமி வரையில் பிரம்மோற்சவம் செய்யவேண்டும்" என்றும், ஆக்ஞாபிக்க, அந்த அரசன் சந்தோஷத்துடன் ஷெ நகரத்தைத் திவ்வியமான திரு

மாளிகைகளால் பிரகாசிக்கச் செய்வித்தும் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் திருக்கோயிலை ஜீரணோத்தாரணஞ் செய்வித்தும், அவ்விடம் பகவானுக்குப் பாஞ்சராத்ர ஆகமவிதிகளின்படி கும்பாபிஷேகம் செய்வித்தும், அந்தச் சப்தமி முதல் பவுர்ணமி வரையில் பிரமோத்ஸவமும் செய்வித்தும், தனது நகரத்துக்குத் திரும்பிப்போனார். ஆகவே அன்றுமுதல் ஒவ்வொரு வருஷமும் சித்திரை மாதத்தில் ஷை உத்ஸவம் நடந்தேறிவருகின்றது.

பூர்வம் ஓர் பிரளயகாலத்தில் சகல பூதங்களும் மடிந்து போகப் பிரம்மதேவர் சமஸ்த பூதங்களைச் சிருஷ்டித்து அவைகளைச் சிவபெருமான் ஆதீனமாக்கிச் சிவசேவையைச் செய்யக் கட்டளையிட, ஒருநாள் சிவபெருமான் கைலைப்பங்கிரியில் சகல பூதகணங்களுடன்கூட திக்ம்பரியாகி நடித்து வருகையில் அந்தப் பூதகணங்கள் பார்த்துப் பரிகாசஞ் செய்யும்போது அதை யறிந்த சிவபெருமான் கோபங் கொண்டு, "நீங்கள் நம்மைப் பார்த்துச் சிரித்தமையால் எமது சேவைக்குப் பாத்திரால்லர்" என்றும், "அதோ லோகத்திற் போய் வசிக்கக்கடவீர்கள்" என்றும் விதிக்க, அதைக் கேட்ட பூதகணங்கள் துக்கித்துப் பிரம்மதேவனை நோக்கிப் பிரார்த்தனை செய்ய, அந்த மலரவன் கண்டு, "ஓ பூதகணங்களே! நீங்கள் பயப்படவேண்டாம். நீங்கள் ஜம்புத்வீபம் சத்தியவிரத க்ஷேத்திரத்திற்கு ஈசானிய பாகமாக இரண்டுயோசனை தூரத்திலிருக்கும் அருணாரணியத்திற் சென்று அவ்விடம் வாசுதேவ மந்திரத்தையும் ஜபத்தையும் செய்வீர்களாகில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் அநுக்கிரகத்தினால் சாப விமோசனமாகும்" என்றும், அவ்விடம் போகும்படியும் ஆக்ஞாபிக்க, அந்தப் பூதங்களும் வந்து பல நூற்றாண்டுகளாகத் தபசு செய்கையில், ஒருநாள் ஸ்ரீமந் நாராயணமூர்த்தி இலக்ஷ்மி சமேதராகக் கருடவாகனத்தின்மீது வந்து அந்தப் பூதகணங்களுக்குப் பிரசன்னமாகி, "நீங்கள் வேண்டுவது என்ன?" என்று வினவ, அவைகள் பகவானைப் பார்த்து, "சிவபெருமானுடைய சாபத்தை நீக்கவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்ய, அப்போது ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் சிவபெருமானை நினைக்க, அவரும் பார்வதி அம்மனுடன் ரிஷபத்தின்மீதேறிவந்து அந்தப் பூதகணங்களுடைய சாபங்களை விமோசனமாக்க, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர்

அப்போது தமதருகில் சேவை செய்துகொண்டிருந்த ஆதிசேஷனை அழைத்து, "நீர் இவ்விடத்தில் நிர்மலோதக பரிபூரண தீர்த்தமொன் றுண்டாக்கவேண்டும்" என்று கட்டளையிட அப்படியே ஆதிசேஷனும் ஓர் தீர்த்தத்தை யுண்டாக்கவே, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் அந்தப் பூதகணங்களை அழைத்து, "நீங்கள் இந்தத் தீர்த்தத்தில் முழுகிப் பரிசுத்தராகி நமக்கு வாசாயோக்யமான ஒரு ஆலயத்தைக் கட்டி, அதன் சுற்றுப் பக்கங்களில் ஓர் நகரமு முண்டாக்கவேண்டும்" என்று ஆக்ஞாபிக்கவே அப்படியே உண்டாக்கலாயிற்று; அப்போது சிவபெருமானுங் கண்டு சந்தோஷிக்க, "இனிமேல் பிரதிவருஷம் வைகாசிமீ துவாதசியன்று பூதங்களால் கட்டப்பட்டதனால் ஸ்ரீ பெரும்பூதூரென்னும் இவ்விடத்தில் சிவபெருமான் வந்து அன்றையதினமெல்லாம் அதிருசியமாக விருக்கவேண்டும்" என்றுஞ் சொல்லிப் பரமேஸ்வரரைப் பூதகணங்களுடன் புறப்பட்டுக் கைலையங்கிரிக்கு எழுந்தருளச் செய்தார்.

பூர்வத்தில் சுகேது என்னும் பெயருடைய ஒரு இராஜசிரேஷ்டன் பாண்டியநாட்டில் அரசாக்ஷி செய்து சோழராஜனுடைய ஏழு குமாரத்திகளையும் விவாகஞ் செய்துகொண்டு அவர்களுடன் பல வருஷம் கிரீடித்தும் அவர்களால் புத்திரசந்தான மில்லாமல் கோகர்ண க்ஷேத்திரத்திற்குப் போய் அவ்விடம் பரமசிவத்தைத் துதித்துத் தபசு செய்கையில், பரமசிவம் பிரசன்னமாகி உனது மனைவிகள் பூர்வ ஜன்மத்தில் திலோத்தமை, ஊர்வசி, இரம்பை, மேனகை, புஞ்சிகிஸ்தல, விஸ்வாசி, கிருதாசீல மென்னும் ஏழு அப்ஸரஸ்திரீகளாக விருந்து இமயமலையின்மேல் ஓர் சரோவரத்திற்கு வந்து ஸ்திரீபுருஷ கஜஸ்வரூபத்துடன் கிரீடிக்கும் ஓர் முனி சதி புருஷர்களைப் பார்த்தார்கள். அப்போது கஜரூபிதாரியாகிய முனிஸ்திரீ இந்த அப்ஸரஸ்திரீகளைக் கண்டு வெட்கி மறைந்தார். அச்சமயம் அந்த முனிவர் கண்டு கோபத்துடன், "நாங்கள் புத்திர பாக்கியத்திற்காக இவ்விடம் வந்து கிரீடிக்கையில், நீங்கள் வந்து விக்கினஞ் செய்தபடியால் பூலோகத்தில் இராஜகுமாரத்திகளாக ஜனித்து ஒரு இராஜனுக்கு மனைவிகளாகிப் புத்திர சம்பத்தற்று அலைவீர்கள்" என்று சபித்தபடியால் இந்த ஏழுபேரும் உனக்கு மனைவிகளானார்கள். ஆகவே, இந்த ஏழுபேருக்கும் புத்திரசந்தான மில்லாமற்போயிற்று" என்றும், ஆனது

பற்றி ஸ்ரீ பூதபுரிக்குப் போய் அவ்விடம் அநந்தஸரஸில் ஸ்நானஞ் செய்வாயாகில் உனக்குப் புத்திரசந்தான முண்டாகும்” என்று பரமசிவம் ஆக்ஞாபிக்கவே, அந்த இராஜன் பூதூருக்கு வந்து தீர்த்த ஸ்நானஞ் செய்கையில் ஒரு நாள் அந்த ஸரஸில் ஸ்நானஞ் செய்யும்பொருட்டு, ஸரஸி என்னும் ஒரு அப்ஸரஸ்ஸ்திரீ தனது குமாரத்தியுடன் வரவே அந்தக் குமாரத்தியை இராஜன் கண்டு மோஹிக்க அதை யறிந்த அவன் தாயாரான சரசி என்பவள் மேற்படி கன்னிகையை இராஜனுக்கு விவாஹம் செய்துகொடுத்தாள். அந்தக் கன்னிகையுடன் அந்த இராஜன் தனது நாட்டுக்கு வந்தமேல் அத்தியுமந்தன், சுதர்சனன், சுப்ரதீபன் என்ற மூன்று குமாரர்களைப் பெற்று அவர்களுக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்வித்துத் தான் மறுபடியும் ஜனனமில்லாமற் பரமபத மடைந்தான்.

---

## ஸ்ரீ இராமனுஜாசாரியார் சரித்திரம்.

சென்னையம்பதிக்கு வடகிழக்குத் திசையில் சுமார் மூன்றுகாததூரத்தில் இருக்கும் சத்தியவரதமென்னும் காஞ்சீபுரத்துக்கு ஈசானிய திக்கில் இரண்டு காததூரத்தில் பூர்வம் பூதங்களால் நிருமிக்கப்பட்டதனால் பூதூர் என்று புராணப் பிரசித்தமாகித் தற்காலத்தில் ஸ்ரீ பெரும்பூதூரென்னும் புண்ய க்ஷேத்திரத்தில் ஸ்ரீ இராமாநுஜாசாரியருக்கு வாசாயோக்கியமான அழகிய திருமாளிகை பிரகாசிக்கின்றது. பூர்வம் பூதூரில் வாசஞ் செய்துவந்த ஆசூரி கேவசப்பெருமாள் அல்லது சர்வகிரது சோமயாஜியென்ற நாமங்களால் பிரசித்திபெற்ற பிராமணோத்தமருடைய மனைவியாகிய பூமிப்பிராட்டியார் கர்ப்பத்தில் ஸ்ரீமந்நாராயண மூர்த்திக்குச் சயனரூபகனான ஆதிசேஷன் பரமபதநாதருடைய ஆக்ஞையால் கலியுகத்தில் இளையாழ்வாரென்றும், இராமாநுஜமுனியென்றும், உடையவரென்றும், எம்பெருமானாரென்றும், ஸ்ரீ பாஷ்யகாரரென்றும் ஐந்து திருநாமங்களால் பிரசித்தியாகி, பஞ்சாசாரியரை ஆஸ்ரயித்து ஆன்மகோடிகளுக்கு அஞ்ஞானத்தைப் போக்கி, விசிஷ்டாத்துவைத சித்தாந்தத்தை உபதேசித்துப் பரமபதத்தை அடையும்படி செய்ய, சாலிவாகன சகாப்தம் 909 பிங்கள வருஷ சித்திரைமீ சுக்கிலபக்ஷம் ஆருத்ராநட்சத்திரம் கூடிய சப்தமி சுக்கிரவாரம் சுபமுகூர்த்த காலத்தில் அவதரித்தார்.

பிறகு அந்தக் கேசவப்பெருமாள் தமக்கு உண்டான புத்திரசிகாமணிக்கு ஜாதகர்மம் நிறைவேற்றி பதினேராவது தினத்தில் நாமகரணஞ் செய்ய நினைத்து எந்த நாமதேயம் வைக்கிறதென்று சிந்தித்துக்கொண்டிருக்க, அந்தக் குமாரசிரேஷ்டருக்குத் தாய் மாமனாராகிய திரிகாலக்ஞான சம்பன்னராகும் திருமலைநம்பி அந்த இடத்திற்கு வந்து முன்னமே ஸ்ரீமந் நாராயணமூர்த்தி இராமாவதாரத்தை எடுத்த சமயத்தில் லக்ஷ்மணாவதாரமெடுத்த ஆதிசேஷனே இப்பொழுது உம்முடைய கர்ப்பத்தில்அவதரித்தபடியால் இவருக்கு லக்ஷ்மணரென்று பெயரிடும்படியாய்ச் சொன்னபடியால் அதைக் கேட்டு அந்தக் கேசவப்பெருமாளும் தமது குமாரருக்கு லக்ஷ்மணரென்று பெயர் வைத்தார். கீர்வாண பாஷையில் அந்த இலக்ஷ்மணருக்கு இராமானுஜரென்று பொருளாகிறபடியால் அந்த அர்த்தம் கொண்டு திராவிட பாஷையில் இளையாழ்வாரென்கிற நாமமுண்டாயிற்று. பிறகு இந்த இளையாழ்வார் தமது பிதாவினால் உபநயன ஸமஸ்காரஞ் செய்யப்பட்டும், தம் தந்தையாரிடமே வேத சாஸ்திர இதிகாசங்களைக் கற்றும், சாஸ்திரயுக்தவிதிப்பிரகாரம் இல்லறத்தை யடைந்தும், காஞ்சிபுரத்தில் அநேக சிஷ்யர்களுக்கு வேதாந்தாத்வைதோபதேசஞ் செய்துவந்த யாதவ பிரகாசராகிய ஓர் ஏகதண்டயதீஸ்வரரிடம் போய் வேதாந்த சாஸ்திரங்களை யோதியும் வருகையில், இந்த இளையாழ்வாருக்குச் சிறிய தாயார் குமாரரும் மதுரமங்கலம் கிராமவாசியுமாகிய கமலநயன பட்டருடைய ஏககுமாரராகும் கோவிந்தபட்டரென்னும் பிராமண வாலிபரும் வந்து அவருடன்கூட அந்த யாதவ பிரகாசரிடம் வாசித்து வந்தார்.

இது நிற்க, ஒரு நாள், யாதவபிரகாசர் அப்யங்க ஸ்நானஞ் செய்யும்போது சிஷ்யர்களுக்கு இரண்டு சுருதி வாக்கியங்களைப்பற்றி அபார்த்தமாகப் பொருள் விவஹரிப்பதை அந்த இளையாழ்வார் கேட்டு மனதில் துக்கமுண்டாகிக் கண்ணீர் பெருக அக்கண்ணீர் அந்த யாதவபிரகாசருடைய தொடையில் விழுந்து அக்கினிமயமாக எரிய, அப்போது குருவானவர் கண்டு, "ஏன் துக்கிக்கிறீர்?" என்று வினவினர். அதற்கு அந்த இளையாழ்வார் பயபக்தியுடன் "சுவாமீ! தாங்கள் சுருதி வாக்கியங்களுக்கு அனர்த்தஞ் செய்தபடியால்அதைக்கேட்டு அந்தப்புருஷோத்தமனுக்குத்

தாங்களிப்படி அபசாரம் செய்யத் தருமோவென்று துக்கிக்கிறேன்" என்று சொல்லவே, அதைக்கேட்ட யாதவபிரகாசர் இவரை நம்மிடஞ் சேர்த்து வேதாந்த உபதேசஞ் செய்வோமாகில், இவர் நமது மதத்துக்குச் சத்துருவாவாரென்று நினைத்து தாம் ஒருநாள் சிஷ்யர்களைப் பார்த்து, "நாம் யாவரும் கங்கா யாத்திரைக்குப் போகவேண்டும் வாருங்கள்" என்று அழைத்துப்போய் மத்திய வழியில் இந்த இளையாழ்வாரைச் சம்ஹாரஞ் செய்ய நிச்சயித்துக் கொண்டு விந்தியாரணியசமீபத்தில் வரும்போது கோவிந்த பட்டர் யாதவபிரகாசருடைய குரூர மனோபாவத்தை இளையாழ்வாருக்கு அறிவித்து அவரை வேறுவழியில் திரும்பிப் போகும்படி சொல்லித் தாம் மாத்திரம் தமது குருவோடு கூடி காசிக்ஷேத்திரத்துக்குப் போனார்.

பிறகு இளையாழ்வார் விந்தியாரண்யத்தில் வழிதெரியாமல் மயங்குகையில் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியாகிய வரதராஜசுவாமி லக்ஷ்மி சமேதராக வேடன் வேடுவச்சி வேடம் பூண்டு வில்லும் அம்புமோடு இளையாழ்வாரிடம் வந்து நிற்க, அவர், "நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார். அவ்வேடர், "நாங்கள் சத்தியவரத க்ஷேத்திரத்துக்குப் போகிறோம்" என்பதைச் சொல்லக்கேட்டு இளையாழ்வாரும் அவர்களுடன் சத்தியவரத க்ஷேத்திரத்திற்குத் திரும்பிவரவே, மத்தியில் சூரியன் அஸ்தமித்தபடியால் அந்த இரவு ஓர் மரத்தடியில் தங்கி மறுநாள் காலையில் ஸ்நான சந்தியாதி கிரியைகளை நிறைவேற்ற ஜலத்தைத் தேடும்போது தம்முடன் வந்த வேடர், "இதோ நல்ல ஜலம் இருக்கிறது" என்றும், "புண்ணியகோடி விமானம் இருக்கிறது" என்றுஞ் சொல்லி மறைந்தார்கள்.

பிறகு இளையாழ்வார், ஆச்சரியமடைந்து சமீபத்திலிருந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சந்தியாதி காரியங்களை நிறைவேற்றி ஸ்ரீ வரதராஜஸ்வாமியைச் சேவித்து அன்றுமுதல் சுவாமிக்குத் திருமஞ்சன கைங்கரியஞ் செய்து கொண்டு வந்தார். பிற்பாடு யாதவபிரகாசர், தமது சிஷ்யராகிய இளையாழ்வார் தம்முடன் கங்கா யாத்திரைக்கு வராமல் இடையிற் பிரிந்ததைக் கண்டு மனவருத்தமடைந்து மற்றச் சீடர்களுடன் கூடிக் கங்கா நதியில் ஸ்நானஞ் செய்கையில் கோவிந்தபட்டருடைய கையில் ஓர் சிவலிங்கம் ஜனிக்க யாதவபிரகாசர் கண்டு வியந்து இவர் சிவபக்த

ரென்று நினைத்து இவருக்கு உள்ளங்கை நயினரென்று பெயரிட்டார். அதன்பேரில் கோவிந்தபட்டர் தமது வாஸஸ்தலமாகிய மதுமங்கள கிராமத்தைச் சார்ந்து அவ்விடம் தமது கையிலுள்ள சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தும் பிறகு தக்ஷண கைலாசமாகிய திருக்காளத்தி நகரத்துக்குப் போய் அவ்விடமிருக்கும் பரமேஸ்வரருக்குச் சகல உபசாரங்களைச் செய்துகொண்டும் வந்தார். பிறகு யாதவ பிரகாசர் காஞ்சீபுரத்துக்கு வந்து அவ்விடம் ஸ்ரீ வரதராஜ ஸ்வாமிக்குக் கைங்கரியஞ் செய்துகொண்டிருந்த இளையாழ்வாரைக் கண்டு அவரை மகானுபாவரென்று நினைத்துத் தம்மிடம் அழைத்து எப்போதும்போல வேதாந்த கிரந்தங்களைப் போதிக்கையில், ஆளவந்தார் அல்லது யாமுனசாரியரென்னும் பெயர் பெற்ற ஓர் பாகவத சிரேஷ்டர் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திலிருந்து காஞ்சி நகரத்துக்குவந்து வரதராஜ சுவாமியைச் சேவித்துப் பிரதக்ஷணமாகித் தண்டன் சமர்ப்பித்து வீட்டுக்கு வருகையில் யாதவபிரகாசர் தமது சிஷ்யர்களுடன் சுவாமியைச் சேவிக்கப் புறப்பட்டு அந்த ஆளவந்தாருக்கு எதிர்படவே, அவர் பார்த்து யாதவபிரகாசருடன் வரும் திருக்கச்சிநம்பியை யழைத்து, "இந்த யாதவ பிரகாசருடைய சிஷ்யர்களில் இளையாழ்வார் எவர்?" என்று வினவ, நம்பியார் "அஸ்தபாதங்க ளுயர்ந்தும் சுந்தரவடிவுமாயிருப்பவரே இளையாழ்வார்" என்று யாமுனசாரியருக்கு அறிவித்தார். அதைக் கேட்டுத் திருக்கச்சிநம்பி சொன்ன லக்ஷணங்களினால் இளையாழ்வார் இன்னவரென்று அறிந்து "இவர்தான் இனி ஸ்ரீ வைஷ்ணவமதோத்தாரணஞ் செய்ய வல்லவர்" என்று எண்ணிக்கொண்டு ஸ்ரீரங்கத்திற்குத் திரும்பிப் போய்விட்டார்.

பிறகு ஒருநாள் காஞ்சிநகரத்தைப் பரிபாலிக்கும் இராஜசிரேஷ்டனுடைய குமாரத்தியைப் பிரம்மராக்ஷஸி வருத்திவரவே அவ்வரசன் யாதவபிரகாசரை யழைப்பித்து "தாங்கள் மகாத்துமாவானபடியால் பிரம்மராக்ஷஸை ஓட்டிவிடவேண்டும்" என்று சொல்ல, அவரும் போய்ப் பார்த்தார். அப்போது அந்தப் பிரமராக்ஷஸன் "இளையாழ்வார் பாதத்தை எனது தலையின்மேல் வைத்தால் மாத்திரம் யான் போவேன்" என்றான். அவரும் அப்படியே செய்விக்க பிரமராக்ஷஸன் போய்விட்டான். இப்படி இந்த இளையாழ்வார் செய்த ஆச்சரியங்கள் அனேகமுண்டு.

பிறகு ஒருநாள் ஸ்ரீரங்கத்தில் யாமுனாசாரியரென்னும் ஆளவந்தார் தேக அசவுக்கியமாகித் தம்மிடமிருக்கும் பெரிய நம்பியை யழைத்து "நீர் காஞ்சீபுரத்துக்குப் போய் வரதராஜ சுவாமியைச் சேவை செய்துகொண்டிருக்கும் இளையாழ்வாரை உடனே அழைத்து வரவேண்டும்" என்று கட்டளையிட, அந்தப் பெரிய நம்பியாரும் வந்து அப்படியே அழைத்துக்கொண்டு வரவே, ஸ்ரீரங்கத்துக் கருகில் காவிரி தீர்த்தத்தில் அநேக வைஷ்ணவர்கள் கூட்டங் கூட்டமாக விருக்கக் கண்டு "இஃதேது?" என்று வினவ, "ஆளவந்தாராகிய யாமுனாசாரியார் பரமபத மடைந்து சர்மகைங்கரிய மாகிறது" என்று சொல்லக்கேட்டு வியாகுலப்பட்டு "அந்தோ! இவ்வளவு தூரம் வந்தும் இவரைக் கண்டு சம்பாஷிக்கக் கூடாமற்போயிற்றே" என்று துக்கித்து அருகில் போய் விழுந்தழுது பார்க்க அவர் நிறைவேற்றாத மூன்று குறைக ளிருப்பதாகக் காட்டிய கைவிரற் குறிகளைப் பார்த்துத் திருவுள்ளங்கொண்டு வியாகுலத்தினால் ஸ்ரீரங்கநாதரையும் சேவிக்காமல் மறுபடியும் சத்தியவரத க்ஷேத்திரத்திற்கே வந்து ஸ்ரீ வரதராஜ சுவாமியைச் சேவித்துக் கொண்டிருந்தார்.

பிறகு பூவிருந்தவல்லி யென்னும் கிராமத்திலிருக்கும் திருக்கச்சிநம்பியென்னும் பாகவதர் தினந்தோறும் அந்தக் காஞ்சிக்ஷேத்திரத்தில் வரதமூர்த்திக்கு ஆலவட்டகைங்கரியஞ்செய்து இராத்திரி காலத்தில் ஏகாந்தமாக வரதராஜ சுவாமியுடன் பிரத்தியக்ஷமாய் சம்பாஷிப்பதாக இளையாழ்வார் கேட்டு அந்த நம்பியாரைத் தமது வீட்டுக்குப் போஜனஞ்செய்ய வரும்படி பிரார்த்திக்க அந்த நம்பியாரும் அப்படியே சம்மதிக்க, இளையாழ்வார் வீட்டுக்கு வந்து தனது மனைவியாரிடம் இது சங்கதியைத் தெரிவித்து ஸ்நானம் செய்து வந்து சமையல் செய்து வைக்கும்படி ஆக்ஞாபித்தபடியே அந்த அம்மையாரவர்களும் செய்து நம்பியாரை அழைக்கும்படி சொன்னார். இளையாழ்வார் நம்பியாரை அழைத்துவரப் போனார். இதற்குள் திருக்கச்சி நம்பியார் வேறு வழியாக இளையாழ்வார் வீட்டுக்கு வந்து சுவாமி கைங்கரிய காலம் மீறிப்போகிறபடியால் சீக்கிரமாகப் போஜனஞ்செய்து வரதராஜ சுவாமியைச் சேவிக்கப் போனார். அப்போது அந்தம்மாள் திருக்கச்சி நம்பியார் சாப்பிட்ட இலையை ஓர் கோலால் குத்தி யெடுத்தெறிந்து மறுபடியும்

ஸ்நானம் செய்துவந்தார். இதற்குள்ளாக இளையாழ்வார் வந்து மனைவியாரைப் பார்த்து, "இப்போது ஏன் மறுபடியும் ஸ்நானஞ் செய்திருக்கிறாய்?" என்று வினவ, பிராமணரல்லாத நம்பியாருடைய எச்சில் இலையைக் குச்சியால் தாக்கி யெடுத்தமையால் ஸ்நானம் செய்ததாக அம்மையார் சொல்ல, அப்போது இளையாழ்வார் கோபாக்கிராந்தராகி வியாகுலத்துடன் நம்பியாரைக் கண்டு தமது மனைவியார் செய்த அபசாரத்தை க்ஷமிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டார். அன்றுமுதல் நம்பியாரை விசேஷமாக ஆஸ்ரயித்து அவர் சுவாமியைப் பிரத்தியக்ஷமாகச் சேவை செய்யும்போது தமது உள்ளத்தி லிருக்கும் ஆறு சந்தேகங்களைக் கேட்டு அறிந்து தெரிவிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அவரும் இணங்கி அன்று இராத்திரி சுவாமியிடம் ஷ சந்தேகங்களை அறிவித்துத் தக்க சமாதானத்தை அறிந்து அறிவித்தார். அன்றுதொட்டுத் திருக்கச்சி நம்பிகளை அதிகமாகப் பாராட்டி ஆஸ்ரயித்துவந்தார்.

பிறகு ஸ்ரீரங்கக்ஷேத்திர வாசிகளாகிய வைணவர்கள் பெரிய நம்பிகளுக் கருகில் வந்து "தாங்கள் காஞ்சீபுரத்துக்குப் போய் இளையாழ்வாரை ஸ்ரீரங்கநாத க்ஷேத்திரத்துக்கு அழைத்து வரவேண்டும்" என்று வேண்டுகையில், அதற்கு நம்பியாரும் சம்மதித்து அப்படியே புறப்பட்டு வந்து இடையிலுள்ள மதுராந்தக மென்னும் கிராமத்தினருகில் ஓர் ஏரிகரையின்மீது வசித்துவந்த ஏரிகாத்த பெருமாள் சமீபமாக அன்றிருக்க, காஞ்சி நகரத்தில் வரதராஜஸ்வாமி இளையாழ்வார் சொப்பனத்திற் போய் "உமக்குச் சமீபத்தில் வந்திருக்கும் பெரிய நம்பியிடம் போகக்கடவீர்" என்று ஆக்ஞாபித்ததைக் கண்டு, உடனே படுக்கைவிட்டெழுந்து மதுராந்தகத்துக்குப் போய் அவ்விடம் ஏரிகரைமீதிருந்த பெரிய நம்பியாரைக் கண்டு வியந்து தண்டன் சமர்ப்பித்துத் தன்னை சிஷ்யனுக்கிப் பஞ்ச சம்ஸ்காரம் செய்விக்க வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, அதைக் கேட்டு நம்பியாரும் சம்மதித்து அப்படியே பஞ்ச சம்ஸ்காரஞ் செய்தார். அதன்பேரில் அந்த நம்பியாரைக் காஞ்சி நகரத்துக்கு அழைத்துவந்து தகுந்த வீடு முதலானவைகளைத் தயார் செய்துகொடுத்து சுமஸ்த உபசாரங்களைச் செய்துகொண்டு வந்தார். இப்படிக்கு இருக்கும்போது ஒருநாள் காலை ஓர் பரமபாகவதராகிய ஸ்ரீ வைணவர் இளையாழ்வாரிடம் வந்து

“சாதம் வேண்டும்” என்று வேண்டிக்கொண்டார். ஆழ்வா ரும் தமது மனைவியாரை யழைத்துச் சாதமிடும்படி ஆக்ஞா பித்தார். அந்த அம்மையார் “சாதமில்லை” என்று சொல்ல, ஆழ்வார் போய்ப் பார்க்க, வீட்டில் சாதமிருக்கக் கண்டு அந்தப் பாகவதருக்குத் தாமே சாதமிட்டு மனைவியார் பேரில் அதிகமாகக் கோபஞ் செய்துகொண்டார். மேலும் மற்றொருநாள் பெரிய நம்பியாருடைய தேவியாருடன் இளை யாழ்வார் மனைவியார் கிணற்றுக் கருகில் சண்டை செய்து கொண்ட சங்கதியைப் பெரிய நம்பிகள் கேட்டுத் தமது தேவியார்பேரில் கோபஞ் செய்துகொண்டு இளையாழ்வா ரோடு சொல்லிக்கொள்ளாமல் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்குப் போய்விட்டார்.

அதன்பேரில் பெரியநம்பியார் ஸ்ரீரங்க க்ஷேத்திரம் போனதை இளையாழ்வார் அறிந்து, தமது மனைவியார் திருக் கச்சிநம்பியார் உச்சிஷ்டத்தைக் கோலால் குத்தி யெடுத் தெறிந்து ஸ்நானஞ் செய்ததையும், வீட்டிலிருக்கும் சாதத் தைப் பிராமண பாகவதருக்கு இல்லையென்று சொன்ன தையும், பெரியநம்பியார் தேவியாருடன் சண்டைசெய்ததை யும், ஆக மூன்று முறையில் பாகவத அபசாரஞ்செய்ததால் ‘இந்த மனைவியாருடன் இல்லறத்தை நடத்துவது சரியல்ல’ என்று கண்டு, மனைவியாரை யழைத்துத் தமது சொத்து முதலானவைகளைக் கொடுத்துத் தாயார் வீட்டுக்கு அனுப்பி விட்டு, தாம் வரதராஜஸ்வாமி சமீபத்திற் போய் சந்நியாச ஆஸ்ரமத்தை யனுசரித்து வரதராஜ ஸ்வாமியால் இராமா னுஜமுனியென்கிற நாமத்தைப் பூண்டு சுவாமி கைங்கரியத் தைச் செய்துக்கொண்டுவந்தார்.

பிறகு யாதவபிரகாசருடைய தாயார் தமது குமார ரிடம் வந்து “நீர் இராமானுஜமுனிவரை ஆஸ்ரயித்து அவ ரால் திரிதண்ட சந்நியாசியாகக்கடவாய்” என்று சொல்ல, அவர் தமது தாயார் வார்த்தைக் கிணங்கி, “நான் முன் அவ ருக்குச் செய்ய நினைத்த அபசாரத்துக்காகப் பூமிப்பிரதக்ஷ ணஞ்செய்து பிறகு ஆஸ்ரயிக்கிறேன்” என்று சொன்னதைக் கேட்டு, உடனே திருகச்சிநம்பியார்சமீபத்திற்போய் தமது குமாரர் சொன்ன சங்கதியையுரைக்க, அதுகேட்டு நம்பியார் வரதராஜ சந்நிதிக்கு வந்து யாதவபிரகாசருடைய மனோ பாவத்தை யறிவித்தார். அப்போது வரதராஜ ஸ்வாமியார் நம்பியாரைப் பார்த்து, “யாதவபிரகாசர் இராமானுஜ முனி

யை ஒருதரம் பிரதக்ஷணம் செய்தால் அதுவே பூமி பிரதக்ஷணம் செய்ததற் கொப்பாகும்'' என்று ஆக்ஞாபிக்க, நம்பியார் இதை யாதவபிரகாசரிடம் சொன்னார். அதேபிரகாரம் யாதவபிரகாசர் இராமாநுஜமுனிவருக்குப் பிரதக்ஷண நமஸ்காரம் செய்து, அவரால் திரிதண்ட சந்நியாச ஆஸ்ரமத்தைத் தழுவி, பக்தியுடன் சில வருஷங்களிருந்து பரமபத மடைந்தார். பிறகு திருவரங்கப் பெருமாளுடைய அரையரென்னும் திராவிட பிரசாரக பாகவதர் காஞ்சீபுரத்துக்கு வந்து வரதராஜ ஸ்வாமியைச் சேவை செய்கையில், சுவாமி பிரத்தியக்ஷமாகி, ''உமக்கு என்ன வேண்டுவது?'' என்று வினவ, அந்தப் பாகவதர் கேட்டு ஆனந்தப்பட்டு, ''தமக்கருகில் சேவை செய்யும் இராமானுஜ முனியைத் தரல்வேண்டும்'' எனக் கேட்க, ஆநந்தப்பட்டு அந்தச் சுவாமியானவர் சிறிதுநேரம் சிந்தித்து, ''அப்படியே ஆகட்டும்'' என்று முனிவரைக் கொடுத்தார். அதன்பேரில் இராமானுஜமுனிவர் முதலியாண்டான், கூரத்தாழ்வான் என்னும் சீடர்களைக் கூட அழைத்துக்கொண்டு அரையாருடன் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்துக்குப் போய் இரங்கநாதரைச் சேவிக்க, ஸ்ரீரங்கர் இராமானுஜரைப் பார்த்து, ''நீர் இன்று முதல் எமது சகல சம்பத்துக்கும் அதிகாரியாகி எமது கைங்கர்யத்தைச் செய்து உடையவரென்னும் நாமத்தால் பிரசித்தி பெறவேண்டும்'' என்று ஆக்ஞாபிக்க, அன்று முதல் அந்த முனிசிரேஷ்டர் உடையவர் என்னும் பெயர் பெற்றுப் பகவத் கைங்கரியத்தைச் செய்துகொண்டு வந்தார்.

பிறகு உடையவர் பெரிய நம்பியாரிடம் சேர்ந்து மந்திர ரகசியங்களை உபதேசிக்கும்படி கேட்க அந்த நம்பியார், ''நீர் திருக்கோட்டியூருக்குப்போய் அவ்விடமிருக்கும் நம்பியாரிடம் திருமந்திர இரகசியங்களைத் தெரிந்துகொள்ளும்'' என்று சொன்னார். அதன்பேரில் உடையவர் திருக்கோட்டியூருக்குப் போய் நம்பியாரைக் கண்டு சேவிக்க, அவர் உடையவருடைய முகத்தைப் பார்த்தும் பேசாதிருத்தலைக்கண்டு, உடையவர் மறுபடியும் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்கே திரும்பிவந்தார்.

இப்படிப் பதினெட்டுதரம் உடையவர் அந்த நம்பியாரிடம் போயும் அவர் பேசாதிருந்தலைக் கண்டு சிந்திக்குமளவில் ஒருநாள் அந்தத் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீரங்க

க்ஷேத்திரத்தில் சுவாமியாரைச் சேவித்து நித்திரை செய்கையில், பகவான் அவரது சொப்பனத்திற் போய், "நீர் உடையவருக்குத் திருமந்திர இரகசியங்களைத் தெரியச் சொல்லவேண்டும்" என்று ஆக்ஞாபிக்க, அவர் அப்படிச் செய்யாமல் தமது திருநகருக்குப் போய்விட்டார். பிறகு திருக்கோட்டியூரிலிருந்து ஓர் வைணவர் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்துக்கு வந்து உடையவரைக் கண்டு அவருடன் திருக்கோட்டியூர் நம்பியார் திருமந்திர இரகசியங்களைச் சொல்லாமல் போனதினால் உண்டான கிலேசத்தை யறிவிக்க, ஸ்ரீ வைணவர் கேட்டு நம்பியாரிடம் போய் உடையவருடைய வியாகுலத்தை யறிவித்தார். அதன்மேல் உடையவரைப் பவித்திர திரிதண்டத்துடன் அழைத்துவரும்படி ஸ்ரீ வைணவருடன் சொல்ல, அவரும் வந்து அழைக்க, அப்போது எதிராஜர் திரிதண்ட பவித்திரங்களைத் தரிக்காமலே அவசரமாக முதலியாண்டான் கூரத்தாழ்வான் ஆகிய சீடர்களுடன் நம்பியாரிடம் சென்று சேவிக்கையில், அவர், "உமது தண்ட பவித்திரங்களை எவ்விடம் வைத்தீர்?" எனக் கேட்க, அப்போது உடையவர்: முதலியாண்டான் திரிதண்டமாகவும், கூரத்தாழ்வான் பவித்திரமாகவு மிருப்பதாகச் சொன்னார்.

பிறகு நம்பியார் உடையவருக்கு விசேஷ மந்திர இரகசியார்த்தங்களை உபதேசித்து, "நீர் அதைப் பகிரங்கமாக்கக்கூடாது" என்று ஆக்ஞாபித்திருக்க, உடையவர் உடனே அந்தத் தலத்திலிருந்த ஸ்ரீ வைணவ சபாமத்தியில் இந்தத் திருமந்திர இரகசியங்களைப் பகிரங்கப்படுத்திய பிரஸ்தாபத்தைக் கேட்டு, உடையவரை அழைத்து, "நீர் இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யலாமோ?" என்று கேட்டும், "நீர் குருவாக்கியத்தை மீறி நடந்தமையால் நரகத்தை யடைவீர்" என்றும் சபிக்க, அதைக் கேட்ட உடையவர் புன்னகைப்புடன் "அடியேனாகிய ஒருவனுக்கு நரகம் சம்பவித்தாலும் அடியார் உதவியால் அநேகருக்குப் பரமபதங் கிடைக்குமாகையால் அந்தத் திருமந்திர இரகசியங்களைப் பகிரங்கப்படுத்தினேன்" என்று சொன்னார். உடனே நம்பியார் கேட்டு ஆனந்தப்பட்டு, "நீர் எம்பெருமானே" என்று அவரை ஆலிங்கனஞ் செய்துகொண்டார். அன்றுமுதல் உடையவர் எம்பெருமானார் என்று சிறப்புப் பெயர் பெற்று ஸ்ரீரங்கக்ஷேத்திரத்திற்குவந்து திருமாலையாண்டான் ஆசா

ர்யரிடம் கலியுகாதியில் ஜனித்த நம்மாழ்வாரால் இயற்றப்பட்ட திருவாய்மொழியென்னும் திவ்விய பிரபந்தத்தை அத்யயனம் செய்துவந்தார்.

பிறகு யக்கியமூர்த்தியென்னும் ஒரு எதீஸ்வரர் உடையவருக்குச் சமீபத்தில் வந்து அவரிடம் சாஸ்திரவாதஞ் செய்ய ஆரம்பிக்கவே உடையவர் அந்த எதீஸ்வரரைப் பார்த்து, "உம்மிடம் தர்க்கத்தில் யான் தோல்வியடைந்தால் இனிமேல் சாஸ்திரவாதமே செய்கிறதில்லை" என்று பிரதிஞ்ஞை செய்கிறேன்; ஆனால் நீங்கள் தோல்வியடைந்தால் என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்க, அதற்கவர் "உடையவரே! யான் தோல்வியடைந்தால் உமக்குச் சீடனாகி உமது மதத்தை யனுசரிக்கிறேன்" என்றார். அதன் பேரில் இருவரும் பதினெட்டுநாள்வரையில் சாஸ்த்ரவாதஞ் செய்து உடையவரால் ஜயிக்கக்கூடாமற் சிந்தித்து ஆகாரமின்றி பகவத்தியானஞ் செய்கையில், ஸ்ரீ ரங்கநாதசுவாமி தமது சொப்பனத்தில் வந்து யாமுனாசாரியரியற்றிய மாயாவாத கண்டன இரகசிய கிரந்தத்தை யுபதேசித்தார். உடனே உடையவர் தூக்கத்தை விட்டுத் தைரியத்துடன் வித்வத் சபாமண்டபத்துக்கு வருகையில், யக்யமூர்த்தி பார்த்துத் தாம் உடையவரை ஜயிக்கமாட்டோமென்று எண்ணி, "நான் தோல்வியானேன்" என்று உடையவர் பாதத்தைத் தொட்டுத் தண்டம் சமர்ப்பித்தும், அவரால் பஞ்ச சம்ஸ்காரஞ் செய்யப்பட்டும், திருமந்திர இரகசியங்களை யறிந்துகொண்டும், உடையவரால் பேரருளாள னெம்பெருமானார் என்னும் பெயர் பெற்றுப் பிரகாசித்தார்.

பிறகு உடையவர் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தை விட்டு வேங்கடாசலத்துக்குப் போய் அந்தப் பருவதத்தின்மேல் ஆகாரமின்றிப் பகவத்சேவையைச் செய்தும் மூன்று இரவு இருந்து நான்காம்நாள் மலையை விட்டிறங்கிக் கோவிந்தராஜபுரத்துக்கு வந்து அவ்விடம் தனது தாய் மாமனாகிய திருமலைநம்பியாரிடம் ஸ்ரீ ராமாயண காலக்ஷேபம் செய்து ஒருவருஷ காலமாக விருக்க, ஒருநாள் உடையவர் நம்பியாரிடத்தில் முன் திருக்கையில் இலிங்க மிருந்ததினால் உள்ளங்கைநயினார் எனப் பெயர்பெற்றுத் திருக்காளத்தியிலிருக்கும் கோவிந்தபட்டருக்கு வைணவ சித்தாந்தத்தைப் போதித்துத் தமது மதத்தில் சேர்க்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, நம்பியாரும் திருக்காளத்திக்குப்

போய் அப்போது வில்வமெடுக்கும் நயினரைக் கண்டு அந்த மரத்தடியி லுட்கார்ந்து வைணவ சித்தாந்தத்தைப் போதித்துத் தமது மதத்தில் சேர்க்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, நயினர் கேட்டு வியாகுலத்துடன் தமது தாய்மாமனாகிய நம்பியாரிடம் வந்து நமஸ்கரித்து "இனி மேல்நாம் வைணவத்தைத்தழுவும்படிச் செய்யவேண்டும்" என்று வேண்ட, நம்பியாரும் அவருக்குக் கோவிந்தபெருமாள் என்கிற பெயரிட்டழைத்துத்தமது திருமாளிகைக்குக் கூட்டிக்கொண்டுவந்து உடையவருடன் சேர்த்து ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபம் செய்கையில் உடையவர் கோவிந்த பெருமாளை நம்பியார் உத்தரவின்படி ஸ்ரீரங்கத்துக்குக் கூட்டிக்கொண்டுவந்தார். அவரைச் சந்நியாச ஆஸ்ரமத்தை யனுசரிக்கச் செய்து, எம்பார் என்கிற திருநாமத்தையும் சூட்டி, அவருக்கும் முதலியாண்டானுக்கும் கூரத்தாழ்வானுக்கும் வேதாந்த கிரந்தார்த்தங்களைப் போதித்து ஆத்ம ஞானத்துக்கு இன்றியமையாத ஸ்ரீபாஷ்யம், ஸ்ரீ வேதாந்ததீபம், வேதாந்தசாரம், வேதாந்தசங்கிரகம், கீதாபாஷ்யம்என்னும் ஐந்து கிரந்தங்களை இயற்றினர். பிறகு ஒருநாள் உடையவருடன் சீடர்கள் கூடித் தாங்கள் திக்விஜயம் செய்யவேண்டுமென விண்ணப்பஞ் செய்ய அவரும் சம்மதித்துச் சீடர்களுடன் ஆழ்வார் திருநகரி முதலான திவ்விய தேசங்களுக்குப் போய் அவ்வவ் விடங்களின் பெருமாளைச் சேவித்து அவ்வவ் விடங்களிலிருக்கும் மாயாவாதிகளுடன் தர்க்கஞ் செய்து வென்று கடைசியாக ஸரஸ்வதியிடத்துக்குப்போய் சாஸ்திரவாதஞ் செய்து சரஸ்வதியால் ஸ்ரீ பாஷ்யகாரர் என்னும் பெயர் பெற்று, வேங்கடாத்திரிக்கு வந்து வேங்கடாஜலபதிக்கு சங்கு சக்கரங்களை ஸ்தாபித்து மறுபடியும் ஸ்ரீரங்கக்ஷேத்திரத்திற்கு வந்து வசித்தார்.

பிறகு சிவபரத்துவத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்று சோழராஜன் வித்துவான்களை அழைப்பிக்கையில் உடையவரையும் அழைப்பிக்க, "இராஜன் துஷ்டனைபடியால் அவனது சபைக்குப் போதல் யுக்தமல்ல" என்று வெள்ளைத் துணிகளைத் தரித்துக்கொண்டு மேற்குத் தேசங்களுக்குப் போய் அவ்விடம் சிலநாளிருந்து பிறகு காஞ்சி வரதராஜ சுவாமி சந்நிதியில் திரிதண்ட காஷாயங்களைத் தரித்து, பச்சிமதேசாதிபதியாகிய விட்டல்ராஜனுடைய குமாரத்தியைப் பிடித்திருந்த பிரம்மராக்ஷசனை ஸ்ரீபாத தீர்த்தத்தினால்

நிவர்த்திக்கவே அந்த இராஜன் கண்டு வியந்து உடையவருக்குச் சீடனாகி விஷ்ணுவரதன் என்று பெயர் பெற்றான். பிறகு உடையவர் விஷ்ணுவரதனுக்கு வைணவத்தை உபதேசிக்கவே அவ்விடமிருந்த பன்னீராயிரம் சமணர்கள் வந்து தம்மோடு தருக்கஞ் செய்யவேண்டுமென்று கேட்க, உடையவர் ஓர் மண்டபத்துக்குப் போய் மத்தியில் திரையைக் கட்டி ஒவ்வொருவரிடமும் தாம் ஆயிரம் தலையவதாரமாகிச்சாஸ்திரவாதம்செய்து வென்றதனால் இராஜனைக் கொண்டு அந்தச் சமணரைக் கல்காணத்திலாட்டிவைக்கச் செய்து மேல்கோட்டை யென்னும் திருநாராயணபுரத்துக்குப் போகையில், அவ்விடம் தம்மிடமிருந்த திருமண் செலவாகிவிட்டபடியால் சிந்தித்துச் சொப்பனத்தில் பகவானுடைய ஆக்ஞையால் பூர்வம் கருடபகவான் ஸ்வேததீவபத்திலிருந்து அவ்விடம் கொண்டுவந்த ஸ்வேத மிருத்திகையைக் கொண்டுவரச் சொல்லி துவாதச நாம புண்டரத்தைத் தரித்துக்கொண்டார். பிறகு திருநாராயணபுரத்தின் உத்ஸவ விக்கிரகத்தை டில்லிபாக்ஷாவானவர் எடுத்துக் கொண்டு போய்விட்டபடியால் அவ்விடத்திற்குப் போய் மேற்படி விக்கிரகத்தை கொண்டுவந்து வைத்துப் பன்னிரண்டு வருஷகாலம் வதிந்துவந்தார். அப்போது சோழ ராஜன் இறந்த சங்கதியைக் கேட்டு ஸ்ரீரங்கத்திற்கு வந்து எழுபத்துநான்கு சிங்காஸநாதிபதிகளை நியமித்து வேதாந்த கிரந்தங்களை யுபதேசித்து வைணவ சமயத்தைப் பரவச்செய்தார்.

பிறகு முதலியாண்டான் குமாரராகிய கந்தாடையாண்டான் என்னும் பாகவதர் உடையவரிடம் வந்து, "சுவாமி! தங்களைப்போன்ற விக்கிரகங் கொடுத்து ஆராதிக்க நியமனமானால் தங்களது ஜனனபூமியாகிய ஸ்ரீ பெரும்பூதூரில் ஸ்தாபித்து ஆராதிப்பேன்" என்று பிரார்திக்க, அதற்கவர் இசைந்தபடியால் அவருக்குச் சமானமான ஒரு உருவாகச் சிற்பிகளால் செய்வித்து அந்தத் திவ்விய மங்கள விக்கிரகத்தை உடையவரிடம் கொண்டுவந்துவைக்க, அவர் சந்துஷ்டியுடன் ஆலிங்கனஞ் செய்து கந்தாடையாண்டானைப் பார்த்து, "நீர் இந்த விக்கிரகத்தைக் கொண்டுபோய் எமது ஜனனபூமியாகிய பூதபுரியிற் பிரதிஷ்டைசெய்து நித்தியமும் ஆராதிப்பீராக" என்று அனுப்பினார். அவரும் அதைக் கொண்டுவந்து பிரதிஷ்டைசெய்து நித்தியமும் ஆராதிக்குமாறு பாகவதர்களை நியமித்து ஸ்ரீரங்கத்துக்கு வந்தார்.

இப்படி உடையவர் உலகத்தில் நூற்றிருபதுவருஷ காலமிருந்து ஒருநாள் இரங்கநாதர் தரிசனைக்குப்போய்ச் சேவித்துத் தமக்கு பரமபத நிவாச மருளவேண்டுமென்று கேட்க, அப்படிச் செய்விக்க ஸ்ரீரங்கநாதருக்கு இஷ்டமில்லாதிருந்தும், உடையவருடைய கட்டாயத்துக்கிணங்கி சம்மதிக்க, உடையவர் தம்மை ஆஸ்ரயிக்குஞ் சீடர்கள் யாவருக்கும் பரம்பத மளிக்கவேண்டுமென்றும் கேட்க அதற்கும் பெருமாள் சம்மதித்தார்.

பிறகு சீடர்களிடம் வந்து தாம் நிர்வகித்துவந்த சகல காரியங்களையும் எந்தெந்தவிதமாக நடத்தவேண்டுமோ அப்படிக்கெல்லாம் நடத்தவேண்டுமென்று நியமித்து, பத்மாசனத்துடன் வீற்றிருந்து பரவாசுதேவ தியான பாராயணராகி மகா சுத்த தசமி ஸ்திரவார மத்தியானம் மானவ ஜன்மத்தை விட்டு ஆயிரந்தலையுள்ள ஆதி சேஷாவதாரம் பூண்டு இப்போதும் ஸ்ரீமந் நாராயணருக்குத் திருச்சயனமாகப் பிரகாசிக்கிறார்.

பிறகு இந்த மஹாத்துமாவின் திருமேனியை வெளியில்விட ஸ்ரீரங்கநாதருக்கு இஷ்டமில்லாமையால் நம்மாழ்வாரைப்போல் பிராகாரத்துக்குள் வைத்துச் சர்ம கைங்கரியங்களை நடத்தக் கந்தாடை யாண்டானை யழைத்து நிறைவேற்றும்படி சாதித்தருள உத்தம நம்பியார் செய்வித்தார்.

## உடையவருக்குப் பஞ்சாசாரியர் உண்டான விவரம்.

பூர்வத்தில் பெரிய நம்பியாரால் பஞ்ச சம்ஸ்காரம் செய்யப்பட்டபடியால் அவர் ஒரு ஆசாரியரானார். திருவரங்கப்பெருமாள் அரையர் உதவியால் ஸ்ரீரங்கம் சேர்ந்து அதிகாரம் பெற்றமையால் அந்த அரையர் ஆசாரியரானார். ஸமஸ்கிருதபாஷையினால் ஸ்ரீ கோஷ்டிபுரியென்னும் திருக்கோட்டியூர் நம்பியாரால் திருமந்திர இரகசியங்கள் உபதேசிக்கப்பட்டபடியால் அவரும் ஒரு ஆசாரியரானார். ஸ்ரீரங்கத்தில் திருவாய்மொழியை அத்தியயனஞ் செய்தபடியால் திருமாலையாண்டான் ஒரு ஆசாரியரானார். திருமலை நம்பியாரால் ஸ்ரீமத் இராமாயண காலக்ஷேபம் செய்தபடியால் திருமலை நம்பியாரும் ஒரு ஆசாரியரானார். ஆகவே உடைவருக்கு ஐந்து ஆசாரியர்கள் உளரென உலகப்பிரசித்தம். ஸ்ரீ கந்தாடையாண்டான் பூதபுரியில் ஸ்தாபித்த இராமாநுஜ விக்கிரகத்துக்கு இப்போது நித்திய உற்சவ

மும், சித்திரைமாதத்தில் பிரமோற்சவமும் மஹா விபவத்துடன் நடந்தேறிவருகின்றன.

## ஸ்ரீ பெரும்பூதூரின் தற்காலஸ்திதி.

இப்போது இந்த ஸ்ரீபெரும்பூதூர் என்னும் திவ்விய தேசமானது செங்கற்பட்டு ஜில்லாவைச் சார்ந்த காஞ்சீபுரத்தின் சப்டிவிஜனாக விருக்கிறது. இதிலும் இதன் சுற்றுப் பக்கங்களிலும் ஏராளமாக நெல் விளைகிறபடியால் சர்க்காருக்கு வருஷத்தில் 10,000க்கு மேற்பட்ட பேரீஸ் கட்டக்கூடியதா யிருக்கிறது. இது சென்னையம்பதிக்கு இருபத்தைந்து மைல் தூரத்திலும், திருஎவ்வுளூருக்குப் பத்துமைல் தூரத்திலும் இருப்பதால், ஏராளமான ஜனங்களும், முக்கியமாகச் சென்னை நகரவாசிகளும் வருஷா வருஷம் பிரமோற்சவ முதலானவைகளுக்கு வரத்துப் போக்கா யிருக்கிறார்கள். ஆகவே இப்போது இந்தத் திவ்ய தேசத்தில் ஆயிரத்திற் கதிகமான வீடுகளும், பத்தாயிரத்திற் கதிகமான ஜனங்களும் இருப்பதால் இதை ஒரு தாலுக்காவிற்குச் சமமாகச் சொல்லலாம். இவ்விடத்தில் சப் மாஜிஸ்திரேட் கச்சேரியும், போலீஷ் ஸ்டேஷனும், போஸ்டாபீஸும், ஆஸ்பத்திரியும், சில பாடசாலைகளும் ஸ்தாபிக்கப்பட் டிருப்பதன்றியில் அனந்தசரசு, இராமாநுஜபுத்தேரி என்ற திவ்யமான தீர்த்தங்களு மிருக்கின்றன.

உடையவர் கோயிலானது சற்றேறக்குறைய திருநாராயணமூர்த்தியின் சந்நிதியின் பரிமாணமுள்ளதாயிருந்தாலும் அதைவிட அழகும் சுமார் முந்நூறு அல்லது நானூறு வருஷங்களுக்குமுன் கட்டிய கோபுர முதலானவைகளாற் சிறந்து விளங்குகின்றது. இதற்கு வருஷாவருஷம் சர்க்கார் வருமானம் 250 ரூபாய். இந்தத் தேவஸ்தான சிப்பந்திகளின் விவரம்: ஒரு அமீனாவும் 10 ரூபாயில் திருவாபரண குமஸ்தாவும், 15 ரூபாயில் முக்தியார் குமஸ்தாவும், 7 ரூபாயில் ஒரு கணக்கனும், 5 ரூபாயில் ஒரு மணியமும், 5 ரூபாயில் ஸ்ரீ பண்டார உக்கிராணத்தாரும், 5 ரூபாயில் 2 சுயம்பாகிகளும், 3 வராகனில் 3 சேவகர்களும், ஒரு வராகனில் கோபுரம் காப்போனும், 4 ரூபாயில் குளோப்பு போடுவோனும், 7 ரூபாயில் ஒரு யானைக்காரனும், 5 ரூபாயில் டங்காகாரனும், 4½ ரூபாயில் கபாடக்காரனும், 7 ரூபாயில் இரண்டு

நாகசுரமும், 3 ரூபாயில் ஒத்துக்காரனும், 2½ ரூபாயில் கைத்தாள்க்காரனும், 6 ரூபாயில் டமார ஜதையும், 2 ரூபாயில் தவுல்காரனும், 3 ரூபாயில் நட்டுவனும், 2 ரூபாயில் மத்தளக்காரனும், 1 வராகனில் நகாரிக்காரனும் சிப்பந்திகளாயிருப்பதன்றியில், சுத்தமானிய வருமானத்தில் 11 தாசிகளும், 4 அர்ச்சகர்களும் பரிசாரகர்களும், 2 வீடு மணவாளர்களும் அஷ்டகோத்திரத்தாரும், 4 வீடு கைப்பலகையாரும், இருப்பதன்றியில் 4 வீடு தாச நம்பிகளும், 2 வீடு சந்நிதி தீவட்டிக்காரரும், கட்டியக்காரரும், நெமந்தம் ஸ்ரீ பாதந்தாங்கிகளும், கொல்லன், தச்சன், தட்டான், தலையாரி, குயவன், அத்தியாபகர் 20 வீட்டுக்காரரும், ஆகிய இவர்கள் மிராசு வருமானத்தில் இருக்கிறார்கள்.

இது தென்கலை கோயிலாக விருந்தபோதிலும் முதல் தீர்த்தம் வடகலை தாதாசாரியாருக்கும், 2-ம் தீர்த்தம் எதிராஜ சுவாமிகளுக்கும், 3-ம் தீர்த்தம் ஜீயங்காருக்கும் வழங்கிவரப்படுகின்றன.

மூலவர் உற்சவர் விக்கிரஹங்கள், கோயிலுக்குள் ஆதிகேசவப்பெருமாள், எதிராஜவல்லித் தாயார், ஆண்டாள், உடையவர், நம்மாழ்வார், திருக்கச்சிநம்பி, நம்பிள்ளை, ஆளவந்தார், பிள்ளைலோகாசாரியார், வேதாந்த தேசிகர், சக்கரவர்த்தித் திருமகனார், வேணுகோபாலர், மடப்பள்ளி நாச்சியார், பெரியதிருவடி, கூரத்தாழ்வார், மணவாளமாமுனிகள், மண்ணளந்த பெருமாள், சிறியதிருவடி ஆகிய விக்கிரகங்கள் வெகு சுந்தரமாக விருக்கின்றன.

## உபயங்கள்.

சமீபகாலத்திற்குமுன் வெங்கடரங்கப்பிள்ளை யென்னும் ஓர் வைணவபாகவதர் ஒருநாள் கொள்ளையில் சம்பாதித்த பொருளால் ஒரு பெரிய இரதத்தையும், சுமார் லக்ஷம் ரூபாய் விலையுள்ள திருவாபரணங்களையும் செய்வித்தாராம். ஜமீன்தார் இராமானுஜலு நாயடவர்கள் உள் மண்டபத்தைக் கட்டுவித்தார். சந்தான சுவாமிகள் பொன்னரங்க மண்டபம் கட்டுவித்தார். இராமானுஜ கூட்டம் அப்பய்ய செட்டியார் மணவாளமாமுனிகள் சந்நிதியைக் கட்டுவித்தார். கிரந்தி இராமசாமி செட்டியார் லக்ஷம் ரூபாய் திருவாபரணங்கள் செய்வித்தார். பச்சபுலுசு வெங்கடகிருஷ்ணம செட்டியார் நாற்பதினாயிரம் ரூபாயில் வயிர

முடியைச் செய்துவைத்தார். இராமானுஜ கூட்டம் ஸ்ரீராமசாமிசெட்டியார் இருபதினாயிரம் ரூபாயில் ஒரு முத்தாரம் செய்வித்தார். இர்ரமராவ் 10,000 ரூபாயில் ஒரு தொப்பாரம் செய்வித்தார்.

## மடங்கள் சத்திரங்கள் முதலியன.

இவ்விடம் வானமாமலை மடம், அகோபில மடம், எம்பார்ஜீயர் மடம் முதலான மடங்களிருப்பதன்றியில் சடகோபர் பொன்னடிகளால் மஹா உத்ஸவபங்களாவும், எம்பார் சுவாமிகளால் வசந்த உத்ஸவபங்களாவும், பருத்திப்பேட்டை இராமானுஜாலு நாயடவர்களால் வனபோஜனபங்களாவும் கட்டிவைக்கப்பட்டிருப்பதன்றியில், சில வருஷங்களுக்குமுன் ஜனித்த வீரராகவ மேஸ்திரியென்னும் ஓர் உபகாரவர் இந்தத் திவ்விய தேசத்தின் ரஸ்தாபாதை முதலானவைகளைப் பஸ்திப்படுத்தினதன்றியில் நாற்பதினாயிரம் ரூபாயில் ஒரு சத்திரமும் கட்டிவைத்தார். இதன்றியில் வீரராகவலு நாயடு சத்திரம், வரதப்ப செட்டி சத்திரம், நாராயண செட்டி சத்திரம், முகுந்த செட்டி சத்திரம், வீணை கவுரி சத்திரம், வேணுநாயுடு சத்திரம், தஞ்சை கண்ணைய நாயுடு சத்திரம், வல்லப நாயுடு சத்திரம், இராமகிருஷ்ணம நாயுடு சத்திரம், குண்டூர் அம்மாளம்மாள் சத்திரம், கொத்தூர் பைராகி சத்திரம், பெருமாள் ராஜு சத்திரம், வெங்கடராகவலு சத்திரம், திருமலை செட்டி சத்திரம், ராகவலு நாயுடு சத்திரம், குப்புசாமி நாயடு சத்திரம், பூலபந்தல் எதிராஜம்மாள் சத்திரம், சித்தூர் கிருஷ்ணம நாயுடு சத்திரம், துபாசி நாராயணசாமி நாயுடு சத்திரம், வரதப்பமேஸ்திரி சத்திரம், பெரியமேட்டு நரசிங்க பிள்ளை சத்திரம், இரங்கநாயுடு சத்திரம், சுந்தர பாஷ்யம் நாயடு சத்திரம், டேர்அவுஸ் வெங்கிடசாமி நாயடு சத்திரம், கிரந்தி இராமசாமி செட்டி சத்திரம், பேரிசெட்டி சத்திரம், நாவிதன் சத்திரம், சாணார் சத்திரம், வண்ணார் சத்திரம், இன்னும் அனேக ஜனோபகாரமான சில்லரைச் சத்திர கட்டடங்களு மிருக்கின்றன.

## மாச உத்ஸவங்கள்.

சித்திரைமீ - கேசவபெருமாள் பிரம்மோத்ஸவம்.
வைகாசிமீ - வசந்தோத்ஸவம்.
ஆனிமீ - கோடை உத்ஸவம்.

ஆடிமீ - ஆண்டாள் உத்ஸவம்.
ஆவணிமீ - பவுத்திர உத்ஸவம்.
புரட்டாசிமீ - தேசிகர் நவராத்திரி உத்ஸவம்.
ஐப்பசிமீ - மணவாளமாமுனிகள், பிள்ளை லோகாசாரியார் உத்ஸவம்.
கார்த்திகைமீ - திருமங்கையாழ்வார், நம்பிள்ளை உத்ஸவம்.
மார்கழிமீ - இராப்பத்து, பகல்பத்து உத்ஸவம்.
தைமீ - குருபாஷ்ய உத்ஸவம்.
மாசிமீ - மக உத்ஸவம்.
பங்குனிமீ - பல்லவ உத்ஸவம் முதலானவைகள்

வெகு விமரிசையாக நடந்தேறி வருகின்றன. மேலும், கேசவப்பெருமாளுக்கு பெருஞ்சிபாகம் கம்ம நாயுடு அவர்களும், சேரப்பனஞ்சேரி ராஜுலும், யாதவகுல ஸ்திரீயும், சாணர், கம்மாளர், வேலமரும்பாளையம் பாஷ்யகாருலு நாயுடும், மத்தூர் கம்மநாய்க்கரும், வலத்தாஞ்சேரி நாய்க்கரும், பொந்தூர் கோமுட்டி செட்டிகளும் உத்ஸவங்களை நடத்திவருகிறார்கள்.

உடையவருக்கு கர்ணத்தார், தேசாயி செட்டிகள். ரெட்டிகள், வன்னிநாய்க்கர், தாசநம்பிகள், தஞ்சை இராமானுஜலு நாயுடு, கோட்டா கிருஷ்ண செட்டியார், ஷாப்பு ரங்கய்ய செட்டியார், பாளையக்காரர் பாஷ்யகார்லு நாயடு முதலானவர்களால் வெகு விமரிசையாக உத்ஸவங்கள் செய்து கொண்டாடப்பட்டு வருகின்றன. இதற்குச் சராசரி செலவு லக்ஷம் ரூபாய்க் கதிகமாகிறது. தெப்பல் உத்ஸவமும், பாணவேடிக்கையும், இரதோத்ஸவமும் சிறந்ததாக விருந்தாலும் சாத்துமுறை உத்ஸவத்திற்கும் கெந்தபொடி உத்ஸவத்திற்கும் வரும் ஜனங்களுக்குக் கணக்கேயில்லை. ஜனங்களுக்கு வேண்டிய சகல பதார்த்தங்களும் நயமான விலைக்கு அகப்படுகின்றன. உத்ஸவகாலங்களில் அநேக கடைக்காரர்களும், முக்கியமாகச் சென்னப்பட்டணத்தார்களும் ஏராளமாக வருவதால் வீடுகளுக்கு வாடகை அதிகம். சில சமயங்களில் திருடர் சோம்பேரிகளுடைய பயமுமுண்டு. இவ்விடத்தில் செய்யும் அலங்காரத்தைப்போல மற்றைய திவ்விய தேசங்களில் காண்பதருமை. சென்னையிலிருந்து பூந்தமல்லியின் வழியாகக் கட்டை வண்டியின் சத்தம் ரூபா 2-8-0. 4½ அணாவில் புகைவண்டியால் திரு

வெவ்வளூருக்கு வந்து அவ்விடமிருந்து ஜட்காவண்டி ஒன்றுக்கு ஒரு ரூபா சத்தங் கொடுத்துவந்து சேவிக்கலாம். சகல மதஸ்தர்களும் பார்த்து ஆநந்திக்கத்தக்கது.

ஸ்ரீ பெரும்பூதூர் மஹாத்துவம் முற்றிற்று.

## ஸ்ரீ பெரும்பூதூரில் ஸ்ரீ இராமாநுஜ தீர்த்தக்கரையில் செய்த பிரார்த்தனை.

எம்பெருமானே! சாக்கியர் முதலான நாஸ்திகரைக் கண்டிக்கவும், சத்சம்பிரதாய சித்தாந்தம் சிறப்புற்றோங்கவும், சகல ஜனங்களையும் தம்மைப்போல் பாவித்துப் பாதுகாக்கவும், பிரம்மசூத்திரம் - ஸ்ரீ பகவத்கீதை முதலான அரிய பெரிய கிரந்தங்களுக்கு விஸிஷ்டாத்வைத சித்தாந்தபரமாக வியாக்கியானங்கள் செய்தும், வைஷ்ணவ மதத்தை ஜாதி - குலம்-அந்தஸ்து-பேதங்களற்றுச் சகலரும் தழுவிவரவேண்டுமென்று இத்தக்ஷணதேச மெங்கும் போய்ப் பிரபல நியாயங்களோடு பிரசங்கம் செய்தும, திருக்கோட்டியூர் நம்பிகளிடம் பலதரம் போய் அஷ்டாக்ஷர மந்திரார்த்தத்தை அறிந்து அதை அனைவரும் அறிந்துய்யும்படிக் கோபுரமேறி உபந்நியாசித்தும், காஞ்சிபுரமென்ன? ஸ்ரீரங்கமென்ன? மேல்கோட்டையென்ன? பின்னும் திவ்ய ஸ்தலங்களைப் பாராட்டிப் பரிமளிக்கச் செய்தும், பேரருளால் பலருக்கு இரகசியார்த்தங்களைத் தெள்ளத் தெளியத் தெரிவித்தும், ஓர் அற்புத புருஷராக அவதரித்த ஸ்ரீ இராமாநுஜருடைய ஜெனனதேசம் இதுவன்றோ? இப்படிப்பட்ட இடத்தில் உன்னைத் தியானிக்கின்றேன். அந்த மஹாபுருஷனுக்கு அளித்த அற்புத ஞான சக்திகளில் கிஞ்சித்து அடியேனுக்கும் கொடுத்து அதைக்கொண்டு இக்காலத்து ஜனங்களுக்குப் பக்தி ஞானத்தைப் போதிக்கும் வன்மையை எனக்குத் தருவாய். அப்படிப்பட்ட மஹாபுருஷன் ஜனித்துத் திருவிளையாட்டல் செய்த இந்தத் திவ்ய ஸ்தலத்தில் இன்று வந்து உன்னைத் தியானிக்க எவ்வளவோ பாக்யம் பெற்றவனானேன். ஓ பரமபுருஷா! என் பிரார்த்தனையை நிறைவேற்றுவாயாக. ஓம் தத்சத்.

## வேறு சில விஷ்ணு ஸ்தலங்கள்.

### 19. திருக்கடிகை.

(இது சோளங்கிபுரம்)

[நரசிம்மன், அக்காரக்கண்ணி, அமிர்தவல்லி, சிங்கக்கோட்டை, திவ்யவிமானம், அமுததீர்த்தம்.]

கிழக்கு முகமாக வீற்றிருந்து சிறிய திருவடிக்குப் பிரத்தியட்சம். பேயாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

### 20. திருநின்றவூர்.

(இது தின்னனூர்)

[வருணவரதன், பக்தவச்சலர், கமலவல்லி, என்னைப்பெற்றதாய், ஸ்ரீநிவாசவிமானம், வருணபுட்கரணி, வர்த்தக்ஷீரநதி.]

கிழக்குமுகமாக நின்று வருணனுக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

### 21. திருவட்டபுயங்கம்.

[சக்கரராஜன், ஆதிகேசவன், பதுமவல்லி, அலர்மேன் மங்கை, ககநாகிரதி விமானம் கஜேந்திரபுட்கரணி.]

மேற்குமுகமாக நின்று கஜேந்திரனுக்குப் பிரத்தியட்சம். பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

### 22. திருத்தண்கா.

[தீபப்பிரகாசன், மரகதவல்லி, ஸ்ரீகரவிமானம், சரஸ்வதி தீர்த்தம்.]

மேற்கு முகமாக நின்று சரஸ்வதிக்கும், பூதங்களுக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 23. திருவேளுக்கை.

[முகுந்தவரதன், மலரான், வேளுக்கைவல்லி, கந்தவிமானம், கந்தசரசு.]

கிழக்கு முகமாக நின்று முசுகுந்த சக்கரவர்த்திக்கும் பிருகுமகாரிஷிக்கும் பிரத்தியட்சம். பேயாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 24. திருப்பாடகம்.

[பாண்டவர்தூதன், உருக்குமணி, சத்யபாமை, பத்ரவிமானம், மச்சதீர்த்தம்.]

கிழக்கு முகமாக வீற்றிருந்து அரீதமகாமுனிக்குப் பிரத்தியட்சம். பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 25. திருநீரகம்.

[ஜகந்நாதன், அக்ரூரமடந்தை, நிலமடந்தை, ஜகதீசுவரவிமானம், அக்கிரதீர்த்தம்.]

கிழக்கு முகமாக நின்று அக்ரூரமாமுனிக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 26. திருநிலாத்திங்கட்டுண்டம்.

[சந்திரவதனன், நேரொருவரில்லாவல்லி, புருஷசுத்த விமானம், சந்திரபுட்கரணி.]

மேற்கு முகமாக நின்ற கோலம். இது காமாட்சியம்மன் சன்னிதியில் திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 27. திருவூரகம்.

[திருவிக்கிரமன், அமுதவல்லி, மலர்முகத்தாள், ஸ்ரீகரவிமானம், சேடதீர்த்தம்.]

மேற்கு முகமாய் நின்று ஊரகமென்ற ஆதிசேடனுக்குப் பிரத்தியட்சம். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 28. திருவெஃகா.

[யதோக்தகாரி சொன்னவண்ணஞ் செய்தபெருமாள், கோமளவல்லி, வேதசாரவிமானம், பொய்கைபுட்கரணி.]

மேற்கு முகமாகப் புயங்கசயனம். பொய்கையாழ்வாருக்கும், கணிக்கண்ணருக்கும், பிரமாவுக்கும் பிரத்தியட்சம். வேதவதிக்கு வடகரையில் பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 29. திருக்காரகம்.

[கருணாகரன், பத்மாமணி, வாமனவிமானம், அக்ராயதீர்த்தம்.]

தெற்கு முகமாய் நின்று கார்கரிஷிக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 30. திருக்கார்வானம்.

[நவநீதசோரன், கமலவல்லி, புட்கலவிமானம், கௌரிதடாகம்.]

மேற்கு முகமாக நின்று காமாக்ஷியம்மன் சந்நிதியில் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 31. திருக்கள்வனூர்.

[ஆதிவராகன், அபயநாயகி, வாமனவிமானம், நித்யபுட்கரணி.]

பொன்கண்ணன் என்னும் அசுரன் பூமியைச் சுருட்டிப் பாதாளத்திற் சென்றவனை வதைத்து அப்பூமியை மீட்டது. மேற்கு முகமாக நின்று அசுவத்தநாராயணனுக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 32. திருப்பவளவண்ணம்.

[ஸ்ரீ பவளவண்ணன், பவளவல்லி, பிரவாளவிமானம், சக்கரதீர்த்தம்.]

மேற்கு முகமாக நின்று அசுவினிதேவருக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## 33. திருப்பரமேசுவரவிண்ணகரம்.

[வைகுந்தநாதன், வைகுந்தவல்லி, முகுந்தவிமானம், அயிரமதீர்த்தம்.]

மேற்கு முகமாக வீற்றிருந்து பல்லவராயனுக்குப் பிரத்தியட்சமான புராதன ஸ்தலம்.

---

## 34. திருப்புட்குழி.

[விஜயராகவன், மரகதவல்லி, விஜயகோடிவிமானம், சடாயுதீர்த்தம்.]

கிழக்கு முகமாக வீற்றிருந்து சடாயுவுக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 35. திருநீர்மலை.

[ஸ்ரீரங்கநாதன், மணிமாமடந்தை, தேவகிரிவிமானம், மணிகர்ணிகாதீர்த்தம்.]

தெற்கு முகமாக மாணிக்கசயனம். தொண்டைமான் சக்கரவர்த்திக்கும், பிருகுரிஷிக்கும், மார்க்கண்டேயரிஷிக்கும் பிரத்தியக்ஷம். பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 36. திருவிடவெந்தை.

[நித்தியகல்யாணர், மலர்மடந்தை, கல்யாண விமானம், கல்யாண தீர்த்தம்.]

கிழக்கு முகமாக நின்று மார்க்கண்டேயருக்குப் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## 37. திருக்கடன்மல்லை.

(இது மாபலிபுரம்.)

[ஸ்ரீ தலச்சயனத்துறைவர், புண்டரீக நீலமங்கை, ககனாக்ருதி விமானம், கருடநதி தீர்த்தம்.]

கிழக்குத் திருமுகமாக புஜங்கசயனம். புண்டரீகரிஷிக்குப் பிரத்தியக்ஷம். பூதத்தாழ்வார், திருமழிசையாழ்வார் மங்களாசாசனம்.

## மஹாபலிபுரம்.

(இது செங்கற்பட்டுக் கடுத்த சாத்ராஸுக்கும் கோலாங்குக்கும் மத்தியில் சுமார் 18 மைல் தூரத்தில் இருக்கிறது.)

செங்கற்பட்டிலிருந்து சாத்ராஸ் பாலம் வரையில் சுமார் 18 மைல்கள் தூரம் ரோட் அதிக சௌகர்யமான தாயும், சுமார் 2½ ரூபாய் வாடகையில் ஜட்காவண்டிகள் கிடைக்கக்கூடியதாயும் இருக்கிறது. சாத்ராஸிலிருந்து 5 மைல் தூரத்திற்கு 2 ரூபா வாடகையில் படகுகள் போய் வரக் கிடைக்கின்றன. 5 மணி காலத்தில் கோயிலுக்குப் போகலாம். சுமார் 6 பேர் தங்கக்கூடிய ஒரு பங்களா அங்கே இருக்கிறது. சுதேசிகளுக்கு வேண்டிய சௌகர் யங்களு மிருக்கின்றன. சமுத்திரக்கரைக்குச் சுமார் அரை மைல் தூரத்திலும் சுற்றுப்பக்கத்தி லிருக்கும் மலைத் தொடர்ச்சிகளில் இந்தக் கோவில் இருக்கிறது. இவைகளில் 5 பாறைகளைக் குடைந்து நிர்மாணிக்கப்பட்ட கோயில்கள் தோன்றுகின்றன. இவைகளி லொன்று மற்றைய நான்கு கோயில்களை விட்டுப் பிரிவினை பெற்றதாயும் தென்பாகத் தில் 45 அடிகள் உயரமும் 30 அடிகள் அகலமு முள்ளதா யிருக்கிறது. வடபக்கத்தி லிருக்கும் முதல் கோயில் 11 அடிகள் அகலமும், 16 அடிகள் உயரமு முள்ளதா யிருக் கிறது. அதற்கடுத்த கடைசி கோயில் 11 அடிகள் அகல மும், 16 அடிகள் நிகளமும், 20 அடிகள் உயரமு முள்ளதா யிருக்கிறது. மூன்றாவது கோயிலானது 42 அடிகள் நிகள மும், 25 அடிகள் அகலமும், 25 அடிகள் உயரமும் பொருந் திய நிகளப்போக்கான கட்டடம். பூகம்பத்தினால் சில பாகங்கள் வெடிப்புற்றும், சில பாகங்கள் இடிந்தும் கிடக் கின்றன. கடைசி கோயிலானது 27 அடிகள் நிகளமும், 25 அடிகள் அகலமும், 34 அடிகள் உயரமு முள்ளதா யிருக்கிறது. இந்த கடைச்சல் வேலையானது 16-ம் நூற் ருண்டில் செய்ததாகத் தோன்றுகிறது. இது பார்வைக்குப் புத்தருடைய கோவிலைப்போல் தோன்றினும் உண்மையில் திரிமூர்த்திகளுடைய கோயிலாக இருக்கிறது. திருஷ் டாந்தமாகக் கடற்கரை யோரத்திலுள்ள கட்டடங்களில் இருக்கும் கோபுரங்களும் விமானங்களும் கருடஸ்தம்பமும் போதுமான சாக்ஷியமாகும். இந்தக் கோயிலானது 160 அடிகள் விஸ்தீரண முள்ளதாயும் கோபுர விமானங்கள் 60 அடிகள் உயரமுள்ளதாயும், அநேக கலசங்கள் உள்ள

தாயும் இருக்கின்றன. கோயிலுக்குள்ளிருக்கும் விருஷபாதி விக்கிரகங்கள் கடல் உப்புக்காற்றினால் சீர்கெட்டு வருகின்றன. கர்பகிரஹத்துக்குள் இருக்கும் விமானத்தில் 16 பட்டைகள் தீர்த்த கரும் ஸ்படிக பெரிய லிங்கம் இருக்கிறது. அக்கோயிலுக்குப் பின்புறத்தில் விஷ்ணு விக்கிரகம் ஆதிசேஷன்மேல் இருக்கும் பாவனையாகச் செய்யப்பட்டிருக்கிறது. மேலும் அப் பாறைச் சுவற்றில் பிர்மா விஷ்ணு பார்வதி பரமசிவம் சுப்ரமணியர் விக்கிரகங்களும் செதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. பாறையின் இடது பக்கத்தில் மஹாபலி சக்கரவர்த்தியின் உருவத்தைப் போலவும், அதற்குப் பக்கத்தில் ஐந்து ராஜாக்களைப்போலவும், அவர்கள் மனைவிகளைப்போலவும், நான்கு வீரர்களைப்போலவும், ஐந்து சந்நியாசிகளைப்போலவும், ஒரு ரிஷியைப்போலவும் செதுக்கி வைக்கப்பட்டும் இருக்கின்றன. அதற்கருகில் அர்ச்சுனன் தபசு செய்வதைப்போலவும், புலி சிங்கம் மான் முதலான மிருகங்களைப் போலவும் செதுக்கிவைக்கப்பட்டிருக்கின்றன. மத்திய பாகத்தில் புத்ததேவர் ஐந்து சிஷ்யர்களோடு தபசு செய்யும் சிலைகள் இருக்கின்றன. பாறையின் மத்தியில் ஒரு பெரிய நாகப்பாம்பு சிலை யொன்றிருக்கிறது. அதன் வலது பக்கத்தில் அநேக ராஜர்களைப் போலவும், அவர்கள் மனைவிகளைப்போலவும், யானை பூனை எலிகளைப்போலவும் செதுக்கப்பட்டிருக்கின்றன. சின்களினால் இந்து மதஸ்தர்களும் புத்த மதஸ்தர்களும் ஒருகாலத்தில் சமரசமாக வாழ்ந்திருந்தார்களென்றும், அக்காலத்தில் இக்கோயில்கள் கட்டப்பட்டிருக்கவேண்டுமென்றும் தோன்றுகின்றன.

---

## 38. மதுராந்தகம்.

[கோதண்டராமன், ஜானகி, மந்திரவிமானம்,
மந்திரவாவி தீர்த்தம், மகிழவிருக்ஷம்.]

மார்க்கண்டேய ரிஷிக்குப் பிரத்தியக்ஷமான புராதன ஸ்தலம்.

---

# தெலுங்கு நாடு.

## தெலுங்கு அல்லது ஆந்திர நாட்டின் விவர சங்கிரகம்.

ஆரிய நாட்டின் வடநாடுகளில் பௌத்த மதஸ்தர் அதிகரித்து இந்து மதஸ்தரைத் தம் மதத்தைத் தழுவும்படி போதித்துவரவே இந்து மதத்திற் பிடிவாதமான நம்பிக்கையுள்ள பலர் கிழக்கு மேற்கு தென்னாடுகளில் குடியேறினார்கள். அதாவது மகததேசத்தில் ஆண்டுவந்த ஆந்திரர்களில் விக்கிரமாதித்தன் முதலானோர் மேற்கிலுள்ள உஜ்ஜயினி முதலானவிடங்களிலும், கஜபதி முதலானோர் ஓரிஸா, ஜகந்நாதம் முதலான விடங்களிலும், புதுசமஸ்தானங்களை ஸ்தாபித்தபோது அவர்கள் இனத்தாரில் சிலர் தெற்கே வந்து விஜயநகரத்தில் நரபதி சமஸ்தானத்தை ஸ்தாபித்தார்கள். இப்படிப்பட்ட காலத்தில் மகம்மதியர் ஆரிய நாட்டின் வடக்கு - கிழக்கு - மேற்கு - தெற்கு நாடுகளில் புகுந்து அஸ்வபதி என்னும் பெயரால் சில சமஸ்தானங்களை ஸ்தாபித்தார்கள். இக்காலத்து ஆரிய வர்த்தத்தின் கெஜபதி - நரபதி - அசோபதி என்னும் மும்மன்னர்களை ஆண்டு பிரசித்தி பெற்றுவந்தார்கள் என்று சில சரித்திர சாசனங்கள் முறையிடுகின்றன. மகத நாட்டிலாண்ட ஆந்திர அரசர்களில் சிலர் தென் நாடுகளை நாடி வந்து கோதாவரி கிருஷ்ணாநதிக் கரையில் அப்போதிருந்த கலிங்க நாட்டில் தங்கிப் பிறகு பின்னும் தெற்கே வந்து சேர சோழ பாண்டிய நாடுகளை ஸ்தாபித்ததாகச் சில சரித்திர சாசனங்கள் முறையிடுகின்றன. இவைகளில் மகத நாட்டு ஆந்திர வம்சத்தாரே கிருஷ்ணா கோதாவரி நதிகளுக்கிடையிலுள்ள கலிங்கநாட்டில் ஆந்திர சமஸ்தானங்களை ஸ்தாபித்து ஆண்டுவந்ததாகவும், அந்த ஆந்திரர்களே இப்போதிருக்கும் தெலுங்கரின் ஆதிபிதாக்களாய் இருக்க வேண்டுமென்றும் தோன்றுகின்றன. எப்படியெனில், ஆந்திரம் என்னும் பதத்திற்குப் பிரதிஷ்டை, பெருமை மேன்மை என்றாதி பொருள்களானபடியால், ஆந்திரர் என்றால் பிரதிஷ்டை பெற்றவர்கள், பெருமை பெற்றவர்

கள், மேன்மக்கள், உயர்ந்தோர் என்றுதி பெயர்களால் பிரகாசித்துவந்தார்கள். அந்த ஆந்திரர் ஆதியில் சமஸ்கிருத பாஷையை வழங்கிவந்தார்கள். பிறகு அந்த பாஷையின் சில பதங்களுக்கு இறுதியில் டு, மு, வு, லு, என்றுதி ஈறு அல்லது பிரத்தியங்கள் சேர, அது ஒரு புது பாஷைபோலாகியது. அந்த ஆந்திரபாஷை ஒரு காலத்தில் கங்கை நதிமுதல் தென்னாடுகள் யாவற்றிலும் வழங்கியதன்றியில்-ஜாவா, சுமேத்திரா முதலான விடங்களிலும் பரவியிருந்தது. 1861ஆல் இந்துதேசத்தில் 10,00,000 பத்துலக்ஷம் மைல்கள் விஸ்தீரணமுள்ள நாடுகளில் சுமார் 17,000,000 ஜனங்களால் இப்பாஷை வழங்கப்பெற்று வந்தது. அந்த பாஷைக்காராகிய ஆந்திரருடைய சந்ததிகள்வடநாடுகளைவிட்டு தக்ஷண தேசத்தில் முதல் முதல் குடியேறிய இடத்திற்கு திரிலிங்கம் என்று பெயர். திரிலிங்கம் என்றால் (1) ஸ்ரீசைல பர்வதம், (2) காளேசுவரம், (3) பீமேசுவரம் என்னும் மூன்றிடங்களில் முறையே சிவபெருமான் மல்லிகார்ச்சுனன், காலநாதன், பீமேசுவரன் என்ற முப்பெயர்களால் மூன்று லிங்கங்களாக வமைந்து அம் மூவிடங்களுக்கும் திரிலிங்காணம் என்று பிரபலமான பெயர்பெற்றுப் பிரகாசித்தபடியால், அப்படிப் பிரகாசிக்கும் மூன்று நாட் டெல்லைகளுக்குள் வந்து குடியேறிய ஆந்திரர்களுக்கு திரிலிங்கர் என்ற பெயரிட் டழைக்கப்பட்டுவர, அந்தத் திரிலிங்கர் என்னும் வார்த்தையானது நாளாவட்டத்தில் தெலுங்கர் என்று மருவியதினால் அந்தத் தெலுங்கர் வழங்கிவரும் பாஷைக்கும் தெலுகு, அல்லது தெனுகு, தெலுங்கு என்று பிரசித்தியாகிவிட்டது. அதற்குத் திருஷ்டாந்தமாக ஆதியில் இம்மாதிரியாகவே பிர்ம்ம க்ஷத்திரியர்களுக்கு ஆதியில் ஆரியர் அல்லது ஆரிய என்று வழங்கிவந்த பட்டப்பெயர்களும், நாளாவட்டத்தில் ஐயா - ஐயர் என்றும், இராஜ என்ற பதம் இராய - இராயலு என்றும் மாறிவிட்டதாகவும் தோன்றுகிறது. இந்த ஆந்திரராகிய தெலுங்கு நாட்டில் அல்லசாணி, பெத்தன்ன, பட்டுமூர்த்தி, நன்னயபட்டு, பிங்களசூரன்ன, இராயினிபாஸ்கருடு, திக்கன்ன, வேமன்ன முதலான அனேக தெலுங்கு வித்வான்கள் ஜனித்து இராமாயணம், பாரதம், பாகவத முதலான சமஸ்கிருத கிரந்தங்களைத் தெலுங்கில் காவியமாகப் பாடிக்கொடுத்த தன்றியில் சீதாராமாஞ்சநேய சம்வாதம், வேமன்னசதகம் முதலான வேதாந்த காவியங்களையும்; ஆமுக்தாவளி, சிங்கார ரசமஞ்

சரி, பிரதாபருத்ரீயம், ரசப்பிரகரணிகா முதலான சிங்கார அலங்கார கிரந்தங்களை இயற்றியதன்றியில், ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளும் அவர் சகோதரர் சாயனாசாரியரும் அநேக உபநிஷத்துக்களுக்குப் பாஷ்யங்களை எழுதியும், அநேக வேதாந்த கிரந்தங்களையும் இயற்றி ஆந்திர நாட்டை அலங்கரித்ததன்றியில், வித்யாரண்ய சுவாமிகள் அப்பாஜி இம்மரசு சதிசிவராயலு முதலான மஹாமதி யூகிகளாகிய மந்திரிகளின் உதவியால் ஹரிஹரராயலு, புக்கராயலு, மல்லிகார்ச்சுனராயலு, விருபாக்ஷிராயலு முதலான யாதவ இராஜர்களாலும்; நரசிம்மதேவராயலு, கிருஷ்ணதேவராயலு, அச்சுததேவராயலு, இராமராயலு, வெங்கடாத்திரிராயலு முதலானவர்களால் அதிக வீர தீர தர்மாநுஷ்டானமாக ஆண்டு அவர்கள் அரசாக்ஷி வடக்கே மானவம் மகதம் முதலான விடங்கள்வரையில் பிரவேசித்ததன்றியில், துங்கபத்ராவுக்குத் தெற்கே துளுவ-கொங்கு-சேர-சோழ-பாண்டியர் அரசு மங்கலடைந்து வந்த காலத்தில் இந்த விஜயநகர சமஸ்தானத்தாருடைய சந்ததியார்களில் அச்சுதப்ப நாயுடு, விஜயராகவலு நாயுடு, விஸ்வநாத நாயுடு முதலானவர்களை அரசர்களாக நியமித்து, கன்னியாகுமரி இலங்கைத் தீவு வரையில் சக்கிரவர்த்திகளாக விருந்தாண்டு வந்தார்கள். அவர்கள் காலத்தில் கிருஷ்ண கோதாவரி நதிகளுக்கிடையில் வடநாடுகளைப்போல் தீர்த்த தலங்களாக இருந்த விடங்களில் அநேக சைவ வைணவ க்ஷேத்திரங்களைக் கட்டி மூர்த்தி தலங்களாக்கி அவைகளுக்கு அநேக ஆடையாபரணங்களையும் மானிய பூமிகளையும் கொடுத்து மஹிமைப்படுத்தி வந்தார்கள். திருப்பதி, காஞ்சீபுரம், ஸ்ரீரங்கம், மதுரை முதலான விடங்களில் அநேக கோயில் கோபுரங்களையும், வேலூர்முதலான இடங்களில் கோட்டை கொத்தளங்களையும் கட்டிக் கௌரவப்படுத்தினதன்றியில், இப்போது இந்த ராஜதானிக்குப் பிரதான பட்டணமாகிய சென்னையம் பதியை ஆங்கிலேயருக்குக் கொடுத்தவர் இவரேயாவர். இப்படி மாக்ஷிமையோடு ஆண்டுவரச்சே மகம்மதியர் புகுந்து அநேக பிரபலமான கோயில் கோபுரங்களை இடித்து அவ்விடங்களில் தமது மசூதிகளைக் கட்டிக்கொண்டார்கள். ஆகவே, சோழ பாண்டிய நாடுகளைவிட மூர்த்தி தலங்களில் இத்தெலுங்கு நாட்டில் சிலவாக விருக்கின்றன. ஆந்தோ! ஆந்திரர் ஆண்ட ஆனெகுந்தி விஜயநகரம் முதலான விடங்களைப்போய்ப் பார்ப்போமாகில் அநேக அழகும் அமைப்

பும் பெற்ற கோயில் கோபுரங்கள் இடிக்கப்பட்டுக் குவிந்து கிடப்பதை இப்போதும் கண்ணுாக் காணலாம். ஆகவே இந்நாட்டில் விசேஷமான சில மூர்த்தி தலங்களையும் இவை களைக் கட்டியாண்ட மன்னர்களுடைய சரித்திர சாரசங்கிர கத்தையும் இதனடியிற் காட்டுகின்றோம்.

## தெலுங்கு நாட்டிலுள்ள மூர்த்திதல தீர்த்தங்கள்.

### 1. அஹோபிலம்.

இந்த வைஷ்ணவ ஸ்தலம் கர்நூல் ஜில்லா சர்வேல் தாலுக்காவைச் சார்ந்த காட்டுவழியாக ருத்ராவரம் கிரா மத்திற் கருகிலிருக்கிறது. இந் நன்மலையின் உச்சியிலும் மத் தியிலும் அடிவாரத்திலும் மூன்று புராதன கோயில்களிருக் கின்றன. இந்த மலையின்மீதும் மலையின் சுற்றுப்பக்கங்களி லும், மலேரியா என்னும் விஷஜுரமும், புலி முதலிய காட்டு மிருகங்களும் குடிகளை அடிக்கடி வருத்திவருவத னுல் ஜனங்கள் போக்குவரவு விசேஷமாய்க் கிடையாது. கிடையாமற்போகவே அந்த க்ஷேத்திரங்கள் கிலமாகக் கிடக்கின்றன. அவைகளைத் தக்கபடி புதுப்பிப்போரும் இல்லைபோலும். கோயில்களைச் சார்ந்த புராதனமான அஹோபில மடமும் இருக்கிறது. அம்மடத்தின் வடகலை யைச் சார்ந்த ஜீயர்கள் இலக்கிய இலக்கண வித்வான்க ளென்பது உலகப்பிரசித்தம். அந்த ஜீயர்களுக்குத் தஞ்சை முதலான ஜில்லாக்களில் அநேக ஸ்தாவர சொத்துக்கள் உண்டு. அச்சொத்துக்களைத் தக்கபடி பாதுகாத்து வரா ததைப்பற்றியும், ஜீயர்கள் நியமனத்தைப்பற்றியும் சச்சர வுக ளுண்டாகி வருகின்றன. இனி அப்படிப்பட்ட சச்சரவுக ளுண்டாகாதபடிக்கும், மலையின்மீதிருக்கப்பட்ட கோயில் களைத் தக்கப்டி செப்பனிட்டுக் காலக்கிரமமாகப் பூஜைகள் செய்துவரவும், அவைகளுக்கு வேண்டிய பொருள்களைச் சேகரிக்கவும், இரண்டொரு வருஷங்களுக்கு முன்பு அங்கு ஒரு பெரிய சபை கூட்டப்பட்டு அச்சபைக்குச் சென்னையி லுள்ள பிரபல பிரபுக்களிலொருவராகிய ஸ்ரீமான் சதுர்புஜ தாஸ் அவர்கள் சபாநாயகராக வீற்றிருக்க, அநேக வைஷ் ணவ அபிமானிகளும், வித்வான்களும் வந்து கூடி ரொக்க பண்டு சேர்த்து அந்த ஸ்தலத்தைப் பிரதிஷ்டை செய்விக் கத் தீர்மானித்திருக்கிறார்கள். அந்த ஸ்தலத்திற்குக் காட்டு

வழியாய்ப் போய்க் கஷ்டப்படுவதைப் பார்க்கிலும் நந்தியால் ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி அங்கிருந்து 30 மைல்கள் தூரம் சுகமாய்ப் போய் வரலாம்.

---

## 2. ஸ்ரீ சைலம் அல்லது மல்லிகார்ச்சுனம்.

(இது கர்னூல் ஜில்லாவிலுள்ள நந்தியால் என்னும் ரெயில்வே ஸ்டேஷனில் இறங்கி வடகிழக்கே 60 மைல் தூரம் போகவேண்டும்.)

நந்திதேவர் பர்வத வடிவமாகிச் சிவபெருமானைத் தாங்கிக்கொண்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். இது தெலுங்கு நாட்டு சிவஸ்தலங்களி லொன்று. திருநந்திதேவர் பூசித்து எண்ணி அருள்பெற்ற ஸ்தலம். இங்கிருக்கும் சிவபெருமானுக்குப் பருப்பதேசர் என்றும், அம்மனுக்கு பருப்பத மங்கையென்றும், தீர்த்தத்திற்குப்பருப்பத தீர்த்தமென்றும் முறையே பெயர்கள் வழங்கப்பட்டு வருகின்றன. இது மூவராலும் பதிகம் பெற்ற ஸ்தலம்.

ஹாமேனிட்டி என்னும் பத்திரிகையில் சொல்லப்பட்டபடி ஸ்ரீ சைலம் (Sri Sailam) என்பது தென்னிந்தியாவிலுள்ள ஹிந்து தேவாலயங்களில் மிகவும் விசேஷமானதும் பக்தியுள்ளதுமான ஸ்தலமாயிருக்கிறது. தெலுங்கு ஜனங்களுக்கும், தென்தேசத்து லிங்காயத்துகளுக்கும் மிகவும் சிறந்தது. கர்னூல் ஜில்லாவில் ரெயில்வே லயினுக்கு வெகு தூரத்திலுள்ள நல்ல மலைக்காடுகளில் வெகு அழகாக அமைக்கப்பட்டிருக்கிறது. நாம் அக்காடுகளின் வழியே சென்றால் எங்கு பார்த்தபோதும் கண்களுக்கு ரமணீயமாகத் தோற்றப்படுகிறது. வடக்கில் இமயமலையிலுள்ள பத்ரிகாஸ்ரமம் (Bhadrinath) எப்படியோ அப்படியே தெற்கில் ஸ்ரீ சைலம் (Sri Sailam) பேர்போனது. ஆதி காலத்திலேயே அதனுடைய மகத்துவம் யாவருக்கும் தெரிந்த விஷயமே. மகததேசத்து (Magadha) அரசனாகிய சந்திரகுப்தனுடைய (Chadragupta) புத்திரி சந்திரவதியை (Chandravati) ஸ்ரீ சைலா (Sri Saila) என்னும் சுவாமி விவாஹம் செய்துகொண்டதாக மகா பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. புத்த சந்நியாசியாகிய (Budhist Monk) நாகார்ஜுனா (Nagarjuna) என்பவர், கிறிஸ்து பிறப்பதற்கு முந்தியே இந்த மலையின் உச்சியில் (Sanga Hama) என்னும் ஸ்தலத்தை ஸ்தாபித்தார். அதன்மேல்

நாகார்ஜுனு (Nagarjuna) அநேக தபசிகளை (Bhiksus or Devotees) அங்கே வசிக்கும்படியும், நதி வீழ்ச்சியுள்ள படலகங்கா (Patalaganga) என்னும் இடத்திலுள்ள லிங்கங்களைப் பூஜிக்கும்படியும் செய்துவந்ததாகச் சீனு தேசத்து ஹியூயென் ட்ஸ்யாங் (Hiuen Tsiang) என்பவர் சொல்லுகிறார்.

புத்தர் காலத்தில் மிகவும் அபிவிருத்தியா யிருந்தது. அதன் பிறகு சக்தியை (Sakti) வணங்குகிற தமிழர்கள் மாடவி (Madhavi) அல்லது பிரம்மரம்பா (Bhramaramba) என்னும் பழைய பெயரால், சுவாமியை வணங்கி வந்தார்களாம். இதுவல்லாமல் பிரதிதினமும் ஆடு, எருமை முதலியவற்றைப் பூதங்களுக்குப் பலி கொடுப்பார்களாம். இந்த ஸ்தலத்தைச் சுற்றிலுமுள்ள புராதன ஜனங்கள் (Aboriginal tribes) சென்சு மல்லய்யா (Chenchu Mallayya) என்னும் ஸ்வாமியை வணங்கிவந்தார்கள். புத்த மதத்திற்குப் பிறகு அதே சென்சு மல்லய்யா என்பவர் இப்போது நாம் வணங்கிவருகிற மல்லிகார்ச்சுனத்திலுள்ள (Malligarjuna) சிவனுக (Siva)த் தோற்றப்படுகிறார்.

இதுமாதிரியே ஸிம்ஹாத்ரி அப்பண்ணு (Simhadri Appanna) அல்லது வராக நரசிம்ஹ ஸ்வாமி (Varaha Narasimham) வால்டேருக்கு அருகாமையிலுள்ள ஸிம்மாசலம் (Simmachalam) என்னும் ஸ்தலத்தில் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். அந்த விக்கிரஹம் (Idol) சந்தன மரங்களாலும் பலவித பசைகளாலும் செய்யப்பட்டிருப்பதோடு யாவரும் எளிதில் கண்டு பிடிக்கக் கூடாததாயிருக்கிறது. இவரே ஸிம்மாசலத்தில் விஷ்ணுவாயும் (Vaishnative God), ஸ்ரீ சைலத்தில் (Sri Sailam) சிவனுயும் (Siva) விளங்குகிறார்.

ஸென்ஸூஸ் (Chenchus) என்னும் ஜாதியார் கோவில்களில் தாராளமாய் உட்சென்று வணங்குவார்கள். இதர ஸூத்ர ஜாதிகள் (Sudras) கோவில்களில் உட்செல்லவும் பிரார்த்தனை முதலிய செய்துகொள்ளவும் சுங்கம் (Sungam) அல்லது வரி (Tax) கொடுக்கவேண்டும். ஜங்கம் (Jungam) என்னப்பட்ட பூஜாரியால் வருஷம் முழுவதும் இவ்விடம் பூஜை (Pooja) நடந்துவருகிறது.

கோவிலானது கண்ட மண்டபத்திலுள்ள (Ghanta Mandap) ஒரு சைவ சன்னியாசி (Saiva Sanyasi) யால் மேல் பார்க்கப்பட்டு வருகிறது. ஆயிரக்கணக்கான ஜனங்கள் சிவ ராத்திரியன்று (Sivaratri) கூடுகிறார்கள். யாத்திரை செய்வோர்களுக்கு இது ரொம்பவும் விசேஷ ஸ்தலம்.

## 3. விருபாக்ஷி ஸ்தலம்.

பல்லாரி ஜில்லாவிலிருக்கும் ஹாஸ்பெட் ஜங்ஷன் ரயில்வே ஸ்டேஷனி லிறங்கி வடகிழக்கே 8 மைல்கள் தூரத்தில் இருக்கிற துங்கபத்ராநதிதீரத்தி லிருக்கும் இந்தப் புராதன ஸ்தலத்திற்குப் போகவேண்டும். இது இராமாயணத்திற் கண்ட வாலி சுக்கிரீவர்களுடைய இராஜ்யம். இப்போதும் இவ்விடம் பலவித பெரிய குரங்குக ளிருப்பதன்றியில் அவைகள் கௌவியும் வௌவியும் தின்றும் தேக்கெறிந்தும சுகமாய் வாழும்படியான பற்பலவித கனிகளைத் தரும் காடுகளும் வனங்களும் இருப்பதோடு, இதைச் சுற்றிலும் மாலவதம், ஏமகூடம், பசுவசிரங்கம்; மதங்கபருவதம், கிஷ்கிந்தம் என்னும் ஐந்து பர்வத பிரதேசங்க ளிருக்கின்றன. சுக்ரீவன் இம் மலைமீதேறி சுவாமியைத் தரிசிக்கையில் வாலியும் அவனைத் தொடர்ந்து வந்து தன்னாலானமட்டும் ஏறிப்போக முயன்றும் முடியாமற் போயிற்றாம். இங்குதான் ஹம்பிள் தலமு மிருக்கிறது. இந்த ஹம்பிலும் விருபாக்ஷியிலும் கோடி லிங்கங்க ளிருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஸ்ரீராமர் சீதையைத் தேடும் பொருட்டு இங்குவந்து சுக்ரீவனை நட்புக்கொண்டு சரத் (மழை) துருதிவாகிய நான்கு மாதங்கள் வதிந்துவந்தபடியால் அவர் பெயரால் சுக்கிரீவனால் கட்டப்பட்ட ஸ்ரீ ராமசுவாமி சந்நிதியு மிருக்கிறது. மாக மாதத்தில் இங்குப் பிரபல உத்ஸவங்கள் நடக்கின்றன.

---

## 4. பம்பா தீர்த்தம்.

இது மேற்கண்ட சந்நிதிக்குச் சமீபத்திலிருக்கும் ஓர் ரமணீயமான ஏரியாகும் தடாகமிருக்கிறது. இது பிர்மாண்டமான பர்வத பிரதேசங்களினாலும், வியக்கத்தக்க வனங்களினாலும், பற்பலவித பக்ஷி விலங்குகளாலும் சூழப்பட்டிருப்பதால் இதன் இயற்கைக் காக்ஷியை இரசிக்கில்

எழுதிமுடியாது. ஸ்ரீராமர் இந்த பம்பா தீர்த்தக்கரையில் தங்கியபோது இதன் அழகிய அலைகளையும் நீந்தும் அன்னப் பக்ஷிகளையும் பார்த்துச் சீதையின் நடைபாவனையாக இருப்பனவாகக் கொண்டும், இதிலிருக்கும் தாமரை மலர்கள் சீதையின் முகாரவிந்தத்தைப்போல் இருப்பனவாகவும், இங்கிருக்கும் நீலோற்பல புஷ்பங்கள் சீதையின் நேத்திரங்களைப்போல இருப்பனவாகவும், இங்குப் பாடும் கோகில நாகணவாய்க்கிளி முதலிய பக்ஷிகளின் பாட்டுகள் சீதையின் இனிய குரலுக்குச் சமானமானவையா யிருப்பதாகவும், பின்னும் இங்கிருக்கும் இயற்கைக் காக்ஷிகளெல்லாம் சீதையின் உறுப்புகளைப்போல் இருப்பனவாகவும் கொண்டு எண்ணியெண்ணி யேக்கமுற்றதாக இராமாயண மியற்றிய வால்மீகர் கம்பர் அருணசலக்கவி முதலானவர்கள் விசேஷித் தெழுதியிருக்கின்றனர். இந்தத் திவ்ய தேசங்களைப் பற்றிய மத்யகால சரித்திரத்தை இந்நாட்டின் கடைசியில் சேர்த்திருப்பதால், அதில் விவரமாகக் காணலாம்.

---

## 5. ஸ்ரீ பத்ராசலம்.

இது, கோதாவரி ஜில்லாவிலிருக்கும் ஒரு விசேஷ வைணவ ஸ்தலம். இதற்குப் போக பல வழிகள் இருக்கினும் இவைகளிற் சிறந்த தெதுவெனில், பெஜவாடா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து வடமேற்காய் 33 மைல்கள் தூரத்திலுள்ள எல்லண்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு டோர்னக்கல் ஜங்ஷன் ஸ்டேஷன் வழியாய்ச் சென்று அங்கிருந்து நேர் வடக்காய்க் கோதாவரி தீரத்தில் சுமார் 62 மைல்கள், அல்லது இராஜமஹேந்திரத்திலிருந்து வடமேற்காய்ச் செல்லும் கோதாவரி நதிக்கரையின்பேரிலேயே 120 மைல்கள் தூரம் போகவேண்டும். எல்லண்டு ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து செல்லவேண்டிய 62 மைல்களும் காட்டுப் பாதையாகையால் வண்டி வாடகை ஜாஸ்தியாயிருக்கும். இராஜமஹேந்திரத்திலிருந்து நதியிலேயே போகும் படகுகளில் சென்றால் சார்ஜ்ஜும் சௌகரியம். பத்திராசலம் வரையில் படகிலேயே போகலாம். இந்த மார்க்கத்தில் ஆங்காங்குத் தங்குவதற்கு அக்கிரஹாரங்களும் வசதியான ஜாகைக்களுமுண்டு. இப்போது இந்த மார்க்கத்தில் ரெயில் போட்டுவருகிறார்கள். இங்கு நடக்கும் உத்ஸவத்திற்குத் தெலுங்கு ஹைதராபாத் நாடுகளிலிருந்து ஏராளமான ஜனங்கள் வருகிறார்

கள்; இந்தக் கோயிலைச் சார்ந்த அநேக மண்டப கட்டடங்களையும் விக்ரக சுவாமிகளுக்கு வேண்டிய அநேக ஆடையாபரணங்களையும் அப்போது ஹைதராபாது சமஸ்தானத்தில் பொக்கிஷாதிபதியாயிருந்த ஸ்ரீ ராமதாஸர் என்னும் பக்திமான் சர்க்கார் பணத்தை ஏராளமாக எடுத்துத் திருப்பணிகளைச் செய்துவிட்டபடியால் அந்த சர்க்காரார் இவரைப் பிடித்தடித்துக் கைதியாக்கிக் கொட்டடியில் போட்டு மூடி வருத்தவே, இவர் ஸ்ரீராமரை நாடிப் புலம்பிப் பரிதாபப்படுகையில், அவர் பக்திக்கு வியந்து ஸ்ரீராமர் நவாப்பு பொக்கிஷத்தில் எவ்வளவு குறைந்ததோ அதற்கு மும்மடங்கு பணம் இருக்கும்படி கிருபை புரிய, மறுநாள் ஷை நவாப்பு குமாரன் பொக்கிஷத்தைத் திறந்து பார்க்கவே அங்கு மும்மடங்கு தொகை இருக்கக்கண்டு அந்தத் தாசரை விடுதலைசெய்து கொண்டாடினராம். இந்த ராமதாசருடைய பத்தி பாடல்கள் வெகு சோகமாகவும் சுகமாகவும் இருப்பதால் இவர் கதையைப் பலவிடங்களில் சொல்லிக்கொண்டாடுகிறார்கள்.

---

## 6. கோபிநாதர்.

கொண்டை வீட்டு நாட்டில் கோபிநாதரென்னும் பெயரால் ஒரு விசேஷ விஷ்ணுக்ஷேத்திர மிருக்கிறது. இது செட்டிகளாற் கட்டப்பட்டதாம். இப்போதும் நித்ய நைமித்யகாதி விசேஷ உற்சவங்களைக் கொண்டாடி வருகிறார்கள்.

---

## 7. திரிலிங்க பீமேஸ்வரம்.

இது திரிலிங்க மலைகளில் ஒன்றாகிய பீமேஸ்வர மலையின்பேரில் கட்டப்பட்டிருக்கும் ஓர் விசேஷ சிவக்ஷேத்திரம். வழிகளில் காடடர்ந்த வனங்க ளதிகம்.

---

## 8. காளேஸ்வரம்.

இது திரிலிங்கம் அல்லது தெலுங்கு நாட்டிலிருக்கும் ஓர் விசேஷ சிவக்ஷேத்திரம். இந்த லிங்கத்திற்குக் காளநாதீஸ்வரர் என்று பெயர்.

---

## 9. ஹஜாரி இராமசாமிகோயில்.

இது ஹம்பியில் இருக்கும் ஒரு விசேஷ விஷ்ணு க்ஷேத்திரம். இதன் கோபுரத்தைக் கிருஷ்ணதேவ ராயலு கட்டுவித்ததாகச் சொல்லுகிறார்கள்.

---

## 10. ஆனைகுந்தி நரஸிம்மசுவாமி கோயில்.

இந்த அகோர உக்ர நரசிம்மசுவாமி விக்கிரகத்தையும் அடுத்திருக்கும் ஸ்ரீ கிருஷ்ணர் இராமர் விக்கிரகங்களையும் மகம்மதியர் புகுந்து இடிக்க இடிந்து விகார ரூபங்களோடு இருக்கின்றன. இவைகளுக் கருகில் கருங்கள் சக்கரங்களோடு கடைச்சல் வேலையாகச் செய்யப்பட்ட கல் ரதம் சீர்கெட்ட ஸ்திதியி லிருக்கின்றது.

---

# இத்தெலுங்கு நாட்டிலாண்ட அரசர்களின் சரித்திர சாரசங்கிரகம்.

## விஜயநகர ஸமஸ்தான நரபதி ஆந்திரராயர்கள்.

சந்திரவமிச ஆந்தரர்களில் மற்றொரு சந்ததியாராகிய விஜயநகர ஸமஸ்தானம் நரபதிகளும் சந்திரவமிச க்ஷத்திரியராகிய பாண்டவருடைய நேரான சந்ததிகளென்று புராண இதிகாசங்களினாலும், பாரிஜாதாபஹரணம், மநு சரித்திரம், கிருஷ்ணராஜ விஜயமு, பாண்டுரங்க விஜயமு, பிரவுட பிரபந்தகவி சரித்திரம், பாலபாகவதம், நரச பூபாலியம், நரபதி விஜயம், வசு சரித்திரம் முதலான கவி ரத்னங்களுடைய கிரந்தங்களினாலும், ஜேம்ஸ் பிரின்செப் (James Prinsep), கர்னல் மெக்கன்சி (Col. Mackanzie, C. S. Surveyor General of India), இராபர்டு சிவேல் (Robert Sewell, M. C. S.) முதலானவர்கள் எழுதிப் பதிப்பித்த சிலா செப்பேடு சாசன சரித்திரங்களினாலும் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. அந்த உண்மையை ஸ்தாபிக்க வடநாடுகளில் மிஸ்டர் பிரின்செப் அவர்களுக்கு அகப்பட்ட சாசனத்தின் நகலை இதனடியில் பதிப்பிக்கின்றனம்.

## TABLE XI VI-RAJAS OF VIJIANAGAR.

From history, inscriptions, and family genealogy (See As. Res Vol × ×). The later authority, in the usual maner, deduce a direct line from *Pandu* of the *Luna Drynasty* imperfectly following the Puranic lists to *Chandrabiga*, the last of the Magadha Rajas to whom suceeeds:—

A. D Maru
,, Nanda
,, Bhutanandi
,, Nandali, who has two sons Seshunandi and Yesanandi, whose four teen sons ruling over Bylendish, are disposed by two invaders Amitra and Durmitra, and seven fled to Andharadesa or Telungaa, where A. D.
1034. Nanda Maharaja erected a kingdom and founded Nandapur and Warangal.
1076. Chalika Raja.
1118. Vejia Raja founder of Vijianagar.
1158. Vimal Rao.
1182. Narasimha Deva.
1249. Rama Deva.
1274. Bhoja Raya died without issue.
1334. Bukka, Son of a neighbouring Raja raised to the throne of the Dakhan by Vidyaranya his Guru.
1367. Harihara Rao.
1391. Deva Rao.
1414. Vijia Rao.
1424. Pundara Deva Rao deposed by Sri Rang Raja of Kalian-Drug.
1450. Ramachandra Rao Son of Sri Ranga.
1473. Narasimha Rao.
1490. Vira Narasimha Raja Achutha Row.
1524. Kristna Deva, extended his sway to Gugerat &c Rama Raja killed in invasion of Nizam Shab and Imudul Mulk.
1565. Sri Ranga Raja.
Tirumala Raja.
Viravengatapaty.
Sre Ranga II.
Rama Deva Row.
Venkatapaty Row.
Tirumalu Row.
Rama Deva Row.
Sri Ranga Row.
Venkatapaty, invaded by the Moghuls and fled to Chundragiri.
Rama Rao, recovered a portion of the territory

1693. Haridoss.
1704. Checka Doss his brother.
1721. Chinna Doss Gopal Rao Son of Chinnu Doss.
1741. Venkatapaty Rao Tirumala Rao Sultan khan took the country in the name of Tipu, and with Vira Venkatapathy Rama Raja the dynasty became extint A. D. 1129.

See Page 281, Vol. II, Essays on Indian Antiquities by James Prinsep and Useful Tables by Edward Thomas, M. A.

## இந்த சாசனத்தின் கருத்து.

### விஜயநகர இராஜர்கள்

சரித்திரத்திலும், செப்பேடுமுதலான சாசனங்களிலும், (ஆசியாடிக்கு சோதன சரித்திர புத்தகத்தில் கண்ட) குடும்பவம்சாவளியிலும் (விஜயநகர ராயர்கள் சந்திர வமிசத்தைச் சார்ந்த பாண்டுமஹாராஜனுடைய நேரான சந்ததிகள்.

புராணரீதியாகப் பரிக்ஷிக்கையில் அவர்கள் மகத ராஜாதிபதியாகிய சந்திரபீஜராஜனுக்குப் பிறகு செங்கோல் செலுத்தியவர்கள்:—அவர்களில்.

மாருதி ராஜன்.
நந்த ராஜன்.
பூதநந்தி.
நந்திலி-அவனுக்கு சேஷநந்தி, ஈசநந்தி என்கிற இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்கள் பைலாண்டிஸ் நாட்டிலாண்டுவரவே அமிர்தன், துர்மிதன் என்கிற இரண்டு மன்னர்கள் படையெடுத்து வந்து தாக்க, அப்போது ஏழு ஆந்திரர்கள் தெலுங்கானம் என்னும் ஆந்திர தேசத்தில் வந்து ஆண்டார்கள். அவர்களில்:
கி. பி. 1034௵ நந்தமஹாராஜன்-அங்கு நந்தாபுரத்தையும், ஓரங்கல் ஸமஸ்தானத்தையும் ஸ்தாபித்தான்.
1076. சாலிகராஜன்.
1118. விஜயராஜன் விஜயநகரத்தை ஸ்தாபித்தான்.
1158. விமலராயனு.
1182. நரசிம்மதேவராயனு.

1249. இராமதேவராயலு.

1274. பூபராயலு-சந்ததியற்றவன்.

1334. புக்கராயலு-அயல்நாட்டரசருடைய குமாரன். அவன் குரு வித்யாரணியரால் தக்ஷிண நாட்டிற்கு அரசனாக நியமிக்கப்பட்டான்.

1367. ஹரிஹரராயலு

1391. தேவராயலு

1414. விஜயராயலு

1424. புண்டரதேவராயலு-கலியாண துர்க்கத்திலிருந்த ஸ்ரீரங்கராயரால் நீக்கப்பட்டான்.

1450. ஸ்ரீராமசந்திரராயலு-ஸ்ரீரங்கருடைய குமாரன்.

1473. நரசிம்ம தேவராயலு

1490. வீர நரசிம்ம ராயலு. அச்சுத தேவராயலு.

1524. கிருஷ்ணதேவராயலு-குஜராது வரையில் சமஸ்தானத்தைப் பரவச் செய்தான்.

இராமராஜா நைஜாம்ஷா இமுகுல்மல்க் இவர்களால் கொல்லப்பட்டான். 1595-ஸ்ரீரங்காராஜா திருமலைராஜா, வீரவெங்கடபதி, ஸ்ரீரங்கன் 2-வது, இராமதேவராயலு, வெங்கடபதிராயலு, திருமலைராயலு, இராமதேவராயலு, ஸ்ரீரங்கராயலு; வெங்கடபதி அவர் காலத்தில் மோகலர் படையெடுத்து வர சந்திரகிரிக்கேகினர். இராமராயலு இழந்த சமஸ்தானத்தின் பாதியைப் பெற்று ஆண்டார்.

1693. ஹரிதாசன்.

1704. சிக்கதாசன்.

1721. சின்னதாசன்.

1741. வெங்கடபதி.

1756. திருமலைராயலு அவன் காலத்தில்தான் சுல்தான் கான் திப்புவின் பெயரால் தேசத்தைப் பிடிக்க 1829 ஹு வீர வெங்கடபதி ராமராயலு காலத்தில் சமஸ்தான மழிந்தது.

ஜேம்ஸ் பிரின்செப் அவர்களுடைய இந்திய புராதன சரித்திரம், எட்வார்டு தாமஸ் அவர்களுடைய வம்சாவளி புத்தகம், 281-ம் பக்கம் பார்க்கவும்.

---

## விஜயநகரத்தில் ஆண்ட ஆந்திர நரபதிகள் சிங்காசனம் ஏறிய காலத்தைப்பற்றி, 1630ஸு சர்வே ஜனரல் கர்னல் மெக்கன்ஜிக்கு அகப்பட்ட சாசனத்தின்படி விவரம்.

| விஜயநகர அரசர்களுடைய பெயர்கள் | சாலிவாகன சகாப்தம் | கிறிஸ்து சகாப்தம் | ஆண்ட காலம் ஸு | மீ | ந |
|---|---|---|---|---|---|
| 1. நரபதி ராமதேவ ராயலு | தெரிய | வில்லை | — | — | — |
| 2. ஹரிஹர ராயலு-தாதுஸு வைகாசி 2-ம் ... ... ... | 1258 | 1336 | 14 | — | — |
| 3. புக்கதேவராயலு ... ... | 1272 | 1350 | 29 | 8 | — |
| 4. ஹரி ஹர ராயலு (2-வது) ... | 1301 | 1379 | 22 | — | — |
| 5. விஜயபுக்கராயலு (2-வது) ... | 1323 | 1401 | 17 | — | — |
| 6. வல்லபுக்க அல்லது தேவராயலு ... | 1340 | 1418 | 16 | — | — |
| 7. குண்டதேவராயலு ... ... | 1356 | 1434 | 20 | — | — |
| 8. இராஜசேகர ராயலு ... ... | 1376 | 1454 | — | 9 | — |
| 9. விஜயராயலு ... ... | 1376 | 1455 | — | 10 | — |
| 10. பிரவுட பிரதாபராயலு... ... | 1378 | 1456 | 21 | — | — |
| 11. வீர ராயலு ... ... | 1399 | 1477 | 4 | — | — |
| 12. மல்லிகார்ஜ்ஜுன ராயலு ... | 1403 | 1481 | 6 | — | — |
| 13. இராமசந்திர ராயலு ... ... | 1409 | 1487 | 1 | — | — |
| 14. விருபாக்ஷி ராயலு ... ... | 1410 | 1488 | 2 | — | — |
| 15. திம்மராயலு-காலம் தெரிய வில்லை. | — | — | — | — | — |
| 16. ஈசுவர ராயலு ஷை ... | — | — | — | — | — |
| 17. நரசிம்ம தேவராயலு .. ... | 1412 | 1490 | 5 | — | — |
| 18. வீர நரசிம்மராயலு ... ... | 1426 | 1504 | 13 | — | — |
| 19. கிருஷ்ணதேவராயலு இரக்தாக்ஷி ஸு வைகாசிமீ சுக்லபக்ஷம் ... | 1430 | 1509 | 21 | — | — |
| 20. அச்சுததேவராயலு-விக்கிருதிஸு | 1462 | 1530 | 12 | — | — |
| 21. சாலுகதிம்ம ராயலு, சோபகிருது ஜேஷ்ட (ஷை அச்சுதர் குமாரன் வெங்கடாதிரி மைனராக இருந்ததினால்) ... ... | 1464 | 1542 | 22 | — | — |
| 22. சதாசிவ ராயலு 5ஸு கலகம். இராமராஜன் ... ... | 1486 | 1564 | — | — | — |
| 23. திருமலைராயலு - பிரமோதூதஸு (பெனுகொண்டாவில்) ... | 1451 | 1569 | — | 11 | — |
| 24. ஸ்ரீ ரங்கராயலு-ஆங்கிரச வைகாசி 10-தேதி ... ... | 1494 | 1572 | 14 | — | — |
| 25. வெங்கடபதி ராயலு - பரிதாபிஸு மாசம் 10 ... ... | 1507 | 1585 | 28 | 8 | 15 |
| 26. சிக்க தேவராயலு ... ... | 1536 | 1614 | — | 4 | — |
| 27 இராம தேவராயலு ... ... | 1552 | 1630 | 15 | 4 | — |
| 28. ஸ்ரீரங்க தேவராயலு ... ... | — | 1659 | — | — | — |

பிறகு அகப்பட்ட மற்றோர் சாசனத்தின்படி.

கிறிஸ்து சகாப்தம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீரங்க தேவராயலு ... .. | 1665 | 1678 |
| 2. | வெங்கடபதிராயலு ... ... | 1678 | 1680 |
| 3. | ஸ்ரீரங்கராயலு ... ... | 1692 | |
| 4. | வெங்கடராயலு ... ... ... | 1706 | |
| 5. | ஸ்ரீரங்க தேவராயலு ... ... | 1716 | |
| 6. | மஹாதேவராயலு ... ... | 1724 | |
| 7. | ஸ்ரீரங்கராயலு ... ... ... | 1729 | |
| 8. | வெங்கடபதிராயலு ... ... | 1732 | |
| 9. | இராம ராயலு ... ... .. | 1739 | |
| 10. | வெங்கடபதி ராயலு ... ... | 1744 | |
| 11. | ஷ ஷ ... ... | 1791 | 1793 |
| 12. | திருமலராயலு ... ... ... | 1801 | 1824 |
| 13. | வீர வெங்கடபதி ராயலு ... ... | 1831 | |
| 14. | திருமலை தேவராயலு ... ... | 1866 | |
| 15. | வெங்கடராம ராயலு ... ... | 1870 | |
| 16. | நரசிம்மதேவ ராயலு ... ... | 1871 | |
| | இப்போதிருப்பவர் ஸ்ரீரங்க தேவராயலு, ராவ் சாஹிபு, பென்ஷன்தாரர் ... | | |

---

(மிஸ்டர் ஜேம்ஸ் பிரின்செப்புக்கு அகப்பட்ட சாசனங்களின்படி)

## விஜயநகர நரபதிகளின் வம்சாவளி.



1. மாருதி மஹாராஜன் (மகதநாட்டி லாண்டவன்)
2. நந்த மஹாராஜன்-அர்ஜ்ஜுனனுக்கு 83-ம் சந்ததி
3. பூதநந்தன்
4. நந்தவிராஜன் (மகதநாட்டு அரசன்)
5. யாசநந்திராஜன்
6. பூதநந்தி 14 குமாரர்கள் (பயிலாநந்த மரசர்கள்)
7. நந்தமஹாராஜன் (கி. பி. 1034வரு) நந்தபுரம் ஓரங்கலுக்கு அரசன்
8. 9-ம் சந்ததி சாலுக்கியன் (கி. பி. 1076வரு)
9. விஜ்ஜலன் அல்லது 2-வது விஜயன் கி.பி.1118வரு (ஆனைகுந்தி விஜயநகரம் ஸ்தாபித்தவன்)
10. விமலராயலு விட்டலராயலு (கி. பி. 1158வரு)

11. நரசிம்மதேவராயது (1182ஸு)
12. இராமதேவராயலு (1249ஸு)
13. பூபராயலு (கி. பி. 1274ஸு)புக்கன், ஹரிஹரன் மந்திரி பிரதானிகள்
14. புக்கராயலு (துளுவநாட்டிற்குக் கொண்டுபோய் வளர்ந்தவன்)
15. திம்மராயலு அல்லது இராமசந்திரராயலு - 1450ஸு
16. நரசிம்மராயலு
17. ஈசுவரராயலு-1473ஸு
18. பிரவுடதேவராயலு
19. வீரநரசிம்மராயலு 1490ஸு
20. அச்சுதராயலு
21. கிருஷ்ணதேவராயலு 1524
22. ஸ்ரீரங்கராயலு 1565

மற்றப் பெயர்களை மிஸ்டர் பிரின்சேப் நாமாவளி X I V I பார்க்க.

---

மிஸ்டர் இராபர்டு சுவேல் அவர்களுக்கு முதலில் கிடைத்த சாசனத்தின்படி

## விஜயநகர சம்ஸ்தானத்தின் வம்சாவளி.

[இரண்டாம் சந்ததி.]

1. புக்கராயலு-மங்கம்மாள் மனைவி
2. சங்கமகாராஜன் மல்லாம்பிகா, சாரதா - மனைவிகள்
3. ஹரிஹரன்-கி. பி. 1336-1350
4. கம்பமஹீபதி-சங்கமா
5. புக்கராயலு-கவராம்பிகா, காமாக்ஷி 1350-1379
6. மாரப்பா
7. முத்தப்பா
8. காமிதேவிக்கு-ஹரிஹரன்-மல்லதேவி மனைவி 1379-1401
9. பாஷ்கரபூபதி
10. விருபாக்ஷி
11. பிரவுடதேவராயலு - பத்மாம்பா - மல்லாம்பா - மனைவிகள் 1406-1412

12. விஜயபூபதி-நாராயணதேவி கி-பி-1418
13. தேவராயலு 1422-1447
14 வீரமல்லன்ன

---

3-வது சந்ததி

1. திம்மராயலு-தேவகி மனைவி
2. ஈசுவரராயலு - புக்கம்மாள் மனைவி
3. நரசராயலு - திப்பாம்பா - நாகாம்பா-மனைவிகள் 1590வரு
4. திப்பாம்பாளால் வீர நரசிம்மராயலு 1509வரு-நாகாம்பாள் வயிற்றில் கிருஷ்ணதேவராயலு - சின்னதேவி-திருமலைதேவி (ஓரிசா) மனைவிகள் 1509-1530வரு

---

மற்றொரு சாசனத்தின்படி 3-வது சந்ததி

1. இராமராஜா-இலக்ஷ்மியாம்பிகாள் மனைவி
2. ஸ்ரீரங்க தேவராயலு - திருமலைதேவி மனைவி
3. இராமராஜன் - சதாசிவனுக்குப் பிந்தி கிருஷ்ண தேவராயலு குமாரத்தி மனைவி-தலிகோட்டையில் மரணம் 1564
4. திருமலைராயலு 1564-1574 வெங்கலாம்பா, பத்மாம்பாள், கிருஷ்ணம்பாள், இராகவாம்பாள்-மனைவிகள். ஸமஸ்தானத்தை 1567-ல் பெனுகொண்டாவுக்கு கொண்டு போனான்
5. வெங்கடாத்திரி

---

மற்றொரு சாசனத்தின்படி.

1. இராமராஜா
2. திருமலைராயலு
3. கிருஷ்ணராஜா
4. திருமலைராஜா - ஆனைகுந்தியை ஆண்டான்
5. ஸ்ரீரங்கராயலு திருமலைதேவிகதம்பா 1574-1585 குமாரத்தியை ஜகதேவராயலு மணஞ் செய்தார்
6. திருமலைதேவன்
7. வெங்கடபதி 1585-1614 இராஜ்ஜியத்தை பெனுகொண்டாவிலிருந்து சந்திரகிரிக்கு மாற்றினான்.

## வெங்கடபதிக்குப் பிறகு வந்தவர்கள்.

| | | |
|---|---|---|
| ஸ்ரீரங்கராயலு | கி. பி. | 1619 |
| இராமராயலு | | 1622 |
| ஸ்ரீரங்கராயலு | | 1623 |
| வெங்கடராயலு | | 1623 |
| இராமராயலு | | 1629 |
| வெங்கடபதி | | 1636 |
| ஸ்ரீரங்கர் | | 1665 |
| பிறகு ஸ்ரீரங்கராயலு | | 1665-1678 |
| வெங்கடபதி | | 1678-1680 |
| ஸ்ரீரங்கராயலு | | 1692 |
| வெங்கடபதி | | 1706ஞு |
| ஸ்ரீரங்கராயலு | | 1724 |
| மஹாதேவராயலு | | 1729 |
| ஸ்ரீரங்கராயலு | | 1732 |
| வெங்கடபதி | | 1736 |
| இராமராயலு | | 1739 |
| வெங்கடபதி | | 1791-1793. |

### 4-ம் சந்ததி.

1. திருமலைராஜா-1801-நிஜாம்ஷா, பென்ஷன் கொடுத்தார்
2. ஒரு குமாரன்
3. ஒரு குமாரத்தி
4. வீர வெங்கடபதிராயலு-1831-ல் இறந்தார்
5. திருமலைதேவன்
6. இலக்ஷ்மீதேவியம்மாள்-நரசிம்மராயலு மனைவி
7. வெங்கடராமராயலு - ஸ்ரீரங்கம்மாள் மனைவி - 1871-ல் இறந்தார்
8. கிருஷ்ணதேவராயலு-குப்பம்மா இராஜ்ஜியம்1872-ல் இறந்தார்
9. வெங்கய்யா
10. ஒரு குமாரத்தி
11. ஒரு குமாரத்தி
12. நரசிம்மராயலு-1870-ல் பிறந்தார்

இந்தியன் ஆர்கியாலோஜிகல் சர்வே புத்தகம் 2-வது வாஸியம் 243-253-ம் பக்கங்களில் பார்க்க.

## நரபதிகளுடைய ஆதிசரித்திரம்.

நரபதிகளுடைய ஆதிசரித்திரம் திட்டமாகக் கிட்டவில்லை. சென்னை சர்வகலாசாலை ஸமஸ்கிருத ஆந்தர பாஷா பண்டிதர், டாக்டர் ஆப்பர்ட்டு (Dr. Gustow Oppert, P. H. Dr. Professor of Sanskrit, Presidency College, Madras, Telugu Translator to Govt. Curator-Govt.

Oriental Mss. Library &c) அவர்கள் 1881ஸு எழுதிப் பதிப்பித்த (The History of S. India) தென்னிந்திய சரித்திரபுத்தகம் 24 முதல் 73 பக்கங்கள் வரையில் நரபதிகளைப்பற்றித் தமக்குக் கிடைத்த கிரந்த சிலாசனங்களைப் பரிக்ஷித்து அடியிற்கண்டபடி எழுதியிருக்கிறார். அதாவது: நரபதிகளிற் சிறந்த திருமலை ராஜருக்கு அங்கிதமாகப், பதி நான்காம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், பால பாகவதம் என்னும் தெலுங்கு கிரந்தம் இயற்றப்பட்டதாம். அதை அந்த ஸமஸ்தானத்தில் அப்போது பிரதான மந்திரியாகவிருந்த நாகையருடைய குமாரரும், அந்த நரபதிகளுடைய ஆதி உற்பத்தி முதலான விவரங்களை சர்க்கார் ரிகார்டுகளினாலும், அக்கால தேசவர்த்தமானங்களினாலும் தெள்ளத் தெரிந்தவராயும், சிறந்த ஸமஸ்கிருத தெலுங்கு வித்துவாம்சராயும் இருந்த கோனேரிநாதர் இயற்றியதாம். அந்தப் பால பாகவதத்தின் முகவுரையில் தமது பாட்டுடைத் தலைவருடைய பிரதாபத்தையும், அவருடைய ஆதி சந்ததி சரித்திரங்களையும் விவரமாகக் காட்டியிருக்கிறார். அந்த விவரத்தை இராமபூஷணர் இயற்றிய வசுசரித்திரம், சாரதாமூர்த்தி இயற்றிய நரசபூபாலீயம், நரபதிவிஜயம், இராமராஜியம் முதலான கிரந்தங்களிற் கண்ட நரபதிகளுடைய சரித்திரங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில், அந்தப் பால பாகவதத்திற் கண்ட சங்கதிகளும் சரியாக இருப்பதோடு, தேவனஹள்ளியில் கிடைத்த சிலாசாசனத்திற் கண்ட சங்கதிகளுக்கும் சரியாக இருக்கின்றனவாம். அந்த விவரமாவது:—

நரபதிகள், பூர்வசந்திரவமிச பாண்டவரில் ஒருவராகிய அர்ஜ்ஜுனனுடைய நேரான சந்ததிகளென்றும், அந்த அர்ஜ்ஜுனனுடைய 83-வது சந்ததியாகிய நந்தராஜனுக்கு ஒன்பதாவது சந்ததி சாலுக்கியன் பிறந்தானென்றும், அந்த சாலுக்கியனுடைய சந்ததியில் கலியாணபுரத்தை யாண்ட விஜ்ஜலன் அல்லது பிஜ்ஜலன் அல்லது விஜயன் பிறந்தானென்றும், பால பாகவதத்திற் செப்பியிருப்பதைப்போலவே, நரபதி விஜயத்திலும் தேவனஹல்லி சாசனத்திலும் சொல்லப்பட்டிருக்கிறதாம்.

அந்த விஜ்ஜலன் அல்லது விஜயராஜனுக்கு யுவராஜனுண்டாகி அவனுக்கு ஹேம்மலராஜனும், அவனுக்குத் தாதபின்னராஜனும் பிறந்ததாகவும், அந்தத் தாதபின்னராஜன்

தான் நரபதிகளுக்குத் தலைவனென்றும் பால பாகவதம், வசுசரித்திரம், நரசபூபாலியத்திற் சொல்லப்பட்டிருக்கிறதாம்.

அந்தத் தாதபின்னம ராஜனுக்கு மன்னுபுலி என்று பெயர். அந்தத் தாதபின்னமராஜனுக்குச் சோமதேவன் என்னும் குமாரன் பிறந்து பஹு பராக்கிரமசாலியாகி 60,000 சேனைகளை உடையவனாக இருந்தானாம். அவன் ஆர்வீட்டு என்னும் இடத்திலிருந்து ஆண்டு, கொண்டனவலி, இராயச்சூர், சாதனிகோட்ட, யாதவகிரி, காலபகோலு, முசலிமடுகு, கங்களிணிகொண்ட என்று ஏழு கோட்டைகளையும் பிடித்து ஆண்டானாம். அவனுக்குப் பாரமல்லன் அல்லது லிபாலன் என்ற பட்டப்பெயர் வழங்கிவந்ததாம்.

அவனுடைய குமாரன் இராகவராஜன் ஆண்டபிறகு, அவன் குமாரன் பின்னமராஜன் அல்லது பின்னசவுரி பட்டத்துக்கு வந்தானாம். அவனுக்குச் சாளுவ நரசிங்கராயனு பிரதம மந்திரியாக இருந்தானாம். அந்த பின்னமராஜனுக்குப் பிறகு அவன் குமாரன் புக்கராஜன் பட்டத்துக்கு வந்தானாம். அவன் ஆருவிடுவில் வந்து குடியிருந்தபடியால் அவனுக்கு ஆர்வீட்டு புக்கராஜன் என்று பெயர் வழங்கி வந்ததாம். அவனுக்கு அபலாதேவி, பல்லாதேவி என்ற இரண்டு மனைவிகள் இருந்தார்களாம். அவர்களில் அபலாதேவி வயிற்றில் சிங்கராஜனும், பல்லதேவி வயிற்றில் இராமராஜனும் பிறந்தார்களாம். அவர்களில் இளையகுமாரனை இராமராஜன் கண்டனவலியில் சண்டை செய்து கலியாணபுரத்தைப் பிடித்து ஆண்டதன்றியில், அதவேனியை அடுத்த காகதேசத்தையும் ஜயித்தானாம். கோனேரிநாதர் கணக்கின்படி அந்த அரசனிடம் அப்போதிருந்த சேனையின் பலம் 70,000 பதாதிகளாம்.

இராமராஜாவின் மனைவி இலக்கம்பாள் வயற்றில் திம்மராஜன், கோண்டசவுரி, ஸ்ரீரங்கராஜன் என்ற மூன்று மக்கள் பிறந்து, அவர்களில் கடைசிமகனை ஸ்ரீரங்கராஜன் கலியாணபுரத்தின் பட்டத்தை அடைந்தானாம். அவனுடைய மனைவி திம்மாம்பாளாம். அவன் நைஜாமின் கொட்டத்தை அடக்கியும், காஞ்சிபுரத்தைப் பிடித்தும், கர்னாடக தேசம் முழுவதையும் சுவாதீனமாக்கிக் கொண்டானாம். அந்த ஸ்ரீரங்கனுடைய அண்ணன் திம்மராஜன் ஆர்விடுவில் குடியிருந்தான். அவனுக்கு மன்னிபுலி அதாவது

காட்டுப்புலி என்று பட்டப்பெயர் வழங்கிவந்ததாம். அவன் குத்தி, பெனுகொண்ட, தூர்க்கி, கண்டிகோட்ட, கொண்டவைவிலி, அடோவனி முதலான கோட்டைகளைப் பிடித்தானும். அவனை அவன் அண்ணன் மகன் இராமராஜன் கொன்றதாக ஒரு சரித்திரத்தால் தெரியவருகிறதாம்.

அந்தத் திம்மராஜனுக்கு திருமலைராஜா, விடலேசன், சின்னதிம்மராஜன், பாபதிம்மராஜன் என்னும் நான்கு குமாரர்கள் பிறந்து, அவர்களில் மூத்தவனாகிய திருமலைராஜன் பிரதாபசாலியாகி சாலுக்கியநாராயணன் என்ற பட்டத்தை வகித்தானும். அவனுடைய சமுகவித்துவானுகிய கோனேரிநாதகவி பிரகாசித்து, பாலபாகவதத்தை இயற்றினாராம். அந்தப் பாகவதத்தில்தான் மேற்கண்ட சங்கதிகள் யாவும் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றனவாம். கடைசி குமாரனாகிய விடலேசன் அதிகபிரதாபசாலியாகி மன்னிபுலி, மன்னவிபாலான்ருதி பிருதுகளைப் பெற்றும், மால்வநாடு-சாகநாடு முதலானவைகளைப் பிடித்தும், கடைசியில் நேபாளதேசத்தையும் ஜயித்துப் பிடித்தானும்.

அப்படிக்கெல்லாம் இருந்தும், அவனுடைய அண்ணன் குமாரனாகிய இராமராஜன் ஆயுசுவரையில் நரபதி என்ற பட்டத்தை வகித்துவந்தானும். அவன் தந்தையாகிய ஸ்ரீரங்கராஜனுடைய மனைவி திப்பாம்பாள் வயிற்றிற் பிறந்தவன். அவனுக்குக் கோனராஜன், திம்மராஜன், திருமலைராஜன், வெங்கடராஜன் என்ற சகோதரர்களும், இலக்ஷ்மாம்பா என்ற சகோதரியும் இருந்தார்களாம். அந்த இலக்ஷ்மாம்பாள் சூரியவம்சத்தைச் சார்ந்த கலிகலகோலவிபுடுவின் ஐந்தாம் சந்ததியாகிய அவுபலராஜனுக்கு விவாஹம் செய்து கொடுக்கப்பட்டாளாம்.

அந்த அவுபலராஜனுக்கு நரசராஜன் பிறந்தானும். அந்த நரசராஜனுக்குத்தான் சாரதாமூர்த்தி என்னும் பட்டுமூர்த்தி: நரசபூபாலியம் என்னும் கிரந்தத்தைப் பாடி அங்கிதம் செய்வித்தாராம் மேலே சொன்ன இராமராஜன், விஜயநகரத்தி லாண்டான். அவன் மனைவி கிருஷ்ணதேவனுடைய குமாரத்தியாம். சதாசிவராஜன் அவனுடைய மந்திரியாக இருந்ததன்றியில், திருமலைராஜ- வெங்கடராஜன் என்ற இரண்டு சகோதரர்களும் இவனுக்கு உதவி செய்து வந்தார்களாம். அவர்கள் உதவியினால் அந்த நரசராஜா

பாரிடாவிலுள்ள அதில் காளேபேடட்டி பீமரதம் என்னும் இடத்தில் பிடித்தார்களாம்.

நரசபூபாலியத்தின்படி கர்னுடகதேசமுழுதும் இராமராஜாவின் சுவாதீனப்பட்டிருந்ததன்றியில், குடியிப்உல் மூல்குடன் சண்டை செய்து ஜயித்தும், நைஜாமை ஜயித்தும், ரெயிச்சூருக்குக் கப்பம் கட்டும்படி செய்தான். நரபதி விஜயத்தின்படி புடல்கான், அடில்கான், அயின் அலி மூல்கு, உல்லிகான் முதலானவர்களே ஜயித்தான் என்பது ரெயிச்சூரில் அகப்பட்டசாசனங்களினுலும் ஸ்தாபிதமாகிறதாகவும் எழுதியிருக்கிறுர்.

---

## மிஸ்டர் ஜேம்ஸ் பிரின்சேப் முதலான சாஸ்திரிகளுக்கு அகப்பட்ட சாசனங்களின்படி

## விஜயநகர நரபதிகளுடைய ஆதிசரித்திர சங்கிரகம்.

---

மகததேசத்தை ஆண்ட ஆந்திரர்களில் மாருதிராஜனுக்கு நந்தன், பூதநந்தன் என்னும் இரண்டு குமாரர்கள் பிறந்து, இராஜ்ஜிய பரிபாலனம் செய்துவருகையில், மூத்தவனுகிய நந்தனுக்கு நந்தலி என்பவன் பிறந்து, தக்க காலம் வாய்த்தபோது பட்டத்துக்கு வந்து மகதநாட்டைப் பிரபலமாக ஆண்டு வந்தான்.

அந்த நந்தனுக்கு: சேஷநந்தி, யாசநந்தி என்னும் இரண்டு குமாரர்கள் பிறந்து, அவர்களுக்குப் பதினுன்கு குமாரர்கள் பிறந்து மகதநாட்டிற் கடுத்த பயிலாந்த தேசத்தில் அரசு புரிந்துவருங் காலத்தில், அமிர்தன், துர்மித்திரன் என்னும் இரண்டு அயலரசர்கள் கிளம்பிவந்து, அந்த 14 பெயர்களைத் துரத்தித் தாக்க, அவர்களில் ஏழு பெயர்கள் அந்த மகதநாட்டைவிட்டுத் தெற்கே வந்து தெலுங்கானுவில் ஆந்திர ஸமஸ்தானத்தை ஸ்தாபித்தார்கள். அப்படி ஸ்தாபித்தவர்களில், (கி. பி. 1034௵)

நந்தமஹாராஜன்: நந்தாபுரத்தையும், ஓரங்கல்லேயும் கட்டி ஆண்டுவந்தான் (கி. பி. 1076௵). அந்த நந்தமஹாராஜனுடைய சந்ததிகளில் ஒருவனுகிய சாலுக்கியன் பட்டத்துக்கு வந்து பிரபலனுகி ஆண்டான்.

அநந்தரம் (கி. பி. 1118ஸு) அந்த நந்தமஹாராஜ னுடைய சந்ததிகளில் மற்றொரு ஆந்திரனாகிய விஜ்ஜலன் அல்லது விஜயராஜன் பின்னும் சற்றுத் தெற்கே துங்கபத் திரா நதிக்கரையோரத்திலிருந்த ஆனேகுந்தி தக்க இடம் எனத் தோன்றியபடியால், அங்குத் தனது பெயரால் விஜய நகரம் என்னும் நகரத்தைக் கட்டி ஸமஸ்தானத்தை ஸ்தாபி த்து ஆண்டுவர, (கி. பி. 1158ஸு) அவன் குமாரன் விமல ராவ் பட்டத்துக்கு வந்தான். பிறகு (கி. பி. 1182ஸு) அவன் குமாரன் நரசிம்மதேவராயனும், (கி. பி. 1249ஸு) இராமதேவராயனும், (கி. பி. 1274ஸு) பூபராயனும் முறை யே பட்டத்துக்கு வந்து பிரபலமாக ஆண்டார்கள்.

அந்த பூபராயனுக்குப் புக்கனும், ஹரிஹரனும் மந்திரி பிரதானிகளாகவிருந்து பிரகாசித்தார்கள். அந்தப்புக்கனும், ஹரிஹரனும் சந்திரவமிச யாதவராகிய சங்க மஹாராஜ னுடைய குமாரர்கள். அவர்கள் முதலில் ஓரங்கல் பிரதாப ருத்திரனிடம் மந்திரி பிரதானிகளாக இருந்தார்கள். அந்த இராஜ்ஜியம் மகம்மதியராற் பிடிபட்டபொழுது, அதை விட்டுத் தெற்கே வந்து விஜயநகர பூபதிராயனிடம் வேலைக் கமர்ந்தார்கள்.

அந்த பூபராயனு: புக்கன், ஹரிஹரனுடைய சகாயத் தைக்கொண்டு, சத்தியத்தை நாட்டித் தருமராஜ்ய பரிபால னஞ் செய்துவருங் காலத்தில், டில்லிப்பட்டணத்துக் கதி பதியாகிய மகமது டோக்லாகு எழுந்து சுற்றுப்பக்கத்துக் குறுநில பெருநில மன்னர்களைத் தாக்கி ஜயித்தும், தன் னைச் சக்கரவர்த்தி என்று கொண்டாடும்படி கொடுங்கோல் செய்யவே, கில்ஜிவமிசத்தைச் சார்ந்த அலாவுதீன் என்ப வன், கூர்ஜ்ஜரம் முதலான நாடுகளைத் தாக்கிப் பிடித்துக் கப்பம் வாங்கிக்கொண்டு குடிகளை வருத்தியதன்றியில், கி. பி. 1325ஸு தன் சேனைத் தலைவனான மாலிக் காப்பூர் (Malick Kafur) என்பவனைத் தெற்கே இராமேசுவரம் வரையில் போய், இந்து இராஜாக்களைத் தாக்கி ஜயித்துக் கப்பம் வாங்கிவரும்படி கட்டளையிட்டனுப்பினான்.

அந்த மாலிக் காபூரும் அவனது சேனைகளும் அப் படியே வந்து அநேக இந்து இராஜர்களைத் தாக்கிக் கப்பம் வாங்கிக்கொண்டு ஆனேகுந்திக்கு வர, அப்போது அங்கிரு ந்த நரபதிபூபராயனும், அவருடைய சேனை வீரர்களாகிய

ஹரிஹரன் புக்கன் முதலானவர்களும் கூடி மகமதியருக்குப் பயந்து கப்பங் கட்டமாட்டோமென்றும், எதிர் நின்று சண்டை செய்யச் சித்தமாக இருக்கிறோமென்றும் சேதி சொல்லியனுப்ப, அதற்கு அம்மஹமதியர்களும் சம்மதிக்க இருகக்ஷிக்காரருக்கும் பிரமாத சண்டைகள் நடந்தன.

அப்போது ஹரிஹரனும் புக்கனும் சில மஹமதிய வீரர்களுடன் ஒரு மூலையில் நின்று மல்லயுத்தம் செய்து கொண்டிருக்க, இது சங்கதியை யறிந்த மகமதியரில் சிலர் "ஹரிஹரனும் புக்கனும் மல்ல யுத்தத்தில் மகமதியரால் கொல்லப்பட்டு இறந்துவிட்டார்கள்" என்று பொய்யான சங்கதியைச் சொல்ல, இந்து சேனைகள் பயந்து பல பக்கங்களில் ஓட மகமதியர் கோட்டையைச் சுற்றி வளைத்துக் கொண்டும், உள்ளே இருந்த இராயலையும், அவருடைய பதினொரு மக்களையும் பிடித்துவரச் சொல்லி, அவர்களுடைய கோட்டை சொத்தளங்களை மகமதியர் தம் வசமாக்கி விடும்படிக்கும், யுத்த செலவுக்கு மூன்றுகோடி ரூபா தரும்படிக்கும், பிரதி வருஷமும் கிரமமாகக் கப்பம் கட்டி வரும்படிக்கும், இராயனும் அவருடைய மக்களும் மகமது மதத்தை அநுஷ்டிக்கவேண்டுமென்றும், அப்படிச் செய்யாவிட்டால் சிரச்சேதம் செய்யப்படும் என்றும் சொல்ல, பூபராயனு கேட்டுச் சிரித்து, மகமதிய சேனாதிபதி கேட்ட கோட்டை முதலான சொத்துக்களைச் சுவாதீனமாக்கச் சித்தமாக இருப்பதாகவும், ஆனால் தாமும் தம் மக்களும் தமது இந்து மதத்தை விட்டு, மகமது மதத்தைத் தழுவ பிராணன் உள்ள நாள் வரையில் சம்மதிக்கோமென்றும் சொல்ல, இருகக்ஷிக்காரருக்கும் வெகுநேரம் தர்க்கமாகிக் கடைசியில், பூபராயனும் தனது பிள்ளைகளும் மத வைராக்கியத்தினால் அங்குமுன்னதாகச் தயார்செய்திருந்த அக்கினி குண்டத்தில் "ஹரி ஹரி ராம் ராம்" என்று சொல்லிக்கொண்டு இறங்கி சுத்த வீரர்களாகச் சொர்க்கலோகமடைந்தார்கள். கோட்டையின் முன்வாசலில் இப்படி நடக்கவே, கோட்டையின் உள்ளே அந்தப்புரத்திலிருந்த இராஜ மஹிஷிகள் தமது நாயகர் கருத்தின்படி, முன்னதாகத் தயார் செய்திருந்த அக்கினி குண்டத்தில் குதித்து வீரசொர்க்கத்தை அடைந்தார்கள்.

அக்காலத்தில் பூபராயனுவுடைய மூன்றுவயது ஆண் குழந்தையாக இருந்தவனை, ஒரு தாதிக் கிழவி யாருக்கும்

தெரியாமல் எடுத்துக்கொண்டுபோய், கோட்டையின் பெரிய சாக்கடைக்குள் மறைத்து வைத்திருந்தும், மகமதிய பகையாளிக்குத் தெரியாமலும், இராத்திரி காலங்களில் எடுத்துக்கொண்டோடியும், கடைசியாகத் துளுவதேசத்தை (கனராவைச்) சார்ந்த ஒரு மலைக்காட்டில் போய் மறைத்தும், அவ்விடத்திய மலைவாசிகளோடு உறவாடியும் அவர்களால் தேனும் தினைமாவும் பெற்று வளர்த்தும் வந்தாள். இது நிற்க,

கோட்டைக்குள் பிரவேசித்த மகமதியர் சேனைகள் (1334-ம் வருஷம்) அதைச் சின்னபின்னமாக இடித்தும், அதிலுள்ள விலை உயர்ந்த பொருள்களை யெல்லாம் வாரிக்கொண்டு வெளியில் வந்தும், கோயில் கோபுரங்களை யெல்லாம் இடித்தும், நகரவாசிகளை நாலாவிதமாக ஹிம்சை செய்தும், அவர்கள் வீடு வாசல்களைக் கொள்ளையடித்தும் குரூரங்கள் செய்ய, அநேகர் அந்நாட்டைவிட்டு நாலா பக்கங்களிலும் ஓடிப் போய்விட்டார்கள்.

ஆனைகுந்தி பட்டணம் அல்லோல கல்லோலமாகிவிட, இத்தியாதிகளைக் கண்டும் கேட்ட ஹரிஹரன் புக்கன் என்னும் சேனாதிபதிகள், இனி அவ்விடத்தி லிருப்பதில் யாதொரு பிரயோஜனமு மில்லையெனக் கண்டு தெளிந்து ஆடுமேய்க்கும் குரும்பர்களைப்போல வேஷம் தரித்துக்கொண்டும், அநேக காடு மலைகளைத் தாண்டியும், தாங்கள் முன்னிருந்த பட்டணத்தைச் சேர்ந்தார்கள். அங்கும் மகமதியர் குடிகளை வருத்துவதைக் கண்டு, அதற்கடுத்த ஓர் பெரிய வனத்துக்குள் மறைந்துநிற்கப் போயினர். அந்தப் பயங்கர வனத்தில் ஓர் அழகிய ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்துக்கருகே பரமசிவமே அவதாரமாக வந்தாற்போல ஒரு பெரியவர் புலித்தோலாசனத்திலிருந்து, அவரைச் சுற்றியிருக்கும் சிஷ்யர்களை நோக்கி இந்து மதத்தின் பெருமையையும், அதை மகமதியர் கெடுக்கும் அக்கிரமத்தையும் பற்றி அழுத கண்ணோடும், அனுதாபத்தோடும் சொல்லிக்கொண்டிருப்பதைக் கண்டும் கேட்டும், ஹரிஹரன் புக்கன் அவர் பாதத்தில் விழுந்து வணங்கி நின்றார்கள்.

---

## வித்தியாரண்ணியர் சரித்திரம்.

அந்தப் பெரியவர் யாவரெனில், துங்கபத்திரா நதி தீரத்தில், பம்பாநகரத்தில், தெலுங்கு பிராமணகுலத்தில் பிறந்து வளர்ந்தவர். அவரது தந்தையின் பெயர் மாயண்ணர் சாயணாசாரியார். அவருடைய தமையனார் பாரத்துவாஜ கோத்திரத்தைச் சார்ந்தவர். புக்கருடைய குலகுருவு என்பதற்கு அடியிற்கண்ட சுலோகமே ஆதாரமாம்.

శ్లో॥ యస్యజో ధాయనం సూత్రం శాఖా యస్యచయాజుషీ ।
భారద్వాజకులంయస్య సర్వజ్ఞస్సహిమాధవః ।
శ్రీమతీయస్యజననీ సుకీర్తిర్మాయణఃపితా ।
సాయణో భోగనాథశ్చ మనోబుద్ధిసహోదరౌ ॥

ஆகம வேத புராண இதிகாசங்களைக் கரைகண்டுணர்ந்து இல்லறம் புக, அவரது உத்தம பத்தினியார் சிறு பிராயத்திலேயே பரமபத மடைந்ததனால், அவர் உலக ஆசையை விட்டொழித்துச் சந்நியாச ஆச்சிரமத்தை வகித்தும், நல்லொழுக்கம், சீலம், சிவபக்தி, பரோபகாரம், தேசோபகாரம் முதலான குணங்களிற் சிறந்தவரும், வேதாந்த மத சித்தாந்தியுமாகிய வித்தியாரண்ணிய சுவாமிகள் 108 உபநிஷத்துக்களுக்கு அத்வைத பரமாக பாஷ்யமெழுதியும், பராசரமாத்வீயம், காலமாத்வீயம், சங்கர விஜயம், வித்தியாரண்ணியம், சர்வதரிசன சங்கிரஹம், மாதவநிதானம், காலஞானம் முதலான கிரந்தங்களை இயற்றி மஹா மாத்துவாசாரியர் என்று மகிமைபெற்று ஸ்ரீ சங்கராசாரியர் பீடத்தைப் பெற்றவர். அந்தச் சங்கராசாரியர் பீடத்துக்கு வந்தவர்களில் அவரைவிட சிறந்த வித்துவான் அவருக்கு முன்னுமில்லை, பின்னுமில்லை. அவர் சன்னியாசி ஆச்சிரமத்தைச் சார்ந்தவராகினும், புக்கனுக்கு மந்திரியாக இருந்தமையால், அழகிய அரண்மனைகளில் வதிந்தும், யானை, குதிரை தண்டு தளாதி பிருதுகளுடன் பவனிவந்தும் பிரகாசித்தார். அவர் காலம் தொடங்கிதான் அந்த மடாதிபதிக்கு உலககுருவென்ற பெரும்பெயர் வழங்கிவரப்பட்டது. பிறகு அவரைப் பார்த்து மற்ற மடாதிபதிகளும் யானை, குதிரை முதலான பிருதுகளை வகிக்க ஆரம்பித்தார்கள்.

தோலும் எலும்புமாகத் தோன்றும் அத்தபேர்கிதி, தம் நாட்டில் துருக்கர் புகுந்து தேவாலயங்களையும், மடாலயங்களையும், விக்கிரகங்களையும், வீடுகளையும் உடைத்துக் கொள்ளையிட்டும், குடிகளைக் குரூரமாக நடத்திவருவதையுங் கண்டு சகியாமல், சதா அழுத கண்ணும் சிந்திய மூக்குடனும் சிவனைத் தியானித்தும், தமது சீடர்களுக்குச் சிவபக்தி சீலத்தையும், தேசாபிமானத்தையும் போதிப்பதைக் கண்டும் கேட்ட ஹரிஹரனுக்கும் புக்கனுக்கும் அவரிடத்தில் அத்யந்த விசுவாச முண்டாகி, அவர் பாதத்தில் அடைக்கலமாக விழுந்ததைக் கண்டு, அந்த வேத்தா அவர்களை ஆசீர்வதித்து, "நீங்களாரப்பா? எங்கிருந்து வந்தீர்கள்?" என்று வினவ, அந்த ஹரிஹரனும், புக்கனும் தாம் பிறந்ததுமுதல் அங்கு வந்தவரையில் நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லக்கேட்டு, ஆனேகுந்திக்கு உண்டான கஷ்டத்தைக் கிருதி அழுது, அந்தோ! அந்தப் பட்டணத்திலும் துருக்கர் புகுந்து தும்சம் செய்ததற்குத் துக்கப்பட்டும், இனி அந்தப் பட்டணத்துக்குத் தாம் வந்து குடிகளுக்கு நன்மை செய்யச் சித்தமாக இருப்பதாகவும் சொன்னார்.

## வித்தியாநகரம் என்னும் விஜயநகரம் உண்டான விதம்.

அம்முனிவர் அப்படிச் சொன்னாலும் என்ன? அப்போது ஓரங்கல்நாடு முதல் ஆனேகுந்தி வரைக்கும் இடைக்கிடை மகமதியர் சேனைகள் தங்கி, வழிப்போக்கர்களை மறித்து உதைத்துக் கொள்ளையடித்துக் கொலைபுரிந்து வந்தபடியால், ஊரிலிருந்து அடுத்த ஊருக்கு உயிருடன் போய்ச் சேர்வது கஷ்டசாத்தியமாக இருந்தது. ஆகவே, அந்த வித்தியாரண்ணிய சுவாமிகளை ஒரு பிரேதம்போல் வேஷமிட்டும், ஒரு பாடையில் படுக்கவைத்தும், அவரை அவர் சீடர்களில் சிலரும், ஹரிஹரன் புக்கன் முதலானவர்களும் மாறுவேடம் தரித்துத் தூக்கிக்கொண்டு ஆனேகுந்திவழியே பிணக்கோலமாகப் போய்த் துங்கபத்திராநதிதீரத்தில் வந்திறக்கினார்கள்.

அவ்விடம் சிறு முயற்குட்டி ஒன்று ஒரு பெரிய சிங்கத்தைத் துரத்திக்கொண்டு போவதை வித்தியாரண்ணியர்

பார்த்து "என்ன ஒரு சிறு முயல் சிங்கத்தை எதிர்த்துச் சண்டைசெய்யுமாகில், இந்த இடம் எப்படிப்பட்ட வீரர்கள் குடியிருந்த விடமாக விருக்கவேண்டும்! இதுவன்றோ வீர தீரர்கள் வசிக்கத் தக்கவிடம்!" என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டு, அருகில் ஒரு மலையின்மேல் விருபாக்ஷ சிவ ஸ்தலமிருக்கக் கண்டுபோய் உள்ளே நுழைந்து அங்குள்ள புவனேசுவரி சுவாமியைத் தியானித்தும், அந்தக் கோயிலைக் கட்டியவர்கள் யாவரென்று அருகில் நின்ற அர்ச்சகரை வினவ, அவ்வர்ச்சகர், அம்முனி சிரேஷ்டரை நோக்கி "ஏ! எதீந்திரா! ஸ்ரீமத் ராமாயணத்தில் கண்ட சுக்கிரீவன் இந்த மலைமீது ஏறிச் சுவாமியைத தரிசிக்கையில், வாலியும் அவனைத் தொடர்ந்துவந்து தன்னாலானமட்டும் ஏறிப்போக முயன்றும் முடியாமல் போய்விட்டான். இதைச் சுற்றிலும் மாலவதம், ஏமகூடம், பசுவசிரங்கம், மதங்க பருவதம், கிஷ்கிந்தம் என்னும் ஐந்து பருவதப் பிரதேசங்க ளிருக்கின்றன. இங்குதான் ஹம்பிஸ்தலமு மிருக்கிறது. இவைகளைச் சாக்ஷாத் தசரதராமர் கட்டித் தரிசித்ததுமுதல் அநேக தபோநிதிகள்வந்து வனசஞ்சாரிகளாகித் தவஞ்செய்து சர்வேசுவரனை அடைந்தார்கள்" என்று சொல்லவே, அந்த வித்தியாரண்ணியருக்கு இவை யாவும் ஞானதிருஷ்டியினாலும் உண்மையாகவே தோன்றியதன்மேல், இப்படிப்பட்ட ஸ்தலத்தில் தாமும் தம் உயிர் உள்ளநாள் வரையில் காலம் போக்கக் கருதியும், அவ்விடத்தில் அஷ்ட ஐசுவரியங்களும் திரண்டுவந்த அழகிய நகரமொன்றை உண்டாக்கித் தரவேண்டுமென்றும், தமது இஷ்ட தேவதையாகிய அஷ்டலக்ஷ்மியைத் தியானித்தார்.

அப்படி தியானித்துக் கொண்டிருக்கும்போது, அம்முனி புங்கவருடைய சீடர்களான ஹரிஹரன் புக்கன் முதலானவர்கள் வேறுவேடந் தரித்து ஆனைகுந்திக்குள் போய்ப் பார்க்க, அவ்விடத்திய கோயில் கோபுரங்களும், கோட்டை கொத்தளங்களும் இடிந்து குட்டிச்சுவர்களாக நிற்கவும், அந்நகரத்தில் உள்ள ஜனங்கள் எல்லாரும் நாலாபக்கங்களில் வலசைப்போய் ஒரு காட்டைப்போலிருப்பதையும் கண்டு பரிதபித்து, தம் தபோநிதியினிடம் திரும்பிவருகையில், வழியில் ஓர் தடாகத்தைக் கண்டு தண்ணீர் குடிக்க இறங்கினார்கள். அங்கு ஒரு குகை இருக்கக்கண்டு அதற்குள் புக்கன் பிரவேசித்துப் பார்க்க, தங்கக் கம்பங்களும், தகடு

களும், கட்டிகட்டியாகவும், வைரம் கெம்பு முத்து முத லான நவரத்னங்கள் கூடை கூடைகளாகவும், பணம் துட்டு கள் பானை பானைகளாகவும் கிடக்கக்கண்டு ஆச்சரியப்பட்டு இப்பொருள்களை எந்த இந்துராஜன் துருக்கர் முதலான வர்களுக்குப் பயந்து இங்கு மறைத்துவைத்தானோவென்று மயங்கி ஓடிப்போய்வித்தியாரண்ணியருக்குஅறிவிக்க, அவர் உத்தரவுப்படி அவைகளை அவர்கள் கொண்டுவர, அங்கு மஹா வித்துவசிகாமணிகளும், வீரசிகாமணிகளும் வசிக் கத்தக்க நகரத்தை கி. பி. 1336ல் (அதாவது சுமார் 600 வருஷங்களுக்கு முன்) கட்டிவைத்தார். அவர் இப்படிக் கட்டிய பட்டணத்திற்கு அவர் பெயரே வழங்கிவருகிறது. அதுதான் வித்தியாரண்ணியர் நகரம். அந்த விடந்தான் முன் விஜயராயலு கட்டிய விஜயநகரம். அந்த நகரந்தான் பிற்காலத்தில் ஆந்திர இராயலு ஸமஸ்தானத்தார் தலை நகர மாகவும், சக்கரவர்த்திப் பட்டம் கட்டும் கெடிஸ்தலமாக வும் பிரபலப்பட்டது.

அப்படிப் பட்டணம் கட்டிமுடிந்தது. போதுமான பொருளும் கிட்டியது. அப்படி இடமும் பொருளும் கிட் டவே, முன் மகம்மதியர்களுக்குப் பயந்து வலசைபோன குடிகளும் நாளாவட்டத்தில் நகரத்தில் வந்து குடிபுக ஆரம்பித்தார்கள். ஆரம்பித்தாலு மென்ன? அவர்களைத் தக்க தருமநீதி சட்டதிட்டங்களைக் கொண்டு ஆளுவதற்கு ஓர் அரசன் இல்லாமையால், அக்குறைவை நீக்கும்பொரு ட்டு வித்தியாரண்ணியர் அந்த ஆனைகுந்தியில் முன் ஆண்டு வந்த ஸ்ரீநரபதி பூபராயலு அவர்களுடைய சந்ததிகள் எங் கிருக்கிறார்களோவென்று தேடிப்பார்க்க, அக் குடும்ப வார்சுகள் அகப்படவில்லையே என்று விசனப்பட்டுக்கொண் டிருக்கையில், அவரது உண்மையான சீடர்களாகிய ஹரி ஹரனும், புக்கனும் வந்து, "சுவாமி! ஸ்ரீ பூபராயலுடைய சந்ததிகள் இந்நகரத்தில் வரும்மட்டும் தாங்களே அரசராகி இராஜ்ஜிய பரிபாலனம் செய்துவரவேண்டும்" என்று அவர் பாதங்களைப்பற்றி வேண்ட, அந்த வித்தியாரண்ணியர் சிரி த்து, "நான் பிராம்மண சந்நியாசி; க்ஷத்திரியர்வேலையிலும், இல்லறத்தார் வேலையிலும் பிரவேசிக்கச் சரிப்படாது; ஆக வே, பூபராயலுடைய சந்ததிகள் வருகிறவரையில், உங்க ளில் மூத்தவனாகிய ஹரிஹரன் இராஜனாகவும், புக்கன் சேனாதிபதியாகவும் இருங்கள்; நான் உங்களுக்கு மந்திரி

பாகவிருந்து என்னாலான உதவிகளைச் செய்துவருகிறேன்'' என்று சொல்லி, அவர்களைச் சம்மதிக்கச் செய்தும், ஆசீர்வதித்தும், அந்நகரத்தில் அரசனுக்கு என்று முன்னதாகத் தயார் செய்திருந்த தங்கத்தினாலும், நவரத்தினங்களாலும் பிரகாசிக்கும் சிங்காசனத்தின்மீது நல்ல முகூர்த்த காலத்தில் ஹரிஹரனைக் கைலாகு கொடுத்து ஏற்றி உட்காரச்செய்து பட்டங் கட்டினார். அந்த நியமனத்தைக் குடிகள் யாவரும் அங்கீகரித்துக்கொண்டு, அந்த வேதபுருஷனையும் அவரால் நியமிக்கலான ஹரிஹரராயலு அரசனையும் வணங்கினார்கள்.

---

## 1. ஹரிஹரதேவராயலு ஸமஸ்தானம்.

### (கி. பி. 1336ஸு முதல் 1350ஸு வரை.)



அப்படி ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகளுடைய ஆசீர்வாதத்தினால் அரசாக்ஷியைக் கைக்கொண்ட ஹரிஹரராயலு சந்திரவமிச க்ஷத்திரிய ஜாதி, சங்கம வகுப்பைச் சார்ந்தவன். அவனுடன் பிறந்தவர்கள் ஐவர். அவர்களில் புக்கன் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டாலும், பெரும்பான்மையான இராஜ்ய காரியங்களையும் பார்த்துக்கொண்டு முக்கியமாக மைசூரிலிருந்து அரசுசெய்தான். மற்ற சகோதரர்களில் "கெம்பராயலு" கீழ்நாடுகளையும், "மாரப்பராயலு" பானவாசி நாட்டையும் ஆண்டுவந்தார்கள். அக்காலத்தில் கோவா (துளுவ), கனரா, ஹயிசாலம் அல்லது மைசூர், பனவாசி, குண்டலம் முதலான நாடுகள் அவர்களுக்குச் சுவாதீனமாகி இருந்ததன்றியில், கனரா நாட்டிலுள்ள ஜயினர்களையும், கோவாவின் மேற்குப் பாகத்திலிருந்த அராபிய தலைவர்களையும் ஜயித்து, 1343ஸு நாட்டின்மீது படை எடுத்துவந்த மகம்மதியரைத் துரத்தியடிக்க, ஓரங்கள் இந்து மன்னருக்கு உதவியும் செய்தான். பிறகு அவன் பாதாமி என்னும் இடத்தில் பலமான கோட்டையைக் கட்டி ஏழுஸு சமாதானமாக ஆண்டு, 1343ஸு பரமபத மடைந்தான்.

---

## ௨. புக்கதேவராயலு ஸமஸ்தானம்

(கி. பி. 1343ஹு முதல் 1379ஹு வரை.)

ஹரிஹரராயலுக்குப் பிறகு அவனுடைய தம்பி புக்க ராயலு விஜயநகரத்துக்கே வந்து அதை ஸமஸ்தானத் தலைநகர மாக்கிக்கொண்டும், கூல்பர்க்காவி லிருந்த பாமினி குடும்ப மகமதியர்களைத் தாக்கியும், அநேக வருஷகாலம் மகம்மதியர் இந்துக்களைத் தாக்காதபடி பாதுகாப்புச் செய்தான். அவன் ஓரங்கல் நாட்டரசனுகிய ருதத்திரதேவலுக்கு உதவி செய்ததினுல், சுல்தான் மகம்மது ஷாவுக்கு விரோத முண்டாகி, ரெயிச்சூர் டூஆபில் 1365ஹு இருவருக்கும் பிரமாத் சண்டை யுண்டாக, கடைசியில் நிரபராதிக ளான குடிகளை எவரும் கொல்லக்கூடாதென்ற நிபந்தனைக ளோடு சமாதானம் செய்துகொண்டார்கள். பிறகு 1376-ம் வருஷம் அந்தச் சுல்தான் மகமதுவின் குமாரன் மூஜாஹித் சாயபு சண்டைக்கு வந்தும் தோல்வியடைந்து அதோனி யில் சமாதானம் செய்துகொண்டார்கள். அந்தப் புக்க ராயலு காலத்தில் விஜயநகர சமஸ்தானத்துக்குக் கோவா, பெல்காம், துளுவம், கொங்கணம் முதலான நாடுநகரங்கள் சுவாதீனமானதன்றியில், விஜயநகர ஸமஸ்தானம் தெற்கே இராமேசுவரம் வரையில் பரவியதனுல், இலங்கை மலையாள மன்னர்களும், தகுந்த வெகுமானங்களுடன் ஸ்தானு பதிகளை விஜயநகரத்துக்கு அனுப்பினுர்கள்.

அக்காலத்தில் விஜயநகரம் சகல சம்பத்துக்களில் நிறைவுபெற்றுப் பிரகாசித்தது. அந்தப் புக்கராயலு: யுத்தத்தில் சுத்தவீரனுக ஜ்வலித்ததோடு, கல்விவிருத்தி விஷயத்திலும், பகவத் பக்தி விஷயத்திலும் அதிக சிரத்தை யுடையவனுக விருந்தான். வித்தியாரண்ணியருடைய சகோதரர் சாயனுசாரியார் வேதங்களுக்கு பாஷ்யம் செய்ய ஆரம்பித்தது இந்தப் புக்கராயலு காலத்தில்தான். கி. பி. ஏழாம் நூற்றுண்டில் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால் ஸ்தாபிக்கலான மைசூரை யடுத்த ஸ்ரீங்கேரி மடத்துக்கு வித்தியாரண்ணிய சுவாமிகளைப் பிரதம ஆசாரியராக நியமித்ததும் அக்காலத்தில்தான். இம்மட்டோ, அந்தப் புக்கராயலு: மதத்தில் சைவனுக விருக்கினும் அந்நிய மதங்களைத் தூஷிக்காமலும், அவைகளை ஆதரித்தும் வந்

தான். இந்து மதத்துக்கு விரோதிகளான ஜயினர்களுக்கும் உதவிசெய்து வந்ததோடு, ஜயினர்களுக்கும் இராமாநுஜ மதஸ்தர்களுக்கும் ஊர்கோல விஷயமாக உண்டான பெருங் கலகத்தைச் சிராவண பெலகோலாவில் சமரசமாகச் சமா தானப்படுத்தினன். குடிகளுக்கு உபயோகமான சத்திரங் களையும், வைத்தியசாலைகளையும், கிணறுகளையும், வாய்க் கால் முதலான சாதனங்களையும், அந்தப் பூரிலிருக்கும் புக்கசாகரம் முதலான தடாகங்களையும் உண்டாக்கினன். இப்படி 36வருஷம் ஆண்ட புக்கதேவராயலு 1379வருஷம் மரண மடைந்தான்.

---

## 2-வது ஹரிஹரராயலு ஸமஸ்தானம்.

### (கி. பி. 1379வருஷம் முதல் 1406வருஷம் வரை.)

அந்தப் புக்கராயலுக்குப் பிறகு அவனுடைய குமாரன் (2-வது) புக்கராயலு அல்லது ஹரிஹரராயலு சிங்காசனம் ஏறினன். அவனுடைய பட்டபுதேவியின் பெயர் மல்லாம் பிகையம்மாள். அவன் 1393வருஷம் தென்னடுகள் வரையில் தனது அதிகாரத்தைப் பரவச்செய்தும், சோழ பாண்டியர் களை அடக்கி அவர்களிடம் கப்பம் வாங்கிக்கொண்டும், அப் படி அவர்களை அடக்கியதனல் 'சாரதுலமாத பஞ்சனன்' அல்லது மஹாராஜாதிராஜன் என்ற பிருதுப்பெயரைப் பெற் ருன் என மைசூர், தார்வார், செங்கற்பட்டு, திரிசிரபுரம், காஞ்சீபுரம் முதலான விடங்களில் அநேக சாசனங்கள் அகப்பட்டன. அவன் பிராம்மணர்களுக்கு அநேக அக்கிர காரங்களையும், கோயில் கோபுரக் கட்டிடங்களையும் கட்டிக் கொடுத்ததன்றியில், ஜயினமத வித்துவானுகிய தண்டதீபர் வேண்டுகோளின்படி, விஜயநகரத்தில் ஒரு அழகிய ஜயி னர் கோயிலையும் கட்டிக்கொள்ள இடங்கொடுத்தான். அவன், சமஸ்தானத்தில் ஸம்ஸ்கிருத வித்தையைப் பரவச் செய்ததோடு, வித்தியாரணியருடைய சகோதரரும், தமது முக்கியமான மந்திரியுமாகிய சாயனுசாரியரை அவரது வேதபாஷ்யத்தை எழுதி முடிக்கவேண்டிய உதவிசெய்து முடிப்பித்தான். இந்தியாவின் வடதேசத்தில் பிரோஜஷா, டொக்ளாக் இவர்கள் பிராம்மணர்களுடைய கோயில் கூட கோபுரங்களை இடித்தும், சிறந்த கிரந்தங்களைக் கொளுத்தி நாசமாக்கியும் வருகையில், தெற்கே ஹரிஹரன் பிராமணர்

களையும், அவர்களுடைய கிரந்தங்களையும், கோயில் கோபுர விக்கிரகங்களையும் பாதுகாத்துப் பரிபாலித்து வந்தான். அவன் அப்படிப் பாதுகாத்து வந்ததற்குத் தார்வார், கன்னடா, கோவா, மைசூர், பல்லாரி, கடப்பை, காஞ்சி, திரிசிராப்பள்ளி முதலான விடங்களில் அகப்பட்ட சாசனங்கள் இன்றும் சாக்ஷி பகருகின்றன.

விஜயநகரத்தினுடைய போகங்களைக் கண்டு சகியாத கூல்பர்கா சுல்தான் பெரோஜிஷா 1398-ம் வருஷம் சண்டைக்கு எத்தனிக்க, விஜயநகரத்தாரும் துங்கபத்திரா நதியைக் கடந்து ரெயிச்சூர் டூவாபைப் பிடித்துக் கொண்டார்கள். பிறகு மகமதியசேனை மஹா மூர்க்கத்தோடு விஜயநகரம்வரையில் வர, இருகக்ஷியாருக்கும் சமாதான முண்டாயிபது. அந்தக்காலத்தில் தக்ஷணத்திலும் கர்னாடகத்திலும் கடும்பஞ்சம் சம்பவித்து 12 வருஷகாலம் நீடித்து நாலாபக்கத்து நரசிவர்களை நாசமாக்கிவிட்டது. அக்காலத்தில் வடக்கே தாமர்லேன் படையெடுத்துவந்து இந்துக்களைத் துவம்சம்செய்து வருவதைக் கூல்பர்க்காவிலிருந்த பெரோஜிஷா கேட்டு அவன் உதவியைக்கொண்டு குஜராத்திலும், காண்டீஷிலும், கூடுமாகில் விஜயநகரத்திலும் இரண்டாந்தரம் சண்டை செய்யப் பிரயத்தனப்படுகையில், 1406-வருஷம் ஹரிஹரராயலு சுமார் 20 ௵ ஆண்டு இறந்தான். அவன் காலத்தில் செலாவணியாகிவந்த பொன் வெள்ளி செம்பு நாணயங்கள் இன்னும் அகப்படுகின்றன. அவன் கட்டுவித்த புதியகோட்டை கொத்தளங்களும், கோயில் கோபுரங்களும், தருமசாலைகளும் இன்னும் அவன் பெயரைப் புகழுகின்றன.

---

## 1-வது தேவராயலு ஸமஸ்தானம்.

(கி. பி. 1406 ௵ முதல் 1416 ௵ வரை.)

இரண்டாவது ஹரிஹர ராயலுக்குப் பிறகு அவன் குமாரன் தேவராயலு 1406 ௵ நவம்பர் ீ சிங்காசனமேறினன். அவன் காலத்தில் குடிகளுக்குக் கஷ்டமேயொழிய இஷ்டலாபம் கிடையாமல் தவித்தார்கள். அப்படி ஆவதற்குக் காரணம், கூல்பர்கா பெரோஜிஷா சமஸ்தானத்தைச் சேர்ந்த முடுகலநாட்டில் ஒரு குடியானவனுடைய அதிக அழகுடைய பெண்ணேயாம். அந்தப் பெண்ணின்

பெயர் பிரிதலை. அவளுக்கு உபாத்தியாயராக இருந்த பிராம்மணன் அவள் அழகைப்பற்றி அடிக்கடி தேவராயனிடம் புகழ்ந்து சொல்ல, அந்தத் தேவராயனும் அவளை விவாஹம் செய்ய விரும்பி அநேக ஆடையாபரணங்களை அந்த அந்தணர் மூலமாக அனுப்பிவைத்தான். அந்தப் பெண், அரசனை விவாஹம் செய்துகொண்டால் தன்னைப் பெற்றோரை இனிப் பார்ப்பதற்குஅநுகூலப்படாதெனக்கருதிவந்தஅந்தணரைத் திருப்பி யனுப்பிவிட, அந்தப் பிராம்மணன் தான் கொண்டு வந்த ஆடையாபரணங்களை அரசனிடம் கொண்டுபோய் வாப்ஸ் கொடுக்க, அரசன் அதிக கோபாரூடனாகி அப்பிரிதலைப் பெண்ணை எப்படியாவது கொண்டுவரத்தக்க தண்டு தளாதிகளோடு முடுகல நாட்டின்மேல் படை எடுத்துப் போக அந்தப் பெண்ணின் தந்தை அதைப்பற்றித் தமது சுல்தானுடன் முறையிட, சுல்தான் விஜயநகரத்தின்மேல் படை யெடுத்துவர, இருகக்ஷிக்காரர்களுக்கும் பிரமாத சண்டைகள் நடந்ததில், விஜயநகரத்தார் நாவல்குண்டத்தையும் பங்காபுரத்தையும் சுல்தானுடைய யுத்தச் செலவுக்குக் கொடுத்துச் சமாதானம் செய்யப்பட்டது. இவன் 1416ஹு பரமபத மடைந்தான்.

---

## விஜயபூபதிராயலு ஸமஸ்தானம்.

(கி. பி. 1416ஹு முதல் 1418ஹு வரை.)



இறந்துபோன தேவராயனுக்கும் அவன் மனைவி திம்மாம்பிகா தேவிக்கும் பிறந்த விஜயபூபதிராயனு தனது காலத்தையெல்லாம் கல்வியை விருத்தியாக்குவதிலும், சிற்றின்ப சுகத்திலும் கழித்துவிட்டான்.

## பிரவுட தேவராயலு சமஸ்தானம்.

(கி. பி. 1419ஹு முதல் 1444ஹு வரை.)



விஜயபூபதிராயலுக்கும் அவன் மனைவி நாராயணம்பிகாளுக்கும் ஜனித்த பிரவுட தேவராயலு பட்டத்துக்கு வந்தான். புராதன புக்கராயலுக்குப் பிறகு பிரபலமான இராயலாகிய பிரவுடதேவராயலு, மகமதியர் தம் முன்னோரிடம் பிடித்துக்கொண்டிருந்த கோட்டைகளை எல்லாம்

சண்டை செய்து ஜயித்துத் தன் வசமாக்கிக்கொண்டான். அச்சண்டைகளில் மகமதிய சேனைத் தலைவரான மீயர்பைசுல்லி சாயபு இந்துக்களால் கொல்லப்பட்ட சங்கதி சுல்தான் பெரோஜிஷா கேட்டு மனமொடிந்து அதே விசனத்தில் மரணமடைந்தான். அந்தச் சுல்தானுக்குப் பிறகு வந்த அஹமத்ஷா தனது தகப்பனுருக்கும் சேனைக்கும் உண்டான கஷ்டத்தைக் கருதி 1422ஸு தேவராயனுக்கு விரோதமாகப் படையெடுத்து வந்து விஜயநகரத்தை முற்றுகை போட்டு வழியில் கண்ட கோயில் கோபுரங்களை எல்லாம் இடித்துச் சண்டை செய்ய, அவனது யுத்த செலவைத் தருவதாகச் சமாதானமாகியது. அந்தப் பிரமாத சண்டை சச்சரவுகளினுல் 1424-25ஸு நாட்டில் பிரமாத பஞ்சமுண்டாகிப் பல்லாயிரம் பிரஜைகள் பரலோக மடைந்தார்கள்.

அந்தச் சண்டையினுல் இந்துக்களுக்கு வரவர வில்வித்தையில் சாமார்த்தியம் குறைந்துபோய்விட்டதென்று கண்டு, தேவராயனும் தனது சமஸ்தானத்தில் 2,000 மகமதியரைச் சேனையில் சேர்த்தும், அவர்களுடன் 80,000 இந்துச் சிப்பாய்களையும் சேர்த்தும், மகமதியரை விஜயநகரத்தில் வதிந்து வரும்படி இடங்கொடுத்தும், அவர்களால் இராஜத்துரோகம் செய்கிறதில்லை யென்று சொல்லிக் குரானில் சத்தியம் வாங்கியும், அக்குரானைத் தனது ஸமஸ்தானத்தில் வைத்துக்கொண்டான். அப்படி மகமதியரை இந்து சேனையோடு சிப்பாய்களாகச் சேர்த்துக்கொண்டது இந்த விஜயபூபதி காலத்தில்தான் ஆரம்பம்.

1435ஸு சுல்தான் அஹமத் சாயபு இறந்துவிட அவனுடைய குமாரன் அலாவுதீன் பட்டத்துக்கு வந்தான். அவனது தம்பி மகமது, தேவராயனுடைய உதவியினுல் அலாவுதீனை ஜயித்து ரெய்ச்சூர், பீஜப்பூர், ஷோரணூர் முதலான கோட்டைகளைப் பிடித்துக்கொள்ள, தேவராயனை மஹா பராக்கிரமசாலி என்று மகமதியர்கள் கொண்டாடினர். அந்தக்காலத்தில் (1420-1421ஸு) விஜயநகரத்தை வந்துபார்த்த ஐரோப்பிய யாத்திரைக்காரராகிய "நிகோலா கோண்டி" (Nicola Conti) என்பவர் விஜயநகரம் சகல சம்பத்துகளைப் பெற்றும், 60 மைல் சுற்றளவுள்ள சிறந்த பட்டணமாகவும், 90,000 சேனுவீரர்களால் காக்கப்பட்டும், சஹகமனம், ரத உற்சவம், செடில் குத்தியாடல் முதலான

உற்சவங்களையும் கண்டதாக எழுதியிருக்கின்றனர். மற்றோர் யாத்திரைக்காரராகிய "அப்தல் ரஜாக்" என்பவர் விஜயநகரத்தைப்பற்றிப் பின்னும் விசேஷித்து எழுதியிருக்கின்றனர்.

அதாவது. தான் (அப்தல் ரஜாக்) பாரசிக நாட்டு 'கோரேசன்' இராஜாவின் ஏஜண்டாகி மலையாளக் கரையோரமாக மங்களூருக்கு வந்து அங்கிருந்து விஜயநகருக்கு வந்ததில், அந்த விஜயநகரமும் அதைச் சுற்றிலுமிருந்த விடங்களில் பலவித பயிர்கள் செய்யப்பட்டு ஓர் சிங்கார நந்தவனம் போலவும், அதன் இராஜாங்கம் தெற்கே இலங்கை முதல் கூல்பர்கா வரையிலும், மலையாளம் முதல் பங்காளம் வரையிலும் பரவி, அந்த எல்லைக்குள்ளாக 300 பெரிய அரணான கோட்டைகள் கட்டியிருந்தனவாகவும், அவைகளை யடக்கி ஆண்ட இராயலு இந்தியா தேசத்திற்குள் சிறந்த சக்கரவர்த்தியாகவும், அவனுக்குப் பிரதி மாதமும் கிரமச் சம்பளம் பெற்றுவந்த 11,00,000 லக்ஷம் சேனைகள் சுத்த வீரர்களாகவும், ஆயிரக்கணக்கான யானைகளும், அனேக ஆயிரங் குதிரைகளும், இரதங்களும் இருந்தனவாகவும், வித்யாநகரம் அல்லது விஜயநகரபட்டணம் 10 மைல் நீளமும், 12 மைல் அகலமுமுள்ள விஸ்தீரண முள்ளதாயும், அதைச் சுற்றிலும் ஏழுசுற்றுள்ள பிரமாண்ட கல்சுவர்கள் கட்டப்பட்டும், அதற்குள் அரணான ஓர் பெரிய கோட்டையும், உருவிய கத்திகளோடு இமைபோடாமல் அனேக வீரர்கள் பாதுகாத்துக்கொண்டிருந்ததாகவும், அந்த நகரத்தில் எங்கு பார்த்தபோதிலும் விசாலமான ரோட்டுகளும், வாய்க்கால்களும், கூடகோபுர மாடமாளிகைகளும், அநேகவித புஷ்பங்களையும் பழங்களையும் தரும் நந்தவனங்களும், உத்தியானவனங்களும் நிறைந்திருந்ததாகவும், அனேக ஆபரணக்கடைகளும், ஆடைகளை விற்கும் கடைகளும், தானியக்கடைகளும், பலசரக்குக் கடைகளும் நிறைவு பெற்று, குடிகள் குதூகலத்துடன் வாழ்ந்துகொண்டிருந்ததாகவும், கண்டு ஆநந்தித்துச் சரித்திர மெழுதி இருப்பதன்றியில், அந்த ஸமஸ்தானத்தில் நீதி பரிபாலனத்துக்காக அரண்மனைக்குப் பின்புறத்தில் கட்டியிருந்த பெரிய நீதி ஸ்தலத்தில் "தண்டநாயுடு" என்ற நீதி அதிபர் பிரதிதினமும் வந்து பிராதுக்காரர்களிடம் சொற்ப நஜூர் பெற்றுக்கொண்டு, பிராதுகளை விசாரித்து நீதி செலுத்தியும்,

அச்சங்கதியை அன்றாடம் மாலையில் இராயரவர்களுக்கு அறிவித்து வந்ததாகவும், அப்படி அறிவிக்கும் கேசுகளில் பிசகுகள் நடந்தாகிலும், நீதி தவறி இருந்தாகிலும், அல்லது சிக்குமுக்கான வழக்குகளாக விருந்தாகிலும் இருக்கில் உடனே ஸமஸ்தானத்திலுள்ள தக்க பண்டிதர்களையும், பெரிய மனுஷர்களையும் தருவித்து அவர்களோடு யோசனை செய்து நீதி செலுத்தி வந்ததாகவும், அந்த நீதிஸ்தலத்துக்குப் பின்பக்கத்தில் ரிகார்டு அறைகளும், அங்கு அநேக உத்தியோகஸ்தர்கள் எழுத்தாணிகளால் ஓலைகளில் எழுதிக்கொண்டும், மரப்பலகைகளில் எழுதிக்கொண்டுமிருந்ததாகவும், அந்த ரிக்கார்டு ரூமுகளுக்கு அருகில் அழகான தங்கசாலை கட்டப்பட்டு அதில் தங்கத்தினாலும், வெள்ளி செம்புகளினாலும், வராகன், பிரதாபன் பணங்களை வார்ப்பிடம் செய்துகொண்டிருந்ததாகவும், மாஜிஸ்ட்ரேட்டும், அவர் கச்சேரியைக் காக்கவும், அமுலை நடத்திவரவும் 12,000 பதாதி சேவகர்கள் இருந்ததாகவும், அவர்களுடைய (பதாதிகளுடைய) மாதாந்திர சம்பளத்தை அந்நகரில் அப்போது செல்வத்தில் சிறந்த தாசிகளுக்கு விதித்த வரியிலிருந்து கிரமமாகக் கொடுக்கப்பட்டு வந்ததாகவும், அந்தப் பன்னீராயிரம் பதாதிகளுக்கு நகரிலும், மற்ற விடங்களிலும் நடக்கும் அக்கிரமங்கள் பூரணமாகத் தெரியும் என்றும், ஸமஸ்தானத்தில் குற்றம் செய்த குற்றவாளிகள் அகப்படாவிட்டால் அந்த 12,000 பதாதிகள் உத்தரவாதிகளாகக் கொண்டு நீதி செலுத்தப்பட்டு வந்தபடியால், அங்குக் குற்றங்கள் அபூர்வமென்றும், ஆகவே குடிகள் தம் பொருள்பயம் பிராணபயம் அற்று நிம்மதியாக வாழ்ந்திருந்தார்களென்றும், எப்படிப்பட்ட குடிகளும் நிர்ப்பயமாக நல்ல ஆடை ஆபரணங்களைத் தரித்துக் கொண்டு சுபமுகமாக இருந்தார்களென்றும் தெரிவித்ததோடு, இராஜாமாளிகையில் அநேக அறைகளின் சுவர் கூரைகளையும் தங்கத் தகடுகளில் சித்திரவேலை செய்து பத்தித்து அலங்கரிக்கப்பட்டிருந்ததாகவும், இராஜ சிங்காசனம் தங்கத்தினாலும, நவரத்தினங்களினாலும் பதிக்கப்பட்டுப் பிரம்ம விமானம்போல் தோன்றியதாகவும், இராஜ அரண்மனையில் 12,000 ஸ்திரீகள் மஹா சுந்தரவதிகளாகவும், அவர்களில் 3000 பெயர் இராயலுடைய மனைவிகளாகவும், அவர்களில் 500 பெயர் இராயலு வெளியில் போகும் போது கூட பல்லக்கில் போய் வருவதாகவும் இன்னும் பல

விதமாக இந்த ஸமஸ்தானத்தின் பெருமையைப்பற்றிப் பிரபலமாக எழுதியிருக்கிறார். அன்றியும், அங்கு நடந்த தசரா பண்டிகைகாலத்தில் ராயலு கொலுவிருந்தபோது அநேக பெருநில குறுநிலமன்னர்களைத் தருவித்து மரியாதை செய்து பவனிவந்த வைபவத்தையும், பின்னும் தீபாவளிபண்டிகை காமன் பண்டிகைகளின் விநோதங்களையும் புகழ்ந்து எழுதியிருக்கின்றனர். அந்த அப்தல் ரஜாக் சாயபே இராயராவர்களைத் தரிசிக்கப் போனபொழுது அவரை அன்போடு அழைத்து அருகிலிருக்கச் செய்தும், மகமதிய ராஜாங்க விஷயங்களைப்பற்றி விசாரித்ததாகவும், அந்த ராயலு நீண்ட உருவமும், ஆஜானுபாகுவும் அழகிய முகாரவிந்தமுமுடைய வாலிபரென்றும் புகழ்ந்து எழுதியிருக்கின்றனர்.

அவ்வளவு வைபோகத்தோடிருந்த தேவராயலு 1443-ம் வருஷம் பீரார் சுல்தான்மீது படை எடுத்துப் போய் முடுகல், பான்கிபூர் என்ற கோட்டைகளைப் பிடித்தான். அவன் காலத்தில் ரெயிச்சூர் லிங்கசாகர் என்ற இரண்டு விடங்களில் தவிர, மற்றப் பாகங்களிலிருந்த குடிகள் மகமதியர் பயமற்று வாழ்ந்தார்கள். அப்படி 30 வருஷங்களாக மாக்ஷிமையோடு ஆண்ட பிரவுடதேவராயலு 1446௵ பரமபத மடைந்தான்.

---

## இம்முடி தேவராயலு.

### (கி. பி. 1444௵ முதல் 1449௵ வரை.)

பிரவுடதேவன் மனைவி சிம்ஹலாதேவி வயிற்றில் ஜனித்த மல்லிகார்ஜ்ஜுனனுக்கு திம்மன்ன தண்டநாயுடு மந்திரி. மல்லிகார்ஜ்ஜுனன் பெனுகொண்டாவுக்குப்போய் அங்கிருந்த நரசிங்கராயலு தக்கபடி அரசு செய்யாமையால் தனது குமாரன் நந்தராஜுவை அங்கு அரசனாக்கினான்.

---

## விருபாக்ஷிராயலு ஸமஸ்தானம்.

### (கி. பி. 1467௵ முதல் 1485௵ வரை.)

மல்லிகார்ஜ்ஜுனனுடைய தம்பியாகிய, விருபாக்ஷி இராயலு பயங்காளியாக இருந்தமையால், பாமினி ஸமஸ்தானம்

ராஜாகான் கவான் 1470 வருஷம் கொங்கனி நாட்டின்மீது படை எடுத்துப்போய், 1471-ம் வருஷம் கோவா பட்டணத்தைப் பிடித்தான். பிறகு பெல்காமும் 1472-ம் வருஷம் மகமதியர் வசமாகிவிட்டது. அந்தக் காலத்தில் கடகபுரியிலிருந்த புருஷோத்தமதேவனும் படை எடுத்து வந்து வருத்தினான். விருபாக்ஷிராயனுக்குப் புத்திரசந்தானமில்லை. மல்லிகார்ச்சுனராயனுக்குச் சொந்த மக்களில்லாமையால் அவனோடு (அதாவது சாலிவாகன சகாப்தம் 1407 க்கு சரியான கிறிஸ்து சகாப்தம் 1485-ம் வருஷத்தில் சுமார் 150 வருஷகாலம்) கம்பீரமாக ஆண்டுவந்த ஹரிஹரபுக்கராயனுடைய ஸமஸ்தானம் முடிந்துவிட்டது. ஆகவே பெனுகோண்டாவில் அரசு புரிந்த ராயனுடைய குமாரனாகிய பிரவுடதேவராயனை (III) மல்லிகார்ச்சுனராயனு ஸ்வீகாரம் செய்துகொண்டு விஜயநகரத்தில் பட்டாபிஷேகம் செய்வித்ததாகவும், அந்தப் பிரவுட்தேவராயனு வாலிபதசையோடு பன்னிரண்டு வருஷம் ஆண்டுவந்து 1498-ம் வருஷம் மகமதியரோடு சண்டை செய்ய, கத்திகாயம் பட்டு அந்தக் காயம் சவுக்கியப்படாமல் இறந்துவிட்டதாகவும், அந்த ராயனுக்கு நரசிம்மராயனு தளகர்த்தனாகவும் மந்திரியாகவும் இருந்ததாகவும் (Ferishta) பெரிஷ்டா என்பவர் சரித்திரத்தில் எழுதியிருக்கிறார்.

அந்த 3-வது பிரவுட தேவராயனும், அவன் தளகர்த்தனும் மந்திரியுமாக இருந்த நரசிம்மராயனும், எவர்களென்று சில சாசன சரித்திரங்களைச் சோதித்துப் பார்க்கையில், முன்பு மாலிகாபூர் விஜயநகரத்தின்மீது படை எடுத்து வந்து பிரமாத சண்டை செய்து கோட்டையை முற்றுகை போட்டுப் பிடித்து அக் கோட்டைக்குள்ளிருந்த நரபதி இராஜனாகிய பூபராயனையும், அவன் மக்களையும் அக்கினிக்கு இரையாக்கியபோது, அவனுடைய தாதியானவள் அரண்மனையில் இருந்த மூன்று வயதுள்ள புக்கன் என்னும் ஆண் பிள்ளையை அந்தரங்கமாகவும், கோட்டையின் சாக்கடை வழியாகவும் கொண்டுபோய்,' துளுவநாட்டெல்லை மலைவாஸ குடிசையில் தேனும் தினைமாவும் கொடுத்து வளர்த்த பிள்ளையின் சந்ததிகளென்று ஸ்பஷ்டமாகிறது.

தாதியின் தந்திரத்தினல் துளுவநாட் டெல்லைக்குக் கொண்டுபோன பிள்ளையின் பெயர் புக்கராயனு. அந்தப் பெயரை பூபராயனு உயிரோடிருந்தபோது தமது சேனவீர

னுகிய புக்கனுடைய பராக்கிரமத்தை மெச்சி அச்சேனைத் தலைவன்பெயர் மறவாதிருக்கும் நிமித்தம் தமது மக்களில் கடைசி மகனுக்கு வைத்தான். அந்தச் சிறுவனும் தனது பெயருக்குத்தக்கபடி பராக்கிரமமுதலான குணங்களை உடைத்தாயிருந்தும், மலைவாசிகளுடைய தேனுக்கும் தினைமாவுக்கும் எதிர்பார்த்திருந்தபடியால் அப்பராக்கிரமத்தை உடனே அந்நியருக்குக் காட்ட வகையில்லை. ஆயினும், அவனை ஆசையோடு எடுத்துக் கொண்டுபோய் வளர்த்த தாதியானவள் அம்மலை நாட்டில் அகப்பட்ட உபாத்தியாயர்களிடத்தில் சுவல்ப கல்வியையும் மலைவாஸிகளிடத்தில் மல்யுத்தம், வில்யுத்தத் தொழில்களையும் கற்பித்தும், காலம் முதிர, அந்தப் புக்கனுக்கு அம்மலை நாட்டில் வந்துவளரும் விருத்தாந்தத்தை எல்லாம் சாங்கோபாங்கமாகச் சொல்ல, அவன் கேட்டு தனது விதிவசத்தை எண்ணித் துக்கப்பட்டும். அப்போது விஜயநகரத்தில் பிரபலமாக ஆண்டுவந்த புக்கராயனுக்கு தனது உண்மையான நிலைமையைச் சொன்னாலும் கால வித்தியாசத்தினால் காரிய சித்தியடைய வகையில்லை என்றஞ்சியும், அந்தத் தாதியைத் தமது தாயாகப் பாவித்தும், அவள் சொற்படி நடந்தும், மலைசாரப் பிள்ளைகளுக்குக் கல்வியைக் கற்பித்துக் கொண்டும், மலசருக்கு வேண்டிய வேட்டைகளாடியும், சொற்பப் பொருள் சம்பாதித்தும் காலம் கழித்துவந்தான். அவனுக்குக் கிட்டத்தட்ட இருபது வயது ஆகவே, தாதியம்மாள் பார்த்து இனி அவனுக்குக் கலியாணம் செய்துவைக்க வேண்டுமென்று கருதியும், இரவில் யாரிடமும் சொல்லாமலும், ஆனைகுந்திக்குப்போயும், அங்கு நரபதி இராமராயனுடைய பூர்வ பந்துக்களில் அதிக ஏழைகளாக இருந்த ஒரு குடும்பத்தில் தான் நடத்திய இரகசியங்களை எல்லாம் சொல்லியும், புக்கனுக்கு அங்குள்ள ஓர் நல்ல பெண்ணைப் பார்த்து சம்மதப்படச் செய்வித்தும், அப் பெண்ணையும், அப்பெண் வீட்டாரையும் இரகசியமாக இராக்காலங்களில் துளுவ நாட்டிற்கு அழைத்து வந்தும், மலசர் சமுஹத்தில் மணம்செய்விக்க, அம்மலசர்கள், அந்த வாலிபப் புக்கராயனுடைய பூர்வசரித்திரத்தையும், அவனுக்கு அங்கு நடந்த விவாஹ வைபவத்தையும் கண்டு அவன் சாக்ஷாத் புராதன நரபதி பூபராயனுடைய குமாரனென்று அறிந்து அவனை அந்தத் துளுவநாட்டிற்கு அரசனாகக்கொண்டு அவன் ஆக்கினைக்குள் அடங்கி வாழ்ந்து வந்தார்கள். அந்தப் புக்கராயனுடைய

ஆதிபாட்டன் தந்தை மார்களாகிய நரபதிராயிலுமார்களின் ஆதிவீட்டுப் பெயர்கள் "ஸாபிதவாரு" "கோட்டவாரு," "கோலவாரு," "தேசாவாரு" என்பவைகளாம். இடையில் காலதேச வித்தியாசங்களினால் அந்தப் புக்கராயலு துளுவ நாட்டிற்கு அரசனாகியதால் அன்று முதல் அந்தப் புக்கராயலு குடும்பத்திற்கு "துளுவவாரு" என்கிற புது (வீட்டுப்) பெயர் வழங்க நேர்ந்தது.

அந்தத் துளுவ புக்கராயலுக்கு திம்மராயலு என்கிற குமாரன் பிறந்தான். அவனும் தமது முன்னோருடைய விஜயநகரத்தை அடையப் பிரயத்தனப்பட்டும், காரியசித்தி பெறுமையால், தனது தந்தையைப்போலவே துளுவநாட்டில் ஆண்டுவந்தான். ஆயினும், அக்காலத்தில் விஜயநகரத்தையாண்டுவந்த மல்லிகார்ஜ்ஜுன ராயலும் தனது பிறப்பையும், பாத்தியதையையும் தெரிவிக்க, அவன் உண்மையறிந்தும் தனது ஸமஸ்தானத்தைக் கொடுக்கச் சம்மதியாமல், அவனுடைய இளையகுமாரன் நரசிங்கராயலைப் பெனுகொண்டாவுக்கு அதிபதியாக்கியும், மறுபடியும் சில வருஷங்களுக்குள்ளாக அவன் அதிகாரத்தைநீக்கி, அவ்விடத்திற்குத் தன் குமாரன் நந்தராஜனை நியமித்துவிட்டதாகவும், ஒரு சரித்திரத்தால்தெரியவருகிறது. அந்தத் திம்மராயலுக்குப் பிறகு அவன் குமாரன் ஈசுவரராயலும் துளுவநாட்டில் சிலகாலம் ஆண்டுவர அவனுக்கு நரசராயலு என்கிற குமாரன் பிறந்தும், சகல கல்வி கலை ஞானங்களைக் கற்றுச் சுத்தவீரனாக இருந்தமையால், தம் முன்னோருடைய பிதுரார்ச்சித சொத்தாகிய விஜயநகரத்தை நியாய மூலமாகக் கேட்டும் கிடைக்காததனால், பிறர் சகாயம் பெற்று அந்தக் கோட்டையின் மேல் படை எடுத்துப்போகப் பிரயத்தனப்பட்டுக்கொண்டிருக்க, அந்த விஜயநகரத்தில் புக்கராயலுடைய சமஸ்தானத்துக்குச் சரியான வார்சுகளற்றுப் பெனுகொண்டாவில் சிலகாலம் ஆண்ட தமது சிறிய தகப்பனாருடைய குமாரன் பிரவுடதேவராயலை விரூபாக்ஷிராயலு சுவீகாரம் செய்துகொண்டு விஜயநகர சிம்மாசனத்திலேற்றின சங்கதியைக் கேட்டு ஆநந்தித்து, தாமும் வந்துசேர பிரவுட தேவராயலு 1494-ம் வருஷம் இறந்துபோக, அவன் மந்திரியாகிய நரசிம்மராயலே அந்த நரபதிச் சக்கிரவர்த்தி பட்டத்தைப் பெற்று ஆண்டுவர ஆரம்பித்தான். மேஸ்டர் சுவேல் அவர்கள் எழுதிய பர்காட்டன் எம்பயர் சரித்திர புத்தகம் 108-

வது பக்கத்தில், விருபாக்ஷிராயலு சிற்றின்பத்தில் மூழ்கி துஷ்கிருத்தியங்களைச் செய்துவருவதைப்பற்றி அவன்மூத்த குமாரன் அவனைக் கொலைசெய்துவிட்டுத் தான் சிங்காசன மேற, அவனுடைய சகோதரனாகிய பிரவுட தேவராயலு அந்த மூத்தகுமாரனைக் கொலைசெய்து பட்டம் கட்டிக் கொண்டதாகவும், அந்தப் பிரபுடதேவராயலும் திருப்திகர மாக ஆண்டு வராமையால் ஸமஸ்தான குடிகளும் பிரபுக்க ளும் நொந்து அவனைப் பட்டத்திலிருந்து நீக்கி நரபதி ஸமஸ்தானத்தின் ஆதிசந்ததியாகிய நரசிம்ம இராயலைச் சிங்காசன மேற்றுவித்ததாக எழுதியிருக்கிறார்.

---

## விஜயநகரத்தில் மறுபடியும் நரபதி ஸமஸ்தான ஸ்தாபனம்.

இப்படி விஜயநகரம் மறுபடியும் நரபதி சமஸ்தான மாகி நரசராயலு ஆண்டுவர ஆரம்பிக்கையில், ஸமஸ்தான குடிகளும் பிரபுக்களும் சுதந்தர சுக வாழ்வைப் பெற்றார் கள். பிறகு பீரார் நாட்டு அரசனாகிய காஜாகவான் சாயிபு இறந்துவிட, 1487-ம் வருஷம் ஈசுப் ஆதல் ஷாப் பட்டத்தி ற்கு வர, அந்நாடெங்கும் கலகங்களாகி அல்லோலகல்லோல மாகியது. அதே மாதிரியாகவே அஹமத் நகரம், பீரார், பெத்னூர், கோல்கொண்டா முதலான விடங்களிலும் கல கங்களுண்டாகப் பாமினி ராஜ்யம் பாழடைந்து வந்தது. தென்தேசத்தின் ஸ்திதி இப்படியிருக்க, வடக்கே 'பேபர்' என்பவன் படை எடுத்துவந்து டில்லியைப் பிடித்து மோ கல்ராஜ்யத்தை ஸ்தாபித்தும், இந்தியாவிலுள்ள மகமதிய சிற்றரசர்களுக்கெல்லாம் உதவிபுரியச் சித்தமாக இருப்ப தாகவும் சங்கதி அறிவித்தான். அப்போது ஐரோப்பாகண் டத்தைச் சார்ந்த போர்த்துகல்லிலிருந்து 1498வரு ஆகஸ்டு மாதம் 26-ம் தேதி வாஸ்கோடிகாமா என்பவன் மலையாளக்கரையிலிறங்கி வர்த்தகம் செய்ய ஆரம்பித்தான். இப்படிப்பட்ட நவீன சம்பவங்கள் நடக்குங்காலத்தில் அர சாக்ஷி செய்ய ஆரம்பித்த நரசராயலின் ஸ்திதி எப்படி இருக்கவேண்டும்?

---

## நரபதி நரசராயலு ஸமஸ்தானம்.

(கி. பி. 1490ஆ முதல் 1497ஆ வரை.)

அப்படித் தமது பிதுரார்ச்சித ஸமஸ்தானத்தைக் குடிகளுடைய வேண்டுகோளின்படி அடைந்த நரசராயலு சந்திரவமிச க்ஷத்திரிய ஆந்திரர். அவர் வீட்டின் பெயர் கோட்டவாரு. அதாவது, அவருடைய ஆதி தாய்தந்தையர்கள் மகதநாடு அல்லது புஷ்பபுரி கோட்டையிலிருந்து வந்தவர்களானபடியால், அவர்கள் வீட்டின் பெயர் கோட்டவாரு என்றாகியது. மத்தியகாலத்தில் கால வித்தியாசத்தினால் தமது தாய்தந்தையர்கள் துளுவநாட்டில் ஆண்டு வந்ததைப்பற்றித் துளுவவாரு என்று சில சரித்திரக்காரர்கள் வழங்கிவருகிறார்கள். இதற்குமுன் விஜயநகரம் ஆண்ட புக்கராயலு முதலானவர்கள் சைவர்களாக இருந்தார்கள். நரபதி நரசராயலு குடும்பத்தார் ஆதியில் புத்தர்களாகவும், பிறகு சைவர்களாகவும் இருந்து, பிறகு வைஷ்ணவர்களாகி விட்டார்கள். அப்படியாகினும், சகல மதஸ்தர்களிடத்திலும் சமரச மரியாதை யுடையவர்களாக இருந்தார்கள். அவருடைய மந்திரி மஹா மதியூகியென்று பிரபலப் பெயர் பெற்ற சாலுவதிம்மரசு அல்லது அப்பாஜி என்பவர்.

அந்த நரசராயலுக்குத் திப்பாம்பாதேவி, நாகாம்பிகாதேவி, உமாம்பிகாதேவி என்ற மூன்று மனைவிக ளிருந்தார்கள். அவர்களில் திப்பாம்பாதேவி வயிற்றில் வீரநரசிம்மராயலும், நாகாம்பிகாதேவிக்குக் கிருஷ்ண தேவராயலும், உமாம்பிகாதேவிக்கு அச்சுததேவராயலும், அரங்கதேவராயலுமாக நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். வேறொரு சாசனத்தினால், நரசராயலுக்குப் புஜபலராயலு என்ற ஜேஷ்ட குமாரன் பிறந்து 6 வருஷகாலம் ஸமஸ்தானத்தை அதிக கம்பீரமாக ஆண்டுவந்ததாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மற்றொரு சாசனத்தில், வீரநரசிம்மராயலுக்கே புஜபலராயலு என்ற பெயரும் வழங்கி வந்ததாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது (Vide P. 110. A Forgotten Empire by Robert Sewell). அப்படிப் பிறந்த ஆண்மக்களுக்கு க்ஷத்திரிய தருமத்தின்படி சிறுவயதிலேயே கல்வி ஞானத்தையும், வில்வித்தை மல்லயுத்த முதலான பயிற்சிகளையும் போதித்து, சமஸ்தானத்துக்குத் தக்கபடி வளர்த்தார்கள்.

அந்த நரசராயலு காலத்தில் நடந்த விசேஷங்களைப் பற்றி அநேக சாசனங்கள் இருக்கின்றன. அவைகளில் அவர் திக்கு விஜயம் செய்து துவஜஸ்தம்பத்தை நாட்டிய தையும், கலிங்கன் - யவனன் முதலான ராஜர்களை ஜயித்த தையும், விஜயநகரத்தில் ராயலு சமஸ்தானத்தை ஊர்ஜ்ஜித மாக்கியதையும், குந்தலேசுவரனை ஜயித்து பீஜப்பூரைச் சுவாதீன மாக்கிக்கொண்டதையும், மாளவ துருக்க சீமையில் பாரசீகர் முதலானவர்களை ஜயித்தும், சோழபாண்டிய ருடன் சண்டை செய்து அவர்கள் நாடுகளை வசமாக்கியதை யும், ஸ்ரீரங்கபட்டணத்தில் ஹான நரேந்திரனேடு சண்டை செய்து ஜயித்ததையும், தான் மண்டலீக மேகமராண்டன் என்ற பிருதை வகித்துக்கொண்டதையும் சொல்லியிருக் கின்றன. ஆயினும் 'நரசராயலு விஜயம்' என்னும் அவர் சரித்திரத்தைச் சோதிக்கையில், அந்த நரசராயலு தென் சமுத்திரம் வரையில் நேராகப் போய் இடையிலுள்ள சேர சோழ பாண்டியர்களை ஜயித்தும, அவர்களிடம் கப்பம் வாங்கிக்கொண்டும், இராமேசுவரத்தையும், ஸ்ரீரங்கத்தை யும் தரிசித்துக்கொண்டும், அவ்விடங்களில் அநேக தருமங் களைச் செய்தும், காவிரிநதியில் குடிகளுக்கேற்ற அணை களைக் கட்டித் தடுத்து அநேக வாய்க்கால்களை வெட்டிப் பயிர்ப்பச்சைகளைச் செழித்தோங்கச் செய்வித்தும், அங் குள்ள கோயில் கோபுரங்களுக்கு அநேக மானியங்களையும் தருமங்களையுந் தந்தும், ஸ்ரீரங்கத்திற்கும் காஞ்சீபுரத்துக் கும் மத்தியில் தாம் குடியிருந்து விஷ்ணுவை வணங்க வேலூரில் ஒரு கோட்டையையும் அதற்குள் அநேக கோ யில் கோபுர வீடுகளையும் கட்டிவைத்தும், அதில் கொஞ்ச காலம் இருந்தும், அது பகைவர் வந்து தாக்க வசதியாக இருக்கக்கண்டு, அதை விட்டு மலைகளால் சூழ்ந்த அரணை சந்த்ரகிரியில் ஒரு கோட்டையைக் கட்டி, அதில் தமது பொக்கிஷத்துடன் சிலகாலம் வாழ்ந்தும், பிறகு வடக்கே மகமதியர் கலகம் செய்தபடியால், அவர்கள்மீது படை யெடுத்துப்போய் ஜயித்தும், கங்கைக்கரைவரையில் தமது இராஜ்ஜியத்தைப் பரவச்செய்தும், ஜயசீலனுகி வந்து விஜய நகரத்தமர்ந்தும், வயோதிகம் வருவதற்கு முன்பே தனது ஜேஷ்ட குமாரன் வீரநரசிம்மராயலுக்குச் சக்கரவர்த்தி பட் டங் கட்டியும், தம் இளைய குமாரர்களான கிருஷ்ணதேவ ராயலு, அச்சுததேவராயலு, ரங்கதேவராயலு இவர்கள் அவ ருக்கு உதவியாக விருக்கச் செய்தும், அவர்கள் யாவரும்

சாலுவதிம்மரசு என்னும் அப்பாஜியை மந்திரியாகக்கொண்டு அரசு செய்யவேண்டுமென்று திட்டப்படுத்தியும், இவ்விதமாக 13 வருஷங்கள் ஆண்டபிறகு சாலிவாஹன சகாப்தம் 1401ஹு சார்வரி நாமசம்வச்சரமாகிய கி. பி. 1498-ம் வருஷத்தில் பரமபதமடைந்தார்.

---

## வீரநரசிம்மராயலு ஸமஸ்தானம்.

(கி. பி. 1497ஹு முதல் 1508ஹு வரை.)

அந்த நரசராயலுக்குப் பிறகு அவர் ஜேஷ்ட குமாரர் வீரநரசிம்மராயலு சாலிவாகன சகாப்தம் 1410 வருஷம் (சார்வரி நாம சம்வச்சரம்) சிங்காசனம் ஏறின உடனே தமது அதிகாரத்துக்கு உட்பட்ட அநேக பெருநில குருநில மன்னர்களிடம் கப்பம் வாங்கி வந்தாலும், மைசூர் ஸமஸ்தானத்தாரும், கர்ணாடகத்தைச் சார்ந்த உம்மத்தூர் - தலைநாடு முதலான விடங்களிலுள்ள பாளையக்காரர்களும், கப்பங் கட்டமாட்டோமென்று கர்வத்தைக் காட்டியதனால், அந்நாடுகளுக்குத் தமது தம்பிமார்களாகிய கிருஷ்ணதேவராயலையும், அச்சுததேவராயலையும் தகுந்த சேனையோடு அனுப்பி அவர்கள் கொட்டத்தை அடக்கிக் கப்பம் வாங்கிக் கொண்டு வாழ்ந்து வருகையில், 1498ஹு போர்த்துகல் தேசத்து 'வாஸ்கோடிகாமா'வின் கப்பல் 'கார்வார்' கரைக்கு வந்தது. 1503ஹு போர்த்துக்கேசியர் ஹானிவர் கோட்டையைத் தாக்க அந்நகரத்தை நெருப்புக்கிரையாக்கிவிட்டார். பிறகு அவர்கள் பட்கல்ம என்னும் இடத்திற்குப் போய்த் தாக்கி ராயலு அனுமதியினால் 1505ஹு அஞ்ஜடிவ் (Anjdiv) என்ற விடத்தில் கோட்டையைக் கட்டிக் கொண்டார்கள். அந்தப் போர்த்துகேசியருக்கு (Almeyda) அல்மெடியா என்பவர் பிரதிநிதியாக இருந்தார். அந்தப் பிரதிநிதிக்கு நரசிம்மராயலு ஒரு தானாதிபதியை யனுப்பிச் சமாதானம் செய்துகொண்டார்.

அந்தக்காலத்தில் இடாலியா யாத்திரைக்காரராகிய (Varthema) 'வர்த்திமா'என்பவர் கனராவையும், விஜயநகரத்தையும் வந்து நேரில்பார்த்துப் புகழ்ந்து எழுதியிருக்கிறார். அதாவது: விஜயநகரம் அப்போது பூலோகத்தில் ஓர் விசித்திர பட்டினமென்றும், அதை ஆண்ட நரசிம்மதேவராயலு கோடீசுவரரென்றும், அவருக்கு வருஷம்

னொன்றுக்கு ரூபா 15,00,000 பவுன் அல்லது 2,25,00,000 ரூபாய் வருமானம் என்றும், அவரிடம் 49,000 குதிரை வீரர்களும், 4,000 யானைகளும் இருந்தனவென்றும், அந்த ராயலு வெளியில் புறப்படும்போது அவருடன் 5,000 குதிரைகளும், அனேக இராஜர்களும், பிரபுக்களும் புறப்பட்டு மரியாதை செய்கிறார்களென்றும், அவர் சமஸ்தானத்தில் திருடர் துஷ்டர் பயம் கிடையாதென்றும் எழுதியிருக்கிறார். அந்த நரசிம்மராயலுடைய ஜயாதிபராக்கிரமத்தைப் பற்றிப் பாரிஜாதபஹரணத்தில்,

సీ॥ కుంతలేశ్వరుకు చిక్కువడంగ విద్యాపురంబున నైగెకొవి । నిజప్రౌఢి
నెఱపెఁ । వారసీమనకు దుర్భరమానవత్వంబుఁ । దోలగించె మాన
వదుర్గసీమ గ్రోలవల్లభునకు సురవధూమదురాధరముచ్చి మధురా
పురంబు గొనియె । శ్రీరంగపట్టణ సీమఖడ్గనటీ వినోదంబు ।
వాపసేంధునకుజూ ॥

తే॥ నతఁడునుతికెక్కె రామసేత్వంతరాళ
కలితషోడశదాన విఖ్యాతయశుఁడు
మండలీకరమేఘమార్తాండబిరుదుఁ
డీశ్వరాధిపునరస పృద్వీశ్వరుండు ॥

என்று சொல்லியிருக்கும் கவியால் காணலாம். அப்படிப் பிரபலத்தோடு 11 வருஷகாலம் ஆண்ட வீரநரசிம்மராயலு 'இராஜாதிராஜ ராஜ பரமேசுவர பிரவுட பிரதாப வீரநரசிம்ம மஹாபுஜபலராயலு' என்று புகழ்ந்து கொண்டாட சாலிவாஹன சகாப்தம் 1430 (கி. பி. 1509) (ருத்ரோத்காரி) வருஷம் விஷ்ணுபதமடைந்தார். அவருக்குப் பிறகு அவருடைய தம்பி ஸ்ரீ கிருஷ்ணதேவராயலு சிங்காசன மேறினார்.

---

## ஸ்ரீ கிருஷ்ணதேவராயலு ஸமஸ்தானம்.

**(கி. பி. 1509ஞு முதல் 1530ஞு வரை.)**



ஸ்ரீ கிருஷ்ணதேவராயலுடைய ஜனனத்தைப்பற்றி ஒரு விநோத கதை உண்டு. அதாவது:-அவரது தந்தைக்கு முதல் குமாரனாகிய வீரநரசிம்மராயலு பாலியத்தில் சரீரதிடனற்றும், சோம்பலாகவும் இருந்தமையால், அப்படிப் பட்டவன் தனது பெரிய இராஜ்ஜியத்தை நிருவகிக்க முடியாதென்றும், ஆகவே சுறுசுறுப்பும் சுத்தவீரனுகவு மிருக்

கும் ஒரு மகன் பிறக்கவேண்டுமென்றும், சதா சகதீசுவர னைத் தியானித்தும், அநேக ஜோசியர்களுடன் ஆலோசனை செய்தும் வருகையில், அந்த ஜோசியரில் வல்லவனான ஒருவன், இராயலைப் பார்த்து, "வேந்தே! விசனப்படவேண்டாம்; வெகு சீக்கிரத்தில் விண்ணுலகில் ஒரு விசேஷமான வெள்ளி ஜ்வலிக்கப்போகின்றது; அதை ஜாக்கிரதையாகக் கவனித்துப் பார்த்து, அன்றிரவு தமது பட்டமகஷியோடு சேர்ந்தால், உடனே கர்ப்பமாகி ஜகதலப் பிரதாபனாகும்படியான ஒரு சுத்தவீரன் பிறப்பான்" என்று சொன்னான். அந்த வாக்கியத்தை நரசராயலு வெகு கவனத்தோடு ஆராய்ச்சி செய்துகொண்டிருக்க, ஒருநாள் இரவு படுத்து நித்திரை செய்து, நடுராத்திரியில் நித்திரை தெளிந்து வெளிக்கு வர, அப்போது ஆகாயத்திருந்து அதிக அற்புதமான ஒரு நக்ஷத்திரம் அந்த அரசன் காலலும்பக் கொண்டுபோய் அருகில் வைத்திருந்த பாத்திரஜலத்தில் பிரகாசத்துடன் பாய்ந்து வீழ்ந்தது. உடனே இராயலு அச்சங்கதியை வேவுகாரன் மூலமாய்த் தமது மந்திரி சாளுவதிம்மரசுக்கு அறிவித்தார்.

அந்தத் திம்மரசு கேட்டவுடனே ஜோசியன் சொன்ன வாக்கியத்தை நினைத்து வேவுகாரனைப் பார்த்து, "ஓடிப்போய் இராயரவர்களைத் தம்மருகிலிருக்கும் பாத்திர ஜலத்தில் நக்ஷத்திரம் விழுந்ததாகச் சொன்னாரே, அந்த ஜலத்தை உடனே குடித்துவிட்டு, தமது பட்டமஹிஷியோடு சேரும்படிச் சொன்னதாகச் சொல்" என்று சொல்லியனுப்ப, அந்த வேவுகாரனும் ஓடிவந்து அப்படியே சொல்ல, இராயரவர்களும் அருகிலிருந்த ஜலத்தை உடனே பானம் செய்தும், தமது பட்டமஹிஷியைப் பள்ளியறைக்கு வரும்படியும் கட்டளையிட்டார். அந்த வேவுகாரனும் ஓட்டமாக ஓடிப்போய் பட்டமஹிஷியிடம் சங்கதியைச் சொல்ல, அந்த மஹாராணி தன் அந்தஸ்துக்குத் தக்கபடி ஆடையாபரணங்களைச் சாவதானமாக அணிந்துகொண்டு வர, "ஐயர் வருகிறதற்குள் அமாவாசை யோடிப்போய்விடும்" என்னும் பழமொழிப்படி அந்தப் பட்டமஹிஷி வருவதற்குள் குறித்த நல்ல முகூர்த்தகாலம் முடிந்துவிடும் என்று எண்ணி, இராயலு உடனே தமது பள்ளியறையில் விளக்குகளைத் தூண்டி விசிறியை வீசும் கன்னிகையான நாகாம்பாளைக் கூட, அந்தப் பெண் கர்ப்பவதியாகி பத்தாம்

பாதத்தில் பால சூரியனைப்போன்ற பிள்ளையை (கிருஷ்ண தேவராயலைப்) பெற்றுள்ளாம். அந்த கிருஷ்ணதேவராயலு பிறந்த காலத்தைப்பற்றி

ఉ॥ అందలిశాలివాహన శకాబ్దముల ద్రివసుత్రిసోములన్ వందితమై
నయువ్విక్రృతి వత్సరమందలి పుష్యమాసమందుండగు కృష్ణపక్ష
మునసుండెడి ద్వాదశి శుక్రవాసరంబందు దయించెఁ గృష్ణుఁడు
శుభాన్వితుఁడా నరసింహమూర్తికిన్ ॥

மேலே காட்டிய கவியினல் கி. பி. 1465வருத்துக்குச் சரியான - சகாப்தம் 1387வரு விகுருதிவரு புஷ்யபஹுள துவாதசி வெள்ளிக்கிழமைதினம் பிறந்ததாகப் பிரத்தியக்ஷமாகிறது.

---

## ஸ்ரீ கிருஷ்ணதேவராயலுடைய ஜாதி.



கிருஷ்ண தேவராயலு சந்திரவமிச க்ஷத்திரியர் குலதிலகனுகிலும், அவருடைய முன்னோர்களிற் சிலர் துளுவ நாட்டில் சிலகாலம் வதிந்து வந்தபடியால் துளுவ தேசஸ்தார் என்றும், அவருடைய வீட்டின் பெயர்கள், சாலுவ வாரு, சம்பெட்டவாரு, சேலகோலவாரு என்றுதிகளெனக் கொண்டவீட்டி கவிகள் சரித்திரத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. அவர் சந்திரவமிசத்தார் என்று மநுசரித்திரத்தில் எழுதப்பட்டிருக்கிறது. எப்படியெனில்,

కృష్ణరాయని పూర్వుల వృత్తాంతము.

కృష్ణరాయని పూర్వులవంశము చంద్రవంశమైనట్లును, తుళువయను పౌరుషనామంబుగలది అయినట్లునీక్రింది పద్యములవలనం గాన్పించు... మను చరిత్రములో

చంద్రవంశములో నొకపురుషుడు.

క॥ అతనికియదు దుర్వసులను ।
సుతులుద్భవమంది హితసూదనులుబలా ।
న్వితమతులు వారిలోలి ।
శ్రుతకీర్తివహించె దుర్వసుడుగుణనిధియై ॥

గీ॥ వానివంశంబుతుళు వాన్వవాయమయ్యె ।
అందుబెక్కండ్రు నృపులుదయంబునంది ।

నిఖిలభువనప్రపూర్ణ నిస్తంద్రకీర్తి।
నధికులయిరి తదీయాన్వయమునబుట్టి॥ అని.

அப்படி அந்தக் கிருஷ்ணதேவராயலு பிறந்த உடனே இராயலுக்கு அநேக நல்ல சகுனங்களுண்டாகிச் சந்தோஷத்தை விருத்தியாக்கியதுடன், பீஜப்பூர் ஸமஸ்தானம் முழுதும் இராயலுக்குச் சொந்தமாகியபடியால், நரசராயலு மகிழ்ந்து, அந்தக் கிருஷ்ணராயலு மஹா அதிர்ஷ்டசாலியாவானெனக்கொண்டு, நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்த்துவந்தாராம்.

இதையறிந்த அந்த ராயலுடைய மற்ற மனைவிகள் இனி இந்தக் கிருஷ்ணராயலு உயிருடனிருந்தால், தம் மக்களுக்குச் சிங்காசனம் கிட்டாதென்றஞ்சி, அம்மகவை அரண்மனைக் குள்ளாகவே கொன்றுவிட வேண்டுமென்று இரகசியமாகக் கொலைப்பாதகரைத் தூண்டி வந்தார்களாம். அந்தச் சூதையறிந்த சாலுவ திம்மரசு என்னும் மந்திரி, அக்கொலைபாதகரைத் தம்வசப்படுத்தியும், அவர்கள் வசத்திலிருந்த கிருஷ்ணதேவராயலு என்னும் பிள்ளையைத் தாம் பெற்றுக்கொண்டும், அப்பிள்ளைக்குப் பதில் ஒரு பக்ஷியைக் கொடுத்துக் கொல்லச்செய்து அதன் இரத்தத்தை இராஜமஹிஷிகளுக்குக் காட்டும்படிசெய்து திருப்தியாக்கிவிட்டும், கிருஷ்ணராயலு என்னும் சிசுவைத் தன் வீட்டிற்குக் கொண்டுவந்து போஷித்துப் பாதுகாத்தும், பலகலைகளையும் போதித்துவர, அந்தப் பாலியனான கிருஷ்ணதேவராயலு, சாலுவதிம்மரசுதான் தனது பிதாவென்றும், அவரை, 'அப்பாஜி' என்றும் அழைத்துவர, அந்த மந்திரிக்கு அன்றுமுதல் "அப்பாஜீ" என்கிற பெயரே அதிக பிரபலமாகி விட்டதாம். அந்த அப்பாஜியும் அந்தக் கிருஷ்ணதேவராயலை அதிக காருணியத்தோடும், கருத்தோடும் வளர்த்து வந்தாராம்.

அப்படிக் கிருஷ்ணதேவராயலு தம் மந்திரி வீட்டில் வளர்ந்துவர, அரண்மனையிலிருந்த தந்தையாகிய நரசராயலுக்கு இச் சங்கதிகளை அறிவிக்காமல், கிருஷ்ணராயலு என்னும் சிசு மாந்தத்தினால் இறந்துவிட்டது என்று பெண்டுகள் கூடிப் பெரும் பொய்யைச் சொல்ல, அந்த அரசனும் அது உண்மை என்று நம்பி, அன்றுமுதல் நல்ல ஆகாரமும் நித்திரை முதலானவைகளு மற்று

வியாகுலராகக் காலம் கழித்துவர, வியாதியும் மேலிட்டு, "இனிப் பிழையோம்" என்றெண்ணி, தமது மந்திரி சாலுவ திம்மரசையும், தமது மூத்த மனைவியின் மக்களையும் அருகில் தருவித்தும், தமது சுண்டுவிரலில் அணிந்திருந்த இராஜமுத்திரை மோதிரத்தை எந்த மகன் பிடுங்க வல்லவனோ, அவனுக்குத்தான் தமது இராஜ்ஜியத்தைக் கொடுப்பதாகச் சொல்ல, அந்த ராஜபுத்திரர்கள் அந்த மோதிரத்தைப் பிடுங்கப் பல பாடுபட்டும், மோதிர மணிந்த விரலில் வீக்கமிருந்தபடியால், அதைப் பிடுங்க வகையற்றுத் தவிக்க, அரசன் திம்மரசைப் பார்த்து, "மதியூகியாகிய மந்திரியே! இப்போது கிருஷ்ணதேவராயலு உயிருடனிருந்தால் இம் மோதிரம் இதுவரையில் என் விரலிலிருக்குமோ?" என்று விசனப்படுகையில், திம்மரசு பார்த்து, "வேந்தே! விசனப்படாதே; உமது கிருஷ்ண தேவராயலு இறந்துபோகவில்லை; என் வீட்டில் சுகமாக வளர்ந்து வருகிறான்; ஆக்கினை கொடுத்தால் அழைப்பிக்கிறேன்" என, இராயலு சொல்லிமுடியாத சந்தோஷமுற்று உடனே அருகில் தருவிக்கச்செய்து கிருஷ்ணதேவராயலைக் கட்டித் தழுவி முத்தமிட்டும், அந்தப்புறத்து அஞ்ஞான அரிவையர் செய்த சதிமோசத்திற்காக விசனப்பட்டும், கிருஷ்ணராயலை ஏறிட்டுப் பார்த்தும், தன் கைவிரலி லிருக்கும் மோதிரத்தைக் கழற்றும்படி சொல்ல, அந்தக் கிருஷ்ணதேவராயலு மகாபுத்திசாலி யானபடியால், அந்த மோதிரமணிந்த விரலுக்கு ஒரு ஈரத்துணியைச் சற்றுநேரம் சுற்றிவைத்து வீக்கம் நீங்கியபிறகு அம்மோதிரத்தை லகுவில் கழற்றிக் கொடுத்தான். இராயலுக்கு அதிக சந்தோஷமுண்டாகி, அந்தக் கிருஷ்ணராயலே தமது சிங்காசனத்துக்குத் தக்கவனென்றும், ஆயினும் மூத்தகுமாரன் வீரநரசிம்மராயலுகாலம் வரையிலும் அவனுக்கு உதவியாக இளவரசு பட்டம் தரிக்கவேண்டுமென்றும் மந்திரியிடம் சொன்னதாகவும் சிலராற் சொல்லப்பட்டு வருகின்றது.

இந்தக்கதை உண்மையானதோ என்று நரபதிகளுடைய வம்சாவளியைக் காட்டும் வித்தியாநகர இராஜ சரித்திரம், பிரவுடதேவராயலு சரித்திரம், கொண்ட விடுதண்ட கவியிலும், மநுசரித்திரம், பாரிஜாதாபஹரணம் முதலான கிரந்தங்களையும், அநேக சிலாசாசனங்களையுங்

கொண்டு பரிசோதிக்கையில், இது பொய்யான கதையென்றும், கிருஷ்ண தேவராயலுடைய தாயாராகிய 'நாகாம்பா தேவி' சந்திரவமிச க்ஷத்திரிய குலஸ்திரி என்றும், அவள் நரசிம்ம தேவராயலுடைய இரண்டாந் தாரமாகிய தரும பத்தினி என்றும் தெரியவருகிறது.

## கிருஷ்ணதேவராயலு தமது தமயனார் இறந்த பிறகு

சகாப்தம் 1430-க்கு விபவஸு சித்திரைமீ (கி. பி. 1509வஸு பிப்ரவரிமீ 4௳) சிங்காசன மேறியதாக அநேக சரித்திரங்களினாலும், சாசனங்களினாலும் ஸ்பஷ்டமாகிறது. அவரைத் திம்மரசு என்னும் மந்திரி நல்ல சுபமுகூர்த்தகால மறிந்து தேவப்பிராம்மண பூஜைகளைச் செய்வித்தும், அனேக முடிசார்ந்த மன்னர்கள் பந்து மித்திரர்களுக்கு முன்பாகவும், சாஸ்திர பத்ததியாகவும் சடங்குகளை நடப்பித்தும், சிங்காசன மேற்றியதாக ஒரு சாசனத்தில் ஸ்பஷ்டமாகிறது.

அப்படிச் சிங்காசனமேறிய கிருஷ்ண தேவராயலு, தம்மது மந்திரி திம்மரசை அருகில் அழைத்துத் தமது சமஸ்தான சங்கதிகளை எல்லாம் சாங்கோபாங்கமாக அறிந்தும், இராக்காலங்களில் மாறுவேடம் பூண்டு வீதி வீதியாக உலாவிக் குடிகளுடைய சுகதுக்கங்களை நேர் நேராகக் கேட்டும், அரசுசெய்து வருங்காலத்தில், பிரதாப ருத்திரனாகிய கஜபதிராஜனும், நைஜாமும் வேறுசில குறுநில மன்னர்களும் கிரமமாகத் தம் குடிகளுடைய க்ஷேமத்தைக் கருதாமல் கஷ்டப்படுத்தி வருவதையும், தமக்குச் செலுத்தவேண்டிய கப்பத்தைக் கிரமமாகச் செலுத்தாமல் அசட்டை செய்துவருவதையும் அறிந்தும், பெரியதண்டு தளாதிகளுடன் படையெடுத்தும், கிருஷ்ண நதியைத் தாண்டிப் போய்க் கோல்கொண்டாவை முற்றுகை போட்டு அங்கிருந்த மகமதியர்களை ஜயித்தும், அருகிலிருந்த அகமது நகரத்துக்குப் போய் அதைப் பிடித்தும், அங்குத் தமது ஜயஸ்தம்பத்தை நாட்டியும், கஜபதி சமஸ்தான நாட்டின் வழியாகத் திரும்புகையில், அந்தக் கஜபதியும் கப்பங் கட்டாததைப்பற்றிச் சண்டைசெய்ய ஆரம்பிக்கையில் அந்தக் கஜபதி ஜகந்நாதத்திலிருக்கும் மஹாவிஷ்ணு பக்தனென்றும், சதா பிராம்மணசாதுஜன போஷகனான சொந்த பந்து

வென்றும், அப்படிப்பட்டவன்மேல் படையெடுப்பது தருமமல்லவென்றும், திம்மரசு மந்திரி தடுத்துச் சொல்லி யும், கிருஷ்ண தேவராயலு கேளாமல், படை எடுக்க, அப்படைகள் அங்கிருந்த பயங்கரமான வனத்துக்குள் சண் டைக் கோலமாகப் போக, அங்குச் சித்தாவுத்கான் என் னும் மஹமதியவீரன் 60 ஆயிரம் சேனையோடு வந்து தாக்க, உடனே கஜபதியின் சேனைகளும், சித்தாவுத்கான் சினேக பந்தத்தால் மற்ருேர்புறம் வந்து கிருஷ்ணதேவராயலை வளைத்துக்கொள்ள, கிருஷ்ணதேவராயலுடைய சேனை கள் வேறு வழிபோக வழியற்றுத் தவிப்பதைக் கிருஷ்ண தேவராயலு கண்டு "ஓஹோ! மந்திரி திம்மரசு வார்த்தை யைக் கேளாமையால் இந்த வம்புவந்து வாய்த்ததே" என்று முகம்வாடி நிற்பதைத் திம்மரசு மந்திரி பார்த்து "வேந்தே! விசனப்படாதே; மிஞ்சிப்போன காரியத்தை எஞ்சி எஞ்சி யோசிப்பதில் பிரயோசனமில்லை; இந்த அசந்தர்ப்பத்தில் இராஜ தந்திரமாக காரியத்தை முடித்தால் மாத்திரம் காரிய சித்தி பெறலாம்" என, கிருஷ்ணதேவராயலு "அஃதெப்படி" என, "இதோ செய்கிறேன் பாருங்கள்" என்று அடியில் கண்ட உபாயத்தைச் சொன்னர். அதா வது:—

இந்தச் சண்டையில் அதிக வீரதீரனான மகமது சித வத்கானுக்கு ஒரு கடிதமெழுதி, அக்கடிதத்தில் "ஐயா! தாங்கள் முன் கிருஷ்ணதேவராயலுக்கு ஒப்பந்தம்செய்து கொடுத்தபடி, கஜபதிபிரதாபருத்திரரை உயிருடன் பிடித் துக் கொடுத்தால் உமக்கு வாக்குத்தத்தம் செய்தபடி ஓரங்கல் கோட்டையையும், பின்னுமநேக கிராமங்கள் தண்டுதளாதி ஆபரணங்களையும், பஹுமானமாகத் தரச் சித்தமாக இருக்கிருேம்; அதற்கு அத்தாக்ஷியாக இக் கடி தத்துடன் சில ஆடை ஆபரணங்களை அனுப்பியிருக்கின் ருேம். அங்கீகரித்துக்கொண்டு இது சங்கதியை யாவருக் கும் அறிவிக்காமல் அதிக அந்தரங்க சங்கதியாக வைக்க வேண்டும்.

இப்படிக்கு இஷ்டன்,
மஹாமந்திரி,
சாலுவ திம்மரசு."

என்றுஎழுதிக் கிருஷ்ணதேவராயலுக்குக் காட்ட, கிருஷ்ண தேவராயலு பார்த்து இப்படிப்பட்ட காரியம் செய்ய இஷ்

டப்படாதவராக இருந்தும், இராசகீய விஷயத்தையும், காலதேச வர்த்தமானத்தையும் அறிந்து, மந்திரியின் இவ்விதமான தந்திரக் கடிதத்தை அங்கீகரித்தார். இதை அங்கீகரிக்கவே, உடனே திம்மரசு மந்திரி, அந்தக் காகிதத்தையும், அத்துடன் சில ஆடை ஆபரணங்களையும் சேர்த்து அவைகளை (சிதவுத்கானுக்கு அனுப்பாமல்) கஜபதிராயனிடம் நேரில் கொடுக்கும்படி வேவுகாரனிடம் கொடுத்தனுப்ப, அந்த வேவுகாரனும் வாயுவேக மனோவேகமாக ஓடிப் பிரதாபருத்திர கஜபதிராயனிடம் கொண்டுபோய்க் கொடுக்க, அவர் யாதோ சமாதான உடன்படிக்கைக் கடிதமென்றெண்ணி, தம் யானையை விட்டிறங்கி அந்தரங்கமான விடத்திற் கொண்டுபோய் வாசிக்க, அதிற் கண்ட சங்கதியினால், அது மகமது சிதவுத்கானுக்கு எழுதிய கடிதமென்றும், அது வகைமோசமாகத் தம்மிடம் வந்துவிட்டதென்றும், இனி அதில் கண்டபடி சிதவுத்கான் தம்மைப் பிடித்துத் கிருஷ்ணதேவராயனிடம் ஒப்புவித்துவிடுவானென்றும் பயந்து, எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி, ஏங்கித் தேங்கித் தவித்துத் தலைகுனிந்து நிற்க, அவருடைய சேனைகள் அவர் வெகு நேரமாக உயுத்த களத்தில் வராதிருப்பதைக் கருதி "கஜபதிக்கு யாதோ கெடுதி அல்லது பகைவரால் கொலை சம்பவித்தது" என்றெண்ணிப் பயந்து பல பக்கங்களிலும் ஓடிவிட்டார்கள்.

இத்தியாதி சங்கதிகளைக் கண்ட வேவுகாரன் ஓடிவந்து, திம்மரசு மந்திரியிடமும் இராயனிடமும் சவிஸ்தாரமாகச் சொல்ல, திம்மரசு தம் பல்லக்கு ஏறி இராயனைப் பாதுகாக்கவேண்டிய சேனையை அவரிடம் விட்டு, அவருத்திரவின்படிச் சில தண்டுதளங்களைக் கூட்டிக்கொண்டு கஜபதி ஸமஸ்தானக் கோட்டைக் கருகில்வந்து, கஜபதிக்குத் தாம் சமாதானம்செய்ய வந்திருப்பதாகச் சங்கதி சொல்லியனுப்பினார்.

கஜபதியும் அவருடைய மந்திரி முதலானவர்களும் சாலுவ திம்மரசை மரியாதையுடன் அழைத்துக்கொண்டு கோட்டைக்குள்ளே போய் க்ஷேமசமாசாரங்களைப் பேசிய பிறகு, திம்மரசு கஜபதியை நோக்கி, "பிரபுவே! நரபதி சமஸ்தானத்தாரும், கஜபதி சமஸ்தானத்தாரும் இந்துக்களாகவும், சந்திரவமிச க்ஷத்திரியர்களாகவும், மாமன் மருமகன் வரிசையான பந்துக்களாகவும் இருக்க, நீங்களிருவ

ரும் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொண்டும், இந்துக்களுக்குப் பொதுப் பகையாளிகளான மகமதியரை இந்நாட்டைவிட்டு ஓட்டுவதைவிட்டும், அவர்களைச் சிநேகிதர்களாகக்கொண்டு உங்கள் பொதுக் குடும்பத்தைப் பாழ்த்துப் போகச்செய்வது இந்து மதஸ்தர்களுக்குத் தருமமல்லவே" என்று புத்திமதிகளைச் சொல்ல, கஜபதியின் மனது கரைந்து திம்மரசு வாக்கைத் தேவவர்க்காகக் கொள்வதாகச் சொல்ல, திம்மரசு பார்த்து,

"ஓ! பிரதாபருத்திர கெஜபதியே! உமக்கு அதிக ரூபலாவண்யமான குமாரத்தி இருப்பதாகக் கேள்விப்படுகிறேன்; அந்தப் பெண்ணுக்கு ஏற்ற புருஷன் கிருஷ்ணதேவராயலுவிடச் சிறந்தவர் யாருமில்லை. உங்களிரு குடும்பத்தார்களும் எப்போதும் மாமன் மச்சான் உறவினரானபடியால், தங்கள் பெண்ணைக் கிருஷ்ணதேவராயலுக்கு விவாஹம்செய்து கொடுத்துவிட்டால், உங்கள் பழைய பந்துத்துவமும் போகாமல் நீடிக்கும்; மேலும் நீங்களிருவரும் இவ்விதமான சம்பந்தத்தினுல் ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டு உதவியாக நிற்கில், உங்கள் சமஸ்தானங்களின்மேல் மகமதியர் முதலான வேறு நாட்டுமதஸ்தர்கள் அடி எடுத்துவைக்க வழியில்லை. இது விஷயத்தில் உமதிஷ்டம் என்ன?" என்று கேட்க, பிரதாப ருத்திர கஜபதிராயலு கேட்டும், காலதேச வர்த்தமானங்களைத் தழுவியும், "அப்படியே யாகட்டும்" என்று சம்மதிப்பட்டு அந்தத் திம்மரசை அந்தப்புரத்துக்கு அழைத்துப்போய்த் தமது குமாரத்தியின் அழகிய அரண்மனையையும், ரூபபடத்தையும் காட்டி, அவள் அன்போடு வளர்த்துவந்த பஞ்சவர்ணக் கிளியையும் கிருஷ்ணதேவராயலுக்குப் பகுமானமாகக் கொடுத்தும், திம்மரசுக்கும் தக்க மரியாதைகளைச் செய்தும், நல்ல சுபமுகூர்த்த காலமறிந்து வந்து நிச்சய தாம்பூல முகூர்த்தம் நடப்பிக்க வேண்டுமென்றும் சொல்லி, திம்மரசைத் தமது சமஸ்தான எல்லைவரையில் மரியாதைகளுடன் கொண்டுபோய்விட்டு வரும்படி உத்தரவு செய்தார்.

இப்படி மரியாதைகளுடன் திரும்பிப் புறப்பட்ட திம்மரசு கிருஷ்ணதேவராயலிடம் வந்து தாம் போனது முதல் அங்கு வந்த நிமிஷம்வரையில் நிகழ்ந்த சங்கதிகள் யாவையும் சவிஸ்தாரமாகச் சொல்லியும், கஜபதி குமாரத்தி

கொடுத்த பஞ்சவர்ணக்கிளியை இராயலிடம் கொடுக்க, அக்கிளியானது கிருஷ்ணதேவராயலை முகந்து முத்தமிட்டுத் தன்னை வளர்த்த வரதாம்பாள் அல்லது பிரதாபருத்திர கஜபதிராயலுடைய அருமையும் அழகு யாவும் திரண்டுவந்த துகாம்பாதேவியின் அழகையும், குணதிசயங்களையும் அவளுக்கேற்ற கணவன் கிருஷ்ணதேவராயலே என்றும் இனிய வார்த்தைகளால் கொஞ்சிக் கொஞ்சிப் பேச, கிருஷ்ணதேவராயலும் அதிக சந்தோஷமுற்று, திம்மரசின் புத்திசாதுரியத்தைத் துதித்தும், கூடிய சீக்கிரத்தில் கஜபதி குமாரத்திக்கு நிச்சயதாம்பூலம் செய்யவேண்டுமென்றும், அப்படிச் செய்யும்போது அந்தப் பெண்ணைத் தாமும் மாறுவேடம் தரித்து முன்னதாகப் பார்த்துப் பிறகு முகூர்த்தத்தை நடத்த வேண்டுமென்றும் திம்மரசு மந்திரிக்கு சொல்ல, அதற்கு அம்மந்திரியும் சம்மதித்து, அந்தக் கிருஷ்ணதேவராயலை ஸமஸ்தான வெற்றிலைப்பாக்கு மடித்துக்கொடுக்கும் வேலைக்காரனைப்போல் வேஷம் போட்டும், நிச்சய தாம்பூல உற்சவத்திற் கேற்ற ஆடை ஆபரணங்களை எடுத்துக் கொண்டும், தக்க துரக கஜ பதாதி பிருதுகளுடன் புறப்பட்டு வந்தும், கஜபதி ஸமஸ்தானக் கோட்டைக்கு அருகில் பல்லக்குகளை நிறுத்தும்படி செய்தும், தாம் வந்திருக்கும் சங்கதியைக் கஜபதிராயலுக்கு முன்னதாகத் தெரிவிக்கும்படி வேவுகாரர்களை அனுப்பினார்கள்.

அது சங்கதியைக் கேட்ட பிரதாபருத்திர கஜபதிராயலும், தம் சபாமண்டபத்தைக் கமுகு வாழை பூங்கொடிகளால் அலங்கரித்தும், அந்தப்புரத்துக்குள் போய்த் தமது பத்தினிமார்களையும் பந்துக்களையும் அழைத்து, தாம் செய்யத் தீர்மானித்த விவாக சங்கதியைச் சொல்ல, அவர்கள் கேட்டு அதிசயித்து "அந்தோ! கிருஷ்ணதேவராயலு சுபத்தினிக்குப் பிறக்காமல், தாசிவயிற்றில் பிறந்தவனுமே; அப்படிப்பட்ட இழிகுலத்தானுக்கு நமது உயர் குலப்பெண்ணை எப்படித் தருவது?" என்று சொல்லி விசனப்பட்டுக் கண்ணீர்விட்டழுதார்கள்.

கஜபதிராயலு, தம் மனைவிமார்களையும் பந்துக்களையும் பார்த்து, "பேதைகாள்! பயப்படாதேயுங்கள்! கிருஷ்ண தேவராயலு நரசராயலுக்கும், அவரது தர்மபத்தினி நாகலாம்பாதேவிக்கும் பிறந்த குலஸ்தர்; அவர் பிறந்தது முதல் நரசராயலு அவர்மேல் மிதமிஞ்சிய அன்பைக் காட்டிவந்த

மையாலும், மற்ற மனைவிகளும் மக்களும் நரசராயலுடைய இராஜசிங்காசனம் தம்மக்களுக்கும் தமக்கும் கிட்டாதென்றஞ்சி, பொறாமைப் பேய்பிடித்து அவரைக் கொல்லவும், ஜாதிப்பிரஷ்டனாக்கவும், தாசி புத்திரன் என்று அநியாயமான அவதூறுகளைச் செய்தார்கள். ஆகவே, அந்தப் பொய்க் கதைகளை நம்பவேண்டாம்; கிருஷ்ணதேவராயலு தாசி புத்திரராக இருந்தால், அப்படிப்பட்டவருக்கு எனது குல மணியைக் கொடுக்கச் சம்மதிப்பேனா? அந்தக் கிருஷ்ண தேவராயலு பிறந்தநாள் முதல் நாளதுவரையில் நடந்த அவரது ஜாதகத்தைப் பார்த்துத்தான் வாக்குத்தத்தம் செய்தேன்'' என்று பலவிதமாகப் புத்திமதிகளைச் சொல்லிச் சமாதானப்படுத்தியும், தம் பத்தினிமார்களையும், புத்திரியையும் தக்கபடி அலங்காரம் செய்துகொண்டிருங்கள் என்று இட்டம் செய்தும், தமது பந்து மித்திரர்களையும், பிராம்மண சிரேஷ்டர்களையும், சமஸ்தான பெரிய உத்தியோகஸ்தர்களையும் சகல வாத்திய கோஷங்களுடன் கோட்டைக்கு வெளியில் அனுப்பி, அங்கு வந்து தங்கியிருக்கும் திம்மாசு மந்திரிக்குத் தக்க மரியாதைகளைச் செய்தும், அவர் கூட வெற்றிலைப்பாக்கு மடித்துக்கொடுக்கும் வேஷதாரியான கிருஷ்ணதேவராயலையும், மற்ற உத்தியோகஸ்தர்களையும் கோட்டைக்குள் அழைத்துவந்தும், அரண்மனைக்குள் அலங்கரித்து வைத்திருந்த சபாமண்டபத்தில் உட்காரச்செய்து உபசரித்தும், கிருஷ்ணதேவராயலுடைய க்ஷேமத்தையும், அவர் சமஸ்தான க்ஷேமத்தையும் விசாரித்து விவாக முகூர்த்தகாலம் வரவே, வேதப் பிராம்மணர்கள் வேதகீதங்களைப்பாட நிச்சயதாம்பூலத்துக்கு ஆரம்பித்தார்கள்.

உடனே முகூர்த்தகாலம் கிட்டிவர, புரோகிதர்கள் மந்திரங்களைச் சொல்லி ஆசீர்வதிக்க, க்ஷத்திரிய தருமத்தின்படி கிருஷ்ணதேவராயலு அனுப்பிய ஆடை ஆபரணங்களையும், பண்டு பலாதிகளையும், வெற்றிலைப் பாக்கு புஷ்ப சந்தன குங்குமாதிகளையும், மணமகளுக்குக் கொடுக்க, கஜபதிராயலு திம்மரசு மந்திரியை அந்த வரிசைகளுடன் அந்தப்புரத்துக்கு வரும்படி அழைத்துப்போக, அந்தத் திம்மரசும் தன்னுடன் வெற்றிலைப்பாக்கு மடிக்கும் வேஷக்காரனாக வந்திருக்கும் கிருஷ்ணதேவராயலையும் கஜபதியின் உத்திரவின்படி அந்தப்புரத்துக்குள் அழைத்துக் கொண்டுபோய், தங்கத் தட்டுகளில் அநேக ஆடை ஆபர

ணங்களையும், முத்துகள் கோர்த்த தட்டுக்களில் மல்லிகை முல்லை முதலான புஷ்பங்களையும், வைரமணிகள் பதிந்த தட்டுக்களில் வெற்றிலைப்பாக்கு சந்தன குங்குமாதிகளையும், அவைகளின்மேல் வைர வைடூரிய நவரத்னங்கள் பதிந்த கட்டாரியையும், அடுக்கடுக்காக அடுக்கச் செய்வித்து, அவைகளை வெற்றிலைப் பாக்கு மடிக்கும் வேஷதாரியை எடுத்துக்கொண்டுபோய்த் திரைக்குள் சகல ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு தேவலோக அப்சர ஸ்திரீயைப்போல் இருந்த கஜபதி குமாரத்தியினிடம் கொடுக்கும்படி உத்தரவுசெய்ய, அதைக்கேட்டு கஜபதி ராஜகன்னிகையும் திரையை நீக்கிக்கொண்டு தக்க தாதிமார்களுடன் திரைக்கு வெளியில் சற்றுவந்து நிற்க, வெற்றிலைப்பாக்குக் கொடுக்கும் வேஷதாரியும், திம்மரசு வார்த்தைக்கு மிக்க பயந்தவனைப்போல் பாசாங்கு காட்டியும், அடக்க ஒடுக்கமாக அந்தத் தங்கத் தட்டுகளையும், முத்து மணி வைரமணி கட்டாரி தட்டுகளையும் ஏந்திக்கொண்டு போய்க் கஜபதி கன்னிகையின் முகாரவிந்தத்தை ஜாடையாக ஏறிட்டுப்பார்த்தும், அவள் அழகின் பெருமையைக் கண்டு தனக்குள்தான் சந்தோஷித்தும், இருகைகளாலும் எடுத்துக்கொடுக்க, அந்தக்கஜபதி புத்திரியும், அந்த வெற்றிலை வேஷதாரியின் முகார விந்தத்தையும், காலில் அணிந்திருந்த வஜ்ஜிரவீர சங்கிலியையும், கையி லணிந்திருந்த வஜ்ஜிரகண்டி முதலானவைகளையும் பார்த்துப் பிரமித்து, இந்த வேஷதாரியே கிருஷ்ணதேவராயனென்று தீர்மானித்துப் பெருமூச்சு விட்டுக் கேவலம் ஸ்திரீஜாதியான தன் அந்தஸ்தையும், பெருமையையும் மறைத்து வேலைக்காரன் வேடம் பூண்டு வந்ததைச் சிந்தித்தவளைப்போல முகத்தைக் காட்டி நின்றான்.

உடனே பதில் தாம்பூல மரியாதையாகக் கிருஷ்ண தேவராயனுக்குக் கஜபதிராயனு தயார்செய்து வைத்திருந்த தங்கத் தட்டு தாம்பூலாதிகளை அந்தக் கன்னிகையின் கையில் கொடுத்து, வெற்றிலைப்பாக்கு மடிக்கும் வேஷதாரி வேலைக்காரனிடம் கொடுக்கும்படி சொல்ல, அந்தக் கன்னிகையும் மனமுவந்து தனது ஆசை நாயகனாகிய வேஷதாரியின் முக அழகை மறுபடியும் பார்த்தும், இரண்டு கைகளால் ஏந்திக் கொடுக்க, அவ்வேஷதாரியும் அடக்க ஒடுக்கமாக வாங்கித் திம்மரசுக்கு அருகில் வந்து வைக்க,

அந்தத் திம்மரசும், கஜபதியும் அவர் பந்து மித்திரர்களும் சந்தன புஷ்பங்களைத் தரித்துக்கொண்டும், உல்லாசமாக இரண்டு ஸமஸ்தானங்களின் சங்கதிகளைப் பேசிக்கொண்டுமிருக்க, திரைக்குள் போன இராஜகன்னிகையை அவளுடைய தாயார் முதலான இராஜமஹிஷிகள் வந்து சூழ்ந்துகொண்டு "திரைக்கு வெளியில் நடந்த விருத்தாந்தங்கள் என்ன?" என்று கேட்க, அந்தக் கன்னிகையும், கண்களில் ஆநந்த பாஷ்பம் பெருக, கரங்கள் நடுங்க, தனது தாயாரைப் பார்த்து, "எனது ஆருயிராகிய அன்னையே! நான் திரைக்கு வெளியில் போய் வெற்றிலை மடிக்கும் வேலைக்காரனிடம் தாம்பூல மரியாதை வரிசைகள் வாங்கியது முதல், அந்த வேலைக்காரனே என் முன் வந்து, இப்போதும் சாயாரூபமாக நிற்கின்றான். பசும் பொன்நிறமும், பதினெட்டு வயதும், ஆஜானுபாஹுனும், வில்லுகளைப்போல் வளைந்த புருவங்களும், செந்தாமரையைப்போன்ற பெருத்த கண்களும், விசாலமான காதுகளும், நீண்ட மூக்கும், பவளத்தைப்போன்ற உதடுகளும், முத்து வரிசையைப் போன்ற பற்களும், அரும்பு துளிர்போல் ஆரம்பிக்கு மீசையும், பூரண சந்திரனைப்போன்ற குளிர்ந்த முகமும், தக்க காசரணுதிகளும் பொருந்தி யிருப்பவனும், காலில் வஜ்ஜிர வீரசங்கிலியையும் தரித்து, வெகு கம்பீரமாக வந்த அந்த வேலைக்காரன் எவனோ? அறிகிலேன்! அவனைப் பார்த்தது முதல் எனக்குத் தசாவஸ்தையும் சம்பவித்ததுபோலிருக்கிறது. அவன் இப்போதும் திரைக்கு வெளியில்தான் நமது அப்பாவுக்கு அருகில் கைகட்டிக்கொண்டு நிற்கிறான், பாருங்கள்" என்று சொன்னாள்.

இராஜமஹிஷிகளும் மற்ற அந்தப்புர மாதுசிரோன்மணிகளும் உடனே கொஞ்சமாகத் திரையை நீக்கிப் பார்க்கையில், "அந்த வாலிப வேலைக்காரனுடைய லக்ஷணங்கள் எல்லாம் தாம் முன் பலரால் கேட்டிருந்தபடி கிருஷ்ணதேவராயலுடைய லக்ஷணங்களாகவே இருக்கின்றன" என்றும், "அந்தக் கிருஷ்ணதேவராயலு இப்போது வேஷமிட்டு வந்திருக்கிறான்" என்றும், "அவன் அவ்வளவு அழகு வாய்ந்தவனாகவும், இராஜாதிராஜனாக இருக்கினும் தாசி புத்திரன்தான்" என்றும், "அவனை இன்று இராத்திரியில் படுத்துத்தூங்கும்போது எப்படியாவது கொன்றுவிட்டால் நமது இராஜகுமாரத்தியை வேறு நல்ல ஜாதியானுக்

குக் கட்டிக்கொடுக்கலாம்'' என்றும், குசுகுசுவென்று அஞ்ஞான அந்தப்புர ஸ்திரீகள் பேசியதை அந்தணர் சிரேஷ்டரான திம்மரசு தெரிந்து, ''ஓஹோ! நமது அரசனுக்கு அபாயம் வந்ததே'' என்றஞ்சி, உடனே அந்தக் கிருஷ்ணராயலு ''வேஷதாரியை எப்படியாவது கோட்டைக்கு வெளியில் போகச்செய்வதே நலம்'' என்றெண்ணி, அருகிலிருக்கும் வெற்றிலைப்பாக்குக்காரனைப் பார்த்து, ''அடே! ஏண்டா சும்மா மரம்போல் நிற்கிறாய்? உன்னிடம் கொடுத்த ஆடை ஆபரணங்களைப் பையில் போட்டுக் கட்டு; பொழுதாகிறது போவோம்'' என்று மிரட்டி அதட்டிச் சொல்ல, அந்த சூக்ஷ்மத்தை அறிந்த வேஷதாரியான கிருஷ்ணதேவராயலு, வெற்றிலைப் பாக்கு முதலானவைகளைச் சின்னபின்னமாக நசுக்கிப் பையிற்குள் போட்டுக் கட்ட, திம்மரசு பார்த்து, ''அடா! இராஜகன்னிகை கொடுத்த மரியாதை வரிசைச் சாமான்களை நசுக்கி நாசமாக்கலாமா? அடிக்கிறேன் பார்'' என்று அதட்டி அடிக்க அபிநயித்தார்.

அந்த வேஷதாரியான வேலைக்காரன் மிக்கப் பயந்தவனைப்போலப் பதை பதைத்து ஓட்டமெடுத்துக் கோட்டைக்கு வெளியில் போய்த் தம் பல்லக்கு இருக்கும் இடத்தில் மறைந்துகொள்ள, திம்மரசும் அந்த வரிசைச் சாமான்களை வேறு வேலைக்காரர் இடம் கொடுத்துப் பந்தோபஸ்து செய்துகொண்டிருக்க, கஜபதிராயலு பார்த்து ''(வேஷதாரியான) வேலைக்காரன் செய்த பிழையை க்ஷமிக்கவேண்டும்'' என்று சொல்ல, திம்மரசு பார்த்து, ''வேந்தே! க்ஷத்திரியகுலதிலகரான எங்கள் நரபதி சமஸ்தானத்தார் கட்டாரியை வைத்துத்தான் கலியாணம் செய்வது வழக்கம்; அந்த வழக்கத்தை அனுசரித்தே எமது கிருஷ்ணதேவ இராயலுடைய வைரக் கட்டாரியைக் கொண்டுவந்து தக்க உபசார மரியாதைகளுடன் தங்கள் குமாரத்தியிடம் கொடுப்பித்தேன்; அதைத் தங்கள் குமாரத்தி வாங்கி முத்தமிட்டு மறுபடியும் எங்களுக்கே திருப்பித்தரவேண்டும்; அதை நாங்கள் பெற்றுக்கொண்டுபோய் எங்கள் ராயலிடம் கொடுத்து, அவர் அதை முத்தமிட்டு வணங்கி, மறுபடியும் தக்க தண்டு தளாதிகளுடன் அக்கட்டாரியைத் தங்களிடம் அனுப்பினால், தங்கள் குமாரத்தி மேற்படி கட்டாரியைப் பெற்றுக்கொண்டு அத்துடன் எங்கள் சமஸ்தானத்

துக்கு வரவேண்டும்; இதுதான் எங்கள் சமஸ்தான வழக்கம். என்னுடன் வந்த வேலைக்காரன் இவ்வளவு விசேஷமான கட்டாரியைத் தங்கள் குமாரத்தியிடமிருந்து மறுபடியும் வாங்க மறந்துவிட்டபடியால், எனக்கு அத்தனைக் கோபமுண்டாயிற்று. ஆயினும் தாங்கள் போய் அந்தக் கட்டாரியை வாங்கி வாருங்கள்" என்று சொல்ல, அவரும் வாங்கி வர, திம்மரசும் அதைப் பெற்றுக்கொண்டு, "இந்தக் கட்டாரி எப்போது உங்கள் சமுகம் வருமோ அப்போது தங்கள் குமாரத்தியையும் அனுப்புங்கள்" என்று சொல்லி, தக்க மரியாதைகளைப் பெற்றுக் கோட்டைக்கு வெளியில் வந்து தம் பல்லக்கிலேறி அங்கு மறைந்திருந்த வேஷதாரி கிருஷ்ணராயலோடு புறப்பட்டு விஜயநகரம் வந்தனர். வேஷதாரியாகிய கிருஷ்ணதேவராயலு தம் வேஷத்தை மாற்றித் திம்மரசு மந்திரியின் அற்புத சக்திக்கு ஆநந்தித்து அவருக்குத் தக்க மரியாதைகளைச் செய்தனர். பிறகு கிருஷ்ணதேவராயலு தமது அரண்மனையில் தக்க பள்ளியறையைச் சித்தப்படுத்தியும், அதற்கு வேண்டிய தங்கத் தகட்டினால் மூடிய கட்டில், சோபா, நாற்காலிகளையும், பட்டு மஹமல் திண்டு திவாசுகளையும், கண்ணாடி குளோபு லஸ்தர் ரசகுண்டுகளையும் கொண்டு சிங்காரித்தும், வித்தியாநகர முழுதும் தமது கலியாண விஷயத்தைப்பற்றித் தண்டோரா போடவைத்தும், அலங்காரம் செய்விக்கும்படி செய்வித்தும், திம்மரசு மந்திரியைத் தருவித்துக் கஜபதி பெண்ணை அழைத்துவரும்படியாக உத்தரவளிக்க, அந்தத் திம்மரசும், நல்ல சுபகாலமறிந்து, இராயலுடைய பந்துமித்திரர்களையும், தேவப் பிராம்மணர்களையும், ஸமஸ்தான உத்தியோகஸ்தர்களையும், தண்டு தளாதி சேனைகளையும் சேகரித்து, சமஸ்தானத்துத் தங்கமயமான பல்லக்கில் சந்தன புஷ்ப தாம்பூல ஆடையாபரணாதி தட்டுகளையும், இராயலுடைய சமஸ்தான வைரமணி கட்டாரியையும் வைத்து, சகல வாத்திய கோஷங்களுடன் கஜபதி ஸமஸ்தானத்துக் கனுப்பி அவர் பெண்ணை அழைத்து வரும்படி ஆஞ்ஞாபித்தார். அப்படி அனுப்பிய கட்டாரி வரிசையும் கஜபதி ஸமஸ்தானத்துக் கோட்டைக் கருகில் வந்து தங்கிய சங்கதியைக் கஜபதிக்கு முன்னடியாகத் தெரிவித்தார்கள்.

---

## கிருஷ்ணதேவராயலின் முதல் விவாஹம்.

அப்படி நரபதி சமஸ்தானத்தார் வந்திறங்கி இருக்கிற சங்கதிகளைப் பிரதாபருத்திர கஜபதி கேட்டவுடனே தமது பந்து மித்திரர்களையும், ஸமஸ்தான உத்தியோகஸ்தர்களையும், எதிர்கொண்டழைத்து வரும்படி அனுப்பிவிட்டும், தாம் அந்தபுரத்துக்கு வந்து தமது பத்தினிமார்களையும், குமாரத்தியையும் பார்த்து, "தக்க ஆடை ஆபரணாதிகளைப் பூண்டு நரபதி ஸமஸ்தானத்துக் கேகத் தயாராக இருங்கள்" என்று சொல்லிவிட்டும், கிருஷ்ணதேவராயலாகிய மருமகனுக்குத் தரவேண்டிய வரிசைகளைத் தயார் செய்யப்போனார்.

இத்தியாதி சங்கதிகளை அறிந்த கஜபதியின் பட்டமஹிஷி தனது அருமை மகளைப் பார்த்து, கட்டித் தழுவிக் கண்ணீர்விட்டு "அந்தோ மகளே! உன்னைப் பெற்றெடுத்த அருமை என்ன! உன் ஜாதியின் பெருமை என்ன! அந்தஸ்தென்ன! உன்னை நல்ல குடும்பத்திற் பிறந்த குலஸ்தனுக்குக் கட்டிக்கொடுக்காமல், வைப்பாட்டி மகனான கிருஷ்ணதேவராயலுக்கு மனைவியாக்க உனது தந்தை ஆத்திரப்பட்டு வாக்குத்தத்தம் செய்து விவாகம் செய்துவிட்டார். அன்றுமுதல் நமது பந்து மித்திரர்கள் நம்மை இழிவாக எண்ணுகிறார்கள். அது சங்கதி உனது அப்பாவுக்குத் தெரியாது. அவர் கேவலம் இராஜ தந்திரத்தை யனுசரித்துத் துர்மந்திரி வார்த்தையைக் கேட்டு இப்படிச் செய்தாரேயொழிய, பந்து மித்திரர்களுடைய யோசனையை அனுசரித்தாரில்லை. இனி என்ன செய்யலாம். உன் தலைவிதி இப்படி முடிந்தது. ஆயினும் இப்படி நமது குடும்பத்துக்கு வந்த குறைவை நீக்க உன்னால் கூடும். கண்ணே! கவனமாகக் கேள். கிருஷ்ணதேவராயலு உன் படுக்கை வீட்டுக்குள் வந்து படுத்துத் தூங்கும்போது அவனது கட்டாரியாலே அவனுடைய வயிற்றில் ஒரே குத்தாகக் குத்திக் கொன்றுவிட்டு நம் வீட்டுக்கு வந்துவிட்டால், நமது குடும்பத்துக்கு இப்போது வந்திருக்கும் இழிவான பெயர் மாறி, நல்ல புகழுண்டாகும். இப்படிச் செய்வதுதான் க்ஷத்திரிய தருமம். இதை நீ கட்டாயமாகச் செய்யவேண்டும்" என்று சொல்ல, இதைக் கேட்ட கஜபதி குமாரத்தி, "என் தாயே! தங்கள் வார்த்தையைத் தடுத்துப்பேசுவதாக எண்ணவேண்

டார்ம். கிருஷ்ண தேவராயனுடைய பிறப்பைப்பற்றி அப்பா அவர்கள் அதிகமாகத் தங்களுக்கும் மற்ற பந்துமித்திரர்களுக்கும் திருப்திகரமாகச் சொல்லியிருந்தும், கேவலம் பொறாமையுள்ள சில பந்துக்கள் வார்த்தைகளை நம்பி இப்படிக் கிலேசப்படுதல் ஆச்சரியம். என்னைக் கிருஷ்ணதேவராயனுக்குக் கட்டிக் கொடுக்காமல் நமது பந்துக்களில் யாரோ ஒரு முட்டாள் பயனுக்குக் கட்டிக்கொடுத்துவிட்டால் அப்போது இப்படிப்பட்ட வார்த்தைகள் நடவா. நம்மைவிட நமது அப்பா ஞானமும் அறிவு மில்லாத அரசரா? என்னை இழிகுலத்தானுக்குக் கட்டிக்கொடுத்தால் அவருக்கு அவமானமில்லையா? அவர் இந்த அவமானமான காரியத்தைச் செய்தும் மீசைவைத்துக்கொண்டு அரசு செய்வாரா? இத்யாதிகளை ஆர அமர யோசியாமல், தங்களுக்குத் தெய்வீகமாக அமைந்த மருமகனாகிய கிருஷ்ண தேவராயனைப் படுக்கை வீட்டில் கொன்றுவிட்டுவரச் சொல்லுகிறீர்களே, இது தருமந்தானா? அடைக்கலம் என்று அண்டிய பகையாளிகளையும் ஆதரிக்கவேண்டுமென்று க்ஷத்திரிய தரும விதியாக இருக்க, இரவில் நிரபராதியாகவும், நிராயுதபாணியாகவும், பத்தினியை நம்பிப் படுத்துத் தூங்கும் இராஜாதிராஜனைக் கொல்ல எவர் மனதுதான் துணியும்? கொள்ளைகள் அடித்தும், குடும்பங்களைக் கெடுத்தும், கொலைகள் செய்யும் குரூர கல்நெஞ்சமுள்ள கள்ளரும், நிரபராதியானவர்களைக் கொல்லத் துணியாரெனில், என்னைத் தமது வாழ்க்கைத் துணையாகக் கொண்டு, உலகில் உள்ளநாள் உள்ளவரையிலும், பரலோகத்திலும் ஏகதேகமாகவும், ஏகமனசாகவும் இருப்பதாக வாக்களித்துத் தரும விவாஹம் செய்துகொண்ட உயிர்த் தோழனை உறங்கும்போது உயிர்வாங்கும்படித் தாங்கள் எனக்குப் போதிப்பது தருமமா? என்னைப் பாணிக்கிரஹணம் செய்துகொண்டவன் பள்ளனானாலும், பறையனானாலும், மூடனானாலும், குருடனானாலும், குஷ்டரோகியானாலும், துஷ்டனானாலும், திருடனானாலும் எனக்குக் கணவனையல்லவா? அப்படிப்பட்டவனை இரவில் படுக்கையில் கொல்லச் சொல்வது பதிவிரதையாகிய தங்களுக்குத் தகுமா? நான் எக்காரியம் செய்யினும் பதிதுரோகமாகிய இக்காரியத்தைச் செய்யேன்." என்று அழுது, குனிந்து தன் தாயார் பாதங்களைப் பிடித்து "நான் அப்படிச் சொன்னதற்கு க்ஷமிக்கவேண்டும்" என்றுகேட்டுக்கொண்டாள். இத்தியாதி

களைக் கேட்ட ராஜமஹிஷி தன் குமாரத்தி கிருஷ்ணதேவ ராயலுடைய மோகத்தில் மூழ்கிவிட்டாள்; இனி அவளைத் திருப்புவது கஷ்டமெனக் கண்டு வேறு உபாயத்தை நியமித்தாள். அதாவது, தனது குமாரத்தியுடன் கிருஷ்ண தேவராயலுடைய படுக்கைவீட்டுக்குப் போய்த் தம் மகளை அலங்கரிக்கும் இரண்டு தாதிப்பெண்களை அந்தரங்கமாக அழைப்பித்தும், அவர்களுக்கு நடந்த சங்கதிகளையெல்லாம் சொல்லியும், கிருஷ்ணதேவராயலு சோபனத்திற்கு இராஜ குமாரத்தியை அலங்கரிக்கும்போது, அவள் இடுப்பில் வில் வைத்த சிறு கத்திகளை ஒட்டியாணத்துடன் தெரியாமல் பூட்டி, மேலே மெல்லிய சால்வையைப் போட்டு மூடிப் படுக்கவைத்தும், அந்த இராஜகன்னிகையின் இடுப்பில் கிருஷ்ணதேவராயலு கை போட்டவுடனே அந்த வில்கத்திகள் பீறிட்டுப் பாய்ந்து, கிருஷ்ணதேவராயலைச் சின்னுபின்னமாகக் குத்திக் கொல்லும்படி செய்வித்தும், தனது குமாரத்தியைக் கஜபதி ஸமஸ்தானத்துக்கே மறுபடியுங் கூட்டிக்கொண்டுவந்தால் நல்ல மானியங்களும் வெகுமதிகளும் தருவதாகவும், இச்சங்கதியைத் தன் குமாரத்திக்குக் கூடத் தெரிவிக்கக்கூடாதென்றும் சத்தியம் வாங்கிக்கொண்டும், நல்ல வில்வைத்த கத்திகளைச் செய்வித்துப் பட்டுச் சால்வைகளில் மறைத்துக் கொடுத்தும், தம் மகளுக்கு வேண்டிய ஆடை ஆபரணங்களைக் கொண்டு சிங்காரித்துத் துக்கத்தோடு அழைத்துப்போய்ப் பல்லக்கில் அமர்த்தியும், அவளுக்குத் துணையாக முன்னுடியே தாயார் செய்து வைத்திருந்த தாதிமார்களையும், பந்து மித்திரர்களையும் அனுப்ப, கஜபதி பார்த்துத் தனது மருமகனுகிய கிருஷ்ண தேவராயலுக்குத் தாயார் செய்துவைத்திருந்த வரிசைகளுடனும், தண்டு தளாதிகளுடனும், சகல வாத்திய கோஷங்களுடனும் நரபதி சமஸ்தானத்துக்கு அனுப்பினுர்கள்.

அப்படிப் பவனியாகவந்த சங்கதியைக் கிருஷ்ணதேவ ராயலும் திம்மரசுங் கேட்டுச் சந்தோஷப்பட்டு, சமஸ்தானத்திலுள்ள பெரிய உத்தியோகஸ்தர்களையும், தேவப் பிராம்மணர்களையும், பந்துமித்திரர்களையும் முன்னனுப்பி அழைத்துவரச் செய்தும், அரண்மனையின் நாலாபக்கங்களில் நகபத், நகாரு மேளவாத்தியம், நாட்டியங்களும், பாட்டுக் கச்சேரிகளும், விருந்துகளும், தாம்பூல மரியாதைகளும் நடக்கவும், விஜயநகர மெங்கும் மேளவாத்தியங்க

ளும், தாம்பூல சுப சோப்னங்களும், சாப்பாடு சந்தோஷங்களும் நடக்கவும், இராஜகுமாரியைத் தக்க மரியாதையுடன் அழைத்து வந்தும், தேவப்பிராம்மணர்களால் ஓமங்களைச் செய்வித்தும், சமஸ்தான பெண்களைக் கொண்டு திருஷ்டி ஆலத்தி முதலான சடங்குகளைக் கிரமமாக நிறைவேற்றியும், பெண்ணைப் படுக்கைவீட்டுக் கனுப்ப, அவள் கூடவந்த தாதிமார்கள் அப்பெண்ணைத் தக்க ஆடை ஆபரணங்களால் அலங்கரித்தும், இடுப்பில் வில்கத்திகளைப் பூட்டி மேலே சால்வையைப் போட்டு மூடவே, இராஜகுமாரி பார்த்து, "ஏ தாதிகாள்! இவ்வில்லுள்ள கத்திகளை இடுப்பில் ஏன் புகட்டுகிறீர்கள்?" என, தாதிகள், "அம்மணி! நீங்கள் க்ஷத்திரிய ஜாதியானபடியால், தங்கள் நாயகர் கட்டாரியை வைத்து விவாஹம் செய்துகொண்டார். தாங்கள் அதற்குப் பதிலாக இந்த வில்கத்திகள் வைத்த ஒட்டியாணத்தைப் புகட்டிக்கொண்டு இன்றிரவு இராஜனிடம் படுத்தல் புராதன க்ஷத்திரிய தருமம்; ஆகையால் தான் இக்கத்திகளைப் பூட்டினோம்" என, இராஜகுமாரி கேட்டு இப்படிப்பட்ட வழக்கத்தை முன்னும் பின்னும் பாராத பேதையானபடியால், தாதிகள் வார்த்தையை உண்மையென்று நம்பித் தரித்துக்கொண்டு தங்கக்கட்டிலில் படுத்தாள்.

இராஜகுமாரத்தி அப்படிப் படுக்க, கிருஷ்ணதேவராயனும் தக்க ஆடையாபரணங்களைத் தரித்துக்கொண்டு படுக்கை வீட்டுக்குப் போகுமுன் தமது தகப்பனுருக்குச் சமானமான மந்திரி திம்மரசை அழைப்பித்து ஆசீர்வதிக்கும்படி கேட்க, அந்தத் திம்மரசும் கண்குளிரக்கண்டு ஆசீர்வதித்து, "அரசே! உங்கள் குடும்பமும், கஜபதிகுடும்பமும் ஆதியில் ஒரே குடும்பஸ்தராக இருந்தாலும், இடையில் இரு குடும்பத்தாருக்கும் இராஜ்ஜிய சண்டை சச்சரவுகளில் நடந்த மனஸ்தாபங்கள் இன்னும் பூரணமாகத் தீராமல் இருப்பதாலும், தங்கள் ஜனன விசேஷத்தைப்பற்றிக் கஜபதி குடும்பஸ்திரீகள் தப்பபிப்பிராயப்பட்டிருப்பதாலும், பேதையராகிய மாதர்கள் மூடத்தனத்தினால் முதலில் யாதாமொரு காரியத்தைச் செய்துவிட்டுப் பிறகு வியாகூலப்படுவது சஹஜமாகையினாலும், தாங்கள் படுக்கை வீட்டில் ஜாக்கிரதையாகக் கொஞ்சகாலம் கழிக்கவேண்டும்" என்று புத்திமதிகளைச் சொல்லி, தாமே கிருஷ்ண

ராயலு அழைத்துப்போய்ப் படுக்கைவீட்டில் விட்டு வந்து விட்டார்.

தேவேந்திர கொலுமண்டபத்தைப்போலச் சிங்காரித்து அமைத்திருந்த பள்ளியறைக்குப்போன கிருஷ்ணதேவராயலு முத்துகளணிந்த சோபாவில் உட்காரத் தாதிகள் கஜபதி குமாரியை அழைத்துவந்து அரசனுடைய இடது பக்கத்தில் உட்காரவைத்துச் சந்தன புஷ்ப தாம்பூலங்கள் நிறைந்த சிறு மேஜையைக் கொண்டுவந்து இராஜகுமாரத்திக்கு அருகில் வைத்து "களித்திருங்கள்" என்று சொல்லிக் கதவை மூடிக்கொண்டு வெளியில் போயினர்.

உடனே கிருஷ்ணதேவராயலும், கஜபதி குமாரியும் சந்தன புஷ்ப தாம்பூலங்களைத் தரித்தும், ஒருவர்க்கொருவர் க்ஷேம சமாசாரத்தைப்பற்றிப் புன்னகையுடன் பேசியும், வீணை முதலான வாத்தியக் கருவிகளை வாசித்துக் காட்ட, காமமோகங் கொண்ட கிருஷ்ணதேவராயலு தனது செங்கோலேந்தும் சிங்காரக்கையைத் தனது கட்டழகியின் இடுப்பின்மேல் போட்டவுடனே, வில் கத்திகள் பீறிட்டு வந்து தாக்க, கிருஷ்ணதேவர் தந்திரமாகக் குதித்தோட, பிராணபயமற்றுச் சொற்ப காயங்களுடன் அறையைவிட்டு வெளியில் வந்து, மந்திரி திம்மரசைத் தருவித்து, நிகழ்ந்த சங்கதிகளைச் சொல்லி, அந்தப் பெண்ணையும் அவளுடைய பிதா பந்து மித்திரர்களையும் உடனே கொல்லத்தக்க ஏற்பாடுகளைச் செய்யச் சொல்ல, திம்மரசு பார்த்து "வேந்தே! விசனப்படாதே! இக்குற்றம் அந்தப் பெண்ணினாலும், அந்தப் பெண்ணின் தகப்பனாலும் நடந்ததல்ல; அந்தப்புரத்திலிருக்கும் அவர் அஞ்ஞான ஸ்திரீகளால் நடந்திருக்கலாம். ஆகையால் கஜபதியுடன் சண்டைக்குப் போதல் தருமமல்ல; அவருடைய பெண்ணை அவரிடத்திற்கே திருப்பி அனுப்பிவிட்டால், அந்த அவமான தண்டனையே போதும்" எனக் கிருஷ்ணராயலும் யோசித்துச் சம்மதித்து, அந்த இராஜகுமாரியைத் தம் தகப்பனார் வீட்டுக்குத் திருப்பி அனுப்ப, அந்தப் பெண் நடந்த சங்கதிகளையும், முக்கியமாகத் தனது தாயாருடைய துர்ப்புத்தியினால் தாதிகள் செய்த சூதுகளையும் எண்ணி ஏங்கி, இனித் தாயார் வீட்டுக்குப் போனாலும் தக்க மரியாதை கிடைக்காதென்று மயங்கி, தன்னை எங்கேயாவது ஒரு வனத்தில் விட்டுவிட்டால் நலமென அரசருக்கு விண்ணப்பம் செய்ய,

அவரும் சம்மதித்து நகருக்குத் தூரமான ஒரு வனத்தில் ஒரு வீட்டைக் கட்டி, அதில் சிறையாக வைத்துவிட்டதாகப் பிரவுடகவி சரித்திரக் கதையால் தெரியவருகிறது.

கிருஷ்ணதேவராயனுடைய மனைவியும் கஜபதி குமாரியுமாகிய துகாம்பா அல்லது வரதராஜம்மாள் அப்படி வனவாசம் செய்த இடம் கடப்பை ஜில்லாவுக் கருகிலென்றும், அங்கு அந்தம்மாள் நான்கு பக்கங்களி லிருக்கும் மலைகளின்மேற் பெய்யும் மழை நீர்வந்து ஒரு பெரிய குளமாகத் தங்கிப் பயிர் பச்சைகளுக்கு உபயோகமாகும்படி அக்குளத்தின் நான்கு பக்கங்களிலும் பலமான பெரிய கற்களாற் கரைகளைக் கட்டி வைத்ததாகவும், அப்படிக் கட்டிய கரைகளில் இரண்டு பக்கங்களில் மலைக் கணவாய்க் கரைகள் அடிக்கடிக் கரைந்து உடைப்பெடுத்து வெகு பயிர்களுக்கு நஷ்டத்தை யுண்டாக்கி வந்ததை அந்தம்மாளுடைய தயிர்க்காரி ஒருத்தி பார்த்துப் பரிதபித்து, அதற்கு நரபலி கொடுத்தால் நலமென்றும், தமக்குத் தக்கபொருள் கொடுத்தால் தமது குமாரர்களாகிய பெரிய கம்பன், சின்னக் கம்பன் என்பவர்களை அந்த அணைக்கு நரபலியாகக் கொடுக்க வாக்குத்தத்தம் செய்ததாகவும், அதன்மேல் அந்தத் துகாம்பா அம்மாள் சம்மதித்து அத்தயிர்க்காரிக்கு வேண்டிய ஆடை ஆபரணங்களையும் ரொக்கத் தொகையையும் கொடுத்து, அவளுடைய இரண்டு குமாரர்களையும் தருவித்துச் சம்மதிப்படச் செய்வித்தும், அவர்களை அங்கு நரபலி செய்ததன்மேல் அந்த உடைப்பு நின்றுவிட்டதாகவும், அப்படிப் பல ஜனங்களுடைய உபயோகத்திற்காகத் தம் பிராணனைக் கொடுத்த கம்பர்களுடைய பெயர்களால் அங்கு ஒரு கிராமத்தை உண்டாக்கி அதற்குக் கம்பம் என்று பெயரிட்டதாகவும், அதைத்தான் இப்போது கடப்பைக் கருகிலிருக்கும் கம்பம் தாலுக்கா என்றும் ஒரு கதை உலாவுகின்றது.

இக்கதைக்கு அனுசரணையாக மிஸ்டர் டெயிலர் (Mr. Taylor) எழுதிய கிரந்தத்தில் விஜயநகர ராயலின் மனைவி துகாம்பாள் சரியான ஜாதியானுக்கு விவாகம் செய்யப்படாமையால், விசனத்தோடு அவள் வனசஞ்சாரியாகித் தனக்குத் தன் தகப்பனார் கஜபதிகொடுத்த திரவியத்தை எல்லாம் செலவிட்டு இந்தக்குளத்தை உண்டாக்கினதாகக் கடப்பைக் கருகில் ஒரு சாசனம் அகப்பட்டதாக எழுதி இருக்கின்றனர்.

---

## கிருஷ்ணதேவராயலின் இரண்டாம் விவாஹம்.

இப்படிக் கிருஷ்ணதேவராயலுக்கு முதல் விவாஹத்தினால் உண்டான கஷ்ட நிஷ்டூரங்களை நினைத்து நினைத்து விசனப்படுகையில், இந்தச் சமயமறிந்த உத்கலதேசத்து (ஓரிசா நாட்டின்) அரசன் நரபதி சமஸ்தானத்தின்மீது படையெடுத்து வந்து தாக்க, உடனே கிருஷ்ணதேவராயலும், சாளுவதிம்மரசு மந்திரியும் தக்க தண்டு தளாதிகளுடன் எதிர்த்துப்போய்ச் சண்டைசெய்து ஜயித்து உத்கல நாட்டின் கோட்டைக் கருகில் அந்த ராஜனிடம் திம்மரசு மந்திரி சமாதானம் செய்யப்போகவே, அந்த உத்கல வேந்தனுக்கு அழகு யாவும் திரண்டு அவதரித்தாற்போல ஓர் சுந்தரவதியாகிய குமாரத்தி இருப்பதை அறிந்து, அந்தப் பெண்ணை விசாரித்து கிருஷ்ணராயலுக்கு விவாகம் செய்துவிட்டால் அவருக்கு முதல் மனைவியாலுண்டாகிய வியாகூலம் நீங்குவதுடன், உத்கலநாட்டாரும் நரபதிகளும் சம்பந்திகளாகி, அவர்களோடு முன் சம்பந்தம் செய்த கஜபதியும் சேர, மூன்று பெரிய இந்து ஸமஸ்தானங்களாகி, மகமதியரைத் தலையெடுக்காமல் தடுக்க அனுகூலமாகுமென்று யோசித்து உத்கல நாட்டரசனுக்கு அறிவிக்க, அந்த இந்து மன்னனும் ஒரு காலத்தில் நரபதி கஜபதி குடும்பத்தைச் சார்ந்த சந்திரவமிச க்ஷத்திரிய ரானபடியாலும், தமது சுதீமணியாகிய குமாரத்திக்குக் கிருஷ்ணதேவராயலைவிடச் சிறந்த மணவாளன் அகப்படமாட்டானென்று எண்ணியும், இந்தச் சம்பந்தத்தினால், இந்து ராஜாங்கம் பிரபலப்பட்டுப் பெரிய ராஜாங்கமாகுமென்றும் எண்ணிச் சம்மதிக்க, திம்மரசு உடனே கிருஷ்ணதேவராயலிடம் வந்து தாம் சமாதானத்துக்குப் போனவிடத்தில் உத்கல ராஜனுடன் நடந்த வர்த்தமானங்களை எல்லாம் சாங்கோபாங்கமாகச் சொல்ல, கிருஷ்ணதேவராயலுங் கேட்டுச் சம்மதித்துச் சந்தோஷ முற்றார்.

பிறகு முகூர்த்த காலமறிந்து, கிருஷ்ணதேவராயலும், திம்மரசு மந்திரியும் தக்க தண்டு தளாதிகளுடனும், ஆடை யாபரணங்களுடனும், பந்துமித்திர கோஷ்டியுடனும் உத்கல தேசத்துக்குப் போக, அந்த உத்கலர், நாடு நகர அரண்மனைகளைத் தக்கபடி அலங்கரித்தும், தமது குமாரத்தியின் விவாஹத்தைப்பற்றித் தனது அந்தப்புர ஸ்திரீக

ளுக்கும் பந்து மித்திரர்களுக்கும் சொல்லியும், சிங்காரித்துக்கொண்டு சித்தமாக இருக்கும்படி திட்டப்படுத்தியும் வந்து கோட்டைக்கு வெளியில் நிற்கும் கிருஷ்ணதேவராயலு முதலானவர்களைத் தக்க மரியாதையுடன் அழைத்துப்போய்ப் பால் பழங் கொடுத்து, உபசரித்து மங்கள ஸ்நானத்துக்கு அனுப்பி, சுத்தமும் சுந்தரமுமான வஸ்திராபரணங்களைத் தரிக்கச் செய்வித்தும், விவாஹ மண்டபத்திற்கு அழைத்து உட்காரச்செய்தும் வேத பிராம்மணர்களைக்கொண்டு கலியாணச் சடங்குகளை யெல்லாம் முறைப்படி செய்வித்து முடித்தும், வந்திருந்த பிராம்மணர்களுக்கு லக்ஷக்கணக்கான பூரிதட்சணைகளைக் கொடுப்பித்தும், வந்திருந்த பந்து மித்திரர்களுக்கு விமரிசையாக விருந்துகளையும் வரிசைகளையும் செய்வித்தும், ஆடல் பாடல் கச்சேரிகள் வைத்தும், சகலரும் சந்தோஷம் அடையும்படி செய்வித்தும், அன்று இராத்திரி சோபன முகூர்த்தத்துக்கு இன்றியமையா அலங்காரப் படுக்கைவீடும், வரிசைகளும் தயார் செய்துகொண்டிருந்தார்.

அப்படி நடக்கும் காலத்தில் உத்கலதேச மன்னருடைய மனைவியிடம் மூடமதியுடைய சில மங்கையர் வந்து, "அம்மணி! இஃது என்ன அநியாயம்! இருந்திருந்து தங்கள் சுந்தரவதியைத் தாசி மகனான கிருஷ்ணதேவராயலுக்குத்தானா கட்டிக் கொடுக்கவேண்டும்? கிருஷ்ணதேவராயலு சுபத்தினிக்குப் பிறந்தவனல்லனென்றும், அவனுடைய முன் தாரமாகிய கஜபதி குமாரத்தி அவனிடம் வாழமாட்டேன் என்று வனவாசம் செய்யும் சங்கதி தெரியாதோ? இருந்து இருந்து என்ன இழிவான வேலையைச் செய்துவிட்டீர்கள்! இப்படி இழிவானவனைக் கணவனாகக் கட்டிக்கொள்வதைப் பார்க்கிலும், அவனைக் கொன்றுவிட்டு விதந்துவாக அண்டத்தில் அந்தஸ்தோடு வாழுதல் நலம். கிருஷ்ணதேவராயலுடைய உண்மையான பிறப்பை யறிந்தும் நமது அரசர் ராஜகீய விஷயத்தைக் கருதி இக்காரியம் செய்தாரோ? தாங்கள் எப்படி இப்படிப்பட்ட காரியம் செய்யத் துணிந்தீர்கள்?" என்று பலவிதமாகச் சொல்ல,

இராஜமஹிஷி கேட்டு, "அடி! இஃதென்ன விந்தை! எனது அருமை மகளுக்கு இப்படிப்பட்ட இழிகுலத்தானா கணவனாக வாய்த்தான்? கிருஷ்ணதேவராயலுடைய

சரித்திரத்தை நாம் முன்னரே பல அரண்மனை மங்கையர்களால் கேள்விப்பட்டிருக்கிறோம். அப்படிக் கேள்விப்படிருந்தும், "ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு" என்னும் பழமொழிப்படி அரசர் ஆரத்தீர யோசியாமல், ஆயிரங்காலத்துப் பயிராகிய இந்தப் பெண்ணை இப்படிப்பட்ட இழிகுலத்தானுக்குக் கட்டிவிட்டார். இனி விசனப்படுவதிற் பிரயோசனமில்லை. இக்குறைவை நீக்க உபாயம் செய்யவேண்டும்'' என்று நீள நினைத்துத் தன் மகளிடம் வந்து பின் வருகிறபடி சொல்லலுற்றாள்:—

"முத்துமணியே! உன் தலைவிதியை என்னென்று சொல்வேன்? உன்னைப் பெற்ற பெருமை யென்ன? உன்னை வளர்த்த அருமை என்ன? இழிகுலத்தானென்று சொல்லப்படும் கிருஷ்ணதேவராயனுக்கு உனது தந்தை கேவலம் இராஜகீய விஷயமாகக் கலியாணம் செய்துகொடுப்பதாக வாக்களித்து முன்னும் பின்னும் விசாரியாமல் விவாகத்தையும் செய்துவிட்டார். முன்னே கஜபதிராயனும் இப்படியே தமது நாயகியோடு கலந்து பேசிக் கலியாணம் செய்யாமல், கேவலம் துர்மந்திரிகளுடைய வார்த்தைகளுக்கு இணங்கித் தன் குமாரத்தியைக் கிருஷ்ணதேவராயனுக்கு விவாஹம் செய்ததனால், அவர் பெண் 'இழிகுலத்தானோடு வாழ்வதைப் பார்க்கிலும் வனப்பிராணிகளோடு வாழுதல் உசிதம்' எனக் கருதி, இப்போது வனசஞ்சாரியாகத் திரிந்து தவிக்கிறாள். இது சங்கதி இத்தேசத்திலிருக்கும் ஒவ்வொரு இராஜகுடும்பத்தாருக்கும் தெரிந்திருப்பதைப் போலவே, நமது அந்தப்புர ஸ்திரீகளுக்கும் தெரிந்த விஷயம். தெரிந்திருந்தும், உன் அப்பா: அவர்களுடைய வாக்கு மீறி நடக்கக்கூடாதென்ற பயத்தினால், வாய் மூடிக்கொண்டிருந்தார்கள். இனி உலைவாயை மூடினும், ஊர் வாயை மூட யாரால் முடியும்? இனி என்ன செய்யலாம்? கண்மணி! இக்காலத்தில் ஓர் உபாய மிருக்கிறது. அதை நீ தக்கபடி கையாடினால், நீ பிறந்த குடும்பத்தாருக்கு உலகம் உள்ளவரையில் உயர் பதவியும், உத்கிருஷ்டப் பெயரு முண்டாகும்'' என,

இராஜகுமாரி இந்தச் சங்கதிகளை அழுத கண்ணுடனும், சிந்திய மூக்குடனும் கேட்டு, "அன்பே அவதாரமாக வந்த தாயே! இந்தக் கஷ்டகாலத்தில் தாங்கள் சொல்லுகிறபடி நடக்கச் சித்தமாக இருக்கிறேன்'' என,

இராஜமஹிஷி, "கண்மணியே! சொல்லக்கேள்! காரியமோ முடிந்துவிட்டது. இன்று இராத்திரி உனக்குச் சோபன முகூர்த்தம் நிச்சயித்திருக்கிறார்கள். நீ படுக்கை வீட்டிற்குப் போகும்போது உனது அப்பாவின் கைக்கட்டாரியை மடியில் வைத்து மறைத்துக் கொண்டுபோய் வைத்திருந்து கிருஷ்ணதேவராயலு உன்னோடு தூங்கும்போது அந்தக் கட்டாரியை எடுத்து அவன் வயிற்றில் இரண்டு மூன்று குத்துகள் குத்தி வயிற்றைப் பிளந்து கொன்றுவிட்டு, 'யாரோ ஒரு துராத்மா வந்து குத்திவிட்டான்' என்று கூப்பிட்டழுதுகொண்டு வெளியில் ஓடிவா. உடனே வந்து பார்ப்பவர்கள் 'யாரோ பகையாளிகள் இப்படிச் செய்தார்கள்' என்று சொல்லிக் கிருஷ்ணதேவராயலை அக்கினிக்கு இரையாக்கிவிடுவார்கள். அப்படிச் செய்வதனால் நமது குடும்பத்தின் கீர்த்தியும் பிரகாசிக்கிறதோடு, நரபதி ஸமஸ்தானத்துக்கு நடுங்கிக்கொண்டிருக்கும் நரர்கள் நிம்மதியாக இருப்பார்கள். நமது ராஜாங்கத்துக்கும் வேறு பயமில்லை" என்று சொல்ல,

இராஜகன்னிகை கேட்டு, அழுது, "அம்மா! கிருஷ்ணதேவராயலு சுவபத்தினிக்குப் பிறந்தவரென்றும், சுந்தர புருஷரென்றும், சுத்தவீரரென்றும், சகல சமயத்தாருக்கும் ஜாதியாருக்கும் உபகாரம் செய்யும் வள்ளலென்றும், அநேக கிரந்தங்களினாலும் கதைகளினாலும் அறிந்திருக்கத் தாங்கள் இப்படிச் சொல்வது ஆச்சரியமாக இருக்கிறது. ஆயினும் என்னை எப்போது விரும்பி விவாஹம் செய்துகொண்டாரோ அன்றே நான் அவருக்குப் பாரியாளாகிவிட்டேன். அப்படியிருக்க என் மனசாக்ஷிக்கு விரோதமாக அவரை எப்படிக் கட்டாரியால் குத்திக்கொல்ல மனந்துணியும்?" என்று தலைகுனிந்து அழுதுகொண்டு சொல்ல, இராஜமஹிஷிக்குக் கோபமதிகரித்துப் பதைத்து, "அடீ! படுநீலி! குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக்காம்பே! உனக்கும் உன் அப்பாவுக்கும் பிடித்த பைத்தியம் தலைமீது ஏறி இப்படி இல்லாத பொல்லாத கள்ளக் கதைகளைப் பேச வந்தாய்! அடி மாத்துரு துரோகி! நீ இப்படி என் வார்த்தைக்கு மறுத்துச் சொல்லலாமா? ஆ! ஆ! என்ன கலிகாலம்! இன்றோடு நீ செத்தாய்! இனி நீ எனக்குப் பிள்ளையன்று! இப்போதே கிருஷ்ணராயலிடம் போ, இனி உன்னை என் வீட்டிற் சேர்க்கமாட்டேன்" என்று துடித்துச் சொல்ல,

இராஜகுமாரி தாயாருடைய கோபத்தைப் பார்த்துப் பயந்து, பதைத்து, "என் அருமைத் தாயே! உண்மை சொல்லப்போனால் உங்களுக்கேன் இவ்வளவு கோபம்? உங்களிஷ்டப்படியே கிருஷ்ணதேவராயலைக் கொன்றுவிட்டுக் கட்டாரியோடு வருகிறேன்" என்று சொல்ல, அப்பெண்ணுக்கு அன்று சோபனத்துக்கு வேண்டிய ஆடையாபரணங்களைப் பூட்டிக் கட்டாரியைக் கொடுத்துச் சித்தப்படுத்த, இவ்விஷயங்களைத் திம்மராசு இரகசியமாகக் கேட்டு விசனப்பட்டுவந்து கிருஷ்ணதேவராயலிடம் சொல்ல, அவரும் "அந்தோ! முதல் மனைவிதான் அப்படியானாள்; இந்த இரண்டாம் மனைவியும் இப்படியாகவேண்டுமோ!" என்று ஈசுவரனை நினைத்து விசனப்பட, திம்மராசு பார்த்து, "பிரபுவே பயப்படாதே! நான் சொல்லுகிறபடி கேட்டால் நமது காரியம் ஜயமாகும்" என்று சொல்லி ஓர் அறையில் கிருஷ்ணதேவராயலைப் படுக்கவைத்துவிட்டு, உத்கலதேசராஜனிடம் போய், "மஹாராஜா! இன்று கிருஷ்ணதேவராயலுக்கு ஜனனதினமாகவும், உயுத்தத்தில் களைத்து ஆயாசமாகவும் இருப்பதால், இன்று செய்யும் சோபன முகூர்த்தத்தை நாளைக்கு வைத்துக்கொண்டால் நலம்" எனச் சொல்ல, அந்த மன்னரும் கேட்டு, "அப்படியே யாகட்டும்" என்று சொல்லி அந்தப்புரத்துக்கும் சங்கதியைத் தெரிவித்தார்.

அதன்மேல் மந்திரி திம்மராசு கிருஷ்ணதேவராயலுடைய அறைக்கு வந்து, அவருடன் கலந்து பேசியும், அவரைப்போல மெழுகில் ஒரு சிலையைச் செய்வித்தும், அச்சிலையின் வயற்றில் கொம்புத்தேன் நிறைந்த சுரைக்காய்க் குடுக்கையைப் பதித்தும், மேலே மெல்லிய சால்வையைப் போட்டு மூடிவைத்துக்கொண்டிருந்தும், மறுநாள் மாலை சோபன காலத்திற் படுக்கை வீட்டை அலங்கரித்தானவுடனே, திம்மராசு கிருஷ்ணதேவராயலுடைய சிலையை ரகஸியமாகக் கொண்டுபோய்ச் சோபனக் கட்டில் படுக்கவைத்தும் மேலே சல்லாத்துணி போட்டு மூடிக் கதவை மூடிக்கொண்டுவந்து அந்தப்புரத்துக்குப்போய் "கிருஷ்ணதேவராயலு ஆயாசமாகப்படுத்துக்கொண்டிருக்கிறார்; இப்போது யாரும் அப்படுக்கை வீட்டுக்குள் போகக்கூடாது" என்றும், "இராஜகுமாரி மாத்திரம் இராத்திரி பன்னிரண்டு மணிக்கு நல்ல முகூர்த்தகால மானபடியால்

அப்போது தனியாகப்போய்ப் படுக்கலாம்" என்றும் சொல்லித் திட்டம் செய்துவிட்டும், திம்மரசும் கிருஷ்ணதேவ ராயலும் இராப்போஜனம் செய்து முடித்துக்கொண்டு சோபனப்படுக்கை வீட்டிற்குள் போய்த் தங்கக்கட்டிலின் அடியில் பதுங்கிப் படுத்துக்கொண்டிருக்க, பன்னிரண்டு மணியாகவே தாதிகள் இராஜகுமாரியை அழைத்துவந்து படுக்கைவீட்டிற்குள் விட்டுவிட்டுக் கதவை மூடிக்கொண்டு போக, இராஜகுமாரி தாய் வார்த்தைக்குக் கட்டுப்பட்டுக் கட்டாரியைக் கையிலேந்திக் கட்டிலின்மீதிருக்கும் கிருஷ்ணதேவராயலு சிலையின் வயிற்றில் குத்திக் கிழிக்க, அதிலுள் நிறைந்திருந்த தேன் பீறிக்கொண்டுவந்து இராஜகன்னிகையின் முகத்திலும் உதடு முதலான விடங்களிலும் விழ, இராஜகுமாரியின் உதட்டில் விழுந்த தேன் துளியை அவள் சுவைத்துப்பார்க்க, அது அதிக மதுரமாக இருக்க, "அந்தோ! அந்தோ!! இந்தக் கிருஷ்ணதேவராயலுடைய இரத்தங்கூட அவர் குணங்களைப்போலவே ருசியாயிருக்க இப்படிப்பட்ட மஹானுபாவனை மூடமதியுள்ள தாயார் உத்தரவுப்படிக் கொன்றோமே; இப்பாவத்துக் கென்னசெய்வோம்" என்று துக்கித்தழ. இவ்விஷயங்களைக் கேட்டிருந்த திம்மரசு மந்திரி திடீரென்று கட்டிலின் கீழிருந்துவந்து இராஜகன்னிகையைப் பார்த்துக் கும்பிட்டு, "என் தாயே தயங்காதே! இஃது உன் குற்றமன்று; உன் தாயாரும் மற்ற மூட ஸ்திரீகளும் செய்வித்த குற்றம்; நீ என் செய்வாய்? நீ கிருஷ்ணதேவராயலைக் கொல்லுவதில்லை என்று இந்தக் கட்டாரியைத் தலைமீது வைத்துச் சத்தியம் செய்துகொடுப்பாயாகில் உடனே கிருஷ்ணதேவராயலை எழுப்பித்தருவேன்" என, அந்த ராஜகன்னிகையும் இசைந்து கட்டாரியைத் தலைமீதுவைத்துச் சத்தியம் செய்து கொடுக்க, உடனே கட்டிலின்கீழ்ப் பதுங்கியிருந்த கிருஷ்ணதேவராயலு வந்து திம்மரசின் தந்திரத்திற்கு மெச்சி அந்த இராஜகுமாரியைத் தமது தர்மபத்தினியாக அங்கீகரித்து ஆனந்தமடைந்தார்.

[ஆக இந்தக் கிருஷ்ணதேவராயலுடைய இரண்டு விவாஹத்தைப்பற்றிய மேற்கண்ட கதைகள் இப்போது அந்தச் சமஸ்தானத்தின் சந்ததியும், ஆனகுந்தியிலிருக்கும் ஸ்ரீமந்த ஸ்ரீரங்கதேவராயலு ராவ்சாஹிபவர்கள் சென்ற வருஷம் நீலகிரிமலைக்கு மாக்ஷிமையுள்ள சென்னைக்

கவர்னரவர்களைப் பார்க்கப்போனபோது, கோயமுத்தூர் ரெயில் ஸ்டேஷனில் நமக்கு வெகுமானமாகக் கொடுத்த பிரவுடாவுல சரித்திரம் என்னும் தெலுங்குப் புத்தகத்தி லிருந்து மொழிபெயர்த்தது.]

---

## கிருஷ்ணதேவராயலுடைய இராஜ்ஜிய பரிபாலன விமரிசனை.

வித்யாநகரம் அல்லது விஜயநகர ஸமஸ்தானத்தை ஆண்டுவந்த பிரபுக்களில் கிருஷ்ணதேவராயலே சிரோ பூஷண ரென்று அநேக சாசன சரித்திரங்களினால் பிரகாச மாவதுடன், அவருடைய தரும இராஜ்ஜிய பரிபாலனத் தைப்பற்றி இன்றளவும் அநேகர் கொண்டாடிவருகின்றார் கள்.

---

## கிருஷ்ணதேவராயலுடைய விருதுகள்.

அந்தக் கிருஷ்ணதேவராயலு காலத்திலிருந்த அநேக அரசர்களும், கவிகளும், வித்வான்களும், சுத்தவீரர்களும், சமயாசாரியர்களும் அவரை, 1. ஸ்ரீமந் மஹாராஜாதிராஜா, 2. இராஜபரமேசுவர, 3. மாருராயபிரசண்ட, 4. ஆரியராய விபாட, 5. பாஷிகதப்புவராயரகண்ட, 6. அஷ்டதிக்ராஜ மனோயங்தர, 7. பூர்வ தக்ஷிண பஸ்சம சமுத்திராதீசுவர, 8. யவனராஜ்யஸ்தாபனாசார்ய, 9. கஜபதிபாட, 10 நரபதி பூஷண, 11. ஸ்ரீ வீரப்பிரதாப, 12 ஸ்ரீ கிருஷ்ணதேவராய ப்ரபோ என்றுதி பட்ட விருதுகளைச் சேர்த்துப் புகழ்ந் தார்கள்.

இப்படிப் பல விருதுகளைப் பெற்றுத் தமது தம்பி மார்களாகிய அச்சுததேவராயலையும், ஸ்ரீரங்கதேவராயலை யும், மஹாமந்திரியாகிய சாளுவதிம்மராசு என்னும் அப் பாஜியையும், இந்த அப்பாஜியின் தம்பியாகிய கோவிந்த ராயலையும், மஹா சுத்தவீரனாகிய சதாசிவராயலு என் னும் தளகர்த்தரையும், தண்ட நாயடுகாரு என்னும் நீதி பரிபாலன பிரதிநிதிகளையும், அஷ்டகஜங்கள் என்னும் எட்டு ஆந்த்ர வித்துவான்களையும், அப்பயதீக்ஷதர், ஸ்ரீ வேதாந்த தேசிகர் என்னும் தாதாசாரியர், சாம்பசிவாசாரியர்

முதலான துவைத அத்வைத விசிஷ்டாத்துவைத சித்தாந்த சிகாமணிகளையும் துணையாகக் கொண்டு அரசு செய்துவரும்போது கிருஷ்ணதேவராயலுக்கு அனுகூலிகளாகவிருந்த மஹா ஜனங்கள் யாவரெனில்:

(1) ஆர்விட்டிவாரு, (2) நவுகவாரு, (3) நந்தியாலுவாரு, (4) பெம்மசானிவாரு, (5) வெலம அல்லது வெலகோட்டிவாரு, (6) பூட்டஹரிவாரு, (7) தூரகண்டிவாரு, (8) துளுவதொரலு, (9) இராவலவாரு என்றுதியவர்களே.

## கிருஷ்ணதேவராயலுடைய திரவிய சம்பத்தின் விபரம்.

(1) வித்தியாரண்ணியர் விஜயநகரத்தைக் கட்டி முடித்த பிறகு இராஜா பொக்கிஷத்தில் மிச்சமாக இருந்த ரூபாய் 99,00,00,000.

(2) வித்தியாரண்ணியருக்குப் பிறகு கிருஷ்ணதேவராயலு வித்தியாரண்ணியர் தபசு செய்தவிடத்தில் அகப்பட்ட ரொக்கம் 9,00,00,000 ரூபாய்.

(3) ஸமஸ்தான அரண்மனையிலிருந்த இரத்தினங்கள் தங்கம் முதலான ஆபரணங்கள் 4,00,00,000 ரூபாய்.

(4) வெள்ளி முதலான தட்டு முட்டு கட்டில் முதலானவைகள் 5,00,00,000 ரூபாய்.

(5) கனராதேசத்தார் கூடிக் கப்பமாக அனுப்பிக் கொண்டுவந்தது 84,00,000 ரூபாய்.

(6) பதாதிகள் 100-க்கு ஒரு லக்ஷமாக 24 ஆயிரம் பட்டாளத்துக்கும் பதாதிகள் 24,00,000 இருந்தார்கள்.

(8) யுத்தத்துக்கும் வேறு வேலைகளுக்கும் உபயோகமாக 9,000 யானைகள்.

(9) ஒட்டைகள் 60,000.

(10) குதிரைகள் 66,000.

(11) தண்ணீர் கொண்டுவர 12,000 பக்காளிகள்.

(12) தாசி ஜனங்கள் 20,000 பெயர்களும், அந்தப்புர ஸ்திரீகளுக்கு உதவியாக 12,000 பெண்களும்.

(13) இராயலுடைய சமுகத்திலும், சொந்த வேலையிலும் மாதம் ஒன்றுக்கு 24,000 ரூபாய் சம்பளத்தில் 1000 சேவகர்களும், 14 ஸமஸ்தானங்களின் கோட்டைக் காவலாளிகளாக 4,00,000 ரூபாய் சம்பளத்தில் 1,60,000

வாலண்டியர் வீரர்களும் இருந்தார்கள். இவர்களில் பெரும்பான்மையோர் வெலமவாரும், கம்மவாருமாம்.

கிருஷ்ணதேவராயலு கஜபதி சமஸ்தானத்தாரோடு சம்பந்தம் செய்துகொண்டதில், அந்த சமஸ்தானத்தார் மூலமாகக் கிருஷ்ணதேவராயலுக்கு உதவியாக வந்த வீரர்கள் எவர்களெனில்:—

(1) பலபத்ரபாத்ருடு, (2) துர்க்காபாத்ருடு, (3) பீமாபாத்ருடு, (4) முகந்தபாத்ருடு, (5) பீகரபாத்ருடு, (6) பேருபாத்ருடு, (7) இரணரங்கபாத்ருடு, (8) கட்காபாத்ருடு, (9) அகண்டலபாத்ருடு, (10) முகாரிபாத்ருடு, (11) வஜ்ர முஷ்டிபாத்ருடு, (12) (13) துருகரேவந்தபாத்ருடு, (14) கஞ்சாகுசபாத்ருடு, (15) அசஹாயபாத்ருடு, (16) மிருகேந்திரபாத்ருடு என்பவர்களாம். அந்த வீரர்களன்றியில் கிருஷ்ணதேவராயலுடைய சண்டைக் காலத்தில் குதிரை பதாதிகளைக் கொடுத்து உதவி புரியும்படியான நாயகோரு அல்லது பிரபுக்கள் அல்லது பாளையக்காரர்கள் 200 பெயர்களும் இருந்தார்கள்.

இந்தப் பிரபுக்களன்றியில் கிருஷ்ணதேவராயலுடைய அடைக்கலத்தை அடைந்த அனேக மகமதியர்கள் சேனை வீரர்களாகி அவருக் கனுகூலமாக உயுத்த காலத்தில் உண்மையுடன் உழைத்து வந்ததன்றியில், அப்போது கோவா பட்டணத்தில் வந்து வர்த்தகம் செய்துவந்த போர்த்துகேயர்கள் தமக்கு விற்பனைக்காக அரபு நாட்டிலும், பாரசீக நாட்டிலு மிருந்துவரும் முதல்தரமான குதிரைகளை எல்லாம் கிருஷ்ணதேவராயலுக்கே கொடுத்துக்கொண்டு வந்தார்கள். அன்றியும், அந்தப் போர்த்துக்கேய வீரர்களில் அநேகர் கிருஷ்ணதேவராயலுடைய பீரங்கிப் பட்டாளத்தில் சேர்ந்தும், ஐரோப்பா கண்டத்திலிருந்து முதல்தரமான பீரங்கி, துப்பாக்கி, இரவைகுண்டு மருந்துகளைத் தருவித்துக் கொடுத்தும், துப்பாக்கிப் பீரங்கி யுத்தத்தில் உற்சாகமாகவும் உண்மையாகவும் உழைத்து நரபதி ஸமஸ்தானத்தைப் பெருமைப்படுத்தி வந்தார்கள்.

---

## கிருஷ்ணதேவராயலுடைய விஜயம்.



இப்படி இணையற்ற இரதகஜதுரகபதாதிகளால் சூழ்ந்திருந்த கிருஷ்ணதேவராயலுடைய யுத்த பராக்கிரமத்

தைப்பற்றிப் பல கிரந்தங்களில் பிரபலமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

கிருஷ்ணதேவராயலு சிங்காசனமேறின உடனே தமது விஜயநகரக் கோட்டையை விருத்தியாக்கி, பகைவர் வந்து தாக்குவதற்கு வழியில்லாமல் பந்தோபஸ்தாகக் கட்டுவித்தும், தக்க பாதுகாப்புகளை நியமித்ததன்றியில், அக்காலத்தில் அந்தச் சமஸ்தானத்தின் சுவாதீனத்திலிருந்த பெனுகொண்ட, சந்திரகிரி முதலான கோட்டைகளைப் பலப்படுத்தியும், பிறகு காஞ்சி, செஞ்சி, வேலூர் கோட்டைகளைப் பலப்படுத்தியும், அந்த வேலூர்க் கோட்டையில் தம்மினத்தைச் சார்ந்த புஜபலராயலை, நாயுடுகாரு என்னும் பட்டத்தினால் பிரதிநிதியாக நியமித்து ஆண்டுவரும்படி செய்ததில், கர்னாடக ஸமஸ்தானத்தைச் சார்ந்த உம்மத்தூர், சிவசமுத்திரம் பாளையக்காரராகிய சிற்றரசர்களைத் தம் வசமாக்கப் பிரயத்தனப்பட்டார். அப்போது சிவசமுத்திரத்தை ஆண்டுவந்த கங்கராயன் முன் வீரநரசிம்மராயலுகாலத்திலும் அசட்டை செய்ததோடு, இப்போதும் அடுத்த சில பாளையக்காரரைத் துணையாகக் கொண்டு, கிருஷ்ணதேவராயலுடையசேனையைப்பிரங்கிப்பட்டாளத்தோடுஎதிர்க்க, கிருஷ்ணதேவராயலு அந்தக் கங்கராயனின் விரோதியான சிக்கராயனைத் துணையாகக் கொண்டு சிவசமுத்திரத்திற்கடுத்த பிரேத பருவதம் சவுரிமலைக் கருகில் 1510ஆம் சேனைகள் தங்கித் தாக்க, அந்தக் கங்கராயன் பயந்து காவிரி நதியோரத்திலிருந்த கங்கடு அசி என்னும் மடுவில் விழுந்து இறந்துபோக, அந்தச் சிவசமுத்திரக் கோட்டை கிருஷ்ணதேவராயலு வசமாகியது. பிறகு 1513ஆம் உம்மத்தூரும் ஸ்வாதீனமாக, கிருஷ்ணதேவராயலு ஸ்ரீரங்கப் பட்டிணத்திற்குப் போய், அங்கிருந்த காம்பகவுடர் வீரப்பகவுடர்களை வசமாக்கி, அவர்களுடைய விசாரணையில் சில நாடுகளையும், சிக்கராயர் வசத்தில் சில நாடுகளையும் கொடுத்தும், அடுத்திருந்த அநேக பாளையக்காரர்களை ஜயித்தும், அவர்களிடம் கப்பம் பெற்றுக்கொண்டும், கர்னாடக தேசத்தில் சுமார் கோடிரூபாய் தமக்குக் கப்பமாகக் கட்டும்படியாகச் செய்துகொண்டும், அக்கர்னாடக ஸமஸ்தானத்துக்கு ஸ்ரீரங்கப்பட்டணத்தைப் பிரதான ஸ்தலமாக நியமித்தும், அவ்விடத்தில் சங்கு சக்கரங்களாதி விருதுகளுடன் கூடிய கிருஷ்ணதேவராய துவஜஸ்தம்பத்தையும் ஸ்தாபித்ததாகப் பாரிஜாதாபஹரண கிரந்தத்தில் எழுதப்பட்டிருக்கின்றது.

அப்படித் துவஜஸ்தம்பம் ஸ்தாபித்தபிறகு கிருஷ்ண தேவராயலு குடகு மலையாளம் கவுட முதலான நாடுகளின் மீது படையெடுத்துப்போய் ஜயித்து, அந்த அரசர்களுக்குக் கப்பங்களை நியமித்தும், பிறகு சேர, சோழ, பாண்டிய நாடுகளின்மீதுபடையெடுத்துப்போய் ஜயித்து துவஜஸ்தம்பங்களை நாட்டிவிட்டுத் தமது விஜயநகரத்துக்குத் திரும்பி வந்தும், வடதேசங்களின்மீது படை எடுக்கத்தக்க குண்டு துப்பாக்கி பீரங்கிமருந்து முதலானவைகளைச் சித்தப்படுத்திக்கொண்டும், களிங்கதேச ராஜனைத் தம் வசமாக்கிக் கொண்டும், தமது மஹாமந்திரியாகிய திம்மரசு அப்பாஜியையும், சேனாதிபதியாகிய சதாசிவராயலையும் கூட்டிக் கொண்டு மத்திய இந்தியா மார்க்கமாக கூர்ச்சரம் அல்லது குஜராத்து தேசத்தையும், பிறகு மகததேசத்தையும், இடைக்கிடை இருந்த மகமதியர்களையும் ஜயித்துக்கொண்டும், விஜயநகரத்துக்குத் திரும்பிவந்து தமது பிரபுத்துவத்தை ஹிமசேது பரியந்தம் பிரபலமாகப் புகழும்படி நடத்திவந்தார்.

கிருஷ்ணதேவராயலு 1515ஹு கொண்ட வீட்டி சீமையை ஜயித்த விநோத சரித்திரத்தைப் புருஷார்த்த பிரதானியில் வெளியான கொண்ட வீட்டி தண்டகவியில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நாட்டைச் சுற்றிலும் எழுபத்திரண்டு பாளையக்காரர்கள் சூழ்ந்திருந்தபடியாலும், அது மகா அரணான மலைக்கோட்டையாக இருந்தபடியாலும், அப்படி அரணான கோட்டையைத் தாக்கிப் பிடிப்பது கஷ்டசாத்தியமென்றிருக்கையில், அதை அறிந்த ஒரு பிராமணர் தந்திர உபாயத்தால் அப்பாளையக்காரர்களாகிய ரெட்டிகளை வசப்படுத்தியும், அவர்களால் அங்கு ஒரு பெரிய கோயிலைக் கட்டிவைக்கச் செய்தும், அதில் கோபிநாதசுவாமி விக்கிரகத்தைப் பிரதிஷ்டிப்பிக்கச் செய்வித்தும், அந்தப் பிரதிஷ்டை உத்ஸவத்தைப் பார்ப்பதற்கு அந்தப் பாளையக்காரர்களைத் தருவித்தும், அவர்களைத் தந்திர மந்திர மருந்து விருந்துகளால் சாகும்படி செய்ய, அச்சமயமறிந்து கிருஷ்ணதேவராயலு அக்கோட்டையின்மீது படை எடுத்துப்போய், மூன்றுமாத காலம் முற்றுகைப்போட்டுப் பிடித்து அங்குச் சாலுவதிம்மரசை அதிகாரியாக நியமித்துவிட்டும், பிறகு பெல்லமு கொண்ட, நாகார்ஜுன் கொண்ட, விநுகொண்ட என்

ரூதி மலைக்கோட்டைகளையும், அவைகளை அடுத்த பதி னைன்கு நாடுகளையும் கைப்பற்றிக்கொண்டார். அப்படிச் செய்ததனால் உதயகிரிக் கடுத்த கைதெபல்லி, அத்தங்கி சீமைக்கடியில் பரசூர், கேசானுபல்லே, யம்மலமந்த, மாதலம் தொண்டபி, கோசரி, ஜ௵வ்வலகல்லு, பாகால, சிங்கனபல்லே, தும்மலபேட்ட, கரேடு முதலான கிராமங் கள் வசமாயின. அவைகளில் வினுகொண்ட, பெல்லமு கொண்ட, நாகார்ச்சுனகொண்ட என்ற கோட்டைகளைச் சில மாகாணங்களாக வகுத்து, மற்றப் பத்து கிராமங்களைக் கர்னாடக தேசத்தோடு சேர்த்துவிட்டார். பிறகு கொண்ட கொட்டூரு அல்லது இப்போது பரஹாம்பூர் பட்டணம் என்று வழங்கிவரும் நாட்டின் அதிபதியாகிய சுகராஜ௵ பஹ௵பலேந்திரனோடு சுமார் பன்னிரண்டு வருஷகாலமாக அடிக்கடி சண்டைசெய்து ஜயம் பெற்றார்.

(மநு சரித்திரம், பாரிஜாதாபஹாரணம், ஆமுக்தமா லியாதி கிரந்தங்களின்படி, அக்காலத்தில் (1520 ௵) கிரு ஷ்ணதேவராயலு ஸ்வாதீனத்தில் உதயகிரி, வினுகொண்ட, கொண்டவீடு, பெல்லமுகொண்ட, வெலுபுகொண்ட, ஜல்லி பல்லி, அநந்தகிரி, கம்பம், பெஜவாடா, இராஜமஹேந் திரத்திற் கருகிலிருக்கும் கனககிரி, கவுதுமி, பொட்டூரு, மடிமாலு, வட்டாதி, கடகபுரி முதலான மலைக்கோட்டைக ளிருந்தனவாகத் தெரியவருகிறது. 1510௵ போர்த்து கேயர், ஈசுப் அதில்ஷாவிட மிருந்த கோவா பட்டணத் தைப் பிடித்துக்கொண்டார்கள். இந்தவிஷயத்தில் கிருஷ்ண தேவராயலும் போர்த்துக்கேயருக்கு உதவியாக ஹோனு வாரிலிருந்த தமது வீரனாகிய திம்மய்யாவைத் தளகர் த்தனாக அனுப்பி, பாட்டகால் என்னும் இடத்தில் ஓர் பண்டகசாலையைக் கட்டிக்கொள்ள விடை கொடுத்தார். அன்றுமுதல் அப்போர்த்துகேயர் கிருஷ்ண தேவராய லுக்குச் சிநேகிதர்களாகி, பீஜபூர் சண்டையில் உதவிசெய் தார்கள். 1510-ம் வருஷம் முடிவில் ஈசுப் அதில்ஷா இறந்து போக, அவர் பட்டத்திற்கு இஸ்மெயில் அதில்ஷா வந்தார். 1520-ம் வருஷம் மேமாதம் 19-ம் தேதி சனிக்கிழமை கிரு ஷ்ணதேவராயலு பீஜப்பூரைச் சார்ந்த ரெய்ச்சூர் முட்கல் கோட்டைகளைப் பிரமாத சண்டைசெய்து பிடித்துக்கொண் டார். இக்கோட்டைகளுக்காக இஸ்மெயில் அதில்ஷா என் பவர் 1522-ம் வருஷம் கிருஷ்ணதேவராயலோடு பிரபல

சண்டைசெய்தும் ஜயமடையவில்லை. அந்த யுத்தகாலத்தில் கிருஷ்ணதேவராயவிடத்தில் 3,26,000 குதிரைகளும், 536 யானைகளும், 7,03,000 பதாதிகளும், அவர்களுக்குத் தண்ணீர் கொண்டுவர 12,000 பக்காளிகளும், 20,000 தாசிகளும் இருந்தனவாக ஓர் போர்த்துக்கேய சரித்திரக்காரர் எழுதியிருக்கின்றார். அந்த யுத்தத்திற்குப் பிறகு பீஜப்பூரார் கிருஷ்ணதேவராயலுடைய ஆயுள்காலம் வரையில் யுத்தத்துக்கு வரவேயில்லை. மைசூர்த் தலைவனான உம்மத்தூர் அதிபதியும் பிறகு படை எடுக்கவில்லை. கிருஷ்ணதேவர் குடகு நாட்டின் வழியாக மலையாளத்துக்குப் போகப் பிரயத்தனப்படுகையில், மலையாள அரசன் சரணடைந்து கேட்ட கப்பம் கட்டிவந்தான். பிறகு பாண்டியநாட்டை ஜயித்து, அதற்கு நாகம நாயுடைப் பிரதிநிதியாக நியமித்து ஆண்டுவரச்செய்தார். தமது தகப்பனார் கட்டுவித்த செஞ்சி, வேலூர், சந்திரகிரியில் கட்டிய சிறு கோட்டைகளைப் பெரிய கோட்டைகளாகக் கட்டுவித்தார். பிறகு தெலுங்க ராஜ்யத்தை நாடிச்சென்று நெல்லூரில் உதயகிரி அரசனை ஜயித்துக்கொண்டு, அப்போது நைஜாம் சுவாதீனத்திலிருக்கும் பெரும்பாகத்தைப் பிடித்துக்கொண்டார். ஒரிசா கஜபதியோடு சண்டைசெய்து கிருஷ்ணா கோதாவரி ஜில்லாக்களைப் பிடித்துக்கொண்டதோடு கஜபதி குமாரத்தியை விவாஹம்செய்து ஜயசீலரானார்.

இப்படியே கிருஷ்ணதேவராயலு அநேக மகமதிய அரசர்களிடத்திலும், இந்து அரசர்களிடத்திலும் பிரபல சண்டைகள் செய்து ஜயம்பெற்று வந்தார். கிருஷ்ணதேவராயலுடைய பெயரைக் கேட்டமாத்திரத்தில் எப்படிப்பட்ட வீரதீரரும் திடுக்கிட்டு நடுங்கி அவர் விரும்பிய கப்பத்தைக் கட்டிக்கொண்டு வந்தார்கள்.

கிருஷ்ணதேவராயலு இப்படிக் கேவலம் சுத்தவீரனாக இருந்து பகைவர்மீது படையெடுத்துப்போய்ச் சண்டை செய்து ஜயாதிபதி என்று கியாதி பெற்றுவரும் குணமே சிறந்த குணமாக உடையவரல்லர்.

அவர் தமது நிழலுக்குள் வாழ்ந்துவந்த குடிகளுடைய இகபரசுகங்களையும் நாடி அவர்கட்கு இன்றியமையாத சாதனங்களையும் செய்துவந்தார். அச்சாதனங்களில் சில இன்றளவும் அவருடைய தருமராஜ்ய பரிபாலனத்தைப் பற்றிப் புகழ்ந்து கொண்டாடுகின்றன.

கிருஷ்ணதேவராயனுடைய 22 வருஷ ஆளுகைக்குள் குடிகளுக்கு உண்டான நன்மைகள் இவ்வள வவ்வளவல்ல. தமது ஸமஸ்தான நீதி விசாரணைகளைத் தமது பிரதிநிதி தண்டநாய டவர்களைக்கொண்டு நடத்திவந்தாலும், கேவலம் உத்தியோகஸ்தர்களை நம்பினால் குடிகளுக்குக் கஷ்டம் வருமென்று எண்ணி, இராஜகீய ஒவ்வொரு காரியத்தையும் பெரும்பாலும் தாமே நேரில் கண்டும் கேட்டும் நீதி செலுத்திவந்தார். முதலில் குடியானவர்களுடைய நன்மையைக் கருதி துங்கபத்திரா நதியின்மேல் 1521-ம் வருஷம் பெரிய அணையைக் கட்டி, அதின் ஜலத்தை விஜயநகரத்துக்குள் திருப்பினார். அதைப்பார்த்து அவருடைய உதவி மந்திரியார் மத்தண்ணன் என்பவர் அந்தத் துங்கபத்ராவிலிருந்து ஏழு வாய்க்கால்களை வெட்டுவித்தார். மைசூருக்கும், தார்வாருக்கும் இடையிலுள்ள பெரியகுளம் அவர் காலத்தில்தான் வெட்டப்பட்டது. குடித்தனக்காரருக்கு வேண்டிய ஜலபாசன வேலைகளை அப்போதைக் கப்போது சித்தப்படுத்திக்கொண்டும், குடிகள் கிணறுகளை வெட்டவும், ஆடுமாடுகளை வாங்கவும், பூமிகளைத் திருத்திச் சீர்படுத்தவும், வேளாண்மைக்கு வேண்டிய கருவிகள் விதை முதலானவைகளை வாங்கவும், குறைந்த வட்டியில் கடன் கொடுத்துவந்தார். நிலக்காரர்களுக்குள் எல்லைத் தகரார்கள் உண்டாகாதபடி ரெவினியூ சர்வே டிபார்டுமெண்டை நியமித்துத் தக்கபடி அளந்து கொடுத்துவந்த விவரத்தையும், ஒவ்வொரு கிராமத்திலும் சரியான ரெவினியூ ரிகார்டுகள் வைப்பித்து நீதி செய்து வந்ததாகவும், கனரா தேசத்தில் ஒரு ரிகார்டு ஸர் தாமஸ் மன்றோ பிரபுவுக்கு அகப்பட்டிருக்கிறது. இப்போது இந்தச் சென்னை ராஜதானியில் இருக்கும் இரயத்துவாரி வழக்கம் அல்லது குடியானவர்களே நேராகக் கவர்ன்மெண்டாருக்குக் கந்தாயத்தைச் செலுத்தும் வழக்கம் முதல் முதல் கிருஷ்ண தேவராயனு காலத்தில்தான் ஆரம்பிக்கப்பட்டது. அப்போது குடிகள் கட்டிய கந்தாயம் அதிக கொஞ்சமாக இருந்ததோடு, அந்தக் குறைந்த கந்தாயத்தையும், நிலத்தில் விளைவான மகசூலிலும், சில விடங்களில் ரொக்கமாகவும், சில விடங்களில் ஆறில் ஒரு பாகமாகவும், குடியானவர்களின் காலஸ்திதிக்குத் தக்கபடி வருத்தாமல் வசூல் செய்து வந்தார்கள். அந்தத் தரும நியமனத்தை மகமதிய மன்னர்கள் மாற்றி அதிக கந்தாய மாக்கிவிட்டார்கள். அன்றியும், காடுகளையும் புறம்

போக்குப் பூமிகளையும் குடிகளுக்கு இலவசமாகக் கொடுத்து அவ்விடங்களில் நஞ்செய் நந்தவனம், புஞ்செய் தோட்டங்களைச் செய்யச்செய்து திரவிய சகாயமும் செய்து வந்ததுடன், உள்நாட்டுக் கைத்தொழில் வர்த்தகம் விருத்தியாகக் கைத்தொழிலாளிகளுக்கும், வர்த்தகர்களுக்கும் வேண்டிய திரவிய சகாயமும் வசதிகளும் செய்துவந்தார்.

அவர் காலத்தில் பர்மா இலங்கை முதலான விடங்களிலிருந்து வரும் பலவித இரத்தினங்கள் விற்பனைக்காக அந்த விஜயநகரத்தாருக்குத்தான் கொண்டுவரப்பட்டன. ஹாரமிஸ், கெயிலி முதலான விடங்களிலிருந்து நல்ல ஆணிமுத்துகள் அங்கு வந்துகொண்டிருந்தன. சீனதேசத்திலிருந்தும், ஐரோப்பா - அலக்சாந்திரியா - டமாஸ்கஸ் முதலான விடங்களிலிருந்தும், பட்டுத் தினுசுகளும், சாயத் துணிகளும் ஏராளமாகக் கொண்டுவரப்பட்டு விற்பனை செய்யப்பட்டன. அன்றியும்,

கிருஷ்ணதேவராயலுக்குக் கீழ்சமுத்திரக் கரையோரத்திலிருந்த பெரிய பட்டணங்கள் ஸ்வாதீனத்திலிருந்தபடியால், அவ்விடங்களுக்குச் சீனு, பைகோ, இலங்கை, அரேபியா, மலபார், சுமேத்திரா, ஜவா முதலான விடங்களிலிருந்து பல பொருள்களுடைய கப்பல்கள் சதா வந்து வியாபாரம் செய்துகொண்டிருந்தன. அப்படிப் பல நாடுகளிலிருந்து ஏராளமான சரக்குகளும் ஜனங்களும் கிருஷ்ணதேவராயலு ஸமஸ்தானத்துக்கு வந்துகொண்டிருந்ததில் ஜனத்தொகை அதிகரித்தபடியால், அக்காலதேச வர்த்தமானங்களைத் தழுவி, கர்னாடக சமஸ்தானத்தில் ஹுப்ளி, பெங்களூர், பல்லாரி, சிக்கபால்லாபுரம் முதலான அநேக பட்டணங்களைப் புதிதாக நியமித்ததோடு எதிரி ராஜாக்கள் தலையெடுத்து வராதபடி அநேக பலமான கோட்டைகளையும் கட்டுவித்தார். இம்மட்டோ! ஸமஸ்தானத்தில் பலவிடங்களில் பாடசாலைகளையும், தருமசாலைகளையும், வைத்தியசாலைகளையும், பிராமணர்களுக்கு அநேக அக்கிரஹாரங்களையும், வழிப்போக்கர்களுக்குக் குளங்கள், கிணறுகள், சாலைகள், சத்திரங்கள் முதலானவைகளையும் நியமித்திருந்ததுடன், தாம் பட்டாபிஷேகம் பெற்றுக்கொண்டதின் மேல் ஹம்பியில் ஒரு பெரிய கோபுரத்தைக் கட்டிவைத்த தன்றியில், பின்னும் பலவிடங்களில் அநேக கோயில் கோபுரங்களையும் கட்டி அவைகளுக்கு மானியதர்மங்களைச் செய்

வித்தும் வந்தார். விஜயநகரத்தை அடுத்த கிருஷ்ணபுரத்தில் 1513-ம் வருஷம் பிரபலமான கிருஷ்ணருடைய கோயிலையும் கட்டுவித்ததன்றியில், காஞ்சீபுரத்திலிருக்கும் வரதராஜசுவாமி பெரியகோயில் கோபுரங்களையும் கட்டுவித்ததாகச் சாசன மிருக்கிறது.

அவர் ஸ்ரீரங்கம், திருப்பதி முதலான விடங்களில் கோயில்களுக்குச் செய்த தருமங்கள் அநந்தம். இப்படிப் பலவிதத்திலும் புகழ்பெற்று வந்ததனால் விஜயநகர ஸமஸ்தானம் உலகத்தில் ஒப்பற்ற ஸமஸ்தானமாகி அந்த விஜயநகரத்தில் சகல ஜாதியாரும் சகல மதஸ்தர்களும், சகல வித்துவான்களும், கவிகளும், சிற்பிகளும், சாஸ்திரிகளும், பூரண சுகமாகவும் சுதந்திரமாகவும் வாழ்ந்து வந்ததாக கி.பி.1514-ம்வருஷம்போர்த்துக்கல்லிலிருந்து யாத்திரைக்காரராக வந்து பார்த்த (Barbosa) பார்போசா என்பவர் தமது யாத்திரைச் சரித்திரத்தில் எழுதியிருக்கிறார். கிருஷ்ணதேவராயலுடைய பிரபுத்துவம் இப்படிப் பலவிதத்திலும் பிரபலமானதற்குக் காரணமென்ன என்று யோசிக்கையில், "உலகம் அறிவுடையார் மாட்டு" என்னும் முன்னோர் வாக்கியத்தின்படி, கிருஷ்ணதேவராயலு சமுகத்தில் சதா சமஸ்கிருத பண்டிதர்களும், அஷ்டகஜங்களென்னும் எட்டு ஆந்திர வித்துவான்களும் அடிக்கடி சந்தித்து, இராயலுக்கு இராஜ தந்திராதி அறிவை யூட்டியும், அவரையும் ஓர் சிறந்த ஆந்திர கவியாக்கியும் வந்ததனால், அவர் காலத்தில் ஆந்திரபாஷை சீர்திருத்தப்பட்டுப் பூரணம் பெற்றது.

---

## ஆந்திரபாஷைக்குத் தெலுங்கு பாஷை என்கிற பெயர்வந்த காரணம்.

1. 'அல்லசானி பெத்தன்ன'—இவர் ஆதுபாட்டி சீமையில் பிறந்து, தெலுங்கு பாஷைக்குப் பிதாவைப்போன்ற பிரபல வித்துவான். இவர் மநு சரித்திரம், ராமஸ்தவராஜியம், அத்வைதாநந்தம் முதலான கிரந்தங்களை இயற்றினவர்.

2. 'பட்டுமூர்த்தி'—இவர் பட்டபள்ளியில் குடியிருந்தவர். வசுசரித்திரம், நரசபூபாலிய முதலான கிரந்தங்களை இயற்றியவர்.

3. 'முக்குதிம்மன்ன' — கன்னவசகுடி, பாரிஜாதாபஹரண முதலிய கிரந்தங்களை இயற்றியவர்.

4. 'பிங்கள சூரன்ன'—இவர் ராகவபாண்டிய முதலான கிரந்தங்களை இயற்றியவர்.

5. தெனுலிவாசியாகிய 'தெனுலி ராமலிங்கம்' - இவர் பாண்டுரங்க மஹாத்மிய முதலான கிரந்தங்களை இயற்றியவர்.

6. சிடெட் டிஸ்ட்ரிக்டு 'இராமபத்திர கவி' — இவர் இராமபத்திய முதலான கிரந்தங்களை இயற்றியவர்.

7. 'சங்கரகவி'—இவர் பார்வதிமாலாதி கிரந்தங்களை இயற்றியவர்.

8. 'தூர்ச்சடி' — இவர் அநேக வேடிக்கையான கவிகளைப் பாடியவர்.

இப்படிப்பட்ட அஷ்டகவிச் சிங்கங்களால் சூழப்பட்டிருந்த கிருஷ்ணதேவராயனும் மகாவித்வானென்று சொல்லவும் வேண்டுமோ. ஆகவே அந்தக் கிருஷ்ணதேவராயனும் (1) ஆமுக்தமால்ய, (2) சகலகதாசார சாரசங்கிரகம், (3) சிங்கார ரசமஞ்சரி முதலான கிரந்தங்களை இயற்றினார். அன்றியும் விநோதமாகக் காலம் போக்க அச்சமஸ்தானத்தில் சந்திரகிரியில் பிறந்ததாகச் சொல்லும் 'தென்னலிராமகிருஷ்ண'னு மிருந்து வெகு அபூர்வமான யுக்திகளால் இராயலைச் சந்தோஷமடையச் செய்துவந்தார். அந்தத் தென்னலிராம கிருஷ்ணருடைய வேடிக்கையான கதைகளில் சில தெலுங்கு தமிழ்ப் பாஷைகளிலும் அச்சிட்டிருப்பதுடன், மிஸ்டர் பண்டித நடேச சாஸ்திரிகள் ஆங்கில பாஷையிலும் அச்சிட்டிருக்கின்றனர். இவர்களன்றியில அக்காலத்தில் விஜயநகர சமஸ்தானம் களிங்கம், வேகி, விதர்ப்பம், கோலகுண்ட, பஸ்சமோத்திர கண்டம், தக்ஷண கண்டங்களாக விருந்தபடியால் ஒவ்வொரு கண்டத்திலும் சில சிறந்த ஆந்திர வித்துவான்க ளிருந்தார்கள்.

| அந்தக் கவிகளுடைய பெயரும். | இயற்றிய நூல்களும். |
|---|---|
| **களிங்கநாட்டில்** | |
| அடிதம் சூரகவி | கவிரஞ்சனம் |
| பூசபாடி தம்மபூபால்கவி | ஸ்ரீகிருஷ்ண விஜயம் |

## வேகிதேசத்தில்

கூசிமஞ்சி திம்மகவி — ரசிகஜன மனோபிராமம்
எனுக லக்ஷணகவி — இராம விலாசம்

## விதர்ப்பநாட்டில்

ரெண்டுரி ரங்கராஜரி — பாநுமதிபுராணியம்
கனுபர்த்த அப்பயகவி—கவிராஜ மனோரஞ்சனி

## பஸ்சிமோத்திரகண்டத்தில்

வெங்கடாசாரி—சமத்காரமஞ்சரி
சாரங்கதம்மயம்—வைஜயந்திவிலாசம்

## தக்ஷணகண்டத்தில்

சேஷமுவெங்கடபதி—தாராசங்கம்
பண்டிபெத்தகிருஷ்ணகவி—பில்ஹணீயமு
சேமகூருவேங்கடராஜகவி—விஜயவிலாசம்

என்று இக்கிரந்தங்களை இயற்றினார்கள்.

அந்தக் கவிகளன்றியில் அவர்களுக்கு முன்னும் பின்னும் சில ஆந்திரகவிகள் இச் சமஸ்தானத்தாரால் பிரபலமானார்கள். அவர்களில் சிலரைமாத்திரம் இவ்விடம் காட்டுவது அவசியமென்று எண்ணி எழுதுகிறோம்:—

1. நன்னையபட்டர்—இவர் கி. பி. 1130ஸூ ஆந்திரர் காலத்தில் கண்ணுவரிஷி எழுதிய இலக்கணத்தைச் சுருக்கி எழுதியதுடன், தெலுங்கு பாரதத்திலும் அதிக பாகம் பாடியவர். திக்கன்னசோமயாஜி அப்பாரதத்தை பூரணமாக்கினர்.

2. அப்பகவி—இவர் 12-ம் நூற்றாண்டில் பிரகாசித்த மஹா இலக்கண வித்துவான். இவரும் அநேக கிரந்தங்களை இயற்றினர். கிருஷ்ணதேவராயனுக்குப் பிறகு வித்துவான்களைத் தக்கபடி ஆதரிப்பவர் இல்லை. ஆயினும் அவர் காலத்திற்குப் பிறகு,

3. வேமலவாடா பீமன்ன—இவர் பதின்மூன்றாவது நூற்றாண்டி லிருந்தவராகத் தெரியவருகிறது. இவர் ஆந்திரசந்தம் என்னும் யாப்பிலக்கணத்தை இயற்றினர்.

4. கோதுலபதி குருமன்ன—இவர் விஜயநகரத்து ஓர் ஆந்திரராஜர் காலத்தில் சுமார் 200 வருஷங்களுக்கு முன் இருந்தவர். இவர், மிருத்தியுஞ்ஜய விலாசத்தைக் கவியாகப்

பாடியவர். இந்நாடகத்தில் மரணத்தை வெல்லும் விதத்தைப்பற்றியும், சிவபெருமான் : பார்வதியாரையும் கங்கையையும் விவாகம் செய்த சங்கதிகளும் அடங்கியிருக்கின்றன.

5. அதிதம் சூரன்ன—இவர் சுமார் 180 வருஷங்களுக்கு முன்னிருந்தவர். இவர் ஆந்திரசேஷம் என்னும் கிரந்தத்தை இயற்றினர்.

6. இரக்கபள்ளி சோமப்ப—இவர் 150 வருஷங்களுக்கு முன்னிருந்தவர். இவர் அனகபல்லி இராஜா சமுக வித்வானகவிருந்து ஸ்ரீ கிருஷ்ண ருக்மணி புத்திரனுகிய பிரத்யும்ன ஜனதமாகிய 'பிரத்தியும்னோதயம்' என்னும் நாடகத்தையும், மேற்படி பிரத்தியும்னனுக்கு உருக்மாவதியை விவாகம் செய்த கதையை "உருக்மாவதி பரிணயம்" என்னும் கிரந்தத்தையும் இயற்றினர்.

7. பிரயாகம் நல்ல காமேசுவரம்—இவர் சுமார் 130 வருஷங்களுக்கு முன்னிருந்தவர். இவர் 'கல்பன கல்பமஞ்சரி' என்னும் ஸ்ரீ ராமருடைய பாட்டனர் அஜமஹாராஜர் இந்துமதி என்னும் ஸ்திரீயை விவாஹம் செய்த சங்கதியைக் காவியமாகவும், ஸ்ரீ கிருஷ்ணர் நிர்வாணமாக நின்ற இடைச்சியரின் சீலையைத் திருடியதை 'கோபிகஜனமுக்த வஸ்திராபஹரணபாலனே பாலலீலாசுதாலஹரி' என்னும் காவியத்தையும், ஸ்ரீ கிருஷ்ணர் சுதந்தாவை விவாஹம் செய்ததைச் 'சுதந்த கலியாணம்' என்கிற கிரந்தத்தையும் இயற்றினர்.

8. சத்துராஜ லக்ஷுமிநரசு—இவர் சுமார் 130 வருஷங்களுக்கு முன்னிருந்தவர். சிவ பார்வதி கலியாணமாகிய ஈசுவரிபரிணயம், பன்னராதி, பீமகோதண்டராம சதகம், விசேஷாந்திரம் என்னும் அகராதி ஆகிய கிரந்தங்களை இயற்றினர்.

9. காகரபார்த்தி பத்துருடு—இவர் நூறு வருஷங்களுக்கு முன்னிருந்தவர். இவர் சிறந்த அஷ்டாவதானி.

10. குருதந்தி நரசிம்மடு—இவர் நூறு வருஷங்களுக்கு முன்னிருந்தவர். இவர் சிறந்த அஷ்டாவதானி.

11. நடமிண்டி சர்வமங்களேஸ்வர சாஸ்திரி—இவர் விஜயநகர சமஸ்தான சமஸ்கிருத வித்துவான். தெலுங்கிலும் நிபுணர். இவரைக் காளிதாச அவதாரமென்று சொல்

னுவார்கள். இவர் சம்ஸ்கிருத நாமாவளி என்கிற இலக்கண கிரந்தத்தை இயற்றினர்.

12. ஜயகிரீ சராபகவி—இவரும் நூறு வருஷங்களுக்கு முன்னிருந்தவர். இவர் யாதவராஜ பாண்டவியம் என்னும் கிரந்தத்தை இயற்றினர். இந்தக் கிரந்தத்தின் ஒவ்வொரு வாக்கியமும் கிருஷ்ணர், இராமர், பாண்டவர் என்னும் மூவர் பொருளடங்கி யிருக்கின்றது.

13. பரவஸ்து ஸ்ரீநிவாசாசாரி—இவரும் நூறு வருஷங்களுக்கு முன்னிருந்தவர். இவர் சமஸ்கிருதத்திலும் வித்துவான். இவர், விஸ்வகுண தரிசனம் என்னும் கிரந்தத்தை ஸமஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்த்தார்.

14. பரவஸ்து இரங்காசாரி—இவர் மேற்படியார் குமாரர். இவர் ஸப்தார்த்த சரவணம் என்னும் அகராதியை எழுதினவர்.

15. ஸ்ரீ பாதசாலமய்ய சாஸ்திரி—இவர் கவுசலியோபாக்கியானம், இராமகிருஷ்ணோபாக்கியானம் என்னும் கிரந்தங்களை இயற்றினர்.

16. இவர்களைத் தவிர சில்லரைக் கவிகள் ஜனித்து நவீன நாடகங்களை எழுதினர்கள்.

17. வேமன்ன—இவர் 16-வது நூற்றாண்டில் பிரகாசித்த வேதாந்த வித்துவான். இவர் சுமார் 2000 பத்தியங்களில் இத்தேசத்து துர்மதாசாரங்களைக் கண்டித்து நீதிகளையும் வேதாந்த விஷயமானவைகளையும் பாடினர். இவர் இப்படி வேதாந்தியானதற்குப் பலர் பல கதைகள் சொல்லுவதுண்டு. இவர் கொண்டவிடுவில் பிறந்தவர்.

---

இராவ்பஹதூர் வீரேசலிங்கம் பந்துலு அவர்களுடைய ஆந்திரகவிகள் சரித்திர கிரந்தத்தில் அடியில் கண்ட வித்வான்கள் ஆந்திர தேசங்களில் பிரகாசித்ததாகப் பதிப்பித்திருக்கிறார்.

## முதல்பாகம்-பூர்வ கவிகள்.

(1) நன்னையப்பட்டு, (2) திக்கன்ன சோமயாஜி, (3) எராபிரகாடரா, (4) பாவலூரி மல்லன்ன, (5) இரங்கநாதடு, (6) பாஷ்கரடு, (7) கர்சிவிடுடனு விட்டலராஜு, (8) அதர்வணசாரியடு, (9) கேதன்ன, (10) மாரன்ன, (11) புதுல

குருசி சோமநாதடு, (12) மஞ்சன்ன, (13) வின்னகோட்ட பெத்தன்ன, (14) மடகிசிரசன்ன, (15) வேமலவாடி பீம கவி, (16) நரசன்ன சோமுடு, (17) ஸ்ரீநாதடு, (18) பம்மர போதராஜு, (19) ஆந்தமாரியடு, (20) ஜசயகவி, (21) பில்லவமாரி பிரிவீரன்ன, (22) பிரவுடகவி மல்லன்ன என்பவர்களாம்.

---

## இரண்டாம் பாகம்-மத்தியகாலத்துக் கவிகள்.



(1) நந்திமல்லைய்ய, (2) கண்டிசிங்கய்ய, (3) கிருஷ்ண தேவராயலு, (4) அல்லசானி பெத்தன்ன, (5) தூர்ஜடகவி, (6) தாளபாக சின்னன்ன, (7) சங்குல நரசிம்மகவி, (8) வென்னலகண்டி சூரன்ன, (9) சாசீசுவரப்ப, (10) பாஷ்காரபந்துலு (11) பைசராஜு, (12) வெங்கடநாதகவி, (13) தூபகுண்ட நாராயணகவி, (14) ஐயலராஜு, (15) இராம பத்ருடு, (16) வெல்லநகததம்பட்டு, (17) கும்மரமல்லடு, (18) பீடுபர்த்தி சோமநாபுடு, (19) பீடுபாதிபசுவகவி, (20) கோடி சிவராமய்யர், (21) குமாரதூர்ஜடி, (22) தோனூரி கோனேரிகவி, (23) பிங்கள சூரியநாராயடு, (24) அத்தங்கி கங்காதரகவி, (25) பொன்னுகண்டி தெலுகன்ன, (26) இராமராஜ பூஷணுடு, (27) மல்லரெட்டி, (28) இராமராஜு ரங்கப்பராஜு, (29) மட்ல அநந்த பூபாலடு, (30) ஏரான்ன, (31) கவுரனவீரசரபகவி, (32) தெனுல ராமகிருஷ்ணடு, (33) தாளபாக திருவேங்கடநாதடு, (34) இராயசம் வேங்கடபதி, (35) தரிகொப்பமல்லன்ன, (36) சரிகொண்டராமன்ன, (37) சாரங்க தம்பய்ய, (38) துரகாராமகவி, (39) சென்னமராஜு, (40) தென்னுலி அன்னய்ய, (41) சுவரமு சின்னநாராயண நாயடு, (42) தராம வெங்கடபதி, (43) சித்திரகவி பெத்தன்ன, (44) யாதவாமாதியகவி, (45) கஞ்சாலித்திரய்ய, (46) ஏலகூசி பாலசிரவதி, (47) முத்தராஜு, (48) சாமன்ன, (49) லிங்கமுகுண்ட ராமகவி, (50) லிங்கமுகுண்டராமன்ன, (51) ரெண்டூரி ரங்கராஜு, (52) சிம்ஹாத்ரி வெங்கடாசாரியடு, (53) சோமகூர வெங்கடகவி, (54) இராஜலிங்ககவி, (55) சித்திரகவி மணகவி, (56) அந்துகுல வெங்கய்ய, (57) காகனுரி அப்பகவி என்பவர்களாம்.

---

## மூன்றும் பாகம்
## பிற்காலத்து (தற்காலத்து) கவிகள்.

(1) ஹரிபட்டு, (2) ஒட்டலூரி பெத்தப்ப, (3) காகமானிமூர்த்தி, (4) வேணுதூரப்பல்லி சிவநாதகவி, (5) நாதனகவி சூரன்ன, (6) சமுகவெங்கட கிருஷ்ணப்பநாயடு, (7) நேரசநூரி வெங்கடபதி, (8) பயிடிமாரி வெங்கடபதி, (9) வெலகபூடி கிருஷ்ணய்ய, (10) சேஷமு வெங்கடபதி, (11) கூரம்பசி திம்மகவி, (12) வக்கலிங்க வீரபத்ரகவி, (13) கூசிம்சிஜக்கவி, (14) கோவில் கோபராஜு, (15) கோடிசால சீனிவாசகவி, (16) தீவிரமன்னகவி, (17) கோடூரி வெங்கடாசலகவி, (18) ஏனுகலக்ஷ்மணகவி, (19) நெல்லூரி வீரராகவகவி, (20) நஞ்சராஜு, (21) கோடி வெங்கநாராயடு, (22) அடிதமுசூரகவி, (23) மங்களகிரி அநந்தகவி, (24) கணபர்த்த அப்பநாமகநாயடு, (25) கணுதபெத்தன்ன சோமயாஜி, (26) கந்துருத்தி வெங்கடாசலகவி, (27) ஈதுருபல்லிபவானிசங்கரடு, (28) தூர்கடி வெங்கடராயடு, (29) அஜ்ரபுபேரயலிங்கமு, (30) மரிகண்டி சிக்கராஜராயடு, (31) முத்துபள்ளி கங்கடிபாபராஜு, (32) புஷ்பகிரி திம்மன்ன, (33) தாணிதேவலராமமந்திரி, (34) சித்திரகவி நாராயணகவி, (35) கஸ்தூரி ரங்ககவி, (36) ஆலூரிகுப்பன்னகவி, (37) பிங்களி எல்லநாராயடு, (38) இந்தகுண்ட கோதண்டராமகவி, (39) கைபமாயன்ன, (40) வெலிதன்ன வெங்கடபதி, (41) பட்டமெட்ட சரஸ்வதி சோமயாஜி, (42) அவடூரி பிச்சய்ய, (43) தக்கன்பாடி லங்கான்ன, (44) குடிபாடி கோதண்டபாணி, (45) மல்லவரபமாலேசுவரடு, (46) சிந்தலபள்ளி வீரராகவுடு, (47) ரேய்சரல்மாதவராயடு, (48) அணியாதி கணபதிதேவுடு, (49) வெங்கடாசாரியடு, (50) லிங்ககலிங்ககவி, (51) அங்கர நரசிம்மகவி, (52) சிரிபிரகடதர்மநாமாதியுடு, (53) கணபுவரபுவெங்கடகவி, (54) வேமுகண்டிதததோஜி, (55) காமனூரி கிருஷ்ணய்ய, (56) வெங்கடாசாரியடு, (57) மல்லம்பல்லி நாகபூஷணகவி, (58) சித்திரகவி சிங்காரராயடு, (59) செருனூர் வெங்கடாசாரியடு, (60) போசிராஜு வீரன்ன, (61) ஐயலுராஜு, (62) நாராயணகவி, (63) கவினதூர்வட்டிகவி, (64) கொத்தலம் மிருததஞ்சயடு, (65) திருமலபுக்கபட்டணபு வெங்கடாசார்யடு, (66) கடிகளேனி

ராமய்யகவி, (67) கொண்டமடுகு புருஷோத்தமடு, (68) நாகனூரிசேஷனாரதியடு, (69) வீண்முலக்ஷ்மீபதி, (70) வேமனூர்யுலசங்கமேசுவராராதியடு, (71) மூலபாதபுச்சன்ன சாஸ்திரி, (72) பாலவேகரிகதரீபதி, (73) மாதவமந்திரி, (74) கோபாலநரசிங்கய்ய, (75) கூசிகல்லு வெங்கடரமணகவி, (76) கிருஷ்ணகவி, (77) வல்லூரி நரசிம்மகவி, (78) கொந்தேடி சூரன்ன, (79) பேதபூடி கிருஷ்ணய, (80) பசுவராஜு நரேந்திருடு, (81) மாசவரபுபாபநாமாதியடு, (82) கிருஷ்ணராஜகவி, (83) சொன்னேரி சோபனுதிரி, (84) கோடீசுவருடு, (85) செல்லப்பிள்ளை நரசகவி, (86) ஐயகாரி வீரபத்திரகவி, (87) கட்டுபிரபுவு, (88) முப்பிரால சுப்புராயகவி, (89) பிரயாதகாமேசுவரகவி, (90) அநந்தநாராயடு, (91) பைரவிகவி, (92) அநுமகுந்திர ஏகய்ய, (93) தாமரபல்லி திம்மய்ய, (94) நாரண் சூரண்ண, (95) போடூரி பெத்தராமத்யுடு, (96) இராமாஜுலெ கொண்டபட்டு, (97) மாரயகவி, (98) பரசுராமபந்துலு லிங்கமூர்த்தி, (99) பரசுராமபந்துலு ராமமூர்த்தி, (100) வேகிபாடி கொண்டநாரயடு, (101) வாசுதேவயோகி, (102) கானலநரசிம்மகவி, (103) போஜன்ன, (104) பெனுபல்ல பாபனுத்முயுடு, (105) சதுவுல சோமலிங்கய்ய, (106) ஸ்ரீதரமல்லே வெங்கடசாமி, (107) ஓரகண்டி சோமசேகரகவி, (108) முடும்பி வெங்கடேசராயலு, (109) அக்கனபல்லி நரசிம்ஹகவி, (110) பைடிபாடி வெங்கட நரசிம்ஹகவி, (111) கொடிகலபூடி வெங்கட கிருஷ்ணகவி, (112) கரகரபர்தி கிருஷ்ணகவி, (113) கிருஷ்ணய்ய, (114) தரிகொண்ட வெங்கமம்ம, (115) பிண்டிபுரோலி லக்ஷ்மண்ண, (116) அல்லமராஜு ராமகிருஷ்ணடு, (117) கரகரபர்தபுச்சிபாதகவி, (118) சிஷ்டு கிருஷ்ணமூர்த்திகவி, (119) மந்திரபிரகாடசூரிய பிரகாசகவி, (120) பக்கி வெங்கட நரசய்ய, (121) வேலபுரி வெங்கடேசுவரகவி, (122) திருமல புக்கபட்டண திருமல சின்ன தாதாசார்யலு, (123) மாடபூசி நரசிம்மாசாரியலு, (124) கோடமராஜு நாகய்ய, (125) கராலபாடி ரங்கம்மப்பகவி, (126) தியாகராஜ முதலி, (127) ஓகிராலபாடித கவி, (128) நடகுதுடிராமனகவி, (129) மாடபூசி வெங்கடாசாரி, (130) பெனுமச்சி பச்சிராஜு, (131) மண்டபாக பார்வதீசுவரடு, (132) சதியாலு பாகவதகவி, (133) குருவராஜகவி, (134) அல்லமராஜு சுப்பிரமணியகவி, (135) கோபிநாதமு வெங்கடகவி, (136) குடார வெங்கடதாசுகவி,

(137). வீரேசலிங்கடு முதலானவர்களே. அவர்களுடைய சரித்திரங்களை அறிய விரும்புவோர் அந்த ஆந்திரகவி சரித்திர புத்தகத்தைப் படித்துப் பார்க்கலாம்.

---

## கிருஷ்ணதேவராயலு இயற்றிய கிரந்தங்களைப் பற்றி விஷ்ணுசித்தீயமென்னும் கிரந்தத்தில் அடியிற் கண்டபடி சொல்லப்பட்டிருக்கிறது.

సీ॥ వలికితి ద్విపదోపమల జాతిసంపెక్కరసికు లౌనన మదాలస చరిత్ర॥ భావధ్వనివ్యంగసేవధి గాఁగఁ జెప్పితివిసత్యా వధూప్రీణ నంబు। శ్రుతిపురాణోప సంహిత లేర్చికూర్చిత సకల కథా సారసంగ్రహంబు శ్రోత్రఘుచ్ఛటలు విచ్చుగరచించితి సూక్తినై పుణిజ్ఞాన చింతామణికృతి॥ మఱియు రసమంజరి ముఖ్య మధుర కావ్యరచన మెప్పించుకొంటి గీర్వాణభాష। నంధ్రభాషయసా ధ్యం బెయందు నొక్కకృతి విని ర్మింపు మింకమాకుభయముగాఁగ॥

இந்த பத்தியத்தினல் அவருடைய கல்வியின்பெருமை பிரத்தியக்ஷமாகும். அன்றியும் கிருஷ்ணதேவராயலுக்கு முன்னிருந்த ஆந்திரகவிகள் பாரத இராமாயண பாகவதாதி புராதன கிரந்தங்களை மொழிபெயர்ப்பாக ஆந்திர பாஷையில் இயற்றினர்களே யன்றி நவீன கிரந்தங்களை இயற்றினர்களில்லை. ஆகவே, காலதேச வர்த்தமானங்களைத் தழுவி சமயோசிதமாக நூதன (Novel) கிரந்தங்களை இயற்ற கிருஷ்ணதேவராயலு தூண்டுகோலாக இருந்து அநேக புது புத்தகங்களை எழுதிப் பிரபலமாக்குவித்தார். அன்று முதல் ஆந்திரபாஷைக்கு உத்சாகமும், உயர்வும் அதிகரித்தன.

இராயலு ஸம்ஸ்தானம் தக்ஷணத்தில் சந்திரகிரியில் ஸ்தாபித்தபோது பெத்தன்ன, போதன்ன, கவிசூடப்ப முதலான வித்துவான்கள் பிரகாசித்த தன்றியில், பிறகு ஆங்காங்குச் சில சில்லரை வித்துவான்கள் ஜனித்துப் பிரகாசித்தார்கள். கி. பி. 1806ஆ தெலுங்கு பாஷைக்கு முதல் முதல் அச்செழுத்து உண்டாக்கப்பட்டு 1835ஆ சில காவி

யங்கள் அச்சிடப்பட்டன. தேட்டையான இந்தத் தெலு ங்கு பாஷையைப் பெரும்பான்மையான வடநாடு நாயடு மார்கள் இப்போதும் வழங்கிவருகின்றனர்.

இப்படி கிருஷ்ணதேவராயனும் கல்வியறிவினுல் சிற ந்த சக்கரவர்த்தியாக விருந்ததன்றியில் தெய்வ பக்தி யினுலும், அநேக தரும கைங்கரியங்களினுலும் சிறந்து விளங்கியதாகச் சரித்திரம் சொல்லுகிறது. அதாவது, அவ ரது அரண்மனையில் சதா 108 சதுர்வேத பாடகர்களான பிராம்மண பண்டிதர்கள் சதாவேதங்களைப்பாடிக்கொண்டே யிருப்பர். அவரது வீட்டு இராச புரோஹிதர்களான அர ங்கநாத தீக்ஷிதர், சிவதீக்ஷிதர் அடிக்கடி அரண்மனையில் வாஜபேயாதி யாகங்களைச் செய்துகொண்டிருப்பர்.

கிருஷ்ணதேவராயனு வைணவ மதசித்தாந்த விசிஷ் டாத்துவைதி யாகையால், அவர் ஸமஸ்தானத்து மகா வித்துவ தத்துவ சிகாமணியாகிய 'வேதாந்த தேசிகர்' என்னும் தாதாசாரியர் ராயனுக்குக் குலகுருவாக விருந்து சடகோபர் முதலானவர்களுடைய பாசுரங்களைத் தத்துவா ர்த்த ரீதியாகப் போதித்துவந்தார். இம்மட்டோ, இந்து மதத்துக்கு விரோதிகளான கிறிஸ்து மகமதாதிமதாசாரியர் களும் ஸமஸ்தானத்தின் அங்கத்தினராக விருந்து அவரவர் கள் மதங்களி லிருக்கும் சத்தியங்களைச் சொல்லிவந்தார் கள். ஆகவே, அக்காலத்தில் விஜயநகரம் சகல மதஸ்தர்க ளும் சமரசமாக வாழ்ந்துவரும் சுதந்திர ஸமஸ்தானமாகப் பிரகாசித்தது.

---

## கிருஷ்ணதேவராயனுடைய ஸமஸ்தான வைபவம்.

ஐரோப்பாகண்டத்தைச்சார்ந்தபோர்த்துக்கல் தேசத் தில் வர்த்தகயாத்திரிகராகிய டாமிங்கோஸ்பியேய்சு என்பவர் (Damingos Paes) கி. பி. 1520-1522 ஸு ஸ்ரீகிருஷ்ண தேவராயனுடைய சமஸ்தான வைபவங்களை நேரில் வந்து பார்த்துத் தமது அதிகாரிக்கு எழுதியனுப்பிய சரித்திர த்தை மிஸ்டர் சுவேல் அவர்கள் அந்தச் சரித்திரத்தின் மூலஸ்தலிகிதத்தைச் சம்பாதித்து ஆங்கிலபாஷையில் மொழி

பெயர்த்துத் தமது பர்காட்டன் எம்பயர் என்னும் விஜய நகரசரித்திரம் 236 முதல் 290-ம் பக்கங்களில் பதிப்பித்திருக்கிற சங்கதிகளின் சங்கிரகம் பின்வருமாறு:—

ஸ்ரீநரசிம்மராயலுடைய ஸமஸ்தானம் வடக்கே பீஜப்பூர், கோலகுண்டாமுதல் தெற்கே கன்னியாகுமரிவரையில் ப்ரவி இருந்ததாகவும், அதற்கு மூன்று பக்கங்களிலும் அகண்ட சமுத்திரங்களும், அச்சமுத்திரக்கரை யோரங்களில் வர்த்தக வாணிபஞ் செய்ய வசதியான கரைதுறைப் பட்டணங்க ளிருந்ததாகவும், உள் நாடுகளில் பிரம்மாண்ட பருவத பிரதேசங்களும், மலைகளும், குன்றுகளும், காடுகளும், நதிகளும், குளங்களும் வசதியாக அமைந்து இருந்ததனால், நஞ்சைப் புஞ்சை முதலான நாலாவகைத் தானியங்களும், தென்னை, கமுகு, மா, பலா முதலான தோப்புகளும் பயிர் செய்யப்பட்டும், அவற்றின் பலனைப் பிரதி வெள்ளிக்கிழமைதோறும்கூடும் சந்தைகளுக்குக் கொண்டுவரப்பட்டு விற்பனை செய்துவிடுவதாகவும், அந்தச் சந்தைக் கருகிலிருந்த ஒரு பெரிய ஆலமரத்தடியில்தான் விற்பனைக்குக் கொண்டுவந்த 320 குதிரைகளை நிறுத்தி இருந்ததாகவும், இந்த ஸமஸ்தானத்தில் வதிந்துவரும் ஆண், பெண் பிராம்மணர்கள் அதிக அழகுள்ளவர்களாகவும், படித்தவர்களாகவும், பக்தி பூஜைகளில் அதிக சிரத்தை யுள்ளவர்களாகவும், பொதுவாகப் பிரஜைகள் பகை மன்னருடைய பயமற்றுத் தைரியமாயும் அந்நியோன்னியமாயும், சந்தோஷமாயும் இருந்ததாகவும்,

தாம் விஜயநகரத்துக்குப் போகும்போது இடையில் தார்வாரில் தங்கிப் போனதாகவும் அங்கு அழகான கோயில்களும், அவைகளுக்குள் அநேக விக்கிரகங்கள் வைத்துப் பிரதிதினமும் பிராம்மணர்கள் வந்து பூஜை செய்துகொண்டும், தாசிப்பெண்கள் அழகான ஆடையாபரணங்களை அணிந்துவந்து ஆடிப்பாடியதாகவும், அந்த தார்வாருக்கு 18லீக் தூரத்திலுள்ள விஜயநகரத்துக்குப் போனதில், அது 24லீக் விஸ்தீரண முள்ளதாயும், நான்கு பக்கங்களிலும் மலைகளால் சூழப்பட்டதாயும், அப்படிச் சூழப்பட்டிருந்த விஜய நகரக்கோட்டை கருங்கற்களால் கட்டப்பட்ட உன்னதமான மதில் சுவர்களாலும், கோயில் கோபுரங்களாலும் கட்டப்பட்டும், வாசல் வழியன்றி வேறுவழிக ளற்றதாயும், நகரைச்சுற்றி இருக்கும் மலைகளுக்கும் கோட்டையின் மதில்

சுவர்களுக்கும் இடையில் அநேக குளங்களும் வாய்க்கால்களும் வெட்டப்பட்டிருப்பதாயும், அவற்றின் தண்ணீரால் தென்னை மா முதலான தோப்புகளையும், புஷ்பத் தோட்டங்களையும், சிங்கார உத்தியானவனங்களையு முடையதாயுமிருப்பதாகவும்,

இந்த ஸமஸ்தானத்தில் பெரும்பான்மையோர் பிராம்மணர்களாயும், ஸமஸ்தானத்தின் பெரும்பான்மையான காரியங்களை அவர்கள் நடத்தி வருவதாகவும்,

இந்த விஜயநகர் இராஜன் மத்தியதர உயரமும், அழகமைந்த உருவமும், சற்று ஸ்தூலித்த தேகமும், அம்மைத் தழும்புள்ள முகமும், தரும சிந்தையு முடையவராய் இருந்ததாகவும்,

இவர் அதிகாரத்திற்குள் அநேக ராஜராஜர்கள் அடங்கி ஆண்டுவந்ததாயும், 12 மனைவிகளை உடையவராயும் அவர்களில் 3 பெயர் பட்டமஹிஷிகளாயும், அவர்களிற் சிலர் ஒரிசா, ஸ்ரீரங்கபட்டணம் முதலான மன்னர்களுடைய குமாரத்திகளாயும், ஒருவர் தனது பாலிய சிநேகிதியாயும் இருந்ததாகவும்; அந்த மனைவிகள் ஒவ்வொருவரும் தனித் தனியான வீடுவாசல்களையும், வேலைக்காரிகளையும் உடையவர்களாயும்; பொன்மயமாயும் இரத்தினமயமாயும் ஜுவலிக்கும் ஆடையாபரணங்களை உடையவர்களாயும், அவர்களைப் பாதுகாக்க அநேக கோஷாப் பெண்டுகளும், கோஜாக்களும் உருவியகத்தி கட்டாரிகளோடு நின்று காவல் காத்து வந்ததாயும், இராஜஸ்திரீகள் வெளியில் போக்கு வரத்து செய்ய அநேக அழகான மூடுப்பல்லக்குகளும், அவைகளைத் தூக்கிக்கொண்டுபோக பெண் சிவிகைகளும், பெண் மெய்காப்பாளரும் நியமிக்கப்பட்டிருக்கிறதாகவும், இந்த அந்தப்புர ஸ்திரீகளைப் பாதுகாக்க 12,000 பெண் வேலைக்காரிக ளிருந்ததாயும், அவர்களிற் சிலர் மல்யுத்தம், வில்யுத்தம், சங்கீதம், சட்ட நியாயங்கள் தெரிந்தவர்களாயும் இருந்து பெண்டுகளுக்குள் நடக்கும் சண்டை சச்சரவுகளை விசாரித்து நீதிசெலுத்தி வந்ததாகவும்,

கிருஷ்ணதேவராயலு பெரும்பாலும் அரண்மனையில் வீரதீரர்களாலும், கோஜாக்களாலும் சூழப்பட்டிருந்ததாயும், தாம் விரும்பிய மனைவியைப்பற்றி முதலில் கோஜாக்களிடம் சொல்லியனுப்ப, அவர்கள் போய் கோஷா பெண்

காவல்காரிகளிடம் சொல்ல, விரும்பிய மனைவி மூடுபல்லக்கில் வருவதாகவும், இராயலு வெண்பட்டில் ரோஜாமுதலான சரிகைச் சித்திர வேலைப்பாடுகளுள்ள வேஷ்டிகளைத் தரிக்கிறவராயும், கழுத்தில் வஜ்ஜிர வைடூரிய மணிமாலைகளைத் தரிக்கிறவராயும், அவரைத் தரிசிக்கவரும் பிரபுக்களையும் மற்றவர்களையும் தக்கமரியாதையுடன் கௌரவப்படுத்தி உபசரித்து அவர்கள் திரும்பிப் போகும்போது, சால்வை முதலான துணிமணிகளைக் கொடுத்து மரியாதை செய்து அனுப்புவதாகவும், இராயலு அதிக விடியற்காலத்தில் எழுந்திருந்து குஸ்திமுதலான கசரத்துக்களைக் கட்டாயமாகச் செய்துவந்ததாகவும், இவர் சொந்த உபயோகத்துக்கு 800 யானைகளையும், 500 குதிரைகளையும் வைத்திருப்பதாகவும், அவர் வருமானத்திற்கே கணக்குச் சொல்லிமுடியாதென்றும் எழுதியிருப்பதோடு, ஸமஸ்தானத்தில் நடக்கும் தசாராபண்டிகையில் மல்லகஜட்டிகள் செய்யும் குஸ்திகளையும், தாசிகளாடும் அழகையும், பூஜைகளைச் செய்யும் விநோதங்களைப்பற்றியும், டவுனி வைபவங்களைப்பற்றியும் பிரபலமாக எழுதியிருக்கிறார்.

---

## கிருஷ்ணதேவராயலுடைய விஜயத்தைப்பற்றி மநுசரித்திரம், பாரிஜாதபஹரணத்தில் பின்வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது.

చ॥ మునుకొని కొండవీటి కడ మూడతరుద్రుడు కృష్ణనందను
న్మనసిజునిన్ జయించెనదిమానుషమే నరసేంద్రు కృష్ణరాయ
నృపతికొండవీటి కడనాహవ భూమిఁబ్రతాపరుద్ర నందనుఁడగు
వీరభద్రుఁ గరుణామతిఁగాచె జగత్ప్రసిద్ధిగన్ ॥

చ॥ నెలకొని కృష్ణరాయధరణీ విభుఁడుత్కలభూమి పాలుతోఁగల
న నెదిర్చిహస్తికరకాండతతుల్ల సకంపుబాముఁలై మలసినచోటఁ
గూడినసమగ్ర యశోవసనంబు గప్పితావలపఁగఁజేసె భూపతిని
వశ్యవిధిజ్ఞుఁడు గాలనేర్పునన్ ॥

సీ॥ ఉదయాద్రివేగ నద్యుద్ధతి సాధించె వినుకొండ మాటమాత్రన
హరించెఁ। గూటము ల్సెదరం గొండవీడగలించె బెల్లముకొండ
యచ్చెల్లఁజెఱచె। వేలుపుకొండను ద్వృత్తి భంగముసేసె జల్లి

వల్లెసమగ్రశక్తి గూర్చెగిమక మీఁదననంత। గిరిక్రిందఁబడఁజేసె
గంబంబుమెట్లు గ్రక్కున గదల్చె బలనికాయము కాలుముట్టుల
నడంచు। గటకము సునింకననుచు నుత్కలమహీశుఁడనుదినమ్ము ను
వెఱచునెవ్వనికి నతఁడు। రాజమాత్రుండె శ్రీకృష్ణరాయవిభుఁడు
పారిజాతాపహరణము ॥

இன்னும் பல கிரந்தங்களில் பலவிதமாகப் புகழ்ந்து எழுதிப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

இப்படி கிருஷ்ணதேவராயலு ஜகதீசுவரனுடைய அருளுக்கும், ஜனசமூக க்ஷேமத்துக்கும் பாடுபட்டு உழைத்து வந்த சங்கதிகளுக்கு, அவரால்செய்த தருமகைங்கரிய சிலா சாஸனங்களே போதுமான நிதர்சனங்களாகும். அவைகளில் சில எவையெனில்,

| சாசனங்களிருக்கும் இடங்கள். | சாலிவாகன சகம். |
|---|---|
| பல்லாரி-விஜயநகரம். | 1432வது |
| கிருஷ்ணாஜில்லா-நிடுமுக்கலகம். | |
| கர்னூல், பால்காலம். | |
| பல்லாரி, பாடபுரம். | |
| காஞ்சீபுரம், செங்கற்பட்டு. | 1433 ,, |
| பல்லாரி, காஞ்சீபுரம். | 1434 , |
| ,, ,, | 1435 ,, |
| விஜயநகரம். | 1436 ,, |
| பல்லாரி, சங்கலபுரம். | |
| காஞ்சீ, செங்கற்பட்டு. | 1437 ,, |
| பெல்காம், ஊரகல். | 1438 ,, |
| நெல்லூர் ஷ. | |
| கிருஷ்ணா, அவராவதி. | |
| பல்லாரி, விஜயநகரம். | 1439 ,, |
| தென்னாற்காடு, திருவண்ணாமலை. | |
| கிருஷ்ணா, மோடூர். | |
| காஞ்சீ, செங்கற்பட்டு, மதுரை. | |
| அஹோபிலம், ஸ்ரீசைலம், கொம்மூர். | |
| செங்கற்பட்டு, எருமபட்டிபாளையம். | 1440 ,, |
| கிருஷ்ணா, பெஜவாடா. | 1441 ,, |
| பட்டல்வீடு, சேஜரல், பாபட்லா. | 1441 ,, |
| ஸ்ரீகாகுலம், காகாளி, கொண்ட. | |

| | |
|---|---|
| காலூரு, துர்க்கி, திருக்கழுக்குன்றம், | |
| காஞ்சீபுரம், காதம்பாக்கம். | |
| நெல்லூரு, காலுவாய், கட்டாலி. | 1442 ,, |
| தென் ஆற்காடு, அன்னியானூர். | 1443 ,, |
| மதுரை, பழனி, திண்டுக்கல். | |
| விஜயநகரம், மங்களபுரி, பல்லாரி, கிருஷ்ணு. | |
| நெல்லூர், கர்லதின்னே, வல்லபாபுரம், கந்துகூரி, கடப்ப, அநந்தசபாகரம், நெல்லூர், நீரூர். | 1444 ,, |
| மைசூர், சிவமொக்க, சிமோகா. | 1445 ,, |
| ஈகலபாடு, நெல்லூர், நிரஞ்சனூர். | 1446 ,, |
| கிருஷ்ணு, கொண்டவீடு. | 1447 ,, |
| கடப்ப, கத்தரகாண்டே. | 1448 ,, |
| குடிஹல்லி, பல்லாரி. | 1449 ,, |
| காஞ்சீ, செங்கல்பட்டு, விரிஞ்சிபுரம். | 1450 ,, |
| காஞ்சி, கர்னூல், பாலேம், விஜயபுரம். | 1452 ,, |
| திருவண்ணுமலை, ரங்கராயணி. | 1453 ,, |

கொண்ட, சங்கலபுரம், பட்டூர், கண்டபல்லி, கி-பி 1509-1510, 1512-13, 1513-14, 1514-15 வருஷங்கள் விரிஞ்சிபுரம் கோயில் 1513-ல் 20-செப்டம்பர், சங்கலபுரம் 1522-23, 1527-28, 1529, ஏப்ரல் 23-ல் உக்ர நரசிம்மர்கோயிலிலும், சிம்மாசலம் முதலான விடங்களிலும் இருக்கின்றன.

இன்னும் இவ்விதமாகவே தென்னுடுகளில் அனேக தரும சாசனங்கள் கண்டிருக்கின்றன. இத்தியாதி சாசனங்களினுல் கிருஷ்ணதேவராயனுடைய சமஸ்தானம் வடக்கே ஓரிசாமுதல், தெற்கே இலங்கைவரையில்பரந்திருந்ததாகத் தெரியவருகிறது. இப்படி விஸ்தீரணத்தில் பாவி இருந்த இவ்வளவு பெரிய சமஸ்தானத்தை ஒரே ராயனு விஜயநகரத்திலிருந்து ஆளுகை செய்வது கஷ்ட சாத்தியமெனக் கண்டு, தம் ஸமஸ்தானத்தைப் பல கண்டங்களாக வகுத்தும், அவைகளைத் தமது "வைசிராய்" என்னும் பிரதிநிதிகளைத் தமது பந்துக்களின் சில பிரபுக்கள் குடும்பத்திலிருந்து தெரிந்தெடுத்து அவர்களுக்கு நாயடுகாரு என்னும் பட்டங்கள் கொடுத்தனுப்பி ஆண்டுவரச்செய்தார்.

அதற்குத் திருஷ்டாந்தமாகக் கர்னுடக தேசத்தை ஜயித்த பிறகு அதைப் பல கண்டங்களாக வகுத்த விதங்க

ளாவன:—கர்னடக தேசத்தின்மீது 100,000 பதாதிகளை அனுப்பி ஜயித்தபோது, அந்தப் பதாதிகளுக்குத் தளகர்த்தர்களாக (1) விஜயப்ப நாயடு, (2) துப்பாக்கி கிருஷ்ணப்ப நாயடு, (3) விஜயராகவலு நாயடு, வேங்கடபதி நாயடு இருந்தார்கள். அவர்களில் செஞ்சி, நெல்லூர் முதலான கொல்லிடம்வரையிலுள்ள மாகாணங்களைத் துப்பாக்கி கிருஷ்ணப்ப நாயடுக்கும், காவிரி நதியாயும் திரிசிராப்பள்ளி தஞ்சைமுதலான மாகாணங்களை விஜயராகவலு நாயடுக்கும், அதற்குத்தெற்கே இருக்கும்மாகாணங்களை வேங்கடபதி நாயடுக்கும், மதுரை பாண்டியனுக்கு உதவியாக அனுப்பிய நாகம நாயடு திருப்தியாக நடவாமையால் அந்தப் பாண்டியன் மதுரையை விசுவநாத நாயடுக்கும் கொடுத்து, தமது பிரதிநிதிகளாக ஆண்டுவரச் செய்வித்தார்.

---

## ஸ்ரீகிருஷ்ண தேவராயலுடைய மரணம்.

கிருஷ்ணதேவராயலு சுமார் ஐந்தரையடி உயரமும், அதற்குத்தக்க சற்று ஸ்தூலித்த தேகமும், பொன்னிறமான வருணமும், உயர்ந்தும் அகன்ற முகாரவிந்தமும், வில்லுகளைப் போன்ற புருவங்களும், கூர்மையுள்ள மூக்கும், பெருத்து மருண்ட கண்களும், துடிப்புள்ள மீசையும், நீண்ட கரசரணுதிகளும் உடையவராகவும்; அவருக்கு அம்மைவார்த்த தழும்புகள் ஆங்காங்கு முகத்திலிருக்கினும் சுந்தர ரூபமும், காருண்யம் கிருபை நிறைந்த முகார விலக்ஷண முடையவரென்றும், பின்னும் பலவிதமாக வருணித்திருக்கிறார்கள். கிருஷ்ண தேவராயலு பிரதிதினமும் விடியற்காலம் நான்கு மணிக்குமுன் படுக்கையை விட்டெழுந்து அரைப்படி எண்ணெயைக் குடித்துவிட்டுத் தமது தாலிம்கானவில் கஸரத், தண்டால், கர்லா, குஸ்தி முதலானவைகளைச் செய்தும், தாம் குடித்த எண்ணெய் வேர்வையாக வெளியில்வந்தபிறகு குதிரையேறிக் குடிகள் படுக்கையைவிட் டெழாததற்கு முன்பே நகரைச் சுற்றி நல்ல சவாரிசெய்து அரண்மனைக்கு வந்தும்; பிராமணர்களால் சுத்த ஸ்நானம் செய்துகொண்டும், சந்தியாவந்தனம் பூஜை முதலானவைகளை முடித்துக்கொண்டும், தமது கொலு மண்டபத்துக்கு வந்து சர்க்கார் காரியங்களை நட-

த்திவருவது வழக்கம். அந்தக் கிருஷ்ண தேவராயலுக்கு 12 மனைவிகளிருந்தாலும், முக்கியமானவர்கள் துக்காம்பா அல்லது திருமலா தேவியும், சின்னதேவி அல்லது அன்ன பூரணி என்னும் இருவரே பட்டமஹிஷிகளாக இருந்தனர்கள். அவர்களுக்கு இலக்ஷுமாம்பா அல்லது மங்கை வள்ளி, மோஹனாங்கி என்னும் இரண்டு குமாரத்திகள் பிறக்க, அவர்களுக்குச் சங்கீத முதலான சாஸ்திரங்களைக் கற்பித்தும், சாலுக்கிய குடும்பத்தைச் சார்ந்த விஜ்ஜல ராஜன் சந்ததிகளான பெஜவாடா அதிபதிகளாகிய இராம ராஜு, திருமலராஜு என்பவர்களுக்கு முறையே விவாஹம்செய்வித்து அவர்களை ஸமஸ்தான தளகர்த்தர்களாக்கிக் கொண்டார்.

கிருஷ்ணதேவராயலுடைய ஏகபுத்திரனைச் சாலுவதிம்மரசின் குமாரன் மேற்படி திம்மரசினுடையவும் அவர் சகோதரனுடையவும் சதிமோச தந்திரத்தினால் பாஷாணங் கொடுத்துக் கொன்றுவிட, அது சங்கதியை விசாரிக்கும் போது உண்மையாகி, ஸமஸ்தான நீதிபரிபாலகர் அம்மூவரையும் கொலைசெய்து விடவேண்டுமென்று தீர்மானிக்கவே, திம்மரசு ஸமஸ்தானத்துக்கு இதுவரையில் செய்த பேருதவி முதலானவைகளைக்கருதியும், அக்கொலைக் குற்றத்திலிருந்து நீக்கியும், அம்மூவர்களுடைய நேத்திரங்களைப் பிடுங்கிவிடுவதே போதுமென்று தீர்மானித்துவிட்டார்கள். கிருஷ்ணதேவராயலு இவ்விதமாக 21 ௵ பிரபலமாக ஆண்டு கடைசியில் சம்பவித்த இந்த வியாகூலத்தினாலும், புத்திரசோகத்தினாலும் தமது 42-ம் வயதாகிய சகாப்தம் 1442-க்கு கி. பி. 1531 ௵ நவம்பர் மாதம் 19-ந்தேதி பரமபதமடைய, அவரது சகோதரர் அச்சுத தேவராயலு பட்டாபிஷேகம் பெற்றார்.

கிருஷ்ணதேவராயலு பரமபத
காலத்தைப்பற்றிப் பின்வருகிற கவியால்
காணலாம்.

ఉ॥ భోరన యాచక ప్రతతి భూరివిపద్దశ నొందుచుండగా। నారయ
శాలివాహన శకాబ్దము లద్రియుగాబ్ధి సోమలద్ధారణ । వత్సరం
బున నిదాఘదినంబున జ్యేష్ఠశుద్ధషష్ఠిరవి వాసరంబున । నృసిం
హుని కృష్ణుడు చేరెస్వర్గముల్ । ద్వారకనున్న కృష్ణు డవతా
రసమాప్తము నొందుకైపడిన్.

சந்திரவம்ச க்ஷத்திரிய ஆந்திர பலிஜவார்களுக்குள் இந்தக்
கிருஷ்ண தேவராயலைவிடச் சிறந்தவர்கள் யாரும்
கிடையா. இவரே அக்குடும்பத்தின்
சிரோமணியாம்.

## அப்பாஜி-திம்மரசு சரித்திரம்.

திம்மரசு நியோகிபிராம்மணகுலத்திற்பிறந்தவர். சிறு பிராயத்தில் பெற்றோரை இழந்துவிட்டபடியால், திருப்பதிக்குச் சமீபத்தில் ஆடுமாடுகளை மேய்த்து ஜீவனம் செய்தும், பிறகு குத்திக்குப்போய்க் கிழிந்த துணிகளை தைத்தும், பிறகு சந்திரகிரியில் சுயம்பாகி வேலைசெய்தும், பிறகு பெனுகொண்டாவில் சந்திரங் கணக்குப் பிள்ளையாக அமர்ந்தும், அச்சத்திரக்காரருடைய தாம்பூலப் பையைத் தூக்கிக் கொண்டு கிராமம்கிராமமாகத் திரிந்தும், பிறகு தமது இயற்கையறிவினால் புத்திபிரகாசிதராகி, சிலபல பெரிய உத்தியோகங்களில் அமர்ந்து கடைசியில் நரபதி ஸமஸ்தானத்தில் மந்திரியானார்.

அவர் திருப்பதி அடிவாரத்தில் மரத்தடியில் மெய்மறந்து தூங்கும்போது ஒருநாகப்பாம்பு வந்துபடமெடுத்து அவரது தலைமீது அருணன் வெயில் படாதபடி ஆட, அவ்வழிபோன பட்டுமூர்த்தியார் பார்த்து வந்து எழுப்பி இனி சிறிது காலத்தில் நீ பிரபலஸ்திதியை அடைவாய் என்று சொல்லிப்போயினாராம். சாலுவ என்றால் அவர் பிறந்த கிராமத்தின் பெயர். ஆகவே அவருக்குச் சாலுவ திம்மரசு அப்பாஜி என்று பெயராகியது.

---

## அச்சுத தேவராயலு ஸமஸ்தானம்.

கி. பி. 1530ஹ முதல் 1542ஹ வரை.

வியாதிபெற்ற கிருஷ்ணதேவராயனுக்கு வியாதி அதிகரிக்கவே, இனிப் பிழையோமென் றெண்ணித் தமது சமஸ்தானத்தை நடத்தவேண்டிய விதங்களைப்பற்றி உயில் சாசனத்தைத் தயார் செய்துவைத்தார்.

அதில் தமது 18 மாத வயதுள்ள ஆண் சந்ததியைச் சாலுவ திம்மரசினால் பாஷாணமிட்டுக் கொல்லப்பட்டபடி

யால், தமது சமஸ்தானத்தைத் தமது தம்பியாராகிய அச்சுத தேவராயலுக்குத் தரவேண்டுமென்றும், அவருக்கு உதவியாக மற்றொரு சகோதரராகிய இரங்கதேவராயலும், தமது தமயனார் குமாரராகிய புஜபல்ராயலும், தமது மருமகனார்களாகிய திருமலைராயலு, இராமராஜா முதலானவர்கள் உதவிசெய்யவேண்டுமென்றும், தெரிவித்திருந்தார். ஆகவே அக்காலத்தில் சந்திரகிரி கோட்டையிலிருந்த அச்சுத தேவராயலை வருவித்து, 1530-ம் வருஷம் ஆகஸ்டுமாதம் 15-ந் தேதி திங்கட்கிழமை தினம் அவர் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டுச் செங்கோலைக் கைக்கொண்டார். அவர் சிங்காசனமேறி அரசுசெய்துவந்த வைபவத்தைப்பற்றி அக்காலத்தில் அந்த விஜய நகரத்திலிருந்த (Fernao Nuniz) பெர்னோ நூனிஸ் என்னும் போர்த்துகேசிய யாத்திரிகர் அந்தச் சமஸ்தான வைபவத்தை நேரில் பார்த்து சரித்திரமெழுதி இருக்கிறார். அதன் கருத்தாவது:—

இந்த அச்சுத தேவராயலுடைய அரண்மனையில் உபயோகித்துவந்த அண்டா பானை பாத்திராதி தட்டு முட்டு சாமான்களெல்லாம் பொன் வெள்ளியினால் செய்யப்பட்டிருந்தன வென்றும், அவரும் அவர் மனைவியர்களும் படுத்துக்கொள்ளும் அறைகள் இரும்புத் தகட்டுச் சுவர்களால் அமைக்கப்பட்டும், அவற்றின்மேல் சித்திராலங்காரவேலைப்பாடுகளுள்ள பொன்தகடுகளால் மூடப்பட்டிருந்தனவென்றும், அவர் படுக்கும் கட்டில்களும் பொன் நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தனவென்றும், அவருடைய சமயல்வேலைக்கு மாத்திரம் 200 சுயம்பாகிகளும், அவர்களுக்கு மேல் விசாரணைசெய்ய 8 கர்த்தர்களும், அச்சுத தேவராயலுடைய சொந்த சாப்பாட்டை மாத்திரம் தயார் செய்ய 10 பெண்டுகளும், அவர்களுக்கு அதிகாரிகளாக ஐந்து மேல் விசாரணைக்காரரு மிருந்தார்கள் என்றும், அச்சுதராயலு தங்கத்தகடுகளால் செய்யப்பட்ட முக்காலியின் மேல்சாதம் முதலானவைகளைவைத்துச் சாப்பிடுவது வழக்கமென்றும், அரண்மனையில் மற்றச் சாதாரண வேலைக்காரர் 600 பெயரும், பெண் வேலைக்காரிகள் 4000 பெயர்களிருந்து சகல காரியங்களைப் பார்த்து வந்தார்களென்றும், அந்த 4000 பெண்கள் சமயல் வேலை, சங்கீதம், சாஸ்திர முதலானவைகளைக் கற்றுத் தெளிந்தும், அவர்களில் அநேகர் அரண்மனைப்பெண்டுகளுக்குள் நடக்கும் சண்டை சச்சரவு

களை விசாரணை செய்து நீதி செலுத்தியும், தினசரி சரித்திரம் எழுதி வந்தார்களாம்.

மேலும் அரண்மனையின் கோயில் பூஜை புரோஹிதாதி விஷயங்களுக்காக 3000 பிராம்மண சிப்பந்திகளிருந்தார்களென்றும், இராயலுடைய சொந்த உபயோகத்திற்காக 200 பசுக்களும், 200 குதிரைகளும், 400 யானைகளும் இருந்தனவென்றும், இராயரவர்கள் வெளியில் புறப்படும்போது முதலில் 200 குதிரை வீரர்களும், அவர்களுக்குப் பிறகு 100 யானை வீரர்களும், அவர்களுக்குப் பிறகு 2000 ஆயுத பாணிகளும், அவர்களுக்குப் பிறகு இராயரவர்களும் அவருடைய பட்ட மஹிஷிகளும் பொன் தகடுகளால் மூடப்பட்ட பல்லக்குகளில் வரவும், அவர்களுக்குப் பிறகு 700 குதிரை வீரர்களும், 400 யானை வீரர்களும், 150 நெய் தீவட்டிகளும், பவனிக்கு முன்னும் பின்னும் நகபத், நகார் முதலான 18 வாத்திய கோஷங்களுடன் வருவதைப் பார்ப்பவருக்கே ஆச்சரியத்தை உண்டாக்குமென்றும், அவரது சொந்த யானை குதிரைகளுக்கு மாத்திரம் முறையே 1000, 2000 வராகன் செலவாகிறதென்றும், இந்த ராயலுக்கு ரொக்கமாக வரும் கப்பம் 60 லக்ஷம் வராகனென்றும், அதில் 25 லக்ஷம் வராகன் சொந்தசெலவாகிறதென்றும், அத்தொகையை ஸமஸ்தானத்தைச் சார்ந்த 200 பிரபுக்கள் கொடுத்துக்கொண்டு வந்தார்களென்றும், சமஸ்தானத்தில் 50,000 வேலைக்காரர்கள் கிரமமாகச் சம்பளம் பெற்று வந்ததன்றியில், சமஸ்தானத்தைப் பாதுகாக்க ஆறு லக்ஷம் சேனைகளும், 30,000 குதிரைகளும், 1,000 யானைகளும், பிரபுக்களால் எப்போதும் தயார் செய்து வைக்கப்பட்டிருந்தன வென்றும் அந்தச் சமஸ்தானத்தில் நவராத்திரிக் கொலுவின் உற்சவ விநோதங்களையும், அக்காலத்தில் பல பிரபுக்கள் வந்து தரிசித்து இராயலு காலை முத்தமிட்டுப் போவதையும், அப்போது குஸ்தி, கரடி, சதிர்க்கசேரி முதலான வைபவங்கள் நடப்பதைப்பற்றியும் விஸ்தரித்து எழுதியிருக்கின்றனர். சொத்து முதலானவைகளைத் திருட்டுக் கொடுத்து நொந்தவர்களும், மற்றப் பிராதுக்காரர்களும், இராயரவர்களைக் கண்டு வணங்கி முறையிட்டால் உடனுக்குடனே விசாரணை செய்தும், அந்தக் குற்றம் நடந்த விடத்திலிருக்கும் உத்தியோகஸ்தர்களிடம் அந்தச்சொத்துக்குத் தக்க பொருளை வஜாசெய்து கொடுத்தும், திரு

டோர்களையும் பதிவிரதைகளைக் கெடுப்பவர்களையும் பகிரங்கமாகக் கடைவீதியில் கொண்டுபோய்ப் பலரும் பார்க்கும்படி சிக்ஷித்தும் வந்ததினால், அவர் ஸமஸ்தானத்தில் திருட்டு முதலான குற்றங்கள் நடப்பது அபூர்வமென்றும் எழுதியிருக்கின்றனர்.

இந்த அச்சுததேவராயலுக்கு மந்திரி சாலுவ நாயடு அமர்ந்தார். அன்றியும், அச்சுததேவராயலு நமது ஸமஸ்தானத்தை நாடி இருந்த 200 பிரபுக்களில் அநேகர் அவருடைய பந்துக்களா யிருந்தபடியால், அவர்களுக்கு விவாக வரிசை ஸ்திரீதனமாக சில சமஸ்தானங்களைக் கொடுத்து ஆண்டுவரச் செய்தார். அவர்களில் தமது மனைவியாகிய திருமலையம்மாளுடைய தங்கை மூர்த்தியம்மாளை விவாகம் செய்துகொண்ட சேவப்ப நாயடுகாருக்குத் தஞ்சாவூர், திரிச்சி, நாகப்பட்டணம், தேவிப்பட்டணம், திருக்கோயிலூர் முதலான இடங்களைத் தனமாகக் கொடுத்து ஆண்டுவரச் செய்தார். மதுரை, திருநெல்வெலி முதலான பாகங்களைப் பய்யம் நாயடும், விசுவநாத நாயடும் ஆண்டுவரச் செய்தார்.

கோப்பன்ன நாயடுகாரை ரெய்ச்சூர் முதலான பாகங்களை ஆண்டுவரவும், லக்ஷ்மய்ய நாயடுகாரை தார்வார் முதலான பாகங்களை ஆண்டுவரவும்; இதேமாதிரியாக வரதப்ப நாயடு, மல்லப்ப நாயடு, ஆதியப்ப நாயடு, கிருஷ்ணப்ப நாயடு, ராசப்ப நாயடு முதலான அதிகாரிகளை வேலூர், செஞ்சி, சந்திரகிரி, உம்மத்தூர், கொண்டவீடு முதலான நாடுகளுக்குத் தலைவர்களாக நியமித்தார். அக்காலத்தில் அவரது சமஸ்தானம் தெற்கே திருநெல்வேலி இலங்கை வரையில் பிரபலமாக இருந்தது. இருந்துமென்ன? அந்த அச்சுதராயலு, இயற்கையில் பயங்காளியாகவும், பேடித்தன முடையவராகவும் இருந்ததில், இராஜ்ஜிய பரிபாலனம் இருக்கவேண்டியபடி இருக்கவில்லை. அவர் தமது சமஸ்தானத்தை ஆதரித்து வந்த சில பிரதிநிதிகளை நம்பாமல், அவர்களை அவமானப்படுத்தி வந்தமையால், அவர்கள் அச்சுததேவராயலை வெறுக்கச் சம்பவித்தது. அது சங்கதியை அறிந்த இஸ்மால் அதில்ஷாவும், காசிம் பெரிட்ஸா என்பவரும் கூட்டாளிகளாகி இருவர் சேனைகளை நடத்திக் கொண்டுவந்து, முன் கிருஷ்ணதேவராயலு அதிக கஷ்டப்பட்டுச் சம்பாதித்த ரெய்ச்சூர், முடகல் கோட்டை

களைப் பற்றிக்கொண்டார்கள். அன்றியும், 1534 வருஷம் கோலகொண்டாவிலிருந்த குதப்சாயிபுக்கு விரோதமாக பீஜநகர் நவாபுக்கு அவர் உதவிசெய்தார். அப்படி இந்துக்கள் மகமதியருக்கு உதவி செய்தது இதுதான் முதல் தடவை. அப்படிச் செய்ததனால், அந்த இரண்டு மகமது சமஸ்தானத்தார் ஒரே கட்டுப்பாடாகக் கூடிக் கடைசியாக விஜயநகர சமஸ்தானமே நர்சமாகச் சம்பவித்தது ஆயினும், அந்த அச்சுததேவராயலு ஆண்ட 13 வருஷ காலத்தில் அனேக கோயில் கோபுரங்களும் கட்டிடங்களும் கட்டப்பட்டன. 1541 வருஷ ஜனவரிமாதம் 25-ந் தேதி அச்சுததேவராயலு பரமபதமடைய, அவருடைய வாலிப குமாரனாகிய வெங்கடாத்திரிராயலு பட்டத்துக்கு வந்தார்.

---

## வெங்கடாத்திரிராயலு ஸமஸ்தானம்.

### இ. பி. 1542 வருஷ முதல் 1542 வருஷ வரை.

---

அச்சுததேவராயலுக்குப் பிறகு பட்டத்திற்கு வந்த அவருடைய குமாரர் வெங்கடாத்திரி சிறுவனாக இருந்தமையால், அவர் பேருக்கு மாத்திரம் சக்கரவர்த்தியாக நியமிக்கப்பட்டு, இராஜாங்க காரியங்களை மந்திரியாகிய சாலுவதிம்மராயலு நடத்தி வந்தார். இந்த ஹாசி திம்மராயலு சதாசிவராயலுக்குத் தாய் மாமனார். அவர் கெட்ட எண்ணத்தினாலும், கெட்ட சாவகாசத்தினாலும், துர்ப்போதனைகளைக் கேட்டு, சமஸ்தானத்திலிருந்த பழைய உத்தியோகஸ்தர்கள் எல்லாரையும் நீக்கிவிட்டு, அந்த ஸ்தானங்களுக்குத் தம் பந்துமித்திரர்களை நியமித்தும், பரிபாலனத்தில் தகாத காரியங்களைச் செய்தும் வந்தமையால், சமஸ்தானத்திலிருந்த பெரிய பிரபுக்களெல்லாரும் வெளி நாடுகளுக்குப் புறப்பட்டுப் போய்விட்டார்கள். அந்தச் சமயத்தைப்பார்த்து இப்ராஹிம் அதில்ஷா விஜயநகரத்தின் மீது படையெடுத்து வந்தார். அப்படி வந்த மகமதியரைத் தடுக்க திம்மராயரால் முடியாமல் அப்பகைவர்களுக்கு 8 லட்சம் வராகன் கொடுத்துச் சமாதானப்படுத்தினார். அந்த ஏற்பாடு சமஸ்தானத்திலிருந்த பிரபுக்களுக்குத் திருப்தியைக் கொடாமையால், கலகங்களாகி ஊர் நாதனற்றதுபோலாகியது. இம்மட்டோடு நிற்காமல் திம்மராயலு, ஸமஸ்தானபதியாகிய வெங்கடாத்திரி ராயலு என்னும் வாலிப

னைக் கொலைசெய்வித்தும் தாமே சமஸ்தானபதியாகி அநேக அக்கிரமங்களைச் செய்ய ஆரம்பிக்கவே, சமஸ்தானத்திலுள்ள பெரிய பிரபுக்களும், கிருஷ்ண தேவராயலுடைய மருமகனுர் இராமராஜாவும் கூடி அந்த அக்கிரமங்களைக் கண்டிக்கப்புக, அதை அறிந்த திம்மராயலு மஹா கோபங் கொண்டு, அப்படிக் கலகம் செய்த தம் சமஸ்தானத்துப் பிரபுக்களையும், இராமராஜாவையும் கண்டித்துத் தாக்கினுல் தினம் ஒன்றுக்கு மூன்று லக்ஷம் வராகன் கொடுப்பதாக, பிஜப்பூர் இப்ராஹிம் அதில்ஷாவுக்குச் சந்கதி சொல்லியனுப்ப, அவர் பழம் நழுவிப் பாலில் விழுந்ததைப்போலாகியதென்றெண்ணிப் பெரும்படையெடுத்து வந்து அட்டகாசம் செய்து 50 லக்ஷம் வராகனோடு பீஜப்பூருக்குப் போனுர்.

திம்மராயலு செய்த இப்படிப்பட்ட பெரிய அக்கிரமங்களைச் சகியாத சமஸ்தான பிரபுக்களும், இராமராஜாவும், திம்மராயலின் ஆயுதபாணிகளோடு வந்து அரண்மனையை வளைந்துகொள்ள, திம்மராயலு இந்தக் கண்டத்தை விட்டுத் தப்புவது அசாத்தியமென்று கண்டு, அரண்மனையிலுள்ள விலை உயர்ந்த ஆடையாபரணங்களை எல்லாம் சுட்டுப் பொசுக்கிப் பாழாக்கியும், கடைசியில் தமது வாளை உருவி நிலத்தில் நட்டு நிறுத்தியும், ஓடி வந்து அதற்குத் தன்மார்பைக் காட்டி குத்திக்கொண்டு தற்கொலை செய்து கொண்டு இறந்தார். அந்தத் திருமலைராயலு அப்படித் தற்கொலை செய்துகொண்டு சாகவே சமஸ்தானத்தில் அவரால் ஒன்பது மாதகாலங்களாக நாதனற்றுத் தவித்த கஷ்டங்கள் நீங்கின. உடனே அந்தச்சமஸ்தானத்துக்குச் சதாசிவராயலைச் சிங்காசன மேற்றினுர்கள்.

---

## சதாசிவராயலு ஸமஸ்தானம்.

### கி. பி. 1541ஞு முதல் 1542ஞு வரை.

கிருஷ்ணதேவராயலுடைய சகோதரர் அரங்கதேவராயலுடைய குமாரராகிய அந்தச் சதாசிவராயலும் சிறுவனுக இருந்தமையால்; கிருஷ்ணதேவராயலுடைய மருமகனுர் இராம இராஜாவே 1565 வருஷம் வரையில் இராஜகாரியங்களை மிக்க சாமர்த்தியமாக நடத்திவந்தார்.

சதாசிவராயலுடைய தரும சிலாசாசனங்கள் 1576 வருஷம் வரையில் குறிப்பிட்டாலும், அவர் பெனுகொண்டாவில் பரமபத மடையும்வரையிலும் பேருக்கு மாத்திரம் அரசராக இருந்தார். அந்தச்சதாசிவராயலு தன் தாய்மாமனாகிய திம்மரசை மந்திரியாகக்கொண்டு ஸமஸ்தான பிரபுக்களேயும், இராமராஜாவையும் வருத்தியதாகத் தெரிய வருகிறது.

---

## விஜயநகரத்தில் மூன்றும் ஸமஸ்தானம்

அல்லது

## இராமராஜா ஸமஸ்தானம்.

(கி. பி. 1542ஞ் முதல் 1556ஞ் வரை.)

விஜயநகரத்தி லாண்ட சதாசிவராயலுக்குப் பிறகு அதைத் தக்கபடி ஆளுவதற்குச் சரியான ஆண்சந்ததி இல்லாமையால், அந்தச் சந்ததியின் மருமகனுகிய இராமராஜா ஆண்டகாலம் முதல் புதுசந்ததி அல்லது மூன்றும் சந்ததி அரசாக்ஷி என்று சொல்லலாம்.

## இராமராஜாவின் வம்சாவளி.

நரபதிவிஜயம், பாலபாகவதம், வசுசரித்திரம், நரசபூபாலியம், நரபதி சரித்திரம், டாக்டர் அப்போர்ட்டுக்கு (Dr. Gustave Oppert History of S. India, Page 73) அகப்பட்ட சிலாசாசனம், செப்பேடு சாசனங்களின்படி "சந்திரவமிச பாண்டவரைச் சார்ந்த அர்ஜ்ஜுனனுடைய 83-வது சந்ததி நந்தராஜனும் அவனுடைய ஒன்பதாம் சந்ததியாகிய சாளுக்கியன் பிறந்து, அவனுல் விஜ்ஜலன் அல்லது விசாலராஜன் 1167 ஞ் கலியானபுரத்தைக் கட்டி ஆண்டான். அவனுடையபேரனுகிய வீரஹெம்மலராயலும் தாதபின்னனும் பிறந்து அவனுடைய சந்ததியில் இராமராஜர் பிறந்தார். எப்படியெனில், .

விசாலன் அல்லது கலியாணபுரத்திலாண்ட விஜ்ஜலராஜருக்கு ஹெம்மலராயலு, அவருக்குத் தாதபின்னமராயலு, அவருக்குச் சோமதேவராயலு, அவருக்கு இராகவ

தேவராயலு, அவருக்குப் பின்னம சவுரி, அவருக்கு ஆர்வீட்டி புக்கராயலு பிறந்து ஆண்டுவர; அந்தப் புக்கராயலு மரபில் சிங்கராஜு, இராமராஜு, திம்மராஜு, கொண்டராஜு, ஸ்ரீரங்கராஜுவும் பிறந்தார்கள். திம்மலராஜுக்குத் திருமலைராஜு ,விட்டலராஜன், சின்ன திம்மராஜா, பாப திம்மராஜா, பிறந்தாண்டார்கள். ஸ்ரீரங்கராஜாவுக்குக்கோன ராஜா, திம்மராஜா, கிருஷ்ணதேவராயலுமருமகனுர் இராமராஜா, திருமலைராஜா, வெங்கடராஜா, இலக்ஷுமம்ம, நரசராஜா பிறந்தார்கள். கிருஷ்ணதேவராயலுமருமகனுர் இராமராஜா மரபில்: கிருஷ்ணராஜா, பெத்த திம்மராஜா, கொண்டராஜா, இராமராஜா, சின்ன திம்மராஜா, ஸ்ரீரங்கராஜா பிறந்தார்கள். இந்த ஸ்ரீரங்கராஜாவின் மரபில் பெத்த வெங்கடராஜா, சின்ன வெங்கடராஜா பிறக்க, அவர்மரபில் திருமலைராஜா, வெங்கடராஜா, கோபாலர் தத்து ஸ்ரீரங்கராஜா பிறந்தார். வெங்கடராஜா மரபில் கோதண்டராமராஜா மரபில்பெத்த வெங்கடராஜா, சின்ன வெங்கடராஜா, கோதண்டராமராஜா, வெங்கடராஜா, ஸ்ரீரங்கராஜா, சின்ன வேங்கடராயலு பிறந்தார்கள். இந்தநரபதிகளின் உதவியால் கோனேரி பண்டிதர் பாலபாகவதத்தையும், பட்டுமூர்த்தி ராமராஜ பூஷணத்தையும், வசுசரித்திரத்தையும்; சாரதா மூர்த்தி நரசபூபாலியத்தையும் பாடி அங்கிதம் செய்தார்கள்.

நரபதிகளுடைய ஒரு கிளையாராகிய சாளுக்கிய வகுப்பைச் சார்ந்த விட்டலராயலுடைய தமையனுர் திருமலைராஜாவுக்கு மந்திரியாக விருந்த நாகய்யபட்டருடைய குமாரராகிய கேனேரிநாதபட்டர் மஹாதெலுங்கு வித்துவான். அவர், நன்னையபட்டர் மஹா பாரதத்தைத் தெலுங்கில் பாட்டுகளாகச் செய்து விட்ட குறைவைத் திக்கன்ன சோமயாஜி முடிவு செய்ததையும், பின்னும் அக்காலத்தில் பீமசந்தசை பாடிய பீமகவியையும், பின்னும் பல வித்துவான்களுடைய கவிகளையும் படித்து உற்சாகமாகி, திம்மராஜாவின் புகழைப்பற்றிப் பாடும்படி அவர் குமாரர் திருமலைராயலு விரும்பியபடி, பாலபாகவதத்தை இயற்றினர். அப்புத்தகத்தின் முகவுரையில் தனது பூட்டுக்குடைய தலைவரையும், அவருடைய முன் சந்ததி விவரத்தையும் வெகு திருப்திகரமாகவும், தேவனஹள்ளி முதலான சில சாசனங்களுக்குச் சரியாகவும் எழுதி அரங்கேற்றினர்.

அந்தக் கிரந்தத்திலும் நரபதிவிஜயமென்னும் கிரந்தத்திலும் நரபதிகள், சந்திரவமிசபாண்டவரைச்சார்ந்த அர்ஜ்ஜுனனுடைய 83-வது சந்ததியாகிய நந்தராஜாவினுடைய ஒன்பதாம் சந்ததி சாலுக்கியனென்றும், அந்தச் சாலுக்கியனால் காலசூரி ஜாதியை ஸ்தாபித்த விஜ்ஜல விசாலராஜர் கல்யாணபுரியைக் கட்டி ஆண்டார்; அவரை சாலுக்கிய நாராயணர் அல்லது வெங்க திருபுவன மல்லரென்றும் சொல்வதுண்டு. அவருடைய அரசாக்ஷி அதிக பிரபலமாகவே, லிங்காய்த்து மதத்தை ஸ்தாபித்த சாதாரண ஸ்திதியிலுள்ள பசுவரைத் தமது பிரதான மந்திரியாகவும், பிரதானியாகவும் நியமித்துக்கொண்டார்.

அப்படி அந்த பசுவரை நியமித்துக்கொண்டதற்கு மூக்கியகாரணம்: அந்தப்பசுவருடைய அதிக ரூபலாவணியமுள்ள சகோதரி பத்மாவதி என்னும் பெண்ணின்மேல் மோகப்பட்டு, அவளையே மனைவியாக விவாஹம் செய்து கொண்டிருந்தார். அப்படிக்கிருந்தும் யாது காரணத்தைப் பற்றியோ பசுவர்: வாஜதேவமல்லன், மல்லைய, பொம்மனென்பவர்களை ஏவி அந்த விசாலராஜரைக் கொலைசெய்துவிட்டதாகச் சென்ன பசுவபுராணத்தில்சொல்லப்பட்டிருக்கின்றதாம் (Vide Page 253-Mysore Inscriptions by Mr. L. Rice). அந்தவிசாலராஜருக்கு ஹெம்மலிராஜனும் அவனுக்குத் தாதபின்னையராஜனும், அவனுக்குச் சோமதேவனும் பிறந்து பிரபலனானான். அவன் ஆர்வீட்டு என்னுமிடத்தில் வசித்தும்; கந்தனவாலி, இராயச்சூர், சாதாணிகோட்டை, யாதவகிரி, கலபகோலு, முசலிமடுகு, கங்கநயனி கொண்ட முதலானவிடங்களைச் சுதாதீன மாக்கிக்கொண்டான். அவன் குமாரன் இராகவராஜன், பிறகு புக்கராஜா, பின்னும் இப்படியே மேல்காட்டிய வம்சாவளிப் பிரகாரம் பிறந்து ஆண்டார்கள்.

அவர்கள் కల్యాణపురవ రాధీశ్వర ఆత్రేయగోత్ర, శ్రీయాచారసల పవిత్రచాలు క్యనారాయణ । చాలుక్యచక్రవర్తి, మండలీక రదరత్న వరాహ జగద్భు భువనమల్ల, என்ற்றுதி வாக்கியங்களின்படி ஆத்ரேய கோத்திரத்தைச் சார்ந்தவர்கள். அவர்களின் வீட்டின் பெயர் பூசுபட்டிவாரு: இப்படிப்பட்ட விசேஷ குடும்பத்தில் பிறந்தவர்தான் அந்த ராமராஜா. அந்த ராமராஜாவின் ஆதி தாய் தந்தைகளைக் கவனிக்கும்போது சாலுக்கிய ஜாதியாரும், காலசூரி ஜாதியாரும் ஆதி ஆந்திர

வமிசத்தைச் சார்ந்தவர்கள் என்று ஸ்பஷ்டமாகிறது. அந்த ராமராஜா முதலில் கோலகுண்ட குதப்சாயபின் தளகர்த்தராக இருந்து, கர்னூலில் பெரியஜாகிரைப் பெற்றிருந்தார்.

அவருடைய வீரதீரத்தை அறிந்த கிருஷ்ணதேவராயலு அந்த ராமராஜாவுக்குத் தமது குமாரத்தி இலக்ஷ்மிதேவி என்னும் மோஹனங்கியை விவாஹம் செய்வித்துத் தமது சேனைக்குத் தலைவராக்கிக்கொண்டார். அப்படி விவாஹம் செய்துகொண்டதற்காக அதோனி கோட்டையை ஸ்திரீதனமாகப் பெற்றார். அந்த ராமராஜா செங்கோல் செலுத்திய இரண்டு வருஷங்களுக்குள் சமஸ்தானத்திற்குத் தமது பந்துமித்திரர்களை உத்தியோகஸ்தர்களாக நியமித்தும், தமது சகோதரனை திருமலைராயலைச் சமஸ்தானத்தின் சிவில் வியவஹாரங்களை விசாரித்து நீதி செலுத்தவும், மற்றோர் சகோதரனாகிய வேங்கடாத்திரியைச் சேனாதிபதியாகவும் நியமித்து 23 வருஷங்கள் கம்பீரமாக அரசு செய்துவந்தார்.

கிருஷ்ணதேவராயலு காலத்தில் ஆரம்பித்த பெரிய வாய்க்கால் வேலைகள் அந்த ராமராஜா காலத்தில்தான் முடிவுபெற்றன. தம்மை அடுத்த மகம்மது பிரபுக்களுக்கு அடைக்கலம் தந்து, அவர்களை விஜயநகரத்தில் வீடுகளையும், மஜீதுகளும் கட்டிக்கொள்ள இடங்கொடுத்து ஆதரித்தார். அப்படிவந்த மகமதிய பிரபுக்களும் ராமராஜாவும் விஜயநகரத்தில் அநேக பெரிய கட்டிடங்களையும் கோயில் கோபுரங்களையும் கட்டிவைத்ததுடன், அநேக வாய்க்கால்களைப் பாசனத்துக்காகத் திருப்பியபடியால், நாட்டிலுள்ள பிரபுக்கள் அனேக நந்தவனங்களையும், பழம் தரும் செடிகளையும் வைத்துப் பயிர் செய்தார்கள். சமஸ்தானத்தில் சிற்ப சாஸ்திரப் பயிற்சியும், கல்வி ஞானமும் விருத்தியாயின. அவருடைய மதுரை, தஞ்சை முதலான சமஸ்தானங்களை ஆண்டுவந்த பிரதிநிதிகளாகிய நாயடுமார்களும் சித்திர விநோத அரண்மனைக் கட்டிடங்களைக் கட்ட ஆரம்பித்தார்கள்.

அப்போது சமஸ்தானத்தில் யாதொரு கலகமும், சண்டைசச்சரவுகளும் இல்லாமல் நிம்மதியாக இருந்தது.

---

## தலைக்கோட்டையில் நடந்த பயங்கரமான சண்டை.

அந்த இராமராஜவின் பிரபல பிரபுத்துவத்தைக்கண்டு பொறாமையினால் சகியாத மகமதியர்கள் யாவரும் ஒரேகட்டுப்பாடாகச் சேர்ந்து விஜயநகர சமஸ்தானத்தை இனி தலை எடுக்காமல் தாக்கவேண்டுமென்று தினேதினே சதிமோசங்கள் செய்துகொண்டே வந்தார்கள். அதற்காக முதலில் உசேன் நிஜாம் சாயபு ஓர் யுக்திசெய்து பீடர், கோல்குண்டா, பீஜப்பூர் மன்னர்களைத் தம்முடன் சேரும்படிக்கும், அந்தக் கட்டுப்பாடு கெடாதபடி தமது குமாரத்தி சந்திபீபீஎன்னும் பெண்ணை அலி அதில்ஷாவுக்கு விவாஹம் செய்து கொடுத்தும், சோளப்பூரையும், பீஜப்பூரையும் ஸ்ரீதனமாகக் கொடுத்தும் ஆசைகாட்டியதில், அல்லிசாயபும் தமது சகோதரியை உசேன் சாயபுக்குவிவாஹம்செய்வித்தும், இப்படி பீஜப்பூர் கோல்குண்டாவைச் சம்பந்தப்படுத்தியும், பின்னும் இராமராஜாவை ஜயிப்பதற்கு வேண்டிய சகல காரியங்களையும் தந்திரமாகவும், அந்தரங்கமாகவும் செய்து முடித்துச் சண்டைக்குத் தயாராக இருக்கையில், இராமராஜா இத்யாதி காரியங்களைக் கவனியாமலும், தக்க மந்திரி முதலானவர்களுடன் கலந்து பேசாமலும், தமக்கு அப்போதிருந்த பெருஞ் சேனையையும், திரவியத்தையும் பிரபலப் பெயரையும் கருதிச் சண்டைக்குச் சித்தமாக இருப்பதாகத் தெரிவித்தும், கிருஷ்ணாநதிக்குத் தென்பாகத்திலிருக்கும் தாளூருக்கு அருகில் தன் சேனையை அனுப்பினார்.

அந்தச் சண்டை பயங்கரமான பெரிய சண்டை. தக்ஷணத்திலிருந்த மகமதியமன்னர்கள் யாவரும் ஒரே கட்டுப்பாடாகி விஜயநகரத்தைப் பாழ்த்துப்போக நெடுங்காலம் யோசித்துச் செய்துவந்த சதிமோசச் சண்டையாகையால், மகமதிய மன்னர்கள் எல்லோருடைய சேனைகளும் ஏககாலத்தில் ஒரேமனதாகித் திரண்டு தயாராக நின்றிருந்தன. அந்தச் சண்டைக்கு இராமராஜாவின் சேனைப் பலத்தைப் பற்றிப் பலர் பலவிதமாக மதிப்பிட்டாலும், மகமதிய சரித்திரக்காரராகிய பெரிஷ்டா (Ferishta) கணக்கின்படி அப்போது இராமராஜா சேனையில் (9,00,000) ஒன்பது லட்சம் பதாதிகளும், அவர்களுக்கு உணவு முதலானவைகளைத் தந்து உதவிசெய்ய 1,500 சேவகர்களும், வேலைக்காரர்களும்,

60,000 குதிரைகளும், 2,000 யானைகளும், 1000 பீரங்கிகளும், அநேகத் துப்பாக்கிகளும் இருந்தனவாக எழுதியிருக்கிறார். அப்படிப் பெருத்திருந்த பட்டாளத்தை மூன்று பிரிவுகளாக வகுத்து, ஒரு பிரிவைத் தமது தம்பி வெங்கடாத்திரி அதிகாரத்துக்குள்ளும், மற்றொரு பிரிவை மற்றொரு தம்பியாகிய திருமலைராயலு அதிகாரத்துக்குள்ளும், மீதி இருந்த பிரிவைத் தமது அதிகாரத்துக்குள்ளும் வைத்துத் தாமே உயுத்தத்துக்கு நேராகப் புறப்பட்டார். அப்போது அவருக்கு வயது 96 ஆனதுபற்றியும், வேறு காரணங்களைக் கருதியும், அவரை நேராக உயுத்தத்துக்குப் போகக் கூடாதென்று பலர் தடுத்தும், யார் வார்த்தையையுங் கேளாமல், "செத்தால் சமர்க்களத்தில் செத்து வீரசொர்க்கத்தை அடைவேனே யொழிய, அரிவையரைப் போல் அரண்மனையில் தங்கேன்" எனச் சொல்லிவிட்டுச் சுமார் 30-வயது வீரனைப்போல் உயுத்தத்துக்கென்று தயார் செய்யப்பட்ட பட்டு, மஹமல், தங்கம், முத்துகளால் அலங்கரித்திருந்த சிங்கார விமான பல்லக்கில் ஏறிப்போய் அச்சண்டையில் அதிக வீரதீரத்தோடு சண்டை செய்பவர்களுக்கு அந்த யுத்தகளத்தில் வீரசங்கிலி, வைரகங்கணம் முதலான விருது தோடாக்களைப் போட்டும், திரவியங்களைக் கொடுத்தும், உற்சாகப்படுத்த வேண்டிய ஆபரணங்கள் முதலானவைகளைத் தமது பல்லக்கிலே வைத்துக்கொண்டும், மஹா வீரதீரத்துடன் 1565-வருஷம், ஜனவரி மாதம், 23-தேதி செவ்வாய்க்கிழமை சண்டைசெய்ய, முதலில் அவருக் கனுகூலமாகவே ஜெயம் கிடைத்தது.

கிடைத்தாலுமென்ன? அவருடைய சேனைகள் முதலில் ஜெயித்த அகங்காரத்தினால் தலைதெரியாமல் குதித்துக் கொக்கரித்துக் கொண்டாடும்போது, மகமதியருடைய சேனையிலிருந்த இரண்டொரு யானைகள் மிரண்டோ அல்லது மூர்க்கத்தனத்தினாலோ பயந்து பாகனுக்கு அடங்காமல் எதிரிலகப்படும் மனுஷர் முதலானவர்களைச் சின்னா பின்னமாக மிதித்துக் கிழித்துக் கொள்ளையாடி வரவே, இராமராஜாவைச் சுமந்துகொண்டிருந்த போயிகளும் பயந்து தமது இராஜ சிம்மாசனப் பல்லக்கைக் கீழே வைத்துவிட்டு ஓட, அதைக்கண்ட மற்ற சேனைகள் "ஓ! ஓ! இராமராஜாவைக் காணோம், மகமதியர் கையில் அகப்பட்டுவிட்டார்" என்று மதிமயங்கி, நாலாபக்கத்திலோட, இத்தியாதி

கலவரங்களைக் கவனித்துக்கொண்டிருந்த மகமதியர் சேனைகளில் 5000 குதிரைவீரர் ஓடிவந்து வளைந்து இராமராஜாவைத் பிடித்துச் சிரச்சேதம் செய்து அவர் தலையை அகமதாபாத்துக்குக் கொண்டுபோய்விட்டார்கள். இராமராஜவின் பிரதாபத்தையும், வீரதீரத்தையும், விருத்த வயதையும், பரோபகார குணங்களையும், அறிந்திருந்த பெரும்பான்மையான மகமதிய மன்னர்கள் அவரைச் சிரச்சேதம் செய்ததைக்கண்டு சங்கடப்பட்டு வருந்தினாலும், காரியம் முடிந்த பிறகு என்ன யோசனைசெய்தாலும், பிரயோஜனமென்ன? இராமராஜா மகமதியர் கையிலகப்பட்டுச் சாவதற்கு அவருடைய உத்தியோகத்திலிருந்த சில மகமதியர்களுடைய சதிமோசத்தினாலென்றும், அந்த இராமராஜா மகமதியர் கையில் சிக்கி அவமானப்படுவதைப்பார்க்கிலும் வீரசொர்க்கமடைவது சுகிர்தமென்று எண்ணித் தன் தலையை வெட்டிக்கொள்ளும்படி தானே வலியக் கேட்டுக்கொண்டதன்மேல் வெட்டப்பட்டதாகவும், கர்னூல் மானுயூல் சரித்திர புத்தகம் 26-வது பக்கத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

இராமராஜா அந்தத் தலைக்கோட்டைச் சண்டைக்குத் தாமே நேராகப் போகாமலும், தமது தம்பிமார்களையும் வேறு தளகர்த்தர்களையும் அனுப்பிச் சண்டை செய்திருந்தாகிலும், அல்லது அப்படி மகமதியர்கள் யாவரும் ஒரே சேனையாகத் திரண்டுவரும் கட்டுப்பாட்டை யறிந்து கொஞ்சம் காலதாமதம் செய்தாகிலும், தக்கபடி யோசனை செய்திருந்தால், அவர் பிராணனுக்கும் நஷ்டமுண்டா யிராது; விஜயநகரமும் பாழ்த்துப்போயிராது. அவருக்கு அப்போது 96 வயதாகியதால் புத்திச்சுவாதின மற்று அப்படிச் செய்தார்போலும். கிருஷ்ணதேவராயனுக்குப் பிறகு வில்வித்தையிலும் மல்ல யுத்தத்திலும் சிறந்தவீரன் அந்த இராமராஜாவே. அவர் ஆண்ட 22 வருஷகாலத்தில் சமஸ்தானத்தில் கல்விஞானம் தருமம், முதலானவைகளை விருத்தியாக்கியும்; குடித்தனக்காரருக்கு வேண்டிய பாசன வசதிகளையும், வர்த்தகவியாபாரம், கைத்தொழில், சிற்ப விஞ்ஞாபனங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வித்தும்; அநேக குளங்கள், கோயில் கோபுரங்களையும், அக்கிரஹாரங்களையும் கட்டுவித்தும்; தக்ஷிண நாட்டில் தமக்கு ஒப்பும் உயர்வுமற்ற இராஜாராஜாதிபதியாகப் பிரகாசித்து வந்

தார். இப்போது ஹம்பியிலிருக்கும் ஹஜாரி இராமசுவாமி கோயிலைக் கட்டிவைத்தவர் அவரே.

அப்படிப்பட்ட சுத்தவீரன் யுத்தகளத்தில் போகவே, அவருடைய தம்பிமார்களாகிய வெங்கடாத்திரியும், திருமலைராயலும் தமக்குப் போதுமான சேனையின் உதவி இல்லாததை அறிந்து அநந்தபூர் ஜில்லாவைச் சேர்ந்த பெனுகொண்டாவுக்குப் போய்விட்டார்கள். விஜயநகரம் மகமதியர்கள் கையில் அகப்பட்டுப் பாழ்த்துப்போமென்று எச்சரிக்கையாக இருந்த விஜயநகரப் பிரபுக்களும், மற்றக் குடிகளும், அரண்மனையிலிருந்த உத்தியோகஸ்தர்களும் அதிக விலையுயர்ந்த ராஜ சிங்காசனம், ஆடையாபரணங்களையும், பெண்டு பிள்ளைகளையும் 1550 யானைகளின்மேலேற்றிக்கொண்டு நாலாபக்கங்களிலுமுள்ள மலை நாடுகளில் போய்த் தங்கிக்கொண்டார்கள். பிறகு மகமதியர் சேனைகள் விஜயநகரத்துக்குள் பிரவேசித்து வீடுவாசல், விக்கிரகம், கோயில் கோபுரங்களை எல்லாம் பாழாக்கிய அக்கிரம அனியாயங்களை இப்போதும் அங்குப் பார்க்கலாம். அப்படிப் பாழாக்கிய பட்டணத்தில் 3-மகமதிய மன்னர்கள் வந்து ஐந்து மாதகாலமாகத் தங்கி, எங்கெந்தச் சொத்தைச் எங்கெந்த மன்னர் அனுபவிக்கிறதென்று யோசித்ததில், ஒருவர் அபிப்பிராயம் ஒருவருக்குப் பொருந்தாமல், மனஸ்தாபங்களும் சண்டைசச்சரவுகளுமுண்டாகிக் கடைசியாக விஜயநகரத்தை இராமராஜா சந்ததிகளிடமே விட்டுவிட்டு வடக்கே தமது நாடுகளுக்கே போய்விட்டார்கள். உசேன் நிஜாம் சாயபு அகமத் நகரத்துக்குப் போனதும் இறந்தார்.

1566 ஆம் அலி அதில்ஷா பெனுகொண்டாவிலிருந்த வெங்கடாத்திரிக்கு விரோதமாக ஒரு சேனையை யனுப்ப; வெங்கடாத்திரி கோலகுண்டா, பெனுகுண்டா, நவாப்புகளுடன் சமாதான உடன்படிக்கைகள் செய்துகொண்டதில், அவர்கள் சேனைகள் பீஜப்பூர்மேல் படையெடுக்க, அலி அதில்ஷா பயந்து திரும்பி வுட்டார்.

1568 வருஷம் அந்தத் திருமலைராயலு விஜயநகரத்துக்கு வந்து அதைப் பழையபடி பிரபலமாக்க முயன்றும் முடியவில்லை. 1568 ஆம் அந்தத் திருமலைராயலு உண்மையான வார்சாகிய பழைய சதாசிவராயலைக் கொன்றுவிட்டுத் தானேபட்டம் சூட்டிக்கொண்டு 8 வருஷம் ஆண்டதாக ஒரு சாசனத்தில் எழுதப்பட்டிருக்கின்றது.

அந்தக்காலத்தில் விஜயநகரத்தை வந்து பார்த்த ஐரோப்பா வர்த்தகராகிய (Ceasar Frederick) சீஸர் ப்ரெடெரிக் என்பவர் விஜயநகரம் குடியில்லாமல் காலியாக விருக்கினும், அங்கு இன்னும் மாடமாளிகைகளிருக்கின்றன வென்றும், அவைகளில் புலி முதலான காட்டு மிருகங்கள் சஞ்சரிக்கின்றனவென்றும், கோயில் கோபுரங்கள் பலமான கட்டிடங்கள் என்றும், அதன் அரண்மனை எட்டுச்சுவர்க ளால் சூழப்பட்ட இணையில்லாக் கட்டிடமென்றும், அது தக்க வீரர்களால் காக்கப்பட்டு வருகிறதென்றும், எழுதி னர்.

1568-ம் வருஷம் அலி அதில்ஷாவானவர் இராமராஜா தமையன் குமாரரிடமிருந்த அதோனிகோட்டையையும், 1573-வருஷம் பாதாமி, தோர்கல் கோட்டைகளையும், 1574-வருஷம் தார்வாரையும், பிறகு பான்காபுரத்தையும் பிடித்துக்கொள்ளப்போக, அப்போது அங்குப் பிரதிநிதி யாகவிருந்த வேலப்ப நாயடு சுமார் ஒன்றரை வருஷ கால மாகத் தடுத்தும் முடியாமல், அதில்ஷா ஜயித்து அங்கிரு ந்த இந்துமத கோயிலை இடித்து அந்த அஸ்திவாரத்தின் மீதில் மசூதி கட்டிவிட்டும், கொங்கணத்திலும் ஜயம் பெற்று மூன்று வருஷத்துக்குள் பெல்லமுகொண்டாவை யும் பிடித்துக்கொண்டார். பிறகு துங்கபத்திராவுக்குத் தெற்கே இருந்த நாடுகளைத் திருமலைராயலு ஆண்டுவந் தார். அக்காலத்தில் பெயருக்கு மாத்திரம் சக்கரவர்த்தி யாகவிருந்த சதாசிவராயலைத் திருமலைராயலு கொன்று விட்டதாக ப்ரெடெரிக் என்பவர் எழுதியிருக்கிறார்.

சதாசிவராயலோடு விஜயநகர சமஸ்தானமே முடிவு பெற்றதென்று சொல்லும்படி யாகிவிட்டது. ஏனெனில், அப்போது அவர்களுக்கு மேற்கே இருந்த நகரங்களும், மைசூரின் வடபாகங்களும், அந்தப் பாகங்களை ஆண்டுவந்த அரசர்களும் சுதந்திரராகிச் சுவாதீனமாக்கிக்கொண்டார் கள். திருமலைராயலுடைய முயற்சினால் சாதாரணமாக ஸ்தாபிக்க முயன்ற குடும்பமும் எதிர்பார்த்தபடி பிரபல மாகவில்லை. அவர் குமாரர் ஸ்ரீரங்கராயலு 1573 முதல் 1585, வருஷம் வரையில் அரசனாக ஆண்டுவந்தாலும், 1579 வருஷம் அலி அதில்ஷா மறுபடியும் பெனுகொண் டாவின்மேல் படை எடுத்துவந்து முடியாமையால் பெனு கொண்டாவைப் பிடிக்காமல் பீஜப்பூருக்குப் போக, அங்கு

அவரை மகமதியர் 1580-வருஷத்தில் சதிமோசமாகக் கொலை செய்துவிட்டார்கள். பிறகு ஸ்ரீரங்கராயலு சந்திரகிரி கோட்டைக்குவந்து 14வருஷம் ஆண்டு 1585 வருஷம் இறந்தார்.

## வெங்கடபதிராயலு ஸமஸ்தானம்.

(கி. பி. 1586வருஷம் முதல் 1614வருஷம் வரை.)



ஸ்ரீரங்கராயலுக்குப் பிறகு அவர் சகோதரர் வெங்கடபதிராயலு சந்திரகிரி சமஸ்தானபதியானார். அவரும் ஓர் வீரதீரரான படியினால், 28வருஷம் ஆண்டு தமது செஞ்சிக் கோட்டைக்குக் கிருஷ்ணப்ப நாயடுவையும், மதுரைக்குக் குமார கிருஷ்ணப்ப நாயடையும், சென்னைக்கு ஜகதேவ ராயலையும், ஸ்ரீரங்கபட்டினத்திற்குத் திருமலைராயலையும், இதேவிதமாகத் தஞ்சை பெனுகொண்டா முதலான விடங்களுக்குப் பிரதிநிதிகளை நியமித்து ஆண்டுவரும்படி செய்வித்ததோடு கிருஷ்ணாநதிக்குத் தெற்கே இருக்கும் மகமது குத்ப்ஷா நாடுகளை ஜயிக்கமுயன்று 1593 முதல் 1599வருஷம் வரையில் சண்டைசெய்தும் ஜயித்தார். அவருக்குப் பிறகு 1614வருஷம் முதல் 1636வருஷம் வரையில் அந்த மூன்றும் சந்ததியில் பெத்த வெங்கடராயலு, சின்ன வெங்கடராயலு, இரங்கராயலு முதலான ஐந்து அரசர்கள் ஆண்டார்கள். 1610வருஷம் வரையில் விஜயநகரப் பிரதிநிதி மைசூர் நாட்டையும், 1650வருஷம் வரையில் இக்கரை அல்லது பெத்தனூர் பிரதிநிதிகள் ஆண்டுவர, வடதேசத்தில் மொகல் சக்கரவர்த்திகள் பிரபலராகி தக்ஷணதேச மகமதியர்களை அடக்கிக் கீழ்ப்படுத்தினார்கள்.

1673வருஷம் மஹாராஷ்டிர தலைவரான சிவாஜியின் தந்தை சாஹாஜி போஷலோ வந்து கொங்கண நாடுகளையும், பிறகு கர்னூல், செஞ்சி, வேலூர் முதலான கோட்டைகளையும் பிடித்துக்கொண்டார். 1639வருஷம் ஸ்ரீரங்கராயலு விஜயநகர சமஸ்தானாதிபதியாக இருக்கும்போது, ஈஸ்ட் இந்தியா கம்பெனி தலைவரான மிஸ்டர் டே (Mr. Day) என்பவர் சென்னையில் போர்ட் செனட் ஜார்ஜ் கோட்டையைக் கட்டிக்கொள்ள ஒரு மைல் அகலமும், 5 மைல் நீளமுமுள்ள இடத்தைக் கேட்க, அந்த ஸ்ரீரங்க

ராயலும் தமது பெயரால் ஸ்ரீரங்கராயலு பட்டணம் என்ற பெயரோடு கட்டிக்கொள்ளுமாறு அவ்விடத்திலிருந்த தமது பிரதிநிதி நாயடவர்களுக்கு உத்தரவளிக்க, அந்த நாயடு தமது தகப்பனார் சென்னப்பநாயடு பெயர் வழங்கும்படி கட்டிக்கொள்ளச் சொல்ல, அன்றுமுதல் அதற்குச் சென்னப்பட்டணமென்று பெயராகியது.

---

## நரபதி சமஸ்தானத்தின் மூன்றும் சந்ததியின் வம்ச விருக்ஷம்.

2-வது திருமலைராயலு, கிருஷ்ணதேவராயலுடைய மற்றொரு குமாரத்தி வெங்கடாம்பாளை விவாகம் செய்ததில் இரகுநாதராயலு, இரங்கராயலு (2-வது), இராமராயலு (3-வது), வெங்கடராயலு (1-வது) என்ற நான்கு குமாரர்கள் பிறக்க, அவர்களில் இராமராயலுக்குத் திருமலைராயலு (2-வது), இரங்கராயலு (3-வது) பிறக்க, அந்த ரங்கராயலுக்கு இராமராயலும் (4-வது) மற்ற சில சகோதரர்களும் பிறந்தார்கள்.

3-வது, அந்த ரங்கராயலுடைய மற்றொரு குமாரராகிய வெங்கடாத்திரிக்கு இரங்கராயலும், அவருக்குக் கோபாலராயலும் பிறக்க, அவர் 6-வது இரங்கராயலைச் சுவீகாரம் செய்துகொண்டார்.

இந்த வம்ச விருக்ஷத்தினால் (6-வது) இரங்கராயலு அல்லது ஸ்ரீரங்கதேவராயலு 3-வது சின்ன வெங்கடராயலுடைய மூன்று குமாரர்களில் இளையகுமாரரென்றும், வீரவெங்கடபதிராயலு மூத்தவரென்றும் ஸ்பஷ்டமாகும்.

---

## நரபதிகளின் நான்காவது சந்ததி விவரம்.

சின்ன வெங்கடராயலுடன் நரபதியின் நான்காவது சந்ததியார் ஆளுகைக்கு வந்தார்கள். அவர்கள் எவர்களெனில்:—

சின்ன (3-வது) வெங்கடராயலுக்கு வீரவெங்கடராயலு, திருமலைராயலு, இரங்கராயலு (6-வது) பிறந்தார்கள்

அவர்களில் வீரவெங்கடராயலுக்கு இராமராயலு, இரங்க ராயலு பிறந்தார்கள். அந்த இராமராயலுக்கு வெங்கன்ன, சின்னராஜா, ராமராயலென்ற மூன்று குமாரர்கள் பிறந்தார்கள். திருமலைராயலுக்கு இராமராயலு, கோபால ராயலு பிறந்தார்கள், அவர்களில் சின்ன ராஜாவுக்குப் பெத்ததாசராயலு, சின்ன தாசராயலு பிறந்தார்கள். அந்தச் சின்னதாசராயலுக்கு இராமராயலு, வீரவேங்கட ராயலு பிறந்தார்கள். அந்த வீரவேங்கட ராயலுக்குத் திருமலைராயலும், செல்லம்மா என்ற ஒரு பெண்ணும் பிறந்தார்கள். அந்தத் திருமலைராயலுக்கு நரசிம்மராயலு, வீர வேங்கடராயலு, கேசவம்மாள் பிறந்தார்கள். அந்தக் கேசவம்மாள் வயிற்றில் சின்ன திருமலை ராயலுக்கு இலக்ஷ்மி தேவி அம்மாள் பிறந்தார். அந்த சின்ன திருமலை ராயலுக்குவெங்கடராயலு; கிருஷ்ணராயலு, ஒரு பெண் இவர்கள் பிறந்தார்கள். அந்தக் கிருஷ்ணராயலு குப்பம்மாளை விவாகம் செய்து புத்திர சந்தானமில்லாமையால் பம்பாபதிராயலைச் சுவீகாரம் செய்துகொண்டார். அந்தப் பம்பாபதி ராயலு எவரெனில், முன் சொன்ன வீரவேங்கடராலு குமாரத்தியாகிய செல்லம்மாள் வயிற்றில் பெத்த பம்பாபதி சின்ன பம்பாபதி பிறக்க, அந்தச் சின்ன பம்பாபதி வயிற்றில் திருமலைராயலும், குமார இராகவராயலும் பிறக்க, அந்த ராகவராயலுக்குச் சதாசிவராயலு, கோதண்டராம ராயலு, குப்பம்மாள், நரசாபம்பாதி ராயலு பிறந்தார்கள். இப்போது அந்த நரபதி சந்ததியின் பிரதிநிதியாக இருக்கப்பட்ட ஸ்ரீமான் ஸ்ரீரங்க தேவராயலு இராவ்சாஹிப் பம்பாபதி குடும்பத்தைச் சார்ந்தவராகவும், ஆனகுந்தி அரசராகவுமிருக்கிறார். கிருஷ்ண தேவராயலுடைய மனைவி குப்பம்மாளுக்குச் சந்ததி இல்லாமையால் பம்பாபதி ராஜாவைச் சுவிகாரம் செய்துகொண்டனர்.

விஜயநகர ஸமஸ்தானம் மகமதியர் வசமான பிறகு அலி அதில்ஷா, இராமராஜாவின் சந்ததி திருமலைராயலுடைய பேரராகிய நரசிம்ம தேவராயலுக்கு ஆனகுந்தியை ஜாகீராகக் கொடுத்தார். அதை அனுசரித்தே ஐதிராபாத்து நிஜாம் கவர்ன்மெண்டாரும் சில கிராமங்களைத் தற்கால இராயலுக்கு ஜமீனாகக் கொடுத்துப் பூர்வ பட்டத்தை வகிக்கும்படி செய்ய, நமது இங்கிலீஷ் கவர்ன்மெண்டாரும் அந்தச் சமஸ்தானத்தைச் சார்ந்த ஹாஸ்பேட்டை

பல்லாரியைத் தம் பக்கம் சேர்த்துக்கொண்டு அவைகட்காக 1807 ஞூ முதல்மாதம் ஒன்றுக்கு ரூபாய் 1377-11-4 பென்ஷனைக் கொடுத்துக்கொண்டு வந்தார்கள். பிறகு இப்போது இராயலுடைய சுவீகாரத்தில் யாதோ சட்டவிரோதமான நடவடிக்கை நடந்திருப்பதாகச் சொல்லி, அந்த நன்கொடையை நிறுத்திவிட்டார்கள். பிறகு தகுந்த சாசனங்களைக்கொண்டு தமது பாத்தியதையை நிரூபித்ததன்மேல், 1902 ஞூ செப்டம்பர்மீ கடைசியில் இப்போதிருக்கும் நரபதி ஸ்ரீரங்கதேவராயலு இராஜா சாஹேப் அவர்களே அந்த சமஸ்தானத்துக்குச் சரியான வார்சு எனக் கண்டும், நமது சக்கரவர்த்தியாகிய ஏழாவது எட்வர்ட் அவர்கள் சக்கரவர்த்தி என்னும் பட்டத்தைத் தரித்தது முதல் ஸ்ரீநரபதி ஸ்ரீரங்கதேவராயலு இராஜா சாஹேப் அவர்களுக்கு மாதம் ஒன்றுக்கு 500 ரூபாய் பென்ஷன் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள்.

---

## இந்த நரபதிராயலுகாலத்தில் சாசனம் எழுதும் வக்கணை.

சுவஸ்தி, மகாமண்டலேஸ்வர, ராஜாதிராஜ ராஜபரமேஸ்வர, ராஜகுலதிலக, ராஜமார்த்தாண்ட, பாஷைக்குத் தப்பு வராத, கண்ட கண்டநாடு, கொண்டு கொண்ட நாடு, கொடாதோன், எம்மண்டல, முத்திரைக்கொண்டு, ஈழமுந்திரைகொண்டு, தலைகொண்டகண்டன், துலுக்கதளவிபாடன், துலுக்கமோகந் தவிர்த்தோன், மனுசூர, மகாசூர, மகாமண்டலாதிபதி, அஸ்வபதி, நரபதி, கெஜபதி, கொடிமன்னன், ஆதத்தானன், ராயச்சூரத்தான், ராஜாதிராஜன், ராஜகெம்பீரன, ராஜநாராயணன், செனவாசிசூரன், தீனவர் தோஷன், சத்துருக்கள் கண்ட, நவகோடி நாராயணன், பூலோகபுரந்தரன், அசுவகுண நகுலன், விருதுநாபாலன், கோதண்டராமன், கலியுக கர்ணன், தக்ஷண சுல்த்தானன், அஷ்டாங்கபயங்கரன், மத்தகாசினி, மர்ஞபரணன், இரணரங்காவேசியர், புயங்கன், உபயகுலதிலாகடகத்தளவிபாடன், ராயர்க்குத் தக்ககண்டன், நாகலோக நரபாலன், பூலோகபுரந்தரன், உத்தர தக்ஷண பூர்வபச்சிமசத்த சமுத்திராதிபதி, கெஜவேட்டை கண்டருளிய ஸ்ரீ வீரப் பிரதாபன், சோழமண்டல ஸ்தாபனுசாரியன், பாண்டியமண்டல

ஸ்தாபனாசாரியன், ஈழமண்டலமுங்கொண்டருளிய ராஜாதி ராஜ ராஜபரமேஸ்வரன், ஸ்ரீவீரப்பிரதாபன், ஸ்ரீவீரவெங்கடபதிராயர் அய்யர், தேவமகாராயர் பிருதிவி ராஜ்ஜியம் பண்ணியருளாநின்ற சகாப்த வருஷம் 1512-க்கு மேற் செல்லாநின்ற விளம்பி வருஷம் அற்பிசிமீ 5உ என்று எழுதிவந்தார்கள்.

இப்படி கி. பி. 1330ஞு முதல் 1615ஞு வரையில் அதாவது சற்றேறக்குறைய 300ஞு காலம் ஆரிய நாட்டின் தென் பாகங்களில் விஜயநகர சமஸ்தான சக்கரவர்த்திகள் அதிமஹோன்னதமாகப் பேரும் புகழும் பெருவாழ்வும் பெற்று அரசு செய்துவந்த பிறகு அவர்கள் சந்ததிகளாகிய நாயடுமார்கள் சேர சோழ பாண்டிய நாடுகளில் சுமார் 400 வருஷகாலம் ஆண்டு அநேக தீர்த்த தல மூர்த்திதல கோயில் கோபுரங்களைக் கட்டுவித்துக் கம்பீரமாக அரசுபுரிந்தார்கள். இப்போதிருக்கும் ஆதி விஜயநகர நரபதி ஸமஸ்தான சந்ததியாகிய பம்பாபதி ஸ்ரீமான் ஸ்ரீ ரங்கதேவராயலுக்கு ஹைதராபாத் சமஸ்தானத்தில் ஜாகீர், ஜமீன், பூமிக ளிருப்பதுடன், அவர் முன்னோர்கள் கட்டின பல்லாரி அனந்தபூர் முதலான விடங்களில் அரசாக்ஷி கொண்ட ஆங்கிலேய கவர்ன்மெண்டார் அவருக்கு மாதாந்திர பென்ஷன் கொடுத்துவருகிறார்கள். இந்த ஆதி சமஸ்தானத்துக்குட்பட்ட நாடுகள் இப்போது கடப்பை கர்நூல் பல்லாரி அனந்தபூர் முதலான ஜில்லாக்களாகி ஆங்கிலேயர் அரசாக்ஷியினால் குடிகள் சுகமாக வாழ்ந்து வருகிறார்கள். அந்த ஜில்லாக்களின் விவரங்களைப் பூமி சாஸ்திரங்களிற் கண்டுகொள்ளலாம்.

---

# துளுவநாடு.

துளுவநாடென்பது இப்போது தென் கனராவைச் சார்ந்த மங்களூர், உடுப்பி, மைசூர், மேல்கோட்டை, பெங்களூர் முதலானவைகளையுடைய ஒருவித மலைநாடேயாம். இத்துளுவநாட்டை ஆதியிலாண்ட அரசர்கள், மஹா பாரதத்தில் கண்ட யயாதி ராஜனுடைய குமாரனுன, சந்திரகுப்தனுடைய சந்ததிகள் ஆண்டுவந்தமையால், இதற்குத் துளுவநாடு அல்லது யாதவர் நாடு என்னும் பெயருண்டாயிற்று. இதில் மஹா உன்னத சிகரமுள்ள பர்வதங்களும் அவைகளிலிருந்து வடிந்தோடும் காவிரி, வடபெண்ணை, தென்பெண்ணை, வேதவதி, நேத்ராவதி என்ற நதிகளால் செழித்தோங்கிய நாடாயிருப்பதன்றியில் ஹரிஹரிராயர் புக்கதேவராயர் குருவாகிய வித்யாரண்ய சுவாமிகள் இருந்த வித்யாநகரம் நரசிம்மராயிலு, கிருஷ்ணதேவராயலு, அச்சுதராயிலு, வெங்கடாத்திரிராயிலு, இராமராயிலு முதலானநரபதி சமஸ்தானத்தாருடைய விஜயநகரம் முதலியவைகளும், சாலிவாகன சந்ததியாருடைய மைசூர் ஸ்ரீரங்கபட்டணம் முதலியவைகளும், ஸ்ரீ சங்கராசாரியருடைய சிறந்த மடமிருக்கும் சிருங்கேரியும், ஸ்ரீ மத்வாசாரியர் உறைவிடமான உடுப்பியும், மேல்கோட்டை முதலான திவ்ய க்ஷேத்திரங்கள் அடங்கிய நாடென்று சொல்லலாம். இவைகளைச் சார்ந்த மங்களூர் தென்னாட்டிற்கு அதிக சமீபத்தி லிருப்பதால் முதலில் அதைப்பற்றிச் சங்கிரகமாகச் சொல்லி மற்றவைகளைத் தொடர்ந்து சொல்லுவோம்.

## மங்களூர்.

இது துளுவநாட்டிற்கு மத்தியநாடு என்று சொல்லலாம். இப்போது தென் கனரா என்று சொல்லப்படுகிற ஜில்லாவுக்கும் தாலூக்காவுக்கும் பிரதான பட்டணம். இதன் ரயில்வே ஸ்டேஷனுக்கு ஒருமைல் தூரத்தி லிருக்கும் மங்களாதேவி சந்நிதிக்கு அருகிலிருக்கிறபடியால் இதற்குமங்களூர் என்னும் பெயர்வந்ததுபோலும். இதைச் சுற்றியிருக்கும் கம்பீரமான காட்சியையுடைய மேற்குத் தொடர்ச்சி மலைகளிலிருந்து வடிந்தோடும் நேத்ராவதி நதியின் வடகரையில் அழகாகக் கட்டப்பட்டிருக்கும் முனிசிபல் பட்டணத்தில் இப்போது 48,412 ஜனங்கள் வதிந்து

வருகிறார்கள். இவர்களில் 25,312 ஹிந்துக்களும், 7149 மகம்மதியர்களும், 11,604 கிறிஸ்தவர்களுமாக இருக்கிறார்கள். இதன் சுற்றுப்பக்கத்தில் ஏராளமான தென்னை மரங்கள் பயிர் செய்யப்பட்டும், அவைகளுக்கருகில் மாடி வீடுகளும் மச்சு வீடுகளும் கட்டப்பட்டும், அவைகளுக்குப் போய்வர அழகான ரோட்டுகள் போடப்பட்டுமிருக்கின்றன. ஒருபக்கத்தில் சமுத்திரமும், ஒருபக்கத்தில் நேத்ராவதியும் ஒரு பக்கத்தில் காடூர் நதியும் சூழ்ந்திருப்பதால் இதை ஒரு அரங்கம் அல்லது தீவு எனவும் சொல்லலாம். 1324ஹு போர்ச்சுகல் தேசத்தைச் சார்ந்த இபு புல்டோ என்னும் யாத்திரைக்காரர் இங்கு வந்ததாகவும், 1336ஹு விஜயநகர சமஸ்தானத்தாரால் நியமிக்கப்பட்ட நான்கு பிராம்மணர்கள் இதை யாண்டு வந்ததாகவும், 1514ஹு பார்போசா என்னும் யாத்திரைக்காரர் வந்து பார்த்து இங்கு மிளகு, அரிசி, தேங்காய், எண்ணெய் முதலியவை ஏற்றுமதியாகக் கூடியவை என்று தெரிவிக்க, 1524ஹு வாஸ்கோடிகாமா என்னும் புகழ் பெற்ற போர்த்துகேய யாத்திரை வர்த்தகர் வந்து போனதாகவும், பிறகு 1526ஹு போர்த்துகேயர் முற்றுகைபோட்டு இதைப் பிடித்துக்கொண்டதாகவும், அப்போது பிரான்சின்கேன் பிரையர் என்னும் கிறிஸ்துமத போதகர் வந்து பிரசங்கம் செய்ததாகவும், பிறகு சில வருஷங்களுக்குள் போர்த்துகேயர் இந்நாட்டையும் இதன் கடற்கரையோர பட்டணங்களையும் பிடித்து வரி வசூல் செய்ததாகவும், சில சரித்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. பிறகு விஜயநகர சமஸ்தான நியமத்தின்படி பங்காரென்னப்பட்டவர் இராஜனாகி, போர்த்துகேயரோடு சமாதானஞ் செய்துகொண்டிருக்கையில், இக்கரை இராஜ குடும்பத்தார் படையெடுத்துவர, பங்காரின் அதிகாரம் பாழ்த்தது. அவர் கர்சாகா என்னுமிடத்திற்கு ஓடிப்போக, 1631ஹு இக்கரை இராஜாங்கத்தார் போர்த்துகேயரோடு சிநேகிதராகப் பங்காரின்பாடு நிம்மதியாயிற்று. ஆயினும், ஹைதராலி படையெடுத்துவந்து தாக்க இக்கரை இராஜாங்கம் ஓடிப்போய்விட்டது. 1670ஹு இங்கு போர்த்துகேயர் ஒரு பெரிய வர்த்தகசாலையைக் கட்டினார்கள். 1695ஹு போர்த்துகேயர் அராபிதேச வர்த்தகங்களுக்கு விதித்த வரியினால் அவ்வராபியர் இப்பட்டணத்தை நெருப்பிட்டு பஸ்பமாக்கினர். 18-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் பெட்னூரிலிருந்த இக்கரை இராஜாக்கள் போர்த்துகேயரைத்

ஆரத்தி யடித்தாலும், 1714ஹு இருகட்சியாருக்கும் ராஜி யாகி, மறுபடியும் போர்த்துகேயர் பண்டசாலை ஸ்தாபிக்கப் பட்டது. 1739ஹு முதல் 1754ஹுவரையில் இதை யாண்டு வந்த இக்கரை ராஜா பசுவப்ப நாயடு கட்டிவைத்த புரா தன கோட்டை இப்போது இடிந்து கிலமா யிருக்கின்றது. பெட்னூர்பட்டணம் ஹைதர் வசமாகிவிட 1760ஹு இந்த மங்களூரையே சுவாதீனம் செய்துகொண்டான். 1768ஹு பம்பாயிலிருந்துவந்த இங்கிலீஷ் சேனையானது இதைப் பிடித்துக்கொண்டது. பிடித்தும் பிரயோஜனப்படாமற் போயிற்று. மறுபடி 1791ஹு ஓர் இங்கிலீஷ் படை பிடித் தது. பிடித்தாலுமென்ன? 1793ஹு ஹைதராலி குமாரன் திப்புசுல்தான் படையெடுத்துவந்து ஆங்கிலேயரைத் தாக்க, அக்காலத்தில் மஹா வீரனாகவிருந்த கர்னல் காம்பல் தள கர்த்தன் 1794ஹு ஜனவரி௴ 30உ இதை திப்புவிக்கே கொடு த்துவிட நேர்ந்தது. அந்தக் கோட்டையானது டிப்பு சுல் தான் உத்திரவின்பேரில் இடித்துவிடப்பட்டது. 1799ஹு ஸ்ரீரங்கபட்டணம் இங்கிலீஷ்காரர் வசமாகியபோது இது வும் அவர் வசமாகிவிட்டது. 1837ஹு நடந்த குடகுதேசத் தாருடைய கலகத்தினால் இவ்விடத்திய கச்சேரி சுடப்பட் டது. இந்த மங்களூரைச் சுற்றிலும் ஜைன விக்கிரகங்களை இப்போதும் காணலாம. விசேஷ விக்கிரகம் கரிக்கோலா என்னு மிடத்தில் காணலாம். இவ்விடத்தில் கலெக்டர்- டிப்டிகலெக்டர் - தாலூகா சப்மேஜிஸ்ரேட் கச்சேரிகளும், ஜட்ஜி-முனிசீப் முதலான கோர்ட்டுகளும் இருப்பதன்றி யில்; இந்தியாவெங்கும் புகழ்பெற்ற ஜெசூட் கலாசாலையும், கவர்ன்மெண்ட் கலாசாலையும், அனாதர் பாடசாலையும், பெண் பாடசாலைகளும், ஆஸ்பத்திரிகளும் இருக்கிறதன்றியில், கிறிஸ்தவ கலாசாலைக் கருகில் கட்டப்பட்டிருக்கும் கோயில் சிங்கார சிற்பவேலையுள்ளதா யிருக்கிறது. பேசில் மிஷனைச் சார்ந்த ஓட்டுவில்லைகள் செய்யும் சாலையும், அச்சுவேலைக ளும், நெசவு சாலைகளு மிருப்பதன்றியில், புகையிலை, கரு வாடு, அரிசி, காப்பிக்கொட்டை, தேங்காயெண்ணெய் மிளகு முதலானவை ஏராளமாக ஏற்றுமதி யாகின்றன.

போர்த்துகேய கிறிஸ்தவர்கள் வெகு வருஷங்களாக இந் நாட்டிற் புகுந்து மதபோதனை செய்து வந்ததினால் சுதேச ரோமன் கிறிஸ்தவர்கள் மற்ற ஜில்லாக்களை விட இங்கு அதிகமா யிருக்கிறார்கள். இங்கு ஒரு பெரிய

பிரம்மசமாஜ சபையிருக்கிறது. இங்கிருக்கும் மங்களாதேவி யம்மைக்கு விசேஷ பூஜைகளையும் உற்சவங்களையும் செய்து வருகிறார்கள்.

இதற்கு இரண்டுமைல்கள் தூரத்திலிருக்கும் கதிரிக் கருகில் ஒரு புராதன சிவாலய மிருக்கிறது. இதற்கு 40 மைல்கள் தூரத்தில் குதிரைமுகமென்னும் மலை யிருக்கின் றது. இந்த மங்களூர் சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 550 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. ரெயில் சார்ஜ் சுமார் ரூபாய் 7-8-0 ஆகிறது. பாஷை கன் னடமும் துளுவமுமாம். இதற்கு 37 மைல்கள் தூரத்தில் உடுப்பியிருக்கிறது.

உடுப்பி கோகர்னத்தைப்பற்றிக் கங்காயாத்திரை புத்த கத்தில் பின் வருகிறபடி எழுதப்பட் டிருக்கின்றன:—

இது ஸ்ரீகிருஷ்ணதேவருக்குரிய பிரபலஸ்தலம். மத்வ மதஸ்தர்களுக்கு முக்கிய ஆசாரிய ஸ்தானம். ஆசார சீல முள்ள ஒவ்வொரு மத்துவனும் இவ்வுடுப்பிக்கு யாத்திரை சென்று முத்திராதாரணம் செய்துகொள்ளாமலிரார். ஆன ந்த சயனத்திற்போலவே இவ்விடத்திலும் காலவரையறை யின்றிப் பிராமணருக்கு இனமாய் அன்னமளிக்கும் ஊட் டுப்பிறை உண்டு. இது துளுவமத்தியதேசம். முக்கிய பாஷை துளுவம்; கன்னடமு முண்டு.

## திருக்கோகர்ணம்.

(மகாபலேஸ்வரர், பெரிய நாயகியம்மை, சிவகங்கை தீர்த்த முதலியன.)

இராவணன் தவஞ்செய்து தனது இலங்கை யழியா திருக்கும்பொருட்டுத் தாபித்துப் பூசிக்கச் சிவலிங்கமொ ன்று பெற்றுச் செல்வதை யுணர்ந்த தேவர்கள் விநாயக மூர்த்தியிடத்து முறையிட, அவர் பிரமசாரி வடிவத் துடன் இராவணன் முன்னே தோன்றி யவனுக்கு நீர் சுரக் கும்படி செய்தருள, கீழே வைக்கவொண்ணுதென்று பெற்ற அச் சிவலிங்கத்தை அப்பிரமச்சாரி கையிற்கொடுத்துசலவி சற்சனத்துக்குச் சென்ற இராவணன் வருமுன் விநாயகர் சிவலிங்கத்தைக் கீழேவைத்துவிட, அவ்விலிங்கத்தை யிரா வணன் தனது இருபது கரங்களாலும் பற்றியெழுப்பவும் வாராது, பசுவின் காதுபோற் குழைந்தமை நோக்கி இரா

வணால் மகாபல ஈஸ்வரரென்று பெயரிட்டுப் பூசித்து வணங்கிய ஸ்தலம். பசுவின் காதுபோற் குழைந்த காரணத்தால் கோகர்ணமென்றாயது திருநாவுக்கரசு சுவாமிகளாலும், திருஞானசம்பந்த சுவாமிகளாலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்—உ.

### ஸ்ரீ கோகர்ணம்.

உடுப்பியிலிருந்து வடக்கில் சுமார் 65 மைலிலுள்ள பச்சிமகாசியாகிய இத்திவ்விய க்ஷேத்திரத்தில் இலிங்க ரூபமாய் எழுந்தருளியிருக்கும் சர்வ ஜீவகாருண்யரான பரமசிவனது திரு உருவம் (கோ-பசு, கர்ணம்-காது) பசுமாட்டின் காதைப்போன்றது. இம்மகாலிங்கம் ஸ்ரீ காசி விஸ்வநாதரைப்போலவே பூமி மட்டத்திற்குக் கீழ் மிகவும் சிறிய ரூபத்துடன் மேன்மை தங்கிய ஆவுடையார் சூழப்பெற்றதாயு மிருக்கின்றது. இராவணேஸ்வரன் மகத்தான தவமியற்றிப் பரமசிவனிடம் மேலான வரங்கள் பெற்றதும், சங்காதாரணத்துக்காகப் பகீரதன் அருந்தவமியற்றிப் பரமசிவனைச் சத்தியவுலக கங்கையை யேற்கும்படி வரமடைந்தது மித்தலத்ததேயாம். இவர்கள் தவம் புரிருவதம் கோகர்ணத்திற்குத் தெற்கில் சமீபத்திலிருக்கிறது. இக்கோயில் கூடியவரையில் பெரிதாயுள்ளது. ஏபிரம்மோற்சவம் முதலியவைகளும் ஷட்கால பூஜாக்கிரமங்களுடனேயுங்கூடி நம்சோழதேசஏற்பாட்டைப்போல்நடக்கிறது. கோகர்ணத்திற்குச் சுமார் ஒரு பர்லாங்குக்கு மேற்கில் உயர்ந்த அலைகளோடுங்கூடிய சமுத்திரம் கோஷித்துக்கொண்டிருக்கிறது. அமாவாசை முதலிய பருவகாலங்களில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் சமுத்திர ஸ்நானத்துக்கு வருகிறார்கள். தவிரவும் ஊருக்குள்ளிருக்கும் புஷ்கரணி தீர்த்தமும், காய்த்ரீ நதியும் சாதாரண காலங்களில் ஸ்நானம்செய்யத் தகுந்தவைகள் தர்மான்ன சத்திரமும் தர்மசாலைகளு மிருக்கின்றன.

இம்மஹா சிவ க்ஷேத்திரமாகிய பச்சிமகாசியை (கோகர்ண ஸ்தலபுராணம் பார்க்க) தர்மாத்மாக்களான நம் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் கவனிக்குமாறு செய்ய ஈசன் அருள் புரிவாராக. கோயிலைச் சுற்றித் தேரோடும் வீதிகளும், கடைத் தெருக்களும், தாலூக்கா முதலிய கச்சேரிகளுங் கூடிய இச்சிறுபட்டணம் தென்னஞ்சோலை முதலியவைகளும், நெல்முதலிய தானியவகைகளும் விளை

யப் பெற்றதாய் வெகு செழிப்பான பூமியாயிருக்கிறது. மாக மாதத்தில்வரும் மஹா சிவராத்திரிக்கு இவ்விடத்தில் பிரஹ்மோற்சவம் நடைபெறுகிறது. இத்திவ்யக்ஷேத்திரத்திற்குப் பம்பாய் குஜராத்தி முதலிய வெகு தூரதேசங்களிலிருந்தும் யாத்திரையினிமித்தம் பன்னிரண்டு மாதங்களிலும் ஜனங்கள்வந்துகொண்டே யிருக்கிறார்கள். இந்த க்ஷேத்திரத்தி லெழுந்தருளியிருக்கும் பரமசிவனுக்கு மஹாபலேஸ்வர ரென்று சொல்லுவர். பரமசிவன் எழுந்தருளியிருக்கும் கைலையங்கிரியை இலங்காதிபதி தன்னாற் கூடிய வரை முயன்று பிடுங்கப்பார்த்தும் அசையக்கூடாதபடியால் உமாபதிக்கு இப்பெயர் காரணமாயிற்று.

## உடுப்பி சுப்பிரமணியர் கோவில்.

இந்த உடுப்பிக்கு 80 மைல்கள் தூரத்தில் ஸ்ரீ சுப்ரமண்யர் கோவில் இருக்கிறது.

இதற்குப் போகும் வழி, வண்டி வாகனங்கள் தாராளமாகப் போய்வரக் கூடியதாயிருக்கிறது. இக்கோயில் ஒரு மலையைக் குடைந்தாகிய குகை. இந்தக் குகைக்கோவிலுக்குள் சுப்ரமண்ய சுவாமி மயிலின்மீதிருக்கும் பாவனையாகச் செதுக்கப்பட்டு ஆடை ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருக்கின்றது. முற்காலத்தில் இதிலுள்ள ஒரு புத்தில் ஓர் பெரிய நாகசர்ப்பம் இருந்ததாகவும், அது கோவிலுக்குள் வரும் துஷ்டர்களைத் தாக்கித் துரத்தியதாகவுங்கேள்வி. இப்போது இக்கோயிலுக்குப் போகும் விதவைப் பெண்கள் ஒருவரை ஒருவர் கட்டிக்கொண்டு அழுகிறார்களாம். கோயிலுக்கருகில் தெப்பக்குளம் முதலிய ஜலவசதிக ளிருக்கின்றன. இங்குக் கொங்கினியரும், துளுவஜாதியரும் விசேஷமாக இருக்கின்றனர். சப்ரிஜிஸ்திரா ராபீசும் போலீஸ் பந்தோபஸ்தும் இருக்கின்றன. சாப்பாட்டுக்கு வேண்டிய பதார்த்தங்களும் இருப்பதோடு யாத்திரைக்காரருக்கு அனுகூலமாக அன்ன சத்திரங்களும் இருக்கின்றன.

## திருநாராயணபுரம்.

(நாராயணன், செல்வப்பிள்ளை, வரலட்சுமி, எதுகிரி நாச்சியார், எதுகிரி ஆநந்தவிமானம்; கல்யாண, வைகுந்த, பராசர, மைத்திரேய, தனுஷ்கோடி, யாதவ, உலோக பாவநாச, பாண்டவ முதலிய அஷ்டதீர்த்தங்கள்; கிழக்கு முகமாக நின்று கருடனுக்கு வைரமுடி மூலமாகப் பிரத்தியட்சமான ஸ்தலம்.

இந்தத் திருநாராயண புரத்தைப்பற்றி ஸ்ரீயாதவகிரி ஸ்தல புராணத்தில் பின் வருகிறபடி சொல்லப்பட்டிருக்கிறது:—

## ஸ்ரீ யாதவகிரி ப்ரசம்ஸை.

### ஸ்ரீ மந்நாராயணருடைய திருவசனம்.

தென் தேசத்தில் பொதியவரையின் கிழக்கில் காவேரியின் வடபுறத்தில் திருநாராயணகிரி யென்றொரு பருவதம் திகழ்கின்றது. அம்மலை ஆஸ்திகர் அடையத்தக்கதும், பவக்கடலி லழுந்தியவரைக் கரையேறச் செய்வதுமாயுள்ளது. அதன்கண் துயர்க்கடற்குக் குசனன் ஆதிதேவனை விதிப்படி யாராதித்துத் தவம் புரிந்து தனக்கிஷ்டமானவைகளைப் பெறுகின்றனன். யாம், இப்பதரிகாச்சிரமத்தி லுபதேசஞ்செய்கிற வுருவத்துடனும் அம்மலையிடத்து உபதேசஞ் செய்யத்தக்க வுருவத்துடனும் உறையாநின்றேம். அன்றியும், அத்தலம் எமக்கு இருதயஸ்தானமாயும் சுபகரமாயும், வேதங்களுக்கு விழியாயும், முக்திமுதன்மையாயும், முனீஸ்வரருக்குச் சகல சம்பத்தாயு மொளிர்கின்றது. வடதிசைக்கு இதுவும், தென்திசைக்கு அதுவுமாகிய இவ்விரண்டு தலமுமே யெமக்கு விசேஷ ஆச்சிரமங்களாயுள்ளன. அங்கு ஸத்வமே தலையெடுத்திருப்பதால் அது மிக்க மேம்பாடுள்ளதென் றுணரத்தக்கது. இயற்கையாக மானிடர்க்கு முக்குணங்களும் மாறி மாறி வந்திடினும் நாராயணசலத்தி லிருப்போர்க்கு ரஜோகுணமே கிடையாதென்றால், தாமோகுண முறுமென்பதற்குத் தடையென்ன? கேளிர் முனிவர்களே! ஸ்ரீரங்கம், வேங்கடாசலம், சத்யவிருத க்ஷேத்ரம், ஸ்ரீ வைகுண்டம் இவ்விடங்களிலுள்ள விசுவாசம் எமக்கு அவ்விடத்து முண்டு. அங்கு ஆதிசேஷன்: வைனதேயன் முதலானவர்களோடு யுகங்கள்தோறும் சர்வசேஷியான வெமக்குக் கைங்கர்யம் செய்துகொண்டிருக்கின்றனன்.

அவன் முதலில் அனந்தனுகியும்; லக்ஷ்மணனுகியும், பின்பு பலபத்திரனுகியு முருவெடுத்தும், இனிக் கலியிலும் ஓரவதாரஞ் செய்யப்போகின்றனன். நாம் துவாபரயுகத்தில் ராமகிருஷ்ணர்களால் பூஜிக்கப்பெற்றேமாகையால் அதை யாதவகிரி யென்று உலகத்தா ருரைக்கின்றனர். ஆயிரஞ் சிகரமுள்ள ஆதிசேஷரூபமான அத்தடங்கிரியில்

வைகுந்தத்தி லிருப்பதினும் அதிகமான பிரீதியோடு யாம் திருமகளோடு அங்கு வசித்திடுகின்றோம். திருவைகுந்தமாதியான சகல திவ்விய க்ஷேத்திரங்களின் மகிமையையுடைய அந்தத் திருமலையொன்றையே சேவிப்பவர் எமது திவ்விய தேசங்களை யெல்லாந் தரிசித்த பயனை யடைகின்றனர். வைகுண்ட வாசிகளாகிய வைனதேயன் ஆதிசேஷன் முதலான யாவரும் யதுகிரியில் தாவர சங்கமங்களா யுதிக்கின்றனர். யாமும் அதன் சிகரத்தின்கண் பதரீவிருக்ஷமாயவதரித்துச் சனகாதி முநிவர்களால் துதிக்கப் பெற்று வசிக்கின்றோம். அவ்விடத்திலுள்ள பசு பக்ஷிகளையும் பிராகிர்த மனிதர்களையும் பயங்கரராகிய யமதூதர் தூரத்திலிருந்தே தெண்டனிட்டுச் செல்லுகின்றனர். யாதவசைலத்திற்குப் போகவேண்டுமென்னும் விருப்புள்ளவர் அயல்தேயத்தி லிருப்பினும் அவரையும் யமதூத ரொருபோது நணுகமாட்டார். ஆகையால், நீவிரனைவரும் அவ்விடம் போந்து ஸம்ஸார தாபசாந்தியினிமித்தம் தக்க காலங்களில் மிக்க விசேஷமான கலியாண தீர்த்தத்தை யடைந்திடுக! அதிக விரதசீலராயுள்ள யதிகளும் அத்தீர்த்தத்திலாடி இரைந்தெழுகின்ற திரைகளையுடைய பவசாகரத்திலிருந்து வெளிக்கிளம்பாநின்றனர்.

விழுமியோருக்கு விருப்பமாயுள்ள அத்தீர்த்தத்தி லெமக்கிருக்கும் விசுவாசம் புஷ்கரத்திலும் கங்கையிலும் யமுனையிலு மிராது. நாஸ்திகன், செய்நன்றி குன்றியவன், பழிபகர்வோன், இதரர் குணங்களைப் புகழ்வதி லிஷ்டமில்லாதவன், தன்னைத்தானே மெச்சுபவன், வேள்விக்கு விக்கினஞ்செய்பவன், வேதமோதலைத் தூஷிப்பவன், அயன்மாதருடன் ஆசைகொள்பவன், பந்திவஞ்சனை பண்ணுபவன், பிறருடைமைகளை யபகரிப்பவன், பாஷாண்ட மதத்தைப் பக்தி பண்ணுபவன், சூத்திரான்னத்தைப் புசிப்பவன், சவமுதலியவையோடு பயில்பவன், தர்மத்தைவிற்பவன், சிராத்தத்திற் புசிப்பவன், ஊர்ப்புரோகிதம் புரிபவன், தெய்வப் பொருளைக்கைவசஞ்செய்பவன், அகங்காரடம்பாதிகளுள்ளவன், நாடோறும் கரவாசஞ் செய்பவன், ராஜசேவையால் ஜீவிப்பவன், கன்னிகையை விற்பவன், காக்கையைப்போல் கண்டபடி யுண்பவன், பசுக்களுக்குப் பருவரலாற்றுபவன், பார்ப்பாரைப்பழிப்பவன், விஷ்ணுபக்திக்குவிகாதமிழைப்பவன், சூத்திரமாதைப் புணர்பவன், சௌசாசாரங்களைக்

கைவிட்டவன், சரணாகதகர்தகன் முதலான மற்றுமுள்ள பாவிகளும் அந்த நிர்மல தீர்த்தத்திலாடித் தத்தம் பாவங்களைப் பறக்கடிக்கின்றனர்.

அங்குச் சிறிது தூரத்தில் எம்மைத் தரிசித்தவர் தீவினையெல்லாம் தூரவிலகத்தக்க நரசிங்ககிரி யென்று ஓர் மலையுளது. அதையும் அன்போடு வணங்கக்கடவீர்! அதன்மீது மகாபாகவதனாகிய பிரஹ்லாதாழ்வான் விசேஷ பக்தியால் சிங்கவுருவாய் விளங்கும் எம்மைப் பிரதிஷ்டை செய்துளன். எம்மைப் பணியவேண்டி யதன்மேல் ஏறுபவர் பவக்கடலின் சுழியிலகப்படாதவராய் அறம் பொருள் இன்பத்தை முறையே யடைந்து கடைசியில் முக்தியும் பெற்று வாழ்கின்றனர். கல்யாண தீர்த்தத்தின் மேற்புறத்தில் அஞ்ஞானவாரக மென்னும் அபிதானமுள்ள வொரு அரசமரங் காணப்படுகின்றது. அதன் கீழ் அம்பரிஷன், விகுக்ஷி, ருக்மாங்கதன், சுகர், புண்டரீகர் ஆகிய இவ்வைவரும் முன்பு ஒரு காலவிசேஷத்தில் எம்மை யுபாசித்தபடியால் அவ்விடத்திற்குப் பஞ்சபாகவத ஸ்தானமென்று பேர் வாய்ந்தது. அந்த ஸ்தலத்தின் தெரிசனத்தினாலேயே பாதகமனைத்தையும் போக்கடித்துக்கொள்ளும் எமது பக்தர்களுக்கு இஷ்டமான பயன்களையெல்லாம் யாம் உதவுகின்றோம். கல்யாண தீர்த்தத்தின் கீழ்ப்புறத்தில் நரசிங்ககிரியின் அடிவாரத்தில் அஷ்டசித்தி பெறத்தக்க வராகக்ஷேத்திர மிருக்கின்றது. வராகரூபியாகிய பகவான் பூமியை நோக்கி வேதத்தின் சிரோபூஷணமான இரண்டு சுலோகங்களையங்கே பிரசாதித்தருளினர். அதை வைகுண்ட வர்த்தனமென்று உண்மையா யுரைக்கின்றனர். அந்த க்ஷேத்திரத்தினளவு இரண்டு யோசனை விஸ்தாரமென் றுணரத்தக்கது. அப்பர்வதம் எவ்வளவு தூரந் தோன்றுகின்றதோ அதுகாறும் முக்தி க்ஷேத்திரமென்று மொழியப்படுகின்றது. தபோதனர்களே! அங்கு சுத்த ஸத்வமயமான ஆனந்தமயமென்று பேர் பெற்ற எமது விமானம் விளங்காநின்றது. அதன் கீர்த்தனத்தாலும் தர்சனத்தாலுமே ஜன்மமுதல் மரணபரியந்தம் இழைக்குந் தீவினை யாவுந் தொலைந்துவிடுமெனில், வணங்குவதால் வரும் பயனை வாயினல் வழங்கி முடியுமோ.

அது உலகங்களி னுச்சீவனத்தின்பொருட்டு முதலாவதான கிருதயுகத்தில் வைகுந்தத்திலிருந்து எமது சங்கற்பத்தா லிறங்கி யங்கே யொளிர்கின்றது. அந்த விமானத்

திற்குப் பின் பிராகாரத்திடையில் இஷ்டத்தைக் கொடுக்க வல்ல சுதர்சனமும் ஸ்ரீதேவியும் விளங்காநின்றனர். அவ் விடத்தில் திருவலகிட்டு மெழுகிக் கோலம் வரைந்து தீப மேற்றுகிறவர்: பக்கங்களில் பனிகிரணனின் கதிர்க்கற்றை போன்ற கவரிவீச வெண்குடையின் கீழ் வீற்றிருந்து சார்வ பௌம பதம் பெற்றுப் புத்திர பௌத்திராதியரோடு சந் தோஷமாய் வாழ்ந்து, முடிவில் எமதருளால் சேஷசேஷா சநாதியரினும் மேலான பலத்தைப் பெறுகின்றனர். சர்வ சேஷியாகு மெமக்குச் சகல சராசரங்களும் இஷ்டமான வையேயாயினும் தேவதாந்தர பக்தி பண்ணுபவரை மாத்தி ரம் யாம் அவர் மனவுறுதியைச் சோதித்திடுகின்றோம். அத்தலத்தின்கண் மிக்க பரிசுத்தமாயுள்ள மிருத்திகையை லலாடத்திலும் மற்ற தகுதியான அங்கங்களிலும் பக்தி யோடு தரித்துக்கொள்ளும் பாகவதர்களுக்குத் தானவராதி யாயுள்ள பூதப்ரேத பிசாசங்களும் வேதாள ஜாதிகளும் வெருவி யோடுகின்றன. அந்த ஸாத்விக ப்ரகிருதியினும் சுத்தமான திருமண்ணை வைநதேயன் எமதாணையால் சுவேதத் தீவிலிருந்து கொணர்ந்து யாதவாசலத்தின்கண் வைத்திட்டனன். ஆகையால் சுத்தசத்வமயமா யிலகும் அந்த க்ஷேத்திரத்தை யடையக்கடவீர்" எனச் சொல்லி அங் குள்ள அஷ்டதீர்த்த மகிமையை யுரைக்கலுற்றார்.

---

## அஷ்டதீர்த்த மகிமை.

"அப் பருவதத்தின் வடபுறத்தில் நிர்மலமாகிய கல் யாணியென்று கழறப்பெற்ற வேண்டியவைகளை வேண்டி யாங் குதவும் தாரையொன்று வீழ்கின்றது. அது விஷ்ணு பதத்திலிருந்து வீழ்கின்றதால் விழுமியோர் வைகுண்ட கங்கையென்று வழங்காநின்றனர். அதைப் பருகுவோரும் அதன்தீரத்தி லுறைவோரும் அஞ்ஞானம் அகன்று மெய்ஞ் ஞானமடைந்து நித்திய சூரிகளோடு வைகுண்டத்தில் பேரானந்த முறுகின்றனர். சங்கரனது சடாமண்டல மாலை யாய் வீழ்கின்ற விஷ்ணுபதியென்னும் கங்கை திரிவிக்கிரம ஸ்வரூபியின் பாதாம்புயத்தை நான்முகன் துலக்குங்கால் உதித்தது. வைகுண்ட வாசிகளான நித்தியசூரிகள் புண்ய

தீர்த்த விருப்பத்தால் அத் திருவடியை மறுபடியும் விரஜா நதியின் தீர்த்தத்தில் விளக்கியதால் யாதவகிரியின் பாங்கர் வீழ்கின்ற இதற்கு வைகுண்ட கங்கை யென்னும் பெயர் வாய்ந்தது. எமது பதத்தைத் துதிப்பதே விரதமாயுள்ள பக்திஸாரரென்ற மகா யோகியானவர் அவ்விடத்தி லெமதடியைத் தியானித்துத் திரு வைகுந்தத்தில் திகழ்கின்றனர். அவ் வைகுண்ட தீர்த்தத்தின் புரோக்ஷணத்தாலேயே எமதுபதத்தை யடைதற்குவிரோதமான காமாதி தோஷங்கள் நசித்துச் சமாதி சற்குணங்க ளுண்டாகின்றன. முக்திக்கு நயனமாகையால் அங்கே நயனஸ்தான மென்றோர் புண்யஸ்தல மிருக்கின்றது. ஆங்கு மகத்துக்கள் எக்காலும் கேசவசாந்தித்யம் பெறுகின்றனர். அந்த நயனஸ்தானத்தில் நாராயணஹ்ரத மென்றோர் புண்ய தீர்த்தமுண்டு. அதன் தடத்தில் அநாயாசமாய் மந்திரசித்தி யடைகின்றனர். அதைத் தரிசித்தபோதே துயரனைத்துந் தொலைகின்றன. விபுதோத்தமரும் விரக்தருமான விஷ்ணுசித்தர் அங்கு வீற்றிருக்கின்றகேசவனைத் தியானித்து நாராயணனடியைச் சரணமடைந்து பரமபதத்தைப் பெற்றனர். நரகமாகிய நெருப்புக்கு நாசகரமான நாராயணஹ்ரத ஸ்தானம், நரர்க்கு மரணகாலத்தில் நாராயணபத ஸ்மரணத்தைச் செய்கின்றது.

இதற்குத் தென்புறத்தில் கல்யாணதீர்த்த வடபாரிசத்தில் தீம்புனலான பராசரமென்னும் புண்யதீர்த்த முளது. முன்பொருகால் எமது பக்தரான பராசரர் அத் தீர்த்தக் கரையிலிருந்தே விஷ்ணுபுராணத்தை யியற்றினர். தென்னாட்டி லுறையுஞ் சில பெரியோர் அதை மைத்ரேய குண்டமென்றும் வழங்காநின்றனர்.

அத்திருமலையின் வடமேற்கில் யாதவி யென்னுமொரு தரங்கிணி யொழுகுகின்றது. அதன் தீரத்தின்கண் தூய்மையான யஜ்ஞவிருக்ஷமும், கதிரவிருக்ஷமும், பலாசமரமும் கும்பல் கும்பலாய்ச் செழித்துள்ளன. அத்தலத்தி லெம்மையாராதிப்போர் எமது மீளாகதிக்கு ஆளாகின்றனர். அந் நதிக்கரையில் யாதவேந்திர னென்னும் நரேந்திரன் தவமிழைத்து முன்னர் இந்திரபதத்தையும் பின்னர் பரமபதத்தையும் பெற்றனன். அவ் வெதுகிரியி னடியில் தென்புறமாகப் பரிதானசிலையென்று பகரத்தக்க வொருபாறையிருக்கின்றது. அதை அந்தணச் சிரேஷ்டர்கள் கண்டு வண

க்காநின்றனர். அதைத் தொழுபவரெல்லாம் சுராசுரர்களால் வணங்கப்படுகின்றனர். சுத்த ஸத்வ மயமாகிய அச்சிலை, தன்னை நமஸ்கரிப்போர்க்கு அங்ஙனே ஸத்வத்தையுதவுகின்றது. ஆதியில் சாக்கிய பாஷண்ட காணுதர் முதலான வேறு மதஸ்தர் பூதலத்தின்கண் வக்ர வசனங்களால் வேதத்திற்கு அபார்த்தத்தைச் சொல்லி வருத்துகையில் யாம் திரிதண்டந் தரித்துக் காஷாயமுடுத்து யதிவேஷத்தோடு தத்தாத்ரேயரென்று பேர்பூண்டு ஆரணங்களாகும் அந்தேவாசியருடன் அவ்விடத்திலிருந்தே அப்பரமதஸ்தரைப்பறக்கடித்தோம். அங்ஙனம் அப்பாறையின்கண்ணே யாம் காஷாய பரிதானம் புரிந்ததால் அதற்குப் பரிதானசிலையென்று பேர் வாய்ந்தது. அதனிடையே காஷாயம் பெறுபவர் எமதடியார்க்குள் உத்தமோத்தமராய் நாமாகவே பாவிக்கப்படுகின்றனர். சிஷ்யருக்கு மறைகளை யங்கே யதார்த்தமா யுபதேசித்தோ மாகையால் அவ்விடத்தில் வேதபுட்கரணி யென்றோர் தீர்த்தமுள்ளது. அப்பொருப்பினருகே வேதபுட்கரணியின் மேற்புறத்தில் யாம் சந்நியாசியுருவத்தோடு தர்ப்பங் கொய்துகொண்ட விடமாகையால், அங்கே தர்ப்ப தீர்த்தமென்று சொல்லப்பெற்ற மகாமகிமையுள்ள புண்ய தீர்த்தமொன்று பிரசித்தமாயுள்ளது. அங்கு முன்பொருகால் பாஞ்சராத்ர விதிகர்த்தாவும் பாஞ்சகாலிக தருமத்தை விசதம் பண்ணியவருமாகிய சாண்டில்ய முனிவர் எம்மை வழிபட்டனர். கடைசியில் அக்குசங்களைக் கொணர்ந்து பரப்பி யதன்மேற் சயனிப்பவர் பவதுக்கத்தை யொழித்து விழுமிதான எமது பதத்தை யணுகாநின்றனர்.

பற்றொழித்த பரமரிஷிகாள்! பூதரத்தின் மேற்புறத்தில் பெரியோரால் பலாசதீர்த்தமென்று கொண்டாடப்பெற்ற வொரு மகாதீர்த்தமுண்டு. ஆதியில் கௌசிக முனிவராற் சாபமுண்ட வசிஷ்ட புத்திரர்கள் அங்கே யெமதனுக்கிரகத்தால் தங்கள் சாபத்தை யொழித்து மகிழ்ச்சியடைந்தனர். அதற்குச் சிறிது வடபாகத்தில் அம்புயமலர்களடர்ந்ததும் அதிக மகிமை யுள்ளதுமான பதுமதீர்த்த மென்றொன்றுண்டு. ஸனத்குமாரர் சனகாதிமுனிவரோடு மெம்மையும் மலர்களால் அர்ச்சித்தனர். அத் தடாகத்திலுள்ள தாமரை மணிமாலையை நாடோறுங் கண்டத்தி லணிபவர் ஸ்ரீ வைகுந்தத்தை யணிகின்றனர். இங்ஙனம் கல்யாண

தீர்த்தந்தைச் சூழ்ந்து பரிசுத்த ஜலமுள்ளதும் அஷ்டாக்ஷர மயமானதும் சகல தீர்த்தங்களினு மேலானதுமான அஷ்டதீர்த்த முண்டென்று சிறந்தவர் செப்புகின்றனர். இத் தீர்த்தங்களை நெஞ்சினால் நினைப்பவரே தந்தீவினை முற்று மகன்று புனிதராவரென்றால், அவைகளில் ஆடுபவர் பெருமைக்கோ ரளவுமுளதோ? அவற்றின் கரைகளிற் செழிக்குந் துளசிமணிவடம் புனைந்திடுவோரைத் தெரிசித்தலாலே மாபாவிகளும் தந்தீவினையைக் கழிக்கின்றனர். யதுசைல சிகரத்தில் யதிகளெல்லோரு மெம்மை எக்காலும் அடைகின்றனர். வேறிடத்திற் புரியும் புண்யத்தினும் புண்ய க்ஷேத்திரங்களி லாற்றுவது பதின்மடங்கதிகம். அதினும் புஷ்கரத்திற் செய்வது நூறுபங்கதிகம். அதைவிட ப்ரயாகையி லிழைப்பது ஆயிரமடங்கு விசேஷம். அதனினும் சாளக்கிராமத்திற் செய்வது கோடிபங்குமேல். அதுநீங்கயாதவகிரிக்கண் புரிவது சதகோடியதிகம். எமது அடியார்க் கெதிரி லிழைப்பது அவர் பார்வையாற் பரிசுத்தமுற்றுக் கோடி கோடி குணஞ் சிறக்கின்றது. சத்ருருக்களுக்குத் துர்த்தரிசனமும் எமது பக்தருக்குச் சுதரிசனமுமாகும். சக்கரத்தாழ்வான் யதுசைலத்தைக் காக்குநிமித்தம் தன நொளியை வீசி யெப்போதும் அதைச் சுற்றி வருகின்றமையின், அங்கு எமதடியாரைப் பீடிப்பவர் அச்சுதர் சனமகா ஜ்வாலையின் வரிசைக்குச் சுலபமாகின்றனர். துவாபரயுகத்தின் இறுதியில் அங்குப் பிரவேசிப்பதற்கு விரைவாயோடி வருகின்ற கலிபுருஷன், கையில்பிரம்பையுடைய எமது சிங்கரரால் அப்போதேயடியுண்டு திரும்புகின்றனன். ஒருவருஷமாயினும், ஒரு திங்களாயினும், ஒரு பக்ஷமாயினும், எழுதினமாயினும், அன்றி மூன்று இரவாயினும், ஒரு நிசியாயினும் யாதவசைலத்தில் வசிப்போரே எமக்கு உவப்பான பக்தரன்றி மற்றவராகார். அன்றியும், பங்குனிமாதம் பௌர்ணமியில் ஒரு யாமமாயினும், அதிற் பாதியாயினும் அவ்விடத்தி லெம்மைப் பஜிப்பவரைக் குழவியை அன்னை காப்பதுபோல் யாம் காத்திரக்ஷிக்கின்றோம்.” இதன் மகிமை இன்னும் பலவிதமாகப் புகழ்ந் தெழுதப்பட்டிருக்கின்றது. நிற்க;

1884 ஷு நாம் இந்த யாதவ்கிரி யென்னும் மேல்கோட்டையை நேரில் போய்ப் பார்த்து அதன் விவரத்தை அங்கிருந்த படிப்பாளிகளான சில பெரியோர்களை விசாரித்த

தில் அவர்கள், நாரதீயபுராணம் ஞானகாண்டத்தில் சனத்குமாரர் நாரதருக்குச் சொல்லிய விவரத்தை அனுசரித்தும், இந்துமதப்பிரகாசிகை யென்னும் சஞ்சிகையில் கண்ட சங்கதியை அனுசரித்தும், கர்ணபரம்பரையாய் அறிந்து எமக்குத் தெரிவித்த சங்கதிகளை யனுசரித்தும் அறிவித்ததைச் சங்கிரகமாக இதனடியிற் பதிப்பித்திருக்கிறோம்.

---

## மேல்கோட்டை என்னும்
## திருநாராயணபுர மஹாத்துவம்.

### பூர்வஸ்திதி.

துவாபரயுகத்தின் கடைசியில் ஜம்புத்வீபமென்னும் நமது இந்துதேசத்தின் தக்ஷிணபாகத்தில் பவுத்த ஜைந பாஷாண்டிகள் அதிகமாகி நரஜீவர்களுக்கு நாஸ்திகத்தைப் போதித்து அவதிப்படச்செய்யும்போது, பதரிகாச்சிரமத்திலிருந்த மஹர்ஷிகள் பரிதபித்து ஸ்ரீமந்நாராயண மூர்த்தியினிடம் முறையிட, அவரும் அதற்கு இரங்கி, தக்ஷிண தேசத்தில் குடகுநாட்டுக் கடுத்த சகிய பர்வதத்திற்குக் கிழக்கும், காவிரிநதிக்கு உத்திரபாகமுமாக விருக்கும் உன்னதமலைச் சிகரத்தில் வந்து சகலருக்கும் சேவைசாதித்து ஆஸ்திக ராக்குவதாகவும், அந்தவிடமே தமது ஹிருதய பிரதேசமாகும் தக்ஷிண பதரிகாச்சிரமமாகக் கொண்டாடப்படுமென்றுந் திருவுளம்பற்றியபடியால் அநேக யோகிகள், ரிஷிகள், எதிகள் வந்து சேவைசெய்து சகல சுகங்களைப்பெற் றுய்கையில், கலியுகம் பிறக்கவே, அந்த மஹாத்மாக்கள் மறைந்துநின்றார்கள்; அப்போது யாதவரென்னும் இடையர்கள் ஷை மலையின்மேல் குடிபுகுந்து மாடு மேய்த்து வருங்காலத்தில் அவர்களுடைய பசுக்களின் பால் பெருமாளுக்கு உவப்பாயிருந்து உண்டுவந்தமையால், அவ்விடையர்கள் பாலில்லாமல் வருந்தி தமது காட்டுராஜனிடம் முறையிட்டார்கள்.

அப்போது அந்த இராஜன் வந்து மலையைச் சுற்றிப் பார்க்கும்போது மத்தியில் திவ்வியமான ரூபத்தோடு கூடிய பெருமாளிருக்கக்கண்டு அவரைச் சேவித்து அங்கு ஒருசிறிய கோயிலைக் கட்டிவைத்தான். பிறகு ஷை காட்டுராஜனுக்கு விஷ்ணுபக்தி நாளாவட்டத்தில் விருத்தியாகிவரவே, பல

விதத்திலும் கொண்டாடிக் குறைகளை நீக்கிக் குபேரசம்பத்துடனும், குணசிரேஷ்டனாகவும் வாழ்ந்து வந்தான். இந்த ராஜனுக்குப் பிறகு வந்த ஜைநர் வேளாளசமய ராஜனாகிய விட்டல தேவராஜன் ஜைநர் சமயத்தில் தொண்டனூரில் அவதிப்படவே, தக்ஷிணதேசத்தில் வைணவசமய ஸ்தாபகராக எழுந்தருளிய ஸ்ரீராமாநுஜாசாரியாரவர்கள்: கரிகாலசோழன், கிருமிகண்டசோழன் முதலானவர்களுடைய துஷ்கிருத்தியங்களுக்கஞ்சியும், சிஷருடைய உதவியிஞ லிவ்விடம் வந்தும், வைணவ ஸத் சம்பிரதாயத்தைப் பரவச்செய்தும், அநேக சமணர், சாக்கியர்களை (ஆதிசேஷாவதாரமாகி) தர்க்கத்தினல் வென்றும், ஷை விட்டல தேவராஜனுடைய மகளின் வியாதியை நீக்கியும், பிடித்திருந்த பிரம்மராக்ஷதனை ஓட்டியும், ஷை அரசனைத் தமது சிஷனாக்கியும், அவனுக்கு விஷ்ணுவர்தனென்னுந் திருநாமத்தைச் சூட்டியும், இவ்விடத்தில் 12 வருஷகாலமிருந்து வைணவசமயத்தைப் பலவிதத்திலும் பரவச்செய்தார்.

அப்போதுதான் மேல்கோட்டையாகிய இந்த யாதவகிரிக்கு திருநாராயணபுரமென்று பெயரிடப்பட்டது. பிறகு மகம்மதியர் கலாபனையில், டில்லிபாச்சாவானவர், அநேக உற்சவ விக்கிரகங்களை யெடுத்துக்கொண்டுபோய்விட்டதைப்போலவே, இவ்விடத்திய உற்சவ விக்கிரகத்தையும் கொண்டுபோய்த் தனது குமாரத்திக்குக் கொடுத்துவிட, ஸ்ரீராமாநுஜாசாரியர் டில்லிபாச்சாவிடத்திற்குப் போய், "ஏ! செல்லப்பிள்ளையே வாராய்!" என்றழைக்க, அந்த உற்சவர் கலகலவென்று எழுந்தருள, அதை யெடுத்துக்கொண்டு நாச்சியாருடன் புறப்பட்டுவந்தார். அப்போது பாக்ஷாவின் வீரர்களும், வேறு திருடர்களும், ஸ்ரீ இராமாநுஜரைத் தாக்கவருகையில் திருகுலத்தாரென்னும் பஞ்சமர் உதவியாக வந்தமையால் யாதொரு அபாயமு மின்றி இந்தத் திருநாராயணபுரத்துக்கு வந்து ஸ்ரீரங்கம் பெரிய கோயிலில் ஸ்தாபிதமான நித்திய நைமித்திக பத்ததிகளின்படி ஸ்ரீபாதம் தாங்கிகள், அர்ச்சகர், அரையர் முதலானவர்களைத் தருவித்தும், அவ்விடத்திய நித்தியநைமித்திகநடவடிக்கைகளை யனுஷ்டிக்கச் செய்வித்தும், பிறகு தாம் ஸ்ரீரங்க முதலான விடங்களுக்குப் போகப்பிரயத்தனப்படுகையில் இவ்விடமிருந்த பக்தர்களும், சீடர்களும் மனவருத்தமுற்று ஸ்ரீ இராமாநுஜரை இவ்விடமே இருக்கவேண்டுமென்று

பிரார்த்திக்க, அவர், அப்படிச் செய்தல் அசாத்திய மென்றும், தமக்குப் பிரதிநிதியாக மூலவர் உற்சவர் விக்கிரகங்களைச் செய்வித்து அவைகளை ஆலிங்கனம் செய்தும், அன்றுமுதல் பலிபீடத்தினிடம் தாம் அப்ராகிருத ரூபமாகவிருந்து "உடையவரே!" என்று கூப்பிடும்போதெல்லாம் "அடியேன் இருக்கிறேன்" என்று பிரதிபலிக்கச் செய்வித்தும், தாம் தென் தேசங்களுக்கு எழுந்தருளினர். அன்றுமுதல் அவர் நியமனங்கள் சரியாக நிறைவேறி வருகின்றன. அவர் காலத்தில் கட்டிய இந்தக் கோயில் எண்பது கெஜ நீளமும், அறுபதுகெஜ அகலமுமுள்ள அழகிய சிறு கட்டிடம். இதினுள்ளிருக்கும் மூலவராகிய திருநாராயணரும், உற்சவராகிய செல்வப்பிள்ளைராயரும், வரலக்ஷ்மித் தாயாரும், எதுகிரி நாச்சியாரும், மகா திவ்வியமாக சேவை சாதிக்கிறார்கள். உற்சவருக்கும், மற்றவர்களுக்கும் நித்தியபடி திருவாபரணங்கள் இலக்ஷம் ரூபாய் விலையுள்ளவை. மற்ற நகைகளுக்கு விலை சொல்ல முடியாது. இந்தக் கோயிலைக் கட்டி அதற்கு வேண்டிய திருப்பணிகளைச் செய்வித்த விஷ்ணுவர்தனென்னும் இராஜனைப் போலவும், அவர் மனைவிகளைப் போலவும், சிலாவிக்கிரகங்கள் செய்யப்பட்டு அவை கோவிலுக்குள் வைக்கப்பட்டிருக்கின்றன.

## வைரமுடி உற்சவ வைபவம்.

பங்குனிமாசம் புஷ்யநக்ஷத்திரத்தில் வைரமுடி உற்சவம் நடக்கின்றது. இது விலையற்ற வைரம் முதலான இரத்தினங்களால் செய்யப்பட்டிருக்கிறது. இது ஒருகாலத்தில் அநிருத்தர் கிரீடமாகவிருக்க, அதை விரோக்ஷகன் என்னும் கொடிய இராக்ஷதன் திருடிக்கொண்டு போய்விட்டானும். பிறகு கருடபகவான் கொண்டு வந்து இராமகிருஷ்ணர்களுக்குச் சமர்ப்பிக்க, அவர்களிடமிருந்து இந்தச் செல்வப்பிள்ளைராயருக்கு வந்ததாம். இஃது மைசூர் மஹாராஜா ஸமஸ்தான பொக்கிஷத்திலிருந்து வருஷாந்திர உற்சவத்திற்குக் கொண்டுவந்துவைத்து மறுபடியும் கொண்டுபோய் அதே பொக்கிஷத்திலேயே பத்திரப்படுத்துகிறார்கள். இந்த உற்சவத்திற்கு எண்ணிறந்த ஜனங்கள் பல தூரதேசங்களிலிருந்து வருகிறார்கள். இந்த வைரமுடி காலத்தில் செல்வப்பிள்ளைராயர் கிழக்குமுகமாக நின்று கருடனுக்குப் பிரத்தியக்ஷமானாராம்.

இந்த வைரமுடி உற்சவமான மூன்றும் நாளில் இரத உற்சவமும், இந்த உற்சவமான மூன்றும் நாளில் தீர்த்த வாரி உற்சவமும், வெகு விநோதமாகவும் கம்பீரமாகவும் நடந்தேறி வருகின்றன. இவ்வுற்சவ காலங்களில், திருகுலத்தாரென்னும் பஞ்சமரும் வந்து தீர்த்தமாடி, கோயிலுக்குள் புகுந்து பெருமாளைத் தரிசிக்கிறார்கள். இந்த இரண்டரை தினத்துக்கு ஜாதிபேதம் பாராட்டக் கூடாதென்று உடையவர் நியமனமாம். இந்தத் திருகுலத்தார் காரமடையில் தாதர்கள் செய்வதைப்போல கவாளமெடுத்தலும், காவடியெடுத்தலும், சிரோபாரம் நீக்கி, பலவிதமாகக் கொண்டாடுகிறார்கள். இந்தத் தேவாலயம் மைசூர் ஸமஸ்தானத்தின் ஆதீனமானபடியால், ஷை சமஸ்தானத்தார் வருஷம் ஒன்றுக்கு 23,000 ரூபாய் செலவுக்குக் கொடுத்து வருகிறார்கள். இப்போது இந்தக் கோயிலில் 215 சிப்பந்திகளும், 48 அத்தியாபகர்களும், 200 பட்டமாணியமடைந்த ஸ்வஸ்தி சொல்லப்பட்டவர்களு மிருக்கிறார்கள். இவ்வளவு பிரபலமான கோயிலுக்குப் போதுமான வருமானம் இல்லாமையால், சுமார் 800 வருஷங்களுக்குமுன் கட்டின கட்டடம் அப்போது இடிந்து கிலமாயிருப்பதோடு ஷை கட்டடங்களைப் புதுப்பிக்கவும், ஸ்மார்த்தர்கள் மாத்துவர்கள் தங்குவதற்குச் சத்திரம் கட்டவுங் கூடவில்லை. இந்தக் கோயிலைச் சுற்றிலும் கல்யாணி, வேதபுஷ்கரணி, தனுஷ்கோடி, யாதவ தீர்த்தம், தர்ப்பதீர்த்தம், பலாசுதீர்த்தம், பத்மதீர்த்தம், மைத்ரி, நாராயண தீர்த்தம் என்ற திருக்குளங்களும் தடாகங்களு மிருப்பதன்றியில், வைகுண்ட நதியென்னும் ஒரு சிறு அருவியும் ஓடுகின்றது. ஆநந்தவிமானம் அழகில் சிறந்தது. அருகிலிருக்கும் நரசிம்ம ஸ்வாமிமலை பலவிதத்திலும் சிறந்தது. மலையின்பேரில் அழகிய கோபுரமும், குகையும், நரசிம்மர் சந்நிதியும், தொட்டிதீர்த்தமு மிருக்கின்றன. இப்போது இந்தத் திருநாராயணபுரத்தில் சுமார் 400 பிராமணர் வீடுகளும், 400 மற்றவர் வீடுகளு மிருக்கிறதன்றியில் எதிராஜர், வானமாமலைஜீயர், பரகாலர், அழகிய மணவாளர், அஹோபிலஜீயர் முதலானவர்களுடைய மடாலயங்களு மிருக்கின்றன. இவைகளன்றியில், அநேக புராதன கல்மண்டபங்கள் கிலமாகி அபாயஸ்திதியி லிருக்கின்றன. இத்தியாதி கட்டடங்களையும், கெடுதியுற்று நாற்றமடைந்திருக்கும் தீர்த்தங்களையும், புதுப்பிக்க எந்தப் புண்ணியவான்கள் ஜனிப்பார்களோ

தெரியவில்லை. இதற்குச் சமீபமான ஓர் காட்டில் திவ்யமான ஸ்வேத மிர்த்திகையென்னும் வெள்ளைமண் விளைகின்றது. இந்த மண்ணைக் கருடபகவான் ஸ்வேதத்வீபத்திலிருந்து இவ்விடம் கொண்டுவந்தாராம். இதுதான் தக்ஷிணதேசத்திற்குத் திவ்வியமான திருமண்ணாகவழங்கப்படுகின்றது. இந்தத் திருநாராயணபுர வைபவத்தைத் சனற்குமாரர் நாரதருக்குச் செப்பியபடி நாரதீயபுராணம் ஞானகாண்டத்திலும் இந்துமதப் பிரகாசிகையிலும் விவரமாக அறியலாம்.

## இதன் தற்கால ஸ்திதி.

இந்த மேல்கோட்டையானது உன்னதமான கணவாயில் ஏறிப்போகவேண்டியதா யிருக்கினும் நேர்த்தியான ரஸ்தாக்களுண்டு. சகல பதார்த்தங்களும் இங்கே கிடைக்கின்றன. பாஷை கன்னடம். இஃது சென்னபட்டணத்திலிருந்து 306 மைல் தூரத்திலிருக்கிறது.

இவ்விடத்தில் பாண்டித்திய வர்த்தினி யென்னும் ஓர் வைதீக வித்தியா சங்கம் ஏற்படுத்தப்பட்டிருப்பதன்றியில், ஒரு தபாலாபீசும் ஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. இந்தத் தபால் போஸ்டு மாஸ்டருக்கு மீ பதரூபாய் சம்பளம். இவர் தமது மூலமாக வரத்துப்போக்காகும் கடிதங்களுடைய மேல்விலாசத்தைப் பிரதிதினமும் கஷ்டத்துடன் காபி எழுதிக்கொண்டிருக்கிறார். உற்சவகாலங்களில் அநேக ஆயிரம் ஜனங்கள் வருவதனால் அநேகவித சாமான்களின் கடைகள் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. போலீஸ்பந்தோபஸ்து கூடியவரையில் கிரமமாகவே யிருக்கின்றது. இவ்விடத்திய உற்சவங்களும், கைங்கரியங்களும் மற்ற திவ்விய தேசங்களைவிடச் சிறப்பாக விருக்கின்றது. அனைவரும் பார்க்கத்தக்கது. திருவநந்தபுர மஹாராஜாவானவர் இங்கிலீஷ் முதலான வித்தைகளில் பூரணபண்டிதராக விருந்தும், தமது இராஜ்ஜியத்தி லிருக்கும் கிலமாய்ப்போன தேவாலயங்களைப் புதுப்பித்துப் புகழைப் பெற்றார். அதேமாதிரியாகவே இந்த மைசூர் ஸமஸ்தானஅபதிபரவர்களும் இத்தியாதி தேவாலயங்களில் கொஞ்சம் சிரத்தை யெடுத்துக்கொண்டால் அவருடைய புகழும் பிரகாசிக்காமற் போமோ.

---

## மேல்கோட்டை
## கல்யாண தீர்த்தக் கரையில் செய்த பிரார்த்தனை.

நாராயணா! அநேக ரிஷிகளும், ஸ்ரீராமானுஜர் முதலான ஆசாரியர்களும் வந்து தங்கி உன்னைத் துதித்த இத்தலத்தில் நானும் வந்து தங்கி உன்னைத் தியானிப்பதற்குத் தன்னியனானேன். இத்தக்ஷிண தேசத்தின் அநேக ஸ்தலங்களில் கீழ்மக்களாகிய பறையர், சக்கிலியர் முதலானவர்களை ஈன ஜாதியாரென்றெண்ணி அவர்களைக் கோயில் கோபுரங்களில் புகவொட்டாமல் ஜாதி பேத துரபிமானத்தால் தள்ளி வருகிறார்கள். இங்கோ சர்வ சுவாமிக்குமுன் சகல ஜாதியாரும் சமமானவர்களென்றெண்ணி அவர்களும் இகபர சுகத்தை யடையும்பொருட்டுச் சமரசக் கியானியாகிய ஸ்ரீராமாநுஜர் இவ்விழிகுலத்தாருக்குத் திருகுலத்தாரென்று பெயரிட்டு அவர்கள் இந்தக் கல்யாண தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யவும் இங்கிருக்கும் கோயில் கோபுரங்களில் புகுந்து தங்கள் மனங்குளிரக் கும்பிட்டு உய்யவும் நியமித்து விட்டபடியால் இதோ இன்று ஏராளமான இழிகுலத்தார் நாலா பக்கங்களிலிருந்து வந்து சுறுசுறுப்புடன் ஸ்நானஞ்செய்தும், கோவிந்தா! கோவிந்தா!! என்றும், வைரமுடியே! வைரமுடியே!! என்றும் கூவிக் கோயிலுக்குள் புகுந்து கொண்டானடிக்கும் காக்ஷியை என்னென்று சொல்லுவேன். இப்படிச் சகல ஜாதியாரும் சமரச ஞானமுற்றுச் சர்வேஸ்வரனாகிய நின்னைத் துதிக்கும் இத்திருநாள் எவ்வளவு சிறந்த திருநாள். இப்படிப்பட்ட திருநாளிற் காணும் சமரசக் கியானத்தை எனக்கும் சிறிது பிரசாதித்தருளுமாறு பக்திபூர்வமாகப் பிரார்த்திக்கின்றனன். ஓம் தத் சத்.

---

## திருநாராயணபுரத்துக்குச் சமீபத்திலிருக்கும் சில திவ்விய தேசங்களாவன.

### தொண்டனூர்.

மேல்கோட்டைக்குச் சுமார் 18 மைல் தூரத்தில் தொண்டனூர் என்னும் கிராமமிருக்கிறது. இது ஒரு காலத்தில் ஜைநர் வேளாள குலதிலகனாகிய தொண்டமகாராஜன் வாசஞ்செய்து வந்தவிடமாக விருந்தது. இவ்விடத்தில்தான் ஸ்ரீ ராமாநுஜாசாரியர் ஜைநர்களுடன் வாதஞ்செய்து அநேக ஜைநரைக் கல்காணத்திலாட்டிக் கொன்ற

விடமாம். இப்போது லக்ஷ்மீநாராயணர் ஸ்ரீகிருஷ்ணர் கோயில்கள் கிலமாக விருக்கின்றன. மேட்டிலிருக்கும் நரசிம்மன் சன்னிதி கூடியவரையில் நல்ல ஸ்திதியிலிருக்கிறது. சமீபத்தில் காடுகளுக் கிடையிலிருக்கும் ஏரியானது பலவிதத்திலும் சிறந்தது. இதின் ஜலமானது ஸ்நான பானத்துக்குப் பொருந்தியிருப்பதன்றியில், நான்கு பக்கமும் மலைகளால் சூழப்பட்டிருக்கும் இந்தத் திவ்வியமான ஏரியின் காக்ஷி சகலமதஸ்தர்களுங் கண்டு வியந்து ஆநந்தப் படத்தக்கதா யிருக்கிறது. பூர்வத்தில் விஷ்ணுவரதருடைய குமாரத்தியைப் பிடித்திருந்த பிரம்மராக்ஷதனை உடையவர் துரத்திய கட்டிடமும், வேறு சில விடுதிகளுமிருக்கின்றன. சில சமயங்களில் திருடர் பயமும் உண்டு.

தோண்டனூர் ஏரிக்கரையிற் செய்த பிரார்த்தனை.

"என் ஆண்டவனே! இடைத்துறையில் காவிரியின் கரையோரத்தில் உன் அற்புத சிருஷ்டியின் காக்ஷியைக் கண்டு கொண்டாடினேன். இப்போதோ நான்கு பக்கங்களிலும் சுவர்கள்போல் நிற்கும் மலைகளின் மத்தியில் இருக்கும் மானச சரோவரதத்தைப் போன்ற இந்த ஏரியைக் காணுந்தோறும் நினது சிருஷ்டியின் அற்புத காக்ஷியானது நின் பக்தியில் மூழ்கச்செய்கின்றது. ஆ என்ன அற்புதக் காக்ஷி! இதைச் சுற்றியிருக்கும் மலைகளின் விநோத அமைப்பும், இவற்றிற் கிடையிலிருக்கும் ஜலத்தின் அழகும், இச்சலத்தின் சுத்தமும் இனிப்பும், அடுத்திருக்கும் வனங்களிற் சம்பகம் முதலான புஷ்ப விருக்ஷங்களின் தோற்றமும் சுவாசனையும், அம்மரங்களில் தங்கிப்பாடும் பக்ஷிகளின் இனிய கீதங்களும் எவ்வளவு இரமணியமாக இருக்கின்றன. இப்படிப்பட்ட இடத்திலன்றோ ரிஷிகளும் மஹான்களும் வந்து தங்கி நின் அற்புத காக்ஷியைக் கண்டு நின்னிடத்தில் ஆனந்த முற்றார்கள். இப்படிப்பட்ட ஸ்தலத்தில் இந்த அழகிய தடாகத்துக்கு நானும் வந்து எனது ஆசை தீரக் குளித்து இதன் இனிய பானத்தைப் பருகி நின் பெருமையைப்பற்றிப் பாடிப் பிரார்த்திக்கின்றேன். இப்படிப்பட்ட அற்புத இடத்திற்கு நான் அடிக்கடி வந்து நின் அற்புத காக்ஷியைக் கண்டு ஆநந்தமடையும்படி அருள்புரிவாயாக. ஓம் தத்சத்."

ஸ்ரீரங்கபட்டினம்.

இது பெங்களூருக்கு வடமேற்குப்பாகத்தில் 75 மைல் தூரத்தில் காவிரிநதியின் இருகிளைகளுக்கு மத்தியிற் கட்

டப்பட்ட அழகிய சிறு பட்டணம். இவ்விடம் காவிரியானது கற்களால் நிறைந்திருந்தபோதிலும் காவிரி பாய்ச்சலுக்குட்பட்ட நிலங்களில் கரும்பும், நெல்லும் விசேஷமாக விளைகின்றன. காவிரியின் மேல்முனையில் இடிந்த கோட்டையிருக்கிறது. இதில்தான் அழகமைந்த ஸ்ரீரங்கநாதசுவாமியின் க்ஷேத்திரமும், நரசிம்மசுவாமியின் க்ஷேத்திரமும், ஐதர் - திப்புசுல்தானவர்கள் கட்டிய சுழல் கோபுரங்களுள்ள மஸ்ஜீது மிருக்கின்றன. இக்கட்டிடங்கள் யாவரும் பார்க்கத்தக்கதாயிருக்கின்றன. நகரத்துக்குத் தக்ஷிண பாகத்திலிருக்கும் கெஞ்சாமில் ஐதரலி, அவர் மனைவி, திப்புசுல்தான் இவர்களுடைய சிறப்புள்ள கோரியிருக்கின்றது. இந்தக் கோரியானது கரும் ஸ்படிக கற்களாலும், சந்தனக் கட்டை, தந்தம் முதலானவைகளாலும் செய்யப்பட்ட கதவுகள் ஏராளமான பொருள் செலவிட்டுக் கட்டப்பட்டதாயிருக்கிறது. இதற்குச் சமீபத்தில் திப்புசுல்தானுடைய "டவுல்டாபாக்" என்னும் நந்தவன அழகிய அரண்மனையிருக்கிறது. இக்கட்டிடங்கள் சகலரும் பார்க்கத்தக்கதாயிருக்கின்றன. நகரத்தின் கிழக்குப்பாகத்தில் கர்னல் வெல்லெஸ்லியின் பெயரால் கட்டப்பட்ட வாராவதி வெகுவிநோதமாகவிருக்கிறது. மேற்குப்பாகத்தில் நதி சிறுத்திருப்பதால் அவ்விடத்திய வாராவதி சிறியதாக விருக்கிறது. ஸ்ரீரங்கபட்டினத்திலிருந்து மைசூருக்குப் போகிற வழியில் இலிவாலா என்ற கிராம மிருக்கிறது. இவ்விடத்தில் போலீஸ் ஸ்டேஷனும், சத்திரமும் இருந்தாலும் திருடர் பயம் அதிகம்.

## எடத்துறை.

இலிவாலா கிராமத்துக்கு 18 மைல் தூரத்தில் எடத்துறை என்னும் தாலுகாவிருக்கிறது. இவ்விடம் ஓடுங்காவிரி நதியை மூன்று புஷ்கரணிகளில் ஒன்றாக மதித்து அநேக பிராம்மணாதி தேசாந்திரிகள் ஸ்நானஞ்செய்ய வருகிறார்கள். இவ்விடத்திய படித்துறை சற்றேறக்குறைய திருவையாற்றின் படித்துறையைப்போ லிருக்கிறது. இவ்விடத்திய காவிரிநதியில் பிரம்மாண்டமான மீன்களிருக்கின்றன. இவற்றிற்குப் பிராம்மணர்கள் சாதமிட்டுச் சுவாமியைப்போல மதித்து வளர்த்து வணங்குகிறார்கள். மேலும், அக்ஷரேஸ்வரர் மீனாக்ஷியம்மையின் க்ஷேத்திரமாகிய பெரிய சிவாலய மிருக்கிறது. ஸ்ரீபூரணைய ரவர்க

ளுடைய சதாவத்து சத்திரமும், கடைகளு மிருக்கின்றன. இவ்விடத்திய போலீஸ் இன்ஸ்பெக்டர் ம-ா-ா-ஸ்ரீ நாராயணசாமி நாயடவர்கள் பிரயாணிகளிடம் அதிக பிரியத்தைக் காட்டித் திருடர் பயமில்லாமல் பாதுகாத்துவருகிறார். இதற்கருகில், சிஞ்சென்கெட்டா இருக்கிறது.

## சிஞ்சேன்கேட்டா.

இவ்விடத்தில் காவிரிநதியானது விநோதமான பாறைகரடுகளாலாகும் இயற்கை யணையின்மேல் விழுந்தோடுகிறது. கற்களின் பிரதிபலிப்பினுல் சிலவிடங்களில் ஜலம் மஞ்சள் வருணமாயிருப்பதோடு, ஜலம் ஓடிவந்து விழும் வேகத்தினுல் ஆவியும் நுரையும் புகையும் ஜனிக்கின்றன. பூர்வம் ஸ்ரீராமர் சீதாசமேதராக தக்ஷணம் வருகையில் சீதாபிராட்டியார் ஸ்நானஞ் செய்தவிடமென்றும், ஆனதுபற்றியே ஜலம் மஞ்சள் வருணமாயும், புகையுடனிருப்பதாயுஞ் சொல்லுகிறுர்கள். உண்மை யெப்படியாக விருந்தபோதிலும் இவ்விடத்திய காவிரியின் காட்சியானது மிக்க விநோதமாயும் வியக்கத்தக்கதுமாயு மிருக்கிறது. இவ்விடத்தில் ஸ்ரீராம சன்னிதி யிருக்கிறது. இங்குக் காவிரிக்குப் பாலமில்லாமையால் கஷ்டத்தோடு அக்கரை போகவேண்டும்.

## மிதுனசாலகிராமம்.

சிஞ்சின்கெட்டாவிலிருந்து 8 மைல் தூரத்தில் காவிரி நதியைக் கடந்து போனுல் மிதுனசால கிராம மிருக்கிறது. இந்தக் கிராமத்தில் ஒரு நரசிம்மசுவாமி சந்நிதியும்-ஜைநர் சந்நிதியு மிருக்கிறதன்றியில், ஸ்ரீராமாநுஜாசாரியருடைய ஸ்ரீபாத சந்நிதியும், ஸ்ரீபாத தீர்த்தகுளமு மிருக்கின்றன. இவ்விடத்திய ராஜனுக்குக் குஷ்டவியாதி கண்டு சங்கடப்படவே. ஸ்ரீராமாநுஜர் வந்து வியாதியை நீக்கியும், விஷ்ணு மதத்தை யவலம்பிக்கச்செய்தும் பிறகு புறப்பட்டுப்போகவே ஷை இராஜன் வியாகுலசித்தனுகித் தடுக்க, அப்போது ஆசாரியர் தமது ஸ்ரீபாத குறிப்பையும், தீர்த்தத்தையுஞ் சாதித்தனராம். அந்தத் தீர்த்த குளத்திற்குப் பூட்டுப் போட்டு வைத்துக்கொண்டு வேண்டியவர்களுக்கு விலை பெற்றுக்கொண்டு கொடுக்கிறுர்கள். இந்தக் கிராமத்தில் ஜைநமதஸ்தர்கள் விசேஷமாக விருக்கிறுர்கள். இவ்விடத்தில் பேராசைக்கார பிராம்மணர்கள் சிலருளர். ஜனங்கள் பொதுவாக நல்லவர்கள்.

## மைசூர்.

இந்த ஸ்ரீரங்கபட்டணத்தை விட்டு மைசூருக்கு 2 அணு ரெயில்சார்ஜ் கொடுத்துப் போய்ச்சேர்ந்தோம். இங்கு அநேக அன்பர்களுடைய வீடுகளிருந்தும் எம்மோடு யாத்திரை செய்துவந்த பந்துமித்திரர்களுக்கு, அருகிலிருக்கும் ஸ்ரீரங்காசாரிலு சத்திரம் பெரியதாகவும் அழகாகவு மிருந்தபடியால் இங்குப் போய் இறங்கி இந்த ஸமஸ்தான அரண்மனை கௌரவ டாக்டரும் நமது புராதன சிநேகிதருமாகிய ஸ்ரீமான் டாக்டர் ஜெகந்நாதலு நாயடுகாரு வீட்டிற்குப் போனதில் இவர் மனமகிழ்ந்து அழைத்து க்ஷேம சமாசாரங்களை விசாரித்துக்கொண்டு அரண்மனை ஆஸ்பத்திரிக் கழைத்துப்போயும், பிறகு அப்போதிருந்த பழைய அரண்மனைக்குள் கூட்டிக்கொண்டு போய் அதிலுள்ள அநேக அறைகளையும் அதிசயங்களையும் அரசியவர்கள் வதிந்துவரும் மேல் மாளிகைகளையும் காட்டியும், பிறகு ஜெஹன் மோஹன அரண்மனையையும் பின்னும் அநேக பெரிதும் சிறிதுமான கட்டடங்களையும் காட்டினர். பிறகு சத்திரத்தில்வந்து சாப்பிட்டுப் பெண்டுபிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு நாம் முன் பார்த்த அரண்மனை முதலான அதிசயங்களைக் கண்டு திரும்புகையில் நமது ஆப்த சிநேகிதராகிய ஸ்ரீமான் வீணை-சேஷண்ணு அவர்கள் எம்மைச் சந்தித்து சந்துஷ்டராகி அன்றிரவு தமது கிரகத்தில் நடக்கும் ஸ்ரீராம உற்சவத்திற்குவரும்படி அழைத்தார். அவ்வாறே போக அங்கு 5, 6 வீணை வித்வான்கள் தங்கள் வீணைகளை அதிக கம்பீரமாகவும் சுகமாகவும் வாசித்து ஆனந்த மூட்டினார்கள். அனந்தர மிங்கு சில நாட்களிருந்து பிறகு ஸ்ரீரங்கபட்டணத்திற்கு வந்துவிட்டோம்.

## ஸ்ரீரங்கபட்டணம்.

இது மைசூருக்கு 10 மைல்கள் தூரத்திலும், ரெயில் மார்க்கமாக 8 மைல்கள் தூரத்திலும், காவேரி நதியின் இரண்டு கிளைகளுக்கு மத்தியிலும் கட்டப்பட்டிருக்கிற புராதன பட்டணம். இங்கிருக்கும் ஸ்ரீரங்கநாதர் கோயில் காவிரி நதிக்கரையின்மேல் அழகாகக் கட்டப்பட்டுள்ளது. இந்த ஸ்ரீரங்கபட்டணக் கோட்டையில்தான் இங்கிலீஷ்காரருக்கும் திப்புசுல்தானுக்கும் பிரமாத சண்டை யுண்டாகி அச்சண்டையில் திப்புசுல்தான் கொல்லப்பட்டார் என்றும், கோட்டைக்கு வெளியில் டார்யாடாலெட்பேக்

என்னும் சிங்கார வனத்தில் திப்பு சுல்தானுடைய வசந்த கால வாசஸ்தான கட்டிடமும், ஒரு அழகிய மஸ்ஜீதும் இருக்கின்றன என்றும், நகரத்தின் கிழக்குக் கோடியில் ஹைதராலி, அவர் மனைவி, திப்பு சுல்தான் முதலானவர்களுடைய சமாதிகள் கட்டப்பட்டு அவைகளைச் சுற்றிலும் ஆனைத்தந்தம் சந்தனக்கட்டை இவற்றின் கடைச்சல் வேலைகளாற் செய்யப்பட்ட கிராதிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றனவென்றும் முன்னமே சொல்லியிருக்கிறோம். இந்தக் கோரிகளுக்கு 3 மைல்கள் தூரத்தில் ரெயில்வேஸ்டேஷன் இருக்கிறது. நகருக்குள் பிரயாணிகள் தங்குவதற்குச் சில சத்திரங்களும் ஹோட்டல்களும் இருக்கின்றன.

## ஸ்ரீரங்கபட்டணம்

### ஸ்ரீரங்கநாதர் கோயிலுக்கருகிலோடும் காவிரிநதிக்கரையிற் செய்த பிரார்த்தனை.

"ஏ ரங்கநாதா! இந்த உலகத்தார் இரண்டு நதிகளாற் சூழப்பட்ட இடத்திற்கு அரங்கமென்றும், அதில் வசிக்கின்ற ஈஸ்வரருக்கு அரங்கநாதனென்றும் சொல்லி இந்தப் புராதனமான பட்டணத்தி லிருக்கும் ஸ்ரீரங்கநாத க்ஷேத்திரத்தில் அநேகர் வந்து ஸ்ரீரங்கநாதாவென்று புகழ்ந்து பூஜிக்கிறார்கள். முன் இந்த நாட்டை யாண்டுவந்த ஹைதராலி திப்புசுல்தான் முதலான மகம்மதிய அரசர்களும் வந்து வணங்கியதாகவும், இந்த க்ஷேத்திரத்தின் பெருமையைக் கருதி சிங்கார உத்தியாவனங்களையும் மஸ்ஜீதுகளையும் மஹால்களையும் கட்டி இங்கு அவர்களுடைய அழகிய சமாதிகளைக்கட்டிவைத்துக்கௌரவப்படுத்திவருகிறார்கள். இங்கு ஈஸ்வரபக்தி, ராஜபக்தி இவை அதிகமாகப் பிரகாசிக்கின்றன. இங்குப் பிரபல சண்டை சச்சரவுகள் நடந்து அநேக வீரர்கள் மடிந்தனரன்றோ? இப்படிச் சரித்திர சாசனம் பெற்ற ஸ்தலத்தார் சுறுசுறுப்பாக வந்து காவிரியில் ஸ்நாநம் செய்து கோயிலுக்குள் சதாபோய்ப் பூசித்துக்கொண்டு வருகிறார்கள். பிரதி மனுஷனுடைய உடலாகிய அரங்கத்துக்குள் நீ சூக்ஷ்மாகார நாதனாய் இருப்பதை அறிந்த தத்துவ ஞானிகள் ஆத்மஞானத்தால் அறிந்து நின்னைத் தியானிக்கிறார்கள். இதுவே உண்மையுள்ள தத்வ ஞான சித்தாந்தமாக இருப்பதால் நானும் எனது தேகமாகிய அரங்கத்துள் பரமாத்மாவாகப் பிரகாசிக்கும் நின்னை நாதனாகக்கொண்டு பிரார்த்தனை செய்ய அருள் புரிவாய்!

இக்காவிரியானது பூதவுடல்களுக்குப் பானமாகிப் பிராணனைக் காப்பதுபோலவே நினது ஞானரசமாகிய சுத்தஜலம் எனது ஆத்மாவின் விடாயைத் தீர்த்து ஆதரிக்கவேண்டுகின்றேன். ஓம் தத்சத்.''

இந்த ஸ்ரீரங்கபட்டணம் இப்போது பாழ்த்துப்போன ஸ்திதியி லிருக்கிறது. இதைவிட்டு மறுநாள் பெங்களூருக்குப் போனோம்.

## பெங்களூர்.

இந்தப் பெங்களூரிலும் எமக்கு மைசூரைப்போலவே அநேக அன்பர்க ளிருக்கினும் எம்மோடதிக கும்பல் வந்தபடியால் ஸ்டேஷனுக் கருகிலிருக்கும் செட்டியார் சத்திரத்தில் இறங்கிச்சாப்பிட்டு உடனே எமது உத்தம அன்பர்களாகிய ஸ்ரீதர்மரத்னாகரம் ஆ. நாராயணசாமி முதலியாரவர்களையும், ஸ்ரீ அப்பாசாமி முதலியா ரவர்களையும், ஸ்ரீகோபாலசாமி அய்யர் முதலானவர்களையும் தரிசித்துவிட்டு அன்று மாலை லால்பேக் கண்காட்சிசாலை, கடைவீதிகள் முதலியவற்றைப் போய்ப் பார்த்தோம். அப்போது பிதாவுக் கொப்பாகிய ஸ்ரீ அப்பாசாமி முதலியாரவர்களும் ஸ்ரீ கோபாலசாமி அய்யரவர்களும் எம் கூடவே வந்து பலவிடங்களையும் விஷயங்களையும் காட்டி உதவி புரிந்தனர். இந்தப் பெங்களூரின் விவரத்தைப் பின்வரும் சரித்திரத்தில் காண்க.

## நஞ்சுண்டகூடல்.

(நஞ்சுண்டேசுவரர், தேவகிரியம்மை, கூடல்தீர்த்தம், வாடிபுளியவிருக்ஷம்.)

சிவபெருமான் நஞ்சையுண்டு தேவர்களை யமுத முண்ணும்படி செய்தருளிய நிமித்தம் தேவர்கள் முதலாயினோர் பூசித்துப் பேறுபெற்ற தலம். மிருத்திகை அநேக ரோக நீக்கு மருந்தா யிருக்கின்றது.

இந்த நஞ்சன்குடி மைசூர் சமஸ்தானத்திற்குள் ஒரு விசேஷமான சிவ க்ஷேத்திரம். இது மைசூரிலிருந்து 15 மைல்கள் தூரத்திலிருக்கும் இத் தாலுக்காவின் தலை நகராகவும், கமிஷனர் என்னும் டிவிஷனல் ஆபீஸர் வசிக்கும் இடமாயுமுள்ளது. இதற்கு ரயில்வே சார்ஜ் 2½ அணா. இதற்கு வலது புறத்தில் கபிலை தீர்த்தமும் தெற்கே காவிரி நதியும் ஓடுவதால் இதை ஓர் தீவு அல்லது அரங்கமென்று சொல்லலாம். இவ்விரு நதிகள் சேருமிடத்தில் பரசுராமன் கோயி

விருக்கிறது. காவிரி கரையின்மேல் சாமுண்டீஸ்வரர் கோயி லிருக்கிறது. இவ்விரு நதிகளில் ஸ்நானஞ் செய்வோர் இக் கோயில்களி லுட்கார்ந்து சந்தியா ஜெபம் தபம் செய்வது வழக்கம். இந்த க்ஷேத்திரத்தில் ஐந்து ரதங்களுள்ளன. ஒவ்வொரு மாத முண்டாகும் பௌர்ணமி காலத்தில் ஒவ் வொரு ரத உற்சவம் கொண்டாடினாலும், உகாதி உற்சவத் திற்கு முன்னும் பின்னும் ஐந்து ரதஉற்சவங்களும் கொண் டாடி வருகிறார்கள். மார்கழிமாத பௌர்ணமியில் ஆரு த்ரா தரிசன உற்சவம் விசேஷமாம். இது மைசூர் சமஸ் தான தேவஸ்தான மாகையால் அநேக ஆடையாபரணங் கள் இருக்கின்றன. இவ்விடத்தில் சிவாசார லிங்காயித் மதஸ்தர்கள் ஏராளமாக வசித்து வருகிறார்கள். இந்த ஸ்த லத்திற்குக் கிழக்கே 36 மைல்கள் தூரத்தில் கொள்ளே காலம் இருக்கிறது. அதற்கடுத்த சத்தியாகால் என்னு மிடத்தில் ஓடும் காவிரிக் கரையின்மேல் விஸ்வநாதருடைய (சிவ) க்ஷேத்திர மிருக்கிறது. அதற் கருகிலுள்ள கோட் டைக்குள் வரதராஜரென்னும் (விஷ்ணு) கோயிலிருக்கிறது. இது வைணவ வடகலை சம்பிரதாய ஆசாரியராகிய ஸ்ரீ வேதாந்த தேசிகரால் மகம்மதியர் கலாப காலத்தில் கட்டுவிக்கப்பட்டனவாம். மைசூருக்குக் கிழக்கே 18 மைல் கள் தூரத்தில் நரசிம்மசுவாமி கோயிலிருக்கிறது. இதைப் பார்த்துக்கொண்டு வந்தால் பிளகிரிரங்கன் மலையின்மேல் பிளகிரி ரங்கசுவாமி க்ஷேத்திர மிருக்கிறது.

இப்போது இந்தத் துளுவ நாட்டிற்கு முக்யஸ்தானமா கிய மைசூர் சமஸ்தானத்தைப்பற்றி இதனடியிற் காணலாம்.

இது ஆதியில் துளுவநாட்டைச் சார்ந்தது. மைஹிஷா என்னும் ஒரு கொடிய ராக்ஷஸன் எருமை ரூபமாக வந்து குடிகளை வருத்தும்போது பரமேஸ்வரன் அந்த ராக்ஷதனைக் கொன்று குடிகளுக்கு க்ஷேமத்தை உண் டாக்கியதால் இதற்கு மைஹிஷாபுரி என்ற பெயராகி இப் போது மைசூர் என்று மாறிவிட்டது. இதில் கி. பி. 1399ஆ விஜய உடையார், ஹரிபெட்டராஜர், திம்மராஜர், சாமராஜா, பெட்ட சாமராஜர், அப்பண்ண திம்மராஜர், கிருஷ்ணராஜர், ஹரிசாமராஜர், மூப்பன்னதேவர், தோட்டதேவர், சிக்கதே வர், காந்திருவராஜர், தொட்டகிருஷ்ணராஜர், கெம்பதேவரு, பெட்டல உடையார், இராச உடையார், காந்திராஜர், நர சிங்கராஜர், சாமராஜர், இம்மிடிராஜர், நஞ்சராஜர், சாமராஜர்,

சிக்க கிருஷ்ணராஜர், சாமராஜேந்திரர், 1894ஞ் வாணி விலாச மஹாராணியும் பிறகு கிருஷ்ணராஜ உடையார், ஹைதராலி, தீப்புசுல்தான், கிருஷ்ணராஜர், சாமராஜர் முதலானவர்கள் ஆண்டு வந்து இப்போது ஸ்ரீ கிருஷ்ணதேவ உடையார் ஆண்டுவருகிறார். இங்கு வருஷந்தோறும் நடக்கும் தசராபண்டிகை மிகவும் விசேஷமானது. இப்போது இந்த மைசூரானது பம்பாய் இராஜதானிக்குத் தெற்கும், சென்னை ராஜதானியின் சில ஜில்லாக்களுக்கு வடக்கும், கொஞ்சம் முக்கோணமாய்த் தென்வடல் சுமார் 250 மைல்கள் நீளமும், கிழமேல் 238 மைல்கள் அகலமும், 30,886 சதுரமைல்கள் விஸ்தீரணமுமுள்ள நாடு. இதைச் சுற்றிலும் மேற்குத் தொடர்ச்சி மலைகள் கிழக்குத் தொடர்ச்சி மலைகள் சூழ்ந்து, அவைகளுக் கிடையிலுள்ள இம் மைசூரைச்சார்ந்த பெத்தனூர் துர்கம், பெத்துமங்கலம், பெங்களூர், மைசூர் டவுன், ஸ்ரீரங்கபட்டணம், சிரா, நரசப்பூர், கோலார், நாய்க்கனேரி, ஹரியூர் பட்டணங்கள் சமுத்திர மட்டத்திற்குமேல் முறையே 1907, 2519, 3000, 2513, 2358, 2223, 2904, 2800, 2221, 1831 அடிகளுக்கு மேல் உயர்ந்திருப்பதால் சீதோஷ்ணம் ஒன்றுக்கொன்று மாற்றம் பெற்றவையா யிருக்கின்றன. இதன் தலைநகராகிய மைசூரானது, 2513 அடிகளுக்குமே லிருப்பதனால் அதிக உஷ்ணமும் அதிக சீதமும் அற்று மத்தியதரமானதாகி மாந்தர்க்கு மனோரம்மியமான வாசஸ்தலமென்று சொல்லலாம். வடபுறத்தின் தரை போகப்போக தாழ்ந்திருப்பதால் பெரும்பான்மையான ஆறுகள் அப்பக்கமே வடிந்தோடுகின்றன. இதிற் பாயும் நதிகளாவன: லக்ஷ்மண தீர்த்தம், கபினிதீர்த்தம், ஹேமாவதி, அரைகாவேட்டி, துங்கா, பத்ரா, வேதவதி, வடபெண்ணை, தென்பெண்ணை, காவிரி முதலானவைகளே. இந்நாட்டைச் சார்ந்த மலை காடு வனங்களில் முக்கியமாகப் புலிகளும் சிறுத்தைகளும் யானைகளும் மான் முதலான மிருகங்களும் ஏராளமாக இருக்கின்றன.

## சரித்திர சங்கிரகம்.

மைசூரானது மைஹிசாசுரன் என்னும் இராக்ஷதனைக் கொன்ற இடமென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். ஸ்ரீராமர் மனைவியை இராவணன் கொண்டு போனதைத் தேடிக் கண்டுபிடிக்க வந்த அநுமானுடைய

இராஜனாகிய சுக்கிரீவன் வதிந்தவிடமென்று ஒரு சரித்திரத்திலும், பிறகு சாளுக்ய ஜாதியாருக்கும் கதம்ப ஜாதியாருக்கும் சார்ந்ததென்று ஒரு சரித்திரத்திலும் சொல்லப்பட்டிருக்கினும், 1310ஸ்ரீ டில்லிபாட்சாவின் சேனாதிபதி கபீர் என்பவர் வந்து தாக்கியவரையில் சரியான சரித்திரம் கிடைக்கவில்லை. பிறகு 1326ஸ்ரீ மகம்மது டோக்லாக்கின் சேனை வந்து தாக்கவே சமஸ்தான பட்டணம் தானூருக்கு மாற்றப்பட்டது. 1336ஸ்ரீ யாதவஜாதியைச்சார்ந்த ஹரிஹரராயிலு, புக்கதேவராயிலு இவர்களுடைய சுவாதீனமானாலும், பிறகு விஜயநகர கிருஷ்ணதேவராயலு வசமாகி அவரது மருமகன் ராமராயலுடன் 1565ஸ்ரீ மகம்மதியர் தலைக்கோட்டையில் செய்த பிரமாத சண்டையில் ஜெயசில ரானபோது இம் மைசூரிலிருந்த பாளையக்காரர்கள் சுதந்தரர்களாகி ஆளத்தலைப்பட்டு 1610ஸ்ரீ இராஜவேத்தியர் சிரேஷ்டனாகி ஸ்ரீரங்கபட்டணத்தையும் அதைச் சுற்றியுள்ள நாடுகளையும் சுவாதீன மாக்கிக் கொண்டான். பிறகு சிக்கதேவராயர் இராஜாகாலத்தில் ஆமெத் நகரிலிருந்த அரங்கசீப் சக்கரவர்த்திக்குச் சிநேகிதராகி அவரும் அவர் சந்ததிகளும் செல்வத்தோடு வாழ்ந்து வருகையில் அவர் பேரன் தொட்ட கிருஷ்ணராயிலு செல்வத்தைப் பாழாக்கிவர, அவர் குமாரன் சாமராஜாவை மந்திரியானவன் பட்டத்தை விட்டு நீக்கி, அக்குடும்பத்தைச் சார்ந்த வேறொருவனைப் பட்டத்திற்கு நியமித்தான். இம்மைசூரை யாண்ட விசேஷ இராஜர்களுடைய பெயர்களாவன:—1749ஸ்ரீ ஹைதராலி வந்து மைசூர் சேனையில் ஓர் வாலண்டியராக இருந்தும், 1752ஸ்ரீ சேனாதிபதியாகியும், பிறகு திண்டுக்கலுக்கு இராஜாவாகியும், அதைச் சுற்றிலு மிருந்த பாளையக்காரர்களோடு சண்டையிட்டும், பிறகு பிராஞ்சு, இங்கிலீஷ்காரர்களோடு சண்டை செய்தும், கடைசியாக மைசூருக்கு வந்து இராஜனாகிய நஞ்சராஜ் அரசனை ஏமாற்றித் தானே இராஜாவாக 1760ஸ்ரீ பிரசித்திசெய்துவிட்டார். அதன்மேல் உள்ளூர் இராஜ குடும்பத்தார்களும் அக்கம்பக்கந்துக் குறுநில பெருநில மன்னர்களும் எழுந்து இவரோடு சண்டை செய்ததன்றியில், ஐரோப்பியரும் அடிக்கடி சண்டை செய்து தலைகாட்டாதபடி தாக்க இவர் 1782ஸ்ரீ டிசம்பர்மீ 7உ ஆர்க்காட்டுக்கருகில் ஒரு கூடாரத்தில் இறந்துவிட்டார். அவருக்குப் பிறகு அவர் குமாரர் திப்பு சுல்தான் சிங்காசனமேறித்

தன் தகப்பனாரது பிரேதத்தைச் சீரங்கபட்டணத்திற்குக் கொண்டு வந்து அடக்கம் செய்து சிறப்பான சமாதியைக் கட்டிவைத்தார். பிறகு இவரும் தன் தந்தையைப்போலவே குரூர சண்டைகள் பல செய்துவந்தாலும் 1798ஹு மார்ச்சுமீ 27உ ஸ்ரீரங்கபட்டணக் கோட்டையிலிருந்து இங்கிலீஷ்காரரோடு பிரமாத சண்டை செய்கையில் ஜனரல் ஹாரிஸ் இங்கிலீஷ் தலைவனால் நடத்தப்பட்ட சேனைகளால் சுடப்பட்டுக் கொல்லப்பட்டார். இவருக்குப் பிறகு மஹாராஜாவின் பழைய சந்ததியைச் சார்ந்த ஸ்ரீகிருஷ்ண ராஜ உடையார் என்னும் சிறுவருக்கு இங்கிலீஷ்காரர் முடி சூட்டினார்கள்.

திப்பு சுல்தானுக்குத் திவானாயிருந்த ஸ்ரீபூர்ணையரை இவருக்கும் திவானாக நியமித்ததில் இவர் இராஜாங்க செலவைச் சிக்கனமாகச் செய்வித்து 75,00,000 வராகனைச் சமஸ்தான பொக்கிஷமாகச் சேர்த்துவைக்க, அதை இராஜாவானவர் தமது மனோபீஷ்டப்படி மண்மாரியாகச் செலவழித்து வந்து கடைசியாகச் சிப்பந்திகள் சம்பளத்திற்கே போதுமான பொக்கிஷமில்லாமற் போக, இராஜாங்க காரியங்கள் சீர்கெட்டுத் தத்தளிக்க, 1832ஹு இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் இராஜாவுக்குப் போதுமான பென்ஷன் சம்பளம் கொடுத்துக்கொண்டு இராஜ பரிபாலனத்தைத் தாமே வகித்து வந்ததில் சமஸ்தானத்தில் கலகமடங்க, சஹகமனுதிகளைத் தடுத்து மகம்மதியர்கள் வேளாண்மை முதலான கைத்தொழில்களில் பிரவேசிக்கச் செய்தார்கள். ஆயினும் 1847ஹு தாங்கள் வகித்துவந்த இராஜகீய அதிகாரத்தை மறுபடியும் பழைய இராஜனுக்கே கொடுத்துச் செய்விக்கச்செய்ததில் அவருக்கு ஆளும் திறமை இல்லாததால், மறுபடியும் இங்கிலீஷ் கவர்ன்மெண்டாரே ஆண்டுகொண்டு வந்து அந்த ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையார் இறந்துபோக அவருக்குப் புத்திரனில்லாமையால், அவர் சந்ததியைச் சார்ந்த ஸ்ரீசாமராஜ உடையாரைச் சுவீகார புத்திரனாகக் கொண்டு, சிங்காதன மேற்றினார்கள். இவர் காலத்தில் ஸ்ரீரங்காசாரியர், ஸ்ரீசேஷாத்திரி அய்யர் முதலியோர் திவான்களாகி ஸமஸ்தானத்தைப் பலவிதத்திலும் பிரபலப்படுத்தினார்கள். இந்த ஸ்ரீ சாமராஜ உடையார் ஸ்ரீ கல்கத்தாவுக்குப் போனதில் வியாதி கண்டு திடீரென இறந்துவிட இவர் குமாரர்கள் மைனர்களாய் இருந்ததைப்

பற்றி மகாராணியவர்களுக்கே பட்டம் சூட்டப்பட்டு ஸ்ரீ திவான் சேஷாத்திரி அய்யர் உதவியினால் சிறப்பாக ஆண்டு வர, இப்போதும மஹாராஜாவாகவிருக்கும தமதுமூத்தகுமாரராகிய ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையாரவர்களுக்குச் சரியான வயதுவரவே, இவருக்கு முடி சூட்டப்பட்டது. இந்தப் புது ராஜா சிறுவயதாயிருக்கும்போதே Mr. Fraser முதலான வித்வ சிகாமணிகளாற் கல்வி கற்பிக்கப்பட்டும் ஸ்ரீ சேஷாத்திரி அய்யர், ஸ்ரீ மாதவராயர், ஸ்ரீகிருஷ்ணமூர்த்திராயர், ஸ்ரீ ஆனந்தராயர், ஸ்ரீவிஸ்வேஸ்வரையா முதலிய மஹாமதியூகிகளான மந்திரிகளுடைய சகாயத்தினால் சமஸ்தானத்தைப் பலவிதத்திலும் விர்த்தியாக்கி, இப்போது இப் பரதகண்டத்திலுள்ள பல சமஸ்தானங்களிலும் இது சிரோபூஷணமாகப் பிரகாசிக்கின்றது. இப்பொழுதிருக்கும் திவான் ஸ்ரீ விஸ்வேஸ்வரையர் விஸ்வகர்மா அவதாரமென்றே சொல்லலாம். குடிகளுடைய நிறைவு குறைவுகளை நேர் நேராக அறிந்து நீதி செலுத்துவதே உத்தம ராஜதர்மமென்றறிந்த ஸ்ரீ திவான் ரங்காசாரியா ரவர்கள் பிரதிவருஷம் நடக்கும் நவராத்திரி தசரா பண்டிகையில் ஜனப்பிரதிநிதி சபையைக் கூட்டி அவர்கள் கூறும் விஷயங்களைக் கேட்டு சமஸ்தான வரவு செலவுகளையும் காட்டி நீதிபரிபாலனம் செய்ய நியமித்தார். அந்த நியமனத்தை அனுசரித்து 1914ஆ கூடிய தர்பாரில் காட்டிய வரவுசெலவு விவரங்கள். இதனடியிற் கண்டபடி தெரிவிக்கப்பட்டிருக்கின்றன.

## மைசூர் சமஸ்தானத்தின் வரவு செலவு.

மைசூர் சமஸ்தானத்து 1915-ம் வருஷத்திய பட்ஜட் பிரசுரமா யிருக்கின்றது. அந்த பட்ஜட்டுப்படி அந்த சமஸ்தானத்தில் வருஷ வரும்படி 2,74,02,000 ரூபாய். செலவு 2,73,70,000 ரூபாய். செலவுபோக பாக்கி 32,000 ரூபாய். மைசூர் சமஸ்தானத்து வருஷ வரும்படி $1\frac{1}{2}$ கோடியாயிருந்தகாலம் நமக்கு ஞாபக மிருக்கின்றது. இப்போது சுமார் $2\frac{3}{4}$ கோடியானது அதன் நிர்வாகத்துக்குப் பொறுப்பேற்ற பற்பல திவான்களின் முயற்சியால், முக்கியமாய் ஸர் சேஷாத்திரி அய்யர் காலத்தில் அவர் செய்த மகா பிரயத்தனங்களால் வருஷவாரி ரெவினியூ உயர்ந்தது. இன்னும் உயருமென்று நாம் நம்புகிறோம். மைசூர் சமஸ்தானத்தை விட அதிக ரெவினியூ கிடைக்கும் சமஸ்தானம் நிஜாம் அரசர் ஆளும் ஹைதராபாத் சமஸ்தானத்தைவிட வேறில்லை.

## மைசூர் ஜனப்பிரதிநிதி சபை.

### திவானின் பேச்சு.

33-வது வருஷத்திய ஜனப்பிரதிநிதி சபை மைசூரில் (19-10-1915) கூடியபொழுது, திவான் ஸர் M. விஸ்வேஸ்வரையர் அடியில் வருமாறு பேசினர்:—

### மைசூரும் யுத்தமும்.

உலகத்தின் நாகரீகமுள்ள பாகத்தி லிருக்கும் ஜனங்கள் இப்பொழுது நடக்கும் யுத்தத்தைப்பற்றிக் கவலைப்படுவதுபோல நாமும் கவலைப்படுகிறோம். ஜெர்மானியர்கள் அசுரயுத்தஞ் செய்கிறார்கள். சித்திரவேலை செய்துள்ள கட்டிடங்களையும், சரித்திர சம்பந்தமான கட்டிடங்களையும், கப்பல்களையும் நாசஞ் செய்கிறார்கள். இவைகளின் நஷ்டமானது தலைமுறை தலைமுறையாக மனிதர் செய்துள்ள உழைப்பின் சாமர்த்தியம் அனைத்தையும் நாசப்படுத்தி விடுகிறது. உலகம் முழுவதும் இங்கிலாந்தின் சார்பாக அனுதாபங் காட்டி வருகிறார்கள். ஆகையால் கடைசியில் நேச தேசத்தாருக்கு ஜயம் என்பதில் சந்தேகமேயில்லை. 1913-ம் வருஷம் அக்டோபர் மாதம் 13-ந் தேதி யன்று நமது மகாராஜா கர்நல் J தேசராஜ அரசின் தலைமையின் கீழ் இம்பீரியல் ஸர்விஸ் பட்டாளத்தைப் போர்முனைக்கு அனுப்பினர். பட்டாளங்கள் போர்முனையில் நிரம்ப நல்ல வேலைகளைச் செய்து வருகின்றன என்பது ராஜ்ஜியத்திற்கே ஒரு பெருமையாகும்.

இந்த யுத்தத்தினால் ராஜ்யத்தின் வியாபாரமும் அரசிறையும் ஒருவாறு பாதிக்கப்பட் டிருக்கின்றன. உணவுப் பொருள்களின் விலை ஏறியிருக்கிறது. இயந்திரங்களையும், சாமான்களையும் வரவழைப்பது கஷ்டமாய்விட்டது. சந்தனக் கட்டையின் வரும்படியின் ஒரு பாகத்தை இழந்துவிடவேண்டிவரும். இவைகள் எல்லாம் யுத்தம் முடிந்த பிறகு மாறுதல் அடையும்.

### ஜனங்களுடைய நோக்கத்தைத் தழுவ ஆவல்.

சமஸ்தானத்தின் வருஷாந்தர வரவு செலவு திட்டம் இந்தச் சபையில் வாதிக்கப்படவேண்டுமென்றும், அதன் மூலமாக ஜனப்பிரதிநிதிகளாயுள்ள மெம்பர்கள் இந்த கவர்ன்மெண்டின் நோக்கங்களையும் முறைகளையும் நன்கு

அறிந்துகொள்ள வேண்டுமென்றும் நமது மகாராஜா அவர்கள் விரும்புகிறார்கள். அந்த விருப்பம் நிறைவேறும்படி எப்படிச் செய்யலாமென்று நீங்கள் யோசனை சொன்னால் நலமாயிருக்கும். வருஷாந்தர வரவு செலவு திட்டம் வருஷாரம்பத்தில் அங்கீகாரமாய்விடுகிறது; ஆயினும் அதைப் பற்றி இந்தமாதத்தில் நீங்கள் சொல்லுகிற யோசனையானது அடுத்த வரவு செலவு திட்டத்தைத் தயார் செய்கையில் உபயோகப்படும்; அல்லது உடனேயே அந்த யோசனையை அனுசரிக்க ஒருசமயம் கூடும்; ஜனப்பிரதிநிதிகளின் அபிப்பிராயங்களுக் கிணங்க வரவு செலவு திட்டம் ஏற்பட வேண்டுமென்பதே மகாராஜாவின் முக்கிய கருத்து.

## கேள்வி கேட்க அனுமதி.

சட்டசபை மெம்பர்கள் கேள்வி கேட்க இப்பொழுது பாத்தியம் பெற்றிருக்கிறார்கள். அக் கேள்விகளை அனுசரித்து உபக்கேள்விகள் கேட்கவும் அனுமதி கொடுக்கப்பட வேண்டுமென்று சென்ற வருஷத்திய ஜனப் பிரதிநிதி சபையில் நீங்கள் கேட்டீர்கள். மகாராஜா அவர்கள் அதற்குச் சம்மதித்துவிட்டார்கள் என்று அறிய நீங்கள் சந்தோஷப்படுவீர்கள்.

மேற்கண்ட நற்செய்தியை திவான் அறிவித்துவிட்டு வருஷவாரி வரவு செலவுகளை இனவாரியாக எடுத்துச் சொன்னார். பிறகு அடியிற்கண்ட விசேஷங்களை அறிவித்தார்:—

## பெரிய வேலைகள்.

சென்ற 4 வருஷங்களில் பாசன அபிவிருத்திக்காகவும், ரயில் பாதை போடுகிறதற்காகவும், காவேரி ஆற்றில் தேக்கம் கட்டுவதற்காகவும், மின்சாரசக்தி உண்டுபண்ணுவதற்காகவும் ஒன்றரைகோடி ரூபாய் செலவிடப்பட்டன. இந்தச் செலவுகளிலிருந்து பிறகு நல்ல லாபம் கிடைக்கும். இவ்வளவு பெரிய தொகையை நாம் கடன் வாங்காமல் கையில் சேர்ந்திருந்த பணத்தைக்கொண்டு செலவிடக் கூடியதா யிருந்தது பெரிய சந்தோஷகரமான செய்தி.

## வருஷந்தோறும் மிகுத்தல்.

வருஷந்தோறும் 10 அல்லது 20 லட்சம் ரூபாய் மிகும்படியே நாம் பார்த்துக்கொள்வோம்? ஆகையால், நம்முடைய நடைமுதல் செலவுகளுக்கு நாம் கடன்வாங்க

வேண்டியிராது. கடன் வாங்குவோமானால், லாபம் வரக் கூடிய இனங்களுக்காகத்தான் வாங்குவோம். ரயில் பாதைகள், பாசன வசதிகள் முதலிய இம்மாதிரி வேலைகளை இந்தியாவில் வாங்கப்படும் கடன்களைக்கொண்டே செய்து வருகிறோம். இம்மாதிரிப் பெரிய வேலைகளை நடைமுதல் மிச்சத்திலிருந்து செலவிட்டுச் செய்தால் வேலை சீக்கிரத்தில் முடியாது. பிற்காலத்திய ஜனங்கள் அடையப்போகிற நன்மைக்காக இப்பொழுதுள்ளவர்களைச் செலவுக்குக் கொடுக்கும்படி செய்வதும் சரியல்ல.

## கட்டாயப் படிப்பு.

இதற்கப்புறம், கல்வி அபிவிருத்திக்காக எவ்வளவு செலவு செய்யப்படுகிறதென்றும், புதிதாகப் பள்ளிக்கூட கட்டிடங்கள் கட்ட ஒன்றரை லட்சம் ரூபாய் செலவிடப்படுமென்றும் சொல்லிவிட்டு, கட்டாயப்படிப்பைப்பற்றிப் பின்வரும் விஷயங்களை அறிவித்தார்.

சில குறிப்பிட்ட இடங்களில் மாத்திரம் குழந்தைகள் இலவசமாக ஆரம்பப் படிப்பைப் படிக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்த ஆரம்பித்தோம். படிக்கக்கூடிய வயதுள்ளவர்களாக அந்த இடங்களில் உள்ள பதினாறாயிரம் குழந்தைகளில் பதினாயிரத்தெண்ணூறு குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் படித்துவருகிறார்கள். இன்னும் 12 இடங்களில் இந்த ஏற்பாட்டை அனுஷ்டிக்க உத்தேசித்திருக்கிறோம்.

## மைசூர் யூனிவர்ஸிட்டி.

பிறகு பெண்கல்வி, தொழிற்கல்வி, வியாபாரக் கல்வி முதலிய விஷயங்களைப்பற்றிச் சொல்லிவிட்டு, மைசூருக்குத் தனியாக ஒரு யூனிவர்ஸிட்டி வேண்டிய அவசியத்தை கவர்ன்மெண்டார் உணர்ந்து, அதற்கான யோசனையைச் செய்து வருகிறதாகவும், அந்த யோசனை முடிந்தவுடன் ஜனங்களுக்கு ஏற்பாடு முழுமையும் அறிவிக்கப்படுமென்றும் சொன்னார்.

## ஜனங்களின் திறமையை விருத்திசெய்ய ஏற்பாடுகள்.

பிறகு ரயில்வே முனிஸிபாலிட்டி, டிஸ்டிரிக்டு போர்டு முதலிய நிர்வாகங்களைப்பற்றிச் சொல்லிவிட்டுக் கடைசியாக ஜனங்களின் திறமையை விருத்திசெய்ய வேண்டிய விஷயமாகப் பேசினார்.

ஜனங்களின் யோக்கியதையை அதிகப்படுத்தக்கூடிய உபாயங்களில் கல்வியே பிரதானமானது. இந்த சமஸ்தானத்தில் கல்வி வெகு விரைவாகப் பரவவேண்டு மென்பது நமது மகாராஜாவின் அபீஷ்டம். ஆரம்பக் கல்வியும் உயர்தரக் கல்வியும்பரவவேண்டியதற்கான சாதனங்களை அதிகமாக்கவேண்டுமென்றும் மகாராஜா கவலைப்படுகிறார். இந்த சமஸ்தானத்துக் கல்வி ஏற்பாடு இந்த சமஸ்தானத்திலேயே பூர்த்தியாகவேண்டுமென்றும்மகாராஜா இஷ்டப்படுவதால், அதன்பொருட்டு மைசூருக்குத் தனி யூனிவர்ஸிடி ஒன்றை ஸ்தாபிக்க எத்தனப்பட்டுக்கொண் டிருக்கிறார். கல்வி யபிவிருத்தி யல்லாமல், வேறு வழிகளிலும் ஜனங்களைத் திறமைசாலிகளாகச் செய்ய முயற்சிகள் செய்யப்படுகின்றன. கிராமங்களின் அபிவிருத்திக்காகவும், சிறு குளங்களை விருத்திசெய்பவும், கிராம நீதிபரிபாலனத்துக்காகவும் சபைகள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. நாட்டுப்புறங்களில் பாசனத்தை விருத்தி செய்யவும், கிராமக்காடுகளைப் பரிபாலனஞ் செய்யவும்சபைகள் ஏற்பட்டிருக்கின்றன. இதுவரையில் 13,360 கிராமங்களுக்காக 7745 கிராம அபிவிருத்தி சபைகள் ஏற்பட்டுவிட்டன; அதாவது இந்த சமஸ்தானத்திலுள்ள கிராமங்களில் 100-க்கு 79-க்கு சபைகள் ஏற்பட்டுவிட்டன. அவைகளில் 2039 சபைகள் வாரந்தோறும் கூடி, கிராம அபிவிருத்தியைக் குறித்து ஆலோசனை செய்து வருகின்றன. 2966 சபைகள் சமாச்சாரப் பத்திரிகைகளை வரவழைத்துப் படித்துவருகின்றன. மேற்படி சபைகள் ஒன்றேமுக்கால் லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பொது வேலைகளைச் சென்ற வருஷத்தில் செய்யத் தொடங்கின. கிராமத்தார்கள் தாங்களாக உதவின ஒரு லட்சம் ரூபாய் தவிர பாக்கி ரூபாய் கவர்ன்மெண்டால் கொடுக்கப்பட்டது. இந்த ஏற்பாடு திருப்திகரமாக வேலைசெய்து வருகிறதாகத் தெரிவதால், அதை விருத்திசெய்ய யோசனை செய்யவேண்டும்.

நீதி பரிபாலனத்துக்காக இதுவரையில் 143 கிராமக் கோர்ட்டுகள் ஏற்பட்டு, விசாரணை செய்து வருகின்றன. 65 குளப் பஞ்சாயத்து சபைகள் ஏற்பட்டிருக்கின்றன.

இவைபோன்ற பல விஷயங்களைத் திவான் அறிவித்துவிட்டு, ராஜப்பிரதிநிதி லார்டு ஹார்டிஞ்சு அந்தப் பதவியை வகிக்கக்கூடிய காலம் சீக்கிரத்தில் முடியப்போவதைப் பற்றி வருத்தப்பட்டுப் பேசினார். பிறகு ரெஸிடெண்டு ஸர்

ஹூடாவியும் சீக்கிரம் போய்விடக் கூடியதாக இருப்ப தற்கு வருத்தப்பட்டுப் பேசினார். பிறகு சில சபைகளால் திவானுக்கு அட்ரஸ்கள் படிக்கப்பட்டன. அவைகளுக்கு அவர் பதில் சொன்ன பிறகு சபை கலைந்தது.

---

இந்த மைசூரானது காவேரி முதலான நதிகளால் தண்ணீர் பாய்ச்சப்பட்டு நெல் முதலான பற்பல தானியங்கள் ஏராளமாக விளைவிக்கப்படுகின்றன. இப்போது கன்னம்பாடி தேக்கமென்னும் ஓர் பிரமாண்டமான அணையைக் கட்டிக் காவேரி நீரைத் தேக்கம் செய்து லக்ஷக்கணக்கான ஏகரா நிலங்களுக்கு நீர் பாய்ச்சவும், கோலார் பொன் சுரங்கத்திற்கு அதிக மின்சார சக்தி கொடுக்கவும் முயன்று லக்ஷக்கணக்கான ரூபாய் செலவு செய்துவருகிறார்கள். இந்த மைசூருக்குச் சமீபத்திலிருக்கும், தென்கிழக்கே சாமுண்டியம்மன் மலை சுமார் 3488 அடிகள் உயரமுள்ளதாயிருக்கிறது. அந்தக் கோயிலுக்குப் போகும் வழியில் ஓர் பெரிய நந்திவிக்ரகம் அலங்காரமாகச் செய்துவைக்கப்பட்டிருக்கிறது. இந்த அலங்காரமான நகரில் ஸ்ரீ ராஜா அவர்களுடைய புது அரண்மனையும், அதன் வாசலுக்குச் சமீபத்தில் அநுமந்தராயன் கோயிலும், சற்று தூரத்தில் ஜெகன்மோகன அரண்மனையும், பின்னும் அநேக கட்டிடங்களும், உத்யான வனங்களும் இருக்கின்றன. இந்த மஹாராஜா அவர்கள் இந்தியாவுக்கு 2-ம் படி, அதாவது நைஜாமுக்கு இரண்டாவது அந்தஸ்தையும் ஆஸ்தியையும் பெற்றவர். இது பூனுவுக்கு 711 மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்குச் சென்னையிலிருந்து சார்ஜ் ரூபா 6-10-0.

இப்போது இந்த மைசூரில் அநேக ஒழுங்கான வீதிகளும், முக்கியமாகத் தென்வடலாய்ப் போகும் பெரிய வீதியும், அவ்வீதிகளுக்கு இரண்டு பக்கங்களிலும் அழகான மாடி வீடுகளும் அலங்காரமாகவிருக்கின்றன. நகருக்கு வடகிழக்கே பிரிடிஷ் ஸ்தானாதிபதி வீடும் கோயிலும் இருக்கிறது. இங்கிருக்கும் பழைய கோட்டை, பக்கம் 1-க்கு 150 கெஜம் நீளமாக 3 பக்கங்களும் 450 கெஜம் நீளமுள்ளவையாயும், வடபக்கம் அதிகநீளமுள்ளதாயும் இருக்கிறது. இக்கோட்டைக்குள் அழகிய இராஜ அரண்மனையிருந்து சில வருஷங்களுக்கு முன்பு அக்கினிக்கிரையாகிவிட இப்போது எத்தனையோ லக்ஷம் ரூபாய் செலவிட்டு அழகான புது அரண்மனை கட்டியிருக்கிறார்கள்.

## பேங்களூர்.

இது மைசூர் கவர்ன்மெண்டுக்கும் இங்கிலீஷ் கவர்ன்மெண்டுக்கும் சேர்ந்த ஒரு சிறந்த பட்டணம். இவ்விடத்தில் அவரைக்கொட்டை அல்லது மொச்சைக்கொட்டை ஒரு காலத்தில் அதிகமாக விளைந்துவந்தபடியால் பேங்கில்-மொச்சை, அதாவது மொச்சைக்கொட்டை விளையும் ஊரென்று சில சரித்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இது விஜயநகர சம்ஸ்தான கிருஷ்ணதேவராயர் காலத்தில் கட்டப்பெற்றதென்று சொல்லியிருக்கினும் 1537ஞ கெம்பே கவுண்டர் இதன் கோட்டையைக் கட்டியதாகவும், 1638ஞ பீஜப்பூர் ஜெனரல் இதைப் பிடித்ததாகவும், 1758ஞ ஹைதராலி வசமாகியதாகவும், 1791ஞ ஸ்ரீரங்க பட்டணத்தில் திப்பு சுல்தான் மரணமடைய, அந்த ஸ்ரீரங்கபட்டணம் ஆங்கிலேயர் வசமாக, இந்த பெங்களூர் ஆங்கிலேயர் வசமாகியது.

இந்த பெங்களூரானது இந்த ஜில்லாவிற்கும் தாலூகாவிற்கும் முனிசிபாலிடிக்கும் முக்கியமானதாயும், மைசூர் கவர்ன்மெண்டுக்குப் பிரதான பட்டணமாயு மிருக்கிறது. இதுவே மைசூர் சம்ஸ்தான ஆங்கில ஸ்தாநாதிபதி தங்குமிடம். இது, $20\frac{3}{4}$ சதுர மைல்கள் விஸ்தீரண முள்ளதாயும், 1901ஞ காணிஷ்வார் கணக்கின்படி 1,59,030 ஜனங்களை யுடையதாயும் இருக்கிறது. இப்போது இதில் மும்மடங்கு ஜனங்கள் வசித்துவருவதாகச் சொல்லலாம். இந் நகரம்: பேட்டை யென்றும், சிவில் மிலிடேரி என்னும் தண்டு என்றும் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட் டிருக்கிறது. மைசூர் சமஸ்தானத்தைத் திப்பு சுல்தா னிடமிருந்து பிடித்து அதைப் பழைய மைசூர் ராஜாவின் குடும்பத்தாருக்குக் கொடுத்ததற்காக சிவில் மிலிடெரி ஸ்டேஷன் என்னும் தண்டை இங்கிலீஷ்காரருக்குக்கொடுத்தார்கள். இது சமுத்திர மட்டத்திற்கு 3113 அடிகளுக்கு மேல் கட்டப்பெற்றிருப்பதால் ஐரோப்பியரும் ஏனையோரும் விரும்பத்தக்க சீதோஷ்ணமுடையது. இங்கிருக்கும் கோட்டை புராதனமான மண்கட்டிடம். 1761ஞ அதாவது ஹைதராலி அரசாக்ஷி காலத்தில் இது மறுபடியும் கற்களினால் கட்டப்பட்டது. 1780ஞ (Sir David Baird) சர் டேவிட் பேர்ட் அவர்களாலும் முற்றுகை போடப்பட்டாலும் 1791ஞ காரன்வாலிஸ் பிரபுவால் பிடிக்கப்பட்டு உட்பாகங்களைச்

சோதித்ததில் சில இங்கிலீஷ் சோல்ஜர்களுடைய சமாதிகள் கண்டுபிடிக்கப்பட்டன. இக் கோட்டைக்கு வடக்கிலும் தெற்கிலும் டில்லி மைசூர் கேட்டுகளென்னும் இரண்டு கோட்டை வாசல்களிருக்கின்றன. இக்கோட்டையின் வடக்கு வாசல் பெங்களூர் பேட்டையின் சார்பா யிருக்கின்றது. இக் கோட்டைக்குத் தென்மேற்கே ஒருமைல் தூரத்தில் கெவி கங்காதரேஸ்வரர் என்னும் ஒரு குகைக்கோயிலிருக்கின்றது. இக் கோயிலில் சிவலிங்கத்தையும், அடுத்திருக்கும் 15 அடிகள் உயரமுள்ள பாறையில் பெரிய குடையைப் போலவும் இரட்டை நகாரியைப் போலவும் செதுக்கப்பட்டிருக்கின்றன. இத் திருப்பணிகள் கெம்பேகவுண்டர் செய்வித்ததாகச் சொல்லுகிறார்கள்.

இப்போது சீப் கமிஷனர் வதிந்துவந்த கவர்ண்மெண்ட் கட்டிடங்களும், 7,50,000 ரூபாய் செலவில் கட்டிய புது சர்க்கார் கட்டிடங்களும், பெரிய ஜெயிலும், கவர்ண்மெண்ட் பெரிய கலாசாலேயும், மஹாராஜா அவர்களுடைய புது அரண்மனேயும், கோட்டையிலிருக்கும் பழைய அரண்மனேயும் விக்டோரியா ஆஸ்பத்திரியும், செண்ட் ஆண்ட்ரூஸ் என்னும் கிறிஸ்தவர் கோயிலும் பார்க்கத்தக்கவைகள். அன்றியும், இங்கிருக்கும் லால்பார்க் என்னும் சிங்கார உத்யானவனமும், கப்பன்பார்க் என்னும் நந்தவனமும் வெகு ரமணியமானவைகள். லால்பார்க்கில் விதம் விதமான மரங்கள், செடிகள், கொடிகள், இலேகள், புஷ்பங்கள், காய்கள், கனிகள், வெகு ஒழுங்காகவும் அலங்காரமாகவும் விஸ்தீரணமாகவும் பயிர் செய்யப்பட்டு இருப்பதன்றியில்; சிங்கம், புலி, கரடி, சிறுத்தை, செந்நாய், குரங்கு முதலான காட்டு மிருகங்களேத் தக்க கட்டிடங்களில் அடைத்துவைத் தாதரித்து வருகிறார்கள். இவைகளேயும் இத் தோட்டத்தில் மற்றெல்லாப் பாகங்களேயும் யாவரும் யாதொரு செலவுமின்றிப் போய்ப் பார்த்து வரலாம். மாக்ஷிமை தங்கிய ஸ்ரீ எட்வர்டு சக்கரவர்த்தியார் அவர்கள் பிரின்ஸ் ஆப் வேல்ஸாக வந்திருந்தபோது இந்த சிங்கார நந்தாவனத்தைப் பார்த்ததற்கு அடையாளமாக ஒரு பெரிய தகட்டுக் கூரைக் கட்டிடத்தைக் கட்டிவைத்திருக்கிறார்கள். கப்பன் பார்க்கில் அடிக்கடி பாண்டுமுதலான வாத்தியங்கள் வாசிக்கப்படுவதனல் அநேகர் மாலேதோறும்போய்க் கேட்டு வருகிறார்கள்.

யாத்திரைக்காரர்களுக்கு வசதியாக எட்டு பெரிய நல்ல நல்ல ஹோட்டல்களும், சுதேசிகளுக்குபயோகமாக ஒன்பது சத்திரங்களும், சாப்பாட்டுக் கடைகளு மிருக்கின்றன. இச் சத்திரங்களில் ஒன்று ஸ்ரீமத் தர்ம ரத்நாகரம் ராவ் பகதூர் ஆற்காடு நாராயணசாமி முதலியார் அவர்களால் கட்டப்பெற்றது. பரமபக்தரும் பரோபகார சிரத்தையு முள்ள இந்த மஹானுபாவர் ஆயிரங் கணக்காக ரூபாய் செலவிட்டு ஒரு பெரிய ஹைஸ்கூலும், பஞ்சமர் பாடசாலை யும், பெண் பாடசாலைகளும் கட்டுவித்து அதற்கு அதிக பணம் (Fund) பண்டாக வைத்துத் தமது சகோதரர் குமாரர் ராவ் பகதூர் ஸ்ரீ மெய்கண்டதேவ முதலியாரவர்கள் மூலமாய் அத் தர்மங்களைக் கிரமமாக நடத்திவருகையில் சுமார் ஆறு வருஷங்களுக்குமுன் மேற்சொன்ன இரண்டு பிரபுக்களும் பரமபத மடைந்துவிட்டபடியால் பெங்க ளூருக்கே பெருத்த கஷ்டமென்று சொல்லலாம். ஆயினும், அவர் சகோதரர் குமாரர் ராவ்பகதூர் ஸ்ரீசுந்தரமூர் த்தி முதலியாரவர்கள் அந்தத் தர்மங்களைத் திருப்திகரமாக நடத்திவருகிறார்.

பெங்களூரிலிருக்கும் நான்கு பிரம்ம சமாஜங்களில் (Contonment) தண்டு பிரம்மசமாஜ மந்திரம் கட்டிக் கொடுக்கப்பட்டது. அவர்கள் காலத்தில் சமாஜங்கள் பிரபல மாக விருந்தன. அவைகளில் சுபேதார் மேஜர் பகதூர் அப் பாவு பிள்ளையவர்கள் ஒரு மந்திரத்தையும், ஒரு தர்ம பெண் பாடசாலையையும் ஸ்தாபித்தார்கள். இந்த முனிசிபல் டவு னுனது சென்னை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 219 மைல் கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரயில் சார்ஜ் ரூபா 2-5-0.

இந்த பெங்களூருக்கு 60 மைல்கள் தூரத்தில் கோலார் என்னும் பொன் விளையும் சுரங்கங்களுள்ள ஒரு விசேஷ ஸ்தல மிருக்கிறது. இது மைசூர் சமஸ்தானத்தைச் சார்ந் தது. பவரிங்பேட்டை ஸ்டேஷனி லிறங்கி ஒரு மைல் தூரம் போனால் அழகிய சிறு பட்டணம் இருக்கிறது. இங்கு ஏராளமான வர்த்தகம் நடந்துவருகின்றது. பிரயாணிக ளுக்கு வசதியான ஹோட்டல்களும் தங்கு மிடங்களு மிருக்கின்றன. பொன் எடுக்கும் சுரங்கத்திற்கு இப்போது புகைவண்டி ரோட் போட்டிருக்கிறார்கள். இச் சுரங்கத் தில் ஐரோப்பிய கம்பெனியார் ஏராளமான பணம் செல

விட்டு இயந்திர கருவிகளைக் கொண்டு பூமியைக் குடைந்து மின்சார விளக்குகளின் உதவியினால் பொன் தாதுக்களை எடுப்பித்து உறுக்கி சுத்திசெய்து சீமை முதலான தேசங்களுக்கு அனுப்பிவருகிறார்கள். இவ்விதம் பொன் எடுப்பதற்கும் அதற்கு மின்சார உதவி செய்வதற்கும் அந்த கம்பெனியார் மைசூர் சமஸ்தானத்திற்கு வருஷாவருஷம் தொகை செலுத்தி வருகிறார்கள். இங்கு நடக்கும் அற்புத இயந்திரத் தொழில்கள் பார்க்கத் தகுந்தவை. 1914ல் 323 லக்ஷம் ரூபாய் அல்லது 21,56,877 பவுன் மதிப்புள்ள தங்கம் எடுக்கப்பட்டது.

## ஸ்ரீங்கேரி.

இந்த ஸ்தலத்தைப்பற்றி எமது திவ்விய தேசயாத்திரை சரித்திர முதல் புத்தகத்தின் கடைசியில் விவரமாக எழுதியிருக்கிறோம். ஆயினும் அதற்குப் போய் வரும் வழிகளைப்பற்றியும் வேறு சில விசேஷ விஷயங்களைப்பற்றியும் இதனடியில் சற்று சங்கிரகமாக எழுதியிருக்கின்றோம்.

அந்த ஸ்ரீங்கேரிக்குப் போக விரும்புவோர் பெங்களூரிலிருந்து வடமேற்கே ஹுப்பிளிக்குப் போகும் புகை வண்டிரோட்டு மூலமாக 128 மைல்கள் தூரத்திலிருக்கும் கடூர் ஸ்டேஷனைக் கடந்தும், பிறகு அதற்கு மேற்கு 55 மைல்கள் தூரத்திலிருக்கும் பீரூர் ஜங்ஷனைக் கடந்தும், பிறகு அங்கிருந்து 35 மைல்கள் தூரத்திலிருக்கும் சிமோகாவைக் கடந்து அனந்தரம் சற்றுத் தென்மேற்காக 19 மைல்கள் தூரத்திலிருக்கும் துங்கா நதியின் வடகரைக்குப் போகவேண்டும்.

இதுவே ராமாயணத்தில் கண்ட ரிஷியசிருங்கருடைய பிறப்பிடமென்று சொல்லப்பட்டிருக்கிறது. விபந்தக ரிஷி தபசு செய்த இடம் இதுவேயாம். சுமார் 1200 வருஷங்களுக்கு முன் ஸ்ரீமத் ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகளிவ்விடத்தில் காஷ்மீரத்திலிருந்து கொண்டுவந்த ஸாரதாம்பாள் (ஸரஸ்வதி) விக்ரஹத்தைப் பிரதிஷ்டை செய்வித்தார்கள். இந்த க்ஷேத்திரத்தின் மத்தியிலுள்ள ஸ்ரீங்கேரி மலையில் ஸ்ரீ சாரதாம்பாள் தேவஸ்தானமும் சுற்றிலுமுள்ள 4 தெருக்களில் வீடுகளும் நிறைந்திருக்கின்றன. இம் மடத்துக்கு மைசூர் மகாராஜா அவர்களால் இந்த ஸ்ரீங்கேரி மாகாணத்தைச் சேர்ந்த பூமிகளனைத்தும்

சர்வ மானியமாய் விடப்பட்டிருக்கின்றதன்றியில், மாதத்துக்கு 100 பவுன் சாஸ்வதக்கொடை ஜாரிசெய்து வருகிறார். தவிரவும், சிஷ்ய கோடிகளால் ஏராளமான வருமானமும் கிடைத்து அநேக உற்சவங்களும் தருமங்களும் விசேஷமாய் நடந்துவருகின்றன.

## பெங்களூர் லால்பார்க்கில் செய்த பிரார்த்தனை.

ஓ பெரும்புகழோனே! நேற்றைய தினம் பெங்களூர் பிரம்ம மந்திரத்தில் பல பிரம்மோபாசிகளோடு நின்னைப் பிரார்த்தனைசெய்து பெருமை பெற்றேன். இன்று இந்த லால்பார்க் என்னும் சிறந்த உத்யானவனத்திலும் வந்து ஏகாந்த சேவையாக நின்னைப் பிரார்த்தனைசெய்ய பாக்யம் பெற்றேன். இந்தவனத்திலிருக்கும் பலவித விருக்ஷங்களையும் செடிகளையும் கொடிகளையும் புஷ்பங்களையும் பார்த்து நின் பெரும் புகழைப் பாடி பிரார்த்திக்கிறேன். இங்கிருக்கும் சிங்கம், புலி, சிறுத்தை முதலான பலவர்ணமுள்ள மிருகங்களையும் பலவித பக்ஷிகளையும் பார்த்தும், அவைகள் பாடும் இனிய கீதங்களைக் கேட்டும், இப்படிப்பட்ட நினது அற்புத சிருஷ்டியைக் கருதிப் பேரானந்தமுறுகின்றேன். ஹா! என்ன விந்தையான அமைப்பு! நேற்று பிரம்ம மந்திரத்தில் பிரார்த்தனை செய்தபோது அங்கு வந்திருந்த பிரம்மோபாசிகளாகிய சாந்தத்துவமுள்ள சகோதரரையும் அவர்கள் பக்தியையும் பிரார்த்தனையையும் கண்டும் கேட்டும் ஆனந்தித்தேன். இன்று இந்தச் சிங்கார வனத்திலிருக்கும் ஒவ்வொரு விருக்ஷமும் ஒவ்வொரு செடியும் ஒவ்வொரு கொடியும் ஒவ்வொரு புஷ்பமும் அவைகளின் சிருஷ்டி கர்த்தராகிய நின்னை நிச்சலமாகப் பரமயோகிகளைப் போல் பாடி ஆடி ஆனந்திக்கின்றன. இங்கிருக்கும் சிங்கம் புலி கரடி முதலான மிருகங்களும், பக்ஷி முதலான பிராணிகளும், நின்னை நாடி நடித்துப் பாடி நின் பெருமையைப் பிரபலமாக்குகின்றன. இப்படிப்பட்ட சிங்காரவனத்தில் ஏகாந்தமாக வந்து பிரார்த்திக்கும் அடியேனுக்கும் நிருமல நிரந்தர மனத்தையும் பக்தியையும் பிரசாதிப்பாயாக.

ஓம் தத்சத்.

---

# கொங்கு நாடு.

"வடக்குத் தலைமலையாம் வைகாவூர் தெற்கு
குடக்கு வெள்ளிப் பொருப்புக்குன்று கிழக்கு
குழித்தண் டலைசூழும் காவிரி நன்னாடா
குழித்தண் டலையளவுங் கொங்கு."

என்று கம்பர் பாடியிருக்கிறார். இதன் கருத்தென்னவெனில்: வடக்கேதலைமலைக்கும், தெற்கேபழனிமலைக்கும், மேற்கே வெள்ளிங்கிரி மலைக்கும், கிழக்கே குழித்தலைக்கும் இந்த நாற்பாங்கெல்லைக்கு உட்பட்டது கொங்கு நாடென்று பெயராம். வேறு சில சாசனங்களில், மலையாளத்தின் பெயரும் பாகமும் சேலத்தைச் சார்ந்த சேர்வராயன் மலைக்கும் கொல்லி மலைக்கும் மேற்கில் உள்ள நிலமும் கொங்கு நாட்டைச் சார்ந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்குக் கொங்கு நாடென்று பெயர் வந்ததற்குக் காரணம்: கி. பி. 189ஹ கங்கை நதிக்கரையோரமாய் வாழ்ந்து வந்த கங்கா ஜாதியார் தெற்கே புறப்பட்டு வந்து மைசூர் எல்லைக்குள் வதிந்து, பிறகு இந்நாட்டுக்குள் பிரவேசித்து ஆண்டு வந்ததினால் இது கங்கை நாடு அல்லது கொங்கு நாடு என்னும் பெயரைப் பெற்றதென்று ஒரு சரித்திரம் தெரிவிக்கின்றது. அந்த இராஜனுக்குக் கொங்காணி வர்மனென்று பெயராம். அவன் காலத்தில் இக் கொங்கு நாடு 24 நாடுகளாக வகுக்கப்பட்டு அவற்றுள் கரூர் என்பது இராஜதானியாக இருந்ததாம். அவன் சேரனுடைய மகளை விவாஹம்செய்து கொண்டதில் அவர்களுக்குப் பிறந்த மகனுக்குச் சேரன் எனப் பெயராம். அவன் குழித்தலைமுதல் சேலம் ஜில்லாவின் சுமார் முக்கால் பாகமும் மலையாளத்தின் பெரும்பாகமும் ,கொடுக்கப்பெற்று ஆண்டுவந்தமையால் அதற்குச் சேரநாடு என்றும் பெயருண்டாயிற்றாம்.

அந்நாட்டில் ஆதிபெருமாள் 12 வருஷங்களும், பாண்டிய பெருமான் 12ஹம், சேரமான் பெருமான் 36ஹம், துளபன் பெருமாள் 6ஹம், இந்திர பெருமாள் 12ஹம், ஆரியபெருமாள்-குந்தனப்பெருமாள் - கொட்டிபெருமாள், மாதவபெருமாள் 12ஹம், எரிய பெருமாள் 12ஹம், கம்பென பெருமாள் 4ஹம், விஜயன் பெருமாள், வல்லப்

பெருமாள் முதலியவர்கள் ஆண்டதாகச் சில சரித்திரங்கள் கூறினாலும், இந்தக் கொங்குநாட்டின் ராஜதானியாகிய கரூரில் வீரராய சக்கரவர்த்தி, கோவிந்தராயன், கிருஷ்ணராயன், கலாவல்லபராயன், கோவிந்தராயன், சதுர்புஜகாளதேவன், திரிவிக்ரமராயன், கொங்காணிவர்மன், மாதங்கராயன், ஹரிவாமன், பாகுலாதிராயன், நரசிம்மராயன், விஷ்ணுகோபவர்மன், பிரிகுலாதிராயன், மாதவராயன், கிருஷ்ணவர்மன், கொங்காணிமதிராயன், துருவிந்திராயன், முஷ்கரராயன், பிர்மஹத்திராயன், திரிவிக்கிரமராயன், பூவிதிசமராயன், வல்லபராயன், நவகர்மராயன், இராஜகோவிந்தன், நந்திவாமன், சிவராமன், பிருதிவிகொங்காணி, விஜயாதித்தியன், மல்லதேவன், காந்ததேவன், சத்தியவாக்கன், குணஉத்தமன், வல்லதேவன், காலிங்கராயன் வரையில் 40 பெயர்கள் ஆண்டார்கள். இவர்கள் காலத்தில்தான் ஸ்ரீவில்லிபுத்தூரார், மஹாபாரதம் இயற்றி அரங்கேற்றியதாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியால் கொங்குநாட்டினர் கல்வியிலும் செல்வத்திலும் சிறந்தவர்களாய் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. அப்படியிருக்க, கம்பன்: சோழ பாண்டியாதி நாடுகளைச் சிறப்பித்துப் பாடி இக்கொங்கு நாட்டைப் பற்றி,

"ஊரெல்லாம் காடும் மேடும் உண்பதோ கம்பஞ் சோறு
பேரெல்லாம் பொம்மன் திம்மன் பெண்டிரோ நாயும் பேயும்
காரெல்லாம் கொங்கு நாட்டைக் கனவிலும் நினையொண் ணுதே."

என்று பாடியிருக்கிறார். இப்படிப் பாடியதற்குப் பலர் பலவிதமாகப் பொருள் உரைக்கக் கூடினும் கொங்கு நாட்டின் ஆதி ஸ்திதியை அறிந்தோர் இப்பாட்டுப் பலவிதத்திலும் பொருந்துமென எண்ணக்கூடும். எப்படியெனில்,

இக் கொங்கு நாட்டுக்குத் தற்கால பிரதானபட்டணமாகிய கோயமுத்தூரானது ஆதியில் பயங்கர காடுகளாலும் வனங்களாலும் சூழப்பெற்று வனசஞ்சாரிகளாகிய வேடர்கள் அல்லது வேட்டுவர் வசத்திலிருந்ததாகவும், அவ்வேட்டுவர்களுக்குள் முதல் முதல் ஆண்ட அரசனுக்குக் கோனன் அதாவது அரசன் என்ற பெயர் இருந்ததாகவும், அவன் வடவள்ளி என்னுமிடத்திற்கு வந்து காடுகளைக் கழைத்து ஆண்டுவரவே அதற்குக் கிழக்கே உள்ள மேட்டுப்பாங்கான நிலங்களில் பலவித புஞ்சை தானியங்களை விளைவித்ததோடு அடுத்த ஆழமுள்ள குளங்

களில் ஆணிமுத்துகள் உற்பத்தியாக அவைகளையும் எடுத்து மைசூர் முதலான விடங்களுக்கு ஏற்றுமதி செய்து வந்தான். அவனுக்கு ஆண் சந்ததி இல்லாமையினால் தன் இரண்டு குமாரத்திகளாகிய கோனி, முத்தி என்னும் இரண்டு பெண்களுக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுத்து இறந்து விட்டதாகவும், அவ்விரண்டு பெண்களாகிய கோனி, முத்தி என்பவர்கள் கிழக்கே வந்து காடுகளை வெட்டி நாடுகளாக்கி, வசிக்கத்தக்க வீடு வாசல்களைக்கட்டி, தங்கள் தகப்பன் வழங்கிவந்த கோனியம்மன் விக்கிரகத்தை வடவள்ளியிலிருந்து கோயமுத்தூர் கோட்டைக்கு வடக்கில் நட்டு ஒரு சிறு கோயிலைக் கட்டி வணங்கி வந்ததாகவும், அன்றுமுதல் கோனிமுத்தூர் என்று இந்த ஸ்தலத்திற்குப் பெயருண்டாகி அதுவே நாளாவட்டத்தில் கோயமுத்தூர் என்று மருவிவிட்டதாகவும், பிறகு இங்கு வந்த அந்த வேட்டுவர்களே நாளாவட்டத்தில் வேட்டுவ கவுண்டர்களாகிக் குடித்தனம் செய்ய ஆரம்பித்தார்களென்றும் சில சரித்திரங்கள் கூறுகின்றன. அப்போது இக் கோயமுத்தூரில் காடு வனங்கள் அதிகமாகவும், அதில் வதிந்த ஜனங்கள் நாகரீகமற்றுப் பொம்மன் திம்மன் என்றுதி பெயர்களைப் பெற்றுக் கம்பு முதலிய கருந்தானியங்களை உண்டு வந்ததாகவும், அத்தன்மையைக் கண்ட கம்பர் மேற்கண்டபடி பாடியதாகவும் தோற்றுகின்றது.

ஆயினும் அப்பாட்டிற்குச் சிலர் சிறப்புப் பொருள் செய்து வருகிறார்கள். அதைப்பற்றிப் பொருள்செய்து பொழுது போக்க இது தருணமன்று. பிறகு இது சோழர்களுக்கும், விஜயநகர சமஸ்தான ஸ்ரீ கிருஷ்ண தேவராயனுக்கும், மைசூர் மன்னர்களுக்கும் முறையே வசமாகியதன்றியில், 1799ஆ மைசூர் திப்பு சுல்தான் காலத்தில் ஆங்கிலேயர் வசமாகிவிட்டது.

இனி, இக்கோயமுத்தூரிலிருக்கும் சில விசேஷ க்ஷேத்திரங்களைப்பற்றி எழுதுவோம்.

## திருப்பேரூர்.

(மேலைச்சிதம்பரம்—பேரூர், பட்டீச்சுரர், பச்சைநாயகியம்மை, காஞ்சிநதி, சிங்க தீர்த்தம், பிரம தீர்த்தம் முதலியன.)

அரசு, பிறவாப்புளி, இறவாப்பனை, விருக்ஷங்கள்; நாரதர், காலவர், காமதேனு, முசுகுந்தன், இந்திரன், வேதவியாசர், விசுவாமித்திரன், இயமன், கௌரியம்மை முதலாயினோர் பூசித்ததலம். பிரம விஷ்ணுக்களே பட்டிமுனி கோமுனியாக வந்து பூசிக்க, அவர்கள் பொருட்டு அரசம்பலத்திலே இரசித மன்றத்தில் பங்குனி யுத்திரத்தன்று ஆனந்த நிருத்தஞ் செய்தருளிய தலம். காமதேனு பட்டியிட்டுப் பூசித்தமையால் பட்டீசுரரென்ற காரணப்பெயரோடு திருமேனியிற் கொம்பு குளம்புகளின் அடையாளம் பூண்டருளிய தலம். சுமதியென்னும் தூர்த்தவேதியனிறப்ப, அவனுடலை நரியீர்த்துக் காஞ்சி நதியில் வீழ்த்திய பலத்தால் நற்கதி பெற்றதலம். விதூமனென்னுங் கந்தருவன், சுகுமாரி என்றும் பார்ப்பனப் பெண்ணின் சாபத்தாற் குரங்காய்த் திரிகையில், சிவராத்திரியில் வில்வ மரத்திலேறிக் கிளையை அசைப்ப, உதிர்ந்த வில்வம் அதன் கீழிருந்த சிவலிங்கத்திற் பட்டபுண்ணியத்தால் முசுகுந்த சக்கரவர்த்தியாய் உலகாண்டு தேவேந்திரனோடு வீற்றிருக்கையில், அரம்பையென்பாள் செய்த இகழ்ச்சி நகையால் வருந்திய வரசன் தனக்குள்ள குரங்கு முகம் நீங்கி மனிதர் முகம் பெற்ற தலம். இந்திரன், பிருகு புத்திரியை வலிமை செய்த காரணத்தால் அரக்கனுகும்படியடைந்த சாபத்தைத் தீர்த்தருளிய தலம்.

திரிலோகசோழமகாராசன் வேட்டையாடுகையில் பற்றிய பிரமஹத்தியைத் தீர்த்தருளிய தலம். பார்வதியம்மையின் சேடியர்களாகிய கன்னிகைய ரெழுவர் கந்தருவனைக் கண்டுமோகித்த காரணத்தால்சாரங்கனென்னும்வேதியன் மக்களாய்ப் பிறந்த சாபத்தை விமோசனஞ் செய்தருளிய தலம். காசியில் விஷ்ணுவே பரமெனக்கூறித் தூக்கிய வியாசரது கையுநாவு மெழாமற் போனதை விளங்குவித்தருளிய தலம். அங்கிரனென்னுங் கொலைத்தொழில் வேடுவன் கதி பெற்ற தலம். தான்மிக பாண்டியனது மனைவியாகிய வித்துருவதை யென்பாளைக் கொங்கணதேயத்துப் பார்ப்பான் மகாராட்டிர தேயத்திற் றுலாபார தானமேற்ற பாவத்தாற் பிரமராக்ஷசனு யிருந்து பிடித்துக்கொள்ள, அது பிரம குண்டமென்னுந் திருநீற்று மேட்டில் விளையும் விபூதியைப் பூசியும் காஞ்சிநதியில் மூழ்கியும் தீரப் பெற்ற தலம். அவ் விபூதிதான் ஆலயத்திற் பிரசாதிக்கப்படுவது.

குலசேகரனது குட்டநோய் தீர்த்தருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிக ளிங்கெழுந்தருளியபோது சிவபிரான் 'இத்தலமானது அடியவருக்கு மோக்ஷமே யன்றிக் காமியங் கொடுத்தல் இயலாத தலமாதலால் பொன்றருதல் கூடாது' என்று ஒழிந்து தாமுமம்மையும் பள்ளனும் பள்ளியுமாய் நாற்று நடுவனதை நந்தியெம்பெருமான் குறிப்பா லுணர்த்த உணர்ந்த நாயனர் கழனியிற் சென்று பாட, அவருக்கு ஆநந்த நிருத்த தரிசனங் கட்டளையிட்டருளி, அவர் விரும்பிய பொன்னையுஞ் சேரமான்பெருமாணயனாராற் கொடுப்பித்தருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தில்லையினிடத்துச் சென்று தரிசித்தபொழுது, இத்தலச் சேவையை யங்குங் காட்டியருள, அதனைப் பதிகத்தாற் கூறிய துணர்ந்த தில்லை மூவாயிரவர் வந்து பூசித்த தலம். இதனாலே இது மேலைச் சிதம்பரமென்று கூறப்படுகிறது." தனித் திருப்பதிகமில்லா திருப்பினும், வைப்புத் தலமாகச் சுந்தர மூர்த்தி சுவாமிகளால் பாடல் பெற்றுள்ளது.

இக் கோயிலுக்குள்ளிருக்கும் கனகசபை சிற்பலங்கார சித்திர வேலைப்பா டுள்ளது. இது மதுரை திருமலை நாயுடுகாருடைய மருமகனர் ஸ்ரீ அளகாத்திர நாயுடவர்களால் கட்டுவிக்கப்பட்டது. திப்பு சுல்தான் படையெடுத்து வந்தபோது எல்லா ஹிந்து கோயில்களையும் இடிக்கும்படி உத்தரவு கொடுத்தபோது இக் கோயிலின் அழகைக் கண்டு இதை இடிக்க வேண்டாமென்று உத்தரவு கொடுத்தாராம்.

கோயமுத்தூருக்கு மேற்கே 3 மைல்கள் தூரத்திலுள்ள இவ்விடத்திற்கு 12 அணு வாடகை கொடுத்து ஜட்கா வண்டியிற் போய்வரலாம். யாத்திரைக்காரருக்கு உபயோகமாகச் சில சத்திரங்களும் ஹோட்டல்களும் இவ்விடத்தில் இருக்கின்றன.

---

### மேலைச் சிதம்பரமென்னும் பேரூர் காஞ்சிமா நதிக்கரையிலுள்ள ஓர் தோப்பில் செய்த பிரார்த்தனை.

"ஓ பரமேஸ்வரா! இந்தப் பேரூர் காஞ்சிமா நதிக் கரையிலிருக்கும் சிங்காரத் தோப்பில் உன்னைத் தியானிப்பதற்குக் கிருதார்த்தனானேன். திருப்பேரூர் மேலைச்சிதம்பரமென்றும், இங்கிருக்கும்பட்டீஸ்வரனை நராஜனுகிருடிப்பவ

றென்றும் நாலாபக்கத்து ஜனங்கள் கும்பல் கும்பலாகவந்து இந்நதியில் ஸ்நானம் செய்தும், அருகிலிருக்கும் பட்டீஸ்வரன் பச்சைநாயகியம்மை நடராஜன்முதலான விக்கிரகங்களுக்குப் பண்டுபலாதிபுஷ்பங்களோடு வெகு சிரத்தையாகப் பூஜைசெய்தும் போவதன்றியில், சிலர் நடராஜ மண்டபத்திலிருக்கும் சிற்பலங்கார சித்திரவேலையைக் கண்டு அதிசயித்தும், சிலர் அக்கம்பக்கங்களி லிருக்கும் சத்திரங்களில் தங்கிச்சிவபாராயணம்செய்தும், சிலர் இந்நதியின் கரையோரங்களிலிருக்கும் சிங்காரத் தோப்புகளில் சமாராதனைகளைச் செய்தும், சிலர் குடும்ப சமேதராக வந்து இந்நதியில் ஸ்நானம் செய்தும், அடுத்த தோப்பு தோட்டங்களில் சமைத்துச் சாப்பிட்டும் சிவநேசர்களாக நடிப்பதோடு சங்குநாதமுதலான வாத்யக் கருவிகளால் நின்னைப் புகழ்கின்றார்கள். இவ்வித பூஜைகள் பிரஜைகளின் ஒருவித பாலிய தசையைக் காட்டுவதாகத் தோன்றினும் உண்மையில் அவர்களுடைய சிறந்த பக்தியைப் பிரபலப்படுத்துகின்றன. இப்படிப்பட்ட சிரத்தா பக்தி தினேதினே விர்த்தியாக அவர்களுக்கு சுக்ஞானம் ஜனித்துஆத்மோநந்த ஸ்திதியைப் பெறச்செய்யத் தூண்டுமென்பது திண்ணம். ஆகவே அப்படிப்பட்ட திவ்ய ஸ்தலத்தில் வந்து நின்னைத் தியானிக்கின்றேன். அடியேனுக்கு உண்மையான சிரத்தாபக்தியைப் பிரசாதித்தருள்வாய்.

ஓம் தத்சத்.

---

## மருதமலை.

(முருகப்பிரானது குன்றுதோ றாடல்களி லொன்று. மருதாசலபதி, மருத தீர்த்தம், கந்த தீர்த்தம் அனுமதீர்த்தம், சரவணப் பொய்கை, கன்னி தீர்த்தம், பராசத்திவேலின் சொரூபமாகிய மருதவிருக்ஷம்.)

தேவர்கள், சூரனாதியர்க ளிடுக்கணுக்கஞ்சிப் புலடைந்து பூசித்து அவர்களைச் சயித்துத் தத்தம் பதவிகளையடைந்தருளிய தலம். குசத்துவசனென்றும் அரசன் பூசித்துப் புத்திரப்பேறு பெற்றருளிய தலம். பாம்பாட்டிச்சித்தர் கந்த தீர்த்தத் தருகிலிருந்து தவஞ்செய்து சித்திபெற்ற தலம். இம் மலையடிவாரத்தில் தாந்தோன்றி விநாயகராலயமொன்றுளது. கோயமுத்தூருக்கு மேற்கே ஏழு மைல்கள் தூரத்திலுள்ள இவ்விடத்திற்குப் போய்வர இரண்டு ரூபாய் சத்தத்தில் ஜட்காவண்டிகளும், மலையின்மேல் சில

சத்திரங்களு மிருக்கின்றன. அங்குவிறகு தண்ணீர்மாத்திரம் அகப்படும். மற்றசாமான்கள் கீழிருந்து கொண்டு போகவேண்டும். அடிவாரத்திலிருந்து கோயிலுக்குப் போக நல்ல படிக்கட்டுகளுள்ள இடம். மூன்று மையில் உயரமுள்ளது.

---

## திருவெள்ளியங்கிரி (வெள்ளிமலை.)

(பிருதிவிலிங்கம், அப்புலிங்கம், தேயுலிங்கம், வாயுலிங்கம், ஆகாயலிங்க மென்னும் பஞ்சமூர்த்திகள், பார்வதி தேவியார், காஞ்சிமாநதி தீர்த்தம்.)

பேரூரின்கண் அரசம்பலத்தில் பட்டிமுனி - கோமுனிவர் காண ஆநந்த நிருத்தஞ் செய்தருளியபோது, உமாதேவியார்: இவ் வரையின்கண்ணே சதாநந்த நிருத்தஞ் செய்து தரிசனஞ்தந்தருளும்படி வேண்டிக்கொண்டமையால், சிவபெருமான் அதற்கிசைந்து தரிசனங்காட்டியருளிய தலம். பஞ்சலிங்கங்கள், பிருதிவிமுதலிய பஞ்சபூதங்கள், அவ்வப் பூதங்களின் குணங்களோடு விளங்குவது பிரத்தியட்சமாயுள்ள தலம். இக்காலத்துந் தேவர்கள் பூசிக்கு மோசை நம்மனோர் செவிக்கும் கேட்குந் தலம். அனேக சித்த மூலிகைகளும், சித்தர்களும் விளங்கிக் கொண்டிருக்குந் தலம்.

---

கோயமுத்தூருக்கு மேற்கே சுமார் 25 மைல்கள் தூரத்திலுள்ள இவ்விடத்திற்குக் கட்டை வண்டிகளில் போய் வரலாம். விறகும் ஜலமும் தவிர சகல சாமான்களும் கொண்டுபோக வேண்டும். இவைகள் யாவும் கோயமுத்தூர் தாலுக்காவில் இருக்கின்றன. வெயிற்காலத்தில் போவது சுகம். மழை முதலான காலங்களில் மலைப்புல் செழிப்பாக விளைந்துவிடுவதால் வழியைக் கண்டுபிடிப்பது அரிது. கோயமுத்தூரிலிருந்து போவோர் அதற்கு மேற்கேயிருக்கும் நரசாபுறத்திற்குப் போய்த் தங்கி அங்கிருந்து அடிவாரமாகிய ஐந்து மைல்கள் தூரத்திலிருக்கும் பூண்டி என்னும் இடத்தில் கட்டப்பட்டிருக்கும் சத்திரத்தி லிறங்கிச் சமைத்துச்சாப்பிட்டு அருணோதயத்தில் மலையின் மீது ஏற வேண்டும். அம்மலையின்மேல் மூங்கில் திட்டு, முழங்கால் திட்டு, தேக்கு திட்டு, ஈச்சல் திட்டு, காத்தாடி திட்டு,

கைத்திட்டு சுனை முதலிய ஏழுமலைகளைக் கடந்து போக வேண்டும். அப்படிப் போகிறவர்கள் ஆறுவது மலைக்கருகி லிருக்கும் ஆண்டிக்குளத்தில் தங்கிச் சமையல் முதலான வைகளைச் செய்துவைத்துவிட்டு, அருகிலோடும் சிற்றாற்றில் குளித்து சாமிகிரி என்னும் ஏழாவது மலைக்குப் போய்ப் பூஜை செய்வது வழக்கம். அங்குப் பிரயாணிகள் தங்குவ தற்குச் சத்திரம் சாவடிகளில்லை. ஆயினும் ஒரு பெரும் பாறைக் கல்லானது குடையைப்போல் வளைந்திருப்பதால் ஜனங்கள் அங்குபோய்த் தங்குகிறார்கள். இம்மலையின் காக்ஷி, முக்கியமாகக் காத்தாடி திட்டுக் கருகிலிருக்கும் வனங்களும், மயில்குயில் முதலான பக்ஷி ஜாதிகளும், புலி முதலான மிருகங்களும் நிறைந்து கம்பீரமாகத் தோற்று கின்றது. பிரயாணிகள் பூஜை செய்துகொண்டு ஆண்டிக் குளத்திற்கு வந்து முன் சமைத்துவைத்த உணவையுண்டு இறங்கிவந்துவிடுகிறார்கள்.

---

## மருதமலையின்மேல் மருதமரத்திற் கடியிலிருந்து செய்த பிரார்த்தனை.

"ஓ மனோகரனே! மருதமலையாகிய இந்தத் திவ்விய க்ஷேத்திரத்தில் மா+மருத+மரங்களுக்குக் கீழ் இருக்கும் சுனையின் கரையில் வந்துதங்கி நின்னைத் தியானிக்கச் சுகிர் தம் பெற்றேன். இம் மலையின் காக்ஷியையும் சிங்காரத்தை யும் எனக்கருகிலிருக்கும் சுனைநீரின் இனிமையையும்கண்டு வியந்து வணங்குகின்றேன். பாம்பாட்டிச் சித்தர் முதலான மஹான்கள் வந்து தங்கிய இவ்விடத்தில் நானும் வந்து தங்கி யோகம் முதலான விஷயங்களைப்பற்றி உபந்நியா சம் செய்து, நினது, அற்புத சக்தியைப்பற்றிப் பலருக்கு மறிவித்து அவர்களோடு நின்னைப்பிரார்த்திக்கும் இத்தினம் எவ்வளவு சிறந்த தினம். இப்படிப்பட்ட சுபகரமானமலைக்கு அடிக்கடி வந்து நின்னைத் தியானிக்க வரமீவாய்."

ஓம் தத்சத்.

---

## மருதமலைக்கடுத்த முத்திகுளத்தின் கரையின்மேற் செய்த பிரார்த்தனை.

"ஓ நிரதிசயனே! நீரே பிராணாதாரமென்று பெரியோர் கள் சொல்லியிருக்கிறார்கள் என்றால் நீரில்லாமல் கிருமி கீடகபக்ஷி மிருக மானிட பிராணன் நிலையாதென்பது கருத்

தன்றோ? இப்படிப்பட்ட நீரானது சென்ற சில மாதங்களாகக் கோயமுத்தூரில் குறைந்துபோகவே ஜனங்களும் மற்றக் கிருமிகிடகாதி கந்தமூலங்கள் அனைத்தும் கலங்குகின்றன, ஆகவே இம் முத்திக் குளத்தின் ஜலத்தைக் கோயமுத்தூருக்குத் திரும்பிக் கொண்டுபோக அன்பர்கள் சிலரோடு இங்கு வந்தேன். இந்த உன்னத பர்வதமும் இதிலிருக்கும் கந்த மூல கிருமி கீடகாதிகளும் உன்னுடைய அற்புத சிருஷ்டி சக்தியைக் கோஷிப்பதால் நானும் அநேக மலைகளையும் காடு கரடுகளையும் கஷ்டத்தோடு கடந்துவந்து நின்னைத் தியானிக்கின்றேன். பிரபஞ்ச ஜலமானது சகல கந்தமூல பிராணிகோடிகளுக்குச் சுகத்தைதருவதுபோலவே உனது பத்திரசமாகிய ஜலத்தையும் பிரசாதித்துப் பேரின்ப மடையச் செய்வாய்! ஓ முத்திக்குளமே! உனக்கு மங்கள முண்டாவதாக!''

ஓம் தத்சத்.

---

## சிவமலை (இதுவும் குன்றுதோ ருடல்களி லொன்று).

சிவமலையாண்டவர் சிவலிங்க சொரூபமாகிய தலம்; சிவபெருமானுக்கு உபதேச குருவா யெழுந்தருளியிருக்குந் தலம். இக் கலிகாலத்திலும் அநேக அற்புதங்களைக் காட்டிப் பின் நடப்பவைகளை முன்னறிவிக்குந் தலம்.

---

## திருமுருகன்பூண்டி.

(முருகநாதேச்சுரர், முயங்குபூண்முலையம்மை, மாதவிவனேசர், மங்கள நாயகியம்மை, முருகதீர்த்த முதலியன மாதவிவனம், முருகப்பிரான் பூசித்ததலம்.)

மலாதரனென்னும் ஓர்வேடன் மாதவிமரத்தில் தனக்காகத் தூக்கிய மாலையை அதன் கீழிருந்த சிவபெருமான் தமக்கு அணிந்ததாகக்கொண்டு அநுக்கிரகம் செய்தருளிய தலம். மாகவிதனென்னும் பாண்டிய ராஜன் புத்திரப்பேறடைந்த தலம். பன்னிரு வருடத்துக் கொருமுறை மகாமக தீர்த்தத்தில் மகாமகம் பொங்குகிறது இக்காலத்தும் கண்காட்சியாகக் காணப்பட்ட தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், சேரமான் பெருமாணுயனாரிடத்துப் பெற்ற திரவியங்களை இத்தலத்தின் வழியாகக் கொண்டு செல்லுகையிற் சிவபெருமான், பூதர்களை வேடர் வடிவாய் விடுத்துப் பறித்

தருளியபின், சுந்தரமூர்த்தி சுவாமிகளால் "கொடுகு வெஞ் சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லி" என்று பதிக மோதித் துதிக்கப் பின்னர்க் கொடுத்தருளிய தலம். அத் திருப்பதிகம் க. இது அவிநாசிக்கு 3 மைல்கள் தூரத்தி லிருக்கும் ஒரு சிறு கிராமம். இதிற் திருடர் பயம் உண்டு.

---

## திருப்புக்கொளியூர் அவிநாசி.

(அவிநாசீச்சுரர், பெருங்கருணையம்மை, அகஸ்திய தீர்த்தம், சிவகங்கை தீர்த்தம், நள்ளாறு தீர்த்த முதலி யன, பாதிரி விருக்ஷம்.)

இது தக்ஷிண காசியெனவும் வழங்கும். உமாமஹேஸ் வரி, பிரமன், அகஸ்தியர் முதலியோர் பூசித்த தலம். ஓர் ஊழிகாலத்துப் பிரமன் முதலியோர் புக்கு ஐக்கியமான தல மாதலால், இதற்குப் புக்கொளியூர் எனத் திருநாமஞ் சூட் டப்பெற்றது. அயிராவதம் காட்டானையோடு திரிந்தமை கொண்டு தேவேந்திரனாற் காட்டானையாகவென்று கூறிய சாபம் நீக்கியருளிய தலம். தாடகை தவஞ்செய்து மாரீ சனைப் பெற்ற தலம். நாககன்னிகை தவஞ்செய்து சரா சன்மனென்னு மரசனை மணந்த தலம். விநாச மில்லாதது அவிநாசி. வியாசனென்னும் ஓர் வேடுவன் தவஞ்செய்து மகப்பேறும் மலரடியும் பெற்ற தலம். சங்குகன்ன னென்னும் வேடன் மிக்க கொலைபாதகனாயிருந்தும் சிவ பெருமானது பாதச்சிலம்பைக் கவரும்பொருட்டு ஏகாக் கிரசித்தனாய்த் திருப்பாதம் நோக்கியிருந்த புண்ணிய வசத்தாற் கயிலையைச் சேர்ந்த தலம். ஓர் காகம் பலியைக் கவர்ந்து செல்லுழி சிந்திய ஓர் அவிழ் குருடன் பலிபாத் திரத்தில் புக்கியபின் அவனுண்ட புண்ணியத்தால் அக் காகத்தைக் கதியடைவித்த தலம். எஞ்ஞதத்த னென்னும் உலுத்தவணிகன் திருநாளிற் கடைவைத்த புண்ணியத்தாற் கதி நல்கிய தலம். தருமசேனனென்னும் அரசன் பூசித்துப் பேறடைந்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்திற் கெழுந்தருளியபோது மறையோர் தெருவில் இருமனை யில் ஒன்றில் மங்கல வொலியும், ஒன்றில் அழுகை யொலி யும் உடனெழுதல் நோக்கி வினவியருள, அழுகை யொலி நிகழ்ந்த மனையோர் அவ்வழுகையை யொளித்து வணங்கி முக மலர்ச்சியுட னுபசரித்த காலையில் சுவாமிகள் அவர்க ளழுதலானது இரண்டு வருஷத்திற்கு முன்பு குளத்தில்

விளையாடிய அவர்கள் பிள்ளையை முதலை கௌவியுண்டதனால் இறந்துபோகவும், அதே வயதுடன், அவ்விடத்தில் தப்பிய எதிர்மனைச் சிறுவன் பிழைத்து இப்போது உபவீதந் தரிக்கவும் நேர்ந்ததினால் உண்டாயதென் றுணர்ந்து, அச்சிறுவனை யுண்ட முதலை யிருந்த குளக்கரைக்குச் சென்று "புரைக்காடு சோலைப்புக்கொளியூ ரவிநாசியே, கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே" என்று பதிகமோதியருள உடனே முதலை வயிற்றிற் சென்ற வயதுகளும் நிறைந்த அச்சிறுவனைக் காலன் அமைப்ப, முதலை கரையில் உமிழ்ந்தது.

---

## அவிநாசி.

இது திருப்பூர் ஸ்டேஷனிலிருந்து 8 மைல்கள் தூரத்தில் இருக்கிற பாடல்பெற்ற சிவக்ஷேத்திரம். இங்கே தாலுக்கா கச்சேரி, ஆஸ்பத்திரி, பாடசாலைகள், பிரயாணிகள் தங்கும் சத்திரங்கள் இவை இருக்கின்றன.

---

## திருப்பூர் பல்லடம்.

இது ஒரு பெரிய தாலுக்கா. இதில் விசேஷ கோயில்க ளில்லாவிடினும் பருத்தி முதலானவைகள் விசேஷமாக விளைவதினால் அவை ஏராளமாக ஏற்றுமதி யாகின்றன. ரெயில்வே வசதியைக் கருதி பல்லடத்திலிருந்த தாலுக்கா கச்சேரியைத் திருப்பூருக்கு மாற்றிவிட்டபடியால் இத் திருப்பூர் தினே தினே பெரிய ஊராகி வருகிறது. மாஜிஸ்டிரேட் (Magistrate) முன்சிப் கோர்ட்டுகளும், பாடசாலைகளும், ஆஸ்பத்திரியும், பென்னி கம்பெனியாருடைய பருத்திக் கொட்டையைப் பிரிக்கும் இயந்திர கட்டிடங்களும் இருக்கின்றன. சென்னை தென் இந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 275 மைல்கள் தூரத்தில் இருப்பதால் இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூ. 2—14—0 கொடுக்கவேண்டும்.

---

பிரதி வருஷம் கால்நடைச் சந்தைகூடி அவைகளில் முதல்தரமானவைகளுக்கு கோயமுத்தூர் விவசாய சபையார் சுமார் 2000 ரூபாய் வரையில் வெகுமானங்கள் கொடுத்து உற்சாகப்படுத்தி வருகிறார்கள்.

## திருவெஞ்சமாக்கூடல்.

(இது கருவூருக்குத் தெற்கே 12 மைல் தூரத்தில் இருக்கிறது. விகிர்தேச்சுரர், விகிர்தவல்லியம்மை, வேகா நதி தீர்த்தம்).

வெஞ்சன் என்னுமசுரன் பூசித்து வரம்பெற்ற தலம். இந்திரன் அகலியையைச் சேரும்பொருட்டுச் சேவலாய் கூவிக்கௌதமரிஷியை வஞ்சித்த பாவம் நீங்கப் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது.

---

## மிளகீசுவரர் சந்நிதி.

திருப்பூருக் கடுத்த கூளிபாளையம் ஸ்டேஷனுக்குச் சுமார் ஒரு மைல் தூரத்தில் மிளகீசுவரர் சந்நிதி யென்னும் ஒரு சிறுகோயி லிருக்கிறது. இச் சிவபெருமானுக்கு மிளகீசுவர ரென்றுபெயர் வந்ததற்கு அடியிற்கண்ட கதை சொல்லப்படுகிறது. அதாவது இரத்தின வியாபாரி யொருவன் ஓர் இரவு இங்கிருக்கும் ஓர் சத்திரத்திற் றங்க, மற்றொரு பிராணியைப்போல வந்த ஒரு பெரியவர் "இது என்ன மூட்டை?" என்று கேட்க, அவ் வர்த்தகன் அவரைக் கள்ளனென்று கருதி "இது மிளகு மூட்டை" என்றுசொல்லித் தூங்கிக்காலையிலெழுந்து வர்த்தகம்செய்ய மூட்டையை யவிழ்க்க, அங்கு இரத்தினங்கட்குப் பதிலாக மிளகிருக்கக் கண்டு மயங்கி, நம்மைச் சோதிக்க வந்த சிவபெருமானென்றும், பெரியவரிடம் பொய் சொன்னதின் பலன் இதுவென்று மேங்கிப் பரமேஸ்வரனை வேண்ட அம் மிளகெல்லாம் இரத்தினங்களாக மாறிவிட, அவ் வர்த்தகன் அவைகளை விற்று இந்தக் கோயிலைக் கட்டியதாகவும், இங்கிருக்கும் கோபுரம் நிழல் சாயாததென்றும் சொல்லுகிறார்கள். மேலும், இக்கோயிலின் முன் நிற்கும் நந்திவிக்கிரகம் இராக்காலத்தில் அடுத்த நாடுகளில் புகுந்து பயிர்களைத் தின்று நஷ்டப்படுத்தி வந்தமையால் ஒரு இராத்திரி ஒரு குடியானவன் தன் கையிலுள்ள அறுவாளால் நந்தியின் சிரசிலடிக்க ஒரு காது அறுபட்டு விழுந்துவிட்டதாகவும், பிறகு நந்தி தன் கோயிலில் படுத்துக்கொண்டதாகவும், மறுநாட் காலையில் அறுபட்ட காதில் இரத்தம் வடியவும் கண்டவர்கள் மூளியான நந்தியை வைக்கக்கூடாதென் றெண்ணி வேறு நந்தியைச் செய்வித்து அதற்குள் வைக்க, மறுநாட்

காலையில் பழைய நந்தியே முன் நிற்ப ஜனங்கள் வியந்து கொண்டாடினார்களாம். இதனால் பழைய நந்தியின் காதை வெட்டியவனும் மற்ற ஜனங்களும் நந்தியின் மகத்துவத்தைக் கண்டு கொண்டாடி பூஜித்த தலமாம். இதை யடுத்த கிராமம் வெகு சிறியது.

---

## வெண்ணெய் மலை.

(இது கருவூருக்குச் சமீபத்திலிருக்கிறது; முருகப்பிரானது குன்றுதோறாடல்களிலொன்று; வெண்ணெய்மலை நாதர், தேனுதீர்த்தம்.)

காமதேனுவானது கெற்பபுரியாகிய கருவூரில் உலக சிருட்டியை நடத்தும்பொழுது சிருட்டிக்கப்படும் ஆன்ம கோடிகளுக்கு உணவளிக்கும்பொருட்டு வெண்ணெயைத் திரட்டி வைத்த இடமாதலால் இதற்கு வெண்ணெய்மலை யென்னப்படுகின்றது. காமதேனு, பிரமன் முதலியோர் பூசித்த தலம். இம்மலையானது வெண்ணெய்போல் வெள்ளிய நிறத்தையுடைத்தா யிருத்தலுமன்றி, எப்படிப்பட்ட வெப்ப காலத்திலும் குளிர்ச்சியைத் தராநிற்பது பிரத்தியக்ஷம்.

---

## திருநணா பவானிக்கூடல், பவானி.

(சங்கமேச்சுரர், வேதாம்பிகையம்மை, காவிரிநதி, பவானிநதி, அமிர்தசரசு ஆகிய திருவேணி சங்கம தீர்த்தம், சூரிய தீர்த்தம், காயத்திரி - சாவித்திரி தீர்த்த முதலியன.)

இலந்தை விருக்ஷம், பராசரிஷி, குபேரன், மாலுதான ரிஷி முதலியோர் பூசித்த தலம். விஸ்வாமித்திரர் பூசித்து பிரமரிஷியான தலம். தருமசன் என்னும் பிராமணப்பிள்ளை மாலுதானரிஷி கோபத்தாற் கல்லாகும்படி பெற்ற சாபம் தீர்த்தருளிய தலம். தந்துவர் தனச்சோளன் இலந்தைக் கனியார் புத்திரப்பேறடைந்த தலம். பிங்கலை என்னும் வேசி தினம் நூறுபொன் தருவோரையன்றி மருவாமையை யுணர்ந்த வணிகன் அவளைச் சேரவிரும்பிக் குறித்த பொன் அகப்படாமையால் மற்றொரு சனனத்திலேனும் அம்மாதை மனைவியாக அடைவிக்க வேண்டுமென்று சிந்தித்து, காயத்திரி மடுவில் வீழ்ந்திறப்ப, அதனை யுணர்ந்த அம்மாதும் மற்றொரு சனனத்தில் அவனுக்குத் தங்கை

பாகவேண்டு மென்று அம்மடுவில் வீழ்ந்து உயிர்விட, நினைத்ததைத் தரும் அம்மடு விசேடத்தை யுணர்ந்த பிரமன் அவ்விருவரையும் மாடப்புறுவாக்கி யவர்களெண்ணம் முற்றி பின்னர் முத்தியடைவித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. பதிகம்-க.

---

## பவானி.

இந்தத் தலமானது இப்போது கோயமுத்தூர் ஜில்லாவைச் சார்ந்த ஈரோடு தாலுக்காவின் தலை நகருக்கு வடகிழக்காக எட்டு மைல்கள் தூரத்திலிருக்கும் இத்தாலுக்காவின் தலை நகரம். இங்கே காவிரியும் பவானி நதியும் ஒன்றோடொன்று கூடுவதனால் இதை விசேஷ தீர்த்த ஸ்தலமாகக்கொண்டு ஏராளமான ஜனங்கள் விசேஷ தினங்களில் வந்து ஸ்நானம் செய்து இவ்விரு நதிகள் கூடு மிடத்தில் கட்டப்பட்டிருக்கும் அமுர்தலிங்கசிவன் கோயிலில் பூஜை செய்துகொண்டு போகிறார்கள். இங்கோடும் காவிரி நதியின்மீது இருபத்தாறு கண்களுடைய ஒரு பெரிய பாலமும், பவானியின்மீது ஒன்பது கண்களுள்ள பாலமும் கட்டப்பட்டிருப்பதால் சேலம் ஜில்லாக் குடிகளும் யாத்திரைக்காரர்களும் போக்கு வரத்து செய்ய வசதியாயிருக்கின்றன. ஷை பாலங்களைக் கட்ட 2 லக்ஷம் ரூபாய் செலவிடப்பட்டன. இவ்விடம் பெரிய சத்திரமிருக்கினும் அதிற் பாதிபாகம் பள்ளிக் கூடத்திற்கு உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது இப்போது தாலுக்கா கச்சேரி, டிவிஷனல் ஆபீஸர் கச்சேரி, ஆஸ்பத்திரி, பெண்பாடசாலை முதலியவைகளிருக்கின்றன.

வேளாண்மைக் குதவியாக சில குளங்களிருக்கினும் பவானி ஆற்றின் அணைக்கருகில் தண்ணீரை இறைத்துப் பயிர் செய்கிறார்கள். 1879ஸு இதில் செட்டில்மெண்டான நிலம் 1,21,364 ஏகரா விஸ்தீரணமுள்ளது. அடுத்திருக்கும் மலைக்காடுகளில் சுமார் 400 ஏகரா விஸ்தீரணமுள்ள பூமி இன்னும் சர்வே செய்யப்படாமலிருக்கிறது. பருகூர், பாலமலை, நடுகாவல் முதலான மலைகளில் அநேக வனங்களிருக்கின்றன. அவைகளிலிருந்து மரங்கள் மூங்கில்கள் முதலானவைகள் வெட்டப்பட்டு விற்பனைக்காகப் பலவிடங்களுக்கும் கொண்டுபோகப்படுகின்றன. இம்மலைகளின் வழியாகக் கொள்ளேகாலம் மைசூர் முதலான விடங்களுக்குப்

போய்வர வழிகள் உண்டு. இந்தப்பருகூர் ஆலம்பாடியிலிருந்து அநேக ஆடுமாடுகளைக் கொண்டுபோய் விற்கிறார்கள். புஞ்சை நிலங்களில் இராகி முதலான தானியங்களும், புகையிலை மிளகாய் சேனைக்கிழங்கு முதலானவைகளும் ஏராளமாக விளைவிக்கப்படுகின்றன.

இவ்விடத்தில் கோணிப்பைகளும் ஜமுக்காளங்களும் விசேஷமாக நெய்யப்படுகின்றன. ஆவாரம்பட்டை அதிகமாக ஏற்றுமதியாகப்படுகின்றது. பவானிக்குப் பன்னிரண்டு மைல்கள் தூரத்திலிருக்கும் அந்தியூரில் விசேஷமாக வெற்றிலை, புகையிலை இவை உண்டாகிறதன்றியில் அடுத்த மலைகளிலிருந்து மரங்கள், மூங்கில்கள், கடுக்காய் முதலான மலைச் சரக்குகளையும், மலை மாடுகளையும் இறக்கிப் பலவிடங்களுக்குக் கொண்டுபோகிறார்கள்.

---

இப்போது இக்கோயமுத்தூரானது கொங்கு நாட்டிற்குப் பிரதான பட்டணமென்று சொல்லலாம். இது மைசூர் சேலம், திருச்சி, மதுரை, மலையாளம், நீலகிரி ஜில்லாக்களுக்கு மத்தியில் 7842 சதுர மைல்கள் விஸ்தீரணமுள்ளது. காவிரி நதியானது இதற்கும் சேலம் ஜில்லாவிற்கும் மத்தியில் பாய்ந்து எல்லையாகிப் போனாலும் இதன் தண்ணீரினால் சுமார் 5400 ஏகரா பூமி பாய்ச்சப்படுகிறது. இதன் உபநதிகளாகிய பவானி, நொய்யல், அமராவதி முதலான நதிகளின் ஜலத்தினால் ஏராளமான நஞ்சை, கரும்பு, தோப்பு முதலானவைகள் பாய்ச்சப்படுகின்றன. இந் நதிகளுக்கு நீலகிரி ஆனைமலை வெள்ளியங்கிரி முதலான மலைகள் நீராதாரமானவைகள். ஜில்லாவுக்கு 804 சதுரமைல்கள் விஸ்தீரணமும், 3,07,000 ஜனங்கள் வசிக்கும் முக்கிய தாலுக்காவும் தலை நகரமுமாயிருக்கும் கோயமுத்தூர் ஒரு முனிசிபல் பட்டணம். இதில் சுமார் 70,000 குடிகள் இருக்கிறதன்றியில் ஈஸ்வரன் கோயில், பெருமாள் கோயில், கோபாலசாமி கோயில், கோனியம்மன் கோயில், சுப்பிரமணியர் கோயில், சவடம்மன் கோயில், மாகாளியம்மன் மாரியம்மன் முதலான கோயில்களும், ஜில்லா (Collectors Office) கலெக்டர்ஸ் ஆபீஸ், (District Judge) டிஸ்டிரிக்டு ஜட்ஜ்-உதவி (Judge) ஜட்ஜ்-இரண்டு சப் ஜட்ஜகள் - இரண்டு முன்சீப்புகள் - இரண்டு, (Sub-Magistrates) சப் மாஜிஸ்திரேட்டுகள்-தாசில்தார் ஆகியவர்களின் கோர்ட்டுகச்சேரிகளும், (Police) போலீஸ் சூப்பெரின்டெண்டெண்டு,

ஒரு பெரிய ஜெயில், மூன்று ஆஸ்பத்திரிகள், இரண்டு இன்ஜினீயரிங் ஆபீஸ்கள், சூப்பெரின்டெண்டெண்டு இன்ஜினீயரிங் ஆபீஸ், போஸ்டு தந்தி ஆபீஸ், முனிசிபல் ஆபீஸ், போலீஸ் போதனுமுறை பாடசாலை, விவசாய பண்ணை, காலேஜ், பாரஸ்ட் காலேஜ், தாமஸ் காலேஜ், பெண் போதனுமுறை பாடசாலை, ஆண் போதனுமுறை பாடசாலை ஆகியவைகளும்; ரோமன் கத்தோலிக் - லண்டன் மிஷன்-பாடசாலைகளும்; அநேக சில்லரைப் பாடசாலைகளும், 16 பாங்கிகளும், 9 நூல் நூற்கும் சாலைகளும், இரண்டு நெசவுச் சாலைகளும், சில பருத்திக்கொட்டையைப் பிரிக்கும் சாலைகளும், காப்பிக்கொட்டை சாலைகளும், எண்ணெய் எடுக்கும் சில சாலைகளும், கைத்தொழில் சாலைகளும், ஆங்கில சுதேச கிளப்புகளும், நகரமண்டபமும், கலாநிதி முதலான அச்சாபீஸ்களும், பிரயாணிகளுக்கு உபயோகமான ஹோட்டல்களும் சத்திரங்களும் இருக்கின்றன. இதன் சீதோஷ்ணம் ஆரோக்கியகரமானதாயிருப்பதனுல் இங்கு அநேக சர்க்கார் கட்டிடங்களும் ஆபீஸ்களும் இருப்பதோடு, இது ஜனங்கள் வந்து தங்கும்படியான இடமாயுமிருக்கிறது. ஆயினும் சென்ற சில வருஷங்களாகக் காலமழை கிரமமாகப் பெய்யாமையினுலும், பிளேக் நோய் அடிக்கடி கிளம்பிக் குடிகளை வருத்துவதனுலும், இதன் பெருமை குன்றிவருகிறது. இது சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 305 மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூபாய் 4-3-0 ஆகும்.

---

இக் கோயமுத்தூரைச் சார்ந்த சில விசேஷ விடங்களாவன:—

### மேட்டுப்பாளையம்.

இது கோயமுத்தூரிலிருந்து 24 மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு மூன்ரும் வகுப்பு ரெயில் சார்ஜ் 0-4-0. நீலகிரிக்குப் போவோர் இங்கு வந்து இறங்கி வேறு சிறு ரெயில் வண்டியிலேறி, குண்ணூர் உதகமண்டலம் முதலானவிடங்களுக்கு ரெயிலில் போய்வரலாம். சுமார் 32 மைல்கள் தூரமுள்ள உதகமண்டலத்திற்குப் போகும்போது ஒரு ரூபாயும், குண்ணூருக்கு 12 அணுவும், திரும்பி வரும்போது முறையே 10 அணுவும், 6 அணுவும் கொடுக்க வேண்டும். இந்த நீலகிரியில் சென்னை கவர்ன்மெண்டார் கோடைகாலத்தில் வசித்து வருவதால் அங்கே அநேக பங்

களாக்களும், கலெக்டர் - சப் ஜட்ஜ் - முனிசிபல் ஆபீஸ்-ஆஸ்பத்திரி கட்டிடங்களும், கண்காட்சித் தோட்டங்களும் இருக்கின்றன. இதற்கடுத்த அரவங்காடு என்னுமிடத்தில் துப்பாக்கி மருந்து, குண்டு முதலானவைகள் செய்யப்படுகின்றன. குண்ணூரில் சில பங்களாக்களும், (Sub - Magistrate) சப் மாஜிஸ்திரேட் முதலானவர்களின் கச்சேரிகளும், வெல்லிங்டன்னில் பட்டாள துருப்புகள் தங்கும் கட்டிடங்களும் இருக்கின்றன. குண்ணூருக்கு 10 மைல்கள் தூரத்தில் கோத்தகிரி என்னும் ஸ்தலமிருக்கிறது. இது வாசயோக்யமுள்ளது. இங்கு படுகர், தொளவர், குரும்பர், மலசர் முதலான மலைவாசிகள் இருக்கிறார்கள். காப்பிக்கொட்டை, தேயிலை, சின்கோனுபட்டை முதலானவைகள் ஏராளமாய் விளைகின்றன.

---

## காரமடை.

இது கோயமுத்தூருக்கு 19 மைல்கள் தூரத்திலிருக்கிற விஷ்ணு ஸ்தலம். இங்கு எண்ணெய் வியாபாரம் அதிகமாய் நடக்கிறது.

சூலூர், சிங்காநெல்லூர் இவைகள் முறையே 12, 5 மைல்கள் தூரத்தி லிருக்கின்றன. விசேஷமாகக் கரும்பு, வெற்றிலை இவை விளைகின்றன.

---

## குணியமுத்தூர்.

இது சுமார் மூன்று மைல் தூரத்திலிருக்கிறது. நெல் முதலான தானியங்கள் விசேஷமாய் விளைகின்றன.

---

## போத்தனூர்.

இது சுமார் 4 மைல்கள் தூரத்தி லிருக்கின்றது. இது சென்னை, மலையாளம், மங்களூர், உதகமண்டலம் முதலானவிடங்களுக்குப் போக்கு வரவு செய்யும் புகை வண்டிகள் தங்கும் சந்திப்பு ஸ்டேஷன். செட்டிப் பாளையத்தில் மிளகாய், புகையிலை இவை அதிகமாய் விளைகின்றன. இன்னும் சில கிராமங்கள் இருக்கினும் இவற்றில் அவ்வளவு விசேஷமான கோயில் கோபுரங்கள் கிடையா.

---

## பொள்ளாச்சி.

இது கோயமுத்தூருக்குச் சுமார் 25 மைல்கள் தூரத்தில் இருக்கிறது. இவ்விடத்தில் விசேஷமான க்ஷேத்திரங்

கள் இல்லாவிடினும் அடுத்திருக்கும் ஆனைமலையின் காட்சி கம்பீரமானது. இத் தாலுக்கா சர்வே செய்யப்படாத மலை நாடுகள் உட்பட சுமார் 700 சதுர மைல்கள் விஸ்தீரண முள்ளனவாயும், சுமார் 131 பெரிய கிராமங்கள் உள்ளதாயும், உற்றுக்குழி-சமுத்தூர் - கோட்டம்பட்டி- புறவிபாளையம்- ஆவலப்பம்பட்டி - இராமபட்டனம் - நெகமம் ஆகிய ஏழு பெரிய பாளையப்பட்டுகளுடையனவாயும், பெரும்பான்மை யான புஞ்சைப்பயிர்களும் சிறுபான்மையான நெற்பயிரும் விளையத்தக்க நல்ல நிலவளம் நீர்வளமுள்ள பூமிகளை உடை யவைகளாயும் இருக்கின்றது. இவ்விடத்தில் பிரதி வியாழக் கிழமைதோறும் ஒரு பெரிய சந்தை கூடுகிறது. பெரிய பாடசாலைகளும், டிவிஷனல் ஆபீஸர்-தாசில்தார் - கச்சேரி களும், ஒரு பெரிய ஆஸ்பத்திரியும் இங்கிருக்கின்றன. இந்த ஆஸ்பத்திரியானது ம-ா-ா-ஸ்ரீ தாசில்தார் கோவிந்த ராஜுலு நாயுடுகாரின் பெருமுயற்சியினால் கட்டப்பெற்று அதற்குச் சுமார் 20,000 ரூ வரையில் மூலதனம் சேர்க் கப்பட்டிருக்கிறது. அடுத்து நிற்கும் ஆனைமலையானது 6000 முதல் 8000 அடிகள் உயரமுள்ளதா யிருப்பதோடு அதில் தானக்கடுவு - குச்சிமலை - சேத்துமடை-பூனுச்சி முதலான சிகரங்களும் இருக்கின்றன. அவைகளில் சில சிகரங்களி லிருந்து பீறிக்கொண்டு வரும் ஜலமானது அடியாறு, அமரா வதி நதிகளுக்கு ஆதாரமாயிருக்கின்றது. மலையின்மேல் தேக்கு முதலிய உயர்தர விருக்ஷங்கள், காப்பிக்கொட்டை இவை விளைவதன்றியில், யானை முதலிய பல பெரிய மிரு கங்கள் ஏராளமாக இருக்கின்றன. இம்மலைகளில் உற்பத்தி யாகும் சரக்குகளை வேறு இடங்களுக்குக் கொண்டுபோக வும், முக்கியமாகப் பிரயாணிகள் பழனி முதலிய க்ஷேத் திரங்களுக்குப் போய்வரவும் டிஸ்டிரிக்ட் போர்ட்டார் ஒரு ரெயில் ரோட்டைப் போட்டு வருகிறார்கள். இதே மாதிரி யாக பாலக்காட்டிலிருந்தும் ஒரு ரெயில் ரோடு போட உத்தேசித்திருக்கிறார்கள். இந்த ரெயில் ரோடு பொள்ளாச்சி யிலிருந்து உடுமலைப்பேட்டைக்கும், அங்கிருந்து பழனி திண்டுக்கல்லுக்கும் போய்த் தென்னிந்தியா ரெயில் பாதை யோடு சேர்க்கப்படும்.

---

## உடுமலைப்பேட்டை.

இது பொள்ளாச்சியிலிருந்து 18 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இங்கு விசேஷ கோயில் கோபுரங்கள் இல்லா

விடினும் திரிமூர்த்திமலை யென்னும் க்ஷேத்திரத்திற்கு அநேக ஜனங்கள் போய்வருகிறார்கள். இதில் நெல்-கரும்பு-சீரகம்-சோளம் முதலான பயிர்கள் விசேஷமாக விளைவிக்கப்பட்டு ஏற்றுமதியாகின்றன. இங்கு பெரிய போர்ட் பள்ளிக்கூடமும், தாசில்தார்- மாஜிஸ்ரேட் இவர்களின் கச்சேரிகளும், முன்சீப் கோர்ட்டும், ஆஸ்பத்திரிகளும் இருக்கின்றன. நாடறிந்த நாடகாசிரியராகிய ஸ்ரீ சைதாபுரம் காசி விஸ்வநாதமுதலியார் இங்கு டிஸ்டிரிக்ட் முன்சீப்பாக இருந்தபோது தான் டம்பாச்சாரி விலாசம், தாசில்தார் நாடகம், பிரம்மசமாஜ நாடகம் முதலான நூல்களை இயற்றினராம். சுமார் எட்டு மைல்கள் தூரத்திலிருக்கும் குமரலிங்கத்திற்கு அருகில் ஓடும் அமராவதி நதியைக் கடந்து அக்கரையிற் போனால் கொழுமம் என்னும் கிராம மிருக்கிறது. இங்கு ஸ்ரீகணியூர் கிருஷ்ணைய ரவர்களால் அநேக காடுகள், கரும்பு நெல் முதலானவைகள் விளையும்படியான சிறந்த நிலங்களாகச் செய்யப்பட் டிருக்கின்றன. துங்காவி, மைவாடி, ஜோத்தம்பட்டி, மெட்ராத்தி முதலிய ஐமீன் பாளையப்பட்டுகள் இதைச் சார்ந்தவை.

---

## தாராபுரம்.

இது திருப்பூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 32 மைல்கள் தூரத்தில் இருக்கும் ஒரு பெரிய தாலுக்கா. இதைச் சிலர் ஆதி கவாடபுரமென்றும், பஞ்சபாண்டவர்கள் வதிந்த விடமென்றும் சொல்லுகிறார்கள். இதில் அமராவதி நதியும் அதன் வாய்க்கால்களும் ஓடுவதால் அவற்றின் ஜலத்தால் நெற்பயிர் கரும்புப்பயிர் செய்யப்பட்டு வருகின்றன. அமராவதிக் கரையிலிருக்கும் கொளிஞ்சிவட்டி, அலங்கியம் முதலான விடங்களில் முதல் தரமான நெல் விளைகின்றது. இப்போது டிஸ்டிரிக்ட் போர்ட்டார் 85,000 ரூபாய் செலவில் தாராபுரத்திற்கும் கொளிஞ்சிவாடிக்கும் மத்தியில் அமராவதியின்மேல் பாலங்கட்டி வருகிறார்கள். அது கட்டி முடிந்தால் சுமார் 22 மைல்கள் தூரத்திலிருக்கும் பழனிக்குப் போக்குவரவு அனுகூலமாயிருக்கும். தாராபுரத்தில் விசேஷமான க்ஷேத்திரங்க ளில்லாவிட்டாலும் பலவித சறக்குகள் ஏற்றுமதியாகி வருகின்றன. தாலுக்கா மாஜிஸ்திரேட் கச்சேரி, ஆஸ்பத்திரி, போர்ட் பாடசாலைகள் இவை இருக்கின்றன. திருப்பூரிலிருந்து மோட்டார் வண்டியில் போக 12 அணு கொடுக்கவேண்டும். இந்தத் தாராபுரத்

திற்குச் சமீபத்தில் காங்கேயம் என்னுமிடத்தில் விசேஷமாகக் கால்நடைகள் வளர்க்கப்பட்டும் அவைகளுக்குத் தீனியாகக் கொழுக்கட்டை புல் பயிர்செய்தும் வருகிறார்கள். இங்கிருக்கும் பழையகோட்டை பட்டக்காரர் முதல்தரமான மாடுகளையும், எருதுகளையும், குதிரைகளையும் வளர்த்து அவைகளைப் பலவிடங்களுக்கனுப்பி வெகுமானங்களைப் பெற்றுவருகின்றனர்.

---

## காவிரிப்பட்டணம்.

இது ஒருபெரியகிராமம். நடுக்காவல்கிராமத்திலிருந்துதான் கொள்ளேகாலத்திற்குப்போகும்வழி ஏற்பட்டிருக்கிறது. இந்தப் பவானிக்கு அருகிலிருக்கும் நெரிஞ்சிப்பேட்டைஎன்னு மிடத்தில் ஒரு பெரியகுளத்தைக்கட்டிக் காவிரீ நதிஜலத்தைத் தேக்கமாக்கிக் கோயமுத்தூர் சேலம் ஜில்லாக்களின் சில பாகங்களுக்குத் தண்ணீர் பாய்ச்ச கவர்ன்மெண்டார் உத்தேசித்திருக்கிறார்கள். இந்த பவானிக்கு மேற்கே சத்தியமங்கலம் என்னும் மலையடர்ந்த ஒரு தாலுக்கா இருக்கிறது. இதில் தலைமலை, ஆசனூர், கெஜ்ஜலாத்தி, டேக்திம்பம் முதலான மலைகள் இருக்கின்றன. இம்மலைகளிற் சிறந்த தேக்குமரங்களும் சந்தன மரங்களும் விளைவிக்கப் படுகின்றன. இம்மலைகளின் வழியாகக் கொள்ளேகாலம் மைசூர் முதலான விடங்களுக்குப் போக வழிகளுண்டு. இத் தாலுக்கா தென்வடல் 40 மைல்கள் அகலமும், கிழமேல் 60 மைல்கள் நீளமும், சுமார் 1000 சதுர மைல்கள் விஸ்தீரணமுமுள்ளது. இங்கோடும்பவானி நதியின்மேல் கொடிவேரி என்னுமிடத்தில் கட்டப்பட்டிருக்கும் பெரிய அணையிலிருந்து தடப்பள்ளி முதலான வாய்க்கால்களின் வழியாகத் தண்ணீர் கொண்டுபோய் நெற் பயிர் செய்யப்படுகின்றது.

சத்தியமங்கலத்தில் சில தேவாலயங்கள் இருக்கினும் இது தேக ஆரோக்யமான இடமன்று. மதுரை திருமலை நாயுடுகாருடைய மருமகன் அளகாத்திரி நாயுடுகாரு ஆண்டு வந்தகாலத்தில் மைசூர் ஹைதர் ஹாலி படையெடுத்து வந்து இதைப்பிடிக்க, பிறகு இது ஆங்கிலேயர் வசமாகியது. இதை யடுத்த கோபிசெட்டிபாளையம், நிலவளம் நீர்வளம் முதலான வசதிகளோடு மிருப்பதைக்கண்டு கவர்ன்மெண்டார் சத்தியமங்கலத்திலிருந்த தாலூக்கா கச்சேரியை இப்

போது கோபிசெட்டிபாளையத்திற்குக் கொண்டுவந்து விட்டார்கள். இங்கு தனவந்தர்களான குடிகள் அநேகரிருக்கிறார்கள். பவானி சத்தியமங்கலத்திலிருந்து கொள்ளேகாலத்திற்குச் சுமார் 40 மைல்கள் தூரம் போய் வர வழியிருக்கிறது. இதை டிஸ்டிரிக்டு போர்டார் பெரிதாக்க முயன்று வருகிறார்கள். இம் மலையில் பிளகிரிரங்கன் என்னும் ஸ்ரீ விஷ்ணு க்ஷேத்திரம் இருக்கிறது.

---

## ஈரோடு.

இது கொங்குநாட்டின் கோயமுத்தூர் ஜில்லாவில் ஓர் பெரிய தாலுக்காவின் தலைமைப்பட்டணம். இந்த ஈரோடுக்கு அருகில் ஓடும் காவிரி நதிக்கு அக்கரையில் சேலம் ஜில்லா திருச்செங்கோடு தாலுக்கா கிராமங்களுக்கு அடுத்திருப்பதால் அந்தக் காவிரியானது இரண்டு ஜில்லாக்களாகிய கோயமுத்தூர் சேலம் ஜில்லாக்களுக்கு எல்லையாக இருக்கிறது. இந்த ஈரோடு இப்போது முனிசிபல் பட்டணமாகி இதில் 16,071 குடிகள் வதிந்து வருகிறார்கள். இதற்கு அதிக சமீபத்தில் பவானி நதியிலிருந்து வெட்டிக்கொண்டு வரப்பட்ட காளிங்கராயன் வாய்க்கால்ஜலவுதவியினால் பட்டணத்தைச் சுற்றி நெல், வாழை, மஞ்சள், வெற்றிலை முதலிய பயிர்கள் விசேஷமாக விளைவிக்கப்படுகின்றன. இது சப் கலெக்டர் வாழும் சப் டிவிஷனாக முன் இருந்து இப்போது வெயிலின் கஷ்டத்தினால் டிப்டி கலெக்டர் டிவிஷனாக மாற்றப்பட்டது. தாலுக்கா-மாஜிஸ்ட்ரேட்-முன்சிப்-கோர்ட்டுகளும், பாதிரிமார்களின் பாடசாலைகளும், சுதேசி பாடசாலைகளும், அஸிஸ்டென்ட் போலீஸ் சூபரின்டென்டெண்ட்-P. W. D. அஸிஸ்டென்ட் இஞ்சினீயர் முதலானவர்களின் ஆபீஸ்களு மிங்கிருக்கின்றன.

மைசூர் ஹைதராலி காலத்தில் இதில் 3000 வீடுகளில் 5000 குடிகள் இருந்தார்கள். பிறகு மராட்டியர், மைசூரார் அடிக்கடி வந்து இவ்விடத்தைத் தாக்கியதில் குடிகள் பல பக்கங்களில் பறந்தோட ஊர் கொஞ்சம் பாழடைந்துவர நேர்ந்தது. 1768 ஸு ஆங்கிலேயர் இதைத் தாக்கிப் பிடித்தாலும் பின்னும் 22-வருஷம் கடந்த பிறகே அவர்கள் முழு சுவாதீனமாகி, அன்றுமுதல் சீரும் சிறப்பும் பெற்று வருகிறது. இவ்விடத்தில் சைவ வைஷ்ணவ க்ஷேத்திரங்களும், கொங்கலம்மன் என்னும் கிராம தேவதையின் கோயிலும் இருக்கின்றன. வெயிற்காலத்தில் அதிக உஷ்ணத்தி

னல் அவித்தாலும் மற்ற காலங்களில் சுற்றுப்பக்கங்களில் விளையும் நெல், வாழை, மஞ்சள் முதலான பயிர்களின் காக்ஷி கம்பீரமாக விருக்கிறது. இங்கு நெல், மஞ்சள், மிளகாய், வாழை, வெற்றிலை, பருத்தி, காய்கனி முதலானவைகள் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இந்த ஈரோடே இந்த கிரந்த கர்த்தாவின் ஜனன ஸ்தானம். இது சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 243 மைல்கள் தூரத்திலிருக்கின்றது. இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ருபாய் 2—9—0.

---

## சென்னிமலை.

(முருகப்பிரானது குன்றுதோ றாடல்களி லொன்று; சென்னிமலை வடிவேலர், தெய்வானையம்மை, வள்ளிநாயகியம்மை.)

அகஸ்தியமகாரிஷி முதலியோர் பூசித்த தலம். அகஸ்தியருக்கு ஞானோபதேசம் செய்தருளிய தலம். இத்தலம் இதர சுப்பிரமணியத் தலங்களுக்கெல்லாஞ் சென்னிபோற் சிறந்த தலமாகையால் இப்பெயர் கொண்டது. இது ஈரோடுக்கடுத்த பெருந்துறை ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கிச் சில மைல்கள் தூரம் போனால் அவ்விடத்தில் சென்னிமலையும் அதின் மேல் சுப்பிரமணிய சுவாமி கோயிலு மிருக்கிறது. இங்கு ஏராளமான ஜனங்கள் வந்து தரிசித்துப் போகிறார்கள்.

---

## பவானி கூடுதுறையில் செய்த பிரார்த்தனை.

"ஓ கருணாகர! காவிரியும் பவானியும் கூடுகிற இந்த ஸ்தலத்தில் வந்து நினது அற்புதகாக்ஷியைக் கண்டு களித்து இதில்ஸ்நானம்செய்ய எவ்வளவு பாக்கியனானேன். இவ்விரு ஜலத்தின் ஸ்நானத்தினால் தேகத்தின் அசுத்தமும் துணிமணிகளின் அசுத்தமும் நீங்குகின்றன வென்பது திண்ணம். ஆனால் பாவமென்னும் பெரிய அழுக்கை நீக்க நின் பக்தி ஜலத்தில் மூழ்கினாலன்றிப் பயனில்லை. ஆகவே நினது பக்தி ஜலத்தில் மூழ்குமாறு பிரசாதித் தருள்வாய்."

ஓம் தத்சத்.

---

## சேலம்.

சேலமென்பது சேரனுடைய இராஜதானி யாகையால் அதற்குச் சேரம் என்கிற பெயருண்டாகி அதுவே நாளா

வட்டத்தில் சேலமென்றாகியதாகச் சில புராணங்களிலும் சரித்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கினும், சைலம் என்னும் ஸம்ஸ்கிருத பதத்திற்கு மலைகளாற் சூழப்பட்ட நகரமென்று பொருள்படுவதால் இதற்குச் சைலம் அல்லது சேலமென்று பெயர் வந்திருக்கலாமென்று தோன்றுகின்றது. இது இந்த ஜில்லாவிற்கும் தாலுக்காவுக்கும் பிரதான பட்டணமாயும், முனிசிபல் நகரமாயும், திருமணி முத்தாற்றின் கரைமேல், அழகாய்க் கட்டப்பட்டிருக்கின்றது. இதில் 1913ஹு 59,153 குடிகள் இருந்தார்கள். இதில் கலெக்டர், ஜட்ஜ், போலீஸ் சூபரின்டெண்டெண்ட், ஜெயில் சூப்பரின்டெண்டெண்ட், இஞ்சினியர், சப்ஜட்ஜ், முன்சீப் தாசில்தார், சப் மாஜிஸ்ரேட் முதலானவர்களின் கோர்ட்டு கச்சேரிகளும்; சேலம் காலேஜ், மிஷன் ஸ்கூல், இரண்டு ஆஸ்பத்திரிகள், பெண் பாடசாலைகள் இவைகளு மிருப்பதோடு பட்டுநூற்காரராலும், கைக்கோளர்களாலும், சாலியராலும், தேவங்கத்தார்களாலும் நெசவுத்தொழில் மிகுதியாக நடந்துவருகின்றன. சேலத்தைச் சேர்ந்த செவ்வாப்பேட்டையில் மிகுதியான வர்த்தக வியாபாரங்கள் நடந்துவருவதோடு அங்கு செவ்வாய்க்கிழமைதோறும் பெரிய சந்தை கூடுகிறது. சேலத்தில் உற்பத்தியாகும் மாம்பழங்கள் சிறந்தவைகள். சேலம் சுகவனேஸ்வரருக்கும், கோட்டை அழகிரி பெருமாளுக்கும் நித்திய நைமித்திக உற்சவங்களோடு வைகாசி மாதத்தில் விசேஷ ரதவுற்சவமும் நடைபெறுகின்றன. பிரதி ஆடிமாதந்தோறும் சேலம் செவ்வாப்பேட்டை, குகை, அன்னதானபேட்டை, அம்மாபேட்டை, குமாரசாமிபேட்டை, பொன்னமாபேட்டை ஆகிய இவ்விடங்களில் மாரியம்மன் உற்சவம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டுவருகிறது. சேலத்திற்குச் சுமார் ஏழுமைல் தூரத்தில் ஸ்ரீ ராமஸ்வாமி கோயிலும், சேலத்திற்கு ஒன்பது மைல் தூரத்திலிருக்கும் தாரமங்கலத்தில் ஒருவிசேஷ சிற்பலங்காரமுள்ள சிவக்ஷேத்திரமுமிருக்கின்றன. இக்கோயிலையும் பவானிகூடலுக் கருகிலிருக்கும் கோயிலையும் ஸ்ரீ கெட்டி முதலியாரவர்கள் கட்டிவைத்தாராம். சேலத்தை யடுத்த சின்னதிருப்பதி, கரிவரதர், நைநா மலைமுதலான சிறு பர்வதங்களில் அமாவாசை விசேஷ உற்சவங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. சேலத்தை யடுத்த இராசீபுரத்தில் நெசவுத்தொழில் அதிகமாய் நடக்கின்றது. சேலத்திலும், நாமகிரிபேட்டையிலும் முதல்தரமான இரும்புக் கனிக ளிருக்கின்

றன. இப்போது சேலத்தில் குழாய் ஜலம் கொண்டு வந்த தில் பேதி முதலான வியாதிகள் தொலைந்த தென்னலாம். இது சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனுக்கு 207 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூபா 3.

---

### சேலம் சுகவனேஸ்வரர் கோயிலின் மண்டபத்திற் செய்த பிரார்த்தனை.

"ஓ சுந்தரசொரூபனே! இச் சுகவனேஸ்வரர் பக்தியிற் கட்டுண்ட அநேகர் இந்த ஆருத்ரா தரிசனத்திற்கு அதிக பக்தி சிரத்தையுடன் வந்து ஆடிப்பாடி ஆனந்திக்கிறார்கள். ஆ இஃதென்ன அற்புத திருவிழா. இப்படிப்பட்ட காலத்தில் நானும் வந்து உலக நடராஜனாகிய நின்னைத் தியானிப்பதற்குப் பாக்கியம் பெற்றேன். உண்மையான திருநடனத்தை எனக்குக் காட்டியருளாய்." ஓம் தத்சத்."

---

### சேலம் கோட்டை அழகர் கோயில் மண்டபத்திற் செய்த பிரார்த்தனை.

"ஓ அகில விநோதா! இந்த அழகர் கோயிலில் வைகுண்ட ஏகாதசியாகிய இப்புண்ணிய தினத்தில் இங்கு வந்து நின்னைத் தியானிப்பதற்குப் பாக்கியம் பெற்றேன். இங்கிருக்கும் அழகர் உற்சவ விக்ரகத்தை அநேக ஆடையாபரணங்களாற் அலங்கரித்து, சகல வாத்ய கோஷங்களோடும் வைகுண்டவாசலிற் கொண்டுபோகும் விந்தையென்ன. ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து கூட, அநேகர் தம்பூர் மிருதங்கம் முதலான வாத்யக் கருவிகளோடு ஹரி நாம சங்கீர்த்தனங்கள் பாடவும், சிலர் சங்குநாதம் முதலான வாத்தியங்களை கோஷிக்கவும், எண்ணிறந்த ஜனங்கள் கும்பல் கும்பலாக வந்து கூடவும், இத் திருக்கோலத்துக்குச் சமீபத்தில் நானும் வந்து நின்னைத் தியானிப்பதற்கு எவ்வளவு புண்ணிய சீலனானேன். ஆ ஆ! என்ன பக்தி! என்ன சிரத்தை! உனது உண்மையான பக்தியையும் சிரத்தையையும் அடியேனுக்குப் பிரசாதித்தருள்வாய்." ஓம் தத்சத்

---

### சேர்வராயன்மலை.

இது சேலத்திற்குச் சுமார் 14 மைல்கள் தூரத்திலிருக்கும் ஒரு பெரிய மலை. இங்குக் காப்பிக்கொட்டை,

தேயிலை முதலானவைகளும்; ஆரஞ்சு, நாரத்தம், லகோட்டா முதலான பழவர்க்கங்களும் ஏராளமாக விளைவிக்கப்படுகின்றன. ஏற்காடென்பது முக்யஸ்தானம். இதில் சப் மாஜிஸ்திரேட் கச்சேரியும், ஹோட்டல்களுமிருக்கின்றன. இம்மலையின் காக்ஷியும் சீதோஷ்ணமும் சுகமாயிருப்பதால் அநேக ஐரோப்பியர் வெயிற்காலத்தில் இங்குவந்து தங்கிப் போவது வழக்கம். இங்கு, சேலத்தில் இருப்பதுபோல் கட்டை வண்டிபோகும் பாதையும் நடபாதைகளு மிருப்பதோடு, சென்னை முதலான விடங்களிலிருந்து வருவோர் மல்லாபுரம் ஸ்டேஷனுக் கருகி லிருக்கும் சேர்வராயன் அல்லது ஆத்தூர் ஸ்டேஷனில் இறங்கிப் போய்வருவது அனுகூலம்.

---

## திருச்செங்கோடு.

இது சேலம் ஜில்லாவைச் சார்ந்த டிவிஷனல் ஆபீஸர் தங்கும் சங்கரி துர்க்கத்திற்குச் சுமார் ஐந்து மைல்கள் தூரத்தி லிருக்கும் ஒரு சிவஸ்தலம். இதில் அழகான வீதிகளும் சில க்ஷேத்திரங்களும் இருக்கினும் முக்கியமான க்ஷேத்திரம் அருகிலிருக்கும் மலையின்மீது கட்டப்பட்டிருக்கும் அர்த்தநாரீஸ்வரர் க்ஷேத்திரமேயாம். இம்மலையின் மீது ஏறிப்போக நல்ல படிக்கட்டுகள் கட்டப்பட்டிருப்பதோடு போய்வருவோர் இளைப்பாறும்பொருட்டு இடைக்கிடை சிலமண்டபங்களும்கட்டப்பட்டிருக்கின்றன. மலையின் மேல்நாகசர்ப்பங்களைப்போலஇரண்டுஉருவங்கள்செதுக்கப்பட்டிருக்கினும் அவைகளில் ஒன்று வெடித்துக் கெட்டுப்போய் விட்டபடியால் அதற்குப் பதிலாக வேறொன்றைச் செதுக்கியிருக்கிறார்கள். அது அவ்வளவு சிறப்பாக வில்லை. கோயிலுக் குள்ளிருக்கும் பாதியுடல் ஆண் ரூபமாகவும் பாதியுடல் பெண்ரூபமாகவும் உள்ள அர்த்தநாரீஸ்வரர் விக்கிரகம் அழகா யமைய ஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. அந்தக் கோயிலுக்குச் சிறிது தூரத்தில் கொட்டுராயி அல்லது மலடிக்கல் இருக்கிறது. பிள்ளையில்லாத பெண்கள் அந்தக் கல்லைச் சுற்றிவருவதுண்டு. அக் கல்லின் ஒரு பக்கத்தின் வழி அதிக நெருக்கமாக இருப்பதால் அநேக பெண்டுகள் காலிடறிப் பயங்கரமான பள்ளத்தாக்காகிய அடிவாரத்தில் வீழ்ந்து இறந்து விடுவதுமுண்டு. இவ்வித அபாயத்தை நீக்கக்கருதி இப்போதுஇரும்புக்கிராதிபோட்டிருப்பதாக வதந்தி. இம்மலையின்மேல் நடக்கும் கார்த்திகை முதலான உற்சவ காலங்களில் ஏராளமான ஜனங்கள்

வந்தாலும், இது அதிக உஷ்ணமான விடமாக இருப்ப தோடு போதுமான ஜல சௌக்கிய மில்லாமையால் நாம்புச் சிலந்தி முதலான வியாதிகள் ஜனங்களைப் பீடிக்கின்றன. இவ்விடத்தில் தாலுக்கா கச்சேரி, ஆஸ்பத்திரி, பாடசாலை கள் இவை இருக்கின்றன. இங்குச் சில பெரிய மிட்டா தாரர்களும் குடித்தனக்காரர்களு மிருக்கிறார்கள்.

---

## திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் மலையில் செய்த பிரார்த்தனை.

"ஓ அருள்வள்ளலே! நீ அப்பனைப்போல் பெற்று அன் னையைப்போல் ஆதரிக்கும் தன்மையை உடையவனென் றெண்ணி அநேகர் "அர்த்தநாரீசா" என்றுபாடிக்கொண்டே இம்மலையின்மீது ஏறிவந்து பிரார்த்திக்கிறார்கள். ஆ என்ன அமைப்புள்ள பெயர். அப்பன் மக்களைப்பெற்று அவர்களு க்கு ஊண், உடை, கல்வி, ஞானம் முதலானவைகளைத் தந்தா லும், அன்னையானவள் அம் மக்களைத் தன் உயிரைப்போல் எண்ணி ஆதரிப்பது பிரசித்தம். ஆகவே எனக்கு அப்பனாக வும் அன்னையாகவும் இருந்து ஆதரிக்க வேண்டுகின்றேன்."

ஓம் தத்சத்.

---

## சங்கரிதுர்க்கம்.

திருச்செங்கோட்டுக்குப் போகும் வழிக்கும் சென்னை இருப்புப்பாதை ஸ்டேஷனுக்கும் மத்தியிலிருக் கும் சங்கரி என்னும் மலைநாட்டில் சப் மாஜிஸ்ட்ரேட் கச் சேரி, பாடசாலைகள், தபாலாபீஸ், ஆஸ்பத்திரி முதலான வசதிகளிருப்பதோடு பொது ஏற்பாட்டின்படி இங்கே டிப்டி கலெக்டர் ஆபீசும் இருக்கின்றன. இங்கிருக்கும் சென்னகேசவப் பெருமாள் மலையானது சுமார் 2000 அடி கள் உயரமுள்ளது. இந்த மலைக்குப் பாதி வழியில் மூகம் மதியர் கட்டிய ஒரு சிறிய கோரி இருக்கிறது. மலைக்கு மேல் திப்பு சுல்தான் கட்டிய ஒரு பழைய கோட்டையும், சென்னகேசவப் பெருமாளுடைய கோயிலும், அருகில் நல்ல ஜலமுள்ள பாலீ என்னும் சிறிய ஊற்றுக்கண் கிணறும் இருக்கின்றன. கோட்டையின் உக்ரார கட்டிடத் தில் திப்பு சுல்தான் காலத்தில் போடப்பட்ட நெல் முத லிய தானியங்கள் இப்போதும் அகப்படுகின்றன. உற்சவ

காலங்களில் சென்னகேசவப் பெருமாள் விக்கிரகத்தை அழகாகச் சிங்காரித்து அடிவாரத்தி லிருக்கும் ஊருக்குக் கொண்டுவருகிறார்கள். இம்மலையிற் கல்மதம் என்னும் சிறந்த ஔஷதம் உற்பத்தியாகின்றது. அடிவாரமாகிய சங்கரியில் பால்பாவி என்னும் கிணற்றில் நல்ல ஜலமிருப்பதால் சுகாரோக்கிய ஸ்தலமென்று சொல்லலாம். ஆயினும் இங்கு ஜனங்கள் பல பக்கங்களிலும் மல ஜலாதிகளைக் கழித்து அசுகிப்படுத்திவருகிறார்கள். இங்கிருந்து நாமக்கல் முதலான விடங்களுக்குப் போக வழியிருக்கிறது. இது சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 230$\frac{3}{4}$மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூபாய் 2—7—0.

---

சென்னகேசவர் மலையின்மீது
செய்த பிரார்த்தனை.

"ஏ சத்சொரூபனே! சென்னகேசவர் மலையென்னும் இதன்மீது வந்து உன்னைத் தியானிக்கின்றேன். இம்மலையின் மேல் ஏறி இறங்குவது மிகு கஷ்டம். அப்படிக்கிருந்தும் உன்மேலிருக்கும் பேரவாவினால் அக்கஷ்டங்களைப் பொருட்செய்யாமல் இம்மலைமீது வந்து இதன் நான்கு பக்கங்களிலுமிருக்கும் காக்ஷிகளின் அற்புதத்தையும் அழகையும் கண்டு நின்னைத் தியானிக்கின்றேன். நினது அருள் அவாவை அடியேனுக்குப் பிரசாதித்தருள்வாய்." ஓம் தத்சத்.

---

திருச்செங்குன்றூா.

(நாகாசலம், திருச்செங்கோடு; அர்த்தநாரீச்சுரர், பாகம்பிரியாளம்மை, பிரமதீர்த்தம், விஷ்ணு தீர்த்தம், முருகதீர்த்த முதலிய சோடச தீர்த்தங்கள்.)

உமாதேவியார் சிவபெருமானைப் பிரிந்திருத்தலினாற் சாபமுதலிய பலசங்கடங்களுக்கு உள்ளாதல்பற்றி என்றும் பிரியாது உடனுறைதல் வேண்டுமென்று நோற்று அர்த்தபாகம் பெற்றதனால் இங்குச் சிவபெருமான் ஓர் புறத்துத் தமது ரூபமும் ஓர் புறத்துச் சத்திரூபமுமாகத் திருவுருவங்கொண்டு எழுந்தருளி யிருக்கின்ற தலம். அநேக தேவர்களும் ரிஷிகளும் பூசித்துக் கருதிய வரம் பெற்ற தலம். சிங்கவன்மனென்னு மரசன் வேட்டை யாடுகையில் பன்றியைப் பின்றொடர்ந்து பிருகுமுனிவர் ஆச்சிரமத்தில்

அதனை யெய்தபொழுது அம்முனிவரது சாபத்தாற் புலியாகத் திரிந்து அச்சாபம் எங்குந்தீராது இங்குவந்து விமோசனம் பெற்ற தலம். இது முருகப்பிரானது குன்றுதோருடல்களி லொன்றாகிய விசேடமாயுள்ள தலமாதலால், திருப்புகழ் முதலிய அநேக அருட்பாக்கள் சூட்டப்பட்டிருக்கின்றன. திருஞானசம்பந்த சுவாமிக ளிங்கெழுந்தருளி யிருக்கும்போது பனிக்காலம் வர, இந் நாட்டில் இயற்கையாகத் தோன்றும் நளிர்சுரமானது அடியார் குழாத்திலும் பிரவேசித்தமை யுணர்ந்த பிள்ளையார் அது நீங்கும் பொருட்டு, நஞ்சமுண்டு அடையாளம் காட்டியருளிய திருநீலகண்டத்தின்மீது ஆணையிட்டு "அவ்வினைக்கிவ்வினை" என்னும் பதிகம் அருளிச்செய்ய அந்த நளிர் சுரம் அடியார் குழாத்தை மாத்திரமன்றி இந் நாட்டையே விட்டகலும்படி அனுக்கிரகம் பெற்றுள்ளது. திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. இது சங்கரிதுர்க்கம் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே ஆறு மைல் தூரத்தி லிருக்கிறது.

கொங்குநாட்டில் பதிகம் பெற்ற தலம்-எ. வைப்புத் தலம்-க. புராதனதலம்-க. சுப்பிரமணிய தலம்-ச. ஆகத் தலங்கள் கங. அறுபத்து மூவர்களில் இந் நாட்டில் முத்தியடைந்தவர்கள் இருவர்.

---

# மத்திய நாடு.

இந்த மத்திய நாடு அல்லது நடுநாட்டிலுள்ள க்ஷேத்திரங்கள் இப்போது வட ஆற்காடு, தென் ஆற்காடு ஜில்லாக்களிலிருக்கிறதாக முன்னமே கூறியிருக்கிறோம். ஆகவே வட ஆற்காட்டின் முக்கிய பட்டணமாகிய ஆற்காட்டின் சரித்திரத்தைச் சற்று சங்கிரமாகத் தெரிவிக்கிறோம்.

## ஆற்காட்டின் விபரம்.

இந்த ஆற்காடு இருந்த இடம் பூர்வத்தில் பயங்கரமான ஆறு வனங்களால் சூழப்பட்டு அவைகளில் சப்தரிஷிகள் வந்து தவம் செய்துகொண்டிருக்கையில், குலோத்துங்க சோ[illegible] வைப்பாட்டி மகன் ஆதிதொண்டை சோழன் வந்து அ[illegible]ரண்யம் என்னும் ஆறுகாடுகளைக் கலைத்து ஒரு பட்டணத்தைக் கட்ட முயன்றதாகச் சில சரித்திரங்கள் முறையிடுகின்றன. ஆயினும், பெனுகொண்டாவில் இருந்த நளம்பொம்ம நாயுடுவும் திம்ம நாயுடுவும் இந்த ஆறுகாடுகளில் நல்ல வேட்டைகள் கிடைக்குமெனக் கேட்டு வருகையில், இங்கே ஒரு முயலானது ஒரு பெரும் புலியை எதிர்த்துத் தாக்கி ஓட்டியதைக் கண்ணுற்று, இது மஹாவீரர்கள் வசிக்கத்தகும் ஸ்தலமென் றெண்ணி, இந்த ஆறு காடுகளையும் கலைத்துச் சுத்தமாக்கி ஒரு அறணன கல் கோட்டை கட்டுவித்து, அங்கு அஞ்சனத்தாலகப்பட்ட அருத்தத்தை அனுபவித்துக்கொண்டு அநேக சந்ததிகள் ஆண்டுவந்தமையால் இதற்கு ஆறு+காடு என்னும் பெயருண்டாகியதாம். இது பிற்காலத்தில் மஹாராஷ்டியராலும் திப்பு சுல்தான் முதலான மஹம்மதியர்களாலும் தாக்கப்பட்டு வந்தாலும், ஆங்கிலேயரால் எதிர்த்து ஜெயித்த வீரத்தன்மையைப்பற்றிச் சரித்திரங்கள் கம்பீரமாகக் கோஷிக்கின்றன. அப்போது ஆங்கிலேய வீரரான காப்டன் (Clive) கிளைவ் முதலில் ஸிவில் உத்தியோகத்திலமர்ந்து பிறகு மிலிடெரி உத்தியோகத்திற்கு மாற்றப்பெற்றவர்.

அவருக்கு அப்போது வயது இருபத்தைந்து. அவ்வளவு சொற்ப வயதில் தன்னிடமிருந்த 120 இங்கிலீஷ் சோல்ஜர்களையும் 200 சிப்பாய்களையும் கொண்டு 1751ஸ் அந்த ஆற்காடு கோட்டையை ஜெயிக்க முயன்றார். முயன்

...று மென்ன? இந்தச் சொற்ப சேனைக்குப் போதுமான உணவுப்பொருள் இல்லாததைக் கண்டு மயங்க, அந்த சிப்பாய்கள் (Captain Clive) கிளைவினுடைய வீரதீர சாமார்த்தியத்தையும் உதார குணத்தையும் கண்டு வியந்துவந்து, "தலைவரே! தங்களிடமிருக்கும் அரிசியைச் சமைத்துச் சாதத்தை யெல்லாம் ஆங்கில சோல்ஜர்களுக்குக் கொடுத்துவிட்டு அதிலிருந்து வடித்த கஞ்சித்தண்ணீரை மாத்திரம் எமக்கீந்தால் போதும்" என்று சொல்ல, காப்டன் கிளைவ் உற்சாகங்கொண்டு கர்னாடக நவாப் (Chanda Sahib) சண்டாசாயபு குமாரர் இராஜா சாயபுடைய 10,000 சேனைகளைச் சின்னபின்னமாகத் துரத்தியடிக்க, 400 பேர் அங்கேயே மடிந்துவிழ, மற்றவர் மாயமாய்ப் பறந்துவிட்டனர். இந்த யுத்தம் செய்த காலம் மொஹரம் பண்டிகையானபடியால் அக்கம்பக்கத்து மஹம்மதியர்க ளெல்லோரும் மதாவேசத்தினால் ஏகோபித்து வந்து கோட்டையைத் தாக்க, காப்டன் கிளைவ் துப்பாக்கிக் குண்டுகளால் அநேகரைச் சுட்டுக் கொன்று கோட்டையைப் பலப்படுத்திக் கொண்டார். அந்தப் பழைய கோட்டை யின்னுமிருக்கிறது. இந்த யுத்தமான பிறகு தனவான்களான அநேக மஹம்மதியர்கள் ஹைதராபாத்துக்கும் சென்னைக்கும் போய்விட்டார்கள். ஆயினும், ஆங்கில அரசாக்ஷியின் தர்ம நீதிகளைக்கண்டு வேறுவிடங்களிலிருந்து குடிகள் வந்து இங்குக் குடியேறினார்கள்.

---

## இராணிப்பேட்டை.

இது வடஆற்காடு ஜில்லாவைச் சார்ந்து ஆற்காட்டுக்குச் சமீபத்தில் பாலாற்றின் இடதுபாகமாக இருக்கிறது. இதற்குத் தென்மேற்காக அரைமைல் தூரத்தில் ஒருமைல் நீளமும் 400 கெஜ அகலமுமுள்ள சிங்காரத் தோட்டம் பலவிதமா முதலான மரங்களால் பிரகாசிக்கின்றது. இது கர்னாடக நவாப்புக்குச் சொந்தம். இதில் ஒரு காலத்தில் 9 லக்ஷம் பழச்செடிகள் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். இங்கே பிரதி வெள்ளிக்கிழமைதோறும் விசேஷ சந்தை கூடுகின்றது. அதில் பலவித தானியங்களும் கால் நடைகளும் ஏராளமாக விற்பனைக்கு வருவதால் அவைகளைவாங்க நாலாபக்கத்து ஜனங்கள் கும்பல் கும்பலாக வருகிறார்கள். இது ஹெட் அஸிஸ்டெண்ட் கலெக்டருக்குத் தலைநகர். சென்ற கானிஷ்வார் கணக்கின்படி 8430 ஜனங்கள் இங்...

குக் குடியிருக்கிறார்கள். இதற்கு $2\frac{1}{2}$ மைல்கள் தூரத்தி லிருக்கும் வாலாஜாபேட்டையில் தாசில்தார் கச்சேரி இருக்கினும், ரோட் ஓரத்தி லிருக்கும்படியான வீடுகளி லநேகம் குடிகளற்றுக் குட்டிச் சுவர்களோ டிருக்கின்றன. இந்த ஜில்லாவிலிருந்து நெல்லூருக்குப் போகிற வழியில் சந்திரகிரி யென்னும் தாலுக்கா இருக்கிறது. இதிலிருக்கும் கோட்டையும் அரண்மனையும் விஜயநகர சமஸ்தானத்தைச் சார்ந்த வெங்கடாத்திரிராயுலு ஸ்ரீரங்கராயுலு முதலானவர்களால் கட்டி ஆண்ட இடம். சென்னபட்டணத்தை ஆங்கிலேயருக்கு இனாமாகக் கொடுத்துச் சாசனக் கையெழுத்து போடப்பட்ட இடம் இதுவே. மற்ற ஆரணி முதலான இடங்கள் அவ்வளவு விசேஷமான இடங்க ளல்லாமையால் விவரித்து எழுதாமல் விடப்பட்டன. இந்த ஜில்லாவில் தெலுங்கும் தமிழும் வழங்கப்பட்டு வருகின்றன.

---

## திண்டிவனம்.

இது தென்ஆற்காடு ஜில்லாவாகிய கூடலூரைச்சார்ந்த ஒரு தாலுக்காவாகவும், இதன் தலைநகராகவும் மிருக்கிறது. இந்த திண்டிவனத்தில் சிறந்த மண்பாத்திரங்கள் செய்யப் படுவதோடு ஒரு காலத்தில் இது அரணான ஸ்தலமாக இருந்ததாயும் தெரியவருகிறது. இதில் சென்ற கானிஷ்வார் கணக்கின் பிரகாரம் 5,386 ஜனங்கள் வசிக்கிறார்கள். இது சென்னையிலிருந்து தென்னிந்தியா இருப்புப்பாதையின் மார்க்கமாக $75\frac{1}{4}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## செஞ்சிக்கோட்டை.

இது திண்டிவனத்திற்கு 18 மைல்கள் தூரத்திலிருக்கிறது. இது 400 முதல் 600 அடிகள் வரையில் உயர்ந்திருக்கும் மூன்று மலைகளுக்கிடையில் பலமாகக் கட்டுவித்த பெரியகோட்டை. இது சற்றேறக்குறைய முக்கோண வடிவாகவும், ஏழு சதுரமைல்கள் விஸ்தீரண முள்ளதாகவும், இராஜகிரியென்னும் மலையின் உச்சியில் கட்டப்பட்டதாகவு மிருக்கிறது. இதரமலைகள்கிருஷ்ணகிரியென்றும்சந்திராயன் துர்க்கமென்றும் சொல்லப்படுகின்றன, இதற்குள் இரண்டு கோயில்களும், கல்யாண மஹாலும், ஜெயில் முதலான கட்டிடங்களும், ஒரு சிறிய குளமு மிருக்கின்றன. இங்கு 7,560 எழுத்துக்களால் செதுக்கப்பட்ட பெரிய பீரங்கியும்,

15 அடிகள் சதுரமும், 4-5 அடிகள் கனதியும் உள்ள ஒரு சதுரக்கல்லும் இருக்கின்றன. இக்கல் இராஜாவின் ஸ்நான பீடம் என்று சொல்லப்படுகிறது. இக் கோட்டையானது விஜயநகர சமஸ்தானத்தைச் சார்ந்த ஹம்பிகோட்டையைப்போல இருப்பதால் இதுவும் விஜயநகர மஹாராஜாக்களால் கட்டப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இது 13-ம் நூற்றுண்டின் கடைசி முதல் A-D. 1564 வரு வரையில் ஷெடி ராஜாக்கள் வசமேயிருந்தது. பிறகு இது பிஜாப்பூர் நவாப்புகளால் பிடிக்கப்பட்டது. பிறகு மஹராஷ்டிரர் வசமாகி, அனந்தம் மொகல்ராஜ தலைவனை ஜலுபாகான் 8 வருஷகாலம் முற்றுகைபோட்டு, 1698 வரு மகம்மதியரால் பிடிக்கப்பட்டும், 1750 வரு பிரான்சுக்காரரால் பிடிக்கப்பட்டுமுள்ள இதை 1761 வரு ஆங்கிலேயர் இருமுறை தாக்கிப் பிடித்துக்கொண்டார்கள்.

இந்த செஞ்சிக்கோட்டையில்தான் புகழ்பெற்ற தேசிங்கு மஹாராஜான் சண்டையும் நடந்ததாகத் தெரிகிறது. இவ்விடம் விசேஷ தேவஸ்தானம் இல்லாவிட்டாலும் இந்தக் கோட்டையின் அற்புத காட்சி அனைவரும் பார்க்கத் தகுந்தது.

---

## பண்ணுருட்டி.

இது ஒரு யூனியன் பட்டணம். இதில் ஒரு புராதன சிவாலயமும்-கோபுரமும், ஒரு புராதன கோரியும், திருவெத்தியில் ஒரு சைவ வைணவ க்ஷேத்திரமும், யாத்திரைக்காரர் தங்குவதற்கு வசதியான சத்திரங்களும் இருக்கின்றன. இது சென்னையிலிருந்து தென்னிந்தியா ரெயில் மார்க்கமாக 110½ மைல்கள் தூரத்தி லிருக்கிறது. சென்ற காணிஷ்வார் கணக்கின்படி இங்கு 10,697 ஜனங்கள் குடியிருக்கிறார்கள்.

---

## நெல்லிகுப்பம்.

இதுவும் கூடலூர் ஜில்லாவைச் சார்ந்த ஒரு யூனியன் பட்டணம். இங்கே கிழக்கு இந்தியா கம்பெனியாருடைய சாராயம் காய்ச்சும் கார்கானவும், சர்க்கரை செய்யும் இயந்திர சாலைகளும் இருக்கின்றன. இங்கு ஏராளமாக வெற்றிலை விளைவிக்கப்படுகின்றன. சென்ற காணிஷ்வார் கணக்கின்படி 10,404 ஜனங்கள் இங்குக் குடியிருக்கிறார்

கள். இது சென்னையிலிருந்து தென்னிந்தியா ரெயில் மார்க்கமாக $118\frac{3}{4}$ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## விக்கிரவாண்டி.

இது ஷை ஜில்லா விழுப்புறம் தாலுக்காவின் ஒரு கிராமம். இது ரயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கே ஒரு மைல் தூரத்தி லிருக்கிறது. இங்கிருக்கும் புராதன சிவாலயம் சிற்பலங்காரமாகக் கட்டப்பட் டிருக்கிறது. இங்கு மார்கழி தைமாதங்களிலும்-பங்குனி சித்திரை மாதங்களிலும் விசேஷ உற்சவங்கள் நடக்கின்றன. இங்கே ஒரு ராக்ஷசன், தன் கையை எவர் தலையில் வைக்கினும் அவர் பஸ்பமாகிவிட வேண்டு மென்னும் வரத்தைக் கொடுக்குமாறு சிவபிரானை வேண்ட, அவரும் கொடுக்க, அவ்வரத்தைப் பரீக்ஷிக்க அருகில் யாரும் இல்லாமையால் அச்சிவன் தலையிலேயே கையைவைத்துப் பரீக்ஷித்தறிய பிரயத்தனப்படவே, அச்சிவபெருமான் ஒரு செடி கொடியிற் புகுந்து மறைந்து விட்டனராம். சென்ற காணிஷ்வார் கணக்கின்படி இங்கு 3,155 ஜனங்க ளிருக்கிறார்கள். இது சென்னையிலிருந்து தென்னிந்தியா ரயில் மார்க்கமாக $90\frac{1}{2}$ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## கூடலூர்.

தென் ஆற்காடு அல்லது கூடலூர் ஜில்லாவுக்குப் பிரதானபட்டணம் கூடலூர். இது, கெடிலை நதிக்கரையோரத்தில் கட்டப்பட்டு, தேவனும்பட்டணம்-பண்டிபாளையம்-மஞ்சகுப்பம், புதுப்பாளையம், திருப்பாதிரிப்புலியூர் இன்னும் வேறு ஒன்பது சிறு கிராமங்களுடன் சேர்ந்திருக்கிறது. ஆகவே இதன் முனிசிபல் எல்லை சுமார் 13 சதுர மைல்களுள்ளது. கெடில நதியும் பொன்னேரி நதியும் ஓடுவதால் போதுமான ஜலவசதி யுள்ளது. பழைய பட்டணத்திற்கு வேண்டிய கேப்பர் மலையிலிருந்து வடியும் ஜலத்தை ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் ஒரு குளத்தில் தேக்கி உபயோகப்படுத்தப்படுகிறது.

## கூடலூரின் மத்தியகால சரித்திரம்.

1682ஞ ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் அப்போது செஞ்சிக் கோட்டையிலிருந்த கான்சாயபினிடம் அனுமதி பெற்று இங்கு வியாபாரம் செய்ய ஓர் வர்த்தக சாலையை

1683ஹு கட்டினார்கள். அவர்களுக்கு வர்த்தகலாபம் அதிகமாய்க் கிட்டியதால் 10 வருஷத்திற்குள்ளாக வர்த்தகசாலையை விர்த்தியாக்கிய தன்றியில், (St. David) கோட்டையையும் கட்ட ஆரம்பித்து 1702ஹுத்தில் கட்டிடவேலையை முடித்தார்கள். 1746ஹு சென்னபட்டணங் கம்பெனியாரை விட்டு நீங்க ஆங்கில சேனைகள் இங்கனுப்பப்பட்டன. இப்படிச் செய்யவே பிரான்சு தளகர்த்தனாகிய டியுப்லே என்பவன் இதை இருமுறை தாக்கியும் ஜெயிக்கவில்லை. 1752ஹு கம்பெனியாருடைய தலைமைஸ்தலம் சென்னைக்கு மாற்றப்பட்டது. ஆறுவருஷத்திற்குப் பிறகு பிரான்சுக்காரர் சண்டையிட்டுக் கோட்டையைப் பிடித்து இடித்தார்கள். 1760ஹு வாண்டிவாஷ் சண்டையான பிறகு இங்கிலீஷ்காரர் இதைப்பிடிக்க, 1785ஹு பிப்ரவரிமீ இது ஆங்கிலேயர் வசமாகி, அன்றுமுதல் செல்வமும் சிறப்பும்பெற்று வருகிறது. இதில் இப்போது சென்ற காணிஷ்வார் கணக்கின்படி 56,574 ஜனங்க ளிருக்கிறார்கள். இது சென்னையி லிருந்து தென்னிந்தியா ரெயில் மார்க்கமாய் 127½ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## சித்தூர்

இது வடஆற்காடு ஜில்லாவுக்குத் தலைநகர். இதை யடுத்த இந்திரபுரியில் ஸ்ரீவரதராஜசுவாமி ஸ்ரீகோதண்டராமசுவாமி கோயில்களும், கோர்ட்டு கச்சேரிகளும் இருக்கின்றன. சித்திரை வைகாசி மாதங்களில் விசேஷ உற்சவங்கள் இங்கு நடக்கின்றன. இது சென்னையிலிருந்து தென்னிந்தியா ரெயில் மார்க்கமாய் 221 மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## திருஅண்ணாமலை.

கிரேதாயுகத்தில் அக்கினிவடிவும், திரேதாயுகத்தில் சுவர்ணவடிவும்; துவாபரயுகத்தில் தாமிரவடிவும், கலியுகத்தில் கல்வடிவுமாக விளங்கும் மலை. பிரமனும் விஷ்ணுவும் நான் பிரமம், நான் பிரமமென ஒருவரோ டொருவர் செருக்கிச் சமர் செய்தபொழுது, அவர்கட்கிடையே அழற்றூணா யெழுந்து அனுக்கிரகித்து அவர்கள் பிரார்த்தனைக் கிணங்கிக் கார்த்திகைக்குக் கார்த்திகைநாள் மலை நுனியில் ஒரு ஜோதியைக் காட்டுந் தலம். திருஞானசம்பந்த சுவாமி

கள் திருநாவுக்கரசு சுவாமிகள் இவர்களால் பாடப்பெற்ற திருப்பதிகங்களோடு மாணிக்கவாசக சுவாமிகளால் திருவெம்பாவையும், திருவம்மானையும் பாடப்பெற்றஸ்தலம் அருணகிரிநாதர் அவதார ஸ்தலம். பிரதக்ஷிணஞ் செய்த புழுகு பூனை அசுவ முதலியன முத்திபெற்ற விடம். சிவபெருமான் வல்லாள ராசனுக்குப் புதல்வராக் வந்து உத்தரகிரியை நடத்தியது மிவ்விடமே. சுவாமி: 'அண்ணமலையார்-அருணசலேசுவரர், தேவி: உண்ணமுலையம்மை-அபீதகுசாம்பாள். தீர்த்தம்: பிரமதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், இமையவள்ளி தீர்த்தம் முதலிய இருநூற்றறுபத்து நான்கு தீர்த்தங்கள். இவற்றுள் சிலவே இப்போது காணப்படுவன. நடுநாட்டிலுள்ள தேயுலிங்க க்ஷேத்திரமாகிய இது விழுப்புறத்துக்கு மேற்கே 42 மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

## திருவண்ணமலையின் மத்தியகால ஸ்திதி.

இது ஒரு காலத்தில் தொண்டைமான் பல்லவர் அரசாட்சிக்கு உட்பட்டிருந்ததாகக் கேள்விப்பட்டாலும் அதை நிரூபித்துக் காட்டும் சரியான சரித்திர சாதனங்கள் இன்னும் கிட்டவில்லை. ஆயினும் 1753-1791 வருஷங்களுக்கிடையில் இங்கு அநேக சண்டை சச்சரவுகள் நடந்திருக்கின்றன. அதற்குத் திருஷ்டாந்தமாக ஊரின் பல பக்கங்களிலும் கோயில்களிலும் பீரங்கி குண்டுகள் பாய்ந்த வடிவங்களை இப்போதும் பார்க்கலாம். 1753ஆ மூர்டின் ஆலி கான் (Murtin Ali Khan) பயங்கரமான முற்றுகைபோட, கர்னடக நவாபின் தலைவனை பார்காட் உல்லாகான் கம்பீரமாகத் தடுத்தான். 1757ஆ பிரான்சுக்காரர் மும்முரமாகப் படை யெடுத்துவரவே முற்றுகை நீங்க, அடுத்த வருஷம் டிபாகர்கில்லாதார் மறுபடியும் இதைப்பிடித்துக்கொண்டார். 1760ஆ காப்டன் ஸ்டீபன் ஸ்மித் என்பவர் தாக்கிப் பிடிக்க அதே வருஷம் ஆகஸ்ட்மீ மைசூரார் வந்து தாக்கிப் பிடித்தார்களில்லை. மைசூர் முதல் யுத்தம் ஆரம்பித்த போது அம் மைசூராரும் ஹைதராபாக்கத்தாரும் செங்கம் கணவாய் வழியாக வந்து தாக்க, கர்னல் ஸ்மித் 6000 சேனை பலத்தால் அவர்களைத் துரத்திவிட்டார். பிறகு திருவண்ணமலையில் இரண்டுநாள் பயங்கர சண்டையுண்டாக எதிர்கக்ஷியில் 4000 பேர் கொல்லப்பட்டதோடு 64 பீரங்கிகளும் பிடிபட்டன. 1790ஆ திப்பு சுல்தான் இதைப் பிடிக்க, மறுபடி இது ஆங்கிலேயர் வசமாகியது.

## திருவண்ணுமலையின் தற்கால ஸ்திதி.

இந்தத் திருவண்ணுமலை வட ஆற்காடு அல்லது கூடலூர் ஜில்லாவைச் சார்ந்த ஒரு தாலுக்காவாகவும், அதன் தலைநகராகவும், இப்போது ஓர் முனிசிபல் பட்டணமாகவுமிருக்கிறது. இது சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து $141\frac{1}{4}$ மைல்கள் தூரத்திலிருக்கிறது. இங்குச் சூரியோதய காலத்தில் மலையின் தோற்றம் சிவப்பு வர்ணமாயிருப்பதால் இதற்குத் திருவண்ணுமலை என்று பேர் உண்டாகியதுபோலும்.

இதனுடைய மலை உச்சிகள் யுத்தம் செய்வோர்க்கு அரணுன வசதிகளெனப்பட்டிருக்கின்றன. முக்கியமான உச்சியானது பயங்கர காடுவனங்களால் சூழப்பட்டு, கால் நடையாய் மாத்திரம் போகக்கூடியதா யிருக்கிறது. அந்த உச்சியிலிருந்து கிளம்பிய சிகரத்தைச் சைவர்கள் ஓர் லிங்கமாக எண்ணியிருக்கிறூர்கள். இது சமுத்திர மட்டத்திற்கு 2668 அடிகள் உயரமுள்ளது. இம்மலையின் அடிவாரத்திலிருக்கும் நகரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு முக்கால் மைல் தூரத்தி லிருக்கிறது. இங்கிருக்கும் தேயு லிங்கமுள்ள பெரிய சிவன் கோயில்: 9 முதல் 11 அடுக்குகளுள்ள 4 பெரிய கோபுரங்களினுலும், மதில் சுவர்களினுலும், 5 சிறிய கோபுரங்களினுலும், பிரகாசிக்கிறது. கோயிலுக்குள் அநேக சாசனங்களும் சித்ரவிநோத வெட்டுகளும் இருப்பதன்றியில் அழகிய கணேசர் கோயிலும், ஆயிரக்கால் மண்டபமும் இருக்கின்றன. நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் 24 கம்பங்களுள்ள ஒரு அழகிய கல்மண்டபத்தைக் கட்டி வைத்திருக்கிறூர்கள். பார்வதிதேவியின் தபசு நீங்கிச் சிவபெருமான் தேயுரூபமாகத் தரிசனம் கொடுத்தமையினுல் ஓர் விசேஷ உற்சவம் 10 நாள்வரை கொண்டாடப் படுகிறது. அதாவது, ஒரு பெரிய பாத்திரத்தில் கற்பூர தீபத்தோடு மூலஸ்தானத்திலிருந்து கொண்டுவந்து மத்திய மண்டபத்தில் அருணுஜலேஸ்வரருக்கு எதிரில் கொட்டவே, மலையின் மீது முன்னதாகத் தயார் செய்திருந்த கூம்பு கொட்டகைக்குத் தீபமேற்றி விடுகிறூர்கள். இந்தக் கூம்புக்கு யாத்திரைக்காரர் ஏராளமாக நெய்யையும் கற்பூரத்தையும் போடுவதனுல் அவை யாவும் கூடி ஜெகஜ்ஜோதியாக 2,3 நாள் வரையில் விடாமல் எரிகின்றது. இந்தத் தீப தரிசனம் கண்டவர்களுக்கு இகபர சாதனம் கிடைக்குமென்

றெண்ணுகிறார்கள். இவ் வுற்சவத்திற்கு நாலாபக்கங்களிலிருந்து லக்ஷக்கணக்கான ஜனங்கள் வருகிறார்கள். மலையின்மேல் முலைப்பால் தீர்த்தம் என்னும் தீர்த்தமிருக்கிற தன்றியில் மலையின் பல பக்கங்களில் பாறைகளைக் குடைந்தெடுத்த குகைகளு மிருக்கின்றன. ரெயில்வேஸ்டேஷனுக்கு மேற்கே கால்மைல் தூரத்தில் சுப்பிரமணியர் கோயி லிருக்கிறது. இந்தத் திருவண்ணாமலையி லிருக்கும் சில விசேஷ மண்டப கோபுரங்கள் தஞ்சையை யாண்ட அச்சுதப்ப நாயுடுகாரு முதலானவர்களால் கட்டிவைக்கப் பட்டதாகத் தஞ்சாவூர் சரித்திரம் முறையிடுகின்றது. இப்போது இம் முனிசிபல் பட்டணத்தில் 21,244 ஜனங்கள் வசித்துவருகிறார்கள். இங்கு ஆஸ்பத்திரி, பாடசாலைகள் இவைஇருப்பதன்றியில் யாத்திரைக்காரருக்கு உபயோகமான சத்திரங்களும் வண்டிவசதிகளும் இருக்கின்றன.

---

## சீகாளத்தி.

(காளத்தீச்சுரர், ஞானப்பூங்கோதையம்மை, பொன்முகரிநதி தீர்த்தம்.)

சீ, காளம், அத்தி என்னும் மூன்றுபதச் சேர்க்கைகளால், சீகாளத்தி என்றாயிற்று. அவற்றுள் சீ என்பது சிலந்தி, காளம் என்பது பாம்பு, அத்தி யென்பது யானை, ஆகிய இம்மூன்றும் பூசித்து முத்திபெற்ற தலம். கிரேதாயுகத்தில் சிலந்தியானது தன்வாயாலிழைத்த நூல்கொண்டு கோவிலாற்றச் சிவபெருமான் அதனன்பைச் சோதிப்பான் பொருட்டு விளக்கின் சுடரை விருத்தியாக்கி நூற கோவிலை வேகச் செய்ய, சிலந்தி பதைபதைத்து அவ்விளக்கில் வீழ்ந்திறக்கத் தொடங்குமுன் அதைக் காத்திரட்சித்தனர்.

திரேதாயுக அந்தத்தில் காளம் என்னும் பாம்பும், துவாபரயுக ஆதியில் ஓர் யானையும் பூசித்தன. அவற்றுள் பாம்பு மணிகளாலும், யானை இலைகளாலும் பூசிப்ப, ஒன்றையொன்று இகலித் தம் பூசனையை யனுசிதஞ் செய்ததாகக் கருதிப், பாம்பானது யானையின் துதிக்கைக்குட் புகுந்து அதை வருத்த, யானை தன் தலையைத் தரையில் மோத, அவ்விரண்டும் உடல்விட்டுச் சிவகதி யடைந்தன.

கலியுகத் தாதியிற் பாண்டு மைந்தரி லொருவராகிய அருச்சுனன் பாசுபதங் கருதித் தவஞ் செய்துழி, வேட

ணுகப் போந்த சிவபெருமானுடன் மல்லாடிப் பின்னர் சிவ பெருமானைத்தரிசித்தபோது, பாசுபதாஸ்திரம் வேண்டாது முத்தியை வேண்டச், சிவபெருமான், "நீ கருதிய பாசு பதந் தந்தோம்; நீ கேட்ட முத்தியை மற்றொரு ஜனனத்திற் றருவோம்" என்றனுக்கிரகித்து, "நம்மை வேடனென் றுரைத்த காரணத்தால், வேடனுகப் பிறந்து முத்தியடை வாய்" என்கிற திருவாக்கின்படி கண்ணப்பநாயனர் ஆகக் கார்த்திகைமீ அசுவினியிற் றிருவவதாரமாகி ஆறு நாளில் கண்ணிடந்தப்பி, தைமாத மிருகசிரிடத்தில் முத்தி பெற்ற தலம். கடைச்சங்கத்து வித்வசிரோமணியாகிய நக்கீர தேவரும், சிவகோசரியார் முதலிய பலரும் முத்தி பெற்ற தலம். சமயாசாரியர் மூவராலும் திருப்பதிகம் பெற்றுள் ளது. திருப்பதிகம்—ச.

## சீகாளத்தியின் தற்கால ஸ்திதி.

இந்த சீகாளத்தியானது, வடஆற்காடு ஜில்லாவைச் சார்ந்த ஒரு ஜமீன்தார் பட்டணம். இந்தப் பட்டணமானது சுவர்ணமுகி நதியின் வடகரையில் நான்கு விஸ்தீரண முள்ள ரோட்டுகளாலும், வீடுகளாலும், நடுவிற் பெரிய சிவ க்ஷேத்திரத்தோடும் பிரகாசிக்கிறது. இக்கோயிலில் மஹா தேவர் என்னும் பெயரால் ஐந்து சிரசுகளுடைய விக்கிர கம் இருக்கினும் இங்கே எரியும் விளக்கானது எப்போ தும் நடித்துக்கொண்டே இருக்கிறது. இவ்விடத்தில் பிரதி வருஷமும் மார்ச்சு மாதத்தில் பத்து நாள் உற்சவம் அதா வது சிவராத்திரி உற்சவம் கம்பீரமாகக் கொண்டாடப் பட்டு வருகிறது. சிலர் இதைத் தென்காசி என்று சொல்லுகிறார்கள். வருஷோற்சவ காலங்களில் சுற்றுப் பக் கங்களி லிருந்து சுமார் 20,000 ஜனங்கள் வரையில் வருகிறார்கள். நகரைச் சுற்றிலுமிருக்கும் சிறுமலைகளின் காக்ஷி சிங்காரமாக இருக்கிறது. சுற்றுப் பக்கங்களில் ஏராளமாக நெசவுத் தொழில் நடந்து வருவதோடு பல வித தானியம் விளையல் முதலானவைகளின் வியாபா ரம் அதிகம். இது சென்னையிலிருந்து தென்னிந்தியா ரெயில் விழுப்புறம் ஸ்டேஷன் மூலமாக 185 மைல் கள் தூரத்திலும், குண்டூர் ஸ்டேஷனி லிருந்து 38 மைல் கள் தூரத்திலும் இருக்கிறது. இவற்றிற்கு முறையே 3-ம் வகுப்பு சார்ஜ் ரூபாய் 2-1-0-ம், 0-7-6 கொடுக்கவேண்டும். இந்த சீகாளத்தி நகர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு ஒன்

றரைமைல் தூரத்தி லிருக்கிறது. மாட்டு வண்டிகள் கிடைக்கும். இந்த சீ காளத்தி ரேணுகுண்டா ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 15 மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

### திருவாமாத்தூர்.

(காமார்த்தேச்சுரர், அழகியநாயகியம்மை, பசுதீர்த்தம்.)

காமதேனு பூசித்தது. பசுக்களுக்குத் தாயகமான தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றது. திருப்பதிகங்கள்-ரு. இது விழுப்புரம் ஸ்டேஷனுக்கு வடமேற்கே நான்கு மைல் தூரத்திலிருக்கிறது.

---

### திருப்பனங்காட்டூர்.

(பனங்காட்டேசுரர், அமிர்தவல்லியம்மை, அமிர்ததீர்த்தம்.)

இது வித்தியாதரர் புசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது காஞ்சீபுரத்திலிருந்து தெற்கே நான்குமைல் சென்று ஐயன்குளம் என்னும் கிராமத்தை யடைந்து, அங்கிருந்து மேற்கே ஆற்காட்டுக்குப் போகும் பாதையில் 3½ மைல் சென்று அங்கு வடக்கே திரும்பினால் ¾ மைல் தூரத்தி லிருக்கிறது. விழுப்புறம் ஸ்டேஷனுக்கு வடக்கு 5½ மைல்.

---

### திருமுண்டீச்சுரம்.

(முண்டீச்சுரர், கானார்குழலியம்மை, கண்ணுயிர தீர்த்தம்.)

தேவேந்திரன் புசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது திருவெண்ணெய் நல்லூருக்குக் கிழக்கு 3 மைல்.

---

### திருப்பாதிரிப்புலியூர்.

(தோன்றாத்துணையீச்சுரர், தோகையாம்பிகையம்மை, பெண்ணைநதிதீர்த்தம், பாதிரிவிருக்ஷம்)

வியாக்கிரபாதரிஷி புசித்த காரணத்தால் இது வட புலியூரெனவும் வழங்கும். திருநாவுக்கரசு சுவாமிகளைச் சமணர்கள் கற்றூணி லார்த்துக் கடலிற் றள்ளியபோது "சொற்றுணை வேதியன்" என்னும் பதிகம் பாடி அக்கல்லே புணையாகக் கரையேறிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள்

திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ. இது கடலூருக்கு வடக்கே மூன்று மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## கரையேறவிட்ட நல்லூர்.

(திருக்காட்சிநாதேச்சுரர், தரிசனாம்பிகையம்மை, கெடிலநதி தீர்த்தம்.)

இது தேவர்கள் பூசித்த தலம். மாணிக்கவாசக சுவாமிகள் வடபுலியூரைத் தரிசிக்க வரும்போது, கெடிலநதி பெருகிக் குறுக்கிட்டபோது சிவபெருமான் ஓர் சித்தராய் வந்து வழிவிடுத்தருளிய தலம்.

---

## திருமாணிகுழி.

(மாணிக்கமேனிவரவேச்சுரர் மாணிக்கவல்லியம்மை, பெண்ணைநதி தீர்த்தம். )

வாமனவதாரத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணு, மாணிக்கத்தை வைத்துப் பூசித்த தலம். இது திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

திருப்பாதிரிப்புலியூர் ஸ்டேஷனிலிறங்கி மேற்கே $3\frac{1}{2}$ மைல் தூரத்தில் இது இருக்கிறது. திருவஹீந்திரபுரத்திற்குச் சமீபம்.

---

## வடுகூர்.

(வடுகேச்சுரர், மாணிக்கவல்லியம்மை, பெண்ணைநதி தீர்த்தம்.)

சக்கரவீரிய ரிஷியும், வைரவரும் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. புதுச்சேரிக்கு மேற்கில் 10 மைலிலுள்ள சின்னபாபு சமுத்திரம்ஸ்டேஷனிலிறங்கிமேற்கே இரண்டு மைல் தூரத்தில் இத்தல மிருக்கிறது.

---

## துறையூர்.

(துறையூரப்பேச்சுரர், பூங்கோதையம்மை, பெண்ணைநதி தீர்த்தம்.)

நாரதமாமுனிவர் பூசித்த தலம். சந்தான குரவரி லொருவரான அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் ஆதி சைவ மரபிலே சகலாகம பண்டித ரென்னுங் காரணப் பெயருடன் திருவவதாரஞ் செய்தருளி, சிவஞானசித்தி யார்-இருபாவிருபஃது என்னுஞ் சித்தாந்த சாஸ்திரங்களைத் திருவாய்மலர்ந்தருளி, புரட்டாசி மாதம் பூரநாளில் முத்தி பெற்றருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது, பண்ணுருட்டி ரயில் ஸ்டேஷனுக்கு வடமேற்கு 5 மைல், விரிஞ்சிபாக்கம் ரயில் ஸ்டேஷனிலிருந்து மேற்கு $1\frac{1}{2}$ மைல், தூரத்திலிருக்கிறது.

---

## திருவெண்ணெய்நல்லூர்.

(தடுத்தாட்கொண்டேச்சுரர், வேற்கண்ணியம்மை, பெண்ணைநதி தீர்த்தம்.)

இவ்வாலயத்திற்கு அருட்டுறை என்று பெயர். இது சம்புபத்தரிஷி பூசித்த தலம். ஆலால சுந்தரராகிய சுந்தர மூர்த்தி சுவாமிகளைக் கயிலையிலிருந்து பூமிக்கு வரும்படி எம்பெருமான் கட்டளையிட்டருளிய பொழுது, "யான் மானிட மாய்கையில் மயங்காவண்ணம் தடுத்தாண்டருள வேண்டும்" என்று வேண்டிய விண்ணப்பத்திற்கு, "அங் ஙன மாகுக" என் றனுக்கிரகஞ் செய்தபடி, நாயனருக்காக நியமிக்கப்பட்ட பெண்களிருப்பவும், மணம் வந்த புத்தூர்ச் சடங்கவிஜயர் திருமகளாரை மணஞ்செய்ய வெத்தனப் படும்பொழுது, சிவபெருமான் விருத்த வேதியரா யாவ ணங் காட்டித் தடுத்தாண்டு அடிமை படைத்த தலம்.

சந்தானசாரியரிற் றலைவராகிய மெய்கண்ட சிவா சாரிய சுவாமிகள் வேளாளமரபிலே சுவேதவனப்பெருமா ளென்னுந் திருநாமத்தோடு திருவவதாரஞ் செய்தருளிப் பரஞ்சோதிமகாமுனிவராற் சிவதீட்சைபெற்று, சிவஞான போதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தருளி, நாற்பத் தொன்பதின்மர்களை மாணக்கர்களாகப் பெற்று, ஐப்பசி மாதச் சுவாதிநாளில் முத்திபெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது விழுப்புரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கே 12 மைல் தூரத்தி லிருக்கிறது.

## விடையாறு.

(இடையாற்றேச்சுரர், சிற்றிடைநாயகியம்மை, பெண்ணைநதி தீர்த்தம்.)

சுகப்பிரமரிஷி பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது திருவெண்ணெய் நல்லூருக்கு மேற்கே 3 மைல்தூரத்தி லிருக்கிறது.

---

## அறையணிநல்லூர்.

(அறையணிநாதேச்சுரர், அருணையகியம்மை, பெண்ணைநதி தீர்த்தம்.)

பிரசண்டரிஷி பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது, திருக்கோவலூர் ஸ்டேஷனிலிருந்து 2 பர்லாங் தூரத்திலிருக்கிறது.

---

## திருநெல்வெண்ணெய்.

(வெண்ணெயப்பேச்சுரர், நீலமலர்கண்ணம்மை, பெண்ணைநதி தீர்த்தம்.)

சனகர், சநாந்தகர், சனாதனர், சனத்குமாரர் இவர்கள் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. பண்ணுருட்டி ஸ்டேஷனி லிறங்கி உளுந்தூர்பேட்டைக்கு வட்மேற்கே நான்கு மைல் தூரத்தில் இத்தல மிருக்கிறது.

---

## திருமுதுகுன்றம் (விருத்தாசலம், பழமலை).

(பழமலைநாதேச்சுரர், பெரியநாயகியம்மை, மணிமுத்தாநதி தீர்த்தம், வன்னி விருக்ஷம்.)

பிரமா, ஸ்ரீ விஷ்ணு, அட்டவசுக்கள் முதலியோர் பூசித்துத் திருநடன தரிசனம் பெற்ற தலம். உமையவள், அகத்தீஸ்வரர், விபசித்து, சிவனன்னன் எனப் பல அடியவர்களும் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் காதுக் குறும்பிகளிற் பிறந்த மது கைடவர்கள் என்னும் இரண்டு ராக்ஷதர்களும் விஷ்ணுவுடன் யுத்தஞ்செய்ய, அவர்களை ஜெயிக்கும்படி ஸ்ரீ விஷ்ணு பூசிக்க, சிவ

பெருமான் விருத்த சொரூபமாய் வந்து அவருக்கு அநுக்கிரகஞ் செய்தருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், சிவபெருமானாற் கொடுக்கப்பட்ட பன்னீராயிரம் பொன்னை வழியிற் கொண்டுபோதல் வருத்தமென்றெண்ணித் தாம் வசிக்கும் திருவாரூர்க்குளத்திற் றரவேண்டுமென்று இத்தலத்தின் முக்கிய தீர்த்தமாகிய மணிமுத்தா நதியிற் சொரிந்து அவ்வாறே திருவாரூர்க் குளத்திற் பெற்றுக் கொண்ட தலம். மூவர்களாலும் பதிகம் பெற்றுள்ளது - திருப்பதிகங்கள் - கக. இது கூடலூருக்குத் தென்மேற்கே 35 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநாவலூர்.

(திருநாவலேச்சுரர், சுந்தரநாயகியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

இது சுக்கிரன் பூசித்த தலம். திருக்கயிலாயகிரியில் சிவபெருமான் தேவியாரோடு ஆடி நோக்குங்காற் றோற்றிய பிரதிபிம்பத்தை யழைத்தருள, வந்தவராகிய ஆலால சுந்தரர், சிவபெருமானுக்குத் திருநீறு மாலிகையு மெடுத்தணியுந் திருத்தொண்டினிற்பவர், பூக்கொய்ய நந்தனவனஞ் செல்லுழி, அவ்வாறே அங்கு வந்த அம்மையின் சேடியர்களாகிய, அநிந்திதை - கமலினி என்பவர்களைக் கண்ணுற்ற காரணத்தால் சிவாஞ்ஞைப்படி ஆனிமாத உத்திரத்தில் ஆதிசைவகுலத்திற் றிருவவதாரஞ் செய்தருளிய தலம். சடையநாயனார் ஆதிசைவகுலத்தில் ஆடிமாதப் புநர்பூசத்திற் றிருவவதாரஞ் செய்தருளிச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருமகனாராகப் பெறும் பேறுபெற்றுச் சிவகைங்கரியமும் புரிந்து மார்கழிமாதத் திருவாதிரையில் முத்திபெற்ற தலம். இசைஞானியார் ஆதிசைவகுலத்தில் ஐப்பசிமாத மூலநாளிற் றிருவவதாரஞ்செய்தருளி, சடையநாயனாருக்குத் திருமனைவியாராய்ச் சுந்தரமூர்த்தி சுவாமிகளை யீன்றருளிச் சித்திரைமாதச் சித்திரைநாளில் முத்திபெற்ற தலம். நரசிங்க முனையரையநாயனார் மாசிமாத உரோகிணியிற் குறுநில மன்னவர் மரபிற் றிருவவதாரஞ் செய்தருளி, நாடுகாத்து, நம்பியாரூரரை மகன்மை படைத்து, அடியார் பூசையி லொவ்வொருவருக்கும் தினம் நூறு நூறு பொன் கொடுப்புழி, மார்கழி மாதத் திருவாதிரையில் வந்த காமுகர் ஒருவர், விபூதி யணிந்திருந்தமை நோக்கி, இருநூறு பொன் கொடுத்து வழி

பட்டுச் சுந்திரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிக்கத்திற் பேர் குறிக்கும் பெருவாழ்வையும் பெற்றுப் புரட்டாசி மாதச் சதையத்திற் சிவபுரமடைந்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்—க. இது பண்ணுருட்டி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்கே உளுந்தூருக்குப் போகும் பாதையில் 11 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருவதிகை வீரட்டானம் (திருவதிகை).

(திருவதிகை வீரட்டானேச்சுரர், திரிபுரசுந்தரியம்மை கெடிலநதி, சூலகங்கை, சக்கரதீர்த்தம்.)

கருடன், பிரமா விஷ்ணு, பஞ்சபாண்டவர் இவர்கள் பூசித்த தலம். வித்துன்மாலி, தாருகாட்சன், கமலாட்சன் என்னும் பெயரையுடைய திரிபுராதிகள் செய்யு மிடுக்கணுக் கஞ்சித்தேவர்கள் ஸ்ரீமஹா விஷ்ணுவினிடஞ் சென்று முறையிட்ட, அசுரர்கள் சிவபூஜாதரர்களா யிருத்தல்பற்றி யவர்களை வெல்லுவ தரிதென்று, ஸ்ரீ விஷ்ணுவானவர் புத்தராய்ப்போந்து அவர்களைப் புத்தராக்கியும், வெல்லற் கரிதாய்த் தேவர்கள் யாவரும் சிவபெருமானிடத்து முறையிட, சிவபெருமான் அத்தேவர்களது உதவி சிறிது மின்றி அத் திரிபுராதிகளை நகைத்தெரித்த தலம். இது அட்ட வீரட்டானத்தி லொன்று.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாமூரில், வேளாளர் குலத்தில், புகழனூர்-மாதினியாரென்பவர்கள்பால், பங்குனி மாத உரோகிணியிற் றிருவவதாரஞ்செய்து, மருணீக்கியாரென்னும் பெயர் பூண்டெழுந்தருளியிருந்து, தந்தை தாயர் சிவபதமடைந்தபின் சைவசமயம் விடுத்து, அமண் சமயங் குறுகி, அங்குத் தருமசேனரென்னும் பெயரோடு சமண் சமயாசாரியராய்ப் புத்தாதி மதங்களை வென்று விளங்குகையில், அவரது சகோதரியாராகிய திலதவதியார் வேண்டுகோளின்படி, சூலைநோயால் அமண்சமயப் பற்றை யொழிவித்துச் சைவராக்கி, சிவபெருமான் திருவாக்கால் திருநாவுக்கரசு என்னும் திருநாமஞ் சூட்டப்பெற்றுப் பதிகம் பாடப்பெற்றருளிய தலம்.

அரசுகள் இவ்வாறு சைவராய் விளங்கிய தன்மையைக் கண்டு பொறாத சமணர்கள் தம்மதச்சார்பாயிருந்த பல்லவராசனிடத்து மாறுபாடாய்றிவித்து, அரசுகளைத் தண்டிக்

கும்படியேவ, அரசன் அவ்வாறே யவரைக் கொணர்வித்து ஏழுநாள் வரையி னீற்றறையிலிடுவிப்பச், சிவத்தியானத்தால் துன்புறு துய்ந்த அந்நாயனாருக்கு, அவ்வரசன் சமணர்களேவலால் நஞ்சூட்ட, அதனையும் அருளால் உண்டருளிய திருநாவுக்கரசு சுவாமிகளை மதயானையால் கொல்விக்கச் செய்ய, அவ்யானை யவரை வணங்கிப் பாகர் முதலியோரை யெற்றிச் சமணர்களைத் தள்ளி மிதித்தெரியப், பின்னுமவர்கள் வேண்டுகோளா லரசன் கற்றூணிற் கட்டிக் கடலிற் பாய்ச்ச அதனையே தெப்பமாகக் கொண்டு கரைசேர்ந்த நாயனார் பலதரம் வணங்கி, இத்தலத்தெழுந்தருளியிருக்கும்பொழுது, அப்பல்லவ ராசன் சுவாமிகளின் மகிமையைக் கேள்வியுற்றுத் தான் பூண்ட சமண்சமயம் பொய்யெனத் துறந்து சைவசமயத்தைச் சார்ந்த தலம். இதிற் குணதரவீச்சுரம் என்னும் ஆலய மிருக்கிறது. இது காட்வனென்னு மரசன், சமண் சமயம் பொய்யென்றுணர்ந்தமைபற்றிச் சமணர்களது ஆலயங்களிற் சிறந்து விளங்கிய பாடலிபுத்திரத்தை யழித்துச் சமைத்தருளியது. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளுக்குத் திருநடன தரிசனங்களை காட்டியருளிய தலம். சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சித்தவடமடத்திற் றிருவடி தீட்சை செய்தருளிய தலம். மனவாசகங் கடந்தார், சந்தானசாரியருளொருவராகிய மெய்கண்ட தேவரிடத்துத் தீட்சை பெற்றருளி உண்மைவிளக்கமென்னும் சித்தாந்த சாத்திரஞ் செய்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள் - 18.

இது பண்ணுருட்டி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே ஒரு நாழிகை தூரத்திற் கெடில நதியின் வடகரையி லிருக்கிறது.

---

## திருச்சோபுரம் (தியாகவல்லி).

(சோபுநாதேச்சுரர், கோபுரநாயகியம்மை, பரமதீர்த்தம்.)

தம்பிரான் கண்ட தலம். அகஸ்தியமுனிவர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது, கூடலூருக்குத் தெற்கே ஆலப்பாக்கம் வழியாய் வடக்கே ஒரு மைலில் தோணி யேறிப் போய், மணல் வழியிலே ஒருமைல் தூரத்தி லிருக்கிறது.

## திருத்தினைநகர்.

(திருந்தீச்சுரர், ஒப்பில்லாநாயகியம்மை, கெடிலநதி, மணிமுத்தாநதிதீர்த்தம்.)

மறைமுனிவர் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

கூடலூருக்குத் தெற்கே ஆலப்பாக்கம் ஸ்டேஷனிலிறங்கி, சிறிது தூரம் மேற்கே சென்று, மஞ்சகுப்பத்திலிருந்து சிதம்பரத்திற்குப் போகும் பெரியபாதையைச் சார்ந்து, அந்தப் பாதையிலே தெற்கே மூன்றுமைல் சென்று, $13\frac{1}{2}$ மைல்கள் இருக்குமிடத்தில் மேற்கே திரும்பி $1\frac{1}{2}$ மைல் சென்று, தாணூர் என்னும் கிராமத்தை அடைந்து, பின்னும் ஒரு மைல் மேற்கே சென்றால் இத் தலத்தை அடையலாம்.

---

## எருக்கத்தம்புலியூர் (இராஜேந்திரன் பட்டினம்.)

(நீலகண்டநாயகேச்சுரர், நீலமலர்கண்ணியம்மை, மணிமுத்தாநதி தீர்த்தம்.)

நாகராசன் பூசித்த தலம். திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனர், ஐப்பசிமாத வைசாகநாளில் யாழ்ப்பாணர் குலத்திற் றிருவவதாரஞ் செய்தருளி, திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருக்கூட்டத்தி லொருவராய், அச் சுவாமிகளது திருப்பதிகங்களை யாழிலமைக்கும்படியான பெரும்பேறு பெற்று, வைகாசிமாத மூலநாளில் பெருமணத்தில் நடந்த அச்சுவாமிகள் திருமணத்தில் மனைவியாரோடு முத்தியடைந்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் - க. விருத்தாசலத்துக்குத் தெற்கு ஏழு மைல் தூரம்.

---

## கூடலையாற்றூர்.

(நெறிகாட்டும் நாயகேச்சுரர், புரிகுழலாம்பிகையம்மை, மணிமுத்தா நதிதீர்த்தம்.)

வான்மீகரிஷி பூசித்ததலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுதுகுன்றத்திற்குப் போகும்பொழுது சிவபெருமான் ஓர் வேதியராய்த் தோன்றி "இது கூடலையாற்றூருக்கேகும் வழி" என்று அச்சுவாமிகளை வழிமறித் தழைத்து, அவ

ளாற் பதிகம் பெற்றருளிய தலம். திருப்பதிகம்-க. இது திருமணி முத்தாநதியும் வெள்ளாறும் கூடுமிடத்தில் இருக்கிறது.

---

## திருத்தூங்கானைமாடம்.

(சுடர்க்கொழுந்தேச்சுரர், கடந்தைநாயகியம்மை, கெடிலநதி தீர்த்தம்.)

சப்த கன்னிகையர், வெள்ளையானை, தேவேந்திரன், காமதேனு இவர்கள் பூசித்த தலம். கலிக்கம்பநாயனார், வைசியர் குலத்தில் மார்கழிமாத பூரட்டாதி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவனடியாரைப் பூசிக்குந் திருத்தொண்டு செய்து வருங்கால் ஒருநாள் ஓரடியவர் முன் தம்மிடம் பணி செய்திருந்தவராக இருந்ததை யறிந்த நாயனாரது மனைவியார், பாதப்பிரதாரணனத்திற்காக நீர்வார்க்கத் தாழ்த்தமைகண்டு சிவனடியரைப் பழமைநினைந் திகழ்ந்ததைக் குறித்து அவரது கரத்தைச் சேதித்துத் தைமாத ரேவதி நாளில் முத்திபெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் சமணமதத்திருந்த தமது உடற்றீங் ககற்றும் பொருட்டு இரு தோளிலும் சூலம் விடை என்னும் இலச்சினை சூட வேண்டியபடி யநுக்கிரகித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-உ. இது விருத்தாசலத்துக்குத் தென்மேற்கில் 11 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநெல்வாயில் அரத்துறை.

(அரத்துறை நாதேச்சுரர், ஆநந்தநாயகியம்மை, கெடிலநதி தீர்த்தம்.)

சப்த ரிஷிகளும் தேவேந்திரனும் பூசித்த தலம். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் பெண்ணாடகத்திலிருந்து இத்தலத்திற் கெழுந்தருளவுன்னி அதுகாறுந் தமது தந்தையார் தோண்மீது சென்ற அவர், அங்கிருந்து பாதசாரியாய் நடந்து மாறன்பாடியையடைய, அவரது பாதங்கள் சிவந்து வருந்தியதைத் திருவுளங்கொண்ட அறத்துறைநாதர், தமது ஆலயத்தில் முத்துச்சிவிகையும் - முத்துக்குடையும்-முத்துச் சின்னங்களும் வைப்பித்து, அவ்வூர் அடியவர்கட்குக் கனவின்கட்டோன்றி அவைகளைத் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு அளிக்கும்படி கட்டளையிட்

டருளியபடியே மற்றையநாள் கவுணியர்கோன் அவைகளைப் பெற்றுத் திருப்பதிகமருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் திருப்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகங்கள்-ரு. இது பெண்ணாகடமாகிய தூங்கானைமடத்திற்குத் தென்மேற்கே நான்கு மைல் தூரத்தி லிருக்கிறது.

இதில் பதிகம்பெற்ற தலம் - உஉ, புராதனதலம்- க, ஆக-உரு. முத்தியடைந்த நாயன்மார் இவர்.

---

## வேலூர்.

இந்த வேலூரானது வட ஆற்காடு ஜில்லாவின் ஓர் விசேஷ பட்டணமாகவிருந்து இப்போது வேலூர் ஜில்லாவிற்குப் பிரதான பட்டணமாயும், முனிசிபல் நகரமாயுமிருக்கிறது. இந் நகரமானது பாலாறு நதிக்குத் தென்கரையில் சுமார் ஒருமைல் தூரத்தில் சமுத்திர மட்டத்திற்குமேல் 700 அடிகள் உயர்ந்திருக்கிறது. இது முன் வேலப்பாடி என்னும் பெயருடைய கிராமத்திற்கருகேயிருந்து பிறகு இப்போதிருக்கும் இடத்திற்கு மாற்றப்பட்டது. இந்த வேலூர் என்னும் பெயரால் நீலகிரி கோதாவரி முதலான விடங்களில் இப்பெயருள்ள இடங்களிருப்பதால் அவற்றிற் கெல்லாம் இது சிறந்ததெனக்காட்ட இதை இராயவேலூர் என்று சொல்லிவருகிறார்கள். இவ்விடத்தில் இத் தென்னிந்தியாவிலுள்ள எல்லா கோட்டை கொத்தளங்களிலும் சிறந்த கோட்டை இருக்கிறது. இந்நகரைச் சுற்றிலுமுள்ள சிறுமலைகளையும் அவைகளைச் சார்ந்த மதில் கட்டிடங்களையும் பார்க்கும்போது இது ஒருஅறணான இடமென்று சொல்லலத்தகும்.

## வேலூரின் மத்தியகால ஸ்திதி.

இந்த வேலூர் கோட்டையானது 1295ஸு கிருஷ்ணா நதிதீரமாகிய பத்திராச்சிரத்தில்குடியிருந்தபொம்மிநாயுடு என்பவரால் சோழராஜனுடைய அநுமதியின்பேரில் கட்டப்பட்டது. ஆனால் இது, இட்டாலியா தேசத்துச் சில இஞ்சினீயர்களாலஷி பொம்மி நாயுடுவுக்குக் கட்டப்பட்டதாகச் சொல்லலப்படுகிறது. 1500ஸுத்தில் இது விஜயநகர சமஸ்தான நரசிங்க தேவராயனு சுவாதீனத்திலிருந்ததாகத் தெரிகிறது. பிறகு 17-ம் நூற்றாண்டில் இது பீஜப்பூர் மஹம்மதியருக்குச் சுவாதீனமாகியிருந்து, பிறகு மஹாராஷ்டிர தலைவனாகிய துக்காஜிராவ் வசமாகியது. 17-ம்

நூற்றுண்டின் கடைசியில் மொஹல் சக்கரவர்த்தியின் தளகர்த்தனுன ஜல்பிகர்கான்வந்து சுமார் இரண்டு வருஷ காலம் முற்றுகை போட்ட பிறகு சிங்கோஜி என்பவன் 1,50,000 வராகன் கொடுத்து இதை விலைக்கு வாங்கினன்.

பிறகு 1708ஷ தாதாகான் என்னும் மொஹல் தலைவனும் கர்னடக நவாப்பும் மஹாராஷ்டிரரையோட்டி இதைப் பிடித்துக்கொள்ள, சடட் அல்லிகானுக்கு ஜாகீராக இந்தக் கோட்டையும் சுற்றுப் பக்கத்துக் கிராமங்களும் கொடுக்கப்பட்டன. அவருடைய ஃபரன் பலவருஷங்கள் இதை அனுபவித்துவர, 1763ஷ மொஹமெட் ஆலி பிர்ட்டானியா சேனைகளால் தாக்கப்பட்டாலும் 1779ஷ ஹைதராலி படையெடுத்து வந்து இதைத் தாக்கி, பத்து மைல்கள் தூரத்திலுள்ள கிராமங்களைப் பொசுக்கிவிட்டான். 1790ஷ இது ஆங்கிலேயர் வசமாகியது. கோட்டையின் வடகிழக்குப் பாகத்தில் கட்டப்பட்டிருக்கும் ஜலகண்டீஸ்வரர் என்னும் சிவாலயம் சிறந்த சிற்பவேலைகளால் பிரகாசிக்கிறது. அந்தக் கோயிலுக்குள் புகும் கோபுரவாயில் சமீபத்தில் பொம்மி நாயுடுவின் சிலை அதிக சிற்ப வேலைகளுடன் செதுக்கப்பட்டிருக்கின்றது. அங்கிருக்கும் கல் ஸ்தம்பங்கள் சிங்கம் முதலான மிருகச் சிலைகள் தாங்கிக்கொண்டிருப்பதாகச் செய்திருப்பதோடு, ஒரு சிங்கத்தின் வாயில் ஒரு குண்டுக் கல்லானது கைவிரல்களால் ஆட்டினல் உருளக் கூடியதாயும் விசித்திர வேலைப்பாடாயும் செய்யப்பட்டிருக்கிறது. இதே மாதிரியாக அடுத்திருக்கும் மண்டபங்களும் மதில்களும் சுவர்களும் சிற்பலங்காரமாகச் செய்யப்பட்டிருக்கின்றன. கோட்டைக் குள்ளிருக்கும் கிறிஸ்தவ கோயிலுக்குச் சமீபத்தில் திப்பு சுல்தானுடைய குடும்பத்தார் வசித்த மஹால்களும் கட்டிடங்களுமிருக்கின்றன. கோட்டைக்கு மேற்கே சுமார் ¾ மைல்தூரம் வரையில் திப்பு சுல்தான் சந்ததிகளின் சமாதிக ளிருக்கின்றன. வாழைப்பாடிக் கருகில் ஒரு புராதன கோயிலிருக்கிறது. இந்தக் கோட்டைக்குள் போலீஸ், ஸ்கூல் முதலானவைகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. வர்த்தக முதலான விஷயங்களிற் சிறந்த இந்த வேலூரில் சென்ற கானிஷ்வார் கணக்கின்படி 49,746 குடிகள் வசிக்கிறார்கள். இது சென்னையிலிருந்து தென்னிந்தியா ரெயில் மார்க்கத்தில் 192¾ மைல்கள் தூரத்திலிருக்கிறது. சுமார் ஏழு மைல் தூரத்தி லிருக்கும் காட்டுப்பாடியில்

விசேஷ ரெயில்வே ஜங்ஷன் ஸ்டேஷன் கட்டப்பட்டிருக்கிறது.

இங்கே சென்னை, அரக்கோணம், ஜோலார்பேட்டை, பெங்களூர், சேலம், ஈரோடு, கள்ளிக்கோட்டை முதலானவிடங்களுக்குப் போய்வருவோர் வண்டி மாற்றவேண்டும்.

---

## திருக்கோவலூர்.

(தேஹளீசன், ஆயனார், திருவிக்கிரமன், பூங்கோவிலாள், ஸ்ரீகரவிமானம், கர்ண தீர்த்தம்.)

கிழக்கு முகமாகநின்று மிருகண்ட ரிஷிக்கும், பலிச்சக்கரவர்த்திக்கும் பிரத்தியட்சம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார்: பேயாழ்வார், திருமங்கையாழ்வார்: மங்களாசாசனம்.

### இதன் தற்கால ஸ்திதி.

இந்தத் திருக்கோயிலூரானது தென் ஆற்காடு ஜில்லாவைச் சார்ந்த ஒரு யூனியன் பட்டணம் இந்த நகரமானது, பெண்ணையாற்றின் தென்கரையில் அழகிய ரோட்டுகளாலும், வீடுகளாலும், விசித்திர வேலைத்திறைமையுள்ள திரிவிக்ரம கோபாலரின் விஷ்ணு கோயிலினாலும் சிறந்து பிரகாசிக்கின்றது. பிரதிவருஷம் மார்கழிமாதத்திலும், சித்திரை வைகாசி மாதங்களிலும் விசேஷ உற்சவங்கள் நடத்தப்பட்டு வருவதால் ஏராளமான ஜனங்கள் வந்து தெரிசிக்கிறார்கள். பெண்ணாற்றின் கரைமீது ஓர் பெரிய விநாயகர் கோயிலிருக்கிறது. அடுத்தகீழூர் கிராமத்தில் ஒரு புராதன சிவாலயமும், நதிக்கரையில் ஒரு சிறு மலையின்மீது சீர்கெட்ட கோயிலுமிருக்கிறது. ஷை கீழூர் கிராமத்திலேயே எட்டு அடுக்குள்ள கோபுரத்தோடு ஒரு சிவாலயமிருக்கிறது. அக் கோயிலைச் சில வருஷங்களுக்குமுன் கவர்ன்மெண்டார் உப்புக்கிடங்காக உபயோகித்து வந்தார்கள். ரயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் அரிகண்ட நல்லூர் என்னுமிடத்தில் ஒரு சிவாலய மிருக்கிறது. அக்கோயிலின் சுவர்களில் அநேக சாசனக் குறிப்புகள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அதற்கடியில் மூன்று குகைகளிருப்பதன்றியில் மலையினடிவாரத்திற் ஒரு சிறிய வற்றாக் குளமுமிருக்கிறது. சென்ற கானிஷ்வார் கணக்கின்படி 8276 ஜனங்கள் வசிக்கின்றனர். இது சென்னையிலிருந்து தென்னிங்

இயா டியில்வே மூலமாக 118½ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவயிந்திரபுறம்.

(தெய்வநாயகர், வைகுந்தநாயகி, செங்கமலவல்லி, ஏமாம்புஜம், சந்திர விமானம், கருடநதி, சேவைதீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்று சந்திரனுக்கும், கருடனுக்கும் பிரத்தியட்சம். சிவபக்தியிற் சிறந்த சோமராசன் இந்த ஆலயத்தை யிடிக்கக் கருதிச் சென்றமை நோக்கிய திருமால் திரிநேத்திரமுங் காசூலமுங் கொண்டிருப்பதைத் தரிசனஞ் செய்த அவ்வரசன் பணிந்து வேண்டும்படித் தாமமைத்து மகிழ்ந்தனன். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## ஸ்ரீமுஷ்ணம்.

(பூவராகன், அம்புஜவல்லி, அஷ்டசுயம்புத் தலங்களிலொன்று, வாமன விமானம், நித்ய புட்கரணி.)

மேற்கு முகமாக நின்று அசுவத்த நாராயணனுக்குப் பிரத்தியட்சம். பிரம்மா முதலியோர் தொழுததற்காக அகலிகையின் பாமவிமோசனஞ் செய்த புராதன தலம்.

---

# ஸ்ரீ திருப்பதி வேங்கடேசர் மஹத்துவம்.

## பூர்வ ஸ்திதி.

ஸ்ரீ பரதகண்டத்திற்கு தக்ஷணபாகத்திற் சிறந்து பிரகாசிக்கும் சென்னையம் பதிக்கு வாயுதிக்கில் பன்னிரண்டு காத தூரமாகி, கிருதயுகத்தில் விருஷபகிரி யென்றும், திரேதாயுகத்தில் அஞ்சனாத்திரி யென்றும், துவாபரயுகத்தில் சேஷகிரி யென்றும், கலியுகத்தில் வேங்கடகிரி யென்றும், இந்தநாமங்களினால் பெயர்வழங்கி, தற்காலத்தில் சமஸ்த ஜனங்களாலும் சாதாரணமாக ஆந்திர திராவிட பாஷைகளில் திருப்பதி யென்றும் திருமலை யென்றுஞ் சொல்லப்பட்ட ஓர் பர்வதம். தென்வடலாக முப்பதுகாதநீளமும், கிழக்கு மேற்காக மூன்றுகாத அகலமும் பொருந்தி, ஆதியில் ஸ்ரீ அலர்மேல் மங்கையுடன் கூடி ஸ்ரீ வெங்கடேசுவர ஸ்வாமி வசித்திருக்குங்கோவிலினாலும், மத்தியில் லட்சுமி ஸமேதராக நரசிம்ம மூர்த்தி நிவஸித்திருக்கும் அஹோபில மென்னும் புண்ணிய க்ஷேத்திரத்தினாலும், அந்தியத்தில் பிரமராம்பிகா ஸஹிதராக மல்லிகார்ச்சுன

ஸ்வாமி பிரகாசித்திருக்கும் ஸ்ரீ சைலமென்னும் சிவக்ஷேத்திரத்திலும் அலங்கிருதமாகி வராஹ க்ஷேத்திரமென்று புராணப் பிரசித்தமாக வழங்கப்படுகின்றது.

### இதைக் கிருதயுகத்தில் விருஷபாத்திரி யென்பதற்குக் காரணம்.

கிருதயுகத்தில் விருஷபாசுரன் என்னு மிராக்ஷதன், ஸ்ரீ மஹா விஷ்ணுவினுடன் யுத்தஞ்செய்து அந்த யுத்தத்தில் ஸ்வாமியாற் கொல்லப்பட்டு பரமபத மடையலாமெனக்கருதி அந்தப் பர்வதத்தின் மத்திய பாகத்திலுள்ள அஹோபில க்ஷேத்திரத்திற்குச் சென்று, அவ்விடமிருக்கும் வராஹதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அத்தீர்த்தத்தில் நித்தியமும் ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியை ஆராதித்து, கட்கத்தினால் தன் சிரசைச் சேதித்தும், ஸ்வாமி பாதாரவிந்தத்தில் ஸமர்ப்பித்தும் நாட்டியமாடி ஸ்வாமிக்கு ஆனந்த முண்டாக்கி, மறுபடி தன் சிரசைத் தரித்துக்கொண்டும், இவ்விதமாக நித்தியமுந் தபோநிஷ்டனாகவிருக்கையில், அவன் சிரஸில் தபாக்கினி ஜ்வாலை உண்டாய் உலகங்களைத் தகித்துக்கொண்டு வந்ததினால் அப்போது ஸமஸ்த தேவர்களும் அந்த அக்கினி ஜ்வாலையைப் பொறுக்க மாட்டாமல் பிரம்மாவினிடஞ் சென்று அவருடன் அந்த இராக்ஷதன் விருத்தாந்தத்தைச் சொல்லுகையில், அவருக்கொன்றுந் தோன்றாமையால், அத்தேவர்களுடன் தாமும் ஸ்ரீமந்நாராயணரிடத்திற்குச் சென்று, அவரை நமஸ்கரித்துத் துதித்து, "சுவாமீ! பூலோகத்திலிருக்கும் வராஹ க்ஷேத்திரத்தில் விருஷபாசுரன் கோர தபம் புரிகின்றனன். அவன் தபம் நிறைவேறினால், சகல உலகங்களும் நசித்து விடுமாதலால், தாம் அவ்வசுரனைக் கொல்லவேண்டும்" என வேண்டிக்கொள்ள, பக்த இரக்ஷகரான பகவான் பிரம்மாவின் வேண்டுகோளுக் கிரங்கி, "ஓ பிரம்மாவே! நாமந்த இராக்கதனை உமது கோரிக்கையின்படியே சங்கரிக்கிறோம்" என மொழிந்து, அவரைச் சத்தியலோகத்திற் கனுப்பிவிட்டுத் தாம் அந்தர்த்தானமாய்விட்டனர்.

அநந்தரம் அஹோபில க்ஷேத்திரத்தில் நரஸிம்ம சுவாமியை ஆராதித்துக்கொண்டிருக்கிற அவ் வரக்கனுக்கு ஒருநாள் பிரசன்னராகி, "ஓ அரக்கனே! உன் கோரிக்கைகள் யாவை? கேளும் தருகிறோம்" என மொழிய, அவ்வரக்கன் கேட்டு, "சுவாமி! அடியேனுக்குத் தங்களனுக்

கிரகத்தால் சகல சம்பத்துகளு முண்டாயிருக்கின்றன. ஆனால் இப்போ தெனக்கு வேண்டிய வரமென்ன வெனில், "தாங்கள் என்னுடன் போர்செய்ய வேண்டியதேயாம்" என்று கூறியதைக் கேட்டு "அப்படியே செய்யக் கடவோம்" என வரமளித்து, அவ் வரக்கனுடன் போர்புரிந்திருக்கையில், அவன் தன் மாய்கையினால், அநேக இரதங்களையும், அசுவங்களையும், கஜங்களையு முண்டுபண்ணிக் கொண்டு, அந்தச் சேனைகளுடன வந்தனன். அப்போது சுவாமியும், அரக்கனுமாக அனேக காலம் யுத்தம் செய்து, கடைசியில் ஸ்வாமியானவர் விருஷபாசுரனை நோக்கி, "அடா அசுரனே! இனிமேல் நம்முடைய சுதர்சன மென்னும் சக்கரத்தால் உனது சிரசைக் கண்டித்து விடுகிறோம்" என்றுரைத்துக் கொண்டு கரத்தில் சக்கர மேந்துகையில், அவ்வரக்கன் கண்ணுற்று, எம்பெருமானைப் பலவாறு துதி செய்து, "ஸ்வாமி! பூர்வத்தில் ஹிரணியாக்ஷன், ஹிரணிய கசிபு முதலான அரக்கர்கள் தம்முடைய சக்கரத்தினால் சங்கரிக்கப்பட்டு முத்தி யடைந்தனர்க ளாதலால், யானு மப்படியே தமது சக்கரத்தால் மிருத்யுண்டு, பரமபத மடைகிறேன்" என மொழிந்து, மறுபடியும் "ஸ்வாமி! நான் இப் பர்வதத்தில் தவம்செய்து வந்தமையால் இதுமுதல் இப் பர்வதம் என் நாமதேயத்தால் பெயர் வழங்கப்பட வேண்டும்," என்று பிரார்த்திக்கையில், பகவானும் அப்படியே அனுக்கிரகஞ் செய்து அவ்வசுரனைச் சங்கரித்து பரமபதமடையச் செய்தனர். அன்றுமுதல் அப் பர்வதம் விருஷபாசலமென வழங்கப்படுகின்றது.

## இதைத் திரேதாயுகத்தில் அஞ்சனாசல மென்பதற்குக் காரணம்.

திரேதாயுகத்தில் கேசரி யென்னும் வானரசிரேஷ்டனுக்கு அஞ்சனாதேவி யென்னுமொரு பத்தினி யிருந்தனள். அவள் அநேக பர்வதங்களிலும், வனங்களிலும் தன் பதியுடன்கூடிக் கிரீடித்துக்கொண்டிருந்து ஒருநாள், தனக்குப் புத்திரனில்லாமற் போய்விட்டதேயென்த் துயரமேற்கொண்டு ரிசியமூகமென்னும் பர்வதத்திற்குச் சென்று, அவ்விடத்தில் தபமாசரித்துக்கொண்டிருந்த மதங்கமா முனிவரைக் கண்டு, அவருக்குத் தண்டன் சமர்ப்பித்து, தனக்குப் புத்திர உற்பவ மாகத்தக்க உபாயஞ் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்க, அம் முனிவர் ஒரு முகூர்த்த

காலந் தியானித்துப் பிற்பாடு அந்த ஸ்திரீயைப் பார்த்து, "ஓ பக்தி யுடையவளே! பூலோகத்தில் தென்திசையில் தென்கைலாச மென்னு மொரு சிவக்ஷேத்திரமுண்டு; அதற்கு மேற்கில், நாராயணகிரியென்னும் ஒருபர்வதம் பிரகாசித்துக்கொண் டிருக்கின்றது; நீ அவ்விடஞ் சென்று, அப்பர்வதத்திலிருக்கும் சுவாமி புஷ்கரணியென்னும் சரசுக்கு வடபாகமாக இரண்டு நாழிகைவழி தூரத்தில், பிரவாஹிக்கின்ற ஆகாசகங்கையில் ஸ்நானஞ்செய்தால், அப்புண்ணிய விசேஷத்தா லுனக்கு மிக்க பல பராக்கிரமம், பொருந்திய புத்திர னுண்டாவன்" என ஆக்ஞாபிக்க, அஞ்சனுதேவியும் அம் முனிவரது கட்டளைக்கிணங்கி, கடுகெனவே அப்பர்வதஞ் சென்று, அங்குள்ள ஆகாச கங்கையில் ஸ்நானஞ்செய்து, தன் பர்த்தாவான சேகரியினுடைய ஆஞ்ஞையைக் கைக்கொண்டவளாக அத்தீர்த்தத்தில், ஆகாரமில்லாமல் ஓராண்டளவும், ஸ்ரீ மஹா விஷ்ணுவின் பாதாரவிந்தங்களையே தியானித்துத் தவம் புரிகையில், வாயுபகவான் அப்பெண்ணைக் கண்ணுற்று, அவள் மீது கருணையுடையராய், பிரதிதினமும் ஒரு கனியைக் கொண்டுவந்து அவளுக்குக்கொடுத்துக்கொண்டு வந்தனர். அவள் அதை வாங்கிப் புசித்து வருகையில், ஒருநாள் வாயுவானவர் தாம் கொண்டு வருங் கனியில் தமது வீரியத்தைப் புகட்டி அப்பெண்ணுக்குக் கொடுக்க, அவள் அதை வாங்கி அறியாமல் புசித்து விட்டனள். அனந்தரம், அவ்வஞ்சனு தேவிக்குக் கர்ப்பந் தரிக்க, தவம் புரிகிற தனக்கெவ்வாறு கர்ப்பம் உற்பவமாயிற்றென ஆலோசித்துக்கொண்டிருக்கையில், "பெண்ணே! "நீயேன் விசனப்படுகிறாய்? உனக்குப் பகவதனுக்கிரஹமுண்டாகி உன் கோரிக்கை ஈடேறிவிட்டது" என்றொரு அசரீரிவாக்கு அவ்வஞ்சனு தேவிக்குக் கேட்க, அவள், ஆனந்த பரவச மடைந்தனள்.

பிறகு அவள், கர்ப்பத்தினுல் பிள்ளை பிறந்து அதிக பாலியத்தில் தானே, உதயமாகிக்கொண்டிருக்கிற சூரியனைப் பார்த்து, அந்தச் சூரிய பிம்பம் சிவப்பாகப் பிரகாசிக்கிறதினுல், அதை ஒருகனியென் றெண்ணி, அதைப் புசிப்பதற்காகச் சூரிய மண்டலத்தைக் கிட்டிச் செல்லுகையில், இந்திரன் கண்டு தன் வஜ்ராயுதத்தா லச்சிசுவின் கன்னத்தில் மோத, அப் பாலகன் அவ்வடி பொறுக்க மாட்டாமல் மூர்ச்சை யடைந்து பாரினில் வீழ்ந்தனன்.

இதை வாயுபகவான் கண்ணுற்று மிக்க சினங்கொண்டு, தான் சகல பிராணிகளுக்கு மாதார மாகையால் தன் தேஹத்தை அசைய வொட்டாமல் உறுதியாய்ப் பிடித்துக் கொண்டிருந்தனன். அப்போது இந்திரன் முதலான சமஸ்த தேவர்களும் வாயுவினருகிற் சென்று, அவரைப் பலவாறாகத் துதிசெய்து மூர்ச்சை யடைந்து கிடக்கும் அப்பாலியனைத் தேற்றி அநேக வரங்களுங் கொடுத்து, அஞ்சனா தேவியை அழைத்து, "நீ தபஞ்செய்து புத்திரனைப் பெற்ற அப் பர்வத மிது முதலாக உன் நாமதேயத்தால் பெயர் வழங்கக்கடவது" என வரமளித்துவிட்டு அவரவர்கள் தங்கடங்கள் உலகங்களுக் கெழுந்தருளி விட்டனர். ஆகையால், அன்று முதலாக அப்பர்வதம் அஞ்சனாசலமென வழங்கப்படுகிறது.

## இதைத் துவாபர யுகத்தில் சேஷாத்திரி யென்பதற்குக் காரணம்.

துவாபர யுகத்தில் ஸ்ரீ லக்ஷ்மிநாரயணர்களிருவரும் ஏகாந்தமாக இருக்க வெண்ணி ஆதிசேஷனை அழைத்து "ஓய் சேஷா! நீ துவாரத்தில் நின்று எவர்களையும் உள்ளே வாவிடாமல் பார்த்துக்கொள்ளும்" என ஆக்ஞாபித்தனர். அப்போது சேஷன் பகவதாக்ஞாபரவசனாகித் துவாரத்திலொருவரையும் வரவொட்டாமல் தடுத்து நிற்கையில், வாயுபகவான் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைச் சேவிக்கும் பொருட்டு வைகுண்டத்திற்கு வந்து, சுவாமி வீற்றிருக்கும் பள்ளியறைக்குட் பிரவேசிக்க வருகையில் ஆதிசேஷன் அவரைப் போகவொட்டாமல் தடைசெய்தனன். அப்போது வாயு சினங்கொண்டு, "ஓ துராத்மாவே! முன்னால் ஜயன், விஜயன் என்பவர்களும் உன்னைப்போலவே துவாரபாலகர்களாக விருந்து பகவானுக்கு அந்தரங்க பக்தர்களான சனகர்களைத் தடைசெய்து, அவர்கள் சாபவிசேஷத்தால் பூமியில் அரக்கர்களாய் ஜனித்தார்கள். அதுபோலுனக்கும் அவ்வித சாபங் கிடைக்கப் பிராப்தி காலம் வாய்த்ததோ" என, சேஷன் கோபமடைந்து, "ஓ வாயுவே! நான் எப்போதும் பகவான் ஸ்ரீபாத சேவையைச் செய்துகொண்டு அந்தரங்கத்தில் காத்துக்கொண் டிருப்பவனாதலின், இப்போது எம்பெருமான் நித்திரையி லிருப்பதால் நீ அந்தப்புரஞ் செல்லுவது தக்கதன்று; அதன் பொருட் டென்னை இழிவு படுத்திச் சொல்லுவது யாது காரணம்?" என வினவ,

வாயுபகவான் கேட்டு, "ஓ சேஷா! உலகத்தில் யானை அரசர் மாளிகைகளில் வசித்துவரினும், யானை வெளியிற் கட்டப்பட்டு வரினும், அரசர்கள் வெளியிற் பவனிவருங் காலத்தில் திருமாளிகைகளில் இருக்கும் யானையைத் தேடி வெளியில் துரத்திவிட்டு, யானையை அலங்கரித்து எதிரிற் கொண்டுவந்து நிறுத்துவார்கள். அதுபோல நீ நிரந்தரம் அந்தரங்கத்தில் வசித்துக்கொண் டிருப்பவனாயினும், எனக்குச் சமானமாவாயோ" எனத் தூஷணைசெய்து உறத்துச் சொல்லுகையில், அவ் வார்த்தைகளை மஹாலக்ஷ்மி கேட்டு பகவானுக் கறிவிக்க, அப்பொழுது எம்பெருமான் தமது அந்தப்புரத்தைவிட்டுத் துவாரத்தினருகிற் சென்று சேஷனைப் பார்த்து, "இஃதென்ன கலகம் விளைகின்றன?" என மொழிகையில், அப்போது சேஷன் அஞ்சலியஸ்தனாய், "சுவாமி! வாயுபகவான் அந்தப்புரத்தில் பிரவேசிக்க வந்து என்னால் மறுக்கப்பட்டவனாகி என்னை நிந்திக்கிறான்; இதுதான் கலகம்" எனச் சொல்லுகையில், எம்பெருமான் வாயுவைக்கடாட்சித்து, "ஓய் சாந்தமும் பலபராக்கிரமும், பொருந்தி சம்பூஜ்யனாக இருக்கும் உமக்கு மிக்கவஹங்காரமுடைய ஆதிசேஷனுடன் போர்செய்ய என்ன காரணம் நேரிட்டது?" எனக் கேட்டருள, அவ் வாக்கியத்தைச் சேஷன் கேட்டவனாகி எம்பெருமானை நோக்கி, "சுவாமி! உலகத்தில் அடியேனைவிட பராக்கிரமத்தில் மிகுந்தவர்களொருவரு மில்லையே; அப்படிப்பட்ட அடியேனைவிட்டு, அற்ப பலமுடைய வாயுவைத் துதிக்கின்றதென்ன காரணம்? அதை அடியேனுக்குச் சொல்லவேண்டும்" எனப் பிரார்த்திக்க, சுவாமி கண்டு, அவன் கர்வத்தை யடக்க வெண்ணி, "ஓய் சேஷா! வார்த்தைகளினால் பலாபலந் தெரிய மாட்டாது; உங்களிருவருடைய பல துர்ப்பலங்கள் தெரியவேண்டு மென்றால், நாமொரு உபாயஞ் சொல்லுகிறோம், அஃதென்னவெனில், ஜம்புத்வீபத்தில் நிளாவிர்த வருஷத்தில் மேருவின் புத்திரனாகிய விருஷபகிரி யென்றொரு பர்வதமுண்டு; நீ அவ்விடஞ் சென்று அப் பர்வதத்தை உன் தேகத்தால் கயிறுபோல் சுற்றிக் கொள்ளுவாயானால், உன்னை வாயுதூரத்தில் விசிறி யெறிந்துவிட்டால், அவன் உன்னிலும் பலமுடையவனென்றும், அப்படி வீச அசமர்த்தனாகிவிட்டால், வாயுவைப் பார்க்கிலும் நீ பலமுடையவனென்னும் தெரிய வரலாம்" என ஆக்ஞாபிக்க, சேஷன் கேட்டு, அப் பர்வதத்திற்குச் சென்று, தன் தேக

த்தினுல் அதைச் சுற்றிக்கொண் டிருந்தனன். அப்போது வாயுவும் அவ்விடத்திற்கேகி அப் பர்வதத்தைக் கண்ணுற்றுத் தன் கால் கட்டை விரலாற் கிளப்ப, அது எழும்பி வாயுவேகமாகத் தென் தேசத்தில் பிரவாஹித்துக்கொண்டிருக்கின்ற சுவர்னமுகரி யென்னும் நதிக்கு வடபுரத்திலிரண்டு நாழிகை வழிதூரத்தில் வீழ்ந்தது. அப்போது வாயு மறுபடியும் அப் பர்வதத்தை வீச எத்தனப்படுகையில், மேருவானது, வாயுவினிடஞ் சென்று, அவரைப் பார்த்து, "சுவாமி! உமக்கு ஆதிசேஷன் அபராதியேயல்லது, எனது புத்திரனுகிய விருஷபாத்திரி அபராதியல்லவே; ஆதலால் எனது புத்திரனை இம்சிக்காம லிருக்க வேண்டும்" என்று பல விதங்களாகப் பிரார்த்திக்கையில், அந்த வாயுபகவான் தயாஹிருதையனுய் அப் பர்வதத்தை அந்த இடத்தில்தானே நிறுத்திவிட்டனர். பிறகு ஆதிசேஷன் கர்வபங்க மடைந்து வாயுவை நமஸ்கரித்து. தான் வாயுவினுல் வீசப்பட்டதினுல் தேகமெல்லாம் நடுங்கி, மறுபடி வைகுண்டத்திற்குச் செல்ல லஜ்ஜை யுடையவனுய் பகவதனுக்கிரகம் பெற்று அப் பர்வதத்தில்தானே அந்தர்த்தான மாகிவிட்டனன். அன்றுமுதல் அப் பர்வதத்திற்கு சேஷாத்திரி என்னும் பெயர் வழங்கப்படுகின்றது.

## இது கலியுகத்தில் வேங்கடாசல மென்னப்படுவதற்குக் காரணம்.

கலியுகத்தில் அப்பர்வதத்தின்மீது ஜகத் இரக்ஷகரான ஸ்ரீமந்நாரயணமூர்த்தி ஸ்ரீ லக்ஷ்மி சமேதராக நிவஸித்துக்கொண்டு ஸமஸ்த ஜனங்களுக்கும் மோக்ஷங்கொடுத்து வருவதினுல் அப்படிப்பட்ட ஜகத்ரக்ஷகரான பரமாத்மாவுக்கு வாஸஸ்தானமாகி, தம்மைத் தரிசித்த மாத்திரத்தில் அவரவர்களுடைய பாபங்களைத் தஹித்து வருவதினுல் ஸம்ஸ்கிருதத்தில் வெம் என்ருல் பாபம், கடம் என்ருல் தகித்தல், இவ் வர்த்தங்களால் பாவம் போக்கும் இடமாகிய வெங்கடாத்திரி யென்னும் பெயர் பெற்றிருக்கின்றது.

## இது வராஹ க்ஷேத்திர மெனப்படுவதற்குக் காரணம்.

பூர்வகாலத்தில் திதிதேவியின் புத்திரனுன இரணியாக்ஷன் என்னும் அரக்கன் இப் பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு பாதாள லோகத்திற்குப் போய்விடவே, ஸமஸ்த

தேவர்களும் அதிக பயப்பிராந்தர்களாகி க்ஷீராப்தி சயனராக வீற்றிருக்கும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைப் பலவாராக ஸ்தோத்திரஞ்செய்து அவ் வசுரனுடைய விருத்தாந்தத்தைத் தெரிவிக்க, பரந்தாமன் அன்பு கூர்ந்து, "அமரர்களே! நீங்கள் எதுக்கும் அஞ்ச வேண்டுவதில்லை; நாம் வராஹாவதாரஞ் செய்து, அவ் வசுரனைச் சங்கரித்து விடுவோம். நீங்கள், சுவர்க்கத்துக்குச் செல்லுங்கள்" என ஆக்ஞாபித்து, பிறகு வராஹாவதாரம் பூண்டு பாதாள லோகஞ் சென்றும், அவ்விடத்தில் மறைந்துகொண்டிருக்கிற இரணியாக்ஷனைச் சங்கரித்து யமபுரத்துக் கனுப்பிவிட்டும், இப் பூமியைக் கொணர்ந்து எப்போதும்போல நிலைநிறுத்தியதனால் சமஸ்த தேவர்களும் பகவானைத் தோத்திரஞ்செய்து "இப் பூலோகத்தில்தானே சுவாமிகள் நிவாசமாகி இருந்துகொண்டு சமஸ்த மானவர்களுக்கும் சேவை கொடுத்து இரக்ஷித்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்க, எம்பெருமான் திருவுளமகிழ்ந்து கருத்மானை அழைத்து, வைகுண்டம் சென்று அவ்விடத்திலிருக்கும் ஆனந்த விமானத்தைக் கொண்டுவரும்படியாகக் கட்டளையிட, அவரும் சுவாமியின் ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு வைகுண்டஞ் சென்று ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர் வீற்றிருக்கும் விமானத்தைக் கொணர்ந்து, இவ்விடத்தில் பிரவாஹித்துக் கொண்டிருக்கும் சுவர்னமுகரீ நதிக்கு வடகரையிலிருக்கும் சேஷாத்திரியின்பேரில் நிறுத்த அப் பரந்தாமன் ஆநந்தமடைந்து, சாந்த ரூபராய், கருட - விஷ்வக்ஸேன - சேஷாதி சகல பக்தர்களுடனும், ஸ்ரீதேவி பூதேவிகளுடனும், விமான மத்தியில் எழுந்தருளி ஸமஸ்த தேவர்களினாலும் பூஜிக்கப்பட்டவராய் அவரவர்கள் அபீஷ்டங்களின்படி, ஸ்வர்க்கலோகத்திற் கனுப்பிவிட்டு, தாம் பக்தபராதீனராகையினாலே கலியுகததில் ஸமஸ்த மானவ ஜாதியார்களுக்கும், தம்மைச் சேவித்து வருவதனால், மோக்ஷங் கொடுத்துக்கொண்டு அப் பர்வதத்தில் வீற்றிரும்பவராதலால் அது வராஹக்ஷேத்திர மெனப்படுகிறது.

## அவ்விடத்தில் சுவாமி வீற்றிருப்பதற்குக் காரணம்.

பூர்வம் நைமிசாரணியத்தில் சௌனகாதி மஹாமுனிவர்கள் யாகஞ் செய்துகொண்டிருக்கையில் அவ்விடத்திற்குப் பிரஹ்மாவின் புத்திரரான நாரதர் எழுந்தருளி அவர்களைக் கண்டு, "ஓ சௌனகாதி முனிவர்களே! உலகத்

தில் பிரம்ம விஷ்ணு மஹேசுரர், ஆகிய இவர்கள் சிருஷ்டி ஸ்திதி லய காரியங்களுக்குக் கர்த்தர்கள்; அவர்களில் யாரைக்குறித்து நீங்கள் யாகஞ்செய்கிறீர்கள்?'' என வினவ, அம்முனிவர்கள் கேட்டு, "ஓய் நாரதரே! இம்மூவர்களில் சத்துவகுணப் பிரதானமுடையவரெவரோ அந்தப் பரந்தாமனைக்குறித்து யாகஞ் செய்கின்றோம்'' என, அம்முனிவர் "அந்தப் பகவான் யாவர்?'' என வினவ, அப்போது அம் முனிவர்கள் தங்களுக்குத் தெரியாமல் பிருகு மஹரிஷியை அழைத்து, "ஓய் ருஷீஸ்வரரே! நீர் பிரம்மலோகம், கைலாசம், வைகுந்தம் ஆகிய இம்மூன்று லோகங்கட்குச் சென்று அம்மூர்த்திகளையுங் கண்டு, அவர்களில் சத்துவகுணப் பிரதானமுடையவரெவரோ, அவரை எங்களுக் கறிவியும்'' என வேண்டிக்கொள்ள, பிருகுரிஷி கேட்டு, முதலில் கைலாசத்துக்குச் சென்றனர். அவ்விடத்தில் சிவபெருமான் பார்வதிதேவியாருடன் கிரீடித்துக்கொண்டிருந்தபடியால், அந்தச் சமயத்தில் பிறகு முனி வந்தாரெனக் கோபத்துடன் கண்களை வெருட்டிப்பார்க்கையில் அத்துடன் அம்முனிவர் இவர் தாமஸகுணப்பிரதானரெனவறிந்து, அக்கைலாசத்தை விட்டுச் சத்தியலோகத்திற்குச் செல்ல, அப்போ தவ்விடத்தில் பிரம்மதேவன் சரஸ்வதியுடன் கிரீடித்துக்கொண்டிருந்தனர்; அச்சமயத்தில் பிருகு மஹாமுனிவர், அப்பள்ளியறையிற் சென்று அவருக்குச் சாஷ்டாங்க தண்டன் சமர்ப்பித்து நிற்கையில், அவரைப் பார்த்து பிர்ம்மாவானவர் வசனியாமல் மௌனஞ் சாதித்தருளினர். அப்பொழுது அம் முனிவர் இவர் ரஜோகுண பிரதானரெனவறிந்து, அந்த லோகத்தைவிட்டு வைகுண்டத்திற்குச் செல்லுகையில், ஸ்ரீமந்நாராயணமூர்த்தி லக்ஷ்மி சமேதராய்ச் சயனித்திருக்க, அவரைப்பார்த்து அம்முனிவர் தன் பாதத்தினல் சுவாமியின் மார்பினில் உதைத்தனர். அப்பொழுது பகவான் சினமுறாமல் அம் முனிவரை அழைத்து, குசலம் விசாரித்து, சந்தோஷகரமாய் அவரைப் பூசித்தருளினர். அப்பொழுது அம் முனிவர் இவர்தான் சத்துவகுணப் பிரதானரென அறிந்துகொண்டு, மறுபடியும் நைமிசாரண்ணியத்திற்கு வந்து சௌனகாதி முனி சிரேஷ்டர்களுடன் வைகுந்தவாசரான பரந்தாமன் சத்துவகுணமுடையவரெனச் சொல்லினர். பிறகு லக்ஷ்மிதேவி பரந்தாமனுடன், "சுவாமி! தாம் சகல ஜகத்துக்கும் இரக்ஷகராகவிருந்தும், பிருகு முனிவரா லுதை யுண்டதினல் இனி நான் இவ்வுல

கம்விட்டுப் பூலோகத்திற்குச் செல்லுகிறேன்," என விளம்ப, அப்பெருமான் அனுமதிபெற்று, பூலோகத்திற்குச் சென்று, கோதாவரி நதிதீரத்தில் பிரகாசிக்கின்ற கொல்லாபுரத்தில் வீற்றிருந்தனர்.

## வேங்கடாசலபதி வன்மீகத்தில் உற்பவித்தல்.

அனந்தரம், இருபத்தெட்டாவது துவாபரயுகத்தில் ஸ்ரீலக்ஷ்மி நாராயணன் லக்ஷ்மி தேவியின் பிறிவைப் பொறுக்க மாட்டாமல் வைகுண்டத்தை விட்டுப் பூலோகத்திற் கெழுந்தருளி அவ்விடத்தில் ஸ்ரீலக்ஷ்மியைத் தேடிக் கொண்டு கங்காநதிக்குத் தெற்கில் இருநூறு யோசனை தூரத்தில் பிரவாஹிக்கின்ற சுவர்னமுகரி என்னும் நதிக்கு வடக்கே இரண்டுநாழிகை வழிதூரத்தில் முன்னால் வைகுண்டத்தில் ஆதிசேஷனும் வாயுவும் போர்செய்து ஆதிசேஷனால் பூலோகத்துக்குக் கொண்டுவந்த சேஷாசலத்தைக் கடாட்சித்து, இஃது தாம் நிவசிக்க வைகுந்தத்தைவிட ஆனந்தகரமா யிருக்கிற தென்றெண்ணி அவ்விடத்தில் தானே துவாபாரயுகாந்தம் வரையில் ஓர் புற்றினிலொருவருக்கும் தெரியாமல் வீற்றிருந்தனர். பிறகு கலியுக ஆரம்பத்தில் சோழ இராஜன் புத்திரனான தொண்டமான் சக்கரவர்த்தி என்னும் அரசன் நியாயமார்க்கந் தவறாமல் இராஜ்ய பரிபாலனஞ் செய்து கொண்டிருந்தனன். அப்போது ஸ்ரீமஹாலக்ஷ்மி எவர்களுக்கும் தெரியாமல் புற்றினில் வீற்றிருக்கும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை ஸகல பிரஜைகளுக்குந் தெரிவிக்கவெண்ணி, பரமனை ஓர் பசுவாகவும், பிரமனைக் கன்றாகவுஞ் செய்து, தாம் கோபிகையாக வேஷம் பூண்டு அந்தப் பசுவை ஓட்டிக்கொண்டு வந்து இராஜ்ஜிய பரிபாலகனான தொண்டமான் சக்கரவர்த்திக்கு விக்கிரயித்துத் தாம் அந்தர்த்தானமாய் விட்டாள்.

பிறகு பசுவானது மேச்சலின் பொருட்டு நித்தியமும் சேஷாத்திரிக்குப் போய், அவ்விடத்தில் பரந்தாமன் மறைந்து நிற்கும் புற்றினில், தனது பாலை அபிஷேகஞ் செய்து வீட்டிற்கு வந்துகொண்டிருக்கும். இப்படி யிருக்கையில் ஒருநாள், அவ்வரசன் பத்தினி பசுவை மேய்ப்போனை அழைப்பித்து, "யாம் கொண்ட பசு நித்தியமும் பாலில்லாமல் வரண்டு இருக்கக் காரணம் யாது? அப்பாலை எவர்கள் குடித்து வருகிறார்கள்?" எனத் தடிகொண் டடிக்க அவ் விடையன் துக்கித்து, மறுநாள்

உதயத்தில் அப் பசுவின் கழுத்தி லொரு கயிறு கட்டி அப் பசுவைக் கெட்டியாகக் கையினிற் பற்றிக்கொண்டு அப் பர்வதத்திற்குச் சென்றனன். அப்போது, பசுவானது நித்தியமும் தான் அபிஷேகம் செய்கிறவிதமாக அப்புற்றினில் தன் பாலைச் சொரிந்தது. அதைக்கண்ட அவ் விடையன், மிக்க கோபம் அடைந்து, தன் கையிலிருக்கும் கோடாரியால் அப்பசுவை அடிக்கப்போகையில் அந்தப் பகவான், பாகவதர்கள் பக்தியுடன் துளசிதளங்கொண்டு பூஜிக்கப் படுவதினாலேயே அவர்களின் விபத்தை நிவாரணஞ் செய்யுஞ் சுபாவகுண முடையவராதலின், நித்தியமும் தமக்குப் பக்தியுடனே க்ஷீராபிஷேகஞ் செய்து வருகிற அப்பசுவை இரக்ஷிக்க வெண்ணி அவ்விடையனுடைய கைக் கோடாலியின் அடியைத் தாம் ஏந்திக்கொண்டு அப் பசுவை இரக்ஷித்தருள, பரந்தாமனது சிரசினிலிருந்து இரத்தப் பிரவாகம் வெளிப்பட, அது கண்டு அவ்விடையன் பரலோகப்பிராப்தி அடைந்தனன்.

பிறகு அப் பசுவானது பர்வதம்விட்டு இறங்கி அரசனிடம் சென்று தரையில் வீழ்ந்து புரளுகையில் அவ் வரசன் கண்டு, "இஃதென்ன அதிசயம்?" என்றெண்ணி, அப் பசுவினிடமாக ஒரு தூதனை அனுப்ப, மறுபடியும் பசுவானது அத் தூதனுடன் மலைக்குச் சென்று அவ் விடத்தில் மாண்டு கிடக்கும் கோபாலனிடம் நின்றது. அப்போது தூதன், அக் கோபாலனையும் புற்றினிடமாக உற்பத்தியாயிருக்கும் இரக்த பிரவாகத்தையும் கண்டு ஆச்சரியமடைந்து, சீக்கிரமாக அரசனிடத்திற் கேகி, அவருடன் இவ் விருத்தாந்தங்களைத் தெரிவிக்க, அரசனும் சீக்கிரமாக எழுந்திருந்து அவ்விடஞ் சென்று, அந்த இரத்த வெள்ளத்தைக் கண்டு மிக்க பயமடைந்திருக்கையில், பரந்தாமன் புற்றை விட்டு அவ்வரசனுக்கு முன் தோன்றி, "ஓ துராத்துமாவே! நீ பிரபுத்துவம் செய்து வருகையில் என்னை அநியாயமாய் இடையனைக் கொண்டு அடிப்பித்தாயாகையால் நீ எப்போதும் சிந்தாக் கிராந்தனாகி இருக்கக் கடவாய்" எனச் சாபமளித்தனர். அப்போது, அரசன் பலவாறாகச் சுவாமியைத் துதித்து, "சுவாமி! நிரபராதியாகிய அடியேனுக்குத் தாம் முன்னும் பின்னும் விசாரியாமல் இப்படிக்குச் சாபம் அளிக்கலாமோ" என வேண்டிக் கொள்ள, அக்கடவுள் மனமிரங்கி, "நாம் உனது மனதை

அறியாமல் சாபம் அளித்துவிட்டோம்; ஆயினும், உனக்கு ஆகாசராஜனென்று பிரசித்தமுடைய ஒரு புத்திர னுண்டாகி அவனுக்குப் பத்மாவதியென்னும் ஒரு பெண் பிறந்து அக் கன்னிகையை உனது புத்திரன் நமக்குத் தந்து விவாஹம் செய்யப்போகின்றனன்; ஆகையால், அக்காலத்தில் உனது விசனம் தீரும்" என அனுக்கிரகித்துவிட்டு, தமது சிரசிலுண்டான காயத்திற்கு ஔஷதம் செய்ய அவ்விடத்திற்குப் பிரகஸ்பதியை வரவழைத்து, அவர் வாக்கின்படி அற்றிபாலைக் கொண்டு எருக்கம் பஞ்சை நனைத்து தமது காயத்தின்மீது வெய்தும், அனந்தரம் அவ்விடத்தில் ஸ்வாமி புஷ்கரணி தீரத்திலிருக்கும் புளியமரத்தினடியிற் புற்றில் பிரவேசித்துச் சிலகாலஞ் சென்றபின் வராகமூர்த்தியின் அனுமதியால் இப்போதுங் கூட தமது பக்தர்களுக்கு ஸர்வாபீஷ்டமும் கொடுத்துக்கொண்டும், தம்மைச் சேவிப்போரது பாவங்களை ஹரித்துக்கொண்டும் வெங்கடாஜலபதி யென்னும் நாமதேயத்தோடும் பிரசித்தி யடைந்திருக்கின்றனர்.

## பத்மாவதி விவாஹம்.

இவ்விதம் சில காலம் சென்ற பிறகு சோழ ராஜனுக்கு ஆகாசராஜனென்றொரு பிள்ளை பிறந்து, அவன் தரணிதேவி என்னு மொரு பெண்ணை மணம் புரிந்து அம்மனைவியினுடன் பலநாள் இன்பமனுபவித்துவந்தும் சந்தான மில்லாமல் மிக்க விசனமடைந்து, தனது குருவாக்கின்படி யாகஞ் செய்ய எத்தனித்து, அந்த யாகசாலையை உழுகையில், அக் கலப்படை உழவுசாலி லிருந்து ஒரு சுவர்னபுஷ்பமும் அதனிடமாக ஒரு பெண்குழந்தையையும் காணப்பட்டன. அப்போது; அரசன் கண்டு அக்குழந்தையைத் தன் பத்தினியிடம் கொடுத்துப் போஷித்துவரும்படி கட்டளையிட்டு யாகஞ் செய்கையில், அவ்வரசன் பத்தினி கர்ப்பந் தரித்து ஒரு புத்திரனைப் பெற்றனள். அப்போது அரசன் அப்புதல்வனுக்கு வசுதாசனெனவும், சுவர்ன புஷ்பத்திலுதித்த சிசுவுக்கு பத்மாவதி எனவும் பெயர் வைத்து போஷித்து வருகையில், பத்மாவதி பருவமுடையவளாய், ஒரு நாள் தன் தோழிமார்களுடன் புஷ்பவனத்தில் மலர் கொய்து கொண் டிருந்தனள். அச்சமயத்தில் ஸ்ரீமந் நாரயண மூர்த்தியானவர் வேட்டையாட வெண்ணி நிற்கையில், எதிரிலொரு அசுவங் காணப்பட்டது. அதன்மேரி லேறிக்

கொண்டு அவ் வாரண்ணியத்தில் வேட்டையாடி அப் பர்வதத்தை விட்டு நீங்கிச் சிறிது தூரம் செல்லுகையில் அவ்விடத்திலொரு யானை அப் பரந்தாமனைக் கண்டு "சுவாமி அடியேனைப் பாதுகாக்க வேண்டும்" என்று கூறிற்று. அப்போது அவ்விடத்தில் தோழிகளுடன் மலர் கொய்துகொண்டிருக்கும் பத்மாவதி, எம்பெருமானுக்குக் காணப்பட்டனள். உடனே எம்பெருமான், சரணடைந்த யானையைக் காத்தருளி, குதிரையினின் றிறங்கிப் பத்மாவதியினிடம் செல்லுகையில், அவளும் அவள் தோழிமார்களும் கண்டு, "இவர் யார்? இங்கு ஏன் வந்தார்?" எனப் பலவாறாகச் சம்சயித்துப் பத்மாவதியும் தன் தோழிகளுடன் அந்த எம்பெருமானுடைய வரலாற்றைக் கண்டு தெரிந்துகொள்ளும்படி கட்டளையிட, தோழிகள் அவரிடம் சென்று, அவருக்குத் தண்டன் சமர்ப்பித்து, "சுவாமி! தாம் யாருடைய குமாரர்? தமது பெயரென்ன? இங்கு எழுந்தருளின காரணம் யாது? இவ்விவரங்களை அடியேங்களுக்குக் கூறியருள வேண்டும்" என வினவ, எம்பெருமான் அதிக சந்தோஷமடைந்து, அத் தோழிமார்களுடன், தமது குலம் சந்திரவம்ச பரம்பரை என்றும், க்ஷத்திரிய குலம் என்றும், வாசுதேவன் தனக்குத் தகப்பன் என்றும், தேவகிதேவி தாய் என்றும், தனது பெயர் கிருஷ்ணனென்றும், தமையன் பெயர் பலபத்திரன் என்றும், தமது வாஸஸ்தலம் வெங்கடாத்திரி என்றும், விருத்தாந்தத்தினுட னறிவித்து, இவ்விடமிருக்கும் அரசன் மகளினது விருத்தாந்தங்களைத் தமக்கறிவிக்கும்படி கேட்க, பத்மாவதி கேட்டு, அதிக சினங்கொண்டு, "எனது தகப்பன் பெயர் ஆகாச ராஜன்; யான் அவருடைய மகள்; என் பெயர் பத்மாவதி" என அதட்டிச் சொல்லுகையில், பரந்தாமன் கேட்டு, "ஓ பெண்ணே! உலகத்தில் அன்னத்தை அபேக்ஷித்த மானிடருக்கு அன்னங் கொடுத்தவரே உத்தமர்" எனச் சொல்லிக்கொண்டு, "இப்போது யாம் உன பேரில் விருப்பங்கொண்டு இவ்விடம் வந்தோம்; நம்மிடத்தில் தயையுள்ளவளாய் நம்மை ஆலிங்கனஞ் செய்துகொள்" என மொழிய, அப்பெண் கேட்டு, "ஓய்! நீர் உலகத்தில் சொல்லா வசனங்களைச் சொல்லுகிறீர்; எனது தகப்பனாராகிய ஆகாசராஜன் கேட்டால் உமது பிராணனைப் போக்கடிப்பார்" என, பரந்தாமன், அவ்வாக்கியங்களைச் செவியிற் கொள்ளாமல் குதிரையைவிட்டிறங்கிப் பத்மாவதியினருகில்

எழுந்தருள, அவள் தன் தோழிமார்களுடன் பரந்தாமனைக் கற்களால் அடிக்க, எம்பெருமான் அவ்வடி பொறுக்கமாட்டாமல் திரும்பி வேங்கடாத்திரிக்கு எழுந்தருளி, சிந்தாக் கிராந்தராகித் துயரமடைந்திருக்கையில், எம்பெருமானுக்கு அந்தரங்க பக்தியுள்ள வகுளமாளிகை யென்பவள் ஸ்வாமியால் ஆரணியத்தில் நடந்த வரலாற்றைச் செவியுற்றவளாய்க்கொண்டு ஆகாசராஜனது நகரஞ்சென்று, அவன் பத்தினியாகிய தரணிதேவியுடன், "ஸ்ரீமந் நாராயணமூர்த்தி வேங்கடாஜலத்தில் வீற்றிருந்துகொண்டு, உனது மகள் பத்மாவதியைக் கண்டு மோஹமடைந்து, அந்தப் பெண்ணை மணம் புரிய வேண்டிய பிரயத்தனங்கள் நடப்பிவிக்கும் பொருட்டு என்னை உம்மிட மனுப்பினர்" என மொழிந்து, அவளைச் சம்மதிப்படுத்தி, அவ்வரசன் புத்திரனை வசுதாசனை ஸ்வாமியினிட மழைத்துக் கொண்டுவந்து, திருக்கலியாண முகூர்த்தம் நிச்சயித்து, அந்த மஹோத்ஸவத்திற்காக வீற்றிருக்கும்படி பிரம்ம ருத்திராதியர்களுக்குச் சமாசார மனுப்பியதில், பிரமன் மிக்க ஆனந்தமடைந்து, இந்திரன் முதலாக ஸகல தேவர்களுடனும் தன் பத்தினியாகிய ஸரஸ்வதியுடனும் ஸத்தியலோகம்விட்டு ஹம்சவாஹன ரூடராய் அப் பர்வதத்திற் கெழுந்தருளினர்கள். அப்போது ஈஸ்வரரும் பார்வதி சமேதராகக் குமார வர்க்கங்களுடன் அவ்விடத்திற் கெழுந்தருள, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் தமது திருமணத்திற்காக 'நெடுநாளாகத் தம்மைப் பிரிந்திருக்கிற ஸ்ரீ மஹா லக்ஷ்மியை அவ்விடம் வரவழைக்க நினைத்துத் தமது மனோபீஷ்டத்தைப் பிரம்மாவுக் கறிவிக்கையில், அவர் குமாரசுவாமியை வரவழைத்து, "உலக மாதாவாகிய ஸ்ரீ லக்ஷ்மிதேவி கொல்லாபுரத்தில் வீற்றிருக்கிறு ராகையால், நீர் அவ்விடத்திற்கேகி, இங்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரவேண்டியது" எனக் கட்டளையிடுகையில், குமாரஸ்வாமி கேட்டு, "அவ்விடத்திலிருக்கும் ஸ்ரீ லக்ஷ்மிதேவியை யான் எவ்விதம் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருவேன்?" என மொழிகையில், பிரமன் அவருக்குச் சில உபாயங்கள் சொல்ல, அதைக் கேட்டு குமாரஸ்வாமியானவர் கொல்லாபுரஞ் சென்று, அங்கெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ லக்ஷ்மிதேவியை நமஸ்கரித்துத் தேவியாருடன் பத்மாவதி திருக்கலியாண மஹோத்ஸவத்தைச் சொல்லாமலே, அதிசீக்கிரத்தில் அவரை அப் பர்வதத்திற் கெழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்தனர். அப்போது

வெங்கடாசலபதி பஹுகாலமாய்த் தம்மைப் பிரிந்திருந்த ஸ்ரீலக்ஷ்மியைக்கடாக்ஷித்து ஆனந்தபரவசமடைந்து பிரம்ம ருத்திராதிகள் முதலான ஸமஸ்த தேவர்களுடனே அவ்விடத்தில் பிராம்மணர்களுக்கு பக்ஷிய போஜ்ய சோஷ்ய லேஹியங்களுடன் அமுதளிப்பித்து, அப் பர்வதத்தை விட்டு ஆகாசராஜன் நகரத்துக் கெழுந்தருளி, பத்மாவதியை மணம்புரிந்து மறுபடியும் அப்பர்வதத்திற்குவந்து அவ்விடத்தில் ஸ்வாமி புஷ்கரணி தீர்த்தத்தில் நிவஸித்துக் கொண் டிருக்கின்றனர்.

---

## குமாரதீர்த்த மஹிமை.

பூர்வத்தில் வடதேசஸ்தனை ஒரு பிராம்மணன் வார்த்திகத்தை அடைந்து அப் பருவத்தில் தரித்திரத்தினால் அதிக சங்கடங்களுடன் தன் குடும்பத்தைப் பாதுகாக்கும் திறமையின்றி 'உலகத்தில் இஹபரங்களிலும் சுககரமானவை தனமாகையினாலே, அத் தனத்தைச் சம்பாதித்து இஹபர லோகங்களிலுஞ் சுகத்தை அடைவதற்குத் தடையாக எனக்கு வார்த்திகம் சம்பவித்ததே'' என அதிக துயரமடைந்து, அவன் தனது சுதேசம்விட்டுத் தென்திசையில் பிரவாஹித்துக்கொண்டிருக்கிற சுவர்னமுகரீ நதிதீரத்திலிருக்கும் சேஷாசலத்திற்குச் சென்று அப் பர்வதத்தினுச்சியில் அச்சருவில் வீழ்ந்து பிராணத்தியாகஞ் செய்துகொள்ள வெண்ணி, பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் முதலானவர்களைத் தியானித்து, வெங்கடாசலபதிக்கு நமஸ்கரித்து, "யான் இச்சருவில் வீழ்ந்திறக்கிறேன்'' என, முறையிடுகையில் அப் பரந்தாமன் பக்தரக்ஷகனாகையால் தயாரஸ ஹிருதய முடையவராய் ஓர் அரசனது புத்திரனைப் போலவேஷம்பூண்டு, அந்தப்பிராம்மணனுக்குப் பிரஸன்னராகி, "ஓய் பிராம்மணா! நீ ஏன் இப்படிப்பட்ட யோசனைகள் செய்தாய்? உலகத்தில் பிராம்மணன் இப்படிப்பட்ட சாஹசங்கள் செய்தானேயானால் அவனுக்குப் பரலோகத்தில் அதிக துயரமுண்டாகுமாகையால், உன் தரித்திரத்தை நிவர்த்திக்க யான் உபாயஞ் சொல்லுகின்றேன்; நீ இறங்கி வா!'' என்றழைக்க, அந்தப் பிராம்மணன் சந்துஷ்டியடைந்து அப் பர்வதத்தின் உச்சியிலிருந்திறங்கி, அந்த மஹானுபாவனிடம் வந்து நின்றனன். அப்போது இராஜவேஷம் பூண்ட ஸ்ரீமந் நாராயணன், "ஓய் பிராமணோத்தமா! நீ

என்னுடன் கூட எனது கரத்தைப் பற்றிக்கொண்டு வரு வாயானால் உனக்குச் சகல சம்பத்துகளு முண்டாகும்'' என்று சொல்ல, அந்தப் பிராம்மணன் அவரது கரத்தைப் பற்றிக்கொண்டு அப் பர்வதத்திலிருக்கும் பாபவிநாச தீர்த் தத்துக்கு வடபுறத்தில் நின்றனர். அப்போது அவ்வரச குமாரன் அந்த பிராம்மணனுடன், "ஓய் நீர்! இந்த பாப விநாசத்திற்கு வடபுரமிருக்கின்ற தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வீராகில் உமக்கு வார்த்திகம் நீங்கிக் கௌமாரத்துவ மும் சகல சம்பத்துகளும் உண்டாகும்'' என மொழிந்தனர். அப்போது அவர். அரசன் குமாரனது வார்த்தைகளுக்கிசை ந்து, அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்கையில் பகவான் அந்தர்த்தான மாய்விட்டனர். பிறகு அந்தப் பிராம்மணன் தனது விருத்தாப்பியம் நீங்கிக் கௌமாரத்துவமடைய, அப்போது அவன் மிக்க அதிசயமடைந்து தன்னுடன் வந்த அரசன் பகவானே என அறிந்துகொண்டு, அப்பரந் தாமன் தனக்குக் காணுமற்போனதைச் சிந்தித்து, நாற் றிசையிலுஞ் சுற்றிப் பார்க்கையில், அவ் வெம்பெருமான் ஆகாயத்தினிடமாக இருந்துகொண்டு, "ஓ பிராம்மணு! உனக்கு விருத்தாப்பியம் நீங்கிக் கௌமாரத்துவ முண் டானபடியால், இனி நீ உன் தேசத்துக்குச் சென்று சகல சம்பத்துகளு மடைந்து, நிஷித்த காரியங்களை விட்டு, சாஸ் திர சம்மதமான கருமங்களைச் செய்துகொண்டு தாராபுத்தி ராதிகளை இரக்ஷித்து முடிவில் பரமபதத்திற்கு வரக்கடவா யாக'' எனக் கட்டளையிட, அந்தப் பிராம்மணன் ஆநந்தக் கடலில் மூழ்கினவனுகித் தன் வீட்டிற்குச் சென்றனன். இவ்விதமாக அந்தப் பிராம்மணன் ஸ்நானஞ்செய்த மாத்தி ரத்தில் விருத்தாப்பியம் நீங்கிக் கௌமாரத்துவம் சம்ப வித்தபடியால் அதுமுதல் அந்தத் தீர்த்தம் இராஜகுமார தாராதீர்த்த மெனப் பிரசித்தி யடைந்திருக்கின்றது. இது வேங்கடேசுவரர் ஆலயத்திற்கு மேற்கு வடமூலையில் எட்டு மைல் தூரத்தி லுள்ளது.

---

## தும்புருதீர்த்த உற்பத்தி.

பூர்வம் தும்புருவனென்றொரு கந்தருவன் மாசிமாதத் தில் நித்தியமும் சேஷாசலத்துக்குச் சென்று, அவ்விட

மிருக்கும் கோணதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, அத்தீரத்தில் திரிமூர்த்தி ஸ்வரூபமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கிற அரசமரத்துக்குப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்துவிட்டு, வீட்டிற்கு வந்துகொண் டிருந்தனன். அவன் பத்தினி சூரியோதயம் வரையில் குளிரினால் துயிலெழாமலிருந்ததைக் கண்டு, "துன்மார்க்க முடையாளே! எல்லா மாதங்களிலும் மிக்க புண்ணிய முண்டாக்கும் இந்த மாசி மாதத்தில் இவ்விதமாகச் சூரியோதயம் வரையில் யாராவது தூங்கிக்கொண் டிருப்பார்களா? நித்தியமும் என்னுடன் வேங்கடாசலத்துக்கு வந்து கோண தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அரசமரத்திற்கு பூஜா பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து வருவாய்" என, அப்பெண் கேட்டு "ஓ பிராதணநாதரே! உம்மைப்போலொத்த கடினசித்தமுடையவரை நான் எங்குங் கண்டதில்லை; பாலபருவமடைந்து கர்ப்பவதியாகிய என்னை இப்படிப்பட்ட குளிர்காலத்தில் குளிர்ச்சியுள்ள நீரில் முழுகச் சொல்லுகிறீரே" எனத் தன் புருஷனை நிந்தித்துச் சொல்லுகையில், அதைக் கேட்ட அத் தும்புருவன்; அதிக கோபமடைந்து, "உனக்கு இஹபரசாதகமான தருமங்களை யான் உபதேசித்ததற்கு, என்னை நிந்தித்தாயாகையால், நீ சேஷாசலத்தில் கோணதீர்த்தத்திலிருக்கும் அரசமரத்தின் பொந்தில் வறட்டுத் தவளையாக இருக்கக்கடவை" எனச் சாபமிட்டனன். அப்போது, அப்பெண் கேட்டு அதிக பயமடைந்து தன் புருஷனுக்குத் தண்டன் சமர்ப்பித்து, "அச் சாப விமோசனகாலஞ் சொல்லவேண்டும்" என்று வருந்திக் கேட்க, கந்தருவன் கேட்டு, "பல நூற்றுண்டுகளுக்குப் பிறகு அகஸ்தியமாமுனிவர் அப்பர்வதத்திற் கெழுந்தருளி, கோண தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, தமது சிஷ்யவர்க்கங்களுக்கு அந்தத் தீர்த்த மஹிமையைச் சொல்லப்போகின்றனர்; அக் காலத்தில், நீ அவ்வரசமரத்தின் பொந்தில் வசித்துக்கொண்டு அந்தப் புண்ணிய கதையைக் கேட்பாயானல், மண்டூக தேஹம்விட்டு உன் நிஜரூபமடைந்து எம்மிடம் வருவாய்" என்று சொல்ல, அவள் தன் பதி சாபத்தினால் வறட்டுத் தவளையாகி, சேஷாசலத்தில் கோண தீர்த்தத்தி லிருக்கிற அரசமரத்தில் நெடுநாள் வாசஞ் செய்துகொண் டிருக்கையில், அகஸ்திய மாமுனிவர் அநேக சிஷர்களுடன் அந்தத் தீர்த்தத்துக் கெழுந்தருளி, அதில் ஸ்நானஞ் செய்தபின், அத் தீரத்திலிருக்கும் அரசமரத்திற்குப் பூஜா பிரதக்ஷண நமஸ்காரங்

கள் செய்தும், அவ்விடத்தில் வீற்றிருந்து தன் சிஷர்க ளுக்கு அந்தத் தீர்த்த மஹிமையை விவரித்துச்சொல்லியும் வருகையில், அத் தவளை அக் கதையைக் கேட்ட மஹிமை யால், மண்டூக தேஹம் விட்டு அதிக சௌந்தரியமுடைய பெண்ணாக அம் முனிவருக் கெதிரில் வந்து நிற்கையில், அவர் கண்டு அதிசயித்து, அப் பெண்ணை நோக்கி, "நீ யார்?" எனக் கேட்க, அவள், அம் முனிவருடன் தனது விருத்தாந்தத்தைச் சொல்லினள். அத் தும்புருவன், நித் தியமாய் வருகிறதுபோல வந்து அவ்விடத்தில் ஸ்நானஞ் செய்து வருகையில், அகஸ்திய முனிவர் அந்தத் தும்புரு வனைப் பார்த்து, "ஓய்! உமது பத்தினி அந்தத் தீர்த்த மஹத்துவத்தைச் செவியுற்றதால் சாபவிமோசன மடை ந்தனள்; இனி நீ இப்பெண்ணைப்பரிக்கிறஹித்து, அவளுடன் அத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அவ்விட மிருக்கும் ஸ்ரீநிவாச மூர்த்தியை நமஸ்கரித்துவிட்டுத் தேவலோகத் திற்குச் செல்!" என, அத் தும்புருவன் கேட்டு, தன் பத் தினியுடன் அத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, அரசமர பிரதக்ஷணஞ் செய்து, ஸ்ரீநிவாச மூர்த்திக்கு நமஸ்காரம் செய்கையில், அவனுக்கு ஸ்வாமி பிரசன்னராகி, "உனக் கென்ன வேண்டுவது?" எனக் கேட்டருள, அக் கந்தருவன் "நிரந்தரம் எனக்குத் தேவரீர் சேவை கொடுத்துக்கொண் டிருக்க வேண்டும்" எனவும், "யான் ஸ்நானஞ் செய்து கொண்டிருந்த இத் தீர்த்தம் இதுமுதல் என் நாமதேயத் தால் பெயர் வழங்கப்படவேண்டும்" எனவும் பிரார்த்திக்க, பரந்தாமன் அவ்வண்ணமே வரமளித்தன ராகையால், பூர்வத்தில் கோணதீர்த்தம் என்று பெயர் வாய்ந்த அத் தீர்த்தம் அன்றுமுதல் தும்புருதீர்த்தம் என்று பிரஸித்தி யடைந் திருக்கிறது. இது ஸ்ரீ வேங்கடரமணர் ஆலயத் திற்கு வடக்கே சுமார் பதினைந்து மைல் தூரத்திலுள்ளது.

---

## நாரததீர்த்த உற்பத்தி.

ஒரு காலத்தில் பிரம்மாவின் புத்திரரான நாரதமகா முனிவர், பகவதாராதனை செய்யவெண்ணி வேங்கடாஜலத் துக்குவந்து அவ்விடத்தில் அநாதியாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கிற ஒரு தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்கையில், அந்த வேங்கடேசர் ஆனந்தமடைந்து புன்சிரிப்போடு இம் முனிவரை விளித்து "உமக்கென்ன வரம் வேண்டும்" என

வினவ, அம் முனிவர் கேட்டு "எனக்குத் தேவரீர் பாதார விந்தத்தில் திடபக்தி யுண்டாகவேண்டும்" எனவும், "யான் நீராடிய இத் தீர்த்தத்துக்கு என் நாமத்தினுல் பெயர் வழங்கப்படவேண்டும்" எனவும் வேண்டுகையில், அப்பரந் தாமன், அவ்வண்ணமே வரந் தந்தனர். அன்றுமுதல் அது நாரததீர்த்தம் என்று பெயர் வழங்கப்படுகிறது. இது ஸ்ரீஸ்வாமி ஆலயத்திற்கு மேற்கி லுள்ளது.

---

## ஆகாசகங்கை உற்பத்தி.

பூர்வம் ஒரு பிராம்மணோத்தமன் தான் பகவத் கடாக்ஷத்தினுல் ஸ்ரீவிஷ்ணு பாதாரவிந்தமடைய வேண்டுமென் றெண்ணி ஸ்ரீவேங்கடகிரிக்கு வந்து, அவ்விடத்தில் ஸ்ரீமந் நாராயணன் ஆக்ஞையால் ஜநோபகாரத்தின் பொருட்டு வீற்றிருக்கும் ஆகாச கங்கையில் நீராடி, ஸ்ரீமந் நாராயண தியானபரனுக இருக்கையில், அவனுக்கு ஸ்ரீ வேங்கடேசர் பிரஸன்னராகி, "உனக்கென்ன வரம் வேண்டும்? இயம்பும்" என, பிராம்மணன், "எனக்கு விஷ்ணு ஸாலோக்கிய பதவி வேண்டும்" என விண்ணப்பஞ் செய்ய, அதைப் பரந்தாமன் கேட்டு, "ஓய் நீ, இன்னுங் கொஞ்ச நாளைக்கு இந்த ஆகாச கங்கையில் மூழ்கி, எம்மை ஆராதித்துக் கொண் டிருப்பாயானல், அனந்தரம் உனக்குச் சாலோக பதவி யுண்டாகும்" என வரமளித்து அந்தர்த்தானமாய்விட்டனர். அந்தப் பிராம்மணன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்துகொண்டிருந்து, கடைசியில் பரமபத மடைந்தனன். அந்த ஆகாசகங்கை இப்போது அவ்விடத்தில் பிரகாசித்துக்கொண் டிருப்பதால், அத் தீர்த்தத்தில் சித்திரை மாதம் சுக்கிலபக்ஷம் பௌர்ணிமைதினம் ஸ்நானஞ் செய்து ஸ்ரீநிவாச மூர்த்தியைச் சேவித்தால் அப்படிப்பட்டவர்களுக்கு இஹத்தில் சகல சம்பத்துகளும் உண்டாவதோடு பரத்தில் பரமபதவாசமும் உண்டாகும். இது ஸ்ரீ வேங்கடரமணர் ஆலயத்திற்கு இரண்டுமைல் தூரத்தி லுள்ளது.

---

## பாபவிநாச தீர்த்த மஹிமை.

பூர்வம் மகமேருவுக்கு வடபுறத்தில் சமஸ்தமுனிவர்களும் தபம் செய்துகொண் டிருக்கையில், அவ்விடத்திற்கு

ஒரு சூத்திரன் வந்து, அம் முனிவர்களுக்குத் தண்டன் சமர்ப்பித்து, கைகட்டி நின்றுகொண்டு அவர்களை பார்த்து "ஸ்வாமி! யான் சூத்திரன்; தபஞ்செய்ய எண்ணியிருக்கிறேன்; ஆகையாலெனக்கு மந்திரோபதேசஞ்செய்து என்னை இரக்ஷியுங்கள்" என வேண்ட, அம் முனிவர்கள் கேட்டு "நீ சூத்திரனாகையால், உனக்கு மந்திரோபதேசஞ் செய்யலாகாது; நீ நிரந்தரம் தேவ பிராம்மணர்களைப் பக்தியுடன் சேவை செய்துகொண்டு வருவாயானால், உனக்குப் பரமபதங் கிடைக்கும்" என்று சொல்ல, அச் சூத்திரன் அவ்விடத்திலொரு பூந்தோட்டம் ஏற்படுத்தி, அவ் வனத்தில் புஷ்பிக்கும் புஷ்பங்களை பிராம்மணர்களுக்கும், தேவர்களுக்கும் சமர்ப்பித்து, அவர்களைச் சேவை செய்துகொண்டிருந்தனன். அப்போது அவ் வாச்சிரமத்தில் தபசுசெய்துகொண்டிருக்கும் சுமதி யென்றொரு பிராம்மணன் அச் சூத்திரனுடைய பூந்தோட்டத்துக்குப் போகையில், அவன் கண்டு, பிராம்மணருக்கு அர்க்கிய பாத்திய ஆசமநீயங்கள் சமர்ப்பித்து, அதிக பக்தியுடன் சகல சிஸ்ருஷைகளும் செய்தபின், பிராம்மணன் சந்துஷ்டி யடைந்து, அதிக சிநேகத்தால் தினமும் அப்புஷ்ப வனத்திற்குப் போய்க்கொண் டிருந்தனன். அப்படியிருக்க, ஒரு நாள் அச்சூத்திரன் அவரை நமஸ்கரித்து, "சுவாமி! அடியேனுக்கு மந்திர ரஹஸ்யங்களைப் போதிக்கவேண்டும்" எனப் பிரார்த்திக்க, அவர், அவன் செய்யும் சிஸ்ருஷைகளுக்குச் சந்துஷ்டியடைந்து, அவன் வார்த்தைகளை நிக்கிரஹிக்கக் கூடாமல், அவனுக்கு பஞ்சாக்ஷரி, அஷ்டாக்ஷரி முதலிய மந்திர ரஹஸ்யங்களை உபதேசித்து, அவனால் வேதோக்த பிரகாரமாக தேவ பிதுர் காரியங்களைச் செய்வித்து, அச் சூத்திரன் கொடுத்துக்கொண்டுவரும் திரவிய மூலமாய் ஜீவித்து வந்தனன். பிறகு சிலகாலஞ் சென்று மிருத்தியு அடைந்து அப்பாபத்திற்குத் தக்க நரகங்களை யனுபவித்துக் கிருமி கீடாதி துர்யோனிகளில் சில ஜன்மங்களெடுத்தும், அப்பாவங்களெல்லாம் கழிந்த பின்னர், ஒரு பிராம்மணனுக்குப் புத்திரனாகப் பிறந்து ஜாதகர்மம், நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளோபனயனம் முதலான சமஸ்த காரியங்களும் செய்விக்கப்பட்ட பின்னர், பிதாவிடத்தில் சகல வேத சாஸ்திர புராண இதிகாசங்களைக் கற்றும், ஞானசம்பத்தை அடைந்தும், முன் செய்த பாப சேஷத்தால் பிரம்ம இராக்ஷஸு பிடித்து வனத்தில் சஞ்சரித்துக்கொண்டு இந்த

வெங்கடாஜலத்திற்குச் சமீபத்தில் பிரவாஹித்துக்கொண்டிருக்கிற சுவர்னமுகரீ தீரத்துக்கு வந்தனன். அப்பொழுது அந்த நதிதீரத்தில் தபசு செய்துகொண்டிருக்கிற அகத்தியமா முனிவரைக் கண்டு, அம் முனிவரை நமஸ்கரித்து அஞ்சலியஸ்தனாக நின்றுகொண்டு, "சுவாமி! அடியேனுக்கு இந்த பிரம்மராக்ஷஸ்துவம் நீங்கும்படி உபாயஞ் சொல்லவேண்டும்" எனப் பிரார்த்திக்க, அம் முனிவர் கேட்டு அவனிடத்தில் கருணையுண்டாய், "ஓய் இவ்விடத்திற்கு வடக்கில் சகல பாப நிவாரணமாகிய வேங்கடாத்ரியென்றொரு பர்வதமுண்டு; நீ அவ்விடஞ் சென்று அங்குப் பிரகாசித்துக்கொண்டிருக்கிற பாபவிநாச தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வாயானால் உன் பாவங்கள் நீங்குவதோடு பிரம்மஇராக்ஷதனால்சம்பவித்தஉபத்திரவங்களும்நீங்கும்" என அனுக்கிரஹிக்க, பிராம்மணன் கேட்டு, மறுபடியும் அம் முனிவரை நமஸ்கரித்து, அப் பர்வதத்திற்குச் சென்று அவ்விடத்தி லிருக்கும் பாபவிநாச தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து ஸ்ரீ வேங்கடாஜலபதிக்குத் தண்டன் சமர்ப்பிக்கையில், சகல பாப நிவர்த்திகளும் பிரம்மரக்ஷோப விமுக்தியுமுண்டாகி, கடைசியில் யோகிஜன துர்லபமுள்ள ஸ்ரீநிவாசன் பாதாரவிந்த சேவை கிடைத்தது. ஆகையால், இப்பொழுதும் அப் பாபவிநாசத்தில் ஸ்நானஞ்செய்த பேர்களுக்குச் சகல பாப நிவர்த்திகளுமாகி பரமபதவாசமும் உண்டாகின்றது. இது ஸ்ரீ வேங்கடேசுவரர் ஆலயத்திற்கு வடக்கே மூன்று மைல் தூரத்திலுள்ளது.

---

## கிருஷ்ண தீர்த்தோற்பத்தி.

பூர்வம் கிருஷ்ணன் என்றொரு பிராம்மணன், சேஷாத்திரிக்குச் சென்று, அவ்விடத்தி லொரு தீர்த்த முண்டு பண்ணிக்கொண்டு, அதில் ஸ்நானஞ்செய்து, அத் தீர்த்தத்தில் ஸ்ரீமந் நாராயண தியானபரனாக ஆகாரத்தை நீக்கி, அநேக வருஷகாலமாகத் தபசுசெய்து வருகையில் அவன் மீது புற்று வைக்கப்பட்டது. அப்போது தேவேந்திரன் அவன் தபசுக்கு விக்கினஞ் செய்யவெண்ணி, மேகநாதனை வரவழைத்து, "ஓய் மேகநாதனே: சேஷாத்திரியில் தபம் செய்துகொண்டிருக்கும்பிராம்மணன்பேரில் புற்றுவைக்கப் பட்டிருக்கிற தாகையால், அப்புற்று கரைந்து அவன் தபசுக்கு விக்கினம் நேரிடும்படிக்கு நீர் மிக்க கர்ஜ்ஜித்து

வர்ஷம் வர்ஷியும்" என ஆக்ஞாபிக்க, அம் மேகநாதன் தன் சாமர்த்தியத்தால் சகல லோகத்தார்களும் அறியும்படி கர்ஜ்ஜித்து மூன்றுநாள் இராப்பகல் வருஷிக்க, பிராம்மணன் பேரி லிடப்பட்டிருந்த புற்று, நீராகக் கரைந்துவிட்டது. அப்போது பக்த இரக்ஷகரான ஸ்ரீநிவாசமூர்த்தி இவருடைய மனோபாவத்தைக் கண்டறிந்து, சங்க, சக்கர, கதை, சாரங்கங்களைத் தரித்துக்கொண்டு லக்ஷ்மி சமேதராகக் கருடவாஹனரூடராய் அந்தப் பிராம்மணனுக்கு முன் பிரசன்னராகி, "ஓய் அந்தண! நாம் உமது தபசுக்கு மெச்சி உமக்கு வரமளிக்க வந்தோம்; வேண்டிய வரங்களைக் கேளும்" என, தபோநிதியாக இருந்த பிராம்மணன் கண்களைத் திறந்து பார்த்து தன் எதிரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்குப் பிரதக்ஷண நமஸ்காரஞ் செய்து, "சுவாமி! அடியேனுக்கு நித்தியமும் உமது பாதசேவை கிடைத்துகொண் டிருக்கும்படி அனுக்கிரகம் செய்யவேண்டும்" எனப் பிரார்த்திக்கையில், பரந்தாமன், அவன் கோரிக்கையின்படி வரமளித்து, "ஓய் பிராம்மண! இது உன் நாமதேயத்தால் பிரசித்தி யடையக்கடவது" என வரமளித்து, அந்தர்த்தான மாய்விட்டார். அன்று முதல் இது கிருஷ்ணதீர்த்த மெனப்படுகின்றது. இது ஸ்ரீ வேங்கடரமணர் ஆலயத்திற்குக் கிழக்கே எட்டு மைல் தூரத்திலுள்ளது.

---

## சக்கரதீர்த்த மகிமை.

பூர்வம் பத்மநாப னென்றொரு பிராம்மணன் தனக்கு ஸ்ரீநிவாஸ ஸேவையினால் சகல பாப நிவாரணங்களு முண்டாகுமென் றெண்ணி, வெங்கடாத்திரிக்குச் சென்று அவ்விடத்திலொரு ஸரஸை உண்டுபண்ணி அதில் நீராட, அத்தீரத்தி லவனுக்குப் பரந்தாமன் பிரசன்னராகி, "உனக்கென்ன தேவை?" என்று கேட்க, அந்தப் பிராம்மணன், எனக்குப் பகவான் ஸேவையினால் சகல பாபங்களும் நிவர்த்தியாய்விட்டன; இனி மோக்ஷம் வேண்டும்" எனப் பிரார்த்திக்க," பரந்தாமன் கேட்டு, "ஓய் பிராம்மண! நீ இன்னுஞ் சிலகாலம் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து இவ்விடத்தில் தபஞ் செய்துகொண் டிருப்பாயானால், உனக்குச் சாலோக பதவி யுண்டாகும்" என அனுக்கிரஹித்து அந்தர்த்தான மாய்விட்டனர். பிறகு அந்தப் பிராம்மணன்,

பகவதாக்ஞையின்படி அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து கொண்டிருந்தனன். அப்போது, ஓர் அரக்கன் அவனைப் பக்ஷிக்க வெண்ணி துரத்திக்கொண்டு வருகையில், அவன் பகவத்தியானபரனாய் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் பாதாரவிந்தங்களைத் தியானித்துக்கொண்டிருந்தனன். அப்போது பரந்தாமன், அவனிடத்தில் கருணைகொண்டு தனது சக்கரத்தை அழைத்து, "நீ அவ்வரக்கனைக் கொலைபுரிந்து எமது பக்தனாகிய பிராம்மணனை இரக்ஷித்துவிட்டு, பின்பு அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்பவர்களின் உபத்திரவங்களை நிவாரணை செய்துகொண்டு அச்சரசினிடத்தில்தானே வசித்துக்கொண்டிரும்" என ஆக்ஞாபிக்க, அச் சக்கரம் அத் தீர்த்தத்தி லுதித்து அவ்வரக்கனைச் சங்கரித்துவிட்டு, மறுபடியும் அத் தீர்த்தத்தி னிடமாகவே வசித்துக்கொண்டிருப்ப தாகையால், அச்சக்கரம் உதித்ததால் அது சக்கர தீர்த்த மெனப்படுகின்றது. அந்தப் பிராம்மணனும் கடைசியில் பகவதானுக்கிரகத்தால் பரமபத மடைந்தனன்.

---

## பாண்டவ தீர்த்தோற்பத்தி.

துவாபர யுகத்தில் பாண்டு ராஜாவின் புத்திரர்களான தர்மபுத்திரர்கள் சூதாடி இராஜ்யத்தை இழந்துவிட்டு, வனவாசஞ் செய்துகொண் டிருக்கையில், அவ்விடத்திற்கு நாரதபகவா னெழுந்தருளினர். பாண்டவர்கள்: அவரைக் கண்டு அர்க்கிய பாத்திய ஆசமநீயங்கள் கொடுத்துத் தண்டன் சமர்ப்பித்து, "ஸ்வாமி! நாங்கள் இவ் வாரண்ணியத்தில் சகல கஷ்டங்களையும் அனுபவித்துக்கொண் டிருக்கின்றனம்; ஆகையால், எங்கள் கஷ்டம் எவ்விதம் நிவர்த்தியாகும்?" என வேண்ட, நாரதமுனிவரானவர்: அவர்கள் துக்கத்தைக் கண்ணுற்று, அவர்கள்மீது கருணைபூண்டு, "ஓய் பாண்டவர்களே! இவ்விடத்திற்கு மேற்கே பத்துகாத தூரத்தில் அநேக தீர்த்தங்களினால் பிரகாசித்துக்கொண்டு வேங்கடகிரி யென்னுமொரு பர்வத மிருக்கிறது. நீங்கள் அவ்விடஞ் சென்று, அங்குள்ள புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து அப் பர்வதத்தைப் பிரதணஞ் செய்வீர்களானால், உங்களுக்கு ஸ்ரீநிவாஸனது அனுக்கிரஹத்தால் இராஜ்யங் கிடைத்து சகல கஷ்டங்களும் நிவாரணமாகும்" என மொழிய, அப் பாண்டவர்கள் கேட்டு ஆநந்தமடைந்து, அப் பர்வதத்திற்குச் சென்று அங்கிருக்கும் ஸகல தீர்த்தங்

களிலும் ஸ்நானஞ்செய்து, அப்பர்வதத்தைப்பிரதக்ஷணஞ் செய்தபின் அங்குள்ள மற்றொரு தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்துவிட்டு, அத்தீரத்தில் ஸ்ரீமந் நாராயண தியானபரர்களா யிருக்கையில், அவர்களுக்கு ஸ்ரீநிவாசமூர்த்தி பிரசன்னராகி, "ஓ பாண்டவர்களே! உங்களுக்குச் சீக்கிரமாக யுத்தத்தில் சத்துரு ஜயலாபம் உண்டாகும்" எனவும், "நீங்கள் ஸ்நானஞ்செய்த அத்தீர்த்தம் உங்கள் நாமதேயத்தால் பெயர் வழங்கப்படும்" என்வும் வரமளித்து அந்தர்த்தான மாகிவிட்டனர். பிறகு பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ்ண ஸஹாயத்தால் யுத்தரங்கத்தில் சத்துருஜயமடைந்து தமது இராஜ்யத்தையுங் கைக்கொண்டு சுகித்தனர்க ளாதலால், அச்சரோவரம் பாண்டவதீர்த்த மெனப்படுகின்றது.

---

## கபில் தீர்த்தோற்பத்தி.

பாதாள லோகத்தில் கபிலமாமுனிவர் அநாதியாய்ப் பூஜித்துவந்த லிங்கம் ஒருநாள் பூமியைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டிருக்க, பிரம்மாமுதலான ஸமஸ்த தேவர்களும் அவ்விடத்திற்கு வந்து அந்தலிங்கத்திற்கு பூஜாபிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து பரமசிவனைத் தியானிக்கையில், ஈசுவரர் அவர்களுக்குப் பிரசன்னராகி, "நீங்களென்ன அபேட்சிக்கின்றீர்கள்? இயம்புங்கள்!" என, அத்தேவர்கள் கேட்டு, "சுவாமி! தாம் இவ்விடத்தில்தானே நிவஸித்துக்கொண்டு, ஸமஸ்த மானிடர்களுக்கும் சேவை தந்துகொண்டிருக்கவேண்டும்" எனப் பிரார்த்திக்க, பரமசிவன் கேட்டு, "ஓ வானவர்களே! இப்போது பூமியைப்பேதித்து உதித்த லிங்கத்தை இவ்விடத்தில் பிரதிஷ்டை பண்ணிவைத்தால் இதில் யாம் நிவஸிக்கிறோம்" எனத் திருவாய்மலர்ந்தருள, அத் தேவர்கள் அந்த லிங்கத்திற்கு ஆலயமியற்றி, அதில் பிரதிஷ்டை செய்தனர். அப்போது கபிலமாமுனிவர், பாதாளத்தில் தாம் நித்தியமும் பூஜித்து வருகிற லிங்கத்தைக் காணமல், சிலகாலம் வியாகுலமடைந்திருந்து. பிறகு ஞானதிருஷ்டியால் அந்த லிங்கம் பூலோகத்திற்குப் போய்விட்டதென அறிந்துகொண்டு, தாமும் பூமியில் பிலஞ் செய்து அவ்வழியாகவே பாதாள கங்கையைக் கொண்டுவந்து, இலிங்கத்திற் கபிஷேகம் பூஜை பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து இப்போதும் அவ்விடத்தில்தானே ஆராதித்துக்கொண் டிருக்கின்றனர். ஆகையால், இது கபி

லேசுவரரெனவும், அவ்விடத்திற்குக் கபில முனிவர் கொண்டுவந்த பாதாளகங்கை கபிலதீர்த்தமெனவும் பிரஸித்தி யடைந்திருக்கிறது. இது கீழ்த் திருப்பதிக்கு ஒன்றரை மைல் தூரத்திலுள்ளது.

---

## இந்திரதீர்த்தம் முதலான ஒன்பது தீர்த்தங்களின் மஹிமை.

பூர்வகாலத்தில் இந்திரன் விமானமேறிப் பூசஞ்சாரஞ் செய்துகொண்டு கௌதமராச்சிரமத்திற்கு வந்தனர். அச்சமயத்தில், அம் முனிவரின் பத்தினியாகிய அஹலிகை, ஸ்நானஞ்செய்துவிட்டுத் தலைமயிரை ஆற்றிக்கொண்டிருக்க, இந்திரன் அவளைக் கண்டு அதிக மோஹமடைந்து, அந்த ராத்திரிப்பொழுதை வனத்தில் போக்கி ஒரு சேவலைப் போல் ஒலிசெய்தனன். அவ்வொலியைக் கேட்ட கௌதமர், அருணோதயகாலமாய்விட்டதெனத் துயிலெழுந்து கமண்டலமெடுத்துக்கொண்டு, ஸ்நானஞ் செய்யப் போகிற அவசரத்தில், இந்திரன் இது நல்லசமயமெனக் கருதி அம்முனிவரின் பன்னகசாலைக் கேகி, அவர் பத்தினியை வார்த்தைகளினால் மோசஞ் செய்து அவளுடன் ரமிக்கையில், அம்முனிவர் நதிதீர்த்தத்திற்குச்சென்று நக்ஷத்திரங்களைப் பார்த்து, "இதுவென்ன அதிசயம்! இராத்திரி மூன்றாவது ஜாமத்தில்தானே சேவல் துவனி செவியுற்றது" எனச் சிறிது நேரந் தியானித்து, "இது இந்திரன் செய்த மோசம்" என்றறிந்துகொண்டு சீக்கிரத்தில் திரும்பிப் பன்னக சாலைக்கு வருகையில், இந்திரன் அஹலிகையுடன் ரமித்து, அக்குடீரத்தை விட்டு ஸ்வர்க்க லோகத்திற்குப் போக உத்தேசித்தவனாக இருந்தனன். அப்போது அம்முனிவர் இவைகளைக் கண்டு, "ஓ துராத்மாவே! நீ எம்மை மோசஞ் செய்து இப்படிப்பட்ட துஷ்ட காரியத்தைச் செய்தபடியால், இப்பாபத்தா லுனது விருக்ஷணங்க ளறுப்புண்டு பூமியில் விழக்கடவது?" எனச் சாபங் கொடுத்து, தன் பத்தினியாகிய அகலியைக் கண்டு, "நீ இவ்வித துன்மார்க்கியாயிருப்பதால் எவர்களுக்குந் தெரியாமல் கல்லாகக் கடவாய்" எனச் சபித்து, "இனிமேல் கொஞ்ச காலத்தில் தசரதமஹாராஜருக்கு ஸ்ரீமந் நாராயணமூர்த்தி புத்திரராகப் பிறந்து இராமனென்னும் நாமம்பூண்டு, சீதையை மணம்புரிய விசுவாமித்திரருடன் ஜனக மகாராஜன்

நகரத்திற்குப் போவதன்பொருட்டு இவ்வனத்திற் கெழுந்தருளப் போகின்றனர். அக்காலத்தில் இராமன் பாததூளி உன் பேரில்பட நீ நிஜரூபமடைந்து நம்மிடம் சேருவாய்'' என அனுக்கிரஹித்துவிட்டு அப்படிப்பட்ட துஷ்டியுடன் சம்பாஷித்ததினால் தனக்குண்டான பாபம் நீங்குதற்காகத் தீர்த்த யாத்திரை செய்யும் பொருட்டுப் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றனர். பிறகு இந்திரன் முனிவர் சாபத்தால் விருஷண மற்றவனாகி வெட்கமடைந்து, சுவர்க்கலோகத்திற்குப் போகாமல் பூலோகத்தி லிருந்தனன். அப்போது இந்த விருத்தாந்தத்தை அரக்கர்க ளறிந்து, ஸ்வர்க்கத்திற்கு இரக்ஷகனில்லாததால் தாம் இந்திரலோகத்தை ஆக்கிரமித்துக்கொள்ளலா மெனக்கருதி சமஸ்த சைன்னியங்களுடனே, சுவர்க்கத்திற் கருகாமையிற் செல்ல, அவ்விடத்தி லிருக்கும் அமரர்கள் அரக்கர்களுடன் யுத்தம் செய்யச் சக்தியற்றவர்களாகி இந்திரனைத் தேடிக்கொண்டு எல்லா லோகங்களிலும் சஞ்சரித்துவிட்டு இந்தப் பூலோகத்தி லொருவனத்தில் விருஷண ஹீனனாகி இருப்பதால் வெளியில்வர வெட்கமடைந்திருக்கின்ற அவ்விந்திரனைக் கண்டு அவனை அழைத்துக்கொண்டு சேஷாத்திரிக்குச் சென்று அவ்விடத்திலொரு தீர்த்தமுண்டுபண்ணி அதில் அவனை மூழ்கச் செய்வித்து, அவன் பாப நிவர்த்தியடைந்த பின்பு வேங்கடேசுவரரை நமஸ்கரித்து அவ ரனுக்கிரஹத்தால் சுவர்க்க லோகத்திற்குச் சென்றனன். ஆகையால் அவ்விந்திரன் ஸ்நானம் செய்த தடாகம் இந்திரதீர்த்தமென்றும், வருணன் குமாரன் ஸ்நானஞ்செய்து பகவதனுக்கிரஹம் பெற்ற தீர்த்தம் விஷ்வச்சேன தீர்த்தமென்றும், ஸ்ரீவிஷ்ணுவினுடைய சங்கம்-சக்கரம்-கதை-கட்கம் - சாரங்கம் முதலிய ஐந்தாயுதங்களும் ஸ்நானஞ்செய்த ஸரஸு பஞ்சாயுத தீர்த்தமெனவும், பிரும்மா: சிருஷ்டி சாமர்த்தியத்தை அடைவதன் பொருட்டு ஸ்ரீ வேங்கடாத்திரிக்கு வந்து ஒரு தீர்த்தத்தை யுண்டுபண்ணி அதில் நீராடி, ஸ்ரீநிவாச மூர்த்தியை நமஸ்கரித்து அந்தச் சுவாமியின் அனுக்கிரஹத்தால் ஜகத்சிருஷ்டி கர்த்தவ்வியத்தை அடைந்தனராகையால் அது பிரம்மதீர்த்தமென்றும், காசிபர்முதலாக சமஸ்த மஹரிஷிகளும் ஸ்நானஞ்செய்த சரசு, சப்தரிஷி தீர்த்தம் எனவும் சொல்லப் படுகின்றன.

## தோட்டி தீர்த்தோற்பத்தி.

பூர்வம் துங்கபத்திரா நதிதீரத்திலொரு அக்கிரஹாரத்தில் பத்மநாபனென்றொரு பிராம்மணன், சகல வேத சாஸ்திர புராண இதிஹாசங்களைக் கற்றும், அவற்றில் சொல்லப்பட்டிருக்கும் தர்மகாரியங்களைச் செய்தும், புத்திரனில்லாமல் அநேகநாள் அந்த நதிதீரத்தில் சிவார்ச்சனை செய்துகொண்டிருந்து பிறகு சிவானுக்கிரகத்தாலொரு புத்திரனைப் பெற்றனன். அந்தப் புத்திரன், வயதுவந்தபின் கலியாணஞ்செய்துகொண்டு, தன் மனைவியை விட்டுத் தாய் தந்தையர் சொற்கேளாமல் விடபுருஷர்களுடன் கூடி விபசாரம் செய்துகொண்டு, ஒரு தாசியைச் சேர்ந்து அவளுக்குத் தன் வீட்டிலிருக்கும் தனமெல்லாங் கொடுத்துவிட்டுப் பின்பு திரவியமில்லாமையால், திருடர்களுடன் கூடி அரணியத்திடையி லிருக்கும் கிராமங்களில் களவுசெய்து அந்தத் தாசிக்குக் கொடுத்து வருகையில், ஒருநாள் ஒரு பிராம்மணன் வீட்டிற் பிரவேசித்து அவனைக் கொலைசெய்து, அவ்வீட்டிலுள்ள சமஸ்த திரவியங்களையும் அபஹரித்தனன். அப்போது அவனுக்குப் பிரம்மஹத்தி உண்டாகி அதிகமாகப் பாதிக்கையில், அந்தப் பிராம்மணன், அந்தப் பாதைகளைப் பொறுக்க மாட்டாமல் தன் பிதாவினிடஞ் சென்று "அப்பா! அடியேனை இரக்ஷியும்" என வேண்ட, அவன் தகப்பன் கேட்டு, "தனக்கு ஒரு பிள்ளை பிறந்து இவ்வித பாவங்களை அனுபவிக்கின்றனன் ஆகையால், அவைகளெவ்விதம் நிவர்த்தியாகும்" எனத் துயரங்கொண் டிருக்கையில், அவ்விடத்திற்குத் தபோநிதியான பரத்துவாஜமுநிவர் தேவவசத்தால் எழுந்தருள, அந்தப் பிராம்மணனைக் கண்டு, "ஓய் பிராம்மணா! நீர் ஏன் விசனப்படுகிறீர்? உமது வியசனத்தை எமக்கறிவியும்!" என, பிராம்மணன் அம் முனிவரைப் பார்த்து, அவருக்குத் தண்டஞ் சமர்ப்பித்து, தன் குமாரன் செய்திருக்கும் பாபத்தையும், அதனால் அவன் படுகிற துன்பத்தையும், இக் காரணங்களால் தனக்குண்டாயிருக்கிற துக்கத்தையும் அம் முனிவருக் கறிவித்தனர். அதைக் கேட்டு அம் முனிவர் கொஞ்சகாலந் தியானித்து, பிற்பாடு அந்தப் பிராம்மணனுடன் "ஓய் பிராம்மணா! காசிக்ஷேத்திரத்திற்குத் தெற்கே நூற்றைம்பது காதவழி தூரமும், கிழக்குச் சமுத்திரத்திற்கு மேற்கே பதின்காதவழி தூரமும் பொருந்தி சுவர்ணமுகி யென்னும் நதிக்கு வடக்

கில் இரண்டு நாழிகைவழி தூரத்தில் ஸ்ரீநிவாசமூர்த்திக்கு வாஸஸ்தானமாய், சமஸ்த புண்ணிய தீர்த்தங்களினால் பிரகாசித்துக்கொண்டு ஸ்ரீ வேங்கடாஜல மெனப் பிரஸித்தியடைந்த ஒரு பர்வதமிருக்கிறது. அங்கு நித்தியமும் ஸ்ரீநிவாச மூர்த்திக்குப் அபிஷேகஞ் செய்கிற தீர்த்தமெல்லாமொரு பிரதேசத்தில் சேர்ந்து, அது சமஸ்கிருத பாஷையில் கடாஹ தீர்த்தமெனவும், திராவிட பாஷையில் தொட்டி தீர்த்த மெனவுஞ் சொல்லப்படுகின்றது. மேலும், சமஸ்த தீர்த்தங்களும் பகவான் பாதத்தின்பேரில் சேர்ந்து ஒரு பிரதேசங் கூடுவதாலும், பிரம்மஹத்திமுதலிய மஹாபாவங்களும் நாசமாகிவிடு மாதலாலும், நீ உன் புத்திரனை அழைத்துக் கொண்டுபோய் அப்பர்வதத்தில் அந்தக் கடாஹ தீர்த்தத்தில் அவனுக்கு ஸ்நானஞ் செய்வித்தால், சகல பாவங்களுந் தொலைந்துவிடும்" என மொழிந்து, தமது தபோவனத்திற் கேகினர். அதன்மேல் அந்தப் பிராம்மணோத்தமன் மஹாபாதகனான தன் குமாரனையழைத்துக் கொண்டுபோய் அப்பர்வதத்தையடைந்து அவனைக் கடாஹதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வித்தும், ஸ்ரீனிவாசமூர்த்தியைப் பிரதக்ஷணம் செய்வித்தும், "அத் தீர்த்தத்தைப் பானஞ்செய்க" என ஆக்ஞாபிக்கையில், அப் புத்திரன் பகவானுக்குப் பிரதக்ஷண நமஸ்காரஞ் செய்து, பகவானது பாதோத்தகமான கடாஹ தீர்த்தத்தைப் பானஞ் செய்து பலவாராகத் துதிசெய்கையில், அவனுக்குப் பரந்தாமன் பிரசன்னராகி: "ஓய்! நீ இந்தத் தீர்த்தத்தைப் பானஞ் செய்தபடியால் உன் பாவங்களெல்லாம் தொலைந்துவிட்டன. உலகத்தில் எந்த மனிதனாவது இந்தத் தீர்த்தத்தில் விசுவாசமில்லாமலும், பானஞ் செய்யாமலும் போனால் அவன் பிரம்மஹத்தியாதி மஹாபாவங்களுக்குச் சமானமான பாவங்களையடைவனாதலால், இந்தத் தீர்த்தத்தை எப்படிப்பட்ட மஹாத்துமாவானாலும் சம்சயம் நீங்கிப் பானஞ் செய்ய வேண்டியது" என்றும், அப்படிப் பானஞ் செய்பவர்களுக்குச் சகலபாப நிவர்த்தியும் ரோகநாசமுமாகிறதன்றியில் இஷ்டசித்தியும் உண்டாகும்" என்றும் மொழிந்து அந்தர்த்தானமடைந்தனர். பத்மநாபனென்னும் பிராமணன் அத் தீர்த்த மஹிமையை அறிந்து ஆச்சரியப்பட்டுப் பாப நிவர்த்தி யுடையவனாய்ப் பரிசுத்தனான தன் புத்திரனை அழைத்துக்கொண்டு உல்லாசத்துடன் தன் கிரஹத்திற்குச் சென்றனன்.

## சுவாமி புஷ்கரணி உற்பத்தி.

பூர்வம் பிரம்மாவின் பத்தினியாகிய சரஸ்வதிதேவி ஈசுவரனை ஆசிரயித்து, கங்காதேவி சமஸ்த தீர்த்தங்களை விட மிக்க புண்ணியகரமான நதிரூபமாய் விட்டதைக் கண்டு, தான் அக் கங்கையைப் பார்க்கிலு மதிக புண்ணிய பிரதான முடையவளான நதிரூப மடையவேண்டு மென்று கருத்துக்கொண்டு, பிரும்மாவர்த்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத் தியானித்துத் தபஞ் செய்துகொண்டிருந்தனள். அப்போது பிரம்மாவின் புத்திரரான புலஸ்திய பிர்ம்மா, அந்த க்ஷேத்திரத்திற்கு வந்தனர். அவரைப் பார்த்து ஸரஸ்வதி தேவியானவள் அவர் தன் புத்திரனென்றெண்ணி அவருக்கு வந்தனம் செய்யாம லிருந்தனள். அப்பொழுது புலஸ்திய பிரம்மா சரஸ்வதி தன்னை யவமதித்தன ளென்றெண்ணி அதிக சினமடைந்து, "ஓ சரஸ்வதி! நீ நம்மை யவமதித்தா யாகையால் உனக்கு நதிரூபமாயும் ஸர்வ தீர்த்தோத்தம முண்டாகாமற் போகக்கடவது" எனச் சாபமிட்டனர். அதைச் செவியுற்ற சரஸ்வதி கோபாக்கிராந்தமுடையவளாய், "ஓய்! நீ எனக்குச் சாபங் கொடுத்தா யாகையால் உனக்கு ஜன்மித்த புத்திரர்க ளெல்லோரும் அரக்கர்களாகக் கடவர்" என மொழிந்தனள். அதைக் கேட்டு புலஸ்திய பிரம்மா, "யான் தெரியாமல் சொல்லிவிட்டதற்கு நீ ரெனக் கிப்படி சாபமளிக்கத் தக்கதன்று; என்னை யனுக்கிரஹிக்க வேண்டும்" எனப் பிரார்த்திக்கையில், சரஸ்வதி கேட்டு, "ஓய் உனக்குக் கடைசியில் ஜன்மிக்கும் புத்திரன் மிக்க விஷ்ணுபக்தி யுடையவனாகவிருப்பான்" என மொழிந்து விட்டுப் பின்னுந் தபஞ் செய்கையில், அவருக்கு ஸ்ரீமந் நாராயணமூர்த்தி பிரசன்னராகி, "உனக் கென்னவேண்டுங் கேள்" என மொழிய, அந்த ஸரஸ்வதி தான் நதி ரூபமாகி ஸமஸ்த தீர்த்தங்களைப் பார்க்கிலும் சிரேஷ்ட முடையவளாக இருக்கவேண்டும்" எனப் பிரார்த்திக்கையில், அதைப் பகவான் கேட்டு, "ஓ சரஸ்வதி! உனக்கு புலஸ்திய பிரம்மாவினாலுண்டான சாபந் தவறாது; ஆகையால், நீ நதி ரூபமாக சர்வோத்தமத்தை அடையத் தக்கவளாவதற்கு யாம் உபாயஞ் சொல்லுகின்றோம்; அஃதியாதெனில், நீ சேஷாசலத்தில் சரோரூப மடைந்து, சமஸ்த தீர்த்தங்களிலும் சிரேஷ்ட முடையவளாக இருந்து, உன்னிடத்தில் ஸ்நானஞ் செய்பவர்களுக்

குச் சகல பாபங்களும் நசித்து விடும்படிச் செய்துகொண் டிருப்பாயானால், உன்னிடத்தில் சமஸ்த தீர்த்தங்களும் தனுர்மாசத்தில் ஸ்நானஞ்செய்து தம்மிடத்தில் பாபாத்துமாக்கள் ஸ்நானஞ்செய்து வருகிறதினு லுண்டாகிய பாபத்தை நிவர்த்தியடையக் கடவர்கள்'' என அநுக்கிரஹித்ததினால், அந்த சரஸ்வதி அப் பர்வதத்திற்குவந்து அவ்விடத்தில் சுவாமி சன்னதியில் சரோரூபமாக அவதரித்து ஸ்வாமி புஷ்கரணி யென்னும் நாமதேயத்தால் பிரஸித்தியடைந் திருக்கின்றனள். பிறகு அத் தடாகத்தின் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு திக்குகளிலும்; அக்கினி திக்கிலும், நிருதி ஈசானிய திக்குகளிலும்; மார்க்கண்டேய முனிவர், எமன், வாயு, குபேரன், அக்கினி, வஸிஷ்டர், காலவர் ஆகியவர்கள் ஸ்நானஞ்செய்து அவரவர்கள் தங்கள் மனோபீஷ்டத்தை அடைந்தனர்க ளாகையால், அந்தப் பிரதேசத்தில் வரிசைக் கிரமமாக மார்க்கண்டேய தீர்த்தம், எமதீர்த்தம், வாயுதீர்த்தம், குபேரதீர்த்தம், அக்கினிதீர்த்தம், வஸிஷ்டதீர்த்தம், காலவதீர்த்தம் எனவும், மத்தியில் சரஸ்வதி தீர்த்தமெனவும், வாயுதிசையில் வராஹமூர்த்தி வீற்றிருப்பதால் வராஹதீர்த்த மெனவும் ஆகிய ஒன்பது நாமதேயங்களால் பிரஸித்தியடைந் திருக்கின்றது.

---

## சுவாமி புஷ்கரணி மஹிமை.

பூர்வம் சந்திர வம்சத்திலுதித்த நந்தன மஹாராஜன் தன் இராஜ்யத்தைப் புத்திரனாகிய தர்மகுப்தன் ஆதினஞ் செய்துவிட்டு, தான் தீர்த்தயாத்திரை செய்து தபோநிஷ்டனாக இருந்துகொண் டிருந்தனன். அப்போது, அந்தத் தர்மகுப்தன் ஒருநாள் சேனைகளுடன் வனத்தில் வேட்டையாடப்போய் அந்த ஸைனியங்களை விட்டுத் தனிமையாக ஒரு நெருங்கின வனத்தில் பிரவேசித்து, அவ்விடத்தில் சஞ்சரிக்கையில் சூரிய அஸ்தமான மாய்விட்டது. அப்போது அவ்வரசனை ஒரு சிங்கம் கண்டு பக்ஷிக்கவெண்ணி, அவனைத் துரத்துகையில், அரசன் பயமடைந் தொரு மரத்தின்மீ தேறினன். அம் மரத்தின்பேரில் அதற்கு முந்தியே ஒருகரடியு மேறியிருந்தது. அதைக்கண்டு, அவ்வரசன் பயமடைந்து நடுங்குகையில், அக்கரடி கண்டு, "ஓய் அரசனே! நீ தர்மவான்; என்னைப்போலொத்த ஜீவன்களை ரக்ஷிக்கப் பட்டவன்; ஆகையால், உன்னை யான் பக்ஷியாமல் இரக்ஷிக்

கிறேன்; என்னிடத்திற்கு வா'' என்றழைக்க, அவ்வரசன் தைரியமடைந்து அதனிடத்திற்குச் சென்றனன். அப்பொழுது அக்கரடி, அரசனுடன், "ஓய்! நீ தூக்கங்கொள்ள விரும்புவாயானல் என் தொடையின்பேரில் தூங்கும்'' என மொழிந்தது. அதைக் கேட்டு, அவ்வரசன் அதன் தொடையின்பேரில் தூங்கிக்கொண்டிருக்கையில், அச் சிங்கம் கரடியுடன், "ஓய்! இவ்வரசன் நம்மைப்போன்ற துஷ்ட மிருகங்களை சிக்ஷிக்க இவ்வாரணியத்திற்கு வந்திருக்கின்றனன்; அவனை நம்பாமல் கீழே தள்ளிவிடுவாயானல், அவனைப் பட்சித்துவிட்டு என் இருப்பிடஞ் செல்லுகிறேன்'' என மொழிய, கரடிகேட்டு சிங்கத்துடன்! "ஓய் உலகத்தில் சகல சாஸ்திரபுராண இதிஹாசங்களிலும் மித்திரத் துரோகத்திற்குப் பிராயசசித்தமில்லை'' எனவும், "அப் பாபம் சேது ஸ்நானம், கங்காஸ்நானங்களாலும் நிவர்த்தியாகமாட்டாது'' எனவும் சொல்லப்பட்டிருக்கிற தாகையால் என்னை நம்பினவனுக்கு நான் துரோகஞ்செய்யமாட்டேன்போ'' எனச் சொல்லிவிட்டது. அப்போதந்த தர்மகுப்தன் தூக்கத்தினின்றும் விழித்துக் கொள்ளுகையில், அக் கரடி அவன் புத்தியை யறியவெண்ணி, "ஓய்! எனக்கும் தூக்கம் வருகின்றது; யானும் உனது தொடையின்பேரில் படுத்துத் தூங்குகிறேன்'' என்று சொல்லி யவன் தொடையின்பேரில் படுத்துக் கொள்ளுகையில், அந்தச் சிங்கம் முன்போல அவ்வரசனுடன் "கரடியைக் கீழே தள்ளிவிடும'' என, அவன் சிங்கத்தின் வார்த்தைக் கிசைந்து, அக் கரடியைக் கீழே தள்ளுகையில், அது தூக்கம் விழித்து ஒரு கிளையைப் பற்றிக் கொண்டு நின்று அவ்வரசனைப் பார்த்து, "ஓய்! நீ விசுவாச காதகன்; உன்னுடன் சஹவாசஞ் செய்பவர்களுக்கு அத்தியந்த பாபமுண்டாகும்; நீ பயித்தியம் பிடித்தவனாகப் பூமியில் சஞ்சரிக்கக் கடவாய்'' எனச் சொல்லி, அச் சிங்கத்தைப் பார்த்து, "ஓய்! நீ முன்னால் குபேரன் மந்திரியாகிய கந்தருவன்; உனக்குக் கௌதமர் மிருகரூப முண்டாகும்படிச் சாபமளித்து, அப்பால் கருணை யுண்டாகி, "ஓய்! தியானகஷ்ட மஹாமுனி வன விஹாரத்தின்பொருட்டு மிருகரூப மடைந்திருக்க, உனக்கவருடன் சம்பாஷணை யுண்டானல் உன் சாபம் நிவர்த்தியாகும்'' என மொழிந்தன ராகையால் இன்றைக் கென்னுடன் சம்பாஷித்ததினல், உன் சாபம் நிவர்த்தியாகிவிட்டது'' என, அச்சிங்கம் மிருக ரூபத்தை விட்டுக் கந்தருவனாக அழகாபுரிக் கேகி

னன். அவ்வரசன் பைத்தியம் பிடித்துப் பூலோகத்தில் சஞ்சரிக்கையில், அவனுக்குப் பிதாவான நந்தன் கண்டு, அதிக துயரமடைந்து, அப் புதல்வனை அழைத்துக்கொண்டு ஜயமுனியினிடத்திற்குச் சென்று, அவருக்குத் தண்டன் சமர்ப்பித்து, "சுவாமி! எனது புதல்வனுக்குப் பயித்தியம் எவ்விதம் நிவர்த்தியாகும்?" என வேண்ட; அம்முனிவர் சற்று தியானித்து, "ஓய்! உன் குமாரனுக்கு விசுவாச காதகத்தினால் பைத்தியம் பிடித்திருக்கிற தாகையால், சுவர்ணமுகரீ நதிக்கு வடக்கில், வேங்கடாத்திரி யென்னுமொரு பர்வதமுண்டு; நீ அவ்விடத்திற்கு உன் குமாரனை அழைத்துக்கொண்டுபோய், சகல பாபங்களும் ஹரமாகப்பட்ட ஸ்வாமி புஷ்கரணியில் ஸ்நானஞ் செய்விப்பாயானால் அவன் பாபமொழிந்து, பைத்தியம் நீங்கிச் சுகிக்கக்கடவன்" எனமொழிய, அந்தநந்தன் தன் புத்திரனை அழைத்துக்கொண்டுபோய், அப் பர்வதத்தை யடைந்து, அவனைச் சுவாமி புஷ்கரணியில் ஸ்நானஞ் செய்விக்கையில், அவனுக்குப் பயித்தியம் விட்டுப்போன பிறகு ஸ்ரீநிவாசமூர்த்தியை நமஸ்கரித்துச சுகமாக இராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண் டிருந்தனன். மற்றும், இந்த கிரிராஜத்துக்கு, அதைத் தரிசித்த மாத்திரத்தில் அஞ்ஞானிகளுக்கு ஞானமுண்டாவதினால் ஞானகிரியெனவும், நாராயணனென்னுமொரு பிராமமணன் அவ்விடத்தில் பகவதானுக்கிரஹமடைந்தனனாகையினாலே நாராயணாத்திரி யெனவும், அதைக் கருத்மான் வைகுண்டத்திலிருந்து கொண்டுவந்ததினால் கருடாசலமெனவும், ஸ்ரீமந் நாராயணமூர்த்தி வராஹ ரூபத்துடன் வஸித்துக்கொண்டிருப்பதினால் வராஹபர்வதமெனவும், அப்பர்வதத்தின் மத்தியிலிருக்கும் அஹோபிலத்தில் பகவான் நரசிம்மரூபமாய் நிவஸிப்பதினால் ஸிம்ஹாத்திரியெனவும், முன்னால் அப்பர்வதம் வைகுண்டத்திலிருந்த தாகையால் வைகுண்டகிரி யெனவும், நிரந்தரம் இலட்சுமி நிவஸித்து வருவதால் ஸ்ரீசைலமெனவும், பகவான் இலக்ஷ்மி சமேதராக நிவஸிப்பதினால் ஸ்ரீநிவாசகிரி யெனவும், சகல மஹோத்சவங்களுக்கும் ஸ்தான மாகையால் கலியாணகிரி யெனவும், இந் நாமங்கள் மார்க்கண்டேய புராணம், கருடபுராணம், பிரம்மோத்தரகாண்டம், பிரமாண்டபுராணம், ஸ்காந்தபுராணம், வாமன - வராஹ - பவிஷ்யோத்தர புராணங்களில் வியாசாதிகளால் சொல்லப்பட்டிருக்கின்றன. அன்றியும், அவ்விடத்தில் கோகற்ப மென்றொருசிலாமத்தி

யில் பிலமுண்டு. அதில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு வேறு ஜனன மில்லையென்று வெகு பிரசித்தமா யிருக்கின்றது.

---

பல சுருதி.

முன் இந்த க்ஷேத்திரத்தில் பிரமன், தசரதமகாராஜன், தொண்டைமான் சக்கரவர்த்தி முதலானவர்களும், மானிடர்களும், இராக்ஷஸர்களும், ஸ்வாமி புஷ்கரணிமுதலான பதினொரு தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து, அவரவர்கள் மனோபீஷ்டங்களை அடைந்தனர்களாதலால் அப்படிப்பட்ட புண்ணியதீர்த்த பரிவிருதமாகிய வேங்கடாசலத்திற்கு இப்பொழுது எந்த மானிடனாவது வந்து அவ்விடத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து கலியுகத்தில் ஸ்ரீநிவாச ரூபதரனைத் தமது தரிசனஞ் செய்துகொண்டு வருகிற சகலமானவர்களுக்கும் மோக்ஷங்கொடுத்துகொண்டுவருகிற பகவானுக்கு, பூஜா பிரதக்ஷ நமஸ்காரம் செய்து வருவார்களானால், அவர்களுக்கு, இஹத்தில் சகல சம்பத்துகளும், புத்திர பௌத்திர அபிவிருத்தியும்-சமஸ்த ரோக நிவர்த்தியும்-நிரந்தரம் பகவத் பக்தியு முண்டாகி, கடைசியில் பரமபதவாசமும் உண்டாகு மென்று இவ் விருத்தாந்தங்கள் மார்க்கண்டேய புராண முதலிய எழு புராணங்களுள் சொல்லப்பட் டிருக்கின்றன.

இப்படிப்பட்ட புண்ணிய க்ஷேத்திரத்தில் பிரம்மாவானவர் எம்பெருமானைப்பார்த்து, "சுவாமி! யான் தங்களுக்கு மஹோற்சவம் செய்ய நினைத்திருக்கிறேனாகையால் அதற்கு உத்திரவளிக்க வேண்டும்" எனப் பலவாறாக வேண்டுகையில், ஸ்ரீநிவாஸமூர்த்தி "அவ்விதமே நடத்தும்" என ஆஞ்ஞாபித்தனர். அதன் பிறகு பிரம்மதேவரானவர் சௌளமான பிரகாரமாய்ச் சம்பவிக்கும் புரட்டாசிமாதம் சுக்லபக்ஷம் சித்தாநக்ஷத்திரத்துடன் கூடின சுபதினத்தில் த்வஜாரோகணம் செய்தும், அதுமுதல் ஒன்பதுநாள் வரையில் மகோற்சவம் செய்தும், அந்த உற்சவத்தைப் பார்க்கவரும் பிராம்மணர் முதலானவர்களுக்கு பக்ஷிய போஜ்ய சோஷிய லேஷ்யங்களென்னப்பட்ட நான்குவித அன்னதானங்கள் செய்தும், சிரவண நட்சத்திரத்துடன்சேர்ந்த தினத்தில் தீர்த்தோத்ஸவம் செய்தனராகையால் இப்பொழுதும் அவ்விதமாகவே பிரதிவருஷத்திலும் அந்த மாசத்தில் இரதோற்சவத்துடன் பிரம்

மோற்சவமும், மற்றும் பஞ்சபர்வாதி விசேஷோற்சவங்களும் செய்து வருகின்றனர்.

இந்தப் பர்வதத்தில் புராணப் பிரசித்தமா யிருக்கும் தீர்த்தங்களின் விவரம்:

குமாரதாராதீர்த்தம், நாரததீர்த்தம், பாபவிநாசகதீர்த்தம், பாண்டவதீர்த்தம், கபிலதீர்த்தம், விஷ்வக்சேனதீர்த்தம், அக்கினிகுண்ட தீர்த்தம், ஸப்தரிஷி தீர்த்தம், தும்புருதீர்த்தம், ஆகாச கங்காதீர்த்தம், சக்கரதீர்த்தம், கிருஷ்ண தீர்த்தம், இந்திரதீர்த்தம், பஞ்சாயுததீர்த்தம், பிரம்மதீர்த்தம், தொட்டிதீர்த்தமுமாம்.

---

## சுவாமி புஷ்கரணியிலுள்ள ஒன்பது தீர்த்தங்களின் விவரணம்.

கிழக்கில் மார்க்கண்டேயர் தீர்த்தம், தென்கிழக்கில் ஆக்கினேய தீர்த்தம், தெற்கில் எமதீர்த்தம், தென்மேற்கில் வசிஷ்டதீர்த்தம், மேற்கில் வாயுதீர்த்தம், வடமேற்கில் வராகதீர்த்தம், வடக்கில் குபேரதீர்த்தம், வடகிழக்கில் காலதீர்த்தம், மத்தியில் சரஸ்வதி தீர்த்தமுமாம், நிற்க.

---

இந்தத் திருப்பதி வேங்கடேஸ்வரர் சந்நதியில் பக்தி வைராக்கியத்தால் முக்தியடைந்த சில மஹான்களுடைய மஹத்துவங்களை பக்தவிஜய கிரந்தத்திலிருந்து இதனடியிற் பதிப்பித்திருக்கின்றோம்.

## ஸ்ரீதிருப்பதி மங்கம்மாள் சரித்திரம்.

ஸ்ரீ திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்தில் ஓர் தாய்தந்தைகளுக்கு ஓர் பெண் இருந்தனள். ஸ்ரீவேங்கடேசப்பெருமாள் மார்பில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீ லக்ஷ்மி தேவி, தாமரைக் கமலத்தில் அலர்மேன்மங்கை என்ற பேருடன் அருகாமையிலிருக்கும் திருச்சானூரில் எழுந்தருளியதால், தான் பெற்ற பெண்ணுக்கு மங்கை என்றும், அலர்மேன் மங்கை யென்றும் பேரளித்து, இந்தப் பெண்ணுக்குத் தக்க வயதுவந்த காலத்தில் அந்த ஊருக்கு அருகாமையிலிருக்கும் ஓர் கிராமத்தில் சுகுணமுள்ள ஓர் சிறுவனுக்குக்கொடுத்து விவாகம் செய்வித்தார்கள். அந்தப்பெண் சுபாவமாகச் சாதுக்களையும், கடவுளுடைய அடியார்களை

யும் பார்த்தபோதெல்லாம் அவர்களுக்கு நமஸ்காரம்செய்து வீட்டுக்கு அழைத்துக் கொண்டுவந்து அன்னபானங்களைக் கொடுத்து, சேவகன் எஜமானனுக்கும், சிஷன் குருவுக்கும் சேவை செய்கிறதைப்போல் உபசாரஞ் செய்து கொண்டு வந்தாள். தினந்தோறும் திரிகரணசுத்தியாய் ஏழுமலையின்பேரில் எழுந்தருளிய கடவுளின்பேரில் அசைவற்ற மனம் புத்திகளை வைத்துத் தியானம் செய்துகொண்டு வந்தாள். வீட்டு வேலைகள் முடிந்த பிறகு ஒரு நிமிஷ காலமாவது வீண் போக்காமல் ஹரிபஜனைகள் செய்து கொண்டிருந்தாள். சில வேளைகளில் அந்த ஊரில் யாராவது சாதுக்கள் வந்திருக்கிறார்களா என்று தேடிக்கொண்டு போய் அவர்களுக்குப் பலகாரங்களைக் கொடுத்துச்சேவை செய்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்து சன்மானம் செய்வாள் இப்படிச் செய்துகொண்டு வருகிறது அநேகருக்குச் சம்மத மில்லாததாய் இருந்தபோதிலும், புருஷனுக்கு மனமொத்ததாய் இருந்தது. அவன் மாணிக்கங்களைப் பத்திரம் செய்திருக்கும் பெட்டிகளைப்போல், கடவுளுடைய அன்பர்களே கடவுள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் சொரூபங்களென்றும், எவ்வளவு சுகங்களை அனுபவித்தபோதிலும் பிரபஞ்சவாழ்க்கை நசித்துப்போகுமென்றும், கடவுளை நாடுவதே விவேகிகளுடைய சிந்தனை என்றுமெண்ணித் தன் மனைவி போகும் வழிக்குத் தானும் அனுகூலமாய் இருந்தான். இப்படியிருக்க, ஒருநாள் மங்கம்மாள் அவ்வூரில் யாராவது சாதுக்கள் வந்திருக்கிறார்களா என்று பார்ப்பதற்குப் புறப்பட்டுப்போய் யாரையும் காணமல் அவ்வூருக்கருகாமையி லிருக்கும் ஓர் விஷ்ணுகோவிலுக்குள் பிரவேசித்து ஸ்வாமியைத் தரிசனம் செய்துகொள்ளலாமென்று எண்ணினள். அப்பொழுது அவ்விடத்தில் கோபீசந்தனத்தைப்போன்றதேகமுள்ளவராய்க் கையில் ஓர் தடியைவைத்துக்கொண்டிருக்கும் ஓர் வயோதிகரைக் கண்டாள். அந்தமாய்புருஷன் சாதுவாய் இருக்கவேண்டுமென் றெண்ணி அவர் பாதங்கள் பேரில் விழுந்து நமஸ்காரம் செய்து, அவரைத் தன் வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் ஸ்நானம் செய்வித்து, அநேகவித பலகாரங்களோடு போஜனம் வைத்தாள். அப்பொழுது அச்சாது அன்னத்தில் கையை வைத்து அவர்களைப் பார்த்து "ஓ தம்பதிகளே! மறுபடியும் நான் இவ்விடம் வந்தால் இன்னும் ஓர் தடவை போஜனம் செய்து வைக்கவேண்டும்; அதற்குச் சம்மதமா யிருந்

தால் சுவர்ணமலையில் எழுந்தருளிய கடவுளின்பேரில் ஆணையிட்டுக் கூறுங்கள். அப்படி இல்லாவிட்டால் இதை நான் புசிக்கமாட்டேன்" என்று சொல்லி எழுந்தார். அப்பொழுது தம்பதிகள் அவரை உட்காரும்படி செய்து, "அப்படியே அந்தக் கடவுளின்பேரில் ஆணையாகப் போஜனம் செய்து வைக்கிறோம்; நீங்கள் புசியுங்கள்" என்று பிரார்த்தித்தார்கள். அந்தச் சாது ஓர் பிடி அன்னத்தைப் புசித்துச் சொல்லாமற் போய்விட்டார். சில நாளுக்குள் அந்த ஊரில் விபரீதமாகிய பஞ்சம் உண்டாயிற்று. பக்ஷிகளுக்குக் கூட தானியங்கள் அகப்படாமற் போகும்படியான கஷ்டகாலம் நேரிட்டது. அப்பொழுது மங்கம்மாளும் அவள் புருஷனும் வீட்டிலிருந்த வஸ்துக்களை ஒன்றின்பின் ஒன்ருய் விற்பனை செய்து புசித்துவிட்டார்கள். கையிலிருந்த பொன்னும் பொருளும் வீட்டிலிருந்த சகல வஸ்துக்களும் போய்விட்டன. பிறகு இரண்டு நாள் புசிப்பில்லாமலிருந்து ஸ்திரீ புருஷாளிருவரும் ஏகோபித்து யோசனைசெய்து, "நாளை மங்கலியத்தையாவது விற்றுப் போஜனம் செய்ய வேண்டும்" என்று நிச்சயித்தார்கள். ஆகையால், மறுநாள் காலையில் மங்கம்மாள் மங்கலியத்தைக் கையில் வைத்துக்கொண்டு ஜெகதீசன்பேரில் சகல பாரங்களையும் போட்டு, "எல்லாம் அவன் செயல்" என்றெண்ணி, நேரிட்ட கஷ்டங்களைச் சகித்துக்கொண்டு கடைத்தெரு வழியாய்ப் போயினுள். அப்பொழுது கடைவைத்துக் கொண்டிருக்கும் ஓர் செட்டி அவளைப் பார்த்து, "அம்மா! உன் கையில் என்ன இருக்கிறது?" என்று கேட்டான். அதற்கு மங்கம்மாள், "மங்கலியம்" என்றும், "மூன்று நாளாய்ப் போஜனம் இல்லாததினுல் விற்க வந்தேன்" என்றும் கூறினுள். அதைக் கேட்ட செட்டி சந்தோஷப்பட்டு மனதில் துராலோசனை உள்ளவனுய் அவளைப் பார்த்து, "ஓ சுந்தரியே! உலகத்தில் உன்னைப்போல் அழகுள்ள ஸ்திரீகள் மிகவும் கொஞ்சமாய் இருக்கிருர்கள். உன் ரூபலாவண்ணியங்களுக்கு இந்தத் துர்த்தசை உனக்கு வரத்தகாது. ஆகையால், என்னோடு சேர்ந்து வாழ்வதற்கு உனக்கிஷ்டமானுல் உன் மங்கலியம் உன்னிடமே இருக்கட்டும்; இப்பவே உனக்கு ஆயிரம் வராகன் கொடுக்கிறேன்" என்று சொன்னுன். அதைக் கேட்ட மங்கம்மாள் மிகவும் அவமானத்தோடு மனவருத்தமடைந்து, "ஐயா! இராவணன் முதலியவர்கள் பரஸ்திரீகமனத்தால் பட்டபாடு

கேட்டதில்லையா? உன் துர்ப்புத்தியை விட்டுக் கடவுளுடைய பக்தியை மனதில் நிறுத்திச் சன்மார்க்க பிரவர்த்தனையுள்ளவனா யிருந்தால் சுகப்படுவாய்" என்று சொன்னாள். அதைக் கேட்ட செட்டி, "இவள் கடவுளிடத்துப் பக்தியுள்ளவளாய் இருக்கிறாள்; நான் தெரியாமல் அபசாரவார்த்தை சொல்லிவிட்டேன்" என்றெண்ணி மங்கம்மாளுக்கு நமஸ்காரம் செய்து, மங்கலியத்தை வாங்கிக்கொண்டு பத்து பணம் கொடுத்தனுப்பினான். அந்தப் பொருள் இரண்டு மூன்று தினங்களுக்குள்ளாகச் செலவாய்விட்டபடியால் அவர்களுக்கு மறுபடியும் கஷ்டம் அவ்வளவு அதிகமாய் விட்டது. இப்படி யிருக்க மூன்று நாள்வரையில் ஓர் துளி ஜலமாவது புசியாமல் பட்டினியாய் ஒவ்வொருவர் ஒவ்வொரு மூலையில் உட்கார்ந்துகொண்டு, "கடவுளே! இனி என்ன செய்வோம்; நீயே கதி", என்று வெங்கடாசலப் பெருமானைத் தியானித்துக்கொண் டிருக்கையில், பூர்வத்தில் வந்த கோபீசந்தனத்தை தரித்துக்கொண் டிருந்த சாது வந்தார். உடனே மங்கம்மாள் எழுந்து அவரை அழைத்து, பரிசுத்தமான ஜலத்தால் அவர் பாதங்களைச் சுத்தஞ்செய்து, ஓர் திவ்வியமாகிய ஆசனத்தின்மீது எழுந்தருளச் செய்தாள். அந்த ஸாது பசியினால் மிகுந்தவராயும், வெகுதூரத்திலிருந்துவந்தபடியால் தேகம் அலண்டதாலும், மங்கம்மாளைப் பார்த்து, "தாயே! நான் வெகு பசியாயிருக்கிறேன். முன் நீங்கள் திருவேங்கடப் பெருமான்பேரில் ஆணையிட்டபடி சீக்கிரமாய்ப் பொசிப்பைத் தருவாய்" என்று கூறினார். மங்கம்மாள் உடனே அப்புரம்போய்ப் புருஷனோடு சொல்ல, அவரும் அவளும் சில நேரம் ஒன்றும் பேசாமல் மரங்களைப்போல் அசைவற்று நின்று கண்களில் மாத்திரம் சிறு ஆரோட்டத்தைப் போல் ஜலம் பெருகி வந்துகொண்டிருந்தவர்களானார்கள். இப்படியிருந்து சிலநேரம் ஆனபிறகு மங்கம்மாள் புருஷனை நோக்கி, "பிராணநாயகா! இனி நாம் செய்வது என்ன? என் மனதில் ஓர் யோசனை நேரிட்டது. அது உங்களுக்குச் சம்மதமானால் தெரிவிக்கிறேன்" என்று சொன்னாள். அதைக் கேட்ட புருஷன் தக்ஷணமே சொல்லும்படி கட்டளையிட்டான். மங்கம்மாள் தேகாபிமானத்தை விட்டுக் "கடைத்தெருவில் ஓர் செட்டி இருக்கிறான்" என்றும், "அவன் என்னை மோகித்தான்" என்றும், "அவனிடம் போனால் பொருள் அகப்படும்" என்றும் கூறினாள்.

அதைக்கேட்ட புருஷன் பிரமையடைந்து நின்று, பிறகு மனைவியைப்பார்த்து, "நீ அப்படியே செய்வாய்; திருவேங்கடப்பெருமான்மேல் வைத்த ஆணை வீணாகப் போகக் கூடாது; மானம் போனாலும் பெரிதல்ல; பிராணன் போனாலும் பெரிதல்ல" என்று சொன்னான். உடனே மங்கம்மாள் புறப்பட்டு அந்தச் செட்டி வீட்டுக்கு வந்து அவனைப் பார்த்து, "ஐயா! உன் இஷ்டப்படிக்கு இருக்கச் சம்மதித்து வந்தேன்; என் வீட்டில் திருவேங்கடப் பெருமானைப்போல் ஓர் சாது வந்திருக்கிறார்; அவருக்குப் போஜனம் வைக்க வேண்டியதாக இருக்கிறது; பொருளைத் தாரும்; நான் அவரைச் சன்மானித்து அனுப்பிவிட்டு உடனே உன் வீட்டிற்கு வருகிறேன்" என்று சொன்னாள். அதைக் கேட்ட செட்டி ஆச்சரியப்பட்டுக்கொண்டு, "இது என்ன பக்தி? இப்படிப்பட்ட பக்தியைக் கலியுகத்தில் செய்கிறவர்களுண்டா? இந்தப்புண்ணியவதிவீட்டுக்குவந்திருக்கும் சாது எப்பேர்ப்பட்டவராய் இருக்கவேண்டும்; சாக்ஷாத் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானாய்த்தான் இருப்பார்" என்று மனதில் எண்ணி, மங்கம்மாளை நோக்கி, "தாயே! நீ மகா புண்ணியவதியாய் இருக்கிறாய்; உனக்கு நான் செய்த அபசாரத்திற்கு இந்த மாய உலகத்தில் எத்தனை ஜன்மங்கள் புழுக்களாய்ப் பிறந்து துன்பப்படவேண்டி யிருக்கிறதோ; நீ என் பாபத்தை க்ஷமித்து என்னைத் தோஷம் தொடாமல் இருப்பதாக ஆசீர்வதித்தால் போதுமானது; இதோ ஆயிரம் வராகன் எடுத்துக் கொண்டுபோம்" என்று கீழ் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தான். உடனே மங்கம்மாள், பொருளை எடுத்துக் கொண்டு, வேகமாகச்சென்று சகலபதார்த்தங்களையும் வாங்கிக்கொண்டு வீட்டிற்குப் போய்ச் சமயல்செய்யத் தொடங்கினாள். புருஷனும் அவளுக்குச் சகாயமாயிருக்க அவள் சகல பதார்த்தங்களையும் பலகாரங்களையும் செய்து முடித்தாள். அதற்குப் பிறகு பெரிய வாழையிலையைப் போட்டுப் போஜனபதார்த்தங்களை வட்டித்துச் சாதுவை அழைக்கையில் அவர் கோபம் செய்துகொண்டு; "இவ்வளவு நேரமாய்ப் பசியோடு வைத்தபடியால் இனி இவ்விடத்தில் புசிக்கமாட்டேன்" என்று பிடிவாதமாய்ப் பேசினார். அப்போது ஸதிபதிகளிருவரும் அவர் பாதங்களின் பேரில் விழுந்து வேண்டிக் கெஞ்சிக்கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கக் கடைசெட்டி மங்கம்மாளைத் தரிசனம் பண்ணினதுமுதல் சத்துவகுணமுள்ளவனாய்த் தான் செய்த அபசாரத்திற்குத்

தக்க தோஷநிவாரணை செய்துகொள்ள வேண்டுமென்றும், சாதுக்களைத் தரிசித்து அவர் சகவாசம் செய்யவேண்டுமென்றும், திருவேங்கடப்பெருமான் அருளுக்கு ஆளாக வேண்டுமென்றும் எண்ணியிருந்தான். மேலும், மங்கம்மாள் வீட்டில் வந்திருக்கும் சாதுவைப் பார்ப்பதற்கு மிகுந்த ஆவலுள்ளவனாய் அநேகவித கனிகளை வாங்கிக்கொண்டு புறப்பட்டுவந்தான். மங்கம்மாள் வீட்டில் சாது மிகவும் முரட்டுத்தனம் செய்துகொண்டு தடியைக் கையில் பிடித்துக்கொண்டு புறப்பட்டார். மங்கம்மாள் மிகவும் கெஞ்சிக்கொண்டு அவரது தடியைத் தானும் ஓர் பக்கத்தில் பிடித்துக்கொண்டு, "என் ஐயனே! இவ்விதமாய்ப் புசிக்காமல் போவது தர்மமா" என்று பின்னே தொடர்ந்துபோயினாள். புருஷனும் பின்னே தொடர்ந்து வந்தான். சாதுவைப் பார்க்கவந்தசெட்டி அவ்விடத்தில் நடக்கும் விசேஷங்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டு தானும் அவர்கள் பின்னால் தொடர்ந்தான். அந்தச் சாது என்ன சொன்னபோதிலும் கேளாமல் சிறுகச்சிறுகப்பசுவைப்போலும், பிறகு அஸ்வத்தைப்போலும், பிறகு காற்றைப்போலும் ஓடத் தொடங்கினார். அவரது சொரூபம் பஞ்சபூதப் பிரகாசங்களாய், பரப்பிரம்ம கலைகள் நிறைந்ததாய் இருந்தது. மங்கம்மாள் அவர் தடியை விடாமல் சொரூபக் கியானம் உள்ளவளாய், "என் துரையே! என் அறிவே! என் அன்பே" என்று கூவிக்கொண்டு ஓடினாள். அந்தச் சாது சுறுசுறுப்பாய்ப் போய்த் திருமலையேறி மேடு பள்ளங்களிலும் முள்ளுகளிலும் கற்களின்பேரிலும் இலக்ஷியமில்லாமல் போய்த் தங்கமயமாகிய திருவேங்கடப்பெருமான் திருக்கோயிலுக்குள் புகுந்து மூலஸ்தானத்தில் எழுந்தருளிய சாக்ஷாத்காரரான ஸ்ரீ வேங்கடேச பரப்பிரம்மத்தோடு நிறைந்துவிட்டார். மங்கம்மாளும் தடியை விடாமல் லக்ஷ்மிதேவி ஹரிமார்பில் குடியிருக்கிறதைப்போல் சர்வேஸ்வரனுடைய ஸ்ரீ கண்டகெர்பத்துக்குள் பிரவேசித்து ஐக்கியமாய்விட்டாள். பின் தொடர்ந்து வந்தபுருஷன் முன்போன இரண்டு பேரையும் காணமல் "மங்கா! மங்கா!" என்று கூவிக்கொண்டு ஹரி மாயை இவ்விதமாய் நேரிட்டதென்றும், தன் மனைவி பரிபூரண பக்தியினால் ஜகதீசனுடைய திருவுள்ளத்தில் பிரவேசித்தாள் என்றும் எண்ணித் தன் மனைவியை கூப்பிட்டுக்கொண்டுவர, காட்டில் ஓசை "என், என்" என்று கேட்டது. அந்த ஓசை உண்டாகும் திக்கை நோக்கிக் கூப்பிட்டுக்

கொண்டே வந்து ஜெகதீசனுடைய திருக்கோயிலில் பிரவேசித்து, "மங்கா!" என்று கூப்பிட, "ஏன், ஏன், ஏன்" என்று மூன்று தடவை பதில் சத்தம் உண்டாய் மறுபடி எத்தனை தடவை கூப்பிட்டபோதிலும் பதிலில்லாமற் போய்விட்டது. அதற்குமேல் அவன் வீட்டிற்கு வந்து அனுதினமும் திருவேங்கடப்பெருமானைத் தியானித்துக்கொண்டு "ஐயனே! மங்கையைக் கைக்கொண்டதைப்போல் என்னையும் ரக்ஷிப்பாய்" என்று முறையிட்டுக்கொண்டிருந்து சில நாளுக்குள் பரமபதத்தை அடைந்து நித்தியமுக்தனாய் வாழ்ந்தான். கடைசெட்டி சிலதூரம் ஓடிவந்து கூரான ஓர் முள் காலில் தைத்துக்கொண்டதினால் கீழே உட்கார்ந்து பாதைப்பட்டுக்கொண்டு, "அப்பா! அப்பா!! போதுமானது; இப்பேர்ப்பட்ட முரட்டுச் சாது உலகத்தில் கிடையாது; இவரோடு கூட ஓட யாரால் முடியும்?" என்று முறையிட்டுக்கொண்டு வீட்டைச் சேர்ந்து அதி சீக்கிரமாய் மிருத்தியுவடைந்து மறு ஜன்மத்தில் சந்திரகிரி அரசனாய்ப் பிறந்து ஜீவிதகாலமெல்லாம் திருவேங்கடப் பெருமானைத் தியானித்துத் தர்ம காரியங்களையும் சத்கர்மங்களையும் நடத்தி, முடிவில் அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகராகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் திருப் பொற்பாதங்களைச் சேர்ந்தான்.

---

## வேங்கடபதி சுபேதார் சரித்திரம்.

ஸ்ரீ திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்திற்கு வடமேற்கில் இருக்கும் ஸ்ரீ பண்டரிபுரத்தில் ஸ்ரீ வெங்டேசப் பெருமான் பாண்டுரங்கனென்று எழுந்தருளி இருக்கிறார். அந்தப் பண்டரிபுரத்திற்குச் சமீபத்தில் ஓர் கிராமத்தில் ஹரிபக்தியுள்ள தாய் தந்தைகள் இருந்தார்கள். அவர்கள் வம்ஸத்தார் பட்டாளத்தில் சிப்பாய்களாயிருந்து தைரியத்தினால் மிகவும் மேன்மை யடைந்தவர்களா யிருந்தார்கள். ஆகையால், அவர்களைப் பட்டாளத்தார் என்று சொல்வதுண்டு. அந்தத் தாய் தந்தைகளுக்கு வெகுகாலம் புத்திர சந்தான மில்லாமலிருந்து ஸ்ரீ வேங்கடேசப்பெருமான் வரப்பிரசாதத்தினால் ஓர் புத்திரன் பிறந்தான். அந்தக் குழந்தைக்கு வேங்கடபதி யென்று பேரளித்துத் தாய் தந்தைகள் மிகவும் பிரீதியுடன் வளர்த்துக்கொண்டு வந்தார்கள். இப்படியிருக்க, அந்தக் குழந்தை வளர்ந்து மகா தைரிய முள்ளவனாகவும், சூக்ஷ்ம புத்தி யுள்ளவனாகவும்,

தினந்தோறும் ஸ்ரீ ஹரிநாமத்தை ஜபித்துக்கொண்டு ஹரி கதைகள் சொல்லு மிடங்களுக்குப் போய்ப் பக்தியுடன் அதைக் கேட்பான். ஹரிநாம பஜனை செய்யும் ஹரிதாஸர் களைப் பார்த்தபோது அவர்களுக்குத் தண்டனிட்டுச் சக்தி யளவு அவர்களுக்குச் சன்மானம்செய்வான். இப்படியிருக்க அவருக்கு யுக்தவயது வந்தபோது பம்பாய் காலாட்படை யில் சிப்பாயாகச் சேர்க்கப்பட்டு அதி சீக்கிரத்தில் அவர் தமது சாமர்த்தியத்தினால் சுபேதார் என்னும் சேனாநாயக ராய்விட்டார். அதுமுதல் அவர் வெங்கடபதி சுபேதார் என்று மிகவும் பிரசித்தியடைந்தார். அநேக பயங்கரமாகிய யுத்தங்களுக்குப் போய் யாதொரு விபத்தும் நேரிடாமல் ஜெயமடைந்து வருவதால் "இவர் மிகவும் பராக்கிரமசாலி" என்று படையாள்களால் புகழ்ச்சி செய்யப்படுகிறதே யன்றி ராஜாங்கப் பிரபுக்களால் அநேக தைரிய குறிகளும் கௌரவ சின்னங்களும் கொடுக்கப்பட்டவரானார். அவர் பட்டாளத்தில் இருக்கும் சிப்பாய்களெல்லோருக்கும் "இக் காயம் அநித்தியம்" என்றும், "கடவுளைத் துதிசெய்வதே மனிதனாய்ப் பிறந்ததற்குச் சார்த்தகம் என்றும், "தைரியம், பக்தி, பராக்கிராமம், வைராக்கியம் ஆகிய இவை இருக்கப் பட்டவர்களுக்கு இகபரலோகத்தில் சகலசுகங்களுமுண்டா கும்" என்றும் கூறியதோடு இன்னும் அநேக உபன்னியா ஸங்கள் செய்து அவர்களைத் தைரியப்படுத்தி முடியாத காரியங்களையுங்கூடச் சாமர்த்தியத்தினால் முடிக்கச்செய்து பெரும் யுத்தங்களிலும் வென்றுவரும்படி செய்வார். காலை மாலையிலும் ஓய்வுகாலத்திலும் ஹரிபஜனைகள் செய்யும்படி சிப்பாய்களுக்கு உத்திரவுசெய்து துவாபரயுகத்தில் நாம் கண்ணால் பார்க்காத கோகுல பிருந்தாவனத்தை இப்பொ ழுது பார்க்கிறோ மென்கிறதைப்போல் சிப்பாய்களுடைய பஜனைக் கூட்டங்களும் கோஷ்டிகளும் பார்ப்பதற்கு அவ் வளவு அற்புதமாய் இருக்கும்படி நடத்திக்கொண்டுவந்தார். சில நாளுக்குப் பிறகு கடவுளைத் தியானம்செய்துகொண்டே காலத்தைக் கழிக்கவேண்டு மென்றெண்ணி உத்தியோக த்தை நீக்கிவிட்டுத் தெற்கில் பாலக்காடென்னும் ஊருக்குப் போய்ச் சேர்ந்தார். அவ்விடத்தில் ஹரிபஜனை மந்திரம் ஒன்றை ஏற்பாடுசெய்து, தன்னோடு அநேக பக்தஜனங்க ளைச் சேர்த்துக்கொண்டு, திரிகரண சுத்தியாக நித்திய கல் யாண மங்களாகரனாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான்மீது பஜனைகள்செய்து, ஆடிப் பாடி, கொண்டாடி மெய்மறந்து

தேகம் அசைவற்று நிற்பார். அண்டை அயலிலிருக்கும் ஜனங்களும் அவர் பெருமையைக் கேட்டுக் கூட்டங்களாய் வந்து அவரைத் தரிசிப்பார்கள். "எவ்வளவு கடவுளைச் சிந்தனை செய்கிறோமோ அவ்வளவு சர்வேஸ்வரனுக்குச் சமீபத்தில் போகிறோம்" என்றும், அவரை நினைக்காமல் எவ்வளவு மறந்திருக்கிறோமோ அவ்வளவு இயமனுக்குச் சமீபத்தில் போகிறோம்" என்றும், "ஆகையால் பக்த ஜனங்களே! கோவிந்தனைத் தியானம் செய்வீராக; அவர் திருவடிகளை மறக்காமல் இருப்பீராக!" "என்று அவர் அடிக்கடி சொல்லுவதைக் கேட்டுப் பக்தி இல்லாத அநேகர் ஹரிபக்தியுள்ளவர்களாய் அவரோடு பஜனைகள் செய்வார்கள். சில ஹரிதாஸர்கள் அவரைப் பார்த்து இவர் பட்டாளத்தில் சிப்பாய்களுக்குச் சேனாநாயகராய் இருந்ததைப்போல் பக்த ஜனங்களுக்கும் சேனாநாயகராய் இருக்கிறார்" என்று சொல்லுவார்கள். மேலும், அவர் பிரதிவருஷமும் தவறாமல் பக்த ஜனங்களால் சமர்ப்பிக்கப்பட்ட பொருளுள்ள உண்டியை எடுத்துக்கொண்டு முன்னூறுமைல் தூரத்திலுள்ள ஸ்ரீ வெங்கடேசப்பெருமாள் திருமலைமீதேறி சுவாமிபுஷ்கரணியில் ஸ்நானஞ்செய்து, பரப்பிரம்ம சொரூபராகிய திருவேங்கடப் பெருமானைத் தரிசனம்செய்து பொருளைச் செலுத்தி மறுபடியும் வருவார். கடவுளின்பேரில் நிறுத்தின ஒரே மனமுள்ளவராய் இருப்பதால் காற்றில் பறக்கும் பஞ்சைப் போல் அவர் திருமேனி அவ்வளவு லேசாய் விடுகிறபடியால் முன்னூறு மைலுள்ள திருமலைக்குப் போவதும் வருவதும் அவருக்கு அவ்வளவு சுலபமாயும் ஆனந்தமாயு மிருந்தது. வருஷந்தோறும் அவர் திருவேங்கடாசலபதி சன்னதிக்குப் புறப்படுவதற்கு முன்பாக பக்த ஜனங்களுள்ள வீதிகளில் ஹரிபஜனை செய்துகொண்டு பிரதக்ஷணமாய்ச் சுற்றி வருவதுமுண்டு. அவர் பெருத்த சரிரம் உள்ளவராகையால் ஊர்த்துவ புண்டரங்களைத் தரித்துக்கொண்டும், கண்டத்தில் துளசிமாலைகளைப் போட்டுக்கொண்டும், கைகளில் தம்பூரும் தாளமும் எடுத்துக்கொண்டும், பாதங்களில் கஜ்ஜைகளைக் கட்டிக்கொண்டும், "ஹரிகோவிந்தம் பஜகோவிந்தம்" என்று பஜனைசெய்து கொண்டும் வர, அவர் பிரபாவமுள்ள சொரூபத்தைப்பார்த்து "இவரேசாக்ஷாத் ஸ்ரீவேங்கடேசப் பெருமான்" என்று நினைத்து, பக்த ஜனங்கள் அவருக்குக் கர்ப்பூர நீராஞ்ஜனங்கள் கொடுத்தும், ஆலத்திகொடுத்தும், காணிக்கைகள் கொடுத்தும், தேங்காய் உடைத்தும், தண்ட

னிட்டும், புருஷர்களும் ஸ்திரீகளும் பெண்களும் குழந்தைக ளும் விருத்தாப்பியர்களும் "கோவிந்தா" என்று சொல்லிக் கொண்டு அவர் பின் தொடர்ந்து போவார்கள். அவர் திரு மலைக்குப் போகும்போதெல்லாம் அவரோடு ஓர் அன்பன் உண்டி பெட்டியைக் கையி லேந்திக்கொண்டு அவரோடு ஹரிதியானம் செய்துகொண்டு போவதுண்டு. ஒரு வரு ஷம் அவன் சம்சார அசந்தர்ப்பத்தாலும் பந்துக்களுடைய ஆக்ஷேபனையினாலும் போகாமல் நின்றுவிட்டான். ஆகை யால் சுபேதார் அவனை வீணாய் எதிர்பார்த்துப்பிறகு தாமே உண்டிப்பெட்டியை எடுத்துக்கொண்டு "ஸ்ரீவேங்கடேசப் பெருமான் ஒருவனே சத்தியம்; இவ் வுலக வாழ்வு எல்லாம் பொய்" என்று நினைத்துக்கொண்டு கொஞ்சதூரம் போனார். இப்படியிருக்க, வீட்டில் நின்றுவிட்ட அன்பருக்குக் காற்று மழைகளைப்போல் குளிர்காய்ச்சல் உண்டாய்ப் படுக்கமுடி யாமல் புறண்டுருண்டுகொண்டு உபாதை யடைந்தான். அதைப் பார்த்துத் தம்மால் செய்யக்கூடிய உபசாரணைகள் செய்தும் நோய் தீரப்பெறுமல் மேன்மேலும் அதிகரித் துக்கொண்டு வந்தது. அதற்குமேல் அந்த அன்பன் அவர் களைப் பார்த்து, "ஓ பாபிகளே! உங்களுடைய ஆக்ஷேபனை யினால் எனக்கு இந்த விபத்து நேரிட்டதாகும்; நான் கடவு ளுக்கு அபசாரம் செய்தேன்; ஆகையால், உடனே ஓடிப் போய் சுபேதார் சுவாமிகளை இவ்விடம் வரவழைப்பீர்க ளாக! இல்லாவிட்டால் என் பிராணன் போய்விடும்" என்று ஓசையிட்டு அழ, பந்து ஜனங்கள் திகிலடைந்து ஓட்ட மாய்ப் போய் வெங்கடபதி சுபேதார் பாதங்களில் விழுந்து வருந்திக் கூப்பிட, அவர் திரும்பிவந்தார். அந்த அன்பன் அவரைக் கண்ட வுடனே அவர் பாதங்களின்மேல் விழுந்து "சுவாமி! நீர் கடவுளுடைய உண்மையான அன்பராகும்; நீர் க்ஷமித்தால் கடவுள் என்னை க்ஷமிப்பார்; ஆகையால், அடியே னைக் காக்கவேண்டும்" என்று பிரார்த்திக்கையில், வெங் கடபதி சுபேதார், "நான் வைத்தியனல்ல" என்றும், "கடவு ளுடைய அடிமை" என்றும் "என்னிடம் சுவாமி துளசி யும் தீர்த்தமும் தவிர வேறொன்று மில்லை" என்றும், ஓர் துளசிதளமும் ஓர் கரண்டி தீர்த்தமும் கொடுத்தார். அவ் விடம் சேர்ந்திருந்த ஜனங்கள் யாவரும் ஆச்சரியம் அடை யும்படி அந்த அன்பனுடைய ரோகம் உடனே நீங்கிப் போக அவன் ஆனந்தக் கூத்தாடிக்கொண்டு அவரோடு சென்று திருமலை ஏறி, திரிவேணி-சங்கமமாகிய புஷ்கரணி

யில் ஸ்நானம் செய்து, மூன்று லோகத்திலும் கிடைக்கக் கூடாத ஸ்ரீ வேங்கடேச பரப்பிரம்மத்தைத் தரிசனம் செய்து திரும்பிவந்தான். சுபேதார் அவர்கள் பூஜை கிரகத்தில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் தங்க விக்கிரகத்தை எழுந்தருளச் செய்த பீடத்தைப் பரிசித்தவர்களுக்குச் சர்வ பாவங்கள் நசித்து வித்யுத்சக்தி ஆக்ஷணையினால் கடவுளுடைய பக்தி நிலையாக உண்டாய் வந்தது. அதைப் பூசித்தவர்களுக்குச் சகல ரோகங்கள் தீர்ந்தும், விபத்துகள் மாண்டும், தரித்திரம் ஒழிந்தும், திருவேங்கடராஜலபதி அருளினால் சகல காரியங்கள் கைகூடியும் வந்தன. சில நாள்களுக்குப்பின்பு வேங்கடபதி சுபேதார் ஸ்ரீ ஹரிபஜனை செய்து அதே தியானத்தில் இருந்து பிராணனை விட்டு ஸ்ரீ வைகுண்ட நாயகன் திருவடிகளைச் சேர, அவர் திருமேனியைப் பக்த ஜனங்கள் பாலக்காட்டிற்கு அருகாமையில் சமாதி செய்தார்கள். சில காலத்தில் அந்தச் சமாதியில் ஹரி பஜனைகளுடைய ஓசை கேட்டபடியால் அருகாமையிலிருந்த ஜனங்கள், "அவர் மகா புண்ணியவானாய் இருக்க வேண்டும்" என்றெண்ணி அந்தச் சமாதிக்குப் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து உலகத்தில் மேன்மேலும் அதிக சுகங்களை அனுபவித்துக்கொண்டு வந்தார்கள். காலவசத்தால் சில நாளைக்குப் பிறகு அந்த இடம் ஓர் மகம்மதியனுடைய சுவாதீனமாய் விட்டபடியால் அவன் தனது துர்ப்புத்தியினால் அந்தச் சமாதியை இடித்துவிடத் தொடங்கினான். அப்பொழுது அவன் திருஷ்டியானது குறைந்து மறுபடியும் சூரிய சந்திர பிரகாசமுள்ள பிரபஞ்சத்தைப் பார்க்க முடியாமல் குருடாய்ப் போய்விட்டது. வெங்கடபதி சுபேதார் சந்ததியார் இன்றைக்கும் இத் தேசத்தில் இருக்கிறார்கள். அவர் பஜனை மந்திரமும் இருக்கின்றது. வெங்கடபதி சுபேதார் உண்டியென்று காணிக்கை வருஷந்தோறும் ஸ்ரீ திருப்பதிக்கு வருகின்றது.

---

## சென்னை தாஸர் சரித்திரம்.

ஸ்ரீ திருப்பதி க்ஷேத்திரத்திற்குத் தெற்கில் சென்னைக்குச் சமீபத்தில் ஓர் கிராமமிருந்தது. அந்தக் கிராமத்தில் ஓர் தாய் தந்தைகளுக்கு ஹரிபத்தியுள்ள ஓர் பிள்ளை இருந்தான். அவனுக்குத் தக்கவயது வந்தவுடனே விவாகம் செய்துவைத்துத் தாய் தந்தைகள் சகல சௌக்கியங்களை

நடத்திக்கொண்டு வந்தார்கள். ஸ்ரீ ஹரிபஜனைகள் செய்வதும், ஹரி கதைகளைக் கேட்பதும், ஹரிபூஜை ஹரித்தியானத்தில் மிகவும் கவனம் உள்ளவராயு மிருப்பதால், அவருக்கு வேலை செய்து ஜீவிப்பதற்கு இஷ்டமில்லாமற் போய் விட்டது. சிலகாலத்திற்குள் தாய்தந்தைகள் இறந்துபோனார்கள். அந்த ஹரிதாசருக்கு விசேஷமான புத்திர சந்தானம் உண்டாய்விட்டது. தாய் தந்தைகள் வைத்த பொருளெல்லாம் செலவழிந்து போனபடியால், சம்சாரத்தைப் போஷிப்பதற்காகச் சென்னைக்கு வந்து ஓர் உத்தியோகத்தில் சேர்ந்து, வெகு சொற்பவருமானம் வருகிறபடியால் போதாமல் அநேக விதங்களான கஷ்டங்களைச் சமுசாரத்தில் அனுபவித்துக்கொண்டுவந்தார். எவ்வளவு கஷ்டங்கள் நேரிட்டபோதிலும் சகல துக்கங்களையும் போக்கி இரக்ஷிக்கும் கருணைக் கடலாகிய ஸ்ரீ வேங்கடேசப்பெருமானைத் தினந்தோறும் முக்காலங்களிலும் ஆராதித்துக்கொண்டுவந்தார். பதிவிரதையாகிய அவர் மனைவி அவரோடு சேர்ந்து சகல கஷ்டங்களையும் அனுபவித்துக்கொண்டு வந்தார் இப்படியிருக்க, அவருக்குக் காலையில் எழுந்ததுமுதல் இரவில் தூங்கும்பரியந்தம் குழந்தைகளாலும் சம்சாரத்தினாலும் உத்தியோகத்தினாலும் அபாரமாகிய மனோகிலேசமும், சிந்தனையும், விசாரமும் உண்டாயின. சில வேளைகளில் புசிப்பில்லாமல் மிகவும் மெலிந்த தேகம் உள்ளவராய்ச் சம்சார மென்கிற அக்கினியில் வெந்த மனம் உள்ளவராய்ப் பின்வருமாறு யோசிப்பதற்குத் தொடங்கினார்—:

"நான் சம்பாதித்தும் புசிப்புக்குப் போதாம லிருக்கிறது; சம்சாரத்தில் கஷ்டமோ கடலைப்போல் சகிக்க முடியாமல் அவ்வளவு பெரியதாய் இருக்கிறது. ஆகையால், துக்கமென்கிற மிருகத்திற்கு என் மனோகாயங்களை இறையாகச் செய்வதில் என்ன பிரயோஜனம்? கடவுளின்பேரில் எல்லாப் பாரங்களையும் வைத்து அவரே கதியென்று நம்பி அவர் தியானத்தில் இருந்து காயத்தைப்போக்கிவிடுகிறேன்" என்று மனதைத் திடம்செய்துகொண்டு மறுநாள் காலையில் எழுந்து ஸ்நான அனுஷ்டானங்களை முடித்து, திரிகரண சுத்தியாய் உட்கார்ந்து ஸ்ரீ வேங்கடேஸ பெருமாள் பாத பத்மங்களில் மனதை நிறுத்தி, "கடவுளே! நீயே கதி" என்று அப்படியே தம்மைமறந்து நிஷ்டையில் இருந்தார். தினந்தோறும் இப்படிச் செய்துகொண்டு வந்தபடியால்

அவர் சம்சாரத்திற்கு வேறு சகாயம் இல்லாததினால் குடும்ப காரியம் நடந்தேறுவது வெகு கடினமாயிற்று. அதற்குமேல் அவர் மனைவி தமது நகைகளை விற்றுச் சிலநாளும், வீட்டுச் சாமான்களை விற்றுச் சிலநாளும் புருஷனுக்கும் குழந்தைகளுக்கும் போஜனத்தை நடப்பித்து, பிறகு ஒன்றும் இல்லாமற் போனபடியால் சிறு குழந்தைகளைமாத்திரம் எடுத்துக் கொண்டு அண்டை அயல்களிலிருக்கும் வீடுகளுக்குப் போய் வேலைசெய்து கொஞ்சம் அன்னத்தைச் சம்பாதித்துக் குழந்தைகளைப் போஷித்துப் புருஷனுக்கும் கொடுத்து மீந்தபோது தான் புஸித்தும் மிகுதியிராதபோது "கடவுளே! எல்லாம் உன்செயலேயன்றி என் செயலால் ஆகிறதென்ன" என்று பசியைச் சகித்துக்கொண்டும், முகத்தில் துக்கக்குறியில்லாமல் கடவுளுக்கு நாளை ஒப்பித்துக்கொண்டும் வந்தாள். இப்படியிருக்க மற்றக் குழந்தைகள் வீதிகளில் திரிந்துகொண்டு "ஐயா! பசியெடுக்கிறது" என்று பிச்சை எடுத்துக்கொண்டு யாராகிலும் கொஞ்சம் அன்னம் கொடுத்தால் அவர்களே தாய் தந்தையர்களென்று எண்ணி அவர்கள்பின் சுணங்கனைப்போல் ஓடிக்கொண்டு காலம் போக்கிக்கொண் டிருந்தார்கள். இப்படியிருக்க, ஹரி பக்தியில் மூழ்கியிருந்த தாஸர் ஒரு நாள் சம்சாரத்தை நோக்கிப் பார்க்கையில் குழந்தைகள் வீதியில்படும்பாடுகளையும்மனைவி தமது சிறு குழந்தைகளைப் போஷிப்பதற்கும், தனக்காகவும் அவள் வயிற்றை வளர்ப்பதற்காகவும் படும்பாடுகளை யோசித்துப் பொறுக்க முடியாத துக்க முள்ளவராய்க் கடவுளை நோக்கி, "ஓ தெய்வமே! இனி நான் பூலோகத்திலிருப்பது நலமல்ல; உன் திருவடிகளைச் சேருவதே நன்றாயிருக்கிறது; ஆகையால், புத்தியையும் முத்தியையும் கொடுக்கும் ஓ வேங்கடேசப் பெருமானே! உன் திருமலைக்கு வந்து உன் திருவடிகளில் பிராணனை விட்டுவிடுகிறேன்; இந்தத் துக்கத்தைச் சகிக்க என்னால் முடியாது" என்று சொல்லி அந்த க்ஷணமே திருமலைக்குப் புறப்பட்டார். அப்படி நடந்து போகையில் அவருக்குப் பசி அதிகமாய்விட்டது. காட்டு நெருப்பைப்போல் வயிறு பற்றி யெரிந்தது. அந்தப் பாதையைச் சகிக்கமுடியாமல் ஹரிதாஸர் கடவுளை நோக்கி அழுது கொண்டு முட்கள் கற்கள் இவற்றின்மீது நடந்து, மிகவும் தலண்டு பொறுக்க முடியாத ஓய்ச்சலினால் கீழ்விழுந்தும், மறுபடி மேல் எழுந்தும் சமீபத்திலுள்ள கிராமங்களுக்குப் போய்ப் பிச்சை கேளாமல், "ஸ்ரீ வேங்கடேஸா! தீன

தயாளா! ஆபத்பாந்தவா! உன் ஒருவனையே பிச்சை கேட்பேன்; நீ ஒருவனே எனக்கும் சகலலோகங்களுக்கும் ரக்ஷகரும் பிரபுவும் தாதாவுமல்லவோ; எந்த வழிவிட்டாலும் நீயேகதி, நீயேதுணை'' என்று விசேஷமாய் முறையிட்டுக்கொண்டு மழைத் துளிகளைப்போல் கண்களிலிருந்து ஜலம் பெருகிவர அழுதுகொண்டு, பிறகு பசியும் தாகமும் ஓய்ச்சலும் அதிகரித்து, மகா அரண்ணியமாகிய வழியில் கீழேவிழுந்து அப்படியே தூங்கிவிட்டார். இரவு ஆனவுடனே இருள் நிறைந்துவிட்டது. பனி அவர் தேக சிரமத்தைத் தீர்ப்பதைப்போல் குளிர்ந்த நீர் முத்துகளால் அலங்கரித்தது. இரவு இரண்டு ஜாமமான பின்பு திருமலையில் எழுந்தருளிய கருணைக்கடலாகிய ஸ்ரீவேங்கடேஸ பெருமான் திருமண்காப்புத் தரித்துக்கொண்ட ஓர் பிராமணரைப்போல வேடம் பூண்டு மணம் பொருந்திய சூடான பிரசாதங்களை ஓர் தட்டில் வைத்துக்கொண்டு அவ்விடத்திற்கு வந்து, "கோவிந்தா" என்று சப்தம் செய்துகொண்டு அவர் பக்கத்தில் உட்கார்ந்தார். அலண்டு தூங்கிக்கொண்டிருந்த ஹரிதாசர் தனக்கு வெகு இன்பமாகிய கோவிந்த நாமாமிர்தத்தைக் கேட்டமாத்திரத்தில் கண்களைத் திறந்து பார்க்க, பிராமணராக வந்த ஸ்வாமி அவரை நோக்கி, "அடா! இந்தப் பயங்கரமாகிய காட்டில் நீ ஏன் இவ்விதமாய்த் தூங்குகிறாய்?'' என்று கேட்டார். ஹரிதாஸர் அதற்கு, "சுவாமி! எனக்குப் பூலோகத்தில் ஸ்ரீவேங்கடேசபெருமான் தவிர வேறு தாய் தந்தைகளும், ரக்ஷகரும், பந்துக்களும், அன்பர்களும், துணையும், நிழலும் கிடையா. ஆகையால், சம்சார துன்பத்தைப் படமுடியாமல் திருமலைக்குப் போய் அவர் சந்நிதியில் பிராணனை ஒப்புவித்து விடுவதற்குப் போகிறேன்; பிரயாண அலைச்சலால் இவ்விடத்தில் தூங்கினேன்'' என்று சொல்ல, பிராம்மணர் புன்சிரிப்பாகச் சிரித்து, "ஆனால், இந்தத் தட்டிலிருக்கும் பிரசாதத்தைப் புசித்துப் போவாய்!'' என்று சொல்லி உடனே எழுந்து போய்விட்டார். ஹரிதாஸர் அதைப் புசித்து மிகவும் சந்தோஷமுள்ளவராய், "கோவிந்தா! நான் ஜன்மம் எடுத்ததுமுதல் இவ்வளவு திருப்தியான போஜனம் உண்டதில்லை; மேலும், இது சூடாயிருப்பதற்கு என்ன காரணமோ; ஆ! ஆ! இந்தப்பிராம்மணர் சர்வேஸ்வரனை ஸ்ரீவேங்கடேசப்பெருமானாய்த்தான் இருக்கவேண்டும். நான் தேடிக்கொண்டுபோகும் கடவுள் வழியில் அகப்பட்டும் விட்டு

விட்டேன்; என் மூடபுத்திக்கு என்ன செய்வேன்?" என்று சிந்தித்துச் சிறிது நேரத்திற்குள் யானையைப்போல் பலமுள்ளவராய் வஜ்ஜிரத்தைப்போல் தேகமுள்ளவராய், மிகுந்த ஆனந்தத்தோடு "ஹரிநாராயணா! ஹரிநாராயணா!!" என்று பஜனை செய்துகொண்டு சிறிது நேரம் ஆடியும், சிறிது நேரம் பாடியும், தேவதேவனைக் கொண்டாடிக்கொண்டு வெகு சுலபமாய் மலையை ஏறிச் சுவாமி புஷ்கரணி தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து ஸ்ரீவெங்கடேஸபெருமான் எழுந்தருளிய மூலஸ்தானத்திற்கு நேராய் வந்து நின்று புஷ்பசரங்களைப் போன்ற ஸ்தோத்திரங்களால் கடவுளைத் தியானித்துக்கொண்டிருந்தார். இப்படியிருக்க, முன்னால் இரவில் மஹந்துவினுடைய சொப்பனத்தில் ஸ்ரீ வெங்கடேஸபெருமாள் பிரசன்னராய், "அடா! என் அன்பன் கோவில் வாசலில் வந்திருக்கின்றான்; நீ அவனைத் தக்க மரியாதைகளோடு வரவழைத்துச் சகல சௌக்கியங்களை நடத்துவாய்! அவன் சந்தோஷித்தால் நான் சந்தோஷிப்பேன்; அவனுக்குக் குறையுண்டானால் எனக்கும் குறை யுண்டாகும்" என்று உத்திரவளித்துப் போனார். ஆகையால், காலையில் எழுந்தவுடனே மஹந்து, பல்லக்கைத் தயார் செய்துகொண்டு கோவில் வாசலில் வந்து பார்க்கையில் யாரோ ஒரு சாமானியநரன் ஹரியைப் பாடிக்கொண்டிருப்பதைக் கண்டான். "இவன் கடவுளுடைய அன்பனாய் இருப்பானா" என்று சந்தேகித்துச் சிறிது நேரம் யோசித்துப் பிறகு "இவ்விடத்தில் வேறொருவரும் காணப்படவில்லை; ஹரிதாஸர்கள் எப்படியிருப்பார்களோ" என்று நினைத்து, அவருக்குத் தெண்டனிட்டு, அவரைப் பல்லக்கின்மீது எழுந்தருளச் செய்து தன் நிவாஸ ஸ்தானத்திற்கு அழைத்துக்கொண்டு வந்து அரசனுக்கு நடத்துவதைப்போல் சகல சௌக்கியங்களை நடத்தியும், சகல தீர்த்தங்களுக்குப் போகச் செய்தும், அநேக விதங்களாகச் சன்மானம்செய்தும், மறுபடியும் ஸ்ரீநிவாஸமூர்த்தி சொப்பனத்தில் கட்டளையிட்டபடிக்கு ஹரிதாசருக்கு ஏழு மூட்டை தங்கவராகன் கொடுத்துப் பல்லக்கில் ஏற்றிப் பரிவாரங்களுடன் அவரை ஊருக்கு அனுப்பிவிட்டார். ஹரிதாஸர் ஊரைச் சேர்ந்து தன் மனைவியையும் பிள்ளைகளையும் வரவழைத்துக்கொண்டு ஏகசக்கிராதிபதியைப்போல் சகல சுகங்களை அனுபவித்துக்கொண்டும், தினந்தோறும் ஹரிபஜனைகள் விசேஷமாய் செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் அநேக பக்தஜனங்கள் பஜனைக்கு வந்

இருந்தபோது அவர் தமது காலில் கெஜ்ஜைகளைக் கட்டிக் கொண்டும், தமது தம்பூரு தாளங்களைக் கரங்களில் பிடித்துக்கொண்டும், ஊர்த்துவபுண்டரங்களைத் தரித்துக்கொண்டும், ஹரிபஜனை செய்துகொண்டுமிருக்கையில் அவருக்கு ஞான நேத்திரம் உண்டாய்க் கோடி சூரியப்பிரகாசராகிய ஸ்ரீவெங்கடேசப் பெருமான் பரஞ்சோதியாய்த் தரிசனம் கொடுத்து ஆறுகள் கடலில் சேர்ந்து நாமரூபங்கள் இல்லாமற் போகிறதைப்போல் தனக்குள் ஐக்கியம் செய்து கொண்டார். அதற்குமேல் அவ்விடத்தில்சேர்ந்திருந்தபக்த ஜனங்கள், அன்பர்களை ரக்ஷிப்பதே ஜீவனமாய் இருக்கும் ஸ்ரீவெங்கடாஜலபதி பெருமையைக் கொண்டாடிக்கொண்டு அந்தப் புண்ணிய புருஷருடைய தேகத்தைச் சகலவித மரியாதைகளோடு ஹரிபஜனை செய்துகொண்டு ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி பிருந்தாவன மிதுதானென்கிறதைப்போல் அனந்தவைபவ பிரம்மானந்தத்தோடு எடுத்துக்கொண்டு போய்த் தகனம் செய்து வைத்தார்கள். தாஸர் வெகுகாலம் சென்னையில் இருந்தபடியால் சென்னைதாஸர் என்று அவருக்குப் பேரளித்து, அவர் பக்தி மகிமைகளை ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டு அநுதினமும் கருணாநிதியாகிய ஸ்ரீவேங்கடேசப் பெருமானைப் பக்தி பூர்வமாகத் தியானம் செய்துகொண் டிருந்தார்கள்.

---

## சக்கிலிய ஸ்வாமிகள் சரித்திரம்.

ஸ்ரீ திருப்பதி மகாக்ஷேத்திரத்திற்குச் சமீபத்தில் ஓர் கிராமம் இருக்கிறது. அந்தக் கிராமத்தில் ஓர் சக்கிலியர் தன் மனைவியோடு சமுசாரம் நடத்திக்கொண்டு பாதரக்ஷைகளைச் செய்து அந்தப் பொருளினால் ஜீவனம் செய்து கொண்டிருந்தார். எவ்வளவு மஹான்னியர்களுக்கும் பிராரத்தத்தை அனுபவிக்காமல் முடியாதாகையால், அந்தச் சக்கிலியருக்குப் பூர்வஜன்மத்தில் செய்த கர்மவசத்தால் ஓர் கோரமான வாதரோகம் உண்டாய், அதனால் விசேஷ துன்பம் அடைந்துகொண்டிருந்தார். அநேகவித ஔஷதங்களை உபயோகித்தும், தீர்க்ககாலமாக அநேக சிகிச்சைகள் செய்தும், நோய் தீராமலிருந்தது. இப்படியிருக்க ஒரு நாள் அந்தச் சக்கிலியர் குடியிருக்கும் வீதியாகத் திருமலைக்குப் போகும் ஓர் ஜனசமூகம் கோவிந்தநாமஸ்மரணை செய்துகொண்டு போனார்கள். சக்கிலியர் அதை யறிந்து

தன் மனைவியைக் கூப்பிட்டு, "ஏன் அவர்கள் அவ்விதமாக ஹரித்தியானம் செய்துகொண்டு போகிறார்கள்? அந்தச் சங்கதியை விசாரித்து எனக்குச் சொல்லுவாய்?" என்று கேட்க, அவள் அதை விசாரித்துக்கொண்டு புருஷனிடம் வந்து இவ்விதமாய்ச் சொல்லலுற்றாள்: "ஓ பிராண நாயகா! ஆறுகளென்னும் ஆறு மலைகளைத் தாண்டி, ஏழாவது மலையென்னும் ஸஹஸ்ரார பீடத்தில் சர்வபாவங்களைப் போக்கி, பக்தகோடிகளை ரக்ஷிக்க எழுந்தருளிய ஸ்ரீவேங்கடேசப் பெருமான் இருக்கிறாராம். அவர் ஒருவரே, குழந்தைகளுக்குக் காலில் குத்திக்கொண்ட முள்ளுகளைக் குழந்தைகளால் நீக்கிவிட முடியாமல் தாயினால் நீக்கப்படுவதைப் போல் பக்த கோடிகளுடைய ஆகாமிய சஞ்சித பிராரத்தங்களைப் போக்கி ஞானாமிர்தத்தை ஊட்டி ரக்ஷிக்கும் பிரபுவாய் இருக்கிறாராம்; ஆகையால், அந்த ஜனங்களுக்கு உண்டான பிரார்ப்தத் துன்பம் அவர் அருளால் நீங்கிப்போனபடியால் பிரார்த்தனை செலுத்துவதற்காகத் திருமலைக்குப் போகிறார்களாம்." இப்படிச் சொல்லக் கேட்ட சக்கிலியர் "ஆ! ஆ!! இது நல்ல விசேஷமாய் இருக்கிறது; என்னுடைய நோய் தீர்ந்துவிட்டால் நானும் என் பிரார்த்தனையைச் செலுத்துகிறேன்" என்று ஸ்ரீவெங்கடேசப் பெருமானை மனதில் நினைத்து, "ஓ தெய்வமே! பாவங்களென்னும் பனிக்கு உன் அருளே சூரிய அனலாய் இருப்பது நிஜமானால் என்னுடைய ரோகததைப் போக்கி ஆரோக்கியத்தைத் தருவாயாகில் உன்னுடைய திருப்பொற்பாதங்களுக்கு மிகவும் உறுதியான நல்ல பாதரக்ஷைகளைச் செய்து சமர்ப்பிக்கிறேன்; நான் செய்யும் பாதரக்ஷைகளுடைய உறுதியைப்பாரும்; முதல் தரமானதாயிருக்கும்; நீர் அதைத் தரித்துக்கொண்டு உமது திருமலையின்பேரில் நன்றாய் நடக்கலாம்; சுவாமி! இதைத் தயவு செய்து கேட்டு சுகத்தைத் தருவாய்" என்று பிரார்த்தித்துக் கொண்டான். சில நாளுக்குள் அவன் ரோகம் தேய்பிறையைப்போல் குறைந்துபோய் ஆரோக்கியம் அதிகரித்தபடியால் அவர் ஸ்ரீ வெங்கடேசப் பெருமான் செய்த நன்றியை மனதில் நிறுத்தினவனாய், அன்பும் பக்தியும் சிநேகமும் உறுதியாய் உண்டானவனாய், மனைவிக்கும் அண்டை அயலிலிருக்கப்பட்டவர்களுக்கும் தனக்குண்டான சுகுணத்தைச் சொல்லிக்கொண்டு ஹரியை மிகவும் புகழ்ச்சி செய்து, பிறகு ஒருநாள் சுவாமிக்குப் பிரார்த்தனை செலுத்துவதற்காகக்

காலையில் எழுந்து ஸ்நானம் செய்துகொண்டு பரிசுத்தமான உள்ளத்தோடு பரந்தாமனை மனதில் நிறுத்தி அவர் திரு நாமத்தை ஜபித்துக்கொண்டு, நல்ல சர்மங்களையும் புதிய ஆணிகளையும் கயிற்றையும் சரிகைக்குச்சுகளையும் எடுத்து ஸ்ரீ ஹரிக்குப் பாதரக்ஷைகளைச் செய்யத் தொடங்கினர். ஸ்ரீபாதத்தின் அளவு அவருக்குத் தெரியாததினால் விசாரப் பட்டுக்கொண்டு, "ஓ சுவாமி! உன்னை நான் எப்பொழுதும் பார்த்ததில்லை; உன் பாதங்கள் சிறிதோ பெரிதோ எனக் குத் தெரியாது; நீர் குட்டையானவரோ உயரமானவரோ எனக்குத் தெரியாது; ஆனல், எப்படியாவது உமக்குப் பாதரக்ஷைகள் செய்து சமர்ப்பிக்க வேண்டுமாகையால் என்ன செய்வேன்?" என்று அழுதுகொண்டு பரவசராய்க் கீழே படுத்துத் தூங்கிவிட்டார். அப்பொழுது அவன் சொப்பனத்தில் நீலவர்னமுள்ள ஒர் மனிதன் ஊர்த்துவ புண்டரங்களைத் தரித்துக்கொண்டு தரிசனம் கொடுத்து "அடா! நீ யேன் விசனப்படுகிறுய்? ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள் என்னைப்போல் இருப்பார்; என் காலுக்குச் சரியாய்ப் பிடிக்கும் பாதரக்ஷைகள் அவருக்கும் சரியாய் இருக்குமாகையால் என் பாதத்தைப் பாரும்" என்று சொல்லி அளவைக் காட்டிப்போனுர் சக்கிலியர் தூக்கம் தீர்ந்து திடீரென்று விழித்துக்கொண்டு, சொப்பனத்தில் கண்ட அளவின்படி பாதரக்ஷைகள் செய்து முடித்தார். பிறகு அதற்கு அநேகவித வருணங்களைக் கொடுத்து, குச்சு களைக் கட்டி, சிருங்காரங்கள் செய்து, அதைத் தன் சிரத் தின்மேரில் வைத்துக்கொண்டு ஸ்ரீ ஹரிக்கு அற்பிதம் செய் வதற்காகத் திருவேங்கடத்திற்குப் புறப்பட்டார். வழியில் ஸ்ரீ ஹரி நாமத்தை ஜபித்துக்கொண்டு வேறு எண்ணங்க ளில்லாமல் நடந்துபோய் திருமலையின் சமீபத்தில்சேர்ந்தார். உலகத்தின் நிர்பந்தத்தால் தான் ஜாதி ஈன னென்றும், திருமலையில் ஏறக்கூடாதென்றும் தெரிந்து மிகவும் விசன முள்ளவராய், மலையடிவாரத்தில் உட்கார்ந்துகொண்டு ஜெக தீசனை நோக்கி முறையிடத் தொடங்கினர்: (ஸ்லோகம்) சுவ்பசோபி மஹிஷால விஷ்ணு பக்தோ திவிஜாதிபஹ விஷ்ணுபக்தி விஹீனஸ்து திவிஜோபி ஸீவ்பசாதமஹ" "நாய் மாமிஸத்தைச் சாப்பிடும் சண்டாளனுய் இருந்தாலும் விஷ்ணுபக்தியுள்ளவன் துவிஜர்களாகிய பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களுக்கும் சிரேஷ்டமானவனுவான்; விஷ்ணுபக்தி

இல்லாதவர்கள் துவிஜனாய் இருக்கினும் நாய் மாமிஸத்தைச் சாப்பிடும் சண்டாளர்களுக்கும் தாழ்ந்தவர்கள்'' என்று பிரமாணங்க ளிருக்கினும் உலகத்தார் கேவலம் உலகவாசனையினால் அந்த ஸ்ரீ பக்த சிரோமணியை மலையேறவொட்டாமல் ஆக்ஷேபித்தார்கள். ஆகையால், அந்தச் சக்கிலியர் கடவுளை நோக்கி, ''சுவாமி! நீரே வந்து இதை எடுத்துக் கொண்டு போவீர்; நான் உன் திருமலையின்மீது ஏறக்கூடாதென்றால் நானென்ன செய்வேன்? அது என் பழுதல்ல,'' என்று சொல்லிக்கொண் டிருக்கையில் பொழுது போய் விட்டபடியால் அந்த மலையின் அடிவாரத்தில் பாதரக்ஷைகளை வைத்து ஹரியை அவ்விடம் வந்து அதை எடுத்துக் கொண்டு போகும்படி பிரார்த்தித்துக்கொண்டிருந்தார். இரவு இரண்டு ஜாமம் ஆகியும் சுவாமி அவ்விடம் வாராதபடியால் சக்கிலியர் ''ஓ! ஓ!! நான் தாழ்ந்த ஜாதியானென்று என் கண்ணின் முன்பாக வரமாட்டீர்போல் இருக்கிறது; ஆனாலும் பரவாயில்லை; இதோ இவ்விடம் பாதரக்ஷைகளை வைத்தேன்; வந்து எடுத்துக்கொண்டு போவீர்'' என்று சொல்லித் தூரமாய்ப்போய் அதே கலவரமாய்ச் சில நேரம் இருந்து பிறகு தூங்கிக் காலையில் எழுந்து ஸ்நானம் செய்து கொண்டு திரிகரண சுத்தியாய் அவ்விடம் வந்து பார்க்கையில் பாதரக்ஷைகள் வைத்த இடத்திலேயே இருப்பதினால் சக்கிலியருக்கு மிகவும் சங்கடம் உண்டாய், கடவுளை நோக்கி இவ்விதமாய் முறையிடலுற்றார்: ''சுவாமி? நீயேன் நான் அற்பிதம் செய்த பாதரக்ஷைகளை எடுத்துக்கொண்டு போகவில்லை? என்மேல் உனக்கென்ன கோபமா? மலையேறிக் கொடுக்கவில்லையென்று மனஸ்தாபமா? பாதரக்ஷைகள் நன்றாயில்லை யென்று உன் மனதிற்குக் குறையா? எந்த விபரமும் என்னுடன் சொல்லக்கூடாதா? மவுனமாய் இருந்தால் நான் எப்படி அறிவேன்? ஆனாலும் நான் என்ன செய்யக்கூடும்? என் பிரார்த்தனை செலுத்தி முடிக்கவேண்டும்; இல்லாவிட்டால் என் பிராணனை இவ்விடம் விட்டுவிடவேண்டும்; ஆகையால், ஓ சுவாமி? இன்றையதினமாவது வந்து பாதரக்ஷைகளை எடுத்துக்கொண்டு போவீர்; பகற்காலத்தில் வர வெட்கமா யிருந்தால் இரவிலாவது வந்து எடுத்துக்கொண்டு போவீர்'' என்று சொல்லி அந்தச் சக்கிலியர் அன்னபானங்களில்லாமல் ஹரியை எதிர்பார்த்துக் கொண்டு தூரமாய்ப் போய் ஓரிடத்தில் படுத்துத் தூங்கிக் காலையில் வந்து மறுபடியும் பார்க்கையில் அந்தப் பாதரக்ஷை

கள் வைத்தவிடத்தில் அப்படியே இருப்பதால் அவருக்கு விசனம் கடலைப்போல் மேலிட்டது. அவர் குழந்தையைப் போல் அழுதுகொண்டு, "சுவாமி! என் ஜன்மம் மகா பாவமானதென்று யோசித்தாயா? அல்லது பொன் பொருள் ஆபரணங்களைக் கொடுக்காமல் பாதரக்ஷைகளைக் கொடுக்கிறனென்று கோபத்துடன் தொடாமல் இருக்கிறாயா? எப்படியிருந்தாலும் இன்றையதினம் இராத்திரிக்குள் நீர் வந்து இந்தப் பாதரக்ஷைகளை எடுத்துக்கொண்டு போகாமற்போனால் இதோ இருக்கும் பாறையின் பேரில் என் தலையை உடைத்துக்கொண்டு சாவேன்; இவ்வளவுதான் என் பிரதிக்கினை" என்று சொல்லி மிகவும் மனஸ்தாபத்தோடு அழுதுகொண்டு ஓரிடத்தில் படுத்துத் தூங்கிக் காலையில் பார்க்கவந்தார். முன்ராத்திரியில் பக்தி பூர்வமாகச் சமர்ப்பித்த பாதரக்ஷைகளை அந்த மகா வைபவேஸ்வரன் தரித்துக்கொண்டு திருவேங்கடமலையில் ஒரு தடவை திரிந்துவந்து மறுபடியும் எதாஸ்தானத்தில் விட்டுப்போனார். ஆகையால், பாதரக்ஷைகள் மிகவும் ஜீரணமாய் இருப்பதைக் கண்டு சக்கிலியர் அளவற்ற சந்தோஷமுள்ளவராய்ப் பாதரக்ஷைகளை எடுத்துக் கண்களில் ஒத்திக்கொண்டும், சிரத்தின்பேரில் வைத்துக்கொண்டும், ஹரிநாம பஜனை செய்துகொண்டும் ஆடி, "ஹரி! உனக்கு இவ்வளவு தயவு உண்டாய்விட்டதா; நேற்றையதினம் உம்மைக் கல் நெஞ்சம் உள்ளவரென்று எண்ணியிருந்தேன்; உலகத்தாரெல்லோரும் ஜாதி பேதத்தால் என்னைத் திரஸ்காரம் செய்தாலும் நீ அவ்விதமாகச் செய்யாமல் ஏழையால் அற்பிதம் செய்யப்பட்ட பாதரக்ஷைகளை அங்கீகரித்தாய்; ஆகையால், இன்று முதல் தினந்தோறும் நூதன பாதரக்ஷைகளைச் செய்து உனக்குக் கொடுப்பேன்" என்று பிரதிக்கினை செய்துகொண்டுவீட்டிற்குப்போய்ப் புதிய பாதரக்ஷைகளைச் செய்து மறுபடியும் சமர்ப்பித்தார். அநேக காலமாக இப்படிச் செய்துகொண்டுவர கிருஷ்ணவதாரத்தில் குசேலர் கொடுத்த அவலை ஜகதீசன் அத்தியந்த சந்தோஷமாய்க் கிரகித்ததைப்போல் தினந்தோறும் வந்து அந்த பக்த சிரோமணியால் சமர்ப்பிக்கப்படுகிற பாதரக்ஷைகளைத் தரித்துக் கொண்டு ஏழுமலைகளையும் ஓர் பிரதக்ஷிணம் செய்து மறுபடியும் எதாஸ்தானத்தில் விட்டுப்போய்க் கொண்டுவந்தார். இப்படியிருக்க, ஒரு நாள் சக்கிலியர் உலகத்தை மறந்து, பிராணன் - மனம் - புத்தி இவற்றைத் திருவேங்கடத்தான்

செந்தாமரையையொத்த பாதங்களில் நிறுத்திப் பரவசராய் ஹரிக்குச் சமர்ப்பிப்பதற்காகப் பாதரக்ஷைகளைச் செய்து கொண்டிருக்கையில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் சாமானிய நரனைப்போல் வேடம் தரித்துக்கொண்டு, கையில் ஓர் பை பணத்தைப் பிடித்துக்கொண்டு, சக்கிலியர் வீட்டுக்கு வந்து "சக்கிலிசுவாமி!" என்று கூப்பிட்டார். அப்பொழுது சர்வத்தையும் மறந்திருக்கும் சக்கிலியர் வேணுநாதனுகிய திருவேங்கடத்தான் குரலைக் கேட்டமாத்திரத்தில் எழுந்து வெளியில்வந்துநிற்கையில், அவரைப்பார்த்துப் பரந்தாமன், "அடா! உன்னிடம் நல்லபாதரக்ஷைகள் இருக்கிறதா? நான் வெய்யிலில் வந்து மிகவும் தாபத்தை அடைந்திருக்கிறேன்? ஆகையால், சீக்கிரமாய் ஏதாவது பாதரக்ஷைகள் கொடுப்பாய்? இதோ இந்தப் பையிலிருக்கும் ஆயிரம் வராகன்களை நீ எடுத்துக்கொள்!" என்று கொடுக்க வந்தார். அதைக் கேட்ட சக்கிலி சுவாமி, "ஐயா! நான் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுடையதாஸனும், சேவகனும், அடிமையாகும்; ஆகையால், அவர்வேலையைத்தவிர வேறொருவர்வேலையைச் செய்கிறதில்லை; ஆகையால் என்னிடம் பாதரக்ஷைகள் கிடையாது; வேறெவ்விடமாவதுபோய் வாங்கிகொள்ளும்" என்று சொன்னர். அதைக்கேட்ட மாயபுருஷன், "ஓ வெறி பிடித்தவனே! ஆயிரம்வராகன் கொடுக்கவரும் எனக்குக் கொடாமல்ஏதோ பயித்தியம் பிடித்த வார்த்தைகள் சொல்லுகிருய்; சொற்ப விலையுள்ள பாதரக்ஷைகளுக்கு ஒரு பை பணத்தை யார்கொடுப்பார்கள்? யோசித்துப் பாதரக்ஷைகளைத் தருவாய்! ஆலசியம் செய்யவேண்டாம்" என்று சொல்ல, சக்கிலியர் அவரைப் பார்த்து "ஐயா! எனக்கு ஆயிரம் வராகன்கள் ஏன் வேண்டும்? பூமண்டலாதிபத்தியமாகிலும் எனக்கேன்? நித்தியம் என் பிராணநாதரான ஸ்ரீவேங்கடேசனுடைய சேவை ஒன்றே போதுமானது" என்று சொல்ல, மாயபுருஷன் அவரை நோக்கி, "ஓ மூடமதி! நீ எவ்வளவு அறிவில்லாதவனுய் இருக்கிருய்; இந்தப் பொருளைக் கைக்கொண்டு உலகத்தில் சுகமாய் ஜீவிக்கலாமே; இரத்தின சுவர்ன ஆபரணங்களை வாங்கலாமே; தனவானென்றும் கனவானென்றும் உலகத்தில் பிரசித்தி அடையலாமே; வீடு வாசல் நிலம் நீர் தோட்டங்கள் முதலானவைகள் உண்டானவனுய் அளவற்ற சுகங்களை அனுபவிக்கலாமே; அப்படியிருக்க நீயேன் அறிவில்லாமல் இவ்விதமான வார்த்தைகளைச் சொல்லுகிருய்?" என்ருர். சக்கிலியர் அதற்கு

"ஐயர்! எனக்குக் காலஹரணம் ஆகிறது; தங்கமலையின் பேரில் எழுந்தருளிய என் பிரபுவுக்குப் பாதரக்ஷைகளைச் சீக்கிரத்தில் முடிக்க வேண்டியதா யிருக்கிறது; நீர் போய் வாரும்" என்று திரும்புகையில் அந்த மாயபுருஷனும் திரும்பிப்போனார். அப்பொழுது ஓர் மின்னல் உண்டாய் சக்கிலியர் கண்களுக்குக் கோடி சூரியப் பிரகாஸமானதும், சங்கு சக்கரங்கள் காணப்படுவதும் அண்ட பிண்ட சரா சரங்களை அளந்ததுவும், நாரத சுக செளனக புண்டரீக வியாஸ அம்பரீஷ மகாமுனிவர்களாலும் ராஜரிஷிகளா லும் முப்பத்துமுக்கோடி தெய்வங்களினாலும் நித்தியம் தொழுதுகொண் டிருக்கப்பட்டதும், ஆதிசேஷனுடைய தேகத்தின்பேரில் வைத்திருக்கப்பட்டதும், சர்வபாவதுக்க சம்சாரமாயைகளைப் போக்கிச் சாசுவத பிரம்மானந்தத்தை உண்டாக்குவதும்,வெண்டாமரைகளைப்போல் மிகவும் மிரு துவானதும், மகா அழகானதும், தரிசிக்க முடியாததது மாகிய தேவ தேவனுடைய திருப்பொற்பாதங்களைக் கண்டு பிரமானந்த சாகரத்தில் மூழ்கினவராய்ச் சக்கிலியர் மூர் ச்சையடைந்தார். பிறகு சிறிது நேரத்திற்குள் மூர்ச்சை தீர்ந்து பாற்கடலில் உண்டாகும் அலைகளைப்போல் மனதில் ஆனந்தம் கொண்டாட, சக்கிலியர் அந்தப் பாதத்தின் அளவை மனதில் நிதானம் செய்துகொண்டு பாதரக்ஷைக ளைச்செய்து ஸ்ரீ வெங்கடேசப் பெருமானுக்கு அற்பிதம் செய்துகொண்டு வர, தன் கண்ணுக்குக் கோசரமாய்க் கொண்டுவரும் ஹரியின் பாதம் சிறுகச்சிறுக வளர்ந்து கொண்டு தினமும் பெரிதாய்த் தோன்றினது. ஆகையால், சக்கிலிய சுவாமிகள் அவ்வளவு பெரிதான பாதத்திற்குப் பாதரக்ஷைகள் செய்யப் பொருளில்லாமல், "ஹரி! ஹரி!! என்ன செய்வேன்? இன்றையதினம் நீ எவ்விதமாய்த் திருமலையின்பேரில் உலாவுவாய்? உன் மிருதுவான பாதங் களில் முள் தைத்துக்கொள்ளாதோ? கடினமான கற்கள் படுவதினால் நோய் உண்டாகாதோ? என்ன செய்வேன்?" என்று பொருளுக்காக வீதியில் பிச்சை எடுத்தார். யாரும் பிச்சை போடாததினால் "அப்பா! உன் பாதங்களுக்கு நோய் உண்டானால் நான் எப்படிப்பொறுப்பேன்? ஆகையால், என் பிராணனைப் போக்கடித்துக் கொள்ளுகிறேன்" என்று ஓர் கிணற்றில் விழுவதற்குப் போய்க்கொண்டிருந்தார். அந்தக் கிணற்றினருகே ஸ்ரீவேங்கடேசப்பெருமான் ஓர் ராஜனைப் போல் வேடம் பூண்டு குதிரையின்பேரில் ஏறிக்கொண்டு

தங்கவுராகன் உள்ள ஓர் பையைக் கையில் வைத்துக் கொண்டு சக்கிலியரைப் பார்த்து, "அடா? நீ ஏன் இவ்வித மாய் விசனப்படுகிறாய்?" என்று கேட்க, சக்கிலியர் அவரை நோக்கி, "ஓ ராஜனே! என் துரையாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் தங்கமலையின்பேரில் எவ்விதமாய் நடப்பார்? கமலங்களை யொத்த அவர் ஸ்ரீ பாதங்களில் முட்களும் கற்களும் படாதோ? ஆகையால், அவர் பாதங்களுக்குத் தக்க பாதரக்ஷைகளைச் செய்யாத இந்த ஜென்மம் இருந்து என்ன? போய் என்ன? ஆதலால், இந்தக் கிணற்றில் விழப் போகிறேன்" என்றார். அதைக் கேட்டு ஸ்ரீ லக்ஷ்மீபதி! பூரண சந்திரனைப்போல் பகபகவென்று சிரித்துக்கொண்டு, "அடா! நீ ரொம்பவும் நல்லவனா யிருக்கிறாய்; இதோ இந் தப் பையிலிருக்கும் பணத்தைப் பெற்றுக்கொண்டு உன் இஷ்டப்படிக்குச் செல்வாய்" என்றார். சக்கிலியர் அதை வாங்கிக்கொண்டு பெரிய சர்மங்களை வாங்கித் தேவதேவ னுக்கு எப்பொழுதும்போல் பாதரக்ஷைகளைச் செய்து கொண்டு வந்தார். ஆனால் அந்த விஸ்வேஸ்வரனுடைய பாதங்கள் உலகத்தை அளவிடுகிறதைப்போல் அவ்வளவு பெரிதாய்க்கொண்டு வந்தபடியால் பொருளிருந்தும் சர்மங் கள் அகப்படுவது மிகவும் கடினமாய்விட்டது. ஆகை யால் சக்கிலியர் தன்னால் கூடியவரைக்கும் தேடிப்பார்த் தும் சர்மங்கள் அகப்படாமற் போனபடியால், "இனி நான் ஜீவித்திருப்பதில் யாதொருபயனுமில்லை; திருவேங்கடத்தா னுடைய மலையடிவாரத்திலேயே என் பிராணனை விட்டுவிடு கிறேன்; ஒரு க்ஷணமாவது நான் சகிக்கமாட்டேன்; என் அப்பனுடைய பாதங்கள் நோய்பட நான் எப்படிப் பொறுப் பேன்?" என்று விசேஷமாய் அழுதுகொண்டு மானபிமான ங்களைவிட்டு ஓசையோடும் முறையிட்டு அன்னபானங்க ளில்லாமல் "அப்பா! நான் எப்படிப் பொறுப்பேன்?" என்று திருமலை யடிவாரம் சேர்ந்து அலண்டு கீழ்வீழ்ந்து அப்படியே தூங்கிவிட்டார். பக்தபராதீனரான ஸ்ரீவேங்க டேசப் பெருமான் அந்த முறைகளைக் கேட்டுப் பரிதாபம் உள்ளவராய் மலைகளைவிட் டிறங்கி வந்து சக்கிலியர் படுத் திருக்கும் இடத்துக்குச் சமீபத்தில் நின்று அவர் முதுகின் பேரில் தன் வலது கையினால் தட்டினார். சக்கிலியர் உடனே எழுந்து பார்க்கையில் கோடி சூரியப் பிரகாசமான ஒரு ஜோதி கண்களுக்குத் தென்பட, அதை ஆச்சரியத்துடன் நோக்கிப் பார்த்துக்கொண் டிருக்கையில் அதில் திருவேங்

கடப் பெருமானுடைய பாதம் சிறியதாய்த் தோன்றுகிறதைக்கண்டு "ஆ! ஆ!! இவ்வளவு சிறியதான பாதத்துக்குப் பாதரக்ஷைகளைச் செய்யச் சர்மங்கள் அகப்படுமே; நான் ஏன் இவ்விதமாய்ப் பிரமித்தேன்?" என்று யோசித்து, வீட்டிற்குத் திரும்பிவந்து புதிய பாதரக்ஷைகளைச் செய்து கொண்டுவர், சிலநாளுக்குள் சக்கிலிய சுவாமிகள் "ஹரியைத் தரிசிக்கவேண்டும்" என்றும், "அவர் சமீபத்தில் எந்நாளும் இருக்கவேண்டும்" என்றும், "அவரை விட்டு ஒருக்ஷணமாவது பிரிந்திருக்கக் கூடாது" என்றும், அளவற்ற ஆவலுடையவராய்த் தினந்தோறும் மிகுந்த தாபத்தோடும் அழுதுகொண்டிருந்து ஒருநாள் புறப்பட்டு ஸ்ரீ திருவேங்கடமலையின் அடிவாரம் சேர்ந்து, ஹரியை நோக்கி "என் பிதாவே! உன்னைக் காணமல் நான் எப்படி இருப்பேன்? ஜாதி ஹீனனென்று என்னை மலையேருமற் செய்வதும், உன்னைக் காணமற் செய்வதும் தர்மமோ! உன்னைக் காணமல் இனி நான் பொறுக்கமாட்டேன்; என் கண் குளிர உன்னைத் தரிசித்துத் தீரவேண்டும்; இல்லாவிட்டால் என் பிராணனை இவ்விடத்தில் விட்டுவிடுகிறேன்" என்று அழுதுகொண் டிருக்கையில் அவர் மனம் புத்தி பிராணங்கள் அசையாமல் நின்றுவிட்டன. ஆதார சக்கரத்தி லிருந்து ஓங்காரம் பயப்படவேண்டா மென்று சொல்லுவதைப்போல் மேலெழுந்து பிரணவ மண்டலத்தைத் தெரியும்படி செய்தது. அதில் அனந்தகோடி நக்ஷத்திரங்களும், சூரிய சந்திரர்களும், முப்பத்து முக்கோடி தெய்வங்களும், நவரத்தினப் பிரகாசங்களும் தோன்றின. ஆறு மலைகளைத் தாண்டி ஆக்ஞாசக்கரத்தில் சகஸ்ராரசிகரம் அகண்ட வைபவத்தோடு கண்களுக்குத் தோன்றினது. அதன் சமீபத்தில் பிரகாரங்களும் துவஜஸ்தம்பமும், தங்க சிகரங்களும் பளபளவென மின்னிக் கொண்டிருந்தது. கெண்டா நாதம் "கோவிந்தா! கோவிந்தா" என்று ஓசையிட்டுக்கொண்டிருக்க, சுவாமி புஷ்கரணி தீர்த்தம் பொன்களைகளோடு பிரகாசித்துக்கொண்டிருந்தது. கோடி தீபங்களும், நவரத்தின காந்திகளும், பஞ்சபூதங்களுடைய ஒளியும், தோன்றின. அர்ச்சகர்களும், பக்தசிரோமணிகளும் பிரம்மவேதியர்களும் இருந்தார்கள். யோகிகளும் தபோநிதிகளும் மூடின கண்களைத் திறக்காமல் கைகளில் ஜபமாலையைத் தள்ளிக்கொண்டு ஸ்ரீ வேங்கடேச பரப்பிரம்மத்தைத் தியானித்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது

ஸ்ரீ லக்ஷ்மிதேவி பத்மாவதி பூதேவிகளோடு கோடி சூரியப் பிரகாசராய்ப் பாதங்களில் சக்கிலிய சுவாமிகளால் முன்னாள் அற்பிதம் செய்த பாதரக்ஷைகளைத் தரித்துக்கொண்டு வேத வேத்தியரான ஸ்ரீவேங்கடேசப் பெருமான் இருந்தார். அந்தப் பரப்பிரம்மத்தைச் சக்கிலியர் கலிதீரத் தரிசித்து அமிர்தக் கடலில் உலாவியதைப்போலத் தேகமெங்கும் ஆனந்தத்தால் நிரம்பினவராய் அக்ஷய பரப்பிரம்மத்தில் கலந்துவிட்டார்.

சக்கிலிய சுவாமிகளுடைய சந்ததியார் இன்றைக்கும் அந்தக் கிரமம் தவறாமல் பாதரக்ஷைகளைச் செய்து ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுக்கு வருஷந்தோறும் சமர்ப்பித்து வருகிறார்கள். சக்கிலிசுயவாமிகள் உலக நிபந்தனையால் மலை யேறாமல் அடிவாரத்தில் ஓர் சிலையாய் விட்டதைப்போல் நிச்சயித்துப் பக்த ஜனங்கள் அவ்விடம் சாஷ்டாங்க தண்ட னிட்டுக்கொண்டிருக்கும் ஓர் சிலைக்கு ஆராதனை செய்கி றார்கள். சக்கிலிய சுவாமிகள் ஸ்ரீ வேங்கடேசப் பெரு மான் திருப்பொற் பாதங்களுக்குப் பாதரக்ஷைகளைச் செய்து சமர்ப்பித்த மலைக்குப் பாதரக்ஷை மலையென்று பெயர். அவ்விடத்தில் ஓர் ஆலயமும் விசேஷமான பாத ரக்ஷைகளும் இருக்கின்றன. யாத்திரைவாசிகள் மலையேறு வதற்கு முன்பாக அவ்விடத்திற்கு வந்து பாதரக்ஷைகளை மகத்பிரஸாதமென்று தங்கள் பேரில் வைத்துக்கொண்டு சக்கிலிய சுவாமிகளுடைய பெருமையை இன்றைக்கும் கொண்டாடுகிறார்கள்.

---

## நரஹரிதாஸ் சரித்திரம்.

ஸ்ரீ வெங்கடாசல மென்னும் திருப்பதிக்கு வடமேற் கில் குஜிராத்த மென்கிற ஓர் தேசம் இருக்கின்றது. அந்தத் தேசத்தில் சகல சம்பத்துகளால் நிறைந்தவரும் ஹரிபக்தி யில் மிகுந்தவருமாகிய ஓர் தாய் தந்தையர் இருந்தார்கள். அவர்களுக்கு ஸ்ரீ வெங்கடேசப் பெருமான் அருளினால் ஓர் புத்திரன் பிறந்தான். அந்தக் குழந்தைக்கு நரஹரி என்று நாமகரணம் செய்து மிகவும் பிரீதியுடன் காப்பாற்றிக் கொண்டு வந்தார்கள். தினந்தோறும் தகப்பன் ஸ்ரீ வேங்க டேசப் பெருமானைத் திரிகரண சுத்தியாய் ஆராதித்து, சிறிதுநேரம் அதேதியானத்தில் நிஷ்டை செய்வதுமுண்டு. சில வேளையில் ஹரிபஜனை செய்வதுமுண்டு. குழந்தையா

கிய நரஹரி ஐந்துவயது ஆனபின்பு தகப்பன் செய்வது எல்லாம் பார்த்துக்கொண்டிருந்து தானும் அவ்விதமாகச் செய்ய நிச்சயித்துத் தகப்பன் ஹரிதியானத்தில் உட்கார்ந்தபின்பு தானும் ஓர் மூலையில் பத்மாஸனரூடனாய் உட்கார்ந்து கண்களை மூடிச் சர்வரக்ஷகனாகிய கடவுளின்பேரில் மனதை நிறுத்தித் தியானம் செய்யத் தொடங்கினான். இவ்விதமாய் நடந்து கொண்டுவர, ஒருநாள் தகப்பன் நிஷ்டை தீர்ந்து எழுந்து புத்திரனைத் தேடிக்கொண்டு வந்து ஒரு மூலையில் தன்னை மறந்து ஹரிதியானத்தில் மூழ்கினவனா யிருக்கும் குழந்தையைக் கண்டு ஆச்சரியத்தோடு தன் மனைவியைக் கூப்பிட்டுக் குழந்தையைக் காட்டி இருவருமாக மிகவும் சந்தோஷப்பட்டுக்கொண்டு, "நாம் பூர்வத்தில் செய்த புண்ணியத்தால் நமது குழைந்தைக்கு இவ்விதமாக ஹரிபக்தி உண்டாயிற்று" என்றெண்ணி, அன்றையதின முதல் அந்தக் குழந்தையைக் கடவுளைப் போல் நினைத்து உபசாரம் செய்துகொண்டு வந்தார்கள். கர்மம் தீர்ந்த உடனே காயம் நிற்கா தென்கிறதைப் போல் சில வருடங்களுக்குள் தாய் தந்தையர்கள் ஒருவர் பின் ஒருவராக இறந்துபோய்விட்டார்கள். பிறகு நரஹரியை அம்மான் கொண்டுபோய் வளர்த்துக்கொண்டு வருகையில் நரஹரியின் நடவடிக்கை அம்மான் மனதிற்குச் சம்மதப்படாததினால் அவனால் முடிந்தவரைக்கும் நரஹரிக்குப் புத்திமதி சொல்லிக்கொண்டு வந்தான். எவ்வளவு சொல்லியும் கேளாமல் நரஹரி கடவுளைத் தியானம் செய்துகொண்டிருக்கும் தன்னுடைய போக்குச் சரியான போக்கென்றும், தாமரை இலையின்பேரில் தத்தளித்துக் கொண்டிருக்கும் நீருக்குச் சமானமானது உலகத்து வாழ்வென்றும் அம்மானிடம் சொல்லிக்கொண்டு வந்தான். சில நாளுக்குப் பிறகு நரஹரி அம்மான்பேரில் மனஸ்தாபம் கொண்டு தனியாய்ப் புறப்பட்டு ஜகதீஸனான ஸ்ரீ வெங்கடேஸ்வரருடைய சன்னதியைச் சேர்ந்தார். அவ்விடத்தில் தினந்தோறும் சுவாமி தரிசனஞ்செய்துகொண்டும், அவ்விடத்திலிருக்கும் தபசிகளுக்கும் பிர்ம்மவேதிகளுக்கும் தொண்டு செய்துகொண்டும் வந்தார். அந்த க்ஷேத்திரத்தின் அதிகாரியாகிய மஹந்துவினிடம்வந்து அவரைக் கடவுளைப்போலெண்ணி வேலைக்காரர்களோடு சேர்ந்து தானும் ஓர் சேவகனாய் மிகவும் பக்தி சிரத்தைகளோடு பணிவிடைகள் செய்துகொண்டு வந்தார். இப்படியிருக்க ஓர் நாள்

மஹந்து அந்தச் சிறுவயதுள்ள பையனைப் பார்த்து, "ஓ சிறுவனே! இவ்விடம் வாரும்; நீ யார்?" என்று கேட்டார். அதைக் கேட்டவுடன் நரஹரிதாஸ் நெருங்கிவந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்துநின்று, "சுவாமி! சர்வம் பிரம்மமயமாய் இருக்க நான் மாத்திரம் வேருய் இருப்பேனு; ஜகதீஸனுடைய மஹத் பாவத்தில் நானேர் அணுவாய் இருக்கிறேன். தாயின் கர்ப்பத்தில் இருந்தபோது அவள் பூதேவியினுல் கொடுக்கப்பட்ட வஸ்துக்களைப் புசித்து அந்தச் சாரத்தை எனக்கும் கொடுக்க அதனுல் நான் வளர்ந்து பத்து மாதத்திற்குப் பின்பு பூமியின்பேரில் விழுந்து அந்தப் பூமியில் உண்டாகும் வஸ்துக்களைப்புசித்துப் பெரிய தேகம் உள்ளவனுனேன்; ஆகையால், எனக்கும் சமஸ்த ஜீவகோடிகளுக்கும் பொசிப்பைக் கொடுக்கும் பூதேவி எனக்கும் எல்லோருக்கும் தாயாய் இருக்கிருள். அந்தப் பூதேவிக்குப் பிரபுவாகிய ஸ்ரீ வெங்கடேசப் பெருமான் தகப்பனுய் இருக்கிருர். காடுமேடுகளிலும் சகலதேசங்களிலும் பறந்துகொண்டு திரிந்தபோதிலும் பக்ஷியானது தன் கூண்டைச் சேராமல் இருக்குமா? அவ்விதமாக அநேக ஜன்மங்களென்னும் காடுமேடுகளைச் சுற்றித் திரிந்துகொண்டிருந்த நான் சர்வாஸ்ரியனுகிய தேவதேவனைச் சேராமல் இருப்பேனே; ஆகையால், ஸ்ரீவேங்கடேசப் பெருமான் அருளுக்காளாவதற்கெண்ணி இவ்விடம் வந்திருக்கிறேன்; நீர் என்னைச் சிஷனுய்க் கைக்கொண்டு அந்தப் பரந்தாமனுடைய பரதத்துவ நிஷ்டையில் நிறுத்தி ரக்ஷிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அதைக் கேட்டு மஹந்து மிகவும் ஆச்சரியத்துடன், "ஆ! ஆ!! குழந்தைகளுக்கும் இப்படிப்பட்ட பக்தி உண்டாயிருக்கிறதா" என்றுசொல்லி அந்தப்பக்த சிரோமணியை ஆசிர்வதித்து, சேவகர்களைப் பார்த்து, "இனிமேல் இந்தச் சிறுவனை என்னைப்போலெண்ணி சகல உபசாரங்கள் செய்யவேண்டும்" என்று கட்டளையிட்டார். அவர்களும் அன்றையதின முதல் நரஹரியை இரண்டாவது மஹந்து என்று எண்ணிச் சன்மானம் செய்துகொண்டு வந்தார்கள். சிலகாலத்திற்குள் மஹந்துக்கு அவசானகாலம் உண்டானபடியால் அந்தத் திருமலையிலிருக்கும் சாதுக்களையும், பயிராகிகளையும், தபஸிகளையும், பெரியோர்களையும் வரவழைத்து, அவர்களைப் பார்த்து, "ஓ சாது ஜனங்களே! இதுவரையிலும் நீங்கள் எனக்குக் கௌரவம் செய்துவந்த

தைப்போல இனிமேல் நரஹரிக்கு மரியாதைசெய்யவேண்டும்'' என்றும், ''எனக்குப் பிறகு நரஹரிக்கே மஹந்து பட்டம் கொடுக்கவேண்டும்'' என்றும் சொல்லி நரஹரியைச் சமீபத்தில் அழைத்துத் திரிவிததீக்ஷைகள் செய்து, பிரம்ம நிஷ்டையின் ரகஸியத்தைப் போதித்துத் தாம் பத்மாஸனத்தோடுகூடி தனக்குள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் பரமாத்மாவைத் தரிசனம் செய்துகொண்டு, மனம் புத்தி பிராணன்களை நிலைநிறுத்தி, சர்வவியாபகமாகிய ஸ்ரீ வேங்கடேச பரப்பிரம்மத்தில் ஐக்கியமாய்விட்டார். அதற்குப் பிறகு அவ்விடம் சேர்ந்திருந்த மகன்னியர்களெல்லோரும் நரஹரிதாசருக்கு விசேஷ வைபவத்தோடு மஹந்து பட்டாபிஷேக மகோத்ஸவத்தை நடத்தி அவரவர்கள் தங்கடங்கள் இடங்களுக்குப்போய்விட்டார்கள். நரஹரிதாஸ் மஹந்து ஆன பின்பு ஸ்ரீவேங்கடேசப் பெருமானைத் தரிசிக்க எண்ணிக் கோர தபம்செய்தார். அப்பொழுது ஸ்ரீ ஹரி தரிசனம் கொடுத்து நரஹரியைத் தன் அருளுக்கு ஆளாகச் செய்து அன்றையதினமுதல் ஒருநிமிஷகாலமாவது அவரைப் பிரியாமல் அவர் அந்தரங்கத்தில் அகண்ட வைபவத்தோடு தாண்டவமாடிக்கொண்டிருந்தார்.

துவாபரயுகத்தில் காமியவனத்தில் தர்மராஜனைப் பார்த்து ''கலியுகத்தில் தர்ம புத்தியும் ஜீவகாருண்ணியமும் குறைந்துபோகும்'' என்றும், ''பிறர் பொருளை அபகரிப்பதே உலகத்தின் தர்மமாகவும் அரசர்களுடைய முக்கிய அபிப்பிராயமாகவும் இருக்கும்'' என்றும், ''பசுக்களுக்கும் பிராமணர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் க்ஷீணம் உண்டாகும்'' என்றும் மகரிஷியாகிய மார்க்கண்டேயர் சொல்லியிருப்பதைப்போல், அந்தக் காலத்தில் துருஷ்கரர்கள் தேசாதிபதிகளாய் இருந்து, அவர்களுக்கு தேவாலயங்களைப் பாழ்செய்வதும் குடிகளை ஹிம்சைசெய்து அவர்கள் பொருள்களை அபகரித்துக்கொள்ளுவதும், பசுக்களை ஹிம்ஸிப்பதும் இவை முதலிய காரியங்களில் அளவற்ற ஆசையிருந்தது. அதற்காக அவர்கள் ''தேசத்தில் எந்த இடங்களில் பொருளுள்ள தேவாலயங்கள் இருக்கின்றன'' என்பதைத் தெரிந்து சொல்லுவதற்காக அநேக தூதர்களை ஏற்படுத்தி அவர்கள் கூறியவற்றுள் நிஜத்தையறிந்து யுத்தவீரர்களை அனுப்பி அவ்விடத்திலிருக்கும் பொருள்களையும் ஆபரணங்களையும் அபகரித்து விக்கிரகங்களைப் பாழ்செய்து,

பக்தஜனங்களை ஹிம்சைசெய்துகொண்டு வந்தார்கள். இப்படியிருக்க, அந்த மகம்மதிய தூதர்கள் திருப்பதி க்ஷேத்திர பிரபாவத்தைத் தெரிந்து அரசனைப் பார்த்து, "அவ்விடத்தில் விசேஷ பொருள்களும் ஆபரணங்களுமிருக்கின்றன" என்று சொல்ல, அந்த அரசன் அநேகமாயிரம் மகமதியர்களை அனுப்பினான். அவர்கள் வருவதைத் தெரிந்து ஸ்ரீவேங்கடாசலத்திலிருக்கும் பக்தஜனங்களும் சுற்றுப்பக்கத்திலிருக்கும் அரசர்களும் அவர்கள் சைனியங்களை ஒன்றாய்ச் சேர்த்து அந்த மகம்மதியர் சைனியத்தோடு யுத்தம் செய்து அபஜெயமடைந்தார்கள். அதற்குமேல் மகம்மதியர்கள் திருமலையின் பேரில் ஏறி அவ்விடத்திலுள்ள பொருள்களைக் கொள்ளையிட்டு, மகந்துவைப் பந்தித்து, அர்ச்சகர்களைப் பார்த்து, "இன்னும் இவ்விடத்தில் பணம் இருக்கிறதா?" என்று கேட்க, அவர்கள், "ஓ! யுத்த வீரர்களே! இவ்விடத்தில் பிரார்த்தனைகள் மூலமாய்ப் பொருள் வருகிறதே தவிர வேறு வழியாய் வரும்படி கிடையாது; அந்தப் பொருளை இவ்விடத்திலுள்ள சாதுக்களுக்கு வினியோகம் செய்வது வழக்கமாயிருக்கிறது" என்று சொல்ல, மகம்மதியர்கள், "ஆனால் சரி; பூஜைகள் எப்பொழுதும்போல் நடத்த வேண்டியது; தினந்தோறும் சேரும் பொருளை எங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும்" என்று கட்டளையிட்டு, அவ்விடத்தில் ஓர் மகம்மதிய பிரபுவை நியமித்துத் தாம் கொள்ளையிட்ட பொருள்களோடு நவாப் பிரபுவின் பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள்.

அந்த மகம்மதிய வீரர்களுக்கு மலைஜுரம் உண்டாய், கால் கைகள் சிறுத்து, வயிறு பெருத்து, ஒருவருக்குப் பின் ஒருவராகக் காலஞ் சென்றார்கள். இப்படியிருக்க, திருமலையில் நியமிக்கப்பட்ட பிரபு அவ்விடத்தில் விசேஷமாய்ச் சுவாமிக்குச் சமர்ப்பிக்கப்படும் பொருள்களைப் பார்த்துப் பேராசை யுள்ளவனாய் நவாபுக்குப் பொருளைக் கிரமமாக அனுப்பாமற்போனான். அதனால் நவாப்பு வேறொரு பிரபுவை அனுப்பி, முன் இருந்தவன் தலையை வெட்டிவிடும்படி உத்திரவு செய்தான். எவ்வளவு சத்தியமானவர்களைத் திருமலைக்கு அனுப்பினபோதிலும் அவர்களுக்குப் பேராசை என்னும் பேய் பிடித்துக்கொண்டே வருகிறபடியால் ஒருவர்பின் ஒருவராகத் தலை வெட்டுப்பட்டவர்களாகவே ஆனார்கள். இப்படியிருக்கக் கைதியாக கொண்டுபோன நர

ஹரியை ராஜாவின் முன்பாக் நிறுத்த, அவரைப் பார்த்து ராஜா, "ஓ மூடாத்துமா! கற்களைக் கும்பிடும் க்ஷேத்திரத்திற் குப்பிரபுவாய் இருக்கிற உன் அஞ்ஞானத்தை என்ன சொல்லலாம்! மகம்மதியனுய் விடுவாயாகில் இப்பொழுதே உன்னை என் சபையில் ஓர் பிரபுவாகச் செய்கிறேன்; என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்க, நரஹரி அவனைப் பார்த்து, "ஓ ராஜா! நாங்கள் கற்களைக் கும்பிடுகிறோம் என்று பிரமிக்க வேண்டாம்; பழத்துக்குள் இருக்கும் சாரத்தைப்போல் சர்வத்திலும் நிறைந்திருக்கும் பரப்பிரம்மம், தேய்த்த இடத்தில் பிரகாசிக்கும் தங்கத்தைப்போல், அன்பர்களுடைய உள்ளத்திலும் அவரவர்கள் குடியிருக்கும் இடங்களிலும் விசேஷித்து இருக்கிறார். சமபத நிலையாகிய ஸ்ரீ வேங்கடேச பரப்பிரம்மம் முத்துஹாரத்துக்குள்ளிருக்கும் கயிற்றைப்போல் எல்லா மதங்களிலும் நிறைந்திருக்கிறார். ஆகையால், நீ துவேஷத்தை விட்டு எல்லா ஜீவகோடிகளையும் ஒன்றாய் எண்ணி ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளைத் தியானம் செய்வாய்" என்று சொல்ல, அதைக் கேட்ட அரசன் வெகு கோபமுள்ளவனுய், நரஹரியைச் சிறைச்சாலையில் வைக்கும்படி உத்திரவு செய்தான். இப்படியிருக்க, ஸ்ரீ வேங்கடேசர் பொருளை அபகரித்த நாள்முதல் அந்த அரசனுடைய வீட்டில் இருக்கும் எல்லோருக்கும் ஏற்றக்குறைச்சலாக வியாதிகளுண்டாய் எவ்வளவு சாமர்த்தியமுள்ள வைத்தியர்கள் பார்த்தும் தீரவில்லை. அரசனுடைய இரண்டு பிள்ளைகளும் ஓர் பெண்ணும் கூடப் பரலோகம் அடைந்தார்கள். எந்த நேரமும் கவலை, வியாதி, அவர்களைக் கொள்ளை அடிக்கிறதைப்போல் தொந்திரவு செய்து கொண்டு வந்தன. அரசனுக்கும் தேகத்துக்குள் வியாதி புகுந்து சித்திரவதை செய்ய ஆரம்பித்தது. அரசன் ஒருநாள் ஓர் பகீரை வரவழைத்துக் குறி சொல்லும்படி கேட்டான். அந்தப் பகீர் அல்லாவைத் தியானம்செய்து, சிலநேரத்துக்குள் அரசனைப் பார்த்து, "ஓ மன்னவனே! நீ கடவுளுக்குத் துரோகம் செய்திருக்கிறாய்; சாதுக்கள் புசிக்கவேண்டிய பொருளை அபகரித்திருக்கிறாய்; கடவுளுடைய அன்பனைச் சிறையில் வைத்திருக்கிறாய்; அந்த மகாதோஷத்தினால் உன் ஆரோக்கியம் போம்; உன் பந்துக்களும் பரிவாரங்களும் கலகலத்துப்போம்; சிலநாளுக்குள் உன் அரசும் போம்; நீ அபகரித்த பொருள்; பிரபஞ்ச வாழ்க்கையை விட்டு நித்தியமும் ஜெகதீசனுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்

டிருக்கும் அன்பர்களுக்கு உபயோகப்படவேண்டியதாய் இருக்கிறது; அதை யார் அபகரித்தபோதிலும் அவர்கள் நோயால் அழிக்கப்பட்டுப் பாழாய்ப் போவார்கள்'' என்று சொன்னான். அதற்குமேல் அரசன், "ஓ! ஓ!! இது திருப்பதி கடவுளின் பொருளாய் இருக்கவேண்டும். நான் சிறையில் வைத்தது அந்த ஸ்தானத்தின் மஹந்துவை யல்லவோ; ஆகையால், அந்த மஹந்துவை இவ்விடம் அழைத்துக் கொண்டு வாரும்'' என்று உத்திரவு செய்தான். சிறையி லும் கூட ஹரித்தியானம் செய்துகொண்டு, ஸ்ரீவேங்க டேசப் பெருமானைத் தரிசனம் செய்துகொண்டு, நித்திய சந்தோஷியாய் இருக்கும் நரஹரியை ராஜசேவர்கள் அழைத்துக்கொண்டு அரசன் முன்னிலையில் நிறுத்தினார் கள். அப்பொழுது நரஹரியைப் பார்த்து ராஜா, "அடா! கல்லைக் கும்பிடும் நீயும் கடவுளுடைய அன்பனு! உன் கட வுள் கல்லாகாமல் ஒன்றான அல்லாவாய் இருந்தால் எனக்குக் காட்டுகிறாயா? அப்படி எனக்குக் காட்டினால் உன்னை விடுதலை செய்கிறேன்; உன் பொருளையும் கொடுத்துவிடுகிறேன்'' என்று சொன்ன அரசனைப் பார்த்து நரஹரி, "ஓ ராஜனே! அசுத்தமான துர்ச்சிந்தனைகளை விடாமல் மனம் பரிசுத்த மாகமாட்டாது; மனம் பரிசுத்தமாகாமல் சர்வேஸ்வரனாகிய திருவேங்கடப் பெருமான் தரிசனம் கிடைக்காது'' என்று சொன்னார். அதைக்கேட்ட அரசன், "அடா! நான் என்ன செய்தால் என்மனம் பரிசுத்தமாய் அவர் தரிசனம் கிடைக் கும்?'' என்று கூறினான். "ராஜாவே! சர்வமதங்களையும் ஒன் ருய் எண்ணித் தர்மமார்க்கத்தில் நடந்து பேதாபேதங்க ளில்லாமல் எல்லோரையும் சமமாய் அரசாக்ஷி செய்து, தினந்தோறும் சில நேரம் அந்தப் பெருமான் திருமந்திர த்தை எல்லா எண்ணங்களையும் அற்று ஒரே மனதுள்ளவ னாய் ஜபித்துக்கொண்டு அவர் தியானத்தில் இருப்பா யாகில் உமக்கு ஸ்ரீவேங்கடேசப் பெருமான் தரிசனம் கிடைக்கும்'' என்றார். அதைக் கேட்டு அரசன், "ஆ! ஆ!! நான் எப்படியாகிலும் அந்தக் கடவுளைப் பார்க்கவேண்டும்; நீ சொன்னபடிக்குச் செய்கிறேன்; அப்படிச் செய்தும் எனக்குத் தரிசனம் ஆகாவிட்டால் உன்னையும் உன்கடவுளை யும் மறுபடியும் பூமியில் வைக்கமாட்டேன்; சத்தியமான மதம் மகம்மதிய மதம் ஒன்றாயிருக்க, நீ எல்லா மதமும் சத்தியமென்று சொல்லுகிறபடியால், நான் பரீக்ஷிக்க வேண்டும்'' என்று ஸ்ரீவேங்கடேசப் பெருமான் திருநாம

மந்திரத்தைத் தெரிந்துகொண்டு அன்றையதினமுதல் நவாபு அதே தியானத்தில் இருந்தான். இப்படியிருக்க, நவாபு ஒருநாள் தூங்கிக்கொண்டிருக்கையில் அவர் முதுகின்பேரில் உரப்பாய் ஓர் அடி பட்டது. திடீரென்று அலறிக்கொண்டு மேலுக்கு எழுந்து, சேவகர்களைப் பார்த்து, "யாரோ திருடன்வந்து என் முதுகின்பேரில் அடித்தான்" என்று ஓசையிட்டான். அதைக் கேட்டவுடனே சேவகர்கள் கைகளில் உருவின கத்திகளோடு விளக்குகளை ஏற்றிக்கொண்டு; மூலைகளிலும், ராஜகிரகத்தின் எல்லாவிடங்களிலும், செடிகளிலும், உத்தியான வனங்களிலும் தேடிக்கொண்டிருந்தார்கள். அரசனுங்கூட கையில் கத்தியைப் பிடித்துக்கொண்டு தேடிக்கொண்டுவர, ஓர் மூலையில் ஓர் ரூபத்தைப் பார்த்துப் பயந்து பேசமுடியாமல் அசையாமல் நின்றுவிட்டான். நீலவர்ண தேகமுள்ள ஓர் பெரும் புருஷன் நான்கு கைகளோடும், சங்கு சக்கர கதை முதலியவைகளைத் தரித்துக்கொண்டும், துளஸி மல்லி ஜாதி இருவாக்ஷி சம்பங்கி சண்பக முதலிய திவ்ய புஷ்பங்களால் ஏற்படுத்திய சுகந்த மாலையைத் தரித்துக்கொண்டும், அனந்தகோடி மாணிக்கங்களைப்போல் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீ லக்ஷ்மிதேவியை மார்பில் அணிந்துகொண்டும், ஊர்த்துவ புண்டரங்களைத் தரித்துக்கொண்டும், விசாலமான வக்ஷஸ்தலமும், பிரவகித்துக்கொண்டிருக்கும் கங்கையுள்ள பாதங்களோடும், தாராளமாய் நீண்டிருக்கும் கைகளோடும், தரிசனமாய் க்ஷணத்துக்குள் மறுபடியும் மறைந்துபோய்விட்டார். கேவலம் மரத்தைப்போல் பயந்து நின்று இருந்த நவாபு வெகுநேரம் அசையாமல் அப்படி யிருந்த பிறகு ஓசையிட்டுச் சேவகர்களைக் கூப்பிட்டு "அடா! என்னை அடித்தது திருடனல்ல; சிறைச்சாலையில் வைத்திருக்கும் மஹந்துவினுடைய கடவுளாகும்; நான் மகம்மதியனாய் இருந்து அநேக ஹிந்து தேவாலயங்களைப் பாழாக்கி ஹிந்துக்களை மகம்மதியர்களாகச் செய்தும் ஒரு நாளுங்கூட அல்லாவைத் தரிசிக்கவில்லை; சில நாள் மஹந்து சொன்ன திருமந்திரத்தைப் பரிசுத்தமான உள்ளத்தோடு ஜபித்ததினால் திருமலையின் கடவுளைக் கண்ணால் கண்டேன்" என்று சொல்லி, காலையில் நரஹரியை வரவழைத்து அவரைத் தன் சிம்மாசனத்தின்பேரில் உட்காரவைத்து, "ஓ புண்ணியனே; உன் கடவுளை நான் கண்டேன்; சத்தியமான பெருமானென்று நம்புகிறேன்; இதோ

திருமலையிலிருந்து என் வீரர்கள் கொண்டுவந்த பொருளெல்லாம் மறுபடியும் எடுத்துக்கொண்டு போவாய்; நான் கொடுக்கும் வெகுமதிகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு போவாய்; நான் கடவுளுக்குச் செய்த அபசாரத்திற்காகக் கொடுக்கும் பத்துலக்ஷம் வராகனை அபராத காணிக்கையாக எடுத்துக்கொண்டு போவாய்'' என்று சொல்லி முத்துப் பல்லக்கை அலங்காரம் செய்து அதில் மஹந்துவை எழுந்தருளச்செய்து, ராஜவீதிகளில் மகர தோரண துஜாரோகண அலங்காரங்கள் செய்து, தைரியமுள்ள அநேக ஆயிரக்கணக்கான வீரர்களை துணையாகச் செய்து, ஞானிகளால் சேவிக்கப்பட்ட திருவேங்கடாசலத்திற்கு அனுப்பினான். ''அந்த க்ஷேத்திரத்திற்குப் பிரபுவாய் இருப்பதற்குத் துராசைகள் இல்லாத கடவுளுடைய அன்பர்களே தக்கவர்கள்'' என்று எண்ணி, அவ்விடத்தில் நியமித்திருந்த மகம்மதிய பிரபுக்களை மறுபடியும் வரவழைத்துக் கொண்டான். நரஹரி சுவாமிகள் அதற்குப் பின்பு மிகுந்த பக்தி சிரத்தைகளோடு ஸ்ரீ வேங்கடேச பரப்பிரமத்தை ஆராதித்துக்கொண்டு அவ்விடத்திலுள்ள தபஸிகளையும், யோகிகளையும், ஞானிகளையும், பக்தர்களையும், பிரம்மவேதியர்களையும், பயிராகிகளையும், சாதுக்களையும் தகப்பனைப் போல் காப்பாற்றிக்கொண்டு வெகுகாலம் தீர்க்காயுள் ஆரோக்கியம் உள்ளவராய் ஏகசக்கிராதிபதியைப்போல் வாழ்ந்து நித்திய சத்திய சாசுவத மங்கள பரப்பிரம்மமாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் திருவடிகளை அடைந்தார்.

---

## கிருஷ்ணய்யர் சரித்திரம்.

ஸ்ரீ பரதகண்டத்தில் தென்தேசத்தை ஆற்காட் நவாப் ஆண்டுகொண்டிருக்கும் காலத்தில் அவர்களிடம் கிருஷ்ணய்யர் என்கிற ஓர் சேவகர் இருந்தார். அவருக்குத் தினந்தோறும் நவாபு வீட்டில் நேரிடும் சில்லரைச் செலவுகளை எழுதிவைக்கும் உத்தியோகமாய் இருந்தது. அவருக்கு அந்த உத்தியோகத்தில் சொற்ப வருமானம் வந்துகொண்டிருந்தது. அவர் தகப்பன் ஸ்ரீவேங்கடாசலபதியின்பேரில் மிகுந்த பக்தியுள்ளவராகையால் இறந்துபோகும் காலத்தில் புத்திரனைச் சமீபத்தில் அழைத்து, ''அப்பா! உனக்கு நான் கொடுத்துப் போவதற்கு

என்னிடம் பொன் பொருள் கிடையா; என்னைப்போல் நீயும் இனிமேல் நமது குலதெய்வமாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமானைத் தினந்தோறும் அவர் திருநாமத்தை ஜபித்தாவது, எழுதியாவது, பிறருக்குச் சொல்லியாவது நூறு தடவை சிந்தனை செய்துகொண்டிருப்பாய்! மேலும், வருஷந்தோறும் அந்த ஜெகதீசனுடைய திருமலைக்குச் சென்று, அவர் தரிசனம் செய்துகொண்டு வருவாய்! இவ்விதமாய் நடப்பாயாகில் அவர் என்னைப்போல் ஆயிரம் கோடி பங்கு ஆபத்பந்துவாய் உன்னை ரக்ஷிப்பார்; இதுதான் உனக்கு ஆஸ்தி'' என்று சொல்லிப்பிராணனைவிட்டு வைகுண்டநாயகனுடைய திருவடிகளைச் சேர்ந்தார். தன் தகப்பனே குருவென் றெண்ணித் தவறாமல் அனுதினமும் ஸ்ரீ வேங்கடேசப்பெருமானைக் கிருஷ்ணய்யர் தியானம் செய்துகொண்டு வந்தார். ஓர் சமயத்தில் நவாப்பு வீட்டுக் கணக்குகளை எழுதும்போது, வேறொரு ஓலையின்மீது சப்தகோடி மஹா மந்திரங்களின் சாரமாகிய ஜகதீசன் திருநாம மந்திரத்தை எழுதிக்கொண்டு வந்தார். எழுதும்போது நவாப்பு வீட்டில் துலுக்கமதவிஷயங்களைத் தவிர வேறு மதவிஷயங்களை எழுதினாலும், சொன்னாலும், படித்தாலும் அவன் சிரத்தை வாங்கிவிடும்படி நவாபினுடைய உத்திரவாய் இருந்தது. ஆகையால், கிருஷ்ணய்யரோடு உத்தியோகம் செய்யும் துலுக்கர்கள் அடிக்கடி அவர் ஹரிநாமஸ்மரணை செய்துகொண்டிருப்பதைக் கேட்டுக் கோபம் உள்ளவர்களாய் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு நல்ல சமயம் பார்த்துக் கிருஷ்ணய்யரைத் தண்டிக்கவேண்டுமென்று எண்ணியிருந்தார்கள். ஒய்வு வேளையில் கிருஷ்ணய்யர் ஹரிநாமத்தை ஓலையின்பேரில் எழுதிக்கொண்டு வருவதினால் அதையும் அந்தத் துலுக்கர்கள் கண்டுபிடித்து, கிருஷ்ணய்யர் வெளியில் போயிருந்த வேளையைப் பார்த்து, கூட்டமாய் நவாபிடம் சென்று பிரியாது செய்தார்கள். நவாபு அதைக் கேட்டுப் பொறுக்க முடியாத கோபமுள்ளவனாய்த் ''திருப்பதிக் கடவுளை நம்முடைய மாளிகையில் நினைக்கும்படியான காரணமென்ன? அப்பேர்ப்பட்ட துன்மார்க்கனுடைய சிரத்தை நூறு துண்டுகளாக வெட்டிவிட வேண்டும்'' என்று நிச்சயித்து, சமஸ்தான பண்டிதரை வரவழைத்து, கிருஷ்ணய்யன் எழுதிய ஓலைகளைப் பரிசோதிக்கும்படி உத்திரவுசெய்தான். பண்டிதர் அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டு, அரசனை நோக்கி, ''துரையே! இது ஆதி

மகம்மத்பக்தகோடிகளுக்கு உபதேசித்த குரான்மந்திரங்களாய் இருக்கின்றன; இதை எழுதினவன் மகா புண்ணியசாலியாய் இருப்பான்'' என்று சொன்னான். அதைக் கேட்டு அரசன் அந்த ஓலையைத் தானும் பரீக்ஷித்துத் துலுக்கர்களைத் திரஸ்காரம் செய்து, கிருஷ்ணய்யரை வரவழைத்து அநேகவித மரியாதைகள் செய்து மாதந்தோறும் 10 பங்கு சம்பளம் அதிகமாய்க் கொடுக்கும்படி உத்திரவு செய்தான். அதைப் பார்த்துத் துலுக்கர்கள், "ஆ! ஆ!! இது என்ன அநியாயம்; இத்தனை பேர் நாம் பார்த்தும் பொய்யாய்விட்டதே; ஆனாலும் பரவாயில்லை'' என்று இருந்தார்கள்.

கிருஷ்ணய்யர் வருஷந்தோறும் நவாபுக்கு ஏதோ ஒரு சாக்கைச் சொல்லி ரஜா பெற்றுக்கொண்டு திருப்பதிக்குச் சென்று ஸ்ரீ வேங்கடேச பிரம்மத்தைத் தரிசித்துக்கொண்டு வந்தார். இவர் பொய்யான சாக்குகளைச் சொல்லி ராஜாங்க விரோதமான இந்து தேவாலயங்களுக்குப் போவது அவ்விடமிருக்கும் துலுக்கர்கள் எல்லோருக்கும் தெரிந்துவிட்டது. அவர்கள் "இந்தத் தடவையாகிலும் எப்படியாவது மதவிரோதமான நடக்கையுள்ள கிருஷ்ணய்யனைத் தண்டிக்கவேண்டும்'' என்று எண்ணியிருந்தார்கள். இப்படியிருக்க, ஒருவருஷத்தில்கிருஷ்ணய்யர் தன்குடும்பத்தில் யாரோ ஒருவர் இறந்துபோனாரென்றுசாக்குச் சொல்லி நவாப்பினிடம் ரஜா பெற்றுக்கொண்டு திருப்பதி தங்கமலையானைத் தரிசிக்கப் போனார். அதைத் தெரிந்து துலுக்கர்கள் சந்தோஷமுள்ளவர்களாய் "ஆ! ஆ!! நம்முடைய எண்ணம் கைகூடிவிட்டது; வலையில் அகப்பட்ட மீனைப் போல் கிருஷ்ணய்யன் அகப்பட்டுவிட்டான்'' என்று சொல்லிக்கொண்டு, தக்க விசாரணை ஊரில் செய்து சாக்ஷிகளோடும் நல்ல ருஜுவுகளோடும் நவாப்பிடம் பிரியாது செய்தார்கள். அவன் அதை எவ்வளவு சொல்லியும் நம்பாமல் பிறகு அநேக நூறு சாக்ஷிகள் சொல்லக் கேட்டுச் சந்தேகமுள்ளவனாய், "கிருஷ்ணய்யன் அவ்விதமாகத் திருப்பதிக்குப் போனது உண்மையானால் அவன் மறுபடியும் வீட்டுக்குள் புகாதமுன்பு அவனை இவ்விடம் பிடித்துக்கொண்டு வாருங்கள்; நான் நேரில் விசாரணை செய்கிறேன்'' என்று சொன்னான். அதன்படி செய்வதற்காகத் துலுக்கர்கள் ஊரெங்கும் காவலாள்களை வைத்துக் கிருஷ்ணய்யரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

கள். திருப்பதிக்குச் சென்ற அந்த பக்தசிரோன்மணி ஜெக தீஸன் தரிஸனம்செய்து திரும்பிவருகையில், மடியில் மாவு பிரசாதத்தையும் துளசி தளங்களையும் வைத்துக்கொண்டு வந்தார். ஊருக்கு அருகே வந்தவுடனே துலுக்கர்கள் அவ ரைப்பிடித்து மடியை சோதித்துப்பார்க்க, மாவுபிரசாதமும் துளசியும் இருக்கக் கண்டு, "ஆ! ஆ!! பழைய நாள் திரு டன் இன்றைக்கு அகப்பட்டான்" என்று சொல்லித் துடை களைத் தட்டிக்கொண்டு பிரசாதமுள்ள மடியை அவிழ்ந்து போகாமற்படி துணியைப் பிருவாய்க் கட்டி அவரை நவா பிடம் கொண்டுவந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ வேங்கடேச பெருமான் ஓர் ஹாஜியைப்போல் வேடம் பூண்டு, நீண்ட தாடியோடும் ஏகாண்டமான அங்கியோடும், தலைப்பாகை யோடும், கையில் ஜபமாலையைத் தரித்துக்கொண்டு நித்திய முக்தர்களையும் ஹாஜிகளாகச் செய்து அழைத்துக்கொண்டு நவாப்பிடம் வந்தார். அவரைக் கண்டவுடனே நவாப்பு எழு ந்து சலாம் செய்து, அவருக்கு மரியாதை செய்து, க்ஷேம லாபங்களை விசாரித்தார். அதற்கு ஹாஜி, "இன்றையதினம் தான் மெக்கா மெடீனா முதலிய புண்ணிய ஸ்தலங்களைத் தரி சித்துத் திரும்பிவருகிறேன்" என்று சொல்லி வலதுபுறம் திரும்பிக் கிருஷ்ணய்யரைப் பார்த்து, "அஸரத்! நீங்கள் மெக்காவிலிருந்து எப்போது வந்தீர்கள்?" என்று சொல்லி எழுந்து சலாம் செய்தார். அதைப்பார்த்து நவாப்பு திக்பிர மை யடைந்தான். சாக்ஷி சொல்லவந்த கூட்டங்களும் வாய் களைத் திறந்துகொண்டு, கண்ணிட்டாமல் இடிவிழுந்ததைப் போல் பார்த்துக்கொண் டிருந்தார்கள். நவாபு ஹாஜியைப் பார்த்து, "சுவாமி! நீர் கிருஷ்ணய்யரை அறிவீரா?" என்று கேட்டான். அதற்கு ஹாஜி, "ராஜாவே! நான் அறிவேன்; இவர் மெக்காவுக்கு வந்து சர்வேஸ்வரனை அல்லாவைப் பூஜித்துப் புண்ணிய ஸ்தலங்களைப் பார்த்துத் திரும்பிவந் தார்" என்று கூறினர். இப்படிச் சொன்னவுடனே நவா புக்கு அளவற்ற கோபம் உண்டாய்ச் சாக்ஷிகள் பக்கம் திரும்பிப் பார்த்தான். சாக்ஷிகளில் தைரியமுள்ள ஒருவன் "ஐயா ராஜாவே! இவன் மெக்காவுக்குப் போகவில்லை; திருப்பதிக்குப்போய் வேங்கடேசனைத் தரிசனம் செய்து கொண்டு வந்தான்; இவன் மடியைச் சோதித்தால், வேங்க டேசனுக்கு ஆராதனை செய்த மாவும், துளசியும் இருக்கிற தைப் பார்க்கலாம்; அதுவே அத்தாக்ஷி பாருங்கள்" என்று உறுதியாய்ச் சொன்னன். அதைக் கேட்டு நவாபு கிருஷ்

ணய்யர் முடியைத் தானே சோதித்துப் பார்க்கையில் மெக்காவில் அல்லாவின்பேரில் அலங்கரித்த மல்லிகை புஷ்பமும், அந்தக் கடவுளுக்கு பாத்தியா செய்த சர்க்கரையும் இருந்தன. அதைப் பார்த்து நவாபு ரௌத்திராகாரமான கோபமுள்ளவனாய், "அந்த சாக்ஷிகள் எல்லோரையும் தூக்கில் போட்டுக் கொல்லும்படி கட்டளையிட்டு, கிருஷ்ணய்யருக்கு ஓர் பெரிய ஜாகிரை இனுமாய்க் கொடுத்துப் புத்திர பவுத்திர பாரம்பரியமாக அனுபவித்துக்கொண்டிருக்கும்படி உத்திரவுசெய்தான். கடவுளுடைய அன்பர்கள் பேரில் யாராகிலும், குற்றம் சொல்லத்தகாது. அப்படிச் சொல்லும் குற்றம் எவ்வளவு நியாயமானதாய் இருந்தாலும் முடிவில் நவாப்பிடம் சொல்லவந்த சாக்ஷிகளுக்கு உண்டான கதியைப்போல் சிக்ஷையை உண்டாக்கும். பாகவத அபசாரத்தால் உண்டாகும் துன்பங்கள் இப்பேர்ப்பட்ட தென்பதற்கு இதுவே திருஷ்டாந்தம். பிறகு கிருஷ்ணய்யர் சகல ஐஸ்வரிய போகங்களை உடையவராக வெகு காலம் திரிகரண சுத்தியாய்க் கடவுளைத் தியானித்துக்கொண்டிருந்து முடிவில் கருணைக்கடலாய், அன்பர்களின்பேரில் ஆகாயத்தைப் போன்ற பெருந்தயவும் ஆசையுமுள்ள அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகராகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் திருப் பொற்பாதங்களைச் சேர்ந்தார்.

---

## தரிகோண்ட வேங்கமாம்மாள் சரித்திரம்.

ஸ்ரீ திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்திற்கு வடமேற்கில் தரிகொண்ட என்ற ஓர் கிராமம் இருக்கிறது. அந்தக் கிராமத்திலுள்ள அக்கிரஹாரத்தில் வேதாத்தியயன சம்பன்னர்களும், மகா வித்வான்களுமாகிய பிராம்மணர்கள் இருந்தார்கள். அந்தப் பிராம்மணர்களில் வசிஷ்ட கோத்ரத்தில் பிறந்தவனும் புண்ணியசாலியுமாகிய கிருஷ்ணய்யன் என்றோர் பிராம்மணன் இருந்தான். அவனுக்கு நிலம் நீர் தனம் தான்ய ரத்தினபரண சம்பத்துகள் அளவற்றனவாய் இருந்தன. பஞ்சபாண்டவர்களைப்போல் பிள்ளைகளும் இருந்தார்கள். ஆனால் பெண் சந்ததி இல்லாத குறையினால் ஸ்ரீ திருப்பதியிலெழுந்தருளிய ஸ்ரீவேங்கடாசலபதியை அநேக வருஷகாலம் பிரார்த்தனை செய்துகொண்டிருந்து, சில காலத்துக்குப் பின்பு அவர் வரப்பிரசாதத்தினால் ஓர் பெண் பிறந்தாள். அந்தப் பெண் ஸ்ரீலக்ஷ்மிதேவியைப் போல்

மகளு சௌந்தரியவதியாயும், பூர்ணசந்திரனைப் போன்ற முகாரவிந்தம் உள்ளவளாயும் இருந்தபடியால் அக்குழந்தையை மிகுந்த அன்புடன் வளர்த்துக்கொண்டு வெங்கமாம்பாள்என்று நாமகரணம் செய்தான். ஐந்து வயதுக்கெல்லாம் அக் குழந்தை சரஸ்வதி தேவியைப்போல் கவனங்கள் பாடி அமுர்த திரைகளான சொற்களால் ஸ்ரீவேங்கடேசப்பெருமானைத் துதிக்கத் தொடங்கினாள். அக் குழந்தை ஹரிபஜனை செய்துகொண்டும், சர்வாந்தரியாமியாகிய ஜகதீசன் திருநாமத்தை ஜபித்துக்கொண்டும், வயல்களிலும் தன்னை மறந்து நிருத்தம் செய்துகொண்டுமிருந்தாள். அதைப் பார்த்துத் தகப்பன் மிகவும் சந்தோஷித்தவராய் இருந்து, சில காலங்களுக்குள் புத்தி மாறி, அந்தக் குழந்தையை இம்சை செய்ய ஆரம்பித்தான். "ஆ! ஆ!! இது ஆச்சரியம்! பெண்குழந்தை மானுபிமானங்களை விட்டு ஹரி பஜனை செய்வது நம் குலத்திற் கடுக்குமா? இந்தச் சிறுவயதில், இப்படி யிருந்தால் இன்னும் போகப்போக எப்படி யிருக்குமோ?" என்று அந்தக் குழந்தைக்குக் கண்டிதமான உத்திரவு செய்து தண்டிப்பதற்கு ஆரம்பித்தான். ஒரு நிமிஷமாவது ஹரியைத் தியாநிப்பதற்கு விடாமல் வீட்டில் பாத்திரங்களைத் துலக்குவது, வீட்டைப் பெருக்குவது முதலிய வேலைகளைச் செய்யும்படி கட்டளையிட்டான். சிறுவயதுள்ள அந்தக் குழந்தையின் சக்திக்கு இந்த வேலைகள் மிகுந்த கஷ்டமானவைகளாகையால், விசேஷ சிரமம் அந்தப் பெண்ணுக்கு உண்டாய்விட்டது. இப்படிக்கிருந்தும், அந்தக் குழந்தை வேலைகளைச் செய்துகொண்டும், ஜகதீசனுடைய திருவடிகளில் மனதைச் செலுத்தித் தியானம் செய்துகொண்டும், எல்லாவற்றையும் மறந்து தூங்கிவிட்டதைப்போல் இருப்பாள். அதைப் பார்த்து, கிருஷ்ணய்யன் "ஆ! ஆ!! என்ன விபரீதம்; கல்யாணம் செய்துகொண்டு புருஷனுக்குச் சேவைகள் செய்யவேண்டிய கட்டளையுள்ள பெண்கள் இவ்விதமாய் ஹரிபக்தி செய்வது தக்கதா?" என்றெண்ணி, அந்தக் குழந்தையின்பேரில் கொஞ்சமாவது தயவில்லாமலும் பிரீதி இல்லாமலும் அநேக விதங்களால் சிக்ஷித்தும் திட்டியும் அடித்தும் ஆகாரத்தைக் குறைவு செய்தும் ஹரிபக்தியை மாற்றுவதற்குப் பாடுபட்டான். எத்தனை தடவை உருக்கினபோதிலும் தங்கத்துக்குப் பிரகாசம் மாறாமல் இருப்பதைப்போல், அந்தக் குழந்தை தன்னுடைய சுபாவத்தை விடாமல் அகிலாண்டகோடி

பிரம்மாண்ட நாயகனுகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளை திரிகரண சுத்தியோடும் ஆராதித்துக்கொண் டிருந்தாள். கிருஷ்ணய்யன் தன்னுல் சக்தியுள்ள அளவு அந்தக் குழந்தையைத் தண்டித்தும் சுவாபம் மாறுமல் இருந்தபடியால், "விவாகம் செய்வித்தால் பிரபஞ்ச ஆசைகள் உண்டாய், அந்தப் பெண்ணுக்கு ஹரிபக்தி விட்டுப் போகும்" என்றெண்ணி விவாகப் பிரயத்தினங்கள் செய்தான். அந்தப் பெண்ணினுடைய ரூபலாவண்ணியங்களைப் பார்த்து அநேகர் விவாகம் செய்துகொள்வதற்குச் சம்மதித்தார்கள். சிலர், "இந்தப் பெண் சம்சாரத்திற்குத் தக்கதல்ல" என்று சொன்னூர்கள். சிலர், "இந்தப் பெண்ணினுடைய பக்தியைப் பார்த்து, "ஏதோ தேவதை இவ்விதமாய் அவதரித்தது" என்ருர்கள். சிலர், இந்தப் பெண் பார்ப்பதற்கு நன்ருய் இருக்கிறதேயன்றி குணங்கள் நன்ருய் இல்லாமற் போனதால் இவளைக் கல்யாணம் செய்துகொண்டால் கஷ்டம் நேரிடும்" என்று எண்ணினூர்கள். சிலர், "இந்தப் பெண்ணுக்கு ரூபத்தை உண்டாக்கின பிரம்மா ஏன் குணத்தை உண்டாக்கவில்லையோ!" என்று யோசித்தார்கள். முடிவில் கிருஷ்ணய்யன் அந்தப் பெண்ணை ஒரு சிறுவனுக்குக் கொடுக்க நிச்சயித்துச் சகல பந்துமித்திரர்களை வரவழைத்து, அகண்ட வைபவத்துடன் கல்யாணம் செய்வித்தான். அந்தப் பெண்ணின் ரூபலாவண்ணியங்களுக்குப் பிரமித்து மாமன் மாமி முதலிய பந்துக்கள் அந்தப் பெண்ணின்பேரில் அதிகப் பிரீதி உள்ளவர்களாய் இருந்தார்கள். அந்தப் பெண், "இவ்வுலக மாயை துக்க சொரூபம்" என்றும், "ஸ்ரீ ஹரி திருவடிகளைத் தியானிப்பது அமிர்த பானத்துக்கு ஒத்தது" என்றும் எண்ணி, சதா ஸ்ரீ ஹரிபஜனை செய்துகொண்டு இருப்பதைப் பார்த்து, பந்து ஜனங்கள் "ஆ! ஆ!! பூர்வத்தில் இருந்த பிரகலாதாழ்வாரே இந்த யுகத்தில் ஸ்திரீ ரூபமாய் வந்தாரோ" என்று நினைத்து விசாரத்துடன் அந்தக் குழந்தையின் நடவடிக்கைகளைக் கிருஷ்ணய்யனுடன் கூறினூர்கள். அதைக் கேட்ட கிருஷ்ணய்யன் தலையைக் கைகளால் அடித்துக்கொண்டு, "ஐயோ! இனி நான் என்ன செய்வேன்? விவாகம் செய்துவைத்தும் இவ்விதமாய் இருக்கிறதே" என்று விசாரப்பட்டு, பெண்ணைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்து அநேக விதங்களாகப் பிரபஞ்ச விஷயங்களைக் கவனிக்கும்படி பிரயத்தினப் பட்டுக்கொண்

டிருந்தான். சிலநாட் சென்றதும் அந்தப் பெண் யுக்தவய துள்ளவளாய்க்கமலத்தில் அவதரித்த ஸ்ரீலக்ஷ்மி தேவியைப் போல் சவுந்தரிய முள்ளவளாய் இருந்தாள். கிருஷ்ணய் யன், "சீக்கிரத்தில் அவளுக்கு நிஷேகம் செய்துவைத் தால் பிரபஞ்ச ஆசைகள் உண்டாகும்" என்றெண்ணித் தக்க பிரயத்தினங்கள் செய்கையில், அந்தப் பெண்ணை விவாகம் செய்துகொண்ட புருஷன் நிஷேகதினத்தன்று இரவு அவளைச் சமீபித்து வர, அவனைப் பார்த்து அவள், "ஓ மூடாத்துமா! உனக்கென்ன பிரமை பிடித்திருக் கிறது? என் பிராண நாயகனும், பர்த்தாவும் ஸ்ரீ வெங்க டேசப் பெருமான் என்று உனக்குத் தெரியாதா? விவா கம் ஆயிருக்கும் என்னை என் தகப்பன் அறியாமல் மறு படியும் விவாகஞ் செய்வித்தான்; ஆகையால் வேறு விவாகம் செய்துகொள்ளுவாய்" என்று சொல்லக் கேட்டு, அந்தப் புருஷன், "ஐயோ! கிருஷ்ணய்யன் மகள் வெரி பிடித்தவள் என்று சொன்னது மெய்யே; இவள் என்ன கிரகமோ, தேவதையோ, அறியாமல் என் தாய் தந்தையர் இவளை எனக்கு விவாகம் செய்வித்தார்களே" என்று துக்கித்துக் கொண்டிருந்து சில நாளுக்குள் மிருத்யுவடைந்தான். அத ற்குமேல் அந்த அக்ரஹாரத்திலிருக்கும் பிராம்மணர்கள் குலாசார தர்மப்படிக்கு, அவள் தலைமயிரை வாங்கிச் சுயம் பாக வேலைகளில் நிறுத்துவதற்குப் பிரயத்தினப்பட்டார் கள். அவள் அதற்குச் சம்மதிக்காமல் "நான் நித்திய சுமங்கலி" என்றும், "நித்திய மங்களாகரனான திருவேங் கடத்தான் பாதகமலங்களைத் தியானித்துக்கொண்டிருப் பதே எனக்குத் தர்மம்" என்றும் சொல்லி வெண்மை யான சீலைகளும், புஷ்பங்களும், சுவாசனைகளும், நவரத் தின கசித சுவர்ணாபரணங்களும் தரித்துக்கொண்டு ஸ்ரீ ஹரி பஜனை செய்துகொண்டிருந்தாள். அப்போது அவள் சத் துவகுணத்தை அறியாத பிராம்மணர்கள் அவளைக் "குலப் பிரஷ்டி" என்றும், "அகங்காரம் பிடித்தவள்" என்றும் தூஷித்துக் குலத்திலிருந்து நீக்கி வீட்டைவிட்டுத் துரத்தி விட்டார்கள். அதற்குமேல் வெங்கமாம்பாள் சுயேச்சை யாய்த்திரிந்துகொண்டு இரவு பகலில்லாமல் எந்த இடத்தி லும் ஸ்ரீ ஹரிதியானம் செய்துகொண்டு, நித்தியமங்கள மூர்த்தியாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான்மீது நவரத்தி னங்களையொத்த கவனங்கள் பாடி அலங்கரித்து ஆராதித் துக்கொண் டிருந்தாள். அவள் பெருமையை அறியாத

பிராம்மணர்கள் பிரபஞ்ச வாசனையினால் அவளைத் தூஷித்தார்கள்; கற்களால் அடித்தார்கள்; "குலத்துரோகி" என்றும், "விபசாரி" என்றும் சொன்னார்கள். சிலர், "இப்பேர்ப்பட்ட பக்தியும் கவித்துவமுமுள்ள இந்தப் பெண் சாக்ஷாத் சரஸ்வதியே யன்றி சாமானியவளல்லள்" என்று புகழ்ச்சி செய்தார்கள். சிலர், "அவள் தரிசனம் ஸ்ரீயப்பதியாகிய வேங்கடேசப் பெருமான் தரிசனத்திற்கு ஒத்தது" என்றும், "அவள் வாக்கில் சரஸ்வதிதேவி நித்தியமும் தாண்டவமாடுகிறாள்" என்றும் சொல்லி அவளுக்குப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்தார்கள். அன்னபானங்களைக் கொடுத்து ஆதரித்தார்கள்.

இப்படி யிருக்கையில், சில காலத்திற்குப் பிறகு அந்த ஊருக்கு ஆதி சங்கராசாரியருடைய பரம்பரை ஆசாரியர் வந்தார். அப்பொழுது அக்ரஹாரத்திலுள்ள பிராம்மணர்கள் அவரைத் தரிசிக்கப் போனார்கள். அந்த ஊரில் வெங்கமாம்பாள் சங்கதி நன்றாய்த் தெரிந்திருக்கிறபடியால் பிராம்மணர்கள், "இது நல்ல சமயம்" என்றெண்ணி, ஆசாரியருக்கு அவள் சங்கதியை அர்ஜிகள் எழுதியும், நேரிலும் தெரிவித்தும், அவளுக்குப் புத்தி சொல்லும்படி பிரார்த்தித்தார்கள். அதற்குமேல் சுவாமிகள், "பிராம்மண ஸ்திரீ இவ்விதமாய் இருப்பது தரும விரோதம்" என்று சொல்லி அவளைத் தம்மிடம் அழைத்துக்கொண்டுவரும்படி உத்திரவு செய்தார். அதற்குமேல் குருக்களுடைய சேவகர் வெங்கமாம்பாள் இடத்திற்குப் போய் அழைக்கையில், அவள், "போஜனம் செய்து வருகிறேன்" என்று சொன்னாள். இதைக் கேட்டு "இப்படிச் சொன்னவர்களை உலகத்தில் பார்த்ததில்லை" என்று சேவகர் ஆச்சரியப்பட்டுக்கொண்டு குருக்களிடம் வந்து தெரிவிக்கையில், அவ்விடம் இருந்த சில பிராம்மணர்கள் மிகுந்த கோபமுள்ளவர்களாய் அவளைப் பலவந்தமாக அழைத்துக்கொண்டுவந்து சுவாமிகள் எழுந்தருளிய சிம்மாசனத்திற்கு முன்னிற்கும் திரையின் பக்கத்தில் நிறுத்தினார்கள். அப்பொழுது வெங்கமாம்பாள் சும்மா நின்றிருப்பதைப் பார்த்து அவ்விடத்திலிருந்த பிராம்மணர்கள் ஜெகத்குருவை நமஸ்கரிக்கும்படி தொந்திரவு செய்தார்கள். சிலர், "இவளுக்கு நல்ல காலம் இல்லை" என்றும், சிலர், "இவள் கெர்வம் பிடித்தவள்" என்றும், சிலர், "இவள்மேல் கிர

கம் இருக்கிறது" என்றும், அநேகவிதங்களாய்ப் பேசினார்கள். இப்படி இவ்விடத்திலுள்ள எல்லோரும் சொல்லியும் வெங்கமாம்பாள் சும்மா இருப்பதால் அவளை நமஸ்கரிக்கும்படி தொந்திரவு செய்தும், திட்டியும், அடிக்கவும் ஆரம்பித்தார்கள். அதற்குமேல் சங்கராசாரிய சுவாமிகள் திரையை நீக்கிவிடும்படி உத்திரவு செய்து, அவளைப் பார்த்து, "ஓ மூடமதி! உனக்கென்ன கொர்வம் பிடித்திருக்கிறது? ஏன் நமஸ்கரிக்காமல் இருக்கிறாய்?" என்று கூறினார். அதைக்கேட்ட வெங்கமாம்பாள், "ஐயா! நீர் அந்த சிம்மாதனத்தைவிட்டு அப்புறம் போவீரானால் நமஸ்கரிக்கின்றேன்" என்று சொன்னாள். அதைக்கேட்ட குருக்கள் மிகவும் கோபமுள்ளவராய், "ஆ! ஆ!! என்ன ஆச்சரியம்; இப்படிப்பட்ட வார்த்தையை நான் கேட்டதில்லை; என்னுடைய தரிசனம் பகவானுடைய தரிசனமென்றெண்ணிப் பிராம்மணர்களும், வித்துவான்களும், ஞானிகள் முதலிய சகலமானவர்களும் எனக்கு அடியேனாய்ச் சரணம் செய்துகொண்டிருக்க, கேவலம் ஸ்திரீயாகிய நீ என்னை லக்ஷியம் செய்யாமல் இவ்விதமாய்ச் சொன்னாய்; ஆனாலும் பெரிதல்ல; நான் அப்புறம் போய்விடுகிறேன்; நமஸ்காரம் செய்வாய்" என்று சிம்மாதனத்தைவிட்டு எழுந்துபோனார். அந்தச் சமயத்தில் மகா புண்ணியவதியும், பக்த சிரோமணியுமாகிய வெங்கமாம்பாள் கைகளெடுத்து அந்த சிம்மாதனத்தை நமஸ்கரித்தாள். ஆ! ஆ!! என்ன சொல்லலாம்? அந்த இடத்தில் உண்டான ஆச்சரியம். "கடல் பொங்கிவந்ததா? அல்லது காட்டுச் சிங்கங்கள் ஊரின்பேரில் வந்துவிட்டதா? அல்லது பிரளயகாலம் நேரிட்டதா?" என்று சொல்லி அவ்விடம் கூடியிருந்த பிராம்மணர்கள் ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு பசுக்கூட்டங்களைப் போல்ஓடினார்கள். அந்த ஜனங்களுடைய கூச்சலைக்கேட்டுப் பெரும் அல்லோல கல்லோலமாய்ச் சுற்றுப்பக்கத்தில் குடியிருக்கும் ஜனங்கள் ஓட்டமாய்வந்து பார்த்தார்கள். அந்தச் சிம்மாசனம் அக்கினி ஜுவாலைகளில் அகப்பட்டு படபடவென்று முறிந்து, நிமிஷ காலத்துக்குள்ளாகப் பஸ்மீகரமாய்விட்டது. மேகங்களைப்போன்ற புகைச்சலும் அக்கினி ஜுவாலையும் அவ்விடம் நிறைந்துவிட்டன. அப்பொழுது சுவாமிகள் நடுநடுங்கி, "ஆ! ஆ!! நான் சிம்மாதனத்திலிருந்தால் என் கதி என்னவாகும்? இந்தப் பிராம்மணர்கள் வார்த்தையைக் கேட்டு மகா புண்ணியவதியாகிய இந்த ஸ்திரீ

யை நான் அவமானமாய்ப் பேசிவிட்டேன்" என்று சொல்லி, வெங்கமாம்பாள் பாதகமலங்களில் விழுந்து நமஸ்கரித்து, "ஓ தாயே! என் பிராணனை நீ ரக்ஷித்தாய்; ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுடைய அந்தரங்கபக்த சிரோமணியாகிய உன் பெருமையை அறியாமல் தூஷித்த அபசாரத்தை மன்னிக்கவேண்டும்" என்று அநேக விதங்களாகப் பிரார்த்தித்து, அதற்குப் பிறகு வெங்கமாம்பாளுக்கு மரியாதைகள் செய்து, பிராம்மண சந்தர்ப்பணையும் செய்து, சகலவித பக்ஷிய போஜ்ஜியங்களோடு விருந்துவைத்தார். பிறகு பிராம்மணர்களைப் பார்த்து அநேக வேதவேதாந்த உபநிஷப் பிரமாணங்களைச் சொல்லி, "பக்தியுள்ளவனே பெரியவன்" என்றும், "பூஜிக்கத்தக்கவன்" என்றும், "பக்தி யில்லாதவன் பிராம்மணனாய்ப்பிறந்தாலும் பிரயோஜனமில்லை" என்றும், அநேக விதங்களாக நிரூபணம் செய்து வெங்கமாம்பாள் பெருமையைக் கொண்டாடினார். அதையெல்லாம் கேட்ட பிராம்மணர்கள் சுவாமிகளைப் பார்த்து, "சுவாமி! இவ்வளவு புண்ணியவதியும் ஞானசிரோமணியுமாகிய வெங்கமாம்பாள் குலதர்மத்துக்கு உள்பட்டிருந்தால் பிராம்மண வம்சத்திற்கு அளவற்ற கீர்த்தி உண்டாகுமாகையால் தயவுசெய்து சிரசின் கூந்தலை வாங்கிவிடச் சொல்லும்படிப்பிரார்த்தித்தார்கள். அவ்விதமாகவே சுவாமிகள் அந்த லோக மாதாவுக்குத் தெரிவிக்க, அவள், "அவ்விதமாகச் செய்வதற்கு ஆக்ஷேபமில்லை" என்றும், "ஆனால், மறுபடியும் கூந்தல் முளையாமல் இருக்கும்படி குருக்கள் செய்யவேண்டும்" என்றும் சொன்னாள். அதைக் கேட்ட ஸ்வாமிகள் அவள் பாதங்கள்மீது விழுந்து "தாயே! என் பாமரத்தால் அவ்விதமாய்க் கேட்டேன்; ஆகையால், மன்னிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்த பிறகு, பிராம்மணர்களைப்பார்த்து, "ஞானசிரோமணிகளுக்கு வர்ணாஸ்ரம தர்மாசாரங்களைக் கவனிக்கவேண்டியதில்லை" என்று அநேக ஸ்ருதி ஸ்மிருதிப் பிரமாணங்களைச் சொல்லி, அந்தத் தேவியின் உத்தரவைப் பெற்றுக்கொண்டு தமது தேசத்திற்குப் போய்விட்டார்.

அதுமுதல் அந்தப் புண்ணியவதியைத் தேவதையாய்க் கொண்டாடிக்கொண்டு சகல ஜனங்களும் பூஜித்துக் கொண்டுவந்தார்கள். சில நாளுக்குள் வெங்கமாம்பாள் சதா பிரமநிஷ்டையில் மூழ்கினவளாய் முட்கள்பேரிலும், வீதிக

ளிலும், காடுகளிலும், சுசி அசுசிப் பிரதேசங்களிலும், பேதாபேதங்கள் தெரியாமல் "சர்வமும் பிரம்மமயம்" என்று ஸ்ரீ வேங்கடேசப் பெருமானைத் தியானித்து ஆடியும், பாடியும், பஜனைகள் செய்துகொண்டிருந்தாள்.

சிலநாளுக்குப் பிறகு ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் எழுந்தருளிய திருப்பதி க்ஷேத்திரத்திற்கு வந்து சுவாமி சன்னதிக்கு வடக்கில் ஓர் துளசி வனத்தை உண்டாக்குவதற்கு வேலைக்காரர்களைக் குளம் வெட்டும்படி உத்திரவு செய்ய, அவர்கள் அவ்விதமாக வெட்டுகையில் அதில் ஜலம் வராமல் பாறை விழுந்துவிட்டபடியால் வெங்கமாம்மாள் அந்தக் குளத்தின் நடுவில் போய்நின்று, பரமேஸ்வரனுடைய ஜடாமகுடத்தில் குடிகொண்டிருக்கும் கங்கா பவானியைத் தியானிக்க, உடனே புஷ்களமாக ஜலம் அந்தக் குளத்தில் நிரம்பிவிட்டது. அதையெல்லாம் பார்த்த ஜனங்கள், "மகாதேவியே இவ்விதமாய்ப் பூமியில் அவதரித்தாளோ" என்று வெங்கமாம்பாளைச் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுப் பூஜித்துக்கொண்டு வந்தார்கள். பிறகு, வெங்கமாம்பாள் அந்த வனத்திலுண்டாகும் துளசி தளங்களால் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானை ஆராதித்துக் கொண்டு வெங்கடாசல மஹாத்மியம் என்னும் ஸ்ரீ திருப்பதி மஹத்துவத்தைச் செய்து ஸ்ரீ ஹரிக்கு அற்பிதம் செய்தாள். அதற்குமேல் திருவேங்கட நாயகன் அந்த அம்மையார் பக்திக்கு மெச்சிக்கொண்டு நிஜதரிஸனம் கொடுத்து நித்தியமும் பிரத்தியக்ஷமாய் இருந்தார். வெங்கமாம்பாள் பெருமை உலகமெங்கும் வியாபித்துவிட்டபடியால் விசேஷமாய் ஜனங்கள் வந்து ஆராதித்துக்கொண்டிருந்தார்கள். இதனால் வெங்கமாம்பாளுக்கு இஷ்டமில்லாமல் சுவாமி சன்னதிக்குப் பதினைந்து மைல் தூரத்திலிருக்கும் தும்பூர் தீர்த்தத்தின் சமீபத்தில் உள்ள ஓர் பயங்கரமாகிய குகையில் சேர்ந்து இருந்தாள். திடீரென்று அந்த அம்மையார் காணாமற் போனபடியால் ஜனங்கள், "அம்மையார் ஸ்ரீனிவாசமூர்த்தியுடன் ஐக்கியம் ஆய்விட்டார்" என்று எண்ணி, துளசிவனத்தில் ஓர் ஸமாதியை உண்டாக்கினார்கள். வெங்கமாம்பாள் சேர்ந்த குகையிலிருந்து சுவாமி பாதார விந்தங்கள் வரையிலும் பூமிக்குள் ஓர் ரகஸியமான வழியிருப்பதனால், அந்த அம்மையார் அந்த வழியாய் வந்து சுவாமிக்குக் காட்டு புஷ்பங்களினால் ஆரா

இத்து, சுவாமிக்குத் தான் கொண்டுவந்த கனிகளையும் ஊட்டிப்போவாள். இப்படியிருக்க, கோவில் அர்ச்சகர்கள் தாங்கள் சுவாமிக்குச் செய்யும் அலங்காரங்கள் தினம் தினமும் மாறிப்போவதனால் அந்தச் சங்கதியை அக்காலத்திலிருந்த மஹந்துக்குத் தெரிவித்தார்கள். அதைக்கேட்ட மஹந்து ஆச்சரியப்பட்டு, "இந்த ரகஸியத்தைக் கண்டுபிடிக்க வேண்டும்" என்று ஒருநாள் கோவில் மூலஸ்தானத்துக் கதவை மூடுவதற்கு முன்பாக ஓர் ரகஸிய ஸ்தானத்தில் ஒளிந்துகொண்டு சுவாமியைப் பார்க்கிறபடி கதவின் ஓர் துவாரமாகப் பார்த்துக்கொண்டிருந்தார். இராத்திரி மூன்று ஜாமம் ஆனபின்பு அவ்விடத்தில் ஓர் பரிமளம் உண்டாய், தீபங்கள் விசேஷமாய்ப் பிரகாசிக்கத் தொடங்கின. சிறிதுநேரத்திற்குள் சுவாமியின் பாதங்கள் வழியாக வெங்கமாம்பாள் புறப்பட்டு வந்து, தான் கொண்டு வந்த புஷ்பங்களால் அலங்கரித்துக் கனிகளைச் சுவாமிக்கு ஊட்டிப் பரந்தாமனை ஆலிங்கனம் செய்துகொண்டு, முத்தமிட்டு, ஸ்தோத்திரங்கள் செய்து கொண்டாடி, கர்ப்பூர நீராஞ்சனமும் மங்கள ஆலத்தியும் கொடுத்து, மறுபடியும் பொழுது வராதமுன் மறைந்து போனாள். இதெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த மஹந்து பயத்தினாலும், ஆச்சரியத்தினாலும், அந்தக் காக்ஷியைக் கண்ட ஆனந்தத்தினாலும் மெய்மறந்தவராய், "ஆ! ஆ!! இது என்ன ஆச்சரியம்! வெங்கமாம்பாள் எவ்விடத்திலேயோ இருக்கிறாள்; இந்தக் கலியுகத்தில் இப்பேர்ப்பட்ட பக்தியை நாம் கண்டதும் கேட்டதும் இல்லை; ஆ! ஆ!! என்ன மஹத்துவம்" என்று ஆச்சரியத்துடன் கதவைத் திறந்த பின்பு வெளியில் வந்து ஒன்றும் சொல்ல வாய் வராமல் பிறகு அர்ச்சகர்களால் தைரியப்படுத்தப்பட்டு இராத்திரி நடந்த வெங்கமாம்பாள் மஹத்துவத்தைத் தெரிவித்தார். அதுமுதல் ஜனங்கள் காடு மேடுகளைச் சுற்றிப் பார்த்து அந்த அம்மையாரைத் தரிசிக்கப் பாடுபட்டுக்கொண் டிருந்தார்கள். தேவதேவனான ஸ்ரீவெங்கடேசப்பெருமான் வெங்கமாம்பாள் எழுந்தருளிய குகைக்கு ஓர் கிழவனைப்போல் வந்து, "தாயே! எனக்குப் பசி எடுக்கிறது" என்றார். காட்டுக் கனிகளை வெங்கமாம்பாள் கொடுக்க அதைப் புசித்தார். சிறிது நேரத்திற்குள், "தாயே! நான் அநேக அன்பர்களின் இடங்களுக்குப் போனதினால் என் பாதங்கள் வலிக்கிறது" என்று சொல்ல, வெங்கமாம்பாள் ஸ்வாமியின் ஸ்ரீ பாதங்களைத்

தன் கைகளால் மெல்ல வருடிக்கொண்டு சுவாமிக்கு உபசாரம் செய்தாள்.

இப்படியிருக்க, பெரிய வியாதியினால் பாதைப்பட்டுக்கொண்டிருந்த ஒருவன் பிள்ளைகளாலும் பந்துக்களாலும் அந்த வியாதியைப் பார்த்துச் சகிக்காமல் விலக்கப்பட்டதினால் மனவருத்த முள்ளவனாய்த் திருமலைக்குச் சென்று "அவ்விடத்தில் தர்மார்த்தமாய்க் கொடுக்கும்படியான பிரசாதங்களைப் புசித்தாவது சுகமாய் இருக்கலாம்" என்று எண்ணி, தட்டித் தடமாடிக் கொண்டு ஸ்ரீ வெங்கடேசப் பெருமான் சன்னதியைச் சேர்ந்தான். அவ்விடத்திலுள்ளவர்கள் அவன் வியாதியைப் பார்க்கச் சகிக்காமல் அவனைக் கோவிலுக்குத் தூரமாய்த் துறத்திவிட்டார்கள். அதைப் பார்த்து அவன் மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டு, கடவுளை நோக்கி, "ஓ தெய்வமே! உலகத்தாரும் என்னைத் துறத்தி; நீயும் ஆதரிக்காமற்போனால் இனி யார் எனக்குத் துணை?" என்று பெருங்குரலோடு அழுதுகொண்டு, "இனி காட்டுக்காவது போய் மிருகங்களுக்கு இரையாய் விடுகிறேன்" என்று காட்டுக்குள் வெகுதூரம்போய் ஓரிடத்தில் தங்கி, பசியினாலும் அசக்தியினாலும் கடவுளை நோக்கி, முறையிட்டுக்கொண்டிருக்க, அந்த இடத்திற்குச் சமீபத்தில் இருந்த வெங்கமாம்பாள் ஓர் தங்கத் தட்டில் தேவதாப்பிரசாதங்களை வைத்துக்கொண்டு அவன் எதிரில் வந்து நின்று, "அடா! இதைப் புசித்துப் பசியை ஆற்றிக்கொள்வாய்" என்று சொல்ல, அந்த நோயாளன் மிகுந்த சந்தோஷத்துடன் அதை உண்டு அந்த தேவிக்குப் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து நின்றான். வெங்கமாம்பாள் அவனைப் பார்த்து, "அடா! நான் இவ்விடத்திலிருப்பதைப்பற்றி எவரிடமும் கூறவேண்டாம்; அப்படி மீறிச் சொன்னால் உன் சிரசு பிளந்து ஆவி நீங்கிவிடும்" என்று சொல்லி அந்தர்த்தானமாய் விட்டனள். அந்த நோயாளன் திருவேங்கடப் பெருமான் சந்நிதிக்குச் சமீபத்திலிருக்கும் சுவாமி புஷ்கரணி தீரத்தில் மூழ்கி வெளியில் வந்தான். அந்தக் குளத்தில் ஸ்நானம் பண்ணிக்கொண்டிருந்தவர்கள் தங்கத்தைப்போல் மின்னிக்கொண்டிருக்கும் அவன் மேனியைப் பார்த்து, "இவரும் ஓர் கடவுளாய் இருக்கவேண்டும்" என்றெண்ணி, அவனைப் பூஜித்துப் பலகாரங்கள், வஸ்திரங்கள், காணிக்கைகள் சமர்

பித்துக்கொண்டு வந்தார்கள். அவன் சிலநாள் மவுனமாயிருந்து பிறகு தனக்குள்தானே, "நான் கடவுளைப்போல் மற்றவர்களால் ஆராதிக்கப்பட்டுவர வெங்கமாம்பாள் சங்கதியை வெளியிற் சொல்வதினால் என்ன துன்பமிருக்கிறது" என்றெண்ணி, ஜனங்களோடு வெங்கமாம்பாள் இருப்பிடத்தையும் தனக்குத் தங்கமேனி உண்டான பெருமையையும் சொன்னான். அப்படிச் சொன்ன உடனே பெரிய விருக்ஷம் முரிந்ததுபோல் அவன் தலை பிளந்து பிராணன் வெளிப்பட்டுப் போய்விட்டது. கோவில் அதிகாரிகளும் பக்தஜனங்களும் "வெங்கமாம்பாள் இருப்பிடத்திற்குப்போய்த் தரிஸனம் செய்யவேண்டும்" என்று எண்ணிக் கொண்டிருக்கையில், திரிகால ஞான சம்பன்னராகிய அந்த லோகமாதா, "இனி உலகத்தார் கண்ணில் படக்கூடாது" என்றெண்ணி, அந்தக் குகையின் வழியாக வந்து ஸ்ரீ திருவேங்கடப் பெருமாள் திருவடிகளில் ஐக்கியமாய்விட்டாள். அந்தப் புண்ணியவதி அந்தக் குகையில் ஜீவித்திருந்தபோது அந்தக் காட்டில் தபம் செய்து கொண்டிருக்கும் மஹன்னியர்கள் கண்களுக்கு ஏதோ ஒரு காலங்களில் காணப்படுவாள். அவர்கள், "அது சுபதினம்" என்றெண்ணி அந்த லோகமாதாவின் பெருமையைக் கொண்டாடுவார்கள். ஸ்ரீ திருப்பதி க்ஷேத்திரத்துக்கு வரும் யாத்திரை வாஸிகள் ஸ்ரீ வெங்கடேசப்பெருமான் சன்னதிக்குச் சமீபத்தில் வடக்கில் இருக்கும் தரிகொண்ட வெங்கமாம்பாள் துளசிவனத்தைத் தரிஸித்து அவ்விடத்திலுள்ள ஸமாதிக்குப் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்வார்கள். வெங்கமாம்பாள் ஏற்படுத்திய திருக்குளத்தின் தீர்த்தத்தைத் தம்மீது புரோக்ஷித்துக்கொள்ளுவார்கள். சகல ஏரிகளும் ஆறுகளும் கோடை காலத்தில் வற்றிப்போனாலும் வெங்கமாம்பாள் வரவழைத்த கெங்கையுள்ள திருக்குளம் எப்பொழுதும் வற்றாமல் அந்தத் தேவியினுடைய பிரபாவத்தை இன்றைக்கும் பிரகாசிக்கச் செய்கிறது. ஸ்வாமி க்ஷேத்திரத்திற்குப் பதினான்கு மைல் தூரத்திலிருக்கும் தும்புருதீர்த்தத்தில் பங்குனிமீ வளர்பிறை பவுர்னமி தினத்தில் ஸ்நானம் செய்வது பெருத்த சுபத்தை உண்டாக்குமாகையால், அக்காலங்களில் பக்தஜனங்கள் கூட்டங்களாய்ப் போய் அந்தத் தீர்த்தத்தின் சமீபத்திலிருக்கும் ஸ்ரீ வெங்கமாம்பாள் குகையைத் தரிசித்தும், அந்த அம்மையார் பஜனை செய்துகொண்டிருந்த ஓர்

திண்ணையையும் பார்த்து, பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து வருவார்கள்.

---

## ஹத்திராம் பாவாஜி சரித்திரம்.

ஸ்ரீ பரதமகா கண்டத்துக்கு வடக்கில் காசி மகா க்ஷேத்திரம் முமுக்ஷுகளுக்குச் சகல காமியங்களைக் கொடுத்துச் சிறப்பாய் இருக்கையில், தெற்கில் வெங்கடாசலமென்னும் திருப்பதி க்ஷேத்திரம் தர்மார்த்த காமமோக்ஷ புருஷார்த்தங்களைக் கொடுக்கக் கூடியதாய், பக்தஜனங்களாலும், யோகிகளாலும், ஞானிகளாலும், அஷ்டாங்க யோக நிஷ்டைகளில் சமர்த்தர்களாலும், முனிவர்களாலும், ரிஷிகளாலும், அணிமாதி சித்தர்களாலும் சேவிக்கப்பட்டு மிகவும் சிறப்புடையதாய், ஸ்ரீமந் நாராயணமூர்த்தி: லக்ஷ்மிதேவி பூதேவி நீளா தேவிமார்களுடன் எழுந்தருளியதால் கலியுக வைகுண்டமென்று நிரம்பவும் பிரசித்தமாய் இருந்தது. திருப்பதி மகா புண்ணிய க்ஷேத்திரத்துக்கு ஆர்யாவர்த்தமுதல் ஹிமாசலபரியந்த மிருக்கும் தேசங்களிலுள்ள பக்த ஜனங்களும், யோகாப்பியாசிகளும், முமுக்ஷுகளும் அரசர்களும், மந்திரிகளும், பண்டிதர்களும், தபோதனர்களும், ஆயிரக் கணக்காய்க் கோவிந்தநாம ஸ்மரணை செய்துகொண்டு "பூலோகத்தில் நரனாய்ப் பிறந்தால் ஸ்ரீ திருப்பதியில் எழுந்தருளிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமானைத் தரிசிக்காமல் தன்னியர்களாகமாட்டோம்" என்று யாத்திரை செய்வார்கள். மேலும், மந்திரசித்தி, யோகசித்தி, ஞானசித்தி இவற்றை விரும்பினவர்கள் அந்தத் தங்க மலைக்கு வந்து அவ்விடத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, குகைகளிலும், காடுகளிலும், விருக்ஷங்களின் கீழும் சந்ததம் ஸ்ரீ வேங்கடேஸ்வர பிர்ம்மத்தைத் தியானம் செய்துகொண்டு அதே நிஷ்டையில் இருப்பார்கள். இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்திற்கு அதிகாரியாகவும் கோவில், குளம், மண்டபங்கள், மடங்கள், யோகாலயங்களை அடிக்கடி ஜீர்ணோத்தாரணம் செய்வதற்கும், தேவஸ்தானத்தில் அன்பர்களால் சுவாமிக்குச் சமர்ப்பிக்கப்பட்ட பொருள்களைக் காப்பாற்றிப் பிரம்மாதி தேவகணங்களால் ஏற்படுத்திய பிரம்மோச்சவ, ரதோற்சவ, தீர்த்தோற்சவங்களை வருஷந்தோறும் கிரமமாய் நடத்துவதற்காகவும், பகவானுடைய அன்பர்களுக்கு இடம் போஜனம் வஸ்திரம் முத

யவைகளைக் கொடுத்து ரக்ஷிப்பதற்கும், யாத்திரை வாசிகளுக்குச் சகல சௌகரியங்களை உண்டாக்குவதற்கும், தேவாலயத்தில் ஸ்ரீ வராக வெங்கடேஸ மூர்த்திகளுக்கு பூஜாபிஷேகங்களை நித்தியமும் நடத்துவதற்குமாக மகா யோக பக்தி வைராக்கிய ஞானசம்பன்னர்களை மஹந்து என்கிற பேருடன் மகரிஷிகளால் ஏற்படுத்தப்பட்டது. மஹந்துகளுக்கு இருக்கவேண்டிய முக்கிய லக்ஷணங்கள் என்னவென்றால், ஸ்ரீ வெங்கடேஸ்வரர்பேரில் அசைவற்ற பக்தியும், பக்த கோடிகளைத் தகப்பனைப்போல் பாவிப்பதும், அன்பும், பூஜைகளில் இடைவிடாத பக்தியும், யாத்திரை வாசிகளுக்குச் சிநேகிதனைப்போலும், பந்துவைப்போலும், சாதுக்களுக்குச் சகோதரனைப்போலும் இருக்கவேண்டியதேயாம். இதல்லாமல் பிரம்ம நிஷ்டை உள்ளவராய், சகல ஜீவாந்தர்யாமியாகிய ஸ்ரீ வேங்கடேஸ பரதத்துவத்தைத் தெரிந்தவராகவும், பூரண ஆத்ம ஞானம் உள்ளவராகவும், சச்சிதாநந்த பரப்பிர்ம்மத்தைத் தரிசிப்பதால் பரிசுத்தமான அந்தக்கரண முள்ளவராகவும், பிர்ம்மசாரியாகவும், சத்தியமும் சுசியும் சர்வ ஜீவர்களிடத்தும் சமதிருஷ்டியுள்ளவராயும் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட நற்குணங்களுள்ள மஹந்துக்கள் அநேகர் இருந்தார்கள். அவர்களில் மிகுந்த சிறப்புடையவரும், பக்தி யோக ஞானத்தால் மிகுந்தவருமாகிய ஓர் மஹந்து இருந்தார். அவர் பேர் ஹத்திராம்பாவாஜி என்பார்கள். ஸ்ரீ திருப்பதிக்ஷேத்திரத்துக்கு வரும் யாத்திரைவாஸிகள் ஸ்ரீ வேங்கடேஸப் பெருமானைத் தரிசனம் செய்தபிறகு ஹத்திராம் பாவாஜி சுவாமிகளையும் தரிசிப்பார்கள். "ஸ்ரீனிவாச மூர்த்தியின் அந்தரங்கபக்தர்" என்றும், "யோகிகளுடைய அன்பர்" என்றும், "பக்த ஜனங்களுடைய பந்து" என்றும், "தபோதனர்களுடைய ரக்ஷகர்" என்றும், "அவர் தரிசனமே பாபவிமோசனம்" என்றும், யாத்திரை வாஸிகள் அவரை அநேகவிதமாய்க் கொண்டாடிக்கொண்டு கூட்டங்களாய் வந்து ஒருவர்மேல் ஒருவர் விழுந்து தரிசிப்பார்கள். மஹந்து பட்டம் உண்டான பிறகு ஹத்திராம் சுவாமிகள் கடலில் உண்டான ஒரு பெரும் அலையைப் போல பரப்பிரம்மத்தில் பக்த கோடிகளைக் காப்பாற்றுவதற்காக ஸ்ரீ வேங்கடேஸ பெருமானுய் எழுந்தருளிய ஜெகதீஸனைத் தரிசிக்க மிகவும் ஆவலுள்ளவராய், சுவாமி சன்னதிக்கு வடக்கில் ஒருமைல் தூரத்தில் ஓர் தபோ

மந்திரத்தை ஏற்படுத்தி, தாபத்திரயங்கள் இல்லாம விருப்பதற்குத் தூனி என்கிற ஓர் அக்னி குண்டத்தை உண்டாக்கி, பன்னிரண்டு வருஷகாலம் பசி எடுத்தபோது அல்லிபத்திரமென்னும் ஓர் மூலிகையைச் சாப்பிட்டுக்கொண்டு மிகுந்த வைராக்கியத்துடன் பரமதயாநிதியாகிய ஸ்ரீமந்நாராயணன் பாதபத்மங்களைச் சிந்தித்துக்கொண்டு, இரவு பகல் தெரியாமலும், பிரபஞ்ச ஞாபகம் இல்லாமலும், மானுபிமானங்களை விட்டும் தியாகியாய், அதே நிஷ்டையில் இருந்தார். இப்படியிருக்க, ஒரு நாள் மெலிந்த தேகம் உள்ள ஓர் கிழவன் அவர் ஆஸ்ரமத்துக்குள் வந்து "ஹத்திராமா" என்று கூப்பிட்டார். பன்னிரண்டு வருஷகாலமாக மனிதர்களின் வார்த்தையும் சஞ்சாரமும் தெரியாமல் காட்டு மிருகங்களையும், பக்ஷிகளையும் தன்னைப்போல் ஜீவர்களென்றும் பார்க்கப்பழக்கப்பட்டிருந்த மஹந்து ஆச்சரியத்துடன் கண்திறந்து பார்க்கையில் நூறுகோடி சூரிய பிரகாஸத்தோடும், ஞானிகளென்னும் கடலுக்குச் சந்திரனைப்போலும், மகத்தாகிய பிரபாவத்தோடும், சங்கு சக்கரங்களைத் தரித்துக்கொண்டு திரிமூர்த்தி சொரூபமாகிய ஸ்ரீ வெங்கடேஸப் பெருமான் தரிசனம் கொடுக்கையில், அந்தத் தேஜோன்மயமாகிய பரப்பிரம்மத்தைக் கண்டு அமுர்த கடலில் மூழ்கினவராய்ப் பரவசமடைந்து, பிறகு ஹரியைப் பார்த்து, "ஓ தகப்பனே! சகல ஜீவராசிகளிலும், அந்தர்யாமியாய்க் கிரீடித்துக்கொண்டிருக்கும் பரப்பிரம்மமே! புருஷோத்தமனே! புண்ணியனே! பரிபூரணனே! விஸ்வேஸ்வரனே! அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகா!" என்று அநேக விதங்களாகக் கொண்டாட, பரந்தாமன் சிறிதுநேரம் தரிசனம்கொடுத்துப் பிறகு அந்தர்த்தானமாய்விட்டார். அந்த நாள்முதல் ஹத்திராம் சுவாமிகள் ஸ்ரீ ஹரியைப் பார்ப்பதற்கு விரும்பினபோதெல்லாம் சர்வேஸ்வரன் அவருக்குத் தரிசனம் கொடுத்துத் தன் கிருபாமிர்தத்தினால் அவரைச் சந்தோஷிக்கச் செய்வார். சில காலங்களுக்குள் அவர் பக்தி சிரத்தை மனோ பரிசுத்தங்களுக்கு மெச்சி ஸ்ரீ வெங்கடேஸப் பெருமான் அவரோடு சாமான்ய நரனைப்போல் சம்பாஷணை செய்வார்; அவரோடு விளையாடுவார்; பூரண சந்திரனைப்போல் மகத் பிரகாஸமான மந்தஹாஸத்துடன் சல்லாபங்களாடுவார்; ஹரியும் அவரும் பாய்ச்சி யாடுவார்கள். ஹத்திராம் சர்வத்தையும் மறந்து பக்தி பூர்வகமாக ஹரிபஜனை செய்கை

யில் அவர் முன்வந்து நின்று பகவானும் மெய்மறந்தவராய் நாட்டியஞ்செய்வார். பக்தியோடு சமர்ப்பித்தபலகாரங்களைப் புசிப்பார். உள்ளன்போடு ஏற்படுத்திய படுக்கையின்பேரில் சயனிப்பார். அவர் நினைத்த மாத்திரத்தில் பிரத்தியக்ஷமாய் அவர்முன் இருப்பார். இப்படி இருக்கையில், ஒரு நாள் மஹந்துவும் சுவாமியும் பாய்ச்சி யாடுகையில், வழக்கமாய்ப் பகவானை ஜெயமடைந்துகொண்டு வருகிறபடியால் அன்றையதினம் ஏதோ ஒரு ஆட்டத்தில் சுவாமி அபஜெயமடைந்தார். அப்போது மஹந்து மிகுந்த சந்தோஷமுள்ளவராய், இது நல்ல சமயமென்றெண்ணி ஹரியைப் பார்த்து, "சுவாமி! உன்னை நான் ஜெயித்தேன்; ஆகையால், அதற்கு என்ன சொல்லுகிறீர்; தகுதியான சமாதானம் சொல்லும் பரியந்தம் வேறு ஆட்டம் தொடங்கக் கூடாது" என்றார். அதைக் கேட்டு சர்வேஸ்வரன் பிரேமாதிசயத்தினால் பக்பகவென்று சிரித்துக்கொண்டு, "ஓ குமாரனே! உனக்கென்ன வேண்டும்?" என்றார். அதற்கு மஹந்து, "சுவாமி! நீர் என்ன கொடுப்பீர்?" என்று கேட்டார். ஹரி ஓங்கார நாதம் மேலிட்டதைப்போல் விசேஷமாய்ச் சந்தோஷித்துக்கொண்டு, "உனக்கு இந்த மலை அளவு பொன்னைக் கொடுக்கிறேன்" என்று சொன்னார். "என் துரையே! உன் பாதங்களே பெரும் சம்பத்தென்று எண்ணி யிருக்கும் எனக்குப் பொன் என்னத்திற்கு?" என்றார். ஸ்வாமி, "பூமண்டலாதிபத்தியத்தைக் கொடுக்கிறேன்" என்றார். பக்தர், "க்ஷணத்தில் மாறிப் போகும் இந்தப் பிரபஞ்ச போகங்கள் எனக்கேன்?" என்றார். ஸ்வாமி, "ஆனால், சொர்க்காதிபத்தியத்தைக் கொடுக்கிறேன்" என்று கூற, பக்தர், "சில காலங்களிருந்து நசிக்கும் அந்தப் போகங்கள் எனக்கேன்?" என, பகவான், "ஆனால் இந்தப் பிரம்மாண்ட பாண்டங்களுக்குப் பிரபுவாகச் செய்கிறேன்" என, பக்தர், "சுவாமி! இந்தப் பிரம்மாண்ட பாண்டங்களுக்குப் பிரபுவாக இருக்க உனக்குத் தகுமேயன்றி எனக்குத் தகாது" என, ஸ்வாமி, "ஆனால் நான் என்ன கொடுக்கவேண்டும்" என்று கூற, பக்தர், "சுவாமி! எந்நாளும் என்னைக் கைவிடுவதில்லையென்று பிரதிக்ஞை செய்யும்; ஒரு சமயத்தில் உன்னை நான் விட்டாலும் நீ என்னை விடக்கூடாது; உன்னை நான் மறந்தாலும் நீ என்னை மறக்கக்கூடாது; இவ்விதமாய் இருப்பதற்குச் சம்மதமாய் இருந்தால் வேறு ஆட்டம் தொடங்க

லாம்; இல்லாமற்போனால் "நீர் அபஜெப மடைந்ததற்கு என்ன சொல்லுகிறீர்?" என்றார். அந்த அன்பனுடைய வாக்கியங்களைக் கேட்டு ஹரி விசேஷமாய்ப் பகபகவென்று சிரித்து, மிகுந்த ஆனந்தத்துடன் அவரைக் கடைக் கண்ணால் பார்த்து, "ஓ குமாரனே! அப்படியே ஆகட்டும்; உன்னை விடமாட்டேன்" என்று சொல்லி அவர் இருவரும் மறுபடியும் பாய்ச்சியாட முதல் வைத்தார்கள். இந்தத் தடவையும் பகவானை ஜெயித்து விடுவதற்காக எவ்வளவு பாடுபட்டும் மஹந்துவுக்கு முடியாமற்போய்விட்டது. அப்பொழுது ஜெயமடைந்த ஹரி மஹந்தைப் பார்த்து "அடா! நீ அபஜெயமடைந்ததற்கு என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டார். அதற்கு மஹந்து மிகுந்த அவமானத்துடன் பகவானுடைய திருப்பொற் பாதங்கள் மீது விழுந்து "ஓ தெய்வமே! உன் அடிமைக்கும் அடிமையான ஏழையாகிய நான் உனக்கென்ன கொடுப்பேன்? என் பிராணன் தவிர என்னிடம் வேறொன்று மில்லை; வேண்டுமானால் அதைச் சமர்ப்பித்து விடுகிறேன்" என்று சொல்லக் கேட்டு, கருணாநிதியாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் உருகின உள்ளம் உடையவராய் அவரைத் தன் கைகளால் பிடித்து மேலுக்கெடுத்து விசேஷ பிரேமையினால் அவரைச் சன்மானித்து அபயம் கொடுத்துச் சந்தோஷப்படுத்தி, மறுபடியும் எப்பொழுதும்போல் ஆட்டம் ஆடத் தொடங்கினார்கள்.

இப்படி இருக்கையில், ஹத்திராம் சுவாமிகளுடைய பெருமையும், பக்த பராதீனனான திருவேங்கடப் பெருமான் பெருமையும், பூலோகமெங்கும் நிறைந்துவிட்டதைப்போல், எட்டுத் திசைகளிலும் வியாபித்து பரத கண்ட மெங்கும் மிகுந்த கீர்த்தி உண்டாய்விட்டது. அந்தக் காலத்தில் காசி மகாக்ஷேத்திரத்தில் யோகவித்தையில் மகிமை பெற்றவனும், வேதசாஸ்திரங்களைப் படித்து மகாவித்வத் சம்பன்னனுமாய், "எனக்குச் சமானமான வித்தியாவந்தனும் யோகீஸ்வரனும் உலகத்திலில்லை" என்று, அநேகவித மோகங்களைப் பெற்ற ஓர் ஹடயோகி இருந்தான். அவன் ஹத்திராம் சுவாமிகளுடைய பெருமையைக் கேட்டு மனம் பொறுக்காமல் கலியுக வைகுந்தமாகிய திருப்பதி மகாக்ஷேத்திரத்துக்குத் தான் மஹந்துவாக இருப்பதற்கெண்ணி அநேக ஆயிரம் சிஷ்ய

பரிவாரங்களோடு அரசன் யுத்தத்திற்கு வருகிறதைப் போல் புறப்பட்டு வந்தான். அதைத் தெரிந்து ஹத்திராம் சுவாமிகள் அவரைத் தக்க மரியாதையுடன் அழைத்துக் கொண்டுவரும்படி தமது சேவகர்களுக்கு உத்திரவு செய்தார். அவர்கள் அத்தியந்த பக்தியோடு அநேகவித மரியாதைகள் செய்து ஹடயோகியை அழைத்துக்கொண்டு வருகையில், மஹந்து அவருக்குச் சகல சௌக்கியங்களை நடத்தினர். அதற்கு ஹடயோகி சந்தோஷப்பட்டு, குரோதமான எண்ணமில்லாமலிருந்து, சிறிது நேரத்துக்குள் தனக்குள் தான் இவ்விதமாக யோசிக்கலுற்றான்: "இவரோ சத்புருஷராய் இருக்கிறார். இவரோடு விரோதம் செய்து இவர் பட்டத்தை ஆசிப்பது தர்மகாரியமாயில்லை. ஆனாலும், அவரவர்களுடைய க்ஷேமத்தை அவரவர்களே தேடிக்கொள்ள வேண்டியதாய் இருப்பதால் நல்ல சமயம் பார்த்து மஹந்தோடு கலகம் செய்து யோகவித்தையின் மகிமையினால் அவரைக் கஷ்டப்படுத்த வேண்டும்" என்றெண்ணி நல்ல சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். ஒருநாள் எல்லோரும் ஒன்றாய்க் கூடியிருக்கும்போது, ஹடயோகி ஒரு உயரமாகிய சூலத்தைப் பூமியின்பேரில் நிறுத்தி, அதின்பேரில் ஓர் புலி ஆசனத்தைப் போட்டு, அதன் பேரில் ஏறி உட்கார்ந்துகொண்டு மஹந்துவைப் பார்த்து, "அடா! நீ நல்லவனாய் இருக்கிறாய்; உன் பேரென்ன?" என்றான். அதைக் கேட்டு மஹந்து "என் பேர் ஹத்திராம்" என்று பதில் சொன்னார். ஹடயோகி அதைக் கேட்டவுடனே சிரித்து, "சபாஷ்! ஹத்திராம் என்றால் யானை ராஜனென்பார்கள். இந்த மகா க்ஷேத்திரத்திற்கு யானை மஹந்தாய் இருப்பது ஆச்சரியமா யிருக்கிறது. ஆனாலும், நீ எப்படிப்பட்ட யானையோ அதை நான் பரீக்ஷிக்கவேண்டும்" என்று சொல்லி, மஹந்துவைப் பந்தித்துக் கோவில் பிரகாரம் ஒன்றில் போடும்படி, தன் சிஷர்களுக்கு உத்தரவு செய்தான். இதல்லாமல், யானை புசிக்கும் கரும்பு சுமைகளும், தென்னம் பட்டைகளும் அந்தப் பிரகாரத்துக்குள் போடும்படியாகவும், விலாசமான தொட்டிகளில் ஜலம் வைக்கும்படியாகவும் உத்தரவு செய்தான். பிறகு அவ்விடத்திற்கு யாரும் வராமலும், ஹத்திராம் தப்பிக்கொண்டு போகாமலும் பார்ப்பதற்காகக் காவலாள்களைக் கோவிலைச் சுற்றியும் நியமித்தான். ஹடயோகி மிகவும் சந்தோஷித்துக்கொண்டு "யான் வந்த காரியம் நாளை காலைக்குள் முடிந்துவிடும்".

என்றும், "நல்ல யுக்தியினால் மஹந்துவைப் பந்தித்தேன்" என்றும், என்னுடைய யுக்திசத்திகளுக்குச் சமானமில்லை" என்றும், சீஷர்களோடு சொல்லிக்கொண்டு விசேஷமாய்ப் பெருங்குரலோடு சிரித்துக்கொண்டு தூங்கினான். இப்படி யிருக்கையில், கோவிலுக்குள் தள்ளப்பட்டிருக்கும் மஹந்து எப்பொழுதும்போல் ஸ்ரீமந் நாராயணனைத் தியானம் செய்துகொண்டு, அவர் அனந்த கல்யாண குணங்களை வர்ணித்து ஸ்தோத்திரம் செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்க, இராத்திரி மூன்று ஜாமம் ஆனபின் ஹடயோகியும், அவர் சீஷர்களும கிடுகிடென்று நடுங்கும்படி ஓர் பயங்கரமான யானையின் கூச்சல் கேட்டது. எவ்வளவு தைரியவந்தர்களுடைய இருதயங்கூடச் சலித்துப்போகும்படியான அவ்வளவு பெருங்குரலாய் இருந்தது. அதைக்கேட்டு ஹடயோகி மல ஜலம் தேகத்திலிருந்து வெளிப்பட்டவனாய், தேகஸ்வாதீனம் தவறிப் பயந்து வியர்வை நிறைந்த தேகத்துடன் மேலுக்கெழுந்து, சீஷர்களைப்பார்த்து "ஆ! ஆ!! இது என்ன ஆச்சரியம்! நாம் இவ்வளவு பெருஞ் சப்தத்தை எப்போதும் கேட்டதில்லை; கோவில் பிரகாரத்துக்குள் இவ்விதமான சத்தம் உண்டாவதற்கு என்ன காரணம்? பூமி ஆகாயம் உடைந்துபோகிறதைப்போல் கர்ஜ்ஜிக்கக்கூடிய யானையின் ரூபம் எப்படியிருக்கவேண்டும்" என்று சொல்லிக் கிடுகிடென்று நடுங்கிக்கொண்டிருக்கும் ஹடயோகியைப் பார்த்து, சீஷர்கள், "ஓ சுவாமி! இது ஹத்திராம் சுவாமிகளுடைய பெருமையேயன்றி வேறொன்றுமல்ல; அவரை யல்லலோ நாம் நேற்றைய தினம் மாலையில் கோவிலுக்குள் தள்ளிக் கதவை மூடினோம்" என்று சொல்லக்கேட்டு, ஹடயோகி, "ஆ! ஆ!! நாம் அநேக தேசங்கள் சுற்றி அநேக ஸாதுக்களையும், சித்தர்களையும் தரிசித்திருக்கிறோம் ஆனால், இப்பேர்ப்பட்ட பிரதாபம் உள்ள மகாத்மாவைக் கண்டதில்லை. ஆனாலும், என்ன செய்யலாம்; இந்த இராத்திரியில் கோவில் கதவைத் திறந்தால் என்ன விபத்து நேரிடுமோ?" என்று சொல்லிக்கொண்டு படுக்கையின்பேரில் படுத்து அடிக்கடி யானையின் சததத்தைக் கேட்பதைப்போல் பயந்து கலவரத்தால் மேலெழுந்துகொண் டிருக்கையில் சூரியோதயம் ஆய்விட்டது. அப்போது ஹடயோகி பரிவாரங்களோடு கோவில் கதவைத் திறந்து பார்க்கையில், கரும்பு சுமைகளும் தென்னம் பட்டைகளும் தொட்டியில் ஜலமும், இல்லாமற்போய்

விசேஷமான யானை மூத்திரமும், மல உருண்டைகளும் இருப்பது கண்டு ஹடயோகி, ஹத்திராம் பாவாஜி சுவாமிகளின் பாதங்களின்மேரில் விழுந்து, "ஓ தகப்பனே! நீ கடவுளுடைய உண்மையான அன்பனாகும்; உன்னைச் சாமான்ய மனிதனென்றெண்ணிப் பரீக்ஷித்தஎன் அபசாரத்தை மன்னிக்கவேண்டும்; நீயே இந்தக் கைவல்யக்ஷேத்திரத்திற்கு மஹந்துவாய் இருப்பதற்குத் தக்கவன்; உன் சேவகனாய் இருப்பதற்கும் எனக்குத் தகாது" என்று சொல்லி, அவர் உத்திரவைப் பெற்றுக்கொண்டு அநேக தேசங்களுக்குப் போய், ஹத்திராம் பாவாஜி சுவாமிகளுடைய பெருமையையும், கருணைக்கடலாகிய திருவேங்கட நாயகன் மகத்துவத்தையும் கொண்டாடிக்கொண்டிருந்தான்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் ஹத்திராம் சுவாமிகள் பகவானைத் தியானம் செய்துகொண்டிருந்து, "இந்த உலகவாழ்வு சொப்பனத்தில் கண்ட வேடிக்கைகளுக்கு ஒத்ததாய் இருக்கிறது; பரந்தாமனுடைய பாதத்துவத்தில் சேர்ந்திருப்பதே சத்கதியாகவும் நித்தியானந்தமாகவும் இருக்கிறது; ஆகையால், அவரைச் சேர்ந்திருப்பதே நலம்" என்றெண்ணி, ஸ்ரீ வேங்கடேசப் பெருமானைத் தியானிக்க, அவர் மாணிக்க நவரத்தின ஹாரங்களைத் தரித்துக்கொண்டும், சங்கு சக்கரம் கதை முதலிய ஆயுதங்களைச் சதுர் புஜங்களில் தரித்துக்கொண்டும், சர்வ ஜீவகோடிகளை ரக்ஷிக்கும் கர்த்தராய் ஆஸ்ரித்தவர்களுக்கு அபயம் கொடுக்கும் தேஜோன்மயமாகிய கடவுள் அவர் முன் எழுந்தருளினார். அப்பெருமான் மகத்பிரகாஸ வைபலாவண்ணியங்களைப் பார்த்துப் பரவசமடைந்து, நல் முத்துக்களைப்போல் ஆனந்த பாஷ்பங்கள் கண்களில் இருந்துவர, மஹந்து அவரது ஸ்ரீ பாதங்களின் மீதுவிழுந்து நமஸ்கரித்து, சுவாமியைப்பார்த்து, "ஐயனே! இந்தப் பிரபஞ்ச விஷய போகங்களில் நான் அலைந்தது போதுமானது; ஆகையால், உன் பாத பத்மங்களில் என்னை ஐக்கியப்படுத்திக்கொள்ளவேண்டும்" என்று பிரார்த்திக்க, அதைக்கேட்டு ஸ்ரீநிவாசமூர்த்தி அவரைப் பார்த்து, "அப்பனே! நீ ஜன்மாந்தரங்களின் பிராரப்த கர்மங்களைச் சிலநாள் இவ்வுலகத்திலிருந்து அநுபவித்துப் பிறகு என் சாஸ்வித பிரம்மானந்த பதவியையடைவாய்" என்று கூறியருளினார். அதைக் கேட்ட மஹந்து சம்மதமில்லாதவராய்,

குழந்தையைப்போல் அழுதுகொண்டு "என் துரையே! இவ்விதமாய்ச் சொல்லுவது உனக்குத் தருமமல்ல; எவ்விதமாலும் இந்த க்ஷணமே என்னை உன் திருவுள்ளத்தில் கைக்கொண்டு ஆளவேண்டும்" என்று விசேஷமாய் வற்புறுத்தத் தொடங்கினர். ஆதலால், ஸ்ரீயப்பதியாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் மறைந்துவிட்டார். அதைப் பார்த்து மஹந்து மிகவும் மனஸ்தாபமுள்ளவராய்க் கடவுளை நோக்கி, "சுவாமி! என்னை இவ்விதமாகத் துரோகம் செய்தாயே, நம்பினவனைக் கைவிட்டுப் போனயே; ஆகையால் இனிமேல் உன்னை நினைக்கமாட்டேன்; உன் க்ஷேத்திரத்திலும் இருக்கமாட்டேன்" என்று சொல்லி அந்த நிமிஷமே புறப்பட்டுப் போய்விட்டார். சிறிதுநேரம் போனதே ஓர் திருடன் எதிரில் வந்து அவரைப் பார்த்துச் சிரித்து, "அடா! உன் பொருள் எங்கே? ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் சன்னதியில் ஏன் உன் பொருளை வைத்துவந்தாய்? அதை எனக்கு வாங்கிக்கொடும்; அப்படிக் கொடாவிட்டால் உன்னை விடமாட்டேன்" என்று மஹந்துவை அடித்து ஸ்வாமி சன்னதியில் துரத்திவிட்டுப்போனன். ஹத்திராம் ஸ்வாமிகள் அதை இலக்ஷியம் செய்யாமல் வேறு ஒரு வழியாய்ப் போனர். அப்போது சில காட்டுமிருகங்கள் எதிரில் வந்து ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் திருக்கோயிலுக்கே அவரைத் துரத்திவிட்டன. இப்படி நேரிடுவதைப் பார்த்துப் பிரம்மையடைந்து, ஒன்றும் தோன்றாமல், மஹந்து, யாருக்கும் தெரியாத வேறொரு வழியாய்ப் புறப்பட்டுப்போனர். சிறிது தூரம் போனபின்பு சில ராக்ஷசசைனியங்கள் உருவின கத்திகளைக் கையில்பிடித்துக்கொண்டு அவர் எதிரில் வந்து, அவரைப் பார்த்து, "அடா! நீ திருடனைப்போல் இருக்கிறாய்; அப்படி இல்லாமற்போனால் இந்தக் காட்டு வழியாய்ப் போவதற்கு உனக்கு என்ன வேலை?" என்று சொல்லி மஹந்துவின் கால் கைகளைக் கட்டித் திருவேங்கடப் பெருமான் சன்னதிக்குக் கொண்டுவந்துவிட்டு "இனிமேல் இந்த விதமான வேலை செய்யாமல் இரு" என்று சொல்லிவிட்டுப் போனர்கள். மஹந்து தன் மனதிற்குள் ஒன்றும் தோன்றாமல்அழுதுகொண்டு மற்றொரு வழியாய்ப் போனர். அப்போது காட்டிலிருந்து ஒரு பெரிய ரிஷபம் எதிரில் வந்து அவரை ஓடிப்போவதற்கு முடியாமலும் செடிகளில் ஏறுவதற்கு முடியாமலும் தள்ளிக்கொண்டு போய்விட்டது. அதற்குமேல் "ஆ! ஆ!! என்ன செய்

வேன்; நாளையதினம் நான் வேறொருவழியாய்ப்போவேன்; அப்போது எனக்கு எவ்வளவு விபத்துகள் நேரிட்ட போதிலும் பின் தொடராமல் பிராணனையாவது விட்டுவிடு வேனே யொழியக் கிருபையில்லாத திருவேங்கடன் க்ஷேத் திரத்திற்கு வரமாட்டேன்" என்று பிரதிக்கினை செய்து கொண்டு புறப்பட்டார். ஒரே முயற்சியோடு காட்டில் முள்ளுகள் பேரிலும், மேடுபள்ளங்களிலும் குதிரையைப் போல ஓடிக்கொண்டிருக்கையில், ஓர் கிழவன் எதிரில் வந்து, "குழந்தாய்! நீ இவ்விதமாக என் ஓடுகிறாய்? விபரத் தைச் சொல்லும்! விபரத்தை சொல்லும்!!" என்று பின் தொடர்ந்து வந்தான். அதைக் காதில் போட்டுக்கொள்ளா மல், மஹந்து ஓடிக்கொண்டே போய்ப் பிறகு ஆயாஸத்தி னாலும், பலவீனத்தினாலும், பசி தாகம் மேலிட்டதினாலும், சகிக்க முடியாமல் கல்லொன்று காலில் பட்டு நடைதவறி கீழே விழுந்துவிட்டார். அப்போது பின் தொடர்ந்து வந்த கிழவன் அவரை எழுப்பி, "குழந்தாய்! நீ என் இவ்விதமாகக் கஷ்டப்படுகிறாய்! விபரத்தைச் சொல்?" என்று கேட்க, மஹந்து மவுனத்தை விட்டுப் பிராணநாத னை ஸ்ரீ வேங்கடாசலபதியோடு தனக்குண்டான மனஸ் தாபத்தையும் அவர் கடினமான உள்ளத்தையும் தெரி வித்துப் பிறகு பொறுக்கமுடியாத தாபத்தால் அழுதார். அதைக் கேட்ட கிழவன் மறைந்துபோனவுடனே நவ ரத்தின கசிதமான ஆபரணங்களைத் தரித்துக்கொண்டு சங்கு சக்கர கதாதிகள் சதுர்ப்புஜங்களில் பிரகாசிக்க ஸ்ரீ பூ நீளா சமேதராய், கருடாரூடராய், கோடி சூரியப் பிரகாச மான தேஜஸ்ஸுடன் புருஷோத்தமன் தரிசனம் கொடுக் கையில், மஹந்து பகவானைச் சேவித்து ஆனந்தத்தால் மெய் மறந்து ஸ்ரீ யப்பதிக்கு பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து முகுளித ஹஸ்தராய் எதிரில்நிற்கையில், ஸ்ரீ வேங் கடேச பரமாத்மா அவரைப் பார்த்து "ஓ அன்புள்ள புத் திரனே! உன் பிராரப்தம் தீர்ந்துவிட்டது. இனி என் மாயை உன்னைத் தொடராது. சகல பந்தங்களிலிருந்தும் உன்னை விடுதலை செய்தேன்; இனி என் சாஸ்வித நித்தியா னந்த வைகுண்டத்தை அடைவாய்" என்று சொல்லி அந் தர்த்தானமாய் விட்டார். பிறகு மஹந்து, சுவாமி சன்ன திக்கு வந்து தேவதேவனான ஸ்ரீ ஹரிக்கு அபிஷே கம் செய்து, நவரத்தின ஆபரணங்களினாலும், சுகந் தத்தாலும் அலங்கரித்துத் தியானம் செய்துகொண்டு நின்

ரூர். அப்பொழுது கோவிலில் ஸ்தாபித்திருக்கும் கண்டா நாதம் "கோவிந்தா! கோவிந்தா!!" என்று ஓசையிட்டது. அப்போது மஹந்து சர்வேஸ்வரனை மனமுருகப் பூஜித்து, கர்ப்பூர நீராஞ்சனம் கொடுத்து, ஸ்ரீ எம்பெருமான் திருப்பொற் பாதங்களில் மனதை நிறுத்தித் தியானித்துக் கொண்டிருக்கையில், ஓர் மின்னல் உண்டாய்ப் பிரகாசத்தோடு பிரகாசமும், ஜலத்தோடு ஜலமும், காற்றோடு காற்றும் பேதமில்லாமல் சேர்ந்து விடுகிறதைப்போல், அந்தப் பக்தராஜசிரோமணியாகிய மஹந்து ஹத்திராம் பாவாஜி ஸ்வாமிகள் கருணாநிதியாகிய ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் பரதத்துவத்தில் ஐக்கியம் அடைந்துவிட்டார். அப்போது கோவில் அதிகாரிகள் கோவிந்தநாம பஜனைகள் செய்துகொண்டு, அவர் திருமேனியை எடுத்துக்கொண்டுபோய்ப் பூர்வத்தில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் தரிசனத்திற்காக ஹத்திராம் தபம் செய்த இடத்திற்குச் சமீபத்தில் அடக்கம் செய்து சமாதி நிர்மானம் செய்து, பக்தி சிரத்தைகளோடு பூஜைகள் செய்தார்கள். இன்றைக்கும் அவ்விதமாகவே நடந்தேறி வருகிறது. யாத்திரை வாசிகள் ஸ்ரீ திருப்பதி க்ஷேத்திரத்துக்கு வந்து ஸ்ரீவராக வெங்கடேச மூர்த்திகளைத் தரிசித்த பிறகு ஸ்ரீ ஹத்திராம் பாவாஜி சுவாமிகளின் சமாதியையும் தரிசித்துப்போவார்கள். ஸ்ரீ ஹத்திராம் சுவாமிகளுக்குச் சிஷ்ராய் இருந்த சந்திரகிரி அரசர்களில் ஒருவராகிய கிருதர்தாஸ் என்பவரும், ஹத்திராம் பாவாஜி சமாதிக்குச் சமீபத்தில் சமாதியடைந்திருக்கிறார். ஒரு காலத்தில் ஹத்திராம் பாவாஜீ சுவாமிகள் ஓர் ஆலங் குச்சியினால் பல்லைத் துலக்கிக்கொண்டு அதைப் பூமியின் பேரில் போட்டார். அவர் எச்சிலென்ற அமிர்தத்தில் ஊறின ஆலங்குச்சி பூமியில்விழுந்து அதிலிருந்து மிகவும் பெரிதானதும் விசாலமானதுமாகிய ஆலமரம் உண்டாயிற்று. பக்த ஜனங்கள் அந்த மரத்தடியில் ஓர் திண்ணையை உண்டாக்கி, அந்த மரத்திற்குப் பிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்வார்கள். அந்த இடத்தின் மகத்துவத்தைத் தெரிந்து மனோராம் என்கிற ஓர் மஹந்து அந்த இடத்தில் சேர்ந்து ஸ்ரீ வெங்கடேசப் பெருமானைத் தியானித்துக் கொண்டிருந்தபடியால் அதற்கு மனோராம் திண்ணை என்று பேர் உண்டாயிற்று. சகல ஜீவகோடிகளுக்கும் நலம் உண்டாகக்கடவது.

---

புகையில்லையை மென்றுகொண்டிருக்கிறவனுக்குக் கற்கண்டு ருசிக்காமலிருக்கிறதைப்போல் கல்மஷமான போகங்களில் மூழ்கினவர்களுக்குச் சர்வேஸ்வரனுடைய பக்தியின் ருசி தெரியாது. அப்பியாசத்தால் ஒருவன் கடினமான கரடி வித்தைகளைக் கற்று ஆடுகிறதைப்போல் இடைவிடாமல் கடவுளினிடத்து பக்தி சிரத்தை வைத்தால் அவர் தேஜோன்மயமாகிய ஒளியைத் தெரியலாம்.

பக்ஷிகள் முட்டைகளின்மேரில் உட்கார்ந்துகொண்டிருப்பதால் அவைகளிலிருந்து பக்குவமாய்க் குஞ்சுகள் உண்டாகிறதைப்போல் கடவுளினிடத்து ஸ்திரமாய்ப் பக்தி செய்துகொண்டிருந்தால் ஜீவன்முக்தன் ஆகலாம்.

ஓர் தட்டில் நீரை ஊற்றி அதில் ஓர் மீனை விட்டால் அந்த மீன் அதை விட்டு நீங்கினால் பிராணன் போகுமென்கிற பயத்தால் அதில் குடிகொண்டிருக்கிறதைப்போல், இந்த அண்ட பிண்ட சராசரங்கள் சர்வேஸ்வரனுக்குள் உலாவிக்கொண்டிருக்கிறது.

யானை தன்னுடைய ஸ்வப்பனத்தில் சிங்கத்தைக்கண்டு அந்த பயத்தினால் சாகிறதைப்போல் அஞ்ஞானம் எவ்வளவு பலமுள்ளதாயிருந்தபோதிலும் ஜெகதீசனுடைய ஓர் கடைக்கண் பார்வையினால் பாழாய்ப்போகும்.

நாடகத்தில் வேஷதாரிகள் அரசனைப்போல் வேடம் பூண்டபோதிலும் உண்மையில் அரசனாகாததைப்போல, கடவுளுடைய அன்பர்களைப்போல் வேடம் பூண்டதினால் பாமரனுக்குச் சர்வேஸ்வரனுடைய அருள் உண்டாகமாட்டாது.

உருக்கினால் பொன்னுக்குப் பிரகாசம் உண்டாகிறதைப்போலும், தேய்ப்பதினால் இரும்பு சுத்தமாகிறதைப்போலும், அக்கினியினால் துர்க்கந்தமான வஸ்துக்கள் பரிசுத்தமாகிறதைப்போலும், கடவுளிடத்துச் செய்யும் பக்தியினால் மனமும் புத்தியும் பிரகாசிக்கும் மாணிக்கத்தைப்போல் பரிசுத்தமாகிறது.

எறும்பைப்போல் நிதானமான அப்பியாச முள்ளவனாகிலும் ஒருவன் ஸ்திரமுள்ள பக்தியும், வைராக்கியமும் வுள்ளவனாயிருந்தால் அவனுக்குக் கடவுளின் கிருபை உண்டாகாமற் போகாது. குதிரையைப்போல் வேகமான

அப்பியாச முள்ளவனுகிலும் அசைவற்ற பக்தி சிரத்தை இல்லாதவன் கடவுளின் கிருபையை அடையமாட்டான்.

கரும்புக்குள் சுவை நிறைந்திருக்கிறதைப்போல் ஜகதீசன் எல்லாவற்றிலும் நிறைந்திருக்கிறுன்.

செடியிலிருக்கும் ஓர் கிளையைத் தொட்டுக்கொண்டிருக்கும் கனியைப்போல் யாருடைய மனம் கடவுளை நாடியிருக்குமோ அவன் பரமசாந்தியாகிய கைவல்யத்தையடைவான்.

கடினமான மனமுள்ள எஜமானனை நாடி யாதொன்றும் கேளாமல், "அவனே கதி" என்று சேவை செய்து கொண்டிருக்க, ஓர் சமயத்தில் அவன் மனமும் உருகுகிறதைப்போல், சர்வத்தையும் தேவ தேவனுக்கு அற்பிதம் செய்து, "அவர் திருவடியே கதி" என்றிருந்தால் என்றைக்காகிலும் அவர் திருவுள்ளம் உறுகாமற் போகாது.

தூண்டிலில் அகப்பட்ட மீன் அதை விட்டுப்போக முடியாமல் அதையே கதியென்று ஒட்டியிருக்கிறதைப் போல் பரப்பிரம்மமாகிய கடவுளின் திருவடிகளில் மகநீயர்களுடைய மனம் அசையாமல் நின்றிருக்கிறது.

நீரில் விழுந்த உப்பு அதில் கரைந்து விடுவதைப் போல் பரப்பிரம்மத்தில் குடிகொண்ட யோகிகளுடைய மனம் அந்தப் பிரம்மத்திலேயே ஐக்கியமாய்விடும்.

மழைத்துளிகள் வெகு சிறியதா யிருந்தபோதிலும் அதுவே ஆறு ஏறிகளாய் விடுகிறதைப்போல், சிரத்தை வைராக்கியங்களுடன் சேர்ந்த பக்தி எவ்வளவு சொற்பமானதா யிருந்தபோதிலும் அது நரனை ஜீவன்முக்தனுய்ச் செய்யாமற் போகாது.

அழுக்கான தேகம் உள்ள ஓர் மனிதன் ஆற்று ஜலத்தில் சும்மா நின்றிருப்பதனுல் அவன்தேகம் பரிசுத்தமாகிறதைப்போல் எவ்வளவு பாவ சம்பந்தமுள்ளவனுய் இருந்தபோதிலும் நித்திய மங்களகரமான கடவுளின் பக்தியென்னும் பிரவாகத்தில் நின்றிருந்தால் பரிசுத்தமான அந்தக்கரண முள்ளவனுய் வாழ்வான்.

கிடைத்தவரைக்கும் திருப்தியுள்ளவனும், இகபரலோக போகங்களை நாடாதவனும், மனேசாந்தி யுள்ளவனும், பக்தி வைராக்கிய முள்ளவனும், தெய்வங்கள்பேரிலும்

சாதுக்களிடம் பேரிலும் விஸ்வாசமுள்ளவனும், மிதஆகார நித்திரை சஞ்சார சம்பாஷணை யுள்ளவனும், தியாக முள்ளவனும், கடவுளைத் தொழுதால் வெகு சீக்கிரமாய்ச் சித்தி அடைவான்.

கல்யாணற்புத காத்ராய காமிதார்த்த பிரதாயினே, ஸ்ரீமத் வேங்கடநாதாய ஸ்ரீநிவாஸாய மங்களம்.



## தற்கால ஸ்திதி.

இப்போது இந்தத் திருப்பதியானது, சித்தூர் ஜில்லாவைச் சார்ந்த, சந்திரகிரி தாலூகா சப் டிவிஜன் அல்லது டிப்டி தாசில்தா ரிருக்குமிடம். இது மேல் திருப்பதி யென்றும், கீழ்த்திருப்பதி யென்றும் இரண்டு பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கிறது.

கீழ்த் திருப்பதியானது, சென்னையம்பதிக்கு எண்பது (80) மைல் தூரத்தி லிருக்கிறது. அதாவது, சென்னையிலிருந்து பம்பாயிக்குப் போகும் புகைவண்டி மார்க்கமானது அந்தக் கீழ்த் திருப்பதிக்கு ஆறுமைல் தூரத்தில் ரேணுகுண்டா ஸ்டேஷன் வழியாகப் போவதால், அநேக பிரயாணிகள் சொற்ப பணச் செலவில் இந்தத் திவ்விய ஸ்தலத்துக்குப் போக்கு வரத்தா யிருக்கிறார்கள். இப்போது காட்பாடி ஸ்டேஷனி லிருந்து ஒரு கிளை இருப்புப் பாதை வந்து போகின்றது.

இந்தக் கீழ்த்திருப்பதியைக் கோவிந்தராஜ பட்டணமென்று சொல்லுவது முண்டு. இந்தப் பெயர் வந்ததற்குக் காரணம் பலர் பலவிதமாகச் சொன்னபோதிலும், இவ்விடத்தில் கோவிந்தராஜப் பெருமாளுடைய பெரிய கோயிலிருப்பதால், இப்பெயர் வழங்குகின்றதென்று தோற்றுகின்றது.

இந்தக் கோவிந்தராஜப் பெருமாள், ஒரு காலத்தில் தக்ஷண தேசத்தில் சித்திரகூடம் அல்லது சிதம்பரத்திலிருந்ததாகவும், அப்போது அரசாண்ட ஓர் நவாபு, அந்த விக்கிரகத்தை யெடுத்துக்கொண்டுபோய்த் தன் வீட்டு வாசற்படியிற் போட்டுக்கொண்டதாகவும், பிறகு ஷை நபாவை வைத்துக்கொண்டிருந்த தில்லை என்னும் தாசியானவள் வழக்கப்படி கையில் ஒரு சொம்பு ஜலத்தை

யெடுத்துக்கொண்டு ஒரு நாள் இராத்திரி ஷெ நபாபு வீட்டுக்குப் படுக்கைக்குப் போகையில் தன் காலுக்கு ஷெ கோவிந்தராஜர் விக்கிரகம் தாக்க, "இஃதென்ன?" என்று அவள் பார்க்கும்போது, திவ்விய ஸ்வரூபத்துடனிருந்த அந்த விக்கிரகத்தைக் கண்டு பயந்து, தனது கையில் வைத்திருந்த சொம்பு ஜலத்தை யதன்மேல் விட்டு வணங்க, அந்தக் கோவிந்தராஜப் பெருமாள் பிரத்தியக்ஷமாகி, தன்னை ஒரு வண்டியி லேற்றிக்கொண்டு வடதேசத்துக்குக் கொண்டுபோகும்படியாகவும், அப்படிக் கொண்டு போகும்போது எவ்விடம் தம்மைக் கொண்டுபோகும் வண்டி முறிந்து வழிச்செலவுக் கில்லாமற் போகிறதோ அவ்விடம் வைத்து ஒருசிறிய கோவில் கட்டி வணங்கினால், இகபரசுக போக்கியங்களை யீவதாகத் திருவாய்மலர்ந்தருளியதாகவும், அதன்மேல், அந்தத் தில்லையென்னும் தாசியானவள் வீட்டுக்கு ஓடிவந்து தன் சகோதரியாகிய பொன்னி என்பவளிடம் சொல்ல, அவளும் சம்மதித்து, அவர்கள் தங்களிடமிருந்த பொருள்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு, இந்தக் கோவிந்தராஜர் விக்கிரகத்தை வண்டியின்மீது யெடுப்பித்துக்கொண்டு, வடதிசையை நோக்கி வருகையில், திருப்பதிக்குச் சமீபித்தபோது அந்த இடம் கோவிந்தராஜப்பெருமாளுக்கு உவப்பானதாக இருந்தமையால் ஸ்வாமி முன் திருவாய் மலர்ந்தருளியபடியே வண்டி முறிந்தது. உடனே தில்லையென்னும் தாசியானவள் தனது பாகத்தைச் சார்ந்த பொருளையெல்லாஞ் செலவுசெய்து இப்போது இருக்கும் பெரிய கோயிலுக்குள் கார்ப்பக்கிரஹ கோயிலைக் கட்டிவைத்து வணங்கி வந்ததாகவும், அவளுடைய சகோதரியாகிய பொன்னி யென்பவள் தன் பாகத்துக்கு வந்த பொருளைச் செலவு செய்து இப்போதிருக்கும் பொன்னி வாய்க்காலை வெட்டி வைத்ததாகவுஞ் சொல்லுகிறார்கள். மேலும், தில்லை யென்னும் தாசி வணங்கி முத்தி பெற்றதனால், தில்லை கோவிந்தராஜர் என்னும் பெருமாளிருக்கும் இவ்விடத்திற்குக்கோவிந்தராஜர் பட்டணமென்று சொல்லப்படுகிறது. இது கூடிய வரையில் அழகிய பட்டணம். இதில் சுமார் பத்தாயிரம் ஜனங்கள் வசித்து வருவதால், இப்போது இவ்விடத்தில் மாஜிஸ்திரேட்டு கச்சேரியும், முன்சீபு கோர்ட்டும், போஸ்டாபீசும், போலீஸ் ஸ்டேஷனும், ஆஸ்பத்திரியும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. கடைவீதியில் உணவுக்கு வேண்டிய

பதார்த்தங்கள் நயமாக விற்கப்படுகின்றதன்றியில், செம் மரங்களால் செய்யப்பட்ட பொம்மைகள், படிமுதலான பாத்திரங்கள், வெங்கல-தாம்பிர விக்கிரகங்கள், பாத்தி ரங்கள், துளசிமணிகள், புட்டி, கூடைகள் மூங்கிற்றடிகள், ஸ்திரீகளணியும் வளையல்கள், காப்புகள், மாமந்தூரிலிருந்து ஒட்டர்கள் கொண்டுவரும் சந்தனம் தேய்க்கும் சாந்துகற் கள் முதலானவைகளை யாத்திரைக்காரர்கள் விசேஷமாக வாங்கிக்கொண்டு போகிறார்கள். இப்போது முனிசிபா லிட்டி ஸ்தாபிக்கப்பட்டு வீதிகள் சுத்தியாக விருக்கின் றன. பன்றிகள் அதிகமாயிருப்பதால் கக்கூசுகள் வேண்டிய தில்லை. உஷ்ணகாலத்தில் கொசுக்களாலும், உஷ்ணத்தி னாலும் தூங்குவோருக்குக் கஷ்டமுண்டாகும். நகரத்தைச் சுற்றிலும், ஆழ்வார் தீர்த்தம், இராமதீர்த்தம், இலக்ஷ் மணதீர்த்தம், நரசிம்மதீர்த்தம் என்றிதி பல தீர்த்தங்க ளிருந்தபோதிலும், குடிப்பதற்குச் சிறந்த பானம் நரசிம்ம தீர்த்தமே. இந்தத் தீர்த்த மிருக்கும் இடம் ராபின்சன்ஸ் பார்க்கு என்று சொல்லப்படும்; அதாவது, சமீபகாலத் துக்கு முன் சித்தூரில் கலெக்டராகவிருந்த மிஸ்டர் இராபின்சன் துரையவர்கள் முயற்சியால் இது செப்பனி டப்பட்டுச் சீர்படுத்தப்பட்டது. நகரத்தில் பற்பலஜாதியார் களிருந்தபோதிலும், மலைக்குச் சமீபமாக அநேக பட்டு நூற்காரர்க ளிருக்கிறார்கள். அந்த வீதிக்குப் பரஸாவீதி யென்று சொல்லுவது முண்டு. அதாவது, பரஸ்தலத்தார் வந்து தங்குமிடம். இந்தப் பட்டுநூற்காரர்களும், வேறு சில பிராம்மணர்களும், சாத்தாதார் வைணவர்களும், தூர தேசங்களிலிருந்து வரும் பரஸ்தலத்தாரை வெகுதூரத் தில் போய் எதிர்கொண்டு அழைத்து வந்து, தமது வீடு களில் ஜாகை செய்து கொடுத்தும், வேண்டிய உதவிகள் செய்தும், செய்விப்பித்தும், பரஸ்தலத்தார் தமது சொந்த தேசங்களுக்குத் திரும்பிப் போகும்போது அறை ஒன்று றுக்கு ஆறு அணா அல்லது ஆள் ஒன்றுக்கு அரை அணா வீதம் வாடகையையும், வெகுமானத்தையும் பெற்றுக் கொள்ளுவார்கள். பெரும்பான்மையான அறைகள் சிறி யவைகளாகவும், அசவுக்கிய முள்ளவைகளாகவு மிருக் கும். இவ்விடங்களில் வியாபாரஞ் செய்ய சராப்புகள் சில் லரை வியாபாரிகள் அடிக்கடி வருவார்கள். ஜாக்கிரதையாக விருந்தால் திருடர் பயமில்லை. இந்தக் கோவிந்தராஜ பட் டணத்தில் பதினைந்து பெரிய கோயில்களும், வேறு சில

லரைக் கோயில்களு மிருந்து காலக்கேட்டினல் அநேகஞ் ஜீரணமாகிவிட்டன. சில கோயில்களில் பூஜை முதலானவைகள் கிடையா. இப்போது பிரபலமாக விருப்பது இரண்டு. அவ்விரண்டிற் சிறந்தது,

## கோவிந்தராஜர் சன்னதி.

இஃது சிற்பலங்காரமும், தீர்த்த கோபுரங்களில் சிறந்ததுமான பெரியகோயில். அதற்குள் கோவிந்தராஜப் பெருமாள் படுத்துக்கொண்டு சேவை சாதிக்கிறார். விக்கிரஹம் மஹா பெரியதாகவும் அழகாகவு மிருக்கிறது. இந்தச் சுவாமிக்குக் கர்ப்பூர ஆராதனை கொடுக்க விரும்புவோர் ஒரு ரூபாய் காணிக்கை கொடுக்கவேண்டும். அடுத்து இருக்கும் அம்மனுக்குக் கர்ப்பூர ஆராதனை கொடுக்க விரும்புவோர் நாலணா கொடுக்கவேண்டும். இந்தக் கோயிலுக்கு எதிரிலிருக்கும் சதுரதீர்த்தம், பூமி மட்டத்துக்குள் சிறந்து விளங்குகின்றது. இந்தக் கோயிலுக்குள் ஆழ்வார் ஆசாரியர்கள் சந்நிதிக ளிருக்கின்றன. கோபுரம் சமுத்திர மட்டத்துக்கு மேல் 63,407 அடி உயர்ந்து பெரிதும், சிறந்ததுமாக இருக்கிறது. இந்தக் கோவிந்தராஜரைத் திருப்பதி வெங்கடரமண சுவாமியின் தம்பியார் என்றும், அந்த வெங்கடரமண பெருமாளைத் தரிசித்த பிறகு இவரைத் தரிசிப்பது வழக்கம். இப்போது இது திருப்பதி மஹந்து அவர்களுடைய ஆதீனத்தி லிருக்கிறது. கோயிலின் நித்தியப்படி 32 சேர் அரிசி. மாதாந்திர சிப்பந்தி செலவு சுமார் நூறு ரூபாய். சுமார் இருபதினாயிரம் ரூபாய் விலையுள்ள ஆபரணங்க ளிருக்கின்றன. இந்தப் பெருமாளுக்கு வைகாசி மாதத்தில் இரதோற்சவம் வெகு விமரிசையாக நடக்கின்றது: சித்திரா பவுர்ணமியில் பொன்னி வாய்க்கால் உற்சவம் நடந்து வருகிறது.

---

## இராமசுவாமி சன்னதி.

இதுவும் கீழ்திருப்பதியிலிருக்கும் புராதன திவ்விய ஸ்தலம். ஆனால், இது கோவிந்தராஜர் சந்நிதியைவிடச் சிறியதும், சிறந்ததுமாக விருக்கிறது. இந்தக் கோயிலில் கோதண்டராமர் - அம்மன் - விக்கிரகங்கள் அழகாக இருக்கின்றன. இந்தக் கோயிலுக்கு மாதம் 50 ரூபாய் செலவாகின்றன. நான்கு சிப்பந்திகள் கோயில் பிரசாதத்தால் சீவனஞ் செய்து வருகிறார்கள். நித்தியப்படி தாம் 11 படி

அரிசியும், சனிவாரங்களில் 18 படி அரிசியும் செலவு செய்து வருகிறார்கள். மைசூர் ராஜருடைய ததியாராதனை கிரமமாக நடந்துவருகிறது. கோயிலுக்குள் அழகிய சிறிய குளமும், நந்தவனமு மிருக்கிறதன்றியில், சமீபகாலத்துக்கு முன் மஹந்து அவர்களால் ஒன்றரை லக்ஷம் ரூபாய் செலவு செய்து தங்க துவஜஸ்தம்பம் புதுப்பிக்கப்பட்டது. இந்தக் கோதண்டராம சாமிக்குக் கற்பூர ஆராதனை கொடுக்க விரும்புவோர் அரை ரூபாய் கொடுக்க வேண்டும். இந்தக் கோயிலுக்குச் சுமார் ஐயாயிரம் ரூபாய் விலையுள்ள நகைகள் இருக்கின்றன. பங்குனி மாதத்தில் இரத உற்சவம் வெகு விமரிசையாக நடந்துவருகிறது. இந்தக் கோயிலுக்குக் கோவிந்தராஜப் பெருமாள் கோவிலின் மேளக்காரர்கள் வந்துதான் வாத்தியம் செய்யவேண்டும்.

இந்தக் கீழ்த்திருப்பதியில் வேறு சிறு கோயில்களும், ஷெ கோயில்களில் உற்சவங்களும் நடைபெற்றபோதிலும் கங்கம்மாள் ஜாத்திரையே விசேஷமானது. இது எப்பிரல் அல்லது மே மாதத்தில் தொடங்கி பத்துநாள் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்த ஜாத்திரையில் பல ஜாதியார் விநோத விசேஷங்களைப் பூண்டு குடித்து நடிக்கிறார்கள். ஆடு மாடு கோழி இவற்றைப் பலிகொடுத்தும், பொங்கல் வைத்தும், களிமண்ணினாலும் வைக்கோலினாலும் பொம்மை செய்வித்துக் கடைசிநாளில் சுட்டுவிடுகிறார்கள் இது ஒருவித கிராமதேவதை. இதைப் பிராம்மணர்களும் வணங்கி வருகிறார்கள். இத்தியாதிகள் பலவிருந்தபோதிலும் பரதேசி தல யாத்திரைக்காரர் விசேஷமாகக் கருதி வருவது மேல் திருப்பதியே.

---

## மேல்திருப்பதி மஹத்துவம்.

மேல்திருப்பதி யென்பது, கீழ்த் திருப்பதி அல்லது கோவிந்தராஜப் பட்டணத்துக்குச் சுமார் ஒரு மைல் தூரத்தில் தோன்றும் பெரியமலை. இதைத் திருமலையென்றுந் திருவேங்கடமலை யென்றுஞ் சொல்லுகிறார்கள்.

இதுவே ஆதியில் தமிழ்நாட்டிற்கு வட எல்லையென்று தொல்காப்பியர்,

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து வழங்கும் செய்யுள்" கூறியிருப்பதோடு பல

ணந்தி முனிவர் செய்த நன்னூலில், "குணகடல் குமரி குடகம் வேங்கடம்" என்றும் கூறியிருக்கிறார்.

வடதேசத்தாருக்குப் பதரிகாச்சிரமம் எப்படியே அப்படியே தென்தேசத்தாருக்கு இம்மலை தக்ஷண பதரிகாச்சிரமமென்றும், அழகர் மலைக்கு உத்திர வேங்கடமென்றும் சொல்லப்படுகின்றன.

இது தென்கிழக்குத் திசையிலிருந்து ஆரம்பித்துத் தென்மேற்காக முடிகிற பல சிறு மலைகளின் தொடர்ச்சிகளாக விருக்கிறது. மலையின் வடக்கு முனை கடப்பை ஜில்லா வரையில் பரவி யிருக்கிறது. கீழ்த் திருப்பதியிலிருந்து இந்த மலையின் அடிவாரம் ஒரு மைல் தூரத்திலிருக்கிறது. இந்தத் திருமலையின் உன்னத சிகரத்தின் உயரம் 2000 அடிகள். மலையின் அகலம் 100 சதுரமைலுள்ளது. பூர்வத்தில் மகமேரு பர்வதத்தைக் கருடபகவான் எடுத்துக்கொண்டு போகையில் அதில் ஒரு சிறு குன்று தவறி விழுந்ததாம். அந்தக் குன்றுதான் இந்தத் திருப்பதி மலையாம். கலியுகம் பிறப்பதற்கு 28 யுகங்களுக்கு முன் கங்கா நதி தீரத்திலிருந்த ஸ்ரீமந் நாராயண மூர்த்தியானவர் இந்த மலைக்கு எழுந்தருளியதாக ஒரு சாசனத்தில் காணப்பட்டாலும், வேறொரு சாசனத்தில் கிறிஸ்து பிறப்பதற்கு 300 வருஷங்களுக்கு முன் இந்த மலையின் கோயில் கட்டப்பட்டதாகத் தெரியவருகிறது. இந்தத் திருப்பதி மலையின் பல பாகங்களுக்குப் பல பெயர்களுண்டு. இப்பெயர்களில் சேஷாசலம் என்னுமிடத்தில்தான் பெரிய கோயில் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயிலுக்கு மூன்று பிரகாரங்களிருக்கின்றன. முதல் பிரகாரம் பிரம்மாவினுலும், இரண்டாம் பிரகாரம் பரீக்ஷித்து மஹாராஜாவினுலும், மூன்றும் பிரகாரம் ஜனமேஜய மகாராஜாவினுலும் கட்டப்பட்டு, அநந்தரம் 600 வருஷங்கள் சென்றதன் மேல் விக்கிரமார்க்க மகாராஜனுல் ரிப்பேர் முதலான மராமத்துக்கள் செய்யப்பட்டனவாம். பிறகு சோழராஜாக்களால் புதுப்பிக்கப்பட்டுத் தொன்டைமான் சக்கரவர்த்தியின் காலத்தில் சீரும் பேரும் பெற்றுச் சிறந்தோங்கி வந்தது. இந்தக் கோயிலுக்கும் கீழ்த்திருப்பதியாகிய கோவிந்தராஜ பட்டணத்துக்கும் ஆறு மைல் தூரமிருக்கிறது. இந்த ஆறு மைல் தூரமும் நேரான வழியாகவிராமையால், அநேக காடுகள் மேடுகள், பள்ளங்கள் இவற்றைத் தாண்டி

வரவேண்டும். அப்படிக்கிருக்கினும் ஜனங்கள் போய்வரச் சுமார் 80 மைல்கள் வரையில் கற்கள் பரவப்பட்டிருக்கின்றன. விசேஷமான மேடுகள் ஏழு: ஆனதுபற்றியே, இந்தத் திருப்பதி சுவாமியை ஏழுமலைநாதரென்றும் அநேக தேசங்களுக்கு வடக்கே யிருப்பதனால், வடமலைநாதரென்றுஞ் சொல்வதுமுண்டு. இந்த ஏழுமலைகளையும் அநந்தலக்ஷ ஜனங்கள் கஷ்டத்தைப் பாராட்டாமல் நடந்துபோய்ச் சேவிக்கிறார்கள். செல்வவான்களாகிய சிலர் மாத்திரம் டாம்ஜா, பல்லக்குகளில் போவது வழக்கம். சாதாரண டாம்ஜாவுக்குப் போக வரக் கூலி மூன்று ரூபாய். பல்லக்கு அல்லது மேனாவில் போய் வரக் கூலி 7 ரூபாய். இவ்விதமாகக் கூலியைக் கொடுத்து அல்லது நடந்துவந்து சேவிக்கும்படியான கோயில் மிக்க அழகாகவும் வெளிப் பிரகாரம் 137 கெஜ நீளமும், 87 கெஜ அகலமுமுள்ளதாகவும் இருக்கிறது. சில வருஷங்களுக்கு முன் கர்ப்பகிரஹத்திற்கும் கோபுரத்திற்கும் தங்கமுலாம் பூசப்பட்டிருந்து இப்போது அவை கிலமாக விருக்கின்றன.

---

## திருப்பதி வேங்கடரமண சுவாமி.

இந்தக் கோயிலுக்குள் இருக்கும் பிரதான சுவாமியை வேங்கடாசலபதி, சேஷாசலபதி, கோவிந்தசுவாமி, ஏழுமலையான், வடக்கு மலையான் என்ற பெயர்களால் துதிக்கிறார்கள். இந்த விக்கிரகம் ஏழடி உயரமும் நாலடி அகலமுமுள்ளது. ஒரு கையில் தாமரை மலரும், மற்றொரு கையில் தரையிலூன்றிக்கொண் டிருக்கும் பாவனையோடுங் கூடிய தண்டமும் இருக்கின்றன. இதற்குச் சடைமுடியும், நாகபூஷணங்களும் இருப்பதால் இது ஒரு காலத்தில் தண்டாயுதபாணியாகிய சிவசுப்பிரமணியராக விருந்ததாகவும், ஸ்ரீ ராமாநுஜாசாரியர் திக்விஜயம் செய்யப்போனபோது தமது சத்பக்தி சாமர்த்தியங்களால் சைவர்களோடு வாதிந்து, சுவர்ன சங்கு சக்கரங்களைச் செய்துவைத்துக் கோயிலின் கதவுகளை மூடியிருக்கும்போது, தாம் சேஷாவதாரமாகி ஒரு சிறு துவாரத்தில் நுழைந்துபோய் அந்தச் சுவர்ன சங்கு சக்கரங்களைத் தரிப்பித்ததாகவும் சிலர் சொல்லுகிறார்கள். இந்தப் பெருமாளுக்கிருக்கும் ஆபரணாதிகளுக்கு விலை மதிப்பிடக் கூடவில்லை. இவர் சகல கஷ்டங்களை நீக்கி இஷ்ட சித்திகளை யீவதாகச் சொல்லப்படுவதால் தக்ஷண

தேசத்தாரும் வட தேசத்தாரும் ஏராளமான திரவியத்தைக் காணிக்கையாகவும், கடனுகவும், வட்டி யுள்பட உண்டியாகவுஞ் செலுத்திவருகிறுர்கள். தக்ஷணதேசத்தில் அநேகர் வீடுகளில் திருப்பதி உண்டி யிருப்பதைப் போலவே, வடக்கே "பாலாஜி" என்று வணங்கி பாலாஜி பாகமென்று தங்கள் வரும்படியில் பிரதிதினஞ் சேர்த்து வைத்து வருஷாந்திரத்தில், தாமே நேராகவாவது அல்லது தம் உத்தியோகஸ்தர் மூலமாகவாவது காணிக்கை செலுத்துவது வழக்கம். இக் காணிக்கை வருஷம் 1-க்கு சுமார் 3 லக்ஷம் ரூபாய் என்று மதிப்பிடப்பட் டிருக்கிறது.

---

## திருப்பதி உண்டிகைக்குக் காரணம்.

ஒரு காலத்தில் இந்த வேங்கடேசப் பெருமாள் வனத்தில் வேட்டையாடி வரும்போது கார்வேட்டி நகரத்துக்குச் சமீபத்திலிருக்கும் நாராயணவரத்தின் இராஜனுகிய ஆகாசராஜன் குமாரத்தி பத்மாவதி என்னும் கன்னிகையும் அதே வனத்தில் வந்து பூக்கொய்து விளையாடிக்கொண்டிருக்கும்போது, இந்த வேங்கடேசர் கண்டு மோகித்து, கலியாணஞ்செய்துகொள்ளும்பொருட்டு அந்தக் கன்னிகையின் தந்தையைக் கேட்க, அவர் கலியாண செலவுக்காகப் பெரிய தொகையை விரும்ப, சுவாமியானவர் பிரம்ம ருத்திராதிகளறிய குபேரனிடம் 1,14,00,000 இராமடாணிகளை அதாவது 1,14,00,00,000 ரூபாய் கடன்வாங்கிக் கலியாணஞ் செய்துகொண்டாராம். அந்தக் கடனைத் தீர்ப்பதற்காகத் தமது பக்தர்களுடைய குறைகளைத் தீர்த்து உண்டி முதலானவைகளை வாங்குவதாகச் சொல்லுகிறுர்கள். இது காரணத்தைப்பற்றியே வருஷத்தில் பல நாட்களிலும் முக்கியமாக வருஷாந்திர பிரம்மோற்சவங்களில் எண்ணிறந்த பக்தர்கள் காணிக்கையாகவும் உண்டிகையாகவுஞ் செலுத்துகிறுர்கள். இப்படி ஏராளமான பொருள்சேரவே அநேக குருநிலமன்னர் முதலானவர்கள் இந்தக் கோயிற்பொருளை அபகரிக்க ஆரம்பித்தார்கள்.

## சரித்திரம்.

கி. பி. 1753ஹ மகம்மது காமூல் என்பவர் நெல்லூரிலிருந்துவந்து கோயிலின் பொருளைக் கொள்ளையிடப் பார்த்தும் காரியம் சித்திபெறுமல் மறுபடியும் 1756ஹ

படை யெடுத்துவந்தார். அப்போதும் காரியம் சித்தி பெறவில்லை. 1757ஸு நஜிபுல்லா படை யெடுத்துவந்தும் காரியசித்தி பெறவில்லை. 1758ஸு மராட்டிய சேனைத்தலைவரான கோபாலராயர் படையுடன் வந்து கோயிலைக் கட்டிக் கொண்டார். கர்நாடிக் நபாபின் தம்பியாகிய அப்தில் வஹ்பு என்பவர் பிரஞ்சுக்கார தளாதிபதியாகிய லாலியுடன் கூடி படை யெடுத்துவந்தார். ஷை வருஷம் மார்ச்சுமீ கோபால ராயரே கோயிலைப் பிடித்துக்கொண்டார். மேலும், ஷை வருஷம் ஜூலைமீ பலிராவும், நாராயண சாஸ்திரியும் கடும் போர் செய்து கோயிலைச் சுவாதீன மாக்கிக்கொள்ள, அப்போது இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் 300 சிப்பாய்களையும் 15 ஐரோப்பியர்களையும் அனுப்ப, அவர்களில் 80 சிப்பாய்கள் மாத்திரம் மலையின்மேல் போக அநுமதி பெற்றார்கள். அவர்கள்போய்க் கடும்போர்செய்ய,சில கொலைகளும் கொள்ளைகளும் நடந்தன. பிறகு 1759ஸு மோகராலர், பாகார்கள் என்கிற துஷ்டர்கள் கூடிச் சண்டைசெய்து கோயிலின் சொத்தைக் கொள்ளையடிக்க வந்தமையால், அப்போது அந்தக் கோயிலின் செலவில் 150 சேவகர்களும் 500 அங்காமிகளும் வைக்கப்பட்டனர். 1762ஸு மலையின்பேரில் பெரிய குழப்பங்க ளுண்டாகி அநந்தரம் மஹந்துக்களுடைய ஆதீனமாயிற்று.

---

## மஹந்துக்களின் விவரம்.

மஹந்துக்களென்றால் மஹாத்துமாக்களாம். இவர்கள் வடதேசத்திலிருந்து வந்த பிரம்மச்சாரி பிராம்மணர்கள். இவர்களில் பிரதானமானவர் ஆதியில் வடதேசத்தி லிருந்து வந்து, தமக்கு யாதொரு கல்வியும் கைத்தொழிலுந் தெரியாமையால், ஓர் கோடாலியைச் சம்பாதித்துப் பிரதிதினமும் மலையின்மே லிருக்கும் காடுகளிற் சென்று கட்டைவிறகுகளை வெட்டிக் கொண்டுவந்து வேங்கடேசுவரசுவாமி சன்னிதிக்கும் மற்ற பரஸ்தலத்தாருக்கும் கொடுத்துக் கொண்டு, அவைகளுக்குப் பதிலாகத் தளிகைமுதலான பிரசாதங்களைப் பெற்றுப் புசித்துப் பரமபக்தராக விருக்கும் போது, இந்தக் கோயிலின் சுதந்தரத்துக்காக அநேகர் எனக்கு உனக்கு என்று போர்செய்து வருகையில், மத்தியஸ்தர்கள் "இந்தச் சுதந்தரத்தை லவுகிக சம்சார சம்பந்தங்களற்ற மேற்படி பிரம்மச்சாரி பிராம்மணரிடங் கொடுத்

தால், கோயில் காரியங்கள் கிரமமாக நடக்கும்" என்று நம்பி அவரையே தர்மகர்த்தாவாக நியமித்தார்களாம். அவரும் இந்தத் தேவகாரியத்துக்கிசைந்து காரியங்களை நடத்தி வந்தார். இப்படியிருக்கும் காலத்தில், இந்தக் கோயிலின் சம்பத்து நாளாவட்டத்தில் விருத்தியாகி வந்தமையால், அதைக் கொள்ளையிட விரும்பிய ஒரு நவாபானவர் அந்த மஹந்தைப் பிடித்துவந்து கால்களுக்கு விலங்குகளைப் பூட்டிச் சிறையில் வைத்ததோடு, அநேக ஆயிரம் ஜனங்களுள்ள சேனைகளைக் கொண்டுபோய்த் திருமலையின் அடிவாரத்தைச் சுற்றிலும் முற்றுகை போட்டிருந்தார். அக்காலத்தில் அந்தத் திருமலையில் யானைகள் அதிகமாக விருந்தன. ஒருநாள் காலையில் தற்செயலாக அநேகக் காட்டு யானைகள் வந்து நவாபு சேனைகளைக் கண்டதுண்டமாக அடித்து இடித்து உதைத்து தும்ஸமாக்கினபடியால், அந்த நபாபு முதலானவர்கள் பயந்து, "இது வெங்கடேசருடைய செய்கை" என்று எண்ணி, அவருக்குச் சில மானிய பூமிகளையும்விட்டு மஹந்தை விடுதலையாக்கினாராம். அந்த மஹந்துக்கு அத்திராம் பாலாஜி என்று பெயர் வழகியதாகச் சொல்லுகிறார்கள். பிறகு சேவதாஸ், தர்மதாஸ் மஹந்துக்களுடைய காலத்தில் கோயில் காரியங்கள் கிரமமாகவே நடந்துவந்தன. சுமார் 50 வருஷங்களுக்கு முன்னிருந்த பலராமதாசு என்னும் மஹந்தானவர் சீர்கெட்ட நடவடிக்கைகளையனுசரித்து வந்தமையால், அவரை அந்த மஹந்து வேலையினின்று நீக்கிக் கோவர்த்தனதாஸ் என்பவரை மஹந்தாக நியமித்தார்கள். அதன்மேல் பலராமதாசுக்குச் சங்கடமுண்டாகி, அடுத்த கிராமங்களிலிருக்கும் ஜனங்களைக் கூட்டிக்கொண்டுவந்து கோயிலைத் தாக்கினதில், புது மஹந்தும், சீடர்களும், திருமாளிகைகளில் புகுந்து கதவை மூடிக்கொண்டார்கள். அதனால், அநேகருக்குக் கடுங்காயமுண்டானதன்றியில், கொலையும் நடந்தது. பிறகு போலீசார் போய்க் கலகக்காரரைப் பிடித்துக் கைதிகளாக்க முயலுகையில், அவரும் அவரது சீடர்கள் சிலரும் தற்கொலை செய்துகொண்டதாக மிஸ்டர் சாகஸ்துரை யெழுதிய சித்தூர் டிஸ்டிரிக்டு மானுயல் புத்தகத்தில் கண்டிருக்கிறது. மஹந்துக்களெல்லாம் பிரம்மசாரிகளானபடியால் தமது வடதேசத்தைச் சார்ந்த பிராம்மண வாலிபரை ஸ்வீகாரமாகப் பெற்றுத் தமக்குப் பிறகு திருமலையின் சொத்துக்கு ஆதீனபராளாகிய மஹந்துக்களாக நியமித்தல் வழக்கம்.

இந்த மஹந்துக்களில் ஒருவராகிய பகவன்தாஸ் உதார குணமுள்ளவராதலால் கோயில் வருமானத்திலிருந்து திருப்பதி மலையின்மேல் நல்ல ஜலம் கொண்டுவருவதற்குப் பொருளுதவி செய்ததன்றியில், மலையின்மேல் சத்திரம் கட்டுவதற்கு 25 ஆயிரம் ரூபாயும், கீழ்த் திருப்பதியில் ஒரு தர்ம ஆஸ்பத்திரி கட்டுவதற்கு 14,708 ரூபாயும், ஆயிரக்கால் மண்டபத்தை ரிப்பேர் செய்யவும் ஆல்பிரி ரோட்டையும், நரசிம்ம தீர்த்தத்தையும் ரிப்பேர் செய்தும், இன்னும் சில்லரை மராமத்துகளுக்காக 13,846 ரூபாய் செலவிட்டதன்றியில் திருப்பதி மலையின்மேல் தங்க துவஜ ஸ்தம்பத்தையும் புதுப்பித்தார். இப்படிப்பட்டவர் இந்த தேவஸ்தானத்தின் திரவியத்தைத் துர்வினியோகம் செய்த தாகக் கேஸ் கொண்டுவரப்பட்டு சிட்சிக்கவும் பட்டாராம். இவருக்குப் பதிலாக வந்த சில மஹந்துக்களுக்குள் சண்டை சச்சரவு உண்டாகி ஒரு கொலைக்கேசும் நடந்துவிட்டதாம். இத்தியாதி அக்கிரமங்களைக் கண்டிக்கக் கருதி இப்போது சித்தூர் டிஸ்டிரிக்ட் கோர்ட்டாரால் ஒரு பஞ்சாயத்தார் நியமிக்கப்பட்டு அவர்களால் வெகு கிரமமாகக் கோயில் காரியங்கள் நடந்துவருகின்றன.

---

## கோயில் சிப்பந்திகளின் வரவு செலவு.

முன் இந்தக் கோயில் காரியங்களை நடத்த இரண்டு ஜீயங்காரரும், ஏகாங்கிகள் நால்வரும் மஹந்தவர்களால் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த ஜீயங்காரவர்கள் சம்சாரிகளாகவும், ஏகாங்கிகள் பிராம்மண பிரம்மசாரிகளாகவும், அல்லது தாரமிழந்தவர்களாகவுமிருக்கிறார்கள். இவர்களுக்குக் கீழ் பார்பத்திய தார்பாரவர்த்தகாளென்ற உத்தியோகஸ்தர்களிருந்தார்கள். இவர்கள் பிரதிதினமும் கோயிலுக்கு வந்து முன்மண்டபத்தின் இடதுபாகமாக அன்றுடங் கட்டும் பெரிய உண்டிகைப் பையில் காலைமுதல் மத்தியானம் 2 மணிவரையிலும், பிறகு இராத்திரி 9 மணி வரையிலும் விழும், பணம் பொன் வெள்ளி நகை முதலானவைகளை யெடுத்து மதிப்பிட்டுக் கணக்கெழுதி மஹந்தவர்களுடைய சர்க்காருக்கு அனுப்பிவந்தார்கள். அவ்விடத்திலுள்ளவர்கள் அவைகளை ஜடிதிபார்த்து சுவாமிக்கு வேண்டிய நகை முதலானவைகளை வைத்துக்கொண்டு, மற்றவைகளை வாரத்துக்கு ஒருதரம் ஏலத்தில் விற்று வந்த

பொருளைச் சுவாமி பொக்கிஷத்திற் சேர்ப்பார்கள். 1820 ௵ 1,02,000 ரூபாய் உண்டியில் வந்தது. ஷெ ௵ பிரமோற்சவத்தில் மாத்திரம் 87,000 ரூபாய் உண்டியில் வந்தது. 1822 ௵ 14,200 ரூபாய் வருமானமும், 20,000 ரூ. செலவுமாக விருந்தது. 1869 முதல் 1875 வரையில் சராசரி 2,11,726 ரூபாய் வருமானமும், 1,46,906 ரூபாய் செலவுமாக விருந்தது. பைராகிகள் போஜனத்துக்காக 64,820 ரூபாய் செலவாயிற்றும்.

இந்த மலையானது மஹா பரிசுத்த ஸ்தலமென்றும், இந்துக்கள் தவிர இதர ஜாதியார் மலைமேற் போகக்கூடாதென்ற கட்டுப்பாடு மிருக்கிறபடியால் மலையின் விபரத்தையும் வரவு செலவு விவரத்தையும் சரியாக அறிந்து சொல்லக் கூடவில்லை. அநேக வருஷங்களுக்கு முன்பு அப்பி டுபாய்ஸ் (Abbi Dubois) என்கிற ஐரோப்பியர் பிராம்மண வேடம் பூண்டு மலையின் மேல் போனதாக ஆசியாடிக்கு ஜர்னலில் கண்டிருந்தபோதிலும், 1871 ௵ வரையில் ஒரு இங்கிலீஷ்காரனுகிலும் போனதில்லையென்று சொல்லுகிறுர்கள். அந்த 1871 ௵ மலையின்பேரில் ஒரு கொலைக் குற்றம் நடந்தபடியால் இங்கிலிஷ்காரர் மேலே போனதாகவும், அப்படிப் போனது பிசகென்று மஹந்தவர்கள் சென்னைக் கவர்னருக்கும் இந்திய செக்ரிடெரிக்கும் தந்தி சமாசார மனுப்பினுராம். பிறகு நாளாவட்டத்தில் பன்னிரண்டு ஐரோப்பியர்கள் வரையில் போய் வந்ததாகச் சொல்லுகிறுர்கள். இப்போது மலையின்பேரில் பொக்கிஷாதிபதி, உக்கிராணக்காரர், புனுக்காரன், மாலைகட்டி, சந்தன மரைப்போன், விறகு வெட்டுவோன், மூன்று சேவகர், ஒரு குயவன், ஒரு மசால்சி, முதலான சிப்பந்திக ளிருக்கிறுர்கள். இந்தக் கோயில் மகா பரிசுத்தஸ்தலமாகையால் இவ்விடத்தில் தாசிகள் கிடையா. ஒரு புராணத்தின்படி இந்தக் கோயிலின் சக்தி 5000 வருஷங்கள் தா னிருக்குமென்று சொல்லுகிறபடியால் இன்னும் 20 வருஷமானுல் அந்த 5000 ௵ முடிவுபெறுமாம். ஆனதுபற்றியே இப்போது கோயில் வருமானமும் குறைந்துகொண்டு வருவதாகச் சொல்லுகிறுர்கள்.

---

## சுவாமியைச் சேவிக்கும் விதமும், சேவைகளின் விவரமும்.

முதலில் கீழ்த் திருப்பதிக்குச் சுமார் ஒரு மைல் தூரத்தி லிருக்கும் ஆழ்வார் தீர்த்தத்துக்குப்போய் ஸ்நானஞ்செய்து சங்கற்பஞ் செய்துகொள்ள வேண்டியது. சுமார் 45 அல்லது 50 கெஜ உயரமான கரட்டிலிருந்து விழுகிற ஜலத்தை அழகிய படிக்கட்டுகளால் கட்டித் தடுக்கப்பட்ட தீர்த்தம். கபிலதீர்த்த மென்று சொல்லப்படுகின்றது. இந்தத் தீர்த்தத்துக்குச் சமீபத்தில் இரண்டு மூன்று தீர்த்தங்க ளிருக்கின்றன. அவைகளிலும் ஜலமெடுத்துத் தெளித்துக்கொண்டும், சமீபத்திலிருக்கும் உடையவர் சன்னிதிக்குப்போய்ச் சேவித்துக்கொண்டும் "கோவிந்தா! கோவிந்தா!! வெங்கடரமண கோவிந்தா!!!" என்று கோஷித்துக்கொண்டும் மலையின்மீது ஏறவேண்டும். அடிவாரத்திலிருந்து காலிகோபுரம் வரையில் சற்றேறக்குறைய ஒரு மைல்தூரம் மலையானது நெட்டு குத்தலாக விருப்பதால், வெகு கஷ்டத்துடன் ஏறவேண்டும். ஸ்ரீகிருஷ்ணதேவராயரால் கட்டப்பட்ட இந்தக் காலிகோபுரமானது இப்போது ரொம்பவும் கிலமாகி அபாயஸ்திதியி லிருக்கிறது. அதற்கப்புறம் மற்ற இரண்டு கோபுரங்கள் வரையில் வழியானது கூடியவரையில் சமதரைப் பாங்காக விருக்கிறது. பிறகு முழங்கால் முறிச்சி என்னுமிடத்தில் அதிக கஷ்டத்துடன் ஏறி யிறங்கவேண்டும். பிறகு வழியானது கூடியவரையில் சமதரைப் பாங்காக இருக்கிறது. வழிமுழுவதும் பற்பல வித புஷ்பச் செடிகளும், மரங்களும், நிறைந்து பிரகாசிப்பதால் இவை பிரயாணிகளுக்கு நேர்த்தியான காக்ஷிகளாக விருக்கின்றன. இடைக்கிடை தண்ணீர்ப்பந்தல்களும், தங்கும் மடங்களும் உண்டு. இவ்விதமாக வரப்பட்ட பக்திமான்கள் கோயில் தரிசனையையும் துவஜஸ்தம்பத்தையுங் கண்டவுடனே, "வெங்கடரமண கோவிந்தா! கோவிந்தா!!" என்று விழுந்து தண்டம் சமர்ப்பித்துக்கொண்டு, சமீபத்திலிருக்கும் சுவாமி புஷ்கரணி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சங்கற்பத்தை முடித்துக்கொள்வார்கள். அநேக சூத்திரர்களும், சில பிராம்மணர்களும் சிரோபாரம் நீக்குதலாகிய தலைமயிரை நீக்கிவிடுவார்கள். இதற்கு 2 அணா முதல் 8 அணா வரையில் கூலி ஏற்பட்டிருக்கிறது.

இந்த வேண்டுகோளை நிறைவேற்றிவிட்டால், மற்றெவ்வித மாகவாவது தலைமயிர் போய்விடுமாம்.

சிலகாலத்துக்கு முன்னே, தாசி ஒருத்தி, "திரவிய வான் ஒருவன் தன்னைவந்து சேர்வதுண்டாயின் என் கூந்தலைச் சவுளமாய்ச் சிரைத்து ஷை சுவாமிக்குப் படைப்பேன்" என்று வேண்டிக்கொண்டாள். அவளுடைய பிரார்த்தனைப் படிக்குத் திரவியவா னொருவன் வந்து தன்னைச் சேர்ந்த போது தன் பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்குத் தன் சோர நாயகனோடு இந்தத் திருப்பதிக்குப் புறப்பட்டுப் போனாள். போகும்போது வழியிலே தன் பிரார்த்தனைப்படி மொட்டை யடித்துக்கொண்டால் முக அழகு கெட்டுப்போகுமென்றெண்ணித் திருப்பதியைச் சேர்ந்த பின்பு தன் கூந்தலை தான் அணிந்திருந்த விலைபெற்ற ஆபரணங்களைக் கழற்றி மேற்படி சுவாமிக்குப் படைத்துவிட்டு ஷை ஆலயத்தில் இரவில் படுத்து நித்திரை செய்யும்போது தன் தலைமுடியை யாரோ ஒரு தாதன் வந்து சிரைத்துக்கொண்டு போய்விட, மறுநாள் உதயத்தில் தன்தலை மொட்டை யடித்திருப்பதைக் கண்டு துக்கமும் வெட்கமும் அடைந்தாள் என்பதாக ஒருகதை சொல்லுகிறார்கள். இப்படி மொட்டை யடித்துக்கொண்ட பிறகு சுவாமி புஷ்கரணிதீர்த்த தடாகத்தில் ஸ்நானஞ்செய்து சங்கற்பஞ் செய்வார்கள். இந்தத் தடாகமானது நூறு கெஜ நீளமும், ஐம்பதுகெஜ அகலமுமுள்ளது. இதற்குள் 9 சிறு தீர்த்தங்களிருக்கின்றனவென்பது நிகழ்ந்த பஞ்சகாலத்தில் நீர் வற்றிப்போனபோது காணப்பட்டது. இந்த ஸ்வாமி புஷ்கரணியில் வருஷத்திற்கு ஒரு தடவை சகல தீர்த்தங்களும் வந்து சேர்வதாக ஐதீக மிருக்கிறபடியால் அழுக்கான ஜலமென்று அசட்டை செய்யாமல், அனைவரும் ஸ்நானஞ்செய்து வருகிறார்கள். இதற்குச் சமீபமாக வராஹதீர்த்தமும் வராஹசுவாமியும் இருக்கின்றன. பூர்வம் இந்த மலைக்குச் சொந்தமானவர் வராஹசுவாமி யானபடியால், முதலில் இந்தச் சுவாமியைத் தரிசித்துக்கொண்டுதான் பெரிய கோயிலுக்குப் போக வேண்டும். சில பக்திமான்கள் கோதுமைமா, கற்கண்டு, எலுமிச்சம்பழம் இவற்றுடன், இரண்டுரூபாய் காணிக்கையாகவைத்து மஹந்தவர்களைப்போய்த் தரிசிப்பதுண்டு, அப்படித் தரிசித்தால் அவர் ஓர் சேவகனைக் கூட அனுப்பி வேங்கடரமண சுவாமி தரிசனைக்குச் சிபார்சு செய்கிறார். உடனே கோயிலுக்குப் போனால் அவ்விடம் கர்ப்பகிரஹ

மண்டபத்தின் வெளியில் கட்டி யிருக்கப்பட்ட இரண்டு மணிகளில் ஒன்றில் "கோவிந்தா! கோவிந்தா!!" என்றும், ஒன்றில் "நாராயணா! நாராயணா!!" என்றும் ஓசை யுண்டாகும்படி அடிக்கிறார்கள். அப்போது சம்பத்துக்குத் தக்கபடியாகவும், சிபார்சுக்குத் தக்கபடியாகவும், சேவை கிடைக்கிறது. மேலும், யாராவது கற்பூரதீபாராதனை செய்விக்க வேண்டுமாகில், ஒரு ரூபாய் கொடுக்கவேண்டும். சுவாமி தரிசனை. ஆலவட்டம், தீர்த்தம், சடகோபுரம் முதலானவைகள் இலவசமாகக் கிடைக்கும்.

---

## உற்சவ விவரங்கள்.

இந்த வெங்கடரமண சுவாமிக்கு அபிஷேகம், நைவேத்தியம், வாஹனம் முதலானவைகளால் ஆர்ஜித வரத்தனைகள் பல உண்டு. பிரதிதினங் காலை ஏழு மணிக்குச் சர்க்கரை வெண்ணை முதலானவைகளை வைத்து வணங்கிவருகிறார்கள். பிர்ம்மோற்சவ காலங்களில் விசேஷமான ஜனங்கள் வருவதால் அக் காலங்களில் யாராவது பக்தர் சுவாமிக்குச் சர்க்கரைப் பொங்கல், புளியோரை, ததியாராதனம், மனோஹரம் முதலானவைகளைச் செய்வித்து வணங்குவோர் 6 ரூபாய் கொடுக்கவேண்டும். கங்காள தளிகை செய்விக்க 6 ரூபாய் கொடுக்கவேண்டும். பக்ஷணம் செய்வித்துப் படைக்க வேண்டுமானால், 28 ரூபாய் கொடுக்க வேண்டும். உலகப்படிக்கு 4 ரூபாய் கொடுக்கவேண்டும். அமூர்தாரண உற்சவஞ் செய்விக்க 65 ரூபாய் தரவேண்டும். வெள்ளிக்கிழமையன்று புளக அபிஷேகம் செய்விக்க 50 ரூபாய் கொடுக்கவேண்டும். வியாழக்கிழமையில் பூவலங்கி சேவையைச் செய்வித்தற்கு 60 ரூபாய் கொடுக்க வேண்டும், தோமாலை சேவைக்கு 12 ரூபாய் கொடுக்க வேண்டும். சஹஸ்ரநாமஞ் செய்விக்க ஐந்து ரூபாய் தர வேண்டும். பள்ளியறை மஞ்சபசேவைக்கு 12 ரூபாய் தர வேண்டும். இத்தியாதி உற்சவங்களுக்கும், வைபவங்களுக்கும், சாதாரண காலத்தில் விலை சரசமாக விருக்கிறது. திரும்பி வரும்போது ஸ்தானிகாள் முதலான சில்லரைச் சிப்பந்திகளுக்கு இரண்டு ரூபாய் முதல் இரண்டு அணா வரையில் மரியாதைசெய்ய வேண்டியதன்றியில், வழிமுழுவதும் நிறைந்து மொய்க்கும் பிச்சைக்காரர்களுக்காகச் சில்லரைத் தம்பிடிகளைப் போட்டுக்கொண்டு வரவேண்டும்.

வாகனங்கள்.

இந்தக் கோயிலுக்குக் கற்பகவிருக்ஷம், பல்லக்கு, சேஷ வாஹனம், சிரோபூபவிமானம், சூரிய பிரபை, சந்திர பிரபை, அர்த்தன அரை, அந்தூல் பல்லக்கு, சிங்கவாகனம், பால சேஷவாகனம், கருடாழ்வார், அனுமந்தர், என்கிற 12 கில்ட்டு வாகனங்க ளிருக்கின்றன. இவைகளுக்கு ஏற்பட்டிருக்கும் கிரயத்தைக் கொடுத்து உற்சவத்தை நடத்தி வைக்கலாம். இப்படி நித்திய நைமித்திய உற்சவங்களை நடப்பித்துவைக்கும் பக்திமான்களுககுக் கோயிலில் மரியாதைசெய்து அனுப்புவதுமுண்டு. எவராவது 100 ரூபாய் செலவுசெய்து சேவித்தால் அவர்களுக்குப் பரிவட்டம், துளசிமாலை, அலங்கார மரியாதைகளும், நூறு ரூபாய் முதல் 500 ரூபாய் வரையில் செலவு செய்பவருக்குப் பட்டு புஷ்பமோடு துளுவ மரியாதைகளும், 1000 ரூபாய்க்கு அதிகமாகச் செலவு செய்பவருக்கு ஒரு சால்வை மரியாதையையும் செய்வதுண்டு. சாதாரண காணிக்கையும், இரண்டு ரூபாய் தக்ஷிணையும் கொடுத்து மஹந்தவர்களைத் தரிசிப்பவர்களுக்கு ஒரு துளசிமணி மாலையும், ஒரு பணியாரமும், கொஞ்சம் ஸ்ரீபாதரேணு என்கிற சுகந்த பரிமளங்களடங்கிய பச்சைக் கற்பூரமும், கொஞ்சம் தீர்த்தமும் மரியாதையாகக் கொடுப்பார்கள். இந்தக் கோயிலுக்குள் உடையவர் முதலானவர்களின் சன்னதிக ளிருக்கிறதன்றியில், வெளிப்பிரகாரத்தின் உள்வாசலுக்கு இரு பக்கங்களிலும் தொண்டைமான் சக்கிரவர்த்தி, இராயர், அப்பாஜிகளைப் போன்ற கற்சிலைகள் செய்து வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் கோயிலில் நடக்கும் நித்திய நைமித்திக கைங்கரியங்கள் வைகாசநக ஆகமத்தை யனுசரித்துச் செய்யப்பட்டு வருகின்றன.

கோயிலுக்கு வெளியில் ஒரு மேட்டின்மேல் மஹந்தவர்களுடைய மடம் கட்டப்பட்டிருக்கிறது இவ்விடத்தில் மஹந்தவர்கள் வாசம்செய்ய யோக்கியமான கட்டடங்களும், சுவாமியின் பொக்கிஷசாலையும், கோடிசாலி கிராம கோவிலும், பைராகிகள் தங்குமிடமும், அன்னசாலையும், பூர்வ மஹந்துக்களுடைய சமாதிகளு மிருக்கின்றன. இவ்விட மிருக்கும் அன்ன சத்திரத்தில் சகலரும் தாராளமாக வந்து சாப்பிட்டுப் போகலாம். ஜாதிபேதமில்லை. இந்த மஹந்து மடத்துக்குச் சமீபத்திலும், கோயில் சன்னிதி

வீதிக்கு இருபக்கங்களிலும் ஆயிரக்கால் மண்டபமும், வேறு சில்லரைக் கட்டிடங்களும், மைசூர் ராஜா - கொச்சி-காளாஸ்திரி - வெங்கடகிரி ராஜாக்களால் கட்டி வைக்கப்பட்ட சத்திரங்களு மிருக்கின்றன. அருகில் கடைகளு மிருக்கின்றபடியால், பிரயாணிகளுக்கு வேண்டிய சகல பதார்த்தங்களும் நயமான விலைக்கு அகப்படும். இந்த மலைக்கு வருபவர்களில் பெரும்பான்மையோர் காலமறிந்து போதுமான போஜனத்தைச் சாப்பிடாமல் பட்டினியாக விருப்பதினாலும், அழுக்கு சுனை ஜலத்தைச் சாப்பிடுவதினாலும், விசேஷமாக மலையின்மேல் விஷக்காற்று வீசுவதினாலும், காய்ச்சல் முதலான வியாதிகள் கண்டு வயிற்று வீக்கத்தோடு இறந்துபோகச் சம்பவிக்கிறது. சுமார் பத்து வருஷங்களுக்குமுன் இருந்த பிரஜைகளைக்கூட இப்போது பார்ப்பது அபூர்வமாக விருக்கிறது. இந்த மலையின்மேல் சித்திரை, வைகாசி மாதங்களில் நாகமசம் பூத்து, அாசமாங் கொழுந்து விடுகையில், மலையின்பேரில் மூன்று நாளைக்குமே லிருந்தால் எப்படிப்பட்டவர்களுக்கும் காய்ச்சல் வராமற்போவதில்லை. இப்படிப்பட்ட மலையின்மேல் பெரும்பாலும் பக்திமான்களே விசேஷமாக வருவதனால் அவர்கள் விஷகாற்றுக்குப் பயப்படுகிறதில்லை. செப்டம்பர் அல்லது அக்டோபர் புரட்டாசி மாதத்தில் ஆஸ்வீஜ சுத்தத்தில் ஸ்ரீ பத்மாவதி திருக்கல்யாணமும், பிரம்மோற்சவமும் பத்துநாள் கொண்டாடப்படுகின்றன. அப்போது 3-ம், 5-ம், 7-ம் திருநாளில் விசேஷமான ஜனங்கள் வந்து கூடுகிறார்கள். 9-ம் திருநாளில் இரத உற்சவம் நடக்கிறது. 11-ம் திருநாளாகிய தசர நவமியில் கருட உற்சவம் நடக்கிறது. அக்காலங்களில் விசேஷ ஜனங்கள் கூடுவதன்றியில், சப்தமி - முக்கோடி - சிவராத்திரி முதலான தினங்களில் விசேஷ உற்சவங்கள் நடந்துவருகின்றன. இந்த மலையின் மேல் மூன்றரைகோடி தீர்த்தங்க ளிருப்பதாகப் புராணங்களில் சொல்லப்பட்டிருந்தாலும், இப்போது காணப்பட்டவைகள் முப்பதுதான். இவைகளில் விசேஷமானது, சுவாமி புஷ்கரணி அல்லது கோனேரி தீர்த்தம். இரண்டாவது பாபவினாச தீர்த்தம்; இது சுவாமியின் சன்னிதிக்கு மூன்று மைல் தூரத்தி லிருக்கிறது. இதில் ஸ்நானஞ் செய்பவர்களின்மேல் விழும் ஜலம் வெள்ளையாக விருந்தால் புண்ணியவான்க ளென்றும் கருப்பாக விருந்தால் பாவிக ளென்றுஞ் சொல்லுகிறார்கள். மூன்றாவது கோகர்ப்ப தீர்த்

தம்; இது கோயிலுக்குச் சமீபத்தில் முன் இருந்ததாம்; இப்போது கோயிலுக்குக் கிழக்கே கால்மைல் தூரத்தி லிருக்கிறது; இது ஒரு ஜலனீர்; குறுக்கே போட்டிருக்கும் மரக்கட்டையைப் பிடித்துக்கொண்டு முழுகி அந்தர கரணம்போட்டு வரவேண்டும். இதற்குச் சமீபத்தில் க்ஷேத்திரபலகுண்டு என்னும் ஒரு பெரிய குன்றிருக்கிறது. இவ்விடம் தருமராஜர் விக்கிரக மிருக்கிறபடியால் வியவஹார விஷயமாகச் சத்தியஞ்செய்பவ ரெல்லாரும்வந்து 7 ரூபாய் கொடுத்துப் பிரமாணஞ் செய்கிறார்கள். பூர்வம் பஞ்சபாண்டவர் தமது ஆயுதங்களைக் கழுவ இவ்விடம் தங்கியபடியால் ஒரு காட்டின் அடியில் ஒரு பஞ்சபாண்டவர் சன்னிதியும் அருகில் ஒரு குகையும் இருக்கிறது. இந்தக் குகையில் புகுந்துபோனால் ஏழுமைல் தூரத்தி லிருக்கும் சந்திரகிரி கோட்டையில் கொண்டுபோய் விடுவதாகச் சொல்லுகிறார்கள். இவ்விடத்தில்தான் ஸ்ரீ பராங்குசதாசர் சில காலமிருந்ததாகப் பிரஸ்தாபம். இதில் ஐந்து கெஜ தூரம் வரையில் நாம் நுழைந்து பார்த்தோம். இருட்டில் வழி தெரியாமல் திரும்பி வந்துவிட்டோம். இந்தக் குகைக்குச் சமீபத்தில் கந்தமூலத்தின் காக்ஷி ஆனந்தமாக விருக்கிறது. இது பிரார்த்தனைக்கும் ஈஸ்வர தியானத்துக்கும் சிறந்த விடம். இதற்குச் சமீபத்தில் இரண்டு ஸ்திரீகள் உலகாடம்பரங்களை விட்டொழித்து வந்து காய் கிழங்குகளைத் தின்று ஈஸ்வர தியானத்தினால் காலம்போக்கி வருகிறார்கள்.

---

## தும்புருகோண தீர்த்தம்.

இது சுவாமி சன்னிதிக்குக் கிழக்கே நான்கு மைல் தூரத்தி லிருக்கிறது. இந்தத் தீர்த்தம் சுமார் கால் மைல் உயரமுள்ள கானக்குன்றத்திலிருந்து விழுகின்றது. இவ்விடத்திய கந்தமூலாதிகளின் காக்ஷி வெகு விநோதமானது. இவ்விடத்தில் மஹர்ஷிகளின் வாசாயோக்யமானசில குகைகளிருக்கின்றன. இராத்திரி காலங்களில் புலிகள் காட்டெருமைகள் சிறுத்தைகள் முதலான மிருகங்களின் சஞ்சாரமுமுண்டு. ஏகாந்தமாகப் பகவத்தியானத்தைச் செய்வதற்கு இது சிறந்தவிடமாக விருக்கிறது. இந்தத் திருமலைக்குப் பின் பக்கத்தில் ஏழுமைல் தூரத்தில் சந்திரகிரி கோட்டையிருக்கிறது. இது இப்போது தாலூகா சப் டிவிஜன். இந்த விடத்தில்தான் வேடிக்கை வரப்பிரசாதியாகிய தென்னாலு

ராமன் ஜனித்தது. இப்போதும் அவர் சந்ததிகளிங்கிருக்கிறார்கள். மேலும், இவ்விடமிருந்த வித்வான்களால் மநுசரித்திரம், வசுசரித்திரம், பாண்டவ விஜயம் முதலான கிரந்தங்க ளியற்றப்பட்டன. இந்தக் கோட்டை இம்மடி நரசிங்க யாதவராயரால் சாலிவாகன சகாப்தம் 922ஸு அல்லது கி. பி. 1000ஸு கட்டப்பட்டது. பிறகு விஜய நாதரும், வெங்கடபதி நாயடவர்களும் கோட்டையைக் கைக்கொண்டு திருப்பதி மலையின்பேரில் ஒரு அரண்மனையைக் கட்டினார்கள். இவர்கள் காலத்தில்தான் சைவர் சன்னிதியாகவிருந்த திருமலையானது வைணவர் சந்நிதியாகியதென்று சில சரித்திரக்காரர் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆனால், திருப்பதிக்குப் போகும் பக்தர்கள் ஏழுமைல் தூரத்திலிருக்கும் இந்தச் சந்திரகிரி கோட்டைக்குப் போகாமல் திரும்பிக் கீழ்த்திருப்பதியாகிய கோவிந்தராஜ பட்டணத்துக்கே வந்து விடுகிறார்கள். இதற்குக் காரணம் மலையின்பேரில் அம்மன் சன்னிதி யில்லாமையால் கீழ்த்திருப்பதிக்கு மூன்றுமைல் தூரத்திலிருக்கும் அலர்மேலு மங்காபுரமென்னும் திருச்சானூருக்குப் போய் அம்மனைச் சேவித்து ஆனந்தமடைவதற்காகவேயாம்.

---

## திருச்சானூர் அலர்மேலு மங்காபுரம்.

திருப்பதி மலையைச் சேவித்துக்கொண்டு கீழ்த்திருப்பதிக்கு வந்து கோவிந்தராஜர், இராமசாமி கோயில்களைச் சேவித்துக்கொண்டும், கடைவீதியிற் போய் மரப்பாய்ச்சி, பொம்மைகளையும், வேண்டிய பாத்திரங்களையும், சந்தனக்கற்களையும், மூங்கில் தடிகளையும் வாங்கிக்கொண்டு, மறுநாள் திருச்சானூரென்னும் அலர்மேலு மங்காபுரத்துக்கு வருகிறார்கள். இந்த திருச்சானூர் ஒரு சிறிய கிராமம். இதில் 1871ஸு 2261 ஜனங்க ளிருந்தார்கள். இப்போது ஐந்துபெரிய வீதிகளும் 350 வாசயோக்கியமான வீடுகளும், ம-ள-ள-ஸ்ரீ வீராசாமி செட்டியாரவர்களுடையவும்-பேஷ்காரவர்களுடையவும் சிறந்த சத்திரங்களும் இருக்கின்றன. சகலவித காய்கறி பதார்த்தங்கள் நயமான விலைக்கு அகப்படுகின்றன. ஒரு காலத்தில் மகாலக்ஷ்மியானவர் விஷ்ணுவுடன் மனஸ்தாபஞ்செய்துகொண்டு இவ்விடம் வந்துவிட்டார். அதன்மேல் மஹாவிஷ்ணுவானவர் அம்மையைத் தேடிக்கொண்டு வருகிறபோது நாராயணவனத்து ஆகாச

ராஜன் குமாரத்தியாகிய பத்மாவதியைக் கண்டு மோகித்துக் கலியாணஞ் செய்துகொண்டார். ஆயினும், இந்த லக்ஷ்மி தேவியின்பேரிலிருந்த பிரியமாத்திரம் நீங்காமையால் தனது சக்கரத்தை விட்டு அவ்விடத்தில் ஓர் தடாகத்தையுண்டாக்கி அந்தத் தடாகத்தில் ஜனித்து, தாமரை மலரில் லக்ஷ்மி தேவியைத் தோன்றும்படி செய்து அந்தத் தீர்த்தக் கரையில் பன்னிரண்டு வருஷகாலமாக அன்ன ஆகாரமின்றித் தபம் செய்தாராம். அப்படிச் செய்தும் அந்த லக்ஷ்மி தேவியானவர் விஷ்ணுவுடன் திருப்பதிக்குப் போகப் பிரியமில்லாமல் இவ்விடத்திலேயே தங்கிவிட்டாராம். ஆகவே, அந்த இடம் மகா சிரேஷ்டமான இடமாகவும், அந்தத் தீர்த்தம் மகா சிரேஷ்டமான தீர்த்தமாகவும் கொண்டாடப்பட்டு வருகிறது. அந்தத் தீர்த்தமானது ஸ்வர்ணமுகி நதியின் வடகரையில் தோன்றுகிற சிறந்த பெரிய தடாகம். இதற்குப் பக்கத்தில் நதியின் ஜலம் வந்து சேருகிறதன்றியில், வேறொரு பக்கத்தில் அழுக்கு ஜலம் போக வழிவிடப்பட்டிருக்கிறது. இந்தத் தீர்த்தத்திற்குச் சமீபத்தில் அலர்மேலு மங்கையாருடைய சிறந்த புராதன கோயிலிருக்கிறது. இந்தக் கோயிலில் குங்கும தீபாராதனை செய்ய விரும்புவோர் அரை ரூபாய் கொடுக்கவேண்டும். கோயில் சிப்பந்தி சிலவு, மாதம் ஒன்றுக்கு நூறு ரூபாயாகிறது. நித்தியப்படி 20 சேர் அரிசி தளிகை செய்கிறார்கள். வருஷத்தில் பத்து உற்சவங்கள் நடக்கின்றன. தெப்பல் உற்சவம் பலவிதத்திலும் சிறந்தது. தெப்பக்குளத்தை இப்போது ரிப்பேர்செய்து வருகிறார்கள். மேலும், இந்த அலர்மேலு மங்காபுரமென்னும் திருச்சானூரில் பூர்வம் சுகப்பிரமரிஷியானவர் ஷை தீர்த்தக்கரையில் வந்து தபசு செய்தமையால் திருச்சுகனூர் என்ற பெயர் வழங்கிவந்து இப்போது திருச்சானூரென்று பெயராகிவிட்டது.

இது மஹா திவ்வியஸ்தல மாகையால் நமது தக்ஷண தேசத்தி லிருக்கும் மத்துவ மதஸ்தர்கள் கூடி நிகழ்ந்த பஹுதானிய வருஷம் (1877-78) மத்துவ சித்தாந்த உன்னாஹனி சபையை ஸ்தாபித்தார்கள். இந்தச் சபையின் நோக்கம் நமது தேசத்தில் சமஸ்கிருத வித்தையைப் பரிபாலனஞ் செய்து, வைதீக விஷயங்களை விருத்தியாக்க வேண்டு மென்பதே. இது பொது விஷயமான சபையாக

விருந்தபோதிலும், பெரும்பாலும் மத்துவ சித்தாந்திகள் மாத்திரம் சேர்ந்திருக்கிறார்கள்.

இந்தச் சபைக்குத் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ கஞ்சி சுப்புராய ரவர்கள். இவர் தம்முடைய முயற்சியினால் தருமார்த்தமாக நாலாபக்கங்களிலிருக்கும் மாத்துவ சித்தாந்த சமஸ்கிருத பண்டிதர்களை வருஷாந்திரத்தில் தருவித்து; சுருதி, ஸ்மிருதி, இதிகாச, புராண, தருக்க மீமாம்ஸ, வியாகரணாதிகளில் பரீக்ஷைசெய்து தேறினவர்களுக்குத் திரவியம், சால்வை முதலான பகுமானங்கள் செய்யப்பட்டு வருகின்றன. இந்தப் பெரிய காரியத்துக்காக அநேக தருமவான்கள் திரவிய சகாயஞ் செய்கிறார்கள். வருஷாந்திரத்தில் லவுகீக வைதீக பிராம்மணர்கள் ஏராளமாக வந்து தற்காலம் ம-ா-ா-ஸ்ரீ வீராசாமி செட்டியா ரவர்கள் சத்திரத்தில் கூடிப் பிரசங்கம் முதலானவைகளைச் செய்வதால், தங்களுக் கென்று பெரிய பிரசங்க மண்டபங் கட்டுவதற்குக் கோயிலுக்குப் பின்புறத்தில் ஒரு இடத்தைத் தயார்செய்து ஒரு பெரிய கட்டிடத்தைக் கட்டியிருக்கிறார்கள். இந்தச் சபைக்கு ம-ா-ா-ஸ்ரீ காஞ்சி சுப்புராயரவர்கள் காரியதரிசியாக 1883ஞ் நியமிக்கப்பட்டார். ஆரணி ஜாகிர்தார் அவர்கள் தம்மிடமிருந்த ஸம்ஸ்கிருத கிரந்தங்களை யனுப்பிவைத்தார். அநேகர் அரிசி பருப்பு முதலான பதார்த்தங்களைக் கொடுத்து உதவி செய்தார்கள். நிகழ்ந்த சித்திரபானு வருஷத்தில் இந்தச் சபைக்குப் பலவிடங்களிலிருந்து வந்த ரூபாய் 7142-3-2 வருமானமும், ரூபாய் 4970-13-2 செலவுமாக விருந்தது. இந்த வருமானத்தை விருத்தியாக்கும்பொருட்டு இந்தச் சபையார் ஒரு திரவிய சேகர நிதியை ஸ்தாபித்திருக்கிறார்கள். அதில் ரூபாய் 17,244-5-10 சேர்ந்திருந்தது.

மேற்சொன்ன ஸ்ரீ கஞ்சி சுப்புராயரவர்கள் இறந்து விட்டபடியால் இப்போது அவருடைய சகோதரர் ஸ்ரீ திவான்பஹதூர் கிருஷ்ணசாமி ராயரவர்கள் ஷை தர்மத்தை நடத்தி வருகிறார். இடையில் இச்சபையாருள் வியாசராய மடாதிபதிக்கும் உத்தராதி மடாதிபதிக்கும் முன் தீர்த்தம் பின் தீர்த்தம் கொடுக்கக் கலகம் சம்பவித்தாலும் கடைசியில் உத்தராதிமடத்தார்க்கே முன் தீர்த்தம் கொடுக்கத் தீர்மானித்தார்கள்.

இத்தியாதிகளுக்கெல்லாம், இந்தத் திருப்பதி மலையானது காரணமாக விருப்பதால் இக்காலத்தாரன்றி முற்காலத்தாருங் கொண்டாடினார்க ளென்பதற்குத் திருஷ்டாந்தமாக, திராவிட வேதமாகிய நாலாயிரப் பிரபந்தத்தில், ஆலிநாடான் எனப் பெயர்பெற்ற திருமங்கை யாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய பெரிய திருமொழியில் இந்தத் திருப்பதியாகிய திருவேங்கட ஸ்தலத்தைச் சுட்டி பாடிய நான்கு கவிகளை இங்ஙனம் குறிப்பிடுகின்றோம்.

"தெரியேன்பாலகனாய்ப் பலதீமைகள்செய்துமிட்டேன்
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்தேழையானேன்
கரிசேர்பூம்பொழில்சூழ் கனமாமலைவேங்கடவா!
அரியே! வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே."

"நோற்றேன்பல்பிறவி நுன்னைக்காண்பதோராசையினால்
எற்றேனிப்பிறப்பே இடருற்றனனெம்பெருமான்!
கோல்தேன்பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ்வேங்கடவா!
ஆற்றேன்வந்தடைந்தேன அடியேனையாட்கொண்டருளே."

"பற்றேலொன்றுமிலேன் பாவமேசெய்துபாவியானேன்
மற்றேலொன்றறியேன் மாயனே! எங்கள்மாதவனே!
கல்தேன்பாய்ந்தொழுகும் கமலச்சுனைவேங்கடவா!
அற்றேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே."

"கண்ணாயேழுலகுக்குயிராய எங்கார்வண்ணனை
விண்ணோர்தாம்பரவும் பொழில்வேங்கடவேதியனை
திண்ணார்மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன்கலியன்
பண்ணார்பாடல்பத்தும் பயில்வார்க்கில்லை பாவங்களே."

நாலாயிரப் பிரபந்தம் சேரநாடான் என்னப் பெயர் பெற்ற குலசேகராழ்வார் திருவாய்மலர்ந்தருளிய பெருமாள் திருமொழியில்,

### திருவேங்கடமுடையான் விஷயம்.

2-வது, 5-வது, 7-வது, 9-வது கவிகள்.

"ஆனாதசெல்வத்து அரம்பையர்கள்தற்சூழ
வானாளும்செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன்
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில்
மீனாய்ப்பிறக்கும் விதியுடையெனாவேனே."

"கம்பமதயானைக் கழுத்தகத்தின்மேலிருந்து
இன்பமருஞ்செல்வமும் இவ்வரசும்யான்வேண்டேன்
எம்பெருமானீசன் எழில்வேங்கடமலைமேல்
தம்பகமாய்நிற்கும் தவமுடையெனாவேனே."

"வானாளும்மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகிவீற்றிருந்து கொண்டாடும்செல்வமறியேன்
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல்
கானாறாய்ப்பாயும் கருத்துடையெனாவேனே."

"செடியாயவல்வினைகள் தீர்க்கும்திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின்வாசல்
அடியாரும்வானவரும் அரம்பையரும்கிடந்தியங்கும்
படியாய்க்கிடந்து உன்பவளவாய்காண்பேனே."

என்றும், பின்னும் பலவிதமாகப் பாடிப் பாராட்டிவந்திருக்கிறார்கள். நூற்றெட்டு வைணவ திவ்விய தேசங்களிற் சிறந்த பஞ்ச திவ்விய தேசங்களாகிய ஸ்ரீ பெரும்பூதூர், காஞ்சிபுரம், திருவரங்கம், பெரியகோயில், திருநாராயணபுரம் முதலானவைகளுடன் இந்தத் திருமலையாகும் திருப்பதியும் ஒன்றானகையால், வைணவர்கள் தம் வாழ்நாளில் ஒருநாளாகிலும் இதைத் தரிசிக்கவேண்டும்.

திருப்பதி வேங்கடேசர் மஹத்துவம் முற்றிற்று.

---

## திருப்பதி பாபநாச தீர்த்தத்துக்கருகில் செய்த பிரார்த்தனை.

"ஓ வெங்கடேசா! இன்று இந்த பாபநாசத்துக்கு அருகில் வந்து பிரார்த்தனை செய்வதற்குப் பாக்யனானேன். 'வெங்கடேசலு' என்னும் பதத்திற்குப் 'பாவம் நீக்குவோன்' என்று பொருள். இதன் பொருளைச் சரியாகத் தெரிந்துகொள்ளாதவர்கள் இந்தப் பாபநாச தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தமாத்திரத்தில் சகல பாவங்களும் போய் விடுவதாக அநேகர் எண்ணி அநேக மைல்கள் தூரங்களிலிருந்தும், அநேக மலைகளில் ஏறியிறங்கி பலவித கஷ்டங்களுக்கு உட்பட்டும் வந்து இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்கிறார்கள். அந்தோ! பிரபஞ்ச ஜலத்தின் தன்மை தேகத்திலிருக்கும் அழுக்குகளை நீக்கி ஆறுதலைக் கொடுக்குமே

யன்றி மனம் புத்தி சித்தம் அகங்காரங்களினால் எண்ணிச் செய்த பாவங்களையும் போக்குமென்றெண்ணக் கூடுமோ? கூடாதல்லவா? ஜெகதீஸ்வரனாகிய உன்னையே சுத்த ஜலமாக எண்ணி உன்பக்தி ஜலத்தில் மூழ்குபவருக்கே பாவதாபங்கள் நீங்குமென்பது திண்ணம் திண்ணம். நினது மகிமை, சுற்றுப் பக்கத்திலிருக்கும் மலைகளிலும், வனங்களிலும், விருக்ஷங்களிலும், புஷ்பங்களிலும், பிராணிகளிலும், பிரத்தியட்சமாகப் பிரகாசிக்கின்றது. அநேகர், "கோவிந்தா! கோவிந்தா! வெங்கடேசா!" என்றுதி பெயர்களால் பாடிக்கொண்டும் சங்குநாதங்களினால் கோஷித்துக்கொண்டும் இருக்கின்றனர். இங்கு உலக ஆசாபாசங்கள் அற்றுப் பாபநாசமென்னும் நினது திவ்வியமங்கள ஜலத்தில் மூழ்கிப் பரிசுத்தனானேன். இப்படிப்பட்ட ஸ்தலத்திலன்றோ முன் அநேக ரிஷிகளும், மஹான்துக்களும், திருமங்கைமன்னனாதி ஆழ்வார்களும், ஸ்ரீராமாநுஜர் தேசிகர் முதலான ஆசாரியர்களும் வந்து உன்னைத் துதித்துக் கொண்டாடினார்கள். ஆகவே அம்மஹான்களுடைய பக்தி சிரத்தையை யானும் பெற்றுய்ய அருள்புரிவாய்."

ஓம் தத்சத்.



# பாண்டிய நாடு.

"வெள்ளாறது வடக்கா மேற்குப் பெருவழியாங்
தெள்ளார் புனறகன்னி தெற்காகு—முள்ளார்வத்
தாண்ட கடல்கிழக்கா மைம்பத்தறு காதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி."

என்கிற கவியின்படி பாண்டியதேசம் சோழதேசத்திற்குத் தென்மேற்கிலே கன்னியாகுமரி வரையுமுள்ள தேசம். இதற்கு இராஜதானி மதுரை. இங்குப் பாண்டியர் அரசு செய்தமையின் இஃது இப்பெயர் பெற்றது. இதுவே தமிழ் பிறந்த நாடு. இது மிக்க புராதனமும், பெருமையும்; அநேக சரித்திரங்களும், புண்ணிய க்ஷேத்திரங்களும், நதிகளும், மலைகளும் உள்ள நாடு. தமிழ் முச்சங்க மிருந்ததும், அநேக புலவர்களைத் தந்ததும், இந்நாடே. வைணவச் சமய ஆழ்வார்களாகிய நம்மாழ்வார், பெரியாழ்வார், பேயாழ்வார், நாச்சியார் முதலான மஹாத்துமாக்கள் ஜனித்து வடமொழி தென்மொழிகளில் அநேக பக்திரச கீதங்களை இயற்றிய நாடும் இதுவேயாம். சைவமத சித்தாந்தத்தில் சிறந்த அகஸ்தியர் மாணிக்கவாசகர் முதலான ஞானிகளும், வித்வான்களும், பக்திமான்களும், மங்கையர்க்கரசியார் முதலிய மஹாத்மாக்களும் ஜனித்து சைவப்பயிரைத் தழைத்தோங்கச் செய்த நாடும் இதுவேயாம். குலோத்துங்கன் முதலான அநேக பாண்டிய பூமான்கள் பிறந்து பிரபலமாக ஆண்டுவந்த நாடும் இதுவேயாம். பாண்டியர்களுக்குப் பிறகு விஸ்வநாத நாயுடு, திருமலைநாயுடு, மங்கம்மாள் முதலான நாயுடு வம்சத்தார் ஆண்டு அதிக பிரபலமுற்ற நாடும் இதுவேயாம். 72 பாளையக்காரர்களும் இராமநாதபுர இராஜ வம்சத்தைச் சார்ந்த சேதுபதிகள் பிறந்து வளர்ந்து ஆண்ட நாடும் இதுவேயாம். இனி இந்நாட்டிலுள்ள விசேஷ சைவ வைணவ க்ஷேத்திரங்களின் மான்மியங்களையும் சரித்திரங்களையும் இதனடியிற் சங்கிரகமாகக் காட்டுகின்றனம்.

## மதுராபுரி.

பூர்வம் தக்கண கைலாய மென்று சொல்லப்படும் பொதிகை மலையில் உற்பத்தியாய்ப் பொருநை யென்று

நூல்களிற் பேசப்படும் தாமிரபருணியாறு நிலவள முண்டாகும்படி வெகுதூர மோடிச் சமுத்திரத்தில் போய் பாயுமிடத்தை யடுத்துக் கொற்கை என்றொரு நகருண்டு. அது சந்திர குலத்தைச் சேர்ந்த மாறன் எனப் பெயர்பெற்ற ராஜவமிசத்தாரால் கட்டப்பட்டு வளம்பெற் றிருந்தது. அந்த நகரைச் சூழ்ந்த நாட்டுக்கு 'மாறேகன்' என்று பேர். இராஜனுக்குக் 'கொற்கையாளி' என்று வெகுநாளாக ஒரு பேர் வழங்கி வந்தது.

அந்த வமிசத்தவரில் ஒருவன் சமணமதத்தை யனுசரித்து மணலூர் என்னுந் தலத்தில் ராஜ்ஜியமாண்டு வருகையில், அவனுக்குச் 'சுமேலாதையம்மாள்' என்றொரு பெண் மாத்திரம் பிறந்தது. அந்தப் பெண் தன் பிதாவின் அரண்மனையில் அருமை பெருமையாக வளர்ந்துகொண்டு வருகையில், உத்தரதேயத்தில் கங்காதீரத்தை யடுத்துப் பம்பாபீடக்கரையில் பஞ்சாக்கினி மத்தியில் தபஞ் செய்ததால் 'காந்தமாரிஷி' என்றும், சூரிய மந்திரத்தால் உற்பவித்ததால் 'சான்றோன்' என்றும், தேவகூட்டங்களுள் ஒன்றான காந்தர்வரைப்போல் அமிர்தபானங் கறந்து காத்துவந்ததால் 'காந்தருவரிஷி' என்றும், 'அறிவன்' என்று பொருள்பட 'விந்தைமுனி' என்றும், ஆதிபராசத்திக்குப் பிள்ளையென்று சொல்லும்படியாய்ச் சிவபிரானது நெற்றிக்கண்ணினின்றும் உற்பவித்ததாகச் சொல்லப்படுவதால் 'பாண்டியன்' என்றும் பெயர்பெற்று விளங்கிய சுராபாண்டீசுரனது புத்திரர் எழுவருள் ஒருவனாகிய குலசேகரன், மேற்படி சுமேலாதையம்மாளை மணம்புரிந்து பாண்டியன் என்னும் பட்டம் பெற்று அரசுபுரிந்துகொண் டிருக்கையில், ஒருநாள் மணலூரிலுள்ள வைசியரி லொருவனாகிய 'தனஞ்சயன்' என்பவன் சிவபெருமான்பேரில் வெகு பத்தி யுடையோனாய் அவ்வூருக்கு மேற் பக்கமாகச் சென்று வெகுதூரம் வாணிபஞ் செய்துகொண்டு திரும்பி வருகையில், சுராசுரர் அரசு செலுத்திய காலத்தி லுற்பத்தியாய்ப் பிறகு காட்டுக்குள் மறைந்திருந்த சிவலிங்க மொன்றைக் கண்டான். அந்த லிங்கத்தைச் சூழக் கடம்பவன மடர்ந்திருந்தது. இதைப் போய்த் தன் நாடாள்பவனாகிய குலசேகர பாண்டியனிடத்தில் தெரிவித்தபோது குலசேகரன் அதைக் குறித்து எண்ணமிட்டுக்கொண்டே தன் அமளியில் நித்திரை போயினன். இரவில் அரசன் கண்ட கனவால் தூண்டப்பட்டு

மறுநாளுதயத்தில் தன் மந்திரி பிரதானிகளோடு அநேக காடு வெட்டிகளை ஒரு சேரத் திரட்டிக்கொண்டு வணிகன் காட்டிய நெறியே சென்று கடம்பவனத்தை யடுத்துக் காடுகளையெல்லாம் மூலைக்கு மூலை வெட்டி வெளி வாங்கிய போது அரசன் சிவலிங்கம் விளங்குகிற இடத்தைக் கண்டு சுவாமி தரிசனை செய்துகொண்டு, பிறகு அவ்விடத்தில் மகா நிபுணரான சிற்பிகளைக்கொண்டு பல மண்டபங்களும், பிரகாரங்களும், கோபுரங்களு மமைந்த கோவிலொன்றைப் பொற்றாமரைக் குளமுட்பட சமைப்பித்து, அதைச் சூழப் பார்ப்பாரவீதி, அரசர் வீதி, வணிகர் வீதி, வேளாளர் வீதி முதலியன வமைந்த மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும், புறமதில்களும், அகழியு முண்டுபண்ணியது மல்லாமல், பட்டணத்தைச் சூழ அநேக குளம், பொய்கை, நந்தவனம், பூஞ்சோலை முதலியவற்றை அந்நகரத்திற்கு அழகாகச் செய்வித்த குலசேகர பாண்டியன், தனக்கும் அரண்மனை முதலியவைகளை ஈசானிய திசையில் அமைப்பித்த பிறகு சிவலிங்கத்தை யடுத்தொழுகிய அமுதத்தையே ஏதுவாகக் கொண்டு அந்த நகரத்திற்கு 'மதுரம்' என்னும் பொருட்பட 'மதுரபுரி' யென்று பெயரிட்டனன். இதைச் சுட்டித் திருவிளையாடற் புராணம் திருநகரங்கண்டபடலம் ௪௨-வது செய்யுள் வருமாறு:—

பொன்மய மான சடைமதிக் கலையின்
　　புத்தமு துகுத்தன ரதுபோய்ச்
சின்மய மான தம்மடி யடைந்தார்
　　சிவமய மாக்கிய செயல்போல்
தன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ்
　　செய்தது வது மதுர
நன்மய மான தன்மையான் மதுரா
　　நகரென வுரைத்தனர் நாமம்."

குலசேகர பாண்டியன் இந்தப் பிரகாரம் பேரிட்ட தன்பின், கீழ்த்திசையில் ஐயனாரும், தென்திசையில் சப்த மாதரும், மேற்றிசையில் விஷ்ணுவும், வடதிசையில் துர்க்கையும் ஆகிய இவர்களைக் காவலாக நிலைநிறுத்தினன். துர்க்கைக்குக் காளி என்றும் ஓர் பெயருண்டு. பிறகு, மதுரேசன் எனப் பெயர் பெறுஞ் சிவனைச் சாஸ்திரோக்தமாய் அருச்சனை செய்வதற்கு வேதாகமப்படி நடக்கவல்ல பெரியோர்களையும், கைலாச பரம்பரையான ஆதிசைவரையும், காசியி

விருந்து வருவித்து மதுரையில் நிலைபெறச் செய்ததுமன்றி, உத்தம குலத்தினராகிய நால்வகைக் குடிகளும் உயர்வு தாழ்வுமாகக் கலந்த புறக்குடிகளும் வந்து குடியேறும்படி ஆக்ஞாபித்து வேதநெறி பிசகாமல் மநுநீதிப்படி அரசு புரிதற்குரிய திட்டங்களமைத்து, உலகத்தின் முகத்திலே திலதமிட்டாற்போல பட்டணத்தை வளஞ்செய்து பாண்டியன் தனக்குரிய இரட்டைச்சங்கு முதலிய சகல விருதுகளோடும் மங்கலவாத்தியங்கள் முழங்க நல்ல சுபதினத்தில் குடி புகுந்து, சிவபூசைக்குக் குறைவுபடாமல் நடக்கவும், மனுநீதி வழுவாதிருக்கவும், ஆறிலொரு கடைமைகொண்டு அசையாமணி கட்டிச் சில காலம் செங்கோலோச்சியபின் தன் மகன் மலயத்துவச பாண்டியனுக்குப் பட்டங்கட்டிச் சிவபெருமானது பாதாரவிந்தமே தியானமாயிருந்து தேக வியோகமாயினன். மதுரைக்குச் சிவநகரம், கடம்பவனம், ஜீவன்முத்திபுரம், திருவாலவாய், பூலோக சிவலோகம், சமஷ்டி விச்சாபுரம், கூடல், துவாதசாந்தத்தலம் என்று பலபேர்கள் நூல்களில் வழங்கப்பட்டு வருகின்றன.

---

## திருவாலவாய் (மதுரை)

சொக்கநாதசுவாமி, சுந்தரேசுவரர், மீனாட்சியம்மை, வையைநதி, எழுகடல், புறத்தொட்டி, பொற்றாமரை முதலிய தீர்த்தங்கள், கடம்ப விருக்ஷம்.

பாண்டிய நாட்டின் இராசதானியாயிருந்து அநேக திருநாமங்கள் பெற்ற தலம்.

1. தேவேந்திரனைப் பற்றிய பழி தவிர்த்தருளியது.
2. வெள்ளை யானைக்குச் சாபந் தீர்த்தருளியது.
3 கடம்பவனத்தை (மதுரை) நகரமாக்கியருளியது.
4. உமாதேவியாரே பாண்டியற்குக் குமாரத்தியாகிய தடாதகைப் பிராட்டியாக அவதரித்தருளியது.
5. சோமசுந்தரர் பாண்டியராக வந்து பிராட்டியாரைத் திருமணம் புரிந்து நாடாண்டருளியது.
6. பதஞ்சலி வியாக்கிரபாத ரிஷிகளுக்காக வெள்ளியம்பலத்திற் றிருநடனங் காண்பித்தருளியது.
7. தடாதகைப் பிராட்டியார்பொருட்டுக் குண்டோதரனுக்கு அன்னமிட்டருளியது.

8. குண்டோதரனுக்கு அன்னக்குழியும் வையையு மழைத்தருத்தி யருளியது.
9. தடாதகைப் பிராட்டியாரின் தாயாராகிய காஞ்சனமாலை யம்மை யாட, எழுகடலையும் அழைத்தருளியது.
10. காஞ்சனமாலையின் கணவராகிய மலயத்துவச பாண்டிய ரிறந்து சுவர்க்கத் திருந்தவரை வரவழைத்தருளியது.
11. தடாதகைப் பிராட்டியாரிடத்து உருத்திர குமாரனைத் திருவவதாரஞ் செய்வித்தருளியது.
12. அவ்வுக்கிர குமார பாண்டியனுக்குப் பின் வரும் பகைகளை வெல்ல, வேலும், வளையும், செண்டுங் கொடுத்தருளியது.
13. அவ்வுக்கிர குமாரனால் இந் நகரமீது வந்த கடல் சுவற வேல் விடுக்கச் செய்தருளியது.
14. அவ்வுக்கிர குமாரனோ டெதிர்த்த தேவேந்திரன் முடி சிதைய வளையெறியும்படி செய்தருளியது.
15. வைப்பெடுக்கச் சென்ற அவ்வுக்கிர குமாரனுக்கு வணங்கிவராத மேருவைச் செண்டாலடிக்கச் செய்தருளியது.
16. வேதத்திற்குப் பொருளறியாது மயங்கும் வேதியருக்குப் பொருளருளிச்செய்தது.
17. அரசகுமாரன் மகுடத்திற்கு மாணிக்கம் விற்றருளியது.
18. வருணன் இந்நகரின்மீதேவிய கடலை வற்றச் செய்தருளியது.
19. அவ்வருணனு லேவிய மழையைத் தடுத்து, இந்நகரத்தை நான்மாடக்கூடல் ஆக்கியருளியது.
20. எல்லாம் வல்ல சித்தரா யெழுந்தருளிச் சித்து விளையாடி யருளியது.
21. அதைப் பரீக்ஷித்த அரசனுக்காகக் கல்லானைக்குக் கரும்பருத்தி யருளியது.
22. சமணர்க ளேவலினுல் இந்நகரை யழிக்க வந்த யானையை யெய்தருளியது.

23. கௌரியம்மையெனும் பார்ப்பனமாதுக்கிரங்கி விருத்தராயும், குமாரராயும், பாலராயுமிருந்து அனுக்கிரகஞ் செய்தருளியது.

24. விருத்தத்தின் வருத்த முணர்ந்த பாண்டியன் வேண்டுகோளின்படி மாறியாடியருளியது.

25. கொலைக்குற்றஞ் சுமந்த வேடனது பழிக்கஞ்சி அசரீரி மூலமாகச் சாட்சி பகர்ந்தருளியது.

26. தாயைப் புணர்ந்து, தந்தையைக் கொன்ற வேதியன் மாபாதகந் தீர்த்தருளியது.

27. வாளாசிரியன் மனைவியை வலிமை செய்த மாணுக்கனது அங்கங்களை வெட்டியருளியது.

28. சமணரால் நகரையழிக்க ஏவிய நாகத்தை யெய்தருளியது.

29. மற்றுமவர்களேவிய மாயப்பசுவையும் வதைத்தருளியது.

30. சவுந்தர சாமந்தனெனுஞ் சேனுதிபதியின் பொருட்டுப் போர்ச் சேவகராய், மெய்க்காட்டுத் தந்தருளியது.

31. பஞ்சம் வந்தகாலத்துப் பாண்டியனுக்கு உலவாக்கிழி கொடுத்து இரக்ஷித்தருளியது.

32. தாருகாவனத்து இருடிபத்தினிகள் வணிகமாதராய் வர அவர்களுக்கு வளையல் விற்றருளியது.

33. இயக்கஸ்திரீகளுக்கு அட்டமாசித்தி யுபதேசித்தருளியது.

34. சோழராசன் பொருட்டுப் கதவைத் திறந்ததிஞலழித்த மீனக்குறிக்குப் பதில் இடபக்குறி வைத்தருளியது.

35. சொக்கலிங்கப் பெருமான் பாண்டியன் சேனை வெள்ளத்தின் மத்தியில், தண்ணீர்ப்பந்தலொன் றமைத்தருளியது.

36. பொன்னனையாளென்னும் விலை மாதின்பொருட்டு இரசவாதஞ் செய்தருளியது.

37. இந்த நகரமீதுவந்த சோழராஜனை மடுவிலாழ்த்தியது.

38. அடியவனாகிய ஒரு வேளாளன் பொருட்டு உலவாத செந்நெல் கோட்டை யருளியது.

39. தாயத்தார்கள் வழக்கிற் சிக்கிய மருமகனுக்காக மாமனாக வந்து அவ்வழக்குத் தீர்த்தருளியது.

40. வரகுண தேவருக்காகச் சிவலோகத்தை இத்தலத்திற் காட்டியருளியது.

41. பாணபத்திரனாகிய இசைவல்லோன் பகையைத் துறக்கும்பொருட்டு விறகு சுமந்தருளியது.

42. அப்பாணபத்திரனுக்காகச் சேரமான் பெருமானாயனாருக்குத் திருமுகங் கொடுத்தருளியது.

43. பாணபத்திரன், மழையினின்று பாடப் பொற்பலகை கொடுத்தருளியது.

44. அப்பாணபத்திரன் மனைவியை ஈழதேசத்து விறலியுடன் இசைவாதில் வெல்லச் செய்தருளியது.

45. தாயிழந்து தவித்த பன்றிக்குட்டிகளுக்குப் பால் கொடுத்தருளியது.

46. பன்றிக்குட்டிகளை மானிடராக்கிப் பாண்டியனுக்கு மந்திரிகளாக்கியருளியது.

47. கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்தருளியது.

48. நாரைக்கு முத்தி கொடுத்தருளியது.

49. பிரளயத்தில் மறைந்த இந்நகர எல்லையை அரவ கங்கணத்தாற் காட்டித் திருவாலவாய் ஆகச் செய்தருளியது.

50. பாண்டியன் படைத்துணைவராய்ச் சென்று "சுந்தரம்" என்று பெயர் தீட்டி அம்பெய்தருளியது.

51. நற்கீரதேவர், கபிலதேவர், கல்லாடனார், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள் முதலிய பொய்யடிமையில்லாத புலவர்களுக்கு அளவுகோலாகிய சங்கப்பலகை தந்தருளியது.

அவர்களுள் நற்கீரதேவர்: கயிலைபாதி காளத்திபாதியந்தாதி, ஈங்கோய்மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி,

கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, கண்ணப்பதேவர் திருமறம் முதலிய பிரபந்தங்களையும்,

கல்லாடனார்: கண்ணப்பதேவர் திருமறமென்னும் பிரபந்தத்தையும்,

கபிலதேவர்: மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் றிருவிரட்டைமணிமாலை, திருவந்தாதியென்னும் பிரபந்தங்களையும்,

பரணதேவர்: சிவபெருமான் றிருவந்தாதியையும்,

இளம்பெருமானடிகள்: சிவபெருமான் றிருமும்மணிக்கோவையும்,

அதிராவடிகள்: மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவையும்,

திருவாய்மலர்ந்தருளி மெய்யன்போடு சிவபணிவிடை செய்து, சிவாநந்தப் பெரும்பேறு பெற்றனர்.

52. பாண்டியன் ஆசங்கை நீங்கக் கவிபாடித் தருமியென்னும் ஆதிசைவனுக்குப் பொற்கிழி யறுத்துக் கொடுத்தருளியது.

53. அக்கவிக்குக் குற்றங்கூறிய நற்கீரனைப் பொற்றாமரைக் குளத்தி லாழ்த்தியபின் கரையேற்றி யருளியது.

54. அந் நற்கீரனுக்கு அகஸ்தியர்பால் இலக்கண முபதேசித் தருளியது.

55. சங்கத்தார் கலகத்தை ஊமைப் பிள்ளையாற் றீர்த்தருளியது.

56. தமிழை யவமதித்த பாண்டியனோடு பிணங்கிய இடைக்காடன் பிணக்குத் தீர்த்தருளியது.

57. மீன் வலைச்சியாக வந்த மீனலோசனையை வலை வீசி மணந்தருளியது.

58. மாணிக்கவாசக சுவாமிகளாகிய வாதவூரடிகள், அரசனுத்தரப்படி குதிரை வாங்கக் கொண்டுபோன பொருளையெல்லாம் சிவபணிவிடைக் குதவும்படி செய்து, அவருக்கு ஞானோபதேசஞ் செய்தருளியது.

59. அப்பொருளைப் பெறும்பொருட்டு, அரசன் வாதவூரடிகளுக்குச் செய்த வன்செய்கைக் கிரங்கி வனநரிகளை வாம்பரிகளாக்கித் தந்தருளியது.

60. அப்பரிகளையே மீட்டும் நரிகளாகச் செய்தருளியது.

61. பின்னும் வாதவூரடிகளை அரசன் வருத்தியதற் கிரங்கி வைகைநதியைப் பெருகச்செய்தும், நகரத்தார் கரையடைக்கத் தொடங்க வந்தியென்னும் அடியவள் பொருட்டுக் கூலியாளராய்ச் சென்று பிட்டுண்டும் மண்சுமந்துங் கரையடைக்கா திருந்தமையால் அரசனடித்த பிரம்படியைப் பெற்று, அவ்வடியை அகில சராசரங்களையும் பெறுவித்து, தாமே யெல்லாவற்றுள்ளும் அந்தரியாமியென்றறிவித் தருளியது.

62. திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநாவுக்கரசுசுவாமிகளும் திருமறைக்காட்டி லெழுந்தருளியிருக்கும்பொழுது அமண்சமய மிகச் சிவசமயந் தாழ்ந்ததைக் குறித்துக் கூன்பாண்டியனது மனைவி மங்கையர்க்கரசியாரும், மந்திரி குலச்சிறையாரும் அறிவிப்ப, அவ்வமண் களையும்பொருட்டு இங்கு எழுந்தருளிய பிள்ளையாரை, அரசுகள் தடுப்பவுங் கேளாது வந்து இத்தலத்தோர் மடத்திலெழுந்தருளியிருப்ப, அம்மடத்தில் அமணர் தீக்கொளுவ, அத்தீயைப் "பையச்சென்று பாண்டியனுக்காக" என்று பதிகமோத, அது அரசனைச் சுடுசுரமாய்ப் பற்றிய அளவில் அதனைப் பிள்ளையார் திருநீற்றுப் பதிகமோதித் தீர்த்தருளியது.

63. அச்சமணர் பிள்ளையாரோடு வாதுபுரிந்து நெருப்பில் இட்ட ஏடு கரியாகவும், பிள்ளையாரிட்டஏடு பச்சையாய் வேவாதிருக்கவும், பின் அமணர்கள் ஆற்றில் ஏடெதிர் செலுத்தும் வாதத்தை மேற்கொள்ள அதனையும் "வாழ்க அந்தணர்" என்னும் பதிகத்தால் பிள்ளையாரே வென்றருளியும், இவ்வாறு தோற்ற அச்சமணர்களை யவர்கள் ஒப்புதலின்படி கழுவேற்றி யருளியது.

64. திருஞான சம்பந்த சுவாமிகளால் திருப்புறம்பியத்தில் வன்னியுங் கிணறு மிலிங்கமுஞ் சாட்சியாக மணஞ்

செய்யப் பெற்ற வணிகப் பெண்ணுக்கும், அவள் சக்களத்திக்கும் வந்தபூசலில் அவ்வணிகப் பெண் பொருட்டு அக்கரிகள் மூன்றையுமிங்கு வரவழைத் தருளியது.

இவை முதலியனவும் பிறவுமாகிய அநேகந் திருவிளையாடல்கள் செய்தருளிய தலம்.

துன்முகன் முதலாகிய வேடர்கள் முத்திபெற்ற தலம்.

மூர்த்திநாயனார்:—வைசியகுலத்தில் தைமாத அசுவினி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவபெருமானுக்குத் தினந்தோறுஞ் சந்தன முரைத்துக் கொடுத்தலாகிய பணிவிடைசெய்து வருங்கால், பாண்டியனைச் சயித்து அவனரசை கைக்கொண்ட கருனடதேசத்தரசன் ஆருகதமதத்தோனாய் நாயனார் பணி முட்டும்படி தீங்குசெய்ய, அவர் இரவில் தன் கையைச் சந்தனச்சாணையி லென்புதேய உரைத்தபொழுது சிவபெருமான் உத்தரப்படி யவ்வூறு நீங்கியது. அற்றை நாளிரவே அம்மன்னன் இறப்ப, நாயனார், பட்டத்து யானையால் அரசாக்ஷி பெற்றும் மணிமுடி தாங்காது; விபூதி, ருத்திராட்சம், சடாமுடி ஆகிய சிவ சின்னங்களாற் சிவநெறி வழாது அந்த நாட்டை யாண்டமையால் மும்மையா லுலகாண்ட மூர்த்தியெனப் பேர்படைத்து ஆடிமாத கிருத்திகையில் சிவபதமடைந்த தலம்.

குலச்சிறை நாயனார்:—மணமேற்குடியில் கார்த்திகை மாத மூலநாளிற் றிருவவதாரஞ் செய்தருளி யப்பாண்டிய ராசனிடத்து முதன் மந்திரியாய்ச் சிவானுபவச் செல்வராய், இத்தலத்தில் மூடிய சமண்காட்டைத் திருஞானசம்பந்த சுவாமிகளது அனுக்கிரகமாகிய வாளாற் கடிந்து சைவப் பயிரேற்றிச், சுந்திரமூர்த்தி சுவாமிகளாலும், திருஞான சம்பந்த சுவாமிகளாலுந் திருப்பதிகங்களிற் புகழ்ப் பெற்று ஐப்பசிமாதப் பரணிநாளில் முத்திபெற்ற தலம்.

மங்கையர்க்கரசியார்:—சோழராசனது புதல்வியராகத் தைமாத அநுஷநாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, நின்றசீர் நெடுமாற நாயனாருக்கு மனைவியராய்த் திருஞான சம்பந்த சுவாமிகளது திருவருள் பெற்று, அவரது பதிகத்திலும் புகழ்ப்பெற்றுச் சைவசமயத்தை வளர்த்துச் சித்திரை மாத உரோகணிநாளிற் சிவபதமடைந்த தலம்.

நின்றசீர் நெடுமாற நாயனார்:—திருநெல்வேலியில் பங்குனிமாத அசுவினி நாளில் மன்னவர் மரபிற் றிருவவதாரஞ் செய்தருளிக் கூன்பாண்டிய காரணப்பேருடன் மதுரையி லரசாட்சிசெய்து வரும்பொழுது, உடற்கோட்டம் போல மனக்கோட்டமுற்று, ஆருகத மதத்தராய், ஒழுகுகையில் சைவசிகாமணிகளாகிய மனைவியாரும் மந்திரியாரும், திருஞான சம்பந்த சுவாமிகளது திருக்கரந்தீண்டித் திருநீறுபூசி யுபதேசிக்கும்வண்ணந் துணைசெய்யப்பெற்று, அவ்விரு கோட்டமு நீங்கி, நெடுமாறரெனும் பேர்சூடி வடபுலத்து மன்னனைத் திருநெல்வேலியில் வென்று வாகைபுனைந்து, அரசாட்சி செய்துவந்து ஐப்பசிமாதப் பரணி நாளில் முத்தியடைந்த தலம்.

திருஞான சம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-கக.

---

## மதுரைத் திருவிளையாடல்கள்.

சிவபெருமான் பற்பல காலங்களிற் பற்பல ஏதுக்களாற் பற்பல வகையாக நடித்தருளிய திருவிளையாடல்கள் எண்ணிறந்தனவாகப் பற்பல நூல்களிற் காணப்படுவனவாயினும் மதுரைப்பதியில் இயற்றியருளிய அற்புதத் திருயாடல்கள் அறுபத்து நான்கு. அவற்றின் சாரசங்கிரகம் வருமாறு:—

1. வானவர்கோன் பழிதோலைத்தது:—இந்திரன் கொலுவிருக்கையில் ஆண்டுற்ற பிரகற்பதியைக் கண்டும், வந்தனை வழிபாடு செய்யாது மங்கையர் மையலில் மூழ்கி அவர்கள் செய்யும் நடனகீதங்களைக் கவனித்துக்கொண்டிருந்தமையின், பிரகற்பதி மறைய, இந்திரன் செல்வங் குறைய, பிறகு அவரை யெங்குந்தேடிக் காணாது, பிரமனை வினவி அவரனுமதியால் திரிசிரனென்னும் அசுரனைக் குருவாகக்கொண்டு "தேவர் செல்வம் பெருக ஒரு மகஞ் செய்க" என, அவன் அசுரர் செல்வ மோங்கவும் அமரர் செல்வங் குறையவும் யாகஞ்செய்தலை அவனுச்சரிக்கும் மந்திராதிகளா லறிந்து, அவன் தலைகள் மூன்றையும் வச்சிராயுதத்தாற் குறைத்து, அதனாலுற்ற பிரமஹத்தியை நில நீர் மர மாதர்கட்குப் பகிர்ந்தளித்தனன். திரிசிரனென்னுந் தன்மகனை இந்திரன் கொன்றமைக்காகப் பழிவாங்கக் கருதிய துவஷ்டா ஒரு யாகஞ்

செய்து அதிற்றோன்றிய விருத்திரனைப் போருக்கு விடுப்பத் ததீசிபால் வச்சிரம் பெற்று விருத்திரனோடு போர்புரிய, விருத்திரன் போருக்காற்றாது கடலிலொளிப்ப, கடற்பெருக் கைச் சுருக்கித் தவஞ்செய்துகொண்டிருந்த விருத்திரனைக் கொன்று அதனாற் பிரமஹத்தியடைந்து வருந்தி நிற்கை யில், பிரகற்பதி முனிவர் மனமிரங்கி அதனை நீக்கக்கருதிக் "கடம்பவனமடைந்து சிவலிங்கார்ச்சனை செய்து புனிதமா குக" என்றுணர்த்த, இந்திரன் அங்ஙனமே கடம்பவன முற்று, சிவபிரானை இந்திரவிமானத்திலிருத்தித் தேவ மலர்களாலர்ச்சித்து அப்பாவத்தினின்று நீங்கித் தன் பத வியை யடைந்து வாழ்ந்தனன்.

2. வெள்ளையானையின் சாபந் தீர்த்தது:—துருவாசமுனி வர் தாம் காசிப்பதியில் சிவார்ச்சனைசெய்து பணிகையில், சிவ பெருமான் மகிழ்ந்து திருமுடியினின்று வீழ்த்திய தாமரை மலரொன்றனை, இந்திரன் சிவபக்தனாகலின் அவனுக்குப் பிரசாதிக்கக் கருதி அமராவதியை யடைய, அச்சமயம் ஐராவதத்திலேறி நகர்வலம் வருமிந்திரனைக் கண்டு வாழ் த்தி, மலரினைக் கொடுப்ப, அவன் தனது செல்வச் செருக் கால் ஒரு கையால் வாங்கி யானையின் சிரமிசை வைக்க, அது மலரினைக் கீழே தள்ளிக் காலாற் சிதைத்ததுகண்ட முனிவர் பெரிதுஞ் சினந்து, "நின் பாக்கியங்கள் சிவபிரசாதத்தாற் கிடைத்தவை யென்பதை மறந்தனை.

"வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும்
அண்டர்தொழ வாழுன் னிருமாப்பு மாலால
முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்."

என்றிவைபோல்வன கூறி, "அடா! இந்திரா! நின்சிரம் பாண் டியனொருவனா லறுக! நின் யானை காட்டானையாக!" எனச் சபமிட, அவ்வசைமொழி கேட்ட தேவர்கள் அவர் திரு வடியில் வீழ்ந்து பலவாறு வேண்ட, முனிவர் சிறிது மனந் திரும்பி, "சொன்னது விடாது; உன்சிரத்திற்குவந்தது முடிக் காகுக! யானை நூறுவருடம் காட்டானையாயிருக்க!" என மறு சாபந் தந்தனர். ஐராவதம் உடனே காட்டானையாகிப் பூமியிலிருந்து பற்பல விடங்களிற் சஞ்சரித்து இறுதியில் கடம்பவனத்தை யடைந்து, பொற்றாமரைத் தீர்த்தத்தைக் கண்டு அதில் முழ்கியவுடன் ஞானமுற்றுச் சுந்தரேசப் பெருமான் தோற்றத்தைத் தரிசித்து, "இவ்விமானத்தை

யே தாங்கிக்கொண்டிருப்பேன்" எனக் கூறுகையில், சிவபிரான், "என் பக்தனுன இந்திரனையே நீ தாங்குக" என்றருள, அதன் மேற்றிசையில் தன் பெயரால் ஐராவதீசமென ஒரு சிவலிங்கப் பெருமானைத் தாபித்து அர்ச்சித்துச் சாப நீங்கித் தன் பதவியை யடைந்தது.

3. திருநகரங்கண்டது:—மணவூரிலிருந்த குலசேகர பாண்டியன் காலத்தில் அந்நகர வாசியாகிய வணிகனொருவன் வர்த்தகஞ்செய்து பெரும்பொருளீட்டித் தன்னகர் நோக்கிவருவோன் பொழுதுபோய் இருள் மிக்கமையின் அக்கடம்பவனத்திலேயே யிரவைக் கழிக்க, அன்று சோமவாரமாகலின் தேவர்கள் நான்கு யாமங்களிலும் அங்கு வந்து, இந்திரவிமானத்தி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளைப் பூசித்துச் சென்றனர். இதனைக் கண்ட வணிகன் இவ்வற்புதத்தை அரசனுக்குணர்த்த, அரசன் ஆங்குச் சென்று தரிசித்துச் சிவாக்கினைப்படி காடு திருத்தித் தக்க சிற்பநூற் புலவரைக்கொண்டு நகர் செய்து அதற்குச் சாந்தி செய்யவிருக்கையில், சிவபிரான் சித்தவடிவுடனெழுந்தருளித் தமது சடைமதிக்கலையின் புத்தமுதொழுக்க, அது மதுரமயமாயினமையின் மதுரையெனப் பெயரிட்டனர். இக்குலசேகர பாண்டியனே முதற்பாண்டியன்.

4. தடாதகைப் பிராட்டியார் திருவவதாரம்:—மலயத்துவஜ பாண்டியன், தொண்ணூற்றென்பது அசுவமேதயாகங்கள் புரியக்கண்ட இந்திரன், "நூறுமகங்களுஞ்செய்யின் என் பதவிக் கிடையூறெய்துமே" என வுங்கி, பாண்டியனுக்கு முன் வந்து, "அரசனே! மகப்பேறு கருதிப் புத்திரகாமேஷ்டி யாகஞ்செய்க!" எனத் தூண்டிச் செல்ல, அதற்கிணங்கிய பாண்டியன் அவ்வரும் பெரும் யாகத்தினைச் செய்ய, உலகமாதாவாகிய உமாபிராட்டியார் அவ்வக்கினியிடையே மும்முலையையுடைய மூன்றுவயதுள்ள பெண் குழந்தையாக அவதரித்து வரக்கண்டு, "மகப்பேரின்றிப் பன்னாள் தவஞ்செய்து இவ்வியாகமியற்றினேன்; அதுவும் பெண்மகவைத் தந்ததோடு மும்முலை பெற்றுப் பகைஞர் பரிகசிக்க நேர்ந்ததே" என வருந்துகையில் அசரீரி, "அரசனே! உன்மகளுக்கு மகனுக்குரிய சடங்குகளைச் செய்து தடாதகையெனப் பெயரிட்டுக் கலைஞானங்களை யுணர்த்தி முடி சூட்டுக! கணவன் வருகையில் ஒரு முலை

மறையும்; வருந்தற்க" என வுணர்த்த மகிழ்ச்சியுற்று வாழ்ந்தனன்.

5. தடாதகைப்பிராட்டியார் திருமணம்:—பிராட்டியார் பிறைச் சந்திரன்போல் வளர்ச்சியுற்றுக் கலைஞானங்களி னெல்லாந் தேர்ந்து தக்க பருவமடையுங்காலத்தில் அசுவா ரூடம், கஜாரூடம், அஸ்திரசஸ்திரப் பிரயோக முதலியவற் றிற் றேர்ச்சி பெற்றிருப்பது கண்ட மலயத்துவஜ பாண்டி யன் மனமிக மகிழ்ந்து, அரசுரிமையை மகளுக்குக் கொடு த்து முத்தி யெய்தினன். பின்னர், பிராட்டியார் பற்பல மன் னர்களையும் வென்று திறைகொண்டு நிகரின்றி யரசுசெய்து சின்னாட் பின்னர், திசைக்காவலர்மேற் படையெடுத்துச் சென்று இந்திராதி திக்குப்பாலகர்களை வென்று ஈசான திசையிற் கைலாயத்தை யணுக, நந்திகணங்க ளெதிர்ப்ப, அவர்களையும் வென்று துரத்த, நந்திதேவர் சிவபெருமானுக் குணர்த்த, பெருமான் கேட்டுப் புன்னகைசெய்து, அப்போர் க்களமடைய, "இவரே எமது கணவர்" என் றுணர்ந்து நாணுற்று நிற்ப, சிவபெருமான், "பெண்ணே! நீ யுன்னகர மடைக! யாம் வந்து நின்னைமணப்பேம்" எனக் கூற, தடா தகைப் பிராட்டியார் இறைவன் கட்டளைப்படி மதுரையை யடைந்தனர். சிவபெருமான் கட்டளையால் ஆடகேசுவரர் கூஷ்மாண்டர் பிரளயகாலர் முதலியோரும், பதினென் கணத்தர்களும், பிர்ம விஷ்ணுக்களும், இந்திராதி திக்குப் பாலகர்களும், அஷ்டவசுக்களும், மருத்துவர்களும், அண் டாண்டங்களிலுள்ள பலவேறு உருத்திரர்களும் வந்து திரு நந்திதேவர் கட்டளையிலிருப்ப, குபேரன் சிவபிரானைப் பல வகையான அலங்காரங்கள் செய்ய, இறைவன் கும்போ தரன் முதுகிற் கால்வைத்து மால்விடை யிவர, குண்டோ தரன் குடைபிடிக்க, பிரமனும் விண்டுவும் இருபுறங்க ளிலும் வர, திக்குப் பாலகர்களில் இந்திரன் காளா ஞ்சி யேந்த, ஈசானன் அடைப்பை தாங்க, வாயு ஆலவட் டம் பணிமாற, அக்கினி தூபமேந்த, வருணன் மலர்களைத் தாங்க, நிருதி கண்ணாடி காட்ட, குபேரன் நவநிதிகளைச் சொரிய, தண்டி கஞ்சுகத் தொழில் புரிய, சேடர்கள் மாணிக்க தீபமேந்த, கங்கை முதலிய நதிக்கன்னியர்கள் சாமரையிரட்ட, இத்தகைய எண்ணில் சிறப்புடன் தேவ வாத்தியங்களொலிக்க சிவபிரான் மதுராபுரியை யடைந்து அங்கு அலங்கரிக்கப்பட்டிருக்கும் திருவீதி வழியே அரண்

மனையை யடைந்து, மேனை என்பாள் (தடாதகையின் தாய்) பாலினால் திருவடியை விளக்க, மணமண்டபமடைந்து தடாதகைப் பிராட்டியாரைத் திருமணம் புரிந்து சோம சுந்தர பாண்டியரென்னும் திருநாமங்கொண்டு அரசுரிமை யைத் தாங்கினர்.

6. வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியது:--சோமசுந்தரக் கடவுள் தடாதகைப்பிராட்டியாரைத்திருமணமுடித்தவுடன் அவரோ டுடன்வந்திருந்த தேவர் முனிவர் முதலினோர் பலரு முண்ணல் வேண்டுமென விரும்பியபொழுது பலர் தத்தமக்குரிய நித்திய நைமித்திக பூசை முதலியன முடித்து வந்தனர். அக்கால் வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவரும் கடவுளைப் பணிந்து, "சுவாமி! அடியேங்கள் பொன்னம்பலத்தில் தேவரீர் செய்யும் திருநடனத்தைத் தரிசித்த பின்னரே யுண்ணுமியல் புடையேம்" என, சோமசுந்தரப் பெருமான், "அந்நடனத்தை யாமிங்கேயே புரிகின்றோம்" என்று அம்முனிவர்களோடும் பிற அன்பர்களோடும் திருக்கோயிலுட்சென்றனர். அப்பொழுது இந்திர விமானத்தின் கிழக்கே வெள்ளியம்பலமொன்றுண்டாகி, மாணிக்க பீடமொன்று விளங்க, அதன்மேலே பேரொளிப் பிழம்பின் வடிவாக நின்று, கணங்கள் தண்ணுமை முதலியனவும், நந்தி முழவும், திருமால் இடக்கையும், தேவதுந்துபி முதலியவும் ஒலிசெய்ய முயலகன்மீது நின்று நடித்தருளினர். புலிமுனி பணிமுனி யன்றி ஆங்குற்றவர் பலரும் நடன தரிசனங் கண்டு பேரானந்த முற்றுத் தடாதகைப் பிராட்டியார் திருவரண்மனையி லுண்டு சுகித்திருந்தனர்.

7. குண்டோதரனுக்கு அன்னமிட்டது:— திருமணத்திற்கு வந்தோர் பலர் புசித்த பின்னும் அன்னமுங் கறியும் செலவாகாமையின் பரிசாரகர் விண்ணப்பிக்க, பிராட்டியார் இறைவர்க்கு முன்னணுகிப் பணிந்தொதுங்கி நின்று, "அடிகள் முப்பத்து முக்கோடி கணங்களுடன் இங்கெழுந்தருள்வது கருதிச் சித்தப்படுத்திய இமாசலவளவான அன்னமும், சிறு மலைகளினளவான பதார்த்தவகைகளும், செலவாகாதிருக்கின்றன" என விண்ணப்பிக்க, சோமசுந்தர பாண்டியர், "பெண்ணே! பசியாற் களையெய்தினாரை நமது கணத்திற் காணேம்; உன் செல்வப் பெருக்கை யெனக் குணர்த்தினை; யான் யாது செய்வல்?" எனக் கூறி, அருகிரு

ந்த குடைதூக்குங் குண்டோதரனென்னுங் குறுந்தாட் பூதத் தகட்டிடை வடவையைச் செல்லுமாறு கருத, உடனே அஃதவன் வயிற்றிற் புக்கு எரிபசியாய் வருத்த, அவன் உடல் சோர்ந்து வேர்த்துப் "பசியால் வருந்தினேன்" என, இறைவன் "இக்குறியனுக்குப் பிடிசோறிடுக; பின்னர்ச் சொல்லுவோம்" என, பிராட்டியார் கைகூப்பிச் செல்ல, குண்டோதரன் பசியால் நடை தளர்ந்து கண்புதைந்து வாயுலர்ந்து சென்றனன். மடைப்பள்ளி ஆட்கள் அவனை அன்னத்தருகே கொடுசென்றவுடனே அவன் அன்னமலையை யெடுத்ததுவும் புசித்ததும் கண்டாரிலர். அன்னமும் அங்கில்லாதது கண்ட மாதர்கள் அதிசயித்தார்கள். சிலர் கைநெறித்தார்கள். தீட்டிவைத்துள்ள அரிசி, பொறி, கறி, புளிங்கறி, பலவகைக் கறிகள், பால், தயிர், நெய், தேன், பழங்கள், பலகாரங்கள், சர்க்கரை, நவதானியம், பச்சையாகவுள்ள காய் கறிகள் முதலிய பலவற்றினையும் எடுத்துப் புசித்தனன். பிராட்டியார் விரைந்து கணவரை அடைந்து ஆண்டுள்ள பலவகையுணவுகளும் கறிவகைகளும் சமைக்காதனவும் அவனால் உண்ணப்பட்டன. அவன் இன்னும் பசி அடங்கிலன். வேறு பூதர்களை விடுத்தால் உலகினையும் வயிற்றி லடக்கிவிடுவார்கள்" எனக் கூறிக் கொண்டிருக்கையில், குண்டோதரன் வந்து பணிந்து "சுவாமி மலையின் அளவாயிருந்த ஒவ்வொரு பண்டத்தையும் தின்று இட்டுண்ணுர் வயிறுபோ லெறிகின்றது" என்று கூறிக் கூவி அலறி மூர்ச்சித்து விழுந்து எழுந்து துடித்து வருந்தினான்.

8. அன்னக்குழியும் வைகையு மழைத்தது:—சோமசுந்தரக் கடவுள் தடாதகைப் பிராட்டியாரைப் பார்த்துப் புன்னகைசெய்து, குண்டோதரன் பசியைத் தவிர்க்க அன்னபூரணியைத் திருவுள்ளஞ்செய்ய, தயிர்ச்சாதமிக்க நான்கு குழிகள் பொங்கிக்கொண் டெழும்ப "உன் பசியடங்க வுண்ணுக!" எனப் பணிப்ப, கடல் கடைந்த மத்தைப்போலக் கைகளைப் புதைத்தெடுத் தெடுத்துப் பசி தணியப் புசித்து உடம்பெலாம் வயிறாய் வீங்கி, நிலம் பிளவுபட மலைபோல் விழுந்து, நீர் வேட்கையுண்டாக, ஓடை-குளம்-குட்டை-கிணறு முதலியவற்றின் நீர் முழுவதும் பசையறக் குடித்தும் தாகந் தணியானாய்ச் சோமசுந்தரப் பெருமானை யடைந்து வருந்த, இறைவர் சடைமிசையுள்ள கங்கையைப்

பார்த்து "நீ யொரு நதிவடிவாகுக!" என, கங்கை வைகை நதியாகப் பிரவகிக்க, "உன் நீர் நசையை தணித்துக் கொள்க!" என, குண்டோதரன் இருகைகளையுங் கரையேற விட்டு மலைபோல வரும் வெள்ளத்தை அங்காந்த வாயாற் பருகித் தாகந் தணிந்து ஆகங் குளிர்ந்து ஆநந்தக் கூத்தாடினன்.

9. ஏழுகட லழைத்தது:— சிவபிரான் பாண்டியராக விளங்குகையில், கோதம முனிவர் காஞ்சனமாலை (தடாதகைப் பிராட்டியார் தாய்) மனையிற் சென்று அவளால் உபசரிக்கப்பெற்று, மானதம்-வாசிகம்-காயிகமென்னுமிவற்றைக் கூறி, இறுதியில் "கடலாடுதல் விசேட பலன் தரும்" எனக் கூறிச் செல்ல, காஞ்சனமாலை அங்ஙனமே செய்ய விரும்பிக் குமாரிக் குணர்த்திச் "சென்றுவர விடைகேட் டளித்தி" என, பிராட்டியார் இறைவர்பால் விண்ணப்பிக்க, இறைவர், "ஒருகடலோ, ஏழுகடல்களையும் இவ்விடமே வரச் செய்வோம்" என்று கருதிய வளவில் ஒரு தடாகத்தில் ஏழுகடல்களும் ஏழு கிணறுகளாக வுற்றன.

10. மலயத்துவச பாண்டியனை யழைத்தது:—சோமசுந்தரப் பெருமான் பிராட்டியாரோடும் ஏழுகடலை யடுத்து அதில் மூழ்கும்படி காஞ்சன மாலையை வருவித்தபொழுது தீர்த்த ஸ்நான முறையைப் புராணிகராற் கேட்டுக் கணவனையாவது, மகனையாவது, கன்றின் வாலையாவது பற்றிக் கொண்டு மூழ்கவேண்டுமெனத் தெரிந்து "கணவனுமில்லை, மகனுமில்லையே; கன்றின் வாலைப்பற்றி மூழ்கவோ!" என்று வருந்தியவழி, பெருமான் சிந்திக்க இந்திரபீடத்தில் அவனையொப்ப விருந்த மலயத்துவச பாண்டியன் விமானமூர்ந்து ஆண்டுவந்திழியக் காஞ்சனமாலை சர்வ சுமங்கலங்களோடும் அவன் கையைப்பற்றி ஏழுகடலில் மூழ்கினள். இருவரும் பெருங்களிகூர்ந்து சிவசத்திகளின் சாரூபமுற்றுத் திருகைலாயத்தினின்று போந்த தெய்வவிமானமூர்ந்து சிவலோக முற்றனர்.

11. உக்கிர பாண்டியன் திருவவதாரம்:—காஞ்சனமாலை மலயத்துவசனுடனே சிவலோகஞ் சேர்ந்த பிறகு தடாதகைப் பிராட்டியார் சோமசுந்தர பாண்டியரைப் பணிந்து, "சுவாமி! பாண்டியர் மரபு இதனோடு முடிந்தது என்று சொல்லாமல் இம்மரபினை யென்றும் நிலைபெறுவிக்க வேண்டும்" என வேண்ட, பெருமான் திருவருளால், இங்

திர ஜாலவிச்சைபோற் கருப்பக் குறிகள் மாத்திரங் காட்டி நின்ற தடாதகைப் பிராட்டியாரிடம், கருப்ப சம்பந்தமின்றி உக்கிர பாண்டியராகக் குமாரக்கடவுளே யவதரித்துப் பருவங்கள் கடந்து பிரகஸ்பதியிடம் பல வித்தைகளும் பயில்வாராய்க் குருமுகத் தறியவேண்டுமென்னும் மானுடவிதியால், ஒவ்வொரு முறை கேட்டு எல்லாக் கலைகளிலும் வல்லமையுற்றுக் கீர்த்திபராராக விளங்கினர்.

**12.** உக்கிர குமாரனுக்கு வேல் வளை செண்டு கொடுத்தது:—உக்கிர குமார பாண்டியனுக்கு வடபுலத்திருந்த மணவூரிலரசுசெய்த சூரிய மரபினனான சோமசேகரனென்னும் அரசனது புத்திரி காந்திமதியை மணம்புரிவித்து, பின்னர் அவனைச் சிவபிரான் நோக்கி, "மைந்தனே! கேள்! இந்திரனும் கடலும் உனக்குப் பகைகளாம்; மேருவானது தருக்குற்று நிற்கும்; இந்திரன் முடியைச் சிதைக்கும்பொருட்டு இவ்வளையை வைத்துக்கொள்! கடலுக்கு இவ்வேற் படையை விடு; மேருவை, இச்செண்டாலடி!" என்று மூன்று படைக்கலங்களையும் கொடுத் தாசீர்வதித்தருளி, "யானிவ்வுலகினை நெடுங்காலம் அரசுபுரிந்தேன்; இனி இதனை நீயே கைக்கொண்டு மனுமுறை செங்கோல் செலுத்தி வாழ்க!" என்றாசீர்வதித்துச் சிவபிரானும் உமாதேவியும் நிஜவடிவேற்று உடனிருந்த கணங்கள் பழய வடிவேற்க ஆலயத்தினுட் சேர்ந்தனர்.

**13.** கடல்சுவர வேல்விட்டது:—உக்கிர பாண்டியன் அரசுபுரிந்து வருநாளிலே அசுவமேதயாகந் தொண்ணூற்றாறு செய்து முடித்தபோது இந்திரன் பொறாமையுற்று வருணனை ஏவிக் கடல் பொங்கிப் பாண்டிநாட்டை அழிக்கும்படிசெய்ய, ஓரிரவினுள்ளே கடல் சினங்கொண்டெழுந்து நாட்டை மூடி நகரவாயிலை யடுத்தது. அதனைச் சிவபிரானு லுணர்ந்த உக்கிர குமாரர் தாம் முன்னே சிவன் பாற்பெற்ற வேலினை யெறிந்து கடலைச் சுவரும்படி செய்தனர்.

**14.** இந்திரன் முடிமேல் வளை யெறிந்தது:—பாண்டிய நாட்டிலும் அயல் நாடுகளிலும் மழைபெயல் இல்லாது போகச் சேர சோழ பாண்டியர் மூவரும் தேவலோகஞ் சென்று இந்திரனை வணங்க, அவன் மற்றிருவருக்கும் மழை வரமீந்து பாண்டியனை மதியா திகழ்ந்தனுப்பிவிட்டான். பாண்டியன் மேகங்களைப் பிடித்துக் கட்டிச் சிறையிலிட,

இந்திரன் பாண்டியனோடு போருக்கெழுந்து பொருத போது பாண்டியன் வளையைவிட்டு இந்திரன் முடியைத் தகர்த்துவிட்டான். அவ்வளவில் இந்திரனடங்கிச் சமாதானங் கேட்கப் பாண்டியன் மறுத்தான். வேளாளர் தாம் பிணையாகி மேகங்களைச் சிறை விடுத்தார்கள்.

**15.** மேருவைச் செண்டாலடித்தது:—உக்கிர குமார பாண்டியன் காந்திமதி யிடத்திலே வீரபாண்டியனென்னுங் குமாரனை யீன்றபின்னர்த் தமது நாடு மழையின்றி வருந்துதலைக் கண்டு சகிக்கொணாத் துன்பக் கடலிலாழ்ந்து கிடக்க, சோமசுந்தரக் கடவுள் கனவிலே தோன்றி, "நீ மேரு மலையை யடைந்து அம்மேருவரசனைச் செண்டாலடித்து அவனை வணங்கச்செய்து அம்மலையிலுள்ள பொன்னறையைத் திறந்து வேண்டுமளவு பொன்னை வாரிக்கொணர்ந்து வழங்கி, மழைபெய்து நாடு மலியுங்காறும் நினது நாட்டைக் காக்கக் கடவை!" என்று அநுக்கிரகித்தனர். அவ்வாறே அவன் தன் சேனைகளோடு புறப்பட்டுப் பாரதவருஷம், கிம்புருஷ வருஷம், ஹரி வருஷம் என்னும் மூன்றனையுந் தாண்டி இளாவிருத வருஷத்தின் மத்தியிலுள்ள மேருவை யடைந்து, மேருவரசனுக்குப் பல முகமன் கூறி யழைக்க, அவன் வரத்தாழ்த்தமைபற்றித் தனது செண்டைப் பிரயோகித்து நிற்ப, அவன் வெளிப்பட்டு எதிர் முகமன்கூறி, "வேண்டியமட்டும் பொன்னைப் பொதிசெய்து போக" என்ன அவ்வாறு செய்து மீண்டு தன் நாட்டைக் காத்தது.

**16.** வேதத்திற்குப் பொருளருளிச்செய்தது:—ஒரு காலத்தில் பல முனிவர்கள் வேதத்தின் பொருள் இன்னதென்று துணிவுகொள்ள முடியாது ஒருவரோடொருவர் தருக்குற்று நின்றபொழுது சிவபெருமான் வேதியச் சிறுவராக வுருவேற்று வந்து வேதத்தின் பொருளை யருளிச்செய்து அவர்களைத் தேற்றியது.

**17.** மாணிக்கம் விற்றது:—வீரபாண்டியன் வேங்கை வாய்ப்பட்டிறக்க, அவன் மகன் அபிஷேக பாண்டியனுக்கு முடிவைத்து மந்திரிகள் முடியைத் தேடிப்பார்த்தபோது அதனை வீரபாண்டியன் காமக்கிழத்தி மக்கள் களவிற் கவர்ந்து போயினரென் றுணர்ந்து கவலை கூர, சிவபிரான் வணிகனாகி மாணிக்கப் பொதியோடு சென்று அவர்க்கு வேண்டியளவு மாணிக்கம் விற்றது.

**18.** வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது:—வருணன் தன் வயிற்று நோயைச் சிவபிரானாலே தீர்ப்பிக்கும் பொருட்டுக் கடலைப் பொங்கியெழுந்து மதுரையைச் சூழும்படி செய்தபோது அவன் கருத்துணராத அபிஷேக பாண்டியன் ஓலமிட்டழ அதற்கிணங்கிச் சிவபிரான் அக்கடலை வற்றுவித்து, அது வாயிலாக வருணனுக்கு அனுக்கிரகஞ் செய்தனர்.

**19.** நான்மாடக்கூடலானது :—மீண்டும் வருணன் மேகங்களை ஏவி மதுரை நகரம் மூழ்கும்படி யுகாந்த காலத்து மழைபோல வருஷிக்குமாறு செய்ய, பாண்டியன் சிவபிரானைத் துதித்துத் தனது நகரத்தையும் ஜனங்களையுங் காத்தருளுமாறு வேண்ட, கிருபாமூர்த்தி மேகங்களை நான்கு பக்கமும் நான்கு மாடமாகி நின்று காக்கவென்றேவியருள, மேகங்கள் அங்ஙனஞ் செய்ய, மேலே நின்ற மேகங்கள் மழையை வருஷித்து நீர்வற்றி வறப்பெய்தின.

**20.** எல்லாம் வல்ல சித்தரானது:—சிவபெருமான் எல்லாம் வல்ல ஒரு சித்தவேடங்கொண்டு மதுராபுரியையடைந்து, ஆணைப் பெண்ணுருவாக்கியும், தமது மாத்திரைக் கோலினாலே தடவி விருத்தரைக் காளையராக்கியும், கூன் முதுகினையுடைய விருத்த ஸ்திரீகளை இளமங்கையராக்கிக் கருத்தரிக்கச் செய்தும், மிக்க தூரத்தேயுள்ள மலைகளை மிக்க சமீபத்துள்ளன வாக்கியும், சமீபத்துள்ள மாடமாளிகைகளைச் சேய்மைக்கண்ணவாக்கியும், வறிஞரைச் செல்வராக்கியும், இன்னோரன்ன செயற்கருஞ் செயல்களைச் செய்வாராகியும் வீதிகளிலே சஞ்சரித்தலைக் கேள்வியுற்ற அபிஷேகபாண்டியன் அச்சித்தரை அழைத்துவரும்படி அமைச்சரை ஏவியும் வராது இறுமாந்திருந்தது.

**21.** கல்லானைக்குக் கரும்பருத்தியது:—பின்னர் அப்பாண்டியன் சித்தரது ஆற்றலை அளந்தறியும்பொருட்டு அவர் முன்னே சென்றுநின்று அவர் வரலாற்றை வினவி நிற்கும்பொழுது, அவ்வழியே சென்ற ஒருழவன் கையிலிருந்த கரும்பொன்றை வாங்கி, "நீர் எல்லாம் வல்ல சித்தர் என்பது உண்மையேயாயின் இதனை இம்மண்டபத்திலேயுள்ள கல்லானைக்கு அருத்தி நும தாற்றலை விளக்குக!" என, சித்தர், அவ்வியானையைக் கடைக்கணித்தருள, அஃது உயிர்பெற்றுக் கண்விழித்து மதம் பொழிந்து துதிக்

கையை நீட்டிப் பாண்டியன் கையிலிருந்த கருப்பங்கோலைப் பறித்துக் கறித்துக் குதட்டிற்று.

22. யானை யெய்தது:—அபிஷேக பாண்டியன் சிவபத மடைந்தபின் அவன் மகன் விக்கிரபாண்டியன் அரசுபுரிந்து வருநாளிலே சமணசமயப் பிரவேசஞ் செய்திருந்த சோழ ராசன்: அஞ்சனம், கிரவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், காஞ்சி, அத்திகிரி, ஏமகூடம் விந்தம் என்னும் எட்டு மலை களிலுமுள்ள சமண குரவர் எண்ணாயிரவரையுமழைத்து, அபிசாரவேள்வி யொன்றை இயற்றுவித்து, ஒரு யானையை எழுப்பி, பாண்டியனைக் கொல்லுமாறு ஏவ, அதனை யறிந்த பாண்டியன் சோமசுந்தரப் பெருமானை வேண்ட அவர் ஒரு வேடுவ வடிவங்கொண்டு பாண்டியனைக் காத்தருளியது.

23. விருத்த குமார பாலரானது:—பின்னரும் அப் பாண்டியன் காலத்திலே விருபாக்ஷன் என்னும் வேதிய னொருவன் புரிந்த பெருந்தவப்பயனால் அருந்ததியை நிகர்த்த அவன் மனைவியாகிய சுபவிரதையின் வயிற்றிலே யுதித்த கௌரி என்பாள் ஐந்து வயதிலே கௌரி மந்திரத் தைத் தந்தையினால் உபதேசிக்கப்பெற்று ஞான வொழுக் கத்திலே சிறந்துவருங் காலத்திலே பிச்சைபுக் குண்பானா கிய ஒரு வைஷ்ணவப் பிரமசாரி அங்கே வரத் தந்தை அக் கன்னிகையை அவனுக்கு மணஞ்செய்து கொடுத்தனன். அந்த மணமகன் மனைவியை யழைத்துக்கொண்டு மனை புகுத வைணவமிக்க தாய் தந்தையர் அம்மங்கையின் சிவ சின்ன முதலியன கண்டு பொறாது வேறொதுக்கி வை த்து வசிக்கையில், ஒருநாள் தம்முறவினர் மணங்காண வீட் டைப் பூட்டிக்கொண்டு தனியே வைத்துப்போனார்கள். அப்பொழுது கௌரி சிவனடியரைக் காணப்பெறாது வருந் திச் சிவத்தியானபரையாயிருக்க, சிவன் விருத்தவேதிய ராய்ச் சரிந்த வுடையுடன் தண்டூன்றிக்கொண்டு பன்னாட் பசிப்பிணியால் வருந்தினான்போல உடல்வாடி அவ்வீட்டில் நுழைந்து "அதிக பசியுடன் உன்பால் வந்தேன்" என, "எம்மவர் வீட்டைப் பூட்டிச் சென்றனர்" என, "நீ தொடுமுன் பூட்டு விட்டுவிடும்" என, கௌரியும் அவ்வாறே அறையினைத் திறந்து விரைவில் அடிசிலமைத்து முடித்து, அவர் பாதங்களை விளக்கிப் பூசித்து பரிகலந்திருத்தி, முனை முரியாத அரிசியாற் சமைத்த அன்னம் வெள்ளி மலைபோலவும், அதன்மேலிட்ட பருப்பு பொற்கலசமாக

வும், அதிற் பெய்தொழுகும் நெய் அருவியாறுபோலவும், பொரிக்கறி பலகாரவகை முதலியன சூழ்ந்த சிறு குன்றுகள் போலவும் படைத்து, இன்சொல் கூறி, உண்பித்தனள். அன்னம் புசித்தவர், யாக்கையின் தளர்ச்சி நீங்கிக் காளைப்பருவத்தினராய் விளங்க, கௌரி பெரிதும் பயந்து கைந்நெரித்து ஒரு புடை யொதுங்கி நிற்குஞ் சமயத்தில், மணவினைக்காக அயலூருக்குப்போன வைணவர்கள் திரும்பி மனையிற் புகுத பதினாறுவயதுடன் விளங்கிய அவர் பசுங் குழவி வடிவாயினர். அக்குழந்தையைக் கண்ட மாமியானவள், "இக்குழந்தை ஏது?" என, "தேவதத்தன் மனைவி யீண்டிருத்திச் சென்றனள்" என, "உருத்திரனுக் கடிமைப்பட்ட அவள் குழந்தையை யாதரித்த நீ யெங்கட்காகாய்; வெளியே போ" என, தாயிலாப்பிள்ளையை நோக்கி வருந்துங் கௌரி இளம்பருவ முதற் பழகிய கௌரி திருமந்திரத்தைச் சபிக்க சிவபெருமான் குழந்தை வடிவு நீங்கி இடபாரூடராய்க் கௌரியைப் பார்ப்பதி வடிவாக்கி இடபவாகனத்திலேற்றிப் பலருங் காண ஆகாய வழியிற்கொண்டு சென்றனர்.

24. மாறியாடியது:—இராஜசேகரபாண்டியன் அரசனாயிருக்கையில், சந்நிதானத்தை யடைந்து வெள்ளியம்பலத் திருநடனத்தை மிகுதியும் அன்புபாராட்டி தரிசித்து வருவன். இவன் பரதநாட்டியத்தில் தேர்ச்சியுடையனாகலின் சிவபிரான் செய்யும் நடனம் அதிகமாக அவர் தாள்கட்கு வருத்தஞ் செய்யுமெனக் கருதி, "மற்றொருகால் மாறியாடப்படாதா!" என்று பிரார்த்திக்க, இறைவர் அவன் வேண்டுகோளுக் கிரங்கி அச்சமயம் கால்மாறி நடித்தருளியது.

25. பழியஞ்சியது:—குலோத்துங்கபாண்டியன் காலத்திலே திருப்புத்தூரிலுள்ள ஒரு வேதியன் தன் மனைவியையும் மகவையுங் கொண்டு மாமன் வீடடைய மதுரை நோக்கி வருகையில், அவள் நீர் வேட்கை மிக்கமையின் குழந்தையோடு ஆலமர நிழலி லமர்த்தி, நீர் தேடிக் கொண்டு வருமுன் அவ்வால மரத்திற் சிக்குண்டிருந்த பழையதோ ரம்பு வீழ்ந்து பார்ப்பனி வயிறு கிழிபட் டிறந்தனள். அவ்வேதியன் கண்டு வருந்தி, அச்சமயம் அம்பு பூட்டிய வில்லுடன் அம்மர நிழலில் ஒருவேட னிருக்க, "அடா வேடா! யாது செய்தாய்? உன்னை விடேன்"

என்று, மனைவியைத் தோளிலும், முலைக்குழ மகவை மார்பிலு மணைத்தும், வேடுவனை வலித்துக்கொண்டும், மன்னன் மாளிகை யடைந்து முறையிட, பாண்டியன் புறம் போந்து அந்தணனை வினவி வேடுவனைக் கேட்ப, அவன் மறுக்க, இதனைத் தேரமுடியாது வருந்துகையில் சிவபிரான் விடயத்தை யுணர்த்தியருளியது.

**26.** மாபாதகந்தீர்த்தது:—குலோத்துங்க பாண்டியன் காலத்தில் அவந்தி நகரத்துப் பார்ப்பனி யொருத்திக்கு ஒரு பாவி மகனாகத் தோன்றி வில்லாற் பல பிராணிகளைக் கொன்று புசித்து மதுமாந்தி காம மிக்குத் திரிந்து தாயெனக் கருதாது தன்னை யீன்றாளை மோகித்து அவளைப் புணர்ந்து, தந்தையைக் கொன்று அவனைச் சுட்டெரித்து பொருள் முதலியவற்றையுந் தாயையுங்கொண்டு அயலூர் சென்று வாழப்போகையில், வழியில் வேடுவர் மறித்துப் பொருளையும் அம்மாதையுங் கவர்ந்து செல்ல மனம் வருந்திப் பிரமஹத்தியாற் பிடிக்கப்பட்டுப் பலவாறு துன்பப்பட்டுக்கொண்டு திருவாலவாயினை யடைகையில், சிவபிரான் கருணை கூர்ந்து வேட வடிவாய்த் தோன்றி உணர்த்திய படியே காலையில் பசுக்கட்குப் புல்லருத்தியும், சந்நிதானத்தின் புறத்தொட்டியில் மூழ்கியும், பிரதக்ஷிணஞ் செய்தும், அப்பாவத்தினின்றும் நீங்கியது.

**27.** அங்கம் வெட்டியது:—குலோத்துங்க பாண்டியன் காலத்தில், மறுபுலத்து முதியோனொருவன் மதுரையில் வாட்போர் பயிற்றி அதனால் வரும் ஊதியங் கொண்டு பிழைத்துச் சிவபக்தி முதிர்ந்து வசிக்கையில், சித்தனென்பானொருவன் அவன்பால் வாட்போர் பயின்று சிறந்து தனியே தான் பயிற்றுவதாகி அவன் வருவாயைப் பற்றிக்கொண்டு குரவனில்லாச் சமயத்தில் அவன் மனைவியை யடைந்து "இடனுண்டா" எனக் கேட்டு வந்து, ஒருநாள் வலியக் கையைப் பற்ற, அவள் திமிறிக்கொண்டு அறையைத் தாளிட்டுக்கொண்டு சுந்தரேசப் பெருமானைத் துதித்து வருந்தினள். மறுநாள் வாட்குரவன் சிவதரிசனத்திற்குச் சென்றிருக்கையில் சிவபிரான் குரவன் வடிவோடு சித்தனையணுகி, "யான் முதியனனேன்; என்னோடு வாட்போர்செய்" என்று கூறி, அதன்படி வாட்போர் புரிந்து ஆகாயவாணியால், "குரவன் பன்னியை விழைந்த கை கால் கண் முதலிய உறுப்புக்க ளிவையா?" என்று கூறி வெட்டி

யொழித்தனர். பின்னர் அதனை யுணர்ந்த பலரும் சிவபிரான் திருவிளையாடலென்று களித்தார்கள்.

28. நாகமெய்தது:—குலோத்துங்க பாண்டியன் மகனான அநந்தகுண பாண்டியன் அரசு செய்கையில் தென்னாடு முழுதுஞ் சைவசமயமே பரிமளித்து விளங்கக் கண்ட சமணர்கள் மனம்பொறாது தங்கள் குரவரான எண்ணாயிரவராலும் யாகஞ் செய்து பாண்டியனைக் கொல்லும்படி யெழுப்பி யனுப்பிய அசுரன் சர்ப்ப வடிவோடடைந்து மதுரையைக் கலக்க, அச்சர்ப்பத்தை அம்புவிட்டழிக்கும்படி சிவபிரான் பாண்டியனைத் தேற்றியது.

29. மாயப்பசுவை வதைத்தது:—சமணர்கள் தாம் விடுத்த பாம்பாற் பாண்டியனிறவாமை கண்டு ஓரிடத்திற் குழுமி, பசுவை விடுப்பின் கொல்லற் கஞ்சுவரென்றுட்கொண்டு மகத்தினின்று மாயப்பசுவை யெழுப்பியனுப்ப, அதன் துயருக்காற்றாது அரச னமர, சிவபிரான் திருநந்திதேவரை விடுப்ப, அது நந்திதேவரைக் கண்டு காமமேலிட்டு வீரியமுழுவதுஞ் சிந்திப் பாறை வடிவுறச் செய்தருளியது.

30. மெய்க்காட்டிட்டது:—அனந்தகுண பாண்டியன் குமாரனான குலபூஷண பாண்டியன் அரசு செய்கையில் சேதிராயன் மதுரைமேற் படையெடுப்பதாக வுணர்ந்து தன் ஆன்ம நேயரும் சிவபக்தருமாகிய சௌந்தர சாமந்தரிடம் பெரும்பொருளளித்துப் புதிய சேனை சேர்க்கும்படி சொல்ல, அவர் அப்பொருளை யெல்லாம் திருப்பணி முதலியவற்றிற் செலவுசெய்து விட, சேனை வராமையின் பாண்டியன் வருத்த, அவர் பிரார்த்தனைக் கிரங்கிச் சிவபிரான் கணங்களைப் பல சேனையாக்கித் தாமே நாயகராக வந்து மெய்க்காட்டினர். இதற்குள் சேதிராய னிறந்தானென்றுணர்ந்து சேனையை அவரவர் நாட்டிற்கேக விடைதர, உடனே அங்கு நின்றும் மறைந்தருளியது.

31. உலவாக்கிழி யருளியது:—மழை வளங் குன்றி வருந்தியகாலத்தில் பிரஜைகளைக் காக்க வழிதேடி வருந்திய குலபூஷண பாண்டியனுக்கு (எடுக்குந்தோறுங் குறையாத) உலவாப் பொற்கிழியைச் சொப்பனத்தி லளித்துத் திருநீரிட்டு மறைந்தருள, கனவே நனவாகப் பொற்கிழியைக்கொண்டு பூமியைக் காக்கச் செய்தது.

32. வளையல் விற்றது:—வணிக மாதர்களாகத் தோன்றிய அவர்கள் கையைப்பற்றிச் சரசமாக வளையலிட்டது.

33. அஷ்டமாசித்தி யுபதேசித்தது:—இயக்கமாதர்கள் அறுவர் ஒருகாலத்தில் சிவபிரானை யடைந்து "அஷ்டமாசித்திகளை யருளவேண்டும்" என, அவர் அவற்றை விளக்க, அவர்கள் மறந்து, சாபவயத்தால் பட்டமங்கை யென்னுமிடத்தில் ஆலினிழலிற் பாறையாயிருந்து ஆயிர வருடங் கழிந்த பின்னர் இறைவனு லெழுப்பப்பெற்று அவற்றை உபதேசித் தருள்புரியப் பண்டைய நிலையைப் பெற்றது.

34. விடையிலச்சினைவிட்டது:—குலபூஷண பாண்டியன் காலத்திலே காடுவெட்டிய சோழன் மதுரைப் பெருமானைத் தரிசிக்க விரும்ப, பெருமான் ஒருநாளிரவில் யாவருந் துயின்றபின்னர், மீன முத்திரையை யகற்றி வடக்கு வாயிற் கதவைத் திறந்து அவனை நகருட்கொடுசென்று தரிசனஞ் செய்வித்து, வெளியே விட்டு அக்கதவினை மூடி இடபமுத்திரை யிட்டுக்கொண்டு ஆலய மடைந்தது.

35. தண்ணீர்ப்பந்தல் வைத்தது:—இராசேந்திரபாண்டியன் காலத்தில் காடுவெட்டிய சோழன் சுந்தரேசப்பெருமானை வெளிப்படையாகத் தரிசிக்கக்கருதி, அவனோடு நட்புக்கொண்டு பல வரிசைகளனுப்ப, அவனும் நட்பாக அவனுக்குத் தன் மகளை மணஞ் செய்வதாகத் தீர்மானித்த சங்கதியைப் பாண்டியன் தம்பி முறையான அரசசிங்க னுணர்ந்து சோழன்பாற் செல்ல, சோழன் தன் மகளை அவனுக்கு மணஞ்செய்வித்து அவனோடு கூடிப் பாண்டியன்மீது படையெடுக்க, இராசேந்திரன் பயந்து நிற்க, சிவபெருமான் "போர்புரி" எனப் பணிப்ப, அப்படியே யெதிர்த்துச் சேனையோடு பெரும்போர் செய்து நடுப்பகலில் வெயிலால் வருந்துகையில், சிவபெருமானே பாண்டியன் சைன்னியங்கட்குத் தண்ணீர் கொடுத்துத் தாகந் தணித்தனர். பாண்டியன் அப்போரில் வென்றிகொண்டு சோழனுக்கும் அரசசிங்கனுக்குஞ் சிறிது சன்மானஞ்செய்தனுப்பி அரசனுயிருந்தனன்.

36. இரசவாதம்:—மதுரைக்கடுத்த திருப்பூவன மென்னும் தலத்தில் அழகிற் சிறந்த பொன்னனையாளென்னும் தாசி சிவபெருமானை பொன் விக்கிரமாகச் செய்து வைத்துப் பூசிக்க எண்ணி தன்னூதியத்தைச் சேர்க்கச் சேர்க்க அடியார் வந்து வாங்கிக்கொண்டு போய்விட, தன் கருத்தை

ஈட்டேற்ற கையிற் பொருளில்லாததைக் கருதிக் கலங்கிநிற்ப, பரமசிவன் சொப்பனத்தில் வந்து, "உன் வீட்டிலுள்ள பித்தளை, செம்பு, வெண்கல பாத்திரங்களுக்கு இரசவாதம் செய்கில் அவை பொன்னாகிவிடும்" என்க, அப்பரத்தை அப்படியே செய்து சிவபெருமானுக்குத் தங்க விக்கிரகம் செய்வித்துப் பூஜித்துச் சிவபதமடைந்தா ளென்பதாம்.

37. சோழனை மடுவில் வீட்டியது:—இராஜேந்திரபாண்டியனுக்குப் பின், இராஜேசபாண்டியன், இராஜகம்பீர பாண்டியன், பாண்டிவங்கிதீப பாண்டியன், புரந்தரஜித் பாண்டியன், பாண்டிவங்கிபபதாக பாண்டியன் ஆகிய இவர்கள் அரசராயினர். பின்னர் சுந்தரேசபாதசேகர பாண்டியன் காலத்திலே அவன்சேனை வலிகுன்றி யிருக்கக் கண்ட சோழ னெதிர்த்துவர பாண்டியன் சிவ கடாக்ஷம் பெற்றுப் போர் செய்து ஆற்றாதோட, சோழன் துரத்திவர, அவனை மடுவில் விழுத்திக் கொன்றருளியது.

38. உலவாக்கிழி யருளியது:—மதுரைப் பதியிலே வேளாண் குலத்திலே தோன்றிய அடியார்க்கு நல்லார் பல வகைச் சிவ புண்ணியங்களுஞ் செய்து, சிவனடியார்கட்கு நாடோறும் அன்ன மளித்தலே பெருங் கடமையாகக் கொண்டு அங்ஙன நடத்திவரு மேம்பட்ட தகைமையர். இவர் வறுமையுற்றமையின் கடன் கொண்டு செய்து அதுவுங் கொடுப்பாரின்றி வருந்தி, அடியவர் பூசை தடைப்படுகிறதே யாது செய்வல்?" என மனமாழ்கி, மனைவியோடு சிவ சந்நிதியடைந்து தங்கருத்தை யுணர்த்தி யிறப்பது தகுதியெனத் துணிந்து, திருக்கோயிலை யடைந்தபொழுது, பெருமான் அசரீரியாய், "உன் வீட்டில் எடுக்குந்தோறுங் குறையாத உலவாக் கோட்டையாகிய நெல்லைத் தந்தோம்" என்றருள, அங்ஙனமே கண்டு அன்றுமுதல் பண்டுபோல் நடப்பித்தது.

39. மாமனாக வந்து வழக்குரைத்தது:—மதுரைப் பதியிலிருந்த வணிகரில் தனபதி என்போன் தன் மனைவி சுசீலைக்குச் சந்ததியின்மையால் தங்கை மகனைச் சுவீகாரஞ் செய்து தனக்குரிய பூஸ்திதி முதலியவற்றைச் சொந்தமாக்கி மனைவியோடு தவநிலையை மேற்கொண்டு போயினன். தாயமாக்கள் அப்பொருளை யெல்லாம் அபகரித்துக் கொள்ள, அப்பிள்ளையின் தாய் சுந்தரேசப் பெருமான் சந்நிதியில் முறையிட, இறைவன் தனபதிவடிவாய் வந்து

வழக்குப் பேசி வென்று பொருளையெல்லாம் அச் சிறுவனுக்களித்து அந்தர்த்தானமாயது.

40. வரகுணனுக்குச் சிவலோகங் காட்டியது:—சுந்தரேச பாதசேகர பாண்டியனுக்குப் பின்வந்த இவன் சிவலோகத்தை இம்மாநுட தேகத்தோடு கண்டு பணியவேண்டுமெனக் கருத, சிவபிரான் அப்படியே பிரசாதித்தருளியது.

41. விறகுவெட்டியது:—வரகுண பாண்டியன் காலத்திற் பாணபத்திர ரென்னும் இசை வல்லோனை வெல்ல யாழ்ப்பாணம் ஏமநாதன் என்பவன் எண்ணியிருக்கச் சிவபெருமான் விறகுதலைச் சுமையோடு போய் வீட்டின் வாசலில் சுமையைச் சாத்திவிட்டு இசைபாட, ஏமநாதன் வியந்து, "நீர் யாவர்" எனக் கேட்க, "யான் பாணபத்திரர் சிஷன்" என்க, ஏமநாதன் கேட்டு, "சீடனே இவ்வளவு வல்லவனா யிருப்பின் இனி பாணபத்திரர் எவ்வளவு வல்லரா யிருப்பர்" என்று வியந்து கொண்டாடச் செய்வித்தது.

42. திருமுகம் கொடுத்தது:—பாணபத்திரர் பெரும் பொருள் வேண்டுமென்று சிவபெருமானை யாசிக்க, இறைவர்

"மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயில்
மன்னிய சிவன்யான் வரைதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க!
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"

என்னும் திருமுகப்பாசுரங் கொடுத்தருளப் பெற்றது.

43. பலகையிட்டது:—பாணபத்திரர் மதுரைச் சந்நிதியில் யாழ் வாசிக்கையில், மழை ஈரந்தாங்கி, இசை குன்றுவண்ணம் சோமசுந்தரக் கடவுளாலே பொற்பலகை அணிக்கப்பெற்றது.

44. இசைவாது வென்றது:—வரகுண பாண்டியன் புதல்வன் இராஜராஜ பாண்டியன் பலபோக மடவார்களை

யுடையனுப் அவருள் ஒருத்தி கூறியபடி பாணபத்திரர் மனைவியை இசையில் வெல்விக்கும்படி ஈழநாட்டினின்றோர் பாடினியை வருவித்து அவ் விருவரையும் இசை வாது செய்யச் சொல்லுகையில், பெருமான், இசைப்புலவராக ஆண்டுற்று அரசனோடு சோவி, "தோற்றவள் வென்றவளைப் பிடரிமேற்கொண்டு இவ்வவையை மும்முறை வலஞ்செய்தல்" என நியதி வைத்து வாது நடத்திப் பாணபத்திரர் மனைவிக்கு வென்றிசெய்து ஈழமங்கையின் கழுத்திலேற்றி மறைந்தருளியது.

**45.** பன்றிக்குட்டிகட்கு முலைகொடுத்தது:—இராஜராஜ பாண்டியன் வேட்டைமேற் சென்று பல மிருகங்களைக் கொன்றபோது சாபத்தால் பன்றிக் குட்டிகளாகக் கிடந்த சுசேலனென்னும் வேதியன் புதல்வர் பன்னிரு பன்றிக் குட்டிகளின் தாயையுந் தந்தையையுங் கொல்ல, அவை அநாதரவா யிருந்தமையின், சிவபெருமான் தாய்ப் பன்றியாய் அவற்றிற்குப் பாலூட்டியது.

**46.** பன்றிக் குட்டிகளை மந்திரிகளாக்கியது:—இறைவனருளால் மேலே கூறப்பட்ட பன்னிரு பன்றிக் குட்டிகளும் கல்வி ஞான முதலியன நிரம்பப்பெற்று விளங்க, அவர்கட்குமானுடதேகமும் பன்றிமுகமுமருளி, இராஜராஜபாண்டியனுக்குச் சொப்பனத் துணர்த்தியவழியே அவனால் மந்திரிகளாகக் கொள்ளச்செய்தது. அவர்கட்குக் காலமுடிவில் கணதிபத்திய மருளப்பட்டது.

**47.** கரிக்குருவிக் குபதேசஞ் செய்தது:—சுகுணபாண்டியன் காலத்தில் ஒருவன் சிறிது பாவஞ்செய்து கரிக்குருவியாகப் பிறந்து பல பறவைகள் வருத்தக் காட்டையடைந்து ஒரு மரமிசை யிருக்கையில் அதனிழலிற் சிலர் மதுரைப் பதியின் தீர்த்தம் தலம் மூர்த்தி விசேடங்களைப் பேசக்கேட்டு ஆண்டுற்றுப் பொற்றாமரையில் மூழ்கி, சிவபிரானால் மிருத்தியுஞ்சய மந்திரோபதேசமும் வலியானென்னும் பெயரும் பெற்று வாழ்வுற்றது.

**48.** நாரைக்கு முத்தி கொடுத்தது :—நாரையொன்று தடாகக் கரையிலிருந்து மச்சங்களைப் புசித்து வதிந்து, நீர் வறள வேற்றிடஞ்சென்று அத் தீர்த்தக்கரையில் முதியோர் மதுரைப் பதியின் மேன்மைகளை வாசிப்பக் கேட்டு மதுரையை யடைந்து, பொற்றாமரையில் மூழ்கி இறைவனைத் தரிசித்து திருவருளால் முத்திபெற்றது.

49. திருவாலவாயானது:—சுகுண பாண்டியனுக்குப் பின் இருபத்துமூன்று பாண்டியர் முறையே யாண்டபின்னர், வங்கியசேகர பாண்டியன் காலத்தில் ஒரு பிரளயமுண்டாகி மதுரைப் பதியின் எல்லை தோன்றாதாக, பாண்டியன் சுந்தரேசரைப் பணிந்து, "அடியேனுக்கு எல்லையை யுணர்த்தி யருளவேண்டும்" என, இறைவன், சித்தவடிவேற்றுப் பாம்பினால் குண்டலம் கடிசூத்திரம் கங்கணம் உபவீத முதலியன வணிந்து சென்று, தன் திருக்கரத்திருந்த கங்கணமாகிய பாம்பினைவிடுத்து "இந் நகரெல்லையைக் காட்டுக!" என, அது கீழ்த்திசையிற் றலையைவைத்து வலப்புறமாகச் சூழ்ந்து வாலைத் தலையிற்சேர்த்து எல்லையை யுணர்த்தியது. ஆலம்-விஷம்; ஆலத்தை வாயிலுடைய பாம்பினால் எல்லை செய்யப்பட்ட பூமியென்பது திருவாலவாயின் காரணம்.

50. சுந்தரப் பேரம்பெய்தது:—விக்கிரமசோழன் வங்கியசேகர பாண்டியனை யெதிர்த்துப் போர்புரிகையில் பாண்டியன் உடைவது கண்ட சிவபெருமான் சுந்தரமென்னும் பெயரெழுதிய அம்பினை விடுத்துச் சோழனைத் தோற்கச் செய்தது.

51. சங்கப்பலகை தந்தது:—சங்கப் புலவர்கள் மதுரையிற் சேர்ந்தபொழுது அவர்கட்கு வங்கியசேகர பாண்டியன் வடமேற்றிசையிற் சங்கமண்டபஞ் செய்துதர அதில் வசித்திருந்தார்கள். அவர்களை அடிக்கடி கல்விசாலாப் புலவர்கள் பலர் வீண்வாதஞ் செய்துவர அவர்கள் வேண்டுகோளால் கல்வியை யளவிட்டுக் கற்றோர்க்கு மாத்திரம் இருக்க விடந்தரும் பலகையைச் சிவபிரான் அருளியது.

52. தருமிக்குப் பொற்கிழி யருளியது:—சண்பக பாண்டியன் தன் மனைவியோடு நந்தவனத்தி லுலாவுகையில், அவள் கூந்தலினின்று தோன்றிய மணம் இயற்கையோ செயற்கையோவென மயங்கி, "இவ்வையந் தீர்ப்போர்க்கு ஆயிரம் பொன்" என்று கிழி கட்டிவைப்ப, அச் சமயத்தில் தருமியென்னும் ஆதி சைவன் பெற்றோரின்றி மணஞ்செய்யப் பொருளின்றி வருந்தினனுக்குச் சிவபெருமான்,

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்

மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே.''

என்னுங் கவியை யெழுதிக் கொடுக்க, மன்னன் கண்டு தன் கருத்திற் கிசைய மகிழ்வெய்தினன். அரசன் கட்டளையால் நக்கீரர் கண்டு, "இக்கவி குற்றம்" என, தருமி வருந்தி, இறைவர்க் குணர்த்த, அவர், புலவர் வடிவாய்ச் சென்று "பதுமினி கூந்தல்" என, 'அதுவும் செயற்கை மணம்" என, "தெய்வமங்கையர் குழலோ" என, "அதுவும்" என, "நீ வழிபடும் ஞானப்பூங்கோதை கூந்தலோ" என, "அதுவு மப்படியே" என, இறைவர் வெகுண்டு நெற்றிக் கண்ணைக்காட்ட, நக்கீரர், "உடல்முழுதுங் கண்ணுகக் காட்டினும் பாடல் குற்றமே" எனக் கூற, கோபங்கொள்ள நக்கீரர் தாளாது பொற்றுமரையில் விழுந்தனர். சிவபிரான் மறைந்தனர். தருமி பொற்கிழி பெற்றனன்.

**53.** கீரனைக் கரையேற்றியது:—நற்கீரர் தாம் செய்தது குற்றமென் றுணர்ந்து கைலைபாதி காளத்திபாதி அந்தாதி, கோபப்பிரசாதம், பெருந்தேவபாணி, எழுகூற்றிருக்கை முதலிய பிரபந்தங்கள் பாடி வேண்ட சிவபிரான் அவரைக் கரையேற்றி யருளியது.

**54.** கீரனுக் கிலக்கண முபதேசித்தது:—நக்கீரருக்கு அகத்திய முனிவரைக்கொண்டு இலக்கணத்தை வரன் முறையாக உபதேசஞ் செய்வித்தது.

**55.** சங்கத்தார் கலகந் தீர்த்தது:—சங்கப் புலவர்கள் நாற்பத் தெண்மரும் வெவ்வேறு நூல்கள் செய்து, தத்தம் நூல்களே சிறந்தன எனத் தருக்கி விரோதித்தபொழுது, சிவபெருமா னுணர்த்த வணிக வீதியி லிருந்த ஊமைப் பிள்ளையின்முன் அவற்றை வாசித்து அவர்கள் நூலில் நக்கீரர்-கபிலர்-பரணரெனு மூவர் நூல்கள் சிறந்தன வெனத் தெளிவித்தது.

**56.** இடைக்காடன் பிணக்குத்தீர்த்தது:—வமிசசேகர பாண்டியனுக்குப் பின் பதினன்கு பாண்டியர்கள் கழிய, குலேசபாண்டியன் மன்னனுயினன். அவன் இலக்கிய விலக்கணங்களிற் றேர்ச்சியுற்று இடைக்காடன் முதலினேரை மதியாமையின் அவர் நகர் கடந்து செல்ல சோமசுந்தர மூர்த்தியும் இலிங்கவுருவ மறைத்து உடன் செல்ல, அரச னுணர்ந்து அவர்களைப் பணிந்து கோபந் தவிர்த்து அழை

த்துவர இலிங்க மூர்த்தமும் வெளிப்படையாய்ப் பண்டு போல் விளங்கியது.

57. வலை வீசினது:—உமாதேவியார் நெய்தனிலப்பெண்ணாக வுதிப்ப, நந்திதேவர் சுறுமீனாகிக் கடலைக் கலக்க, நெய்தனில மன்னன் விருப்பின்படி சிவபெருமான் வலை வீசி அம்மீனைப் பிடித்து மீனாக்ஷியை மணந்து சென்றது.

58. வாதவூரர் என்பவர் மஹா மதியூகி எனக் கேட்ட அரிமர்த்தன பாண்டியன் அவரை ஆராய்ந்து தனக்கு மந்திரியாக்கிக் கொண்டது.

59. நரிபரியாக்கியது:—மாணிக்கவாசகர் இராஜனுக்குக் குதிரைகளை வாங்கிவரக் கொடுத்த பொருளை யெல்லாம் சிவதர்மத்திற் கழித்துத் திகைத்துநிற்க, சிவபிரான், வனத்தில் திரியும் நரிகளைத் திரட்டிக் கொணர்ந்து பரிகளைப்போலரசனுக்குக் காட்டி மகிழ்வித்து மாணிக்கவாசகர் மனச்சங்கடத்தை நீக்கியது.

60. பரி நரி யாக்கியது:—ஷை பரிகளை மீண்டும் நரிகளாக்கியது.

61. பிட்டுக்காக மண்சுமந்தது:—சிவபெருமான் பிட்டுக்காக மண்சுமந்து பிரம்பினால் அடியுண்டதைப்பற்றிப் பின்வரும் கவியாலறிக: "திமிர்சடைப் பெருமான், வரகன்வாய் கீண்ட மாதவன் போல, மண்ணகழ்ந் தெடுத்து வருபுனல் வையைக், கூலஞ் சுமக்கக் கொற்று ளாகி, நரைத்தலை முதியோ ளிடித்தடு கூலிகொண், டடைப்பதுபோல உடைப்பது நோக்கிக், கோமக னடிக்க வவனடி வாங்கி, யெவ்வுயி ரெவ்வுல கெத்துரைக் கெல்லா, மவ்வடி கொடுத்த வருணிறை நாயகன்."

62. பாண்டியன் சுரந் தீர்த்தருளியது:—மதுரையில் பாண்டிமா தேவியார் குலச்சிறை நாயனார் விருப்பத்தின்படி எழுந்தருளி அங்குச் சமணரின் துர்போதனையால் அம்மதம் புக்க அரசனுக்கு அடியவர் அபசார காரணமாக வந்த சுரநோயைப் போக்கி நீராலும் நெருப்பாலும் சமணர்களை வென்றது.

63. சமணரைக் கழுவேற்றியது.

64. வன்னியுங் கிணறு மிலிங்கமு மழைத்தது:—திருமருகலிற் பாம்புகடித்திறந்த செட்டிப் பிள்ளைக்கு மணஞ்

செய் தனுப்ப, அவன் மதுரை யடைந்தபின் மற்றொரு மனைவியின் பிள்ளைகளும் விவாதஞ் செய்ய, சக்களத்தி "நீ வேசி" என வைய, அவள் மனம் பொறுது பிள்ளையாரைக் கருதியழ, வன்னியுங் கிணறும் இலிங்கமும் பிள்ளையார்வைத்த சாக்ஷிகளாகலின், அவை ஆண்டுற்றுச் சந்தேகத்தினை விலக்கின வென்பதாம்.

65 அர்ச்சனைப்படலம்:—திருக்கைலாயகிரியில் சிவகங்கைக் கரையில் இப் புராணத்தினைக் கேட்ட சம்புகுத்தன், சதாதந்தன், உத்தமன் முதலிய முனிவர்கள் கைலாயத்தினின்று பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு வந்து மதுரைப்பதி யடைந்து சேவித்துச் சென்று பதவி யடைந்தது.

## பாண்டியர் பிறப்பு, பெயர் முதலானவைகளின் விவரம்.

இந் நாட்டைப் பாண்டிய நாடென்றும், இதில் நடந்த 64 திருவிளையாடல்களில் பெரும்பான்மையாகப் பாண்டியர்களுடைய சம்பந்தம் இருப்பதைப்பற்றி மேற்கண்ட 64 திருவிளையாடல் சாரசங்கிரகத்தில் தெரிவித்திருக்கிறோமல்லவா? இனி, இப் பாண்டியர் பிறப்பு, பெயர், ஆண்ட காலம், இவர்கள் காலத்திலுண்டான விசேஷ விஷயங்களைப் பற்றி இதனடியிற் காட்டுகின்றோம்.

## பாண்டியர்களுடைய பெயர் முதலியன.

பிங்கல நிகண்டு:—"செழியன் கூடற் கோமான் றென்னவன், வழுதி மீனவன் பஞ்சவன் மாறன், கௌரியன் வேம்பின் கண்ணியன் கைதவன், மலையப் பொருப்பன் வைகைத் துறைவன், குமரிச் சேர்ப்பன்கோப் பாண்டியனே" என்றால்: செழியன், கூடற்கோமான், தென்னவன், வழுதி, மீனவன், பஞ்சவன, மாறன், கௌரியன், வேம்பின் கண்ணியன், கைதவன், மலையப்பொருப்பன், வைகைத் துறைவன், குமரிச்சேர்ப்பன் என்றுதி பெயர்களுண்டெனத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

காதற்பிரபந்தத்தில்:—"ஆதியுமை மீனாக்ஷியம்மை பங்கின மேவு நாதர் கொடுக்க நடாத்துகின்ற செங்கோலான்" என்றும்,

திக்குவிஜயம் 4-வது தாழிசை: "சொக்கர் கொடுத்த செங்கோனமைத் துரைப்பாண் டியனை வரகுணனைத், தக்க விஜயத் திரம்பாடித் தமிழாற் றுதிக்க மனந்துணிந்தேன்"

என்றுதி கவிகளினுற் பாண்டிய வமிசத்தில் பார்வதி தேவியானவள் மீனுக்ஷியம்மையாக அக்கினி மூலமாய் மலையத்துவஜபாண்டியன் மகளாகவந்து அந்த மலையத்துவஜனுக்கு ஆண் சந்ததிக ளில்லாமையால், பாண்டிய இராஜ்ஜிய பரிபாலனத்தைக் கொண்டு அரசுசெய்தும், பிறகு சொக்கநாதரென்னும் சோமசுந்தர பாண்டியனை விவாகம் செய்துகொண்டும், தனது இராஜ்ய பரிபாலனத்தைத் தனது நாயகரான சொக்கநாதரிடம் கொடுத்து விட்டதாகவும், பிறகு அந்தச் சொக்கநாதருக்கும் மீனுக்ஷியம்மைக்கும் பிறந்த உக்கிரப் பெருவழுதி பாண்டியனிடம் இராஜ்ஜியபாரத்தை கொடுத்தும், பாண்டியர் சந்ததியை விருத்தி யாக்கியதாகவும், அந்தச் சந்ததியைச் சார்ந்தவரே இப்போது சிவகிரியிலிருக்கும் ஜமீன்தாரரென்றும் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது.

திக்குவிஜயம் 9-வது கவியில், "பரிமயிற் குமர னிவனெனப் பகர்வர், படைமுனைச் சமரில் வியலா, மெரியனற் பொறியி லவனுதித்தவ னெழுதிசைக் கடவுமார்பனே" என்கிற கவியினுற் சுப்பிரமணியக் கடவுளே வரகுணராம பாண்டியன் என்றும், சுப்பிரமணியக் கடவுள் சூரனை ஜயிக்க அக்கினி சம்பந்தமாக வந்தாற்போல, வரகுண பாண்டியனும் அக்கினியிற் பிறந்தான் என்றும் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது.

திருவிளையாடற்புராணம், திருமணப்படலம், 8-வது கவியில்—"மீனவன் கொடியுங் காணவெம் புலிக்கொடியும்" என்கிற கவியினுல் பாண்டியர்களுக்கு மீனக்கொடி என்றும் தெரிவிக்கப்பெற்றிருக்கிறது. வேறு சில புராணங்களிற் பாண்டியர்களிற் குலசேகர பாண்டியன்: முதல் முதல் மதுரையில்வந்து பாண்டிய ராஜ்ஜியத்தை ஸ்தாபித்து, மலையத்துவஜ பாண்டியனைப் பெற்றதாகவும், அவன் சூரசேனனுடைய குமாரத்தியை விவாகஞ் செய்து கொண்டதில், பார்வதி தேவியே தடாதகைப் பிராட்டியாகப் பிறந்து, தனது தந்தையின் இராஜ்ஜியத்தைப் பரிபாலனஞ் செய்து வருகையில், மதுரைச் சுந்தரேசுவரரை விவாகஞ் செய்து கொண்டு, தனது பாண்டிய ராஜ்ஜியத்தைத் தனது நாயகராகிய சுந்தரேசுவரரிடம் கொடுத்து ஆளும்படி செய்ததாகவும், அந்தச் சுந்தரேசுவரருடைய சந்ததிகளே சிறந்த பாண்டியர்களாகித் தென் தேசத்தில் பிரகாசித்ததாகவும் சொல்லப்பெற் றிருக்கின்றது.

## பாண்டிய ராஜர்களின் பெருமை.

### வருணசிந்தாமணியின்படி

குலசேகர பாண்டியன்—மதுரையில் எழுந்தருளியிருக்கிற மீனாட்சி சுந்தரேசுவரர்களுக்கு ஆலயம் செய்வித்து, மதுரை நகரத்தையும் உண்டுபண்ணி, ஆதி சைவர்களைக் காசியிலிருந்து கொண்டுவந்து அந் நகரத்தில் ஸ்தாபித்தவன் என்றும்,

மலையத்துவச பாண்டியன்—10,000 வருடமிருந்து, மதுரையையாண்டு, 99 அசுவமேத யாகஞ்செய்து, 100 ஆவது யாகத்தில் உலக மாதாவாகிய உமாதேவியாரை மகளாகப் பெற்றவன். தடாதகைப் பிராட்டியார், சோமசுந்தர பாண்டியன், உக்கிரகுமார பாண்டியன் இம் மூவரும், முறையே உமாதேவியார், சிவபெருமான், முருகக்கடவுளாதலின், அவர்கள் பெருமையை யெடுத்துச்சொல்ல ஒருவராலு முடியாது என்றும்,

இராஜசேகர பாண்டியன்—அன்பு மிகுதியினாலே வெள்ளியம்பல வாணராகிய நடேசப் பெருமானைக் கான் மாறி யாடி யருளும்படி செய்தவன் என்றும்,

குலபூடண பாண்டியன்—இவன் தன்னாட்டி லுண்டான க்ஷாமம் நீங்கச் சிவபெருமானிடத்து உலவாக்கிழி பெற்றவன் என்றும்,

வரகுண பாண்டியன்—இவன் பக்தி மிகுதியினாலே சிவபெருமான் சிவலோகங் காட்டியருளத் தரிசித்தவன் என்றும்,

குலசேகர பாண்டியன்—இவன் தனக்கும் இடைக்காட ரென்னும் புலவருக்கு முள்ள பிணக்கைச் சிவபிரானாலே தீர்த்தருளப் பட்டவன் என்றும்,

அரிமர்த்தன பாண்டியன்—இவன் மாணிக்கவாசக சுவாமிகளை மந்திரியாகக்கொண்டு, அவரால் நரிகளைப் பரிகளாக்கிக் கொண்டுவந்து தரப்பெற்று, பின்பு சோமசுந்தரக் கடவுளை மண் சுமக்கச்செய்து, அவரைப் பிரம்பா லடித்து, அவரது திருவருள் பெற்றவன் என்றும்,

கூன்பாண்டியன்—இவன் திருஞானசம்பந்த சுவாமிகளால் தனது கூனல் நிமிரப்பெற்றுச் சுரவியாதி நீங்கிச்

சமணரைக் கழுவிலேற்றி, முன்போலச் சைவமதத்துட் பிரவேசித்தவன் என்றும் சொல்லப்பெற் றிருக்கிறது.

மஹாவம்சம் என்னும் கிரந்தத்தில்—தடாதகை என்னும் மாதை இலங்கையை யாண்டுவந்த விஜயன் என்பவன் விவாஹஞ்செய்துகொண்டதாகவும் சொல்லப்பெற் றிருக்கிறது. இத்தியாதி சங்கதிகளினால் உண்மையான சரித்திரம் இன்னதென்று அறியக்கூடவில்லை. இனிப் பாண்டியர்களுடைய சங்கதிகளைப்பற்றி ஐரோப்பியருக்கு எட்டிய விவரங்களை எழுதுவாம்.

பாண்டியர்களைப்பற்றி கிரேக்குதேச பூகோள சாஸ்திரிகளுடைய கணக்கின்படிக்கும், (Marcopolo) மார்க்கபோலோ யாத்திரை சாஸ்திரியின் கணக்கின்படிக்கும், கி. மு. 404ஆ பிரபலமான இராஜவமிசத்தா ரென்றும், வராஹமிசிரரும், •பிருஹத்ஸம்ஹிதையிலும் அப்பாண்டியர்களின் பெருமையைப்பற்றியும், தாம்பிரபர்ணி நதியின் பெருமையைப்பற்றியும் புகழ்ந்து எழுதி யிருப்பதாகவும், மாகஸ்தீன் (Magesthen) கணக்கின்படி, கி. மு. 250ஆ பிரபலப்பட்ட இராஜர்களென்றும், அசோக மகாராஜனுடைய சாசன கணக்கின்படி, கி.மு. 77ஆ பிரபலம் பெற்ற அரசர்களென்றும், மஹநமர் எழுதிய மஹாவம்சம் என்னும் சரித்திரக் கணக்கின்படி, கி. பி. 459, 477ஆ இலங்கைத்தீவு மன்னர்களிடம் சண்டைசெய்து ஜயித்தவர்களென்றும், பவுத்தர் கி. மு. 447ஆ நிர்வாணத்தையடைந்தபோது, இலங்கைநாட்டு விஜயராஜன் பாண்டியன் மகளை விவாகம் செய்துகொண்டான் என்றும், ஐரோப்பாவைச் சார்ந்த ரோமாபுரியை கி. பி. 800ஆ ஆகஸ்டஸ் அரசன் (Augustus) ஆண்டபோது, ஒரு பாண்டியன் அவ்வரசனுடைய சிநேகிதத்தை நாடி அவனது ஸமஸ்தானத்துக்குத் தனது ஸ்தானாதிபதியை அனுப்பியதாகவும், மிஸ்டர் கால்டுவேல் (Caldwell) சாஸ்திரியார் எழுதிய திருநெல்வேலி சரித்திரம், 17-வது பக்கத்தில் எழுதப்பெற் றிருக்கிறது.

கல்கத்தாவில் 1827ஆ ஜூலைமீ பதிப்பித்த, ஜர்னலாப் ஆசியாடிக் சொசைடியின் சரித்திரத்தில், இலங்கை சரித்திரத்தைப்பற்றி எழுதியதில், அயோத்திக்கு அரசனாக இருந்த குலசேகரனுடைய மருமகன் உக்கிரசேனன் மரபில் வந்த மாருத பிராட்டியானவள், உக்கிரசேனனை

விவாகம் செய்துகொண்டு, தென்றிசையை நாடி, இலங்கைக்கு வந்து, அடங்காபத்து என்னுமிடத்தில்வரவொத்திமலையோரத்தில், அரண்மனையைக்கட்டி வாழ்ந்துவருங்கால், வாலும் சிங்கமுகமுமுள்ள ஒரு மகவைப் பெற்று, அதற்கு வராஜசிங்கமென்று பெயரிட்டு அரசனுக்கியதாகவும், அந்த வராஜசிங்கனென்னும் அரசன் மதுரைப்பாண்டியன் மகளாகிய சாமதூதியை விவாகம் செய்துகொண்டதனால். மதுரை முதலான பல நாடுகளிலிருந்து பிராம்மணாதி பல ஜாதியாரை அழைத்துப் போய் இலங்கையிற் குடியேற்றியதாகவும், மேற்படி புத்தகம் 48-வது பாராவில் 54 பாண்டியர்கள் இலங்கையின் ஐந்து இடங்களில் இராஜதானியை ஸ்தாபித்தும், அவைகட்கு இளஞ்சிங்கவாகு என்பவனை அரசனுக்கியதாகவும், அந்த 54 பாண்டியர்கள் திரும்பிவருகையில், கடலில் திமிங்கிலத்தினல் கொல்லப்பட்டதாகவும், அந்தப் பாண்டியர்களுடைய மனைவியர்கள் பல ஜாதியார்களோடு இலங்கைக்குப் போய், முகமலை-யாழ்ப்பாணம் முதலான விடங்களில் குடியேறி, தம் கணவர் மரணத்தைக் கருதி அக்கினிப்பிரவேச மானதாகவும் எழுதப்பெற்றிருக்கிறது.

### வேறு சில புராண சரித்திர சாசனங்களினல் அடியிற் கண்ட பாண்டியர்க ளாண்டதாகத் தெரியவருகிறது.

குலசேகரபாண்டியன், மலையத்துவஜ பாண்டியன், தடாதகைப்பிராட்டியார், உக்கிரபாண்டியன்-(காஞ்சிசோமசேகரன் மகள் காந்திமதியைக் கலியாணம் செய்தவன்), வீரபாண்டியன், அபிஷேகபாண்டியன், விக்கிரபாண்டியன்-ஜயின மதஸ்தன், இராஜசேகர பாண்டியன்-சிறந்தவித்வான், குலோத்துங்கபாண்டியன், அநந்தகுண பாண்டியன்—(இவன் காலத்தில் ஸ்ரீராமர் இலங்கைக்கு வந்தார்; ஜயினர் சண்டை), குலபூஷணபாண்டியன் (சோழனைத்தாக்கினன்), ராஜசிம்ஹ பாண்டியன் (சோழன் மகளை மணந்தவன்), ராஜராஜேந்திர பாண்டியன்—(சோழனைத் தாக்கித் தோன்றுன்), ராஜேசுவரபாண்டியன், ராஜகம்பீரபாண்டியன், பிரதீப பாண்டியன், புருஹூரதபாண்டியன், பிரதாப பாண்டியன், சுந்தரபாத சேகரபாண்டியன்—(அநேக கோயில்களைக் கட்டுவித்தான்—சோழனோடு எதிர்த்து அகழியில் விழுந்து இறந்தான்), வரகுணபாண்டியன் (சோழ

னையும் தொண்டைமானையும் ராஜியாக்கினன்), இராஜ ராஜபாண்டியன், சுகுணபாண்டியன், சித்திரவிரஜபாண்டியன், சித்திரபூஷணன், சித்திரத்துவஜபாண்டியன், சித்திரவர்ம பாண்டியன், சித்திரசேன பாண்டியன், சித்திரவிக்கிரமபாண்டியன், இராஜமார்த்தாண்ட பாண்டியன், இராஜ சூடாமணி பாண்டியன், இராஜசாதுலா பாண்டியன், யுவஜராஜ குலோத்துங்க பாண்டியன், ஆயுதபிரவீணபாண்டியன், ராஜகுஞ்சர பாண்டியன், பரராஜ பயங்கரபாண்டியன், உக்கிரசேனபாண்டியன், மஹாசேன பாண்டியன், சத்ருஞ்சயபாண்டியன், பீமரதபாண்டியன், பீமபராக்கிரமபாண்டியன், பிரதாபமார்த்தாண்ட பாண்டியன், விக்கிரமபாண்டியன், உயுத்தகோலாஹலபாண்டியன், அதலவிக்கிரம பாண்டியன், அதலகீர்த்தி பாண்டியன், கீர்த்திவிபூஷண பாண்டியன்—பிரளயகாலம், வமிசசேகர பாண்டியன்-தமிழ் முதற்சங்கத்தை ஆரம்பித்தவன், வமிச சூடாமணி பாண்டியன், பிரதாப சூரசேன பாண்டியன், வமிசத்துவஜ பாண்டியன், ரிபுமர்த்தன பாண்டியன், சோழவமிச பாண்டியன், சேரவமிச பாண்டியன், பாண்டியவமிசாந்தக பாண்டியன், வமிசசூடாமணி பாண்டியன், குளத்துவஜ பாண்டியன், வமிசவிபூஷண பாண்டியன், சோமசூடாமணி பாண்டியன், குலசூடாமணி பாண்டியன், ராஜசூடாமணி பாண்டியன், பூபசூடாமணி பாண்டியன், குலேசபாண்டியன்—தமிழ்வித்வான், அரிமர்த்தன பாண்டியன், அவனுடைய மந்திரி மாணிக்கவாசகர், காஞ்சிக் சோழர்களைச் சைவர்களாக்கி அநேக ஜயினரைக் கல்காணத்தி லாட்டிக் கொன்றவன், ஜகந்நாதபாண்டியன், வீரபாஹு பாண்டியன், விக்கிரம பாண்டியன், சுரபிபாண்டியன், குங்கும பாண்டியன், கற்பூரபாண்டியன், புருஷோத்தம பாண்டியன், குலப்ஜா பாண்டியன்-இவனைக் கூன்பாண்டியன் என்றும் சொல்வதுண்டு; இவன் சோழராஜனை ஜயித்தும், அவனுடைய குமாரத்தி வாணிதீசுவரியை விவாகம் செய்து கொண்டும், அவள் தந்தையை மந்திரியாக வைத்துக் கொண்டான். அவன் ஜயின மதஸ்தனாக இருந்தபடியால், சைவமதத்திற் சேரக்கருதி, அவன் மனைவியார் திருஞான சம்பந்தரைத் தருவித்துச் சைவமதத்தைப் போதிப்பித்தும், அரசனுடைய ஜுர நோயை மந்திரபலத்தால் நீங்கும்படியும் செய்ததனால் அவன் சைவனாகி அப்பாண்டியன் அநேக ஜயினரைக் கல்காணத்தி லாட்டிக் கொல்வித்தான்.

அவன் காலத்தில்தான் அரபிநாட்டிலிருந்து மகமதியர் முதல்முதல் மதுரையில் வந்து தங்கினதாக ஒரு சாசனம் தெரிவிக்கிறது. பிறகு வீரபாண்டிய சோழனும்.

## பாண்டியருடைய ஜாதி

## முதலான விவரங்கள்.

பாண்டியர்கள்—பாரதம், ஹரிவமிச முதலான கிரந்தங்களின்படி, சந்திரவமிச க்ஷத்திரியர்களாம். பாண்டியர்களும் சேரசோழர்களுடைய பந்துக்களே.

அப்பாண்டிய நாட்டை ஸ்தாபித்தவன் துஷ்யந்தன் தம்பியாகிய திஷியந்தனது பௌத்திரனாகும் ஆசிரதன் புத்திரன் என அபிதானகோசத்தில் அறிவிக்கப்பெற்றிருக்கிறது. அவனே குலசேகர பாண்டியன்போலும். அவன் தென்மதுரையை நகராக்கி, நான்கு வருணத்து ஜனங்களையும் ஸ்தாபனம்செய்து, காசியிலிருந்து ஆதிசைவர்களையும் கோயிற்பூஜைக்காகக் கொணர்ந்து இருத்தி, அகஸ்தியர் அநுமதிப்படி அரசுபுரிந்தவனும். அக்குலசேகர பாண்டியன் மகன் மலயத்துவஜ பாண்டியனும். மலயமலையைத் தனது கொடியில் தீட்டிக் கொண்டமையால் அப்பெயர் உண்டாகியதுபோலும். அவனும் அகஸ்தியரை உசாவியே எக்காரியமும் செய்பவனென்பது அக்கொடியின் குறிப்புப் பொருளாம். அப்பாண்டியன் காலம் துவாபரயுகமெனச் சில சரித்திரங்களுடைய கருத்து.

## பாண்டியருடைய அரசுமுறை.

பாண்டியர்கள் ஆண்ட காலத்தின் விவரம் விவரமாய் விளங்கவில்லை யென்று முன்னமே சொன்னோமல்லவா; இவர்கள் அரசாட்சியின் முறையையும் விவரமாக விளங்கவில்லை. ஆயினும், இவர்கள் தர்ம இராஜ்ஜிய பரிபாலனம் செய்திருக்க வேண்டுமென்று ஸ்பஷ்டமாகிறது.

## தமிழ் வித்துவான்களாற் பாடப்பெற்ற

## பாண்டியர்கள்.

### அபிதானகோசத்தின்படி

பாண்டியன் அறிவுடைய நம்பி—இவன் தமிழ்ப் புலமையிற் சிறந்த அரசன்.

பாண்டியன் ஆரியப்படை தந்த நெடுஞ்செழியன்—இவனே கோவலனைக் கொல்லுவித்த பாண்டியன் எனச் சிலப்பதிகாரத்தால் விளங்குகின்றது. இவன் கல்வியைப் பொருளாகவும், கற்றோரைச் சுற்றமாகவுங் கொண்டவன்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் - இவன் புலமையிற் சிறந்த ஓர் அரசன் என புறநானூற்றினுள்ளே வரும் 72-ம் செய்யுளாற் புலப்படும். இவன் புலமையிற் சிறந்த புலவரைக் காத்தலினும், அவராற் பாடப்படுதலினும் மிக்க விருப்புடையவனென்பது மாங்குடி மருதனரால் மதுரைக் காஞ்சிக்குத் தலைவனுக்கப் பட்டமையாலறிக. இவன் கல்லாடர்-இடைக்குன்றூர்கிழார் முதலியோராற் பாடப்பெற்றவன்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன்—இவ்வரசன் நக்கீரனாராலும், மதுரை மருதனிளநாகனார் முதலியோராலும் பாடப்பெற்றவன்.

பாண்டியன் கருங்கை ஒளவாட் பெரும்பெயர்வழுதி—இவன் இரும்பிடர்த்தலையாராற் பாடப்பெற்ற ஈகையாளன்.

பாண்டியன் கானப்பேர்தந்த வுக்கிரப்பெருவழுதி—இவன் ஔவையாராற் பாடப்பெற்றவன். இவனே வேங்கைமார்பனை வென்று கானப்பேரென்னு மரண்கொண்டவன் (புறநானூர் 67); இவனே திருவள்ளுவர் திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரஞ்சொன்ன பாண்டியன்.

பாண்டியன் கீரஞ்சாத்தான் — இவன் ஆவூர்மூலங்கிழாராற் பாடப்பெற்றவன்.

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சியமாறன்வழுதி—ஐயூர் முடவனாராலும் மருதனிளநாகனாராலும் பாடப்பெற்ற பாண்டியன்.

பாண்டியன் சித்திரைமாடத்துத்துஞ்சியநன்மாறன்—இவன் சீத்தலைச் சாத்தனாராலே பாடப்பெற்றவன்.

## பாண்டியர்கள் தமிழ்ப் பாஷாபிமானிகளாயும் போஷகராயுமிருந்தார்கள்.

தமிழரசர் மூவருள்ளும் பாண்டியரே மற்ற இருவரினும் செந்தமிழைச் சிறப்புற்றோங்கச் செய்தவர்களென்பதற்கு யாப்பருங்கல மேற்கோளினல் விளக்கும்.

"வில்லுடையான் வானவன் வீயாத் தமிழுடையான்
பல்வேற் கடற்றானைப் பாண்டியன்—சொல்லிகவா
வில்லுடையான் பாலை யிளஞ்சாத்தன் வேட்டனே
நெல்லுடையா னீர்நாடர் கோ."

ஔவையார்

"நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன்வாழ்
வில்லந் தொறுமூன் றெரியுடைத்து—நல்லரவப்
பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின்
னாட்டுடைத்து நல்ல தமிழ்"

சிறுபாணாற்றுப்படை

"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும்"

திருக்கோவையார்

"உயர்மதிற் கூடலினாய்ந்த வொண்டீந் தமிழின் றுறை"

பரிபாடல்

"உலக மொருநிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலாற் றூக்க—வுலகனைத்துந்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவ
னான்மாடக் கூட நகர்."

மேலும், பூதபாண்டியனும், அவன் தேவியாரும் மஹா வித்வசிகாமணிக ளென்பதை அகநானூறு புறநானூறு இவற்றிற் காணலாம்.

"மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்
தடங்காத் தானை வேந்தருடங்கியைந்
தென்னொடு பொருது மென்ப வவரை
யாரமர லறத் தாக்கித் தேரோ
டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த
பேரமரு ணுண்க ணிவளினும் பிரிக."

என்றுதி கவிகளால் ஸ்பஷ்டமாகும்.

அன்றியும், வரதுங்க பாண்டியன் பிரமோத்திர காண்டத்தைத் தமிழாற் பாடினதன்றியில், அவன் தேவியார் மஹா கவிரத்தினம் என்பதற்கு அத்தேவியார் பணியாரக் குடத்துக்குள் மதுரைப்பூ பாண்டியன் தேவி விடுத்தகவி என்னும் தலைப்பின்கீழ்,

"என்னையிவ்வா றவர்மறந்தும் யானவரை மிகநினைந்திங்
கிருந்து வாட
முன்னைவினைப் பயன்றானோ வப்பிறப்பிற் செய்ததவ
முடிந்த வாறோ
கன்னன்மத னபிராமன் வரதுங்க ராமனியற்
காசி நாட்டி
லன்னவயற் குருகினங்கா ளினியெவ்வா றுயிர்தரித்திங்
காற்று மாறே."

என்று தமிழ்நாவலர் சரிதைக்கண் தெரிவிக்கப்பெற்றிருத்தல் பிரத்தியக்ஷம்.

மதுரையி லாண்ட புராதன பாண்டியர்கள் இப்படிக் கல்வி விஷயத்தில் மாத்திரம் கருத்தைச் செலுத்தினது மாத்திரமல்ல; ஈசுவர பக்திக்கும் பாடுபட்டவர்களாகி, அநேக சைவ வைணவக் கோபுர மாடமாளிகைகளையும், வாவி கூப தடாகங்களையும் உண்டாக்கி உத்கிருஷ்டமடைந்திருந்தார்கள் எனத் திருவிளையாடற்புராணம் முதலான கிரந்தங்கள் நிதர்சனங்களாக நிரூபிக்கின்றன.

குலசேகரன், மலையத்துவஜன் முதலான சில பாண்டியர்கள், அகத்தியருடைய கட்டளையின்படி தருமராஜ்ஜிய பரிபாலனம் செய்து குடிகளைச் சுகமாக வாழச்செய்தார்களென முன்னமே சொல்லியிருக்கிறோமல்லவா? அதற்கு இரண்டொரு உதாரணங்களை இதனடியிற் காட்டுகின்றனம்:—

## விக்கிரமசிங்க பாண்டியனுக்கு அகஸ்தியர் மனுநீதி யுரைத்தது.

### பாவநாசத்தல புராணம்.

ஆறிலொன்றிறையாகவே, கூறுகொண்டதுகோடலா
றீறில்வெந்துயரெய்தினோர்க், கூறுநீக்குவதுன்கடன்.
ஆதிநூலினராவின, மாதர்பாலர்வயோதிய
ரோதுவெம்பிணி யோர்தமை, பாதுகாத்திடல் பண்பரோ.
காமமாதி கடந்திடல், வாமமாதி மறந்திட
லேமவில்லியை யேத்துதல், பூமிமன்னவர்பொற்பரோ.
ஊக்கநெஞ்சிலுறைத்தலு, மாக்கநாடொறுமாக்கலும்
வாக்குமாறலைமாற்றலுந், தூக்கிமன்னவர் சூழ்ச்சியால்.
ஒற்றர்மூவருலகினி, லற்றமானவநீதியு

மற்றுமோர்ந்தவைமாற்றுதல்,கொற்றைமன்னவர்கொள்கை
யாம்.''

"குடிபறங் காத்தல் வேகக் கூற்றுவந் தெதிர்த்த போது
மடியிலாச் சேனை சேர்த்தன் மாற்றலரைபோ தற்குந்
தண்டபடு மரணுண் டாக்கல் சந்ததம் பொச்சாப் பின்மை
புடவியோர் புயத்திற் றங்கும் புலவருக். குறுதியாமால்.''

என்றுதி கவிகளைக் காண்க.

மேலும், பாண்டியர்காலத்தில் மஹாபக்த சிரேஷ்டர்களாகிய மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தமூர்த்திகள், அப்பர், சுந்தரர் முதலான மஹான்களும், "பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென், றீண்டிய சங்கமெடுத்தூத'' என்றுதி கவிகளின்படி ஆழ்வார்களும், நாயன்மார்களும், பரிமளித்துப் பாண்டியநாட்டைப் பிரபஞ்சத்திற் பிரபலமாக்கினார்கள்.

அந்தப் பாண்டியர்களுக்குப் பின் வந்த பாண்டியர்கள் கல்வியையும் கடவுள் பக்தியையும் அசட்டை செய்து, சிற்றின்பத்திலும் - சோம்பலிலும் காலத்தைக் கழித்து வரவே, பாண்டியநாடு பாழ்த்துவர வேறு நாட்டார் படையெடுத்துவரச் சம்பவித்தது.

---

## பாண்டிய இராஜ்ஜியத்தின் முடிவு.

குலாப்ஜன் அல்லது கூன்பாண்டியன் காலத்தில் அரபிநாட்டிலிருந்த மகமதியர் மதுரைக்கு வர ஆரம்பித்தார்கள் என்று முன் சொல்லியிருக்கிறோமல்லவா? அந்தக் கூன்பாண்டியனுக்குப் பிறகு, வீரபாண்டியசோழன் பட்டத்தைப் பெற்றான். அவன் ஆதிபாண்டியருடைய 74-வது சந்ததி. அந்த வீரபாண்டியனுக்குச் சந்ததி யில்லாமற் போய்விட்டபடியால், பழைய பாண்டியர்களுடைய வைப்பாட்டிப் பிள்ளைகள் கிளம்பிவந்து, பாண்டியநாட்டை ஆளத் தலைப்பட்டார்கள் என்று ஸ்ரீ ஸ்தல புத்தகத்தில் சொல்லியிருக்கிறதாக, மதுரை ஜில்லா மகத்துவத்தை எழுதிய மிஸ்டர் நெல்சன் அவர்கள் எழுதியிருக்கிறார். (Vide Mr. Nelson's Madura Manual) (Mr. Taylor's Supplementary M. S. S. & Mr. Robert Sewell's S. I. A. Pages 218-219).

அப்படி ஆண்டபாண்டியர்களுடைய வைப்பாட்டி மக்களாவன:—

சோமசேகரபாண்டியன், கி-பி 1100 வருஷம் சிங்காசனமேறி 20வருஷம் ஆண்டான். கர்ப்பூரசுந்தரபாண்டியன், குமாரசேகரபாண்டியன், குமாரசுந்தரன், சுந்தரராஜன், ஷண்முகராஜன், மேருசுந்தரபாண்டியன் (இவன் சேர சோழ நாடுகளையும் ஆண்டான்), இந்திரவர்மன் (இவன் சோழனை விடுதலைசெய்து அவன்)மகளை விவாஹம் செய்து கொண்டான்), சந்திரகுலதீபன், மீனகேதனன், மீனத்துவஜன்(இவன் சோழன் மகளை விவாஹம்செய்துகொண்டான்), அவன் மகன் சோரிநாட்டை ஆண்டான், மகரத்துவஜன் (இவன் மஹாவீரன்), மார்த்தாண்டன், குவலயாநந்த பாண்டியன் (இவன் கப்பல் யாத்திரை செய்து கடலில் விழுந்திறந்தான்), கிருஷ்யான் மகள் கிருபாநிதி தாயார், (இவள் குண்டலபாண்டியனை விவாஹம் செய்துகொண்டாள்), சத்ருபீகாபாண்டியன், சத்ருசம்ஹாரன், வீரவர்மன், வீரபாஹு, மகுடவர்த்தனன் (சோழனால் கொல்லப்பட்டவன்), வீரசிம்மன், வம்சகுலத்துங்கன், அதிவீரராம பாண்டியன் (சோழன் தோழன்; இவன் நைடதம், நறுந்தொகை முதலான கிரந்தங்களை இயற்றிய சிறந்த தமிழ் வித்வான்), குலவர்த்தன பாண்டியன், சோமசேகரன், சோமசுந்தரன், இராஜராஜன், இராஜகுஞ்சரன், இராஜசேகரன், இராஜவர்மன், இராஜமேதாவிபாண்டியன், வரதராஜன், குமாரசிம்ஹன், விரசேனன், பிரதாபராஜன், வரகுணராஜன், குமாரசந்திரன், வரதுங்கன், சந்திரசேகரன், சோமசேகரன், பராக்கிரமபாண்டியன் - இவன் பகையாளிகளிடமிருந்து பாண்டியநாட்டைப் பிடுங்கி ஆண்டுவரும் போது, ஆதிசுல்தான் மலிக்கபூர்சாயிபு கி-பி 1311வருஷம் படையெடுத்து வந்து பாண்டியநாட்டைப் பிடித்துக் கொள்ள, 1312வருஷம் முதல் 8 மகமதியர்கள் மதுராபுரியை 47வருஷம் ஆண்டார்கள்.

## அந்த மகமதிய அரசர்களாவன.

மலிக்காபூர்சாயபு, கி-பி 1310—1313,3.
அலாவுதீன்கான், 1313-1319,6.
உத்தமதீன்கான், 1316—1322,3.
தீபுதீன்கான், 1322—1327,6.
நாகுல்தீன்கான், 1327—1334,7.

சவுத்மலீக் அஹமத்மலேக், 1334—1346,12.
பாண்டக் மலீக், 1346—1358,12.

என்பவர்கள் ஆண்டுவருங் காலத்தில், இந்துக் குடிகளுக்குப் பலவித கஷ்டநிஷ்டூரங்கள் சம்பவிக்க, அக்கஷ்டநிஷ்டூரங்களை நீக்கி, இந்து ராஜாங்கத்தை ஸ்தாபிக்கக்கருதி விஜயநகர புக்கராயலு 1350—1379ஷ பாண்டியநாடு நாதனற்றுக் கெட்டலைவதைக் கண்டு, கெம்பன்ன உடையாரைப் பாண்டியநாட்டிற்கு அதிபதியாக அனுப்ப, அவர் 1572ஷ வரையிலும், அவர் குமாரர் என்பன்ன உடையாரும், மைத்துனர் பிரகாச உடையாரும் 1404ஷ வரையிலும் ஆண்டு சந்ததியற்றுப் போனதனுல், புக்கராயலுடைய பந்துக்களில் பராக்கிரமசாலிகளான சில நாயடுகார்களை பிரதிநிதிகளாக அனுப்பி ஆண்டுவரச் செய்ததாக ஒருசாசனத்தில் தெரிவிக்கப் பெற்றிருக்கிறது. அப்படி அனுப்பப்பெற்ற நாயடுகார்களாவன:—

(1) இலட்சுமணநாயடு, (2) முத்தன்ன நாயடு, இவ்விருவர்களும் 1404-ம் வருஷமுதல், 1451ஷவரையில் ஆண்டுவருகையில், அப்பாண்டிய நாட்டிற்குப் பாத்தியஸ்தர்களாகச் சிலவார்சுகளைக் கண்டுபிடித்தார்கள். அவர்களாவன:-

சுந்தரத்தாள், மஹாவிசுவநாதராயர், காளியாசோமனர், அஞ்சாதபெருமாள், முத்துராஜதிருமலை மஹா விசுவநாதராயர் என்பவர்களே. அவர்களுடைய பெயர்களையும், பாத்தியதைகளையும்பற்றிப் புக்கராயலுக்கு அறிவிக்க, அவர் உடனே பாண்டியநாட்டை அந்த வார்சுகளிடம் கொடுத்துவிட்டு வரும்படி உத்தரவு கொடுக்க, அவரும் அப்படியே செய்ய, அந்தப் பாண்டியநாட்டு வார்சுகளும் 1451ஷ முதல் 1498ஷ வரையில் ஆகிய 48ஷ ஆண்டார்கள். அப்படி ஆண்டவர்களை வைப்பாட்டிப்பிள்ளைகளென்று குடிகள் கலகம்செய்து மறுபடியும் விஜயநகரத்துக்கு முறையிட்டு அறிவிக்க, கிருஷ்ணதேவராயலு 1445—1500ஷ நரசநாயடுவையும், 1500—1515ஷ தென்னமநாயடுவையும், 1519—1519ஷ நரசநாயடுவையும், பிரதிநிதிகளாக அனுப்பி ஆண்டுவரச்செய்ததில், அவர்கள் சந்ததிகளில்.

குருகுருதிம்ம நாயடு, 1519—1524,
காட்டியம் காமய நாயடு, 1524—1526,
சின்னப்ப நாயடு, 1526—1530,
ஜங்கம நாயடு, 1530—1535,

விசுவநாத நாயடு, 1535—1544,
வரதப்ப நாயடு, 1544—1545,
தொம்பச்சி நாயடு, 1545—1546,
விசுவநாத நாயடு, 1546—1547,
விட்டல நாயடு, 1547—1558,

வருஷங்கள் ஆண்டபிறகு, பாண்டிய நாட்டிற்குத் தக்க பாத்தியஸ்தன் என ஒரு சந்திரசேகர பாண்டியன் கிளம்பிவந்து, தனது பாத்தியதையை ஸ்தாபித்துக் காட்டியதனால், அந்தச் சந்திரசேகர பாண்டியனுக்குப் பட்டம் கட்டி ஆண்டுவரச் செய்தார்கள். அப்போது தஞ்சையிலிருந்து வீரசேகரசோழன் பாண்டியநாட்டின் தலைநகராகிய மதுரைமீது படையெடுத்துவந்து தாக்கிப் பாண்டிய நாட்டைப் பிடுங்கிக்கொள்ள, அப்பாண்டியன் விஜயநகர ஸமஸ்தானத்துக்குப் போய் முறையிட்டழ, கிருஷ்ணதேவ ராயலு தமது பிரதிநிதியாகிய நாகமநாயடுகாரைத் தக்க தண்டுகளாதிகளோடுபோய் வீரசேகரசோழனைத் தாக்கித் துரத்தி, அவனிடமிருந்த பாண்டியநாட்டைப் பிடுங்கிப் பாண்டியனிடம் கொடுத்துவரும்படி கட்டளை கொடுத்தனுப்ப, அந்த நாகமநாயடும் அப்படியே வந்து சோழனைத் தாக்கித் துரத்தி, அவனிடமிருந்த பாண்டியநாட்டைப் பிடுங்கி, அதன் வார்சுதாரனாகிய பாண்டியனிடம் கொடுக்காமல், தன் சொந்தமாக்கிக்கொள்ள, இது சங்கதி விஜயநகர ஸமஸ்தானத்தாருக்குத் தெரிய, விஜயநகரத்தார் விசனப்பட்டு, இப்படி இராஜத் துரோகம்செய்த நாகம நாயடுவைக் கொன்று, அவன் அக்கிரமமாகப் பிடித்துக் கொண்டிருக்கும் பாண்டியநாட்டைப் பிடுங்கி, சரியான வார்சாகிய சந்திரசேகர பாண்டியனிடம் கொடுத்துவரும் படி ஷை நாகமநாயடுவின் குமாரராகிய விசுவநாதநாயடு காரை அனுப்ப, அவ்விசுவநாதநாயடும் வந்து, தன் தகப்பன் என்ற முறையையும் கருதாமல், சத்தியத்துக்குக் கட்டுபட்டு, தன் தகப்பனான நாகமநாயடைப் பிடித்துச் சிறையில் வைத்தும், அந்த நாகமநாயடு பிடித்து அக்கிரமமாக வைத்துக்கொண்டிருந்த பாண்டியநாட்டைப் பெற்று, அதன் வார்சாகிய சந்திரசேகரபாண்டியனிடம் கொடுத்தும் அப்பாண்டியனுக்கு முடிசூட்டி, அச்சங்கதிகளை விஜயநகரராயலுக்கு அறிவிக்க, அந்த ராயலும் விசுவநாத நாயடுகாருடைய சத்தியத்தைக் கண்டு வியந்துகொண்

டாடி, அவரை அப்பாண்டியநாட்டில் சிலவருடங்களிருந்து, அப்பாண்டியனுக்கு உதவிசெய்துவரும்படி செய்ய, அந்த விசுவநாத நாயடும் அப்படியே செய்துவருகையில், அச்சந்திரசேகரபாண்டியனும் அவன் குமாரனும் சிலவருஷங்களாண்டு சந்ததியற்று இறந்துபோகவே, பாண்டியநாட்டிற்குத் தகுந்த வார்சுகளற்றுப்போன சங்கதியை விஜயநகரத்தாருக்குத் தெரிவிக்க, அந்த விஜயநகர ஸமஸ்தானத்தார், விசுவநாத நாயடுகாருடைய சுத்தவீரத்துவம், சத்தியம், சுவாமிபக்தி, தருமகுணாதிசயங்களைக் கேட்டும், பாண்டியநாட்டை அந்த விசுவநாயடுகாரே ஆளத்தக்க வல்லவர் என்று பாண்டியநாட்டுக் குடிகளுடைய வேண்டுகோளைக் கருதியும், விஜயநகர ஸமஸ்தானத்திலிருந்து தேவப்பிராம்மணர்களிடம் கங்கைதீர்த்தம், இராஜகில்லத்து அல்லது கட்டளை, கத்தி, கட்டாரி, ஆடை ஆபரணங்களைக் கொடுத்தனுப்பி, பாண்டியநாட்டுக்குப் பிரதான பட்டணமாகிய மதுரையில் கி.பி 1559ஷு விசுவநாதநாயடுகாருக்குப் பாண்டிய சக்கரவர்த்தி என்ற மகுடாபிஷேகம் செய்வித்துப் பட்டம் கட்டிவைத்தார்கள். அந்த விசுவநாத நாயடுகாரும் அவருடைய பதினாறு சந்ததிகளும், பதினாறு பேறுகளைப் பெற்று நாயடுகாரு ஸமஸ்தானத்தார் என்ற பெயரால், சுமார் இருநூறு வருஷகாலம் இந்து தருமசாஸ்திரப்படி ஆண்டார்கள். ஆகையால், இனி அந்த நாயடுகாரு சமஸ்தான சரித்திரத்தை அடியிற் காட்டுகின்றோம்.

## மதுரையிலாண்ட நாயடு சமஸ்தான வம்சாவளி.



సీసమాలిక.

శ్రీవిష్ణుమూర్తికి చెలువయౌలక్ష్మికి ॥ తమ్ముడై వెలసిన ధన్యచంద్ర ॥
వంశసంభవులైన, పరమమహాక్షత్రియు ॥ లనియెడు శ్రీగౌరనాన్వయులగును ॥
పరగుచుండెడికోట, బలిజెవారను పేర ॥ వ్యవహరింపుచునుండువారలైన ॥
బహుళశ్రీపాండ్య భూపతులపరంపర ॥ వివరంబు తెలియుండి, విశ్వమందు ॥
నాగమనాయుడు, నయవిశ్వనాదుడు ॥ పెద్దకృష్ణప్పయు, పృథివియందు ॥
పెద్దవీరప్పను పేరు నాయుడు విశ్వ ॥ నాథుండు కృష్ణప్పనాయుడు మఱి ॥
ఘనవిశ్వనాదుడు, కస్తూరి రంగప్ప ముద్దుకృష్ణప్పయు ముఖ్యులైన ॥ స్థిర
ముద్దువీరప్ప, తిరుమలనాయుడు ॥ మంగమ్మను విజయరంగచొక్క ॥ నాథ
నాయుడును, మీనాక్షమ్మకడగాను ॥ పద్నాల్గు మనువులపాటిగాను ॥

హద్వాల్కీ ప్రభువులు భాగురంగాద్యుల । శివ్యరాజ్యంబును చేయు చుండ్రి &c.

விஜய நகரத்தின் ஸமஸ்தானம் அச்சுததேவராயலு காலத்தில் (கி பி. 1559-ஆம் வருஷம்) பாண்டியநாடு ஸ்வாதீனமாகி, விசுவநாத நாயடைத் தமது பிரதிநிதியாக நியமித்தார்கள். அவர் சந்ததி வமிசாவளி விவரமாவது:—

1, நாகம நாயடுகாரு சகாப்தம் 1460 அல்லது கி. பி. 1538 வருஷம்.
2. விசுவநாத நாயடு (1)—1559-1563.
3. குமார கிருஷ்ணப்ப நாயடு-1563-1573.
4. கிருஷ்ணப்ப நாயடு, பெரிய வீரப்ப நாயடு, விசுவநாத நாயடு, 1573-95.
5. லிங்கய நாயடு, விசுவநாத நாயடு, 1595-1602.
6. முத்து கிருஷ்ணப்ப நாயடு 1602-1609.
7. முத்துவீரப்ப நாயடு—1609—1623.
8. திருமலே நாயடு—1623—1659.
9. முத்து அளகிரிநாயடு—1559-1660.
10. சொக்கநாத நாயடு—1660-1682.
11. முத்துலிங்கய்ய நாயடு - 1677.
12. இரங்ககிருஷ்ண முத்துவீரப்பநாயடு, 1682-1689.
13. மங்கம்மகாரு, 1689 - 1904.
14. விஜயரகுநாத சொக்கலிங்கநாயடு, 1704-1731.
15. மீனுக்ஷியம்மகாரு, 1731-1736.
16. பங்காரு திருமலே நாயடு, விஜயரகுநாத நாயடு, 1736.

இப்படிப் பாண்டிய நாட்டில் 16 நாயடுகாரு சந்ததிகள் ஆண்டுவந்தார்கள்.

இவர்கள் காலத்தில் பாண்டியநாடு பலவிதத்திலும் சீரும் சிறப்பும் பெற்றுப் பிரகாசித்தது. ஆகையால், அப்படி ஆண்டவர்களில் சிலருடைய சரித்திரங்களே மாத்திரம் சங்கிரகமாக இதனடியில் எழுதுகிறேம்.

---

## மதுரையில் நாயடு சமஸ்தானம்.



மதுரையில் (பாண்டிய நாட்டில்) நாயடுகாரு சமஸ்தானத்தை ஸ்தாபித்தவர்களில் முதன்மையானவர் ஸ்ரீ விசுவ

நாத நாயடுகாரு என ஸ்ரீ ஸ்தலப் புத்தகத்தினாலும், மிஸ்டர் டெயிலர் (Mr. Taylor) கிரந்தத்தினாலும், கவர்ன்மெண்டு ரிக்கார்டுகளினாலும் ஸ்பட்டமாகிறது. இந்த விசுவநாத நாயடு மதுரையில் நாயடு ஸமஸ்தானத்தை ஸ்தாபித்தகாலம் கி. பி. 1559ஆம். இவருடைய தந்தை விஜயநகர ஸமஸ்தான உக்கிராண கர்த்தராயும், பிறகு ஸமஸ்தான தளகர்த்தராயுமிருந்த கோட்டய நாகம அல்லது நாகப்பநாயடு. அவர் அப்போது விஜயநகர ஸமஸ்தானத்துக்கு இருந்த 56 இராஜ்ஜியங்களில நாற்பதினாயிரம் குதிரைப் பட்டாளமும், நாலாயிரம் யானைப் பட்டாளமும், பத்தாயிரம் ஒட்டகைப் பட்டாளமுமாகிய பெரிய சேனைகளுக்குச் சிரேஸ்ட தளகர்த்தராக இருந்ததன்றியில், தம் சொந்த காப்புக்கு ஆறாயிரம் குதிரைப் பட்டாளத்தையும், 20,000 பதாதிகளையும் வைத்துக்கொண்டும், அவைகளின் செலவுக்காக, ஆறுகாடுமுதல் திருவநந்தபுரம் உள்படவிருந்த குருநில மன்னர்களிடம் பேஷ்கஸ் வசூல் செய்துகொள்ள அதிகாரம் பெற்றிருந்தார். அவருடைய தவப் புதல்வர்தான் விசுவநாத நாயடு.

அந்த கோட்டய நாகம நாயடுகாருக்குப் புத்திரசந்தான மில்லாத கவலையால், அநேக விரதங்களைப் பூண்டும், கடைசியாகக் காசி க்ஷேத்திரத்திற்குப் போய், கங்காநதிக் கரையில் அகோர தபசுசெய்து வந்ததில், ஒரு ஆண்குழந்தை பிறந்தது. அக்குழந்தை ஸ்ரீ காசி விஸ்வநாதருடைய கிருபையால் பிறந்தமையால், அம்மகனுக்கு விசுவநாதன் என்று பெயரிட்டார். இந்த விசுவநாதன் பிறந்த வருஷம் 1500 என்று சில ரிகார்டுகளில் காணப்பெற்றாலும், வேறு சில சாசனங்களினால் 1510 வருஷம் என்று தெரிவிக்கப் பெற்றிருக்கிறது. இப்படி இவர் பிறந்த வயதைப்பற்றிச் சில சாசனங்கள் வித்தியாசப்பட்டிருக்கினும், இவர் மதுரைக் கதிபதி யாகும்போது சுமார் நாற்பது வயதுக்குள் இருக்கவேண்டும்.

இந்த விசுவநாதர் சிறுபையனாக இருக்கும்போதே கல்வி, கேள்விகளில் அதிக விருப்ப முள்ளவராக இருந்ததன்றியில், தன் தந்தையைப்போலவே யுத்தத் தொழிற் பயிற்சியிலும் சிறந்து சுத்த வீரனாகி, அப்போது விஜயநகரத்தை நாடிவந்த மகமதியரைத் தாக்கித் தன் தோள் வலிமையைக் காட்டியதனால், 1535ஆம் அச் சமஸ்தானத்தின் சேனைத் தலைவராக நியமிக்கப்பெற்றார்.

மதுரையில் பாண்டியருடைய வார்சுகளில் ஒருவராகிய சந்திரசேகர பாண்டியன் ஆண்டு வரும்போது, தஞ்சையி லிருந்த வீரசேகரசோழன் படை யெடுத்துப்போய்ச் சண்டைசெய்து ஜயித்துப் பாண்டிய நாட்டைச் சோழநாட்டோடு சேர்த்துக்கொள்ள, அப்போது சக்தி சகாயமற்ற சந்திரசேகர பாண்டியன் சங்கடப்பட்டு, விஜயநகர ஸமஸ்தாநாதிபதி அச்சுததேவராயனு அவர்களிடம் போய் முறையிட, விஜயநகர ஸமஸ்தாநாதிபதி அப்பாண்டியன் விஷயத்தில் பரிதபித்து, 1564வரு தமது தளகர்த்தர் நாகம நாயடுகாரைத் தருவித்து, தக்க தண்டு தளாதிகளைக் கொடுத்து, தெற்கே தஞ்சைக்குப்போய் வீரசேகரனுடைய கொட்டத்தை யடக்கி, மதுரையைச் சந்திரசேகர பாண்டியனிடம் கொடுத்து வரும்படி சொன்னார். அந்த நாகம நாயடும் ஸமஸ்தானத்தின் உத்திரவின்படி சாலிவாகன சகாப்தம் 1400வரு காளயுக்திவரு பங்குனிமீ 15-ம் தேதி தஞ்சைக்கு வந்து வீரசேகரனைத் தாக்கி, மதுரையைப் பிடித்துச் சந்திரசேகர பாண்டியனுக்குக் (கட்டளைப்படிக்) கொடுக்காமல், பேராசையினால் தானே பாண்டியனென்கிற பட்டத்தைக்கொண்டு ஆண்டுவர, விஜயநகர ஸமஸ்தாநாதிபதிக்குத் தெரிந்ததில், அவர் அதிக விசனப்பட்டு, தமது ஸமஸ்தான மந்திரி பிரதானி போர்வீரர் கூடிய சபையைக் கூட்டி, அச்சபைக்கு முன்பாக நாகம நாயடு செய்த இராஜத்துரோகத்தையும், அக்கிரமத்தையும் பற்றிப் பிரஸ்தாபித்தும், "இப்படிப்பட்ட இராஜத்துரோகியின் சிரசைக் கொண்டுவந்து எனது பாதத்தண்டையில் வைக்கும் வீரன் இச் சபையில் இல்லையோ?" என்று பலதரம் வீரகோபத்துடன் கர்ஜ்ஜித்துச் சொன்னார்.

அப்போது அந்தச் சபையில் ஒருவராக இருந்தவரும், பாண்டியனை மோசஞ்செய்த ஷை நாகம நாயடுவின் குமாரருமாகிய இந்த விசுவநாதநாயடு எழுந்து வணங்கி, "பிரபு! துரோகியும் எனது பிதாவுமாகிய நாகம நாயடுவின் சிரசைக் கொண்டுவந்து, தங்கள் பாதத்தடியில் வைத்து, தங்கள் புகழைப் பாண்டிய நாடெங்கு மோங்கும்படி செய்விக்க இதோ சித்தமாக இருக்கிறேன்; உத்தரவு தரவேண்டும்" என்று கேட்க, விஜயநகர சமஸ்தாநாதிபதி கேட்டு, "இந்த விசுவநாதன், நாகம நாயடுவின் குமாரனாகையால், இவனும் தனது தந்தையோடு சேர்ந்துகொண்டு, பின்னும் பலவித

வம்புகளைப் பாண்டிய நாட்டிற்குச் செய்து விடுவாரோ'' என்று சந்தேக முற்றாலும், விசுவநாதர் சிறு பிராய முதல் சத்தியம், சுவாமி பக்தி, இராஜ பக்திகளிற் சிறந்தவ ரென்று நேரில் கண்டிருந்தவ ராகையால், அவரிட மிருக்க வேண்டிய சந்தேகத்தைவிட்டு, பூரண நம்பிக்கை வைத்துத் தக்க தண்டு தளாதிகளைக் கொடுத்தனுப்பினார்.

இராஜ விசுவாசத்தில் சிறந்த விசுவநாதரும் தெற்கே மதுரைக்கு வந்தும், தமது தகப்பனாராகிய நாகம நாயடுடன் பிரமாத சண்டைசெய்து, அவரைப் பிடித்துச் சிறையில் வைத்தும், ஊர்க்கலகத்தை யடக்கியும், சந்திரசேகர பாண்டியனைச் சிங்காசன மேற்றியும், இப்படி நடந்த சங்கதிகள் யாவற்றையும் விஜயநகர ஸமஸ்தானத்துக்குத் தெரிவிக்க, இராயனு கேட்டு, விசுவநாதருடைய வீர தீரத்தையும், இராஜ விசுவாசத்தையும் பற்றிப் புகழ்ந்து, இவ் விசுவ நாதரால் சிறையாகப் பிடிக்கப்பட்டிருந்த நாகம நாயடை விசுவநாத நாயடுமேலிருந்த விசுவாசத்தின் பொருட்டு விடுதலை செய்யும்படியாகவும், விசுவநாதரைப் பாண்டிய னுக்குக் கொஞ்சகாலம் உதவியாகவிருந்து சகாயம் செய்யும்படியாகவும் சொல்லியனுப்பினர்.

இப்படிப் பட்டம்பெற்ற இந்தச் சந்திரசேகர பாண்டியன் வைப்பாட்டி மகன் என்றும், இராஜ்ஜிய பரிபாலனம் செய்யும் சக்தியும் சேனையும் அற்றவனென்றும், ஆகவே, மதுரையில் மறுபடியும் கலகங்க ளுண்டாகுமென்றும், அப்போது விசுவநாதரிடம் போதுமான தண்டு தளாதிக ளிருப்பதோடு, இவருடைய இனத்தார் இத் தென்னாட்டில் இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் குடியேறி இருப்பதால், அரசருக்கு அவர்களுடைய சகாயமும் கிடைக்குமென்றும், கடைசியாக விசுவநாதர் சத்தியம், சாந்தம், சுவாமிபக்தி, பரோபகாரம், குடிகளிடத்துப் பச்சாத்தாப முதலான குணச்சிறப்புகளை இயற்கையாகவே பெற்றிருப்பதாலும், இப்படிப் பெற்ற விசுவநாதரென்னும் உத்தமனை மதுரையில் சிலகாலம் தங்கும்படிச் செய்ய வேண்டுமென்றும், மதுரைக் குடிகள் திரண்டு விஜயநகரத்தாரிடம் முறையிட்டுக்கொள்ள, அவ் விஜயநகரத்தாருஞ் சந்தோஷமடைந்து, விசுவநாதரை மதுரையிலிருந்து பாண்டியனுக்கு வேண்டிய உதவியையும், குடிகளுக்கு வேண்டிய சகாயத்தையும் செய்யும்படி உத்தரவனுப்ப, விசுவ

நாதரும் சமஸ்தான உத்திரவின்படி பாண்டியனுக்கு உதவிகள் செய்துகொண்டும், அப்போது பழனி திண்டுக்கல் மதுரைக் கடுத்த பயங்கரமான காடுகளைக் களைத்து விவசாயம் செய்து ஜீவனம் செய்யும்படி தம்மினத்தாருக்கு நிலங்களைக் கொடுத்தும், குடித்தனத்துக்கு வேண்டிய சாதனங்களைச் செய்தும் வருகையில், சந்திரசேகர பாண்டியன் பரமபதமடைய, அவன் பாலிய குமாரன் வீரபாண்டியன் சிங்காசன மேறினான். அந்தப் பாலிய பாண்டியனும் அற்பாயுசாக இறந்துவிட, பாண்டிய நாட்டிற்கு வார்சுகளில்லாத குறையைப்பற்றி விஜயநகரத்தாருக்கு அறிவிக்க, அவர் விசுவநாதருடைய உண்மையையும், உதாரத்தையு மறிந்து இவரையே பாண்டியநாட்டிற் கதிபதியாக்கி, சிங்காசன மேற்றி ஆண்டுவரச் செய்யவேண்டுமென்று தீர்மானித்து, மகுடாபிஷேகத்துக்குக் கங்கை ஜலத்தோடும், விஜயநகர துர்க்கையின் பிரதிமையோடும், பிராம்மண பண்டிதர்களும் உத்தரவின்படி மதுரைக்கு வந்து விசுவநாதருக்கு இரவுத்திரி நாமஹு கார்த்திகைமீ 15உ கூடிய சுபதினத்தில் பாண்டிய நாட்டுக்குப் பட்டம் கட்டிவைத்தார்கள்.

## விசுவநாத நாயடுகாரின் ஸமஸ்தானம்.

(கி. பி. 1559-ஹு முதல் 1563ஹு வரையில்.)

இப்படிப் பாண்டியநாட்டுக்குப் பட்டம் கட்டப்பெற்ற விசுவநாதநாயடுகாரு சிங்காசனமேறி இராஜ்ஜியபாரத்தைத் தாமே நேரில் நடத்த வாய்க்கவே, பாண்டிய நாட்டுக் குடிகள் இவருடைய தரும குணங்களையும், சுத்த வீரத்தனத்தையும் கண்டு இவரிடம் நம்பிக்கை யுண்டாகி நாட்டுப் புறங்களுக்கு வலசையாகப் போயிருந்த பெரும்பான்மையான மானமுள்ள குடிகளெல்லோரும் மறுபடியும் நாட்டில் வந்து வசிக்க ஆரம்பித்தார்கள். குடித்தனம் விவசாயம் செய்யும் கிருஷிகர் குதூகலமடைந்து, கிருஷிக்கு வேண்டிய காடு நிலங்களைத் தர்காஸ்துசெய்து தரும்படி தேடிக்கொண்டுவந்தார்கள். பிரம்மஞானத்திற் சிறந்த பிராம்மணர்களெல்லாரும் தங்களுக்கு வேண்டிய அக்கிரஹாரங்களையும், கோயில் குளங்களையும் நியமித்துத் தரும்படி தோத்திரம் செய்துகொண்டு வந்தார்கள். விசுவநாதர் சோழன்மீது படையெடுத்து வந்தபோது இவருக்குத் துணைநின்று சண்டை செய்து உதவிய உறவினர் முதலானவர்கள் தங்கள் விசுவாசத்துக்கும், உதவிகளுக்கும் தக்க

பகுமான மிராசு மானியங்களைத் தரும்படி கேட்க எதிர்பார்த்தார்கள். மேலும், புராதன பாண்டியர்களுடைய வைப்பாட்டி மக்களிற் சிலர் கள்வர் மறவர் முதலான சிலர்களைக் கூட்டி நாட்டில் குட்டிக்கலகங்கள் செய்ய ஆரம்பித்தார்கள். இப்படிப் பாண்டியநாடு தலைவிரி கோலமாக இருப்பதை யறிந்த விசுவநாத நாயடுகாரு, இவ்வித குறைகளை நீக்கிக் குடிகளுக்குச் சுகவாழ்வை உண்டாக்க வேண்டிய வன்மையைத் தர தமது இஷ்ட தேவதையை வணங்கி வேண்ட, அத்தேவதையின் அருளால் அப்போது அரியநாயகம் என்னும் உத்தம மந்திரி அகப்பட்டார்.

---

## அரியநாயக முதலியாரவர்கள்.

இந்த அரியநாயகம் எவரென்றால், காஞ்சீபுரத்துக்கு அருகில் மெய்ப்பேடு என்னும் கிராமத்தில் ஒரு ஏழை வேளாளர் குடும்பத்தில் பிறந்தவர். இவர் சிறு குழந்தையாக இருந்தபோது, பெற்ற தாயார் இவரை ஓர் பாயின் மேல் படுக்கவைத்து ஜலத்துக்கு வெளியே போயிருக்கும் போது, ஒரு பெருநாகம் வந்து இக்குழந்தையின் உடலைச் சுற்றிக்கொண்டும், அதன் படத்தைக் குழந்தையின் தலைக்குமேல் குடைபோல் மறைத்தும் நிற்க, மாதா வந்து பார்த்து பயந்து பாம்பை யோட்டிப் பிள்ளைக்குண்டான பயங்கரத்தைப் பெரியோரிடம் சொல்ல, அப்பெரியோர் கேட்டு, "இந்தப் பிள்ளை பிரபல பிரபுவாக வாழ்வான்" என்று சொல்லினராம். பிறகு பிள்ளைக்குப் பதினைந்து வயதானபோது, ஓர் பிராம்மண ஜோஷியர் கண்டு, "நீ பிரபல பிரபு ஆவாய்! அப்போது உனக்குண்டாகும் சொத்தில் கால்பாகம் எனக்குத் தரவேண்டும்" என்று ஜோஸ்யம் சொன்னாராம்.

இப்படி அரியநாயகம் சிறுபிள்ளையாக இருந்தபோதே இவருடைய பிற்காலத்துப் பிரபலத்தைச் சொல்லுவதற்குத் தகுந்தபடி, இவர் கல்வியில் முக்கியமாகக் கணிதத்தில் நிபுணராயும், மல்யுத்தம் வில்யுத்தம் முதலான யுத்தப் பயிற்சிகளிற் சிறந்தவராகியும் இருந்தபடியால், விஜயநகர சமஸ்தானபதியினிடம் யாதாவது ஒரு வேலையைச் சம்பாதிக்கலாமென்று போக, அங்கு இராயலு சமஸ்தானத்தில் ஓர் சிக்குமுக்கலான கணக்கினால் சபையார் சர்ச்சித்துக்கொண்டிருந்ததை இந்த அரியநாயகம் கண்டு,

உடனுக்குடனே அக் கணக்கின் விவரத்தை வெட்டவெளியாக்கியும், இராயனுடைய ஜாதகத்தைப் பரிசோதித்து ஜோஸ்யம் சொல்லியும், நவராத்திரி காலத்தில் கொல்லும் எருமைக் கழுத்தின் குறிப்பான இடத்தைக் காட்டியும் வந்ததினால் இராயனுக்குச் சந்தோஷம் ஜனித்து, தமது அரண்மனையில் ஒரு கணக்குப்பிள்ளை வேலையில் அமர்த்திக் கொண்டார். இவர் இப்படிச் சிறுவேலையில் அமர்ந்திருக்கும் நாளில், இவருடைய புத்தி யூகத்தை இராயனு கண்டு இவரைத் தமது மந்திரிகளில் ஒருவராக்கியும், இவருக்குப் பல்லக்கு மரியாதையையும், முதலியார் என்கிற பட்டத்தையும் கொடுத்து மரியாதை செய்தார்.

அதாவது, விஜயநகர ஸமஸ்தான பிரபுக்கள் பிரதி வருஷமும் காட்டிற்குள் வேட்டைக்குப் போய், ஓர் காட்டெருமையை வலைவீசிப் பிடித்து வந்து, தமது ஸமஸ்தானத்தில் பிரதிவருஷம் நடக்கும் நவராத்திரி கொலு உற்சவ காலத்தின் பத்தாம்நாள் உற்சவத்தன்று கோட்டைக்காவல் காளிகாதேவியின்முன் ஒரே வெட்டில் சிரம் வேறு முண்டம் வேறாக வெட்டிப் பலி கொடுப்பது புராதன வழக்கம். அவ் வழக்கத்தை அனுசரித்து அந்த வருஷமும் காட்டிற்குள் சென்று கம்பீரமான ஒரு காட்டெருமையைப் பிடித்துக் கொண்டுவந்து, கோட்டைக்காவல் காளிகாதேவியின் முன் பலிகொடுக்க வந்தபோது, அந்தக் காட்டெருமையின் கொம்புகள் அதிகமாக நீண்டும், விரிந்தும் இருந்தமையால், அப்படிப்பட்ட பயங்கர கொம்புகளையுடைய எருமையை, ஒரே வெட்டில் வெட்ட முடியாமல் காவலாளிகள் மனோராச்சியம் செய்தார்கள். அந்த எருமையின் சிரசு ஒரே வெட்டில் துண்டிக்கப்படாவிடில், சமஸ்தானத்துக்கே கெடுதி யுண்டாகு மென்கிற சகுண பயமிருப்பதால், இந்தப் பயத்தைக் கருதி இக் கருமத்தைச் செய்ய இராயனு முதலானவர்கள் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியெண்ணி ஏக்கமுற் றிருக்கையில், இத்தியாதிகளை அறிந்த அரியநாயகம் ஓடிவந்து அந்த எருமையை எப்படி நிற்க வைத்து, எந்தவிடத்தில் எப்படி வெட்டினால் துண்டாகும் என்னும் உபாயத்தைச் சொல்ல, அந்த உபாயத்தின்படி காவற்காரர்கள் வெட்ட, எருமையின் கழுத்து ஒரே வெட்டில் வெட்டப்பட்டதைக் கண்டு, இராயனும் மற்றுமுள்ள ஸமஸ்தானத்தாரும் அரிய நாயகத்தின் ஆழ்ந்த யுக்திக்கு

ஆநந்தித்து, அவரை அரண்மனையில் அந்தஸ்தான உத்தியோகத்தில் அமர்த்தினார்கள். இந்த விருத்தாந்தத்தைப் பற்றி கனம் டெயிலர் (W. Taylor) வேறு விதமாக எழுதியிருக்கிறார். அதாவது, அப்போது 16 வயதையுடைய இந்த விசுவநாத நாயடுகாரின் சொப்பனத்தில் காளிகாதேவியார் வந்து அந்த எருமையின் கழுத்தை வெட்டவேண்டிய இடத்தைக் குறிப்பாகச் சொன்னதாகவும், அந்தச் சொப்பனத்தின்படி விசுவநாத நாயடு எழுந்து ஸமஸ்தான ஆயுதச் சாலையிலிருந்த 2 முதல் 8 அங்குல அகலமுள்ள கத்தியைக் கொண்டுவந்து எருமையின் கழுத்தை வெட்டிக் கீர்த்தி பெற்றாராம். (Vide Pages 7. 15 Vol 2. O. H. N. by Rev. W. Taylor.)

இப்படி அரண்மனையில் அந்தஸ்தான அலுவலில் அமர்த்தப்பட்ட அரியநாயகம், அன்றொருநாள் அதி வீரதீரரென்கிற சில மல்ல கஜட்டிகளோடு மல்லயுத்தம் செய்து ஜயித்த சங்கதி யறிந்த இராயலு அவரை ஒரு தளகர்த்தராகவும் நியமித்துக்கொண்டிருந்து, நாகம நாயடுக்கு விரோதமாக விசுவநாத நாயடு தெற்கே தண்டுடன் போனபோது இந்த அரியநாயகத்தையும் துணையாக அனுப்பினார்.

இப்படித் துணையாக வந்த அரியநாயகம் பாண்டிய நாட்டை ஜயித்தபிறகு, கேவலம் தண்டு தளாதிகளை விசாரணை செய்துகொண்டிருந்தார். இவருடைய மனோவலிமையையும், தேக தாருட்டியத்தையும், தீரத்தன்மையும், சத்தியம், சாந்தம், சுவாமிபக்தி, பரோபகாரம், இராஜவிசுவாச முதலான குணச்சிறப்புக்களையும் நன்கறிந்திருந்த விசுவநாத நாயடுகாரு தாம் சிங்காசன மேறியபிறகு தமது தரும ராஜ்ஜிய பரிபாலனத்துக்கு உண்மையாக உதவி செய்ய, இந்த அரியநாயகத்தைவிடத் தக்கவர் கிடையாதென்று தெரிந்து, இவரையே தமது முதல் மந்திரியாகவும், தளவாய் தளகர்த்தராகவும் நியமித்தும், இவருக்கு முதலியார் அதாவது பாண்டிய நாட்டு நாயடு ஸமஸ்தானத்திற்கு முதன்மையானவரென்று முடி சூட்டினார்.

இப்படி முதலியார் என்று மகுடம் பூண்ட அரியநாயக முதலியார் மந்திரி தளகர்த்தராக நியமிக்கப்படவே, அரியநாயக முதலியாரும் உடல்வேறு உயிரொன்றாக விசுவநாத நாயடுடன் கூடி, அவருடைய ஸமஸ்தான காரியங்களை எல்

லாம் ஆழ நீள ஆராய்ந்து தீர்மானித்துப் பாண்டிய நாட்டிற்கு நன்மை செய்யவேண்டிய காரியங்களைக் கையாடினார்கள்.

## விசுவநாத நாயடுகாரும், அரியநாயக முதலியாரும் பாண்டியநாட்டிற் செய்த காரியங்கள்.

மஹாமதியூகியாகிய அரியநாயக முதலியாரை மந்திரியாகக் கொண்ட விசுவநாத நாயடுகாரு, முதலில் மதுரை மீனாக்ஷியம்மன் கோயிற் சுவரின் ஓரமாகக் கட்டப்பெற்றிருந்த புராதன பாண்டியருடைய கோட்டை கொத்தளம் வாய்க்கால்களை இடிப்பித்து, அவ்விடத்தில் இரட்டைச் சுவர்க் கோட்டையைக் கட்டுவித்தார். புராதன கோயில் கோபுரம் குளங்களைச் செப்பனிட்டுப் பிராமணர்களுக்கு வேண்டிய அக்கிரஹாரங்கள், வீதிகள், குளங்கள், குட்டைகள் இவற்றை உண்டாக்கினார். கிருஷித் தொழிலுக்குப் போதுமான பாசன வசதிகள் பக்குவமாக இல்லாமையால், வைகை நதியின்மேல் பேரணை, சிற்றணைகளைக் கட்டி, நதியின் மேற்பாகத்தில் அநேகங் கால்வாய்களை வெட்டி, அவ்விடங்களிலுள்ள நிலங்களை உழுது பயிரிடக் குடிகள் வசிக்கத்தக்க கிராமங்களைக் கட்டுவித்தார். இத்தியாதி செலவுகளுக்கு ஸமஸ்தானத்தில் போதுமான திரவியமில்லாமையால், விசுவநாத நாயடுகாரு தமது தந்தை நாகம நாயடுடைய (பிரைவேட்) சொந்தப் பொக்கிஷத்திலிருந்து பொருளைத் தருவித்தும், மந்திரி அரியநாயக முதலியாருடைய யுக்தி யோசனையின்படி பணத்தைச் செலவழித்தும் குடிகளுடைய சுகத்தை விருத்தியாக்கினார். இப்படிச் செய்யவே, இதற்கு முன்பு ஒரு காணிபூமியைக்கூடக் கிருஷிசெய்யாதவர்களெல்லோரும், கிருஷி வேலைக்கு ஆரம்பித்ததில் நாட்டுப்புறத்தில் பயிரிடாத பூமியைக் காண்பதபூர்வமாகி விட்டதன்றியில், அக்காலத்தில் தஞ்சை ஸமஸ்தானத்தைச் சார்ந்திருந்த திரிசிராப்பள்ளிவரைக்கும் பயிரிட்டுச் சில சமயங்களில் தஞ்சை மன்னருடைய பூமியிலும் பயிரிடச் சம்பவித்து, இரண்டு இராஜர்களுக்குள்ளும் (பாண்டிய தஞ்சை ராஜர்கள்) எல்லைத் தகராறும் உண்டாகச் சம்பவித்தது. அன்றியும், அக்காலத்தில் இராமேசுவரம், ஸ்ரீரங்கம் இத்தலங்களுக்கு யாத்திரை செய்யும் சாதுக்க

ளுக்குத் தக்க வழிகளும் வசதிகளு மில்லா திருப்பஜைதயும், யாத்திரைக்காரர் காடு கரடுகளிலும் கள்ளர் மறவர் கைகளி லும் சிக்கித் தத்தளிப்பதையும் நீக்கக் கருதித் திரிசிராப் பள்ளி நாட்டை மதுரைக்கும், மதுரையைச் சார்ந்த வள் ளங்கோட்டையைத் தஞ்சாவூருக்கும் மாற்றிக்கொண்டால் நலமெனத் தகுந்த நியாயங்களுடன் தஞ்சை மன்னருக்கு அறிவிக்க, அவரும் தமது கேவல ஸ்திதியைக் கருதிச் சம் மதித்துக்கொண்டார்.

இப்படிச் சம்மதித்துத் திரிசிராப்பள்ளியைக் கொடுக்க வே, அங்கிருந்த புராதனக்கோட்டையை நீக்கி, அதே இடத் தில் புதிய கோட்டையைக் கட்டியும், அந்நகரத்தைச் சுற்றி லும் இரட்டை மதில் சுவர் எழுப்பியும், அதன்கீழ் அக ன்ற வாய்க்கால்களை வெட்டிக் காவிரிஜலத்தால் நிறப்பியும், கோட்டைக்குள் அநேக அக்கிரகாரங்கள், வீடுகள், வீதி கள், கிணறுகள், கோயில்கள், கடைகள், பண்டசாலைகள் முதலானவைகளை நியமித்தும்; நானாதேசத்துக் குடிகள், கிருஷிகர், வர்த்தகர், கைத்தொழிலாளர்கள் வந்து வசிக் கும்படியான வசதிகளை நியமித்தும், காவிரிநதியின் இரு பக்கங்களிலு மிருந்த பயங்கரமான காடுகளை வெட்டி யாத்திரைக்காரர் நிர்ப்பயமாகச் சஞ்சாரம் செய்யவும், அவர்களுடன் துணையாகப் போய்வரவும் சில சிப்பாய் சேவ கர்களை நியமித்தும், ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தில் அநேக வேலை களைச் செப்பனிட்டும் புதுப்பித்தும், மாணியங்களைக் கொடு த்தும் வரவே, பற்பல நாட்டுப் பணக்காரரான யாத்திரிகர் பணபயம் பிராணபயமற்று யாத்திரைசெய்யவும், இந்நாட் டின் செழிப்பையும் சுதந்திர சுகவாழ்வையும் கண்டு இந்த ஸமஸ்தானத்தில் வந்து தங்கி வர்த்தக வியாபாரம் முதலான வைகளைச் செய்யவும் ஆரம்பித்தனர். இப்படி விசுவநாத நாயடு திரிசிராப்பள்ளியில் சீர்திருத்தங்கள் செய்துவரும் போது, தெற்கே திருநெல்வேலியைச் சீர்திருத்தப் போயி ருந்த அரியநாயக முதலியாரிடம் 'பஞ்சபாண்டியர்கள்' என்ற பெயரால் தாங்கள் பழைய பாண்டியர்களுடைய சந் ததிகளென்றும், விசுவநாதருடைய ஆக்கினைக்கு நாங்கள் அடங்கி நடக்கமாட்டோமென்றும் கூறி, காயத்தட்டூரிலிரு ந்து எதிர்த்தார்கள். அவர்களுக்கு அரியநாயகம் பலவித மான புத்திமதிகளைச் சொல்லியும், தந்திரங்களைச் செய்தும் அவர்களை வெல்லக்கூடாமையாலும், அப்போது தம்மோடு

இருந்த சேனை கொஞ்சமாக இருந்தபடியாலும், இக்கஷ்டத்தை உடனே விசுவநாதருக்கு அறிவித்தார்.

விசுவநாதர் இச்சங்கதியைக் கேட்டவுடனே காலதாமதமின்றிக் காலாள் குதிரை பட்டாளங்களுடன் திருநெல்வேலிக்கு வந்து, அந்தப் பஞ்சபாண்டியர்களைக் கண்டு பகிரங்கச் சண்டைக்கு வரும்படி கேட்க, அவர்கள் விசுவநாத நாயடுவின் பட்டாள வல்லமையைக் கண்டு, அவருடன் எதிர்த்துச் சண்டைசெய்யச் சேனையும் திரவியமுமில்லை என்றும், விசுவநாதர் ஒருவருடனே ஒரே காலத்தில் மல்லயுத்தம் செய்யமாத்திரம் தங்கள் ஐவருக்கும் சக்தி இருக்கின்றதென்றும் சொல்லி யனுப்ப, விசுவநாதரும் அதற்குச் சம்மதித்துத் தமது சேனையையும், ஆயுதத்தையும் அரிய நாயகரிடம் கொடுத்துவிட்டு அவருக்கு எதிராகவே வந்து அந்த ஐந்து பாண்டியர்களிடம் தாம் தனியாக நின்று மல்லயுத்தம்செய்து, எதிரிகளில் முக்கியமானவனைக் கொன்று ஜயித்ததில், மற்ற நால்வரும் விசுதநாதருடைய தோள் வலிமைக்கு மெச்சித் திருநெல்வேலியையும், அதையடுத்த நாடுகளையும் விட்டுப் போய்விட்டார்கள். (Vide the History of Carnatic Governers.) இப்படி ஜயித்த விசுவநாத நாயடுகாரு திருநெல்வேலியைப் புதிய கட்டிடங்களினாலும், கோயில் கோபுரங்கள் குளங்களினாலும் புதுப்பித்தும், தாம்பிரபாணி நதிக்கரையோரமாகவிருந்த அசங்கிதமான குடிசைகளை நீக்கிப் புது வீடுதிகளைக் கட்டுவித்தும், தாம்பிரபாணி நதியின் ஜலத்தைக் குடிகளும், கிருஷிகளும் உபயோகப்படுத்திக்கொள்ளக் கால்வாய், வாய்க்கால் முதலிய பாசனவசதிகளை நியமித்தும்; பிராமணருக்கு வேண்டிய கோயில், கோபுரம், அக்கிரஹாரங்களை நியமித்தும், குடிகளால் நல்ல புகழையும், பிரதிஷ்டையையும் பெற்றார்.

விசுவநாதர் இப்படித் தெற்கே திருநெல்வேலியில் சீர்திருத்தங்களைச் செய்துவருகையில், திண்டுக்கல்லை யடுத்த கம்பம் கூடலூர்த் தலைவன் சோழன் தன்னைத் தாக்கிய போது, பாண்டியர் உதவி செய்யாமல் விட்டுவிட்டபடியால், தான் விசுவநாதருக்குக் கிரமப்பிரகாரம் கப்பம் கட்டுவதில்லை என்று கலகஞ்செய்ய ஆரம்பித்தபடியால், உடனே தக்க தண்டுகளுடன் திண்டுக்கல் சார்புக்குப்போய்க் கலகக்

காரனிடம் சண்டைசெய்து, அவன் கோட்டையைப் பிடித்து, அவன் கொட்டத்தை அடக்கினார்.

இப்படித் தென்னாடுகளின் கலகங்களை அடக்கி நாட்டை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவந்தாலும் வேறொரு கஷ்டம் சம்பவித்தது. அதாவது, விசுவநாத நாயடு மதுரைக்கு வரும்போது அவர்கூட வந்த நாயடுமார்களும், கன்னடியார்களும், வேறு சிலரும் வேண்டிய உதவிகளை உண்மையோடு செய்துவந்தமையால், அவர்கள், விச்வநாத நாயடே பாண்டிய நாட்டிற்குச் சக்கிரவர்த்தியானதில், தமக்குத் தக்க சிறு ஸமஸ்தானங்களையும், சம்பத்துக்களையும், பஹுமானங்களையும் கொடுப்பாரென்று பொறுமையோடு காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குத் திருப்தியாகக் கொடுத்துக் கௌரவிப்பது கஷ்டமாக விருந்தது. ஆயினும், விசுவநாத நாயடும், அரியநாயக முதலியாரும் இக்கஷ்டத்தை நீக்க ஓர் உபாயம் செய்தார்கள். அதாவது, பாண்டிய நாட்டைச் சுற்றிலும் 72 கொத்தளங்க ளிருந்தமையால், அக்கொத்தளங்களுக்குத் தக்க வீரரைத் தலைவர் அல்லது பாளையக்காரராக நியமித்தும், அவர்கள் இராஜாங்கத்துக்கு உதவியாக வருஷாந்திரம் இவ்வளவு ரொக்கம் கப்பமாகக் கட்டும்படிக்கும், ஸமஸ்தானத்தின்மேல் எதிரிகள் சண்டை செய்ய வரும்போது, தக்க தண்டு தளாதிகளைக் கொடுத்து உதவிசெய்யும்படிக்கும், இத்தியாதி செலவுகளுக்குச் சில பல கிராமங்களையும், பட்ட பிருதுகளையும், அப்பாளையக்காரர்களுக்குக் கொடுத்துக் கௌவிரத்தால், அவர்கள் ஆனந்தமடைந்து இராஜவிசுவாசமாகவும், தம் பின் சந்ததியாருக்கு உதவியாகவும் இருக்கக்கூடு மென்றும் எண்ணி ஏற்படுத்தியதேயாம்.

---

## THE ZAMINDARS OF MADURA.
## பாண்டிய நாட்டின் பாளையப்பட்டுகள் அல்லது ஜமீன்கள்.

இந்த எண்ணத்தின்படி 72 பாளையப்பட்டுகளை ஸ்தாபித்தும், அவைகளுக்குத் தம்மினத்தாரில் உதவிசெய்த வீரர்களையும், மற்றப்படி பொதுவாகப் பாண்டியநாட்டிற்கு உதவி செய்தவர்களையும் பாளையக்காரர்கள் அல்லது ஜமீன்

தாரர்களாக நியமித்தும், அவர்களுக்கு இனமாக அநேக கிராமங்களையும், பிருதுகளையும் கொடுத்தார்கள். மதுரைச் சீமையின் விருத்தாந்தத்தில், மதுரையைச் சுற்றியும் அம்மய நாயக்கனூர், நிலக்கோட்டை, வடகரை, போடிநாயக்கனூர், கோம்பை, தேவாரம், கண்டப்பநாயக்கனூர், தோட்டயநாயக்கனூர், காமநாயக்கனூர், மாதவநாயக்கனூர், தும்பிச்சைநாயக்கனூர், சந்தையூர், ஏழுமலை, பாவாளி, கவுண்டன் கோட்டை, கண்ணியாவாடி, விருப்பாக்ஷி, ஆயக்குடி, எமக்கலாபுரம், ஒன்பதூர், கூளப்பநாயக்கனூர், நிலக்கோட்டை, இராசக்கநாயக்கனூர், சத்திரப்பட்டி, மாரூரு, மருங்காபுரி, செங்குருச்சி, பிள்ளைவிழுங்கி, இராமகிரி, இடையகோட்டை, தோகைமலை, வீரமலை, வெள்ளியகுன்றம், சிறுபாலை, மாம்பரை, பள்ளியப்பநாயக்கனூர், எரியோடு, சொக்கம்பட்டி, மாரநூற்று, தவசிமடை, அம்பட்டரை, தேவதானப்பட்டி, புதுக்கோட்டை, சிவகங்கை, இராமநாதபுரமாகிய 47 பாளையப்பட்டுகளைமாத்திரம் குறித்திருக்கின்றன. மற்ற 25 பாளையப்பட்டுகள் மறைத்திருக்கும் காரணம் தெரியவில்லை.

போடிநாயக்கனூர் பாளையக்காரர், 1336 - ம் வருஷம் மகமதியரால் தாக்கப்பட்டு இங்கு வந்தார்கள். இவர்கள் ஒருவகை மலையாளத்தார். இவர்களில் எட்டுத்தலைவர் பிரபலரானார்கள். கடைசித் தலைவரான சிலாபோடி நாயடும், அவர் குமாரர் பங்காருமுத்து நாயடும் 60-ஆவது கொத்தளத்துக்குத் தலைவரானார். வைகை நதிக்கு வடக்கே வடகரை ஜமீன்தாரராயிருக்கும் ஸ்ரீராமபத்திர நாயடுகாருடைய ஆதிபிதா நாகம நாயடுடன் காசிக்குப் போயும், அவருடன் கூட மதுரைக்கு வந்தும் உதவிசெய்த நன்றியில், கம்பம் சண்டையில் தக்க உதவி செய்ததனால் அவர் சந்ததிகளுக்குப் பழனிக் கருகிலிருக்கும் வடகரை பாளையப்பட்டு கொடுக்கப்பட்டது. தவசிமேடு பாளையப்பட்டுக் கதிபதி சொட்டலநாயடு, குட்டியைச் சார்ந்த தொட்டிய ஜாதியர். இவருடைய ஆதிதந்தை நாகம நாயடு தேக உபாதையோடு பழனிக்குப் போனபோது வைத்தியம்செய்து உதவியதனால் இப் பாளையப்பட்டைப் பெற்றார். இப்படியே மற்றப் பாளையக்காரர்களும் ஒவ்வொரு காரணத்தைப்பற்றிப் பாளையக்கார ரானார்கள்.

## மதுரை ஜில்லா இங்கிலீஷ்காரர் வசமாகி மிஸ்டர் வின்ச் (Mr. Wynch) காலத்தில் (1795௵ நவம்பர்௴ 24௳) மதுரையைச் சார்ந்த 24 பாளையப்பட்டுகளின் விவரம் வருமாறு:

(1) கோம்பி:—3000 சக்கரம் வருமான முள்ளது. 1500 சர்க்கார் கிஸ்தி. சக்கர மென்றால் கிட்டத் தட்ட இரண்டு ரூபாய் விலையுள்ள நாணயம். அப்பாஜி கவுண்டர் பாளையக்காரர்; கம்பளிய ஜாதி; அவருக்கு 100 சேவகர்க ளுண்டு.

(2) எச்சக்க நாய்க்கனூர்:—500 சக்கரம் வருமானம்; பாளையக்காரர்; கம்பளியஜாதி; வாலிபர்.

(3) தேவாரம்:—357 சக்கர வருமானம். 110 சக்கி ரம் சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரர் கம்பளத்தார். போடி நாயக்கனூர் மாப்பிள்ளை.

(4) போடி நாயக்கனூர்:—7000 சக்கர வருமான முள்ள பெரிய பாளையப்பட்டு. திருமலபோடி நாய்க்கர் என் பவர் பாளையக்காரர். கம்பளத்தார். இது 5000 சக்கரம் கிஸ்தி தரக்கூடுமாம்.

(5) கண்டப்ப நாயக்கனூர் :—பெரிதும், உபயோக மற்ற நிலமுள்ளது. 4500 சக்கரம் வருமானம். 1900 சக்க ரம் சர்க்கார் கிஸ்தியுள்ளது.

(6) தேவதானப்பட்டி:—4000 சக்கரம் வருமானம். 3100 சர்க்கார் கிஸ்தி. நல்லதாச நாயக்கர் என்னும் பாளையக் காரர் கம்பளத்தார்.

(7) தொட்டியன்கோட்டை:—1600 சக்கரம் வருமா னம். சுல்தான் காலத்தில் 850 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. தொட்டப்ப நாய்க்கரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(8) நிலக்கோட்டை:—9000 சக்கர வருமானம். 7000 சக்கரம் கிஸ்தி. கோலப்ப நாயக்கரென்கிற பாளயக்காரர் கம்பளத்தார்.

(9) அம்மய நாயக்கனூர்:—அநேக மலை நாடுகளுடன் சேர்ந்த பெரிய பாளையப்பட்டு. 11,000 சக்கரம் வருமா னம். 3,600 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. கத்திரப்ப நாயக்க ரென்கிற பாளையக்காரர் கம்பளத்தார்.

(10) அம்பலத்தாரு:—2000 சக்கரம் வருமானம். 1500 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. மகாபல நாயக்க ரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(11) தவசுமேடை:—65 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. சோட்ல நாயக்க ரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(12) எமகாலபுரம்:—550 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரர், கம்பளத்தார்.

(13) மறவநாடு:—கம்பளஜாதி. சின்ன அளகிரி நாயக்கர் பாளையக்காரர்; 600 சக்கரம் சர்க்கார் கிஸ்தி.

(14) சொக்கம்பட்டி:—பழனிமுத்துநாயக்கர் பாளையக்காரர்.

(15) எரியோடு:—12 கிராமங்களும், 39 சிறு கிராமங்களுமுள்ள பெரிய பாளையப்பட்டு. 9000 சக்கரம் வருமானம். 6700 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரராகிய முத்துக்குமாரவேலு பெல்லகொண்டமநாயக்கர், வடுகர்.

(16) பள்ளியப்ப நாயக்கனூர்:—2000 சக்கரம் வருமானம். 1000 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. பழனியப்ப நாயக்க ரென்னும் பாளையக்காரர், கம்பளத்தார்.

(17) இடையகோட்டை:—நல்ல பாளையப்பட்டு. சர்க்கார் கிஸ்தி 2337 சக்கரம். பாளையக்காரர் கம்பளத்தார்.

(18) மாம்பறை:—400 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. சாகரம் தொம்மநாயக்கர், கம்பளத்தார்.

(19) பழனி:—பெரிய பாளையப்பட்டு. இது பழனி, இட்டம்பாடி, ஆயக்குடி என்று மூன்று பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது. இந்தப் பாளையப்பட்டு முன் 80,000 ரூபாய் கிஸ்தி கட்டிக்கொண்டுவந்து, பிறகு 16,000 சக்கரமாகக் கட்டியது. 25,000 சக்கரம் கட்டக்கூடிய ஸ்திதியிலிருக்கிறது. இதன் முன் பாளையக்காரராகிய வேலாயுத நாயக்கர், வேடஜாதியார்.

(20) ஆயக்குடி:—8000 சக்கரம் வருமானமுடையது. 4000 சக்கரம் சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரராகிய ஓபிளி கொண்டம நாயகர், வேடஜாதி.

(21) விருபாக்ஷி:—மலைநாடாகிய இது பெரிய பாளையப்பட்டு. 12,000 சக்கரம் வருமானம். 6000 சர்க்கார் கிஸ்தி. பாளையக்காரர் குப்பண்ண நாயக்கர், கம்பளத்தார்.

(22) கண்ணியவாடி:—இது 14 பெரிய கிராமங்களும், 48 சிறு கிராமங்களுமுள்ள பெரிய பாளையப்பட்டு. 21,000 சக்கரம் வருமானம். 12300 சர்க்கார் கிஸ்தி.

(23) மாதூர்:—பெரிய பாளையப்பட்டு. கடனில் மூழ்கி விட்டபடியால், கவர்ன்மென்டார் மானேஜ்மென்டில் இருக்கிறது. பாளையக்காரர் வேங்கடசாமி நாயடு. (Vide Pages 9 to 16 Pages IV. Dt. Manual, Madura.)

இனி வடகரை, எட்டயாபுரம், இராமநாதபுரம், சிவகங்கை, புதுக்கோட்டை முதலான சில பெரிய பாளையப்பட்டு ஜமீன்களின் சங்கதிகளைச் சங்கிரகமாக இதனடியிற் காணலாம்.

---

## வடகரை ஜமீன்தாரரின் விவரம்.

வடகரை ஜமீன்தாரரவர்களுடைய ஆதி தந்தையாகிய ஸ்ரீராமபத்திர நாயடுகாரு மதுரையில் முதலில் ஆண்டு வந்த இராஜா கோட்டய நாகம நாயடுகாருடைய சேனைத் தலைவராக இருந்தவர். இந்த நாகம நாயடுகாருக்குப் புத்திர சந்தான மில்லாக் குறைவால் காசிக்ஷேத்திரத்திற்கு யாத்திரை போனபோது; அவருடைய சமஸ்தானத்தை இந்த ஸ்ரீராமபத்திர நாயடுகாரு அவருக்குப் பிரதிநிதியாக இருந்து இராஜ்ஜியத்தை யாண்டுவந்த தன்றியில்; நாகம நாயடுகாரு சோழராஜாவின்மேல் படையெடுத்துப் போன போதும், பிறகு ஸ்ரீ விசுவநாத நாயடுகாரு மதுரையைப் பிடிக்க வந்தபோதும், தக்க உதவிசெய்து வந்ததன்றியில்; கம்பம் கோட்டையை முற்றுகை போட்டதில் விசேஷ உதவி செய்ததனால், அவரைப் பழனிக்கருகிலும், வைகை நதிக்கு வடகரையிலு மிருக்கும் வடகரை பாளையப்பட்டுக்கு பாளையக்காரராக ஆக்கினர். இந்த வடகரை பாளையக்காரரும், சொக்கம்பட்டி ஊற்றுமலை பாளையக்காரர்களும் இராமநாதபுரம் சேதுபதி யவர்களுக்கு மற்றப் பாளையக்காரர்களைப்போல எவ்விதமான வணக்கமும் செய்வதில்லையாம். 1795ஸு இதன் வருமானம் 6500 சக்கரமாம்.

இப்போது இந்த வடகரை ஜமீன்தாரராக இருக்கும் ஸ்ரீமான் வி. இராமபத்திர நாயடுகாரு வாலிபர். கோர்ட்டாப் வார்ட்ஸில் சுமார் 13 வருஷங்களிருந்தும், பிறகு வேறு உபாத்தியாயரிடம் முறையாகக் கற்றுத் தெளிந்தும், சர்வகலாசாலை பிரவேச பரிக்ஷையில் தேறியவர். சுந்தர புருஷரும், சுகுணசீலரும், தேசாபிமானமும், மதாபிமானமுமுடையவர். 1901வு மதுரையில் கூடிய மாகாண மஹா சபையில் "கோர்ட்டாப் வார்ட்ஸ்" என்னும் பிரபுக்களுடைய (மைனர்) மக்களை ஏனைய ஜாதியாரிடமும், ஏனைய மதஸ்தரிடமும் கல்விகற்க விடுவதனு லுண்டாகும் சாதக பாதகங்களைப் பற்றிப் பிரபல நியாயங்களோடு ஆங்கில பாஷையில் பேசியதை நாம் காதால் கேட்டும், கண்ணால் கண்டும் களிப்புற்றோம். அந்த உபந்நியாசம் மதுரை மாகாண கூட்டத்தின் ரிபோர்ட்டு 96-97-98, வது பக்கங்களில் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. அதைத் தமிழில் மொழிபெயர்த்து நமது நாட்டிலிருக்கும் ஒவ்வொரு ஜமீன்தாரர் கையில் கொடுத்துப் படிக்கச்செய்தும், அதில் குறித்த புத்திமதிகளின்படி நடக்கவும் செய்தால், நமது ஜமீன்தாரர்களுக்கு நல்லகாலம் வருமென்பது திண்ணம்.

இந்த ஸ்ரீ இராமபத்திர நாயடுகாருடைய சுகுணங்களை நேரிலறிந்த சென்னை கவர்ன்மெண்டு சட்ட நிரூபண சபையைச் சார்ந்த ஆனரெபில் ஸ்ரீநிவாச ராயரவர்களே (அந்த ரிபோர்ட்டு 99-100-வது பக்கங்களில் புகழ்ந்து கொண்டாடி இருக்கையில், இனி அவரைப்பற்றி நாம் விசேஷமாக எழுதுவது அனுவசியம். ஜமீன்களிலெல்லாம் சிறந்தது இராமநாதபுரம் ஜமீன். இதைப் பற்றி இராமநாதபுர சரித்திரத்தில் காணலாம்.

---

திருமலை நாயடுகாரவர்கள் அரசாக்ஷி காலத்தில் குடிகளுக்குப் பெரும்பாலும் சமாதானமும் சந்தோஷமும் அதிகரித்தபடியால் அன்னியதேசத்தார் பாண்டியநாட்டில் வந்து தங்கிவர அதிக விருப்பங்கொண்டார்கள். அப்படி வந்தவர்களில் ஐரோப்பா கண்டத்தைச் சார்ந்த உரோமாபுரி கிறிஸ்துவர்கள் முக்கியமானவர்கள். இவர்களில் 1624வு இராபர்டு பர்தரிடி நோபிலி என்பவரும் சில குருமார்களும் ஐரோப்பிய பிராம்மணர்களென்றும், இந்நாட்டுப் பிராம்மணர்களைப்போல் வேடந்தரித்து காவி வேஷ்டி பாதகொரடு கமண்டலாதிகளைக்கொண்டு கிறிஸ்து மதத்தைப்

போதிக்கப் பிரயத்தனப்பட்டதன்றியில் சில குருமார்கள் திருமலை நாயடுகாரிடம் அடிக்கடி வந்து மதுரையில் கோயில் கோபுரங்களைக் கட்டி வீணாகப் பணம் செலவழிப்பதைப் பார்க்கிலும் அப்பணத்தைக் குடிகளுக்கு உபயோகமான குளங்கள், ஏரிகள், கிணறுகள், ரோட்டுகள், ரஸ்தாக்கள், பாலங்கள் முதலானவைகளைச் செப்பனிடல் உத்தமமென்று போதித்து வந்ததாகவும், திருமலை நாயடுகாரும் அதை யுணர்ந்து கோயில் கோபுரங்களைக் கட்டி விக்கிரக பூஜைகளுக்குச் செலவழித்துவரும் பணத்தை யெல்லாம், ஜன சமூஹ பொது வேலைகளில் செலவழித்துவரப் பிரயத்தனப் பட்டதாகவும், இந்த நவீன வழியைக் கண்ட பிராம்மணர்கள் பொறாமையினாலும், இனி தமக்கு வரும் லாபாதாயங்கள் போய்விடுமென்றும், ஒருவேளை நாய்டவர்கள் கிறிஸ்து மதத்தில் சேர்ந்துவிடுவாரென்றும், இனி இப்படிப்பட்டவரை உலகில் வைக்கக்கூடாதென்றும் எண்ணங்கொண்டு அவரை வதைக்க எண்ணங்கொண்டார்களாம். அதாவது, மீனாக்ஷியம்மன் சன்னதிக்குள் அடியில் ஓர் குகையைக் குடைந்து அதற்குள் போகப்பட்டவர் மறுபடியும் மேல் வாராதபடி ஒரு கருங்கல் பலகையை கதவுபோலிருந்து விழுந்து மூடிக்கொள்ளும்படியாகச் சூத்திர உபாயம் செய்து வைத்திருந்ததாகவும், அப்போது அந்த மீனாட்சியம்மன் கோயில் பூஜாரி அல்லது குருக்களில் தீரத்துவமுள்ள குலசேகரப்பட்டன் என்ற பிராம்மணன் திருமலை நாயடுகாருடைய சமுகத்தில் வந்து ஆஷாடபூதியைப்போல் வேஷங் காட்டி, "அரசர் பிரபுவே! மீனாட்சியம்மன் கர்ப்ப கிரஹத்துக்கு அடியில் அநந்த அண்டாக்களும், அவைகளில் அளவற்ற பொன்னும் அடங்கிய பொக்கிஷங்களிருப்பதாகவும் அதைத் திருமலை நாயடுகார் வந்து எடுத்துக்கொண்டுபோய் உபயோகப்படுத்திக்கொள்ளும்படி சொல்லுங்கள்" என்று சொப்பனம் சாதித்ததாகவும், அதேபிரகாரம் போய்ப் பார்க்கி அப்படியே இருப்பதாகவும், அதை யார் அங்கு வைத்தார்களோ அறிகிலேம், ஒருவேளை அம்மன் அவைகளைத் தங்களுக்கென்று அங்கு வைத்திருக்கிறாள் போலும்; தாங்கள் தனியாக வந்தால் காட்டிவிடுகிறேம்." என்று சொல்ல, திருமலை நாயடுகாரும் சந்துஷ்டி அடைந்து, ஸ்நானபானம் செய்து, அந்த வஸ்திரங்களைத் தரித்து மிக்க பயபக்தியுடன் தனியாகப் பிரவேசித்துப் போய் அம்மனை வணங்கி, அங்கிருக்கும் அடிக்குகையி லிறங்கிக் கொஞ்சதூரம் போக

உடனே வெளியிலிருந்த குலசேகரனும் அந்தக் குகையை மூடச் சித்தஞ்செய்திருந்த கருங்கற் பலகையைச் சூத்திர விதியாக மூடி, அந்த வழி யாருக்கும் தெரியாமல் பழைய படியே இருக்கும்படி செய்துவிட்டு, அரண்மனைக்கு வந்து, "அந்தோ! அம்மன் சந்நிதியில் அநந்தரமாகத் தியானித்துக் கொண்டிருந்த திருமலை நாயடுகாரவர்கள் பக்தியை அம்மன் கண்டு வியந்து அவரைப் பொந்தியோடு கைலாயத்திற்கு அழைத்துக்கொண்டார்" என்று சொல்ல, அரண்மனையிலிருந்த யாவரும் ஓடிவந்து அம்மன் சந்நதியில் பார்க்க, அங்கு நாயுடுகார் காணுதிருக்க வியந்து, "அடடா! இப்போதுதான் அரண்மனையிலிருந்து தனியாகப் புறப்பட்டு அம்மன் சன்னதிக்குள் நாயுடுகாரவர்கள் புகுந்ததைப் பார்த்தோம். உள்ளே போனவர் மறுபடியும் வெளியில் வரவில்லையே. மீனுக்ஷியம்மன் நாயடுகாருடைய பக்தி தரும குணுதிசயங்களை வியந்து பொந்தியோடு கைலாயத்துக்கு அழைத்துக்கொண்டார்" என்று நம்பிவிட்டார்களாம்.

---

## ஸ்ரீ குமார அல்லது பெரிய கிருஷ்ணப்ப நாயடுகாரு சமஸ்தானம்.

(கி. பி. 1568ஞு முதல் 1573ஞு வரையில்.)



புகழுடம்பினரான விசுவநாதநாயடு அவர்களுக்குப் பிறகு, அவர் குமாரர் குமாரகிருஷ்ணப்ப நாயடுகாரு மதுரையில் மகுடாபிஷேகம் செய்யப்பட்டுச் சிங்காசனமேறினுர். இப்படிச் சிங்காசன மேறிய குமார கிருஷ்ணப்ப நாயடுகாரைப் பெரிய கிருஷ்ணப்ப நாயடு என்று சொல்வதுமுண்டு. இந்தக் குமார கிருஷ்ணப்ப நாயடுகாரும் சுத்த வீரத்துவமும், இராஜ தந்திரமு முடையவர். அல்லாமலும் கூட அரியநாயக முதலியாரே இவருக்கும் மந்திரியாக இருந்தபடியால், நாட்டிற் கலகங்க ளுண்டாகாமல் நிம்மதியாக இருந்தார். இப்படிப்பட்ட காலத்தில், வடக்கே மகமதியர் கலகஞ்செய்து சேனையோடு மதுரை சமஸ்தானத்துக்கு வருவதாகச் சங்கதி கேட்டு, அரியநாயக முதலியார் தக்க சேனைகளோடு தாக்கப்போனுர்.

இப்படிப்பட்ட சமயத்தில் 72 பாளையக்காரர்களில் ஒருவனுகிய தொம்பிச்சி நாயக்கன், வேறு சில பாளையக்

காரர்களுடைய உதவியைப் பெற்றுக்கொண்டு, மதுரை குமார கிருஷ்ணப்ப நாயடுமேல் படையெடுத்துவந்தான். இப்படிப் படையெடுத்து வந்ததற்குக் காரணம்: தொம்பிச்சி நாயக்கன் 1543 வருஷம் பெரிய மாகாணத்துக்குத் தலைவனாக இருந்தான். விசுவநாத நாயடு காலத்தில் அவனுடைய சில கிராமங்களைப் பிடுங்கி வேறு பாளையக்காரர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தமையால், அந்தப் பகையைத் தீர்த்துக்கொள்ள இது சமயமாகத் தோன்றி, பண ஆசையும், பேராசையுமுடைய சில பாளையக்காரர்களுடைய தூண்டுதலினால் பலமான சேனையை இரகசியமாகச் சேர்த்துக்கொண்டு வந்தும், அரியநாயகம் வடக்கே போன சங்கதி யறிந்தும் திடீரெனச் சேனையைக் கூட்டிக்கொண்டு பரமகுடிக்கருகில் வந்து முற்றுகை போட்டும், நாட்டைக் கொள்ளையடித்தும், குடிகளை வருத்தியும்வர, குமார கிருஷ்ணப்ப நாயடுக்குச் சங்கதி தெரிந்தவுடனே தமது தளகர்த்தராகிய பெரிய கேசவப்ப நாயடு வசம் சேனையை யனுப்பித் தாக்கச்செய்தார்.

அந்தப் பெரிய கேசவப்ப நாயடும் வந்து சண்டைசெய்ய, யுத்தகளத்திற் கத்தியடிபட் டிறந்தார். இது சங்கதியைக் கேட்ட குமார கிருஷ்ணப்பர் விசனப்பட்டு, அந்தக் கேசவப்பருடைய குமாரர் வசம் 18,000 பதாதிகளைக் கொடுத்து அனுப்ப, அவரும் போய்ச் சண்டை செய்து, தன் தகப்பனைக் கொன்ற தொம்பிச்சி நாயக்கன் தலையை வெட்டி, மற்றப் பாளையக்காரர்களுக்குப் படிப்பினையாகக் காட்டும்படி குமார கிருஷ்ணப்ப நாயடுவிடம் அனுப்பினார். உடனே கலகம் அடங்கியது. இக்கலகத்துக்குக் காரணமாக நின்ற தொம்பிச்சி நாயக்கனுடைய மனைவிகள் மக்களைச் சிறையாகப் பிடித்துக் குமார கிருஷ்ணப்பரிட மனுப்ப, இவர் மஹா ராஜதந்திரியாகையால் உடனே அவர்களைச் சிறையிலிருந்து விடுதலைசெய்தும், யுத்தச்செலவுக்குப் பிடித்த பணத்தைப் பாளையப்பட்டிலிருந்து கொடுத்தும், அவர்கள் ஜீவனம்சத்திற்காகப் பரமகுடி கிராமத்தைக் கொடுத்தும், மூத்த மகனுக்குப் பாளையக்காரன் என்ற பட்டத்தையும் சூட்டினார்.

இந்தக்காலத்தில் இலங்கையிலிருக்கும் கண்டிராஜன், தொம்பிச்சி நாயக்கனுக்கு உதவியாக இருந்து அந்தரங்கத்தில் அதிக உதவிசெய்தும், வேறு பாளையக்காரர்களைச்

சண்டைக்குத் தூண்டிவிட்டதுமன்றியில்; நாயடு ஸமஸ்தான
த்தைப்பற்றிப் பரிகாசமாகப் பேசி ஹேளனம் செய்து
வருவதாகச் சங்கதி தெரிந்து, அவன் கொட்டத்தை அடக்கக்
குமார கிருஷ்ணப்ப நாயடு யுத்த கோலத்தோடும் புறப்பட,
அவருடன் அவருக் குட்பட்ட 52 பாளையக்காரர்களும்,
அவர்கள் இனத்தாரும் சேர்ந்து, இலங்கைக்கு இராமர் கட்
டிய வாராவதியின் ஒன்பதாவது கல்லுக்கருகில் போய்க்
கண்டிராஜனுக்குத் தாம் யுத்த சந்நதமாக வந்திருக்கிற சங்
கதியைத் தெரிவிக்க, அக் கண்டிராஜன் மன்னிப்புக் கேட்
டுக்கொள்ளாமல், முனைமுகத்தில் நிற்க மனமுவந்து தமது
நான்கு மந்திரிகளோடும், அஷ்ட (8) தசநாதர்களுடன்,
40,000 சேனையைச் சண்டைக் கனுப்பி, ஆயுதங்களுடன்
நிற்கச்செய்தான். இதை யறிந்த குமார கிருஷ்ணப்ப நாய
டும் தமது தளகர்த்தன் வசம் 20,000 சேனையை முன்
அணியாகவும் பின் அணியாகவும் வகுத்தும், அப் பின்னணி
யைத் தாமே நடத்திக்கொண்டும் போய்ச் சண்டை செய்ய,
இருபக்கத்திலும் பிரமாதமாகப் பிராணச் சேதமுண்டாகி,
கடைசியில் கண்டிராஜனுடைய மந்திரிகளில் இரண்டு பெய
ரும், அஷ்ட தசநாதர்களில் ஐந்துபெயரும், அநேக ஆயிரம்
பதாதிகளும் பிடிபட்டுச் சிறையாக, அவர்களுக்குக் குமார
கிருஷ்ணப்பர் யுத்தத்திலுண்டான வெட்டுக்காயங்களை ஆற்றி
ஆதரித்துத் தனித்தனி கூடாரங்களில் தங்கச் செய்வித்து
உபசரித்து வர, மறுநாள் கண்டிராஜனுடைய நான்கு மந்
திரிகள் வந்து குமார கிருஷ்ணப்பரை வணங்கி, கண்டி
ராஜன்செய்த அக்கிரமங்களுக்கும் அவமானத்துக்கும் தக்க
மன்னிப்புக் கேட்டுக்கொண்டும், இந்த யுத்தச் செலவுக்குப்
பிடித்த தொகைக்குத் தக்க மாகாணங்களைக் கொடுத்தாகி
லும், அல்லது அடகு வைத்தாகிலும், கடன்கட்டி வருவ
தாகவும், இவ்வளவுடன் சண்டையை நிறுத்தவேண்டு
மென்றும் கேட்டுக்கொள்ள, குமார கிருஷ்ணப்பரும் சம்ம
தித்து, அம்மந்திரிகளோடு தக்க தமது இராஜபாரியை
யனுப்ப, கண்டிராஜன் கேட்டு இப்படிப்பட்ட சமாதானத்
துக்கு வரத் தனக்கு இஷ்டமில்லையென்றும், சண்டைக்குத்
தயாராக இருக்கச் சொல்லென்றும், சொல்லியனுப்பிவிட்டு,
60,000 சிங்காளியர்களையும், 8000 காப்பிரிகள் (போர்த்து
கீயர்) சேனைகளையும் கூட்டிக்கொண்டு சண்டைக்கு வந்
தான். வந்தாலுமென்ன? இந்த 60,000 சிங்காளிகளும்,
8000 காபிரிகளும் முன்பின் போர் முகத்தை யறியாத

காட்டாள்களாக இருந்தபடியால், யுத்தப் பயிற்சியை முறையாகக் கற்றறிந்த மதுரைச் சேனையோடு சரியாகச் சண்டை செய்யச் சக்தியற்று, நல்ல சமயத்தில் நாலாபக் கமு மோடிப்போக, கண்டிராஜனும் அவனுடைய ஆப்த பந்துக்களான பத்துப்பெயர்களும் கடைசிவரையில் கிரமமாகச் சண்டைசெய்ய, மற்றவர்கள் கைதிகளாகப் பிடிபட்டார்கள். இதே மாதிரியாகவே கண்டிராஜனையும் உயிருடன் பிடிக்கப் பிரபலப் பிரயத்தனப்பட்டும் முடியாமல் கடைசியில் குமார கிருஷ்ணப்பருடைய அம்பினால் அடிபட்டு அடியற்ற மரம்போல் விழுந்து இறந்தான்.

கண்டிராஜன் கதறி விழுந்து சாகவே, கதிரவனும் மேற்கே சாய்ந்து அஸ்தமனமாயினான். கண்டிராஜ்ஜியம் குமார கிருஷ்ணப்பர் வசமாகியதால் உடனே பிருதுக்கொடியைக் கோட்டையின்மேல் நட்டு, இறந்துபோன கண்டிராஜனுடைய பிரேதத்தைத் தேடி எடுத்துத் தக்க மரியாதையுடன் தகனம் செய்வித்தும், அவர் மனைவி மக்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வித்தும், அங்கு மூன்றுநாளிருந்தும், அந்தக் கண்டி நாட்டிற்குத் தமது மைத்துனர் விஜயபூபால நாயடுகாரை இராஜாவாக நியமித்துவிட்டும் ஜயசீலராக மதுரைக்குத் திரும்பிவந்தார்.

---

## இலங்கைக் கண்டிராஜ ஸமஸ்தானம்.



సీసమాలిక.

*　　*　　*　　*

,,అరియలంకాద్వీపమైన సింహాళచక్ర । వర్తిపరంపరల్ వసుధనినుడి ॥
,,లక్షణవిజయపాలనమహారాజుశ్రీ । యంగదాంకితరాజులయనులకొండ ॥
,,సాలమహారాజు జగతియందునుకీర్తి । సింహామహారాజుశ్రీకరుడగు ॥
,,రాజసింహరాజాధిరాజ సింహాలుకుమజి । విక్రమసింహాడువీరివరలో ॥

గీ—ఆఱుగురుచక్రవర్తిలరై యాఱుగురుము ॥
పదిలోనాకపాలు కప్పంబుప్రజలనొద్ది ॥
తీసుకొని రాజ్యమేలిరి దిశలువెలుగ
అనుచు పెద్దలునుడువుదురతిశయముంగ ॥

இந்த இலங்கையின் கண்டியில் விஜயபூபால மஹாராஜருக்குப் பிறகு (2) கொண்டசால மஹாராஜரும், (3) அங்கதாங்கித மஹாராஜரும் (4) கீர்த்தி சிம்ஹளமஹாராஜரும்,

(5) இராஜாதிராஜ மஹாராஜரும், (6) விக்கிரம சிம்ஹள மஹாராஜரும் முறையே ஆண்டு வந்தார்கள். இவர்களுக்கு வெள்ளிக் குருச்சியில் இருந்த புராதன விசுவநாத நாயடு சந்ததிகளாகிய இராமகிருஷ்ண நாயடு, நாராயண நாயடு, பங்காரு திருமலை நாயடுகாருடைய குமாரத்திகளையும்— பிறகு தஞ்சை ஸமஸ்தானம் மன்னருசாமி நாயடுகாருடைய குமாரத்திகளையும் • விவாஹம் செய்துவைத்தாலும், சந்ததிக ளற்றுப்போனதாகத் தெரியவருகிறது. இப்போது, தஞ்சைஜில்லா திருவையாற்றில் சப் ரிஜிஸ்டிராராக இருந்த ஸ்ரீ மஹாராஜ தியாகசிம்ஹலராஜவர்களும், அவருக்குச் சம்பந்தப்பட்டு இப்போது வெள்ளிக்குருச்சி முதலான விடங்களிலிருக்கும் சிலரும், இந்தக் கண்டி சமஸ்தானபதிகளுடைய வார்சுகளாகி இங்கிலீஷ் கவர்ன்மெண்டாரிடத்தில் (தமது இலங்கை • இராஜ்ஜியத்துக்காக) (பென்சன்) நன்கொடை பெற்று வருவதாகக் கேள்வி. இது நிற்க,

குமார கிருஷ்ணப்பர் மதுரைக்கு வந்து சேரவே, மகமதியர் வடக்கே 1564ல் விஜயநகரத்தாரோடு பிரமாத சண்டை செய்ததில் இராமராஜா இறந்துவிட்டபடியால், சமஸ்தானத்துக்குள் கலகங்க ளுண்டாகி, விஜயநகரத்தாருடைய தென்னடுகளை அரியநாயக முதலியாருக்குக் கொடுத்து ஆண்டுவரும்படி செய்யவும், குமாரகிருஷ்ணப்பரை வடநாடுகளுக்கு அதிபதியாக நியமிக்கவும் யோசித்தார்கள். இதை யறிந்த அரியநாயகம் தமது ஆசாரியரிடம் சம்மதி கேட்க, அவர், "ஒரு தேசத்தை ஆண்டுவரும் வேலை க்ஷத்திரிய ஜாதியாருக்கே பொருந்தியது; வைசியனும், வேளாளனுமாகிய உனக்குத் தகாது" எனத் தடுத்துச் சொல்ல, குரு வாக்கியத்தைத் திருவாக்காகக் கொள்ளும் அரிய நாயகரும் அது சங்கதியை விஜயநகரத்தாருக்கு அறிவிக்க, அவர்கள் அரியநாயகத்தை மதுரை, மைசூர், தஞ்சை முதலான தென்னடுகளுக்கு விசேஷ விசாரணை மந்திரியாகவும், தளகர்த்தராகவும் இருக்கும்படி கேட்டுக்கொண்டமையால், அரிய நாயகரும் அதற்குச் சம்மதித்து, இச்சமஸ்தானங்களுக்கு இடையில் தாம் வசிப்பது உத்தமமெனக்கருதி 1566ல் மதுரைக்கடுத்த சோழவந்தான் கிராமத்தில் ஒரு சிறு கோட்டையையும், அதற்குள் 300 வீடுகளையும், கோயில் குருமடம் முதலானவைகளையும் கட்டுவித்துச் காஞ்சீபுரத்துக்கடுத்த மெய்ப்பேட்டிலிருந்த தமது நெருங்கிய பந்து

மித்திரர்களையும், சிவடிசாரிகளையும் தருவித்து அங்கு வந்து வசிக்கும்படி செய்வித்தும், அவர்களுக்கு உதவியாகப் பார்ப்பான் முதல் பறையனீருகப் பல சிப்பந்திகளை உதவி செய்ய நியமித்ததன்றியில், மற்ற சாதாரண பந்துமித்திரர்களை நகரி, திருமங்கலம், பட்டனேரி முதலான கிராமங்களில் குடியேற்றினர். இப்படிக் குடியேற்றவே, பாண்டிய நாட்டாருக்கு இவரிடத்தில் நம்பிக்கை அதிகமுண்டாகி, நாட்டில் கலகமில்லாமல் குடிகள் சுகமாக வாழ்ந்து வந்தனர்.

இப்படி நாட்டில் கலகமற்றுப்போகவே, குமார கிருஷ்ணப்பருக்கு வேறு வேலையற்றுப் பாளையங்கோட்டைக்குக் கிழக்கில் தமது பெயரால் கிருஷ்ணபுரம் என்ற நகரத்தையும், அதில் சைவ வைணவக் கோயில்களையும், குளத்தையும், பிராம்மணர்களுக்கு அக்கிரஹாரங்களையும் கட்டி வைத்ததன்றியில், திருநெல்வேலிக்கு மேற்கே காடியம் கிருஷ்ணபுரம் என்ற நகரங்களையும் கட்டிக் குடிகளுக்கு உதவிசெய்து பாண்டியநாட்டைப் பத்து வருஷம் ஆண்டு 1573ஆு பரமபதமடைந்தார். கனம் டெயிலர் கணக்கின்படி சகாப்தம் 1411ஆு வெகுதானிய வருஷமுதல் கீலக வருஷமாகிய 41 வருஷம் ஆண்டதாகத் தெரியவருகிறது.

---

## ஸ்ரீ கிருஷ்ணப்ப அல்லது பெரியவீரப்பநாயடு இரண்டாம் விசுவநாதநாயடு சமஸ்தானம்.

(கி. பி. 1573ஆு முதல் 1595ஆு வரையில்.)

கீர்த்திமானுகிய குமார கிருஷ்ணப்பருக்குப் பிறகு அவருடைய இரண்டு குமாரர்களாகிய கிருஷ்ணப்ப அல்லது பெரியவீரப்பநாயடுவும், சிறிய குமாரன் இரண்டாவது விசுவநாத நாயடுவும் துவிராஜர்களாகப் பாண்டிய நாட்டிற்குப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டார்கள். இவர்கள் காலத்திலும் அரியநாயகமுதலியாரே மந்திரியாக இருந்தபடியால், நாட்டில் கலகமற்றுப்போக இராஜ குமாரர்கள், அரண்மனையில் ஆனந்தமாகக் காலம் கழித்தார்கள். இவர் காலத்தில் விசுவநாதர் குடும்பத்தைச் சார்ந்த ஒரு வாலிபனுடைய தூண்டுதலினுல் காளியூர்க் கோயிலிலிருந்த மாவலிவான் ராஜா குட்டிக்கலகம்செய்ய எத்தனப்பட, உடனே அக்கலகத்தை அடக்கிவிட்டனர். பிறகு திருச்

சிராப்பள்ளிக்கோட்டையைப் பந்தோபஸ்தாக்கியும், சிதம்பரங் கோட்டையைக் கட்டிவைத்தும், பிராமணர்களுக்கு அனேக அக்கிரஹாரங்களையும் நியமித்தார்கள். இவர்களில் இளையவராகிய விசுவநாதர் முதலில் இறந்துவிட பெரிய விரப்ப கிருஷ்ணர் 1585வ்ஸ பரமபத மடைந்தார். கனம் டெயிலர் சரித்திரப்படி சகாப்தம் 1438 கி. பி. 1516 சவுமியவருஷ முதல் யுவ வருஷமாகிய 27 வருஷங்க ளாண்டார்.

---

## குமார கிருஷ்ணப்பநாயடு, இலிங்கப்பநாயடு, விசுவப்பநாயடு ஸமஸ்தானம்.

(கி. பி. 1595வ்ஸ முதல் 1602வ்ஸ வரையில்.)

---

பெரியகிருஷ்ணப்பநாயடுவின் குமாரர்களாகிய இலிங்கப்பநாயடும், விசுவப்பநாயடும் பட்டத்துக்கு வந்தகாலத்தில், மஹா மதியூகியும் மதுரை நாட்டிற்கு மேதாவியும், மதுரைக் கோயிலில் ஆயிரக்கால் மண்டபம் கட்டிவைத்தவரும், பாண்டிய நாட்டிற்கும் பாளையக்காரருக்கும் பிதாவுமாக இருந்தவருமாகிய அரியநாயகமுதலியார் 1600-ம் வருடம் சிவபதமடைந்தார். அவர் இறந்தது பலவிதத்திலும் விசனிக்கத்தக்கதேயாகிலும், சில விஷயங்களில் சந்தோஷிக்கவேண்டியிருக்கிறது. அதாவது, அவர் புராதனரும், பிடிவாதமுடையவருமாகையால், நாட்டில் நவநாகரிகம் விருத்தியடையத் தடைபட்டுவந்தன. அவர் இறந்துவிடவே நாட்டில் நவநாகரிகங்கள் தலைகாட்டத் தங்கு தடங்கலற்று நடந்தன.

விசுவநாதநாயடுக்குப் பிறகு மதுரையில் ஆண்ட மூன்று தலைமுறை நாயடுமார்களும் வயதிலும், உலக அனுபவத்திலும், கல்வி கேள்விகளிலும் அரியநாயக முதலியாருக்குத் தாழ்ந்தவர்களானபடியால் அவர்கள் தம் முதாக்களுடைய உத்தரவின்படி அரியநாயகமுதலியாரைப் பிதாவைப்போல் பாவித்து அவர் வார்த்தையை மீறி நடக்க மனமெழாம லிருந்தார்கள். ஆகவே, அந்த வாலிப நாயடுமார்கள் தம்மிஷ்டப்படி நாட்டில் நவநாகரீகத்துக் கேற்றபடி செய்ய வகையற்றிருந்தார்கள். இப்போது அரியநாயக முதலியார் இறந்துவிட்டபடியால், நாயடுமார்கள் தங்கள் நாட்டில் இஷ்டப்படி புதிய சீர்திருத்தங்களைச் செய்ய ஆரம்பித்தார்கள்.

இப்படி ஆரம்பித்தாலும், இவர்களுடைய பாண்டிய நாடு விஜயநகர ஸமஸ்தானத்துக்குள்ளடங்கிய ஒருபாகமாக இருந்ததேயொழிய சுதந்திர நாடாகவில்லை. அப்போது 1602ஞ விஜயநகர சமஸ்தானம் பெனுகொண்டாவில் ஸ்தாபிக்கப்பட்டு, அதற்கு ஸ்ரீ வெங்கடபதிராயலு பிரபுவாகவிருந்தார். இந்த வெங்கடபதிராயலு இராமராயலுக்குப் பிறகு 21ஞ ஆண்டு 1613ஞ இறந்துபோக, மதுரைநாயடுசமஸ்தானம் சுதந்தர நாடாகியதாக 1609ஞ சாசனத்தினல் வெளியாகிறது. அரியநாயகமுதலியார் இறந்தவுடனே, விசுவப்பர் அல்லது 3-வது விசுவநாத நாயடும் இறந்துபோக, 1602ஞ இலிங்கப்பநாயடுகாரும் பரமபதமடைய, கனம் டெயிலர்சரித்திரப்படி சகாப்தம் 1458-(கி.பி. 1537) தாது முதல் மன்மத வருஷமாகிய 20ஞ ஆண்டு பிறகு அவர் குமாரர் முத்துகிருஷ்ணப்ப நாயடுகாரு சிங்காசன மேறினர்.

## ஸ்ரீ முத்துகிருஷ்ணப்ப நாயடு ஸமஸ்தானம்.

(கி. பி. 1602ஞ முதல் 1609ஞ வரையில்.)

இந்த முத்துகிருஷ்ணப்ப நாயடு சிங்காசனமேறிச் செங்கோலைக் கைக்கொண்டவுடனே, இவரது சிற்றப்பனும், பொருமையும் பண ஆசைப்பேயும் பிடித்தவருமான கஸ்தூரி இரங்கையநாயடு, முத்துகிருஷ்ணப்பனை வஞ்சகமோசமாகப் பிடித்துச் சிறையில் வைத்துவிட்டுத் தானே பாண்டியநாட்டின் சிங்காசனதிபதி என்று பறையடிப்பித்துச் சிங்காசனமேறியதில், இந்த அக்கிரம நடவடிக்கையைக் கேட்ட முத்துகிருஷ்ணப்பருடைய ஆப்தபந்து மித்திரர்கள் அடுத்த வாரத்திலே கஸ்தூரி இரங்கய்யநாயடு, சந்தியாவந்தன மடத்தில் கண்களை மூடிக்கொண்டும், சுவாமியைத் தொழுதுகொண்டுமிருக்கும் சமயத்தை யறிந்துபோய், அவர் சிரசை ஒரே வெட்டில் வெட்டித் தள்ளிப் பாண்டிய நாட்டுப் பட்டத்தை மறுபடியும் முத்து கிருஷ்ணநாயடு வசமாக்கினர்கள். ஸமஸ்தானத்தில் அக்கிரமமாக ஒருவர் பட்டத்தைப் பிடுங்க, அப்படிப் பிடுங்கியவரைப் பிரேதமாகும்படி செய்த அக்கிரம நடவடிக்கைகளில் இதுவே முதலாம். இந்த விஷயத்தைப்பற்றிக் கனம் டெயிலர் தமது சரித்திரத்தில் வேறுவிதமாக

எழுதியிருக்கிறார். அதாவது, விசுவப்ப நாயடுகாருக்குப் பிறகு சமஸ்தானத்தை அவர் குமாரர் குமார கிருஷ்ணப்ப நாயடும், அவர் தம்பி கஸ்தூரி ரங்கநாயடுமாகச் சகாப்தம் 1475-கி. பி. (1553) துன்முகி முதல், பரிதாபி வருஷமாகிய 17 வருஷங்க ளாண்டதாகவும், பிறகு விசுவப்ப நாயடு குமாரர், முத்துகிருஷ்ணப்பநாயடு வாலிபராக இருந்தபடியால், தம்பி கஸ்தூரிரங்கநாயடு சகாப்தம் 1482 (கி-பி 1660) பிரமாதி முதல் பரிதாபிஹூ வரையில் ஏழு வருஷம் ஆண்டுவந்ததாகவும் எழுதப்பட்டிருக்கிறது. இப்படிப் பாண்டியநாட்டைப் பெற்ற முத்துகிருஷ்ணப்ப நாயடு காலத்தில் நாட்டிற் கலகம் சண்டை சச்சரவுகளில்லாமையால் இவர் குடிகளுக்கு உபயோகமான பல குளங்களையும், அக்கிரஹாரங்களையும் உண்டாக்கியும், மதுரைக்கும் ஸ்காந்த மலைக்கும் இடையில் தம் பெயரால் கிருஷ்ணபுரம் என்ற நகரத்தைக் கட்டியும் வைத்தார். இப்படிப்பட்ட காலத்தில் இராமேசுவரத்துக்கு யாத்திரை செய்பவர்கள் மஹாபயங்கரமான காடுகளைத் தாண்டிப் போகவேண்டி யிருந்தமையாலும், அவ்வழியில் திருடர்கள் கையில் யாத்திரைக்காரர் அகப்பட்டு அவஸ்தைப் பட்டு அலைந்து, இந்தப் பாண்டியர் நாட்டு மன்னன் முத்து கிருஷ்ணப்ப நாயடுகாரிடம் முறையிட்டழுது வந்தமையாலும், இந்த ராமேசுவர யாத்திரைக்காரரைப் பாதுகாக்க நியமித்த காரியக்காரர்கள், தமது காரியங்களைக் கிரமமாகச் செய்யாமையால் இப்படிப்பட்ட கஷ்டங்கள் சம்பவிக்கின்றனவென் றறிந்து, நாயடுகாரு 1605ஹூ இராமநாதபுர சேதுபதி குடும்பத்தைச் சார்ந்த ஸ்ரீ சடையக்க தேவ உடையாரே இக் கஷ்டங்களை நீக்க வல்லவரென்று கண்டு, இராமநாதபுரத்துக் கடுத்த போகலூரில் சேதுபதி என்று பட்டாபிஷேகம் செய்விக்க, அந்தச் சடயக்கதேவ உடையார் சேதுபதியும் உடனே காடுகளை அழித்து, அவைகளை நாடுகளாகவும், நந்தவனங்களாகவும் மாற்றியும், திருடரைத் துவம்சம்செய்தும், யாத்திரைக்காரர், சுகமாக யாத்திரை செய்துவரும்படி செய்வித்தும், இராமநாதபுரம், போகலூரை விருத்தியாக்கியும், அங்குக் கோட்டைகளைக் கட்டுவித்தும், வடக்கு வட்டகி, காளையார்கோவில், பட்டமங்கலம் முதலான இடங்களைப் பிடித்து வருஷாந்திரம் நல்ல வருமானத்தை வசூல் செய்வித்தும், மதுரை சமஸ்தானாதிபதிக்குக் கப்பமாய் அனுப்பி, அவருடைய

அன்பையும் பிருதையும் பெற்றும், அநேக வருஷங்கள் ஆண்டு 1621ஆம் வருஷம் இறந்துபோக, அந்த இராம நாதபுரம் சமஸ்தானத்துக்கு அவருடைய குமாரர் குட்டணேச் சேதுபதியாக்கியதாக மதுரைச் சரித்திரத்தில் மிஸ்டர் நெல்சன் எழுதியிருக்கிறார். இந்தச் சேதுபதிகளின் ஆதி அந்தஸ்தைப்பற்றி இராமநாதபுரம் மானேஜர் மிஸ்டர் ஸ்ரீபொன்னுச்சாமித் தேவருடைய மெமோராண்டம் என்னும் குறிப்பில் வேறுவிதமாக எழுதப்பட்டிருக்கிறது. அதை இராமநாதபுரம் சேதுபதி சரித்திரத்தில் விபரமாகக் காணலாம். இப்படிக் குடிகளுடைய நன்மையைக் கருதியும் இராமேசுவர யாத்திரைக்காரருடைய சுகத்தைக் கருதியும் பாடுபட்டுழைத்த முத்துகிருஷ்ணப்ப நாயடுகாரு: முத்து வீரப்பநாயடு, திருமலை நாயடு, குமார முத்து வீரப்பநாயடு என்ற மூன்று குமாரர்களை விட்டு 1609வருஷம், அல்லது கனம் டெயிலர் கணக்கின்படி சகாப்தம் 1512-ம் (கி. பி. 1590) ரவுத்திரிமுதல் விரோதி விக்கிருதியாகிய 30௵ ஆண்டு பரமபத மடைந்தார்.

---

## ஸ்ரீ முத்துவீரப்ப நாயடுகாரு ஸமஸ்தானம்.

(கி. பி. 1609௵ முதல் 1623௵ வரையில்.)

முத்துகிருஷ்ணப்ப நாயடுகாருக்குப் பிறகு அவர் ஜேஷ்ட குமாரராகிய முத்துவீரப்ப நாயடுகாரு 1609 ௵ சிங்காசன மேறினார். இவர் தஞ்சை அரசனோடும், மைசூர் மன்னனோடும் சண்டை செய்ததன்றியில், மதுரையின் வட மேற்குப் பாகத்தில் மகமதியர் வந்து தாக்க, அவர்களை விருபாக்ஷி பாளையக்காரரும் வேறுசில பாளையக்காரர்களும்கூடி, எதிர்க்க, அப்படி மகமதியரைத் துரத்தியடித்ததில், சூத்தியத்தையும், சுத்த வீரத்தையும் காட்டிய விருபாக்ஷி பாளையக்காரர்களுக்குப் பதிக்காவலன் என்று பட்டப் பிருதைக் கொடுத்தார். பிறகு மைசூரிலிருந்து முகிலன் என்றவன் சிறு படையோடு வந்து திண்டுக்கல் கோட்டையை முற்றுகைபோடத் திண்டுக்கல்லைச் சுற்றியிருந்த பதினெட்டுப் பாளையக்காரர்களும், முக்கியமாக நடுக்கட்டை பாளையக்காரனாகிய சின்ன குட்டிதுரை நாய்க்கன் எதிர்த்து முறியடித் தோட்டியதனால், இப்பாளையக்காரனுக்குத் திண்டுக்கல் பழைய கோட்டையைக் கொடுத்தும்,

அப்பிராந்தியங்களுக்கு முக்கியஸ்தருக்கு இன்னும் பட்டப் பிருதுகளையும் கொடுத்தார். இவர் (முத்துவீரப்பநாயடு) காலத்தில்தான் பிரான்சிஸ் சாவியரால் (Francis Xavier) கிறிஸ்தவர்களாக்கப்பட்ட சில செம்படவராகிய பராவாசுகள் மதுரையில் நாயடு உத்தரவின்படி முதல்முதல் கிறிஸ்து மதக் கோயிலைக் கட்டினார்கள். அதையறிந்து பாதர் பர்னாண்டிஸ் (Father Fernandez) என்பவர்வந்து வடுகர்முதலான உயர்ந்த வகுப்பாரைக் கிறிஸ்துமதஞ் சேர்க்கப் பிரபல பிரயத்தனப்பட்டும் முடியாமையால் பாதிரி நோபிலிபஸ் (Robertde Nobilibus) என்பவர் வந்து, தாம் ஐரோப்பியபிராம்மணனென்று கூறியும், இந்துமதச் சந்நியாசிகளைப் போலக்காவி வேஷ்டிகளைத் தரித்தும், சில இந்துக்களைக் கிறிஸ்துவமதத்தில் சேர்க்கவே, மதுரைக்கோயில்பிராம்மணர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் குட்டிக்கலகங்களுண்டாகி, அந்தப் பாதிரியாருடைய நடவடிக்கைகளைப்பற்றி ஐரோப்பிய மன்னர்களும் கண்டித்தார்கள். அப்படிப்பட்ட காலத்தில் முத்துவீரப்ப நாயடும், சகாப்தம் 1544 (கி. பி. 1622) விகாரிமுதல் துன்முகி ஆகிய 32ஹு ஆண்டு மரணமடைய, அவர் உத்தம சகோதரராகிய புகழ்பெற்ற திருமலைநாயடுகாரு பாண்டியநாட் டதிபதியாக, சாலிவாகன சகாப்தம் 1544-ம் துந்துமிஹு மாசிமீ 7உக்குச் சரியான 1623ஹு ஜனவரிமீ பட்டாபிஷேகம் செய்யப்பெற்றார்.

---

## ஸ்ரீ திருமலை ஐய நாயடுகாரு சமஸ்தானம்.

(கி. பி. 1623ஹு முதல் 1659ஹு வரையில்.)

மதுராபுரியானது பெயருக்குமாத்திரம் பாண்டிய நாட்டிற்குப் பிரதான பட்டணமாக விருந்தாலும், உண்மையில் உயுத்த வீரர்களுக்கு வசதியில்லாத பட்டணமாக இருந்தது. அதன் சுற்றுப்பக்கங்களில் பர்வதங்களும், காடுகளும், கடல்களும், நதிகளுமில்லாமல் வெட்ட வெளியாக விருந்தபடியால், பகையாளிகள் நாலா பக்கங்களிலும் வந்து தாக்க வசதியாக இருந்ததை யறிந்து, விசுவநாதரும், அரிய நாயகமும் அதைப் பாதுகாப்பதற்கு அதன் நாலா பக்கங்களிலும் 72 பாளையக்காரர்களை வாசல் காவற்காரர்களாக நியமித்திருந்த தன்றியில், நிலவளம், காவிரி நீர்வளம் பொருந்திய திரிசிராப்பள்ளியானது பகைவரைத்

தடுத்து ஒட்டுவதற்கு வசதியான விடமெனக் கண்டு, அங்குப் பெரிய கோட்டைக் கொத்தளங்களைக் கட்டினார்கள். அவர்கள் சந்ததிகளும் இக் கஷ்டத்தைக் கருதியே சிதம்பர முதலான விடங்களிலும் கோட்டைகளைக் கட்டிவைத்தார்கள். மேலும், மதுரையில் வெயிற்காலத்தில் அதிக ஜலக்கஷ்டமும், மிதமிஞ்சிய உஷ்ணமும், மலைக்காய்ச்சலுமுண்டாவதனால், மதுராபுரிக்கு மன்னரான நாயடுகாருகள் கேவலம் முடிசூட்டும்போதுமாத்திரம் மதுரைக்குப்போய்ச் சூட்டிக்கொண்டு, மற்றக் காலமெல்லாம் காவிரி நதியாயும் திரிசிராப்பள்ளியிலேயே பெரும்பான்மையாகக் காலம் கழித்துவந்தார்கள். இந்த வழக்கத்தை அநுசரித்தே முத்து வீரப்ப நாயடுவின் சகோதரராகிய இந்தத் திருமலை நாயடு காரும் தமக்கு முப்பது முப்பத்தைந்து வயதாகிறவரையில் திரிச்சியிலேயே இருந்தார். இவர் சிறுவயதாக இருக்கும் போதே இவருக்கு ஜலதோஷ (Catarrh) காசகப வியாதி கண்டு வருந்தியும், விதியின்றி முடிசூட்ட மதுராபுரிக்கு அழைத்துக்கொண்டு போகையில், இடையில் வியாதி அதிகரித்துத் திண்டுக்கல்லைச் சார்ந்து, தமது கூடாரத்தில் படுத்துத் தூங்கும்போது, நடு நிசியில் மதுரைச் சொக்கநாதரும், மீனாக்ஷியும் ஒரு கிழப்பிராம்மணர், பார்ப்பினியைப் போலவந்து, திருமலை நாயடைத் தட்டி எழுப்பிப் பஞ்சாக்ஷரமகிமை ரூபமாகியவிபூதியைக்கொடுத்துஉட்கொள்ளும்படி செய்தும், கொஞ்சம் விபூதியை எடுத்து இராஜனுடைய கழுத்திலும், வயிற்றிலும் தடவிக் கொடுத்தும், "நீ மதுராபுரியைத் தலைநகர மாக்கிக்கொண்டு, அங்கேயே தங்குவாயாகில், உனது வியாதியை நீக்கிச் சகல சம்பத்தையும் அடையும்படி ஆசீர்வதிப்போம்," என்று சொல்லி மறைந்ததாகக் கனவுகண்டு, திடீரென்று எழுந்து தம தருகிலிராநின்ற மெய்க்காவலர், பிராம்மணர்களுக்குச் சொல்ல, அவர்கள் ஆநந்தித்து, "சொப்பனத்தில் வந்தவர்கள் சொக்கநாதரும், மீனாக்ஷியும்" என்றும், "அவர்கள் ஆசீர்வாதத்தின்படியே ஆகும்" என்றுந் தைரியம் சொல்லித் தட்டிக் கொடுக்கத், திருமலை நாயடுகாரும் அதே கவலையாக இருந்து, காலையில் எழுந்து தந்தசுத்தி செய்யவே, தம்மை வருத்திய வியாதி வாயின் வழியாக நீங்கிப்போவதை உணர்ந்தும், உடனே மதுரைக்குப்போய்த் தமது இஷ்டதேவதையாகிய மீனாக்ஷி சன்னிதியின் முன் மகுடாபிஷேகம் பூண்டும், இனித் நாம் உலகில் உள்ளநாள் உள்ளவரையில்

மதுரையிலேயே இருக்கத் தீர்மானித்தும், தமது வியாதியைச் சொப்பனத்தில் வந்து நீக்கிய சொக்கநாதர் மீனாக்ஷியம்மனுக்குக் காணிக்கையாக 1,50,000 ரூபாயைச் செலவிட்டு, நவரத்தினங்க ளடங்கிய ஆபரணங்களையும், ஆடைகளையும், வாஹனங்களையும், தந்தத்தினாற் செய்த பல்லக்கு - சப்பிரம் - இரதங்களையும் தயார்செய்து கொண்டுவர, தமது வியாதி முழுதும் நீங்கித் திடகாத்திரராகவே, மதுரை நகரத்திற்கு வேண்டிய மாடமாளிகை கூட கோபுரங்களையும், அழகிய அரண்மனைக் கோட்டை கொத்தளங்களையும்கட்டிவைத்தற்குப் பலவிடங்களிலுமுள்ள சிறந்த சிற்பிகளைத் தருவித்தும், அவர்களுடைய வேலைக்காகச் செங்கல் சூளைகளைப் பருவதங்களைப்போல் கட்டித் தயார்செய்தும், அவைகளைச் சுட, சுற்றுப்பக்கக் காடுகளிலிருந்த பிரமாண்டமான மரம் கட்டைகளை வெட்டிக் கொண்டுவரச் செய்தும், கருங்கல் கட்டிடத்திற்கு அநேக கற்சுரங்கங்களை வெட்டி, உயரமும் விசாலமுமான உருவமுடைய விதம் விதமான கற்களைக் கிளப்பி எடுப்பித்தும்; மீனாக்ஷியம்மன் கோயிலின் வெளி மதில் சுவர்களையும், வசந்தமண்டபம் - புது மண்டபம் - குளங்கள் முதலான கட்டிடங்களையும், கட்டிவைக்க ஆயிரக்கணக்கான வேலைக்காரரை நியமித்தும், வேலைகளை நடத்திவந்த தன்றியில், அந்தந்த வேலைகளைத் தாமே பிரதிதினமும் நேரில் போய்ப் பார்த்தும், புத்திசாலித்தனமாக வேலை செய்யும் சிற்பிகளுக்குத் தம் செங்கோலேந்திய சிங்காரமான சொந்தக் கையினால் தாம்பூலம் கொடுத்து உற்சாகப்படுத்தியும், அந்தக் கூலிக்காரருடைய கூலியை அன்றாடம் தம்முன்னாலே கொடுக்கும்படி திட்டம்செய்தும் வந்ததன்றியில், தமது அந்தஸ்துக்குத் தக்கபடி ஆயிரக்கணக்கான யானைகள், குதிரைகள், ஆள்மாகாணங்களோடு மதுராபுரியில் மாட்சிமையுடன் வாழ்ந்துவந்தபடியால், அப்பட்டணத்தில் லக்ஷக்கணக்கான ஜனங்கள் பலவிடங்களிலிருந்து வந்து குடியேறினார்கள். இப்படி யேறவே மதுராபுரியானது இத்தென்னிந்தியாவிலுள்ள எல்லா நகரங்களுக்கும் ஒரு திலகமாகிவிட்டது.

திருமலை நாயடுகாருக்கு முன் ஆண்ட நாயடுகார்கள் விஜயநகர ஸமஸ்தானத்துக் கடங்கிக் கப்பம் கட்டிக்கொண்டுவந்தார்கள். திருமலை நாயடோ அப்படிக் கப்பம்

கட்டாமலும், அந்தச் சமஸ்தானம் 1613 ஆம் வருஷம் சீர்கெட்டிருப்பதைக் கேட்டுத் தாம் சுதந்திர பிரபுவென்றும் பறையடிப்பித்தார். இவர் இப்படிச் செய்யவே, "வல்லமையிற் சிறந்த விஜயநகரத்தார் எந்தக் காலத்தில் திடீரென வந்து மதுரை மன்னனையும், குடிகளையும் கொள்ளையிட்டு வதைத்து விடுவார்களோ" என்று குடிகள் வதங்கியிருக்க, திருமலைநாயடுமாத்திரம் பயப்படாமல் விஜயநகரத்தின் சேனவலிமைக்குத் தக்கபடி தமது சேனையை விருத்தி செய்துகொண்டு வேண்டிய பந்தோபஸ்தாக இருந்தார்.

இப்படிப்பட்ட காலத்தில் மதுரை நாயடு சமஸ்தானத்தின் சம்பத்தையும், சுதந்திரத்தையும் கண்டு பொறாமையுற்றவரும், முன்னொருகால் நாயடு ஸமஸ்தானத்தாரால் அவமானப்பட்டவருமான மைசூர் சமஸ்தான பதியாகிய சாமராஜ உடையார் தமது பழைய பழியைத் தீர்த்துக் கொள்ளக் கருதி, தமது தளகர்த்தராகிய ஹராசுரநந்திராவுக்குத் தக்க சேனைகளைக் கொடுத்துப் பாண்டிய நாட்டின் மேல் படையெடுத்துப் போகச் சொல்ல, அத் தளாதிபதியும் வந்து கணவாயோரங்களிலுள்ள கிராமங்களையெல்லாம் பிடித்துக்கொண்டும், திண்டுக்கல்லை முற்றுகை போட்டும், ஏராளமான பொருளைக் கொள்ளையடித்துக்கொண்டும், கம்பீரமாக மைசூருக்குப் போய்ப் பின்னுமொரு பெரிய சேனையைக் கூட்டிக்கொண்டுவந்து மறுபடியும் திண்டுக்கல்லைத் தாக்க, அப்போது திருமலை நாயடுடைய தளவாய் தளகர்த்தன் இராமப்ப ஐயனும், உதவி தளகர்த்தர் இரங்கண்ண நாயடும் உடனே வேண்டிய முயற்சிகள்செய்து சுற்றுப்பக்கத்துப் பாளையக்காரர்களைத் துணையாக அழைத்துக்கொண்டும், யுத்தச் செலவுக்குத் தக்க திரவியத்தைச் சேகரித்துக்கொண்டும், போதாத பணத்துக்கு இரங்கண்ணநாயடுவிடம் 14,000 ரூபாய் பெற்றுக்கொண்டும் போய் மைசூர்க் கோட்டையை முற்றுகை போட்டு கர்ஜ்ஜித்தார்கள்.

இப்படிப்பட்ட காலத்தில் இந்த இராமப்பையருடைய சாமர்த்தியத்தையும், சேனை வலிமையையும் கண்டு பொறாமைகொண்ட சில துஷ்டர்கள், "இனி இந்த இராமப்ப அய்யனுக்கு இவ்வளவு அதிகாரம் கொடுத்தால், ஒரு வேளை பாண்டிய நாட்டையும் சண்டையில் ஜயித்து

விடுவான்" என்று திருமலைநாயடுக்குக் கோள்கள் சொல்ல, அவரும் முன்பின் யோசியாமல், துஷ்டருடைய துர்ப்போதனைகளுக்குக் காதுகொடுத்து, இராமப்பையனை "உடனே பாண்டியநாட்டிற்கு வந்துவிடவேண்டும்" என்று கட்டாயமான கட்டளையை யனுப்பினார். இக் கட்டளையைக் கேட்க இராமப்பையர் ஸ்திதி தருமசங்கட மாகிவிட்டது. ஏனெனில், இராமப்பையர் திருமலைநாயடுவின் உத்தரவின்படி உடனே மைசூரைவிட்டுப் போய்விட்டால் பகையாளிகள் கையிற் சிக்கிப் படாதபாடும், மானபங்கமும் அடையவேண்டும். அப்படிக்கன்றித் திருமலை நாயடுவின் கட்டளைப்படி உடனே போகாவிட்டால், எஜமான் துரோகம் நேரிடுவதன்றித் தமது உத்தியோகமும் அந்தஸ்தும் போய்விடும். இப்படிப்பட்ட அசந்தர்ப்பத்தில் இராமப்பையன் விதியின்றித் திருமலைநாயடுவின் கட்டளையையு மீறி, மைசூரைப் பிடித்துப் பகைவரைப் பங்கப்படுத்திப் பயமூட்டி வீராதி வீரனாக மதுரைக்குத் திரும்பினார்.

திருமலைநாயடு: சத்தியம், தருமம் முதலான குணங்களிற் சிறந்தவரானபடியால், அவர் கட்டளையைமீறி நடந்த இராமப்பையனுடைய குற்றத்தை க்ஷமித்துவிடுவாரென்றெண்ணக்கூடுமானாலும், "துஷ்டர்களுடைய வார்த்தைகளுக்குச் செவி கொடுத்து என்ன செய்வாரோ" என்று பயந்து, உதவித் தளகர்த்தர் இரங்கண்ணநாயடுவைச் சமஸ்தானபதியிடம் போய்ச் சாந்தப்படுத்த முன்னமே யனுப்பிப் பிறகு தாம் வந்து சரணாகதி யடைந்தார்.

இராஜதந்திரியாகிய திருமலைநாயடு உடனே தளவாய் இராமப்பையனைத் தக்க பஹுமானங்களையும் பிருதுகளையும் கொடுத்துக் கொண்டாடி, உதவித் தளகர்த்தர் இரங்கண்ணநாயடுவைப் புகழ்ந்துகொண்டார். இதனால் சமஸ்தானம் பலமான அஸ்திவாரத்தில் ஆதாரப்பட்டிருந்தது. இந்தக்காலத்தில் 1623ஹு ஜூன் மாதம் (Robert De Nobilibus) இராபர்ட் டி நோபிலிபஸ் என்பவர் ரோமாபுரி போப்புகளுடைய கட்டுப்பாட்டிற் கிணங்காமல் மதுரையிலும், திரிசிரபுரத்திலும், சேந்தமங்கலம் - சேலம் முதலான விடங்களிலும் வந்து, மதபோதனை செய்து கள்ளர் முதலானவர்களைக் கிறிஸ்தவர்களாக்கிக் குடித்தனம்செய்து ஜீவனம் செய்யப் போதிக்க, திருமலைநாயடும் அக் கள்ளர்

களுக்கு அநேக புறம்போக்கு நிலங்களைத் தர்க்காஸ்தாகத் தந்தார்.

## இராமநாதபுரத்தில் சேதுபதி கலகம்.

திருமலைநாயடு சேனைகள் மைசூராரை ஜெயித்த சில வருஷங்களுக்குள்ளாகச் சேதுபதிகளுக்குள் உண்டான கலகத்தை யடக்க நேர்ந்தது. அதாவது 1621ஸ் இராமநாதபுரத்தில் குட்டன் என்பவர் சேதுபதியாகிப் பதினன்கு வருஷம் பிரபலமாக ஆண்டு 1635ஸ் இறந்துபோக, அவருக்குச் சடையக்க தேவர் அல்லது தளவாய்ச் சேதுபதியும், கங்கை நாச்சியாரும் பிள்ளைகளாக இருந்தார்கள். இந்தத் தளவாய்ச் சேதுபதி இராமநாதபுரத்தில் இரண்டு மூன்று வருஷங்கள் ஆண்டபிறகு யாது காரணத்தைக் கருதியோ தமது தத்து புத்திரனுகிய இரகுநாத சேதுபதிக்குச் சிங்காசனம் கொடுக்க விரும்பி இருப்பதைக் குட்டன் சேதுபதியின் வைப்பாட்டி குமாரனுகிய தம்பி சேதுபதி அந்த நியமனத்துக்கு இடந்தராமல், மதுரைக்கு வந்து மந்திரிமார்களிடம் முறையிட்டு, அந்தப் பட்டத்திற்குத் தம்மை நியமிக்க நாயடவர்களுக்குச் சிபார்சு செய்யும்படி கேட்டுக்கொள்ள, அவர்களும் அப்படியே சிபார்சு செய்ய, திருமலை நாயடவர்கள் முன்னும் பின்னும் யோசித்துப்பாராமல், மந்திரி வார்த்தைகளை நம்பித் தம்பி சேதுபதிக்குத் தளவாய்ப் பட்டம் கொடுத்து அனுப்ப, அவரும் வந்து சேதுபதி சிம்மாசனத்தைத் தம்மிடம் கொடுக்கும்படி நாயடு உத்தரவைக் காட்ட, சரியான வார்சாகிய தளவாய்ச்சேதுபதி தமது பட்டத்தைத் தரேனென, இது சங்கதியைத் திருமலை நாயடுவுக்குத் தெரிவிக்க, இதுவிஷயத்தில் தாம் பிசகிப்போய்விட்டதை அறிந்திருந்தும், தமது ஆக்கினையை மீறி நடந்த சேதுபதியைத் தக்கபடி சிக்ஷிக்க வேண்டுமென்ற எண்ணத்தினல் சில பாளையக்காரருடைய சேனைகளுடன், தளவாய் இராமப்பையனையும், உதவியாக இரங்கண்ணநாயடுவையும் தலைவர்களாக இராமநாதபுரத்துக்கு அனுப்ப, அவர்களும் சேதுபதியோடு பிரபல சண்டைசெய்யவே, சேதுபதி தந்திரமாகப் பாம்பன் வழியாக ஒரு தீவுக்குள் ஓடிப்போக, அங்கு அப்போது இலங்கையிலும், கொச்சியிலுமிருந்து ஐந்து கப்பல்களில் வந்த ஐரோப்பியருடைய உதவியைப் பெற்று எதிர்த்துச்

சண்டைசெய்ய, நாயடு சேனையானது இடையில் ஒரு சிறு பாலத்தைக் கட்டி அதன் வழியாகப் போய்ச் சேதுபதியைத் தாக்க, அந்தச் சண்டையில் இராமப்பையர் வியாதி கண்டு இறந்துவிட்டார். இராமப்பையர் இறந்தாலும், அவருடைய மருமகனாராகிய சிவராமய்யர் உடனே தளாதிபதியாக நின்று தாக்கிச் சேதுபதியையும், அவர் பந்து தனக தேவனையும் பிடித்து மதுரைக்குக் கொண்டுவர, அவர்களை அநியாயமாக விலங்குபூட்டிச் சிறையிலடைத்தார்கள். இதனால் திருமலை நாயடுக்கு அபகீர்த்தி யுண்டானதன்றியில், தம்பி சேதுபதிக்கு மறவர் முதலான குடிகள் அடங்காமல் கலகம் செய்தும், இராமேசுவர யாத்திரைக்காரர்களைத் தாக்கியும் வருத்தியும் வந்ததன்றியில்; இரகுநாத தேவரும் நாராயணதேவரும் கிளம்பி, தக்க சேனையைச் சேர்த்துக் கொண்டு இராமநாதபுரத்துக்குத் தாமே நாதர்களென்று சொல்ல, தம்பி தளவாய் மதுரைக்கு ஓடிப்போய் நாயடவர்களை உதவி செய்ய வேண்ட, அவர் அச்சேதுபதியின் துர்நடத்தையைக் கண்டு "எவ்வித உதவியும் செய்ய மாட்டோம்" என்று சொல்லிவிட்டார். இக்காலத்தில் இராமேசுவர யாத்திரிகர்கள் வந்து வழிகளிலிருக்கும் கஷ்டநிஷ்டூரங்களைச் சொல்லி முறையிட்டுச் "சிறையிலிருக்கும் சேதுபதியை மறுபடியும் சிங்காசன மேற்றினாலன்றிச் சுகம் கிடையாது" என்று பிடிவாதமாகப் பிரார்த்திக்க, இது விஷயத்தில் திருமலை நாயடு தாம் செய்த தப்பிதத்தைப்பற்றி அநுதாபப்பட்டும், சிறையிலிருந்த சேதுபதியை விடுதலைசெய்தும், தக்க மரியாதையுடனும் இராமநாதபுரத்துக்குச் சேதுபதியாகயிருக்க நியமித்தார்.

இப்படிப் பட்டம்பெற்ற தளவாய்ச்சேதுபதி ஐந்தாறு வருஷம் திருப்திகரமாக ஆண்டு வருகையில், தம்பி சேதுபதி அவரைக் கொலைசெய்து 1645-ம் வருஷத்தில் மறுபடியும் சிங்காசனமேறப் பிரயத்தனப்பட, மறவர் முதலானவர்கள் தடுக்க, இக்கலத்தை யடக்க வேறு வழியற்று அந்தச் சேதுபதி சமஸ்தானத்தை மூன்று பாகங்களாக வகுத்தும், 1646ஆ இராஜதானி உள்பட சப் விடிஷனை இரகுநாத தேவருக்கும், சிவகங்கையைத் தம்பி தேவருக்கும், திருவாதனை நாராயணத் தேவர் தனக தேவருக்கும் கொடுத்துச் சமாதானப்படுத்தினர். இது விஷயத்திலும் திருமலை நாயடு பிசகிப்போய்விட்டார். எப்படியெனில்,

தனகதேவர் சீக்கிரம் மரணமடைய, இரகுநாத தேவர் அவருடைய பங்கைத் தம் பாகத்துடன் சேர்த்துக்கொள்ள, தம்பித்தேவர் மறுபடியும் சண்டைக் காரம்பித்தார். தெய்வானுகூலத்தினுல் தம்பித்தேவர் திடீரென்று சாகவே, இரகுநாதேவர், வகுத்த மூன்று பாகங்களுக்கும் பாத்தியஸ்தரானுர். இதனுல் மன்னுர்கோயில், பட்டுக்கோட்டை, தீவுகோட்டை, அறந்தாங்கி, திருவாரூர் முதலானவை இராமநாதபுரத்துக்குச் சேர்ந்து அந்த ஸமஸ்தானம் பலுகியது. 1653ஞு பாண்டியநாட்டில் பிரபல பயமுண்டாகியது. அதாவது, வடக்கே தேவதாம்சமாக ஒரு இராஜகுமாரன் பிறந்து, தன் தாயோடு தெற்கே வந்து, துஷ்டசம்ஹாரமும், சிஷ்டபரிபாலனமும் செய்யப்போவதாக எங்குப்பார்த்தபோதிலும், யார் வாயிலும் இதே வார்த்தையாகி, வழிவழி பார்த்து பயந்துகொண் டிருந்தார்கள். அதற்குத் தக்கபடி பெங்களூரில் புதிதாக வடநாட்டிலிருந்து வந்த ஒரு விதந்து ஸ்திரீயையும், அவள் மகனுன சிறுபையனையும் பார்த்து, "அவர்கள் தாம்" என்று சொல்லி அவ்விடத்திய ஜனங்கள் பார்த்துப் பயப்பட, அப்போது ஆங்கிருந்த மகமதியர் அவ்விருவர் சிரங்களையும் வெட்டிக் குடிகளைப் பயப்படாதிருக்கும்படி சொல்லியும், மூடஜனங்கள் இம்மூட பீதியை விட்டார்களில்லை. சிலர், இந்தச் சிறுபையன்தான் அகடவிகட வித்வஜ்ஜன வீரபோக வீரவசந்தராயலு என்று 1866ஞு வரையிலும் அநேக படிப்பாளிகளும் நம்பி எதிர்பார்த்திருந்தார்கள். நிற்க,

திருமலை நாயடுடைய ஸமஸ்தானம் தினேதினே பலுகிப் பெருகியதனுல், இனி இச் சமஸ்தானத்தை விஜயநகர சமஸ்தானத்துக்கு அடங்கியதாகக் கொள்ளாமல், ஓர் சுதந்திர சமஸ்தானமாக்கக் கருதி மேற்படி விஜயநகர சமஸ்தானம் வேங்கடபதி இராயலு காலத்திலேயே பாண்டிய நாட்டார் கப்பம் கட்டாமலிருந்தார்கள் என்று முன்னமே சொன்னேமல்லவா? இப்போது இத் திருமலை நாயடுகாரும் அந்த வேங்கடபதிராயலுடைய சந்ததிகளுக்கும் கப்பம் கட்டாமல், தம் ஸமஸ்தானத்தைச் சுத்த சுதந்திர சமஸ்தானமாக்கிப் பிரபலப்படுத்தக் கருதித் தம்மைப்போன்ற தக்ஷண சுதேச சமஸ்தானுதிபதிகளாகிய செஞ்சி, தஞ்சை நாயடுகாருகளைத் தம்மோடு கட்டுப்பாடாகச் சேரும்படி சொல்ல, அவர்களும் அங்கீகரிக்க, இந்தக் கட்டுப்பா

டான சங்கதி விஜயநகர ஸமஸ்தானபதி நரசிங்க தேவ ராயனுக்குத் தெரிந்து, உடனே பெரிய சேனையைக் கூட்டிக்கொண்டு தெற்கே தமது பிரதிநிதிகளுடைய அக்கிரம நடவடிக்கைகளைக் கண்டிக்கவர, பேடியாகிய தஞ்சை மன்னர் பயந்து விஜயநகரத்தாரிடம் சரணடைந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு சேர்ந்துவிட்டதன்றியில், திருமலை நாயடுவின் கட்டுப்பாட்டையும் செஞ்சி நாயடுவின் கட்டுப்பாட்டையும் நரசிங்க தேவராயனுக்குச் சொல்லி, இவ்விரு மன்னரையும் சிக்ஷிக்கும்படி தூண்டிவிட்டார். இது சங்கதியை யறிந்த திருமலைநாயடு கொஞ்சமேனும் முன்னும் பின்னும் யோசியாமலும், தேசாபிமானத்தையும் சுஜனபிமானத்தையும் மறந்தும், துர்மந்திரிகளுடைய வார்த்தைக் கிணங்கி, அப்போது கோலகுண்டாவி லிருந்த மகமதியரைத் தமக்கு உதவியாகவும், நரசிங்கராயனுக்கு விரோதியாகவும் வரவேண்டுமென்று சங்கதி சொல்லி யனுப்ப, அந்தக் கோலகுண்ட சுபாசாஹிபவர்கள், பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல இக் கருமத்திற்கு உடன்பட்டு உடனே ஒரு பெருஞ்சேனையோடு வந்து, நரசிங்க தேவராயனு ஸமஸ்தானத்தின் பல பக்கங்களிற் புகுந்து கொள்ளையடித்துக் குடிகளைக் கொலைசெய்து வருவதாகச் சங்கதி எட்டவே, உடனே நரசிங்கராயனு தக்ஷண யுத்தத்தை விட்டு விட்டு, தம் சேனையோடு வடக்கே போய், தம் ஸமஸ்தானத்தில் புகுந்து கொள்ளையடித்துக்கொண்டிருந்த கோலகுண்ட நபாபைத் தாக்கித் துரத்தியடிக்க, அந்த நவாபின் சேனை அதிகமாகவும் பலமுள்ளதாகவும் இருந்தமையால், அவர்கள் நரசிங்கராயனுவை வடநாட்டில் கால் எடுத்துவைக்காதபடி துரத்தியடித்துக்கொண்டுவர, நரசிங்கராயனு திகைத்துத் தெற்கே இருக்கும் செஞ்சி, தஞ்சை, மதுரை நாயடுமார்களைத் தமக்கு இப்படிப்பட்ட ஆபத்காலத்தில் உதவிசெய்யவேண்டுமென்று பலவிதமாகப் பஞ்சைபோல் கெஞ்சிக் கேட்டும், இம்மூன்று நாயடுமார்களும் கொஞ்சமேனும் ஜாதியபிமானம், மதாபிமானம், தம்மரபாபிமானத்தில் புத்தியை நாட்டாமல், கேவலம் பொறுமை என்னும் பேயால் பிடிபட்டு மவுனம் சாதிக்க, அந்த நரசிங்க தேவராயனு மனமொடிந்து, தஞ்சையின் வடக்கே கள்ளர் சீமைக்குப் போய்ப் படாத பாடெல்லாம் பட்டு நொந்தார். இப்படிப்பட்ட காலத்தில் மைசூரார் கொஞ்சம் அவருக்கு உதவி செய்ய வந்தாலும், தென் நாடு

கள் செல்வத்திற் சிறந்து விளங்கியபடியால், இப்படிப் பட்ட நாடுகளில் சிலவற்றைத் தமது நாடுகளோடு சேர்த்துக்கொள்ளப் பேராசை கொண்ட கோலகுண்ட நபாபு நரசிங்கராயலை அடக்கிய உடனே, செஞ்சிக்கோட்டை மேல் படையை நடத்திக்கொண்டு போய் முற்றுகை போட்டார்.

இதை யறிந்த தஞ்சை நாயடு பேடித்தனத்தினால் முன்னும் பின்னும் யோசித்துப்பாராமல், எங்கே தமது கோட்டைக்கும் முற்றுகை போடப்படுமோ என்ற பயத்தினால், தாம் கோலகுண்ட நபாபின் பக்கம் சேர்ந்து அவரிஷ்டப்படி நடப்பதாக இராயபாரியை அனுப்பத் திருமலை நாயுடுவின் ஸ்திதி அபாயமாகும்படி யாகிவிட்டது. ஆகவே, அந்த ஆபத்தை நீக்கிக்கொள்ளத் தக்கபடி யோசியாமல், முன் மாதிரியாகவே துர்மந்திரிகளுடைய வார்த்தைகளைக் கேட்டு, தக்கணிநாட்டு நபாபாகிய இடில்கான் மகமதியருடைய உதவியை நாட, அந்த நபாபும் தமது 17,000 குதிரை வீரரைத் திருமலைநாயடுக்கு அனுகூலமாக அனுப்ப, அத்துடன் திருமலைநாயடுடைய 30,000 சேனையையும் சேர்த்துச் செஞ்சிக் கோட்டையின் முற்றுகையை நீக்க நடத்திக்கொண்டு போனார். இப்படிப் பெரும் சேனையை நடத்திக்கொண்டு போயும் காரியசித்தி யடையவில்லை. ஏனெனில், திருமலைநாயடுவின் பட்டாளத்தில் தெலுங்கர், தமிழர், கள்ளர், மறவர், மராட்டியர், மகமதியர் முதலான பல ஜாதியார்களிருந்தமையால், அவர்கள் ஒருவர்க்கொருவர் ஜாதிச்சண்டை, மதச்சண்டை செய்துகொண்டே வந்து, கடைசியில் பெரிய கலகத்தை யுண்டாக்கி, மண்டைகளை யுடைத்துக்கொண்டு மாண்டுவரவே, கோட்டையின் கதவுகளைக் கவனிப்பாரற்றுத் திறந்துவைக்க, கோலகுண்ட நபாபின் சேனைகள் சமயம் பார்த்து யாதொரு தட்டுத்தடங்கலற்றுக் கோட்டைக்குள் பிரவேசித்துக் கொடியை நாட்டி, அதிலுள்ள தங்கம் வெள்ளி முதலான ஆபரணங்களையும், பொக்கிஷத்தையும் எடுத்துக்கொண்டார்கள்.

இத்தியாதி அசம்பவங்களைக் கண்ட திருமலை நாயடு விசனத்தோடு தம் நாட்டிற்குவந்து, இனித் தம்மையுங்கூட வந்து தாக்குவார்களோவென்று யோசித்துக்கொண்டிருந்தபடியே, மமதைகொண்ட மகமதியர் மதுரைப்பட்டணத்தையும் முற்றுகைபோட்டுத் தாக்கினார்கள். இத் தாக்கு

தலைத் தடுக்கத் திருமலை நாயடுகாருக்கு அப்போது தக்க தண்டுதளாதிக ளில்லாதிருத்தலைக் கருதியும், தமது இனத்தாராகிய தஞ்சைமன்னர் மகமதியர் பக்கம் சேர்ந்திருப்பதைக் கருதியும், இனி வீணுகச் சண்டைசெய்து பொருள் நஷ்டத்தையும், பிராண நஷ்டத்தையும் உண்டாக்குவதைப் பார்க்கிலும், யுத்தச் செலவுக்குப் பொருள் கொடுத்தும் வருஷாந்திரம் கோலகுண்ட பீஜப்பூருக்குக் கப்பம்கட்டி வருவதாக ஒப்பந்தம் செய்தும் சமாதானப்படுத்த, மகமதியர் முற்றுகையை நீக்கித் தம் நாடுகளுக் கேகினர்கள். என்ன கால வித்தியாசம்! திருமலைநாயடு தமது சொந்த இனத்தாரும், ஆதி அதிகாரியுமாகி விஜயநகர சமஸ்தான நரசிங்க தேவராயலுக்கு மாமூலாகக் கட்டிக்கொண்டு வந்த கப்பத்தைக் கட்டாமல் சுதந்திரம் நாடப்போய், இப்போது வேறு ஜாதி, வேறு மதஸ்தருக்கு உதவி செய்ய அந்த வேறு மதஸ்தரான மகமதியருக்குக் கப்பங்கட்ட நேர்ந்தது. இந்த வியாகுலத்தினுலும், திருமலைநாயடு மந்திரி வார்த்தைகளை நம்பியதனுலும் வந்த மகத்தான விசனத்தினுல் மனஞ்சலித்து நிற்க, மறுபடியும் துர்மந்திரிகளுடைய வார்த்தைகளைக் கேட்டு மற்றுமோர் அவிவேக காரியம் செய்யலானுர். அதாவது, கோலகுண்ட மகமதியர் தம் வடநாடுகளைவிட்டுத் தெற்கே வெகுதூரம் வந்துவிட்டபடியால், அந்நாடுகள் தக்க நாதனற்றுத் தவிப்பதை யறிந்து உடனே படையெடுத்துப்போய்த் தாம் போக்கடித்துக்கொண்ட நாடுகளையாவது பிடித்துக் கொள்ளலாமென்று எண்ணங்கொண்டு நரசிங்க தேவராயலு மதுரை, தஞ்சை, மைசூர், மன்னர்களுடைய சேனு உதவியைக் கேட்க, மைசூரார் மாத்திரம் உண்மையான தேசாபிமானத்துடன் சேனையை உதவியாக அனுப்பித்தரவே, அந்த நரசிங்க ராயலும் போய்ச் சண்டைசெய்து சில பல சில்லரைக்கோட்டைகளைப் பிடித்துக் கொண்டு வருகையில், இந்த நரசிங்கராயலுக்கு உதவி செய்த மைசூராரின் கொட்டத்தை யடக்க மகமதியர் ஒரு படையை யனுப்ப, அப்படையானது திருமலைநாயடுவின் ஸமஸ்தானத்தைச் சார்ந்த தென்கனவாய் வாசல் வழிகளை விடும்படி கேட்க, உடனே விட்டுவிடும்படி திருமலைநாயடு உத்தரவுசெய்ய, மகமதியர் சேனைகள் தாராளமாக மைசூருக்குள்போய் முற்றுகை போட்டுச் சின்னபின்ன மாக்கிய தன்றியில், நரசிங்க ராயலுடைய சமஸ்தானத்தையும் தாக்கிக் கெடுத்தும், கடைசியாகத் தமக்குக் காலமறிந்து உதவி

செய்த இந்தத் திருமலை நாயடவர்களுடைய ஸமஸ்தானத்துக்கும் வந்தும், அவர் செய்த உதவி உபகாரத்தையும், சிநேகத்தையும் கருதாமல், ஏராளமான பொருளைக் கப்பமாக வாங்கிக்கொண்டும், போகும் வழியில் தஞ்சைநாயடு இடத்திலும் மிக்க கப்பம் வாங்கிக்கொண்டும் தம் நாடுகளுக்கேகினார்கள்.

இக்காலத்தில் திருமலை நாயடுகாருக்குச் சம்பவித்த கஷ்டங்கள் இம்மட்டோடு முடியவில்லை. இந்தத் தக்ஷண நாட்டு நாயடுகார்களுக்கு ஆபத்து வருங்காலத்தில் உதவி செய்துவந்த, விஜயநகரத்தாரோடு பகைவரான தன்றியில், இவரது பக்கத்திலுள்ள மைசூர் நாட்டாரும் இவருடைய தேசாபிமானமற்றதுமான நடவடிக்கைகளினால் பகைவரானார்கள். இத்தியாதிகளை திருமலை நாயடு எண்ணியெண்ணி ஏக்கமுற்று, அதனால் வியாதியும் சம்பவித்திருக்கும் தருணத்தில், மைசூரார் இவருடைய தேசாபிமானமற்ற நடவடிக்கைகளினால் தமக்குண்டான நஷ்டங்களைக் கருதிப் பழிதீர்த்துக்கொள்ள ஓர் பெரும் படையெடுத்து வந்தார்கள்.

திடீரென்று மைசூரார் படையெடுத்து வருவார்களென்று கனவிலும் எண்ணாதிருந்த திருமலைநாயடு கண்டு, தம்மோடு அப்போதிருந்த ஸமஸ்தான சேனை போதுமான வலிமையோடு இல்லாதிருந்ததைக் கருதியும், பாளையக்காரர்களுடைய சேனை உதவியைச் சம்பாதிக்கப் போதுமான காலமில்லாமையைக் கருதியும், திகைத்துத் தமது ஸ்திதியைப்பற்றிச் சேதுபதிக்குச் சொல்லியனுப்ப, அவர் காலதாமதமின்றி 25,000 மறவர் சேனையோடு மதுரைக் கோட்டைக்கருகில் வந்துநிற்க, திருமலைநாயடு கண்டு வியந்து அவரோடு தமது ஸமஸ்தான காப்புச் சேனையாகிய 35,000 பெயரைச் சேர்த்துத் தக்க தளகர்த்தர்களோடு மைசூராரைத் தடுக்க அனுப்ப, மைசூரார் கண்டு பயந்து இவ்வளவு பெரிய சேனையை எப்படி ஜயிப்பதென்றெண்ணித் தம் காரியத்தைத் தந்திரத்தால் முடிக்கக்கருதித் திருமலைநாயடுவின் தளகர்த்தனாகிய போரசைகொண்ட சிவராமய்யனுக்கு மிதமிஞ்சிய லஞ்சம் கொடுத்துச் சரிப்படுத்தி, யுத்த விஷயத்தில் ஜாடையாக இருக்கும்படி செய்துவிட்டார்கள். இந்த வஞ்சனைக் கட்டுப்பாட்டை யறிந்த சேதுபதி, அந்த ராஜத்துரோகியாகிய பிராம்மணதளகர்த்தனைப் பிடித்துச்

சிறையில் போட்டுச் சுத்த வீரராக நின்று, மைசூராரிடம் சண்டை செய்ய, மைசூரார் பயந்து திண்டுக்கல் கோட்டைக்கேக, அங்கு அவர்களுக்கு மறுபடியும் 20,000 சேனை வந்துசேர, இரண்டு சேனைகளும் பிரமாத சண்டை செய்து இருபக்கங்களிலும் 12,000 சேனைகள் கொல்லப் பட்ட பிறகு மைசூரார் தலைகாட்டாமல் ஓடிவிட்டார்கள்.

சேதுபதியின் இராஜ விசுவாசத்தையும், சுத்த வீரத் தன்மையையுங் கண்டு வியந்து, திருமலைநாயடு ஆநந்த பர வசமாகி அந்தச் சேதுபதிக்கு அநேக பஹுமானங்களைக் கொடுத்தும், "திருமலை சேதுபதி" என்னும் பிருதுகளும் சிங்கமுகப் பல்லக்கும் கொடுத்தும், இனி இராமநாத புரத்தார் மதுரைச் ஸமஸ்தானத்துக்கு எவ்வித கப்பமும் கட்டாமல் சுதந்திரமாக்கியும்; திருப்புவனம், திருச்சுழி, பள்ளிமடம் முதலான கிராமங்களைக் கொடுத்தும், மரியாதைசெய்து கொண்டாடினார்.

மைசூராரை மதுரையார் ஜயித்தபிறகு, திருமலை நாயடுகாருக்கு உற்சாகமுண்டாகி, அந்த மைசூரார் போகும்போது தமது குடிகளைச் செய்த அவமானத்துக் குப் பழிதீர்த்துக்கொள்ள எத்தனப்பட்டார். அதாவது, மைசூரார் மதுரை நாட்டைவிட்டுப் போகும்போது தமக்கு அகப்பட்ட சேனைகளுடைய மூக்குகளையும், நிரபராதிகளாயிருந்த ஆண் பெண்களின் மூக்குகளையும், ஆயிரக் கணக்காக அறுத்துச் சாக்குகளில் கட்டி மைசூர் மன்னன் களிக்கும்படி அனுப்பினார்கள். அதற்குப் பதிலாக அந்த மைசூர் மன்னனுடைய மூக்கையும் அப்படி அறுத்துக் கொண்டுவந்து தமக்குக் காட்டவேண்டுமென்று ஒரு பெரிய சேனையைத் திரட்டி, அதற்குத் தமது தம்பியார் குமார முத்துவீரப்ப நாயடுவை தளகர்த்தராகவும், இரங்கண்ண நாயடுவை உதவியாகவும் அனுப்ப, அவர்கள் திண்டுக்கல் வழியாகப்போய் மைசூர் நாட்டின் பல கோட்டைகளைத் தாக்கிப் பிடித்துக்கொண்டும்; கடைசியாக மைசூரையும் பிடித்து அதன் இராஜனைச் சிறையாக்கி,அவன் மூக்கையும், அவன் தளகர்த்தர் மந்திரிமுதலான சேனை வீரர்களுடைய மூக்குக்களையும் அறுத்து மூட்டைகள் கட்டித் திருமலை நாயடுகாரு களிக்கும்படி முன்னடியாக அனுப்பிவிட்டுப் பிறகு குமாரமுத்து வீரப்பர், இரங்கண்ண நாயடு தமது தண்டு தளாதிகளுடன் ஜயவீரர்களாகத் திரும்பி வருகை

யில்; மதுரை ஸமஸ்தானுதிபதியும், அச்சமஸ்தானத்தைப் முப்பத்தாறு வருஷம் மிக மாகூஷிமையோடு ஆண்டுவந்த திருமலை நாயடுகாரு 1659 - ம் வருஷம், தமது 75 - வது வயதில் பரமபத மடைந்தார் என்று சங்கதி கேட்டு மகத் தான விசனமடையலானுர்கள்.

புகழுடம்பினராகிய திருமலைநாயடு பரமபதமடைந்த வித மின்னதென்று விவரமாக விளங்கவில்லை. ஆயினும், அது விஷயமாகச் சொல்லப்படும் இரண்டொரு கதைகள் பின்வருவனவே: முதலாவது—திருமலைநாயடு கோபுர விஷயங்களில் கணக்கற்ற காசைப் பாழாக்குவதைப்பார்க் கிலும், அப் பணத்தைக்கொண்டு குடிகளுக்கு உபயோக மான குளம் குட்டை கால்வாய் முதலான வசதிகளை உண் டாக்கிஞல் நலமென்று கிறிஸ்துமத போதகர் அடிக்கடி செய்துவந்த போதனையைக் கேட்டுவந்ததில், நாயடுகாரு இனிக் கிறிஸ்து மதத்திலும் சேர்ந்துவிடுவாரென்ற பயத் திஞல் அவரைக் கொல்லக்கருதி, மீனுக்ஷியம்மன் கோயில் கர்ப்ப மண்டபத்தில் ஒரு குகையைப்போலத் தோண்டி மறைத்து வைத்தும், அக் கருமத்திற்கு முக்கிய காரண மாகிய அம்மன் பூஜாரி குலசேகரபட்டன் என்றவனும், வேறு சிலரும் கூடித் திருமலை நாயடுவிடம்போய் மீனுக்ஷி யம்மன் தன் கர்ப்ப மண்டபத்தினடியில் கணக்கற்ற திரவி யம் வைத்திருப்பதாகவும், அத் திரவியத்தைத் தங்களைத் தனியாக வந்து எடுத்துக்கொண்டு போகும்படி உத்தரவு செய்ததாகவுஞ் சொல்ல, திருமலைநாயடும் அவ்வார்த் தையை உண்மையாக நம்பியும், சுத்த ஸ்நானம் செய்தும, தனியாகப் போய், அந்தக் கர்ப்ப மண்டபத்தின் குகையிலிற ங்க, அவ ரிறங்கினவுடனே ஒரு பெரிய பலமான பலகைக் கல்லைப்போட்டு மூடி மறைத்துவிட்டு வந்து, "திருமலைநாயடு காரு மீனுக்ஷியம்மனுக்குள் ஐக்கியமாகிப் பொந்தியோடு கைலாசம் போய்விட்டார்" என்று சொல்ல, எல்லாரும் நம் பிக்கொண்டதாகவும்; இரண்டாவது - திருமலை நாயடுகாரு ஒரு பட்டருடைய மனைவியுடன் நட்புப் பாராட்டி வந்து கொண்டிருந்து ஒருநாளிரவு அவள் வீட்டுக்குத் தனியாகப் போய்த் திரும்புகையில், வழியில் கைப்பிடிச் சுவரற்றிருந்த கிணற்றில் விழுந்துவிட, அந்தப் பட்டர் பார்த்து தன்மேல் பழி வந்துவிடுமெனப் பயந்து, மேலே மண்ணைப் போட்டு மூடிவிட்டதாகவும்; பின்னும் பலர் பலவிதமான கதைகளைச்

சொல்லிக் கொள்ளுகிறார்கள். இக்கதைகளை உண்மையான வைகளென்று நம்பக்கூடவில்லை. ஏனெனில், திருமலைநாயடு தமது ஸமஸ்தானத்திற்கு வந்த ஐரோப்பிய கிறிஸ்துமதப் போதகருக்குக் கேவலம் இடமுதலான வசதிகளை மாத்திரம் கொடுத்து உதவினாரேயன்றி, மற்றப்படி கிறிஸ்து மதத்தில் சிறிதும் பிரியங்கொள்ளவில்லை என்று அக்காலத்துக் கிறிஸ்துமத போதகர்களே ரோமாபுரிக்குக் கடிதமெழுதியிருக்கின்றதன்றியில், அவரைப் பிராம்மணர்கள் கொலை செய்திருக்கிற விஷயத்தில் உடனே அது சங்கதியையும் எழுதியிருப்பார்கள். மேலும் 1659-ஆம் வருஷம் திரிசிராப்பள்ளியிலிருந்து (Father Proenza) ப்ரொயென்ஸா பாதிரியார், ரோமாபுரிக்கு எழுதிய நிருபத்தில், "திருமலைநாயடு சுத்த இந்து மதஸ்தர்" என்றும், "அவருக்குக் கிறிஸ்துமதத்தில் நம்பிக்கை சுத்தமாகவே இல்லை" என்றும், "அவர் திடீரென்று இறந்துவிட்டார்" என்றும் எழுதியிருக்கிறார். ஆகவே, அவர் கிறிஸ்துமத விஷயமாகக் கொலைச் செய்யப்படவில்லை என்று ஸ்பஷ்டமாகிறது.

இரண்டாவது—பட்டர் மனைவி விஷயமாக இறந்த சங்கதியையும் நம்பக்கூடவில்லை. ஏனெனில், திருமலை நாயடவர்கள் இறந்தபோது அவருக்கு வயது ஏறக்குறைய 75. மேலும், அவருக்கு அஷ்ட லக்ஷ்மிகளெல்லாம் திரண்டு அவதாரமாக வந்தாற்போல 200 மனைவிகள் இருந்திருக்கிறார்கள். ஆகவே, இந்தப் பெரிய வயதில் பெரும்பான்மையான சுலக்ஷணமுள்ள சுபத்தினிகளை விட்டுப்போய், அவக்கோலங்கொண்ட பட்டர் மனைவிக்காக அர்த்த ராத்திரியில் யாரும் துணையற்றுக் கிணற்றில் விழுந்து செத்தாரென்று சொல்லும் கதையை எப்படி நம்பக்கூடும்? மதுரைச் சரித்திரம் எழுதிய மிஸ்டர் நெல்ஸன் முதலில் சொல்லிய கதை ஒருவேளை உண்மையாக இருக்கலாமென்று சொல்லுகிறார்.

இப்படிப் பலர் பலவிதமாகச் சொல்லி அபிப்ராயங் கொண்டாலும், ஏதோ ஒரு விதத்தில் இறந்தாரென்று விவரமாகக் காட்டும் சாசனம் இன்னும் அகப்படாமையால் உண்மை சொல்ல வகையில்லை.

புகழுடம்பினரான திருமலைநாயடு ஒரு சேதுபதி விஷயத்திலும், தம்பினத்தாருக்கு விரோதமாக மகமதியருக்கு உதவிசெய்ய விஷயத்திலும், துர்மந்திரிகளுடைய வார்த்தை

களைக் கேட்டு இராஜகிய தந்திரத்தில் பிசகு செய்துவிட்டாலும், மற்ற விஷயங்களில் இவரைப்போல பிரபல தருமங்களினால் புகழ்ப்பெற்று 36 வருஷம் செங்கோல் செலுத்தியவர் அபூர்வம். இவர் முன்னோராகிய விஜயநகர சமஸ்தான கிருஷ்ண தேவராயலு - இராமராயலு வட தேசத்தில் செல்வமும் சிறப்பும் பெற்று வாழ்ந்ததைப் போல்வே, அவர்கள் பின் சந்ததியாராகிய இத் திருமலை நாயடும் தென்தேசங்களில் சிறப்பும் செல்வமும் பெற்று வாழ்ந்து செங்கோல் செலுத்தியதை, இன்றளவும் மதுரைப் புது மண்டபத்திலிருக்கும் அவரது பிரதிமைக்கு புஷ்பமாலைகளைச் சூட்டி, சுவாமியைப்போல வணங்கிக் கொண்டாடிவருகிறார்கள்.

---

## திருமலை நாயடு சமஸ்தானத்தின் சிறப்பு.

திருமலை நாயடுகாரு இறந்துபோகும்போது, அவருடைய சமஸ்தானத்தில் மதுரை, திருநெல்வேலி, திருவனந்தபுரத்தில் பாதி பாகம், திண்டுக்கல், இராமநாதபுரம், சிவகங்கை, கள்ளர்நாடு, புதுக்கோட்டை, மணப்பாறை, கோயமுத்தூர், திரிசிராப்பள்ளி, சேலம் முதலானவைகள் சேர்ந்திருந்தன. இவைகளில் அநேகம் பாளையப்பட்டுகளும், பாளையக்காரர்களும் இருந்து யுத்தகாலங்களில் ஸமஸ்தானத்தைப் பாதுகாத்துவந்தார்கள். சேதுபதியும் வேறு சிலரும் இவருக்குக் கப்பம் கட்டாமல் இவரால் சுதந்திரம் பெற்றாலும், இவரைத் தமது சக்கரவர்த்தியாகக் கொண்டு வணங்கி, இவர் கட்டளைகளின்படி தம் ஸமஸ்தானங்களையும் பரிபாலித்து வந்தார்கள். திருவனந்தபுர சமஸ்தானத்தாரும் கப்பம் கட்டிக்கொண்டு வந்தார்கள்.

பகைவர்கள் வந்து தாக்காதபடி திண்டுக்கல், தாராபுரம், கோயமுத்தூர், தென்னமநாயக்கனூர், சந்தியமங்கலம், அந்தியூர், ஈரோடு, காங்கியம், கரூர், விஜயமங்கலம், நாமக்கல், சேந்தமங்கலம், சேலம், மேலூர், செங்ககிரி, சாமப்பள்ளி, காவிரிபுரம், ஆத்தூர், அநந்தகிரி, அரவக்குறிச்சி, மூகலூர், சக்கிரகிரி, கம்மத்தி, செக்கம்கிரி முதலான விடங்களில், பெரிய கோட்டைகள் நாயடவர்களால் கட்டிவைக்கப்பட்டன.

இவ்வளவு பெரிய ஜில்லாக்களையும், கோட்டைகளையும், திருமலை நாயடு எப்படி அடக்கி ஆண்டுவந்தாரென்று யோசிப்போமாகில், இவர் தமது முன்னோராகிய விஜயநகர கிருஷ்ணதேவராயலைப்போல பல தக்க சிப்பந்திகளை நியமித்துக்கொண்டு ஆண்டுவந்தாரென்று ஸ்டஷ்டமாகிறது. இவர் காலத்தில், இவர் சமஸ்தானத்தில் (1) மந்திரி - தளவாய், (2) தளகர்த்தர் - சேனைவீரன், (3) பிரதானி - வரவு செலவு கணக்கு வைப்பவர், (4) இராயசம் - ரைட்டர் காரியதரிசி, (5) பொக்கிஷாதிபதி - கஜானசி, (6) ஸ்தானபதி-இதர ராஜாங்கங்களில் போய் அந்தரங்க சங்கதிகளை அறிந்து தெரிவிப்போர், (7) கணக்கன்-சர்கார் வசூல் வரவு செலவு கணக்குகளுக்கு அதிகாரி, (8) மணியகாரன்—அம்பலகாரன்—கந்தாயம் வசூல் செய்யப்பட்டவன், ஆகிய எட்டங்கத்தார் இருந்து ராஜ்ஜிய பரிபாலனத்துக்கு உதவி செய்துவந்த தன்றியில், குற்றவிசாரணை, சிவில் விசாரணை, மராமத்து இலாகா முதலான உத்தியோகஸ்தர்களும் நியமிக்கப்பட்டு, அவரவர்கள் தம்தம் காரியங்களைச் சரியாகப் பார்த்து வருவதும் வராததையும் பற்றி விசாரிக்க, நாயடுவர்களே அடிக்கடி சமஸ்தான சபை கூடி விசாரணை செய்து, தக்க உத்தியோகஸ்தர்களைச் சன்மானித்தும் துஷ்டர்களைத் தக்கபடி சிக்ஷித்தும் வந்தார். இப்போது இந்நாட்டில் இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் சர்க்கார் கந்தாயத்தைக் கிராம மணியம், கர்ணம் முதலான சிப்பந்திகளைக் கொண்டு எப்படி வசூல்செய்துவருகிறார்களோ இதேமாதிரியாகவே திருமலைநாயடு காலத்திலும் வசூல்செய்தபடியால், இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் திருமலைநாயடு முதலான முன்னோர் வழக்கத்தையே இப்போதும் அநுசரித்து வருகிறார்கள்.

---

## திருமலை நாயடுகாரின் வருமானம்.

திருமலைநாயடுகாருக்கு நிலக்கந்தாயமும், முத்து சிப்பி முதலானவைகளில் வரும் வருமானமு மன்றியில், தமது அதிகாரத்துக் குட்பட்ட பாளையக்காரர்களிட மிருந்தும் அதிக வருமானமும் கிடைத்துக்கொண்டுவந்தது. 1742 ஆம் வருஷம் திண்டுக்கல் பிர்க்காவைச் சார்ந்த (20) இருபது பாளையப்பட்டுகளில் பாளையப்பட்டு ஒன்றுக்கு வருஷம் ஒன்றுக்கு 17,500 ரூபாய் வீதம் 3,50,000 ரூபாய் வசூலாகியது.

இந்தக் கணக்கின்படி 72 பாளையப்பட்டுகளுடைய வருமானக் கணக்கைக் கூட்டினால் 12,60,000 வருமான மாகிறது. மற்றொரு சாசனத்தினால் திருமலை நாயடுகாருக்கு வருஷா வருஷம் பாளையப்பட்டுகளுடைய கப்பம் மாத்திரம் 18,90,000 ரூபாய் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மேலும், மதுரை நாயடுகார்கள் விஜயநகரத்தாருக்கு வருஷா வருஷம் 4,00,000 பவுன் அல்லது 60,00,000 ரூபாம்கப்பம் கட்டி வந்ததாகப் பாதிரி விகோ (Father Vico) எழுதியிருக்கிறார். அப்படியாகில், அது மொத்தத்தில் மூன்றில் ஒரு பாகமாகையால், மற்ற இரண்டு பாகம் அதாவது 12,00,000 பவுன் அல்லது 1,80,00,000 ரூபாய் ஆகிறது. மிஸ்டர் நெல்ஸனுக்கு அகப்பட்ட சாசனத்தினால் திருமலை நாயடுகாருக்கு நிலக்கந்தாயத்தில் இராஜபாமாக வருஷம் 1-க்கு பவுன் 8,80,000 அல்லது 13,20,000 ரூபாயும், சாதாரண கப்பங்களினால் பவுன் 1,89,000 அல்லது 28,35,000 ரூபாயும்; கடற்சுங்கம், வரிவசூலில் 1,31,000 பவுன் அல்லது 19,65,000 ரூபாயும்; ஆக வருஷாந்திர வருமானம் 12,00,000 பவுன் அல்லது 1,80,00,000 ரூபாய் எனத் தெரிவிக்கிறார். இந்த வருமான மன்றியில், ஒவ்வொரு பாளையக்காரர்களும், இராஜபந்து பிரபுக்களும், ஸமஸ்தானத்தின் காப்புக்காக 3000 பதாதிகளையும், 200 குதிரைகளையும், 50 யானைகளையும் தயாராக வைத்திருக்கவேண்டும். இப்படியானால் 72 பாளையப்பட்டுகளில் மாத்திரம் 2,16,000 பதாதிகளும், 14,400 குதிரைகளும், 3,600 யானைகளும் தயாராக இருந்திருக்கவேண்டும். இப்படி ஏராளமான சம்பத்தையுடைய திருமலை நாயடுகாரு தம் சம்பத்தை யெல்லாம் சொந்தப் பந்துமித்திரர்களுக்குக் கொடாமல், கோயில் கோபுரம், குளம், மானியம் முதலான தருமங்களில் ஏராளமாகச் செலவுசெய்து சகலராலும் பிரதிஷ்டையடைந்தார்.

## திருமலைநாயடுகாரு செய்வித்த சில திருப்பணிகள்.

(1) மதுரை மீனாக்ஷி சுந்தரேசுவரர் சன்னிதியைத் தக்கபடி பழுது பார்த்து நித்திய நைமித்திக காரியங்களை நடப்பித்துவர அநேகந் தருமகர்த்தர்களை நியமித்தும், அவர்களுக்கு அநேக மானியங்களைக் கொடுத்தும், கோயில் பூசை செலவுக்கு மாத்திரம் வருஷம் ஒன்றுக்கு 2,400 பவுன் அல்லது 36,000 ரூபாயைக் கொடுத்துக்கொண்டும் வந்தார். கோயில் பிரசாதச் செலவுக்கு வருஷம் ஒன்றுக்கு

88,000 ரூபாய் வருமானமுள்ள பூமிகளையும், ஸ்தானிகர் செலவுக்காக அநேகங் கிராமங்களையும் கொடுத்ததன்றியில், மீனாக்ஷி சுந்தரேசுவரருக்கு நவரத்தின ஆபரண ஆடை வாகனாதிகளுக்கு (மிருத்தியுஞ்சய விலாசத்தின்படி) 1,23,00,000, ரூபாய் செலவிட்டும், மீனாக்ஷியின் சன்னதி கர்ப்பக்கிரக முதல் கபாலி உடையார் சன்னிதி வரையி லுள்ள கட்டிடங்களைப் புதுப்பித்தும், பிரம்மாண்டமான இராயகோபுரத்தையும் கட்ட அஸ்திவாரமுமிட்டார். மதுரைச் சீமை விருத்தாந்தம் 122 பக்கத்தில் திருமலைநாயடு காரு மீனாக்ஷியம்மன் கோவில் செலவுக்கு விட்ட 150 கிராமங்களைச் சர்வமானியமாக விட்டிருக்க, அந்தக் கிராமங்களை இப்போதிய கவர்ன்மெண்டார் எடுத்துக்கொண்டு அவை கட்காகப் பிரதிவருஷம் 40,000 ரூபாய் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். அத்தொகையைக்கொண்டு 250 பிராம்மண சிப்பந்திகளும், ஏனையரும்கூட 700 சிப்பந்திகளைப் போஷித்து வருகிறார்கள். மேலும், திருமலைநாயடுகாரு இந்த க்ஷேத்திரத்திற்கு ஐந்தரை லக்ஷம் ரூபாய் விலையுள்ள ஆபரணங்களையும் கொடுத்தார்.

(2) வசந்த மண்டபம் அல்லது புதுமண்டபம். இது சுமார் 300 அடி நீளமும், 20-ம், 30-கஜம் அல்லது 800 அடி அகலமுமுள்ள அழகிய கருங்கல் கட்டிடம். இதில் சிற்பாலங்காரமாக நான்கு வரிசைகளில், சுமார் இருபதடி உயரமும், விநோத வேலைப்பாடுமுள்ள 124 கல் ஸ்தம்பங்கள் இருக்கின்றன. இது வசந்த காலத்தில் சொக்கர் பத்து நாள் உற்சவங் கொண்டாடக் கட்டிவைக்கப்பெற்றது. இன்றும் அந்த உற்சவம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்தக் கட்டிடத்தில் ஏககாலத்தில் 1000 பெயர் தாராளமாக உட்காரலாம். இந்தக் கட்டிடத்தின் பத்து ஸ்தம்பங்களில் திருமலை நாயடுகாரைப்போலவும், அவருக்கு முன் மதுரையை யாண்ட ஒன்பது மன்னர்களைப்போலவும், அவர்கள் மனைவிகளைப் போலவும், சுவாமியை வணங்கும் பாவனையாகவும், உருவங்கள் ஸமஸ்தானத்தின் பிரதான சிற்பியாகிய சுமந்தரமூர்த்தி ஆசாரியைக் கொண்டு செதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பத்துப் பிரதிமைகளில் திருமலைநாயடு பிரதிமைக்கு, அவருடைய பராக்கிரமத்தையும், மேல்நோக்கும் பார்வைக்குத் தக்கபடியாகவும், அவருடைய தொப்பை வயிறு முதலான

வை செம்மையாகத் தெரியும்படியாகவும், வர்ணம் பூசிப் பூமாலையிட்டு இப்போது அநேகர் வணங்கிவருகிறார்கள். அந்த விக்கிரகத்தின் அழகு அதை நேரில் பார்த்தவருக்குத்தான் ஸ்பஷ்டமாகும். அந்தத் திருமலை நாயடுகாரு விக்கிரகத்துடன் அவருடைய ஆறுபட்ட மகிஷிகளுடைய உருவங்களும் செதுக்கப்பெற்றிருக்கின்றன அவர்களில் ஒருவர் சோழச் சக்கிரவர்த்தியின் குமாரத்தியாம். அன்றியும், அந்த மண்டபத்தின் மேல்பாகத்திலும் அவரைப்போலவே பிரதிமை செய்து வைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிரதிமைகளைப் பார்த்தவர்களுக்கு இப்படிப்பட்ட மன்னரும் எப்படி மாண்டாரோ என்ற எண்ணம் ஜனிக்கும். இந்தக் கட்டிட வேலையைத் திருமலைநாயடு பட்டத்துக்கு வந்த இரண்டாவது வருஷம் ஆரம்பித்து 22 வருஷங்களாக 1,50,00,000 ரூபாய்கள் செலவிட்டுக் கட்டியதாக மிஸ்டர் வில்ஸன் சாஸ்திரியார் தெரிவித்தாலும்; O. H. M. S. S. சாசனத்தின்படி 1626 வருஷம் வேலை யாரம்பிக்கப்பட்டு 1645 வருஷத்தில் 20,000 பவுன் அல்லது 3,00,000 ரூபாய் செலவில் கட்டப்பட்டதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. நாளாகமத்தின்படி 1,00,00,000 ரூபாய் செலவிட்டிருக்கிறதாகத் தெரியவருகிறது. இந்தக் கட்டிடம் கட்டும்போது திருமலைநாயடுகாரு பிரதிதினமும் காலையில் தாமே நேராகப்போய் மேல்விசாரணை செய்தும், அங்கு வித்தகமாக வேலை செய்யும் சிற்பிகளுக்குச் செங்கோலேந்திய தமது சிங்காரக் கைகளால் தாம்பூலங் கொடுத்தும் உத்ஸாகப் படுத்தினாராம். இந்த மண்டப உற்சவங்களுக்காகச் சுமார் 20,000 ரூபாய் வருமானமுள்ள திடியின்புத்தூர் என்ற கிராமம் மானியமாக விட்டிருக்கிறதாகத் தாண்டவமூர்த்தி பண்டாரத்தின் திருப்பணிமாலையால் தெரியவருகிறது.

(3) தெப்பக்குளம்—இது மதுரைக்குச் சுமார் ஒன்றரைமைல் தூரத்தில் (இப்போது ஆங்கிலேயர் உலாத்திவரும் இடத்தில்) வெட்டிக் கட்டப்பட்டிருக்கிறது. இத் தெப்பக்குளம் பக்கம் ஒன்றுக்கு 300 கெஜமாக, நான்கு பக்கங்களிலும் 1,200 கெஜ சுற்றளவுள்ள சதுரவடிவான இக்குளத்தைப் பலமான கற்களால் படிக்கட்டுகள், சுவர்கள், கைப்பிடிச் சுவர்களால் சிற்பாலங்காரமாகவும், சுந்தரமாகவும் கட்டப்பட்டிருக்கிற தன்றியில், குளத்தின் மத்தியில் ஒரு தீவைப்போன்ற இடத்தில், அழகிய கருங்

கல் கட்டடக் கோயிலும், அதைச் சுற்றிலும் அழகிய விருக்ஷங்களையுடைய உத்தியானவனமும், இலக்ஷம்பொன் அல்லது இரண்டு லக்ஷம் ரூபாய் செலவில் கட்டி அமைக்கப்பட்டிருக்கின்றது. இந்தத் தெப்பக்குளத்தில் வருஷாந்திரம் உற்சவத்தைக் கொண்டாடி வருகிறார்கள். அக்காலத்தில் சொக்கநாதரைத் தெப்பத்தில் வைத்து இழுத்தும், குளத்தைச் சுற்றி இலக்ஷக் கணக்கான விளக்குகளை வைத்தும், பாணவேடிக்கைகளுடன் கொண்டாடும் வைபவம் வியக்கத்தக்கதே. இவைகளன்றிச் சொக்கநாதருடைய வெளிப்பிரகாரத்தையும், பெரிய கோபுரங்களையும் விஸ்வநாதியார் கட்டிவைத்ததாகச் சில ரபிப்பிராயப்பட்டாலும், அவைகளைத் திருமலைநாயடு கட்டிவைத்ததாகச் சிலர் சொல்லுகிறார்கள். ஆயினும், மிருத்திஞ்சய கிரந்தத்தின்படி புராதனமும் பாழ்த்துப்போய்க்கொண்டுவந்த மீனாக்ஷியம்மன் கோயிலைத் தக்க பணச் செலவிட்டுப் புதுப்பித்தவர் திருமலை நாயடுகாரென்று சாதிக்கிறது. மேலும், மதுரையில் பிரமாண்டமான இராயகோபுரம் கட்டும்படி கடைக்கால் போட்டபோது, அவ்விதமாகவே தமது சமஸ்தானத்திற்கு உட்பட்ட 64 ஸ்தலங்களிலும் பெரிய கோபுரங்களைக் கட்டிவைக்கக் கடைக்கால் போட்டும், சில விடங்களில் பாதிக்கட்டடவேலையையும் முடிப்பித்தனராம். இப்போது மதுரையில் கடைக்கால்போட்டுக் கட்ட ஆரம்பித்த இராயகோபுரத்தின் நான்கு பக்கங்களிலும் நாட்டியிருக்கும் ஒட்டில்லாத 4 கல்தூண்களின் உயரம் 60 அடிகளாம். அவற்றின் அடி அஸ்திவாரத்தை அறிய வெட்டிப்பார்த்தபோது 13 அடி வெட்டவே, ஜலக்கண் ஊற்றெழும்பியதனால் பிறகு வெட்டமுடியாமல் விட்டுவிட்டார்கள். இதனால் இந்தத் தூண்கள் நிலத்தின் அடியில் வெகு ஆழத்தில் நாட்டிவைத்திருக்கவேண்டும். இந்தக் கோபுரம் கட்டிமுடித்தால் ஓர் பெரிய பர்வதத்தைப்போலிருக்கும்.

இம்மட்டோ! தமது சமஸ்தானத்துக்குட்பட்ட அநேகந் சில்லரைக் கோயில் கோபுரங்களையும் கட்டிவைத்ததன்றியில், தமது சமஸ்தானத்தில் வந்து வதிந்த சைவ வைணவ மதாசாரியர்களுக்கு மண்டபம், மாளிகை முதலானவைகளைக் கட்டிக்கொடுத்தும், தமது ஆசாரியரைச் சில விசேஷ காலங்களில் பல்லக்கி லேற்றியும், ஆசாரியருடைய பாதரட்சைகளை வேறு பல்லக்கிலேற்றி எடுப்பித்

துக்கொண்டும், அவைகளுடன் தாம் பாதசாரியாக நகர பிரதக்ஷணமும் வருவாராம். இப்படி மத விஷயமாகச் செய்யவேண்டிய திருப்பணிகளை யெல்லாம் செய்வித்துத் தமது அந்தஸ்துக்கும் வாசத்துக்கும் வேண்டிய அரண்மனைக் கட்டிடங்களையும் கட்டினர்.

---

## மதுரை திருமலைநாயடு மஹால்.

இதையே திருமலை நாயடுகாருடைய அரண்மனை யென்று சொல்லுகிறார்கள். இந்த அழகிய அரண்மனைக் கட்டிடம் திருமலைநாயடு காலத்தில், ஒருமைல் சுற்றளவு விஸ்தீரணமுள்ள விடத்தில், விசாலமாகவும் உலக வாழ்வுக் கேற்ற விநோதமாகவும், பல கட்டிடங்களாக அமைத்துக் கட்டப்பட்டிருந்தனவாம். கால வித்தியாசத்தினால் அநேக கட்டிடங்கள் இப்போது இல்லாமல் இடிந்துவிட்டதன்றி யில், இவரது பேரனாகிய சொக்கநாதநாயடு பட்டத்துக்கு வந்தபோது பெரும்பாலும் திரிச்சிராப்பள்ளியிலிருந்தே ஆண்டுவந்தபடியால், மதுரையில் இவ்வளவு பெரிய அரண்மனை மஹால் அனாவசியமென்று எண்ணி இடித்து அந்தச் சாமான்களை வண்டிவண்டியாகக் கொண்டுபோய்த் திரிச்சிராப்பள்ளியில் புது அரண்மனையைக் கட்ட ஆரம்பித்தார். அக்காலத்தில் அவருக்கு மந்திரியாக விருந்தவர் பார்த்துப் "பெரியோர்கள் கட்டிய பிரபல கட்டிடத்தை இப்படிச் சின்னாபின்னமாக இடிப்பது அவிவேகம்" என்றும், "பாவத் தொழில்" என்றும் தடுத்துவந்தமையால், இப்போதிருக்கும் நவபத்கானா, சொர்க்க விலாசமென்னும் அரைக்கால் பாகமான கட்டிடமாவது இடிபடாமல் நின்றுவிட்டது. இப்போது கலெக்டர் கச்சேரியும், ஜெயிலும் இருக்கிற கட்டிடங்கள்கூட இந்த அரண்மனையைச் சார்ந்தனவென்று சில சாசனங்களினால்தெரியவருகிறபடியால், இப்போதிருக்கும் மஹால் கட்டிடம் முன் திருமலைநாயடுகாலத்திலிருந்த கட்டிடத்தில் நான்கில் ஒருபாகமென்று திட்டமாய்ச் சொல்லலாம். இப்போதிருக்கும் கட்டிடம் 90 அடி நீளமும், 40 அடி அகலமுமுள்ள ஹால்களுள்ளதாகவும், செங்கல் சுண்ணாம்பினால் 40 அடி உயரமும் 15 அடி சுற்றளவுமுள்ள பெரிய ஸ்தம்பங்களைக் கட்டி, அவற்றின்மேல் யாதொரு மரத்தூலம், சட்டம், விட்டம் முதலான மரச்சாமான்க ளில்

லாமல் சுத்த செங்கல் சுவர்களினால் வளைவு தார்சுபோட்டுக் கட்டப்பெற்றிருக்கின்றது. இதைச் சேர்ந்த மற்றக் கட்டிடங்களும், ஜலக்கிரீடை பாயி, மிருகாலயகளம் முதலானவைகள் இப்போ திருப்பதைவிட விசாலமானவைகளாகவும் இருந்தனவாம். இந்தக் கட்டிடத்தை ஐரோப்பா கண்டத்தைச் சேர்ந்த, இட்டாலி ரோமபுரி சிற்பிகளைத் தருவித்துக் கட்டிவைத்ததாகச் கேள்வி. இஃது உண்மையென்றே நம்பவேண்டியிருக்கிறது. இப்போது இதில் ரிஜிஸ்டிரேஷன் ஆபீசு முதலான கோர்ட்டு கச்சேரிகளிருக்கின்றன.

---

## திருமலைநாயடுகாருடைய அரண்மனையின் விவரம்.

இந்தத் திருமலை நாயடுகாருடைய மஹாலை அவர் காலத்தில் நேராக வந்து பார்த்த ஐரோப்பிய யாத்திரிகர் ஒருவர் பின் வருகிறபடி எழுதியிருப்பதாக, கனம் டெயிலர் (Rev. Taylor) தமது சரித்திரபுத்தகம், 2-வது வாலியம், 157-158-வது பக்கங்களில் மொழிபெயர்த்துப் பதிப்பித்திருக்கிறார். அதன் கருத்தாவது: "இந்தத் திருமலை நாயடுகாருடைய அரண்மனைக்குள் வடக்கே அல்லது கிழக்கே புகுந்து பார்த்தால், பிரம்மாண்டமான பத்து ஸ்தம்பங்கள் கட்டப்பட்டு, அவைகட்குக் கிழக்கே அகன்ற நீண்ட அழகிய ஆஜாரமும், அதில் பதினெட்டு வாத்தியக்காரர்கள் சதா வாத்தியகோஷங்களைச் செய்துகொண்டிருக்க, அதற்குச் சற்றுக் கிழக்கே இராஜபவனிக் குபயோகமான தந்த பல்லக்குகளும், வேறு பல விதம் விதமான மேனா பல்லக்குகளும் வைக்கப்பட்டிருந்தனவாம். அந்த ஆஜாரமண்டபத்துக்கு மேற்கே சற்று வளைவாகவும், சிற்பாலங்கார வேலைகளால் முடிப்பித்த அழகிய அரங்கவிலாசமும், அதற்கு மேற்கே சிறந்த சந்திரமேடையும், அதைச் சுற்றிவர ஸ்படிகத் தொட்டிகளும், மேலே கோபுரங்களைப்போன்ற ஸ்தூபிகளும், சிங்காரமாக அமைக்கப்பட்டிருந்தனவாம். அதற்கு வடக்கே, குருநிலமன்னர்களை வைக்கும் இராஜசிறைச்சாலையும், அதற்கருகே கத்தி கட்டாரி முதலான இராஜ ஆயுதசாலையும் இருந்தனவாம். அரங்கவிலாசத்துக்கு மேற்கே இராஜஸ்திரிகள் தங்கும்

படியான அலங்காரமண்டபமும், அதற்குத் தென்மேற்குப் பாகத்தில் சுற்று வளைவான விமானகட்டிடத்தில், பல விக்கிரகங்களை வைத்துப் பூஜை செய்துகொண்டும், அதற்கு எதிரில் கருப்பு ஸ்படிகங்களினால் அமைத்த படிக்கட்டுகளும், வாசல்களும், அரங்கவிலாசத்துக்குக் கிழக்கே அனேக அழகிய அறைகளும், மேல் வாசல்களும் இருந்தனவாம். அவற்றிற்கு எதிரில் செதுக்கிய கற்களால் கட்டிய ஜலக்கிரீடைபாயும் (குளமும்), அதற்கருகில் அநேக புஷ்பாதிச் செடிகளாற் பிரகாசித்த உத்தியானவனமும், சித்திராலங்கார மதில்களால் சூழப்பட்டிருந்தனவாம்.

அதற்குத் தென்மேற்கே, அகன்ற நீண்ட அழகமைந்த நடனசாலையும், அந்த நடனசாலையில் திருமலைநாயடுகாரு சொர்ணமயமான பீடத்தில் அடிக்கடி வந்து உட்கார்ந்து, தமது மந்திரி, தளவாய், பிரதானி, இராயசம் முதலான ஸமஸ்தானத்தின் உத்தியோகஸ்தர்கள் புடைசூழ, இராஜகிய விஷயங்களைப்பற்றி விசாரணைசெய்துகொண்டிருக்க, அழகிலும் அறிவிலும் சிறந்த நாட்டியப் பெண்கள் அபிநயங்களுடன் பாடி ஆடி வர, தீவட்டி சலாம் முதலான மரியாதைகளைச் செய்து வந்தனராம். அந்த நாடகசாலைக்கு மேற்கே, அநேக கோபுர மண்டபங்களும் அதற்கு மத்தியிற் கருங்கல்லுகளினால் வெகு சுத்தமாகச் செலுக்கிக் கட்டிய சதுரமஹாலும் இருந்தனவாம். அதற்குத் தெற்கே, இந்த உலகத்திலிருக்கும் சிற்பவேலைகளெல்லாம் கண்டு நாண முறும்படியாகவும், இணையற்றதாகவும், விசுவ கர்மாவே நேரில் வந்து அமைத்ததைப்போன்ற சொர்க்கவிலாச மிருந்ததாம். அதனழகு அதை நேரில் பார்ப்பவருக்கே விவரமாகுமேயொழிய எழுத்தால் எழுதி முடியாதாம். அதன் மாடியின் மீது ஏறிப் பார்த்தால் மதுரைக்கு வெகுதூரத்திலிருக்கும் காக்ஷிகள் செவ்வையாகத் தெரியுமாம். அதற்கு மேற்கே கோபுர மஹாலில் ஒரு பெரிய கருங்கல் கட்டிடமும் அதற்குள் ஆனைத் தந்தங்களினாற் செய்து முடித்த அழகிய கட்டிடமும், அதற்குள் அதிக விலை உயர்ந்த இரத்தினங்களினாற் செய்து முடித்த அழகிய கட்டிடமும், அதற்குள் அதிக விலை உயர்ந்த இரத்தினங்களினாற் பதிப்பித்தமைத்த சிம்ஹாசனமும், பொன்மயமான இராஜசிம்ஹ பிருதுக் கொடி, குடை, முரசு முதலானவைகள் வைக்கப்பட்டிருந்

தனவாம், அந்தச் சிங்காசனத்தில் நாயடவர்கள் நவராத்திரி உற்சவகாலத்தில், இரக்ஷாபந்தத்தோடு வந்து உட்கார்ந்து கொலுவிருப்பாராம். அந்தச் சொர்க்க விலாசத்திற்கு வடக்கு மேற்கு தெற்குப் பக்கங்களில் முறையே மூன்று சதுர் மந்திரங்கள் சிங்காரமாகக் கட்டப்பட்டிருந்தனவாம். அரண்மனைக்கு எதிரில் இரட்டைக் குதிரை வண்டிகள் போய்வர, இரட்டை ரோட்டுகளும், அவைகளுக்கு மேலே மேல் மாடிக்குப் போக வழிகளும், அவ்வழிகளிற் போனால் இராஜஸ்திரிகள் வந்து அந்தரங்கமாக நின்று ஊர்கோலமாக வரும் சுவாமி தரிசனை செய்யும்படியாக உப்பரிகைகளும், சிகரங்களும் கட்டப்பட்டிருந்தனவாம். இதேமாதிரியான உன்னத உப்பரிகை சிகரங்கள் இரங்க விலாசத்திற்கு மேலும் கட்டப்பட்டிருந்தனவாம். அந்தக் கட்டிடத்திற்கு மேற்கே, சிற்பலங்காரமாகச் செதுக்கிய கற்களால் கட்டப்பட்ட இரண்டு மந்திரங்களும், அவை களில் இராஜ ஸ்திரிகளும், அவர்களுடைய தாதிகளும் புடைசூழ்ந்திருக்கப் புராணங்களைப் படிப்பதைக் கேட்டுக் கொண்டிருந்தனராம். அவற்றிற்குஅருகே, இராஜஸ்திரீகள் குளிப்பதற்காக அழகிய குளமும், அதைச் சுற்றிலும் அழ கான உயர்ந்த மதில்களும் சூழ்ந்திருந்தனவாம். அதற்கு மேற்கே வெடிமருந்து கொட்டடியும், அதற்குப் பக்கத் தில் புலி கரடி முதலான மிருகங்களோடு சண்டை செய் யும் மல்லகஜட்டி கொரடிக்கொட்டடிகளும், அவற்றிற்கு வடக்கே இராஜபந்து மித்திரர்கள் வந்து தங்கும்படியான கட்டிடங்களும், தென்கிழக்கிலிருந்து வடமேற்குப் பாகம் வரையிற் கருங்கல்லுகளினாற் கட்டிய வெளி மதில்களும், தென்கிழக்காக இருந்த மதில்களுக்குள் சிங்கார உத்தி யானவனமும், அதை நாயடவர்கள்போய்ப் பார்த்து வந் துகொண்டிருந்ததாகவும், இரங்கவிலாசத்தில் அப்போது நாயடுகாருடைய சகோதரர் முத்துவீரப்ப நாயடுகாரு வதிந்து வந்ததைக் கண்டனராம்.

தமகம்:—இது வைகைநதிக்கு வடக்கே இரண்டடுக்கு மெத்தையாகக் கட்டிவைத்த சிறிய கட்டிடம். இங்கு புலி யானை முதலான மிருகங்களைச் சண்டைக்கு விட்டு வேடிக் கை பார்ப்பதற்காகத் திருமலைநாயடு கட்டிவைத்தார். இப் போது இந்தக் கட்டிடத்தில் மதுரை கலெக்டர் குடியிருக் கிறார். இம்மட்டோ! காசி இராமேசுவரம் போவோருக்கு

அநேக ரோட்டுகளையும், சத்திரங்களையும், தண்ணீர்ப்பந்தல் முதலான ஏராளமான தருமங்களையும் செய்வித்திருந்தார்.

நாயடவர்களுக்குப் பல வர்ணமுள்ள பட்டுத் துணிகளைத் தரித்துக்கொள்வதில் விருப்ப மதிகமாகையால், அவைகளைச் செய்துகொடுக்கச் சவுராஷ்டிர நாட்டிலிருந்து பட்டுநூற்காரரைத் தருவித்துத் தமது நகருக்கருகில் வதியும்படி செய்வித்தார்.

## திருமலை நாயடுவின் கால சரிதை.

பரதகண்டத்தில் மொகல் இராஜ்ஜியத்தை ஸ்தாபித்த பேபரைப்போல திருமலைநாயடும் தமது தினசரி சரித்திரத்தை எழுதிவைத்திருந்தால் இக்காலத்தாருக்குப் பலவிதத்திலும் பயன்படும். அவர் அப்படி எழுதிவைக்காமையால், சாசனங்களைக் கொண்டும், புராதனராண பல பெரியோர் பாரம்பரையாரைக் கண்டும், கேட்ட சங்கதிகளைக் கொண்டே எழுதவேண்டி யிருக்கிறது.

திருமலைநாயடு, இந்நாட்டின் சில சோம்பேறி மன்னர்களைப்போலன்றிச் சூரியோதய மாவதற்கு முந்தியே எழுந்து படுக்கை விடுமுன் பரமேசுவரனைத் தியானித்தும், பிறகு தண்டால் கரிலா முதலான காரிகளைச் செய்துகொண்டு வெளியில் வந்தும், கால் கை கழுவித் தந்தசுத்தி செய்துகொண்டும், சமஸ்தான அவசரக் காரியங்களிருந்தால் உடனே இராஜ சபையைக் கூட்டிக் காரியங்களைக் கிரமமாகச் செய்து முடிப்பார். சமஸ்தான அவசரக் காரியங்கள் இல்லாவிட்டால், கோவில் முதலான திருப்பணி வேலைகளைப் போய்ப்பார்த்து வேலை செய்வோரை உற்சாகப்படுத்தி வருவார். சில சமயங்களில் தமகத்துக்குப் போய் வேங்கைப்புலியையும், காட்டெருமையையும் வெளியில் விட்டு அவைகள் சண்டை செய்வதைப் பார்ப்பார். தாம் தொப்பை வயிற்றோடு ஸ்தூலதேகராகிப் பெரிய உருவமும், ஆஜானுபாஹுருமாக இருந்தும், தமது குதிரைமேலேறிச் சிறு வாலிபனைப் போற் சவாரி செய்துகொண்டும், அப்படிச் சவாரி செய்யும்போது, ஒரு சிறுத்தைப் புலியையும், கலைமானையும் கூடுகளை விட்டு வெளிப்படுத்தி அவைகளைச் சண்டை செய்யவிட்டும் தாம் ஆயுதபாணியாகக் கலைமா

னுக்கு உதவியாகக் குதிரைமேல் சவாரிசெய்துகொண்டு, பீமனைப்போல் பாய்ந்து ஓடுவார். சில சமயங்களில் தாம் இருக்கும் குதிரை வேகமாக ஓடும்போது, திடீரென அக் குதிரையை விட்டுக் கிளம்பி, அடுத்து வரும் குதிரை அல்லது யானைமேற் பாய்ந்து உட்காருவார். இத்தியாதி விளையாட்டில் இருபது வயது வாலிபனைப்போல நடிப்பார். இப்படித் தேகாப்பியாசஞ் செய்து வெய்யில் அதிகமாகில், தமது அரண்மனைக்கு வந்து சுத்த ஸ்நானம் செய்து, பட்டு நார்மடி தரித்தும், நாமமிட்டும், தமது இஷ்ட தேவதைகளாகிய ஸ்ரீரங்கர்-திருப்பதி கோவிந்தர்-மதுரை சொக்கர், மீனாக்ஷி பூஜைகளை வெகு சிரத்தையாகவும் பயபக்தியாகவும் செய்து முடித்துக்கொண்டும் போஜனசாலைக்குப் போவார். க்ஷத்திரிய ஜாதியைச் சார்ந்த இவர் மது மாமிசத்தைச் சாதாரணமாகச் சாப்பிடச் சுதந்திரமுடையவராக விருந்தும் மதுவைப் பாஷாணமாகவும், மாமிசத்தை மருந்தாகவும் கொண்டு சாதாரணமாகச் சுத்தமான கந்தமூல போஜனத்தையே பெரும்பாலும் உண்பார்.

இப்படிச் சைவபோஜனம் செய்தபிறகு, சற்று இளைப்பாறி, சமஸ்தான அவசரக் காரியங்கள் இல்லாவிட்டால், தமது அரண்மனையின் பல பக்கங்களில் வசித்துவரும் இந்திரஜாலம், மகேந்திரஜால முதலான வித்தைக்காரரைத் தருவித்து வேடிக்கை பார்ப்பார்; அல்லது சொக்கட்டான், சதுரங்க ஆட்டங்களை யாடுவார்; அல்லது சமுகத்திய சமஸ்கிருத, தெலுங்கு, தமிழ் வித்துவான்களைத் தருவித்துச் சாஸ்திர விசாரணை செய்வார். அஷ்டப் பிரபந்தமென்னும் அருமையான கிரந்தத்தை இயற்றிய பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், இந்தத் திருமலை நாயடுகாரு சமுகத்தில் உத்தியோகத்திலமர்ந்திருந்தார். ஒருநாள் அந்தப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், ஸ்ரீரங்கத்தில் சித்திரைத் தேர் புறப்பட்டு வரும்போது, அந்த இரதத்தில் அலங்கரித்திருந்த துணிக்கு வகை மோசமாக நெருப்புப் பிடித்ததாக ஞானக்கண்ணால் கண்டு சொல்ல, அதன் உண்மையைத் தமது கனவினாலும் கேள்வியினாலும் அறிந்த நாயடுகாரு, அந்த ஐயங்காருக்கு ஸ்ரீரங்கத்தில் சலவைக்கல் மண்டபப் பிராகாரத்தின் வடமேற்கு மூலையில் ஒரு அறையும், தளிகைப் பிரசாதமும் சதா கொடுத்துவரும்படி கட்டளையிட்டனுப்பினாராம். நாயடுகாரு வேதாந்த விசாரணையில் அதிக விருப்ப

மாகையால், எப்போதும் சில வேதாந்திகள் அருகில் குடியிருந்துகொண்டே இருந்தனர். இவர், மதத்தில் வைணவராகவும், விசிஷ்டாத்துவைதியாகவும் இருந்தாலும், சைவம் முதலான மதஸ்தர்களைக் கௌரவித்துப் பாதுகாத்தும், கடைசியாகக் கிறிஸ்தவர் முதலான புறநாட்டு மதஸ்தர்களையும் போஷித்துப் பாராட்டிப் பாதுகாத்துவந்தார்.

இப்படிப் பகற்பொழுதைக் கழித்த பிறகு மாலை நெருங்கவே, மறுபடியும் ஸ்நானம் செய்தும், சுவாமியைத் தியானித்தும், தர்பார் ஆடை யாபரணங்களை அணிந்தும், கொலுவுக்கு வந்து, தீவட்டி சலாம் நடந்தவுடனே, இராஜகீய காரியங்களை விசாரிப்பார். அதாவது, அன்றுடம் ஸம்ஸ்தானத்தில் நடந்த சங்கதிகளைப்பற்றி மந்திரி பிரதானி முதலானவர்கள் வந்து சொல்லும் சங்கதிகளைக் கேட்டும், அவைகளுக்குத் தக்க சமாதானங்களைச் சொல்லிவிட்டும், சமுகத்தில் முறையிட்டுக்கொள்வோர்களை நேரில் கேட்டும், அவைகளுக்குத் தக்க பரிகாரங்களைச் செய்விக்கும்படி சமீபத்தில் இருக்கிற உத்தியோகஸ்தர்களுக்குக்கட்டளையிட்டும், சமுகத்தைத் தரிசிக்க வந்த பிரபுக்கள், பாளையக்காரர்களுக்குப் பேட்டி கொடுத்தும், அவர்களுடைய சுகக்ஷேமங்களை விசாரித்தும் வர, அர்த்தராத்திரியாகிவிடும். அப்போது நகரின் வெளியில் பதினெட்டு வாத்தியங்களும், பரத நாட்டியங்களும் நடக்கும். பிறகு நாயடவர்கள் கொலுவை விட்டு எழுந்து அந்தப்புரத்துக்குப் போய் உண்டு உறங்குவார். இப்படிப்பட்ட மஹானுபாவர் சகாப்தம் 1584-கி-பி. 1662 - துன்முகிமுதல் பிள வருஷமாகிய 40 வருஷங்கள் ஆண்டு மண்ணுலகை விட்டவுடன், அப்போது மைசூரை ஜயித்து மதுரைக்கு வீரதீரனாகத் திரும்பிவந்த திருமலைநாயடுகாருக்கு இளைய தம்பியும், இராஜ்ஜிய பரிபாலனத்துக்கு வேண்டிய சக்திசாமர்த்தியங்களையுடையவருமாகிய குமாரமுத்து வீரப்பநயடுகாருக்குப் பாண்டிய நாட்டிற் பட்டங் கட்டவேண்டியிருக்க, யாது காரணத்தைக் கருதியோ துர்மந்திரிகள் கூடி திருமலை நாயடுகாரின் குமாரராகிய முத்து அளகாத்திரி நாயடுகாருக்கு மதுரையில் பட்டங்கட்டி வைத்தார்கள்.

# ஸ்ரீ முத்து அளகாத்திரி நாயடுகாரு சமஸ்தானம்

[கி. பி. 1659ஞ முதல் 1682ஞ வரையில்.]



இந்த முத்து அளகாத்திரி நாயடு சிறப்பும் சீரும் பெற்ற தமது சிறிய தகப்பனாராகிய குமார முத்து வீரப்ப நாயடுக்குக் கட்டவேண்டிய பட்டத்தைத் துர்மந்திரிகளின் சகாயத்தினால் தாம் கட்டிக்கொண்டதைப்பற்றி இவரைப் பலர் பலவிதமாகத் தூஷிக்கத் தலைப்பட்டனர். அக்காரணத்தினால் சிலர் இவரைச் சுபத்தினிக்குப் பிறக்காமல் வைப்பாட்டி மகன் என்றும் சொல்லித் தூஷிக்க ஆரம்பித்தனர். அன்றியும், அக்காலத்தில் இவர் சிறிய தந்தை குமாரமுத்து வீரப்பரிடத்தில் தக்க தண்டு தளாதிகளிருந்தும், இவரைக் கண்டிக்காம லிருந்த காரணம் தெரியவில்லை. ஒருவேளை இவருடைய அதிகாரத்துக்குள் இருந்த சேனை அப்போது தான் மைசூரில் பிரமாத சண்டைசெய்து களைத்திருப்பதை எண்ணியோ? அல்லது துர்மந்திரிகள் தமக்குத் துணைநிற்க மாட்டார்களென்றெண்ணியோ? மற்றெந்த ஏதுவைப்பற்றியோ? அவருக்கு இனாமாகக் கொடுத்த சிவகாசி, திருநெல்வேலி ஜில்லாவை யடைந்து, அங்கு போய் நாடு நகரங்களைச் சீர்படுத்தியும், தரும கைங்கரியங்களைச் செய்து கொண்டுங் காலத்தைக் கழித்தார். மதுரையின் புது மன்னராகிய முத்து அளகரி அல்லது முத்துவீரப்ப நாயடு இவ்விதமாகச் சிங்காசன மேறியவுடனே, தாயாதி சண்டை சச்சரவுகளற்று, நிம்மதியாக விருந்தபடியால், மதுரை கவர்ன்மெண்டார் மகமதியருக்குக் கட்டிக்கொண்டு வந்த அநியாயமான கப்பத்தை நிறுத்திச் சுதந்தரம் பெறக்கருதி முதலில் திரிசிராப்பள்ளிக் கோட்டையைப் பலப்படுத்தியும், தஞ்சாவூர் நாயடைத் தம்மோடு சேர்த்து மகமதியர்மேல் படையெடுத்துப் போய்ப் பழைய பழியைத் தீர்த்துக்கொள்ளவும் பிரயத்தனப்பட்டார். இப்படிப்பட்ட காலத்தில் (1648ஞ பிராம்மண வேடம் தரித்து 42ஞ கிறிஸ்து மதத்தைப் போதித்து, ஆத்மநிரியாணம் முதலான கிரந்தங்களை இயற்றிய இராபர்ட்டு டி நோபிலிபஸ் (Robert de Noblibus) மதுரைநாட்டின் கலகங்களைக் கண்டு சகியாதவராய் மயிலாப்பூருக்குப் போய் இறந்துவிட்டார். இது சங்கதியைக் கேட்ட தஞ்சைமன்னர் தாம் மதுரைக்காரருக்கு உதவி செய்யச் சரிப்படாதென்று சங்கதி சொல்லி யனுப்பிவிட்டு,

தக்கணி நபாபாகிய இட்டல்கானுக்கு அநேக பஹுமானங்களை யனுப்பித் தமக்கு நேசராக இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அந்த மஹமதிய மன்னன், தஞ்சை மன்னன் அனுப்பிய இனம் பஹுமானங்களை வாங்கிக் கொண்டாலும், சில நாள்கள் சென்றவுடனே ஒரு பெரிய சேனையைத் திரட்டிக்கொண்டு, தென்னிந்தியா முழுதையும் ஜயிக்கப் பேராசைக் கொண்டு 1659வஸ் மார்ச்சுமீ 19வ தஞ்சாவூர் கோட்டைக்கே (பழைய சிநேகிதத்தையும் பாராட்டாமல்) முற்றுகைபோட, அக்கோட்டையைக் காக்கப் பலமான தண்டு பீரங்கிகள் வைத்திருந்தும், தற்செயலாய் அச்சேனைவீரனுக்கு ஒரு சிறு அம்பினால் காயமுண்டாக, அதற்குப் பயந்தோட, மகமதியச் சேனைகள் கோட்டையைப் பிடித்துக்கொண்டும், அதைக் காக்க ஒரு சிறு தண்டை விட்டுவிட்டும், அடுத்திருக்கும் மன்னார் கோயிலை முற்றுகைபோட, அக்கோட்டையை யாதொரு தாக்குதலன்றி விட்டுவிட. பிறகு மகமதியர் சேனை ஜயவீரராகி, பெரும்பாறையில் பலமாகச் சேர்த்துக் கட்டப்பட்டிருந்த வல்லத்தின் கோட்டைக்குப் போனார்கள். அக்கோட்டை பலமான கோட்டையானபடியால, அதில் போயிருந்த தஞ்சைமன்னன் முன்னும் பின்னும் யோசித்துப் பாராமல் பயந்து, அடுத்திருந்த காட்டுக்குள்போய் மறைந்துவிடவே, அடுத்த கிராமங்களிலிருந்த கள்ளர்கள் அந்த வல்லத்தின் கோட்டைக்குள் புகுந்து, அங்குள்ள ஆடையாபரணங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டுபோய்விட, அதன்மேல் மகமதியரும் போய் அக்கோட்டையைப் பிடித்துக்கொண்டும்; அதைக் காக்க ஒரு சிறு சேனையை வைத்துவிட்டும், வழியில் காணும் கிராமங்களில் புகுந்து கொள்ளையடித்தும், கொலைகள் செய்துகொண்டும், மதுரை ஸமஸ்தானத்துக் கருகில் வந்துவிட்டனர். இந்த மகமதியர் வழிகளில் செய்த கொள்ளைகளினால் அங்கங்குள்ள குடிகள் பயந்து அடுத்திருக்கும் சத்தியமங்கலம், திரிசிராப்பள்ளிக்கு வலசையாக ஓடிப்போய்விட்டார்கள். அப்படிக்குடிகள் நாலாபக்கங்களிற் பறந்துபோகவே, படுபஞ்சமும் - பேதி வாந்தியும் சம்பவித்து, மகமதியர் சேனைகளுக்கு உணவும் மருந்தும் கிடையாமல் மண்மாரியாக மாண்டுவிட்டார்கள். தப்பித்தவழி இருந்த சொற்ப சொத்தையும் கள்ளர்கள் புகுந்து கொள்ளையடித்துக் கொண்டார்கள். இத்தியாதிகளினால் மகமதிய மன்னர் மனமொடிந்து திரிசிராப்பள்ளிக் கோட்டைக்கரு

யில் வர, அந்தக் கோட்டையை முத்து அளகாத்திரியும் அவர் சேனைத் தலைவர் லிங்கம நாயடும் அதிக கம்பீரமாகக் காத்துக்கொண்டிருந்தபடியால், மகமதிய மன்னர் ஜயம் சாயாமல், செலவுக்கு அதிக கஷ்டமாகி, "மூன்று வருஷத்திய கப்பத்தையாவது கொடுங்கள்" என்று கெஞ்சியும், மதுரையார் கொடாமையால், அவர்கள் தம்மூர்போய்ச் சேருவதற்கு மாத்திரம் சொற்ப தொகையைக் கொடுக்க, அதைப் பெற்றுக்கொண்டு சேனையைக் கூட்டிக்கொண்டு தமது நாட்டுக்கேகினார்கள். இப்படி ஜெயம் பெற்ற முத்து அளகாத்திரி நாயடு மதுரைக்குப் போய் இராஜகிய காரியங்களைக் கவனிக்காமல், சிற்றின்பராய் ஸ்திரீகள் இன்பத்தில் மூழ்கி அதனால் விபாதிகண்டிறந்தார். இவர், கனம் டெயிலர் கணக்கின்படி சகாப்தம் 1594ஸு (கி. பி. 1672) சுபகிருது முதல் விரோதி விக்கிருதியாகிய பத்து வருஷங்கள் ஆண்டார்.

---

## ஸ்ரீ சொக்கநாதர் அல்லது சொக்கலிங்க நாயடுகாரு ஸமஸ்தானம்.

### (கி-பி. 1659-ஸு முதல் 1682ஸு வரையில்.)



மாதர் மோகத்தில் மூழ்கி மடிந்த முத்து அளகாத்திரி நாயடு பட்டத்திற்கு, அவர் குமாரர் சொக்கநாத நாயடு வந்தார். அப்போது அவருக்கு வயது பதினாறு ஆகவே, ஸமஸ்தான காரியங்களைத் தமது தகப்பனாரிடம் உண்மையாக இருந்த பிராம்மண பிரதானியும், பிராம்மண இராயசனும் நடத்திவார்கள். வந்தாலுமென்ன? அவர்களுக்குப் பேராசை யதிகரித்து, ஸமஸ்தானத்தைத் தம் வசத்திலேயே வைத்துக்கொள்ளக் கருதி, சொக்கநாதருக்கு வேண்டிய பந்துமித்திரர்களையும்-அவர் க்ஷேமத்தைக் கருதிய பிரபுக்களையும் - பாளையக்காரர்களையும் ஹிம்சித்தும், அவர்களைச் சமஸ்தான வேலைகளிலிருந்து நீக்கியும, அநேக அக்கிரம நடவடிக்கைகளைக் கையாடி வந்தார்கள். ஸமஸ்தான ஸ்திதி இப்படியிருக்க, முன்னொருகால் அதிக பிரபல ஸ்திதியிலிருந்து இப்போது மங்கலடைந்த தமது முன்னோராகிய விஜயநகர ஸமஸ்தானத்தை உயிர்பெற்றோங்க விரும்பி, அதன் அதிபர் நரசிங்க தேவராயனுக்கும், அவர் குடும்பத்தாருக்கும் தக்க உதவி செய்யவேண்டுமென்று கருதியும்,

செஞ்சிக்கோட்டை நாயடுகாருக்கு வேண்டிய உதவி செய்தும், அக்கோட்டையை மகமதியர் கையிலிருந்து பிடுங்க வேண்டுமென்றும், சொக்கநாதர் மனதில் தோன்றித் தமது தளவாயையும், தளகர்த்தர் லிங்கம நாயடுவையும் 40,000 சேனையோடு மகமது சகோசியைத் தாக்க அனுப்ப, சமஸ்தான துர்மந்திரிகள் எதிரிக்கு முன்னாடியாக இந்தச் சங்கதி யனுப்பியும், தளவாய் தளகர்த்தர்களுக்குத் தகுந்த லஞ்சம் கொடுத்துச் சரிபடுத்திக்கொள்ளும்படி தூண்ட, மகமதிய நபாபும் அப்படியே செய்ய, சொக்கநாத நாயடுவின் சேனைகள் வீண் பணச்செலவுடன் திரும்பி வந்துவிட, இத்தியாதிகளைக் கண்டு சொக்கநாதர் கண்டிக்க, துர்மந்திரிகள் அவரைச் சமஸ்தான காரியங்களில் பிரவேசிக்காதபடி செய்தும், சிறையிலிருப்பவரைப்போல் இரண்டொரு அறைக்குள் வைத்தும், அவருடன் யாரும் போய்ப் பேசாத விதமாகச் செய்தும், அவரது தம்பியாருக்குப் பட்டம் கட்ட லிங்கம நாயடு மூலமாகப் பிரயத்தனப்படும்போது, இத்தியாதி சங்கதிகளை அரண்மனையின் ஒரு ஸ்திரீயினால் கேட்டுச் சொக்கநாதர் இரகசியமாகச் சில வீரர்களைச் சம்பாதித்து மறைத்து வைத்துக்கொண்டிருந்து, மந்திரியும் இராயசனும் அருகில் வந்தவிடனே கண்ஜாடையால் தூண்டி, இராயசனை அந்த விடத்திலேயே துண்டு துண்டாக வெட்டிக் கொல்வித்தும், மந்திரி பிராம்மணனானபடியால், அவனைக் கொலைசெய்யக் கூடாதென்றெண்ணி அவன் கண்களைப் பிடுங்கச்செய்வித்துத் துரத்திவிட்டும், அவர்களோடு கலந்திருந்த லிங்கமநாயடையும் தக்கபடி சிக்ஷிக்க யோசிக்கையில், அவன் அசாத்திய வீரனானபடியால், "ஆகாதவனை அடுத்துக் கொல்" என்னும் பழமொழிப்படி முதலில் மரியாதையாக உறவாடி வருகையில், "குற்றமுள்ள நெஞ்சு குதித்துத் துடிக்கும்" என்னும் பழமொழிக்கொக்க சொக்கர் எப்படியாவது தன்னைக் கொன்றுவிடுவாரென்று ஓடிப்போய்த் தக்ஷிண மகமது கோசியினிடம் சேர்ந்து சொக்கரோடு சண்டை செய்ய 12,000 பதாதிகளையும், 7000 குதிரை வீரரையும் கூட்டிக்கொண்டு வந்தார். அப்போது திரிசிராப்பள்ளியைக் காக்க 50,000 சேனையிருந்தும், லிங்கமநாயடு உள் தந்திரமெல்லாம் அறிந்தவனாகையால் புதிதாக நியமித்த பிராம்மண மந்திரிக்கும் லஞ்சம் கட்டித் தந்திரமாக ஜயிக்கப் பார்த்தான். இந்தச் சூதை யறிந்த சொக்கநாதர் அந்தப் புதுப்பிராம்மண மந்திரியையும் வேலையி

லிருந்து நீக்கிவிட்டுத் தாமே நேரில் சேனையை நடத்திவர ஆரம்பிக்கவே, சேனைகள் தைரியங்கொண்டு ஒரே மூச்சாக நின்று மகமதியர் சேனையைத் தாக்க, அவர்கள் தோல்வி யடைந்து தஞ்சை நாயடுவின் சமஸ்தானத்துக்கோடி, அவர் தயவைப்பெற்று மறைந்திருக்க, இது சமஸ்தானமெங்கும் பிரசித்தியாக, சொக்கநாதருடைய சக்தியையும், சுத்த வீரத்தனத்தையும் கண்டு சிறு பையன்கள் முதலானவர்க ளும் வலியவந்து அவர் பட்டாளத்தைச் சேர, 70,000 சேனையோடு தஞ்சை நாட்டின்மேல் படை எடுத்துப்போக லிங்கமநாயடும் மகமதியரும் பயந்து செஞ்சிக்கோட்டைக்கு ஓட்டம் பிடித்தார்கள். தஞ்சை மன்னன் தாசானுதாச னுகிச் சமாதானம் செய்துகொண்டான்.

இந்தக்காலத்தில் 1662ஷ மதுரையில் அநேக கெட்ட சகுணங்க ளுண்டாயின. அதாவது பிறந்த பிள்ளைகள் பற் களைப் பெற்றிருந்தனவாம். காணுத பூச்சிகளும், புழுக்க ளும் பயிர்களைப் பாழ்த்துப்போகச் செய்தனவாம். பிரஜை கள் யாதொரு வியாதியுமின்றித் திடீரென்று விழுந்து செத்துக்கொண்டு வந்தார்களாம். நாட்டில் குடித்தனம் கெட்டுப் பஞ்சம் அதிகரித்ததாம். பஞ்சத்தால் செத்தவர்க ளைப் புதைக்க வகையற்று நாற்றமெடுக்க, அதனுல் வாந்தி பேதி கண்டு கணக்கற்ற ஜனங்கள் மடித்துவிட்டார்களாம். இத்தியாதி துர்ப்பிக்ஷகாலத்தினுல் குடிகள் பயந்து நொந்த சமயத்தில் (1662 அல்லது 6 வருஷம்) மகமதியருடைய மந்திரியும், முன் மதுரை ஸமஸ்தானத்தில் மந்திரியாக விருந்து மோசம் செய்ததனுல் சர்க்கார் வேலையிலிருந்து நீக்கிவிடப்பட்டிருந்த வனமய்யன் என்னும் பிராம்மணன் ஒருபெரும் (மகமதியர்) சேனையைக் கூட்டிக்கொண்டு திரி சிராப்பள்ளியைத் துரத்தியடிக்க, அவர்கள் திரும்பிப்போ கும்போது வழியில் கண்ட கிராமங்களை யெல்லாம் கொள்ளை யடித்தும், குடிகளை வதைத்தும் குடிகளைக் கொளுத்திக் குட்டிச்சுவராக்கிக்கொண்டும் போய்விட்டார்கள். இந்த யுத் தத்தில் தஞ்சை விஜயராகவலு நாயடு மகமதியருக் குதவி செய்த காரணத்தைப்பற்றிச் சொக்கநாதர் படை எடுத் துப்போய் வல்லத்தின் கோட்டையைப் பிடித்துக்கொள்ள, தஞ்சை மன்னர் தஞ்சமென்று வந்து சமாதானம் செய்து கொண்டார்.

இப்படி மதுரை ஸமஸ்தானத்தின் மேல் மகமதியர் படையெடுத்துவந்தபோது சேதுபதியானவர் தக்க சகாயம் செய்யாமையால், அம்மறவர் நாட்டின்மேலும் படையெடுத்துப்போக, அச் சேதுபதி சொக்கருடைய சேனையின் பலத்தைக் கண்டு பயந்து ஒரு காட்டுக்குள் போய் மறைந்து கொள்ள, சொக்கர் திருப்பத்தூர் - மானமதுரை - புதுக்கோட்டை - காளியர் கோட்டைகளைப் பிடித்துச் சுவாதீனமாக்கிக்கொண்டும், தமது சேனையைத் தமது அதிகாரிகள் வசத்தில் விட்டுவிட்டும், சில வைதிக சடங்குகளுக்காக மதுரைக்குப் போக, இது சங்கதி யறிந்த சேதுபதி திடீரென்று வந்து சொக்கருடைய சேனையைத் தாக்க, சொக்கநாதரும் தமக்கு அகப்பட்ட கோட்டைகளும் வெற்றியும் போதுமென்று எண்ணிப் பெரும்பான்மையான தமது சேனையைத் தமது கோட்டைகளைப் பாதுகாக்கத் தருவித்துக் கொண்டார். 1666ளு நாட்டில் சண்டை சச்சரவின்றி சுமாதான மேலிட்டோங்க, சொக்கநாதர் சொர்னதானம் செய்தார். அதாவது, பசும்பொன்னினால் ஒரு பசுவைச் செய்து அதனுள் இராஜன் புகுந்துவந்த பிறகு அப்பொன் பசுவைப் பிராம்மணர்களுக்குத் தானம் செய்துவருவதேயாம். இந்த வழக்கம் இப்போது திருவநந்தபுரத்தில் நடந்துவருகிறது. சொக்கநாதர் இப்படிச் சமயச்சடங்குகளில் புகுந்து சுமாதானமாகக் காலம் கழிக்கையில், இவருடைய மந்திரி பிரதானிகள் ராஜனுக்குத் தெரியாமல் குடிகளை வருத்தி ஏராளமான பணம் பிடுங்கிச் சொந்த உபயோகப்படுத்திக் கொண்டு வந்தார்கள். இப்படி துஷ்டத்தனமாக லஞ்சம் வாங்கும் உத்தியோகஸ்தர்களைத் தக்கபடி சிக்ஷிக்காமல், அவர்களுக்குச் சொற்ப அபராதம் போட்டு மிரட்டிவந்ததனால், அந்தத் துஷ்ட உத்தியோகஸ்தர்கள் தமக்கு விதித்த அபராதத் தொகையையும் குடிகளை வருத்திப் பிடுங்கிப் படாதபாடு படுத்திவந்தார்கள். இப்படி மந்திரி பிரதானிகள் பரிதானம் வாங்கிக் குடிகளை வருத்திவரும் வழக்கம் மதுரையில் மாத்திரமல்ல, தஞ்சை செஞ்சி ஸமஸ்தானங்களின் உத்தியோகஸ்தர்களு மிப்படியே செய்து வந்தார்கள்.

இப்படிச் சொக்கநாதருடைய உத்தியோகஸ்தர்கள் குடிகளை வருத்தி லஞ்சம் வாங்கி வந்ததோடு, சர்க்கார் பொக்கிஷத்திலும் பொய்க் கணக்குகளை எழுதிக் கொள்ளை யிட்டுவரவே, இராஜ பொக்கிஷமும் பாழ்த்துக்கொண்டு

வந்தது. இத்தியாதி அக்கிரமங்களைக் கண்டிக்கத் திரிசிராப்பள்ளியில் போய்த் தங்கி, தக்க ஏற்பாடுகளைச் செய்யச் சொக்கருக்குச் சொகுசான அரண்மனையில்லாததைக் கருதித் தன் பாட்டனார் திருமலைநாயடுகாரு எவ்வளவோ கஷ்டப்பட்டும், காசைச் செலவழித்தும் கட்டிய, மதுரை மஹால் அரண்மனையை இடித்து, அதிலிருந்த அழகுள்ள ஸ்படிகஸ்தம்பங்கள், விட்டங்கள், சட்டங்கள் - பீடங்கள் முதலான கல்சாமான்களை இடிப்பித்து வண்டிவண்டிகளாக ஏற்றித் திரிசிராப்பள்ளிக்கு அனுப்பினார். இப்படி அந்த மாக்ஷிமைபொருந்திய மஹாலின் முக்கால் பாகத்தை இடித்தபிறகு, அப்போது மந்திரியாகிய சின்னத் தம்பி முதலியார் பார்த்துப் பலவிதமாகத் தடுத்துவந்ததனால் இப்போதிருக்கும் கொஞ்சப்பாகத்தை மாத்திரம் மதுரையில் இடிக்காமல் விட்டுவிட்டார்.

இப்படிப்பட்ட காலத்தில் இச்சொக்கருடைய ஜன்மவிரோதியான லிங்கமநாயடு இவருக்கு ஆபத் சினேகிதரானார். இப்படியானதற்குக் காரணம் தெரியவில்லை. இராஜகீய காரியமாக லிங்கமநாயடுவின் குமாரத்தியைச் சொக்கருக்கு விவாகம் செய்துகொடுக்கச் சம்மதித்து இப்படிச் சமாதானமாக்கிக்கொண்டதாக ஒரு சாசனம் சொல்லுகின்றது. ஆனால் 1674ஷ சொக்கநாதர் தஞ்சாவூர் அச்சுத விஜயராகவனு நாயடவர்களுடைய குமாரத்தி மங்கம்மாளை விவாஹம் செய்ய விரும்பித் தளவாய் வெங்கடகிருஷ்ணப்பநாயடுவைத் தூதாக அனுப்ப, அந்தத் தஞ்சை மன்னர் வெங்கட கிருஷ்ணம நாயடை இராஜசபையில் அவமானமாகப் பேசித் துரத்தியதால், அது சங்கதியைக் கேட்ட சொக்கர், அந்த அவமான அழுக்கைத் தஞ்சை மன்னர் இரத்தத்தினால் கழுவியே தீரவேண்டுமென்று கருதி, ஒரு பெரிய சேனையை வெங்கட கிருஷ்ணம நாயடுடன் அனுப்ப, இரு கக்ஷியாருக்கும் பிரமாத சண்டை நடந்ததில் விஜயராகவனு நாயடு முதலானவர்கள் கொல்லப்பட்டும், பிறகு அந்தத் தஞ்சைப் பெண்ணை (மங்கம்மாளை) விவாகம்செய்துகொண்டதாகத் தஞ்சாவூர் சரித்திரம் முறையிடுகிறது. இந்த விஷயத்தைத் தஞ்சை ராஜாக்கள் சரித்திரத்திலும், மிஸ்டர் சரவணமுத்துப்பிள்ளை எழுதிய மோகனாங்கி என்னும் நாடகத்திலும் பார்த்தால் விவரமாக அறியலாம்.

இவ்விதமாக விவாகம் செய்துகொண்ட சொக்கநாதர் வரவர சிற்றின்பப் பிரியராகியும், பாரதம் - பாகவதம் - இராமாயணுதி கிரந்தபடன காலக்ஷேபத்தில் காலங்கழித்தும், சமஸ்தான வேலைகளில் அசட்டையாக இருப்பதைக் கண்டு, தளவாய் முதலான துர்மந்திரிகள் சொக்கருடைய தம்பியாகிய முத்து அளகாத்திரி நாயடுக்குக் கோள்கள் சொல்லி அவரையே ஸமஸ்தான பதியாக்கித் தாம் ஸமஸ்தானத்தில் கொள்ளையடிக்கப் பிரவர்த்தித்தார்கள்.

இப்படிப்பட்ட காலத்தில் கோவிந்தப்பய்யன் என்ற ஒரு பிராம்மணன் முத்து அளகாத்திரிக்கி அந்தரங்க சிநேகிதனும் மந்திரியுமாகிச் சொக்கநாதரையே சொர்க்கத்துக்கு அனுப்பத்தக்க தந்திரங்கள் செய்துகொண்டு வந்தான். இந்தக் கோவிந்தப்பய்யன் முன் தஞ்சையில் மந்திரியாகவிருந்து, அந்தச் சமஸ்தானத்தை நாசமாக்கியவனென்று சிலருடைய கருத்து. சிலர் அந்தக் கோவிந்தப்பய்யனுடைய சகோதரன் என்றும் சொல்லுகிறார்கள். சமஸ்தானத்திலிருந்த பெரிய உத்தியோகஸ்தர்கள் எல்லாரையும் வதித்துக்கொண்டும், சின்னகதிரப்பன் முதலான வீரர்களை மனமொடிந்துபோகும்படி பேசியும், அவர்கள் கப்பத்தொகையை அதிகப்படுத்தியும், இப்படியே சொக்கநாதருக்குப் பிரதிகூலமான காரியங்களையெல்லாம் செய்துகொண்டு வந்ததன்றியில், இரகசியமாகத் தஞ்சைக்குப் போய் அவ்விடத்திய அரசன் அளகிரி நாயடுவைச் சொக்கநாதருக்குக் கப்பம் கட்டாதபடி தடுத்தும், அளகிரியைப் பகையாளியாக்கி விட்டதாக ஒரு சாசனத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட சதிமோசம் செய்தவன் வெங்கண்ணு என்ற நியோகி பிராம்மணனென்று தஞ்சை சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மதுரை சமஸ்தானம் இப்படிச் சீர்கெட்ட ஸ்திதியிலிருப்பதையறிந்த எக்கோஜி 1675ஸு பெரும சேனையோடு வந்து சமஸ்தானத்தைச சார்ந்த சில கோட்டைகளை முற்றுகை போட்டுப் பிடித்துக்கொண்டு, திரிசிராப்பள்ளியை மாத்திரம் சொக்கருக்கு விட்டுப்போனுன். இக்காலத்தில் ஸமஸ்தானத்தில் கடும் பஞ்சமுண்டாகிப் பல்லாயிரம்பேரைப் பரலோகத்துக் கனுப்பிவிட்டது.

இத்தியாதி அசம்பவங்களை அறிந்த எக்கோஜி தஞ்சையை வசமாக்கிக்கொண்டு தானே ராஜனுகப் பட்டங்கட்

டிக்கொள்ளவே, மதுரை ஸமஸ்தானத்தில் சில பிரதான பட்டணங்களைப் பிடிக்கவும், பிரபல சேனையைத் திரட்டிக் கொண்டு தக்காணத்து இடல்கான் வர, சொக்கநாதர் கேட்டு, இனிச் சிற்றின்பத்திலும் பேரின்பத்திலும் காலம் போக்கிக் கொண்டிருந்தால் தமது இராஜ்ஜியமே போய் விடுமென்று தெரிந்து, திடீரென ஒரு வாலிபனைப்போல் கர்ஜ்ஜித்து எழுந்தும், தமக்கு அநுகூலராக விருந்தவர்களுடைய சேனைகளோடு தமது சேனையைச் சேர்த்தும், சண்டைக்கு எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். மகமதியரும் மைசூராரும் மயங்கி நிற்க, சிவாஜி என்னும் மஹாராஷ்டிர வீரன் 1677ஆ தென்தேசங்களை நாடிவருகிற சங்கதி தெரிந்து பயத்தோடு பார்த்துக்கொண்டிருக்க, சிவாஜியும் வந்து செஞ்சிக்கோட்டையைப் பிடித்துக்கொண்டும், தஞ்சையிலிருந்த தனது சகோதரன் எக்கோஜியைச் சினேக பாவங்காட்டித் தருவித்துப் பிடித்து அந்த எக்கோஜி கால்களில் விலங்கை மாட்டி, அவன் சொத்தைப் பிடுங்கப்பார்க்கையில், எக்கோஜி தந்திரமாக விலங்கை நீக்கிவிட்டுக் கொல்லிடத்தில் குதித்து நீந்திக்கொண்டு அடுத்தகாட்டில் மறைந்துகொண்டான். இந்த வேளையில் வடக்கில் மோகல் சமஸ்தானத்துக்கும், விஜயநகர சமஸ்தானத்துக்கும் பிரபல சண்டைகள் உண்டாகப்போகிறதாகச் சங்கதியைக் கேட்ட சிவாஜி தனது சொந்த தம்பி சந்தோஜிராவைத் தக்ஷண சேனைத் தலைவனாக விட்டுப்போனார். இது சமயமறிந்த சொக்கநாதர் தஞ்சாவூரைப் பிடிக்கப்போகவே, எக்கோஜி அறிந்து தனது சகோதரன் சந்தோஜியிடம் போய்ப் போதுமான பொருள் கொடுப்பதாகவும், இந்தச் சமயத்தில் உதவி செய்யவேண்டுமென்றும் வருந்தி வேண்டிக் கொள்ள, சந்தோஜியும் சம்மதித்து எக்கோஜிக்கு உதவியாகப் போக, சொக்கநாதர் திரும்பி திரிசிராப்பள்ளிக்கே வந்துவிட்டார். இப்படிச் சொக்கநாதர் தஞ்சைக்குப்போன சமயமறிந்து, மைசூரார் பெரும்படையோடு வந்து இரண்டொரு கோட்டைகளுக்கு முற்றுகைபோட, அம் முற்றுகையை நீக்க வகையற்றுத் தத்தளிக்க நேர்ந்தது. அப்படியாவதற்குக் காரணம்:—

சொக்கருடைய தம்பி முத்துலிங்கனுடைய தூர்மந்திரியாகிய கோவிந்தப்பய்யன் தந்திரமாகச் "சொக்கநாதருக்குப் புத்தி சுவாதீனமில்லை" என்று பறையடித்தும், அவ

ரைச் சிறையில் போடும்படி செய்தும் முத்துலிங்க நாயடு க்கு மகுடாபிஷேகம் செய்வித்துவிட்டபடியால், கொடுங் கோலனுகிய கோவிந்தப்பய்யனுலும், முத்துலிங்கனுலும் குடிகள் அதிகமாக வருந்தச் சம்பவித்தது. இதோடுகூட 1677வஸு டிசம்பர்மீ மலையாள நாட்டிற் பெய்த மிதமிஞ் சிய மழையினுல் திரிச்சி, மதுரை முதலான நாடுகளில் அனேக கிராமங்களையும் குடிகளையும் வெள்ளம் வாரிக் கொண்டுபோகப் பஞ்சமும் வாந்திபேதியும் பிரபலமாகிப் பல்லாயிரம் ஜனங்கள் பரகதியடைந்தார்கள். இப்படிப் பட்ட காலத்தில் முத்துலிங்க நாயடு தனது மூடத்தனத்தி னுல் முன்னும் பின்னும யோசிக்காமல், சொக்கநாதர் தாம் அபிமான புத்திரனுக வளர்த்துவந்த ரஸ்தம்கானை தனது சேனைத் தலைவனுக நியமிக்க, அந்த மகமதிய தளகர்த்தனும் அதிகாரம் கைக்கொண்டபிறகு கோவிந்தப்பய்யனுடைய அக்கிரம நடவடிக்கைகளையும், முத்துலிங்கருடைய மூடத் தனத்தையும் அறிந்து, சமயம் பார்த்துச் சிறையில் வைக்கப்பட்டிருந்த சொக்கலிங்கரை விடுதலை செய்தும், அந்தச் சிறைச்சாலையில் முத்துலிங்கனையும், கோவிந்தப் பய்யனையும் போட்டுப் பூட்டி அப்போது ஸமஸ்தானத்தை வளைந்துகொண்டிருந்த மைசூராரைத் துரத்தியடித்தும் சொக்கநாதரைச் சுதந்திரம்பெறச் செய்தான். இப்படிச் செய்த ரஸ்தம்கான் இரண்டு வருஷம் மரியாதையாக நடத்துகொண்டிருக்கையில், இந்த ரஸ்தம்கான் தனக்குச் செய்த பழியைத் தீர்ப்பதற்குப் பக்குவம் பார்த்துக்கொண் டிருந்த கோவிந்தப்பய்யன் அவன்மேல் பல துர்வதந்திகளை யுண்டாக்கி, சேதுபதி முதலானவர்களுக்குச் சங்கதியை ரகசியமாக அனுப்பித் தருவித்தும், ரஸ்தம்கானைத் துண்டு துண்டாக வெட்டிக் கொல்லும்படி செய்தும், இப்படிச் செய்து சொக்கநாதருடைய தயவை மறுபடியும் சம்பாதித் தாலுமென்ன? 1682வஸு சொக்கநாதர் பாடு கேவல ஸ்தி திக்கு வந்துவிட்டது. அதாவது, இந்த ஸமஸ்தானத்தைப் பிடுங்கி வாயில் போட்டுக்கொள்ள மைசூரார், மறவர், சிவாஜிமகன் சம்போஜி, மேற்படியார் தம்பி எக்கோஜி முதலானவர்கள் சமயம் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

இந்நால்வரில் மைசூர் சேனைத்தலைவனுகிய குமாரராயன் தஞ்சை, செஞ்சிக்கோட்டைகளைப் பிடித்து அவற்றின் வார்சுகளுக்குக் கொடுக்க விரும்பி, தமது பொதுப் பகை

யானிகளாகிய மகமதியர் மராட்டியரைத் தாக்கச் சொக்கநாதருடைய உதவியை முதலில் நாடினார். இந்த வார்த்தைகளுக்குச் சொக்கநாதர் இஷ்டப்படாமல் சோம்பலாகவும் அசட்டையாகவும் இருக்க, மைசூர் வீரன் எக்கோஜி சம்போஜியின் உதவியை நாடி, அந்த இரண்டு மராட்டியர் தமக்கு உதவிசெய்தால், மதுரை நாட்டைப் பிடித்து மூவரும் பங்கிட்டுக்கொள்ளலாமென்று சங்கதி அறிவித்தான். இந்தச் சூதை யறிந்த மராட்டிய மன்னர், மைசூர் வீரனைப் பிடித்துச் சிறையில் போட்டுவிட்டு, தமது சேனைகளை நடத்திக்கொண்டு மதுரைக் கோட்டை தவிர மற்றச் சிறுகோட்டைகளை வசமாக்கிக்கொண்டுவர, மறவர்கள் மதுரைக் கோட்டையை யாதரித்தார்கள். இத்தியாதி அசம்பவங்களைக் கண்ட சொக்கநாதர் தமது நிர்ப்பாக்கிய ஸ்திதியை நினைந்து நினைந்து மனமொடிந்து 1682ஹூ டெயிலர் சரித்திரத்தின்படி (சகாப்தம் 1610-2-1688) பரிதாபி வருஷம் முதல் பிரபவ வருஷமாகிய 16 வருஷங்கள் ஆண்டு மரணமடைய, அவர் குமாரர் இரங்ககிருஷ்ணமுத்து வீரப்பநாயடு சிங்காசனம் பெற்றார்.

---

## ஸ்ரீரங்க கிருஷ்ணமுத்து வீரப்பநாயடு ஸமஸ்தானம்.

(கி. பி. 1682ஹூ முதல் 1686ஹூ வரையில்.)

சொக்கநாத நாயடு பட்டத்துக்கு வந்தபோது வயது 16. அதாவது ஒருபாடசாலை வாத்தியாருக்கு முன் கை கட்டிக்கொண்டு பாடம் படிக்கவேண்டிய ஒரு வாலிபனுடைய வயது. அப்படிப்பட்ட காலத்தில் அவரைத் தக்க உபாத்தியாயரிடம் விட்டுப் படிப்புச் சொல்லிக்கொடுத்து புத்திசாலியாக்க வேண்டியதைவிட்டு, பெரிய ஸமஸ்தானத்தை ஆள விட்டதினால் கல்வியறிவும் அநுபவமுமற்று ஸமஸ்தானத்தைச் சின்னபின்ன மாக்கிவிட்டார். அப்படிப்பட்டவருக்குப் பிறகு அவர் பட்டத்தை யடைந்த அவர் குமாரருக்கும் வயது 15 ஆகவே ஸமஸ்தானத்தின் அநேக கோட்டைகளை அந்நியர் பிடித்துக்கொண்டதோடு, உள் நாடுகளில் கள்ளர்களே தம்மிஷ்டப்படி கொள்ளையடித்துக் கொண்டுவந்து தாமே குறுநிலமன்னராகி விட்டார்கள்.

இப்படிப்பட்ட காலத்தில் இராமநாதபுரத்தின் சேதுபதி இறந்துபோக, இராஜசூறிய சேதுபதி அப்பட்டத்திற்கு வர, அவர் பட்டமேறிய ஆறுமாதத்திற்குள் யாதோ ஒரு தப்பு நடவடிக்கைகளை நடத்தியதாகத் தளவாய் வேங்கடகிருஷ்ணப்ப நாயடுக்குத் தெரிந்து, அவர் இந்தச் சேதுபதியைப் பிடித்துச் சிறையில் போட, அங்கு அவர் இறந்தார். அவருக்குப் பதிலாக, அத்தன் முதலானவர்கள் சில நாள்கள் சேதுபதியாக இருக்கினும், பழைய சேதுபதியின் வைப்புக்குமாரராகிய இரகுநாதன் அல்லது கிழவன் சேதுபதி பட்டத்தை யடைந்து 36 வருஷம் ஆண்டார்.

இந்தக் கிழவன் சேதுபதி காத்தாயி என்னும் ஒரு கள்ளஜாதிப் பெண்மேல் மோகங் கொண்டு கலியாணம் செய்துகொண்டதால், அவர் சகோதரர் இரகுநாதருக்குத் "தொண்டைமான்" என்று பட்டம் சூட்டிப் புதுக்கோட்டைக்கு அரசராக்கினராம். இந்தக் கிழவன் சேதுபதி, மதுரை மன்னனுக்குச் செய்த உதவிக்காக, "பரராஜகேசரி" என்ற பட்டப்பிருதைப் பெற்றார். பிறகு, மைசூராரும், மஹாராஷ்டிரர்களும் மதுரை ஸமஸ்தானத்தின் பல கோட்டைகளைப் பிடித்துக்கொண்ட தன்றியில், மதுரை ஸ்ரீரங்க முதலான பெரிய கோயில்களி லிருக்கும் ஆடையாபரணங்களையும் அடித்துக்கொண்டு போகப் பிரயத்தனப்பட்டார்கள். இத்தியாதி அக்கிரமங்களைக் கண்டிக்க மதுரை இளவரசருக்கு அப்போது சொத்துஞ் சேனையுமில்லாமல் சுவாமியே கதியென்று சும்மா யிருந்துவிட்டார். இப்படி இரண்டு மூன்று வருஷங்கள் செல்ல மைசூராருக்கும், மஹாராஷ்டிரருக்கும் பணக் கொள்ளையினால் பொறாமை யதிகரித்து, ஒருவரை யொருவர் தாக்கிக்கொண்டு தத்தம் நாட்டுக்குப் போய்விட, மதுரை சமஸ்தானத்தை மூடிக்கொண்டிருந்த மூடுபனியைப் போன்ற பகைவர் பயம் பாழ்த்தது.

அப்போது இந்த அரங்க கிருஷ்ண முத்து வீரப்பருக்கு 20 வயதாகியதாலும், இயற்கை யறிவும் காரிய நிர்வாக சக்தியும், சுறுசுறுப்பும், சுதந்திர நாட்டமும் விருத்தியாகியதாலும், உடனே தமது ஸமஸ்தானத்திலிருந்து லஞ்சம் பரிதானம் வாங்கும் உத்தியோகஸ்தர்களையும், பாவையரைக் கூட்டிக்கொடுக்கும் பாவிகளையும், குடிகளை வருத்தும் துஷ்டர்களையும் நீக்கிவிட்டு, நல்ல படிப்பும்

யுத்தியும்-சத்தியமும்-சாந்தமும் - சுவாமி பக்தி முதலான குணச்சிறப்புகளையு முடையவர்களைத் தெரிந்தெடுத்து நியமித்தும், சர்க்கார் கந்தாயத்தைக் கிரமமாக வசூல் செய்யாமல் விட்டுப் பாழ்த்துக்கிடந்த பொக்கிஷத்தைப் பூரணமாக்கியும், சமஸ்தானத்தின் ஒவ்வொரு வேலையையும் ஒவ்வொருவரும் பிரதி நிமிஷமும் சரியாகச் செய்தார்களா இல்லையா என்பதைத் தெரிந்தும், மேல் விசாரணை செய்தும் வந்ததன்றியில், தாமும் கொஞ்சமேனும் சோம்பலையும் - சுகத்தையும் விரும்பாமல், குதிரைமீது ஏறிக்கொண்டு போய்த் திருநெல்வேலியில் நடக்கிற வேலைகளையும், திரிசிராப்பள்ளியில் நடக்கிற வேலைகளையும் பார்தது வருவார். சில சமயங்களில் இரவில் வீதிகளில் திரிந்து வேவுகாரர்களை நம்பாமல் தாமே உண்மை கண்டு பிடித்தும், சில சமயங்களில் திண்டுக்கல்லுக்குப் போவதாகப் போய், வேறு வழியில் வேறு இடங்களில் உத்தியோகஸ்தர்களுடைய நடவடிக்கைகளை நேரில் பார்த்தும் உண்மை கண்டு பிடிப்பார். இத்தியாதி விஷயங்களில் மதுரையில் இதற்கு முன் ஆண்ட எந்த மன்னனும் இப்படி அதிகாரம் செய்யவில்லை என்று குடிகளால் புகழப்பட்டதன்றியில், குடிகளும் தம் நேர் நிர்வாகங்களை நேரில் வந்து சொல்லிக்கொள்ள இடமும் கொடுத்தார். அதற்கு ஒரு உதாரணமாக:-

இந்த வாலிப ராசன் திரிசிராப்பள்ளியில் ஆண்டு வருகையில், சில ஏழைக் கிறிஸ்தவர்கள் வந்து தாம் வசிக்கச் சிறிது இடம் கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு அரங்ககிருஷ்ணர் இரக்கம் கொண்டு கோட்டையில் எவருக்கும் உபயோக மில்லாமல் காலியாக இருக்கும் ஒரு நிலத்தை அக்கிறிஸ்தவர்களுக்குத் தருமமாகக் கொடுக்கும்படி சொல்ல, அந்த விஷயத்தை முன்னதாகச் சமஸ்தான உத்தியோகஸ்தர் சூதுகளினால் அறிந்த சில பிராம்மணர்கள் எனக்கு உனக்கு வேண்டுமென்று கலகஞ் செய்து, அரசனிடம் வந்து, "அரசே! அந்த இடத்தைக் கிறிஸ்தவர்களுக்குக் கொடுக்கக் கூடாது; அது எங்கள் சுவாமியாகிய விக்கிரகத்தை வைத்துப் பூசை செய்ய வைத்திருக்கிறோம்; அதை அவர்களுக்குக் கொடுத்துவிட்டால் எங்கள் சுவாமி விக்கிரகங்களை எங்கே கொண்டுபோய் வைக்கிறது?" என, அரசன் கேட்டு, பிராம்மணரென்றும் சுஜாதி இந்து மதஸ்தரென்றும் பாராமல், நிர்த்தாக்ஷண்யமாக, "உங்கள் சுவாமிக

ளாகிய விக்கிரகங்களை வைக்க இடமில்லாவிட்டால் அவை களைக் கொண்டுபோய் ஆற்றில் போட்டுவிடுங்கள்; உயி ருள்ள சுவாமிகளாகிய ஏழை சனங்கள் அந்த இடத்திலே வாழட்டும்'' என்று சொல்லிவிட்டாராம். இவ் வார்த்தை யைக் கேட்ட பிராம்மணர்கள் பயந்து திரும்பிவிட்டார்கள். இப்படிச் சுதந்திரம் காட்டியது கேவலம் பிராம்மணர்க ளிடத்தில் மாத்திரமன்று; மற்ற மேலான அதிகாரிகள் அக்கிரமம் செய்தாலும் அதைக் கண்டித்து வந்தார். அதற் கொரு திருஷ்டாந்தமாவது:—டில்லியில் அப்போது மிக்க கம்பீரமாக ஆண்டுவந்த மொகலாய பாதுஷா அவர்கள் வருஷத்திற் கொருதடவை தமது பழைய ஜோட்டைச் (செருப்பை) ஓரழகிய பெரிய யானையின் அவுதாவில் வைத் தும், அதற்குத் தக்க சில நபாபுகளையும் - பக்கிரிகளையும்- சேனைகளையும சேர்த்தும், இந்தியாவில் உள்ள ஒவ்வொரு இராஜ சமுகத்திற்கு அனுப்பியும், அந்தந்த ராஜர்கள் தம் தம் மரியாதைகளுடன் வந்து அழைத்துப்போயும், தமது ஸமஸ்தான சிங்காசனத்தின்மீதில் அந்த ஜோட்டை வைத் துப் புஷ்பங்களைப்போட்டுப் பூசை செய்து வணங்கிய பிறகு, அந்த ஜோட்டுடன் கூடவந்த நபாபு பக்கிரி தண்டு தளாதிகளுக்குத் தக்க மரியாதைகள் செய்தனுப்பிக்க வேண்டுமென்றும், அப்படிப் பூசை செய்யாதவர்கள் சிட் சிக்கப்படுவார்களென்றும் சகல மன்னர்களுக்கும் தெரிவித் தும், தெரிவித்தபடியே நடத்திக்கொண்டும் வந்தார்.

அந்த வழக்கத்தின்படியே அரங்ககிருஷ்ண முத்து வீரப்ப நாயடு ஸமஸ்தானத்துக்கும் அந்த பாதுஷாவின் ஜோட்டைக் கொண்டுவந்த யானையும், பரிவாரங்களும் வந்து நகர்ப்புறம் நின்று சங்கதி தெரிவிக்க, அரங்க மன்னர் கேட்டு, "அடா இப்படிப்பட்ட ஹீனமான பிழைப்பும் புருஷ ஜன்மத்துக் கடுக்குமோ!'' என்று எண்ணித் தமது காரியஸ்தர்களைத் தருவித்து அவர்கள் மூலமாக, "இரா ஜன் தேக சவுக்கிய மில்லாதிருக்கிறார்'' என்று சேதி சொல்லி யனுப்ப, அவர்களும் அப்படியே போய்ச் சொல்ல, அம் மகமதியர் மகத்தான கோபங்கொண்டு, விதி யில்லா மல் ஜோடு தூக்கும் யானையை வாத்திய கோஷத்துடன் கோட்டைக்குள் விட்டு, யானையையும் தண்டு தளாதிகளை யும் வெளியில் நிறுத்திவிட்டு, ஜோட்டை மாத்திரம் வேறு பல்லக்கி லேற்றிக்கொண்டு இராஜ கொலு மண்டபத்துக்

கருகில் வைத்தும், அங்கிருக்கும் அந்த கவரத்தின கசிதமான சிங்காசனத்தையும், அதன்மேல் அழகிய ராஜனும் அவரைச் சுற்றி மந்திரி பிரதானி முதலானவர்கள் சூழ்ந்திருப்பதையும் பார்த்துப் பெருமூச்சுவிட்டும், தமது பல்லக்கில் வந்த ஜோட்டைக் கவனிக்காமல் அசட்டையாக இருப்பதைக் கண்டு கோபம் கொண்டும், பல்லக்கிலிருக்கும் ஜோட்டை எடுத்து வெளியில் வைத்து, அதை இராஜனுக்குக் காட்டியும், அதை இராஜ சிங்காசனத்தின்மீது வைத்து வணங்கவேண்டிய விவரங்களைச் சொல்ல, இளஞ்சிங்கமாகிய அரங்க கிருஷ்ணன் கோபத்தோடு கீழே குதித்து வந்து, அந்த ஜோட்டை வணங்காமல், அதைத் தன் காலில் மாட்டிக்கொண்டு, "இன்னொருகால் ஜோடெங்கே? உங்கள் பாதுஷாவுக்கு இந்தப் பழைய ஜோடு தவிர வேறு புது ஜோட்டை இனமாக அனுப்பக் கெதியில்லையோ?" என்று பரிகாசமாகச் சொல்ல, அம் மகமதியர்களுக்குக் கோபம் அதிகரிக்க, அவர்களை அருகிலிருக்கும் பிரம்புக்காரர்களை அழைத்து, "ஆள் ஒன்றுக்கு ஐந்தடி அடித்தனுப்புங்கள்!" என்று சொல்லி, அவர்கள் சேனை யானையைத் துரத்திவிட்டாராம். அன்றுமுதல் பாதுஷா ஜோட்டைப் பூஜை செய்ய அனுப்புகிற வழக்கத்தை விட்டாராம். இன்னும் இந்த வாலிப நாயடுவின் சுதந்திர சாமார்த்தியத்தைப்பற்றிப் பல கதைகளைச் சொல்வதுண்டு.

இந்த வாலிபநாயடு இப்படிப்பட்ட சுதந்திரம் விரும்பினவராகையால், இவருடைய மந்திரி பிரதானி உத்தியோகஸ்தர்கள் இஷ்டப்படி எக்காரியமும் செய்ய இடமில்லை. ஆகவே, இவருடைய சக்தி சாமர்த்தியத்தைக் கண்ட மைசூராரும், மஹாராஷ்டிரரும் இவரோடு நேர்நின்று சண்டை செய்யப் பயந்தார்கள். இப்படிப்பட்ட காலத்தில் இராமநாதபுரம் கிழவன் சேதுபதி எக்கோஜியின் உதவியினால் இந்த ரங்ககிருஷ்ண நாயடுக்கு விரோதமாகச் சண்டை செய்ய யோசித்தாலும், அவருடைய சேனையின் பலத்தினால் சேதுபதியின் ஜபம் முடியவில்லை. அவருக்கு உதவியாகப் போன எக்கோஜியின் சேனையைத் துரத்தித் தஞ்சாவூருக்குப் போகச்செய்தார். இந்த ரங்ககிருஷ்ணநாயடு சமரச ஞானியாகி, கிறிஸ்தவர்களையும் மரியாதையாக நடத்திவந்தாலும், மறவ ஜாதியார் கிறிஸ்தவர்களைத் தலையெடுக்கவொட்டாமல் கண்டித்து ஜான்-டி-பிரிட்டோ (John de Britto)

என்ற போதகரையும் கொலைசெய்து விட்டார்கள். 1689ஞு இந்த ரங்க கிருஷ்ண நாயடுக்குத் திடீரென்று அம்மை வியாதி கண்டு (சகாப்தம் 1619ஞு கி. பி. (1695 விபவ முதல் பவ வருஷமாகிய 7 வருஷங்க ளாண்டபிறகு இறந்து விடவே, அவருடைய ஏகபத்தினி விரதத்தை மெச்சிய மனைவிமுத்தம்மாள் உடனே உடன்கட்டையேறப்போனாள். அப்போது ஸமஸ்தானத்துக்கு வேறு சந்ததி யில்லாமை யாலும், அந்த முத்தம்மாள் பூரண கர்ப்பவதியாக இருந்த மையாலும், பிள்ளை பிறந்தவுடனே அந்த விரதத்தைச் செய்யலாமென்றும், அவருடைய மாமியார் மங்கம காரும் மற்ற நெருங்கிய பந்து மித்திரர்களும் சொன்ன சத்தியவாக்கை நம்பியிருக்க, புருஷ பிரஜையைப் பெற்று மறு நாளே உடன்கட்டை யேற உத்தரவு கேட்க, இன்னுங் கொஞ்சகாலம் போகட்டுமென்று சாக்குப் போக்குகள் சொல்லிவர, அந்தம்மாள் பிரசவ அறையில் பன்னீர் வாங்கிக் குடித்து அதனால் சீதசன்னி கண்டு சுவர்க்கலோகபதவியை அடைந்தாள். ஏனைய பெண்டுகளைத் தம் மாதரைப் போலப் பாவித்துவந்த இரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயடுக்குப் பிறகு அவர் குழந்தைக்கு மூன்றுமாத வயதான உடனே, மதுராபுரி பட்டத்தைக் கட்டினாலும், அக்குழந்தைக்குப் பிரதிநிதியாக அவர் பாட்டியார் மங்கம்மகாரு ஆண்டுவந்தார்.

---

## ஸ்ரீ இராணி மங்கம்மகாரு ஸமஸ்தானம்.

(கி. பி. 1687ஞு முதல் 1699ஞு வரையில்.)



மங்கம்மாள் இயற்கையாகவே தருமகுணமும் இராஜதந்திர ஞானமும், சத்தியமும், சுவாமி பக்தியு முடையவளாகையால், மதுரை சமஸ்தானம் திருமலை நாயடுகாரு காலத்தில் மேன்மைப்பட்டிருந்ததைப்போலவே அந்தம்மாள் காலத்திலும் மேன்மைப்பட ஆரம்பித்தது.

அந்தம்மாள் செய்த தருமங்களுக்குக் கணக்கில்லை. இராமேசுவரமுதல் காசிவரையில் யாத்திரைக்காரருக்கு வசதியான ரோட்டுகளையும், சாலைவிருக்ஷங்களையும், சத்திரங்களையும், தண்ணீர்ப்பந்தல்களையும், சுவாமிமண்டபங்களையும், கோயில்கோபுரங்களையும் உண்டாக்கி வைத்தார்.

அவருடைய திருப்பணிகளில் சில இன்றளவும் அவர் பெயரைப் புகழ்ந்து கொண்டாடுகின்றன. அவர் காலத்தில் வைத்த சாலை விருக்ஷங்களில் சில இன்றளவும் அவர் பெயரைப் பாடிக்கொண்டிருக்கின்றன. அந்தம்மாள் இப்படி மிதமிஞ்சிய தருமங்கள் செய்ததற்குக் காரணம்: ஒருநாள் தாம் மறந்துபோய்த் தம் தாம்பூலத்தை இடதுகை விரலால் வாயி லிட்டுக்கொண்டாராம். அந்தப் பாவம் தீர இப்படிச் செய்ததாகச் சிலர் சொல்லுகிறார்கள். ஆயினும், அந்தம்மாள் உண்மையில் தருமமெல்லாம் திரண்டு ஒருங்கு வந்த இயற்கைத் தருமத்தாய் என்று சொல்லலாம்.

மங்கம்மாள் செய்த தருமங்கள் இந்து மதஸ்தர்களுக்கு மாத்திரமல்ல, ஏனைய மதஸ்தர்களுக்கும் செய்து வந்தார்கள். 1691-ம் வருஷம் (Father Mello) "மெல்லோ பாதிரி' யாரை மறவ நாட்டார் பிடித்துச் சிறையில் போட்டுக் கொலை செய்யத் தீர்மானித்திருக்கிற சங்கதி மங்கம்மாளுக்குத் தெரியவந்த உடனே, "அந்தப் பாதிரியாருக்கு எவ்வித தீங்கும் செய்யாமல், உடனே விடுதலை செய்தனுப்ப வேண்டும்" என்று தெரிவிக்க, அந்தச் சேதுபதியும் உடனே விடுதலை செய்து அனுப்பிவிட்டார்.

திருவநந்தபுர சமஸ்தானத்தார், மதுரை ஸமஸ்தானம் மங்கலடைந்ததென்று எண்ணித் தாம் கட்ட வேண்டிய கப்பத்தைக் கிரமமாகக் கட்டி வாராமையால், 1697ஹ ஒரு சேனையை அவருடைய குலோன கோட்டைமீது அனுப்பினார்கள். அந்தச் சேனையைக் கண்ட திருவனந்தபுர அரசன் முதலில் மதுரையாருக்குப் பயந்தவனைப்போல் பாசாங்கு காட்டிப் பிறகு சமயம் பார்த்துத் தனது சேனையைவிட்டு மதுரைச் சேனையைச் சித்திர வதை செய்யும்படி செய்ய, அனேகர் மாண்டு சிலர் மாத்திரம் திரும்பித் திரிசிராப்பள்ளிக்கு வந்து சேர்ந்தார்கள்.

இது சங்கதியை மங்கம்மாள் கேட்டவுடனே தமது சேனையை இப்படி அக்கிரமமாகச் சித்திரவதை செய்த பழியைத் தீர்த்துக்கொள்ள ஒரு பெரிய சேனையைத் திரட்டித் தமது தளவாய் நரசப்பையரை அனுப்ப, அவரும் திருவநந்தபுரம் போய்ப் பிரபல சண்டை செய்து ஜயித்து, ஏராளமான பொன் வெள்ளி நாணயங்களையும், பீரங்கிகளையும் எடுத்துக்கொண்டு, அந்த ராசன் கட்டவேண்டிய கப்

பத்தையும் பாக்கி இல்லாமல் வசூல் செய்துகொண்டு வந்தார்.

1700ளூ திருநெல்வேலி ஜில்லாவில் சில பெரிய புலிகள்காட்டிலிருந்து வந்து குடிகளைக் கொன்று குடிகள் நடமாடாதபடி செய்துவருவது மங்கம்மாள் காதில் விழ, உடனே தக்க மல்லகஜட்டிகளையும், வேட்டைக்காரர்களையும் அனுப்பி அப்புலிகளைக் கொன்று அக்குடிகளுக்கு நிம்மதியை யுண்டாக்கினர். இந்தம்மாளுடைய தரும குணங்களைக் கேள்விப்பட்ட (Father Boachet) போசிட்டு பாதிரியார் இந்த ராஜமஹிஷியை நேரில் கண்டு களிக்கவேண்டுமென்று தளவாய் மூலமாக மனுவை யனுப்ப, மங்கம்மாளவர்கள் அந்தப் பெரியவரைத் தமது மந்திர மூலமாகத் தருவித்து, அவர்க்கு வேண்டிய உதவிகளைச் செய்யும்படி கட்டளையிட, தளவாய் நரசப்பையரும் அதேமாதிரியாக உத்தரவு கொடுக்க, அந்தப் பாதிரியார் அரண்மனைக்குள் வந்து, மந்திரியோடு கலந்து பேசித் தாம் மஹாராணியாருக்கு இனமாகக் கொண்டுவந்த கண்ணாடி குலோப் முதலானவைகளைத் தந்தனுப்ப, மங்கம்மாளும் அன்புடன் பெற்றுக் கொண்டு, தாம் அந்தப்புர ஸ்திரீ யாகையால், வெளியில் வந்து அவரோடு பேசக்கூடாததைப்பற்றி விசனப்படுவதாகவும், பாதிரியாருக்கு என்ன வேண்டுமோ அதைச் செய்விக்கச் சித்தமாக இருப்பதாகவும் சொல்லி யனுப்ப, பாதிரியார்: "கள்ளர் முதலான துஷ்டர்கள் கிறிஸ்தவர்களை வருத்தாமல் பாதுகாக்க வேண்டும்" என, அப்படியே செய்வோம்" எனச்சொல்லி, அப்பெரியவரை இராஜபல்லக்கில் ஏற்றிச் சகல வாத்தியங்களோடு நகர்வலம் சுற்றி, அவருடைய இடத்தில் கொண்டுபோய் விட்டுவரும்படி உத்தரவு செய்தார்.

இக்காலத்தில் தஞ்சை மஹாராஷ்டிர இராசன் திரிசிராப்பள்ளியை யடுத்த படுகை பூமிகளை யெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகத் தமது நாட்டுடன் சேர்த்துக்கொண்டு வருவதைத் தளவாய் நரசப்பையன் அறிந்து, அக்காரணமாக ஒரு சேனையைக் கூட்டிக்கொண்டு தஞ்சாவூருக்குப் போக, அது சங்கதியை யறிந்த மஹாராஷ்டிரர் சேனை யெதிர்த்துக் காவிரி நதியி லிறங்கித் தாக்க வர, அப்போது காவிரியில் புதிதாக வந்த பெரிய வெள்ளம் அநேக மஹாராஷ்டிர சேனை வீரரை அடித்துக்கொண்டு போய்விட, மதுரைச்

சேனை தஞ்சாவூரைச் சார்ந்த சில கோட்டைகளைப் பிடித்துக்கொண்டும், தஞ்சைக்கும் முற்றுகைபோட, மஹாராஷ்டிர ராஜா இந்த யுத்தத்துக்குக் காரணம் தமது மந்திரி, வரபோஜி பாண்டிதன் என்றெண்ணி, அப்பண்டிதர் தலையை வெட்டிக் கொல்லத் தேடுகையில், அந்த வரபோஜி நேரில் வந்து, "அரசே! இது என் குற்றமன்று; எனக்கு எட்டு நாள் வாயிதா கொடுத்தால் மதுரையாரைச் சமாதானம் செய்து விடுகிறேன்" என்று உத்தரவு கேட்டுக்கொண்டு, ஊரிலுள்ள வர்த்தகர், பிரபுக்களிடமெல்லாம் கடன் வாங்கியும், கஜானாவிலிருந்த பணத்தை எடுத்தும், கிட்டத்தட்ட 5,00,000 ரூபாய் சண்டைச் செலவில், முக்கால் பாகத்தை மங்கம்மாள் பாதத்தில் வைத்தும், மற்ற பாகத்தைத் தளவாயின் தந்தை முதலானவர்களுக்கு இலஞ்சம் கொடுத்தும் சமாதானமாக்கி அனுப்பிவிட்டார்.

1701ஆம் மங்கம்மாளும் தஞ்சை மன்னரும் கூடி மைசூரார் மீதில் படை எடுத்தார்கள். அப்படிச் செய்வதற்குக் காரணம்: மைசூர் மன்னர் காவிரி நதியின்மேல் பெரிய அணையைக் கட்டி, அதன் ஜலத்தை எல்லாம் தமது நாட்டுப் பயிர் பச்சைகளுக்கு வடித்துக்கொள்ள, காவிரி நதியை நம்பியிருந்த திரிசிராப்பள்ளி, தஞ்சை நன்செய் பயிர்கள் நஷ்டமடைந்து வந்ததேயாம். மதுரை - தஞ்சை சேனைகள் மைசூரைச் சேருவதற்கு முன், காவிரியில் பிரமாதமாகப் பிரவாகம் வந்து அந்தப் புது அணையை அடியோடு அடித்துக்கொண்டு போய்விட்டபடியால், தண்ணீர் தாராளமாகத் திரிச்சி தஞ்சைக்கு வரக்கண்டு சேனைகளைத் திரும்பத் தருவித்துக்கொண்டார்கள்.

1702ஆம் தளவாய் நரசப்பையன் தன் சேனையோடும், தஞ்சை சேனையோடும் கூடித் தம் ஸமஸ்தானத்துக்கு அடங்கி நடவாமல் வம்பு செய்த கிழவன் சேதுபதியோடு சண்டை செய்யப்போனதில், சேதுபதியால் தாக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். என்ன விந்தை! கேவலமான இராமநாதபுர பாளையப்பட்டுச் சேனை பிரபலமான பாண்டிய நாட்டாருடையவும், தஞ்சைநாட்டாருடையவும் பெரிய சேனையைத் தாக்கித் தூத்தி யடிக்கச் சம்பவித்ததற்குக் காரணம்: மதுரை-தஞ்சை சேனைகள் பற்பல ஜாதி மதஸ்தர்களாகவும், தேசாபிமான மற்றுக் கூலிக்கு மாரடிப்போராகவும் இருந்தமையேயாம். ஆனால், மறவர் சேனையோ ஒரேஜாதி, ஒரே

மதம், ஒரே இனம், ஒரே எண்ணமாகி, தேசாபிமானத்தோடு சண்டை செய்ததினால் அச் சிறு சேனை பெரும் சேனையை வென்றது.

1704 அல்லது 1705-ல் மங்கம்மாளுடைய பேரனுக்கு மைனர் நீங்கி சமஸ்தானத்தை ஆளும்படியான வயது வந்துவிட்டபடியால், அந்தம்மாள் தனது மந்திரி அச்சயன் என்பவருடைய துர்ப்போதனையினால் அப்போது இராஜ்ஜியத்தை வாலிபனுக்குத் தரேனென, வாலிபன் கட்சியார் மங்கம்மாளைத் தந்திரமாகப் பிடித்து ஜெயிலில் போட்டதன்றியில், வேண்டிய உணவுகளைத் தயார்செய்து கைக்கெட்டாத தூரத்தில் வைத்து வதைத்து அதே விசனத்தினால் சாகும்படி செய்துவிட்டார்கள். அந்தோ! என்ன அநியாயம்! இவ்வளவோடு விட்டார்களா? இந்தம்மாளைச் சொல்லாத வார்த்தைகளைச் சொல்லி நிந்தித்தார்கள். இந்தம்மாள், கல்வியும் நாகரிகமும் விருத்தியாகும் இக்காலத்தில் பிறந்திருந்தால் தன் ஜாதிக்கும், தன் தேசத்துக்கும் சிரோ பூஷணமாகப் பிரகாசிப்பார். கனம் டெயிலர் சரித்திரத்தின்படி மங்கம்மாள் சகாப்தம் 1635ஸு (கி. பி. 1713) யுவவருஷம் முதல் நந்தன வருஷமாகிய 18 வருஷங்கள் ஆண்டார்.

---

விஜய ரகுநாத அல்லது விஜயரங்க

## சொக்கலிங்க நாயடு சமஸ்தானம்.

(கி. பி. 1705ஞு முதல் 1741ஞு வரையில்.)

மங்காத புகழ்பெற்ற மங்கம்மாளுக்குப் பிறகு அவருடைய பேரனாகிய விஜயரங்க சொக்கநாத நாயடு பட்டத்துக்கு வந்து 26 வருஷங்கள் ஆண்டார். ஆண்டாலுமென்ன? தர்மப்பிரபுவாகையால் பிரதிதினமும் கோயில் கோபுரங்களைக் கட்டி வைப்பதிலும், அக்கிரஹாரங்களை ஸ்தாபிப்பதிலும், பிராம்மணர்களுக்கு வாரிவாரிக் கணக்கற்றுக் கொடுப்பதிலும், பிரதி வருஷமும் திவ்விய தேசயாத்திரை செய்வதிலும், தமது காலத்தையும் காசையும் தொலைத்து விட்டபடியால், ஸமஸ்தான காரியகர்த்தர்கள் குடிகளைப் பலவிதத்திலும் ஹிம்சித்துப் பொருள் பிடுங்கிப் படுபாடு படுத்தினார்கள். மதுரையிலிருந்த ஸமஸ்தான சேனை

களுக்குக் கிரமமாகச் சம்பளம் கொடாமையால், பிரமாத கலகங்க ளுண்டாக, அது சேதுபதி முதலானவர்களுடைய உதவியால் அடக்கப்பட்டது. இப்படி இராஜாங்க வேலையைச் சுத்தமாகக் கவனிக்காமல், இரவும் பகலும், விஷ்ணு தியானத்தில் காலம் போக்கியும், சுஜாதிகளுக்குள் உண்டான ஜாதிக் கட்டுப்பாடுகளின் விவரங்களை விசிதமாகியும், அன்னிய ஜாதியார் பலிஜவாரைப்போல் பட்டம் தரித்துக்கொண்டு வருவதைக் கண்டித்துக்கொண்டும், இராக்காலங்களில் யாருக்கும் தெரியாமல் ஏகாந்தமாகத் தம்பூரை மீட்டிப் பாடி ஸ்ரீ ரங்கநாதரைத் தரிசித்துக்கொண்டே வந்தும், 1731ஆ பரமபத மடைந்தார். கனம் டெயிலர் சரித்திரத்தின்படி சகாப்தம் 1654ஆ (கி. பி. 1713) விஜய வருஷமுதல் விரோதிவிக்கிருதியாகிய 19 வருஷங்கள் ஆண்டார். இருவருக்கும் புத்திர சந்தான மில்லாமையால், ஸமஸ்தானம் இவர் மனைவி மீனாக்ஷியம்மாள் வசமாகியது.

---

## ஸ்ரீ மீனாக்ஷியம்மாள் ஸமஸ்தானம்.

(கி. பி. 1731ஆ முதல் 1738ஆ வரையில்.)

இந்த மீனாக்ஷியம்மாள் மதுரை ஸமஸ்தானத்தை ஆண்டுவந்த சங்கதி விவரமாகத் தெரியவில்லை. ஆனால், இந்த மீனாக்ஷியம்மாள் திருமலை நாயடு பட்டத்திற்குப் பாத்தியஸ்தரும், திருமலை நாயடவர்களுடைய தம்பிமாருடைய குமாரருமாகிய குமார திருமலை நாயடுவின் புத்திரர் பங்காரு திருமலை நாயடுடைய சிறு குழந்தையைச் சுவீகாரம் செய்து, அந்த பிள்ளைக்குச் சரியான வயது வருகிறவரையில் தமது சகோதரனாகிய வேங்கடராயலு, பெருமாள் நாயடைப் பிரதிநிதிகளாகக் கொண்டு ஸமஸ்தான காரியங்களை நடத்திவந்தார்.

இந்த நியமனம் தளவாய் வேங்கடாசாரியருக்கும், வேறு சிலருக்கும் திருப்தியைக் கொடாமையால், ஸ்வீகாரம் செய்துகொண்ட பிள்ளையின் பிதாவாகிய பங்காரு திருமலை நாயடு நேரான வார்சாகையினால், அவரை விட்டு அவர் பிள்ளைக்குப் பட்டங் கட்டுவது சரியல்ல வென்று சொல்லி, அந்த பங்காரு திருமலை நாயடுக்குப் பட்டம்கட்டப் பிரயத்தனப்பட்டார்கள். இதனால் ஸமஸ்தானத்தில் இரண்டு

கக்ஷிகளாகி, இக்கட்சிகளில் பங்காரு திருமலை நாயடு கக்ஷி பலமான கக்ஷியாக விருந்தபடியால், கோட்டைக்குள் புகுந்து இராஜ்யபரிபாலனத்தைக் கைக்கொண்டு மீனாக்ஷியம்மாளைத் தவிக்கும்படி செய்துவிட்டார்கள்.

இப்படிப்பட்ட காலத்தில் (1734ஹு) ஆறுகாட்டு நவாபாகிய "டாஸ்டு அலிகான்" என்பவர் தமது ஜேஷ்டகுமாரராகிய சப்தார் அலிகானுக்குத் தென்னாடுகளில் சிலவற்றைப் பிடித்து ஆளுவதற்குக் கொடுக்கக் கருதி, தகுந்த சேனையைத் திரட்டி அதற்குத் தமது குமாரன் சப்தார் அலிகானையும், மருமகன் சந்தா சாய்பையும் தலைவர்களாக நியமித்துத் தஞ்சை மதுரை நாட்டார் கிரமமாகக் கப்பங் கட்டவில்லை என்ற சாக்குக்கொண்டு சண்டைக்கு அனுப்பினார். அவர்களும் அப்படியே வந்து தஞ்சையைப் பிடித்தும், அதைச் சந்தா சாஹிபின் தம்பி பாடாசாயபு வசத்தில் விட்டுவிட்டும், திருவனந்தபுரத்துக்குப் போய் அதைப் பிடித்துச் சின்னபின்னமாக்கியும், கடைசியில் 1734ஹு திருச்சிராப்பள்ளிக்கு வரப் பங்காரு திருமலை நாயடு கக்ஷிக்காரர்கள் சப்தார் அலிகானைக் கண்டு பேசி, மீனாட்சி ராணியைச் சிறையில் வைத்து, அந்த ராஜ்ஜியத்தைப் பிடுங்கிப் பங்காரு திருமலை நாயடுக்குக் கொடுத்தால் 30,00,000 (30 - லக்ஷம்) ரூபாய் இனாமாகக் கொடுப்பதாகச் சொல்ல, நபாபும் சந்தோஷமாக அங்கீகரித்துக்கொண்டார். ஆனால், திரிச்சிராப்பள்ளிக் கோட்டை பலமான கோட்டையாகவும், அதை மீனாக்ஷி ராணியின் பலமான காப்புச்சேனை காவல் செய்துகொண்டும் இருந்தமையால் இக்கோட்டையைப் பிடிக்க சப்தார் அலிகானால் முடியாதென்று கண்டு, இரு கட்சியாரையும் தருவித்து அவரவர்களுக்கிருக்கும் நியாயங்களை விசாரித்துத் "தக்க பாத்தியஸ்தர்களுக்குச் சமஸ்தானம் தரப்படும்" என்று சொல்லி, இரு கட்சியாரையும் முச்சிலிக்கா எழுதித் தரும்படி சொன்னார். இந்தச் சமாதானத்துக்குப் பங்காரு திருமலை நாயடு கக்ஷியார் ஒத்துக்கொண்டாலும், மீனாக்ஷியம்மாள் கக்ஷியார் ஒத்துக்கொள்ள மாட்டோமென்று சொல்லிவிட்டார்கள். அதன்மேல் இக்காரியத்தை முடிக்கும்படி சந்தா சாஹிபை விட்டுவிட்டு ஆற்காட்டுக்குப் போய்விட்டார்.

இந்த அசிந்தர்ப்பத்தைக் கண்ட மீனாக்ஷியம்மாள் கக்ஷியார், சந்தாசாயிபு இந்தக் கக்ஷியில் பிரவேசியாமல் இரி

சிராப்பள்ளியை விட்டுப் போய்விட்டால், நல்ல வெகுமானம் தருவதாகச் சொல்ல, அவர் இந்தச் சமயத்தைப் பார்த்து, மீனுக்ஷி ராணியார் ஒருகோடி ரூபாய் இனுமாகக் கொடுத் தால் மாத்திரம் திரிசிராப்பள்ளிக்கோட்டையை ராணியார் வசமே இருக்கும்படி செய்து விடுவதாகச் சொல்ல, "இந்த வெறும் வார்த்தையை நம்பமாட்டோம்" என்றும், "குரான் மீது சத்தியம் செய்து கொடுத்தால் மாத்திரம் நம்புவோம்" என்றும் இராணியார் கக்ஷியார் சொல்ல, சந்தாசாயபும் சம்ம தித்து, இராணியின் தமயனுரைக் காவிரி கரையிலிருக்கும் தளவாய் மண்டபத்துக்குக் கூட்டிக்கொண்டு போய், ஒரு செங்கல்லை எடுத்து அதைத் தங்கத் தட்டில் வைத்தும், அதன்மேல் அதைக் குரான் என்று காட்டியும், ஒரு கின் காப்புத் துணியைப் போட்டு மூடியும், அதைப் பலதரம் தொட்டுக் கும்பிட்டும், "அதன் சாக்ஷியாக மீனுக்ஷிராணி யார் கக்ஷியை விட்டு வேறு கட்சியைச் சார்வதில்லை" என் றும், "இராணியார் கக்ஷிக்குவேண்டிய உதவிசெய்து சமஸ் தானம் இராணியாரிடம் இருக்கவேண்டிய உதவியனைத்தும் செய்கிறேன்" என்றும் சத்தியம் செய்து கொடுக்க, இந்தச் சூதை யறியாத மூடர்களான மீனுக்ஷியின் கக்ஷியார் சந் தோஷமாகச் சம்மதித்துக்கொண்டு, சந்தாசாயபைக் கோட் டைக்குள் கூட்டிக்கொண்டு வந்தும், அனேக ஆடையாபர ணங்களைக் கொடுத்தும், அனேக யானை குதிரைகளைத் தரம் கொடுக்கச் சம்மதித்த தொகைக்கு ஈடு காட்ட, அவர் "இன்றுமுதல் மீனுக்ஷியின் கக்ஷியிலிருப்போம்" எனப் பகி ரங்கப்படுத்தினர்.

இக்காலத்தில் பங்காரு திருமலை நாயடும், அவர் குமார ரும் இனித் திரிசிராப்பள்ளியில் குடியிருந்தால் பிராண அபாயமுண்டாகு மென், றஞ்சித் தத்தளித்துக்கொண் டிருக்கிற சங்கதி மீனுக்ஷியம்மாளுக்குத் தெரியவந்தது. பங்காரு திருமலைநாயடு சரியான வார்சு என்றும், அவருக் குதவி செய்யவேண்டுமென்றும் எண்ணங்கொண்டே மீனு க்ஷியம்மாள் அவர் பிள்ளையைத் தத்து வாங்கிக்கொண்டார். ஆனுல் கக்ஷி யாவேசத்தினுலும், சில துஷ்டர்களுடைய தூண்டுதலினுலும், இவர் விரோதியாகத் தோன்றினு ரென்று எண்ணிப் பரிதாபப்பட்டும், அவரையும் அவர் குடும்பத்தையும் திண்டுக்கல் முதலான விடங்களில் போய்க் குடி யிருந்துகொண்டு அவற்றில் வரும் வருமானத்தில்

ஜீவனம் செய்யும்படி கட்டளை கொடுக்க, அவரும் விதி யின்றி அங்குப் போயினர்.

இந்த ஏற்பாடு சந்தாசாயபுக்குத் திருப்தியைக் கொடாமையால் தகுந்த தண்டுகளுடன் வந்து இரு கக்ஷியாரையும் ஜயித்து ஸமஸ்தானத்தைப் பிடுங்கிக்கொள்ள ஆற்காட்டிற்குப் போய், 1736ஹு தக்க தண்டுகளோடு வந்து திரிசிராப்பள்ளியைச் சுவாதீனம் செய்துகொண்டும், மீனாக்ஷியம்மாளைக் கேவலம் பேருக்கு மாத்திரம் ராணியாராகத் தோற்றும்படி செய்தும், அந்தம்மாளுடைய மந்திரிகளாகிய கோவிந்தையன் - இராமையன் முதலானவர்களோடும், 8,000 குதிரைப் பட்டாளத்தோடும் பங்காரு திருமலை நாயடைத் தாக்கும்படி யனுப்ப, அவர்கள் முதலில் திண்டுக்கல்லைத் தாக்கியும், பிறகு மதுரையையும் வந்து தாக்க, பங்காரு திருமலைநாயடு பயந்து சிவகங்கை ராஜனிடம் அடைக்கலம் பெற்றார். அவர் அந்த நாயடு குடும்பத்தை வெள்ளிக் குறிச்சிக் கோட்டையில் வைத்துப் பாதுகாத்தார். இந்தச் சம்பவத்தினால் சந்தாசாஹிபு தைரியங்கொண்டு மதுரை ஸமஸ்தானத்தின் பெரும்பாகமான நாடுகளையெல்லாம் பிடித்துக்கொண்டும், திருசிராப்பள்ளிக்குப் போய், இனி மீனாக்ஷியைச் சுதந்திரமாக்கிவிட்டால் தனக்குக் கெடுதியுண்டாகுமென்றெண்ணிச் சிறையில் போட்டடைக்க யோசித்திருக்கும் சங்கதியை யறிந்த அந்த மீனாக்ஷியம்மாள் மானத்துக்குப் பயந்து பாஷாணத்தை உண்டு பரமபதமடைந்தனள். கனம் டெயிலர் சரித்திரத்தின்படி சகாப்தம் 1659 (கி. பி 1737) பரிதாபிமுதல் நளவருஷம் வரையில் ஐந்து வருஷங்க ளாண்டார். இக்காலத்தில் பங்காரு நாயடு புத்திசாலியாகவும், அவருடைய கக்ஷிக்காரர்கள் தைரியசாலிகளாகவும் இருந்தால், மீனாக்ஷியம்மாள் இறந்த உடனே ஸமஸ்தானத்தைக் கைப்பற்றிக்கொண் டிருக்கலாம். சொற்ப சேனையோடும், சொற்பச் சொத்தோடுமிருந்த சந்தாசாயிபை எதிர்க்கப் பங்காரு நாயடு கக்ஷியாரிடம் போதுமான பொருளும், போர்வீரரு மில்லாமையால், அவரைத் தடுக்கப் பயந்து அச் சந்தா சாயிபைவிட பலசாலியான ராஜன் உதவியை நாட பங்காரு திருமலை நாயடு பிரயத்தனப்பட்டார்.

அப்போது சத்தாராவில் மஹாராஷ்டிரர் பிரபல ஸ்திதியி லிருந்தமையால், இவர்களிடம் போய் முறையிட, அக்

காலத்தில் நிஜாமலியும் கர்னடக தேசத்தைப் பிடித்து டாஸ்டு அலிகானைச் சிக்ஷிக்க விரும்பி இருந்தமையாலும், இரண்டு துரைத்தனத்தாரும் கூடி 60,000 குதிரை வீரரையும், 50.000 பதாதிகளையும் சேர்த்து 1739ஞ இராகோஜிபான ஷ-ஹிலேயோடு அனுப்பினார்கள்.

இதை யறிந்த டாஸ்டு அலிகான் தமது சேனையை ஒரு இந்து தளகர்த்தனுட னனுப்பி எதிர்க்கும்படி சொல்லித் தூர தேசங்களிலிருந்த தமது குமாரன் சதாத்து அலிகானையும், மருமகன் சந்தாஸாஹிபையும் உடனே ஆற்காட்டுக்கு வரும்படி சேதி யனுப்பிச் சேனையைத் திரட்டிக் கொண்டிருக்கையில், மகாராஷ்டிர வீரன் மகமதியருடைய இந்து வீரனை மயக்கி லஞ்சம் கொடுத்துச் சுஜாதி அபிமானத்தால் மகமதியரை மோசம் செய்ய வேண்டுமென்று சொல்லிச் சரிப்படுத்திக்கொண்டும், புதுச்சேரிக் கருகில் வந்து சண்டை செய்தும், யானையின்மே லிருந்த டாஸ்டு அலிகானைக் கீழே விழும்படி செய்து கொன்றுவிட, அந்த டாஸ்டு அலிகானுடைய பெண்களையும் குடும்பத்தையும் மஹாராஷ்டிரர் கெடுக்காதபடி, அப்போது புதுச்சேரியில் கவர்னராக விருந்த (M. Dumas) டுமாஸ் என்பவர் தம் கோட்டையில் அடைக்கலமாக வைத்துப் பாதுகாத்தார்.

இத்தியாதி சங்கதிகளை கேட்ட சப்தர் அலிகான் வேலூருக்கு வந்து மறைந்துகொள்ள, மஹாராஷ்டிரர் கூடவே வந்து பிடித்து உயுத்த செலவுக்காக நூறு லக்ஷம் ரூபாயும், இந்து ராஜாக்களிட மிருந்து பிடித்த கோட்டைகளையும், அந்தந்த ராஜாக்களிடமே தந்துவிட வேண்டுமென்றும் சமாதானஞ் செய்ய, இச் சமாதானத்தின்படி சந்தாசாயபு திரிசிராப்பள்ளிக் கோட்டையைத் தரமாட்டேனென்று சொல்ல, அவர் சேனையோடு மஹாராட்டிரர் சண்டைசெய்தும், அவர் தம்பி படேசாயிபைச் சிறைபிடித்து சத்தாரா பட்டணத்துக்குக் கொண்டு போனார்கள். இப்படிப் போன மஹாராஷ்டிரர், பங்காரு திருமலை நாயடுக்கு வாக்குத் தத்தம் செய்தபடி மதுரை ஸமஸ்தானத்தைத் தராமையால், நொந்து நைஜாமிடம் போய் முறையிட்டார். அவர், இவர் விஷயத்தில் மஹாராஷ்டிரர்களும், மகமதியர்களும் செய்த மோசத்தைக் கருதிப் பரிதாபப்பட்டும், தம்மால் ஆற்காட்டுக்கு நூதனமாக நியமிக்கப்பட்ட அன்வர் உட்டின்கான் வசம் ஒப்புவித்தும், அவருக்குப்

பிரதிதினமும் சாப்பாட்டுச் செலவுக்கு 100 ரூபாயும், அவர் குமாரனுக்குப் பிரதிதினமும் நூறு வராகனும் கொடுத்துக் கூடிய சீக்கிரத்தில் அவர்கள் சமஸ்தானத்தை அவர்களுக்குக் கொடுக்கும்படி சொல்லி யனுப்ப, அந்த அன்வர் உட்டின்கான் அப்படியே கொஞ்ச காலம் செய்து கொண்டு வந்து மேன்மை பெற்ற மதுராபுரி சமஸ்தானத்தைப் பங்காரு திருமலை நாயடுக்குக் கொடுக்கப் பிரியப்படாமல், பேராசையினால் அவருக்குப் பாஷாணமிட்டுக் கொன்றுவிட்டார். இது சங்கதியை யறிந்த அவர் குமாரர் 1748ஸு ஆற்காட்டை விட்டுச் சிவகங்கைக்குப் போய் வெள்ளிக்குறிச்சியை யடைந்தார்.

1741ஸு மதுரை சமஸ்தானம் நாதனற்ற நாடாகி விட்டது. 1743ஸு நிஜாமுல்முலுக்கு படை எடுத்து வந்து மஹாராஷ்டிரர்களை ஓட்டிவிட்டார். 1744 முதல் 1748 வரையில் மதுரை நாடு அன்வர்டீன் மகமதலி வசமாகியது. பிறகு மாயாணு என்னும் தளகர்த்தன் வசமாக, அவரும் ராமனாதபுரம் சிவகங்கை மன்னர்களும் கூடி மதுரைக்குச் சரியான வார்சாகிய பங்காரு திருமலை நாயடு குமாரர் விஜய குமார நாயடுகாரை 1752ஸு ஸமஸ்தானபதியாகப் பட்டம் கட்டிவைத்தார்கள்.

---

## விஜயகுமார நாயடுகாரு சமஸ்தானம்.

(கி. பி. 1752ஸு முதல் 1752ஸு வரையில்.)

அப்படிக் கட்டினாலும் 1752ஸு நவம்பர்மீ 29உ அவரைச் சிங்காதனத்தை விட்டு நீக்கி வெள்ளக்குரிச்சிக்கே போகும்படி மகமதியர்கள் செய்துவிட்டார்கள். பிறகு மகமதிய மன்னர்களுக்குள்ளாகவே சண்டை சச்சரவுகள் நடக்க, மைசூர் ஐதர் ஆலியும் படையெடுத்து வந்து பிடிக்கக்கூடாமல் பின்னடைந்து போய்விட்டார். பிறகு பல மகமதியர்கள் சண்டைகளைப் போட்டுக் கொண்டு வர, 1785ஸு மதுரை, ஆங்கிலேயர் வசமாகி விட்டது. 1790ஸு செப்டம்பர்மீ மிஸ்டர் மெக்லோடு அவர்களை ஈஸ்டு இந்தியா கம்பெனியார் ரெவினியு கலெக்டராக நியமிக்க, அன்றுமுதல் குடிகளுக்குக் கஷ்டங்களும் நிஷ்டூரங்களும் அடிக்கடி நடந்து வந்த அநியாய சண்

டை சச்சரவுகளும், கொள்ளைகளும், கொலைகளும், படுபஞ் சங்களும், படு நோய்களும் நீங்கச் சுகமாக வாழுங்காலம் வாய்த்தது. சுதேச குறுநில மன்னர்களால் மதுரை சமஸ் தானத்தில் இடையில் சம்பவித்த கஷ்டங்களை இக்காலத் தில் எண்ணிப் பார்த்தாலும் எப்படிப்பட்டவருடைய மன மும் கலங்கும். ஆண்டவர் கிருபையால் ஆங்கிலேயர் வர அந்தப் பயம் அற்றது.

---

## இப்போது கவர்ன்மெண்டாருக்கு அகப்பட்டிருக்கும் மதுரை முதலான விடங்களில் ஆண்டுவந்த நாயடுகார்களுடைய தரும சாசனங்கள்.

| வருஷம். | சாசனங்கள் கொடுத்தவர் பெயர்கள். | இப்போது அச்சாசனங்கள் இருக்கும் இடம். | சாசனங்களின் விவரம். |
|---|---|---|---|
| கி. பி. | | | |
| 1560 | விசுவநாதநாயடு கொடுத்தது | அன்னியூர், தென் ஆற்காடு | சிலாசாசனம் |
| ஷை | ஷை | திருநெல்வேலி | தாமிரசாசனம் |
| 1569 | குமாரகிருஷ்ணப்ப நாயடு | விஜயபதி திருநெல்வேலி | சிலாசாசனம் |
| 1573 | வீரப்பநாயடு | மதுரை | ஷை |
| 1578 | கிருஷ்ணப்பநாயடு | கிருஷ்ணாபுரம் திருநெல்வேலி | ஷை |
| 1583 | பெத்தவீரப்பநாயடு | மதுரை | ஷை |
| 1596 | இராமகிருஷ்ணநாயடு | ஷை | தாமிரசாசனம் |
| 1597 | கிருஷ்ணப்பநாயடு | ஷை | ஷை |
| 1598 | குமார கிருஷ்ணப்ப நாயடு | திருநெல்வேலி | ஷை |
| 1613 | முத்துவீரப்பநாயடு | மதுரை | சிலாசாசனம் |
| 1620 | வீரப்பநாயடு | கோயமுத்தூர் | தாமிரசாசனம் |
| 1623 | முத்துவீரப்பநாயடு | மதுரை | சிலாசாசனம் |
| ஷை | ஷை | ஷை | ஷை |
| 1635 | திருமலைநாயடு | ஆண்டியூர், திருநெல்வேலி | ஷை |
| 1637 | ஷை | கபிலமலை, சேலம் | தாமிரசாசனம் |
| 1648 | ஷை | வைரவிகுலம், திருநெல்வேலி | சிலாசாசனம் |
| 1652 | ஷை | எருமாபட்டி, சேலம் | ஷை |
| 1653 | ஷை | மதுரை | ஷை |
| 1654 | ஷை | ஷை | தாமிரசாசனம் |

| வருஷம். | சாசனங்கள் கொடுத்தவர் பெயர்கள். | இப்போது அச் சாசனங்கள் இருக்கும் இடம். | சாசனங்களின் விவரம். |
|---|---|---|---|
| 1655 | ஷை | கோயமுத்தூர் | ஷை |
| 1656 | ஷை | மதுரை | ஷை |
| 1657 | இரங்க கிருஷ்ணமுத்து வீரப்பநாயடு | திருநெல்வேலி | ஷை |
| 1659 | திருமலைநாயடு குமாரர் | திருச்செங்கோடு, சேலம் | சிலாசாசனம் |
| 1661 | சொக்கலிங்கநாயடு | நெனிமேனி, திருநெல்வேலி | ஷை |
| 1562 | ஷை | திரிசிராப்பள்ளி | தாமிரசாசனம் |
| 1663 | விஜயரங்க சொக்கலிங்க நாயடு | திருச்செங்கோடு, சேலம் | சிலாசாசனம் |
| 1665 | சொக்கலிங்கநாயடு | நெனிமேனி, திருநெல்வேலி | ஷை |
| 1665 | ஷை | கோயமுத்தூர் | தாமிரசாசனம் |
| 1678 | முத்துலிங்கநாயடு | மதுரை | ஷை |
| 1686 | இரங்ககிருஷ்ண முத்து வீரப்பநாயடு | அரும்பாவூர் திரிச்சி | சிலாசாசனம் |
| 1691 | மங்கம்மகாரு | திரிசிராப்பள்ளி | தாமிரசாசனம் |
| 1692 | விஜயரங்க சொக்கநாத நாயடு | திருநெல்வேலி | ஷை |
| 1695 | ஷை | ஷை | ஷை |
| 1700 | மங்கம்மகாரு | மதுரை | ஷை |
| 1706 | ஷை | திருநெல்வேலி | சிலாசாசனம் |
| 1710 | விஜயரங்க சொக்கநாத நாயடு | மதுரை | தாமிரசாசனம் |
| 1715 | 716 } ஷை | திருநெல்வேலி, | ஷை |
| 1724 | 1727 } ஷை | திரிசிராப்பள்ளி, திருநெல்வேலி, | ஷை |
| 1729 | 1731 } ஷை | திரிசிராப்பள்ளி, மதுரை, | ஷை |
| | | திருநெல்வேலி | ஷை |
| 1732 | மீனாக்ஷி அம்மகாரு | திரிசிராப்பள்ளி | ஆக - 45 சாசனம் |
| 1733 | ஷை | சமயபுரம், திரிசிராப்பள் | |

தொண்டைமண்டலம் பூவைசியகுல உயர்துளுவ வேளாளர் சரித்திரம் என்னும் பெயரால் காஞ்சீபுரத்தில் மகாநாடு தர்மராய முதலியாரிட மிருந்த சுமார் நூறு வருஷங்களுக்கு முன் எழுதின புராதன கையெழுத்துப் புத்தகத்திலிருந்து 1894-ம் வருஷம் மிஸ்டர் பம்மல் விஜயரங்க முதலியார் பதிப்பித்த புத்தகத்திலிருந்து ஐரோப்பியர்

இந்நாட்டுக்கு வந்த காலத்தை அதிலுள்ளபடி இதனடியில் பிரசுரிக்கிறோம்.

இந்த இந்தியாவில் தொப்பிக்காரர் வந்ததும், அந்தந்த தேசங்களைப் பிடித்ததும், சென்னப்பட்டணத்துக்கு வந்த கவர்னர்களுடைய விபரம் தெரியப்படுத்துதல்.

கி. பி. 1,600-ம் வருஷம் மார்கழி மாதம் 31-ந் தேதி இத்தேசத்துக்கு இங்கிலீஷ்காரர் வர்த்தக சங்கதி யுண்டு பண்ண எலிசபெத்தென்கிற இராஜாத்தியார் பட்டோலையைக் கட்டளையிட்டார்.

1602-ம் வருஷம் இந்துதேசத்துக்கு இங்கிலீஷ் கப்பல்கள் புறப்பட்டன.

1609-ல் உலாந்தக்காரர் பழவேற்காட்டைக் கைவசம் பண்ணிக்கொண்டார்கள்.

1620-ல் தென்மார்க்கர் ஐப்பிசிமீ 5-ந் தேதி தரங்கன்பாடியில் காளிங்கராயபிள்ளை முன்னிலையில் தஞ்சாவூர் இராஜாவினிடத்தில் தரங்கன்பாடியில் கோட்டையைக் கட்டிக்கொள்ள உத்திரவு பெற்றுக் கொண்டார்கள்.

1621-ம் தை மாதம் தரங்கன்பாடியில் கோட்டையைக் கட்ட ஆரம்பித்தார்கள்.

1639-ல் டே (Day) என்பவரால் சென்னப்பட்டணமும் கோட்டையு முண்டாக்கப்பட்டது. கவுல் செங்கல்பட்டு நாயக்கர் மூலமாக சந்திரகிரி ராஜாவிடத்தில் பெறப்பட்டது. சந்திரகிரி ராஜ வம்சத்தார் முன் விஜய நகரத்தில் அரசாண்டார்கள்.

1658-ல் உலாந்தக்காரர் போர்த்துகீசரிடத்தில் மன்னுறு யாழ்ப்பாணத்தைப் பிடித்தார்கள்.

1666-ல் பிராஞ்சுக்காரர் சிந்து வியாபாரம் துவக்கினார்கள்.

1670-ல் பிராஞ்சுக்காரர் புதுவை நகரத்தைக் கைவசம்பண்ணிக்கொண்டார்கள்.

1680-ல் ஒரு பெரிய வால் நக்ஷத்திரம் வானத்திலே காணப்பட்டு மூன்றுநாள் பரியந்த மிருந்தது.

1739-ல் கங்கையினருகே பெருங்காற் றடித்து சில கப்பல்கள் முறிந்து முப்பதினுயிரம் ஜனங்க ளிறந்து போனுர்கள்.

1746-ல் புரட்டாசி மாதம் 21-ந் தேதி பிராஞ்சுக்காரர் சென்னபட்டணத்தைப் பிடித்தார்கள்.

1756-ல் பிராஞ்சுக்காரர்பேரில் இங்கிலீஸ்காரர் சண்டைக்கு ஆரம்பித்தார்கள்.

1759-ல் மாசி மாதம் 11-ம்தேதி சென்னப்பட்டணத்தைப் பிராஞ்சுக்காரர் பிடிக்கவந்தார்கள்.

1761-ல் கர்னல் கூட்டு புதுவையை முதல்முறை பிடித்தார்.

1771-ல் இங்கிலீஷ்காரர் தஞ்சாவூரை முற்றுகை போட்டார்கள்.

1772-ல் திரிசிராப்பள்ளியில் மருந்து கிடங்கு பற்றிக் கொண்டது.

1773-ல் தஞ்சாவூரைப் பிடித்தார்கள்.

1777-ல் லார்டு பிகட்டு (Pigot) இறந்தார்.

1777-ல் ஐப்பசி மாசம் 17-ந் தேதி புதுவை நகரத்தை இரண்டாம்தரம் இங்கிலீஷ்காரர் பிடித்தார்கள்.

1780-ல் ஐதருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் சண்டை ஆரம்பம்.

1780-ல் புரட்டாசி மாசம் 10-தேதி கர்னல் பெயிலி (Col. Baillie) தண்டு தக்கோலத்தில் மூழ்கிப்போனது.

1781-ல் ஆனி மாசம் 1-ந்தேதி பரங்கிப்பேட்டையில் சண்டை.

1782-ல் வைகாசி௴ 17௳ மராட்டியரோடு சமாதானத்துக்குக் கையெழுத்துப் போட்டது.

1782-ல் ஐப்பசி௴ 15௳ சென்னப்பட்டணத்தில் பெருங்காற்றடித்து சில கப்பல்களைக் கரையில் ஒதுக்கி விட்டது.

1782-ல் மார்கழி௴ 7௳ சித்தூரில் ஐதர் இறந்துபோனுர்.

1783-ல் சித்திரைமீ 27உ ஜெனரல் கூட் (Gen. Coote) இறந்துபோனார்.

1784-ல் இங்கிலீஷ்காரர் டிப்பு சுல்தானுடன் சமாதானப்பட்டார்கள்.

1785-ல் கார்த்திகைமீ 25உ சென்னப்பட்டணத்தில் இடி விழுந்து நாலாறுபேரிறந்து சிலருக்குக் காயம்பட்டது.

1786-ல் சென்னப்பட்டணத்தில் தபால்கூடம்(Post Office) ஸ்தாபிக்கப்பட்டது.

1788-ல் சென்னப்பட்டணத்தில் மருந்து கிடங்கு பற்றிக் கொண்டது.

1789-ல் மார்கழிமீ 29உ மலையாள ராஜாவின்பேரில் டிப்பு சுல்தான் சண்டைக்கு ஆரம்பித்தார்.

1791-ல் பங்குனிமீ 21உ பெங்குளூரைப் பிடித்தார்கள்.

1792-ல் மாசிமீ ஸ்ரீரங்கபட்டணத்தின்பேரில் இங்கிலீஷ்காரர் சண்டை துவக்கினார்கள்.

1792-ல் பங்குனிமீ 18உ சமாதான மானார்கள்.

1793-ல் ஆவணிமீ 23உ புதுவை நகரம், மூன்றாவது முறை, கர்னல் பிரத்து ஒயிட்டினால் பிடிக்கப்பட்டது.

1795-ல் ஐப்பசிமீ 13உ நவாபு வாலாஜா இறந்தார்.

1798-ல் டிசம்பர் 25உ டிப்பு சுல்தான்பேரில் இங்கிலீஷ்காரர் யுத்தத்துக்கு எத்தனம் பண்ணினார்கள்.

1799-ல் மேமீ 4உ சனிக்கிழமை மத்தியானம் ஒரு மணிக்கு வேதத்துடனே சீரங்கப்பட்டணம் லங்கையெறி கலந்து யுத்தம் செய்கிறபோது டிப்பு சுல்தான் இறந்துபோனார்.

1799-ல் ஜூன்மீ 4உ சீரங்கப்பட்டணத்துக் கொடியைக் கொண்டுவந்து சென்னப்பட்டணத்துக் கோயிலிலே வைத்துச் சந்தோஷ கீர்த்தனம் பாடி, கனமும் ஜெயமும் பெற்ற இங்கிலீஷ் கொடி மேலும் சீரங்கப்பட்டணத்துக் கொடி கீழுமாக மத்தியானம் பன்னிரண்டு மணிக்குக் கொடிமரத்திலே போட்டுப் பீரங்கி முழக்

கம் செய்து, சாயந்திரம் 6-7 மணிமட்டும் கொடியைக் கழற்றுமல் சந்தோஷம் கொண்டாடினுர்கள்.

1801-ல் ஜுலைமீ 15உ நபாப் வாலாஜா சாய்ப் சாகதா இறந்துபோனுர்.

---

இந்த சென்னப்பட்டணம் துவக்கம் துவக்கவந்த கவர்ணர் லார்டு அல்லது பெரிய ஸ்ரீமான்கள் உத்தியோகத்துக்கு வந்த நாமதேயங்களும் அந்தந்த ஸ்ரீமான்கள் வந்த வருஷம்,மாதம், தேதிகள் இவற்றைத் தெரியப்படுத்துதல்.

இந்தப் பட்டியில் இதனடியில் கண்ட

1652-ல் செப்டம்பர்மீ 1உ மே. ஆரோன்பேகர்.

1659-ல் செப்டம்பர்மீ 1உ மிஸ்டர் தாமஸ் சேம்பர்.

1661-ல் செப்டம்பர்மீ 1உ மிஸ்டர் எட்வர்டு விண்டர்.

1665-ல் ஜுன்மீ மே. ஜார்ஜு பாகஸ் கிராப்டு.

1665-ல் செப்டம்பர்மீ 16உ மே. எட்வர்டு விண்டர்.

1670-ல் மேமீ ஜார்ஜு பாகஸ்கார்டு என்றுதி பெயர்கள் எழுதப்படவில்லை.

1672-ல் ஸர் வில்லியம் லாங்கு ஆரோன்.

1678-ல் மாசிமீ 6உ இஸ்திரியன் ஷாம்.

1681-ல் ஆடிமீ 13உ வில்லியம் கிம்போர்டு.

1687-ல் ஆவணிமீ 4உ எலியுயேல்.

1692-ல் ஐப்பசிமீ 13உ நதினேல் இக்கின்சன்.

1692-ல் மார்கழிமீ 5உ சர் ஜான் கூல்ஷரோ.

1693-ல் ஆவணிமீ 10உ நதினேல் இக்கின்சன்.

1698-ல் ஆடிமீ 12உ தாமஸ் பீட்.

1709-ல் புரட்டாசிமீ 30உ கலிசன் அடிசன்.

1709-ல் ஐப்பசிமீ 2உ இடமன்மண்டாக்.

1709-ல் கார்த்திகைமீ 14உ வில்லியம் பிரேசர்.

1711-ல் ஆடிமீ 23உ எட்வார்டு ஆரிசன்.

1717-ல் தைமீ 16உ ஜோசப் காலிட்.

1720-ல் தைமீ 29உ பிரான்கிஸ் ஆஸ்டிங்கு.
1721-ல் ஐப்பசிமீ 26உ நதினேல் இல்லக்.
1725-ல் தைமீ 28உ செய்சுமக்கிரா.
1730-ல் வைகாசிமீ 25உ ஜார்ஜு மார்ட்டின்பிட்.
1735-ல் மாசிமீ 3உ ரிச்சர்டு பிங்கன்.
1744-ல் தைமீ 28உ நிகோல்மாஸ்.
1749-ல் கார்த்திகை 24உ மேஜர் இஸ்திரன் சர்லாரென்யு.
1749-ல் மார்கழிமீ 12உ ரிச்சார்டு பிரன்சு.
1752-ல் பங்குனிமீ 6உ சாளரிசார்டு இஸடர்கு.
1752-ல் சித்திரைமீ 17உ தாமஸ் ஆந்திரச.
1755-ல் தைமீ 14உ ஜார்ஜு பிக்கெட்டு.
1763-ல் கார்த்திகைமீ 14உ இராபர்டு பாலக்கு.
1767-ல் தைமீ 25உ சார்லஸ் பவுசர்.
1770-ல் மாசிமீ 8உ ஜோசப் டிபிரி.
1773-ல் மாசிமீ 2உ அலெக்சாந்தர் ஒன்சி.
1775-ல் மார்கழிமீ 10உ லார்டு பிக்கெட்டு.
1776-ல் ஆவணிமீ 24உ ஜார்ஜு ஸ்திருட்டன்.
1777-ல் ஆவணிமீ 31உ சாள் உண்டவி.
1778-ல் மாசிமீ 8உ தாமஸ்ரம்போல்.
1780-ல் கார்த்திகைமீ 8உ ஜார்ஜு ஸ்மித் முதலானவர்களாம்.

இந்த சுவர்னர் பிரபுக்களுடைய சரித்திரங்கள் ஆங்கிலேய பாஷையிலும், பெரும்பான்மையான தேசபாஷைகளிலும் எழுதிப் பதிப்பித்திருப்பதால், இங்கு விவரமாகக் காட்டுவ தனுவசியமெனக் கொண்டோம்.

---

மதுரைநாயடு ஸம்ஸ்தானம் மங்கலடைந்துகொண்டு வருங்காலத்தில் மஹாராஷ்டிரருடைய பிரபுத்துவம் பெருமை பெற்றேங்க ஆரம்பித்து அவர்களுடைய தேசாபிமானம் மதாபிமானத்தினல் அம் மஹாராஷ்டிரருடைய அதிகாரம் இந்நாட்டின் சில விடங்களில் இன்னும் பிரகா

சிக்கின்றது. ஆகவே, அவர்களுடைய சரித்திரத்தை இத்துடன் சேர்க்கவேண்டிய தாயினும், இப்போது அவர்களுடைய ஆதிஉற்பத்தி, மத்தியுகால ஸ்திதி, தற்காலஸ்திதிகளைப்பற்றிய சரித்திரங்கள் ஆங்கிலமுதல் அநேக சுதேச பாஷைகளில் எழுதிப் பதிப்பிக்கப்பட்டிருப்பதால், இதில் கூறப்படவில்லை.

---

## மதுரையில் மகம்மது ராஜ்யம்.

மதுரையிலாண்ட நாயடு அரசர்களுக்குள் சண்டைசச்சரவுகளுண்டாகி 1736௵ மங்கலடையவே, மஹாராஷ்டிரர் கொஞ்சகாலம் ஆண்டுவந்தாலும், அப்போது கர்னுடக நவாப்பாகிய அனுவர்தீன் சாயபு அங்கிருந்த மஹராஷ்டியரை ஓட்டிவிட்டுத் தன்னுடைய உத்யோகஸ்தர்களையனுப்பி ஆண்டுவரச் செய்தார். செய்தாலுமென்ன? 1749௵ சந்தாசாயபு பிரான்சுக்காரருடையவும் முஜபர் ஜங்குடையவும் உதவியைக்கொண்டு அந்த அனுவர்தீன் சாயபை ஆம்பூரில் கொன்றுவிட, மஹமதாலி திரிசிராப்பள்ளிக்குப் போய் நவாப்பு பட்டம் கட்டிக்கொண்டார். அந்த மஹமதாலி 1751௵ இங்கிலீஷ்காரருடைய சொற்ப உதவியைக்கொண்டு மதுரையைத் தாக்கினும் ஜெயம் பெறவில்லை. அப்போது மாயண்ணன் என்பவன் மதுரையை மைசூராருக்கு விற்றுவிட்டதாகக் கேள்வி. ஆனாலும், இங்கிலீஷ்காரருடைய சேனாதிபதியாகிய கர்னல் கோப் என்பவர் வந்து மதுரையைப் பிடித்துக்கொண்டார். 1753௵ சேதுபதியவர்கள் இங்கிலீஷ்காரரை ஓட்டிவிட்டு நாயுடு சமஸ்தானத்தைச் சார்ந்த இராணி மீனாக்ஷியம்மாளுடைய ஸ்வீகார புத்திரனுக்குப் பட்டம் கட்டினார்கள். இதனால் இரண்டு வருஷகாலம் அந்த நாயடு சமஸ்தானத்தார்க்குள் எனக்குப் பட்டம்வேண்டும் உனக்குப் பட்டம் வேண்டாம் என்று அவிவேகமாகச் சண்டை சச்சரவுகள் செய்துகொண்டிருக்க, மஹமதாலி மதுரையைப் பிடிக்க மற்றொரு சேனையைத் திரட்டியனுப்ப, அவர்கள் வெகு சுலபத்தில் மதுரையை முற்றுகை போட்டுப் பிடித்து ஒரு மஹமதிய வீரனால் நடத்தப்பட்ட இங்கிலீஷ் சோல்ஜர்களால் காக்கப்படவே, 1758௵ மதுரைப் பட்டணமானது ஆங்கிலேயருக்குச் சுதந்தரமாகிவிட்டது. ஆயினும் 1783 வருஷம் வரைக்கும் சுற்றுப் பக்கத்தில் சண்டை சச்சரவு

கள் நடந்து வந்தாலும் பிறகு அவைகளடக்கப்பட்டன. அப்போது அதற்கு 1790ஸ்ல மிஸ்டர் மெக்லோடு துரையவர்கள் மதுரையின் முதல் கலெக்டராக நியமிக்கப்பட்டார்.

---

## மதுரையின் தற்கால ஸ்திதி.

இந்த மதுரையானது இந்த இராஜதானிக்கு 2-வது பட்டணமென்று சொல்லப்படும். அதற்குக் காரணம்: இப்பட்டணம் மஹா பெரியதாயும்; 1,34,130 ஜனங்கள் குடியிருக்கும் முனிசிபல் நகரமாயும் இருப்பதன்றியில், இராமநாதபுறம் - சிவகங்கை முதலான 72 பாளையப்பட்டுகள் உள்ளனவாயும், திண்டுக்கல்லைப்போன்ற வர்த்தக வனமுள்ள தாலுகாக்களையும், இராமேஸ்வரம் முதலான மூர்த்தி தலம்தீர்த்த தலங்களை யுடையனவாயும் இருக்கிறது. சோளம், கம்பு, கேழ்வரகு, புகையிலை, அவுரி, பருத்தி முதலான பொருள்கள் விளைவிக்கும் இடமாயும், பலவித வேஷ்டிகள்—சீலைகள்—தலைக்குட்டைகள் நெய்யும் இடமாயும் இருக்கிறது.

## கட்டிடங்கள்.

இந்த மதுரைக்கு வந்த மகத்துவம் எல்லாம் அதிலிருக்கும் மீனாக்ஷி சுந்தரேசுவரருடைய கோயிலே முக்கிய காரணமாகும். இது ரயில்வே ஸ்டேஷனுக்கு அரை மைல் தூரத்தில் 282 கெஜங்கள் நீளமும், 248 கெஜங்கள் அகலமு முள்ளதாயும், 9 கோபுரங்களினாலும் பிரகாசிக்கின்றது. இதில் ஒரு கோபுரம் 152 அடிகள் உயரமுள்ளது இதற்குள் அஷ்டலக்ஷ்மி மண்டபமும், கணபதி-சுப்பிரமணியர்-சுந்தரேஸ்வரர் – மீனாக்ஷியம்மன் முதலான கோயில்களும், அவற்றின் விக்கிரகங்களும், சுந்தரேஸ்வரரும் மீனாக்ஷியும் வேடர் ரூபமான விக்கிரகங்களும், அரிச்சந்திரன் சந்திரமதி விக்கிரகங்களும், பஞ்சபாண்டவர் விக்கிரகங்களும், 100 கால் மண்டபத்திலிருக்கும் சபாபதி முதலான விக்கிரகங்களும் இருப்பதன்றியில்; வீரவசந்தராய மண்டபம், கல்யாண மண்டபம், வாகன மண்டபம், வசந்தமண்டபம், ஆயிரக்கால் மண்டபம் முதலான அநேக மண்டபங்கள் இருக்கின்றன. இவைகளில் வசந்த மண்டபம் திருமலை நாயுடுகாரால் கட்டப்பெற்றது. இதில் அவருடைய 10 சந்ததிகளாகிய ஸ்ரீவிஸ்வநாத நாயுடு

காரு முதல் திருமலைநாயடு உருவ விக்கிரகங்கள் கற்கம் பங்களில் செதுக்கப்பட்டு, அவைகளுக்குப் பூமாலைகள் சூட்டிப் பூஜித்து வருகிறார்கள். ஆயிரக்கால் மண்டபத்தில் முதல் மந்திரி அரியநாயக முதலியாரைப்போல் கல்லினால் விக்கிரகம் செய்யப்பட்டு பூஜித்துவரப்படுகின்றது. இந்தக் கோயில் கட்டிடங்கள் யாவும் இத் தென்னிந்தியாவிலுள்ள சிறந்த சிற்பிகளால் செதுக்கிக் கட்டப்பட்டிருக்கின்றன. வாகன மண்டபத்தில் பொன் வெள்ளியினால் செய்த அநேக வாகனங்கள் இருக்கின்றன. இக்கோயிலில் வருஷந்தோறும் பல உற்சவங்கள் நடைபெற்று வந்தாலும், அவைகளிற் சிறந்தது சித்திரை உற்சவமே. அக்காலத்தில் ஏராளமான ஜனங்கள் நாலா பக்கங்களிலிருந்து வந்து சேவிக்கிறார்கள். தைமீ தெப்ப உற்சவம் வெகு கெம்பீரமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

## திருமலைநாயுடு தெப்பக்குள உற்சவம்.

இது மதுரைக்குச் சுமார் $1\frac{1}{2}$ மைல் தூரத்தில் திருமலை நாயடவர்களால் வெட்டி வைக்கப்பட்டுச் செதுக்கிய கற்களால் சிங்காரமாகக் கட்டப்பட்ட ஒரு பெரிய தெப்பக்குளம். இதன் மத்தியில் ஒரு தீவைப்போன்ற மேட்டில் ஒரு சிங்காரத் தோப்பிருப்பதுடன் ஒரு அழகிய கருங்கல் கோயிலும் கட்டப்பட்டிருக்கிறது. பிரதி வருஷம் தைமாதத்தில் தெப்பல் உற்சவம் வெகு கெம்பீரமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அப்போது அத் தெப்பக்குளத்தைச் சுற்றிலும் ஆயிரக் கணக்கான தீபஜோதிகளை வைத்து ஜ்வலிக்கச் செய்வதன்றியில் பாணவேடிக்கைகளும் செய்வதால், லக்ஷக் கணக்கான ஜனங்கள் வந்து இவற்றைப் பார்த்துப் போகிறார்கள்.

## சேதுபதியவர்கள் பங்களா.

இந்தத் தெப்பக்குளத்திற்குச் சமீபத்தில் பாளையம் பட்டி ஜமீன்தார் பங்களாவில் ஒரு புராதன ஆலமர மிருக்கிறது. அதன் அடிமரம் எழுபது அடிகள் சுற்றளவுள்ளதாயும், நிழல் 180 அடிகள் வரையில் நாலாபக்கமும் பரவியிருக்கிறது.

மேற்குறித்த தெப்பக்குளத்திற் கெதிரில் இராமநாத ராஜா அவர்களுடைய அலங்காரமான பங்களாவும் அதை

சுற்றிலும் பல விருக்ஷங்களுள்ள தோட்டமும் இருக்கின்றன.

## தமுகம்.

இந்த நகரத்திற்கு வடபுறம் வைகையாற்றின் பாலத்திற்குச் சுமார் ஒருமைல் தூரத்தில் திருமலை நாயடு அவர்களால் கட்டிவைக்கப்பட்ட தமுகம் என்னும் அலங்கார கட்டிடம் இருக்கிறது. அது ஷை நாயடவர்களைத் தரிசிக்க வரும் ராஜர்களும் குருநில மன்னர்களும் வந்து தங்குவதற்கும், சில சமயங்களிற் காட்டு மிருகங்களை விட்டு ஆடச் செய்வதற்கும் உபயோகப்படுத்தி வந்தார்கள். இப்போது அது மதுரை கலெக்டரவர்கள் வசிக்கும் வீடாக உபயோகப்பட்டிருக்கிறது.

## யூனியன் கிளப்.

இந்தத் தமுகத்துக்கு அதி சமீபத்தில் யூனியன் கிளப் கட்டிடமும், அதைச் சார்ந்த மெம்பர்களின் உபயோகத்திற்கு ஒரு புத்தக சாலையும், விளையாட வெளி இடங்களும் இருக்கின்றன. இதற்கு மதுரையில் இங்கிலீஷ் படித்த சுதேசிகள் முக்கியமாக வக்கீல்கள் மெம்பர்களாயிருக்கிறார்கள். இவைகளன்றியில், நகரத்திற்குள் தமிழ்ச் சங்கத்தார் வாசக சாலை, தியாஸபி வாசகசாலை, சௌராஷ்ட்ரா கிளப், யாத்திரைக்காரர் தங்கும் சத்திரங்கள் இவை இருக்கின்றன. சௌராஷ்ட்ர பிராம்மணரென்னும் பட்டுநூல்காரர், இந்நகரத்தில் ஏராளமான நெசவுத்தொழில், சாயம் பூசும் தொழில், சரிகை நெசவுத்தொழில் இவைகளைச் செய்து, செல்வமும் செல்வாக்குடையவர்களாகவு மிருக்கிறார்கள்.

## யானைக்கல்பாறை.

நகரத்திற்கு வடகிழக்கே 5 மைல்கள் தூரத்தில் யானைக்கல் பாறையொன்று இருக்கிறது. அது இரண்டு மைல்கள் நீளமும், ¼ மைல்அகலமும்,250 அடிகள் உயரமுமுள்ள ஒரே கருங்கல்லாம். இது பார்வைக்கு ஒரு பெரிய யானையைப்போல் தோன்றுவதால் இதற்கு யானைக்கல்லென்று பெயர் வந்தது போலும். அமாவாசை காலங்களில் ஏராளமான பட்டுநூல்காரர்கள் வந்து பூஜித்துப் போகிறார்கள்.

## அழகர் கோயில்.

இது மதுரைக்குச் சுமார் 10 மைல்கள் தூரத்தில் இருக்கும் ஒரு பெரிய மலையின் மேல் கட்டப்பட்டிருக்கும்

விஷ்ணு ஸ்தலம். இந்த விஷ்ணுவுக்குக் கல்லழகர் என்று பெயர். இந்தக் கோயிலுக்கெதிரில் ஒரு பெரிய தெப்பக்குள மிருக்கிறது. அதின் ஜலம் அதிக குளிர்ச்சியும் இனிப்பும் உடையது. மலையின் சுற்றுப் பக்கத்திலிருக்கும் காடு வனங்களின் காக்ஷி கம்பீர முடையது. இதைத் தக்ஷண திருப்பதி என்று சொல்வது முண்டு. இப்பெருமாளுக்குப் பிரதி சித்திரைமீ கொண்டாடும் திருநாள் சிறந்தது.

அன்று அப் பெருமாளை மதுரைக்குக் கொண்டுவந்து அநேக மண்டப கட்டளைகள் செய்து கொண்டாடி வருகிறார்கள். அப்போது மதுரையில் மாட்டுச் சந்தை முதலானவை கூடுகிறபடியினால் லக்ஷக்கணக்கான ஜனங்கள் வருகிறார்கள்.

## பெரியாறு முல்லைநதி வசதி

மதுரை ஜில்லாவில் தண்ணீர்ப்பாய்ச்சல் வசதிக்கு வேண்டிய வைகைநதியும் பின்னும் அநேக சிற்றாறுகளும் குளங்களும் இருக்கினும் போதுமான ஜலமில்லாததைக் கருதி பெரியாறு அல்லது முல்லைநதி ஜலத்தைத் திருப்பியிருக்கிறார்கள். எப்படியெனில், கோடைக்கானல் ரோட்டுக்குத் தென்மேற்கே 65 மைல்கள் தூரத்தில் அந்த வேலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. பாளையங் கோட்டைக்கு வடகிழக்கே சுமார் 50 மைல்கள் தூரத்திலிருக்கும் பயங்கர காடடர்ந்த மலையின்மேல் பெய்யும் தண்ணீரானது குடிகளுக்கு உபயோகப்படாமல் கொச்சிராஜ்ஜியத்திற் கருகில் கடலில் விழுந்துகொண்டு வந்தது. அந்த மலைக்காடு திருவநந்தபுர சமஸ்தானத்தைச் சேர்ந்தது. அந்த ஜலத்தை இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் மதுரை ஜில்லாவுக்குத் திருப்பிக்கொள்ள ஷ 1-க்கு 40,000 ரூபாய் ஷெடி ராஜா அவர்களுக்குக் கொடுப்பதாக ஒப்பந்தம் செய்துகொண்டு 1887ஷ முதல் 1895ஷ வரையில் அநேக இஞ்சினியர்களுடையவும், முக்கியமாக கர்னல் பென்னிகுக் இஞ்சினியரவர்களுடையவும் புத்தியுக்தி சாமர்த்தியத்தினால் கட்டி முடிக்கப்பட்டது. இம் மலைகளில் ஏராளமான மழையின் உபத்திரவமும், காட்டானை கரடி புலியாதி மிருகங்களின் உபத்திரவமும் அதிகமிருக்கினும் அவைகளைப் பொருட் செய்யாமல் கஷ்ட தீரத்தினுடன் இது கட்டி முடிக்கப்பட்டது. அந்தப் பெரியாற்றின் கரையில் 144 அடிகள் உயரமும்-அடியில் 136½ அடிகள் அகலமுமுள்ள ஒருசுவர் அணையைக்கட்டி,

அதில் 176 அடி ஆழமுள்ள தண்ணீர் தங்கும் ஓர் ஏரியாக்கி, அதிலிருந்து அநேக படிப்படியான தண்ணீர் போக்கு மதகுகளை ஏற்படுத்தி, அவைகளிலிருந்து 5342 அடிகள் நீளமுள்ள வாய்க்காலில் ஜலத்தைக் கொண்டுபோய், அங்கிருக்கும் ஒரு மலையைக் குடைந்து, அதில் 5704 அடிகள் நீளமும், 12 அடிகள் அகலமும், அதற்குள் $7\frac{1}{2}$ அடிகள் ஜலம் போகும்படி கொண்டுபோய் அங்கிருந்து பின்னுமோர் பெரிய வாய்க்கால் மூலமாக வைரவனுற்றிலும், சுரிளியாற்றிலும் வைகையாற்றில் விட, அவைகள் மூலமாக விடப்பட்டிருக்கிறது. அப்படியாயும் வருஷம் 1-க்கு 29,970 லக்ஷம் கன அடிகள் ஜலம் சேர்கிறது. அதனுல் 1,50,000 ஏகராநிலத்திற்குநீர் பாய்ச்சப்பட்டு, முன் புஞ்சையா யிருந்தவைகளும் வேறு இடங்களும் நஞ்சை பூமிகளாக்கப்பட்டன. இதன் முக்கிய வாய்க்காலானது சோழவந்தானுக்கருகில் வடக்கே கொண்டுபோகப்பட்டிருக்கிறது. இந்த வாய்க்காலின் நீளம் 38 மைல்கள். பெரியாற்றின் தண்ணீர் வசதியினுல் மதுரையில் நிலத்தின் விலை அதிகமாக உயர்த்தப்பட்டது.

## சோழவந்தான்.

இது மதுரைக்கு வடமேற்கே 12 மைல்கள் தூரத்திலிருக்கிறது. பூர்வம் சோழராஜன் பாண்டிய நாட்டின்மேற் படையெடுத்துப் போகக்கருதி இந்தச் சோழவந்தான்வரையில் வந்தபடியால் இதற்குச் சோழவந்தானென்ற பெயர் இடப்பட்டதாம். மதுரையில் விஸ்வநாதநாயடுகாருக்குப் பிரதம மந்திரியாகயிருந்த அரியநாயக முதலியார் பாண்டியநாட்டின் ஜனங்கள் தம்மை நம்பும்படிக்கு தம் சம்சாரத்தையும், பந்து மித்திரங்களையும் அழைத்து வந்து இவ்விடம் தங்கும்படி செய்து, தம்பிரான் மடங்களைக் கட்டிவைத்தனராம். இது செழிப்பான தாலுக்கா. பிரதி வெள்ளிக்கிழமைதோறும் ஒரு பெரிய சந்தை கூடுகிறது. இவ்விடம் சில க்ஷேத்திரங்க ளிருக்கின்றன. அவைகளில் ஒன்றில் பிரதிவருஷம் செடில் அதாவது முதுகில் இரும்புக் கொக்கிகளால் குத்தி உயரத் தூக்கி ஒரு மரத்திற கட்டிச் சுற்றிவரும் உற்சவத்தைச் சமீபகாலம் வரையில் கொண்டாடிவந்தார்கள். முல்லைநதி அல்லது பெரியாற்றின் பாசன வசதிக்காக 38 மைல்கள் நீளத்தில் வெட்டிய முக்கிய வாய்க்காலானது இச் சோழவந்தான் ஸ்டேஷனுக்கு

வடக்கே 3¼ மைல்கள் தூரத்தில் ரயில் பாதையின் ஊடாகப் போகின்றது. குளிர் காலத்தில் சிகாரிகளுக்கு ஸ்டீல்ஸ் முதலிய வேட்டைகள் அகப்படுமாம்.

---

மதுரைமா நகரம் தொன்றுதொட்டுக் கல்வி செல்வத்திற் சிறந்து இராஜாங்க தலைமைப்பட்டணமாக இருந்ததால் இவ்விடம் வசிக்கும் குடிகள் இராஜகீயாதி பொது விஷயங்களில் அதிக சிரத்தையுள்ளவர்களா யிருந்தார்கள். ஆகவே சென்னை இராஜதானி மாகாண சபையைக் கூட்டிப் பல பொது விஷயங்களைப் பேசித் தீர்மானித்தார்கள். அச்சபைக்கு ஸ்ரீபாண்டித்துரைத் தேவரவர்கள் தலைவராகவும், பிரம்மஸ்ரீ பா. நாராயண ஐயரவர்கள்-ஸ்ரீநிவாசராயரவர்கள் முதலான பிரமுகர்கள் வேண்டிய ஏற்பாடுகளைச் செய் தமைத்திருக்கச் சென்னையிலும் அதைச் சார்ந்த அநேக ஜில்லாக்களிலு மிருந்து பல படிப்பாளிகளும் பட்டதாரிகளும் பெரிய மனுஷர்களும் பிரதிநிதிகளாக வந்திருந்தனர். அவர்களில் இந்தியா சுப்ரீம் லெஜிஸ்லேடிவ் கவுன்சில் மெம்பராகிய கனம் வித்யாவிநோதினி அனந்தாசாரியரும், ஸ்ரீ தேசிகாசாரியரும், ஸ்ரீ ஜீ. சுப்பிரமணிய ஐயரவர்களும், ஸ்ரீ வீரராகவாசாரியரும், கனம் சேலம் விஜயராகவாசாரியரும், ஸ்ரீ சி. சதாசிவ ஐயர்களும், லக்ஷ்மி நாராயண ஐயரவர்களும், கனம் பெர்ராஜ் அவர்களும், ஸ்ரீ நாராயண மேனனவர்களும், ஸ்ரீ ராமபத்ரநாயடுகாரும், A. C. பார்த்தசாரதி நாயடுகாரும், S. P. நரசிம்மலு நாயடுகாரும், பின்னும் நூற்றுக்கணக்கான பிரதிநிதிகளும் வந்திருந்தனர். இராஜகீய விஷயமான சபைக்கு ஸ்ரீ கனம் வித்யாவிநோதினி அனந்தாச்சாரியர்களுடைய தலைமையின் கீழ் அநேக கவர்ன்மெண்ட் விஷயங்கள் பேசித் தீர்மானிக்கப்பட்டன. பிரம்மஸ்ரீ சதாசிவஐயரவர்கள் அக்கிராசனத்தின் கீழ் அநேக ஆசார சீர்திருத்த விஷயங்கள் பேசித் தீர்மானிக்கப்பட்டன. பிறகு சமாசாரப்பத்திரிகை விஷயமாக அடியிற் கண்ட உபந்நியாசம் செய்யப்பட்டது.

## இந்தியா சுதேச சமாசார பத்திரிகைகளின்
## சரித்திர சாரசங்கிரகம்.

மதுரையில் மேமீ கூடிய மாகாண மஹாசபை முடிந்த மறு நிமிஷமே, அந்தச் சபையில் அதே சபாநாயகர் கனம்

வித்யாவிநோதினி அனந்தா சாரியரவர்கள் கோரிக்கையின்படி, கனம் ஜி. சுப்பிரமணிய அய்யரவர்கள் எழுந்து சமாசாரப் பத்திரிகையை நடத்துவதனா லுண்டாகும் சாதக பாதகங்களைப் பற்றி ஆங்கிலேய பாஷையில் உபந்நியாசம் செய்தார். பிறகு இத்தேச சுதேச சமாசாரப் பத்திரிகைகளின் சரித்திரத்தை நன்கறிந்த புராதன பத்திரிகாசிரியராகிய கோயமுத்தூர் பிரதிநிதி சே. ப. நரசிம்மலு நாயடு அவர்கள் உபந்நியாசிக்க வேண்டுமென்று அச்சபாநாயகர் பிரேரேபிக்க, அந்த நாயடு அவர்கள் எழுந்து பின்வருகிறபடி உபந்நியாசித்தார்.

சென்னை ராஜதானியின் சபாநாயகரே! சபையார்களே! நிகழ்ந்த இரண்டு மூன்று நாட்களாக இந்த மஹா சபையில் நமது குடிகளுடைய குறைகளைப்பற்றிப் பேசினோம். அப்படிப் பேசிய சங்கதிகளை நமது கவர்ன்மெண்டாருக்கும் ஏனையோருக்கும் அறிவித்தாலன்றி நமது குறைகள் நீங்காவல்லவா? அப்படி நமது குறைகளை ஏனையோருக்கு அறிவிப்பதற்கு இன்றியமையாத சாதனம் சமாசாரப் பத்திரிகைகளாம். ஆகவே அச்சமாசாரப் பத்திரிகைகளைப்பற்றி இப்போது சற்றுப் பேசுகிறேன். ஆங்கிலேய பாஷையில் நியூஸ் (News) என்னும் பதத்திற்குச் சமாசாரம் என்று பொருளாம். அதாவது (News) நியூஸ் என்னும் நான்கு அக்ஷரங்களுடைய பதத்தில்: N என்—என்கிற எழுத்து நார்த்து—வடக்கு என்றும், E இ—என்கிற எழுத்து ஈஸ்டு—கிழக்கு என்றும், W டப்பிலியூ—என்கிற எழுத்து வெஸ்டு—மேற்கு என்றும், S எஸ்—என்கிற எழுத்து சவுத்-தெற்கு என்றும் கூடியதனால், வடக்கு - கிழக்கு - மேற்கு-தெற்கு என்னும் நான்கு திசைகளில் நிகழும் நடவடிக்கைகள் அல்லது சமாசாரங்களை அறிவித்தல் என்பதைக் குறிப்பதாம்.

இப்படி நாலாபக்கங்களின் சமாசாரங்களைக் காட்டும் சமாசாரப் பத்திரிகை முதல் முதல் 1556ஞ வெனிஸ் (Venice) பட்டணத்தில் பிரசுரம் செய்யப்பட்டும், 1622-ம் வருஷம் இங்கிலண்டிலும், 1690ஞ அமெரிகா பாஸ்டன் பட்டணத்திலும் பிரசுரம் செய்வித்ததாக உலக சரித்திரம் அறிவிக்கிறது. பிறகு 1699ஞ எடின்பர்க்கு கெஜட்டும், 1705ஞ கிரானிகளும், 1788ஞ லண்டன் டைம்ஸ் (Times) என்கிற புகழ்பெற்ற பத்திரிகையும் பிரசுரிக்கப்

பட்டன. இதுகாலம் வரையில் சமாசாரப் பத்திரிகைகள் கேவலம் சாதாரண உலக விருத்தாந்த பத்திரிகைகளாக இருந்தன. ஆங்கிலேய நாட்டார் அவைகளை இப்போது நாலாவது சம்பத்தாக்கி (The Fourth Estate) க்கொண்டு அதாவது அவர்கள் ராஜாங்கத்துக்கு (Sovereign) அரசன் முதலங்கமாகவும், (House of Lords) பிரபுக்கள் சபை இரண்டாம் அங்கமாகவும், (House of Commons) ஜனப் பிரதிநிதி சபை மூன்றும் அங்கமாகவும், (Liberty of the Press) சமாசாரப் பத்திரிகை நான்காம் அங்கம் அல்லது சம்பத்தாகவும் கொண்டு சுதந்தர சுகமான குபேர சம்பத்துடன் வாழ்ந்து வருகிறார்கள்.

இந்த அருமையை அறிந்த ஆங்கிலேயர் தாம் குடிபுகும் இந்தியா முதலான தேசங்களிலும்: இங்கிலீஷ்மன், ஸ்டேட்ஸ்மன், டெயிலி நியூஸ், டைம்ஸ் அப் இந்தியா, மெயில், டைம்ஸ் என்றுதி பெயர்களால் பல பத்திரிகைகளைப் பிரசுரம்செய்து வருகிறதை நமது சுதேசிகளும் பார்த்துத் தேசாபிமானத்தைக் கருதிச் சில பத்திரிகைகளைப் பதிப்பித்து வருகிறார்கள். அவற்றின் உண்மையான சரித்திரம் இன்னும் எழுதப்படாம லிருக்கினும் இந்தச் சுதேச சமாசாரப் பத்திரிகைகள் விஷயத்தில் சென்ற 35 வருஷங்களில் நான் கண்டதும் கேட்டதுமான சில விசேஷங்களைச் சங்கிரகமாகச் சொல்லத் துணிகின்றேன். செவிசாய்ப்பீர்களாக!

நமது இந்தியா தேசத்தில் முதல்முதல் சமாசாரப் பத்திரிகையை ஸ்தாபித்தவர் ஸ்ரீ இராஜா இராமமோஹன ராயர். இந்த அவதார புருஷர் 1820ஹு கிறிஸ்து மதத்தைக் கண்டித்து எழுதிய (The Final Appeal) அவரது கடைசி விண்ணப்பத்தை அக்காலத்தில் (Baptist Mission Press) பாப்டிஸ்டு மிஷனெரி அச்சு இயந்திரசாலையில் பதிக்கமாட்டோ மென்று சொல்லிவிட்டபடியால், இந்துக்களுக்கென்று ஒரு அச்சு இயந்திர மில்லாக் குறைவை நீக்கக் கருதி கவர்ன்மெண்டாருடைய அனுமதியைப் பெற்று ஒரு அச்சு யந்திரத்தை ஸ்தாபித்துத் தமது விண்ணப்பத்தைப் பதித்தும், பிறகு (Brahminical Magazine) பிராமண மதபோத பத்திரிகையை முதல்முதல் ஸ்தாபித்து அதில் இந்து மதத்தின் பெருமையை உயர்த்தியும், இதர மதங்களிலுள்ள சில குற்சித கொள்கைகளைக் கண்டித்தும்

எழுதிப் பிரசித்தமாக்கிவந்ததன்றியும், 1829ஹூ (Sambanda Kowmadi) 'சம்பந்த கவுமதி' என்னும் பெயரால் வங்கபாஷையில் ஒரு மாதாந்திர சஞ்சிகையை ஸ்தாபித்தும், அதில் சஹகமனநி விஷயங்களைப்பற்றியும், பொது ஜன சமூஹ நன்மைக்கேற்ற சங்கதிகளைப்பற்றியும் எழுதி ஜனங்களுக்கு ஞானத்தை விருத்தியாக்கிவந்தார். 1823-ம் வருஷம் கல்கத்தாவில் பிரசுரமான (Calcutta Journal) கல்கத்தா சஞ்சிகையில் கவர்ன்மெண்டாருடைய நடவடிக்கைகளைப்பற்றிக் கண்டித்து எழுதிய பத்திராதிபரை (Governor Adam) கவர்னர் ஆடாம் பிரபுவானவர் ஈவிரக்கமின்றி அப் பத்திராதிபரை இந் நாட்டைவிட்டு ஓடிப்போகச் செய்து, அப் பத்திரிகைக்கு அகால மரணசாசன ஓலையை அனுப்பியபோது, அந்த ஸ்ரீராஜ ராமமோஹன ராயர் கல்கத்தா சுப்ரீம்கோர்ட்டாரவர்களுக்கும் இங்கிலண்ட் அரசருக்கும் விண்ணப்பங்களை எழுதியும், இந்துக்களாகிய இந் நாட்டாருக்கும் இங்கிலண்டின் குடிகளுக்கும் இருக்கும்படியான அச்சு இயந்திர பத்திரிகா சுதந்திரம் (The Liberty of the Press in India) கொடுக்கவேண்டுமென்றும் பிரபல நியாயங்களைக் கொண்டு எழுதினார். இம்மட்டோ? இந்த மஹானுபாவர் அந்த 1824-ம் வருஷத்திலேயே நமது குடிகளுடைய கஷ்ட நிஷ்டூரங்களைப்பற்றி இப்போது காங்கிரஸ் கான்பரன்ஸ் மஹாசபைகளில் என்னென்ன விஷயங்களைப்பற்றி முறையிடுகின்றோமோ இவைகளில் பெரும்பான்மையான விஷயங்களைப்பற்றிப் பத்திரிகைகளிலும் விண்ணப்பங்களிலும் எழுதி இந்தியா கவர்ன்மெண்டாருக்கு அறிவித்ததன்றியில், இங்கிலண்டுக்கும் போய் அக்காலத்திய அரசரிடம் முறையிட்டார்.

இந்தத் தேசாபிமானிக்குப் பிறகு மஹரிஷி தேவேந்திரநாத தாகூரவர்கள் முயற்சியினால் கல்கத்தாவில் (The National Paper) தத்துவபோதினி பத்திரிகைகள் 1843-ம் வருஷம் ஸ்தாபிக்கப்பட்டன. இவைகளில் பெரும்பாலும் வைதீக விஷயங்களும், ஜனசார சீர்திருத்தங்களும், சிறுபான்மை இராஜகீய விஷயங்களும் எழுதப்பட்டு வருகின்றன.

1831-ம் ஹூ கிருஷ்ண மோஹன பானர்ஜி என்பவர் (Enquirer) என்கொயரர் — விசாரணி யென்னும் பெயரால் ஒரு பத்திரிகையை ஸ்தாபித்தார். இவர் கிறிஸ்துவ மதஸ்த

ரானபடியால் அந்த மதத்தின் பெருமையைப்பற்றியே எழுதிவந்தார்.

1842-ஆ இராம கோபால் கோஷ் என்னும் பிரபல பிரசங்கவாதி (Specator) ஸ்பெக்டேடர், தர்ப்பணம் என்னும் பத்திரிகைகளை ஸ்தாபித்துப் பெண்கள் வித்தை முதலான பொதுஜன உபயோகமான விஷயங்களைப்பற்றி எழுதிப் பதிப்பித்தார்.

1852 - ம் வருஷம் ஹரிஸ்சந்திரமுகர்ஜி என்னும் சிறந்த தேசாபிமானி அக்காலத்தில் வெளியான (Hindu Intelligencer) இந்து இண்டலிஜென்சர் என்னும் பத்திரிகைக்கு எழுதிக்கொண்டு வந்து 1855-ம் வருஷம் ஸ்ரீ காதகோஷ், கிருஷிச் சந்திர கோஷ், கேதனசந்திர கோஷ் என்பவர்களுக்குச் சொந்தமான (The Hindu Patriot) இந்து பாட்ரியட்டு என்னும் பத்திரிகையை விலைக்கு வாங்கிக் குடிகளுடைய கஷ்டங்களைப்பற்றிப் பிரபல நியாயங்களோடு கவர்ன்மெண்டார் அறியும்படி எழுதிவந்தும், 1861-ம் வருஷம் நீலி பயிரிடும் வெள்ளைக்கார வேளாண்மைக்காரர்களால் ஏழைக் குடிகளுக்கு உண்டான கஷ்டங்களை எழுதி வாதிட, அந்த வெள்ளைக்காரர்கள் இவர்மேல் கிரிமினல் சிவில் வழக்கிட அதே கவலையால் தமது 36-வது வயதில் இறந்தார். இவர் இறந்தபிறகு இவருடைய வீட்டையும் அச்சாபீஸ் பாட்ரியட்டு பத்திரிகைகளையும் இவருடைய எதிரிகள் ஏலம்போட்டு விற்றுவிட்டார்கள். இதனால் இவர் மனைவி முதலான பந்துக்கள் அதிக கஷ்டப்பட்டார்கள். அப்படி கஷ்டப்படினும் இவருடைய உண்மையான தேசாபிமானத்தை வங்கநாட்டார் இன்னும் கொண்டாடி வருகின்றனர்.

1861-ம் வருஷம் கிருஷ்ணதாஸ் பால் என்பவர் மிஸ்டர் ஹரிஸ்சந்திரமுகர்ஜியவர்களால் எழுதிப் பிரசுரிக்கப்பட்ட (The Hindu Patriot) இந்து பாட்ரியட்டு என்னும் பத்திரிகையைப் புதிப்பித்துப் பிரபலமாக்கினர். இவர் 1857-ம் வருஷம் முதல் (Morning Chronicle) மார்னிங்கு க்ரானிகல், (Citizen) சிடிஜன், (Monthly Magazine) மாதாந்திர சஞ்சிகை முதலானவைகளுக்கு எழுதிப் பிரபலமானவர். இவர் காலத்தில் பாட்ரியட் பத்திரிகை பிரபலஸ்திதியைப் பெற்றது. இவருக்குப் பிறகு 1884-ம் வருஷம் இராஜேந்திரலால் மித்திரர் அந்த இந்து பாட்ரியட்

என்னும் பத்திரிகையை நடத்திவந்தார். இந்த வித்துவ சிகாமணி 1856-ம் வருஷம் பிபிதாத சங்கிரஹம் என்னும் சஞ்சிகையைப் படங்களுடன் சாஸ்திர சங்கதிகளை எழுதிப் பதிப்பித்ததன்றியில், சீமை இந்தியாப் பத்திரிகைகளுக்கு 2000 விஷயங்களையும் எழுதிப் பதிப்பித்த பிரபலபண்டிதர்.

இப்படி வங்கநாட்டில் வாராந்திரம் மாதாந்திரம் பிரசுரமாகும் பல பத்திரிகைகள் இருப்பினும், பிரதிதினமும் பிரசுரமாகும் பத்திரிகை இல்லாதது பெருங்குறைவாக இருந்தது. இக்குறைவை நீக்கக்கருதி 1861-ம் வருஷம் ஸ்ரீ பிரம்மாநந்த யோகி கேசவ சந்திரசேனர், "இந்தியன் மிரர் (Indian Mirror) என்னும் பத்திரிகையை ஸ்தாபித்து அதைப் பிறகு தினசரிப் பத்திரிகையாக்கி, அதை நடத்தத் தமது தமயனார் குமாரர் நரேந்திரநாத் சேனரையும், மனமோஹன கோசையும் நியமித்தும், பிறகு ஏழை ஜனங்களுக்காக ஒரு காசு விலையுள்ள "சுலப சமாசார்" என்னும் பத்திரிகையையும், வேதாந்த விஷயத்தைப் போதிக்க "தரும தத்துவம்" என்னும் பத்திரிகையையும், பெண்களுக்காக "பாமபோதினி" பத்திரிகையையும் ஸ்தாபித்து, தாமும் தமது தம்பி கிருஷ்ண பிஹாரி சேனும் எழுதிவந்தார்கள். இவர்கள் திவான் குடும்பத்தைச் சார்ந்த திரவியவான்களானபடியால், பிறருடைய திரவிய உதவியை நாடாமல் இன்றளவும அந்த இண்டியன் மிரர் என்னும் பெரிய தாளான தினசரிப் பத்திரிகையையும் வேறு வைதிகாதி பத்திரிகைகளையும் கிரமமாக நடத்தி வருகிறார்கள். 1866-ம் வருஷம் ஸ்ரீலஸ்ரீ கோஷ்டர்களால் "அமிர்த பஜார்" பத்திரிகையும், சுரேந்திரநாத பானர்ஜியவர்களால் "பெங்காளி" என்ற பத்திரிகையும் முதலில் வாராந்த பத்திரிகைகளாக இருந்து இப்போது தினசரிப் பத்திரிகைகளாகப் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன. பங்காள தேசம் கல்வியிலும் செல்வத்திலும் சிறந்ததோடு, கவர்ன்மெண்டாருடைய முக்கிய ஸ்தலமாகிய கல்கத்தாவில் இப்போது வங்கவாசி, சஞ்சீவினி, சமாசார், சந்திரிகா, தத்துவகவுமதி, அநந்தபஜார் பத்திரிகை, இந்திய நேஷன், இந்தியன் மெஸென்ஜர், ரெயிஸ்களாயட், சோபபிரகாஷ், ஆலோசன், சுராபி, சாதாரணி முதலான சுதேச பத்திரிகைகளும் சில ஆங்கிலேயருடைய தினசரிப் பத்திரிகைகளுமாக சுமார் 85 பத்திரிகைகளும் சஞ்சிகைகளும் இப்போது பிரசுரமாகி வருகின்றன.

## வடமேற்கு மாகாணம்.

நமது நாட்டின் வடமேற்கு மாகாணத்தில் இங்கிலீஷ் படிப்பு விசேஷமாக விருத்தியாகாமையால் அவ்விடத்தில் சுதேசிகளால் நடத்தப்படும் ஆங்கிலேய பாஷாபத்திரிகைகள் கொஞ்சம். ஆயினும், இப்போது சுதேசபாஷா பத்திரிகைகள் விருத்தியாகி வருகின்றன.

1879-ம் வருஷம் பண்டிதர் அயோத்தியா நாதரால் (Indian Herald) இந்தியன் ஹெரால்டு என்னும் தினசரி பத்திரிகையும், 1890-ம் வருஷம் (Indian Union) இந்தியன் யூனியன் என்னும் பத்திரிகையும் பிரசுரிக்கப்பட்டுவந்தன. 1857-ம் வருஷம் ஆக்ராவில் டில்லி கெஜட்டும், 1868-ம் வருஷம் முபீடி-ஆம்-ஆக்பார், 1869-ல் ஆக்ரா ஆக்பார் பத்திரிகைகளும், அலகாபாத்தில் 1882-ஷ் பிரயாக சமாசார் – ஹிண்டிபாதீப்–காயஸ்த சமாசார்–நுர் ஹுல் அப்சா என்ற பத்திரிகைகளும், அயோத்தியில் அவுத்பஞ்சு – அயோத்திய வர்த்தமானம் என்றுதி பத்திரிகைகளும், லாகோரில் பஞ்பாப் ஆக்பர்–தர்மசீலன்–டிரைபூன்–ஆரியபத்திரிகா–ஹிந்து ஈ-சத்-வில் சுன்ஞ என்றுதி சுதேச பத்திரிகைகளும் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன.

## பம்பாய் இராஜதானி.

பம்பாயில் சுதேசிகளால் முதல் முதல் பிரசுரித்த பத்திரிகையின் பெயர் "பம்பாய் சமாசார்" என்றாலும், அதை நல்ல ஸ்திக்குக் கொண்டுவந்தவர் 1850ஷ் சோர்ப்ஜீ சாபூர்ஜீ பெங்காளி என்ற பாரசிகராம். அவர் 1850 ம் வருஷம் 'ஜகத்மித்திரா' என்ற பத்திரிகையையும், 1851 ம் வருஷம் 'ஜகத்பிரேமி' யையும், 1857–ம் வருஷம் 'ஸ்ருவீபோதகி' என்ற பத்திரிகையையும் பிரசுரித்ததுடன், 1851–ம் வருஷம் 'நவரோஜி பர்டன்ஜி ஸ்தாபித்த (Rast Goftar) ராஸ்டு காப்டர் உண்மை விளம்பி என்னும் பத்திரிகைக்கு 1858-ம் வருஷம் முதன்மையானவராகி பிரபலப்படுத்தினர்.

1860-ம் வருஷம் கிருஷ்ணதாஸ் மூல்ஜி என்னும் சீர்த்துவோர் ..த்தியபிரகாஷ் என்னும் சஞ்சிகையை ஸ்தாபித்து அதில் ஜனசார சீர்திருத்தத்தைப்பற்றியும், முக்கியமாக வல்லபசாரிமத வைஷ்ணவ மஹாரதா என்

னும் குருமார்கள் செய்யும் அக்கிரமங்களையும், கண்டது கண்டபடிக்கும், கேட்டது கேட்டபடிக்கும் எழுதிவர, அம்மதாசாரியர் அவரை ஜாதிபிரஷ்டராக்கியும், கோர்ட்டு கச்சேரிகளில் அலக்கழியச்செய்தும், வழிமறித்து அடித்தும், அவஸ்தைப்படும்படி செய்தார். அக்காலத்தில் 'மங்கலதாஸ் நாதுபாய்' என்னும் சீர்திருத்தும் தருமப்பிரபு அவருக்கு உதவியாகவிருந்ததுடன் ஹோலி பண்டிகை என்னும் காமன்கூத்தில் நடக்கும் அக்கிரமங்களையும், வைணவ மஹாராஜர்களுடைய அக்கிரமங்களையும் கண்டித்து அப்பத்திரிகைக்கு எழுதி ஜனங்களைச் சீர்திருத்திவந்தார்.

1863-ம் வருஷம் இராவ் சாஹிப் விசுவநாத நாராயணமண்டலீக் என்னும் பண்டிதருடைய முயற்சியினால் 'நேடிவ் ஒபீனியன்' என்னும் பத்திரிகையை ஸ்தாபித்து அதில் நமது புராதன நடவடிக்கைகளே சிரேஷ்டமானவைகளென்று எழுதியும், அத்துடன் இராஜகீய விஷயங்களையும் எழுதிப் பதிப்பித்தார். இதன் பத்திரிகாசிரியர் இறந்தபிறகு கனம் 'காசிநாத் டிரம்பக் டிலாங்கு' என்பவர் எழுதிப் பதிப்பித்துவந்தார். 1868 முதல் 1872 வருஷம் வரையில் மேற் சொன்ன காசிநாத் டிரம்பக் டிலாங்கே இந்துபிரகாஷ் என்னும் ஆங்கிலோ மராட்டிப் பத்திரிகைக்கு எழுதி வந்தார். அந்த இந்துபிரகாஷ் என்பது புராதனமும் பண்டிதர்களால் புகழப்பட்ட பத்திரிகையுமாகையால் அதன் இங்கிலீஷ் பாகத்தை ஹைகோர்ட்டு ஜட்ஜியாக இருந்து இறந்துவிட்ட ஸ்ரீமாதவராவ் கோவிந்தராணடேயவர்களும் இப்போது ஐகோர்ட்டு ஜட்ஜியாக இருக்கும் ஸ்ரீ கோவிந்து நாராயண சந்தாவர்க்கரும் எழுதி வந்தார்களாம். பிறகு பம்பாயில்: ஆப்காரி சவதாகர், லோகமித்ரா, சுகமுக்கநோசதி, விச்யாமித்ரா, ஸ்பெக்டேடர், கன்னடசவுத்திரி, ஜாங்கிபோகர், வாய்ஸ்அப் இந்தியா, சன்மார்க்கதீபிகா, இந்தியா, பாலபோதமேவா, வர்த்தாஹார, ஆரிய தர்மபிரகாசிகா, பகவத் பாஸந்திரா, சுவதேகவஸ்சல், குஜராதி, சுபோத பத்திரிகா, சுபோத பிரகாசிகா, தீனபந்து, விவிதஞான விஸ்தார், சத்யமித்திரா, அட்வோகேட் முதலான பத்திரிகைகள் கிரமமாகப் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன.

## புனா பட்டணம்.

பம்பாயை அடுத்த புனாவில் ஸ்ரீ மகாதேவ கோவிந்த ரானடி யவர்களுடைய தூண்டுதலினால் கணேஸ் வசுதேவ கோஷியால் தேசோபகாரமாக ஸ்தாபிக்கலான புனா சர்வ ஜன சபையாரால் மூன்று மாதத்துக்கு ஒரு தடவை குவார்ட்டர்லி ஜர்னல் என்னும் சஞ்சிகை 1877-ம் வருஷம் பிரசுரிக்கப்பட்டது. அதன் பத்திராதிபர் சிப்லான்கர் நாமகார்த்தமாக ஆசிரியராகவும், உண்மையில் அச்சஞ்சிகையில் கண்ட பெரும்பான்மையான சங்கதிகள் ஸ்ரீமகாதேவ கோவிந்தரானடே அவர்கள் எழுதி வந்ததாகவும் தோன்றுகிறது. 1865-ம் வருஷம் பாஹரி கோவிந்த சோபகார், ஞான சாக்ஷி என்ற பத்திரிகையை ஸ்தாபித்தாலும், 1881-ம் 'கேசரி' என்ற சுதேசபாஷா பத்திரிகையும், 'மஹராட்டா' என்ற ஆங்கிலேயப் பத்திரிகையும் மிஸ்டர் பால கங்காதர திலகரால் ஸ்தாபிக்கப்பட்டுச் சென்ற விஷஜுர காலத்தில் அவர் எழுதிவந்த சங்கதிகள் இராஜ விரோதமானவைகளெனக் கொண்டு அப்பத்திராதிபரைச் சிக்ஷித்தது அநேகருக்குத் தெரிந்ததே. இப்போது புனாவில் 'நிபந்த சந்திரிகா, தக்ஷண ஹெரால்டு, பண்டிட்டு' என்னாதி பத்திரிகைகள் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன.

## ஐதிராபாத்.

1877-ம் வருஷம் 'தினவர்த்தமானி' என்கிற பெயரால் ஆங்கிலோ - உருதுபாஷா பத்திரிகையும், 1881-ம் வருஷம் 'சுக்த்-உள், இஸ்லாம், ஹசார்தஸ்தான், பனூன் சாபேக்' முதலான இங்கிலீஷ்-உருதுபாஷா பத்திரிகைகளும் பிரசுரமாகி வருகின்றன.

## தென்னிந்தியா அல்லது சென்னை ராஜதானி.

சென்னை ராஜதானியில் சுதேசிகளால் முதல்முதல் ஸ்தாபித்த சமாசாரப் பத்திரிகை எதுவென்று விசாரிக்கையில், 1840-ம் வருஷம் மிஸ்டர் நாராயணசாமி நாயடு பதிப்பித்த நேடிவ் சர்க்குலர் (Native Circular) என்பதாம். இந்தப் பத்திரிகையையும் அச்சாபீசையும் அக்காலத்தில் சிறந்த தேசாபிமானியாக ஜனித்திருந்த கனம் காஜுலு சித்தலு செட்டியார் குமாரர் மிஸ்டர் இலட்சுமிநரசிம்முலு செட்டியார் 1844-ம் வருஷம் விலைக்கு வாங்கி அந்த வரு

ஷம் அக்டோபர்மீ 2உ கிரிஸெண்டு என்னும் பத்திரிகையை ஸ்தாபித்தார். அக்காலத்தில் சில கிறிஸ்துவப் பாதிரிமார்களுடையவும், அக்கிறிஸ்து மதத்தில் வைராக்கியமுடைய சில துரைமார்களாலும் சுதேச பாடசாலைகளில் பைபில்பாடத்தைக் கட்டாயமாக வைக்கவேண்டுமென்றும், கிறிஸ்து மதத்தில் சேர்வோருக்கே பெரிய உத்தியோகங்களைத் தரவேண்டுமென்றும் கொண்டாடிவந்த கொள்கைகளைக் கண்டித்தும், கவர்ன்மெண்டாரால் குடிகளுக் குண்டாகும் சாதக பாதகங்களைப்பற்றிப் பேச நேடிவ் அசோஷியேஷன் (Native Association) சபையை ஸ்தாபித்தும், அந்தச் சபையாரைக்கொண்டு பார்லிமெண்டாருக்கு விண்ணப்பங்கள் எழுதிவைத்தும் வந்ததுடன், அக்காலத்தில் இங்கிலீஷ்காரர் இந்தியாவை யாளும் விதத்தைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்க விரும்பிவந்த (Mr. Danuel Seymour) டான்யுல் சீமோர் என்கிற பார்லிமெண்டு மெம்பரைக் கோயமுத்தூர், கும்பகோணம், கூடலூர் முதலான இடங்களுக்கு 1852-ம் வருஷம் அழைத்துக்கொண்டுபோய், அவ்விடங்களில் கந்தாய பாக்கிக்காகச் சில தாசீல்தாரர்கள் குடிகளை அண்ணாந்தாள், கிட்டிக்கோல், முட்டிக்கால் போடுவித்துக் கஷ்டப்படுத்தி வாங்குவதைப் பிரத்தியக்ஷமாகக் காட்டியும், மைசூர் ஐதராபாத்து அரசர்களுக்குப் புத்திமதிகளைச் சொல்லியும் வருகையில், அவருடைய வர்த்தகத்தில் நஷ்டம் நேரிடத் தமது அருமையான கிரிஸெண்டு பத்திரிகையை எழுதிவந்த மிஸ்டர் (Mr. Harley) ஹார்லி முதலான சிப்பந்திகளுக்குப் பெருத்த சம்பளம் கொடுக்கச் சக்தியற்றுப் பத்திரிகையும் நின்றுவிட்டது. இந்தக் கிரிசெண்டு பத்திரிகைக்குக் கவர்ன்மெண்டார் மற்றப் பத்திரிகைகளுக்குச் செய்துவந்த உபகாரத்தைச் செய்யாதிருந்ததோடு அதன் விளம்பரத்தை போர்ட் ஸெயிண்டு ஜார்ஜ் கெஜட்டில்கூடப் பதிக்கமாட்டோமென்றார்கள். பாருங்கள் என்ன பரிதாபம்!

இந்தத் தேசாபிமானியைப்பற்றி ஒருசிறுகதையுண்டு. அதாவது, ஒருநாள் இவர் தேசோபகார விஷயமாக மிஸ்டர் சீமோருடன் வெளி நாடுகளில், சஞ்சரிக்கையில், அன்றிரவு பயங்கர இருட்டில் ஓர்காட்டில் வழிதப்பி வகைமோசமாகப் போய்த் தத்தளிக்க, அக்காட்டில் குடிகொண்டிருக்கும் குரூரரான கொள்ளைக்காரர்களும் வழிப்பறிகளும் வந்து

தமக்கு நல்ல வேட்டை யகப்பட்டதென்றெண்ணி இவர்களைக் கொள்ளையடிக்க ஆரம்பித்தார்கள். அப்போது அங்கு அவர்களுக்கு இரையாக அகப்பட்டவர் லக்ஷ்மி நரசிம்மலு செட்டியார் என்று தெரிந்த உடனே, அவர்கள் பதைபதைத்துப் பயந்து, "ஐயோ சிறந்த தேசாபிமானியாகிய இந்த மஹானுபாவனை இப்படிச் சதிசெய்ய நினைத்தோமே" என்று விசனப்பட்டு, அவர் பாதத்தில் வீழ்ந்து அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, அவரைப் பல்லக்கில் தூக்கிக் கொண்டுவந்து இராஜ பாட்டையில் விட்டுக் கும்பிட்டுக் கொண்டு போய்விட்டார்களாம். உண்மையான தேசாபிமானிக்குக் கொள்ளைக்காரர்களும் கொலைபாதகர்களும் அஞ்சினதைப் பாருங்கள்! 1850-ம வருஷம் மிஸ்டர் வேங்கடராயலு நாயடுவால் (The Rising Star) "உதய நக்ஷத்திரம்" என்கிற பத்திரிகை பிரசுரிக்கப்பட்டாலும் அதன் விருத்தாந்தம் பூரணமாகக் காதுக் கெட்டவில்லை. பிறகு கனம் பெர்சிவல் காலத்தில் தினவர்த்தமானி என்கிற வாராந்தத் தமிழ்ப் பத்திரிகை பதிப்பிக்கப்பட்டது. அதற்கு கவர்ன்மெண்டார் மாதாந்திரம் 200 ரூபாய் கொடுத்து வந்தமையால் அதன் பத்திராதிபர் மிஸ்டர் விசுவநாதப் பிள்ளை கல்வி விஷயத்தையும் கவர்ன்மெண்டு சட்ட திட்டங்களையும் மொழி பெயர்த்துப் பதிப்பித்து வந்தார். கனம் பெர்சிவலுக்குப் பிறகு கவர்ன்மெண்டார் கொடுத்துக்கொண்டு வந்தபணத்தை நிறுத்திவிட்டபடியால் மிஸ்டர் விசுவநாதப் பிள்ளை மரணத்தோடு தினவர்த்தமானியும் மறைந்தது.

1864-ம் வருஷம் சென்னை வேத சமாஜத்தை ஸ்தாபித்த மிஸ்டர் ராஜகோபாலாசாரியரும், மிஸ்டர் சுப்பராயலு செட்டியாரும், ஸ்ரீ தரரும் தத்துவபோதினி பத்திரிகையை ஸ்தாபித்தார்கள். அதற்கு மிஸ்டர் பொன்னுசாமித் தேவர் 1000 ரூபாய் நன்கொடையாகக் கொடுத்தார். அப்படிக் கொடுத்தும் அந்த மகான்கள் இறந்த பிறகு அப்பத்திரிகையும் மறைந்தது.

1871-ம் வருஷம், சைதாபுரம் மிஸ்டர் காசி விசுவநாத முதலியாரும், பாரிஸ்டர் மிஸ்டர் ராமசாமி ராஜுவும், பிரம்ம தீபிகையை ஸ்தாபித்து வெகு சாமர்த்தியமாக எழுதிவந்தார்கள். முதலியாரவர்கள் இறந்த பிறகு இப் பத்திரிகையும் மறைந்தது.

பிறகு சென்னையில் "தேசாபிமானி, திராவிடவர்த்தமானி, திமேனுதய பத்திரிகை, ஞானபானு, ஜனவிநோதினி, சுகுணபோதினி, மனோரஞ்சினி, மாதர்போதினி, வெற்றிக் கொடியோன், விகடதூதன், ஜனபூஷணி, ஆரியஜனப்பிரியன், முஸ்லீம் ஹெரால்டு, ஷம்-சுல்-அக்பார், ஆந்திரப்பிரகாசிகா, தத்துவசாதனி, தத்துவவிவேசனி, தத்துவவிசாரிணி, பிரபஞ்ச மித்திரன், லோகவர்த்தமானி" முதலான பத்திரிகைகளும்; மதுரையில், "பாண்டியன், கிராணிகள்"; கும்பகோணத்தில் "அதினியம், வர்த்தமான விமர்சனி"; தஞ்சையில், "ஜனமித்திரன், சதரன்ஸ் டார்"; நாகையில், "ஜனப்பத்திரிகை, நீலலோசனி"; திருவனந்தபுரத்தில், "அபிமானி"; பசுமலையில், "சத்தியவர்த்தமானி"; கூடலூரில், "தேசாபிமானி"; திண்டுக்கல்லில், "தென்னிந்திய மித்திரன்"; திருச்சியில், "அமிர்தவசனி, நேசன், தமிழ்ச்செல்வன்"; ஸ்ரீரங்கத்தில், "ஸ்தலபூஷணி"; சேலத்தில், "சுதேசாபிமானி, சேலம்பானு, தக்ஷணதீபம், லோகவர்த்தமானி"; கோயமுத்தூரில், "கோயமுத்தூர் பத்திரிகை-சுதரிசனி, தூதன், கலாநிதி(Crescent)"; பெங்களூரில், "பிரம்மஞானபோதினி"; திருச்செங்கோட்டில், "திவாகரன்"; வடநாடுகளில் "புருஷார்த்தப்பிரதாணி, விவேகசிந்தாமணி" ஆகிய இப்பத்திரிகைகள் ஸ்தாபிக்கப்பட்டன. இவைகளில் அநேக பத்திரிகைகள் போதுமான திரவிய சகாயமின்றி மறைந்துவிட்டன.

1870-ம் வருஷம் சென்னை பாஸ்டர் பிரசில் நேடிவ் பப்ளிக் ஒபீனியன் (Native Public Opinion) என்னும் பத்திரிகையை ஸ்தாபித்து அதற்கு மிஸ்டர் வேங்கடரமணபந்துலும், மிஸ்டர் ரங்கநாத முதலியாரும், ஸ்ரீமது திவான் பஹதூர் இரகுநாத ராயரவர்களும் முக்கிய பத்திராதிபர்களாக இருந்து கொஞ்சகாலம் இங்கிலீஷ், தமிழ், தெலுங்காதி பாஷைகளிலும், பிறகு இங்கிலீஷ் பாஷையிலும் சுதேசிகளுடைய குறைவுகள் வெகு திறமையுடன் எழுதப்பட்டுவந்தன. இப்படிப்பட்ட பத்திரிகை யாது காரணத்தால் அவர்கள் கையைவிட்டு நீங்கி ஒரு மகமதிய கனவான் வசமாகியதோ தெரியவில்லை. அப்படியாகினும் கூடிய வரையில் திருப்திகரமாக எழுதிவந்தார். பிறகு அந்தப் பாஸ்டர் பிரசுக்கு நஷ்டம் வந்து விற்பனையானபோது அந்தப் பத்திரிகையும் ஆதரிப்பாரின்றி மறைந்துவிட்டது.

பிறகு சென்னை ஐகோர்ட்டு வக்கீலாகவிருந்த மிஸ்டர் ராமச்சந்திரய்யரால் (Madrasee) மதராசி என்ற பெயரால் ஓர் வாராந்த இங்கிலீஷ்ப் பத்திரிகை பிரசுரம் செய்யப்பட்டு அதுவும் சில மாதங்களுக்குள் மறைந்துவிட்டது.

1878-வருஷம் சென்னைப் பச்சையப்பனார் கலாசாலையில் உபாத்தியாயர்களாகவும், திருவல்லிக்கேணி வித்தியா சபையின் மெம்பர்களாகவும், தேசாபிமானம் முதலான பொதுநல பிரியத்தை யுடையவர்களாயு மிருக்கும் மிஸ்டர் சுப்பிரமணிய ஐயர், எம். வீரராகவாசாரியர் ஆகிய இருவர்களும் தம்மிஷ்டர் சிலரோடு கூடிப் பேசியபோது "நமது சுதேசிகளுடைய குறைவுகளைப்பற்றிப் பேசத்தக்க சமாசாரப் பத்திரிகை இல்லையே" என்று யோசித்து அக்குறைவை நீக்கக்கருதி (The Hindu) இந்து என்னும் பெயரால் ஒரு சிறு பத்திரிகையைப் பிரதிவாரந்தோறும் எழுதி ஒரு அச்சாபீசில் கூலி கொடுத்து அச்சிட்டு வெளிவிட அதில் கண்ட சங்கதிகள் குடிகளுடைய சுகத்தைக் கருதியவைகளாக விருப்பதைக் கருதி மெஸர்ஸ் கனம் ரங்கய்ய நாயடுகாரு, கனம் அநந்தாசார்லு, கனம் சுப்பிரமணிய ஐயர், கனம் சபாபதி முதலியார் முதலான பிரமுகர்கள் அவர்களை உற்சாகப்படுத்த அவர்கள் அப்பத்திரிகையைப் பெரிதாக்கியும், அதற்கென்று ஒரு அச்சு இயந்திரத்தை ஸ்தாபித்தும், அப்பத்திரிகையை வாரம் இரு முறை மும்முறையாகப் பதிப்பித்தும் கடைசியாகத் தினசரிப்பத்திரிகையாக்கி, இப்போது இத்தேசத்தில் சுதேசிகளால் நடத்திவரும் பத்திரிகைகளில் இது ஓர் சிறந்த பத்திரிகையாகப் பிரகாசிக்கிறது.

இந்த இந்து பத்திரிகை தோன்றிய பிறகு, இந் நாட்டில் இங்கிலீஷ் பாஷை அறியாதவர்களுக்கு அறிவை யூட்டத்தக்க தமிழ்ப் பத்திரிகை இல்லாததைக் கருதி அப்போது ஐகோர்ட்டு வக்கீலும், இப்போது மைசூர் சமஸ்தான ஐகோர்ட்டு ஜட்ஜியுமாகிய மிஸ்டர் இராமசந்திர ஐயருடைய தூண்டுதலின்மேல் மேற்கண்ட மிஸ்டர் க. சுப்பிரமணிய ஐயரும், மிஸ்டர் மு. வீரராகவாசாரியரும் 1880-ம் வருஷம் 'சுதேசமித்திரன்' என்னும் பத்திரிகையைப் பிரசுரஞ் செய்தார்கள். இந்த இரண்டு பத்திரிகைகளும் இப்போது நம் நாட்டிற்குச் செய்துவரும் பேருபகாரம் இச் சபையில் நிறைந்திருக்கும் தேசாபிமானிகளை

அறிவார்கள். சேலத்தில் இந்து மகமதியர்களுக்குக் கலகம் நடந்த சமயத்தில் கவர்ன்மெண்டார் அநேகரை ஜெயிலுக்கு அனுப்பியபோது இந்து பத்திரிகை செய்த உபகாரத்தைச் சொல்லவும் வேண்டுமோ? இதோ இன்று இச்சபா நாயகருக்குப் பக்கத்தில் வீற்றிருக்கும் கனம் சேலம் விஜயராகவாசாரியரை அநியாயமாகக் குற்றப்படுத்திச் சிறைச்சாலைக்கு அனுப்பியபோது, அந்த இந்து பத்திரிகை அவருடைய விடுதலைக்காகப் பட்டபாடு கொஞ்சமா? அக்காலத்தில் நிரபராதிகளான அநேகரைச் சிறைச்சாலையைவிட்டு நீக்கி அவர் மனைவிமார்களுக்கு மாங்கலியபிச்சை கொடுத்தது இந்து பத்திரிகை யல்லவா? நாகபட்டினம் கலகக் கேசு, திருநெல்வேலி கலகக் கேஸ், திருவனந்தபுரம் தடபுடல் கேசு, குத்தாலம் கலகக் கேஸ், தஞ்சாவூர் தாமஸ் கேஸ், மங்கேசராவ் கேஸ், பல்லாரி விதந்து கேஸ், மைசூர் ஜாதகக் கேசு முதலான விஷயங்களைப் பற்றிப் பிரபல நியாயங்களோடு முறையிட்டும் ஆயிரம் ஐயாயிரம் ரூபாயையும் அவதூறு கேசுகளுக்குக் கொடுத்துக் கஷ்டப்பட்டதும் கொஞ்சமா?

இம்மட்டோ! நமது நாட்டிற்கு ரிப்பன் பிரபுவினால் கொடுக்கப்பட்ட சுய அரசாட்சியை நாட்டார் நன்கறியும்படி போதித்ததெது? இந்தியா காங்கிரஸ் சபைக்கு ஒரு முதற்காரணமாக நின்று இன்றளவும் பாடுபட்டுப் பேசுவதெது? சென்னை மகாஜன சபைக்கும் இன்று இங்குக் கூடும் மாகாணக் கூட்டத்திற்கும் முக்கியமாக நின்று நிறைவேற்றிய தெது? இந்து பத்திரிகையும் அதன் சகோதரன் சுதேசமித்திரன் பத்திரிகையு மல்லவா? இப்படி நமது நாட்டிற்கு உழைத்துவரும் "இந்து" பத்திரிகையின் தற்கால ஸ்திதியைக் கேட்க ஒவ்வொரு சுதேசாபிமானிக்கும் சங்கட முண்டாகும். ஏனெனில், அப் பத்திரிகைக்குப் போதுமான வருமானமும் மற்ற உதவிகளு மில்லாததே. அந்த இந்து பத்திரிகையைச் சென்ற இருபது வருஷ காலங்களாக இரவும் பகலும் தம் சொந்த சுக துக்கங்களைக் கருதாது நடாத்திவந்த நவமணிகளிலும் சிறந்த நம் கண்மணிகளாகிய மிஸ்டர் சுப்பிரமணிய ஐய்யருக்கும், மிஸ்டர் வீரராகவாசாரியருக்கும் போதுமான வருமான மில்லாததோடு, அந்தப் பத்திரிகையை நடத்திய விஷயத்தில் கடன் அதிகமாகி அதைத் தீர்க்க வழியற்றதனால்

இருவரும் பிரிந்து இந்து பத்திரிகையை மிஸ்டர் வீரராகவா சாரியரும், சுதேசமித்திரனை மிஸ்டர் சுப்பிரமணிய ஐயரும் நடத்திவருகிறார்கள். அப்படி நடத்திவந்தும் இந்துப் பத்திரிகையின் கடன் இன்னும் தீராமையாலும், இவ்வளவு உபயோகமுள்ள பத்திரிகையை இரண்டொருவர் நடத்தி வந்து இவர்களுக்குப் பிறகு மிஸ்டர் லக்ஷ்மி நரசிம்மலு செட்டியாருடைய கிரஸண்டு பத்திரிகையைப்போலவும், நேடிவ் பப்ளிக் ஒபீனியன் பத்திரிகையைப்போலவும் மறைந்து போகாதபடி முன் எச்சரிக்கையாக இருக்கவும், அந்த இந்து பத்திரிகையையும் அதன் அச்சியந்திர சாமான் கட்டிடம் முதலானவற்றையும் தேசாபிமானிகளான ஒரு கம்பனியாரிட விசாரணையில் விட்டும், அதற்கு மிஸ்டர் ஜி. சுப்பிரமணிய அய்யர் பத்திரிகாசிரியராகவும், மிஸ்டர் வீரராகவாசாரியர் ஏஜெண்டு மானேஜராகவும் இருந்தும் உழைத்து வந்தால் இந்தக் கம்பனியாருக்கு நல்ல லாபமும் அதோடு தேசோபகாரமான காரியமும் நிரந்தரமாக நடக்குமென்று சொல்லும் ஓர் பிரசித்த பத்திரிகையைக் கண்டேன். பத்திராதிபர்களுக் கிருக்கும் கஷ்டநிஷ்டூரங்களைப்பாருங்கள் நமது கண்மணிகளாகிய மிஸ்டர் சுப்பிரமணிய அய்யரும், மிஸ்டர் வீரராகவாசாரியரும் ஆதியில் இப்பத்திரிகைத் தொழிலில் பிரவேசிக்காமல் ரெவினியூ சிவில் உத்தியோகங்களில் பிரவேசித்திருந்தால் டிப்டி கலெக்டர், சப் ஜட்ஜி முதலான வேலைகளில் அமர்ந்து இப்போது பென்ஷன் பெற்றுக்கொண்டு சுகமாக உண்டு, சோபாக்களில் தூங்கி, சாயந்திரங்களில் சமுத்திரக்கரை யோரங்களில் லாண்டோ புரூவம் வண்டிகளில் ஏறிப்போய் காலம் கழிக்கலாம். தேசாபிமானத்துக்கு உழைத்த இந்த உத்தமர்களுக்கு விருத்தவயதில் பென்ஷன் கொடுத்துக் காப்பவர் யார்? கடவுள்தான் காக்கவேண்டும்.

கனவான்களே! இவர்கள் விஷயமாக நான் இவ்வளவு தூரம் சொன்னது தாக்ஷணியத்தைக் கருதியல்ல. இந்த இந்து பத்திரிகைக்கு முன் நான் சேலத்தில் சுதேசாபிமான பத்திரிகையை ஸ்தாபித்து நஷ்டமடைந்ததில் அப்பத்திரிகை மறைந்தது. பிறகு 1881-ம் வருஷம் கலாநிதிப் பத்திரிகையை ஸ்தாபித்து வந்ததில் நாளது வரையில் 7,000 ரூபாய் நஷ்டமடைந்திருக்கிறேன். இத்துடன் எனக்கு எடிடர் சம்பளமும் சேர்த்தால் 10,000 ரூபாய் நஷ்ட

மிருக்கும். இப்படி ஒரு பத்திரிகைக்கே சென்ற 20 வருஷத்தில் இவ்வளவு நஷ்டமானால் இந்துவைப்போன்ற தினசரிப் பெரிய பத்திரிகைக்கு எவ்வளவு நஷ்டமுண்டாயிருக்க வேண்டுமென்பது சமாசாரப் பத்திரிகைகளைப் பதித்து அவற்றுடன் ஊடாடி உறவாடியவர்களுக்கே உண்மை வெளியாகும். இப்படிப் பத்திராதிபர் நஷ்டமடைவதற்குக் கையொப்பக்காரர்களே காரணம். நம்முடைய தேசாபிமானம் வாசாகைங்கரியம். சோதிப்போமாகில் நம்மவர் நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்து விட்டால் மூலைக்கொன்றாக ஓடும் தன்மையைப் போன்றவர்கள். அப்படி ஓடும் ஒரு நெல்லிக்காயை எடுத்துப் பார்த்தால் அதைச் சுற்றிலும் ஆறு கோடுகளிருக்கக் காணலாம். அக்கோடுகளென்னவென்றால்: சைவம், வைணவாதி ஆறுசமயங்களுக்கு உவமையாகும். எப்படி ஆறு சமயத்தார் ஒன்றாகச் சேருகிறதில்லையோ அப்படியே பொதுவிஷயத்தில் நம்மவர்கள் ஒன்று சேர்வது அபூர்வம். ஆகவே அன்று பார்த்ததற்கு அழிவில்லாமல் இப்போது மிருக்கிறோம். இனி இப்படி இருந்தால் நமது தேசம் க்ஷேமமடைவதெப்படி? இத்தியாதிகளை இனிமேலாகிலும் ஆழநீள ஆராய்ந்து ஆரிய தேசமாகிய நமது அருமைத் தாயாரிடம் அன்பைக் காட்டி அதன் பெருமையைப் பிரபலமாக்கும் சாதனங்களாகிய சமாசார பத்திரிகைகளைப் பரிபாலித்துவரப் பிரார்த்திக்கின்றனன்.

---

## மதுரை 4-ம் தமிழ்ச் சங்கம்.



1901-ம் வருஷம் மே மாதம் 24-ந்தேதி வெள்ளிக்கிழமை மாலை ஸ்ரீ பாண்டித்துரைத் தேவரவர்களுடைய வரவிடு விளம்பரத்தின்படி மதுரை சேதுபதி அவர்கள் பாடசாலையில் ஒரு மகாசபை கூடியது. அந்தச் சபைக்கு மதுரையைச் சார்ந்த ஸ்ரீ பாண்டித்துரை தேவரவர்களும், மெஸர்ஸ் நாராயணையர், G. ஸ்ரீநிவாசராயர், நாகலிங்கம் பிள்ளை, பத்மநாபநாயுடு, பாஷியாசாரியர், இன்னும் அநேக வக்கீல்களும், உத்தியோகஸ்தர்களும், உபாத்தியாயர்களும், வித்தியார்த்திகளும், சென்னையைச் சார்ந்த ஹானரபில் அநந்தாசாரியரவர்கள், இந்து ப்ரோப்ரைட்டர் வீரராகவாசாரியா ரவர்கள், சுதேசமித்திரன் பத்திராதிபர். G. சுப்

பிரமணிய ஐயர், பாரிஸ்டர் பால் பீட்டர் பிள்ளையவர்கள், ஏ. சி. பார்த்தசாரதி நாயுடுகாரு முதலானவர்களும், கோயமுத்தூரைச் சார்ந்த சே. ப. நரசிம்மலு நாயுடுகாரு, துரைசாமிப் பிள்ளை அவர்கள் முதலானவர்களும், இன்னும் 10-வது மாகாணக் கூட்டத்திற்கு வந்திருந்த அநேக சுதேச தேசாபிமானிகளும் வந்திருந்தனர்.

அந்தச் சபைக்கு ஸ்ரீமான் பாண்டித்துரைத்தேவரவர்களே சபாநாயகராக வீற்றிருந்து தமிழ்ப் பாஷையின் சிறப்பைப் பற்றிச் சில சிறந்த மேற்கோள்களுடன் பிரபலமாகப் பிரசங்கித்தும், இம்மதுரையில் ஒரு தமிழ்ச்சங்கம் இன்றியமையாததெனச்சொல்லி முடிக்க, மிஸ்டர் வக்கீல் நாராயண ஐயர் எழுந்து தமிழின் பெருமையைப்பற்றிப் பேசியும், அந்தப் பாஷையில் அத்மா என்னும் பதத்திற்குச் சரியான பதமிருக்கிறதோ இல்லையோ என்னும் சந்தேக மிருக்கிறதென்றும், ஆயினும் மதுரையில் ஒரு தமிழ்ச்சங்கம் இருத்தல் நலம் என்றும் சொல்லி முடிக்க, கோயமுத்தூரிலிருந்து வந்த மிஸ்டர் சே. ப. நரசிம்பலு நாயுடுகாரு முத்தமிழ்ச் சங்கத்தின் வரலாற்றையும் தமிழின் பெருமையையும் பற்றி அப்போது செய்த உபன்னியாசத்தின் சங்கிரகமிது:

பாண்டிய நாட்டை அலங்கரிக்க அவதரித்த பாண்டித் தேவரே! வித்தியா விநோதரே! இச்சபையிலிருக்கும் தலைமக்களே! குலமக்களே! நேற்று பத்தாவது மாகாண மஹாமண்டபத்தில் நமது குடிகளுடைய குறைவு நிறைவுகளைப் பற்றிப் பேச ஒரு சபையும், அப்படிப் பேசும் சங்கதியைப் பலருக்கும் அறிவிக்கச் சுதேசமித்திரன் இந்து முதலான சமாசாரப் பத்திரிகைகளும் இன்றியமையாதனவென்றும், ஆகவே, அப்பத்திரிகைகளை ஆதரிக்கவேண்டியது நம்மவர் கடமை என்றும் சொன்னேனல்லவா? இன்று அப்படிப் பட்ட பத்திரிகைகளுக்கு எழுதவேண்டிய பாஷையை முக்கியமாக நமது தாய்ப் பாஷையாகிய தமிழை விருத்தி செய்யவேண்டியதும் நம்மவர் கடமையாகும்.

அமெரிகா கண்டத்தில் வித்தையிலும் விஞ்ஞானத்திலும் சிறந்த வால்டோ எமர்சன் என்னும் வித்துவான், தாமெழுதிய ஓர் வியாசத்தில், "இவ்வுலகம் அறிஞருடைய உள்ளங்கைக்குள் அகப்பட்டு ஆடும் பந்தைப்போலும் செண்டைப்போலுமிருக்கிறது. அவர்கள் அதை அடக்கி யொடுக்

கித் தம் மிஷ்டப்படி எல்லாம் ஆடக்கூடும்,'' என்று சொல்லி இருப்பதற்கேற்க, நம் தமிழ் நாட்டினரும் ''உலகம் அறிவுடையார் மாட்டு'' என்று எழுதினர். அதாவது, இந்த உலகத்தில் அநந்தகோடி ஜனங்களிருக்கினும், அவர்களெல்லோரும் அறிவுடைய சில புத்திமான்களுடைய ஆக்கினைக்குட்பட்டிருக்கின்றனர் என்பதாம். இநத வாக்கியத்தின் அருத்தத்தை அறிந்து அனுஷ்டித்து வந்த நமது முன்னோர்கள், அஷ்ட ஐசுவரியத்துடன் ஆரிய தேசத்தை அடக்கி ஆண்டு ஆநந்தத்துடன் வாழ்ந்து வந்தார்கள். மத்திய காலத்தில் நம் முன்னோர் இந்த மகுட வாக்கியத்தின் மகத்துவத்தை அறியாமல் அசட்டை செய்தனர். அன்றுமுதல் இந்நாட்டின் கல்வி, செல்வம், சீர்திருத்தம், சிறப்பு முதலானவைகளைத் தினேதினே நாம இழந்துகொண்டு வந்து கடைசியாக நம் நாட்டையும் இழந்துவிட்டோம்.

இத் தென்னாட்டார் தொன்றுதொட்டு கல்வி, கேள்வி, ஞானம், தருக்கம், இலக்கியம், இலக்கணம், இராசதந்திராதி சாஸ்திரங்களை யறிந்து சுதந்திர சுகவாழ்வைப் பெற்றிருந்தார்களென்பதற்குத் தமிழ் முச்சங்கங்களே போதுமான சாக்ஷியமாகும்.

காளமேகப் புலவர் வெண்பாவின்படி, ''நூலா நாலாயிர நானூற்று நாற்பத்தொன்பான், பாலா நூற்று நாற்பத்தொன்பான்—மேலா, நாற்பத்தொன்பான் சங்கமறுபத்து நாலாடலுக்கும், கத்தன் மதுரையிற் சொக்கன்.''

அச்சங்கமேறியவர்கள் 4,449 பெயர்களென்று தெரிவிக்கப்பட்டிருந்தாலும், வீரசோழிய முதலான சில சிறந்த நூல்களைக் கொண்டாராயுங்கால் 549 பெயர்களென்றும், அவர்களில் அகத்தியனார், விரிசடையத்தனார், முருகமுதல்வனார், முடிநாகராயர், நிதிக்கிழவனார், அதங்கோட்டாசிரியனார், பனம்பாறனார், தொல்காப்பியனார் முதலானவர்கள் சிறந்து விளங்கி, தொல்காப்பியம், காக்கைபாடினியம், அவிநயம், நற்றத்தம், வாமனம், புறப்பொருட் பன்னிரு படலம், முருவல், சயந்தம, குணநூல், செயிற்றியம், பரிபாடல், முதுநாறை, முதுக்குருகு, களறியாவிறை முதலிய அருமையான நூல்களை இயற்றினார்கள். அவர்கள் அகத்தியத்தை முதல் நூலாக வழங்கி வந்தார்கள். அதில் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ், மூன்றும் வகுத்

துரைக்கப்பட்டிருக்கின்றன. தொல்காப்பியம் முதலியவற்றில் இயற்றமிழும்; பெருநாரை, பெருங்குருகு முதலியவற்றில் இசைத்தமிழும்; முருவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் முதலியவற்றில் நாடகத்தமிழும் விரித்துரைக்கப்பட்டன.

பிறகு இடைச்சங்கம் கபாடபுரத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. அச்சங்கமேறியவர்கள் 509 பெயர். அவர்களில் இருந்தையூர் கருங்கோழி மோசியார், வெள்ளூர் காப்பியன், சிறுபாண்டரங்கன், திரையின்மாரன், துவரைக்கோமான், கீரந்தையார் முதலானவர்கள் சிறந்து விளங்கி கலிக்குருகு, வெண்டாலி முதலிய நூல்கள் அரங்கேற்றப்பட்டன. இச்சங்கத்தார் அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், இசைநுணுக்கம், பூதபுராணம் முதலியவற்றை நூல்களாக வழங்கி வந்தார்கள்.

கடைச்சங்கம் உத்தர மதுரையில் ஸ்தாபிக்கப்பட்டது. இதில் சங்கமேறியவர்கள் 49 பெயர். அதர்களில் இறையனார், உக்கிரப்பெருவழுதியார், கபிலர், பரணர், நக்கீரர், பெருந்தேவனார், நச்சுமனார், குலபதி நாயனார், ஆலங்குடி வங்கனார் முதலானவர்கள் சிறந்து விளங்கி, நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, எழுபது பரிபாடல், பதிற்றுப்பத்து, நூற்றைம்பது, கூத்தவறி, சிற்றிசை, பேரிசை முதலியனவற்றை அரங்கேற்றினார்கள். இப்படி முதற்சங்கததில் 4449 பெயரும், இடைச் சங்கத்தில் 3700 பெயரும், கடைச் சங்கத்தில் 49 பெயரும், அவ்வச்சங்கத்தில் தத் தம் காவியங்களை அரங்கேற்றினர் என்பது இதனடியிற் காணும் இறையனார் அகப்பொருளின் கவியால் விளங்கும்.

வெண்பா.

"ஏழேழா டைஞ்ஞூறு மேழே ழொடுபஃதும்
ஏழேழுஞ் சங்க மேதியினர்—ஏழேழ்சேர்
நாற்பதிநா னூறு முப்பானேழ்நூறு நானூற்று
நாற்பதின்னொன் பான்கவிஞர் நாடு."

இப்படிப் பிரகாசித்த சங்கங்களில் முதற் சங்கத்தின் காலம் முன்பின் 450 என்றும், இடைச்சங்கத்தின் காலம் 350 என்றும், மூன்றும் சங்கத்தின்காலம் 2000 என்றும் ஒரு நூலில் சொல்லப்பட்டிருக்கிறது. அன்றியும், முதற்சங்

கம் காய்சினவழுதிமுதல் கடுங்கோன்வழுதி வரையில் 19 பாண்டியர்காலம் வரையினும், இடைச்சங்கம் வெண்டோச்சகியன்முதல் முடத்திருமாறனீருக 59 பாண்டியர் காலம் வரையிலும், மூன்றுஞ்சங்கம் முடத்திருமாறன் முதல் உக்கிரப்பெருவழுதி யீருக 49 பாண்டியர்காலம் வரையிலும், பிரபலப்பட்டிருந்த தன்றியில், இப்பாண்டியரில் முதற்சங்கத்தில் எழுபெயரும், இடைச்சங்கத்தில் ஐவரும், மூன்றும் சங்கத்தில் மூவரும், கவியரங்கேற்றினதாக ஒரு சாசனத்தா லறிவிக்கப்பட்டிருக்கிறது.

சங்கத்துள் அரங்கேற்றியவற்றுள் திருக்குறளே கடைசியாம். சுமார் 2000 வருஷங்களுக்கு முன்பு அதாவது உக்கிரப் பெருவழுதி காலத்தில் சங்கம் முடிய ஹேதுவாயிற்று. அதற்குக் காரணம்: திருக்குறள் இயற்றிய திருவள்ளுவ நாயனர் ஜாதியில் வள்ளுவராகையால் அப்படிப்பட்டகீழ் ஜாதியான் இயற்றிய திருக்குறளைச் சங்கப்பலகையின்மீதேற்றியது குற்றமெனக் கொண்ட அக்காலத்துப் பிராமணருக்குள் தூரபிமானம் பிறந்து இத்தமிழ்ச் சங்கத்தையும் அச் சங்கப்பலகையையும் பாழ்த்துப்போகச் செய்துவிட்டனரென்று Doctor Colledwell சாஸ்திரி பார்தன் சரித்திரத்தில் சொல்லியிருக்கிறுர். அதன்பின் 200 வருஷங்கள் வரையில் சேர சோழ பாண்டியர் காலத்தில் அதிவீரராமன், ஔவை, புகழேந்தி, ஒட்டக்கூத்தர், கபிலர், கம்பர், அம்பிகாபதி, தமிழ் தண்டி, வில்லிபுத்தூரார் முதலான வித்துவசிகாமணிகள் கிரந்தங்களை இயற்றிப் புகழ்பெற்று வந்தாலும், பராக்கிரம பாண்டியன் காலத்தில் மகம்மதியர்கள் பாண்டியநாட்டில் பிரவேசித்துப் பட்டணத்தைப் பாழாக்கி நூல்களை நாசமாக்கி விட்டார்கள். அதனல் அனேக அருமையான நூல்கள் மறைந்துவிடவே, அமிழ்தினுஞ் சுவையுடைய தமிழ்ப் பாஷையின் பெருமை குலைந்து, அது ஸம்ஸ்கிருதாதி மற்றப் பாஷைகளில் சிறந்ததல்லவென்று சொல்லவும், அதில் ஆத்மா முதலான பதங்களுக்கு வார்த்தைக ளுண்டோ வென்று சந்தேகிக்கும்படியான நிலைமைக்கும் வந்துவிட்டது. அந்தோ பாருங்கள்! தமிழ் என்னும் பதத்திற்கு இனிமை என்றும், அதாவது இது எல்லா பாஷைகளைவிட இனிமையானதாகவும் சங்கிரகமான பாஷை என்றும், எ-ஒ என்றசில எழுத்துக்களை ஸம்ஸ்கிருதாந்திராதி பாஷைகளுக்கு

தானங்கொடுத்த பாஷை என்றும், லௌகீக வைதீக வாகட ஜோஸ்ய முதலான பலவித விஷயங்களைத் தக்கபடி எழுதிக்காட்டப் பொருந்திய பாஷை என்றும், ஸமஸ்கிருத பாஷையில் இல்லாத மிளகாய் முதலான புராதன பதங்களையும், எழுவாய் பயனிலைகள் இன்னின்னவிடத்திலிருக்க வேண்டுமென்ற விதிநிலை வாக்கியாலங்காரத்தையும், வடமொழியில் இல்லாத வாகடம் ஜோஸ்ய முதலான சாஸ்திரங்களை ஏராளமாக உடைய ஓர் சிறந்த பாஷை என்றும், பல பண்டிதர்களால் கேட்டிருக்கின்றனம். மேலும், "தோற்பையுள் நின்று தொழிலறச்செய்தூட்டுங் கூத்தன் புறப்பட்டக்கால்" என்னும் வாக்கியத்தில் கண்ட கூத்தன் என்பதும், 'உடல் பொருள் ஆவியெல்லா முன் வசமாக்கிக்கொண்டு' என்னும் வாக்கியத்தில் காணும் ஆவி என்னும் பதமும், இப்படியே சமயோசிதமாக அனேக பதங்கள் ஆத்மாவைக் குறிக்கிறதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். இம்மட்டோ! சங்கமேறிய அனேக நூல்களில் பாஷைக்கிருக்கவேண்டிய சகல அங்கங்களும் நிறைந்திருந்தன வென்பதற்கு இப்போது கும்பகோணம் பண்டிதர் ஸ்ரீலஸ்ரீ சாமிநாதய்யரவர்களுடைய பெருமுயற்சிகளினுல் அத்திபூத்ததுபோல அபூர்வமாகக் கிடைக்கப்பெறறு வெளிக்கு வரும் சில புராதன நூல்களால் பிரத்தியக்ஷமாகின்றன.

மகமதியர் இந்நாட்டில் குடிகொள்ளவே, தமிழ் மாது தலைத்தோங்க வகைபற்றுத் தவிக்க, பாண்டி யராஜ்ஜியம் பாழ்த்துப்போக நேரிடுகையில், விசுவநாத நாயடு-திருமலை நாயடு முதலான இந்து மதஸ்தர்களுடைய சமஸ்தானம் மதுரையில் ஸ்தாபிக்கப்பட்டாலும், அந்த நாயடுமார்கள் அப்போது அடிக்கடி அவர்களைத் தாக்கவரும் அயலரசர்களிடம் போர்புரிந்து ஓட்டவும், மிச்சமாகும் காசையுங்காலத்தையும் கோயில் கோபுரம் மண்டபம் மாளிகைகளைக் கட்டுவதிலும் போக்கிவந்தார்களேயொழிய அந்நிய மதஸ்தரான சமணர்களுக்கிருந்த அபிமானமாவது தமிழினிடம் காட்டி வந்ததாகச் சொல்லும் சரித்திரம் அகப்படவில்லை. பிறகு நாயடு ஸமஸ்தானமும் மகமதியர் ஸமஸ்தானமுமாறி ஆங்கிலேய சமஸ்தானம் ஸ்தாபிக்கப்பட அவர்கள் ஆங்கிலேய பாஷையை அதிகமாகப் பரப்ப ஆரம்பித்தார்கள். ஆங்கிலேய பாஷையைக் கற்பவருக்குக் "கணபதி பூஜை கைமேல் பலன்" என்னும் பழமொழியின்படி முதலில் உணவுக்கும்

உடுப்புக்கும் உல்லாசத்துக்கும் வேண்டிய உத்தியோகம் கிடைத்து வருவதால், ஏற்கெனவே ஏழைகளான சுதேசிகள் வடமொழியை வாடவிட்டும் தென்மொழியைத் தவிக்கவிட்டும் எல்லா ஜாதியாரும் எல்லா மதஸ்தரும் ஆங்கிலேய பாஷையையே ஆபரணமாகக்கொண்டு ஆண் பெண் மக்களனைவரும் அநுஷ்டிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அதற்கொரு வேடிக்கையான சம்பவத்தைக் கேளுங்கள்! இந்தப் பாடசாலையைக் கூட்டும் ஜாடுமாலிப் பெண்ணும் நேற்று ஒருவரைப் பார்த்து, "ஐயா! காப்பி சாப்பிடுகிற டைமாச்சுதே, மீட்டிங்குக்குப் போகவில்லையா?" என்றாள். இதில் எத்தனை ஆங்கிலேய பதங்களும் எத்தனைத் தமிழ்ப் பதங்களும் கலந்திருக்கின்றன பாருங்கள்! ஜாடுமாலி பாஷையே இப்படியானால் இனி தலைமக்கள் பாஷை எப்படியிருக்கும்? இப்படிச் சொல்லியதனால் ஆங்கிலேய பாஷையை இகழ்ந்து பேசுவதாகக் கொள்ளவேண்டாம்.

ஆங்கிலேய பாஷையோ இப் பிரபஞ்சத்தில் பல பக்கங்களிலும் பிரபலமாக இருக்கும் ஒரு பெரிய பாஷை. இப்போது அந்தப் பாஷையில் எழுதியிருக்கும் சரித்திரங்கள், சாஸ்திரங்கள், தத்துவங்கள் அநந்தம். அவைகள் ஒரு புருஷ ஆயுளில் படிக்க முடியா. அது அப்படி ஆனதற்கு ஆங்கிலேயருடைய தேசாபிமானமும் பாஷாபிமானமுமே காரணமாம்.

நாமோ நமது தாயாகிய தமிழை அசட்டை செய்துவிடவே, ஆங்கிலேயரும் அப்பாஷை விருத்தியில் அசிரத்தையாகிவிட்டார்கள். திருஷ்டாந்தமாக, இப்போது பரீக்ஷைகளுக்குத் தயார் செய்யும் கேள்விப்பத்திரிகைகளில் ஆங்கிலேய பாஷையில் எத்தனைப் பத்திரிகைகள் தயாராகின்றன பாருங்கள்! மேலும், ஆங்கிலேய பாஷையைப் போதிக்கும் ஆங்கிலேய வாத்தியாருடைய சம்பளமென்ன? தமிழைப் போதிக்கும் பண்டிதர்களின் சம்பளமென்ன! கோயமுத்தூர் காலேஜ் கமிட்டியில் நான் ஒரு மெம்பர். நான் மெம்பரான பிறகு நானறிந்த ஆங்கிலேய உபாத்தியாயர்கள் அக்கல்லூரியில் மாறினார்கள். அப்படி மாறி மாறி வந்தவர்களுக்கு மாதம் 1-க்கு 200,300,400,500 ரூபாய் சம்பளமும், அந்தக் கலாசாலையில் தமிழைப் போதிக்கும் முனிஷிகளுக்கு 30,35 ரூபாய்க்குமேல் சம்பளம் கிடைப்பதில்லை. ஆகவே இந்தச் சொற்ப சம்பளத்திலிருக்கும் உபாத்தியாய

ருடைய வார்த்தைகளை அநேக வித்தியார்த்திகள் சட்டை செய்யாமலும், (டெக்ஸ்டு புக்) பாட புத்தகங்களை வாங்கி வாசிக்காமலும், மற்றப்படி மொழிபெயர்ப்பு முதலான விஷயங்களில் கேட்கப்படும் சுலபமான கேள்விகளினால் மார்க்குகளைப் பெற்றுப் பரீக்ஷையில் தேறி, வீட்டிலும் வெளியிலும் பெரும்பாலும் ஆங்கிலேய பதங்களை வழங்கி வர, அவைகளைக் கேட்கும் வீட்டுப்பெண்களும், அவர்களைப் பார்த்து ஜாடுமாலி முதலானவர்களும் அவைகளைப்போல் வழக்கமாக்கிக் கொள்ளுகிறார்கள். இத்தியாதி கஷ்டங்களைக் கருதியே "அடகெடுவாய் பலதொழிலு மிருக்கக் கல்வி அதிகமென்று கற்றுவிட்டோ மறிவில்லாமல்" என்று இப்போது நமது பாண்டித்துரை அவர்கள் சொன்ன பாட்டைப் புலவர் ஒருவர் பாட நேர்ந்தது.

"மூச்சு விடுமுன்னே முந்நூறு நானூறும்
ஆச்சு தென்றால் ஆயிரம்பாட் டர்காதா
இம்மென்னு முன்னே இருநூறு முன்னூறு
அம்மென்றால் ஆயிரம்பாட் டாகாதா."

என்று பாடிய காளமேகப்புலவரைப் போன்ற கவிகளெல்லாம் மறைந்துவிட்டனர். இடையில் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையும், இராமலிங்கம்பிள்ளையும், ஆறுமுகநாவலரும் தோன்றித் தமிழ்ப்பாஷையை விருத்தியாக்கப் பிரயத்தனப் பட்டாலும் இவர்களில் ஒருவர் பெரும்பாலும் புராணங்களைப் பாடிமுடிப்பதிலும், ஒருவர் வைதிகமான பாடல்களைப் பாடுவதிலும், ஒருவர் வைதீக ஆகமாதி கிரந்தங்களை வழுவறத் திருத்தி அருத்தத்துடன் பதிப்பிப்பதிலும் காலத்தைக் கழித்தார்களேயொழிய, வெப்ஸ்டர், ஆக்லிவிர் முதலானவர்களைப்போல் பெரிய அகராதிகள் முதலான விஷய விவேகசாகராதி கிரந்தங்களை எழுதிப் பொதுஜன சமூஹத்தாருக்குத் தக்கபடி உதவினார்களில்லை. கடைசியாக இக்காலத்திலோ தமிழினால் திரவிய உதவியும் அந்தஸ்தும் கிடைப்பதில்லை என்று கண்டு, அநேகர் அகராதிப்பண்டிதர்களாகி விட்டார்கள். அந்தோ பாருங்கள்! நமது தமிழ்ப் பாஷைக்கு வந்த கஷ்டம். கோயமுத்தூர் சிவன்பிள்ளையைப் போன்ற சிலரிடத்தில் சில புராதன கிரந்தங்களிருக்கினும் அவைகளைச் செல்லுக்குக் கொடுக்க விரும்புகிறார்களேயொழிய பிறர்பார்த்துப் படிக்க வெளிவிடேனென்கிறார்கள். புராதன தமிழ் வித்துவான்களுடைய நூல்களையும் சரித்

திரங்களையும் படித்தாகிலும் சந்தோஷ மடையலாமெனில், இதுவிஷயமாகப் பண்டிதர் சாமிநாதய்யர் ஜில்லா ஜில்லா வாகத் திரிந்து பகீரதன் கங்கையைத் திருப்பப்பட்ட பா டெல்லாம் பட்டாலும் உண்மையான கிரந்தங்களும் சரித்திர சங்கதிகளும் கிட்டுவது கஷ்டமாக இருக்கின்றது. இதைப்பற்றி அப்பண்டிதர் அடிக்கடி சுதேசமித்திரனில் எழுதிவருவதைப் படித்துவருகிறோமல்லவா! இனி எத்தனைக்காலந்தான் இப்பண்டிதர் பாடுபடக்கூடும்! தேககஷ்டத்தோடு பணத்தையும் செலவழிக்கவேண்டுமே? இது விஷயத்தில் பணத்தைச் செலவழிக்கும் பிரபுக்களும் இராஜர்களும் இக்காலத்திலில்லை என்று நமது சபாநாயகர் முன் சொன்னது நிஜமே ஆயினும், இது விஷயத்தைச் சோதிக்கும்படி சேரநாட்டுக்குப் போனேன். அங்கு தமிழ்ப்பாஷாபிவிருத்திக்குப் பொருள் செலவழிக்கும் இராஜனில்லாததைக் கண்டு தயங்கினேன். பிறகு இது விஷயமாகச் சோழநாட்டுக் கேகினேன். அங்கும் அப்படிப்பட்ட அரசரைக் கண்டிலேன். கடைசியாக இப்போது புராதனமான பாண்டியன் நாட்டிற்கு வந்தேன். இங்கு இன்று இந்தச் சங்கத்துக்குச் சபாநாயக ரத்தினமாகப் பிரகாசிக்கும் பாண்டித்துரைத் தேவருடைய தேசாபிமானத்தையும் தமிழ்ப் பாஷாபிமானத்தையும் காண இவர்தான் முன் பாண்டிய நாட்டில் முச்சங்களைப் பரிபாலித்து வந்த பாண்டியர்கள் யாவரும் கூடி ஓர் அவதாரமாக வந்ததாகக் கண்டு கொண்டானந்திக்கின்றேன். ஆம், அதற்குச் சந்தேகமில்லை. இராமநாதபுர சேதுபதி ஸமஸ்தானத்தார் தொன்றுதொட்டு தமிழ்ப் பாஷையையும் சைவசித்தாந்தப்பயிரையும் தழைத்தோங்கச் செய்து மங்காத புகழைப் பெற்றவர்களன்றோ?

நமது சபாநாயகருடைய உத்தம பிதாவான ஸ்ரீமான் பொன்னுசாமித் தேவர் சமுகத்தில் ஸ்ரீமான் தியாகராய செட்டியார் மாம்பழக்கவி முதலானவர்கள் வந்து பாடியும் சமுக வித்துவான்களோடு தருக்கமாடியும் பிரபல பிருதுகளைப் பெற்றார்க ளல்லவா? ஸ்ரீமான் பொன்னுசாமித் தேவரே சமுத்திர வர்ணனை முதலான சிறந்த கிரந்தங்களை இயற்றி இயலிசை நாடகப் புலவர் சிகாமணியாய் விளங்கவில்லையா! அவர் காலத்தில் வேத சமாஜத்தை ஸ்தாபித்த மிஸ்டர் ராஜகோபாலாசாரியார் பிரசுரித்த தத்துவ போதினி பத்திரிகைக்கு அச்சியந்திரம் வாங்க 1000

ரூபாய் கொடுத்துதவ வில்லையா? இவ்வளவேன்? இப்போது இருக்கும் நமது சிரேஷ்ட சேதுபதியவர்கள் தமிழ் வித்துவான்களுக்கும் தமிழ் கிரந்தங்களுக்கும் தமிழ்ப் பத்திராதிபர்களுக்கும் வாரி வாரிக்கொடுத்த திரவியத்துக்குக் கணக்குண்டா? தமிழ் என்னும் பூங்கொடியைத் தாங்கும் கற்பக விருக்ஷத்தைப்போன்ற அந்தச் சேதுபதி வள்ளலார் இன்று இங்கு இல்லாதது நமது துர்ப்பாக்கியமே. அவரைக் காண எவ்வளவோ ஆத்திரத்துடன் வந்தவர்கள் அவரைக் காணுமல் போதல் கண்களின் துர்ப்பாக்கியமே. அவரது அருமையான உபந்நியாசத்தைக் கேளாது திரும்புவது காதுகளின் துர்ப்பாக்கியமே! ஆயினும் நாமிப்போதிருக்கும் இப்பாடசாலையும் வித்துவான்களும் அந்த வள்ளலுடைய தருமகுண கைங்கரியங்களைப்பற்றிப் பிரத்தியக்ஷமாகக் கோஷிக்கையில் இம் மதுரையில் மறுபடியும் நான்காம் தமிழ்ச்சங்கம் ஸ்தாபிக்கத் தடை என்ன இருக்கிறது.

அன்பர்களே! இவ்வுலகில் ஒரு கை தட்டினல் ஓசை உண்டாகாது. இரு கை தட்டவேண்டும். ஆகவே, நமது பாண்டித்துரையவர்களும் சேதுபதி வள்ளலும் இது விஷயத்தில் கிருபாநோக்கங் கொண்டால் கூடிய சீக்கிரத்தில் சங்கம் ஸ்தாபிக்கப்படும். அதற்குப் பிரதிவருஷம் ஆவணி மாதம் சரஸ்வதி பூஜை காலத்தில் தமிழ் நாடுகளில் பரந்திருக்கும் பண்டிதர்களையும் கிரந்தங்களையும் பிரதிநிதிகளாகத் தருவித்தும், தக்க பண்டிதர்களால் பரீக்ஷித்தும், பஹுமானங்களையும் பட்டபிருதுக்களையுங் கொடுத்தும், அவர்களியற்றிய கிரந்தங்களைப் பதிப்பித்துப் பிரபலமாக்கியும், கும்பகோணம் பண்டிதர் ஸ்ரீலஸ்ரீ சாமிநாதய்ய ரவர்களையும் வேறு சில தக்க பண்டிதர்களையும் தெரிந்தெடுத்துத் தமிழ்நாட்டில் மறைந்துகிடக்கும் புராதன கிரந்தங்களையும், பாவலர் சாத்திரங்களையும் தேடிக் கொண்டுவரச்செய்து அவைகளைப் பதிப்பித்தும், சென்னைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீலஸ்ரீ சூரிய நாராயண சாஸ்திரிகளையும் வேறு தக்கவர் சிலரையுங் கொண்டு வடமொழி ஆங்கிலோ பாஷைகளிலுள்ள நவநவமான நாடகங்களைத் தமிழில் மொழி பெயர்ப்பித்துப் பதிப்பித்தும், டிஸ்டிரிக்டு முன்சீப் பண்டிதர் மிஸ்டர் நல்லசாமி பிள்ளையையும் அவருக்குத் துணையாகச் சிலரையும் நியமித்துச் சைவசித்தாந்தாதி கிரந்தங்களை எழு

தச்செய்துபதிப்பித்தும், மிஸ்டர் ஜி. சுப்பிரமணியம் ஐயரை யும் அவருக்கு உதவியாகச் சிலரையும் சேர்த்து இராஜ்ஜிய விஷயமாகவும் அர்த்த சாஸ்திரம் கைத்தொழில் சாஸ்திராதி களை ஆங்கிலேய பாஷையிலிருந்து மொழி பெயர்ப்பித் துப் பதிப்பித்தும், பி-ஏ., எம்-ஏ. பட்டமும் பெற்றுத் தமிழ்ப்பாஷையையும் நன்குணர்ந்த சுதேச வித்துவான்க ளைக்கொண்டு டிண்டல், ஸ்பென்ஸர், ஹக்ஸ்லி, லார்ட் கெல் வின், மில்டன், போஸ் முதலானவர்களுடைய தத்துவ சாஸ்திரங்களைத் தமிழ்ப்படுத்திப் பதிப்பித்தும், இதே மா திரியாக ஆங்கிலேய பாஷையிலிருக்கும் பூகோள ககோள பவுதிகாதி சாஸ்திரங்களைத் தமிழில் பதிப்பித்தும், ஆகம வேத புராண இதிகாசங்களை அனைவரும் இலேசில் அறியும் படியான அகராதிகளையும், வெப்ஸ்டரைப்போன்ற பொது அகராதிகளையும் தமிழில் பதிப்பித்தும் வந்தால் சேதுபதி யவர்களுடையவும், பாண்டித்துரையவர்களுடையவும் புகழ் இவ்வுலகம் உள்ளநாள் உள்ளவரையில் மங்காமல் மகிமை யைப்பெறுமென்பதில் சந்தேகமுண்டோ? இச்சங்கத்தினால் நமது தேசத்துக்குண்டாகும் க்ஷேமத்துக்குக் கங்குகரை யுண்டோ? பிரபுக்களே! இது பெருத்த வேலைதான்! ஆனால், "ஆளுக்கொருபிடி ஆனைக்கு ஒரு சுமை" என்னும் பழ மொழியைப்போல இத் தென்னாட்டில் தமிழ் மாதினிடம் அபிமானம்கொண்ட ஜமீன்தார்களும், மிராசுதாரர்களும், சவுகார்களும், செட்டிமார்களும், வர்த்தகர்களும், மனம் வைத்தால் வெகு சீக்கிரத்தில் ஸ்தாபிக்கலாகும். ஆகவே, பிரபுக்களே! நான் இதுகாறும் சொன்னதை ஒடுங்கிய மன தோடல்ல, விரிந்த சுபுத்தியால் யோசனை செய்து பாருங் கள்! வேதநாயகன் வித்தக வார்த்தைகளின்படி 'நம்மைப் பெற்றதும் தமிழ், வளர்த்ததும் தமிழ், நம்மைத் தாலாட் டித் தூங்கவைத்ததும் தமிழ், நம் மழலைச்சொல்லால் பெற் றோரை மகிழச் செய்ததும் தமிழ், நாம் பிறந்தபோது முந்தி ஆரம்பித்ததும் தமிழ், நமது பெற்றோர் பாலோடு புகட்டினதும் தமிழ், பெற்றோரும் பெரியோரும் ஆரிய ரும் ஆசாரியரும் ஆதியில் உபதேசித்ததும் தமிழ் அநேக நூற்றாண்டுகளாக நமது ஆதி தாய்தந்தைகள் பேசினதும் தமிழ், எழுதியதும் தமிழ், இப்போது நம் பெற்றோரும் பிள்ளைகளும் பேசுவதும் தமிழ், நமது வீட்டுப்பாஷையும் நாட்டுப்பாஷையும் தமிழ், நமது இகபரசாதனத்துக்கு இன்றியமையாதிருப்பதும் தமிழ், அகத்தியர் நாவிலே

பிறந்து, ஆரியத்தின் மடியில் வளர்ந்து, ஆந்திர கன்னடாதி பாஷைகளோடு கூடிக் குலாவி, சங்கப்புலவர் நாவிலே சஞ்சரித்து, வித்துவான்களுடைய வாக்கிலே விளையாடி, திராவிட தேசத்தில் சக்கராதி பத்தியஞ்செய்து, சேதுபதியவர்களுடைய குன்றாக்கொடையைக் கொடிகட்டிப் பரவச்செய்து, பாண்டித்துரை யவர்களுடைய பெருமையைப் பன்னூற்றிரட்டினால் பாரெங்கும் புகச்செய்து, கடைசியாக இந்த மதுராபுரியை மண்டலமெங்கும் மேன்மைபடச்செய்ய மதுராபுரியில் நான்காவது தமிழ்ச் சங்கத்தை ஸ்தாபித்து தமிழ்க்கொடியைத் தழைத்தோங்கச்செய்ய வாருங்கள்! வாருங்கள்!! தமிழ்த்தாயே உனக்குமங்கள முண்டாவதாக!" என்று சொல்லி முடித்தனர்.

பிறகு, இந்தத் தமிழ்ச் சங்க விஷயமாக (சே. ப. நரசிம்மலு நாயுடு) செய்த உபந்நியாசத்தை அச்சபையிலிருந்து கேட்ட அநேக தமிழ் அபிமானிகளும் முக்கியமாகப் பிரபல வித்வசிகாமணியும், சிறந்த தேசாபிமானியும், பாலவநத்தம் ஜமீன்தாரருமாகிய ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவரவர்கள் ஸ்ரீ சேதுபதி முதலானவர்களுடைய சகாயத்தைக் கொண்டு மறுபடியும் 1901ஞு செப்டம்பர்மீ 14உ க்குச் சரியான பிலவஞு ஆவணிமீ 31உ பானுவாரம்-சித்திரா நக்ஷத்திரங்கூடிய சுபதினம் பகல் $1\frac{1}{2}$ மணிக்குமேல் $2\frac{3}{4}$ மணிக்குள் தனுர் லக்கினத்தில், மதுரையில் நான்காவது தமிழ்ச் சங்கத்தை ஸ்தாபித்து அதற்காக அல்லும் பகலும் உழைத்துவந்தார்.

## இந்த மதுரை நான்காம் தமிழ்ச்சங்கத்திற்கு அப்போது சேர்ந்த தமிழ் வித்வான்கள்.

---

ம-௱-௱-ஸ்ரீ ப. பாண்டித்துரைத் தேவர் அவர்கள்—
பாலவனத்தம் ஜமீன்தாரர், மதுரைத் தமிழ்ச் சங்கத்து அக்ராசனாதிபதி.

,, உ. வே. சாமிநாதய்யர் அவர்கள்—தமிழ்ப் பண்டிதர், பிரசிடென்சி காலேஜ், சென்னை.

,, ரா. இராகவையங்கார் அவர்கள்—
ஷை சமஸ்தான வித்வான், பிரகடனாசிரியர், தமிழ்ச்சங்கம்.

மஹா-ா-ா-ஸ்ரீ வை. மு. சடகோப ராமாநுஜாசாரியரவர்கள்,
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்,
சர்ச்சு மிஷன் காலேஜ், சென்னை.

,, திருநாராயணய்யங்கார் அவர்கள்—
தலைமை உபாத்தியாயர், சேதுபதி
கலாசாலை, தமிழ்ச்சங்கம்.

,, ஸ்ரீ. அரங்கசாமி அய்யங்கார் அவர்கள்—
இராமநாதபுரம்.

,, சேற்றூர். சுப்பிமணியக்கவிராயர் அவர்கள்—
திருவாவடுதுறை ஆதீன வித்வான்,
நூற்பரிசோதகர், தமிழ்ச்சங்கம்.

,, அ. சண்முகம்பிள்ளை அவர்கள்—
உபாத்தியாயர், சேதுபதி கலாசாலை,
தமிழ்ச்சங்கம்.

,, அம்பலவாண நாவலரவர்கள்—திருநெல்வேலி.

,, அஷ்டாவதானம் கலியாணசுந்தர முதலியார்
அவர்கள்—சென்னை.

,, பு. மா. ஸ்ரீநிவாஸாசாரியர் அவர்கள்—
தமிழ்ப்பண்டிதர், பிரஸிடென்ஸி காலேஜ்,
சென்னை.

,, திருமயிலை. ஷண்முகம்பிள்ளை அவர்கள்—
தமிழ்ப்பண்டிதர், செண்ட் தோம் காலேஜ்,
சென்னை.

,, அ. நாராயணசாமி அய்யங்கார் அவர்கள்—
தமிழ்ப்பண்டிதர், ஹைஸ்கூல், கும்பகோணம்.

,, எஸ். பால்வண்ண முதலியார் அவர்கள்—
காரியதரிசி, சரஸ்வதிவிலாச புத்தகசாலை,
திருநெல்வேலி.

,, தி. ப. சிவராமபிள்ளை அவர்கள்—தமிழ்ப்
பண்டிதர், இந்துகாலேஜ், திருநெல்வேலி.

,, வா. குலாங்காதிறு நாவலர் அவர்கள்—நாகூர்.

,, தி. கோ. நாராயணசாமிபிள்ளை அவர்கள்—
தமிழ்ப்பண்டிதர், பெங்களூர்.

ம-ா-ா-ஸ்ரீ ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை அவர்கள்—
யாழ்ப்பாணம்.

,, அ. குமாரசாமிபிள்ளை அவர்கள்—சுன்னுகம்.

,, செந்திநாதய்யர் அவர்கள்—திருப்பரங்குன்றம்.

---

## 2. ஆங்கிலத் தமிழ் வித்துவான்கள்.

ம-ா-ா-ஸ்ரீ வி. கனகசபைபிள்ளை அவர்சள் பி.எ., பி. எல்.,
Postal Supt., MadrasDivison.

,, திவான் பஹதூர் வி. கிருஷ்ணமாசாரியர்
அவர்கள்—Curator of Books, Madras.

,, தண்டலம் பாலசுந்தர முதலியார் அவர்கள்—
எம். எ.
Tamil Translator to the Govt., Madras.

,, எஸ். இராதாகிருஷ்ணையர் அவர்கள், பி. எ.,
Principal, Maharajah's College, Pudukotta.

,, ஜி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்—
Editor, "Swadesamitran", Madras.

,, டி. இராமகிருஷ்ண பிள்ளை அவர்கள், பி. எ.,
Interpreter, H. C., Madras.

,, வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்
அவர்கள், பி. எ.,
Tamil Pandit, Christian College, Madras.

,, கே. சுந்தரராமய்யர் அவர்கள், எம். எ.,—
Lecturer, Govt. College, Kumbakonam.

,, ஜே. எம். நல்லசாமிபிள்ளை அவர்கள்—
பி. எ., பி. எல்.,—
District Munsiff, Nandeyal.

,, எஸ். நாராயணசாமி அய்யர் அவர்கள்—
Lecturer, Govt. College, Kumbakonam.

,, பி. குருராவ் அவர்கள், எம். எ., எல். டி.,
S. P. G. College, Trichy.

,, கே. ஜி. சேஷய்யர் அவர்கள், பி. எ., பி. எல்.,
Professor, Law College, Trevandram.

ம-ா-ா-ஸ்ரீ எஸ். இராமசாமி அய்யர் அவர்கள்—
Munsiff, Travancore Samastanam.

" எம். முத்துராமலிங்கம் பிள்ளை அவர்கள், பி. ஏ.,
H. T. Pandit, H. H. the Maharajah's College, Trevandram.

" பி. எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள்—
Madras.

" எஸ். வி. கண்ணபிரான் பிள்ளையவர்கள், பி. ஏ.,
Sub-Magistrate, Conjeevaram.

" சேலம், பகடால. நரசிம்மலு நாயடுகாரு—
Editor, Kala Nidhi, Coimbatore.

" பி. நாராயண அய்யர் அவர்கள், பி. ஏ., பி. எல்.,
High Court Vakil, Madras.

" பி. எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள்—
1st Grade Pleader, Madras.

" எஸ். சாமிநாதய்யர் அவர்கள்—
Pleader, Ramnad.

" என். வி. சுந்தரராஜ அய்யர் அவர்கள்—
பி. ஏ., எல். டி.
Teacher, Setupathy High School, Madura.

---

## 3. ஸம்ஸ்கிருத, தமிழ் வித்வான்கள்.

ம-ா-ா-ஸ்ரீ பெ. அரங்காசாரியார் அவர்கள்—
மகாமகோபாத்தியாயர், கும்பகோணம்.

" தி. ஈ. ஸ்ரீனிவாஸாசாரியார் அவர்கள்—
ஸம்ஸ்கிருதபண்டிதர், கவர்மெண்டு காலேஜ், கும்பகோணம்.

" வி. ஸ்ரீனிவாஸாசாரியார் அவர்கள்—
ஸம்ஸ்கிருதபண்டிதர், சேதுபதி கலாசாலை, மதுரை.

" வீராசாமி அய்யங்கார் அவர்கள்—
ஸம்ஸ்கிருத வியாகரண வித்வான், எட்டயபுரம்.

ம-ா-ா-ஸ்ரீ சந்திரசேகர தீக்ஷிதர் அவர்கள்—
ஸம்ஸ்கிருத பண்டிதர், நேட்டிவ் காலேஜ்,
மதுரை.

---

## 4. ஆங்கில, ஸமஸ்கிருத வித்வான்கள்.

ம-ா-ா-ஸ்ரீ பண்டிதர் ச. ம. நடேச சாஸ்திரியார்
அவர்கள், பி. ஏ.

,, ஆர். கிருஷ்ணமாசாரியார் அவர்கள், எம். ஏ.,
ஸம்ஸ்கிருத பாடசாலை இன்ஸ்பெக்டர், சென்னை.

---

இப்படி ஸ்தாபித்த
### நான்காம் தமிழ்ச்சங்கத்தின்
உத்தேசங்களாவன:—

(1) தமிழ்க்கலாசாலை உளவாக்குதலானும், (2) இறவாதுள்ள தமிள் ஏடுகள் பலவற்றையும்-அச்சிட்ட தமிழ்நூல்கள் அனைத்தையும் தேடிப்பெற்றுப் பிறருக்குப் பயன்படுமாறு ஒருவழித் தொகுத்துவைத்தலானும், (3) வெளிவராத அரிய தமிழ் நூல்களைப் பரிசோதித்து அச்சிட்டுப் பரவச்செய்தலானும், (4) வடமொழி ஆங்கிலமுதலிய பிறபாஷைக்கண்ணுள்ள அரிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்துப் பதிப்பித்தலானும், (5) தமிழ்க்கல்வி அபிவிர்த்தியைப்பற்றிய செந்தமிழ்ப் பத்திரிகை வெளியிடலானும், (6) தமிழ்ப்பரிக்ஷைபலவைத்து உயர்தரத்தே தேர்ந்தோர்க்குப் பட்டம் பரிசுமுதலிய அளித்தலானும், (7) தமிழறிஞரால் உபந்நியாசங்கள் புரிவித்தலானும், (8) இக்காலைத் தமிழறிவு மிக்கார் பலரையும் ஒருங்குக் கூட்டித் தமிழாராய்தலானும், (9) வேண்டும் நூல், உரை முதலியன செய்வித்தலானும், (10) பிறர்செய்தநூல் உரை முதலியவற்றை அறங்கேற்றுவித்தலானும், தமிழ்ப் பாஷையை வளர்த்தளாகுமென்பதாம்.

இக் கருத்துக்களுக் கிணங்க இப்போது இராமநாதபுரம் ஸமஸ்தானம் ஸ்ரீமத் விஜயரகுநாத பாஸ்கர சேதுபதி ராஜரவர்கள் இச் சங்கத்துக்குப் பொருளுதவி புரிந்து என்றும் நிகழுமாறு தக்கசாசனமும் அளித்தபடியால்; (1) சேதுபதிச் செந்தமிழ்க் கலாசாலையை ஸ்தாபித்து, அக் கல்லூரியி லோதுவோருக்கு உண்டி, உடை முதலானவைக

ளைக் கொடுத்து, கல்விக் கற்பித்து வருகின்றனர். (2) பாண்டியன் புத்தகசாலை என்னும் பெயரால் பல்லோருக்கும் பெரும்பயன் படும்படி நூனிலைய வாசகச் சாலையும், (3) சங்கத்தின் பத்திரிகை புத்தகமுதலியன அச்சிடத் தமிழ்ச் சங்க முத்திரா சாலையும் (4) சங்கத்தின் சங்கதிகளை வெளியாக்கச் செந்தமிழ்ப் பத்திரிகையும், (5) ஆங்கில கலா சாலைகளிற் படிக்கும் தமிழ் மாணாக்கர்களுக்குத் தமிழில் உற்சாகமுண்டாகும்படித் தமிழ் பரீக்ஷைப் பத்திரங்களால் பரிக்ஷித்து பரிசளித்தும், (6) பல்விடங்களில் பரக்க கிடக்கும் அச்சிடாத தமிழ்நூல்களைத் தேடிக்கொண்டுவர, காரியஸ்தர்களையும்—இத்தமிழ்நாட்டு அறிஞர் பலரை வித்வத் அங்கத்தினராகவேண்டி அவர்களை மதுரைச் சங்கத்திற்கு தருவித்து உபந்நியாசங்கள்செய்ய கல்விக்கழகமும் ஸ்தாபித்து, அதிகசிரத்தையாக உழைத்துவருகையில் இச்சங்கத்திற்குப் பிராணாதாரமாக இருந்து இரவும் பகலும் அதிக சிரத்தையோடு உழைத்துவந்த உண்மையான தேசாபிமானியும் பாஷாபிமானியுமாகிய சங்கத்தின் தலைவர் ஸ்ரீ பாண்டித்துரைத் தேவரவர்கள் திடீரென வியாதி கண்டு 1911௵ பரமபதமடைய, தமிழுலகமே தத்தளிக்கச் சம்பவித்தது. ஆயினும், அவருக்குப் பதிலாக ஆங்கிலம்-சம்ஸ்கிருதம்-தமிழ்ப்பாஷைகளில் சிறந்தவரான ஸ்ரீமான். பி. எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள் தலைவராக நியமிக்கப்பட்டு அவரும் இரண்டு௵ சிரத்தையாக உழைத்துவந்து பிரமாதீச௵ கார்த்திகை௴ 9௳ தேகவியோகமாய்விட, இனி இச்சங்கத்தைச் சிரத்தையாக யார்வந்து நடப்பிப்பார் என்று ஏங்கி நிற்கத் தென்னாட்டிற் பரம்பரை தமிழரசர் குடும்பத்திற் ஜனித்தவரும் இராமநாதபுர சமஸ்தானாதிபதியுமாகிய, ஸ்ரீமான் இராஜ ராஜேஸ்வர முத்துராமலிங்கசேதுபதி இராஜா அவர்கள் இச் சங்கத்தின் தலைவராகிக் காரியங்களைத் திருப்திகரமாக நடத்தி வருகிறதைக் கண்டு களிக்கிறோம். இவர் தலைமையின் கீழ்ச்சங்கத்தின் பதின்மூன்றாவது வருஷோற்சவத்தை தமது சமஸ்தான நகரத்தில் நடத்தி அவ்வுற்சவத்திற்குத் தேசாபிமான மதாபிமான பாஷாபிமானமுள்ள பிரபுவாகிய இலங்கையி லிருக்கும் கனம் இராமநாதன் அவர்களைத் தருவித்து சபா நாயகராக்கி அவ்வுற்சவத்தை வெகு கம்பீரமாகக் கொண்டாடினார்கள்.

பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் முதலான ஹிந்துக்க ளன்றியில் மகம்மதியர் கிறிஸ்தவர் முதலான அன்னியமதஸ்தர்களும் தமிழபிமானமுற்று இச்சங்கத்தின் அங்கத்தினராகச் சேர்ந்திருப்பது ஆனந்திக்கத்தக்கதே. இன்னும் அநேகர் சேரவேண்டுமென்று வேண்டுகின்றோம்.

## தமிழ்ச்சங்க கலாசாலை.

இந்தக் கலாசாலையில் போஷணை பெற்றுப் படிப்பவர் பதினறுபேர்கள். போஷணையின்றிப் படிப்பவர் இருவர். சென்றவாண்டுபோலவே இவ்வாண்டிலும் இக்கலாசாலை மாணவர்கள் சர்வகலாசாலையாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற 'வித்வான்' பரீக்ஷைக்குப் போகக் கருதினல் செளகரிய மிருக்கும் பொருட்டு அப்பரீக்ஷைக்கு வேண்டுமளவு ஆங்கிலமும், அப்பரீக்ஷைக்கும் தமிழ்க் கல்விக்கும் உபகாரமாக வேண்டுமளவு வடமொழியும் கற்பித்துவர இரண்டு உபாத்தியாயர்கள் வேலை பார்த்துவருகிறார்கள்.

## செந்தமிழ்ப் பத்திரிகை.

இச் சங்கத்தினின்றும் மாதந்தோறும் வெளியாகும் செந்தமிழ்ப் பத்திரிகை பதினென்றரை வருஷகாலமாகத் தமிழறிஞர் பலரால் எழுதப்படும் அரிய விஷயங்களால் தமிழகத்தை மகிழ்வூட்டி வருதல் பலருமறிந்ததே 'செந்தமிழ்' தொடங்கப்பெற்றது முதல் இதுவரை அச்சாகாத முப்பத்தாறு நூல்கள் இதன் வாயிலாகப் பத்திராதிபராலும், பிறராலும் வெளிவந்துள்ளன. இப்பத்திரிகைக்கு விஷயதானம் செய்துவரும் கிருப நேயர்களுக்கெல்லாம் காரிய நிர்வாக சபையார் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

---

இப்போது இத் தமிழ்ச் சங்கத்துடன் சேர்ந்திருக்கும்
## பாண்டியன் புத்தகசாலையில்
1913ஹு அறிக்கைப் பத்திரத்தின் பிரகாரம் அடியிற் கண்ட புத்தகங்க ளிருக்கின்றன.

சங்கம் நடைபெறும் மாளிகையில் அமைந்துள்ள இப் புத்தகசாலை, இவ்வருஷம் அடைந்திருக்கும் அபிவிருத்தி அடியில் வரும் விவரங்களால் விளங்கும்.

| | | |
|---|---|---|
| (1) தமிழ் அச்சுபுத்தகங்கள் | சென்ற ஆண்டில் | 2137 |
| | இவ்வாண்டில் | 49 |
| | ஆ மொத்தம் | 2186 |

| | | |
|---|---|---|
| (2) தமிழ் ஏட்டுப் பிரதிகள்— | | 718 |
| (3) கையெழுத்துப் பிரதிகள் | சென்ற ஆண்டில் | 123 |
| | இவ்வாண்டில் | 1 |
| | ஆ. மொத்தம் | 124 |
| (4) சம்ஸ்கிருத அச்சுப்புத்தகங்கள் | சென்றஆண்டில் | 448 |
| | இவ்வாண்டில் | 3 |
| | ஆ. மொத்தம் | 451 |
| (5) இங்கிலீஷ் அச்சுப்புத்தகங்கள் | சென்றஆண்டில் | 1683 |
| | இவ்வாண்டில் | 12 |
| | ஆ. மொத்தம் | 1695 |

ஆகமொத்தம் இப்புத்தகசாலையிலுள்ள பிரதிகள் 5174-ம் சேர்த்திருப்பதால் இவைகளை இலவசமாக யாவரும்போய்ப் படித்துத் தெளியலாம்.

இத் தமிழ்ச் சங்கத்தார் 1914ஆ மேமீ முதல் தேதி வரையில் அடியிற்கண்ட புத்தகங்களைப் பதிப்பித் திருக்கிறார்கள்.

## புத்தகங்களின் பெயர்.

1 ஞானமிர்தம்
2 சைவமஞ்சரி
3 யாப்பு அணியிலக்கணம்
4 வைத்திய சாரசங்கிரகம்
5 பன்னூற்றிரட்டு
6 வில்லி பாரதம்
7 தோத்திரத்திரட்டு
8 தமிழ்ச் சொல்லகராதி
1-ம் பாகம்
ஷை இரண்டாம் பாகம்
9 அபிதான சிந்தாமணி
10 சங்கப்புலவராற்றுப்படை
11 பன்னூற்றிரட்டு
(செலக்ஷன்)
12 ஐந்திணை ஐம்பது
13 இனியது நாற்பது
14 திருநூற்றந்தாதி
15 திணைமாலை நூற்றைம்பது
16 அநுமான விளக்கம்
17 அட்டாங்க யோகக்குறள்
18 பன்னிருபாட்டியல்
19 நான்மணிக்கடிகை
20 முத்தொள்ளாயிரச் செய்யுட்கள்
21 திருச்செந்திற்கலம்பகம்
22 திருவாரூருலா
23 சுகசந்தர்சன தீபிகை
24 இயற்கைப் பொருட் பாடம்
25 தேவையுலா
26 நரிவிருத்தம்
27 சிதம்பரப்பாட்டியல்
28 திருக்கலம்பகம்
29 திருப்பணிமாலை
30 சந்திராலோகம்
31 சோழவம்சசரித்திரம்

32 ஞானமிர்தக்கட்டளை
33 பாண்டியம்
34 மனீஷா பஞ்சகம்
35 வேளிர் வரலாறு
36 அகப்பொருள் விளக்கம்
37 திருமந்திரம் நூறு பாட்டுக்குரை
38 பாரதச்சுருக்க வசனம்
39 மணிமேகலை
40 நேமிநாதம்
41 சிவசாயரசாயன சுருக்கம்
42 தர்க்க பாஷை
43 சிவஞானபோதம்
44 கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை
45 சிவஞானசுவாமி ஷை
46 திருநீற்றுப்பதிகம்
47 விக்ரம சோழனுலா
48 குருமொழி வினாவிடை
49 திருத்தணிகைத் திருவிருத்தம்
50 உவமானசங்கிரகம்
51 ஜோதிமாலை தமிழ்நாவல்
52 இந்துமதி ஷை
53 செந்தமிழ்ப் பத்திரிகை

---

## தமிழ்ச்சங்கச் சட்டடத்திற்குப் பொருளுதவி செய்தும் வாக்களித்துமுள்ள கனவான்கள் பெயர் முதலியன.

(1) ம-ள-ா-ஸ்ரீ சாம. சிக. வைரவன் செட்டியார் அவர்கள், தேவகோட்டை ரூ. 2100

(2) ,, மெ. லெ. மெ. இராமநாதன் செட்டியார் அவர்கள், தேவகோட்டை. 1350

(3) ,, மெ. அரு. நா. இராமநாதன் செட்டியார் அவர்கள், தேவகோட்டை 1050

(4) ,, இராம. அரு. அரு. ராம. அருணாசலஞ் செட்டியார் அவர்கள் 1050

(5) ,, அரு. அரு. சோம. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் 1050

(6) ,, மெ. அரு. அரு. அருணாசலஞ்செட்டியார் அவர்கள் (எக்ஸிகியூட்டர்-வெங்கடாசலம் செட்டியார் அவர்கள்) 900

(7) ,, முத்து. கரு. வெ. அழகப்ப செட்டியார் அவர்கள், தேவகோட்டை 600

(8) ,, வீர. லெ. ராம. லெ. பெத்தபெருமாள் செட்டியார் அவர்கள் 600

(9) ம-ள-ள-ஸ்ரீ அள. சுப. பள. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள், தேவகோட்டை 350

(10) ,, மூத்து. க. மா. நடேசன் செட்டியார் அவர்கள், தேவகோட்டை 300

(11) ,, ராம. அரு. ராம. அருணசலம் செட்டியார் அவர்கள் 250

(12) ,, பள. சு. அரு. ச. அ. சபாபதி செட்டியார் அவர்கள், அண்ணாமலை செட்டியார் அவர்கள் 250

(13) ,, இ. ராம. இ. சு. பள. இன்னப்பசெட்டியார், சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் 210

(14) ,, பள. ப. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் 200

(15) ,, ரு. ம. கரு. கரு. 190

(16) ,, லெ. அரு. ராம. இராமநாதன் செட்டியார் அவர்கள் 150

(17) ,, பள. அ. ராம. க. வெங்கடாசலஞ் செட்டியார் அவர்கள் 140

(18) ,, The Honourable Rao Bahadur சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் 120

(19) ,, லெ. அரு. லெ. இராமநாதன் செட்டியார் அவர்கள் 100

(20) ,, தெற்கூர். கரு. மூத்து. அழகப்ப செட்டியார் அவர்கள் 1050

கட்டிட சம்பந்தமான டிை தொகைகளையும் இன்னும் கிடைக்கும் நன்கொடைத் தொகைகளையும், பரிபாலித்து டிை காரியங்களுக் குபயோகிக்க உப அக்கிராசனாதிபதி ஸ்ரீமாந். பெத்தாச்சி செட்டியாரவர்கள் பொக்கிஷதாரரா யிருக்கிறார்கள்.

இனி, இம்மதுரையிலும் இதற்கடுத்த விடங்களிலிருக்கும் க்ஷேத்திர மான்மியங்களையும் சரித்திரங்களையும் இதனடியிற் காணலாம்.

---

## திருப்பழனிமலை

(முருகப்பிரானது குன்றுதோறாடலிலொன்று.)

[பழநியாண்டவர், சண்முகநதி தீர்த்தம், சூரியதீர்த்தம், வையாபுரிக்குளம், தேவ தீர்த்தம், அமுத தீர்த்தம், காஞ்சனை தீர்த்தம்.]

அகஸ்தியர், சேரர்கோன், வசுமந்தன், சொர்ணதித்தன், நித்தியாநந்தன், பிரமா, இந்திரன், கவுசலசேரன், அக்கினி, ஆதிசேடன், அருச்சுனன் முதலியோர் பூசித்தநுக்கிரகம்பெற்ற தலம். சிவபெருமானிடத்து மாங்கனிக்காகப் பிணங்கித் திருவாவினன்குடியி லெழுந்தருளியிருந்த முருகக்கடவுளாரை யெம்பெருமான் வந்து பிணக்கந் தீர்ந்து, "நீயே கனியொத்தவனாயிருக்க, வேறு கனியேதுக்கு?" என்று திருவாய்மலர்ந்தருளிய தலம். "பழம் நீ" என்ற இருமொழித்தொடர் 'பழநி' என்று வழங்கப்படுகிறது.

இப் பாண்டிய நாட்டிலுள்ள விசேஷ க்ஷேத்திரங்களாவன:

### பழனிநகர், அதின் ஆலயங்கள்.

### இவற்றின் பூர்வோத்திர வரலாறு.

பழனி நகருக்கும் அதின் ஆலயங்களுக்கும் நாம் விவரங்கூறப்போகிறபடியால், முன்பு அந்த நகரத்தையுடைத்தாயிருக்கின்ற கொங்கு நாட்டின் விவரங் கூறுவோம்.

சேரநாடான் முதல்முதல் மிகு சிறப்புடன் வாழ்ந்து அரசுபுரிந்த நாடு மதுநாடு எனப் பெயர்கொண்ட கொங்கு நாடாம். கொங்கு நாடானது சோழநாட்டுக்கு மேற்கு, பாண்டிய நாட்டுக்கு வடக்கு, மலைநாட்டுக்குக் கிழக்கு, தொண்டைவளநாட்டிற்குத் தெற்கு ஆக இந்த நான்கு எல்லைக் குட்பட்டது. பிறகாலத்தில் கன்னியாகுமரிமட்டுமிருக்கிற மலைநாடு முழுமையும் அவனுக்கு ஆதீனமாயிற்று. ஆனதால் கொங்கு நாடாள்வானாகிய சேரநாடானுக்கு மலைநாடான் என்றும் ஒருபெயர்வழங்கலாயிற்று. மேலே நாம் சொல்லியிருக்கிறபடிக்குக் கொங்கு நாட்டுக்குப்பூர்வ இராஜநகரம் கருவூர். மதுக்கரைச்செல்லாயி அம்மனாகிய உச்சிமாகாளியம்மன் மேற்படி சேரநாடானுக்கும் அவன் குலத்தவர்களாகிய தமிழ் க்ஷத்திரிய குலத்தவர்களுக்கும் குலமாதாவானதால் அவர்கள் அந்த அம்மனு

டைய ஆலயத்தையே மேலான ஸ்தானமாக மதித்து அம்மை னுக்குப் பூசைசெய்துகொண்டு வந்தார்கள். மேற்படி சேர நாடாள்வார்கள் பூர்வத்தில் சிவபுரம் எனப் பெயர்பெற்றுப் பிற்காலத்தில் பழனி எனப் பெயர்கொண்ட பட்டணத்தைக் கட்டி அதைச் சிறப்பித்து அதில் தங்கள் குலதெய்வங்களாகிய பெரியவுடைய நாயகன் எனப் பெயர்கொண்ட சிவபிரானுக்கும், பெரியநாயகி அம்மன் எனப் பெயர் பெற்ற உமையம்மைக்கும், அவ்விருவருடைய அருமைப் புத்திரராகிய தண்டாயுதபாணி எனப் பெயர்பெற்ற சுப்பிரமணியக்கடவுளுக்கும், கற்பகப்பிள்ளையார் என்னப்பட்ட விநாயகக்கடவுளுக்கும், உமையம்மைக்குச் சகோதரரும் பரமசிவனுக்கு மைத்துனருமாகிய பெருமாளுக்கும், வயிரவருக்கும், ஐயனாருக்கும், உமையம்மை அம்சமாகிய மாரியம்மனுக்கும் ஆலயங்கள் கட்டி அவர்களை வணங்கி வந்தார்கள். அந்த ஆலயங்களில் தண்டாயுதபாணியாகிய சுப்பிரமணியர் கோவில் ஒன்று நீங்கலாக மற்றக் கோவில்களெல்லாம் பழனிநகரத்துக்குள்ளாக இருக்கின்றன. சுப்பிரமணியர் கோவில் மேற்படி பழனி நகரத்துக்கு உத்தேசம் ஒரு மைல் தூரத்துக்குக் கிழக்கே இருக்கிற பழனிமலை எனப் பெயர்பெற்றிருக்கிற சிவகிரியின் மேலுச்சியில் கட்டப்பட்டிருக்கின்றது.

அந்தத் தண்டாயுதபாணி கோவில் பூர்வத்தில் சேர நாடாளுவோரால் கட்டப்பட்டது. அது சேரநாடாளுவோரால் கட்டப்பட்டதற்கு உள்ளே கல்வெட்டப்பட் டிருப்பதுமன்றி பழனி தலபுராணத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. அந்த மேற்கோள் வருமாறு:—

## பழனி ஸ்தலபுராணம்

### கடவுள் வணக்கம் (8-வது கவி)

ஆரநா புரவடியு மிசைப்பின்
    றும்குடிமி யழகுந் தன்கோல்
வேரலோர்க் கரனு மொக்கஞ் சேர்த்தியதோர்
    கர்முமெழில் விளக்க மெக்கால்
பாராதி பரவுபுதர் பரவுசிவ
    கிரிவருபச் சியத்து வாசல்
சேரர்கோ னலயத்து ணின்றிலங்கும்
    பரஞ்சுடரைச் சிந்தை செய்வாம்.

(இதன் பொருள்)

சிலம்பணிந்திருக்கிற பாதமும், சிரசின் பின்னுலே தாழ்ந்த குடுமியழகும், குளிர்ச்சி தங்கிய கோலான மூங்கில் தண்டமொருகையும் இடையின்பேரிலே சேர்த்திய தொரு கையும், இளமைப்பருவத்தின் விளக்கமும் பொருந்தி, எக்காலமும் பூலோகத்தி லுண்டாகிய பேர்களும் பணிக் தருளச் சிவகிரியில் மேற்குப் பார்த்த வாசலாகிய சேரர் பெருமானுல் செய்யப்பட்ட சன்னிதானத்தில் எழுந்தருளி நின்று பிரகாசித்த பரஞ்சோதி ரூபமான சுவாமியைத் தியானஞ் செய்வாம்.

இதினுல் மேற்படி சுப்பிரமணியர் ஆலயம் சேரனுல் கட்டப்பட்டது ருசுவாகின்றது.

மேற்படி சேரனுக்கு மேற்படி கவியில் சேரர்கோன் எனவும், மேற்படி உரையில் சேரர்பெருமான் எனவும், மேற்படி புராணம் கவுசலை சேரன் சுருக்கம் 9-வது கவி யில் 'சேரநாடான்' எனவும் பெயர்கள் வந்து வழங்குகின் றன. சேரர்கோன் சேரநாடான் ஒருவன் பெயரானபடி யால் இவைகளில் வருகிற கோன்-நாடான் என்னும் பதங் கள் ஒரு பொருட் பதங்களாம். ஆனதால் கோன், நாடான் என்னும் பதங்கள் அரசன் என்னும் பொருள் பெற்று வழங்கிவருவது தெரியவருகின்றது.

மேற்படி கவுசலை சேரன்சருக்கம்

9-வது கவி வருமாறு:

"நடித்த பொற்பொது முதல் தீர் நாட்டுள நகரும்
வடித்த முத்தமிழ் மதுரையுங் குமரியும் பிறவும்
கொடித்த டஞ்சிலைக் கோதைநாட் டினிலெழு பதியும்
கடித்தி கழ்ந்தமென் மலரினுற் கைகுவித் திறைஞ்சி."

(இதன் பொருள்) திருநடனம் புரிந்த சிதம்பரமுத லாய் காவிரி நாட்டுக்குள்ளுண்டாகிய சிவாலயங்களும், தெளிமைப்பட்ட இயலிசை நாடகமென்னும் முத்தமிழை வளர்த்த மதுரையும், கன்னியாகுமரி முதலான தலங்களும், விசாலமான விற்கொடியையுடைய சேர நாடானுடைய கொங்கு நாட்டின் ஏழு சிவாலயங்களும், வாசகச் செம்மை யும் மிருதும் போன்ற புயங்களால் அர்ச்சித்த இரண்டு செங்கையுங் குவித்து நமஸ்காரஞ் செய்தருளினுன்."

இந்தக் கவியினால் சேர நாட்டரசர்கள் நாடான் என்னப்பட்ட பெயர் புனைந்து நாடாண்டு வந்தது ருசுவாகின்றது. சிவகிரி எனப் பெயர் பெற்ற பழனிமலை உத்தேசம் 500 அடி உன்னதமுள்ளது. அம்மலையின் அடிவாரத்தில் திருவாவினன்குடி யிருக்கின்றது. அம்மலையின் உச்சியில் கட்டப்பட்டிருக்கிற தண்டாயுதபாணி கோவிலுக்கு ஏறிப் போகிறதற்கு அடிவாரம்முதல் உச்சிமட்டுக்கும் (999) தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது படிகள் ஒன்றுக்குமே லொன்றாகக் கட்டப்பட் டிருக்கின்றன. மேற்படி ஆலயத்திற்குள் இருக்கின்ற சுப்பிரமணியர் சிலையின் கையில் மூங்கில் தண்டம் பொருந்தி யிருப்பதால் சுப்பிரமணியருக்குத் தண்டாயுதபாணி என்றொரு பெயர் வழங்குகிறது. ஆனதால் மேற்படி ஆலயத்துக்குத் தண்டாயுதபாணி கோவிலென்று பெயர் வழங்கலாயிற்று. இந்தச் சிலைக்குப் பால சுப்பிரமணியர் சிலை என்று பெயர். தமிழ் நாட்டில் சுப்பிரமணியருக்கு ஆறு ஸ்தலம் முக்கியமானவைகள். இந்த ஆறு ஸ்தலங்களுக்கும் ஆறு படைவீடு என்று பெயர். அவைகளில் திருவாவினன்குடி எனப் பெயர்பெற்ற பழனி ஸ்தலத்துக்குச் சேரமண்டலம்-பாண்டியமண்டலம்-சோழமண்டலம் - தொண்டைமண்டலம் முதலான நாடுகளிலிருந்து பிரதான உற்சவ காலங்களில் மிகு ஏராளமான ஜனங்கள் திரள் திரளாகக் கூடி காவடிகளோடு வந்து சேருகிறார்கள். அந்த உற்சவங்களில் தைப் பூசத்திலும், பங்குனி உத்திரத்திலும், வைகாசிமாதத்து விசாகத்திலும், ஐப்பசி மாதத்திலும் நடக்கிற உற்சவங்கள் முக்கியமானவைகள். கொங்கு நாட்டிலுள்ள மலைகளில்: வராககிரி, சிவகிரி, சத்திகிரி, பிரமகிரி, விஷ்ணுகிரி, மருதமலை, கொடிமுடிமலை, வெள்ளிமலை, பொன்னூதிமலை இவை பிரதானமானவைகள். நதிகளில்: ஆம்பிராவதி, சண்முகநதி, பச்சையாறு, கல்லாறு, வரத்தாறு இவை பிரதானமானவைகள். பழனியிலுள்ள குடி ஜனங்களுக்கு ஜல ஆதாரமானது வையாபுரி ஏரி. அவ்வேரிக்கு வரத்தாறு வந்து, பாய்கின்றது. வராககிரிச் சார்பில் மிகு கீர்த்திபெற்றோங்கிய மருதகாளியம்மன் கோவி லிருக்கின்றது.

---

## பழனிமலை

இது திண்டுக்கல்லுக்கு 36 மைல்கள் தூரத்திலும், கோயமுத்தூர் ஜில்லாவைச் சார்ந்த தாராபுரத்திற்கு 22

மைல் தூரத்திலும், இருக்கிற ஒரு சிவஸ்தலம். இம்மலையின் உயரம் முதலானவைகளை மேலே சொல்லியிருக்கிறோம். இது மதுரை சப் கலெக்டர் வசிக்கும் இடமாயுள்ளது. பிரதி தை மாசங்களிலும் பங்குனி மாதங்களிலும் விசேஷ உற்சவங்கள் நடப்பதால் இத் தென்னிந்தியாவிலுள்ள பல ஜனங்கள் முக்கியமாக மலையாளத்தார் அநேகர் வருகிறார்கள். மலையாளத்தார் சுலபமாகப் போய் வர பாலக்காட்டிலிருந்து பொள்ளாச்சி உடுமலைப்பேட்டை வழியாக கவர்ன்மெண்ட் ரயில் போடப்போகிறார்கள். கோயமுத்தூரைச் சார்ந்த ஜனங்கள் சுலபமாய்ப் போய்வர போத்தனூரிலிருந்து பொள்ளாச்சிக்கு டிஸ்ட்ரிக்டு போர்டு ரயில்வே போட்டுக்கொண்டு வருகிறார்கள். இந்த 2 ரெயில் பாதைகளின் வேலை முடிவுபெற்றால் மலையாளம், கோயமுத்தூர் முதலான இடங்களிலுள்ள ஜனங்கள் நேராகப் பழனிக்கும் திண்டுக்கல்லுக்கும் - அங்கிருந்து தூத்துக்குடி பாம்பன் இலங்கைக்கும் போய்வரச் சுலப சாதனங்களாகும். இப்பழனியிலிருந்து பருத்தி, ஆமணக்கு, வெங்காயம், நிலக்கடலை, சுருட்டு, பதனிட்ட தோல், மூங்கில், விறகு, மரங்கள், புஞ்சை தானியம் முதலானவைகள் ஏராளமாக ஏற்றுமதியாகின்றன. ஆவாரம்பட்டை, பதனிடாத்தோல் இவை இறக்குமதியாகின்றன. இவ்விடம் இரும்புதாது அதிகம். இவ்விடம் பல பக்கங்களிலுள்ள ஜனங்கள் காவடிகள் எடுத்துக்கொண்டும் போய்க்கொண்டிருப்பதனால் அவ்வவ்விடங்களிலுள்ள வாந்திபேதி வைசூரி பிளேக் முதலான தொத்து வியாதிகளைக் கொண்டுவந்து விட்டு ஜனங்களை வருந்தச் செய்கிறார்கள். ஆயினும், கவர்ன்மெண்டார் சுத்திப்படுத்த பல முயற்சிகள் செய்துவருகிறார்கள். மாம்பழக் கவிச்சிங்க நாவலர் என்னும் தமிழ் வித்வான் பிறந்தவிடம் இதுவேயாம்.

---

## திருப்புத்தூர்.

(திருப்புத்தூரீச்சுரர், சிவகாமித்தாயம்மை, அற்புதகங்கை தீர்த்தம்.)

உமாதேவியார், தேவேந்திரன், தேவகன்னிகை முதலியோர் பூசித்த தலம். சம்பாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ரு. இது அறந்தாங்கி ரெயில் ஸ்டேஷனுக்கு 27 மைலி லிருக்கிறது.

## திருக்கொடுங்குன்றம்.

(கொடுங்குன்றேச்சுரர், குயிலமுத நாயகியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

மகோதரரிஷி, நாகராசன், தேவேந்திரன் முதலியோர் பூசித்ததலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிபதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. இது மதுரைக்கு வடகிழக்கே 42 மைலி லிருக்கிறது.

## திருவேடகம்.

(இது மதுரைக்கு வடமேற்கு 7 மைலி லிருக்கிறது. ஏடக நாதேச்சுரர், மாதேவியம்பாளம்மை, வைகைநதி தீர்த்தம்.)

மகாவிஷ்ணு, கருடன், நாகராஜன், நின்றசீர்நெடுமாற நாயனு ரிவர்கள், முறையே நான்கு யுகங்களிலும் பூஜித்த தலம். பாசுபதம் பெறும்பொருட்டுப் பாண்டவரில் விஜயன் செய்த தவத்திற் கிரங்கிச் சிவபெருமான் வேடவடிவாய் வெளிப்பட்டபொழுது மல்லுயுத்தத்திலடியுண்டவிற் றழும்பைத் திருமேனியி லடையாளமாகக் கொண்டருளிய தலம் சமணர்கள், வாதின்பொருட்டுத் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் வைகையாற்றிலிட்ட ஏடானது எதிரேற, அதனைக் குலச்சிறை நாயனுர் பரிமேற்கொண்டு தொடர்ந்தும், அஃது இங்கு நீர்மடுவிற் புகுந்து தங்கிய பொழுது அதனை யகப்படுத்திய காரணத்தால், இத் தலத்திற்குத் திருஏடகமெனப் பேராயிற்று. திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

## திருப்பரங்கிரி.

(முருகப்பிரானது படைவீடுகளி லொன்று)

(பரங்குன்றேச்சுரர், ஆவுடை நாயகியம்மை, பிரம கூவம், சத்திய கூவம், சரவண தீர்த்தம்.)

பிரராசன் பூதானஞ் செய்யும்பொழுது, சங்கற்பித்தவர்களி லொருவரில்லாதொழிய, அரசன் வருத்தமுறுவதுணர்ந்த சிவபெருமான், ஓர் வேதியராய் வந்து தானமேற்றருளிய தலம். முருகப்பிரான் சூராதியர்களை வென்று, தேவ உலகங் குடியேற்றியபொழுது தேவேந்திரன் முருகக்

கடவுளுக்குத் தெய்வயானையம்மையை விவாகஞ் செய்து கொடுத்த தலம். அரிச்சந்திரன் பூசித்துப் பொய்யாவிரதியாய்ப் புகழ்படைத்த தலம். முருகாவென்று மொழிந்து வரும் ஒரு பெண்ணின் கணவன் அதை யொழித்துத் தன் பெயர் கூறக் கற்பித்தும் அவள் கேளாமைக்காக அவன் கரத்தைச் சேதிப்ப, அக் கரம் முருகப்பிரானருளால் வளரப் பெற்ற தலம். திருஞான சம்பந்த சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

## திருவாப்பனூர்.

(ஆப்பனூர்க் காரணர், அம்பிகையம்மை, இடபதீர்த்தம்.)

திருநந்திதேவர், குபேரன், அரிச்சந்திரன், பாட்களன், சித்திரசேனன் முதலியவர்கள் பூசித்த தலம். ஓர் காலத்தில் வேட்டைக்குச் சென்ற பாண்டியராஜன் சிவதரிசனஞ் செய்யாது அன்னமருந்தாதிருந்ததற்காகக் குதிரை கட்டிய ஆப்பினின்றும் பிரசன்னமாய்த் தரிசனங் கொடுத்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மதுரை மீனாக்ஷியம்மை கோயிலுக்கு வடக்கே 1 மைலி லிருக்கிறது.

## திருவாதவூர்.

(வாதவூரீச்சுரர், உமாதேவியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

சைவசமயாசாரியராகிய ஸ்ரீமன் மாணிக்கவாசகசுவாமிகள் ஆமாத்தியர் குலத்திலே திருவவதாரஞ் செய்தருளிப் பதினாறாண்டினுள் சருவகலாவல்லவராயிருத்தலை அரிமர்த்தன பாண்டியராஜ னறிந்து, அவருக்குத் தென்னவன் பிரமராயனென்னப் பேரும், முதன் மந்திரி உத்தியோகமுங் கொடுத்து உபசரிக்க, அச் செல்வத்தின்மீது பற்றற்றவராய்ச் சிவஞான விருப்பினராயிருந்து அதிதீவரதர பக்குவமடைந்து, சிவபெருமானு லுபதேசஞ் செய்யப்பெற்றுச், சமயாசாரியராக எழுந்தருளிய தலம், காத்தியாயன ரிஷி பூசித்த தலம்.

இது மதுரைக்குக் கிழக்கே 39 மைலி லிருக்கிறது.

## திருக்கானப்பேர் (காளையார்கோவில்).

(கானக்காளையீச்சுரர், மகமாயியம்மை, பொன்பதுமை அரசனுரும்படி யநுக்கிரகித்த இடபதீர்த்தம்).

கௌண்டின்யமகாரிஷி, நாகராஜன், தேவர்கள் முதலியோர் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் காளைவடிவத்தோடு தோன்றிக் கையிற பொற்செண்டும், முடியிற்சூழியமு முடையவராய், 'நாமிருப்பது கானப்பேர்' எனச் சொல்லி யழைத்துவந்து தரிசனங் கட்டளையிட்டருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ. மதுரைக்குக் கிழக்கே 39 மைலி லிருக்கிறது.

---

## திருவாடானை.

(ஆதிரத்ந நாயகேச்சுரர், அம்பாயிரவல்லியம்மை, இரத்நதீர்த்தம்).

வசுவென்னு முனிவரும், நாககன்னிகையும், சப்தகன்னியர்களும், சுக்கிரனும் பூசித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மானமதுரை ஸ்டேஷனுக்கு 44 மைலி லிருக்கிறது.

---

## திருப்புனவாயில்.

(திருப்புனவாயிலீச்சுரர், பழம்பதி நாதர், பரங்கருணை நாயகியம்மை, கங்கா தீர்த்தம்).

சதுர் வேதங்களும், தேவர்களும் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது அறந்தாங்கி ஸ்டேஷனுக்கு 30 மைலி லிருக்கிறது.

---

## திருஉத்தரகோசமங்கை.

(உத்தரகோசமங்கை நாதேச்சுரர், உத்தரகோசமங்கையம்மை, சிவகங்கை தீர்த்தம்).

பிருகுரிஷி, சாண்டில்லியரிஷி, கங்கை, அக்கினி முதலியோர் பூசித்த தலம். ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுக்குச் சிவபெருமான் திருமேனி தரிசனை காண்பித்

தருளி, அச் சுவாமிகளாற் றிருவாசகத்தில் நீத்தல் விண் ணப்ப முதலிய பல பாடல்களைப் பெற்றருளிய தலம்.

---

## திருச்சுழியல்.

(திருமேனிநாதேச்சுரர், துணைமாலையம்மை, நற்றுணை தீர்த்தம்).

சதாநந்தரிஷி, சௌனகரிஷி, தேவர்கள், அசுரர்கள் முதலியோர் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவுருவ தரிசனை கட்டளையிட்டருளிய தலம். பார்ப்பதி பூசித்துத் திருமணஞ்செய்ய அருள் பெற்ற தலம். சுந்தர மூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதி கம்-க.

இது விருதுப்பட்டி ஸ்டேஷனிலிருந்து 19 மைலி லிருக்கிறது.

---

## திருமங்கைபுரம் (கோவிற்பட்டி).

(புவனலிங்கேச்சுரர், செண்பகவல்லியம்மை, திருக் கெண்டித் தீர்த்தம், திருக்குளத் தீர்த்தம்.)

அகஸ்தியரிஷி பொதியமலைக் கெழுந்தருளும்போது பொய்ச் சன்னியாசி வேடம்பூண்ட வில்வலன் தனது தம்பி யாகிய வாதாபியை ஆடாக்கிச் சமைத்து விருந்திடப் புசித்த பின்னர், அவ் வில்வலன் வாதாபியை யழைக்க, அகஸ்தியர் அகட்டினின்று முயிர்த்தெழத்தொடங்கிய வாதாபியை உத ரத்தைத் தடவி நசிப்பித்தும், எதிர்த்த வில்வலனை வதைத் தும் உண்டான பிரமஹத்தியை, அகஸ்தியர் பூசித்துப் போக்கியருளிய தலம்.

---

## திருக்கங்கை கொண்டான்

(கங்கைகொண்டேச்சுரர், உமாமஹேஸ்வரியம்மை, சிவகாமியம்மை).

---

## திருக்கயிலாயபுரம் (சிந்துபூந்துறை)

(கயிலாய நாதேச்சுரர், சிவகாமித்தாயம்மை, தாம்பிர வர்ணி நதிதீர்த்தம்).

அகஸ்தியரிஷி, காரணரிஷி இவர்கள் பூசித்த தலம். திருக்களந்தையினின்றும் தந்தையின் என்பைக் காசிக்குக் கொண்டுபோக எடுப்பித்து வந்த ஓர் வேதியன், காசியில்

அவ்வங்கம் என்பாயிருந்தமையும், இத்தலத்தில் மலரா யிருந்தமையும், கூலியாளினு லுணர்ந்து மீண்டு மிங்கு வந்து தாதைகடன் முடித்துத் திருவருள் பெற்ற தலம். இதனாலே சிந்து பூந்துறை யென வழங்கப்படுகின்றது. அகஸ்தியருக்குத் திருமணக் கோலங் காட்டியருளிய தலம்.

## திரு இராமேசநல்லூர் (முத்தீச்சுரம்).

(இராமநாதேச்சுரர், குணக்குன்றம்மை, தாம்பிரவர்ணி நதி, சடாயு தீர்த்தம்).

அகஸ்தியரிஷியும், ஸ்ரீராமரும் பூசித்த தலம். சீதை பொருட்டு இராவணனோடு யுத்தம் செய்திறந்த சடாயுவுக்கு ஸ்ரீராமமூர்த்தி ஈமக் கடனியற்றப் பதவியளித்தருளிய தலம்.

## திருமணவைமாநகரம்.

(மங்களேச்சுரர், மங்களாம்பிகையம்மை, தாம்பிரவர்ணி நதி, மங்கள தீர்த்தம்).

திருநெல்வேலியானது வேய்வனமாயிருந்தபொழுது, பாண்டிய ராசனுக்கு இராசதானியாயிருந்த தலம். பாண்டவர்கள் வனத்தில் வசித்த காலத்தில் இத்தலமுற்றுப் பூசித்துப் பாரதத்தில் கிருஷ்ண சகாயமும், துரியோதனுதியர் வதமுஞ் செய்ய வரம் பெற்ற தலம்.

## திருச்செப்பறை.

(தியாகேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணி நதி, மகிழ்வு தீர்த்தம்).

இத்தலத்திலும், கட்டாரி மங்கலம்-கருவேலங்குளம்-கரிசூழ்ந்த மங்கலத்திலும், பாண்டியராசனுக்குச் சிதம்பரத்தின் திருநடன தரிசனங் கட்டளையிட்டருளப்பட்டது. ஓர் கந்தருவன், முனிவரது தவத்திற் கிடையூறு செய்து, அவரால் முதலையாகச் சாபம் பெற்றிருந்தவன், அருச்சுனனை இத் தீர்த்தத்திற் பிடிக்க அவனாற் கடிப்பட்டுக் கரா வுருவம் நீங்கிக் கந்தருவனான தலம்.

## திருமருதூர்.

(கடலழகேச்சுரர், உக்கிரேசர், திருக்கயிலாய நாதர், உமாதேவித்தாய், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணி நதி, சித்

ராநதி, உதகநதிகள், முக்கூடற்றீர்த்தம், பிதிர்தீர்த்த முதலியன).

தேவர்கள், கந்தருவர், வித்தியாதரர்கள் திருமால் முதலியோர் பூசித்த தலம். சோழராசனது குதிரை முக முள்ள பெண்ணைச் சிவாஞ்ஞைப்படி இந்த நதித்துறையில் மூழ்குவிக்க மானுட முகமாகிய தலம்.

---

## திருமுறப்ப நாடு.

(கைலாய நாதேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணீ நதிதீர்த்தம்).

அங்கிரசரிஷி பூசித்த தலம். சூரனுதியர் செய்த இடுக் கணைச் சகிக்கமாட்டாமல் தேவர், முனிவர் முதலியோர் முறைப்பட்டு நல்வரம் பெற்ற தலம்.

## திருக்கயிலாசபுரம் (ஸ்ரீ வைகுண்டம்).

(திருக்கயிலாச நாதேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிர வர்ணி நதிதீர்த்தம்).

பரத்துவாசரிஷி, பராசரிஷி, பிருஹுசக்கரவர்த்தி இவர்கள் பூசிக்க, இவர்களுக்குத் திருக்கயிலாசத்தை வரு வித்துக் காண்பித்த தலம். திருமால் முதலிய தேவர்கள் பூசித்த தலம்.

---

## திருக்காந்தீச்சுரம் (ஆழ்வார் திருநகரி).

(காந்திச்சுரர், அறம்வளர்த்த நாயகியம்மை, தாம்பிர வர்ணி நதி தருமதீர்த்தம்).

அகஸ்தியர் முதலிய அனேக ரிஷிகள் பூசித்து முத்திபெற்ற இத்தலத்திற் கருவூர்த்தேவர் வந்து பூசித்து சிவயோகஞ் செய்திருப்பச் சிவபெருமான் அவர்முன் றோன்றிக் காட்சி கொடுத்தருளிய தலம்.

---

## திருநவலிங்கபுரம்.

(நவலிங்கேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணிநதி, நவதீர்த்தங்கள்).

அநேக ரிஷிகளும், தேவர்களும், மூன்றரைக்கோடி தீர்த்தங்களும், வந்து தனுர் மாதத்தில் மூழ்கி அநுக்கிரகம் பெற்ற தலம்.

## திருப்பிரமேச்சுரம்.

(பிரமேச்சுரர், பிரமவித்தியா நாயகியம்மை, தாம்பிர வர்ணி நதி, பிரமதீர்த்த முதலிய தச தீர்த்தங்கள்).

சிவபிரானுக்கு விரோதமாய்ச் செய்ததக்கன் வேள்வியிற் பிரமதேவர் போயிருந்த பாவந்தீரப் பூசித்த தலம்.

---

## திருச்சோமேச்சுரம் (ஆற்றூர்).

(சோமநாதேச்சுரர், சோமசுந்தரியம்மை, தாம்பிர வர்ணி நதி, சோம தீர்த்தம்).

குரு பத்தினியைப் புணர்ந்ததாற் கிடைத்த சாபத்தை நீக்கும்பொருட்டுச் சந்திரன் பூசித்த தலம். வேட்டைக்குச் சென்றவிடத்துச் சுயம்புலிங்க தரிசனஞ்செய்ய விரும்பிய பாண்டியராசனுக்கு, ஆலமரத்துத் தூரினின்றும் பிரசன்னராகித் தரிசனங் கொடுத்தருளிய தலம்.

---

## திருச்சேர்ந்தமங்கலம்.

(கயிலாசநாதேச்சுரர், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணி நதி, சங்கமதீர்த்தம்).

அகஸ்தியரிஷி, சமுத்திரராசன், வருணனுதியர் பூசித்த தலம். உற்பனனென்னும் அரசனுக்குத் தரிசனங் கொடுத்து அநுக்கிரகித்த தலம்.

---

## திருக்குலசேகரன் பட்டினம்.

(காஞ்சி விஜயகட்சிகொண்டேச்சுரர், அறம்வளர்த்த நாயகியம்மை, காஞ்சி தீர்த்தம், சமுத்திர தீர்த்தம்).

மாவிருக்ஷம், மார்க்கண்டரிஷி பூசித்ததலம். சூரபன்மன் உயுத்தஞ் செய்தபொழுது, கடைசியாக மாமரமாக நின்றதலமென்று புகழப்படுகின்றது. இதன் சுற்றுப் புறங்களில் மாவிருக்ஷ மில்லா திருப்பினும், இதிலுள்ள ஓர் மாமரமானது, எக்காலத்திலும் அரும்பு - மலர்-காய்-கனிகளையுடைத்தா யிருக்கும் அற்புத தலம்.

---

## திரு இராதாபுரம்.

(வரகுணபாண்டியேச்சுவரர், நித்தியகல்யாணியம்மை, சிவகங்கைதீர்த்தம்).

வரகுணபாண்டியர் வேட்டையாடுகையிற் பொழுது சென்றமையாற் சுந்தரேசரைத் தரிசிக்கத் தாழ்த்ததற்காக வருந்தச், சுந்தரேசர் பிரசன்னரா யனுக்கிரகித்தருளிய தலம். தேவர்கள் முதலாயினோர் பூசித்த தலம்.

---

## திருப்பணக்குடி.

(சொக்கேச்சுரர், சிவகாமியம்மை, சிவகங்கைதீர்த்தம், அனுமதீர்த்தம்).

சிபிச் சக்கரவர்த்தி, தேவேந்திரன், அனுமன், முதலியோர் பூசித்த தலம். ஓர் வணிகன் வர்த்தகஞ்செய்து பணத்துடன் மீளும்பொழுது இவ்விடத்தில் ஓர் வேடன் வளைந்துகொள்ள, அவ் வணிகன் பயந்து முறையிட்டபொழுது சிவபெருமான் பிரசன்னரா யவ்வேடனை வதைத்து வணிகனை இரக்ஷித்தருளிய தலம்.

---

## திருவள்ளியூர்.

[முருகப்பிரானது குன்றுதோ றாடல்களிலொன்று.]

(முருகக்கடவுள், வள்ளிநாயகியம்மை, சரவணப்பொய்கை தீர்த்தம்).

நாரதமகாரிஷி வள்ளிநாயகியாரைக் கண்ணுற்று, அவரது அழகை வடிவேலவருக் கறிவிப்ப, முருகக் கடவுள் இங்கு எழுந்தருள, அப்போது சேடிமாரோடு நீராடி நின்ற வள்ளிநாயகியார் வெட்கி ஒருபுறத் தொதுங்கி ஒளித்துக்கொண்டதலம். இதனாலேஇத்தலத்திற்கு வள்ளியொளித்த வளநாடு என்னும் பெயர் வழங்குகிறது. அநேக ரிஷிகளும் தேவர்களும் அனுக்கிரகம் பெற்ற தலம்.

---

## திருத்துருவாச நல்லூர் (காளத்திநகரம்)

(காளத்தியீச்சுவரர், பூங்கோதையம்மை, தாம்பிரவர்ணி நதி, துருவாசதீர்த்தம்).

துருவாசமுனிவர் திருக்கயிலையிற் சென்று சிவபெருமானைப் பூசித்து என்றும்மறவாது பூசித்து வரும்படியான வரமருளப் பிரார்த்திக்க, "தாம்பிரவர்ணிக் கரையடைந்து பூசிக்குதி" எனச் சிவபெருமான் திருவுளம்பற்றியபடி,

அங்குற்றுத் தீர்த்தமாடிப் பூசித்து வரம் பெற்றும், இன்னும் கரிசூழ்ந்த மங்கலமுதலிய எட்டுத் தலங்களை யமைத்துப் பூசித்தும் அருள்பெற்ற தலம்.

---

## திருஉரோமேச்சுரம்.

(உரோமேச்சுவரர், இமயப்பாவை, தாம்பிரவர்ணி நதி, உரோமேசதீர்த்தம், மார்க்கண்டதீர்த்தம்).

உரோமேசரிஷி பூசித்து நித்தியத்துவம் பெற்றதலம், திருமால், அயன், சித்தர், வித்யாதரர், தேவர்கள், மார்க்கண்டேயரிஷி, கார்த்தவீரியன் முதலியோர் பூசித்த தலம்.

---

## திருச்சேரன்மாதேவி.

(வைத்தியநாதர், ஒப்பில்லா நாயகியம்மை, கன்னடியன்கால் முதலிய தீர்த்தங்கள்).

அகஸ்தியர் முதலிய ரிஷிகள் பூசித்து, அநுக்கிரகம் பெற்ற தலம்.

(அம்மை நாதசுவாமி, சிவகாமியம்மை, தாம்பிரவர்ணி நதிதீர்த்தம்).

பெருநோய்கொண்ட சோழராஜன், எத்தலத்துந் தீராது இத்தலம் வந்து நோய்தீரப் பெற்றுக் கதியடைந்த தலம்.

---

## திருப்புடார்ச்சுனபுரம் (திருப்புடைமருதூர்).

(புடார்ச்சுனபுரேச்சுவரர், மங்கைநாயகியம்மை, தாம்பிரவர்ணி நதிதீர்த்தம்).

இந்திரன் விருத்திராசுரனைக் கொன்றதனாற் பிரமஹத்திபற்றி மருதமரத்தின்பொந்தில் ஒளிந்திருந்து மானதத்தாற் பூசிப்ப, அதற்காகவும் தேவர்கள் முறைப்பாட்டிற்காகவும் சிவபெருமான், மருதமரத்தின் புடைப்பிற்றோன்றி யநுக்கிரகித் தருளியதலம். இதனாலே இத்தலத்திலுள்ள மருத மரங்களுக்கெல்லாம் பொந்துண்டாவது வழக்கம்.

---

## திருப்பூவணம்.

(திருப்பூவண நாதேச்சுரர், மின்னும்பிகையம்மை, வைகைநதி தீர்த்தம்).

பப்புருவு மகாரிஷி பூசித்ததலம். பொன்னனையாளென்னும் உருத்திர கணிகையா ரொருவர், சுவாமியின் திருவுருவத்தைச் சமைக்கக் கருதிப் பொருள் சேர்ப்புழி, வரும் பொன், அடியவர் பூசைக்கன்றி யெஞ்சாமையா லுடன் மெலிந்து வருந்துவதை யெம்பிரான் றிருவுளங்கொண்டு, சித்தரா யெழுந்தருளி ரசவாதஞ் செய்துகொடுப்ப, பொன்னாற் றிருவுருவு சமைத்து, அப் பொன்னனையார், சிவபிரானது அழகிய திருவுருவத்தைக் கண்டு, 'அச்சோ! என் அழகிய பிரானே' என்று அள்ளி முத்தமிட, அக் குறியைச் சிவபெருமான் இக்காலத்துங் காட்டும்படி அடையாளமாக அணிந்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளுக்குத் திருக்கயிலாயத்தின் றிருக்கோலங் காட்டியருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பதிகத்திற் சேர்க்கும்படியான பெருவாழ்வைப் பெற்ற சேரன், சோழன், பாண்டியனென்னு மூவரசர்கள் தொழுது அருள்பெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருக்கோலங் காட்டியருளிய தலம். கருவூர்த்தேவராற் றிருவிசைப்பாப் பாடியருளப் பெற்ற தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ள தலம். இது மதுரைக்குக் கிழக்கே 12 மைலி லிருக்கிறது.

---

## திருவிராமீச்சுரம்.

(இராமநாதேச்சுரர், பருப்பதவர்த்தனியம்மை, அகஸ்திய தீர்த்தம், அமுததீர்த்தம், தனுஷ்கோடி தீர்த்தம் முதலிய அநேக தீர்த்தங்கள்).

அகஸ்தியர், அக்கினி, அசுவத்தாமா, ஹநுமன், ஸ்ரீராம-லட்சுமணர், இலட்சுமி, கவிசம்பு, வானரர்கள், காசிபரிஷி, சரசுவதி, சங்கரபாண்டியன், தருமகுத்தன் முதலியோர் பூசித்து அநுக்கிரகம்பெற்றதலம். தசரதசக்ரவர்த்தியின் றிருமகனாராகிய இராமமூர்த்தியானவர், இலங்கையிற் சென்று இராவணாதி இராக்ஷதர்களைச் சம்ஹாரம் செய்து, சீதையை மீட்டுத் திரும்பும்பொழுது, ராவண கும்பகர்ணாதியர் பிரம பீஜமாயிருந்தமையால், அவர்களை வதைத்த பிரமஹத்தி சூழ, ஆங்கு வந்த ரிஷிகளா லித்தல மேன்மையையுணர்ந்து, இங்குச் சிவலிங்கந் தாபித்துப் பூசிக்கக் கருதி வடகயிலையினின்றுஞ் சிவலிங்கங் கொண்டுவரும்படி யனுமானையேவ, அநுமான் வருமுன்னர் முகூர்த்தகாலஞ் சமீபித்ததை நோக்கிச் சீதையம்மையால் மணலாற் செய்யப்பட்ட

லிங்கத்தைத் தாபித்து முனிவ ரனுமதிகொண்டு பூசிப்பச்,
சிவபிரான் பிரசன்னராய்க் கொலைப்பழியைப் போக்கியது
மன்றி 'இத்தலங் காணப் பெற்றோருக்கு வேண்டிய வரங்க
ளுந் தருவோம்' என்று அநுஜ்ஞையுஞ்செய்து மறைந்தருளப்,
பின்னர்க் கயிலையினின்று மிலிங்கங் கொணர்ந்த அநுமான்,
இதனை நோக்கித் தன்னாற் கொணரப்பட்ட இலிங்கந் தாபிக்
கப்பெறாமற் போனதை நினைத்துக் கவல, அதனை வேறிட
த்து வைத்துப் பூசிப்பதாக இராமமூர்த்தி சொல்லியும்
கேளாது முன்னர்த் தாபித்த இராமநாதமூர்த்தியை அகழ்ந்
தெறிந்து தான் கொணர்ந்த இலிங்கத்தை வைத்துவிடலா
மென்னும் துணிவால் இராமநாதரை வாலாற் சுற்றிவலிந்து
இழுக்க, அவ்வா லறுப்புண்டு அதன் விசையால் அதிதூரஞ்
சென்று விழுந்து மூர்ச்சையடைந்தமையைக்கண்ட ஸ்ரீராம
ரும், சீதையும் பெரிதும் வருந்திச் சிவத்தியானத்தால் அநு
மானைப் பிழைப்பித்து அவன் கொணர்ந்த இலிங்கத்தை
இராமநாதருக்கு அயலாக வடபாகத்திற் றாபித்துப் பூசித்
துப் பேறுபெற்ற தலம். இக்காரணத்தினாலே இத் தலத்
திற்கு இராமீச்சுவரமென்றும், தலநாயகருக்கு இராமநாத
ரென்றும் பெயர் வழங்கப்படுகிறது. அநுமார் வாலின்
மூன்று சுற்றுரேகைகளும் இக்காலத்தும் இராமநாதர்மீது
காணலாம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்த
சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

---

## சேதுமாதவர்.

மதுரையிலிருந்து தீர்த்தயாத்திரைக்கு வந்த குண
நிதியென்னும் பாண்டியன் முன்செய் தவத்தாற் றிருப்பாற்
கடலினின்றும் மகாவிஷ்ணுவோடு ஊடிப் பிரிந்த இலக்குமி
தேவியார் எட்டுப்பருவமுள்ள பெண்மகளாக வந்து அவ
னிடத்துவளர்ந்துகொண்டிருப்புழி ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியான
வர் சிவவேடந் தரித்த ஓர் மறையவராக வந்து பூங்காவனத்
தில் வலிதிற் கைப்பற்ற, இலக்குமிதேவியாரிட்ட ஓலத்தை
அரசன் கேட்டுச் சைனியங்களுடன் சென்று அவ்வேதிய
ரைப்பற்றி இராமநாதராலயத்திற் கொண்டுபோய்க் கட்டி
அடித்து அதற்குப் புறத்தே ஒருமண்டபத்தில் கால்விலங்கு
பூட்டிச் சிறைப்படுத்திய அன்றிரவு அவ்விருவரும் அரச
னது கனவின்கண்ணே சேவை சாதித்தருள, அரசன், நன
வினுமதனை யுணர்ந்து தான் செய்த அபராதத்தை மன்னிக்

கும்படி பிரார்த்தித்தபடி சேது மாதவராகி எழுந்தருளிச் சித்திமுத்திகளை யுதவுந் தலம்.

---

## திண்டுக்கல்.

இது மதுரை ஜில்லாவைச் சார்ந்த ஒரு விசேஷ தாலுக்காவின் தலைமைப் பட்டணமாயும், 25,052 குடிகள் வசிக்கும் முனிசிபல் நகரமாயும், சமுத்திர மட்டத்திற்கு 900 அடிகளுக்கு மேற்பட்டதாயிருப்பதால் வெயிற்காலத்தில் சுகமான வாசஸ்தலமாயு மிருக்கிறது. இதன் கிழக்குப் பாகத்தில் விசேஷ வாழைப்பழங்கள் விளையும் சிறுமலையும் இருக்கிறது. இது சமுத்திர மட்டத்திற்கு 4000 அடிகளுக்கு மேல் உயரமுள்ளது. இதன் மேற்கே பழனி மலையிருக்கிறது. இவ்விடம் சமுத்திர மட்டத்திற்கு 1223 அடிகளுக்கு மேல் 400 அடிகள் நீளமும், 300 அடிகள் அகலமுமுள்ள ஒரு கல்மலையும், அதன்மேல் மதுரை விஸ்வநாத நாயுடுகார் காலத்தில் கட்டுவித்த ஒரு புராதன கோட்டையு மிருக்கின்றது. இக் கோட்டை ஹைதராலி காலத்தில் புதுப்பிக்கப்பட்டு இப்போது அதிசயமாகப் பார்க்கத்தக்க நல்ல ஸ்திதியி லிருக்கிறது.

இந்தத் திண்டுக்கல்லானது மதுரை ஜில்லாவைச் சார்ந்த பல நாடுகளுக்கும், கோயமுத்தூர் ஜில்லாவைச் சார்ந்த பல விடங்களுக்கும் போய்வர வழியாக இருப்பதால், இந்த இடத்தைக் கைக்கொள்ள அனேக குருநில பெருநில மன்னர்கள் அடிக்கடி சண்டை சச்சரவுகள் செய்து கொண்டிருந்தனர். 1623ஹு முதல் 1659ஹுகளுக்குள் மதுரை நாயுடுகார்களுக்கும் மைசூர் மஹாராஷ்டிரர்களுக்கும், அப்போது திண்டுக்கல்லைச் சுற்றியிருந்த 18 பாளையக்காரர் தலைவருக்கும் பிரமாத சண்டை சச்சரவுகள் நடைபெற்றன. பிறகு மஹாராஷ்டிரர் மைசூர்காரர் வசத்தில் முறையே கொஞ்சகால மிருந்தது. முத்து வீரப்ப நாயுடு காலத்தில் (1609-1622) அவருக்கும் பாளையக்காரர்களுக்கும் பிரமாத சண்டைகள் நடந்தன. மூன்று வருஷங்களுக்குப் பின்பு திருமலைநாயுடு காலத்தில் மைசூராருடன் சண்டை செய்தபோது தளவாய் சேதுபதியின் உதவியினால் மைசூரார் துரத்தப்பட்டனர். 1736ஹு சந்தாசாயபுவால் தாக்கப்பட்டு, எட்டு வருஷங்களுக்குப்பிற்பாடு மைசூர் மன்னர் வசமாகியது. 1755ஹு ஹைதராலியின் துருப்பு

கள் வந்து தாக்க, மதுரையிலும் திரிசிராப்பள்ளியிலு மிருந்த இங்கிலீஷ்காரர் போய்த் தாக்கி 1767ஆ இதைப் பிடித்துக்கொண்டார்கள். பிடித்தாலும் இடையில் இதை இழந்து 1784ஆ மங்களூர் உடன்படிக்கையின் பிரகாரம் மைசூரார் வசமாகி, 1790ஆ மறுபடியும் பிடிக்கப்பட்டு இங்கிலீஷ்காரர் வசமாகிவிட்டது. இந்தத் திண்டுக்கல்லில் பலவித புஞ்சை தானியங்களும் கொஞ்சம் நஞ்சையும் விளைந்தாலும் முதல்தர புகையிலையை ஏராளமாக விளைவிப்பதனால் அநேகர் சுருட்டுக் கிடங்குகளை ஸ்தாபித்துச் சுருட்டு வியாபாரம் செய்து வருகிறார்கள். அச் சுருட்டுக் கிடங்குகளில் சிறந்தது ஸ்பென்ஸர்கம்பெனியாருடையது. இதைப்போய்ப் பார்ப்பவர்களுக்குப் புகையிலையைப் பலவிதமாகப் பக்குவப்படுத்திச் சுருட்டுகள் செய்வித்துப் பெட்டிகளில் அடக்கும் விநோத தொழில்கள் விசிதமாகும். அவைகள் இந்தியாவில் மாத்திரமன்றி ஐரோப்பா அமெரிக்கா முதலான தூரதேசங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. சிறுமலையில் உற்பத்தியாகும் வாழைப்பழங்கள் இவ்விடம் வெகு நயமாக வாங்கலாம். இத் திண்டுக்கல் சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனுக்கு 306½ மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூ 3½ கொடுக்கவேண்டும்.

---

## கோடைக்கானல்.

இது மதுரை ஜில்லாவைச் சார்ந்த திண்டுக்கல் தாலுக்காவைச் சார்ந்திருக்கிறது. இதற்கு அம்மையநாய்க்கனூர் ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி, கட்டை வண்டிகளின் மூலமாகவும் - ஜட்காவண்டிகளின் மூலமாகவும் பெரிய குளத்திற்குப் போய், அங்கிருந்து ஐந்துமைல்கள் தூரத்தி லிருக்கும் கிருஷ்ணப்ப நாயுடு தோப்புக்குப் போய், அங்கிருந்து 12 மைல்கள் தூரத்தி லிருக்கும் கோடைக்கானல் மலையேறிப் போவது பழைய வழக்கம். இப்போது அம்மையநாய்க்கனூரிலிருந்து மோட்டார் வண்டிகளி லேறி நேராகக் கிருஷ்ணப்ப நாயுடு தோப்புக்குப் போய் அங்கிருந்து டோரி குதிரை நாற்காலிகளின் மூலம்மாக முறையே 8 ரூபாய், 2 ரூபாய், 4½ ரூபாய் வாடகை கொடுத்துச் சௌக்கியமாகப் போகலாம். அப்படிப் போனாலும் சாமான் முதலானவைகள் இந்தக் குறுகலான வழியில் போய்வருவது கஷ்டமெ

ணக் கண்டு, இப்போது அம்மையநாய்க்கனூரி லிருந்து நிலக்கோட்டை, வத்தலகுண்டு தாண்டி, அதற்கு 4-வது மைலி லிருந்து பிரியும் கங்கோல்பட்டிமுதல கோடைக்கானலுக்குப் போக 32 மைல்கள் தூரத்திற்குச் சுமார் 14 அடிகள் அகலமுள்ள புது ரோடு போடப்பட் டிருக்கிறது. இக் கோடைக்கானலானது சமுத்திர மட்டத்திற்கு மேல் சுமார் 7000 அடிகள் உயர மிருப்பதால் அநேக ஐரோப்பியர்கள் வெயிற்காலத்தில் இங்குவந்து 6, 7 மாதங்கள் தங்கிப் போகிறார்கள். இது முனிசிபல் நகரமா யிருப்பதோடு சுமார் 400 பங்களாக்களும், சுதேசிகள் வசிக்கும் 500 சிறு வீடுகளும் இங்கு இருக்கின்றன. இவைகளில் 2906 குடிகள் வதிந்து வருகிறார்கள். குடிகள் உபயோகத்திற்காகக் குழாய்த் தண்ணீர், ஆஸ்பத்திரி, சப் மாஜிஸ்ரேட் கச்சேரி, சப் ரிஜிஸ்ட்டிரார் ஆபீஸ், போலீஸ்-பாரஸ்ட்-முதலான ஆபீஸ்கள் இருக்கிற தன்றியில், சில வருஷங்களுக்கு முன்பு சென்னை நுங்கம்பாக்கத்தி லிருந்த கவர்ன்மெண்ட் நக்ஷத்திர ஆபீஸையும் இங்கே கொண்டுவந்து ஸ்தாபித்திருக்கிறார்கள். வெள்ளைக்காரர்களுக்கு உபயோகமாக ஒரு கிளப்பும், படகுகளில் போய் சுகமடைய சுமார் 3½ மைல் விஸ்தீரணமுள்ள ஒரு ஏரியும், பிக்னிக் என்னும் விநோத உணவு சாப்பிட்டுச் சந்தோஷமாக உலாவிவர 'பில்லர்ராக்' என்னும் கோபுரமலை, 'fairy fall' தண்ணீர் வீழ்ச்சிமலை, புலிக்காடு என்றுதி விடங்க ளிருக்கின்றன. இந்த மலையின் குளிர் காற்று தேக ஆரோக்யமானதாய் இருப்பதால் அமெரிக்கன், ரோமன், ஜெர்மனி, லண்டன் மிஷன், கிறிஸ்தவமத போதகர்களும், ஏராளமாக வந்து தங்குவதோடு சில பல பாடசாலைகளையும்ஸ்தாபித்திருக்கிறார்கள். இங்கே வருஷம் ஒன்றுக்கு 60 அங்குல மழையும், உஷ்ண காலத்தில் 42௨ முதல் 76௨ வரையில் குளிர்ந்திருப்பதால் வெள்ளைக்காரருக்கு உபயோகமான உருளைக்கிழங்கு, மொட்டைகோஸ் முதலான காய்கறி வகைகளும்; பேரி, ஆப்பில் முதலான பழவர்க்கங்கள் மாத்திரம் விளைகின்றன. மலையிலிருந்து 6, 7 மைல்களுக்குக் கீழ் இருக்கும் தாண்டிக்குடி, பன்னைக்காடு, இருபாழ்ச்சி அய்யம்பாளையம், முதலான சார்புகளில் ஏலம், காப்பிக்கொட்டை, வாழை முதலா[illegible]மாக விளைகின்றன. பூமபாறை மன்னவனூர் [illegible] மலைக் கிராமங்களில் நெல், [illegible] சாமை வெள்ளைப்பூண்டு [illegible]வைகளும், தினை முத[illegible]

தானியங்களும் ஏராளமாக விளைவிக்கப்படுகின்றன. இந்தக் கோடைக்கானலுக்குப் போகும் அம்மைய நாயக்கனூர் ஸ்டேஷன் சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 320மைல்கள் தூரத்தில் இருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு சார்ஜ் சுமார் 4 ரூபாய் கொடுக்கவேண்டும்.

---

## இராமநாத சேதுபதி ஸமஸ்தானமும், சிவகங்கை ஜமீனும்.

இராமநாதபுர ஸமஸ்தானம் எப்போது எவரால் ஸ்தாபிக்கப்பட்டதோ அதை விவரமாகத் தெரிவிக்கும் சரித்திர சாதனங்கள் கிடைக்கவில்லை. ஆயினும், இக்ஷுவாகு வம்ச திலகராகிய ஸ்ரீராமர் வனவாசம்செய்தபோது, அவருடைய உத்தமபத்தினியாகிய சீதையை இராவணன் எடுத்துக் கொண்டுபோய் இலங்கையில் வைத்திருக்கிற சங்கதியைக் கேட்டு, அந்த இராவணனை ஜயித்துச் சீதையை மீட்கவந்ததில், இடையில் சமுத்திரமிருக்கக் கண்டு, அச்சமுத்திரத்திற்கு வாராவதியைக் கட்ட ஆரம்பித்தபோது அவருக்கு அடுத்த விடங்களிலிருந்து வீரதீரமுள்ள ஒரு ஜாதியார் வந்து வேண்டிய உதவிகளைச் செய்ததனால், அவர்களுடைய நன்றியை நன்குணர்ந்த ஸ்ரீராமர் அவர்களைப் புகழ்ந்து கொண்டாடி 'மறவோம்' என்றார். 'இலங்கைக்கு வாராவதி கட்டிய காலத்தில் நீங்கள் செய்த உதவியை என்றும் மறக்கமாட்டோம்' என்பது கருத்தாம். ஆகவே, இந்த ஜாதியாருக்கு அன்றுமுதல் 'மறவர்' என்ற பெயருண்டாகியதாம். இந்த மறவர்களில் (1) செம்பு நாட்டு மறவர், (2) கொண்டயன் கோட்டை மறவர், (3) அதிநூர் நாட்டு மறவர், (4) அகத்து மறவர், (5) உரையூர் நாட்டு மறவர், (6) உப்புக்கோட்டை மறவர், (7) குரிச்சிக்கோட்டை மறவர் என ஏழு வகுப்பார்களுண்டு. இவர்களுடைய மதம் சைவம். (Vide P. 113 - 114. M. D. Manual.)

**இவர்களுக்குச் சேதுபதி என்னும் பெயர் வந்ததற்குக் காரணம்.**

ஸ்ரீராமர் இராவணனை ஜயித்து மீண்ட காலத்தில், பிரம்மஹத்தி நீங்கும்படி சேதுபந்தனத்துக் கருகே நீராடிய தீர்த்தத் துறையருகில் மூர்த்தி ஸ்தலமாக ஸ்தாபித்து இராமேசுவரத்திற்கு வந்து, அங்கு ஒரு சிவலிங்கத்தை ஸ்தாபித்து வணங்கியவிடம் மகா விசேஷ திவ்விய தீர்த்த மூர்த்தி யாத்திரை ஸ்தலம் என்று அந்த ஸ்தலத்தைத் தரி

சிக்க ஆரியவர்த்தம் ஒரெட்டிலு மிருக்கும் ஏராளமான ஜனங்கள் சதா யாத்திரை செய்யும்போது, இடையில் பயங்கரமான காட்டு மிருகங்களினாலும், கள்ளர் முதலான கொடிய திருடர்களினாலும் கஷ்ட நிஷ்டூரங்களுண்டாகாவண்ணம், இந்த மறவர் ஜாதியில் சிரேஷ்டரானவருக்குச் சேதுபதி அதாவது இராமேசுவர கடற்கரைக் குட்பட்ட ஜனசமூகத்தாருக்குப் பதித்தலைவர் அல்லது அரசர் என்று பொருள்படும் பட்டத்துடன் ஸ்ரீராமர் நியமித்த தன்றியில், இவர்கள் வசிக்கும் இடத்திற்கும் தமது பெயரே வழங்கட்டு மென்று எண்ணி 'ஸ்ரீராமநாதபுரம்' என்று பெயருமிட்டு, இச் சமஸ்தானத்துக்கு வேண்டிய உதவிகளைச் செய்து, அயோத்தியாவுக் கேகினாராம்.

அன்றுமுதல், இந்த சமஸ்தானத்துக்கு இராமநாதபுர சமஸ்தானமென்றும், இவர்களுக்குச் சேதுபதி என்கிற சிறந்த பட்டப்பெயரும் வழங்கி வருகின்றது. இச் சேதுபதிகளுக்குச் சில காலங்களில் தேவபுரம், இராமேசுவரம், தோண்டி, இரகுநாதபுரம், விரவநல்லூர் முதலான விடங்கள் பிரதான பட்டணங்களாக இருக்கினும், இராமநாதபுரமே புராதன பிரதான பட்டணமாம்.

இவர்களுக்குச் சேதுபதி என்கிற பட்ட மிருப்பதைப் பல பாண்டியர்களும் அங்கிகரித்துக் கொண்டதன்றியில்; சோழன், பாண்டிய நாட்டின்மேல் படை எடுத்துவந்து பிடித்துக்கொள்ளும் தருணத்தில், பாண்டியனுக்கு உதவியாக அதிவீர ரகுநாத சேதுபதி சோழனைத் துரத்தி யடித்தபடியால், பாண்டியன் கொண்டாடி அச் சேதுபதிக்குத் தொண்டரேவு துறையை வெகுமதியாகக் கொடுக்கப் பெற்றார்.

பிறகு கனரா நாட்டு மன்னன் பாண்டிய நாட்டின் மேல் படை எடுத்து வந்தபோது, பரபீதி சேதுபதி வந்து அக் கனரா நாட்டு மன்னனைத் துரத்தி யடித்ததினால், அச் சேதுபதிக்கு, 'பாண்டிய நாட்டு ஸ்தாபகர்' என்கிற பட்டப் பிருதுடன் திருச்சூழி, பழனிமடம், திருப்புவனதி நாடுகளை மானியமாகக் கொடுத்தார்.

பிறகு சோழநாட்டின்மேல் தெலுங்கு நாட்டார் படையெடுத்துவந்து தாக்கியபோது, ஸ்ரீ வரதுங்க ரகுநாத சேதுபதி அத் தெலுங்கரைத் துரத்தி யடித்ததினால், அவ

ருக்கு, 'சோழ நாட்டைக் காத்தார்' என்கிற பட்டத்தை யும் கொடுக்கப்பெற்றார். மேலும், 'குலோத்துங்க சேதுபதி' காலத்தில் சோழன் பாண்டிய நாட்டின்மீது வர, அவனை இச் சேதுபதி ஜயித்து பட்டுக்கோட்டை, அறந்தாங்கிக் கோட்டைகளைப் பெற்றார். 'ஸ்ரீ சமரகோலாகல இரகுநாத சேதுபதி' காலத்தில், சோழ பாண்டிய நாடுகளின் எல்லை யைப்பற்றி உண்டான வழக்கைத் தீர்க்க, இச் சேதுபதியை நியமிக்க, அவர் இருகக்ஷிக்காரர்களுக்கும் திருப்திகரமாக எல்லை வழக்கைத் தீர்த்ததில், சோழன் மெச்சி சேதுபதி க்கு மன்னார் குடாக்கடலில் முத்துச்சலாபம் எடுத்துக் கொள்ளச் சுதந்திரம் தந்ததன்றியில், அந்தப் பாண்டிய னும் மெச்சிச் சேதுபதிக்கு 'மஹாராஜா இராஜபரமேசு வர மார்த்தாண்ட இராஜகம்பீரர்'' என்ற பிருதையும் வகிக் கும்படி கொடுத்தார்.

அநந்தரம் விஜயநகரஸமஸ்தானத்தார் தெற்கே இருக் கும் இந்துக்களை வருத்தும் மகமதியரைக் கண்டிக்க மந்தி ராலோசனை செய்ய ஒவ்வொரு இந்து மன்னனையும் பிரதி நிதிகளை யனுப்பும்படி உத்தரவு செய்தபோது, பாண்டியன் சேதுபதியைத் தமது பிரதிநிதியாக அனுப்ப, அச் சேது பதி போய் அங்குக் காட்டிய புத்திசாமர்த்யங்களைக் கண்டு, விஜயநகர சமஸ்தானதிபதி அச் சேதுபதிக்கு சோழனிட மிருந்த மன்னார்கோயில், திருவாரூர், தீவுகோட்டை முத லான இடங்களை வெகுமதியாகக் கொடுத்தார். நிற்க, அந்தச் சேதுபதிகளுடைய சரித்திரத்தைப்பற்றி, அச் சேதுபதி யின் தற்கால ஸமஸ்தான வித்துவ சிரோமணியும், மது ரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழின் பத்திராசிரியரும், அந்த ஸமஸ்தான சரித்திரத்தை ஆதியோடந்தமாக அறிந்த ஸ்ரீமத் உபய வேதாந்த பண்டிதராகிய ஸ்ரீ ரா. இராகவை யங்காரவர்கள் (1904ஹு) சுபகிருதுஹு மார்கழி தைமா தங்களில் வெளியிட்ட செந்தமிழ்ப் பத்திரிகைகளில் பிரபல மாக எழுதிப் பதிப்பித்திருக்கிறார். அச் சரித்திரங்களினால், சேதுபதிகளுக்கு வில்லேருழவர், வாளுழவர், மழவர், வீரர், வெட்சிமறவர், கரந்தைமறவர், சேரன் மறவர், பாண்டியன் மறவர், சோழன் மறவர் என்றுதி பெயர்களைப் பலகாலங் களிற் பல பாவாணர்களால் பாடப் பெற்றதாகவும்; அவர்க ளில் நன்னன், ஏறை, அத்தி, கங்கன், கட்டி முதலானோர் சேரன் மறவரென்றும்; கோட்டைப் பொருனன், பண்ணி

முதலானோர் பாண்டியன் மறவரென்றும்; பழயன், பண்ணன் முதலானோர் சோழன் மறவரென்றும்; செம்பிநாட்டிறை, இரவிகுலத்தவர், அகளங்கன் என்றுதி அநேக சிறப்புப் பெயர்களைப் பெற்று கி-பி. 1064 ௵ குலோத்துங்க சோழன் வீரபாண்டியனை வென்றபோது அம்மறவர் பாண்டிய நாட்டில் குடியேறி, பிறகு நாளாவட்டத்திற் கடலோரமாகப் போந்து, சேதுநாட்டை ஸ்தாபித்தாண்டார்கள் என்றும்; அகநானூறு, புறநானூறு, ஒருதுறைக்கோவை முதலான புராதன நூல்களிலிருந்து அநேகமேற்கோள்களை யெடுத்துக் காட்டியிருக்கிறார். அன்றியும், அநேக கையெழுத்துப்பிரதிகளைப் பரிசோதித்து (1) ஆதிரகுநாத சேதுபதி, (2) ஜயத்துங்க ரகுநாத சேதுபதி, (3) அதிவீரரகுநாதர், (4) வரகுண ரகுநாதர், (5) குலோத்துங்கர், (6) சமரகோலாகலர், (7) மார்த்தண்ட பைரவர், (8) சுந்தரபாண்டியர், (9) காங்கேய ரகுநாத சேதுபதி, (10) விஜயமுத்து ராமலிங்க சேதுபதிகளாகப் பத்து புராதனசேதுபதிகளுடைய பெயர்களையும் தெரிவித்திருப்பதன்றியில், சேதுபதிகளால் ஆதரிக்கப்பெற்ற அடியிற்கண்ட தமிழ் வித்வான்களைப்பற்றியும் விவரமாகத் தெரிவித்திருக்கிறார்.

அத் தமிழ் வித்துவான்களின் விவரம்:

அகோர தேவர், திருச்சிற்றம்பல தேசிகர், தலைமலை கண்ட தேவர், சிற்றம்பலக் கவிராயர், மங்கைபாகக் கவிராயர், அமிர்த கவிராயர், இராமாநுஜ கவிராயர், சக்கரைப் புலவர், ஜவ்வாதுப் புலவர், சோமசுந்தர கவிராயர், மதுரகவி, பெரிய சரவணக்கவி, முத்துநாயகப் புலவர், சிறிய சரவணக் கவிராயர், கிருஷ்ணையங்கார், முத்தழக ரையங்கார், முத்துசாமி ஐயங்கார், வேலாயுதக் கவிராயர், முத்துவீரப்பிள்ளை, வெண்பாப்புலி முதலான மஹாவித்துவான்களாம். சேர சோழ பாண்டியர்க்குப் பின் சேதுபதிகளே தமிழ்ப்பாஷையை அபிமானித்துப் பாதுகாத்தவர்கள்.

இச் சேதுபதிகள் கல்வியில் மாத்திரமல்ல, ஸமஸ்தானத்தைச் சார்ந்த தேவாலயங்களுக்கும், தருமசத்திரங்களுக்கும் ௵ ஒன்றுக்கு நான்கு இலக்ஷம் ரூபாய் செலவிட்டு வருவதோடு, சில்லரைத் தருமங்களுக்கு முப்பதினாயிரம் ரூபாயாகத் தரும மகிமையாகக் கொண்டு செலவிட்டு வருகிறார்கள்.

---

## சேதுபதிகளுடைய விவரம்.

இனி, இந்த இராமநாதபுரத்தை யாண்ட சில விசேஷ சேதுபதிகளின் பெயர், காலம் முதலானவைகளைப் பற்றித் தெரிவிப்போம்.

சரித்திர சாசனங்களால் நமக்குத் தெரிந்த முதல் சேதுபதியின் பெயர் 'சடையக்க தேவர்'. இவர் (சகாப்தம் 1411 முதல் 1422) அதாவது கி. பி. 1604௵ புகளூர் கிராமத்தில் பட்டத்தைப் பெற்று, அந்தப் புகளூர் கோட்டையை விருத்தியாக்கியும், வடக்கு வட்டிகை, காளியார் கோயில், பட்டமங்கலம் முதலான கிராமங்களைச் சேர்த்து விருத்தியாக்கியும், குடிகளுக்கு அநேக நன்மைகளைச் செய்தும், 17 வருஷங்கள் வரையில் ஆண்டும், 1621௵ பரமபதமடைந்தார்.

இவர் சரித்திரத்தைப்பற்றி 1855௵ 'பரோரா கம்பெனியார்' (Pharoara & Co) பதிப்பித்த தக்ஷண இந்திய சரித்திரத்தில் (A Gazetter of Southern India) 393-வது பக்கத்தில் கி பி. 1590-ஆம் வருஷம் மதுரையை யாண்டுகொண்டிருந்த முத்துகிருஷ்ணப்ப நாயடுகாருடைய ஆசாரியர் இராமேசுவர யாத்திரை செய்தபோது, அவ்வாசிரியருக்கு வேண்டிய உதவிகளைச் செய்ததனால், அந்த நாயடவர்கள் சந்தோஷப்பட்டு, இந்த உடையார் சடையக்க தேவருக்குச் 'சேதுபதி' என்ற பட்டம் கொடுத்ததாகவும், இந்த சேதுபதி கி. பி. 1623-ம் வருஷம் இறந்ததாகவும் எழுதப்பட்டிருக்கிறது.

இந்தச் சடையக்க தேவருடைய குமாரர் 'குட்டன் சேதுபதி' 1621-ம் வருஷம் பட்டத்துக்குவந்து 1635-வருஷம் இறந்தார். இவருக்குக் கங்கை நாச்சியார் என்ற சகோதரியும், சடையக்கதேவர் என்ற சகோதரரும் இருந்தார்கள். இந்தச் சடையக்கதேவருக்குத் தளவாய் சேதுபதி என்றும் பெயர். இவர் 1637-ம் வருஷம் பட்டத்துக்கு வந்து மூன்று வருஷம் ஆண்டு நான்காவது வருஷம் ஆரம்பத்தில் தமது தத்து புத்திரரான 'இரகுநாத தேவரை'ப் பட்டத்திற்குப் பாத்திரராக்கப் பிரயத்தனிக்கையில், காளியார் கோயிலிலிருந்த இவர் சகோதரரான தம்பித்தேவர் அல்லது பெட்டண்ண நாய்க்கரெழுந்து சேதுபதிப் பட்டம் தமக்குக் கிடைக்கவேண்டுமென்று சச்சரவு செய்து மதுரை திருமலை நாயடுகாருடைய உதவியை

நாட, அவர் முன்னும் பின்னும் யோசியாமலும், தக்க வார்சு இன்னாரென்று தெரிந்துகொள்ளாமலும், தளவாய் சேதுபதியைப் பிடித்து வரும்படி தமது தளகர்த்தர் இராமப்பய்யருடன் ஒரு சிறு சேனையை யனுப்ப, அவரும் வந்து தளவாய் சேதுபதியைப் பிடித்துக்கொண்டு மதுரைக்குப்போய்ச் சிறையிலிட்டுத், தம்பித்தேவருக்குப் பட்டங் கட்ட, உடனே தளவாய் சேதுபதியின் சகோதரருடைய குமாரர்களாகிய இரகுநாத தேவர், நாராயண தேவர் என்பவர்கள் எழுந்து, தம்பிதேவர் தக்க வார்சு அல்லவென்று சண்டைகளைச் செய்துவந்ததில், சமஸ்தானத்தில் இராஜனற்றுக் குடிகள் தவித்தும், இராமேசுவர யாத்திரைக்காரர்கள் அதிக கஷ்ட நிஷ்டூரங்களுக் குட்பட்டும், திருமலை நாயடு அவர்களிடம் முறையிட, அவர் தமது குற்றத்தை யறிந்து பரிதபித்து, உடனே தளவாய் சேதுபதியைச் சிறையிலிருந்து விடுதலை செய்வித்துச் சேதுபதி ஸ்தானத்தை வகிக்கும்படி யனுப்பினார்.

இப்படிவந்த தளவாய் சேதுபதி நாட்டிலுண்டான கலகங்களை யடக்கியும், யாத்திரைக்காரருக்கு வேண்டிய உதவிகளைச் செய்தும் வருகையில், 1645-ம் வருஷம் இந்தத் தளவாய் சேதுபதியைத் தம்பிதேவர் கொலைசெய்து விட்டார். இதனால் ஸமஸ்தானத்தில் அதிக கலகங்க ளுண்டாகிக் குடிகள் கஷ்டப்படுவதைக் கேட்ட திருமலை நாயடுகாரு, இந்த ஸமஸ்தானத்தை மூன்று வகுப்புகளாகப் பிரித்து, இரகுநாததேவரை இராமநாதபுர சேதுபதியாகவும், இவருடைய மாப்பிள்ளையின் சகோதரர்களான தானுகாந்தர் அல்லது தினகர தேவரையும், நாராயண தேவரையும் திருவதானியில் கூடிவாழவும், தம்பி தேவரைச் சிவகங்கையிலிருந்து ஆண்டுவரவும் நியமித்தார்.

இந்த நியமனம் நெடுங்காலம் நிற்கவில்லை. இரகுநாத சேதுபதி அல்லது திருமலை சேதுபதி 1648-ஆம் வருஷம் முதல் 1670-ஆம் வருஷம் வரையில் ஆண்டார். தானுகாந்தர் அல்லது தினகர தேவரும், தம்பிதேவரும் 1659-ம் வருஷம் இறந்துவிட்டபடியால், தளவாயின் தத்து புத்திரராகிய விஜயரகுநாத சேதுபதி சிவகங்கையையும், திருவதானையையும்பிடித்துக்கொள்ள, மூன்று வகுப்புகளாகப் பிரிக்கப்பட்ட ஸமஸ்தானம் மறுபடியும் ஒரே ஸமஸ்தானமாகியது. தானுகாந்த தேவர் உயிரோடிருந்தபோது, சேதுபதி

யும் கலந்து தஞ்சைமேல் படை யெடுத்துப்போய், மன்னார்கோயில், பட்டுக்கோட்டை, தேவகோட்டை, அறந்தாங்கி, திருவாரூர் இவற்றைப் பிடித்துக்கொண்டார்கள். பிறகு மைசூரார் மதுரையின்மீது படை எடுத்து வந்தபோதும்; இந்தச் சேதுபதியானவர் திருமலை நாயடவர்களுடைய சேனையை நடத்தி மைசூராரை முறியடித்து ஓட்டியபடியால், நாயடவர்கள் இவரைக் கொண்டாடித் திருப்புவனம், திருச்சூளூர், பள்ளிமடை கிராமங்களை இனமாகக் கொடுக்கப் பெற்றும், நாயடவர்களுக்குத் திருப்திகரமாக நடந்தும், 30-வருஷம் ஆண்டும், 1670-ஆம் வருஷம் இறந்தார். இவர் காலத்தில்தான் இராமநாதபுர சமஸ்தானத்தில் நவராத்திரி கொலு உற்சவம் முதல்முதல் ஆரம்பித்துக் கொண்டாடப்பெற்றது.

சூரியதேவ சேதுபதி:—இவர் முன் சொன்ன சேதுபதியின் சகோதரருடைய குமாரர். இவரை மதுரை நாயடு ஸமஸ்தான தளவாய் வெங்கட கிருஷ்ணம நாயடு பிடித்துத் திரிசிராப்பள்ளியில் காவலில் போட்டு 1685-ல் கொன்றுவிட்டாராம். இச் சேதுபதிக்கும் சந்ததி இல்லாமையால் அத்தண்ணர் சந்திரப்ப சேர்வைக்காரர் ஸமஸ்தானத்தை நடத்திவர, மறவர் ஜனங்கள் மஹா நாடு கூடி 1686-ஆம் வருஷம் இறந்துபோன சேதுபதியின் சிற்றப்பனுருடைய பேராகிய புட்டின இரகுநாத சேதுபதி அல்லது கிழவன் சேதுபதிக்குப் பட்டங் கட்டிவைத்தார்கள்.

இந்த இரகுநாத சேதுபதி: மஹா பராக்கிரமசாலியாகி (1673-1708) 37-வருஷம் ஆண்டுவந்தார். இவர் கிறிஸ்து மதத் துவேஷியானபடியினுல், சுதேச கிறிஸ்தவர்களை வருத்தி வந்தாராம். இவர் காலத்தில்தான் (1693ஆு பிப்ரவரிமீ) ஜான். டி. பிரிட்டோ (John de Brito) என்பவர் கொல்லப்பட்டார். 1700 - 1702-ஆம் வருஷம் தஞ்சை ராஜனோடு பிரமாத சண்டை செய்ததில், தேவகோட்டை, மன்னார் கோயில், திருவாரூர் முதலான இடங்களைத் தஞ்சை மன்னர் விட்டுவிடச் சம்பவித்தது. 1706ஆு தஞ்சைபரரோடு பின்னுமோர் சண்டை செய்ததன்றியில் மதுரைமீது படை எடுத்து வந்த ரஸ்தம்கானைத் தாக்கித் துரத்தியடித்தார். புகளூரிலிருந்த ஸமஸ்தானத்தை இராமநாதபுரத்துக்கு மாற்றியும், இரகுநாதருடைய தங்கையாகிய காட்டேரியை விவாஹம் செய்துகொண்டும், அந்த மனைவி

யின் கூடப் பிறந்த இரகுநாதரைப் புதுக்கோட்டைக்குத் தொண்டமானுக்கியும், 1708-ஆம் வருஷம் பரமபத மடைந்தார். இவரோடு இவருடைய அநேக மனைவிமார்கள் உடன் கட்டை ஏறினார்களாம்.

இவருக்குப் பிறகு இவரது சகோதரியின் குமாரனும், தமது தத்து புத்திரருமாகிய விஜய ரகுநாத தேவர் அல்லது திருவுடையதேவர் (1709-1723-ஆம் வருஷம்) பட்டமடைந்தார். இக்காலத்தில் தஞ்சைமன்னர் புதுக்கோட்டைத் தொண்டமானைத் தன் வசமாக்கிக்கொண்டு சேதுபதியின்மேல் சண்டைக்கு வர, சேதுபதி சேனைக்குத் தொத்து வியாதி கண்டு தவித்து இறந்தார்கள். இக்காலத்தில்தான் நிலக்கோட்டைக் குடும்பத்தார் பிரபலரானார்கள். இந்த நிலக்கோட்டைக் குடும்பத்தின் தலைவர் இராமநாதபுர சேதுபதியின் குமாரத்தி அகிலாண்டேசுவரியை விவாஹம் செய்துகொண்டார்.

தாண்டதேவர்: (1723-1724-ம் வருஷம்) இவர் கிழவன் சேதுபதியின் புராதன பேரர். இவருக்கு விரோதமாகக் கிழவன் சேதுபதியின் குமாரர் பவானி சங்கர தேவர் எழுந்து தஞ்சை ராஜனுடைய உதவியினால் இராமநாதபுரத்தைப் பிடித்தும், தண்டதேவரைச் சிறையில்போட்டுக் கொன்றும், சேதுபதி பட்டம் கட்டிக்கொண்டார்.

பவானி சங்கர சேதுபதி: (1724 - 1728-ம் வருஷம்) தமக்குக் கீழ்ப்பட்ட பாளையக்காரர்களைத் தக்கபடி நடத்திவராமையால், சரவண பெரிய உடையதேவர் தஞ்சைக்கு ஓடிப்போய், அந்த இராஜன் முன், ஒரு பெரிய புலியோடு எதிர்த்து ஜயித்துச் சந்தோஷம் மூட்டியதினால், அந்த இராஜனுடைய உதவியின்பேரில் அங்கு அடைக்கலமாக இருந்த சேதுபதியின் தாய் மாமனார் குட்ட தேவருடன் சிநேகம் செய்தும், இருவரும் கூடித் தஞ்சை நாயக்கருடைய சேனாபலத்தினால் உறையூரில் சேதுபதியோடு சண்டைசெய்து ஜயித்தும், பவானி சங்கரரைச் சிறையில் பிடித்து வைத்துவிட்டும், குட்டதேவருக்கு 1729-ம் வருஷம் பட்டம் கட்டினார்கள்.

குட்டதேவர் அல்லது குமாரமுத்து விஜய இரகுநாத சேதுபதி: (1728 - 1734 ஆம் வருஷம்) இவர் இராமநாதபுர முழுவதையும் ஆளவில்லை. தஞ்சை மன்னர் பாம்பனு

க்கு வடக்கேயுள்ள இடங்களைப் பிடித்துக்கொண்டார். மற்ற பாகங்களை ஐந்து பிரிவுகளாக வகுத்தும், அவைக ளில் இரண்டு பாகங்களை இந்த முத்துக்குமாரர் வைத்துக் கொண்டும், சிவகங்கையைப் பிரதான பட்டணமாகக்கொ ண்டும் ஆண்டார். இதற்கு வடுகை என்று பெயர். மற்ற மூன்று பாகங்களாகிய பெரிய வடுகை என்னும் இராமநாத புரத்தைக் குட்டதேவர் ஆண்டுவர, இவர் குமாரர்,

முத்துக்குமார விஜயரகுநாத சேதுபதி: (1734 - 1747-ஆம் வருஷம்) பட்டமடைந்தார். இவர் காலத்தில் இவர் தளவாய்க்கு அதிக அதிகாரம் கொடுத்துவிட்டதில், இவ ருடைய பெருமை பிரதிஷ்டை பெறவில்லை. இவர் பாலிய வயதிலேயே சந்ததியற்று இறந்துவிட்டபடியால், குட்ட தேவருடைய சந்ததி இராக்க தேவருக்குப் பட்டம் கட்டப் பட்டது.

இராக்கதேவ சேதுபதி: (1747-1748 ஆம் வருஷம்) இவர் காலத்தில் தஞ்சை மன்னர் படையை வெள்ளையன் என்னும் சேர்வைக்காரன் நடத்தித் திருநெல்வேலி பாள யக்காரர்களைத் தாக்கிவருவதைச் சேதுபதி பார்த்து, அச் சேர்வைக்காரரை வரவழைக்க, அவர் வந்து சேதுபதி யைத் தாக்க, சேதுபதி பயந்து பாம்பனுக்கு ஓட, அவரைத் தொடர்ந்துபோய்ப் பிடித்துச் சிறையில்போட்டுச் சேது பதிப் பட்டத்தைக் கிழவன் குடும்பத்தைச் சார்ந்த செல் வத் தேவருக்குக் கொடுக்கச் சம்பவித்தது.

இந்தச் செல்வத்தேவர்: (1748 - 1760-ம் வருஷம்) ஆண்டார். இவர் காலத்தில் தஞ்சை மன்னன் படை எடுத்து வந்து தாக்க, 1760-ம் வருஷம் இறந்துபோக, இவர் சகோ தரி குமாரர் சுமார் இரண்டு வயதுள்ள குழந்தைக்குப் பட் டம் கட்டப்பட்டது.

குழந்தையாகிய இந்த முத்து இராமலிங்க தேவர்: (1760 - 1772-ம் வருஷம்) ஆண்டார். இவர் காலத்தில் வெள்ளைச் சேர்வைக்காரர் இறந்துவிட்டபடியால், தாமோ தரம் பிள்ளைக்குத் தளவாய்ப் பட்டங் கட்டப்பட்டது. பிறகு முத்து திருவாய் நாச்சியார் கொஞ்சகாலம் ஆண்டு வருகை யில், 1770-ஆம் வருஷம் தஞ்சைமன்னர் ஹனுமந்த குடி யைக் காரணமாகக் கொண்டு இராமநாதபுரத்தின்மேல் படை யெடுத்துவர, கர்னாடக நவாபு மகமது அலி , ஆங்கி

லேயரைக் கூட்டிக் கொண்டுபோய்த் தஞ்சை மன்னனைத் தாக்கிக் கப்பம் பெற்றுக்கொண்டார்.

இந்தச் சண்டையில் சேதுபதி, நவாபுக்கு உதவியாக வரவில்லை என்ற காரணத்தைக் காட்டி 1772-ம் வருஷம் தமது குமாரரிடம் ஒரு சேனையை யனுப்பி, அதற்கு ஆங்கிலேயரும் உதவியாக வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ள, ஆங்கிலேயரும் ஜோசப் ஸ்மித் (Joseph Smith) என்னும் தளகர்த்தரை யனுப்பித் தாக்கச் செய்து, வாலிப சேதுபதியின் தாயார் முத்து திருவாய் நாச்சியாரையும், தங்கை மங்களேசுவரி நாச்சியாரையும் பிடித்துத் திரிசிரபுரத்தில் சிறையில் வைத்தார்கள். 1773ஸு முதல் 1780ஸு வரையில் (எட்டுவருஷகாலம்) இராமநாதபுரமானது மகமதியர் வசத்திலிருக்க, இடைக்கிடை சண்டை சச்சரவுகளுண்டாகிச் சிறையிலிருந்த சேதுபதிகளை விடுதலை செய்வித்தும், வருஷம் ஒன்றுக்கு 17,500 ரூபாய் கப்பம் கட்டிவிட்டு அச்சேதுபதிகளே ஸமஸ்தானத்தை யாண்டுவரும்படி செய்ததில், அவர் 14 வருஷங்க ளாண்டுவர, மறுபடியும் அவர்கள் மேல் அதிருப்தி உண்டாகி, 1794-ம் வருஷம் திரிசிராப்பள்ளியில் சிறையில் வைத்தார்கள்.

1802-ஆம் வருஷம் கர்னாடகதேசம் ஆங்கிலேயர் வசமாகியபடியால், அவர்கள் சேதுபதியை அழைத்துப்போய்ச் சென்னையில் சிறையில் வைத்திருந்து 1803-ம் வருஷம் சேதுபதியின் சகோதரி மங்களேசுவரிக்கு ஸமஸ்தானத்தைக் கொடுத்தார்கள்.

பட்டம் பெற்ற மங்களேசுவரி நாச்சியார் (1803-1812 வருஷம்) ஆண்டகாலத்தில் ஆங்கிலேய கவர்ன்மெண்டார் நிரந்தர செட்டில்மெண்டாக ரூபா 3,24,387-1-2 நியமித்து, மிஸ்டர் சலிவனை பேஷ்கஷ் கலெக்டராக நியமித்தார்கள். பாரோர கம்பெனியார் பதிப்பித்த சரித்திரத்தில் பேஷ்கஷ் தொகை ரூபா 3,31,565-8-0 என்று கண்டிருக்கிறது. இந்த அம்மையார் 10 வருஷம் ஆண்டு அநேக தருமங்களைச் செய்தனர்.

இவருக்குப் பிறகு இவரது தத்து புத்திரராகிய அண்ணுச்சாமி சேதுபதி (1812-1815-ம் வருஷம்) பட்டத்துக்கு வந்தார். இவர் மைனரானபடியால், ஸமஸ்தான காரியங்களைத் தியாகராய பிள்ளை என்னும் பிரதானியார்

நடத்திவருகையில், இராமலிங்க சேதுபதியின் குமாரி ராணி சிவகாமி நாச்சியார், தாம்தான் பட்டத்துக்குத் தக்க வார்சு என்று சொல்ல, அது சிவில் கோர்ட்டில் விசாரிக்கப் பட்டும், 1813-ம் வருஷம் புரோவின்ஷியல் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டும், இராணியாருக்கு அனுகூலமாகத் தீர்ப்பு கிடைக்க, அத் தீர்ப்பை 1816-ம் வருஷம் சதர் அதாலத் கோர்ட்டார் மாற்றிவிட, 1825ஆம் பிரிட்டிஷ் பிரபுக்கள் சபைக்கு அப்பீல் செய்ய, அந்தச் சபையார் சதர் அதாலத் கோர்ட்டார் செய்ததே சரியென்று ஸ்தாபித்து விட்டார்கள்.

சிவகாமி நாச்சியார் (1815-1822-ம் வருஷம்) ஆண்டு வந்தாலும், சர்க்கார் கிஸ்தியைக் கிரமமாகச் செலுத்தாமையால், சமஸ்தானத்தை சதர் அதாலத் கோர்ட்டு விசாரணையில் 14 வருஷங்கள் வைக்கப்பட்டிருந்தது. கடைசியில் அண்ணுச்சாமி தேவருடைய வியாச்சியம் அப்பீலில் அனுகூலமாக முடிவுபெற்றாலும், அந்த முடிவு தெரிவதற்குள் அவர் இறந்துவிட்டபடியால், வழக்கை அவர் மனைவியார் இராணி முத்துவீராயி நாச்சியார் கிரமமாக நடப்பித்தார். இந்த அண்ணுச்சாமி தேவருக்குப் பிறகு, இவரது மைத்துனரும் தத்து புத்திரருமாகிய இராமசாமி தேவர் 1829ஆம் பட்டத்துக்கு வந்து, ஒருவருஷத்திற்குள் (1830-ம்வருஷம்) இறந்துவிட்டபடியால், இவர் குமாரத்திகளில் இராணி மங்களேசுவரி நாச்சியார் பட்டத்துக்கு வந்தார்கள்.

இந்த மங்களேசுவரி நாச்சியார் (1830-1838-ம் வருஷம்) வாலிபராக இருந்தபடியால், இவர் பாட்டியார் முத்துச் செல்வி தேவியாரும், முத்துவீராயி நாச்சியாரும், ஸமஸ்தானத்தை யாண்டு வந்தார்கள். மங்களேசுவரி நாச்சியாரும் இறந்துபோய் விட்டபடியால், இராணி துரைராஜ நாச்சியார் (1838-1845-ம் வருஷம்) ஸமஸ்தானத்தைப் பெற்றார். இவர் மங்களேசுவரி நாச்சியாரின் தங்கை. இவர் முத்துச்சலாப காரியங்களைப் பார்த்துவந்ததில், கம்பெனியாருக்குத் திருப்தியைக் கொடாமையால், ஸமஸ்தானம் கோர்ட் ஆப் வார்ட்ஸில் வைக்கப்பட்டது.

இந்தத் துரைராஜ நாச்சியார் இறந்த பிறகு, இராமசாமி சேதுபதியின் மனைவி ஸ்ரீ பர்வதவர்த்தனி நாச்சியார் பட்டத்துக்குவந்து (1845-1868-ம் வருஷம்) ஆண்டார்.

இவர் ஸ்ரீ முத்துராமலிங்கச் சேதுபதியை ஸ்வீகாரஞ் செய்துகொள்ள அந்தப் பட்டத்தைப்பெற்றார். இவர் வித்வ சிகாமணியாக இருந்ததோடு, விக்கிரகாராதனை முதலான வீண் சடங்குகளை விட்டுப் பிரம்மதியான பாராயணராகிப் பிரம்மஸமாஜமத சித்தாந்தராய் இருந்தும், தேசோபகார மான அநேக தருமங்களைச் செய்தும்; பிரபாகரமாலை, வள்ளி மணிமாலை, முருகாநுபூதி, மும்மொழிமாலை, பாலபோத கம், காயகாப்பிரியா, ரஸிகரஞ்சனம், பிரம்மகைவல்லியம் முதலான கிரந்தங்களை இயற்றிப் பிரகாசித்ததாக 1874ஞ் மிஸ்டர் கோல்ட்டன் அவர்கள் பதிப்பித்த மதுரைச்சீமை விருத்தாந்தப் புத்தகம் 63-வது பக்கத்திற் சொல்லப்பெற் றிருக்கிறது. இந்தச் சேதுபதி 1873ஞ் மாசிமீ தோஷ சுரத்தால் இறந்தார். இக்காலத்தில் ஸமஸ்தான வியாஜ்ஜி யத்தினால் அதிகபணம் செலவாகி, சர்க்கார் கப்பம் கட்டக் கூட வகையற்றுப் போய்விட்டபடியால், ஸமஸ்தானத்தை மஹா மதியூகியும், வித்வசிகாமணிகளின் போஷகரும், மேற்சொன்ன முத்து இராமலிங்க சேதுபதியவர்களுக்குச் சகோதரருமாகிய ஸ்ரீ பொன்னுச்சாமித் தேவர் நடாத்தி வந்தார்.

ஸ்ரீ பொன்னுசாமித் தேவரவர்கள்:—இவர் புதுக்கோட் டைச் சிவஞான தேவருடைய புத்திரர். மஹா வித்வ சிகா மணியாகவும், பக்திமானாகவும் பிரபலமடைந்தவர். இராம நாதபுரம் சீர் கெட்டலைந்த காலத்தில், அதைத் தக்கபடி சீர்திருத்தி நல்ல நிலைக்குக் கொண்டுவந்தார். இவரை தக்ஷணநாட்டின் போஜராஜன் என்று புகழலாம். இவர் ஆறுமுக நாவலரைக்கொண்டு திருக்குறள் பரிமேலழக ருரை, திருக்கோவையாருரை, நன்னூல் விருத்தியுரை, இலக்கணக்கொத்துரை, தொல்காப்பியப் பாயிர விருத்தி, முதற்சூத்திர விருத்தி, தமிழ்ப் பிரயோக விவேகவுரை, தருக்கச் சங்கிரகவுரை, தனிப்பாடற் றிரட்டு, மருத்து நூல் முதலானவைகளைத் தக்க வித்துவான்களால் எழுதி வித்துப் பதிப்பித்தனர். திரிசிரபுரம் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை யென்ன? மாம்பழக் கவிச்சிங்கமென்ன? தியாகராயசெட்டி யாரென்ன? இன்னுமனேக பிரபல தமிழ்க் கவிகளும், வித்வான்களும் இவரிடம் பொன்னையும் புகழையும் பெற் றார்கள். இவர் இராஜதுரந்தரராய் தருமசாஸ்திர சட்ட திட் டங்களை முற்றும் கற்றுத் தெளிந்தவராகையால், இப்போது

இந்நாட்டிற் சிறந்த கனம் நார்ட்டன் நியாயவாதியின் தந்தை மிஸ்டர் ஜே.பி. நார்ட்டன், ஜே.டி. மெயின் முதலான ஆங்கில நியாயவாதிகளும், இப்போது சென்னையிற் சிறந்துவிளங்கும் ஐகோர்ட்டு வக்கில் மிஸ்டர் V. C. தேசிகாசாரியார் தந்தையும், பிரதிவாதி பயங்கரருமாகிய மிஸ்டர் இராஜகோபாலாசாரியர் முதலான வக்கில்களும் வியந்து கொண்டாடி வந்தார்கள். இத்தேவர் சிவபக்தியில் சிறந்தவரேயாயினும், சமரச ஞானியாகையால், சென்னையில் ஸ்தாபித்த பிரம்ம ஸமாஜத்தாருடைய தத்துவபோதினியைப் பதிப்பித்துப் பிரபலமாக்க அச்சுயந்திரத்திற்கு 1000 ரூபாய் நன்கொடையாகக் கொடுத்து உதவினர். இப்படியநேக ஸத்கருமங்களைச் செய்து சிறந்து இறந்தார். இந்தப் பொன்னுச்சாமி தேவரவர்களிடம் சேதுபதிகளுடைய சரியான சரித்திரமிருக்கிறதாக மதுரை ஜில்லா சரித்திரம் எழுதிய மிஸ்டர் நெல்சன் முதலானவர்கள் தெரிவித் திருக்கிறபடியால், அதை அச்சிட்டால் திருப்திகரமான சரித்திரமாகும்.

இந்த ஸ்ரீ பொன்னுச்சாமி தேவரவர்களுடைய புத்திரர்களில் ஒருவராகிய பாலவனத்தம் ஜமீன்தாராகிய ஸ்ரீபாண்டித்துரைத் தேவரவர்கள் தமது தந்தையைப் போலவே தேசாபிமானம், மதாபிமானம் முதலான குணங்களிற்சிறந்து பிரகாசித்து, மதுரையில் 1901ஆம் கூடிய மஹாஜனசபைக்குத் தலைவராகநின்று வேண்டிய உதவிகளைச்செய்து கீர்த்தி வகித்ததன்றியில், தமிழ்ப்பாஷையிற் சிறந்த வித்வசிகாமணியாகையால், பன்னூற்றிரட்டு முதலான பல கிரந்தங்களை இயற்றியதோடு, மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தையும் ஸ்தாபித்துத் தலைவராகியும், அதற்கு அநேக வித்வான்களையும் - வித்தியார்த்திகளையும் சேர்த்து ஆதரித்தும், மறைந்து கிடந்த புராதன தமிழ்க் கிரந்தங்களையும், ஆங்கிலம் முதலான ஏனைய பாஷைகளிலுள்ள சிறந்த நூல்களையும் மொழிபெயர்ப்பித்தும், "செந்தமிழ்" என்னும் பெயரால் ஒரு பத்திரிகையையும் பதிப்பிக்க அச்சு இயந்திரத்தை ஸ்தாபித்திருக்கின்றனர். இப்படிப்பட்ட ஜனோபகாரியும், தேசோபகாரியுமாகிய இவர் 1911ஆம் சிவபதமடைந்தது இத் தென்தேசத்திற்குப் பெரிய நஷ்டமுண்டாகியது.

ஸ்ரீ முத்து இராமலிங்க சேதுபதி அவர்கள் பட்டத்துக்கு வந்து (1868-1873 வருஷம்) ஆண்டாலும், ஸம்ஸ்தானக் கடன் அதிகமாகிவிட்டபடியால், இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் ஒரு ஸ்பெஷல் அஸிஸ்டண்டு கலெக்டரை நியமித்தார்கள். 1873-ம் வருஷம் இந்த முத்துராமலிங்க சேதுபதியாருக்கு ஏழு மனைவியார்கள். அவர்களுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தார்கள். அவர்களே ஸ்ரீ பாஸ்கரசேதுபதி, ஸ்ரீ தினகரசாமி சேதுபதி என்பவர்களாம்.

ஸ்ரீ ஹிரண்யகர்ப்ப இரகுநாத பாஸ்கர சேதுபதி அவர்கள் (1873-ம் வருஷம்) மைனராக இருந்தபடியால், முதலில் மிஸ்டர் வர்ணர் (Mr. Vernor) என்னும் துரையவர்களின் பார்வையில், கோர்ட்டாப் வார்ட்ஸில் வைக்கப்பட்டுப் பிறகு சென்னை மில்லர் கலாசாலையில் கல்வி கற்பிக்கப்பட்டார். இவர் ஆங்கிலம், தமிழ் முதலான பாஷைகளிற் சிறந்த நிபுணர். பிரசங்க சக்தியிலும், பக்தி சிரத்தையிலும், தானதருமங்களிலும் இவருக்கு நிகரானவரைக் காண்ப தபூர்வம். சிறந்த தேசாபிமானம், மதாபிமானம், பாஷாபிமான முள்ளவர். தமிழ் முதலான வித்துவான்களுக்கு அளவில்லாத பொருளை வாரி வாரிக் கொடுத்த வள்ளல். சென்னை இந்து பத்திரிகை, சிதம்பரம் பிரம்மவித்தியா, நாகை நீலலோசனி, திருச்செங்கோடு திவாகரன், மதுரை மெயில் முதலான பத்திரிகைகளுக்கும் தேசோபகார சபைகளுக்கும் ஆயிரம் பத்தாயிரம் ரூபாய்களைக் கணக்கின்றிக் கொடுத்துதவிய கலியுக கருணர். இவருடைய உதவியினால் உயிர்பெற்ற உத்கிருஷ்ட புத்தகங்களநந்தம். மதுரையில் சேதுபதி பாடசாலை, முத்தமிழ்ச் சங்கம், வித்தியார்த்திகளுக்கு உணவு முதலானவைகளைக் கொடுத் தாதரித்த உத்தமர். இவர் இராமேச்சுர ஸ்தல மானேஜராக இருந்து செய்த திருப்பணிகளனந்தம். இந்த ஸ்ரீ பாஸ்கர சேதுபதியவர்கள் 1903 வருஷம் சிவபதமடைந்துவிட்டார்.

இவருக்குப் பிறகு இவரது குமாரர் ஸ்ரீராஜ ராஜேஸ்வர முத்து ராமலிங்க சேதுபதியவர்கள் பட்டத்தைப் பெற்றார். இவரும் கல்வி கேள்விகளிற் சிறந்தவராயிருப்பதோடு மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் தலைவராகிப் பரிபாலித்து வருவதனால் இவரது தேசாபிமானம் முதலான குணங்கள் பட்டப் பகல்போல் பிரகாசிக்கின்றது.

இந்த ஸமஸ்தானத்துக்கு 1855-ம் வருஷத்தில் இராமநாதபுரம், கிளக்காடு, சிக்கல், முத்துகுளத்தூர், பாப்பன்குளம், கமுதி, அபிராமம், வேதோணி, காமன்கோட்டை, சாளக்கிராமம், இராஜசிங்கமங்கலம், அறுநூற்றுமங்கலம், குத்தகைநாடு, ஒரூர், கோட்டைபட்டினம், பள்ளிமடம், திருக்குழி என்ற தாலுக்காக்களும்; இவைகளில் 2162 பெரிய மஜிரா கிராமங்களும், 574 குக்கிராமங்களு மிருந்தன. இவைகளின் சுற்றளவு 1900 சதுரமைல். இதில் பாதிபாகம் பயிர்செய்ய தண்ணீருள்ள வளமானது. மற்றப் பாகம் மணல் தரிசு. (Vide Page 392-Gazetteer of South India). 1894-ம் வருஷம் டாக்டர் யர்டக் அவர்கள் பதிப்பித்த இந்திய சுதேச ஸமஸ்தான சரித்திர புத்தகம் 83-வது பக் கத்தில், இச்சமஸ்தானத்தின் சுற்றளவு 2351 சதுரமைலென்றும், இதில் (1881-ம் வருஷம்) 3,44,000 இந்துக்களும், 60,000 மகமதியரும், 28,000 கிறிஸ்தவர்களுமாக 472,268 குடிகள் இருந்ததாகவும்; 1874 வருஷம் 94733 பூவராகன் பேஷ்கஸ்ஸாகவும், 7,41,744 ரூபாய் வருமானமென்றும் எழுதப்பட்டிருக்கிறது.

இந்த ஸமஸ்தானத்தார் 1780 வருஷம் ஐதராலிநபாபுக்கு வருஷம் 1,75,000 ரூபாய் செலுத்தி வந்ததாகவும், பிறகு மங்களேசுவரிநாச்சியார் காலத்தில் 90,000 வராகனுக்கு ஒப்படைக்கப்பட்டதாகவும், பிறகு 1801 வருஷம் ஈஸ்டு இந்தியா கம்பெனியாருக்கு மூன்று இலக்ஷத்து சில்வானத் தொகை கட்டும்படி நியமித்ததாகவும், மதுரைச் சீமைவிருந்தாந்த புத்தகம் 62-ம் பக்கத்தில் அறிவிக்கப்பெற்றிருக்கிறது.

இப்போது இராமநாதபுரத்திலிருக்கும் கோட்டைமதில்கள் நான்குபக்கங்களிலும் அரைமைல் நீளமுள்ளவைகளாகவும், 32 கொத்தளங்கள் உள்ளவைகளாகவும், கிழக்குப்பார்த்த வாசலுடையதாகவும் இருக்கிறதன்றியில்; இதன் சுவர்கள் 27 அடி உயரமும், 5 அடி அகலம் கனதியும், சுற்றிலும் அகழ்கள் உள்ளதாயும் இருக்கிறது. இந்தக் கோட்டையை 17-ம் நூற்றாண்டில் மோகவ இரகுநாத சேதுபதியவர்கள் கட்டிவைத்தார். கோட்டை வாசற்படியிலிருந்து சுமார் 200 அடி தூரத்திற்குள் சேதுபதியவர்களுடைய அழகிய அரண்மனை இருக்கிறது. கோட்டைக்கு வடமேற்குப் பாகத்தில் அழகிய பெரிய தடாகம் ஒன்று

நியமிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு வடகிழக்குப் பாகத்தில் புரோடெஸ்டாண்டு கிறிஸ்து கோயிலும், மேற்குக் கரையில் மயானமும், கிழக்குப் பாகத்தில் (Col. Martines) கர்னல் மார்ட்டினது பங்களாவும் இருக்கின்றன. இராமநாதபுரத்தில் 1881-ம் வருஷத்தில் கானிஷ்மாரி கணக்கின்படி 11,000 குடிகளிருந்தார்கள். நகர்த்துக்கு வெளியில் ஏராளமான லப்பைகளும் செட்டிமார்களும் குடியிருக்கின்றனர். நல்ல சாயப்புடைவைகள் வியாபாரம் அதிகம். இந்த ஸமஸ்தானம்: தேவகோட்டை, தேவிபட்டணம், பாலவனத்தம், ஓரியூர், திருவாடனை, தொண்டி, நம்பிதாளை முதலான 42 ஊர்களுள்ளது. 1729-ஆம் வருஷம் இச் சமஸ்தானத்தின் ஐந்தில் இரண்டு பாகமாகிய சிவகங்கையை உடையதேவருக்குக் கொடுத்துவிட்டபடியால், அதன் சரித்திரத்தைச் சங்கிரகமாகக் காட்டுகிறோம்.

சிவகங்கை சமஸ்தானம்:—இந்தச் சிவகங்கை ஸமஸ்தானம் இராமநாதபுரத்தைச் சார்ந்ததென்று முன்னமே தெரிவித்திருக்கிறோம். அதாவது, இரகுநாத தேவர் அல்லது கிழவன் சேதுபதிகாலத்துண்டான கலகத்தினால், சுமார் 3000 சேனாவீரர்களைப் போஷிக்கத்தக்க இராஜ்யம் பெரிய உடையதேவருக்குக் கொடுக்கப்பட்டது.

இரகுநாத சேதுபதி: (1723-ம் வருஷம்) இறந்து போவதற்கு முந்தி, தமது சகோதரியின் குமாரரான விஜயரகுநாத தேவரை இராமநாதபுரத்தில் சிங்காசன மேற்றினர். இதைக் கண்டு சகியாத நிலக்கோட்டை உடையதேவர் தமது குமாரராகிய சேஷவருண தேவருக்கு இராஜருடைய குமாரத்தி அகிலாண்டேசுவரி நாச்சியாரை விவாகம் செய்வித்ததில், 10,000 வீரர்களை வைத்துப் போஷிக்கும்படியான நிலத்தை ஸ்ரீதனமாகக் கொடுக்கப் பெற்றார்.

விஜயரகுநாத சேதுபதி சிலகாலம் ஆண்டு சரியான சந்ததியற்று இறந்துவிட்டபடியால், இச்சமஸ்தானத்துக்கு இரகுநாத சேதுபதியின் வைப்பு புத்திரராகிய பவானி சங்கரதேவரும், விஜயரகுநாத தேவருடைய மருமகனாகிய குட்டத்தேவரும் சண்டை சச்சரவுகள் செய்ய, இவ்விருவர்களில் பவானி சங்கரர் தஞ்சை ராஜருடைய உதவியினால் இராமநாத ஸமஸ்தானத்தைப்பெற, குட்டத்தேவர் கஷ்டப்பட்டு வருந்தச் சம்பவித்தது. இப்படிப்பட்ட காலத்தில் சேஷவருணதேவர் தஞ்சையில் நடந்த ஒரு விசேஷ உற்

சவகாலத்தில் போய் ஒரு வேங்கைப்புலியை எதிர்த்துச் சண்டைசெய்து அப் புலியைக் கொன்றதனால், தஞ்சை மன்னர் மகிழ்ந்து அந்த சேஷவருண தேவரும் குட்டத் தேவரும் இராமநாதபுர ஸமஸ்தானத்தை மறுபடியும் பெரும்படியான சேனையை உதவி செய்ய, அவர்கள் அச் சேனையைக் கூட்டிக்கொண்டு வந்து பவானி சங்கரனைப் பட்டத்திலிருந்து நீக்கி, குட்டத் தேவருக்குப் பட்டம் கட்டிவைத்தார்கள்.

இந்தக் குட்டத்தேவரும் தஞ்சை மன்னர் செய்த உதவிக்காக இராமநாதபுரத்தைச் சார்ந்த 17 தாலுக்காக்களில் பட்டுக்கோட்டைமுதல் கொட்டகுருகர் வரையிலுள்ள நான்கு தாலுக்காக்களையும் கொடுத்துவிட்டார். இதனால் குட்டத்தேவர் இராமநாதபுர ஸமஸ்தானத்தை ஐந்து பிரிவுகளாக வகுத்து சேஷவருணதேவர்செய்த உதவிக்காக ஐந்தில் இரண்டு பாகத்தைத் தந்தார். அன்றுமுதல், இந்த ராமநாதபுரத்தை ஆள்பவரைப் பெரிய மறவர் சமஸ்தானம் என்றும், சிவகங்கையை ஆள்பவரைச் சிறியமறவர் ஸமஸ்தானம் என்றும், நிலக்கோட்டை பாளையக்காரர் என்றும் பெயருண்டாயிற்று. இந்த சேஷவருண தேவருக்குப் பிறகு வடுகாநந்ததேவர் பட்டத்துக்கு வர, 1772-வருஷம் மகமது ஆலியாகிய நபாபு, இந்த ராமநாதபுரம் - சிவகங்கை ஸமஸ்தானங்கள் தமது கர்னாடக தேசத்துக்குள் சேர்ந்தவை என்றும், இவர்கள், அந்த மகமது அலி தஞ்சை மன்னனோடு சண்டை செய்தபோது உதவிசெய்ய வரவில்லையென்றும் குற்றப்படுத்தி, நபாபின் குமாரராகிய உமடுட் உல் உமராவுடன் ஒரு சேனையை அனுப்பியும், அவருக்கு உதவியாக ஆங்கிலேயரும் தக்க தண்டு தளாதிகளுடன்போய் இராமநாத சிவகங்கை ஸமஸ்தானங்களைத் தாக்க வேண்டுமென்றுந் தூண்ட, ஆங்கிலேயரும் கர்னல் ஜோஸப் ஸ்மித் (Col. Joseph Smith) என்னும் தளகர்த்தருடன் திரிச்சியிலிருந்து சேனையை யனுப்ப, அச்சேனையும் வந்து இராமநாதபுரத்தைத் தாக்கி வாலிப பாளையக்காரரைக் கொன்றுவிட்டு சிவகங்கைக்குப்போக, வடுகநாதத் தேவர் பெரியமருது சின்னமருது என்னும் இரண்டு அகம்படியச் சேர்வைக்காரர்களைத் துணைக்காகக் கேட்டு அடைய, அவர்கள் அவரை காளியார் கோயிலுக் கருகிலிருக்கும் காடுகளிலிருக்கச் செய்தார்கள். அப்படிக்கிருந்தும், எதிரிச் சேனை

கள் நாலு பக்கங்களிலும் சுற்றிக்கொண்டும், சுட்டுக்கொண்டும் வருகையில், 1712-ம் வருஷம் ஜூன் மாதம் 22உ பாளையக்காரர் கொல்லப்பட்டார். அப்போது பூர்ண கர்ப்பவதியாக இருந்த இராஜமஹிஷி சேர்வைக்காரரான மருதப்பருடைய உதவியினால் திண்டுக்கல்லுக்குப் போய் அங்கு ஐதராலியால் பாதுகாக்கப்பட்டார்.

கர்ப்பவதியாக விருந்த இராஜமஹிஷி பெண் குழந்தையைப்பெற அக்குழந்தை சிறுவயதாக இருக்கும்போதே வெங்கம பெரிய உடையதேவருக்கு விவாஹம் செய்து கொடுக்கப்பட்டது.

1781-ம் வருஷம் ஐதராலி கர்னாடக தேசத்தின்மீது படையெடுத்து வந்தபோது சின்னமருது, திண்டுக்கல் கில்லாதாரரிடம் கொஞ்சம் சேனையைச் சம்பாதித்துக்கொண்டு அச்சேனையின் உதவியினால் இராணியாரைச் சிவகங்கைக்கு அழைத்துவர, இராணியாரைக் குடிகள் நல்வரவுடன் அங்கீகரிக்க, நவாபும் அந்தம்மைக்கு ஸமஸ்தானத்தைத் தந்தார். இப்படி வருவதற்குள் சிவகங்கை ஸமஸ்தானத்தை நவாபவர்கள் குத்தகை கொடுத்துவிட்டிருந்தார். இப்படிப்பட்ட காலத்தில் பழைய பாளையக்காரருடைய தமயன் குமாரராகிய உய்யதேவர் தமது குமாரராகிய கவுரிவல்லப உடையதேவரைப்பழைய பாளையக்காரர்ஸ்வீகாரம் செய்து கொண்டதாகவும், ஆகவே, அவருக்குத்தான் பட்டம் கட்டிவைக்க வேண்டுமென்றும் சச்சரவுகள் செய்தும், காரியசித்தி பெறவில்லை. பெறாமல் போகவே, சின்ன மருதுக்குப் பிரதானி அல்லது பிரதம மந்திரியார் பட்டம் கொடுக்கப் பெற்றார். வெங்கம் பெரிய உடையதேவர் நிபத்துக்கு அரசனாக நியமிக்கப்பட்டார்.

இந்த வேங்கம் பெரிய உடையதேவர், தமது மனைவியின் வயிற்றில் ஜனித்த பெண் குழந்தையும் இறந்தபிறகு மருது குடும்பத்தில் ஒரு பெண்ணைப் பார்த்து மறுபடியும் விவாஹம் செய்துகொண்டார்.

1783-ம் வருஷம் விடப்பட்ட நாடுகளின் அதிகாரியாகிய (Mr. Sullivan) மிஸ்டர் சலிவன் காலத்தில், கப்பத்தொகை சரியாக வசூலாகாமையினால், இங்கிலீஷ்காரர் கர்னல் புல்லர்ட்டன் (Col. Fullerton) என்பவருடன் ஒரு தண்டை அனுப்பவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி

யனுப்ப, இரண்டு மருதுகளும் சுமார் 10,000 சேனையோடு காளியார் கோயிலுக்குப் போய்விட்டார்கள். ஆயினும், கர்னல் புல்லர்டனவர்கள் யாதொரு சண்டை சச்சரவுகளின்றி கவர்ன்மெண்டு கப்பத்துக்கு வேண்டிய ஜாமீனை நியமித்துக்கொண்டார். பிறகு 1799-ம் வருஷம் பாஞ்சல குரிச்சியை முற்றுகைப்போட்டு கர்னல் அக்னியு (Col. Agnew) கோட்டையைத் தாக்க, கட்டபொம்மன் கொல்லப்பட்டதை அறிந்து ஊமைத்துரை தன் தம்பியோடு சிவகங்கைக்குப் போய் மருதுகளுடன் சேர, அம்மருதுகள் பாஞ்சால குரிச்சி ஊமைத்துரையை அரண்மனைக்குள் சேர்த்துக்கொண்டு 20,000 சேனுவீரருடன் ஆங்கிலேயரைப்பகிரங்கமாகஎதிர்த்தார்கள். அக்காலத்தில் இவர்கள் தொண்டமானைத் தமக்கு உதவிசெய்ய அழைத்தும், அவர் வராமையால், மருதுகள் மறுபடியும் காளியார் கோயிலுக்குப்போய்ச் சுமார் ஐந்து மாத காலம் வரையில் கர்னல் அக்னியு தளகர்த்தருக்கு அகப்படாமல் வருந்திவந்தாலும், கடைசியாகப் பயங்கர சண்டைசெய்து கோட்டையைப் பிடித்தும், மருதுகளைப் பிடித்துத் தூக்கில்போட்டுக் கொன்றுர்கள்.

பிறகு ஊமைத்துரை திண்டுக்கல் மார்க்கமாக விருபாக்ஷிக்கு ஓடினபோது அங்குப் பிடித்துத் தூக்கில்போட்டுக் கொல்லப்பட்டார். இந்தப் பாஞ்சாலகுரிச்சி ஊமைத்துரையின்சண்டை சங்கதியைப் பற்றிச் சிலர் பாடிப் பிழைப்பது இத்தென்னுட்டில் அநேக ஆண் பெண்டுகளுக்குத் தெரிந்த விஷயமாதலால் அதை இங்கு விவரிப்பது அனுவசியம்.

1801-ம் வருஷம் பாளையக்காரர் பெஷ்வா கலெக்டராகிய மிஸ்டர் லஷிங்க்டன் (Lushington), கர்னல் அக்ணியு வீரருடன் கலந்து யோசித்து, கவுரிவல்லப பெரிய உடையதேவரைச் சிவகங்கைக்குத் தலைவராக நியமிக்கவேண்டுமென்று கவர்ன்மெண்டுக்குச் சிபார்சுசெய்ய, ஒரு க்ஷியார்எழுந்து வெங்கம் உடையதேவரை நியமிக்கவேண்டும் என்றுசொல்ல, கவர்ன்மென்டார் அங்கீகரிக்கவில்லை. பிறகு இந்த ஸமஸ்தானத்துக்குச் சரியான வார்சுதாரர் புதுமத்தூர் முத்துவிஜய இரகுநாத கவுரிவல்லப உய்யதேவர் என்று கண்டு 1891ஞு ஜூலை 6உ கவர்ன்மெண்டார் நியமித்தார்கள். இடையில் உய்யதேவர் முதலானவர்கள் பாத்தியதையைப் பாராட்டி வந்தாலும், முன்சொன்ன கவுரி வல்லபருக்கே சன்னது கொடுக்கப்பட்டது.

இந்த கவுரிவல்லபர் 1829-ம் வருஷம் ஜூன் மாதம் சந்ததியற்று இறந்துவிட்டபடியால், அவர் தமையனுர் உய்ய தேவருடைய குமாரருக்கு ஜமீன் கொடுக்கப்பட்டது. இந்த நியமனத்தையும் இரகுநாத ஜமீன்தாரருடைய மனைவி ஸ்ரீ அங்கமுத்து நாச்சியார் தடுத்தும், தாம்தான் தக்க வார்சு என்று வழக்கிட்டு வந்தாலும், ஸ்வீகார புத்திரராகிய முத்து வடுக நாததேவருக்கு 1829-ம் வருஷம் சீமை திரும்பியது. 21 வருஷ காலமாக வியாஜ்ஜியம் செய்த அங்கமுத்து நாச்சியாருக்கு இராஜ்ஜியம் கிட்டாமையால், பிறகு போதகுரு சாமி பட்டத்தைப் பெற்று 10 வருஷம் ஆண்டதன்மேல், அவர் தம்பி முத்துவிஜய இரகுநாத கவுரி வல்லப பெரிய உடையார் தேவர் குமாரர் போதகுருசாமிக்குப் போதுமான வயது வருகிறவரைக்கும் மிஸ்டர் பிளேச்சர் துரையவர்களை உபாத்தியாயராக நியமித்தும், ஜமீனைக் கவர்ன்மெண்டு விசாரணையில் வைத்தும், 1859ஹு ஐப்பசிமீ அவருக்குப் பட்டம் கட்டியபோது ஸ்ரீகாத்தமநாச்சியாருடைய வழக்கு ஜயமானபடியால், அவரிடம் மிஸ்டர் (Mr Fisher) பிஷர் துரையவர்கள் ஜமீனைக்குத்தகைக்குக்கொண்டு பார்த்துவர, பிறகு ம-ா-ா-ஸ்ரீ வெங்கடசாமி நாயடுகாருடையவும், பிறகு மிஸ்டர் ராபர்ட்டு பிஷர் துரை அவர்களுடையவும், பிறகு ம-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணசாமிசெட்டிகாருடைய மானேஜ்மெண்ட்டிலிருந்து இப்போது மெஸர்ஸ் ஆர் அண்டு சன்சு கம்பெனியாருடைய அடமானத்திலும் மானேஜ்மெண்டிலு மிருக்கிறது.

1855-வருஷம் சிவகங்கை ஸம்ஸ்தானம் 1460 சதுர மைல் விஸ்தீரண முள்ளதாகவும், இதில் 2,070 கிராமங்களும், 1,265 குக்கிராமங்களும், இவைகளிலிருந்து 3,62,000 ரூபாய் வருமானமாகவும் தென்னிந்தியா கெஜட்டியர் சரித்திரத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

1874ஹு கணக்கின்படி இந்தச் சிவகங்கை 1557 சதுர மைல் விஸ்திரணமும்; 4,34,166 குடிகளும், 75,500 பூவராகன் பேஷ்கஷ் உடையனவாயும், கஸ்பாசிவகங்கை, திருப்பூவணம், மானமதுரை, இளையாங்குடி, திருவேகம்பத்து, இலவங்கோட்டை, சோளாபுரம், சாக்கை, திருப்பத்தூராகிய 9 தாலூக்காக்களை உடையனவாயும்; குன்னக்குடி, காளையார் கோயில், திருக்கோட்டியூர், அமராவதி, ஆநந்தூர், மானமதுரை முதலான 25 ஊர்களையுடையனவாயும் இருக்கிறது.

இந்தச்சிவகங்கை ஜமீனைக் குத்தகைக்குக் கொண்ட மிஸ்டர் பெரியபிஷர் துரையவர்களுக்கு அகப்பட்ட சகாப்தம் 1655 க்குச் சரியான கி-பி. 1733ஆம் செம்புப்பட்டயத்தில் முத்து விஜய ரகுநாத சேதுபதியின் குருவானவர் ஒரு தெப்பக் குளத்தை வெட்டி அதற்குச் சிவதீர்த்தமென்று பொருளா கும் சிவகங்கை என்று பெயரிட்டதாகச் சொல்லப்பெற் றிருக்கிறது.

புதுக்கோட்டை சமஸ்தானம் :—இது ஒரு காலத்தில் தஞ்சை சமஸ்தானத்துக் குட்பட்டிருந்து, அந்தத் தஞ்சை ராஜருக்கு மிகவும் நம்பிக்கையுள்ள பல்லவராய தொண்ட மானுடைய முன்னோருக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட் டது. பிறகு 1673-1708-ம் வருஷம் இப் புதுக்கோட்டை யைத் தஞ்சை மன்னருடைய ஆக்கினைக்குள் மாற்ற விரும்பி இருக்கிறதை, சேதுபதிகளில் பிரபலரான இரகுநாத கிழவ சேதுபதியானவர் இரகுநாதருடைய சகோதரியை விவா ஹம் செய்துகொண்டதில், தம் மைத்துனரான இரகுநாத ருக்குத் தொண்டமான் என்ற பட்டம் சூட்டி இப்புதுக் கோட்டையைக் கொடுத்தார்.

இந்த இரகுநாத தொண்டமானுடைய சந்ததிகளாவன.

1. திருமலைத் தொண்டமான். 2. நாமன் தொண்ட மான். 3. பச்சைத் தொண்டமான். 4. தாண்டக தொண்ட மான். 5. நாமன் தொண்டமான். 6. திருமலை தொண்ட மான். 7. நாமன் தொண்டமான். 8 பச்சிகச்சே தொண்ட மான். 9. நாமன் தொண்டமான். 10. பக்கச்சே தொண்ட மான். 11. கிங்கிணி தொண்டமான். 12. தாண்டக தொண்ட மான். 13. திருமலை தொண்டமான். 14. பக்கச்சே தொண் டமான். 15. பல்லவராய தொண்டமான். 16. இரகுநாத ராய தொண்டமான். கி. பி. 1680 முதல் 1730 வரையில். 17. விஜயரகுநாத தொண்டமான் கி. பி. 1730-1767 வரு ஷம். 18. இரகுநாத தொண்டமான் 1767-1789-வருஷம். 19. இராஜவிஜய ரகுநாதராய பஹதூர் 1789-1807 வரு ஷம். 20. விஜயரகுநாதராய பகதூர் 1807-1825 வருஷம். 21. இரகுநாதராய தொண்டமான் 1825-1839-வருஷம். 22. இராமச்சந்திர தொண்டமான் 1839 முதலானவர்களாம்.

(Vide Pages 225 & 226 of R. Sewells and the Manual of Dewan Bahadur Seshia Sastrigal &c.

இப்போது சோழநாட்டிலிருக்கினும் ஆதியில் பாண்டிய நாட்டிற்குச் சேர்ந்ததாயும், இராமநாதபுரசமஸ்தானத்தாருடைய பந்துக்களே தொன்றுதொட்டு ஆண்டு வருவதாலும் இதை இப்போது இராமநாதபுரம் சிவகங்கை சமஸ்தானங்களோடு சேர்த்திருக்கிறோம்.

இப்போது ஆளும் மகாராஜருடைய பெயர் ஸ்ரீ இராஜ மார்த்தாண்ட பைரவதொண்டமான் பஹதூர் அவர்கள். இவர் 1894-ம் வருஷம் 12 பிராயமுள்ளவராக இருந்தபடியால், இப்போது சுமார் முப்பது முப்பத்திரண்டு வயதுடையவராய் இருக்கவேண்டும்.

இந்தப் புதுக்கோட்டை: வடக்கில் திரிச்சி தஞ்சை நாடுகளும், தெற்கில் சிவகங்கை-இராமநாதபுரம், கிழக்கில் தஞ்சையும், மேற்கில் திரிச்சியும்-திண்டுக்கல்லும் எல்லையாக உடையது. இதன் சுற்றளவு 1380 சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. இவற்றில் மூன்றில் ஒருபாகம் காடு கரடுகள் நிறைந்துள்ளது. மற்ற பாகங்கள் பயிர்பச்சைகள் விளையக்கூடியன. இந்த சமஸ்தானம் (1) கொளத்தூர், (2) ஆலங்குடி, (3) குறவநாடு, (4) அன்னவாசல், (5) கீளாநெல்லி என்று ஐந்து தாலுக்காக்களாக வகுக்கப்பட்டும்; வெள்ளாறு, பாம்பாறு, கவரையாறு, சூரையாறு, அம்பிலியாறு முதலான சிற்றாறுகளாலும் அநேக சிறு மலைக்குன்று காடுகளாலும் சூழப்பட்டிருத்தலோடு, சுமார் 3000 குளங்களாலும் வளம் பொருந்தியது. இதில் நெல் முதலான தானியங்களின் விளைவும், பட்டு நூற்கும் தொழில்களும் நடத்தப்பட்டு வருகின்றன. 1881-ம் வருஷம் 2,82,009 இந்துக்களும், 11,000 கிறிஸ்தவர்களும், 9000 மகமதியரும், 83,000 தொழிலாளர்களும், 54,000 செம்படவர்களும், 30,000 விவசாயிகளும், 26,000 இடையர்களும், 27,000 பறையர்களும் வசித்து வந்தார்கள்.

புதுக்கோட்டை ஸமஸ்தானம் ஸ்ரீ சேஷய்ய சாஸ்திரிகள் திவானாக வந்ததுமுதல் பலவிதங்களிலும் பிரபலமாகிப் பிரகாசித்ததுடன், புதுக்கோட்டையும் சுத்தியாகவும், அலங்காரமாகவும் சீர்திருத்தப்பட்டு 1881-ம் வருஷம் 15,000 குடிகள் வாழ்ந்து வந்தார்கள். 1883-ம் வருஷம் ஸமஸ்தான கல்லூரியில் 357 வித்தியார்த்திகள் வாசித்து வந்தார்கள். நகரத்தில் சர்க்கார் வைத்தியசாலை முதலான கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இப்புதுக்கோட்டை

இங்கிலீஷ் கவர்ன்மெண்டாருக்குக் கப்பங்கட்டாத சுதந்திர நாடாகவும், இதன் இராஜாவர்கள் இங்கிலாண்டு முதலான நாடுகளை நேரில்போய்ப்பார்த்தறிந்த புத்திப் பிரகாசமுள்ளவராகவும் இருப்பதோடு, இப்போது திவானாக இருக்கும் மிஸ்டர் திவான்பஹதூர் வெங்கடராமதாசு நாயடுகாரு மஹா மதியூகியானபடியால், இவர்கள் காலத்திலும் சமஸ்தானம் பின்னும் அதிக சீரும் சுகமும் பெற்றுப் பிரகாசிக்குமென்பது திண்ணம்.

---

## இராமநாதபுரம்.

இந்த மதுரை ஜில்லாவைச் சார்ந்த பெரியகுளம் முதலான பின்னும் பலவிடங்களிருக்கினும் இவைகளெல்லாவற்றிலும் பெரிதும் சிறந்ததும் இப்போது ஒரு ஜில்லாவாகப் பிரிக்கப்பட்டதும் ஆகிய இராமநாதபுரமேயாம். இது பதினான்காம் நூற்றாண்டுமுதல் ஒரு பெரியஜமீன்தார் அல்லது சமஸ்தானமாகப் பிரகாசித்து வருகிறது. இந்த ஸமஸ்தானத்தார் சேதுவென்னும் இராமேச்சுரத்தின் விசாரணைக் கர்த்தர்களாயும், அதற்கு இந்தியாவின் நாலாபக்கங்களிலிருந்து வரும் யாத்திரைக்காரர் அநேக காடு கரடுகளைத் தாண்டிவரும்போது அவர்களுக்குக் காட்டு மிருகங்களாலும் கள்ளர்களாலும் கஷ்டங்களுண்டாகாதபடி காத்துவந்தமையால் இவர்களுக்குச் சேதுபதிகள் என்னும் பெயருண்டாயிற்று. இவர்கள் தமிழ்க் கல்வியிலும் சிவபக்தியிலும் சிறந்தவர்கள். இச் சேதுபதிகளில் அநேகர் வீர தீரர்களாயிருந்து மதுரை நாயடுகாரு சமஸ்தானத்திற்குப் பேருதவிகளைப் புரிந்துவந்தனர். இப்போதிருக்கும் ஸ்ரீராஜ ராஜேஜஸ்வர முத்துராமலிங்க சேதுபதியவர்களின் பாட்டனார் பிரம்மசமாஜ சித்தாந்தத்தைச் சார்ந்தவராய்ப் பல பொது தர்மங்களை நாடிவந்தனர். அவருடைய மானேஜர் ஸ்ரீ பொன்னுசாமித் தேவரவர்கள் மஹா தமிழ் வித்வானாய் இருந்ததோடு அநேக கிரந்தங்களைப் பதிப்பித்தும், அநேக பண்டிதர்களைப் போஷிப்பித்தும் வந்தவர். இப்போதிருக்கும் மஹாராஜா அவர்களுடைய பிதாவாகிய ஸ்ரீ பாஸ்கர சேதுபதியவர்கள் மஹா வித்வானாக இருந்ததோடு கலியுக கர்னனைப்போல் கொடை வள்ளலாயிருந்தார். ஸ்ரீ பொன்னுசாமித்தேவரவர்களுடையபுத்திரர்களில் ஒருவரும், பாலவனத்தம் ஜமீன்தாருமாகிய ஸ்ரீபாண்டித்

துரைச்சாமித் தேவரவர்கள் மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தை ஸ்தாபித்த ஓர் சிறந்த தமிழ் வித்வானுயிருந் தார். அவருடைய அகால மரணம் அச்சங்கத்துக்குப் பெருத்த நஷ்டம் உண்டாக்கிவர, அக் குறைவுகளை நீக்க இப் போது ஸ்ரீராஜ ராஜேஸ்வர முத்து ராமலிங்க சேதுபதி யவர்கள் அச் சங்கத்துக்குத் தலைவராகிச் சிறப்பாக நடத்தி வருகிறார்.

இந்த இராமநாதபுரத்தில் சேதுபதி யவர்களுடைய கட்டிடங்களும், இராமலிங்க விலாசமென்னும் சிறந்த கட்டிடமும், அநேக கோயில் கோபுரங்களும் இருக்கின்றன. தமிழ் நாட்டில் சிறந்த வித்வானும் ஞானியுமாகவிருந்த ஸ்ரீ தாயுமான சுவாமிகள் இந்தத் தாலூக்காவில் சமாதி யடைந்தனராம். இதற்குத் தென்கிழக்கில் 9 மைல்கள் தூரத்திலிருக்கும் கீழ்க்கரை பூர்வத்தில் பாண்டியர்களுக் குத் தலைமை நகராயிருந்த கடற்கரைத் துறைமுகம். பிற் பாடு இது டச்சுக்காரருக்குச் சுவாதீனமாகியது. நகரின் கிழக்குக் கடைமுனையில் புராதன கைத்தொழில் வர்த்தக சாலை யிருக்கிறது. இதிலிருந்து அநேக கடற்கரைப் பட்ட ணங்களுக்கும் முக்கியமாக இரங்கூனுக்கும் விசேஷ வியா பாரம் நடந்து வருகிறது. இப்போது இதில் 11,078 குடி கள் வசித்து வருகிறார்கள்.

---

## மானுமதுரை.

இது இப்போது ஒரு ஜில்லாவாகப் பிரிக்கப்பட்ட இராமநாதபுரத்தைச் சார்ந்த சிவகங்கை தாலுக்காவில் இருக்கிறது. இது வைகையாற்றின் வடகரையில் ரயில்வே ஸ்டேஷனுக்குக் கால்மைல் தூரத்தி லிருக்கிறது. இங்கு ஒரு விசேஷமான விஷ்ணுகோயில் இருக்கிறது. ஆதியில் ஸ்ரீராமர் இராவணனால் கொண்டுபோகப்பட்ட சீதா பிராட்டியாரைத் தேடிப்பிடிக்க இலங்கைக்குத் தூதர் களை யனுப்ப அத் தூதர்களில் சிறந்த ஹனுமாருக்குத் தளகர்த்தரென்று பட்டஞ் சூட்டிய இடம் இதுவாம். ஆகவே, இதற்கு வானர+வீர+மதுரை என்னும் பெயர் வழங்கி வந்து அதுவே நாளாவட்டத்தில் மானுமதுரை என மாறி விட்டதாகச் சொல்லுகிறார்கள்.

இதற்கு வடக்கே பதினொரு மைல்கள் தூரத்தில் சிவகங்கை யென்னும் ஒரு சிறந்த ஜமீன்தாரி யூனியன் பட்டண மிருக்கிறது. அது ஒரு காலத்தில் இராமநாதபுர சமஸ்தானத்தைச் சார்ந்திருந்து பிறகு ஒரு தனி ஜமீனாக மாற்றப்பட்டது. இதன் ஜமீன்தாரர் 1801 வருஷத்தில் இறந்துவிடவே அன்றுமுதல் அநேக வியாஜ்ஜியங்கள் தொடரப்பட்டு ஜமீன்தாரர் பணமெல்லாம் வியாஜ்ஜிய விஷயத்தில் செலவழிந்துபோக அது ஒரு ஐரோப்பிய கம்பினியாருக்கு 30 வருஷ வாய்தாவுக்குக் குத்தகை கொடுக்கப்பட்டது. அந்த வாய்தா கெடுவு நாளது வருஷத்திற்குள் முடிவுபெறும். அப்போது ஜமீன் அதன் வார்சுகளைச் சேரும். நகருக்கு மேற்கே வைகையாற்றின் வலது கரையில் ஒரு சிற்பாலங்காரமான சிவன்கோயில் கட்டப்பட்டிருக்கிறது. இப்போது இச் சிவகங்கையில் 9 )97 ஜனங்களும், மானாமதுரையில் 5184 குடிகளும் வசித்து வருகிறார்கள். இது சென்னை, தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 374½ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## பரமக்குடி.

இது வைகைநதியின் வலதுகரையில் இராமநாதஜில்லாவில் 12,218 குடிகளுள்ள ஓர் யூனியன் தாலூக்கா பட்டணம். இதில் பிரதிவருஷம் ஆடி-ஆவணிமீ ங்களிலும் வைகாசி மாதத்திலும் விசேஷ உற்சவங்கள் நடைபெறுகின்றன. பிரதி வியாழக்கிழமையும் ஸ்டேஷனுக் கருகில் மாட்டுச் சந்தை கூடுகிறது. சுமார் 6 மைல்கள் தூரத்தில் ஒரு புராதன சிவக்ஷேத்திரம் இருக்கிறது. உற்சவ காலங்களில் ஏராளமான ஜனங்கள் வருகிறார்கள். நாயனார் கோயிலென்னும் சிவக்ஷேத்திரமும், முன்சீப் முதலான கோர்ட் கச்சேரிகளும் இருக்கின்றன. இது, சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 388½ மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு ரெயில்வே சார்ஜ் ரூபாய் 4-6-0 கொடுக்க வேண்டும்.

இராமநாதபுரம் ஸ்டேஷனுக்கு 5 மைல்கள் தூரத்தில் திருப்பழனி யிருக்கிறது. இதிலிருக்கும் விஷ்ணுகோயில் புராதனமானது. இங்கே ஸ்ரீராமர் இலங்கைக்குப் போக வானரர் வாராவதியைக் கட்ட அதில் தங்கிய இட-

மாம். ஆகவே இராமேஸ்வரம் போய்வரும் யாத்திரைக்காரர் இங்குவந்து கடைசி பூஜை முதலானவைகளை முடித்துக்கொண்டு போவது வழக்கம். இதையே தர்ப்பசயனம் என்று சொல்லுகிறார்கள். இங்கு ஆடி, ஆவணி மாதங்களிலும் சித்திரை மாதங்களிலும் விசேஷ பிரம்ம உற்சவங்கள் நடைபெறுகின்றன.

இராமநாதபுரம் ஸ்டேஷனுக்கு 7 மைல்கள் தூரத்தில் தேவிபட்டணம் அல்லது நவபாஷாண மிருக்கிறது. இங்கே சமுத்திரக்கரைக்குச் சுமார் 100 கெஜங்கள் தூரத்தில் நவக்கிரககோயில் இருக்கிறது. இராமேஸ்வரத்திற்குப் போகப்பட்ட யாத்திரைக்காரர் முதலில் இங்கு வந்து ஸ்நானம் செய்து நவக்கிரக பூஜை செய்வித்துக்கொண்டு இராமேஸ்வரத்திற்குப் போவது வழக்கம். இங்கே ஹெட் அஸிஸ்டெண்ட் கலெக்டர், அஸிஸ்டென்டுசூபெரின்டென்டெண்ட் அப் போலிஸ், சப்ரிஜிஸ்டிரார் முதலானவர்களின் கச்சேரிகளிருக்கின்றன.

இராமநாதபுரம் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கே 7 மைல்கள் தூரத்தில் உத்தரகோசமங்கையென்னு மிடம் கடற்றுறைப் பட்டணமாயும் ஏராளமான யாத்திரைக்காரரால் தரிசிக்கப்பட்டதாயு மிருக்கின்றது. இந்த இராமநாதபுரமானது சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 411½ மைல் தூரத்தி லிருக்கிறது. இதற்கு வாடகை ரூபாய் 4-10-0. இந்த இராமநாதபுரம் ஸ்டேஷன் தென்னிந்தியா ரெயில்வே லயினுக்குக் கடைசியான பட்டணம். இது ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளால் பாடல் பெற்ற சிவஸ்தலம். இங்கிருந்து 8 மைல்கள் தூரத்திலிருக்கும் தர்ப்பசயனத்தில் ஸ்ரீராமர் சேதுபந்தனத்துக்காகத் தர்ப்பையில் படுத்த இடமென்று அநேகர்போய்த் தரிசித்து வருகிறார்கள்.

---

## மண்டபம்.

இது ஒருகாலத்தில் செம்படவர் வதிந்தவிடமாக விருந்தாலு மிப்போது பாம்பன்கிளை ரெயில்பாதையின் கடைசி ஸ்தலம். இது இராமேஸ்வரத்திற்குப் போவோர்க்குக் கடைசி ஸ்தலமாகும். இதில் இராமநாதபுரம் ராஜா அவர்களுடைய சிறந்த சிறிய கோயிலிருக்கிறது. இவ்விடம் யாத்

திரைக்காரருக்குஉபயோகமாகச் சத்திரம், தந்தி சமாச்சார ஆபீஸ்களு மிருக்கின்றன. சுகாதாரத்தைக் கருதி இந்த மண்டபம், பாம்பன், இராமேஸ்வரம் ஆகிய 3 ஸ்தலங்கள் ஒரு யூனியனைச் சேர்க்கப்பட் டிருக்கின்றன. யாத்திரைக் காரர் மண்டபத்தி லிறங்கிச் சிறு படகுகளின்மீதேறி இராமேஸ்வரத்திற்குப் போய்வருகிறார்கள். இந்த மண்டபம் சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 434 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூபாய் 4-10-0.

---

## பாம்பன்.

இது மண்டபத்திற்கு எதிராக இருக்குமிடம். இங்கே சில நல்ல வீடுகளும் சர்க்கார் கட்டிடங்களும் வர்த்தகசாலைகளும் இருக்கினும், ரோட்டுகள் மணற் காடுகளாயும் பெரும்பான்மையான வீடுகள் பனையோலைகளால் மேயப்பட்ட குடிசைகளாயு மிருக்கின்றன. இங்கே டிஸ்டிரிக்டு போர்டு சத்திரமும், அநேக ஹோட்டல்களு மிருக்கின்றன. யாத்திரைக்காரர் தரிசிக்கும் சுப்பரமணியசுவாமி கோயிலும், கப்பலுக்கு வழிகாட்டும் விளக்குக்கூண்டு கட்டிடங்களும் இருக்கின்றன. இதற்கு ½ மைல் தூரத்தில் பைரவ-கபில தீர்த்தங்க ளிருக்கின்றன.

இந்தப் பாம்பனுக்கு 2½ மைல் தூரத்தில் தங்கச்சி மடம் இருக்கிறது. இதற்கு 1½ மைல் தூரத்தில் வெள்ளருணிதீர்த்த மிருக்கிறது. இதுதான் இராமருக்குக் குடிக்க முதலிலகப்பட்ட நல்லதண்ணீராம். இந்தப்பாம்பன் சென்னை தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 444 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு சார்ஜ் ரூபாய் 4-14-0.

---

## இராமேஸ்வரத்தின் தற்கால விவரம்.

இந்த இராமேஸ்வரமானது ஸ்ரீராமர் பூசித்த ஸ்தலமாம். இந்த க்ஷேத்திரத்திற்குப் போகிறவர்கள் மண்டபம் ரெயில்வே ஸ்டேஷனி லிறங்கி மத்தியில் 4 மைல்கள் தூரமுள்ள பாம்பன் கால்வாயைச் சிறிய ஸ்டீமர் அல்லது படகால் தாண்டி மறுபடியும் பாம்பனில் ரெயிலேறி இராமேஸ்வரம் ஸ்டேஷனிலிறங்கவேண்டும். கூடிய சீக்கிரம் இந்த

மண்டபத்திலிருந்து பாம்பனுக்கு ரெயில்ரோடு போட உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. ஸ்டேஷனிலிருந்து கோயில் ஒரு மைல் தூரத்தி லிருக்கிறது. அத் தீவின் வடகிழக்குப் பாகமாயும், மன்னார் குடாக்கடலுக்கு எதிர் முகமாயும், 25 மைல்கள் நீளமுள்ளனவாயும், அந்த நீளத்தில் 8 மைல்கள் முதல் மேற்கு நோக்கி 6 மைல்கள் அகலமுள்ளனவாயும், அநேக தீர்த்தங்களுள்ளனவாயுமிருக்கும் ஒரு தீவு. இதன் முக்கியமான வீதியும், கோயிலைச் சுற்றியிருக்கும் வீதிகளும் அதிக ஜன நெருக்கமுள்ளவையாயும் பெரும்பான்மையாகப் பிராம்மணர் வசிக்கும் வீடுகளுள்ளவையாயும் இருப்பதன்றியில், பக்கத்தில் வியாபாரிகள் வசிக்கும் கடைவீதியுமிருக்கின்றது. இப்படிக்கிருக்கினும் பெரும்பான்மையான வீடுகள் பனையோலைகளால் மூடப்பட்ட புராதன வீடுகளைப் போல் காணப்படுகின்றன. சென்ற காணிஷ்வார் கணக்கின்படி யாத்திரைக்கார ரல்லாமல் நிரந்தரமாகக்குடியிருப்பவர்கள் 2000 பேர்.

## இராமேஸ்வரக் கோயில்.

இக் கோயிலானது ஆதியில் ஸ்ரீராமரால் அஸ்திபாரம் போடப்பெற்றுப் பிறகு இராமநாதபுரம் சேதுபதிகளால் கட்டப்பட்டதாம். இந்த இந்தியா ஒரெட்டிலுமுள்ள இந்தியர்கள் முக்கியமான சைவர்கள் கொண்டாடும் க்ஷேத்திரம். பார்வைக்கு நீள சதுரமுள்ள கருங்கல் கட்டிடமாயும், இதன் வெளிப்பிராகாரம் 1000 அடிகள் நீளமும், 657 அடிகள் அகலமுள்ளதாயும்; இரண்டாவது பிராகாரம் 500 அடிகள் நீளமும், 300 அடிகள் அகலமுள்ளதாயும்; மூன்றாவது பிராகாரம் மூலஸ்தானமான கர்ப்பக்கிரஹத்தைச் சுற்றிவரும் பிராகார வழிச் சுவர்களானதாயும் இருக்கின்றன. இப்போது 120 அடிகள் உயரமுள்ள கோபுரம் கட்டப்பெற்றிருக்கிறது. பின்னும் பல கோபுரங்கள் கட்ட உத்தேசம் போலும். இக்கோயிலுக்குள் அநேக மண்டபங்க ளிருக்கினும், அவைகளிற் சொக்கட்டான் மண்டபம் 40 அடிகள் நீளமுள்ளதாயும், சிற்பாலங்கார செதுக்கு வேலை தீர்ந்த கல் கட்டிடமாயு மிருக்கின்றது. இங்கே பிரதி வெள்ளிக்கிழமைதோறும் ஸ்ரீ பார்வதா தேவி விக்கிரகத்தைப் பொன் பல்லக்கில் கொண்டுவந்து வைத்து உற்சவங் கொண்டாடுகிறார்கள். கர்ப்பக்கிரஹத்திற்குள்ளிருக்கும் லிங்கத்தை ஸ்ரீ ராமர்வைத்து பூசித்தபடியால் இதற்கு இராமலிங்கமென்று

சொல்லிப் பிரதிதினமும் கங்கை ஜலத்தால் அபிஷேகம் செய்விக்க, அவ்வபிஷேக ஜலத்தை யேராளமான யாத்திரைக்காரர் அதிக விலை கொடுத்து வாங்கி உபயோகிப்பதோடு சிறு பாத்திரங்களில் வார்த்து மூடி தம் நாடுகளுக்கேகி பந்து மித்திரர்களுக்கு அளிக்கிறார்கள். நிற்க, வாகன மண்டபத்தில் பொன்முலாம் பூசிய அநேக வாகனங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ பர்வதவர்த்தனி மண்டபத்தில் இராமேச்சுர கோயிலுக்கு அநேக உபயங்கள் செய்வித்த ஸ்ரீராமநாதபுரம் ராஜா ஸ்ரீ பாஷ்கர சேதுபதியவர்களுடைய உருவக்கற்சிலை வைக்கப்பட்டிருக்கிறது. இங்கே ஸ்ரீ சேதுமாதவரென்னும் விஷ்ணு ஸ்தலமும், மாதவ தீர்த்தமும் இருக்கிறதன்றியில், பின்னும் அநேக தீர்த்தங்களுமிருக்கின்றன. அவை எவையெனில், கங்காயாத்திரை தீபிகையின்படி :—

முக்கிய தீர்த்தங்கள் இருபத்திரண்டும், உபதீர்த்தங்கள் இருபத்தெட்டுமுள்ளன. இவைகளின் விருத்தாந்தங்கள் பெயரைப் பார்த்தமாத்திரத்தாலே விளங்கக்கூடியதே. அவைகளை இங்கெழுதின் விரியுமாதலால் ஆவஸியகமுள்ளவர்கள் ஸேதுபுராணத்தால் தெரிந்துகொள்ளலாம்.

1. சக்கரதீர்த்தம்:—நவபாஷாண மென்னும் தேவிபட்டணத்தில் பெருமாள் கோவிலுக் கெதிரிலுள்ளது. இந்த தீர்த்தமாகிய சமுத்திரம் சீதாபிராட்டியார் ஸ்நானஞ்செய்தகாலத்து அலைகளடங்கினதால் அதுமுதலப்படியே யிருக்கிறது.

2. பேதாளதீர்த்தம் : —தில்லைநாச்சியம்மன் கோவிலுக்குத் தெற்கிலும், வெற்றிலைமண்டபத்துக்கு மேற்கிலும் ஆறுமைலி லிருக்கிறது.

3. பாபவிநாசம்:—வெற்றிலை மண்டபத்துக்கு வடக்கில் சமீபம்.

4. சீதாகுண்டம்:—தங்கச்சி மண்டபத்துக்கு வடக்கே கால் மைல்.

5. மங்களதீர்த்தம்:—தங்கச்சி மண்டபத்துக்குக் கிழக்குச் சாலையில் கால் மைல்.

6. அமிருதவாபிதீர்த்தம்:—ஏகாந்த இராமஸ்வாமிகோயிலில்.

7. பிரம்ஹதீர்த்தம் :—இராமேஸ்வரத்துக்கு வடக்கே அரை மைல்.

8. ஹனுமந்ததீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்கு வடக்கே கால் மைல்.

9. அகஸ்தியதீர்த்தம்:—இராமேஸ்வரத்துக்குக் கிழக்கே கால் மைல்.

10. இராமதீர்த்தம்:—இராமேஸ்வரத்திற்கு மேற்கே கால் மைல்.

11. இலக்ஷ்மணதீர்த்தம்:—இராமேஸ்வரத்திற்குமேற்கே ஒரு மைல்.

12. ஜடாயுதீர்த்தம் :—இராமேஸ்வரத்திற்குத் தெற்கே மூன்று மைல்.

13. மகாலக்ஷ்மிதீர்த்தம் :—கீழ்க்கோபுரவாசலில் ஹனுமார் கோவில் சந்நிதிக்குத் தெற்கு.

14. அக்கினிதீர்த்தம்:—இராமேஸ்வர இராமநாத ஆலயத்திற்குச் சமீபம், கிழக்கு சமுத்திரம்.

15. சக்கரதீர்த்தம்:—இராமநாதராலயத்தின் இரண்டாம் பிராகாரத்துள்.

16. சிவகங்கை:—இராமநாதராலயத்துக்குள் ஸ்வாமி அம்மன் கோயில்களுக்கு மத்தியில்.

17. சங்கதீர்த்தம்:—இராமநாதராலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்துக்குள்.

18. யமுனா தீர்த்தம்.

19. கயா தீர்த்தம்.

20. கவா தீர்த்தம்.

இம்மூன்றும் ஷை ஆலயத்தின் இரண்டாம் ப்ராகாரத்தி லிருக்கின்றன.

21. சர்வதீர்த்தம்:—இராமநாதசுவாமி சந்நிதியில் கோயிலுக்குள்.

22. தனுஷ்கோடி:—பிரசித்தம். இராமேஸ்வரத்திலிருந்து தென்கிழக்காக இருபது மைல்.

## உப தீர்த்தங்கள்.

1. பைரவதீர்த்தம்:—பாம்பன் சமுத்திரம்.
2. கபிதீர்த்தம்:—பாம்பனில் திருக்குளம்.
3. இரணவிமோசன தீர்த்தம் : — ஏகாந்த இராமசாமி கோயிலுக்கு வடக்கு.
4. தனுசுதீர்த்தம்:—அதாவது வில்லூன்றி தீர்த்தம். தங்கச்சி மடத்துக்கு ஒருமைல் சமுத்திர சுத்தஜலம்.
5. சுக்கிரீவதீர்த்தம்:—கந்தமாதனபர்வதத்தின் பிரதக்ஷிணத்தில்.
6. அங்கததீர்த்தம்.
7. ஜாம்புவதீர்த்தம்.

இவ்விரண்டும் ஷை கந்தமாதன பிரதக்ஷிணத்தில். கந்தமாதன பர்வதசிகரத்தில் ஸ்ரீராமர் பாதங்கள் தெரிசன விசேஷம்.

8. தர்ம தீர்த்தம்.
9. பீம தீர்த்தம்.
10. அர்ஜ்ஜுன தீர்த்தம்.
11. நகுல தீர்த்தம்.
12. ஸஹதேவ தீர்த்தம்.
13. த்ரௌபதா தீர்த்தம்.
14. தேவ தீர்த்தம்.
15. இலங்கை மகா காளிதீர்த்தம்.

இவைகளும் ஷை கந்தமாதன பர்வத பிரதக்ஷிணத்தி லமர்ந்திருக்கின்றன.

16. மாதவதீர்த்தம்:—பெரியகோயில் மேலக்கோபுர வாசலினருகில்.
17. நள தீர்த்தம்.
18. நீல தீர்த்தம்.
19. கவாக்ஷ தீர்த்தம்.
20. கவேதீர்த்தம்.
21. கந்தமாதன தீர்த்தம்.

இவ்வைந்தும் சேதுமாதவர் சந்நிதியி லிருக்கின்றன.

22. பிரஹ்மஹத்தியா விமோசன தீர்த்தம்.
23. சூரியபுஷ்கரணி தீர்த்தம்.
24. சந்திரபுஷ்கரணி தீர்த்தம்.

இம்மூன்று தீர்த்தங்களும் பெரிய கோவிலின் இரண்டாம் ப்ராகாரத்தி லமைக்கப்பெற்றிருக்கின்றன.

25. காயத்திரி தீர்த்தம்.
26. சாவித்திரி தீர்த்தம்.
27. சரஸ்வதி தீர்த்தம்.

இம் மூன்றும் கீழிக்கோபுரம் ராஜா சத்திரத்திற்குப் பின்னுள்ளன.

28. நாகதீர்த்தம்:—தர்மகர்த்தா மடத்தில்.

மற்றப்படி க்ஷேத்திர தீர்த்தவிதிகள் முதலத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கிறபடி க்ஷேத்திராடனம், தீர்த்த சிராத்தம், தர்ப்பணம், வபனம் முதலியவை அவரவர் சக்திக்குத் தக்கபடி ஐந்து ரூபாய்முதல் செய்யலாம். நிற்க, மேற்கூறிய முக்கிய தீர்த்தங்களுக்குச் செலுத்தவேண்டியவும் ஸ்ரீ இராமநாத ராலயத்தில் யாத்திரைவாசிகள் நடத்தும்படியான உபயங்களுக்குச் செலுத்தவேண்டிய கட்டண விகிதங்களும் அடியிற் காண்க. இக்கட்டணங்களில் சரிபாதி சர்க்காருக்குச் சேருகிறது.

கோடிதீர்த்த அபிஷேகக் குடம் ஒன்றுக்குக் காலணா. தேங்காய் உடைத்து நைவேத்தியஞ் செய்ய காய் ஒன்றுக்கு ஒரு அணா.

அஷ்டோத்தர அர்ச்சனை ஒன்றுக்கு ஐந்தணா.

சகஸ்ரநாம அர்ச்சனை ஒன்றுக்கு ஒரு ரூபாய்.

பாயஸ நைவேத்தியத்திற்கு ஒரு ரூபாய்.

வடை பாயாஸ நைவேத்தியத்திற்கு இரண்டு ரூபாய்.

கங்காபிஷேகம் தீர்த்தச் செம்பு ஒன்றுக்கு ஒன்றே முக்கால் ரூபாய்.

உபயாபிஷேகம் நைவேத்திய முள்பட ஐந்தரை ரூபாய்.

தங்கப்பல்லக்கு உற்சவத்திற்குப் பதினேழரை ரூபாய்.

பஞ்சாமிருதாபிஷேகத்திற்குப் பத்தொன்பதே முக்கால் ரூபாய்.

பஞ்சமூர்த்திகள் அபிஷேகத்திற்கும் உற்சவத்திற்கும் நூற்றைம்பது ரூபாய்.

சங்காபிஷேகத்துக்கு முந்நூற்றைம்பது ரூபாய்.
மஹாபிஷேகத்துக்கு ஐந்நூறு ரூபாய்.

இந்த இராமேஸ்வரத்திற்கு வரும் யாத்திரைக்காரர்கள் முதலில் பிரமஹத்யாதி பைசாச தோஷங்களும், ராகு தோஷ முதலிய சமஸ்த தோஷங்களும் நிவர்த்தியாவதன் பொருட்டு நாகபிரதிஷ்டை முதலியன செய்வது வழக்கம். பிறகு சுப்ரமண்யக்கடவுளாலும் அகஸ்தியமாமுனிவராலும் பூஜிக்கப்பெற்ற குஹேஸ்வர-அகஸ்தீஸ்வர-லிங்கங்களுக்குப் பூஜைகள் செய்து, கந்தமாதனபர்வதத்தைத் தரிசித்து, அங்கே ஒரு மண்டபத்தில் கல்லின்மேல் செதுக்கியிருக்கும் ஸ்ரீராமர் பாதங்களைப் பூஜிப்பது வழக்கம். அனந்தரம் ஸ்ரீராமலிங்க சுவாமிக்கும் அம்மனுக்கும் மற்ற தேவர் தேவிகளுக்கும் பூஜை செய்வது வழக்கம்.

## ஸ்ரீ ராமேஸ்வரத்தில் நடக்கும் ஷட்கால பூஜை விவரம்.

1. உஷத்காலம் திருவநந்தல், பொரி, தாம்பூலம், ஸ்படிக லிங்காபிஷேகம், நைவேத்தியம்.
2. விளாபூஜை:—சுத்த சம்பா, தோசை, அநந்தசயனம் ராஜா கட்டளை.
3. காலசந்தி :—புதுக்கோட்டை மஹாராஜா கட்டளை கோயிலில் சேர்க்கப்பட்டது.
4. உச்சிக்காலம் :—சம்பா, பொங்கல், சர்க்கரைப்பொங்கல், வடை, பால், பாயஸம்.
5. சாயரட்சை :—புளியோதரை, கோயிலார் விசாரணையில் பச்சையப்பமுதலியார் கட்டளையில் சேர்க்

கப்பட்டது. நாட்டுக்கோட்டையார் பால் கங்கை அபிஷேகம்.

6. அர்த்தசாமத்துக்கு:—மிளகுசம்பா, பள்ளியறைக்குப் பால், பொரி, தாம்பூலம்.

குறிப்பு:—காலசந்தியிலும், சாயரக்ஷையிலும் நித்தியோற்சவமுண்டு.

---

## பிரம்மோற்சவ விவரம்.

மாகமாதத்துக் கிருஷ்ணபக்ஷ சஷ்டியில் த்வஜாரோகணஞ் செய்து மஹா சிவராத்திரிக்குத் தீர்த்தங் கொடுப்பது.

1-ம் திருவிழா:—பகல்-வெள்ளி சப்ரம், இரவும் அதுவே.

2-ம் திருவிழா:—பகல்-வெள்ளி சப்ரம், இரவு-கற்பகவிருக்ஷம், காமதேனு, பெருச்சாளி, மயில், சப்ரம் இவைகளில் பஞ்சமூர்த்தி புறப்பாடு.

3-ம் திருவிழா:—பகல்-கந்தமாதன பர்வதத்துக்குப் போதல், இரவு-பூதவாகனம், ஸிம்ஹவாஹனம்.

4-ம் திருவிழா:—பகல்-சப்ரம், இரவு-இராவணன் தாமரை.

5-ம் திருவிழா:—பகல்-சப்ரம், இரவு-யானை, பல்லக்கு.

6-ம் திருவிழா:—பகல்-சப்ரம், இரவு-விருஷபவாஹனம்.

7-ம் திருவிழா:—பகல் - சப்ரம், இரவு-சப்ரம், பின் சபாநாதர் புறப்பாடு.

8-ம் திருவிழா:—பகல்-சபாநாதர், இரவு - குதிரை, கிளி வாகனங்கள்.

9-ம் திருவிழா:—பகல்-இரதோற்சவம், இராத்திரி-சண்டாளாபிஷேகம். மஹா சிவராத்திரி விசேஷம்.

10-ம் திருவிழா :—தீர்த்தம். ஸ்ரீ இராமநாதர் சந்நிதியிலிருக்கின்ற சமுத்திர ஸ்நாநகட்டமாகிய அக்கினி தீர்த்தத்தில் கொடுக்கப்படுகிறது. சாயங்தரம் வசந்தோற்சவம். இரவு பிக்ஷாடனம், அவரோஹணம்.

11-ம் திருவிழா:—இராத்திரி-சண்டோற்சவம்.

ஆடிப்பூர உற்சவம்வெகு விமரிசையாய்ப் பஞ்சமூர்த்தி புறப்பாடுடன் இராமதீர்த்தக் கரையில் நடக்கிறது. இவைகளைத் தவிர மற்றப்படிக்குள்ள மாசிமகம், உத்தராயன-தக்ஷிணாயன புண்ணிய காலங்கள், மஹாளய அமாவாசை முதலிய விசேஷ காலங்களில் சுவாமி புறப்பாடும் தீர்த்தமுமுண்டு.

இப்போது யாத்திரைக்காரர் தங்குவதற்குத் தஞ்சாஊர் இராஜர்களால் கட்டின ஆறுசத்திரங்களும் ஹோட்டல் முதலான வசதிகளுமிருக்கின்றன.

---

## தனுஷ்கோடி சேதுஸ்நாந கட்டம்.

இந்த இராமேஸ்வரத்திற்கு 20 மைல்கள் தூரத்தில் தனுஷ்கோடி என்னும் சேதுஸ்நாந கட்டமிருக்கிறது. இதற்கு இப்போது ரெயில்வண்டி போய் வருகிறது. அந்த ஸ்டேஷனிலிருந்து 1½ மைல் தூரத்தில் சேதுஸ்நானகட்டமிருக்கிறது. அதில் தையீ ஆடியீ அமாவாசை காலங்களில் லக்ஷக்கணக்கான ஜனங்கள் வந்து ஸ்நானம் செய்கிறார்கள். யாத்திரைக்காரருக்கு உபயோகமான அநேக நாட்டுக்கோட்டைச்செட்டிமார்களுடைய தர்மசத்திரங்களிருக்கின்றன. இதற்கு 4 மைல்கள் தூரத்தில் வடக்கே முகுந்தராயர் தர்மான்ன சத்திரமுமிருக்கிறது. இந்த இராமேஸ்வர சன்னிதிக்கு விலையுயர்ந்த ஆடையாபரணங்களும் ஆஸ்தி வருமானங்களும் அநேக மிருக்கின்றன. இந்த இராமேஸ்வரம் பாம்பனுக்கு 8 மைல்கள் தூரத்திலும், சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனுக்கு 445 மைல்கள் தூரத்திலுமிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூபாய் 4-14-0. இராமேஸ்வரத்திலிருந்து தனுஷ்கோடி சுமார் 12 மைல்கள் தூரத்திலிருக்கிறது. இந்த இராமேஸ்வரக் கோயிலின் தர்மசொத்து கைங்கர்யங்களைக் கிரமமாக நடத்தி வரும்பொருட்டு இப்போது ஒரு கமிட்டியாரை நியமித்துப் பார்த்து வருவதில் அக்கமிட்டியார் தயார்செய்த அறிக்கைப் பத்திரங்கள் அப்போதைக் கப்போது வெளிவருகின்றன.

## பாம்பன் தனுஷ்கோடி தலைமன்னார் ரயில்வே.

நமது இந்தியாதேசத்துக்கு ஒரு காலத்தில் ஒரே பூமியாகச் சேர்ந்திருந்து பிறகு தனியாகப் பிரிந்து சமுத்திரங்களாற் சூழப்பட்ட இலங்கைத் தீவின் அரசனான இராவணன்

ஸ்ரீராமருடைய மனைவி சீதையைக் கொண்டுபோய் விட்ட படியால் அச்சீதையை மீட்கக் கருதி இராவணனோடு யுத்தம் செய்யப் பிரயத்தனப்படுகையில், இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடையில் சமுத்திரம் இருப்பதைக் கருதி விஸ்வகர்மாவை அழைத்து இவ்விடைவழியில் ஒரு வாராவதி கட்டித்தர உத்தரவளிக்க, அவ்விஸ்வகர்மா, இஞ்சினீயர் வேலையிற் சிறந்த தனது மகன் மயன் என்பவனுக்குக் கட்டளையிட, அம் மயன் வானரர்களுடைய வீரனும் சிறந்த இஞ்சினீயருமாகிய அநுமானுடைய உதவியைக்கொண்டு 4 நாட்களில் இவ்வாராவதியைக் கட்டி முடித்தனராம். பிறகு காளாவட்டத்தில் சமுத்திர அலைகள் இவ் வாராவதியைத் தாக்கி மோதியடிக்கக் கொஞ்சங் கொஞ்சமாகக் கரைந்து சமுத்திரத்தினால் மூடிவிடப்பட்டது. அனந்தரம் அனேக ராஜர்களும் முக்கியமாகப் பாண்டிய நாட்டின் சக்ரவர்த்தியாயிருந்த விஸ்வநாத நாயுடுகாரும் அவருடைய மதியூகமுள்ள மந்திரியாகிய அரியநாயக முதலியாரும் பிரபல பிரயத்தனங்கள் செய்தும் முடித்தார்களில்லை. இப்போது இலங்கையில் உற்பத்தியாகும் சரக்குகள் இந்தியாவுக்கு வரவும், இந்தியாவின் சரக்குகள் இலங்கைக்குப் போகவும் இடையிலுள்ள 22 மைல்கள் நீளம் கடக்க கஷ்டப்பட்டுத் தூத்துக்குடியிலிருந்து ஏற்றுமதி இறக்குமதி செய்துவந்தார்கள். இக்கஷ்டத்தை நீக்கச் சென்ற 38 வருஷகாலங்களாக இந்திய இலங்கை கவர்ன்மெண்டார்கள் யோசனை செய்து வந்தார்கள். 1876ஸ்ரு முதற்கொண்டு பல பிரயத்தனங்கள் செய்தும் 1894ஸ்ரு வரையில் ஒரு முடிவிற்கும் வரவில்லை. அந்த வருஷம் இலங்கை கவர்ன்மெண்டார் முன் வந்து வேலையை ஆரம்பிக்க 259 லக்ஷ ரூபாய்கள் செலவாகுமென்று மதிப்பிடப்பட்டது. 1895ஸ்ரு இந்திய கவர்ன்மெண்டார் தக்கபடி சர்வேசெய்து பார்த்ததில் 249 லக்ஷ ரூபாய்கள் செலவாகுமென்று மதிப்பிடப்பட்டது. 1903ஸ்ரு போட்ட மதிப்பின்படி 111 லக்ஷம் ரூபாய்கள் செலவிட வேண்டுமென்று தோன்றிற்றாம். பிறகு, இது விஷயத்தைப்பற்றிப் பல இன்சினியர்கள் பலவிதமாக மதிப்பிட்டுவந்தாலும் முடிந்தபாடில்லை. ஆயினும் 1908 வருஷம் நவம்பர்மீ 25 தேதி சென்னை கவர்னராய் இருந்த ஸ்ரீ சர் ஆர்தர் லாலியவர்களும் இலங்கைக் கவர்னர் அவர்களும் ரெயில்வே போர்டு தலைவரும் வேறு சில இஞ்சினியர்களும் இதைப்பற்றிப் பல வித

மாக யோசித்துப் பார்த்ததில் பின் வருகிறபடி ஷை வாரா வதியைக் கட்டி முடிக்கத் தீர்மானித்தார்கள். எப்படியெனில், முன் ஸ்ரீராமர் கட்டிய வாராவதியை யனுசரித்துத் தனுஷ்கோடியின் இருபக்கத்திலிருந்து Piers என்னும் கடல் வாராவதியை மிதக்கும் கப்பல்களின்மேல் கட்டி, அதனால் பருவ புயல்காற்றுக் காலத்தில் கப்பல்கள் ஸ்ரீராமர் கட்டிய பாலத்தின் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்துக்கு மாறுவதற்கு வசதி யுண்டாக்கியும், இலங்கையைச் சார்ந்த தலைமன்னாரிலும் இதே மாதிரியாக ஒரு வாராவதியைக் கட்டுவிக்கச் செய்தும், அவ் வாராவதிகளின்மீது சிறிய ரயில் வண்டித்தொடர் போய்வர தண்டவாளங்களைப் புகட்டியும் இருக்கிறார்கள். இது 6776 அடிகள் நீளமும், 145 கண்களும், அவைகளில் 40 அடிகள் நீளத்தில் 143-ம், 43-ல் ஒன்றும், 44-ல் ஒன்றுமாக இடைவெளிகளுள்ளவையாயும், இந்த வாராவதியைச் சார்ந்து தாங்கும் மிதக்கும் கப்பல்களுக்கும், இவைகளுக்கு எதிர்முகமாயிருக்கும் கப்பல்களுக்கும், 289 அடிகள் அகலமிருப்பதால் அவ்விடைவழியில் 200 அடிகள் அகலமும்-14 அடிகள் ஆழமுமுள்ள சாதாரண கப்பல்கள் போய்வர வழிவிட்டுக் கட்டப்பட்டிருக்கிறது. தனுஷ்கோடியிலிருந்து ஆரம்பித்த Piers என்னும் வாராவதியைத் தாங்கும் கப்பல்கள் 710 அடிகள் நீளமும், உச்சியில் 34 அடிகள் அகலமும், நுனிகளில் 26 அடிகள் அகலமும், தண்ணீரின் ஆழ்ந்த மட்டத்திற்கு மேல் 9 அடிகள் உயரமுள்ளவைகளாக நல்ல இரும்பு எஃகினால் செய்யப்பட்டவை ஆக தனுஷ்கோடிக்கும் தலைமன்னாருக்கும் இருக்கும் 22 மைல்கள் தூரம் போய்வர, மூன்று பெரிய கப்பல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அக் கப்பல்கள் ஒவ்வொன்றும் 250 அடிகள் நீளமும், 38 அடிகள் அகலமும், ஒரு மணி நேரத்திற்கு 18 மைல்கள் செல்லக்கூடிய சக்தியை உடையவைகளாயும், 652 டன் பளுவைத் தாங்கக் கூடியவைகளாயும், அப்பளுவுடன் 50 முதல் வகுப்புப் பிரயாணிகளையும், 500 மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளையும், அவர்களுடைய 180 டன்நிறையுள்ள சாமான்களையும், 110 கால்நடைகளையும் சுமக்கும்படியான விஸ்தீரணமும் சக்தியு முள்ளவையாயும் இருக்கின்றன. இந்தக் கட்டிடங்களுக்கும் கப்பல்களுக்கும் 2000 டன்ஸ் நிறையுள்ள நல்ல இரும்பு எஃகும், 20,700 கன அடிகளுள்ள தேக்குமரங்களும் உபயோ

கப்படுத்தப்பட்டிருக்கிறதன்றியில், 2000 மனிதர்களைக் கொண்டு சுமார் 70 லக்ஷம் ரூபாய் செலவில் வேலை செய்யப்பட்டு முடிந்தது. அதாவது, 1911ஹு ஜூன்மீ தொடங்கி 1913ஹு ஜூன்மீ வரை கூடிய இரண்டு வருஷ காலத்தில் முடிக்கப்பெற்று, 1914ஹு பிப்ரவரிமீ 24வு சென்னை கவர்னரவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. அத்தருணத்தில் இலங்கைக் கவர்னரும் இந்தியாவிலுள்ள பிரமுகர்களும் போய்ப் பார்த்து இப்படி இப்போது அநேகவருஷகாலங்களாய்ச் சமுத்திரத்தினால்பிரிக்கப்பட்டிருந்த இலங்கைக்கும் இந்தியாவுக்கும் சுலப சாதனமாகச் சம்மந்தப்படுத்திய சிற்ப சாஸ்திரிகளுடைய திறமைகளைக் கண்டு ஆனந்தித்தார்கள்.

மதுரையும் இராமேஸ்வரமும் பூர்வத்தில் பாண்டிய நாட்டைச் சார்ந்தவையென்று முன் கூறினோம். இந்தத் திருநெல்வேலியும் ஒருகாலத்தில் பாண்டிய நாட்டிற்குச் சேர்ந்தது. இதைச் சார்ந்த தாம்பிரவர்ணி நதியின் முகத்துவாரத்திலிருக்கும் கோள்கை என்பது ஆதி பாண்டியர்களுக்குப்பிரதானபட்டணமாயிருந்தது. ஒருகாலத்தில்இது முத்துச்சிப்பிகள் எடுக்கும் துறைமுகப் பட்டணமாயிருந்து பிறகு கயால் பட்டணத்திற்கு மாற்றப்பட்டது. அப்போது மார்க்கோ போலோ என்னும் ஐரோப்பிய யாத்திரைக்காரர் இதை நேரில் வந்து பார்த்ததாகத் தமது சரித்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறார். பிறகு, கி. பி. 1310ஹு மகம்மதியர்கள் படையெடுத்துவந்து தாக்கினாலும் விஜயநகர சமஸ்தானத்தாருக்கு வசமாகி அனந்தரம் மதுரை நாயுடுகார் சமஸ்தான ஆளுகைக்குள் வந்தது. மதுரையில் நாயுடுகார் சமஸ்தானம் மங்கலடைய மஹமெடாலியினால் ஆங்கிலேயர்க்கு வசமாக, அன்றுமுதல் இத்திருநெல்வேலி ஒரு பெரிய ஜில்லாவாகி அவர்களால் ஆளப்பட்டு வருகிறது. இப்போது இது இந்த ஜில்லாவிற்குப் பிரதானமானதாகி முனிசிபல் பட்டணமாய் 44,805 ஜனங்கள் குடியிருக்கும் பட்டணமா யிருக்கிறது. இது தாம்பிரவர்ணி நதியின் இடதுகரையில் கட்டப்பட்டுள்ளது. நகரத்தின் மத்தியில் நெல்லியப்பசுவாமி காந்திமதியம்மன்கோயில் கட்டப்பட்டிருக்கிறது. இக்கோயில் இராமேஸ்வரக் கோயிலைவிட பெரியதா யிராவிட்டாலும் செதுக்குச் சித்திரவேலையில் சிறந்ததெனச் சொல்லலாம். நகரத்தின் ரயில்வே ஸ்டேஷனுக்கு ¾ மைல் தூரத்தில் தாம்பிரவர்ணி

நதிக் கரையின்மேல் சுப்பிரமண்ணிய சுவாமிகளுடைய அழகிய கோயிலிருக்கிறது. இந்தத் திருநெல்வேலிக்குச் சம்மந்தப்பட்ட கோர்ட்டு கச்சேரிகள் சுமார் இரண்டு மைல்கள் தூரத்திலிருக்கும் பாளையங்கோட்டையில் இருக்கின்றன. இப் பாளையங்கோட்டை முன் ஒரு பெரிய பட்டாளம் தங்குமிடம். இப் பாளையங்கோட்டைக்கும் திருநெல்வேலிக்கும் மத்தியில் தாம்பிரவர்ணி நதி ஓடுவதால் அதைக் கடந்து போய்வர 66 அடிகள் அகலமும் 11 கண்களுள்ள ஒரு பாலம் கட்டப்பட் டிருக்கிறது. அது ஒருகாலத்தில் நாயப்புசிரஸ்ததாராக விருந்த சுலோசன முதலியாரால் கட்டுவிக்கப்பட்டதாம். திருநெல்வேலிக்கடுத்த மேலப்பாளையத்தில் நல்ல துணிகள், பருத்திநூல், சமுக்காளங்கள் நெய்யப்பட்டு வருகின்றன. இவ்விடம் பனைவெல்லம் அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டு, நெல்லிக்குப்பம் சக்கரைக்கம்பினிக்கு ஏராளமாக ஏற்றுமதி செய்யப்பட்டு வருகிறதன்றியில், உள்ளூரிலிருக்கும் சக்கரைக் கம்பினிக்கும் உபயோகப்பட்டு வருகிறது. ஆடிமாதத்தில் நடக்கும் ரதோற்சவ காலத்தில் ஏராளமான ஜனங்கள் வருகிறார்கள். யாத்திரைக்காரருக்கு உபயோகமாக நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களால் தாம்பிரபரணி நதிதீரத்தில் வசதியான தர்மான்னசத்திரம் கட்டப்பட்டிருக்கிறது. திருநெல்வேலியில் ஹிந்துகாலேஜ் இருப்பதோடு, கிறிஸ்தவர்களுடைய காலேஜுகளும் கல்லூரிகளும் இந்த இந்தியாவிலுள்ள மற்றெல்லாவிடங்களிலும் சிறந்தவை எனச் சொல்லலாம். குருடர் ஊமைப்பிள்ளைகள் இவர்களுக்குக் கல்வியையும் கைத்தொழிலையும் கற்பித்து வருகிறார்கள். இப் பாடசாலைகளுக்கு சாருடக்கர் என்னும் அம்மையவர்கள் சிரத்தையாக உழைத்து வருகிறார். இவ்விடத்திய பிர்ம்மசமாஜ தலைவர் ம-ா-ா-ஸ்ரீ கைலாசம்பிள்ளையவர்கள் தமது மனைவியின் பெயரால் ஸ்தாபித்த தாயம்மை பாடசாலை அதிக விர்த்தியாகிப் பிரகாசிக்கிறது. இந்தத் திருநெல்வேலி ஜில்லாவானது ஸ்ரீ நம்மாள்வார் நாச்சியார் முதலான வைணவ பக்தர்கள் பிறந்து பிரகாசித்தவிடமாம். இது சென்னை தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனுக்கு 442¼ மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு மூன்றாம் வகுப்பு சார்ஜ் ரூபாய் 4-15-0 திருநெல்வேலி பாலத்திற்கு 446 மைல்தூரம். மதுரையிலிருந்து 99 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு சார்ஜ் ரூபாய் 1-1-0.

---

## பாண்டியநாட்டைச் சார்ந்த மதுரையில் வைகைநதிக் கரையோரத்திற் செய்த பிரார்த்தனை.

ஓ பிரபுவே!-பக்திமான்களான பாண்டியர்களாலும் நாயுடு ராஜவம்சத்தாராலும் பல விசித்திர விநோத சிற்பாலங்காரமாகக் கட்டப்பட்ட பெருங் கோயில்களினாலும், கோபுரங்களினாலும், ஆவி கூப தடாகங்களினாலும், இப்பரதகண்ட மெங்கும் புகழ்பெற்றோங்கும் பாண்டியநாட்டின் பிரதான ஸ்தலமாகிய இம் துரையிலோடும் வைகைநதிக் கரை யோரத்தில் நின்னைப் பிரார்த்தனைசெய்ய எவ்வளவு பாக்கியம் பெற்றேன். நான் பார்க்கும் கோயில் கோபுர மண்டபங்கள் யாவும் நின் மகிமையைப் பிரசித்த மாக்குகின்றன. நின்மாட்டுள்ள பக்திசிரத்தையினால் பெரிய பொன் குவியலையும் சுககாலத்தையும் இரவும்பகலும் செலவழித்துக்கட்டிய இப்படிப்பட்டகோயில் கட்டிடங்களையும் தெப்பக்குளங்களையும் காணுந்தோறும் அப்பாண்டியர்களுடைய பக்தி பிரதிநிமிஷமும் பிரபலமாக்குகின்றது. அரியநாயக முதலியார், திருமலைநாயடு முதலானவர்களால் செய்விக்கப்பட்டிருக்கும் ஆயிரக்கால்மண்டபம் வசந்தமண்டபம் எவ்வளவு பக்திசிரத்தையினால் கட்டப்பட்டவை யன்றோ. அமுதினும் சுவையுடைய தமிழ்ப் பாஷையின் விர்த்தியைக் கருதி முச்சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்தல மிதுவன்றோ? அச் சங்கமேறிய அநேக கிரந்தங்களைப் படித்து அநேகர் இகபர சுகங்களை அறிந்துய்வது பிரத்தியட்சய மல்லவா? அகஸ்தியர் மாணிக்கவாசகர் முதலான சிவனடியார்களும், நம்மாழ்வார் நாச்சியார் முதலான வைணவ அடியார்களும் ஜனித்து வந்து ஸ்துதி செய்தவிட மிதுவன்றோ? இப்படிப்பட்ட விசேஷ ஸ்தலத்தில் வந்து விசேஷமான வைகை நதிக்கரையில் நானும் நின்னைப் பிரார்த்திக்கின்றேன். நின்னிடத்திலிருக்கும் எனது பக்தியை இக் கோபுரங்களைப்போ லோங்கச் செய்து ஆதரிப்பாய் சுவாமி!—ஓம் தத்சத்.

---

திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூருக்குப் போகும் ரோட்டில் இருக்கும் சிவசுப்பிரமணியசுவாமி கோயில் செதுக்கிய கற்களால் சிற்பாலங்காரமாகக் கட்டப்பட்டிருக்கிறது. இதற்குத் தெற்கே சிலமைல்கள் தூரத்தில் அழகிய மண்டபம் இருக்கின்றது. இது தூத்துக்குடிக்கு 20 மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்குப்பத்தாவது மைலில் தென்

தறைப்பறை யென்னும் விஷ்ணுவாலய மிருக்கிறது. அங்கிருந்து 4 மைல்கள் தூரத்தில் ஸ்ரீ வைகுண்டம் என்னும் விசேஷ வைணவஸ்தல மிருக்கின்றது. அதற்கு 2 மைல்கள் தூரத்தில் ஆள்வார்திருநகரி இருக்கின்றது. இது வைணவ ஆழ்வார்களிற் சிறந்த நம்மாழ்வார் அவதரித்த விசேஷ வைணவ க்ஷேத்திரம். திருநெல்வேலியிலிருந்து தெற்கே கன்னியாகுமரிக்குப் போகும் வழியில் நான்குநெரி தாலூக்காவில் தலைமைப்பட்டண மிருக்கிறது. அதில் வானமாமலை என்னும் விசேஷ வைஷ்ணவ ஸ்தலமும், ஸ்ரீ விஷ்ணு ஜீயர் ஆச்சாரியர் இருக்கும்மடமுமிருக்கின்றன. அங்கிருந்து மேற்கே 8 மைல்கள் தூரத்தில் திருக்கரங்குடி என்னும் சிவக்ஷேத்திரமும் விஷ்ணுக்ஷேத்திரமும் இருக்கின்றன. திருநெல்வேலிக்கு வடமேற்கே 32 மைல்கள் தூரத்தில் சங்கரநயினார் கோயில் என்னும் தாலுக்காப்பட்டண மிருக்கிறது. இங்கு ஹரியும் சிவனும் ஒன்றேயென்று ஒருருவாகத் தரிசிக்கக் கருதி ஸ்ரீ பர்வதி தேவியார் தவஞ்செய்ய, அவ்விருவரும் அத்தவத்திற் கிரங்கி இருவருமோருருவாகத் தரிசனை கொடுத்த பாவனையாக ஒருபாகத்தில் விஷ்ணுரூபமாகவும் மற்றொருபாகத்தில் சிவரூபமாகவும் செய்வித்தமைத்த விக்கிரகமுள்ள கோயிலிருக்கிறது. இங்கு ஆடி, பௌர்ணமி உற்சவகாலங்களில் நாலாபக்கங்களிலுமுள்ள ஜனங்கள் கும்பல் கும்பலாக வந்து சேவித்துப் போகிறார்கள். அதற்கு மேற்கே 8 மைல்கள் தூரத்தில் தாரகாபுரியென்னும் ஒரு விசேஷ சிவக்ஷேத்திர மிருக்கின்றது. அங்கு அநேக தேவர்கள் வந்து தபசு செய்ய அவற்றிற் கிரங்கிச் சிவபெருமான் மத்தீஸநாதராக வந்து சேவை சாதித்ததாகக் கேள்வி.

ஷை கோயிலுக்கு வடக்கே 6 மைல்கள் தூரத்தில் கருவநெல்லூர் என்னும் சிவஸ்தல மிருக்கின்றது. அந்தச் சிவன்பெயர் பால்வண்ணநாதர். அதற்கு 8 மைல்கள் தூரத்தில் தென்மலையென்னும் ஒரு சிவஸ்தல மிருக்கிறது. அதற்கு மேற்கே 10 மைல்கள் தூரத்தில் தேவதானமென்னும் சிவஸ்தல மிருக்கின்றது. இங்குத் தேவர்கள் யாகம் செய்யச் ரிஷபவாகனரூடராய்ச் சேவை சாதித்த விடம். அருகிலிருக்கும் ஒரு பாறையின்மேல் ரிஷபத்தின் நான்கு பாதங்கள் மிதிந்த பாவனையாக இருக்கின்றன.

திருநெல்வேலியைச் சார்ந்த நாகநேரி தாலுக்காவுக்கு மேற்கே 14-வது மைலில் களக்காடு என்னும் சிவக்ஷேத்

திரம் இருக்கிறது. இதில் பஞ்சபாண்டவர்கள் வந்து தவம் செய்தவிடம். இதிலிருக்கும் ஒரு கல்தூண் 32 பாகங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

இந்தத் திருநெல்வேலி ஜில்லாவைச் சார்ந்த சில சைவ வைணவ க்ஷேத்திரங்களாவன:

## திருநெல்வேலி.

(நெல்லையப்பர், சாலிவாடீச்சுரர், காந்திமதியம்மை, வடிவுடையம்மை, தாம்பிரவர்ணி நதி, சிந்துபூந்துறை தீர்த்தம், துர்க்காதீர்த்தம், கருமாறித்தீர்த்தம், பொற்றாமரைத்தீர்த்த முதலியன, வேய்விருக்ஷம், தாம்பிரசபை.)

பஞ்சகாலத்தில் நைவேத்தியத்திற்கு அருமையாயிரந்து கொணர்ந்து உலர்த்திய நெல்லைப் பெருமழையில் வெள்ளமடித்துப்போகாவண்ணம் வேதசருமாவின் பொருட்டு வேலி கட்டிக் காத்தருளிய தலம்; இதனாலே இதற்கு நெல்வேலி யென்று பெயராயிற்று. தக்கன் யாகத்தடைந்து தேகம் விட்ட பார்ப்பதியார், இமயமலையினின்றும் போந்து அறம் வளர்த்துத் தவஞ் செய்தபொழுது, சிவபிரான் ஐப்பசி மாத உத்திரநாளிற் றிருமணஞ்செய்து நகர் காத்தருளிய தலம். முழுதுகண்ட ராமபாண்டியன் அரசு செலுத்தும்போது அவருக்குப் குடப்பால் கொண்டுவரும் ஆயனை வேய்வனத்திற் பலகாலுந் தடுக்கிப் பால் கவிழ்க்கப் பெற்று வளர்ந்த எம்பெருமான், அவ்வாயன் கோடாரியால் வெட்டிய வடுவைத் தாங்கி யரசனுக்குப் பிரசன்னரா யரசன் வேண்ட வளர்ந்துங் குறுகியுங் காட்சி கொடுத்தருளிய தலம். அகஸ்தியர், சுவேதமுனிவர், பிரமா, விஷ்ணு, நாரதர், அநந்தாதிநாகங்கள், வங்கிய குலசேகரபாண்டியன், உருத்திரகோடியர், யானை, கச்சவமுதலாயினோர் பூசித்துப் பேறுபெற்ற தலம். ஸ்ரீராமர் பூசித்துப் பாசுபதமும், ஸ்ரீ கிருஷ்ணன் பூசித்துப் புத்திரப்பேறும் பெற்ற தலம். பொற்றாமரையில் மூழ்கிய பெண்கள், கரையில் வைத்த ஆடையைக் காற்றடித்துச் செல்ல, அப்பெண்கள் கரையேற வருந்தியபொழுது, சிவபெருமான் எதிர் தோன்றி அவர்களுக்குப் புடவைகள் கொடுத்தருளிய தலம். கோவிற் றிருவிளக்குப் பார்க்கும் ஒரு பிராமணன், காமவேட்கையால்

விலைமாதுக்கு அளிக்கப் பொருள் வேண்ட, அவனது காமக்கிழத்தியிடம் ஒரு பதக்கம் கொடுத்து அவனுடன் சேர்ந்திருக்கும்படி செய்தருளிய தலம். பிராம்மணப் பிள்ளைகளுக்கு வேதமோதுவித்துப் பிராம்மண வீடுதோறும் ஒவ்வொருநாள் அமுதருந்தி வந்து, ஒரு தரித்திரன் வீட்டிலிருந்த யாவற்றையு மொருங்கேயுண்பதைநோக்கிவீட்டிற்குடையவள் முறையிட, மறைந்தருளி, அம் மனையவர் தரித்திரங்களைந்து வேதியப்பிள்ளைகளை விற்பன்னர்களாகச்செய்தருளிய தலம். இந்நகரில் வசித்த பாடுவான் பிள்ளை காமுகனுப் வீட்டுப் பொருளெல்லா மழித்தது மன்றி, ஓர் வணிகன் மனையினுந் திருடி ஓர் மாதுக்களிப்ப, அவள் அதை விற்கையில், அவ் வணிகன் கண்டு, அரசனுக்கறிவித்து, அப்பிள்ளையைத் தண்டிக்க, அதற்காக முறைப்பட்ட பாடுவான் பொருட்டு, வணிகன் கேட்டது கொடுத்தருளி அப்பிள்ளையைச் சிறைவிடுத்தருளிய தலம். காமவெறியினுற் றெரியாது கள்ளுக்குடித்த ஓர் வேதியன் பிராயச்சித்தம் வினவ, நெய்யைக் காய்ச்சி வாயில் வார்க்க விதித்த பிராயச்சித்தத்தைச் சாண்டல்லிய ரிஷியானவர் விலக்கிப் பொற்றாமரையில் மூழ்குவித்து அப்பாவம் நீக்கியருளிய தலம். திருவிசைப்பாப் பாடியருளிய கருவூர்த்தேவர் இத் தலத்துக்கு வந்து சிவபெருமானை யழைத்தபொழுது, காலசந்திப் பூசையாகையாலே ஏனென்று கேளாதிருப்ப, கோபித்துச் 'சிவபெருமா னிவ்விடத்திலையோ?' என்று மானூருக்குச் சென்று வசிக்கையில், அங்கு ஆவணி மூல நாளிற் சேவை சாதித்தருள, அத்தலத் தெழுந்தருளியிருந்த கருவூர்த்தேவரை வேதியர்கள் நிந்தனைசொல்லக்கேட்டு 'அங்கு வேதியரில்லா தொழிக' என்று சபிக்க, இவ்வாறு கருவூர்த் தேவரால் பல அற்புதங்கள் நடத்துவித்து, இன்றும் மானூரில் ஆச்சரிய நடனங் காட்டியருளுந் தலம். தாம்பிரசபையில் உமாமகேஹஸ்வரி காண ஆநந்த சௌந்தரியத் திருநடனஞ் செய்தருளிய தலம். நின்றசீர் நெடுமாற நாயனார், அவதரித்த தலம். தன்னுடனிருந்த ஓர் பிள்ளையைக் கொலை செய்த வேதியன், பொற்றாமரையின் மூழ்கிப் பொய்ச்சத்தியஞ் செய்தும் யாதொரு தீங்கு மடையாதிருத்தலை முழுதுங் கண்ணுற்ற சப்தரிஷிகள் இந்நகரத்தின்மீது வெறுப்படைந்து வேற்றூருக்குச் செல்லச் சிவபெருமான் வழிமறித்து இத்தல மேன்மையை யவர்களுக்குக் காட்டி மீண்டழைத்து வந்து அநுக்கிரகித்தது முதலான எண்ணில்லாத

திருவிளையாடல்கள் காட்டியருளிய தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

## திருக்கோட்டீச்சுரம் (ஊய்க்காடு.)

(கோட்டீச்சுரர், கொடியிடையாளம்மை, தாம்பிரவர்ணிநதி, திருவலஞ்சுழி தீர்த்தம்.)

அகஸ்தியர், பூசிக்கும்பொருட்டு மணலால் இலிங்கம் அமைக்க அமைக்க நில்லாததறிந்து, 'ஈசனே இதென்ன கோட்டி?' எனக் கூறியபின் அமைவுபெற்று, அம் முனிவர் விரற் றழும்போடும் உருவாக்கப்பட்டமையால் கோட்டீச்சுரரென்று நாமஞ்சூட்டிப் பூசித்த தலம்.

## திருமூலநகரம் (அம்பாசமுத்திரம்-மேலப்பாளையம்.)

(திருமூலநாயகர், உலகம்மை, தாம்பிரவர்ணிநதி தீர்த்தம், அகஸ்திய தீர்த்தம்.)

அகஸ்தியர் - அரம்பைமாதர் - சித்தயோகர்கள் பூசித்தும், யாகாதிகள் செய்தும், அநுக்கிரகம் பெற்ற தலம்.

## திருச்சங்கர நாராயணர் கோவில்.

(சங்கரநயினார் கோயில்)

(சங்கரநாராயணசுவாமி, ஆவுடையம்மை, சக்கரைக்குளதீர்த்தம்).

பிருகுமகாரிஷி விஷ்ணுவை யொழித்துச் சிவபெருமானையே பூசிப்ப, சிவபெருமான்: அவ் விஷ்ணு தமது சக்திசொரூபமென்று, பாதித்தேகத்தில் வெளிப்படக் காட்சிதந்தருளிய தலம். இத்தலத்தின் மூலஸ்தானத்திற் புற்றுமாத்திர மிருக்கிறது. அச் சங்கரநாராயண ரூபம் பிரத்தியேக ஆலயத்திற் காணலாம்.

## திருக்கரிவலம்வந்த நல்லூர் (கருவைநல்லூர்).

(பால்வண்ணநாதேச்சுரர், ஒப்பிலாம்பிகையம்மை, சிவகங்கைதீர்த்தம், பாலசுந்தர தீர்த்தம்).

களாவிருக்ஷம், திக்குப்பாலகர் பூசித்ததலம். ஓர்காலத்தில்இத்தலங்காடாயிருப்ப, குலசேகரபாண்டியன்வேட்டஞ்

செய்தபொழுது, ஓர் யானை ஓர்புதரை வலமவந்து, உடனே சிவகணமாய்ச் சென்றதையுணர்ந்து, அக்காடுவெட்டிப்பார்த்தபொழுது பரமசிவம் பால்போல வெள்ளிய வர்ணத்துடனிருப்பக் கண்டு பால்வண்ணநாதரென்று திருநாமஞ்சூட்டித் அநேகபிரபந்தங்களால் தோத்திரித்துப் பூசித்தஸ்தலம். இதனுலே கரி வலம் வந்த நல்லூர் எனப் பெயராயிற்று.

---

## திருவாவினன்குடி.

(முருகப்பிரானது ஆறு படைவீட்டி லொன்று.)

(சுப்ரமணியசுவாமி, தெய்வயானையம்மை, வள்ளிநாயகியம்மை, வேலாயுததீர்த்தம், சரவணப்பொய்கை தீர்த்தம்.)

திரு—இலட்சுமி, ஆ—காமதேனு, இனன்—சூரியன் (என்றது.)

மகாலட்சுமி, காமதேனு, சூரியன் பூசித்த ஸ்தல மாதலா லிதற்குத் திருவாவினன்குடி யெனப் பேராயிற்று. பரமசிவனிடத்து மாம்பழம் பெறும்பொருட்டு, உலகவலம் வந்த சுப்பிரமணியர் அது பெருத நிமித்த மிங்கு எழுந்தருளிய ஸ்தலம்.

---

## திருச்செந்தூர்.

[சந்தனுசலம், சீரலைவா யெனவும் வழங்கும்.]

(சிவசுப்பிரமணியசுவாமி, தெய்வயானையம்மை, வள்ளிநாயகியம்மை, கந்தபுட்கரணிதீர்த்தம், அகஸ்தியதீர்த்தம், தேவதீர்த்தம், சீரலைவாய் வதனாரம்பம், மாதுர் பிதிர் தீர்த்தங்கள்.)

பிரமதேவர், எமதர்மராஜன், தேவேந்திரன் முதலிய தேவர்கள், விஷ்ணு முதலியோர் பூசிக்க, அவர்கள் பொருட்டு சூரபன்மன், சிங்கமுகாசுரன், தாருகாசுரன், பானுகோபன் முதலிய அசுரர்களைச் சம்ஹரித்துத் தேவர் சிறைமீட்டு, வீரவாகுதேவர்-வீரகேசரி-வீரமாகேந்திரன்-வீரமாகேச்சுரன்-வீரபுரந்தரன் - வீரராக்கதன்- வீரமார்த்தாண்டன்-வீரராந்தகன், வீரதீரன் ஆகிய நவவீரர்களும், பூதவீரர்களும், இலக்கவீரர்களும், படைவீடுகொண் டெழுந்தருளியிருந்த ஸ்தலம். வியாசமுனிவரா லுபதேசிக்கப்பட்ட சுகப்பிரமரிஷி-நாரதரா லுபதேசிக்கப்பட்ட வெள்ளை

யானை-இவர்கள் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். வள்ளியம்மை, மகா விஷ்ணுவின் வலக்கண்ணிற் பிறந்து மிக்க அழகுடன் முருகக் கடவுளுக்கு முந்திய தாரமாயித்தலத்தி லெழுந்தருளியிருக்கும்பொழுது, தேவேந்திரன் குமாரத்தியாகிய தெய்வயானை யம்மையாரை விவாகம் செய்துவர, வள்ளிநாயகியா ரிகழ்ச்சிசெய்த தப்பிதத்திற்காக, மான் வயிற்றிற் பிறந்து குறவர்பால் வளரும்படி முருகப்பிரான் சபிக்க, அவ்வாறே, அதற்குமுன் ஓர் தவரிஷியின் தவமழிக்கும்பொருட்டுப் பிரமதேவரா லேவப்பட்ட தேவமாதர்களும், கந்தருவர்களும், அம்முனிவராற் குறவராகும்வண்ணஞ் சபிக்கப்பட்டதினாற் போந்த குறவர்களிடத்து வள்ளியம்மையார் வந்து வளர்ந்து, முருகவேளைத் திருமணஞ் செய்த ஸ்தலம். பவரோகமுதலிய சகலரோகங்களையும் நீக்கிச் சுகாநந்தத்தை யடைவிக்கத்தக்க இலை விபூதிப் பிரசாதமும் யாவருக்கும் விலக்கலின்றிச் சந்தனப் பிரசாதமும் பாலித்தருளுந் தலம். சந்தனம் பிரசாதித்தல், இத் தலம் கந்தமாதனம், சந்தனுசலம் என்பது பற்றியென்க.

செந்திற் கோவிந்தர் உபயநாச்சியாரோடு கிழக்குமுகமாகச் சயனம்.

---

## திருவிஜயமாநகரம்.

(பிரமபுரி, நாராயணபுரி, விஜயநாராயணம்).

மனோன்மணிச்சுரர், சிவகாமியம்மை, சிவகங்கை தீர்த்தம், விஜயகுள தீர்த்தம், பிரம தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம்.)

சலந்தராசுரனோடு நெடுநாள் யுத்தம் செய்தும் வெல்லுதற்கரியதாய்ப் புறங்கொடுத்த திருமால் பூசிப்ப அவ்வசுரனைச் சயிக்கும்வண்ணம் வரமருளிய தலம். பிரணவப் பொருளறியாது முருகக்கடவுளாற் குட்டுண்டு, சிறையிற் கிடந்த பிரமனும், சயந்தன் - வெள்ளையானை- இந்திராணி-காமதேனு முதலிய தேவர்களும் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். சரபங்கரிஷி, நாரதரிஷி, அகஸ்தியரிஷி, ஸ்ரீராம - இலக்குமண - பரத - சத்துருக்கனர் முதலியோர் பூசித்த தலம். பாண்டவர்கள் துரௌபதையை மணந்து ஒவ்வொருவருந் தனித்தனி இத்தனைகால மனுபவிக்கிறதென்றும், அக்காலத்தில் மற்றையோர் அவளைக் காண ஒண்ணாதென்றும், காணப்பெற்றால் கண்டவன்

ஒருவருடம் தீர்த்தயாத்திரை செய்தல் வேண்டுமென்றும், நாரதர் விதித்தபடி யொழுகுகையில், ஓர்நாள் நடுராத்திரியில், ஒருவேதியன் வந்து தன் பகைவன் வலிதிற் றன் பசுவைக் கவர்ந்து செல்வதாய் முறையிட்டமைபற்றி, ஆயுதமெடுப்பான் புகுந்த அருச்சுனன், துரௌபதையுடன் தருமரிருத்தல் கண்ட தோஷபரிகாரமாகத் தீர்த்த யாத்திரையில் இத்தலமுற்று விஜயகுள தீர்த்தங் கண்டு மூழ்கிப் பூசிப்ப, அத் தோஷரகிதமாக்கியருளிய தலம். இக் கலியுகத்தில், கங்காகுலோற்பவராகிய மன்னமார்த்தாண்டனென்னும் அடியவர், சிவனடியார்கட்கு அன்னவஸ்திர முதலிய தருபவர், ஓர் கருப்புக் காலத்திலுற்ற இலம்பாட்டை நினைத்து அருச்சிப்ப, அவ்வடியவருக்கு உலவாக்கோட்டையருளியதலம். மனோன்மணியென்னும் வேதியமாது கங்கையாடச் சென்றவிடத்துக் கணவனையிழந்து, இத்தலமுற்றுப் பூசிப்ப, இச் சிவகங்கை தீர்த்தத்தினின்றும் ஆக் கணவனையெழுப்பியருளிய தலம். இதனாலே இத் தலநாயகருக்கு மனோன்மணீஸ்வரரென வழங்குகிறது.

---

## திருக்குறுங்குடி.

(சட்டைநாதேச்சுரர், பாகம்பிரியா நாயகியம்மை, நம்பிநதிதீர்த்தம், திருக்குளதீர்த்தம், வில்வவனக்ஷேத்திரம்.)

பஸ்மாசுரன் என்பவன் நெடுநாள் தவஞ்செய்து தன் கையாற் றீண்டப்பட்டவர்கள் எரிந்துபோகும்வண்ணம் வரம்பெற்றுத் தேவர்களிடத்திற் செல்லத் தேவர்கள் பயந்து விஷ்ணுவிடத்தில் முறையிட, விஷ்ணுமூர்த்தியானவர் ஓர் மோகினிவடிவமா யவ்வசுரன் முன்புவர, அவன் மோகித்துச் சமீபத்தில் சென்றனன். அப்போது விஷ்ணுமூர்த்தியானவர் ‘வேறு யாரையும் விரும்புவதில்லை யென்று உன் தலையைத் தொட்டு நீ சத்தியம் செய்து கொடுத்தால் இசையக் கூடும்’ என்று கூற, அவன் மோகமயக்கால் அவ் வண்ணமே தன் தலையைத் தொட்டுச் சத்தியஞ் செய்திறந்தான். அப்பழிக்குட்பட்ட விஷ்ணுமூர்த்தி பூசித்துப் பழிநீக்கமும், அநுக்கிரகமும் பெற்ற தலம். இதற்கு அத்தாட்சியாக இத்தலத்திற் சிவபெருமானுக் கெதிரே விஷ்ணுமூர்த்தியானவர் அருச்சிக்குங் கையுடன் கிழக்கு முகமாக வெழுந்தருளி யிருக்கின்றனர்.

## திருக்களக்காடு.

(சகலபுவனேச்சுரர், உமாதேவியம்மை, பச்சைநதி தீர்த்தம், சிவகங்கைதீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

கற்பினுக்கரசியாகிய நளாகினியம்மை தமது பர்த்தாவைத் தாங்கிக்கொண்டு செல்லும்போது கழுவிற்குற்றுயிராயிருந்த மாண்டவ்ய ரிஷியார் காலிற்றுக்க, அவர் அவளைச் 'சூரியோதயத்தில் அமங்கலையாக!' என்றிட்டசாபம்நோக்கி, அந்நாளாகினியம்மை 'சூரியோதயம் ஆகாமற்போக' என்று சபிக்க, அவ்வாறே வெகுகாலம் சூரியோதய மில்லாமற்போய்த் தேவர்கள், முனிவர்கள் வந்து பூசித்து முறையிட்டதற் கிரங்கிச் சிவபெருமான் அவர்கள் இருவர் சாபத்தையும் நீக்கியருளிய தலம்.

---

## திருமந்திரேச்சுரம் (ஓமனூர்).

(அர்த்தநாரீச்சுரர், பச்சையாறு தீர்த்தம், தாம்பிரவர்ணிநதி, உருத்திரதீர்த்தம்.)

கிரேணுவென்னும் அம்மை குழந்தைக்காகத் தவஞ்செய்யுழி, ஈஸ்வரி சாபவசத்தால் கங்கையே குழந்தையாய் வரப்பெற்று வளர்ந்து வரும் நாளில், களந்தை நகரத்து வயிரமலையென்னும் அரசன் அக்குழந்தையை அவளனுமதியாற் பெற்று வளர்க்க, பெதும்பைப் பருவமுள்ள பச்சை நாயகியென்னும் அப்பெண், சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து சிவபெருமானைத் திருமணம் புரிந்தருளிய தலம். பச்சைநாயகி, வயிரமலையென்னு மரசன் புத்திரியாய் வளர்ந்தமையால் அவ்வரசன் கேட்டுகொண்டபடி, வயிரமலையினின்றும் வருகிற அந்நதிக்குப் பச்சையாறு என்று வழங்கப்படுகிறது.

---

## திருக்காசிபேச்சுரம் (அம்பாசமுத்திரம்).

(எரிச்சாளுடையார், சிவகாமியம்மை, தாம்பிரவர்ணி நதி, தீபதீர்த்தம்.)

காசிபரிஷி, அகஸ்தியரிஷி பூசித்த தலம். சிவசருமா வென்னும் ஒரு கன்னடிய வேதியன், அகஸ்தியரைக் காணவிரும்பித் தமது கைப்பொருளைச் சாந்தனென்னும் அருச்சகனிட மொப்புவித்துப் பொதியமலை நோக்கி உறுப்

புத்தேய நடந்துங் காணாது, வருந்தி உயிர்துறக்கத் துணிவு கொண்ட தறிந்த அகஸ்தியமுனிவர், தரிசனங் கொடுத்து அவ் வேதியனது விருத்தாப்பியத்தை யெளவனமாக்கியும் நல்வழி யுரைத்து மனுப்ப, மீண்டவேதியன் அருச்சகனோடு தனக்கு யெளவனங் கிடைத்த விருத்தாந்தஞ் சொல்ல, மகிழ்ந்திருந்தபின், பொருளபேட்சையால், வாங்கியபொருளைக் 'கொடேன்' என மறுக்கச் சிவசருமாச் சத்தியத்திற் கழைக்க, அருச்சகன் சிவபெருமானைப் புளியமரத்தி லெழுந்தருளும்படி வேண்டியவண்ணம் போயிருந்தருளி, அக்காவைச் சிவசருமாவுக்கறிவிக்க, அவன் அவ் வருச்சகனைப் புளியமரத்தில்தானே சத்தியஞ் செய்வித்தமையால் நம்பிக்கைத் துரோகியான அருச்சகனை உடனே யெரித்துச் சிவசருமனுக்குப் பொன்னருவிட்டுத் தந்தருளிய தலம். சிவசருமா, அப்பொருளால் தருமத்தைச் செய்தும், ஓர் கால்வா யகழ்ந்தும் பூசித்த தலம். இதனுலே இத் தலநாயகருக்கு எரிச்சாருடையாரென்றும், அவ் வாய்க்காலுக்குக் கன்னடியன் காலென்றும் வழங்குகிறது.

---

## அம்பாசமுத்திரம்.

இது, திருநெல்வேலி ஜில்லாவைச் சார்ந்த ஒரு பெரிய தாலுக்காவாயும், 10,855 குடிகள் உள்ளதாயும், சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து $463\frac{3}{4}$ மைல்கள் தூரத்தி லுள்ளதாயும் இருக்கிறது. இதற்கு ரயில் சார்ஜ் 5-2-0. இங்கிருக்கும் அகஸ்தீஸ்வரர் கோயிலில் பாண அகஸ்தாச்சிரம உற்சவ காலத்தில் ஏராளமான ஜனங்கள் வந்து கூடுகிறார்கள்.

இந்த அம்பாசமுத்திரத்திற்கு மேற்கே 12 மைல்கள் தூரத்தில் சிவசைலம் என்னும் சிவஸ்தல மிருக்கின்றது. அம்பாசமுத்திரத்திற்கு 3 மைல்கள் தூரத்தில் மன்னார் கோயிலென்னும் விஷ்ணுஸ்தல மிருக்கிறது. இதன் மதில்கள் முதலான கட்டிடங்கள் சிற்பாலங்காரமாகச்செய்துக் கப்பட்டிருக்கின்றன. அதற்கு வடக்கே 2 மைல்கள் தூரத்தில் பிர்ம்மதேச மிருக்கிறது.

இந்த அம்பாசமுத்திரத்திற்கு 6 மைல்கள் தூரத்திலிருக்கும் பாபநாசத்தில் தண்ணீர் மின்சாரசக்தியினால் இயக்கப்படும் நூல் நூற்கும் கம்பெனி ஸ்தாபிக்கப்பட்டிருக்

கிறது. இங்கு நெசவுத் தொழிலாளிகள் அநேகர் இருக்கிறார்கள். பாபநாசத்திற்கு 6 மைல்கள் தூரத்தில் குற்றாலம் இருக்கிறது.

---

## குற்றாலம்.

இங்கே விசேஷ சிவஸ்தலமிருப்பதன்றியில், அடுத்த பர்வதங்களில் தண்ணீர் வீழ்ச்சியும், அடுத்திருக்கும் பருவத காட்சியும் கம்பீரமானவை. அத்தண்ணீர் வீழ்ச்சியில் ஸ்நானம் செய்தால் சகல பாவங்களும் போய்விடுவதாக இந்துக்கள் நம்பி ஸ்நானம் செய்வதோடு அநேக ஐரோப்பியர்களும் குளிர்ஜல சுகத்தைக் கருதி ஜூன்மாதம் முதல் நவம்பர்மீ வரையில் வந்து குளிக்கிறார்கள். அதை யடுத்திருக்கும் சிவக்ஷேத்திரத்திற்கு அருகிலிருக்கும் தெப்பக்குளத்தில் அநேகவித மீன்களை விட்டும், அவற்றிற்குச் சாதம் கொடுத்துப் போஷித்தும் வருகிறார்கள். யாத்திரைக்காரருக்கு வசதியாக அநேக சத்திரங்களும், சில பங்களாக்களும் இருக்கின்றன. இந்தக் குற்றாலத்திற்கு 6 மைல்கள் தூரத்தில் மண்டந்துறையில் ஒரு பாரஸ்ட் பங்களா இருக்கின்றது. அதையடுத்த நதியில் மீன் வேட்டையாடவும், அடுத்த மலைகளில் பக்ஷி மிருகாதிகளை வேட்டையாடவும் அநேகர் வருகிறார்கள்.

---

## திருப்பாவநாசம்.

(பாவநாசேச்சுரர், உலகம்மை, தாம்பிரவர்ணிநதி, பாவநாசதீர்த்தம்.)

அகஸ்தியர்முதலியோர் பூசித்த தலம். தாம்பிரவர்ணி என்பாள்: கங்கை, காவிரியாதிய நதிகளுந் தன்னிடம் வந்து மூழ்கிப் பாவந் தொலைத்தேகலால், அவர்கள் பாவத்தைச் சுமக்கலாற்றாது பூசித்துத் துதிக்க, 'உன்னிற்றோயாதேகுமவர்க்கே அப்பாவமாகுக' என்றும், 'உன்னில்தோய்ந்தோர் இஷ்டகாமியமனைத்து மனுபவித்து நற்கதியடைக' என்றும் வரமருளிய தலம்.

ஒரு வணிகன் சிறுவயதிற் பிரிந்து தாய் தங்கை முதலியவர்களை யறிந்துகொள்ளக்கூடாதவனாய் அவர்களையே புணர்ந்து புத்திரர்களைப் பெற்ற பின்னர் பூர்வோத்திரம் தெரிந்து வியசன்முற்று அவர்கள் யாவருமித்தலமடைந்து

வரைபாய்ந் துயிர்துறக்க முயன்றபொழுது, சிவபெருமான் தடுத்தருளி, அவர்கள் பாவத்தை நாசஞ்செய்தருளிய காரணத்தால் அப்பெயர் பெற்ற தலம்.

---

## தென்காசி.

(தெக்ஷிணகாசி எனவும் வழங்கும்.)

(சுந்தரேசுரர், உலகநாயகியம்மை, விஸ்வநாதேச்வரர், அன்னபூரணியம்மை, சித்திரநதிதீர்த்தம், திருக்குளதீர்த்தம்.)

பிருகுமஹாரிஷி, கண்ணுவரிஷி, முதலாயினோர் பூசித்து சிவாநுக்கிரகம் பெற்ற தலம். அகஸ்தியமுனிவர் பொதியவரைக் கெழுந்தருளியபோது இந்நாட்டோர் சிவபூஜை அடியவர்பூஜை முதலியன வழாது செய்து வருதனோக்கி இவர்கள் காசிக்குக் கங்கையாடிச் சிவதரிசனஞ் செய்யச் சென்றால் தர்மம் தடைப்படு மாதலின் அக்காசியிலுள்ள கங்கைநதியின் தீர்த்தபலனை இக்காசியிற் சித்திரநதி தீர்த்தமும், அவ் விஸ்வேச்சுரரது சேவையின் பலனை இவ்விஸ்வேச்சுரரும் அளிக்கும்படிக்கு வரமருளவேண்டுமென்று பிரார்த்தித்து அங்ஙனமே அநுக்கிரகம் பெற்ற தலம். எண்ணில்லாதவர் முத்திபெற்ற தலம். இது திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு விசேஷ தாலுக்கா யூனியன் பட்டணம். இப்போது 15,145 ஜனங்கள் குடியிருக்கிறார்கள். இவ்விடம் விசேஷமாக நெசவுத்தொழில் நடப்பதோடு தேங்காய் நெல் ஏராளமாகத் திருவநந்தபுரம் முதலான இடங்களுக்கு ஏற்றுமதியாகின்றன. ஆடி ஆவணி மாதங்களில் திருக்கல்யாண உற்சவமும், மார்கழி மாதத்தில் திருவாதிரை உற்சவமும், விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றன. இதற்குச் சமீபத்தில் இடிந்து கிடக்கும் விஸ்வநாதர் கோயிலிருக்கிறது. இதில் சிற்பாலங்காரமாகச் செதுக்கப்பட்ட விக்கிரகங்களும் வேலைப்பாடுகளும் இருக்கின்றன. குற்றாலம் போவோர் இத் தென்காசி ரயில்வே ஸ்டேஷனிலிறங்கிப் போவதுதான் வழக்கம். திருவநந்தபுர சமஸ்தான எல்லைக்கு இதுதான் பக்க இடம். இது சென்னை தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 487 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு ரயில் சார்ஜ் ரூபாய் 5-6-0.

## திருக்குற்றாலம்.

(திரிகூடாசல முதலிய திருநாமமுள்ளது.)

இது தென்காசி ஸ்டேஷனுக்கு மேற்கே 3½ மைலி லிருக்கிறது.

(குற்றால நாதேச்சுரர், குறும்பாலீஸ்வரர், குழல்வாய் மொழியம்மை, வடவருவி, பொங்குமாகடல், செண்பகாடவி, சிவமதுகங்கை, சித்திரா நதி, சித்திரகுள முதலியதீர்த்தங் கள், வேதசொரூபமாகிய குறும்பலாவிருக்ஷம்.)

அகஸ்தியர், வாசுகி, சவுற்சனர், புஷ்பகந்தர் முதலாயி னோர் பூசித்த தலம். வியத்திரியென்னும் ஓர் வேதியன் தூர்த் தனைப் பலநாடு திரிந்து அதிகமும் பாதகம் புரிந்து, தேகரோ கத்தினாற் பாண்டியநாட்டிற் சஞ்சரித்துப் பிச்சையேற் றுழ லும்போது, இத்தலச் சிகரியாகிய திரிகூடாசலத்தினின்று மந்தமாருதம் தேகத்திற்பட்ட புண்ணிய வசத்தால் இமய தூதர்களிடத்தினின்று மீட்டுச் சிவலோகத்தில் வைத்த தலம். தக்கன் வேள்வியிற் சிவத்துரோகிகளான தேவர்கள் பூசிப்ப, அவர்களது சிவத்துரோகம் நீங்கியருளிய தலம். வேடன் வேட்டத்தில் ஓர் நரியைத் தொடர்ந்து வந்து அதன்பொருட்டு வலப்பிரதக்ஷணம் வந்த புண்ணிய வசத் தால் சிவலோகத்தில் வைத்தருளிய தலம். மதயானை நீர் விடாயின்பொருட்டு வடவருவியிற் றிளைத்து வனங்களை யலைத்து, அருவி நீரைத் துதிக்கையால் முகந்து சிதற, அத் தொழில்களையே பூசனையாகக் கொண்டு அநுக்கிரகித் தருளிய தலம். ஓர் வேடன் பன்றியைத் துரத்த அது சித் திராநதி மடுவில் விழ, அதனோடு குதித்த அவ்வேடனை யங் கிருந்த முதலை பற்றி வயிற்றைக் கிழிப்ப, அக்காலம் மாசிமாதமா யிருத்தல்பற்றி யவ்வேடனை நதியின் சிறப்பாற் கதியில் விடுத்தருளிய தலம். பாவத்தினால் நரகத்திற்கிடந்து வேதனையுற்ற தன் தந்தைக்கு மாசி மாதத் துவாதசியின் பலனைத் தத்தஞ்செய்து கரையேற்றிய தலம். கண்டக சேதகனென்னு முழுத்த வணிகன், திருவிழாவிற் கடை வைத்து விற்று வசித்த புண்ணியத்தாலும், புட்பகந்த னென்பவன் பாவத்தின் பொருட்டு யமதூதர் கையில் யாப்புண்டு அவர்கள் 'இத்தலமார்க்கமாய்ச் செல்லாதொழிய வேண்டும்' என்று பேசிய வார்த்தையைக் கேட்டு இத்தலத்

தின் பெயரைச் சொன்னமையாலும், சிவகதி யடைந்த தலம். அகஸ்தியமுனிவர் பொதிகைக் கெழுந்தருளும் பொழுது, இத்தலம் வைணவத்தலமாயிருந்தது உணராது, இதன் வழியே செல்ல, இங்கிருந்த வைணவர்கள் அகஸ்தியர் தரித்திருந்த சிவசின்னங்களைக் கண்டு பொறுராகி வெளியே துரத்த, அகஸ்தியரிஷி புறம்போய் அவ்வைணவர்களைப்போல் வடிவு தாங்கிச் சென்று அவர்களனுமதிப்படி யாலயத்துட் பிரவேசித்து, விஷ்ணுமூர்த்தியைத் தமது திருக்கரத்தால் குழைவித்துச் சிவலிங்கப் பெருமானாகச் செய்து பூசித்து, வைணவர்களகந்தை நீக்கியருளிய தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க. குறும்பலாவுக்கும் ஓர் திருப்பதிகமுள்ளது.

---

## திருமெய்யம்.

(சத்தியகிரி நாதன், உய்யவந்தாள், அத்திவல்லி, புவிமடந்தை, சத்தியகிரி விமானம், சத்தியகிரி தீர்த்தம், கதம்ப புட்கரணி, பலாவிருக்ஷம்.)

கிழக்கு முகமாகநின்று சத்திய தேவதைக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கோட்டியூர்.

(சௌமிய நாராயணன், சௌந்தரி, திருமாமகள், அஷ்டாங்க விமானம், தேவபுஷ்கரணி.)

கிழக்குமாக நின்றும், இருந்தும், நடந்தும், கிடந்தும் கூத்தாடிய திருக்கோலம். கதம்ப மகாரிஷிக்கும், இந்திரனுக்கும் பிரத்தியட்சம். பூதத்தாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்புல்லாணி.

(தெய்வச்சிலையர், கல்யாணஜகநாதன், கல்யாணவல்லி, தெய்வச்சிலை நாச்சியார், கல்யாண விமானம், ஏமபுட்கரணி, சக்கர தீர்த்தம், அசுவத்த விருக்ஷம், கிழக்கு முகமாக நின்ற திருக்கோலம். புல்லாரணிய க்ஷேத்திரம், தர்ப்ப சயனம்.)

புல்லாரணி மஹர்ஷிக்கும், அசுவத்த நாராயண னுக்கும் பிரத்தியட்சம். சக்கரவர்த்தித் திருமகன் சமுத் திர ராஜனுக்கு வரங்கொடுத்த இடம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருமாலிருஞ்சோலை (இது சோலைமலை.)

(மாலலங்காரர், அழகர், சௌந்தரியவல்லி, சோமசுந் தர விமானம், சிலம்பு நதி, கிழக்குமுகமாக நின்ற திருக் கோலம், ரிஷபகிரி, சந்தன விருட்சம்.)

மலையத்துவஜ பாண்டியனுக்கும், தருமதேவதைக்கும் பிரத்தியட்சம். நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ் வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் மங்களாசாசனம்.

இது முருகவேளது படைவீட்டி லொன்ருகச் சை வாகமத்திறற் றெரிந்து, இரு ஆகமத்தரும் வணங்கிவரும் பெருமையுடைய தலம்.

---

## திருமோகூர்.

(காளமேகப் பெருமாள், மோகூர்வல்லி, மேகவல்லி, கேதகி விமானம், க்ஷீராப்தி புட்கரணி.)

கிழக்குமுகமாக நின்று அஜமுகன், இந்திராதிகளுக் குப் பிரத்தியட்சம். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங் களாசாசனம்.

---

## திருக்கூடல் தேன்மதுரை (இது மதுரை.)

(கூடலழகர், வகுளவல்லி நாச்சியார், மரகதவல்லி, வரகுணவல்லி, மதுரைவல்லி, அஷ்டாங்க விமானம், ஏம புட்கரணி, சக்கர தீர்த்தம்.)

கிழக்கு முகமாக வீற்றிருந்த கோலம். சௌனகாதி யர்களுக்கும், பிருகு மகாரிஷிக்கும், பெரியாழ்வாருக்கும் பிரத்தியட்சம். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் மங்களாசாசனம்.

---

## திருத்தண்கலூர்.

(தண்காலப்பன், அப்பன், அன்னநாயகி, அநந்தநாயகி, சதுமாது, தேவசந்திர விமானம், பாபநாச தீர்த்தம்.)

கிழக்கு முகமாக நின்று சல்லிய பாண்டியனுக்கும், ஸ்ரீ வல்லவனுக்கும், புலிக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## ஸ்ரீவில்லிபுத்தூர்.

(அரங்கமன்னர், வடபத்திர சயனர், ஆண்டாள், கோதை, நாச்சியார், சந்தன விமானம், திருமுக்குள தீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்ற திருக்கோலம். வடபத்திர சயனம். பெரியாழ்வார், ஆண்டாள் மங்களாசாசனம்.

இது சாத்தூர் ஸ்டேஷனிலிருந்து 24 மைல்கள் தூரத்தில் இருக்கிறது. சாத்தூருக்கும் ஸ்ரீவில்லிப்புத்தூருக்கும் இடையில் 20 மைல்கள் தூரத்தில் திருத்தங்கள் என்னும் விஷ்ணு ஸ்தலம் இருக்கிறது; இதுவே ஸ்ரீ நாச்சியார் ஜனித்த இடமாம். இதற்கு 4 மைல்கள் தூரத்தில் இருக்கும் ஸ்ரீ வில்லிபுத்தூர் ஓர் விசேஷ வைஷ்ணவ ஸ்தலம். இது அந்த தாலுக்காவுக்குப் பிரதான பட்டணம். சுமார் 20,000 ஜனங்கள் வசிக்கப்பட்டனவாயும், தாலுக்கா கச்சேரி மாஜிஸ்ட்ரேட் கச்சேரி, ஆஸ்பத்திரி, ஹோட்டல் முதலான வசதிகள் உள்ளனவாயும் இருக்கின்றன. பிரதி வருஷமும் ஆடிமாத ரத உற்சவத்தை 10 நாள்கள் வரையில் கம்பீரமாகக் கொண்டாடுகிறார்கள்.

பெரியாழ்வாரும், "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளாம்" என்றுதி திவ்ய பாசுரங்களியற்றிய சூடிக்கொடுத்த நாச்சியாரின் அபிமான ஸ்தலம். இந்த ஸ்ரீ வில்லிபுத்தூருக்கும் சாத்தூருக்கும் 1-8-0, 2-0-0 ரூபாய் சத்தத்தில் அநேக வண்டிகள் கிடைக்கும். இந்த சாத்தூரானது சென்னை தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனுக்கு 391 மைல்கள் தூரத்திலிருக்கிறது. 3-ம் வகுப்பு ரயில் சார்ஜ் ரூபாய் 2—6—0.

---

## ஸ்ரீ வைகுந்தம்.

(வைகுந்தநாதன், கள்ளப்பிரான், மாமலராள், வைகுந்தமங்கை, சந்திரவிமானம், தாம்பிரவர்ணிநதி, விருதுதீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்று இந்திரனுக்கும் பிருது சக்கரவர்த்திக்கும் பிரத்தியட்சம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருத்தொலைவில்லிமங்கலம்.

(அரவிந்தலோசனன், கருந்தடங்கண்ணியம்மை, குமுத விமானம், தாம்பிரவர்ணிநதி. கிழக்குமுகமாக நின்று இந்திரனுக்குப் பிரத்தியட்சம். தேவப்பிரான், தேவநாதன், மலராள்புவிமங்கை, வருணவிமானம், வருணதீர்த்தம், கிழக்குமுகமாக வீற்றிருந்தகோலம். அஷ்டதிக்குப் பாலகருக்குப் பிரத்தியட்சம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவரகுணமங்கை.

(விஜயாசனர், நித்தியாநந்தர், வரகுணமங்கை, விஜய கோடி விமானம், தேவபுட்கரணி, அக்கினிதீர்த்தம், தாம்பிரவர்ணிநதி.)

கிழக்குமுகமாக வீற்றிருந்து அக்கினிக்குப் பிரத்தியட்சம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்புளிங்குடி.

காசினிவேந்தன், மலர்மகள், புளியங்குடிவல்லி, வேதசாரவிமானம், வருணதீர்த்தம், நிருதிதீர்த்தம், தாம்பிரவர்ணிநதி, கிழக்குமுகமாக புஜங்கசயனம்.)

நிருதிக்கும், வருணனுக்கும், தருமராஜனுக்கும் பிரத்தியட்சம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்குளந்தை.

(மாயக்கூத்தன், குளந்தைவல்லி, ஆநந்த நிலையவிமானம், பெருங்குளதீர்த்தம், தாம்பிரவர்ணிநதி, கிழக்குமுகமாக நின்ற திருக்கோலம்.)

வியாழனுக்குப் பிரத்தியட்சம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## தென்திருப்பேரை.

(மகரநெடுங் குழைக்காதர், மகரகுண்டலத்தர், தாமரையாள், குழைக்காதவல்லி, பத்ரவிமானம், சுக்கிரபுட்

கரணி, தாம்பிரவர்ணிநதி, கிழக்குமுகமாக வீற்றிருந்த திருக்கோலம்.)

சுக்கிரனுக்கும், பிரமனுக்கும், ஈசானனுக்கும் பிரத்தியட்சம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கோளூர் (திருக்களூர்).

(ஸ்ரீகரன், வைத்தமாநிதி, நிக்ஷேப வித்தன், பாரிசாதவல்லி, கோளூர்வல்லி, ஸ்ரீகரவிமானம், குபேரதீர்த்தம், தாம்பிரவர்ணிநதி, கிழக்கு முகமாக புஜங்கசயனம்.)

குபேரனுக்கும், மதுரகவியாழ்வாருக்கும் பிரத்தியட்சம். நம்மாழ்வார், மங்களாசாசனம்.

---

## திருக்குருகூர்.

(இது, ஆழ்வார் திருநகரி.)

(ஆதிநாதப் பெருமாள், ஆதிகேசவன், பொலிந்து நின்றபிரான், ஆதிநாதவல்லி, மலராள், கோவிந்தவிமானம், தாம்பிரவர்ணிநதி, பிரம்மதீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்று பிரமனுக்கும், நம்மாழ்வாருக்கும், மதுரகவிக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## விஜயமாநகரம்.

(இது விஜயநாராயணம்.)

(அழகியமன்னர், மன்னாட்சி, விஜயகோடி விமானம், விஜய பெரியகுள தீர்த்தம்.)

கிழக்கு முகமாக நின்று விஜயனுக்கும், தேவேந்திரனுக்கும், கௌதமரிஷிக்கும் பிரத்தியக்ஷமான புராதன தலம்.

---

## ஸ்ரீவரமங்கை.

(தோதாத்திரி, வானமாமலை, இது நான்குநேரி)

(தெய்வநாயகன், வானமாமலைப்பெருமாள், ஸ்ரீவரமங்கை, பூதேவி, நீளாதேவி, நந்தனவர்த்தனவிமானம், இந்திரபுட்கரணி, சேற்றுத்தாமரை, கிழக்குமுகமாக வீற்றிருந்த கோலம்.)

ஸ்ரீதேவி பூமிதேவி நீளாதேவி சேனைமுதலியார் பெரிய திருவடி இவர்களுடனும், சரிமரக் கன்னிகைகள் சந்திர சூரியர் பக்கத்திருக்க இந்திரனுக்கும், பிரமனுக்கும், உரோமரிஷிக்கும், பிருகுரிஷிக்கும், மார்க்கண்டேயருக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்குறுங்குடி.

(வைணவநம்பி, மலைமேல்நம்பி, நின்றநம்பி, இருந்த நம்பி, கிடந்தநம்பி, திருப்பாற்கடல்நம்பி, குறுங்குடிவல்லி, பஞ்சகேதக விமானம், திருப்பாற்கடல் நம்பிநதி, பஞ்சத்துறை தீர்த்தம், கிழக்குமுகமாக நின்ற திருக்கோலம்.)

பக்கம் நின்றருக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

மங்களாசாசனமான தலம் ௧அ, புராதன தலம் ௧, ஆக பதிகங்கள் ௧௯.

---

## தூத்துக்குடி.

இது திருநெல்வேலி ஜில்லாவின் ஸ்ரீ வைகுண்டம் தாலுக்காவைச் சார்ந்த துறைமுகப்பட்டணம். இந்த முனிசிபல் நகரத்தில் 40,185 குடிகள் வசித்துவருகிறார்கள். இது தாம்பிரவர்ணி நதியும் வையப்பார் நதியும் சமுத்திர சங்கமமாகும் இடத்தில் இருக்கிறது. இவ்விடத்திய கடல் 5, 6 மைல்கள் தூரம் வரையில் மேட்டுப்பாங்கா யிருப்பதனால் சாதாரண புகைக்கப்பல்களும் 5, 6 மைல்கள் தூரத்திற்கப்புறமே நங்கூரம் போட்டுத் தங்கவேண்டியிருக்கிறது. இவ்விடம் சப் கலெக்டர், சப் மேஜிஸ்ட்ரேட், உதவி போலீஸ் சூபரின்டெண்டெண்ட், முத்துசலாப அதிகாரி, உப்பு லாகா அதிகாரி முதலானவர் கோர்ட்டுக் கச்சேரிகள் இருப்பதன்றியில், இதையடுத்த மேலூரில் லோகல் பண்டு சத்திரமு மிருக்கிறது. பிரிடிஷ் இந்தியா புகைக்கப்பல் பிரதிதினம் மாலை 5 மணிக்குக் கொழும்புக்குப் புறப்படுகின்றது. இலங்கையிலிருந்து பிரதிதினம் காலை 8 மணிக்கு ஒன்று வருகிறது. இப்படிப் போய்வர 16 மணி நேரம் செல்கின்றது. கடற்குள் கட்டியிருக்கும் Pier என்னும் கடற்பாலத்துக்கும் பெரிய கப்பல் நிற்கும் இடத்திற்கும் இயந்திர படகுகள் ஷை கம்பெனியாரால் ஸ்தாபிக்கப்பெற்று

முக்கால் மணி நேரத்தில் போக்குவரவு செய்யப்படுகின்றன. B. I. S N. கப்பல்கள் கல்கத்தாவிற்கும் பம்பாய்க்கும் போக்குவரவு செய்யும்போது வாரத்திற்கொருமுறை இங்கு தங்கிப்போவதுண்டு. இதே மாதிரியாக ஏசியாடிக் கப்பல்களும் ஜப்பான் கப்பல்களும் இங்கே வந்து தங்கிப் போவது வழக்கம். நகரத்திற்குச் சுமார் 1½ மைல் தூரத்தில் சர்க்கார் உப்புக் கிடங்கு இருக்கிறது. சுற்றுப்பக்கங்களில் பருத்தி ஏராளமாய் விளைவதில், அநேக பருத்தி இயந்திரங்களும் நூல்நூற்கும் இயந்திரங்களும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. சர்காருக்காகப் பங்குனி சித்திரை வைகாசி மாதங்களில் முத்துகளும் எடுக்கப்படுகின்றன.

1540ஆம் தூத்துக்குடியானது போர்த்துகேயர் வசமாகி, 1658ஆம் இங்கிலீஷ்காரரால் பிடிக்கப்பட்டு, 1785ஆம் மறுபடியும் டச்சுக்காரர் வசமாகி, 1795ஆம் இங்கிலீஷ்காரர் வசமாகிவிட்டது. பிறகு பாஞ்சலகுறிச்சி பாளேகார் வசமாகியும், டச்சுக்காரர் வசமாகியும், கடைசியாக 1825-ம் வருஷம் இங்கிலீஷ்காரர் சுவாதீனமாயிற்று. இது, சென்னை தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 443¾ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## கோயில்பட்டி.

இது ரயில்வே ஸ்டேஷனுக்கு ¾ மைல் தூரத்திலிருக்கிறது. இதில் விசேஷமாகப்பருத்தி விளைவாகிறதோடு இங்கே நூல் நூற்கும் இயந்திரசாலை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அடுத்த மலைகளில் நல்ல வேட்டை அகப்படும். இதற்கு 3 மைல்கள் தூரத்தில் எட்டயபுரமென்னும் சிறந்த ஜமீன் இருக்கிறது. இதற்கு 11½ மைல்கள் தூரத்தில், தென் மேற்கில் கலுகமலை கிராமம் இருக்கிறது. இங்கே பௌத்தர்களுடைய குகையும், கற்பாறையில் செதுக்கி நியமித்த ஹிந்து மத கோயிலும் இருக்கின்றன.

---

## புனலூர்.

இது செங்கோட்டையிலிருந்து கூவிலனுக்குப் போகும் முக்கிய வழியோரத்தில் இருக்கிறது. இது திருநெல்வேலியும் திருவநந்தபுரமும் சேரும் எல்லையில் இருக்கிறது. ரயில்வே ஸ்டேஷனுக்கு ¾ மைல் தூரத்தில் இரண்டு

சத்திரங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இவ்விடம் தாசில்தார் - சப் மாஜிஸ்ட்ரேட் - பாரஸ்ட் முதலான கச்சேரிகளிருக்கின்றன. அடுத்த மலைநாடுகளில் யானைகளதிகம். வேட்டையாட விரும்புவோர் இராஜாவின் உத்தரவை முன்னதாகப் பெற்றுக்கொள்ளவேண்டும். இது சென்னை தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 522½ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## செங்கோட்டை.

இது, திருநெல்வேலி ஜில்லாவுக்கு 40 மைல் தூரத்திலிருக்கும் கடைசி தாலுக்கா பட்டணம். இதை யடுத்தது திருவநந்தபுர சமஸ்தானம். இங்கே தாலுக்கா கச்சேரியும், வேறு சர்க்கார் கட்டிடங்களும், தர்ம சத்திரமும், முசாபுரி பங்களாக்களும் இருக்கின்றன. அடுத்த மலைகளினின்று பாயும் இரண்டு நதிகள் சேருமிடத்தில் கட்டப்பட்டுச் சமீபத்திலிருக்கும் மலைகளின் குளிர்காற்று வீசுவதால் வெய்யிற் காலத்திற்குச் சுகவாச ஸ்தானமென்று சொல்லலாம். இதன் முக்கிய பட்டணம் ஆரியன்காவு என்பதாம். சென்னை தென்னிந்தியா ரயில்வே ஷ்டேஷனிலிருந்து 501¼ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## கன்னியாகுமரி.

இந்த கன்னியாகுமரியானது திருநெல்வேலிக்கு நேர் தெற்கே 53 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதுதான் இந்த இந்தியா தேசத்திற்கும் முக்கியமாகத் தென்னிந்தியாவுக்கெல்லாம் கடைசியிலிருக்கும் பூமியின் எல்லை. இங்கு போய்வர ஜட்கா முதலான வண்டி வசதிகளிருக்கின்றன. இங்கே விசேஷமான தேவ-பூஜை நடப்பதோடு சேதுஸ்நானத்திற்கும் அநேகர் போய் வருகிறார்கள்.

இந்த கன்னியாகுமரியானது, இப்போது மலைநாட்டைச் சார்ந்த திருவநந்தபுர சமஸ்தான எல்லைக்குள்ளாகிவிட்டது.

---

## பொதிகைமலை.

இப்பொதிகை மலையானது கன்னியாகுமரிக்கு மேற்குத்திசையி லிருக்கும் ஓர் விசேஷ பர்வதப் பிரதேசம். இது அகஸ்திய முனிவருடைய உறைவிடம். இதைப்பற்றி சிறப்

புப்பெய ரகராதியில் பாண்டிய நாட்டில் விளங்கும் ஒரு மலையென்றும், தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பொதுவாகி இப்பெயர் பெற்றதென்றும், இது அகத்தியர் வசிக்குமிட மென்றும், இப்போதும் சில ரிஷிக ளங்கு வசிக்கிறார்களென்றும், இதன் வளங் காணவந்தபொழுதுதான், காயசண்டிகை விருச்சிகன் சாபத்தால் யானைத்தீயென்ற தீராப் பசிநோ யடைந்தனளென்றும் சொல்லப்பட் டிருக்கின்றன. இப்போது இப்பொதிகையைச் சுற்றிலும் பயங்கர காடுகளும் காடுகளும் சூழ்ந்திருப்பதால் அகஸ்தியர் ஆச்சிரமத்தைப் போய்ப் பார்த்தறிவது அசாத்தியம்.



# சோழ நாடு.

சோழமண்டல எல்லையைக் காட்டும்
வெண்பா.

"கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
வேணாட்டுப் பெண்ணை யிருப்பதுநாற் காதஞ்
சோணாட்டுக் கெல்லை யெனச் சொல்."

சோழ ராஜ்ஜியம், கிழக்குந் தெற்குங் கடலும், வடக்கே வெள்ளாறும், மேற்கே பாண்டிய நாடும், எல்லையாக உடையது. அது காவிரிநதி பாயும் நாடாதலினால் 'நீர்மலிவான் புனனாடு' என்னும் காரண விடுகுறிப் பெயர்களைக்கொண்டு, நீர்வளம், நிலவளம் பொருந்திய நல்நாடு. அது காவிரிப்பூம்பட்டினம், கருவூர், திருவாரூர், தஞ்சை, திருக்குடந்தை, காஞ்சி முதலான சிறந்த இராஜமா நகரங்களை உடையது.

அந்தச் சோழருக்குப் பிங்கல முனிவர் செய்த பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டில்,

"சென்னி வளவன் செம்பியன் கிள்ளி
பொன்னித் துறைவன் புலிக்கொடி யோன்மால்
கோழி வேந்த னேரி வெற்ப
ஞரின் கண்ணிய னேரிய னபயன்
சூரியன் புனனாடன் சோழன் பெயரே."

என்று சொன்ன 747-வது சூத்திரத்தின்படி சோழனுக்குச் சென்னிவளவன், செம்பியன், கிள்ளி, பொன்னித்துறைவன், புலிக்கொடியோன், மால், கோழிவேந்தன், நேரிவெற்பன், ஆரின்கண்ணியன், நேரியன், அபயன், சூரியன், புனனாடன் எனப் பல பெயர்களுண்டாம். மேலும், சோழர்கள்:

ஜம்புவன் அல்லது சாம்பவன் கோத்திரத்தைச் சார்ந்திருந்ததினாலும், அவர்களுடைய இராஜ்ஜிய பரிபாலனம் பானுவைப்போலப் பிரகாசித்ததினால் சூரியன் என்கிற பெயரைப் பெற்றிருந்ததினாலும், சாம்புவன் அல்லது சம்பியன் அல்லது சூரியன் ஆண்ட இராஜ்ஜியத்துக்குச் சாம்பியமண்டலம், அல்லது சம்பியமண்டலம், அல்லது சூரியமண்டலமென்கிற பெயருண்டாகி, அது நாளாவட்டத்தில் சோழமண்டலம் என்கிற பெயரைப் பெற்றதாகத் தோன்றுகிறது. அந்தச் சோழர்கள் காலத்திற்றான் ஔவை, கம்பர், காளமேகர், அம்பிகாபதி, தமிழ்தண்டி, வில்லிபுத்தூரார், வரந்தருவார், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, பொய்கையார், கோவூர்கிழார் முதலான சிறந்த தமிழ் வித்வான்களும், கவிகளும்; நாதமுனிகள், ஆளவந்தார், பிள்ளை லோகாச்சாரியார், பிள்ளைப்பெருமாளையங்கார் முதலான சமஸ்கிருத தமிழ் வித்வ சிகாமணிகளும் ஜனித்துச் சிறந்தோங்கிய நாடாகும். இதன் நீர்வளம் நிலவளத்தின் சிறப்பைப்பற்றி ஔவையார் அடியிற் கண்ட வெண்பாவினால் விளக்கியிருத்தலைக் காணலாம்.

"தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவதுஞ் சோழமண்டலமே."
"வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து."

இதுவன்றி, இத் தேசத்திலுள்ள பல நாடுகளிலும் இச் சோழ நாட்டில் அநேக சிறந்த சிவ க்ஷேத்திரங்கள் இருத்தலைக் கருதியே "சோழநாடெங்கும் சிவாலயமதிகம்" என்னும் பழமொழியும் வழங்கி வருவதுண்டு. ஆகவே, இச்சோழ நாட்டிலுள்ள சில விசேஷ சிவ க்ஷேத்திரங்கள் விஷ்ணு க்ஷேத்திரங்கள் இவற்றின் மஹத்துவங்களைப்பற்றியும், தற்கால ஸ்திதியைப்பற்றியும், அவற்றிற்குப் போக்குவரவு செய்யும் புகை வண்டியின் தூரம், வாடகை முதலானவைகளைப்பற்றியும் இதனடியிற் சங்கிரகமாக எழுதுகின்றோம்.

## உறையூர் உற்பத்தி.

உறையூர்: சோழர்க்கு முக்கியபட்டணமெனக் காட்ட அமுர்தவசனியில் அடியிற் கண்டபடி எழுதப்பட் டிருக்கிறது:—

இந்து குலத்தில் உற்பவித்த யயாதி மகாராஜனுக்கு, யது பூரு துர்வசு என்று மூன்று புத்திரர் இருந்தனர். அவர்களுள் துர்வசுவின் குலத்தில் பதின்மூன்றாவது தலைமுறையில் உதித்த மருத்தனுக்குப் பிள்ளை யில்லாமையால் இவன் பூரு வமிசத்தானான துஷ்யந்தனைப் புத்திரனாக ஏற்படுத்திக்கொண்டான். இவன் சகுந்தலை என்கிற கன்னிகையை மணந்து பரதனையும் குருசுனனையும் பெற்றான். பரதனுக்குப் பட்டங் கிடைத்தது. குருசுனனுடைய புத்திரர் நால்வராகிய கலிங்கன், சேரன், சோழன், பாண்டியன் என்பேர் பல திசைகளை நோக்கிச் சென்று ஒவ்வொரு ராஜ்ஜியத்தை ஸ்தாபித்தனர்.

சோழன், இக்காலத்தில் சூரத்து என்று சொல்லப்படும் சௌராட்டிரம் என்னும் ஒரு பட்டணத்தை உற்பத்திசெய்து அதில் அரசுபுரிந்துவந்தான். இது ஸ்ரீராமருக்குச் சுமார் 300 வருடங்களுக்குமுன் நடந்ததாக (Tod) டாட் ஆசிரியர் உத்தேசிக்கிறார். குருசுன மகாராஜனுடைய பிள்ளைகள் நால்வரும் சோமகுலத்தவராக இருந்தபோதிலும் சோழனுடைய வமிசத்தார் பிற்காலத்தில் ஆதித்த வம்சத்தோடு கலந்துகொண்டதால் அதற்குச் சூரிய வம்சமென்றொரு பேருண்டாய்ப் பிற்காலத்தில் அப்படியே பேசப்பட்டு வந்திருக்கிறது. சோழன் என்னும் பதத்திற்குசூரியனென்றே பொருளாகின்றது. சோழராசரைச் சுட்டிக் கலிங்கத்துப்பரணியில் "சுராதிராசன் முதலாகவரு சோழனுமுனட் சோழமண்டல மமைத்துப்பிறகேழுலகையு, மிராசுகேசரிகளா மிருவராணை யெனவுமேறு வெம்புலியி ரூணை யென நின்றவருளும்" என்று வருவதை யுற்றுணர்ந்தால் முதற் சோழனுக்கு சுராசோழன் என்றொரு பட்டப்பேரிருந்ததாகத் துலங்குகிறது. மகாபாரதத்தில் சௌராட்டிரமாகிய சுராஷ்டிர தேசத்துராசர் வெகு பிரஸித்தப்பட்டவர்கள் என்றும், அவர்களில் ஒருவன் பஞ்சபாண்டவர்கள் நடத்திய ராஜசூய யாகத்திற்கு ஆயிரம் வண்டி வெல்லம் சர்க்கரை கற்கண்டு இவைகளைக் கொண்டுவந்து கொடுத்தானென்றுங் கூறியிருப்பதால், சோழருடைய ஆதிபூமி சர்க்க

ரைப் பதார்த்தங்களுக்கு விசேஷித்ததென்று அறிகிறோம். சூராசோழன் வமிசத்தி லுதித்த சனகாதச்சோழன் மகன் அரசர் சூளாமணிச்சோழன், சௌராட்டிரத்தி லிருந்து திக்குவிஜயம் செய்தற்பொருட்டுத் தன் சைனியங்களோடு புறப்பட்டு துங்கபத்திரி, கம்பை, பம்பை முதலிய நதிகளை யுந் தாண்டித் திருவானைக்காவிலுள்ள அப்புலிங்க தரிசனை செய்து, பொன்னி எனப் பெயர்பெறும் காவேரியாற் றைக் கடந்து, திரிசிராமலைச் சிகரக்கொழுந்தை வணங்கி மேல்திசையை நோக்கிச் செல்லுகையில், அங்கொரு காட் டுக்கோழியொன்று சான்றோனாகிய சோழனது யானையோடு போர் செய்ததால் அந்த இடம் மகத்துவமானதாகு மென்று எண்ணி, அவ்விடத்தில் நகரமொன்று கட்டி, அதில் அரசர் வீதி, பார்ப்பார்வீதி, வணிகர்வீதி, வேளாளர்வீதி, புறக்குடி கள் வீதி முதலியன இயற்றிச் சதுர் வருணத்தவரும் ஒரு ங்கேகுடியேறும்படி செய்து, அதற்குக் கோழி என்றுமறு பேர் வழங்கும் உறையூர் எனப் பேர்தரித்து அவ்விடத் தில் அரசு செலுத்தி வந்தனன்.

இதைச் சுட்டிப் புராணிகர் கூறுவது :

“பொன்னி கடந்து சிவகங்கை
முதலாந் தடங்கள் புடைசூழ
மன்னி விளங்குஞ் சிராமலையின்
சிகரக் கொழுந்தை மணத்தகுழற்
கன்னி மயிலை விழிகுளிரக்
கண்டா னுடலங் களிப்புற்றான்
சென்னி வணங்கி யடிபணிந்து
நடந்தான் மேலைத் திசைதனிலே.”

வேறு

“காவல னின்பொடு மேதிசை யின்புடை
கானில் வரும்பொழு தூர்
மாவுகை யுந்திறல் வீரர் மதங்கய
மாவுகை யுந்தகை போர்
மேவுதல் கண்டெதிர் சீறி யுடன்றழல்
வேக மிகுந்தலை நேர்
கூவி யுகைந்தெதி ராக நடந்தொரு
கோழி தொடர்ந் ததுவே.”

"மேலெழு மண்கிளை யாவிழு மென்சிறை
வீசுமி குந்தெழு கால்
போலெழு மிந்திர ஞால மெனும்படி
போமறை யுந்தரை மேல்
வாலை யறைந்திடு மோடி வருந்திசை
மாறி வருந்தனை யே
கோலு மிருஞ்சிறை தாழ முகங்கொடு
காதி வகிர்ந் திடுமே."

வேறு

"கொதியாப் பறந்து கவிகையினுங்
குதத்துக் கென்னி குஞ்சரத்தை
யுதையாச் சுரண முள்ளழுந்த
முகமு ளழுந்த வுள்ளழுந்தப்
புதையாக் குருதி நதிப்படியா
மதவா ணையினும் பொங்கிபது
மதவா ரணத்தைக் கண்டக்கால்
விடுமோ மற்ற வாரணமே."

வேறு

"பார்த்தனர் மன்னரும் படைக்க வீரரு
மார்த்தன படையெலா மதிச யித்தன
கூர்த்திடு கணையயில் பரிசை விற்கொடு
வேர்த்தன ராசனும் விலக்கி னனரோ."

வேறு

"இத்தல வாசி யாலிப்
பறவைபோ ரிழைத்த தாகு
முத்தம தலம்யா மிங்கே
யுறைவது கரும மென்று
வத்தலத் தனந்த கோடி
மரமிய மாச வீதி
சித்திர மாட கூடங்
கோபுரஞ் செய்வித் தானே."

---

## திரிசிராப்பள்ளி (திரிசிரபுரம்).

(செவ்வந்தீச்சுரர், மாதுர்பூதேச்சுரர், மட்டுவார்குழலம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

ஸ்ரீராமர், அனுமார், திரிசிரன் பூசித்த தலம். சாரமா முனிவர், பாதாளத்தி லிருந்து கொண்டுவந்து பயிராகிய செவ்வந்திமலரை, பூவாணியன் கரவிற் கொணர்ந்து அரசனுக் கனுப்ப, அவன் தன் தேவியாருக்குக் கொடுத்தான். இக் களவை யுணர்ந்த முனிவர் அரசனிடத்து முறையிட்டுங் கேளாமையால், சிவபெருமானிடத்து முறையிட, சிவபெருமான் அவ்வரசனது பதியாகிய உறையூரை மண் மாரி பெய்வித்து அழித்த தலம்.

காவிரிப்பூம் பட்டினத்தில் வாழும், இரத்தினகுத்தன் என்பவன் புத்திரப்பேறு வேண்டித் தவஞ்செய்து ஓர் கன்னிகையைப் பெற்று, இங்கு வாழும் இரத்தனகுத்தனுக்கு விவாகம் செய்துகொடுத்தான். இப் பெண் வெள்ளிக்கிழமை தோறும் மாதுர்பூதேச்சுரரைத் தரிசித்து வருங்கால், அவள் தகப்பனார் காலஞ் சென்றபின், இப்பெண் கர்ப்பவதியாயினள். பிள்ளைப்பேற்றின் காலத்து, அவள் தாய் காயம் முதலியன கொணர்ந்தும், காவிரியின் பெருக்காற் றடைப்பட்டாள். அப்பொழுது சிவபெருமான், அப் பெண்ணின் அன்புக்காக இரங்கி, அவள் தாயைப்போலஉருவங்கொண்டு வந்து, மருத்துவம் பார்த்து மகப்பேரான பின்னர், காவிரியின் புனல் வற்ற, அப் பெண்ணின் தாய்வந்து சேர்ந்தனள். பெண், இரு தாயர்களில் தன் தாய் யாவளென்று மருண்ட காலத்துச், சிவபெருமான் மறைந்தருளி யநுக்கிரகித்த தலம். இதனாலே சுவாமிக்குத் தாயுமானார் எனப் பெயர் பெற்றதென்க. ஐயடிகள் காடவர்கோன் நாயனார் க்ஷேத்திர வெண்பா பாடியருளிய தலம். தாயுமானவரென்னும் பெரியவர் வசித்து அநேக திருப்பாடல்கள் அருளிச்செய்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம் உ.

---

## திரிசிராப்பள்ளியில் பிறகு ஆண்ட அரசர்களின் விவர சங்கிரகம்.

திரிசிராப்பள்ளியில் சூடாமணி, தர்மவர்மா, இராஜமயேந்திரன், குலசேகரன், சோழேந்திரன், திரிவிக்ரமன், கலியுகராமன் முதலான சோழர்கள் ஆண்டு அவர்கள் அரசாக்ஷி குன்றிவரும் காலத்தில் மொகலாய இராஜ்ஜியத்தின் சேனைத் தலைவனான முல்லக்காபூர் 1310௵ படை

யெடுத்துவந்து பிடிக்க, 1372 ஸ்டு வரையில் இதுமகம்மதியர் ஆளுகைக்குள்ளாகியது. பிறகு விஜயநகர சமஸ்தானத்தின் சேனைத் தலைவனான செம்பன்ன உடையார் இந்தத் திரிசிராப்பள்ளியையும் மதுரையையும் சுவாதீனம் செய்து கொண்டார். 1559 ஸ்டு விஸ்வநாத நாயுடு மதுரையில் நாயுடு காரு சமஸ்தானத்தை ஸ்தாபித்தபோது தஞ்சை ராஜாவுக்கு வல்லத்தைக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக இந்தத் திரிசிராப்பள்ளியைப் பெற்றார். அந்த விஸ்வநாதநாயுடு திரிசிராப்பள்ளியில் ஒரு பெரிய கோட்டையைக் கட்டியும், ஒரு தெப்பக்குளத்தை வெட்டியும், நகரத்தைப் பந்தோபஸ்து செய்யும், ஸ்ரீரங்கத்தில் சில கட்டிட திருப்பணிகளையும் செய்வித்தார். இவருடைய எட்டாவது சந்ததியாகிய முத்துகிருஷ்ணப்பநாயடு இந்தத் திரிசிராப்பள்ளியையே பாண்டியநாட்டிற்கு இராஜதானிப் பட்டணமாக்கி யாண்டு வந்தார். அவர்குமாரர் திருமலைநாயுடுகாரு மதுரைக்குப்போய்ப் பட்டம் கட்டிக்கொண்டபோது அந்த மதுரையையே பாண்டியநாட்டிற்குப் பிரதான பட்டணமாகக் கொண்டு ஆண்டுவந்தார். அவருக்குப் பிறகு அவர் குமாரர் முத்து வீரப்பநாயுடு ஆண்டு வந்தபோது மகம்மதியர் அடிக்கடி படையெடுத்து வந்து தாக்கியதால் இத் திரிசிராப்பள்ளிக் கோட்டையை அதிக பந்தோபஸ்து செய்துவைத்தார். அவருக்குப் பிறகு வந்த அவர் குமாரர் சொக்கநாதநாயுடு இந்தக் கோட்டையைப் பின்னும் பலப்படுத்தி வந்ததோடு திரிசிராப்பள்ளியையே மறுபடியும் இராஜகீய பட்டணமாக்கித் தன் பாட்டன் திருமலைநாயடு மதுரையில் கட்டி வைத்த அரண்மனையின் பெரும்பாகத்தை இடித்து இங்கே கொண்டுவந்து இப்போது நவாப் மஹால் என்று சொல்லும் கட்டிடத்தைக் கட்டிவைத்தார். அவர் மனைவி மங்கம்மாள் அரசுபுரிந்த காலத்தில் அநேக சத்திரங்கள் சாலைமரங்கள் வைத்து, அநேக ரோட்டுகள் குளங்கள் முதலானவைகளைக் கட்டிவைத்ததோடு, ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்கு விலையற்ற நவரத்ன பொன் நகைகளைச் செய்வித்துக் கொடுத்தார். அவர் குமாரன் விஜயரங்க சொக்கநாதநாயுடு ஸ்ரீரங்கத்தில் 7-வது பிராகாரத்தையும்பின்னும் பல திருப்பணிகளையும் செய்வித்து 1731 ஸ்டு இறந்துபோக, அவர் மனைவிமீனாக்ஷியம்மாள் இராஜ்ஜியத்தைச் சுவாதீனமாக்கிக்கொள்ளப் பிரயத்தனப்படுகையில், தனது கணவனுடைய மந்திரியின் குமாரன் பங்காரு திருமலைநாயுடு எதிர்த்து சச்சரவு செய்ய,

இருகக்ஷிக்காரரும் மகம்மதியருடைய உதவியை வேண்ட, மீனாக்ஷியம்மையின் கட்சியைச்சார்ந்த சந்தாசாயபு 1736ஹு சதிமோசத்தினால் அந்த மீனாக்ஷியம்மையைத் தமது அரண்மனையிலேயே கைதியாக அடைத்துவிட்டு இராஜ்ஜியத்தைச் சுவாதீனம்செய்துகொண்டார். இந்த மீனாக்ஷியம்மாளும்பங்காரு திருமலைநாயடுவும் சச்சரவு செய்யாமல் சமாதானமாக அரசு புரிந்து வந்திருந்தால் நாயடு சமஸ்தானம் இன்றளவும் மைசூர் முதலான அநேக சமஸ்தானங்களைப்போல் நிலைபெற் றிருந்திருக்கலாம். இந்த நாயடு சமஸ்தானத்தார் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்கு அநேக திருப்பணிகளையும் திருவாபரணங்களையும் செய்வித்தார்கள். அவர்களில் விஜயரங்க சொக்கநாத நாயடுவின் தாயாராகிய மங்கம்மாளுடைய தருமங்கள் அனந்தம். ஸ்ரீரங்கத்தின் பிரம்மாண்டமான 7-வது பிராகாரத்தை இந்த விஜயரங்க சொக்கநாத நாயடுகாரால் கட்டி வைக்கப்பட்ட தன்றியில், லக்ஷக்கணக்கான தொகையை அநேக சைவவைஷ்ணவ க்ஷேத்திரங்களுக்குத் தர்மாஸ்த்தமாகக் கொடுத்து வந்தார். இப்போது அவரைப்போலவும் அவர்மனைவியைப்போலவும் யானைத் தந்தத்தினால் சிலரூபமாகவிக்கிரகங்கள் செய்யப்பட்டு ஸ்ரீரங்கம் கோயிலின் இரண்டாம் பிராகாரத்தில் வைக்கப்பட் டிருக்கின்றன.

இந்தக் காலத்தில் சண்டா சாயபு கர்னாடக தேசத்திற்கு நவாபாகிவிட, அவருக்கு முன்னிருந்த கர்னாடக நவாபாகிய அனுவர்டீன் ஆம்பூரில் 1749ஹு ஜூன்மீ கொல்லப்படவே, அவர் குமாரன் மொஹமெட்டாலி பயந்து திரிசிராப்பள்ளிக்கு வந்து இங்கிலீஷ்காரருடைய உதவியை நாடினார். 1744ஹு முதல் ஆங்கிலேயருக்கும் பிராஞ்சுக்காரருக்கும் சண்டைகள் நடந்துவந்தபடியால் பிராஞ்சுக்காரர் சந்தாசாயபு கட்சியையும், ஆங்கிலேயர் மஹமடாலி கக்ஷியையும் சேர்ந்து, உடனே காப்டன் கோப் என்பவரோடு ஒரு சிறு பட்டாளத்தை அனுப்பச் சண்டை நடக்கவில்லை. ஆயினும், சந்தா சாயபும் பிராஞ்சுக்காரரும் புதுச்சேரிக்குப் போனார்கள். 1750ஹு நாசர்சங்கொல்லப்பட்டார். 1751ஹு இங்கிலீஷ்காரர் மஹமடாலிக்கு உதவியாக 500 ஐரோப்பிய சோல்ஜர்களையும், 1000 சிப்பாய்களையும், 8 பீரங்கிகளையும் கூடலூரிலிருந்து காப்டன் ஜின்ஜென் மூலமாக அனுப்ப அச் சேனை வலிகொண்டான்புறத்திற் கருகில் வந்து சந்தாசாயபு சேனைக்கு எதிரில் வர வெள்ளாறுக்கருகில் தங்கினார்

கள். மறுநாள் காலை பிராஞ்சுக்காரர் வரவே ஆங்கிலேயர் எதிர்த்து வர திரிசிராப்பள்ளியில் ஒரு சிறு சண்டை உண்டாக, ஆங்கிலேயர் முதலில் பிச்சாண்டார் கோயிலுக்குப் போய்ப் பிறகு ஸ்ரீரங்கம் கோயிலில் தங்கி, பிறகு இங்கிலீஷ்காரர் காவிரி நதியைக் கடந்து திரிச்சிக்கு மேற்கே வந்து தங்கினார்கள். இங்கிலீஷ்காரர் ஸ்ரீரங்கத்தை விட்டு வரவே பிராஞ்சுக்காரரும் சந்தாசாயபும் ஸ்ரீரங்கத்தில் தங்கினார்கள். பிறகு, கோயிலடிமண் கோட்டைக்குப் போக, பிரஞ்சுக்காரரும் சந்தாசாயபும் கொஞ்சம் சேனையை ஸ்ரீரங்கத்தில் விட்டுவிட்டு, திரிசிராப்பள்ளி கிழக்குக் கரையில் தங்கினார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் தேவனாம்பட்டணத்திலிருந்த கிளைவோடு ஒரு சிறு தண்டானது உதவிக்காகத் திரிசிராப்பள்ளிக்கு வந்தது. அப்போது பிரான்சுக்காரர் திரிச்சிக்குத் தென்கிழக்குப் பாகத்தில் 1200 கஜ தூரத்திலிருந்து 8 பவுண்டர் பீரங்கிகளையும், 3 மோடார் பீரங்கிகளையும் லக்குவைத்தும், இதேமாதிரியாக வையகொண்டானிடத்திலும் ஸ்ரீரங்கத்திலும் சில பீரங்கிகளை லக்குவைத்தும் சண்டைசெய்ய எத்தனித்தார்கள். இந்த ஸ்திதியில் மஹமடாலிக்குப் போதுமான திரவியமில்லாமையால் மைசூர் இராஜாவினிடத்தில் அந்தரங்க சமாதானம் செய்து அவர் உதவியை நாட, அவர் தமது திவான் மூலமாக 4000 குதிரைப்பட்டாளத்தையும் மோராரிராவையும் உதவியாக அனுப்பினர். அப்போது பிரஞ்சுக்காரரைத் தடுத்ததில் காப்டன் கோப் என்பவர் கொல்லப்பட்டார். இச்சமயத்தில் தஞ்சாவூர் ராஜா மஹமடாலிக்கு உதவியாக, மானக்ஜீ என்பவரோடு 3000 குதிரைப் பட்டாளத்தையும், 2000 பதாதிகளையும் அனுப்பவே, தொண்டமான் புதுக்கோட்டை அரசர் 400 குதிரைப் பட்டாளத்தையும், 3000 பதாதிகளையும் அனுப்பினர். மேலும், 1752ஹு மார்ச்சுமீ மேஜர் லாரன்ஸ் என்பவர் 400 இங்கிலீஷ் சோல்ஜர்களையும், 1100 சிபாய்களையும் கூட்டிக்கொண்டு திருவரும்பூர் கடந்து திரிசிராப்பள்ளிக்கு வர, அவரோடு கூடவந்த கிளைவ் பிரான்சுக்காரரையும் சந்தா சாயபையும் தாக்கிப் பல சண்டைகள் செய்ய, கடைசியில் சந்தாசாயபினுடைய சேனைகள் ஓடிப்போகவும், சிலர் இங்கிலீஷ்காரரைச் சேரவும், சந்தாசாயபு தஞ்சாவூர் தளகர்த்தனுக்கு லஞ்சம் கொடுத்துத் தன் பிராணனைக் காக்க முயன்றாலும், அச் சண்டா சாயபு மஹா கொடுமையாகக் கொல்லப்பட்டார். பிறகு லாரன்ஸ் என்பவர்

ஸ்ரீரங்கம் முதலான இடங்களிலிருந்த பிரான்சுக்காரரை ஓட்டிவிட்டு நகரத்தை வசப்படுத்திக்கொண்டார். இத்தருணத்தில் பிரான்சுக்காரருக்குத் தலைவராயிருந்த டியுப்ளே என்பவர் வரவே, அவர் சண்டா சாயபு குமாரர் இராஜா சாயபை கர்னுடக நவாபாக ஆக்கியதோடு மைசூர்காரரோடும் மஹாராஷ்டிரரோடும் சமாதான உடன்படிக்கைசெய்து கொண்டார். இந்த உடன்படிக்கையின்படி மைசூர் நண்டிராஜ் பிரஞ்சுக்காரருக்கு உதவிசெய்ய வருகையில் திரிசிராப்பள்ளியி லிருந்த Mr. டால்டன் என்பவர் ஸ்ரீரங்கத்திற் கருகில் மைசூர் சேனையைத் துரத்தியடிக்க இங்கிலீஷ்காரருக்கு (1752ஹு) ஜெயமுண்டாகவில்லை. ஜெயமுண்டாகாவிட்டாலும் Mr. லாரன்ஸ் ஒரு சேனையோடு ஸ்ரீரங்கத்திற்கு வந்து மைசூர் சேனையை ஓட்டிவிட்டார். ஓட்டிவிட்டாலும் டியுப்ளே என்பவர் 450 ஐரோப்பிய சோல்ஜர்களையும், 1500 சிப்பாய்களையும், 8000 மைசூர் குதிரைப் பட்டாளத்தையும், 3500 மஹராட்டியர்களையும், 15000 சுதேச காலாட்களையும் அனுப்ப, அப்போது ஆங்கிலேயரிடம் 500 ஐரோப்பிய சோல்ஜர்களும் 2000 சிப்பாய்களுமாகிய சிறிய சேனைமாத்திரம் இருந்ததினால் எதிர் கக்ஷியைத் தக்கபடி முறியடிக்க முடியவில்லை. ஆயினும், Mr. லாரன்ஸ் வெகு சாமர்த்தியத்தோடு எதிர் சேனையைத் தாக்கி ஓட்டிவிட்டுச் சில குதிரை வீரரைச் சம்பாதிக்க தஞ்சாவூர் இராஜரிடம்போய்ச் சேனையைத் திரட்டிக்கொண்டு ஒருமாத காலதாமதமாய் வர, பிரான்சுக்காரர் மறுபடியும் திரிசிராப்பள்ளியைச் சுற்றி முற்றுகைபோட, Mr. லாரன்ஸ் வந்து அவர்களைப் பொன்மலை வரைக்கும் துரத்தியடித்து ஜெயம் பெற்றார். 1753ஹு செப்டம்பர்மீ முடிவில் Mr. லாரன்ஸ் பிரான்சுக்காரருடைய 11 பீரங்கிகளையும் அவர்களுடைய கூடாரங்களையும் பிடித்துக்கொண்டோட்ட, அடுத்த நவம்பர் மாதத்தில் மறுபடியும் பிரான்சுக்காரர் வந்து தாக்க, Mr. லாரன்ஸ் அவர்களைத் துரத்தியடித்து 360 பிரான்சுக்காரர்களைப் பிடித்துக் கைதிகளாக்கிவிட்டார். 1754ஹு பிப்ரவரிமீ பிரான்சுக்காரருடைய உணவுப்பொருள்கள், யுத்தசாமான்கள், ரொக்கப்பணம் இவை இங்கிலீஷ்காரர் வசமாயின. ஆகவே, டிசம்பர்மீ 31உ இருகக்ஷிக்கும் சமாதானமாய்விட்டது. இந்தச் சமாதானம் மைசூர் திவானுக்குச் சம்மதமில்லாமல் ஸ்ரீரங்கத்திலிருந்து சண்டைசெய்ய முயன்றனும் நைஸாம் மைசூர்மேல் படையெடுத்து வருகிற சங்

கதி கேட்டு உடனே மைசூருக்குப் போய்விட்டார். இந்தச் சமாதானத்தினால் ஸ்ரீரங்கத்திலிருந்த பிரான்சுக்காரர்கள் 1756௵ இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் சண்டை ஆரம்பிக்கிறவரையில் சும்மாவிருந்து பிறகு சண்டைக் காரம்பிக்க, அறியாலூர் உடையார்பாளையம்பாளையக்காரரிடத்தில் கப்பம் வாங்கப் பிரயத்தனப்பட்டார்கள். பிறகு ஸ்ரீரங்கத்திலிருந்த பிரான்சுக்காரரோடு சேர்ந்து சண்டை செய்யவே, அப்போது இங்கிலீஷ் தளகர்த்தரான காப்டன் ஸ்மித் என்பவர் தம்மிடமிருந்த சிறு சேனையோடு வேறு சேனை உதவியைப் பெற்றுப் பிரான்சுக்காரரைத் துரத்தியடித்தார். பிறகு 1759௵ பிரான்சுக்காரர் வலிகண்டாபுறத்திற் கருகிலிருக்கும் தியாகர் கோட்டையைப் பிடித்துக்கொண்டார்கள். 1766௵ ஹைதர் ஆலி திரிசிராப்பள்ளிமேல் படையெடுத்து வந்ததன்றியில், 1768-69௵ மறுபடியும் படை யெடுத்துவந்து திரிசிராப்பள்ளியைத் தாக்கியும், 1781௵ மறுபடியும் வந்து தாக்கியும் பயனடையவில்லை. அவர் குமாரர் திப்புசுல்தான் கரூர் வழியாகத் திரிச்சிக்கு வந்து ஸ்ரீரங்கத்தைத் தாக்கி ஜெயமடையவில்லை. அன்றுமுதல் (1801௵) இங்கிலீஷ்காரர் வசமாகிக் குடிகள் சுகமடையச் சம்பவித்தது.

---

## தற்காலஸ்திதி.

இந்தத் திரிசிராப்பள்ளியானது இந்த ஜில்லாவிற்கும் தாலுக்காவுக்கும் பிரதான பட்டணம். இங்கு முதலில் பார்க்கத்தக்கது தாயுமானசுவாமி மலை. இதின் படிக்கட்டுகளில் அடுக்கடுக்காக ஏறிப்போனால் சித்திரவேலைப்பாடுள்ள கோயில் கட்டிடங்களையும், நூறுகால் மண்டப முதலான கட்டிடங்களையும் காணலாம். இங்கு இங்கிலீஷ் சேனையானது தங்கிச் சண்டை செய்தது. இங்கு இருக்கும் 2 பாதச்சுவடுகளை விபீஷணருடைய பாதச் சுவடுகள் என்று ஹிந்துக்களும், நாட்டு என்பவருடைய பாதச் சுவடுகளென்று மகம்மதியர்களும் நம்புகிறார்கள். இந்தக் கோயில்களையெல்லாம் தாண்டி மேலாக இருக்கும் உச்சிப்பிள்ளையார் கோயிலுக்குப் போனால் திரிசிராப்பள்ளி பட்டணமும் சுற்றுப்பக்கத்தின் காக்ஷிகளும் கம்பீரமாகத் தோன்றுகின்றன. இப்போது இந்தக் கோயில்களை நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் ஏராளமான பணம் செலவிட்டுச்

செப்பனிட்டிருக்கிறார்கள். இம் மலைக்கடியில் ஒரு பெரிய தெப்பக்குள மிருக்கிறது. அதற்கெதிரில் Lt. ஜோசப் கலாசாலை இருக்கிறது. அது முன் கிளைவ் துரையவர்கள் வதிந்த வீடாம். திரிசிராப்பள்ளிக் கோட்டையில் சந்தா சாயபின் சமாதி இருக்கிறது இவ்விடத்தில் சேனாவீரர் தங்கும் பேரக்ஸ்களும், பெரிய ஜெயிலும், டிஸ்டிரிக்ட் செஷன் கோர்ட்டும், கலெக்டர் முதலானவர்கள் கச்சேரிகளும், மார்க்கெட்டுக் கருகில் மணிக்குண்டு கோபுரமும், பெரிய ரெயில்வே ஸ்டேஷனும்,ஜெ.ஜங்கன் ஸ்டேஷனும் இருப்பதன்றியில், ஸ்ரீரங்கத்திற்குப்போகக் காவேரியாற்றின்மேல் 49 அடிகள் நீளம்கொண்ட 32 கண்களுடைய பெரிய பாலம் கட்டப்பட்டிருக்கிறது. இந்தத் திரிசிராப்பள்ளியானது விதம் விதமான தங்க நகைகள், புகைச் சுருட்டுகள், ஜோடுகள் முதலான கைத்தொழிலுக்குப் புகழ் பெற்றது.

வைணவ மதத்தைச் சார்ந்த திருமங்கை ஆழ்வார், நாத முனிகள், ஆளவந்தார் முதலானவர்களும்; சைவ மதத்தைச் சார்ந்த தாயுமானவ சுவாமிகள் முதலானவர்களும், மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை முத்துவீராச்சாரியார் முதலான தமிழ் வித்வான்களும் வதிந்த விடம்.

இப்போது இத்திரிசிராப்பள்ளி முனிசிபல்பட்டணமாகி இதில் 1,23,512 ஜனங்கள் வதிந்து வருகிறார்கள். சென்னை தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனிலிருந்து இந்தத் திரிச்சிக்கோட்டை 254 மைல்கள் தூரத்திலும், ஜங்ஷன் 215 மைல்கள் தூரத்திலும் இருப்பதால் இவைகளுக்கு முறையே 3-ம் வகுப்புக்கு ரூபாய் 2—14—0, 2—13—0 கொடுக்க வேண்டும்.

இதற்கடுத்த ஸ்ரீரங்கத்தின் விவரத்தை அந்த க்ஷேத்திரத்தின் அடியிற் காண்க.

திரிச்சி தாயுமானசுவாமி மலையின் உச்சிப்பிள்ளையார் கோயிலுக்கடியிலிருந்து செய்த பிரார்த்தனை.

"ஓ தெய்வத்தாயே! இவ்வுலகிலுள்ள எல்லாப் பெரிய மதஸ்தர்களும் உன்னை ஓர் பெரும் புருஷப் பிதாவாகப் பாவித்துப் பிரார்த்தனை செய்வது பிரத்தியட்சம். ஏனெனில், கல்வி ஞானம் வண்மைமுதலான குணச்சிறப்புகள் விசேஷமாகப் புருஷர்களிடத்தில் காண்பதினாலும், இப்பிரமாண்ட

மான பூமியையும் இதைச் சுற்றி அந்தரத்திலாடும் அகிலாண்டகோடி பிரம்மாண்ட லோகங்களைச் சிருஷ்டி செய்ய அபாரசக்தி வேண்டியபடியால் அச் சக்தி புருஷருக்கன்றி பெண்பாலார்க்கில்லையென்று எண்ணியிருப்பதேயாம். அது ஒரு விஷயத்தில் நம்பத்தக்கது. ஆனால், அந்தச் சிரேஷ்ட சக்தியும் அச் சக்தியினால் சிருஷ்டிக்கப்படும் சகல கந்தமூல கிருமி கீடக ஜீவகோடிகளைக் காத்து அன்பு பாராட்டி ஆதரிக்கும் உண்மை பெரும்பாலும் பெண்பாலரிடத்திலேயே இருப்பது பிரத்தியட்சம். பிரஜைகளைப் பிறப்பித்தும் அவர்களுக்குக் கல்வி ஞானம் போதிக்க இவற்றைப் பிதாவுக்குச் சக்தியிருந்தபோதிலும் அப்பிள்ளைகளை மார்போடணைத்துப் பால் கொடுத்து நாளொருவண்ணம் பொழுதொரு மேனியாக வளர்த்து, அவர்களுக்கிடையில் வரும் பிணி முதலான இக்கட்டுகளை நீக்கக் கெஞ்சாதவர்களைக் கெஞ்சி அஞ்சாதவர்களுக்கு அஞ்சி, கஞ்சியைத் துணியைக் கருதாமலும் தூக்கத்தையும் சுகத்தையும் கருதாமலும் கஷ்டப்பட்டுப் பிள்ளையை வளர்க்கும் பேரன்பு பெண்பாலார்க்குடையதன்றோ? ஆகவே உன்னைப் பராசத்தியென்றும், பிரபஞ்சமாதாவென்றும் எண்ணி அநேகர் 'தாயே! தாயே!' என்று தியானிக்கின்றார்கள். அப்படிப்பட்ட பெயருடைய இத் திவ்ய ஸ்தலத்தில் நானும் வந்து உன்னை 'என் தாயே! என் அருமைத் தாயே! என் அன்பார்ந்த தாயே! எனக்கு ஆனந்தந்தருந் தாயே!' என்று பிரார்த்திக்கின்றேன். என்னை நின் அருமை மகனைக் கொண்டு நினது ஆராவமுதென்னும் பக்திரசமாகிய பாலைக் கொடுத்து ஆதரிப்பாய் தாயே! ஓம் தத்சத்.

இனி, இத் திரிசிரபுரத்திற்குச் சமீபத்திலிருக்கும் திரு ஆனைக்கா க்ஷேத்திரத்தையும், அதன் தற்கால ஸ்திதியையும் இதனடியிற் கூறுகிறோம்.

---

## திருவானைக்கா.

(ஜம்புநாயகர், அகிலாண்டேசுவரி, சிவகங்கை தீர்த்தம், ஜம்புநாவல் விருக்ஷம்.)

பராசரமுநிவர், திருமால், கோச்செங்கட் சோழநாயனார், கௌதமர் முதலாயினோர் வழிபட்ட சிவ ஸ்தலம். சோழநாட்டில் காவிரியின் வடகரையிலுள்ளது.

இத்தலம் பூர்வத்தில் ஜம்புவனமா யிருக்கையில் அங்குத் தவஞ்செய்திருந்த முனிவர் அங்கு உதிர்ந்த கனியொன்றை யெடுத்துச் சென்று கைலையிற் சிவபெருமானுக்கு நிவேதிப்ப, இறைவர் அதனை யுண்டு வித்தினை உமிய, முனிவர் அதனை யுண்ண, அவ்வித்து முளைத்து அவருடலைத் துளைத்துச் சிரமிசைத் தோன்ற, அம்முனிவர் இறைவரை அதன் நிழலில் எழுந்தருளி யிருக்கும்படி பிரார்த்திப்ப, 'அக்கினி கிடைத்தவிடத்தை யடைக' என்ற ஆஞ்ஞையைப் பெற்று மீண்டும் அவ்வனத்தை யடைந்தனர். அதனால் சிவபெருமான் நாவலின் கீழ் எழுந்தருளினர். ஆனை புசித்தமையின் ஆனைக்கா. சிலம்பி பூசித்ததற்கு மகிழ்ந்து கோச்செங்கட் சோழநாயனாராகப் பிறந்து முத்தியடைய அநுக்கிரகித்த ஸ்தலம். உறையூரிலிருந்து சோழராசன் நீராடுகையில் தன் தேவி கழுத்திலிருந்த ஆரம் சிவபிரானுக் கேற்றதெனக் கருதியவுடன், அது காவிரியாற்றில் விழ, அரசன் அதன் அருமையைக் கருதி வருந்தியதை, அவ்வாரம் திருமஞ்சனக் குடத்தின் வழியாய்ச் சிவபிரான் திருமுடியை யடைய மகிழ்ச்சி விளைத்த ஸ்தலம். இத்தலத்தின் திருமதில் சிவபெருமான் சித்தவடிவேற்றுத் திருநீற்றைக் கூலியாகக் கொடுத்துக் கட்டுவித்ததுபற்றி அது திருநீறிட்டான் திருமதிலென வழங்கு மென்பர். மூவர் பாடலும், ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திரவெண்பாவும், ஓதியருளப் பெற்றது. காளமேகப் புலவர்க்கு அம்பாள் அநுக்கிரகம் புரிந்து மகா கவியாக்கியதும் இவ்விடமே.

---

## ஜம்புகேஸ்வரத்தின் தற்கால ஸ்திதி.

இந்த ஜம்புகேஸ்வரமானது ஸ்ரீரங்கத்திற்குச் சுமார் அரைமைல் தூரத்தில் இருக்கிற ஒரு சிறந்த சிவஸ்தலம். இந்தக் கோவில் ஐந்து கருங்கல் மதில் சுவர்களாலும், கோபுர வாசல்களாலும் பிரகாசிக்கின்றது. முதல் பிராகாரத்தில் அழகிய விமானமும், அதைச்சுற்றிலும் முப்பதடிகள் உயரமும்-126 அடிகள் நீளமும்-123 அடிகள் அகலமும் உள்ள பிராகாரமு மிருக்கிறது. இரண்டாவது பிராகாரம்: 35 அடிகள் உயரமும்-306 அடிகள் நீளமும்-197 அடிகள் அகலமுமுள்ள சுவர்களுள்ளதாயிருக்கிறது. இதற்குள் அநேக மண்டபங்கள் கட்டப்பட் டிருப்பதோடு இந்தப் பிராகாரத்தின் மேல் 60 அடிகள் உயரமுள்ள கோபுரமிருக்கிறது. மூன்று

வது பிராகாரம்: 30 அடிகள் உயரமும்-745 அடிகள் நீளமும்-197 அடிகள் அகலமும் உள்ளது. இதில் 73 அடிகள் உயரமும்-100 அடிகள் உயரமுமுள்ள இரண்டு கோபுரங்களிருக்கின்றன. இந்தப் பிராகாரத்தில் ஒரு சிறிய தென்னந்தோப்பும்-ஒரு தெப்பக்குளமும்-ஒரு சிறிய கோயிலுமிருக்கிறது. இக் கோயிலில் ஸ்ரீரங்கத்தி லிருக்கும் ரங்கநாதர் வருஷம் ஒருதடவை வந்து தங்கிப்போவதுண்டு. நான்காவது பிரகாரம்: 35 அடிகள் உயரமும்-6 அடிகள் கனமும்-2436 அடிகள் நீளமும், 1493 அடிகள் அகலமும் உள்ளது. ஐந்தாவது பிராகாரத்தில் ஜனங்கள் குடியிருக்கும் வீடுகளடங்கிய நான்கு வீதிகளும் இருக்கின்றன. மேற்குவாயிலில் ஒரு சிறிய கோபுர மிருக்கிறது. இது சுமார் 70-80 வருஷங்களுக்கு முன் கட்டியதாகத் தோன்றுகிறது. இக் கோயிலுக்குத் தர்ம மானியங்கள் கொடுத்தவர்களுடைய பெயர் முதலான விவரங்கள் கற்களில் செதுக்கப்பட் டிருக்கின்றன. இந்தக் கோயிலைத் தக்கபடி பாதுகாவாமையால் சில பாகங்கள் அடிக்கடி இடிந்து விழுந்து வந்தன. இதைக் கண்ட நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் ஏராளமான பணம் செலவழித்துத் தக்கபடி ரிபேர்செய்து புதிப்பித்துப் பிரகாசிக்கச் செய் திருக்கிறார்கள்.

---

## திருவானைக்காவலென்னும் ஜம்புகேஸ்வரத்தின் ஓர் மடத்திற் றங்கி செய்த பிரார்த்தனை.

"ஓ ஜெகத்பதியே! உன் இருப்பைப் பிரபஞ்சஜனங்கள் ஜோதி சொரூபமாகவும், வாயு சொரூபமாகவும், ஆகாய சொரூபமாகவும், பிருதிவி சொரூபமாகவும், ஜல சொரூபமாகவுங் கொண்டு பிரார்த்தனை செய்தல் மற்ற சொரூபங்களிலும் சிறந்ததாகத் தோன்றுகின்றது. ஏனெனில், ஜலமானது சகல கந்தமூல கிரிமி கீடக பக்ஷிமிருக மானவ பிராணிகளுக்கும் பிராணாதார மானதன்றோ? ஆகவே, இப்படிப் பிராணாதாரமான உன்னைப் பல்லாயிரம் பெயர் பல விடங்களிலிருந்து வந்து பிரார்த்தனை செய்கிறார்கள். ஜலமானது பிராணகோடிகளுக்கு இனிய பானமாகி உள்ளம் குளிரச்செய்ய, அதன்மேல் வீசும் உஷ்ணத்தை விருக்ஷத்தின் நிழல் எவ்வளவு சுகத்தைத் தருமோ அக் கருத்தைக் கொண்டு இக் கோயில் லிங்கத்தைச்சுற்றிலும் கசிந்து ஊரி குளிர்ச்சியைத் தர அதன்மே லிருக்கும் ஜம்புநாகமரம் குளிர்ந்த நிழலைக்

கொடுப்பதைப்போல் பாவித்துப் பல்லோர்வந்து பூஜிக்கிறார்கள். ஆகவே, எனது ஜீவாத்துமாவைச் சுற்றி நினது அமிர்தரசம் சூழ நின் அபயஸ்தம்போன்ற விருக்ஷசாயையைக் கொடுத்து ஆசாபாசங்க ளென்னும் உலக உஷ்ணத்தை நீங்கச் செய்வாய்! காளமேகன் முதலான கவிகள் வந்து பெருமை பெற்ற இத்தலத்தில் நானும் வந்து பிரார்த்திக்க இன்று பாக்கியம் பெற்றவனானேன். உலக ஆசாபாச தாபத்தினால் தவிக்கும் எனது ஜீவாத்மாவுக்கு நினது கருணாரச ஜலத்தையும் கிருபாகடாக்ஷநிழலையும் கொடுத்தாதரிப்பாய். ஓம் தத்சத்.

---

## காவிரியின் தென்கரையிலுள்ள க்ஷேத்திரங்கள்.

### திருவாட்போக்கி.

(இரத்தினகிரி, மாணிக்கமலை, இரத்தினகிரீச்சுரர், சுரும்பார் குழலியம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

சயந்தன் முதலிய தேவர்கள் பூசித்த தலம். ஆரிய தேசத்தை யாண்ட அரசன் மாணிக்க விருப்பாற் தலங்கள் தோறுந் திரிந்துங் கிடையாமல் இங்குற்றுப் பிரார்த்திக்கச், சிவபெருமான் ஓர்நீர்த்தொட்டியைக் காட்டி, 'அதைக்காவிரி ஜலத்தினால் நிறைத்தால் உன் எண்ணம் முடியும்' என்று திருவாக்கருள, அரசன் அவ்வாறே அத்தொட்டியில் எவ்வளவு நீர் வார்ப்பினும் நிறையாதொழிய, வெகுளிகொண்டு உடைவாளை யுருவியோச்சி நினைக்குங்கால் அவ்வாளைப் போக்கிவிட்டு இரத்தினத்தைக் காண்பித் தருளியவுடன் அரசன் ஆநந்த பரவசனாய் அரதனத்தை விரும்பாது விட்டுச் சிவபணிவிடை யொன்றையே விரும்பிப் பணிபுரிந்து சிவகதியடைந்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்—க.

கடம்பர் கோவிலையும், இத்தலத்தையும், திருவீய்ங்கோய் மலையையும், ஓர் தினத்தில் முறையே காலை, உச்சி, மாலையென்ற காலங்களிற் சென்று தரிசிப்போர், கருதிய வரம் யாவும் பெறுவரென்று உலகம் பேசுகின்றது.

---

### திருக்கடம்பந்துறை (கடம்பர் கோவில்).

(கடம்பவன நாதேச்சுரர், முற்றிலா முலையம்மை, காவிரிநதி தீர்த்தம், கடம்பவிருக்ஷம்.)

சிவபெருமான் ஓர் காலத்திற் கண்ணுவ மகாரிஷிக்குந் தேவர்களுக்குங் கடம்ப விருக்ஷத்திற் றோன்றி காட்சிதந்த தலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனார் க்ஷேத்திர வெண்பாப் பாடியருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## குளித்தலை.

இது திரிச்சி ஜில்லாவைச் சார்ந்த ஒரு தாலுக்காவும் அதன் பிரதான பட்டணமுமாம். இக் கிராமம் 2743 குடிகளுள்ள சிறிய கிராமமாயினும் இதைச் சுற்றிலும் 4 பெரிய கிராமங்களிருக்கின்றன. இவைகளில் விசேஷமாக நெற்பயிரும்தென்னை முதலான விருக்ஷங்களும் பயிரிடப்பட்டுப் பார்வைக்கு இரமணீயமாயிருக்கின்றன. பிரதி வருஷம் புஷ்ய தினத்தில் கடம்பர் கோவில், கருப்பத்தூர், திருவங்கிமலை முசிரி, சிவாயம், ராஜேந்திரம், பேட்டைவைத்தலை, வளூர் முதலான விடங்களிலிருந்து சுவாமிகளைக் கொண்டுவந்து காவிரியின் கரையில் ஒருநாளெல்லாம் வைத்து உற்சவம் கொண்டாடப்படுகின்றது. இது, சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 272 மைல் தூரத்திலிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு சார்ஜ் ரூ. 3-1-0.

---

## திருப்பராய்த்துறை.

(பராய்த்துறை நாதேச்சுரர், பொன்மயிலாம்பிகையம்மை, அகண்ட காவிரி தீர்த்தம்.)

பாராய் விருட்சம், தேவேந்திரன், சப்த ரிஷிகள், குபேரன் பூசித்த தலம். மாணிக்கவாசக சுவாமிகளால் "தென்பராய்த்துறையாய் சிவலோகா" எனச் சிறப்பிக்கப்பட்டுள்ள தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாலும், திருநாவுக்கரசு சுவாமிகளாலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

---

## திருக்கற்குடிமலை.

(முத்தீச்சுரர், உச்சிவரதநாயகர், அஞ்சனாட்சியம்மை, முத்தி தீர்த்தம்.)

ஈழநாட்டரசன் முத்திபெற விரும்பிப் பலபதிகளை வணங்கியபின் இங்குற்றுப் பூசித்தபோது, 'உச்சிக்காலத்தில் வந்து பூசிக்குதி' என எழுந்த அசரீரியைக் கேட்டு, அவ்வாறே பூசித்துத் துதித்தற் கிரங்கிச் சிவபெருமான், நடனதரிசனங்காட்டி முத்தி கொடுத்தருளியதலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம். ௩.

---

## திருமூக்கிச்சுரம் (உறையூர்).

(பஞ்சவர்ணநாதேச்சுரர், காந்திமதியம்மை, குடமுருட்டிநதி தீர்த்தம்.)

பிரமன் வந்து பூசிக்கும்போது, சிவபெருமான், காலத்துக்கொரு திருக்கோலமாக வீற்றிருக்கக் கண்டு, மகிழ்ந்து பஞ்சவர்ண நாதரெனக் காரணப்பேர் சாத்தி நல்வரம் பெற்ற தலம். புகழ்ச்சோழநாயனார் திருவவதாரமான தலம். சோழராஜரது ராஜதானியாயிருந்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## திரு எறும்பியூர்.

(எறும்பீச்சுரர், நறுங்குழனாயகியம்மை, அற்புத தீர்த்தம்.)

கரதூஷணரும், எறும்பும் பூசித்து அவரவர்கள் விரும்பிய வரம் பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

---

## திருநெடுங்களம்.

(நித்தியசுந்தரேச்சுரர், ஒப்பிலாநாயகியம்மை, அக்கினி தீர்த்தம்.)

சிவபக்தியிற் சிறந்த வங்கிய சோழராஜன், நாடோறும் வந்து தரிசிக்கும்போது ஒருநாள் சிவபெருமான், பேரழ்கோடு தரிசனங் கட்டளையிட நித்திய சுந்தரரெனத் திருநாமஞ்சாத்தித் துதித்துப் பேறுபெற்றதலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனார், க்ஷேத்திர வெண்பா பாடியருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

## மேலைத்திருக்காட்டுப்பள்ளி.

(தீயாடியப்பர், வார்கொண்ட முலையம்மை, அக்கினி தீர்த்தம்.)

உறையூரில் சாரமாமுனிவரது நந்தவனத்திற் றிருடிய செவ்வந்திமலரை அரசன் றன்மனைவியர்க் களிப்ப, அவர்களில் மூத்தாள் சிவபக்தி விசேடத்தால், மனையிலிருந்த சிவபிரானுக்கு அதனை அணிந்து வந்தமைபற்றி, அந்நகரிற் பெய்த மண்மாரியில் அவள் மாத்திரம் தப்பிப் பிழைத்து இத் தலத்தை யடைய, இங்குக் கானல் வருத்தம் பொறுது, 'தீயாடியப்பரோ' என்றழைக்க, அவருக்காக இரங்கி, அவ்வெப்பந் தவிர்த்து அநுக்கிரகித்தருளிய தலம். திருஞான சம்பந்த சுவாமிகளால் திருப்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

———

## எலமனூர்.

இது திரிசிராப்பள்ளி தாலுக்காவைச் சார்ந்த 1854 குடிகளுள்ள ஒரு விசேஷ ஸ்தலம். இவ்விடம் காவிரி நதியின் ஒரு கிளையானது கொள்ளிடம் என்னும் பெயரால் பிரிந்துபோவதால் இங்கே சைவ வைணவ க்ஷேத்திரங்களில் புரட்டாசி முதலான மாதங்களில் உற்சவங்கள் நடக்கிறபடியால் அநேக ஜனங்கள் வந்து தரிசிக்கிறார்கள். காவிரியிலிருந்து கொள்ளிடம் பிரியுமிடத்தில் மேலணை கட்டப்பட்டிருக்கிறது. கொள்ளிடத்தில்ஆழ மதிகரித்துக் காவிரியில் மணல் மேடு அதிகரிக்கத் தஞ்சை ஜில்லாவுக்குக் காவிரி ஜலம் போதாமற் போவதைக் கண்டு 1836வரு சர் ஆர்தர் காட்டன் என்னும் பெரிய இஞ்சினீயரால் கொள்ளிடத்தின் உச்சியில் ஒரு அணை கட்டப்பட்டது. முதலிலிருந்த மேலணை 750 கஜங்கள் நீளமுள்ளதும், வடபாகத்து $7\frac{3}{4}$ அடிகளும்-மற்றவைகள் $5\frac{1}{4}$ அடிகள் ஜலந்தங்கும்படியான உயரமுள்ளவைகளுமாகக் கருங்கற்களினாலும் செங்கற்களினாலும் கட்டப்பட்டது. அதன்பிறகு 21 அடிகள் அகலமும்ஒரு அடி கனமுமுள்ள முன் தாங்கிக் கைப்பிடிசுவர் சிமெண்ட்டினாலேயே கட்டப்பட்டிருக்கிறது. இதனால்காவிரியின் ஆழத்தை விருத்தியாக்கி அதிக ஜலம் போகும்படி செய்யப்பட்டிருக்கிறதன்றியில், மணல் போக்கிகளாகவும் உபயோகமாகி வருகிறது. பிற்பாடு 1843வரு கர்னல் சிம் என்னும் இஞ்சினீயர் யோசனையின்படி கொள்ளிடத்தின்

அணையில் 2 அடிகள் குறைக்கப்பட்டன. 1844ஆம் ஷை ஜலத்தைத் தக்கபடி வசப்படுத்தக் காவிரியின் வாயின்மேல் பின்னும் ஓர் செங்கல் கட்டிடம் கட்டப்பட்டது.

இதன் நீளம் 650 கஜமாம், அதன்மேல் ஒன்றுமுதல் $1\frac{1}{2}$ அடிவரையில் உயர்த்தப்பட்டது. 1846ஆம் கர்னல் லாயோர்டு என்னும் இஞ்சினீயரால் கொள்ளிடம் அணையின்பேரில் 650 கெஜங்கள் நீளமுள்ள அணையின்மேல் ஒரு அடி உயரத்தில் நடக்க வசதியாக ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. இந்த வேலைகளெல்லாம் 1899-1904 வரையில் $6\frac{1}{2}$ லக்ஷ ரூபாய் செலவில் முடிந்தது. இக் கட்டிடங்கள் பார்க்கத் தகுந்த அதிசயங்களாம். இந்த எலமனூர், சென்னை தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து $260\frac{3}{4}$ மைல்கள் தூரத்திலிருக்கிறது.

---

## திருக்கருவூர்த் திருவாநிலை (கருவூர்).

(பசுபதீச்சுரர், கிருபாநாயகி, வடிவாம்பிகையம்மை, ஆம்பிராவதிநதி, பிரமதீர்த்தம், தாடகை தீர்த்தம் முதலிய தீர்த்தங்கள், வஞ்சுளாரண்ய க்ஷேத்திரம்.)

பிரமன் அயர்ந்து நித்திரை செய்த ஓர் காலத்தில் காமதேனு பூசித்து உலக சிருஷ்டியை நடத்திய தலம். இதனால் இத் தலத்திற்குக் கருவூர், கற்பபுரியென்று வழங்கப்படுகிறது. தேவர்கள், திக்குப்பாலகர்கள், சுக்கிரன் முதலியோர் பூசித்த தலம். விபண்டன் என்னும் வேடன் பாபரூபியாயிருந்தும் அடியார்போல வேடந் தாங்கி மார்கழித் திருவிழாவில் ஆலயக்களவு செய்ய வந்து ஜன நெருக்கத்திலகப்பட்டிறக்கத் தரிசித்ததே காரணமாய் முத்தியருளிய தலம். இத்தலத்து வேதாகம முணர்ந்தவராய், வேதியர் மரபிலவதரித்தருளிய கருவூர்த்தேவர்: யோகர், சித்தர் முதலியவர்களோடும் பயின்று சிவயோகியாய் எழுந்தருளி இருக்குங்கால் "மெய்யன்பர் நாரியர்பால் வீடேயிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே" என்றதற்கு இணங்க மாதரோடு ஆடல் முதலிய பல விலக்கற்றொழில்களைப் புரிந்தும் சித்தநிலை திரியாது சிவயோகியாயிருத்தலை யுணராத அந்தணர்கள் இவரை இகழ்ந்துரைப்ப, அவர்கள் உணர்ந்துய்யும்பொருட்டுக் காலமல்லாத காலத்தில் மழைபெய்வித்தல், வெயில்

நீக்குதல், ஆற்றைப் பெருக்கச் செய்தல், கோவிற் கதவந் திறப்பித்தல் முதலிய பல அற்புதங்களைக் காட்டியருளி இங்குநின்றும் நீங்கித் திருநெல்வேலி, திருக்குருகூர், காந்தீச்சுரம், திருச்செந்தூர், திருப்புடை மருதூர், திருக்குற்றால முதலிய தலங்களிற் சென்று திருவிசைப்பா ஓதியருளிப் பொதிகை மலையில் அகஸ்தியரோடு மெழுந்தருளி யிருந்தனர். அப்போது தஞ்சை நகரத்தில் சோழராஜனால் ராஜராஜேச்சுரம் என்னும் பெரிய ஆலயஞ் சமைக்கப்பட்டும் அட்டபந்தனஞ் செய்விக்க இயலாமல் மனம் வருந்துகையில், அசரீரி, "கருவூர்த்தேவரையழை" என்றுணர்த்த, அரசன் உணர்ந்து அவரை வேண்ட அவர் பொய்கையினின்றும் எழுந்தருளி அவ்வட்டபந்தனத்தைத் திருவாய்த் தம்பலத்தால் நிலைபெறச் செய்து திருவானைக்கா முதலிய தலங்களையும் வணங்கித் திருவரங்கத்திற்கு வந்திருந்தபொழுது அங்கு வசிக்கும் ஓர் விலைமாது கருவூர்த்தேவரை வலிதிற் கைப்பற்ற, அவள் மனைக்குச் சென்றிருந்த அவர், திருவரங்கம் பெரிய கோவிலிற் கண் வளரும் ரங்கநாதரை அழைத்து அவரால் ஓர் ரத்ன ஆரம் தரப்பெற்று அதனை அப் பரத்தைக் கீந்தருளி அங்குநின்றும் புறப்பட்டுத் திருப்பராய்த்துறை, திரு ஈங்கோய்மலை, ரத்னகிரி, கடம்பன்துறை, திருமுக்கூடல் முதலிய தலங்களை வணங்கி, பலவற்புதங் கண்டருளி, இத்தலத்திற்கு வந்து இங்கெழுந்தருளி யிருக்கும்பொழுது ரங்கநாதர் மீது சாத்தியிருந்த ஆரங்காணுததைக் கோவில் விசாரணைக் கர்த்தர்கள் அவ்வாரத்தை விலைமாதினிடத்திற் கண்டு அவள் வீட்டைக் காவல் செய்திருப்புழி, அவள் வருந்தியழைப்பக் கருவூர் தேவர் அங்குச்சென்று அவளுடன் பேசிக் கொண்டிருத்தலை அதிகாரிகளுணர்ந்து அவரைப் பற்றி அவ்வாரத்தைக் குறித்து வினவ, அவர் அரங்கநாதர் தரப் பெற்றதென் றோதி அரங்கநாதரை அழைத்துச் சாக்ஷி சொல்வித்து அங்குநின்றும் இத்தலமடைந்தும், சிவயோகம் செய்திருக்குங்காலையில், இவ்வூரந்தணர்கள் 'அவர் வாமதந்திர பூசாரகர்' என்று அரசனுக்கு அறிவிப்ப, அரசன் சோதித்தபொழுது அவர் பூசையில் வாம தந்திரத்திற்குரிய மது மாமிசாதி யனுசித பண்டங்கள் ஏதுமின்றிச் சிவாகம பூசைக்குரிய உசிதமான பண்டங்கள் நிறைந்திருக்கக் கண்டு, அவர்மீது நிந்தை கூறிய அந்தணர்கள் மனையைச் சோதித்தனர். அங்கு மது மாமிசாதிகள் நிறைந்

திருக்க, அவ்வந்தணர்களை வெறுக்க, அதனை விலக்கியருளிய அக் கருவூர்த் தேவர் பசுபதீஸ்வரரோடு இரண்டறக் கலந்தருளிய தலம்.

எறிபத்தநாயனார் வைகாசி மாதம் பரணி நாளிற் றிருவவதாரஞ் செய்து அடியார்களுக்கு ஆபத்து வந்த காலத்து அவ்வாபத்து இழைப்போர்களை மழுவினால் வெட்டுகிற காரணத்தால் அப்பேர் பூண்டு சிவ பணிவிடை செய்து வருங்காலத்தில், சிவகாமி யாண்டாரென்கிற அடியவர் பசுபதீச்சுரருக்காகக் கொணர்ந்த திருப்பூங்கூடையை இந்நகரத்தரசராகிய புகழ்ச்சோழரது யானையானது பறித்து மலரைச் சிதறிச் செல்லச் சிவகாமியாண்டார் இட்ட முறைக்கு எதிர்வந்த எறிபத்தநாயனார் அவ்வானையையும் அதன்பொருட்டெதிர்த்த பாகர்களையும் கொன்றது கேட்டு வந்த புகழ்ச்சோழரோடு நண்பு பூண்டு அவ்விருவருந் தம்முள் அளவளாவியிருந்து, ஓர் மாசிமாத அத்தநாளிற் சிவபதமடைந்த தலம்.

புகழ்ச்சோழநாயனார் உறையூரில் க்ஷத்திரிய வம்சத்தில் சித்திரைமாத அசுவினிநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவாலய பூசைகளையும் அடியார் பூசைகளையும் நடாத்தி வருங்கால், கொங்குதேசத்தின் அரசிறை அறுவிடும் பொருட்டு இத் தலத்திற் கெழுந்தருளி யிங்கிருக்கும் பொழுது, இவரது யானை சிவகாமியாண்டார் கொணர்ந்த திருப்பூங்கூடையைச் சிதைத்ததற்காக எறிபத்தரால் எறிந்தமை யுணர்ந்து அங்குச் சென்று, அவ்வானையின் பிழைக்காக அதனை யூர்ந்து நடத்துந் தம்மையும் வெட்டவேண்டுமென்று வாளைக் கொடுப்ப, அவ்வாளை யேற்ற எறிபத்தர் தமது சிரத்தை யறுக்கத் தொடங்குங்காலையிற் சிவபெருமான் தடுத்தருளி 'இது அன்பைச் சோதிக்க நிகழ்ந்தது' என்று ஆகாயவாணியாற் பணித்து எரியுண்ட யானையையும், பாகரையும் எழுப்பியருளியும், சிவகாமியாண்டாரது பூங்கூடையைப் பூக்களால் நிறைவித்தருளியும் அனுக்கிரகித்த போது, நாயனார் இந்நகரத்தையே ராஜதானியாக்கி யிங்கு வதியுங்கால் திறை கொடாத அதிகனென்பவனது அரணைத் துகளாக்கச் சென்ற மந்திரிமார், அவனைப் புறங் கண்டு, அவனது படை வீரர்களைச் சயித்து, அவர்கள் தலைகளையும் நிதிக்குவியல்களையும் புகழ்ச்சோழர் முன்னே கொணர, அத் தலைகளுள் ஓர் தலையிற் புன்சடை யிருக்கக் கண்டு சிவ

ணடியார்க்குத் தீங்குசெய்ததற்காகப் பெரும் பயங்கொண்டு அத் தலையை யெடுத்து ஓர் பொற்கலத்தேந்தி, திருமுடியிலே தாங்கிக்கொண்டு அக்கினியை வளர்ப்பித்து அதனுட் புகுந்து ஆடிமாத கிருத்திகைநாளில் முத்தியடைந்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது.

---

## கரூர்.

இது, சமீபகாலத்திற்குமுன் கோயமுத்தூர் ஜில்லாவைச் சார்ந்த ஒரு தாலுக்காவாயிருந்து இப்போது திரிசிராப்பள்ளி ஜில்லாவைச் சார்ந்த ஒரு தாலுக்காவாகவும், அதன் தலைமைப் பட்டணமாகவும், 17,674 குடிகள் வசிக்கும் அமராவதி நதியின் இடது கரையில் முனிசிபல் நகரமாகவு மிருக்கின்றது. இந்தக் கரூரைப்பற்றி பொடலொமி என்னும் ஐரோப்பிய சாஸ்திரி பல நூற்றாண்டுகளுக்குமுன் பாகஎழுதியிருக்கிறார். அக்காலத்திய ரோமாபுரி நாணயங்களும் அகப்பட்டனவாம். இதில் பூர்வத்தில் சேர சோழ பாண்டியர்கள் சண்டைகள் செய்து கடைசியில் சோழர் வசமாகி இராஜதானியாகவிருந்து பிறகு கொங்குநாட்டரசர் வசமாகிவிட்டது. 1736ஆம் சந்தாசாயபு இதை முற்றுகை போட்டும் ஜெயமடையவில்லை. 1760ஆம் இங்கிலீஷ்காரர் ஒரு சிறு முற்றுகையினால் பிடித்து 8 வருஷகாலம் இது அவர்களிடமிருந்தது. பிறகு ஹைதராலியினால் பிடிக்கப்பட்டு 1769ஆம் செய்த உடன்படிக்கைப்படி அவரிடமே யிருந்தது. 1783ஆம் கர்னல் லாங் என்பவர் பிடித்துச் சிலகாலமிருந்தது. பிறகு கர்னல் மெடோஸ் என்பவர் பிடித்து ஏழுவருஷம் கழிந்தபிறகு 1792ஆம் கொடுக்கப்பட்டாலும் 1799ஆம் இங்கிலீஷ்காரர் வசமாகியது. இங்கு முன்னிருந்த பழைய கோட்டையின் ஒரு பக்கத்தில் 1783ஆம் ஏப்பிரல்மீ 2உ 102 பட்டாளத் தலைவர் லெப்டினெட் ஸ்டேன்லியையும், 19 இங்கிலீஷ்காரரையும், 30 சிப்பாய்களையும் காயப்படுத்திக் கொன்ற சங்கதி செதுக்கப்பட்டிருக்கிறது. வெஸ்லியன் மிஷன் கட்டிடத்திற்குப் பக்கத்தில் முன் திருச்சி சண்டைக்குப் போகையில் இங்கு இறந்த இங்கிலீஷ் சோல்ஜர்களின் சமாதிகள் இருக்கின்றன. இங்கிருக்கும் பசுபதீஸ்வரர் கோயில் புராதனமும் பெரிதுமானது. இதற்குள் இருக்கும்படியான லிங்கம் 5 அடிகள் உயரமுள்ளது. ஆதியில் இந்த லிங்கம் பூமியில் புதைந்துகிடந்ததாக

வும், ஒரு பசு பிரதிதினமும் போய்த் தன் பாலையூட்டிப் பூஜித்ததாகவும், ஆகவே இதற்குப் பசுபதிஸ்வாமி என்று புராணம் கூறுகின்றது. சித்திரை வைகாசி மாதங்களில் விசேஷ உற்சவங்கள் நடைபெற்று வருகின்றன. இடையில் இக்கோயில் கிலமாகி, பெரும்பாகம் இடிந்து விழுந்திருந்ததை இப்போது நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் ஏராளமான பணம் செலவிட்டுச் செப்பனிட்டுக் கும்பாபிஷேகம் செய்தார்கள். கரூருக்கு $1\frac{1}{2}$ மைல் தூரத்தில் ஒரு சிறு மலையைக் குடைந்து உண்டாக்கிய தாந்தோணி பெருமாள்கோயில் இருக்கிறது. இது பெரிய திருப்பதி மலைக்கு இரண்டாந்தரமானதெனக் கொண்டு அநேகர்வந்து வணங்குவதோடு, சிலர் விவாவங்களையும் இங்கே செய்துகொள்ளுகிறார்கள். இந் நகரம் பார்வைக் கழகாயும் அதிக வர்த்தகம் நடக்கப்பட்டதாயு மிருக்கிறது. மிளகாயும் புஞ்சை தானியங்களும் ஏராளமாக ஏற்றுமதியாகின்றன. இங்கே சப் கலெக்டர்-தாசில்-முனிசீப்-முதலியவர்களின் கச்சேரிகள் இருப்பதன்றியில், 1870ஹு Rev. ஹென்றி லிட்டில்பாதிரியாரால் பஞ்சகாலத்தில் அநேக பிள்ளைகளைச் சேர்த்து அவர்களுக்குப் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கப்பட்டன. தச்சு-நெசவு - பிரம்பு முதலான கைத்தொழில் சாலைகள் ஸ்தாபித்து இப்போது 100 பேருக் கதிகமான வேலைக்காரர்கள் வேலை செய்து வருகிறார்கள். சுதேசிகளுக்கு உபயோகமாக வாசகசாலையு மிருக்கிறது. இப்படிக்கெல்லாம் மிருந்தும் இவ்விடம் கள்ளர் பயமும், அடாவழக்குப் பயமும் அதிகமென்று சொல்லுகிறார்கள். இது சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 296 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இது ஈரோடு ஜங்ஷனைச் சார்ந்தது.

---

## திருப்பாண்டிக் கொடுமுடி.

(கொடுமுடி நாதேச்சுரர், பண்மொழியம்மை, நொய்ய நதி, காவிரிநதி, சங்கம தீர்த்தம், வன்னிவிருக்ஷம்.)

மகாவிஷ்ணு, பிரமன், அகஸ்தியரிஷி முதலியோர் பூசித்த தலம். திருக்கயிலாயக் கொடுமுடிகளி லொன்றாகிய தலம். விஷ்ணு புஜங்க சயனராய் மேற்குமுகமா யிருந்தும், பிரமன் வன்னிவிருக்ஷத்தின் கீழிருந்தும், சிவபெருமானைப் பூசிக்குந் தலம். அகஸ்திய மகாரிஷி, பொதிகை வரைக்குக் கொண்டு செல்லுங் 'காவிரி நதியைக் காக உருவமாகச்

சென்று கவிழ்த்த விநாயக்கடவுளைப் பூசித்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது.

---

## கொடுமுடி.

இந்த ஈரோடு ரயில்வே ஜங்ஷன் வழியிலிருக்கும் கொடுமுடி, கோயமுத்தூர் ஜில்லா ஈரோடு தாலுக்காவைச் சார்ந்த 430 அடிகள் சமுத்திர மட்டத்திற்கு மேல் உயர்ந்த 3119 குடிகளுள்ள ஒரு விசேஷ சிவஸ்தலம். நெல், ராகி, வெல்லம் இவை ஏராளமாக ஏற்றுமதியாகின்றன. காவிரி நதிக்கரையோரத்தில் செதுக்கிய கற்களால் சிங்காரமாகக் கட்டப்பட்ட சிவஸ்தல மிருக்கிறது. இங்கே சித்திரை மாதத்தில் ரதோற்சவம் சிறப்பாய் நடக்கிறது. இது, சென்னைத் தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து $312\frac{3}{4}$ மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு சார்ஜ் ரூபாய் 3-8-0. கொடுக்கவேண்டும்.

---

## ஊஞ்சலூர்.

இந்த ஈரோடு ஜங்ஷன் ரோட்டிலேயே ஊஞ்சலூர் இருக்கிறது. இது கோயமுத்தூர் ஜில்லா ஈரோட்டு தாலுக்காவைச் சார்ந்த 5,494 குடிகளுள்ள இடம். இதற்கு மேற்கே 3 மைல்கள் தூரத்திலுள்ள கொடனல்லி என்னும் கிராமத்தில் கோட்டைமாரி யம்மனுடைய கோயிலிருக்கிறது. இதில் பிரதி வியாழக்கிழமைதோறும் ஏராளமான கோழிகளைப் பலியிடுகிறார்கள். மாசி மாதத்தில் நடக் உற்சவத்தில் ஆடுகள், எருமைகள், கன்றுகள், கோழிகள் முதலானவைகளைப் பலியிடுகிறார்கள். இவ்வம்மன் குருடர்களுக்குப் பார்வை யளிப்பதாகச் சொல்லுகிறார்கள். இங்கே சத்திரம், முசாபுரி பங்களாக்க ளுண்டு. இது சென்னைத் தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து $316\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது. இதற்கு 3-ம் வகுப்பு சார்ஜ் ரூபாய் 3 கொடுக்கவேண்டும்.

---

## திருத்தஞ்சைநகர் (தஞ்சாவூர்).

(பிரகதேச்சுரர், உமாமகேஸ்வரியம்மை, கிருபாதீர்த்தம், காவிரிநதி தீர்த்தம்.)

தேவேந்திரன், அகஸ்தியரிஷி, சோழராசன் முதலிய அநேக பக்தர்களுக்கு நல்வரங் கொடுத்தருளிய தலம். கருவூர்த்தேவராற் திருவிசைப்பாப்பாடி மருந்து சாத்தி அஷ்டபந்தனஞ் செய்தருளிய தலம். செருத்துணை நாயனார் திருவவதாரமான தலம்.

இதற்குத் தஞ்சாவூர் என்னும் பெயர் வந்ததற்குக் காரணம் பின் வருகிறபடி ஒரு புராணம் சொல்லுகின்றது. அதாவது தஞ்சன் என்னும் பெயரால் ஒரு ராக்ஷசன் பூர்வத்தில் இந்நாட்டிலும் இதன் வெளிப்புறங்களிலும் கொள்ளையடித்துக் குடிகளை வருத்தி வந்ததாகவும், அவ்வருத்தத்தைச் சகிக்க முடியாமல் குடிகள் மஹாவிஷ்ணுவை நாடிப் பிரார்த்திக்க, அந்தவிஷ்ணுவானவர் சங்கு சக்கராதி ஆயுதங்களால் அந்த ராக்ஷதனைக் கொல்ல, அவன் விஷ்ணுவை நோக்கி, "ஓ சுவாமி! உன்னால் கொல்லப்பட்ட எனக்கு மோக்ஷம் கிடைக்குமென்பது திண்ணம் ஆயினும், நான் கொல்லப்பட்ட இந்த இடத்திற்கு என் பெயர் என்றால் தஞ்சன்+ஊர் தஞ்சாவூர் என்று வழங்கப்பட வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, மஹாவிஷ்ணுவும் மனமிரங்கி அவ்வரத்தைக் கொடுக்க, அன்றுமுதல் இவ்விடத்திற்குத், தஞ்சாவூர் என்று பெயர்வழங்கி வருகின்றதாம்.

பிறகு இத் தஞ்சைநாடு சோழராஜர்களுடையவசமாகி ஆதித்தன் இராஜேந்திரன் முதலான சோழர்கள் இதில் ஆண்டுவந்தபோது நாடு நகரங்களை வசமாக்கிக் கூட கோபுரம்கோயில் குளங்களை ஏற்படுத்தி, அதிகபராக்கிரமசாலிகளாயும் பக்திமான்களாயும் தர்மவான்களாயு மிருந்து ஆண்டுவந்தார்கள். அவர்கள் சந்ததியாகிய வீரசேகர சோழன் துராக்கிரமமாகப் பாண்டியன்மேல் படையெடுத்துப் போய் வருத்த, அக் காலத்தில் சேர சோழ பாண்டியர்களுக்குச் சக்கரவர்த்திகளா யிருந்தவிஜயநகர ராயுலு சமஸ்தானத்தில் பாண்டியநாட்டு சந்திரசேகர பாண்டியன்போய் முறையிட, அவர்கள் அந்த வீரசேகர சோழனைப் பட்டத்தைவிட்டு நீக்கி இங்கு நாயுடு சமஸ்தானத்தார் இத் தஞ்சையிலும் அடுத்த நாடுகளிலும் ஏராளமான கோயில் கோபுரங்களைக் கட்டுவித்து ஆண்டுவந்தார்க ளாகையால் அவர்கள் சரித்திரங்களை இதனடியில் அறிவிக்கின்றோம்.

---

## தஞ்சையில் நாயடுகோரு முதல் ஸமஸ்தானம்.

### சேவப்ப நாயடுகாரு.

(கி. பி. 1549௵ முதல் 1572௵ வரையில்.)

தஞ்சையில் நாயடுகாரு ஸமஸ்தானத்தை முதல்முதல் ஸ்தாபித்தவர் சேவப்பநாயடு காரு. இவருடைய மந்திரியின் மூத்த குமாரராகிய இராஜசூடாமணி தீக்ஷதரவர்கள் இயற்றிய ருக்மணிபரிணயம் என்னும் காவியத்தின் முதல் சருக்கம், 34-வது சுலோகத்தினல், இந்த சேவப்ப நாயடு காரின் தந்தை திம்மப்ப நாயடுகாரென்றும், தாயார் வய்யம்மாம்பாள் என்றும் தெரியவருகிறது. சந்திரவமிச க்ஷத்திரிய குலதிலகரான ஸ்ரீ அச்சுத தேவராயனுடைய மனைவியார் திருமலைஆம்பாள் அவர்களுடைய இளைய சகோதரி மூர்த்தியாம்பாள் என்னும் மங்கையை மணம் புரிந்ததனுல், தஞ்சாவூரை சீதனமாகப் பெற்றதாய்த் தஞ்சாவூரிவாரு இராஜசரித்திரம் என்னும் கிரந்தத்தினுலும், விஜயவிலாசம் என்னும் கிரந்தத்தினுலும், வேறு அநேக சாசனங்களினுலும் ஸ்பஷ்டமாகிறது.

இந்த சேவப்ப நாயடுகாரு முதலில் விஜயநகரத்தை அடுத்த நாகலாபூரில் இருந்த தண்டுக்குத் தளகர்த்தராக இருந்தவர். இவர் மஹா வீரதீரரும், மதியூகியுமா யிருந்ததோடு, சத்தியம்-சாந்தம்-சிவபக்தி-விஷ்ணுபக்தி-தருமம்-தயை முதலான குணங்களிற் சிறந்து விளங்கியபடியால், அப்போது தஞ்சையிலும் அதை அடுத்த விடங்களிலும் சோழர்களுடைய சந்ததிகள் என்று சிலர் எழுந்து அடிக்கடி சண்டை சச்சரவுகளைச் செய்து குடிகளை வருத்தி வந்தவர்களை அடக்கியாளவும், கல்வி - நாகரீகம் - தெய்வபக்தி முதலான சீர்திருத்தங்களைப் பல்லாண்டாகப் பெற்றிருந்த சோழநாட்டாரைச் சாந்தமாகவும், சுகமாகவும் வாழும்படி செய்யச் சக்தியுள்ளவர் இந்தச் சேவப்ப நாயடுகாரே எனக் கண்டு, விஜயநகரத்தார் சோழநாட்டையே சீதனமாகக் கொடுத்தனுப்பினுர்கள்போலும். சேவப்ப நாயடு காரு தஞ்சை ஸமஸ்தானத்தைக் கைக்கொண்ட உடனே, குடிகளுக்கு இன்றியமையா அநேக சத்சாதனங்களை ஸ்தாபிக்க முயன்ருர். முதலில் தஞ்சையிலும் அதைச் சார்ந்த இடங்களிலும் பரக்கவிருந்த சைவ வைணவாதி க்ஷேத்தி

ரங்களில் காலக் கிரமமாகப் பூஜைகள் முதலான நித்திய நைமித்திகாதி கிரியைகளைக் கிரமமாகச் செய்து வரும்படி கட்டளை யிட்டார். தஞ்சாவூரி ராஜசரித்திரத்திற் கண்டபடி அநேக கோயில் கோபுர ஆவிகூப தடாகங்களைச்செப்பனிடச் செய்தார். தஞ்சைக் கோட்டைக்குள் சகல ஜனங்களும் சுத்தமான தண்ணீரைச் சதா உபயோகிக்கும்படியாகச் சிவ கங்கைக் குளத்துக்குப் பாய்ச்சல் ஏரியாகிய சேவப்பனேரி அல்லது சேப்பன்குளம் ஒன்றை வெட்டி வைத்ததில், அது இப்போதும் இவர் பெயரைப் பலரும் புகழும்படி குடிகளுக்கு உபயோகமாகிப் பிரகாசிக்கின்றது. தஞ்சைக் கோயிலுக்கு அடுத்திருக்கும் பெரிய கோட்டையையும், இந்த சேவப்ப நாயடுகாரால் கி. பி. பதினாறும் நூற்றாண்டில் கட்டுவித்ததாக மிஸ்டர் சுவேல் துரை பதிப்பித்த அண்டிகுட்டிபட்டி புத்தகம் 277-வது பக்கத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

ஸாஹித்தியரத்னாகரம், 3-வது சர்க்கம், 6-வது சுலோகத்தின்படி திருவண்ணாமலையில் கோயிலுக்கு வெளியில் அகன்று ஆழ்ந்து அழகாக இருக்கும் குளமும், அந்தக் கோயிலின் முன்னிருக்கும் சிறந்த கோபுரமும் இந்த நாயடுகாருடைய கைங்கரியங்களாம். இவர் காலத்தில் அதாவது சகாப்தம் 1494 வருஷத்துக்குச் சரியான கி. பி. 1572 வருஷம் திருவண்ணாமலையில் சிவநேசன், லோகநாதன் என்கிற இரண்டு சகோதரர்கள் கோபுரம் ஒன்று கட்டியதாக அந்தத் திருவண்ணாமலைக் கோவிலில் சிலாசாசனம் எழுதப்பட்டிருக்கிறது.

இந்தச் சேவப்ப நாயடுகாரு செய்த தருமங்கள் கேவலம் இந்து மதஸ்தர்களுக்கு மாத்திரமல்ல; மகமதீயர் முதலான ஏனைய மதஸ்தர்களுக்கும் செய்ததாக இப்போது தஞ்சாவூர் புகைவண்டி ஸ்டேஷனுக்கு அடுத்த சமசருப் பள்ளிவாசலில் ஒரு கல் கம்பத்தில் சகாப்தம் 1472-க்குச் சரியான கி. பி. 1549 வருஷம் செதுக்கப்பட்டிருக்கும் சிலாசாசனத்தினால் ஸ்பஷ்டமாகிறது.

அந்தச் சாசனத்தின் நகல் இது.

"சாதாரணஸு மார்கழிமீ ௧௪௨ தஞ்சாவூரிலிருக்கும் சமசருப் பள்ளிவாசல் பக்கிரிகளுக்கு நிலம் விட வேண்டுமென்று சேவப்ப நாயக்கர் நாஞ்சிக் கோட்டையிலிருக்

கும் எண்ணேயக்காரனே அழைப்பிக்க, உங்கள் எல்லேயிலே எழுவேலி நிலம் விடு என்று சொன்னபடியினலே நாயக்கர் அய்யன் அவர்கள் உத்தாரப்படிக்கு சம்மதித்து**** மேற்கு இந்த நாங்கெல்லேக் குள்பட்ட நிலத்தை சந்திராதித்த வரைக்கும் ஆண்டு அனுபவிச்சுக்கொள்ளக் கடவீராகவும். இந்தப்படிக்கு நாயக்கர் அய்யன் அவர்களும், மண்ணேயார்காரும் சம்மதித்து விட்டது. இதுக்கு யாதாமொருவர் தத்த** விக்கினம் பண்ணினர்கள் ஆனல் காசி ராமேசுரத்தில் காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போவார்கள். துலுக்கர்கள் யாதாமொருவர் விக்கினம் பண்ணினர்களானல் மக்காவிலே பெற்ற தாயை ஜனசெய்த பாவத்திலே போவார்கள். இதுக்கு வெட்டியான் **** " என்பதேயாம்.

இப்படிச் சமரசமாகத் தருமராஜ்ஜிய பரிபாலனம் செய்துவந்த சேவப்ப நாயடுகாரு ஸாஹித்திய ரத்னகரம் 3-ம் சர்க்கம், 9-17 சுலோகங்களிற் சொல்லியிருக்கிறபடி தமது ஜீவகாலத்திலேயே தமது புத்திர சிகாமணியாகிய அச்சுதப்ப நாயடுகாருக்குத் தஞ்சையில் பட்டம் சூட்டிய பிறகு பரமபதத்தை அலங்கரித்தார்.

---

## அச்சுதப்ப நாயடுகாரு ஸமஸ்தானம்.

(கி. பி. 1577 ஹு முதல் 1614 ஹு வரையில்.)

அச்சுதப்ப நாயடுகாரு தஞ்சையில் சிங்காசன மேறினர். இவருக்கு ஸாஹித்திய ரத்னகரம் 3-ம் சர்க்கம், 38-வது சுலோகத்தின்படி சின்னசேவப்ப, அச்சுதப்ப நாயடுகாரு என்னும் மற்றொரு பெயர் வழங்கிவந்தாலும், இவரது தந்தைக்குப் பேருபகாரியாக இருந்து, தஞ்சை ஸமஸ்தானத்தையே சீதனமாகக் கொடுத்த விஜயநகர அச்சுததேவராயனுடைய பெயர் சதா ஞாபகத்திலிருக்கும்படி கருதியே இவருக்கு அச்சுதப்ப நாயடுகாரு என்கிற பெயரிடப்பட்டதுபோலும். இவருடைய ஆளுகையைப்பற்றித் தஞ்சாவூரிவாரு சரித்திரமென்னும் ஆந்திர கிரந்தத்தில் விவரமாகத் தெரிவிக்காவிடினும், சாஹித்தியரத்னகரம், ருக்மிணிபரிணயம், டிஸ்டிரிக்ட்டு மானுயல் சரித்திர முதலானவைகளில் ஒருவாறு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இவர் கல்வியைக் கற்றுத் தெளிந்தவராக இருந்த

தோடு, தம்மைப் போலவே உலகோர் கற்றுய்யும்படிக் கல்வியை விருத்தி செய்தார். ஸ்மிருதிகளிற் சொல்லியபடி தக்கோருக்குத் தானதருமங்களைச் செய்துவந்தார். ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்கு மானியமாக அநேக கிராமங்களை விட்டதன்றியில், ஸ்ரீரங்கநாதருக்கு இரத்னபீடம், இரத்னகிரீடம், பற்பல ரத்னபதக்கங்கள், கால்சலங்கை முதலான ஆபரணங்களைச் செய்து சமர்ப்பித்தும், காவிரியாற்றின் கல் அணையைப் பழுதுபார்த்துப் புதுப்பித்தும்; மாயவரம், மத்தியார்ச்சுனம் (திருவிடைமருதூர்), கும்பகோணம், திருவலஞ்சுழி, விருத்தாசலம், திருவையாறு, இராமசேது முதலிய விடங்களில் படித்துறைகளையும், புஷ்யமண்டபங்களையும் கட்டுவித்தார். ஸாஹித்திய ரத்னுகரகாவியம், 3-ம் சர்க்கம், 46-47-48-50-வது சுலோகங்களின்படி தமதுபெயரால் அநேக புது அக்ரஹாரங்களைக் கட்டுவித்து, அவைகளில் அநேக விடங்களிலுள்ள வேத நிதிகளான விப்ரர்களைத் தருவித்துக் குடியேற்றினர். ருக்மணிபரிணயகாவியம், 1-ம் சர்க்கம், 43-45-சுலோகங்களின்படி சிதம்பரம், திருப்பதி, காளஹஸ்தி முதலான க்ஷேத்திரங்களுக்கு அநேக திருப்பணிகளைச் செய்வித்திருப்பதால், இவர் காலத்தில் இவரது அரசாக்ஷி திரிசிராப்பள்ளிமுதல், கீழ்சமுத்திரக்கரைவரையிலும், இராமேச்சுரமுதல் விருத்தாசலம் வரையிலும் எட்டி இருந்ததாகத் தோன்றுகிறது.

இவருடைய பெயரும், ஸமஸ்தானமும் இவ்வளவு மஹோன்னத ஸ்திதியை அடைவதற்குக் காரணம் இவருடைய மதியூகி மந்திரியே என்று தோன்றுகிறது. அவர் ஸாஹித்திய ரத்னுகரம் 10-வது சர்க்கம் 1-2-சுலோகங்களின்படி கர்னுடக பிராம்மணரான கோவிந்ததீக்ஷதர் அந்த மந்திரியின் உத்திரவின்படி, கி-பி 1605ஸு வடமொழியிலிருந்த திருவையாற்றுப் புராணத்தைத் தமிழிற் மொழிபெயர்க்கப்பெற்றதாக அந்தப் புராணத்தின் 18-வது செய்யுளில் அடியிற் கண்டபடி பாடப்பெற்றிருக்கிறது. அதாவது:—

"மலிபுனல்சூழ் சோணுடு தஞ்சையிற்காத்திடு
மரசர்மதி யமைச்ச
ரெலிமறைதேர் கோவிந்த தீட்சித ராயன்திரு
வாக்குடைமை யாலே

கலியுகத்துச் சகருண்டு மூவைந்நூற் றிருபதின்மேற் காணு மேழாய்ப்
பொலிவருடத் தையாற்றுப் புராணவட மொழி புகலலுற்றேன்.'' [தமிழாற்

நிற்க, பழைய சோழராஜ வமிசத்தார் அங்குமிங்கும் சண்டை சச்சரவுகளைச் செய்வதைக் கண்டித்தும் (ஸாஹித்தியரத்னகரம் 6-வது சர்க்கம், 8-வது சுலோகத்தின்படி) நாகப்பட்டணத்திற் கடல்மார்க்கமாக வந்திறங்கின மகமதியர்களை முறியடித்தோட்டினதாகவும் தெரியவருகிறது.

இவர் மனைவியின் பெயர் மூர்த்தி ஆம்பாள் அம்மாள். இரத்திஞகரம், 3-ம் சர்க்கம், 20-ம் சுலோகத்தின்படி, ஒரு கிராமத்திற்கு மூர்த்தமாம்பாபுர மென்று இன்னும் பெயர் வழங்கிவருகிறது. அன்றியும், தஞ்சை பிரஹதீசுவரஸ்வாமிகோயில் இரண்டாவது கோபுரத்துத் தென் பக்கத்துப் பிராகாரத்தில், இவர் காலத்தில் அதாவது சகாப்தம் 1499-க்குச் சரியான கி. பி. 1577ஸு தட்டாருக்கு விட்ட சர்வமானிய சாசனம் இப்போது மிருக்கிறது. அதன் நகல் அடியில் வருமாறு:—

''ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப்தம் 1499 இதன்மேற் செல்லா நின்ற வெகுதானிய வருஷம் ஆனிமீ 12வ சோமவாரமும் பிரதம துவாதசியும் பெற்ற புண்ணிய காலத்து, சேவப்ப நாய்க்கர் அய்யன் தஞ்சாவூர் தட்டாருக்குக் கொடுத்த தரும சாசன பட்டயம் கந்தமேறுனு நாய்க்கர் குருநாதன் சிங்கபள்ளி நாகபத்த சேஷாஸ்திரியும் சொல்ல தங்களிர் கிழிப்பித்தபடியாலே சந்திராதித்தவரையும் சர்வ மானியமாக நடக்கவும். இந்தத் தருமத்திற்கு அகிதம் பண்ணினவர் கங்கைக் கரையிலே காராம்பசுவைக் கொன்ற தோஷத்திலே போகக்கடவாராகவும். இந்தத் தருமத்தை அகிதம் பண்ணினவன் ஆயிரம் லிங்கத்தைப் பிடுங்கின தோஷத்திலே போகக்கடவன்.''

இதே மாதிரியாகத் திருவையாறு புஷ்யமண்டபத்தில் கி. பி. 1614-5 ஸு சிலாசாசனம் வரையப்பட்டிருக்கிறது. இது நிற்க, கி. பி. 1614ஸு கர்னுடகாதிபதி திருவெங்கடதேவராயனுக்குச் சந்தானமில்லாமையால், அவன் சகோதரன் மகன் பட்டத்தை அடைய, அதை வெங்கடதேவருடைய மனைவியும் அவள் தந்தையும், 20000 பேர் சேவக

ருக்குத் தலைவராக இருந்த ருக்கராஜனும் தடுத்துப் புதிய மன்னனைக் கொன்றுவிட, அவன் மகனான பாலியனை 800 படைச்சேவகருக்குத் தலைவரான யாசபூபதி அல்லது எச்சம நாயடு தன் ஆதரவில் வைத்துப் பாதுகாத்தும், ஜக்கனோடு சண்டைசெய்து தஞ்சை அச்சுதப்ப நாயடுகாருடைய உதவியை நாடியதை, ஜக்கராஜன் பார்த்துப் பாண்டியனுடைய சகாயத்தைத் தேடினான். இதை யறிந்த அச்சுதநாயடுகாரு தமது ஜீவியகாலத்திலேயே தமது குமாரரான இரகுநாத நாயடுகாருக்குப் பட்டாபிஷேகம்செய்து ஸமஸ்தானத்தைக் கொடுத்துவிட்டு, தாம் ஸ்ரீரங்கத்துக்குப் போய் ஸாஹித்திய ரத்னாகரம், 12-ம் சர்க்கம்-94-ம் சுலோகத்தின்படி உள்ளநாள் உள்ளவரையில் வாசம் செய்துகொண்டும், ஸ்ரீரங்கநாதரைச் சதா தரிசித்துக்கொண்டும் காலம் கழித்துவிட்டார்.

## இரகுநாத நாயடுகாரு ஸமஸ்தானம்.

(கி-பி 1614ஆ முதல் 1630ஆ வரையில்.)

அச்சுதப்ப நாயடுகாருக்குப் பிறகு தஞ்சை ஸமஸ்தானத்துக்கு அதிபதியாக முடிசூட்டப்பெற்ற இரகுநாத நாயடுகாரு இயற்கையில் கல்விப் பிரியர். இவருக்கு இந்து தரும சாஸ்திர முறைப்படிக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கப் பெற்றது. இவரை ஒரு தட்டிலும் பசும்பொன்னை ஒரு தட்டிலும்வைத்து நிறுத்து அப் பொன்னை யெல்லாம் பிராம்மணர்களுக்குப் பங்கிட்டுக்கொடுத்ததன்றியில் பொன்னாலமைத்த பிரம்மாண்டம் பொன்குதிரை, பொன்தேர், பொன்யானை, காமதேனு, கற்பகவிருக்ஷம் முதலிய தானங்களும், ஆயிரம் கோதானமும் செய்யப்பெற்றதாக ஸாஹித்தியரத்னாகரம் 12-ம் சர்க்கம், 56 முதல் 82-வது சுலோகங்களிற் சொல்லப்பெற்றிருக்கின்றது. இவ்வளவும் இவரது தந்தைக்காலத்தில் மந்திரியாக இருந்த கோவிந்த தீக்ஷதரே இவர் காலத்திலும் இருந்து செய்வித்தார்.

இவர் கும்பகோணம், விஜயராகவபுரம்,* ஸ்ரீரங்கம், இராமசேது முதலான இடங்களில் இராமஸ்வாமி முதலான கோயில்களைக் கட்டிவைத்ததுடன், இவருடைய அன்ன சத்திரங்களில் தினம் ஒன்றுக்கு 24,000 ஜனங்களுக்குச் சாப்பாடிட்டு வந்தார். ஸாஹித்தியரத்னாகரம், 13-ம் சர்க்கம் 74-79-வது சுலோகங்களின்படி ஜக்கராஜன் பாண்

டியனோடு சேர்ந்து தூண்டிவிட, அப்பாண்டியன் காவிரி யாற்றின் கல்லணையை உடைத்துவிட, உடனே இரகுநாத நாயடுகாரு அப்பாண்டியன்மீது படையெடுத்துச் சென்று, அவனை முற்றிலும் முறியடித்தோட்ட, அப் பாண்டியன் பயந்து தனது குமாரத்தியை இரகுநாதநாயடுகாருக்கு விவாஹம் செய்து கொடுத்துச் சமாதானம் செய்து கொண்டான். பிறகு முன் இறந்துபோன கர்னாடக ராஜனுடைய குமாரனை நாயடுகாரு இரகுநாத விலாசம் 4-ம் அங்கத்தின்படி, கர்னாடக ஸமஸ்தானத்தின் சிங்காசன மேற்றி உதவிசெய்தார்.

இந்த இரகுநாத நாயடுகாரு இயற்கையில் கல்விப்பிரிய ரென்று முன்னமே சொல்லியிருக்கிறோமல்லவா? இவர் சரித்திரத்தைப்பற்றித் தஞ்சாவூர் இராஜாக்கள் என்னும் தெலுங்கு கிரந்தத்தைப் பரிக்ஷிக்கையில், இவர் மஹாவித்வ சிகாமணி என்றும், கும்பகோணம் முதலானவிடங்களில் இராமஸ்வாமி கோயில் முதலானவைகளைக் கட்டுவித்து அநேக தருமங்களைச் செய்துவந்தாரென்றுமாத்திரம் சொல்லப்பெற்றிருக்கின்றனவேயன்றி, இவர் காலத்திற் சிறந்து விளங்கிய வித்துவான்களைப்பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை. ஆயினும், அக் குறைவை இப்போது (கி-பி-1903வரு) தஞ்சை நாயக்க ராஜவமிச சரித்திரத்தைப் பதிப்பித்த ஸ்ரீ குப்புசாமிசாஸ்திரிகள் நீக்கினார். அதாவது, அவர் இரகுநாதநாயடுகாருடைய ஸமஸ்தானத்தை அலங்கரித்த சில விசேஷ வித்துவான்களுடைய சரித்திர சங்கதிகளை வெகு பிரயாசைப்பட்டுச் சம்பாதித்துப் பதிப்பித்திருக்கிறார். அச் சிறு நூலிற்கண்ட வித்வான்களாவன:—

(1) கோவிந்த தீக்ஷிதர்: இவர் ஹரிவமிச சார சரித்திரம் என்ற பெயரால் 23 சர்க்கங்களுடைய காவியத்தை இயற்ற, அதற்கு அப்பய்ய தீக்ஷிதர் "ஹரிவமிசஸாரசரித வியாக்கியானம்" எழுதினார். ஸங்கீதவிஷயமாக "ஸங்கீத சுதா நிதி" என்றொரு கிரந்தத்தையும் இயற்றியதன்றியில், இரகுநாதநாயடுகாருக்கும் அவர் தந்தைக்கும் மஹாமந்திரி யாகவு மிருந்தார்.

(2) எக்ஞ நாராயண தீக்ஷிதர்: இவர் மேற்சொன்ன கோவிந்த தீக்ஷிதருடைய ஜேஷ்டகுமாரரும் ஸாஹித்தியரத்னகர காவியம், இரகுநாத பூபவிஜயம், இரகுநாத விலாச நாடகம் முதலான கிரந்தங்களை இயற்றினவர்.

(3) வேங்கடேசுவரமஹீதீக்ஷதர்: இவர் மேலேசொன்ன எக்ஞநாராயண தீக்ஷிதருடைய சகோதரர். இவர் வார்த்திகாபரணம், சங்கீத விஷயமான சதுர்த்தண்டி பிரகாசிகை முதலான கிரந்தங்களை இயற்றியதோடு (கி-பி. 1638-ல்) கங்காதரண காவியம் 1-சர்க்கம், 51-வது சுலோகத்தின்படி நீலகண்ட விஜய சம்புகாவியம் செய்த நீலகண்டதீக்ஷிதருக்கு ஆசாரியராய் இருந்ததாகத் தோற்றுகின்றார்.

(4) இராஜசூடாமணிதீக்ஷதர்: இவர் புகழ்பெற்ற பவஸ்வாமி பட்டருக்கு 6-வது தலைமுறையார். வட ஆற்காடு ஜில்லா, வேலூர்தாலுக்கா, சத்தியமங்கல மென்னும் கிராமத்தில் ஸ்ரீநிவாச தீக்ஷிதருக்குப் பிறந்தவர். ஒருநாள் இவர் இரகுநாதநாயடு சமுகத்தில் வானத்தின் காக்ஷியைப்பற்றிப் பிரபலமாக வர்ணிக்க, நாயடுகாரு வியந்து இரத்தினகேட தீக்ஷிதர் என்று பட்டம் சூட்டினார். இந்த தீக்ஷிதர் பாலியத்தில் வடக்கே நவத்வீபம்போய்க் கல்விகற்றுபட்டாசாரியர் என்ற பட்டம் பெற்றதாக ருக்மணி பரிணயம், 4-வது சுலோகத்தினால் தெரியவருகிறது. இவர், ருக்மணிபரிணயம், கம்ஸதுவம்ஸனம், காந்திமத்தியுபயமம், ரத்னகேட விஜயம், சித்திரமஞ்சரி, சிங்காரஸர்வஸவம், காவிய தர்ப்பணம், அலங்காரசூடாமணி, ஸாஹித்திய ஸமாராஜியம், தந்திர சிகாமணி, ஸங்கர்ஷ முக்தாவளி, நியாய சூடாமணி தர்ப்பணம் முதலான காவிய - நாடக - பாண - அலங்கார சாஸ்திர கிரந்தங்க ளியற்றியவராகத் தெரியவரினும், இவருடைய தந்தை கேட்ட ஸ்ரீநிவாசதீக்ஷிதர் பாவனு புருஷோத்தம முதலான 18 நாடகங்களையும், சதகண்ட விஜயம் முதலான 60 காவியங்களையும், ஸாஹித்திய சஞ்சீவினி, பாவோத்பேதம், ரஸாஸ்ரவம் முதலான அலங்கார கிரந்தங்களையும்; வேதாந்த ரத்னவளி, வாததாராளாவளி, மணிதருப்பணம், அத்வைத கவுஸ்தபம், விதிநிர்ணயம், ஸர்வஸமய ஸர்வஸ்வம், ஸ்மிருதிரத்ன பிரதீபம், ஸஷ்டபங்கம் முதலான சாஸ்திர கிரந்தங்களையும்; பரிசுத்தி, தத்துவாவபோதம் முதலான வியாக்கியான கிரந்தங்களையும் இயற்றியவர். பாவனு புருஷோத்தம நாடகத்தின்படி, வெங்களாம்பாபுரம்-போதசமுத்திரம் முதலான அக்கிரஹாரங்களையும், செஞ்சிக்கோட்டையில் வெங்கடேசப் பெருமாள்கோயில் கோபுரங்களையுங் கட்டிப் புகழ்பெற்ற செஞ்

சிக்கோட்டைக் கரசரான சூரப்ப நாயடுகாரினல் ஆதரிக்கப்பட்டவராகத் தெரியவருகிறது.

(5) குமாரதாதாசாரியர்: இவர், சடமர்சன கோத்திரஸ்தரும், தாதாசாரியருடைய வமிசத்தைச் சாரந்த ஸ்ரீநிவாசாசாரியருடைய பௌத்திரரும், வெங்கடேசா சாரியருடைய புத்திரருமாவர். இவர் பாரிஜாதாபஹரணம என்னும் நாடகத்தை இயற்றினர். அந்நாடகத்தில் தஞ்சையின் பெருமையையும், இரகுநாத நாயடுகாரின் பிரதாபத்தையும் பற்றிப் புகழ்ந்து அவர் காலத்திலேயே இயற்றினுர்.

(6) பாஸ்கரதீக்ஷதர்: இவர் கோனேரி ராஜபுரத்திற் பிறந்தவர். இவர், ஆத்மபரிக்ஷை அல்லது பாஷ்கரதீக்ஷிதீயம், தப்தமுத்திரா வித்ராவணம் முதலான கிரந்தங்களை இயற்றி அவைகளில் ஆத்மபரிக்ஷயின் துவக்கத்தில் இரகுநாத நாயடுகாரால் தமக்குக் குறைவற்ற செல்வம் கொடுக்கப் பெற்றதாகச் சொல்லியிருக்கிறுர். இந்த வித்வானுடைய தந்தை அத்வைததீபிகை, பேத திக்காரம் முதலான கிரந்தங்களை இயற்றிய நிருஸிம்மா சிகிமி ஸ்வாமிகளுடைய சிஷரான உமாமகேசுவராசாரியர்.

(7) இவர்களன்றியில், இந்தத் தஞ்சை ராஜாதிபதியாகிய இரகுநாதநாயடுகாரும் ஒரு சிறந்த வித்வானுக இருந்தாரென்பதற்கு இவரியற்றிய பாரிஜாதபஹரணம், நளாப்பியுதயம், அச்சுதாப்பியுதயம், இராமாயணஸங்கிரஹம், மஹாபாரதஸங்கிரஹம் முதலான கிரந்தங்களே சாக்ஷியாக இருக்கின்றன. சந்திரவமிச க்ஷத்திரிய ஆந்திரர்களுக்குள் விஜயநகரம் ஸ்ரீகிருஷ்ண தேவராயனுக்குப் பிறகு கல்வியை விருத்தியாக்கியவர் இவரேயாம்.

இராஜசூடாமணிதீக்ஷதர் இயற்றிய ஆநந்தராகவ நாடகத்தின் கடைசி சுலோகத்தின்படி இந்த இரகுநாத நாயடுகாருக்கு அச்சுதப்பநாயடுகாரு, இராமபத்திர நாயடுகாரு என்ற இரண்டு புதல்வர்கள் பிறந்தார்கள். இவர்களில் அச்சுத நாயடுகாருக்கு அச்சுதவிஜயராகவ நாயடுகாரு அல்லது விஜயராகவலு நாயடுகாரு என்ற பெயர்கள் வழங்கிவந்தன. இவரே மூத்தவரானபடியால் இரகுநாத நாயடுகாருக்குப் பிறகு தஞ்சை ஸமஸ்தானுதிபதியானுர்.

---

## விஜயராகவலு நாயடுகாரு சமஸ்தானம்.

(கி.பி. 1630ஷு முதல் கி.பி. 1670 ஷு வரையில்.)



இரகுநாத நாயடுகாருடைய ஜேஷ்ட குமாரராகிய இந்த விஜயராகவலு நாயடுகாருக்கு அச்சுதவிஜயராக வலு நாயடுகாரு என்கின்ற பெயரும் வழங்கிவந்தது. இவருடைய காலத்திலும் கோவிந்ததீக்ஷதரே மந்திரியாக இருந்தாரென தஞ்சை டிஸ்டிரிக்ட்டு மானுயல் சரித்திரம் 287-754-வது பக்கங்களிலும், ஸ்ரீ சரவணப்பிள்ளையவர்கள் எழுதிய மோஹனாங்கி நாடகத்திலும், தஞ்சாவூர் இராஜாக்கள் சரித்திர முதலான கிரந்தங்களிலும் தெரிவிக்கப்பெற்றிருக்கினும், இந்தக் கோவிந்ததீக்ஷதர்: விஜயராகவலுநாயடுகாரின் தந்தைக்கும் - இவர் பாட்டனாருக்கும் மந்திரியாக இருந்ததாகச் சாசனங்கள் இருக்கிறபடியாலும், கி. பி. 1605 வருஷம் கோவிந்த தீக்ஷதர் பஞ்சனத மஹாத்மியத்தைத் தமிழில் மொழிபெயர்த் தெழுதியதாகவும் தெரியவருகிறபடியாலும், இந்த விஜயராகவலு நாயடுகாருடையபாட்டனார் அச்சுதப்பநாயடுகாருடைய காலம் கி.பி. 1577 வருஷம் என்று சாசன மிருக்கிறபடியாலும், இந்த விஜயராகவலு நாயடுகாரு கி.பி. 1660-ம் வருஷம் நாகப்பட்டணத்தை டச்சுக்காரருக்குக் கொடுத்ததாக இப்போது பட்டேவியாவில் கவர்ன்மெண்டு கண்காக்ஷிசாலையில் இருக்கும் வெள்ளிசாசனப் பட்டயம் சாக்ஷி சொல்லுகிறபடியாலும், அந்தச் சாசனத்திற்குப் பிறகு இரண்டு வருஷங்களுக்கெல்லாம் விஜயராகவலு நாயடுகாரு தேகவியோகமடைந்ததாகத் தஞ்சை டிஸ்டிரிக்ட்டு மானுயல் சரித்திரம் 760-வது பக்கத்தில் கண்டிருக்கிறபடியாலும், இந்த கோவிந்த தீக்ஷதரே இந்த விஜயராகவலு நாயடுகாருக்கும் மந்திரியாராக இருக்கக்கூடுமோ என்று சந்தேகம் ஜனிக்கிறது.

தஞ்சை ஜில்லா டிஸ்டிரிக்ட்டு மானுயல் சரித்திரத்தைத் தஞ்சாவூர் இராஜாக்கள் சரித்திரமென்னும் தெலுங்கு கிரந்தத்தைப் பார்த்து எழுதியதாகத் தோன்றுகின்றது. அப் புத்தகம் இப்போது வீங்கேயோ மறைந்து போய் விட்டதாக ம-ா-ா-ஸ்ரீ குப்புசுவாமி சாஸ்திரிகள் தம் புத்தகத்தில் எழுதியிருக்கிறார். அப் புத்தகம் இப்போது எங்கேயும் மறைந்துபோகவில்லை. சென்னைக் கவ

ர்ன்மெண்டு கண்காக்ஷி சாலையில் O. M. S. L. கீழ்நாட்டுக் கையெழுத்துக் கிரந்தசாலையில் பத்திரமாகவைத்துப் பாது காத்து வருகிறார்கள். அதை இப்போதும் பேர்ப் வாங்கிப் படிக்கவிருப்ப முடையவர்களுக்குக் கொடுத்து வருகிறார் கள்.

அந்தப் புத்தகத்தினால் இந்த விஜயராகவலு நாயடு காரு மஹா வைஷ்ணவ பக்த சிரோமணி என்றும், தம் குடிகளுடைய க்ஷேமத்தைக் கருதிப் பிரதிதினமும் 12.000 பிராம்மண சாதுக்களுக்குப் பிரீதி போஜனமிட்ட பிறகு, தாமும் தம் அரண்மனையாரும் உண்டுவருவது வழக்கமான படியால், ஒருகாலத்தில் தஞ்சையிலும் அதன் சுற்றுப் பக்கங்களிலும் ஒப்பவற்ற ஜடி மழைபொழிந்து வீதிகளெல் லாம் ஆறுகளாகிப் பிரவாக மெடுத்தோடுகையில், பிராம் மண போஜனத்துக்காக அடுப்பிற்கு விறகு அகப்படாமற் தவித்து அந்தக் கஷ்டத்தை விஜயராகவலு நாயடுகாரிடம் விண்ணப்பஞ் செய்ய, அவர் தமது அரண்மனையின் ஒரு பாகத்திலிருந்த மாடிமேடைகளை இடிப்பித்து; அதிலுள்ள தூலம், விட்டம், சட்டம், துலாக்கட்டை, கம்பம், நிலவு, கதவு, ஜன்னல் ஸ்தம்பங்களை எல்லாம் இடித்து எடுத்துக் கொண்டுவந்து எரித்துவிட உத்தரவு செய்ததாகவும், அந்த உத்தரவின்படி சமயல்காரர்கள் 3-நாள்கள் செய்து, வீட் டில் வீட்டோடு கட்டப்பட்டிருந்த மரச்சாமான்களை எல் லாம் பிடுங்கி எரித்துவிட்டு, பின்னும் விறகில்லையென்று சொல்ல, நாயடவர்கள் அரண்மனையிலிருக்கும் பட்டுபட்டா வளி, பீதாம்பரம், காசிதுப்பட்டா சால்வை முதலான விலை உயர்ந்த ஆடைகளை எல்லாம் கிழித்து எண்ணெயில் துவைத்து அடுப்பெரித்து அந்தணர் போஜனத்துக்கு ஹானிவாராதபடி செய்வித்ததாகவும் சொல்லப்பெற்றிருக் கிறது. மேலும்,

இப்படிப்பட்ட காலத்தில் ஸ்ரீரங்கத்திலிருக்கும் ஸ்ரீ ரங்கநாச்சியார் மூக்கிலிருந்த ஒரு விலையுயர்ந்த இரத்தின மூக்குத்தி காணாமற்போய்விட்டதாகவும், அதை அந்த அம்மன்கோயில் ஸ்தானிக பிராம்மணர் திருடியதாக ஸ்தலத் தார் எண்ணி அந்த ஸ்தானிகனை அடித்து வதைக்க, அந்த வதையைச்சகிக்கமுடியாமல், இந்தத் தஞ்சை விஜயராகவலு நாயடவர்களிடம் வந்து முறையிட, நாயடவர்கள் கேட்டுப் பரிதவித்து இது விஷயமாக மனோராச்சியம் செய்துகொண்

டிருக்க, தமது அரண்மனையில் இருந்த ஒரு பிராம்மண ஸ்திரீக்கு ஸ்ரீரங்க நாச்சியார் ஆவேசம் வந்து சொன்னதாவது: "ஸ்ரீ விஜயராகவலு நாயடுகாரு மஹா பக்த சிரேஷ்டரானபடியினால், அவருடைய கட்டளையின்படிப் பிரதிதினமும் 12,000 பிராம்மணருக்குப் போஜனமிடாமல் தாம் சாப்பிடுவதில்லை என விரதம் பூண்டிருக்க, மழையினால் விறகுகள் அகப்படாமல், அரண்மனையின் ஆடைகளை எல்லாம் எடுத்து எண்ணெயிற் றுவைத்து அடுப்பேற்றியபோது, உண்டான புகையைச் சகிக்கமுடியாமல் அநேக பரிசாரகர்கள் ஓடிப்போய் விட்டார்கள். இனி 12,000 பிராம்மணருக்குக் காலக்கிரமத்திற் போஜனமிடாவிட்டால், விஜயராகவலு நாயடவர்களுடைய வீரவிரதம் கெட்டுப்போய் விடுமென்று, ஸ்ரீரங்கநாச்சியாரே பரிதபித்து, ஒரு ஏழைப் பிராம்மண பரிசாரிக ஸ்திரீயைப்போல் வேஷம் தரித்து வந்து சமயற் செய்ய, அச் சமயற்வீட்டுப் புகை அதிகமாக எழும்பி, அந்தப்பரிசாரக பிராம்மண ஸ்திரீயின் முகத்திலும்-மூக்கிலும் தாக்கி வருத்தியதனால், அந்த அம்மை நொந்து அங்கிருந்த கழனித் தொட்டியில் மூக்கைச் சிந்தியபோது, அந்த மூக்குத்தி அக் கழனித்தொட்டியில் விழுந்திருக்கிறதென்றும், ஆகவே, கோயில் அர்ச்சகரை அடித்து வதைப்பது பாவமென்றும், அவரை வதைக்கக்கூடாதென்றும் வாக்குச் சொல்ல, அவ் வாக்கின்படி அக்கழனிப் பாத்திரத்தைத் தேடிப் பார்க்க, அப் பாத்திரத்தில் அவ்வாபரணம் இருக்கக் கண்டு, நாயடவர்களுக்கு அதிக ஆநந்தமுண்டாகி, அம்மன் தனது அரண்மனைக்கு வந்த மகத்துவத்தைப்பற்றி மேன் மேலும் கொண்டாடி அதை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டு, ஆநந்த பாஷ்யம் சொரிந்தும், அதைப்போல எட்டுமூக்குத்திகளைச் செய்வித்தும், 24,000 பூவராகனால் ஒரு பொன் பிரதிமை நாச்சியாரைச் செய்வித்தும், அதன் மூக்கில் அந்த மூக்குத்தி ஆபரணத்தைத் தரிப்பித்தும், சகல வாத்திய கோஷங்களுடனும், இராஜ மரியாதைகளுடனும் அனுப்பிவிட்டு, அன்றுமுதல் ஸ்ரீரங்கநாதரும், நாச்சியாரும் தம்மிடம் கொண்டிருக்கும் காருணியத்தைக்கருதி "இனிப் பிரதிதினமும் காவிரியில் ஸ்நானம்செய்து ஸ்ரீரங்கநாதரையும், நாச்சியாரையும் தரிசிக்காமல் உண்ணேம்" என்ற வீர விரதத்தைக் கைக்கொண்டு, சுமார் முப்பது மைல் தூரத்திலிருக்கும் ஸ்ரீரங்கத்துக்குப் பிரதிதினமும்

போய்வரப் பல்லக்குத் தூக்கும் போயர்களை நியமித்து அப்படியே போய்வந்தாராம். இந்த விஜயராகவலு நாயடுகாருடைய சமுகத்தில் சோமசுந்தர சுவாமிகள் என்ற ஒரு தபோநிதியும், மஹாமதியூகியான மந்திரியும், இரங்கப்ப நாயடு என்ற தளகர்த்தரும், அக்கிராஜா என்ற குதிரைவீரரும், வீரபானு மற்றும் புத்திமான்களான பிரதானி, இராயசம், கொத்தவால் முதலான அதிகாரிகளிருந்து இராஜாங்கத்தைக் கிரமமாக நடத்திவந்தார்கள்.

இவர் காலத்தில் காஞ்சீபுரத்திலிருந்த ஸ்மார்த்த, ஸ்ரீ வைணவ பிராம்மணர்களைத் தருவித்துக் காவிரிநதி யோரமாக இருக்கும் கிராமங்களில் குடியேற்றிக் கல்வியையும் ஞானத்தையும் விருத்தியாக்கி வந்தார்கள்.

இப்படிப்பட்ட புத்திமான்களால் சூழ்ந்திருந்த விஜயராகவலு நாயடு: தஞ்சாவூர், பெரியகோட்டை, அரந்தாங்கிக் கோட்டை, பட்டுக்கோட்டை, இராமநாதபுரம் ஜமீனில் உள்ள திருப்பத்தூர்க்கோட்டை, வள்ளமகோட்டை, திருக்கட்டிப் பள்ளிக்கோட்டை, செங்கோட்டை, பண்டை நல்லூர், தீவிக்கோட்டை முதலான கல்கோட்டைகளையும்; மாயவரம் - காவேரிநதி தீரத்திலிருக்கும் புஷ்பமண்டபம், மத்தியார்ஜ்ஜுனத்தின் புஷ்பமண்டபம் இவற்றைச் செப்பனிட்டும், மன்னார்குடியில் இராஜகோபால சுவாமி கோயில், ஹரிதிராநதி என்ற பெரிய தெப்பக்குளம், பின்னும் அந்த ஜில்லாவிலிருக்கும் அநேக விஷ்ணு கோயில்களைக் கட்டிவைத்தும், குடிகளிடம் ஆறில் ஒரு கடமை வாங்கிக்கொண்டும், தருமராஜ்ஜிய பரிபாலனம் செய்துவருவதைக் கண்டு ஐரோப்பிய நாட்டாராகிய போர்த்துகேசியர் தஞ்சையில் முதல்முதல் கால்வைத்தார்கள். பிறகு 1620-ஆம் வருஷம் முதல் 1845-ஆம் வருஷம் வரையில் தரங்கம்பாடிக்கு டேனிஷ்காரர்களும், 1636-ஆம் வருஷம் பிரஞ்சுக்காரர்களும் காரைக்காலுக்கு வந்ததாக இப்போது ஆப்பிரிகா நெட்டாலிலிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ பிறைசை. சோ. விருத்தாசலம் பிள்ளை யவர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

இப்படி மிக்க மேன்மைபெற்று வாழ்ந்துவருங்கால், விஜயராகவலு நாயடுகாருக்கு வயது எண்பதாகி, முதிர முதிர வியாகுலங்களும், கஷ்டங்களுமுண்டாகி விசனப்பட்டிறக்கவேண்டிச் சம்பவித்தது.

அதற்குக் காரணம்: அவர் பிள்ளைகளும் துர்மந்திரிகளுடைய துர்ப்போதனைகளுமேயாம். அதாவது: அவரது மூத்தகுமாரனாகிய மன்னார்சாமி நாயடும், தளகர்த்தன் இரங்கப்ப நாயடு குமாரன் வீரபானு என்னும் அரங்கநாதனும், விப்பிரன் வெங்கண்ணனும், பாலிய சிநேகிதர்களாக விருந்து வேடிக்கை விநோதமாகக் காலம் கழித்து வருங் காலத்தில், மன்னார்சாமி நாயடு தமது சிநேகிதன் ஒருவனுக்கு எழுதிய அந்தரங்கக்கடிதத்தையும், இராஜமுத்திரை மோதிரத்தையும், திரிச்சியிலிருந்து குமாரசாமி என்று பொய்வேடம் பூண்டுவந்த அளகிரியானவன், தஞ்சை சமஸ்தான மந்திரியாகிய கோவிந்த தீக்ஷதருடைய குமாரத்தியும், இராகவேந்திர தீக்ஷதருடைய மனைவியுமாகிய சுலக்ஷிணிக்குக் கொடுத்து, அவள் இராஜ உத்தியானவனத்தில் ஏகாந்தமான இராஜ கிருஹத்தி லிருக்கும்போது போய்ப் பிடித்தும், இழுத்தும், முத்தமிட்டும், முத்திரை மோதிரமிட்டும் அவமானப்படுத்தியதால், அவள் அந்தச் சங்கதியைப்பற்றித் தனது தந்தையிடம் முறையிட, அவர் அரசனாகிய விஜயராகவலு நாயடுகாருக்கு அறிவிக்க, அவர் அவ்வித அக்கிரமம் செய்தவர் இன்னாரென்று சரியாக விசாரித்தறியாமல், தன் மகன் தான் செய்திருப்பானென்றெண்ணி அவனைப் பிடித்துக் கொண்டுவரச்சொல்லிச் சிறையில் போட்டதாகத் தஞ்சை நாயக்கர் ஸமஸ்தான சரித்திரத்தைப் பற்றிநாகை நீலலோசனிப் பத்திரிகையில் ஸ்ரீமான் T. இராஜம்ஐயங்காரவர்கள் B.A. எழுதிய சரித்திரத்தால் ஸபஷ்டமாகிறது. ஆனால், இது விஷயத்தில் யாழ்ப்பாணம் ஸ்ரீ சரவணமுத்துப் பிள்ளையவர்கள் எழுதிய மோஹனாங்கி சரித்திரத்தில் வேறுவிதமாகச் சொல்லப்பெற்றிருக்கிறது. அதாவது, தஞ்சை தளகர்த்தராகிய இரங்கப்ப நாயடு தமது குமாரன் வீரபானு என்னும் அரங்கநாதன் விஜயராகவலு நாயடு குமாரத்தி மோஹனாங்கி என்னும் மங்கம்மாளை விவாகம் செய்வித்துக்கொண்டால், இராஜ்ஜிய பரிபாலனம் தன் குமாரனுக்குக் கிட்டுமென்றெண்ணிக் கோவிந்தாசாரியருக்குப்பரிதானம் கொடுத்தும், அந்த ஆசாரியர் குமாரத்தி விஷயத்தில் மன்னார்சாமி செய்த குற்றங்களைப்பற்றித் தூண்டியும், அந்த ஆசாரியைக் கொண்டு விஜயராகவலு நாயடுகாரிடம் மன்னார் நாயடுவின்மேல் பல சாடிகளைச் சொல்லியும், முக்கியமாக விஜயராகவலு நாயடு

வைக் கொல்லப் பிரயத்தனப்படுவதாகச் சொல்ல, மன்னூர்சாமி நாயடை இராஜக் கலகக்காரனுக்கிச் சிறையில் வைக்கும்படியாகச் செய்துவிட்டதாகத் தெரிவித்திருக்கிறார். இது விஷயத்தில் தக்க சாசன மகப்படாமையால் உண்மை இன்னதென்று அறியக்கூடவில்லை. அன்றியும், இந்த விஜய ராகவலு நாயடுகாரு காலத்தில் கோவிந்த தீக்ஷிதரே மந்திரியாக இருந்ததற்குத் தகுந்த சாசனங்க ளகப்படவில்லை என்று முன்னமே சொல்லி யிருப்பதால், இந்தக் கதையை உண்மையான தென்று நம்பக்கூடவில்லை. ஆயினும், மஹா வீரதீரனான மன்னரை மந்திரிகளுடைய துர்ப்போதனையினால் இராஜ கைதியாகச் சிறையில் வைக்கச் சம்பவித்ததனால், விஜயராகவுலு நாயடுகாருக்கு உண்டான வியாகுலம் கொஞ்சநஞ்சமல்ல.

இப்படிப் புத்திரனால் வியாகுல முண்டானதோடுகூட, தம் புத்திரியினாலும் பிரபல வியாகுல முண்டாகச் சம்பவித்தது. அதாவது, தமது அதிரூபலாவண்ணியமும், இயற்கை அறிவும் பெற்ற மதிவிலாசனி என்னும் மங்கம்மாளை, தமது தளகர்த்தரான இரங்கப்ப நாயடு குமாரன் அரங்கநாதனுக்கு விவாஹம் செய்வித்துத் தமது அரண்மனையில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று எண்ணமிட்டிருக்க, அதற்கு விரோதமாக மதுரைப் பூபதியும், திரிசிராப்பள்ளியிலிருந்த சொக்கநாத நாயடும் அந்த மங்கம்மாளையே விவாகம் செய்வேனென்று பிடிவாதம் செய்ததேயாம்.

மதுரைக் கதிபதியாகிய சொக்கநாத நாயடுவின் தந்தை இறந்ததும், அந்த ஸம்ஸ்தானத்தின் குலகுருவாகிய பக்த பெரிய சுவாமிகளும், பேஷ்கர் சின்னத்தம்பி முதலியாரவர்களும், மந்திரியும், தளாதிபதியார் வெங்கட கிருஷ்ணப்ப நாயடும் கூடிச் சொக்கநாதருடைய தாயாராகிய மங்களவிலாசனியிடம்போய்ச் சொக்கநாதருக்குத் தக்க பெண்ணைத் தேடி விவாஹம் செய்வித்துப் பட்டங் கட்டாவிடில் ஸம்ஸ்தானம் கெட்டுப்போகு மென்றுசொல்ல, அந்த அம்மையும் தனது சகோதரர் நாகபூஷணருடைய குமாரத்தி விலோசனியை விவாஹம் செய்வித்துச் சிங்காசன மேற்றுங்களென்று உத்தரவு கொடுத்தார். இது சங்கதியை அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த சொக்கநாதர், திடுக்கிட்டெழுந்து "தஞ்சை விஜயராகவலு நாயடு குமாரத்திமங்கம்மாளை மணஞ்செய்வித்தால் மாத்திரம் செய்து கொள்வதே

யன்றி மற்றப்பெண்களைச் செய்துகொள்ள மாட்டேன்'' என்று ஒரே பிடிவாதமாகச் சொல்லிவிட, மாதாவும்-மந்திரிகளும், இது விஷயத்தைப்பற்றிச் சில நாட்கள்வரையில் பேசாமல் ஆறவிட்டுப் பிரஸ்தாபிக்க, அந்தச் சொக்கநாதர், "முன் சொன்ன வார்த்தையை மாற்றமாட்டேன்'' என்று சாதிக்க, பிறகு விதியின்றி அந்தத் தஞ்சை மங்கம்மாளை விவாகம் செய்யத் தீர்மானித்து, தளகர்த்தர் வெங்கடகிருஷ்ணம நாயடுகாரையும், இராஜ புரோஹிதர்-பண்டித பிராம்மணர்களையும், தக்க ஆடை ஆபரண பண்டு பலாதி பஹுமானங்களைக் கொடுத்துத் தஞ்சைக்குப் பெண் விஷயமாகத் தூதாகப் போய்வர அனுப்பினார்கள். அவரும் அப்படியே விஜயராகவலு நாயடும் அவருடைய மந்திரிகளும் கொலுவிருக்குந் தருணத்தில் தூதுவந்த காரியத்தைச் சொல்லியனுப்ப, விஜயராகவர் மிக்க கோபங்கொண்டு, தன் குடும்பத்தில் சொக்கநாதர் பெண்ணைக் கேட்கத் துணியலாமா வென்று திட்டியும், தூதுவந்த வெங்கிட கிருஷ்ணம நாயடுவையும் மந்திரிமுதலான சபையார்முன் அவமானமாகப் பேசியும், அவர் கொண்டுவந்த ஆடை ஆபரண வரிசைகளை வாங்கிக் கொள்ளாமல் வாபீசாக அனுப்பிவிட்டார்.

அந்த விஜயராகவலு நாயடுகாரு அப்படித் தூதுவந்தவரையும், சொக்கநாதரையும் இராஜ சபையில் அவமானமாகப் பேசிப் பெண் கொடேனென்று சொன்னதற்குப் பல காரணங்கள் சொல்லுகிறார்கள். அவைகளில் முதலாவது, சொக்கநாதருடைய பாட்டனார் திருமலை நாயடுகாருக்கு இந்தத் தஞ்சாவூர் சமஸ்தானப் பெண்ணாகிய அச்சுதரகுநாதம்மகாரைப்பட்டஸ்திரீயாக முன்விவாகம் செய்வித்துக் கொடுத்ததில், ஒரு நாள் திருமலை நாயடுகாரு தாம் மதுரையில் கட்டிவைத்த சிற்பாலங்காரங்களைக் காட்டி "எப்படி இருக்கின்றன?'' என்று கேட்க, அந்தத் தஞ்சை அச்சுதரகுநாதம்மாள் தன் தகப்பனார் வீட்டுச்சாக்கடை வேலைக்குச் சமானமானதென வேடிக்கைக்குச் சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்ட திருமலை நாயடுகாரு கோபாவேசங் கொண்டு கையிலிருந்த கட்டாரியால் ஒரே குத்தாகக் குத்திக் கொன்றுவிட்டபடியால், இப்படி முரட்டுத் தனமுள்ள மதுரை ஸமஸ்தானத்தார் வீட்டுக்கு இனித் தஞ்சை ஸமஸ்தானப் பெண்ணைத்தருவதில்லையென்று பிரதிக்கினை செய்துகொண்டதனால், அந்தப் பிரதிக்கினையை அனுசரித்துச்

சொக்கநாதருடைய தூதுவனை அவமானப்படுத்தியதாகச் சிலர் கருத்து.

2-வது: விஜயராகவலு நாயடு குமாரன் மன்னார்சாமி தனதுபிதாவின் பிராணனைப்போக்கிப்பட்டம் கட்டிக்கொள்வதாக சில துஷ்டர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, அந்தமன்னார்சாமி நாயடைச் சின்னக் கோட்டையிற் சிறை வைத்துவிட்டதால், இனி விஜயராகவலுக்குப் பிறகு தஞ்சைப் பட்டத்துக்குத் தகுந்த வயதுடைய ஆண் சந்ததி இல்லாமல் விஜயராகவலு நாயடு மைத்துனர் இரங்கப்ப நாயடுகுமாரன் அரங்கநாத நாயடுக்குத் தனது குமாரத்தியை விவாகம் செய்விக்கவும், பிறகு தமது ஸமஸ்தானத்தையே ஸ்ரீதனமாகக் கொடுக்கவும் தீர்மானித் திருந்தபடியால், சொக்கநாதர் தூதனை இப்படி அவமானம் செய்தனுப்பிய தாகச் சிலர் கருத்து.

3-வது: கோவிந்த ஆசாரியருடைய குமாரத்தியைக் கெடுக்கத் தீர்மானித்த மன்னார்சாமி நாயடைத் தஞ்சையின் பட்டத்துக்கு வராமல் தடுத்துச் சிறையில் போட்டுக் கொன்று பழியைத் தீர்த்துக்கொள்ள எண்ணமிட்டிருந்த கோவிந்த தீக்ஷதருக்கு இரங்கப்ப நாயடு லஞ்சங்கள் கொடுத்துத் துதித்து, தஞ்சை சமஸ்தானத்துப்பெண்ணைத் தன் மகனுக்கே வாய்க்கும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டமையால், அந்தக் கோவிந்த தீக்ஷிதர், அடிக்கடி அரண்மனைக்குள் போய், அரசிக்கும் அரசனுக்கும் அரங்கநாத நாயடுவைப்பற்றிப் போற்றியும், சொக்கநாதன் முரடன் குடும்பத்தைச் சார்ந்த மூடன் என்றும், அவனும் அவன் தாயார் முதலானவர்களும் சைவ மதாபிமானிக ளாகையால் அப்படிப்பட்ட வீட்டிற்கு வைணவ மதாபிமான முள்ள வீட்டின் பெண்ணைக் கொடுத்தால், மஹாபாவ மென்று சொல்லியும், விஜயராகவலு நாயடுவின் மனதை மாற்றியதால், அவர் சொக்கநாதருடைய தூதுவனை இப்படி அலக்ஷியமாகப் பேசி அவமானப்படுத்தி யனுப்பிய தாகச் சிலர் கருத்து.

பின்னும் சிலர் பற்பலவிதமாக மனோராஜ்ஜியம் செய்து சொல்லுகிறார்கள். அப்படிப் பலர் பலவிதமாகச் சொல்லுவதற்குக் காரணம்:- விஜயராகவலு நாயடுகாருக்கு அப்போது வயது 82-ம், அதோடு வைணவத்தில் பக்தி அதிகமாகி,

சாத ஸ்ரீரங்கநாதர் தியானத்திலும், பூஜையிலுமிருந்து கண்களைமூடிக்கொண்டு காலத்தைக் கழித்தும், இராஜாங்க காரியங்களை எல்லாம் அவர் மைத்துனர் இரங்கப்பநாயடு வசத்திலும், அவர் குமாரன் அரங்கநாதனிடத்திலும், மந்திரிமார்களிடத்திலும் விட்டுவிட்டும், அந்தத் துர்மந்திரிகள் சொல்லும் வார்த்தைகளை யெல்லாம் தேவவாக்காகக் கொண்டும், அவர்களிஷ்டப்படி தலையாட்டிக்கொண்டும், சதா 'ஸ்ரீரங்கா! ஸ்ரீரங்கா!!' என்று பாடிக்கொண்டும், பரவசமாக இருந்தமையேயாம்.

இப்படித் தஞ்சாவூர் ஸமஸ்தான காரியங்கள் சீர்கெட்டிருக்குந் தசையில், தூதாக வந்துபோன வெங்கடகிருஷ்ணப்ப நாயடு, தாம் தஞ்சைக்குத் தூதாகச் சென்றவிடத்தில் உண்டான அவமானத்தையும், அசங்கத்தையும், தமது அரசர் சொக்கநாதரிடமும், பேஷ்கார் சின்னத்தம்பி முதலியாரிடமும், மற்றுமுள்ள இராஜமகிஷி முதலானவர்களிடமும் போய்ச் சொல்ல, அவர்கள் திடுக்கிட்டு விசனப்பட்டு, "அந்தோ! தஞ்சை விஜயராகவர் தம் பெண்ணைக் கொடாவிட்டால் பாதகமில்லை; நமது சமஸ்தானத்தையும், சமஸ்தான தூதுவனையும், தமது இராஜசபையில் இவ்வாறு அவமானமாகப் பேசியனுப்பியது இராஜதருமமல்ல" என்றும், "அக் குற்றத்திற்குத் தகுந்த மன்னிப்புக் கேட்டுக்கொள்ளாவிட்டால், அவரோடு சண்டை செய்யப்படும்" என்றும், சமாசார மனுப்பினார்கள்.

இந்த சமாசாரத்தைக் கேட்ட விஜயராகவலு நாயடு கர்ஜ்ஜித்து, தமது மந்திரி பிரதானிகளை நோக்கி, "பார்த்தீர்களா இந்தச் சொக்கனுடைய குரும்பை? இந்தப் பயலை நான் மன்னிப்புக் கேட்கிறதா? இவனுடைய ராஜ்ஜியத்தைப் பிடுங்கிப் பாழ்த்துப்போகச் செய்துவிடுகிறேன் பார்! சொக்கனை சண்டைக்கே வரச்சொல்" என்று சொல்லியனுப்பிவிட்டார்.

இது சங்கதியைக் கேட்டுவந்து திரிச்சியில் சொக்கநாதர் சமுகத்தில் தூதுவர்கள்பயபக்தியுடன் சொல்ல, சொக்கநாதரும், அவர் ஸமஸ்தானத்தாரும் அதிக விசனப்பட்டும், விஜயராகவ நாயடுகாருடைய மூத்தவயதைக்கருதியும், பக்திதரும குணங்களைக் கருதியும், பூர்வ சம்பந்தத்தைக் கருதியும் "அவரோடு எப்படிச் சண்டைச் செய்வது?" என்று

வெகு நேரம் யோசித்தும், கடைசியாக, அவர் மதுரைச் சொக்கநாத ஸமஸ்தானுதிபதியையும், அவருக்குப் பிரதிநிதியாகத் தூதுபோன தளவாய் வெங்கட கிருஷ்ணப்ப நாயடுகாரையும், இராஜசபையில் பஹிரங்கமாகச் செய்தனுப்பிய அவமானத்தை நீக்கிக்கொள்ள விதியின்றி சண்டை செய்யத் தீர்மானித்தார்கள். தீர்மானித்தாலுமென்ன? விஜயராகவலு நாயடுகாரு மஹாபக்தி சிரேஷ்டரானபடியாலும், மந்திர தந்திர சதுரங்க சேனைகளில சிறந்தவரானபடியாலும், அவரை யுத்தத்தில் வெல்வது சாதாரணமல்லவென்று அறிந்து, உடனே 10,000 சாம்பற் பூசினிக்காய்களைத் தருவித்து, அவைகளைத் துண்டு துண்டுகளாக வெட்டியும், அவற்றின் ஜலத்தில் சொக்கநாதர் எட்டு நாட்கள் நின்று, மந்திர ஜபம் செய்துவிட்டும், (பிறகு 1670ளூ வெங்கட கிருஷ்ணப்ப நாயடு, பேஷ்கார் சின்னத்தம்பி முதலியார் வசம் 10,000 சேனையைக் கொடுத்தனுப்பித் தானும் பின் படையோடு குதிரை வீரனாகப் போக, சின்னத்தம்பி முதலியாரும், வெங்கட கிருஷ்ணப்பநாயடும் வேகமாய்ச் சேனையை நடத்திக்கொண்டுபோய், முதலில் வல்லம் கோட்டையைத் தாக்கிச் சண்டை செய்ய, அப்போது அதைக் காவல் காத்துக்கொண்டிருந்த தஞ்சாவூரார் சேனை எதிர்த்தும் முடியாமையால், அந்த வல்லம் கோட்டை திரிசிராப்பள்ளியார் வசமாகிவிடவே, திரிசிராப்பள்ளியார் தைரியங்கொண்டு தஞ்சைக்கருகில் பத்தேரிகளை நியமித்தும், கோட்டையை நாடிப் பத்துப்பீரங்கிக் குண்டுகளைச் சுட்டும் சொக்கநாதர் சண்டைக்கு வந்திருக்கிற சங்கதியைத் தெரிவித்தார்கள். தெரிவித்தாலுமென்ன? விஜயராகவலு நாயடுகாரு அப்போது விஷ்ணுபூஜையில் உட்கார்ந்துகொண்டும், கண்களை மூடிக்கொண்டும், 'ஸ்ரீ ரங்கநாதா! இராஜகோபாலா!' என்று ஸ்தோத்திரமும் - ஜபமும் செய்துகொண்டுமிருக்க, வேவுகாரர்கள் போய், "சுவாமி! சொக்கநாதருடைய சேனை நமது வல்லம் கோட்டையைப் பிடித்துக்கொண்டு, இப்போது தஞ்சைக் கோட்டையைப் பிடித்துக் கொள்ள உள்ளே வந்துவிட்டார்கள்" என்று சொல்ல, நாயடுகாரு வெகுநேரம் பேசாமலிருந்து, பிறகு கண்களைத் திறந்து பார்த்து, வேவுகாரர்களைநோக்கிக் கர்ஜ்ஜித்து, "நமது பூஜை பூரணமாக முடிகிறவரையில் நம்மிடம் யாவரும் வரவும் பேசவுங்கூடாது" என்று அதட்டிச் சொல்லிவிட்டு, மறுபடி

யும் கண்களை மூடிக்கொண்டும் "ஸ்ரீ ரங்கநாதா! இராஜகோபாலா!" என்று சொல்லிக்கொண்டும் வெகுநேரம் பூஜையிலேயே இருந்துவிட்டார்.

இது நிற்க, இந்த விஜயராகவலு நாயடுகாருடைய வயதையும், பக்திவிசுவாசத்தையும், தருமசிந்தைகளையும், பூர்வபந்து சம்பந்தத்தையும் சொக்கநாதர் சிந்தித்து, இவருடன் சண்டை செய்ய விருப்பங்கொள்ளாமல், "இனிமேலாகிலும் சமாதானத்துக்கு வரக்கூடுமோ?" என்று தூதுவர்களைக் கேட்டுவரும்படி சொல்லி அனுப்பினர்.

அப்போது தான் பூஜையைப் பூரணமாக முடித்து, கண்களைத் திறந்து பார்த்து, தூதர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்து, "க்ஷத்திரிய சிங்கம் சமர்க்களத்திலும் சமாதானத்தை நாடுமோ?" என்று கர்ஜ்ஜித்து, தமது தளவாய் இரங்கப்ப நாயடு-வீரபானு-அக்கிராஜா, சொக்கரவுத்ரகிய நால்வரை அழைத்து, "உடனே ஆயுதபாணிகளாகிச் சண்டைக்குப் புறப்படுங்கள்!" என்று கட்டளையிட, அந் நால்வரும் கால தேச வர்த்தமானங்களை அனுசரித்து, "மஹா வித்வசிகாமணியும், வீராதிவீரருமாகிய அரசர் குமாரர் ஸ்ரீ மன்னார்சாமி நாயடுகாரை இப்போதாவது சிறையிலிருந்து விடுதலை செய்வித்தால் நலம்" என்று ஸ்ரீ விஜயராகவலு நாயடுகாரை வணங்கி வேண்ட, அவரும் கால வித்தியாசத்தைக் கருதி விடுதலை உத்திரவு கொடுத்து, அந் நால்வரை அனுப்பி மன்னார்சாமி நாயடை விடுதலை செய்வித்து அழைத்துவந்து, அரசர் சமுகம் விட, அம் மன்னார்சாமி நாயடும் தமது தந்தையின் பாதங்களில் வீழ்ந்து தண்டம் சமர்ப்பித்துக் கைகளைக் கட்டிக்கொண்டு வணங்கி நிற்க, விஜயராகவலு நாயடு தமது அருமைக் குமாரராகிய மன்னார்சாமி நாயடுகாரை ஏறிட்டுப் பார்த்து,

"அடே மன்னாறு! மதுரைத் திரிசிரபுரத் தரசனை சொக்கன் நம்ம வீட்டின் பெண்ணை விவாஹம் செய்துதர வேண்டி தூதனுப்பினன்! அந்த மூர்க்கன் குடும்பத்திற்கு, நமது குடும்பப் பெண்ணைக் கொடுக்க மாட்டோம்" என்றும், அத் தூதுவனையும்-சொக்கனையும் சபையில் திட்டி அவமானப்படுத்தி அனுப்பியதற்கு, அச் சொக்கன் தனது அவமானத்தை நீக்கிக்கொள்ளக் கருதி, இதோ சண்டைக்குத் தண்டு தளாதிகளை அனுப்பியிருக்கிறன். இப்படிப்பட்ட தருணத்தில் நாம், சொக்கனுக்குப் பயந்து நமது அருமைப்

பெண்ணை விவாஹம் செய்துகொடுத்து, சமாதானம் செய்வித்துக்கொள்வது தகுதியா? அல்லது நமது க்ஷத்திரிய தருமத்திற்குத் தக்கபடிக்கும், நமது பெரியோருடைய அந்தஸ்துக்குத் தக்கபடிக்கும், கேவலமானவர்களுக்குப் பயப்படாமல் சண்டைசெய்து ஜயித்து நமது குடும்பத்தின் அந்தஸ்தையும், பிரதிக்கினையையும் பாதுகாப்பது தகுதியா! உடனேசொல்!'' என்று வினவ,

அப்போது மன்னார்சாமிநாயுடு சொன்ன
பத்தியம் (காவியம்) இது:

కం॥ మణిక్రిందుపరచిజలనిధి,। త్రిణముల్ పైనుంచిఅతనిదేకువసుమీ।
మణిమణియెత్రిణముత్రిణమే। రణవిజయదిలీప విజయరాఘవభూప॥

என்று சொன்னார். அதாவது:—

"சமுத்திரத்தின் அடியில் இருக்கும் இரத்தின மணிகளின்மேல் குப்பைக் கூழங்களைப் போட்டு மூடினும், அந்த ரத்தினமணிகள் மங்கலடையாமல் பிரகாசித்து, அக்குப்பைக் கூழங்களையும் பிரகாசிக்கும்படி செய்யும்.

அதாவது, 'கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே' என்று சொல்ல, விஜயராகவனு நாயடுகாரு கேட்டு, ''அந்தோ! இப்படிப்பட்ட கல்விமானும், வீரதீரனுமான மன்னாரைத் துர்மந்திரிகளுடைய வார்த்தைகளைக் கேட்டுச் சிறையில்வைத்தோமே'' என்று சிறிதுநேரம் விசனப்பட்டுப் பிறகுமன்னாரைத் தாவி உச்சிமுகந்து முத்தமிட்டுப் பார்த்து,

''அடே மன்னாறு! உன் வீரதீரத்திற்கு நாம் மெச்சினோம்; ஆனால், இந்தச் சண்டையோ பிரமாதமாக முடியும்போ லிருக்கிறது. ஒருவேளை இந்த யுத்தத்தில் நாம் வீரசொர்க்கத்தை அடைந்தபிறகு, சொக்கன் வந்து நம் பெண்ணை எடுத்துக் கொண்டுபோய் விவாகம் செய்து கொள்ளக்கூடும். அந்த அவமானத்திற்கு இடமில்லாதிருக்கும்படி, அந்தப்புரத்தில் இருக்கும் நம்ம அரிவையர் எல்லாரும் நமக்கு முன்னமே வீரசொர்க்கத்தை அடைவதற்கு உருவிய கத்திகளோடு தயாராக இருக்கச்சொல்! அந்த அரிவையர் அந்தப்புரத்தை அரைநொடியில் பஸ்ப

மாரும்படி நான்கு மூலைகளிலும் வெடிமருந்துகளை நிறப்பி அப்பானைகளைப் புதைப்பித்து, நமது குறிப்பை அறிந்த உடனே நெருப்பிட்டு வெடித்து விழும்படி உத்திரவு செய்துவா!'' என்று அனுப்ப, மன்னார் நாயடும் அந்தப்புரத்துக்குப் போய்த் தமது தாய், தங்கை, தாரம் முதலானவர்களைக் கண்டு தழுவி, தமக்குச் சம்பவித்த காலவித்தியாசத்தைச் சொல்லி விசனப்பட்டும், பிறகு தங்கையவர்கள் அனுப்பிய ஆக்கினையைச் சொல்ல, அந்த ராஜ மஹிஷிகளும் உடனே சுத்த ஸ்நானம் செய்து, மஞ்சள் குங்குமம் புஷ்பங்களை அணிந்தும், மஞ்சற் பட்டுப் புடவைகளைக் கட்டிக்கொண்டும், கத்தி கட்டாரிகளைக் கைகளிலேந்திக்கொண்டும், இராஜ உத்திரவிற்கு எதிர்பார்த்துக் கொண்டிருக்க, வெடிக்காரர் வெடி மருந்துகளைப் பானைகளில் நிறைத்து, அந்தப்புரத்தின் நான்கு மூலைகளிலும் புதைத்து, தீவர்த்தியைக் கையிலேந்தி வேந்தர் உத்திரவுக்கு எதிர்பார்த்திருந்தார்கள். அந்தப் பெண்மணிகள் வெந்து இறந்த இடத்தை இப்போதும் இராக்காலங்களில் அணுக அஞ்சுகிறார்கள்.

இப்படிப்பட்ட தருணத்தில் விஜயராகவுலு நாயடுகாரு இனி ஸ்ரீரங்கத்துக்குப் போய் ஸ்ரீ ரங்கநாதரை நேரில் தரிசிப்பதற்கு வழி இல்லாததைக் கண்டு, தமது அரண்மனையின் மாடியின்மேல் மர உப்பிரிகை போட்டும், அதன்மேலேறி ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தின் கோபுரங்களைத் தரிசித்து வணங்கி இறங்கிவந்தும், இராஜவீரவேஷம் தரித்தும், வயதின் கோலத்தினால் தொங்கிக்கொண்டிருந்த கண் இரப்பைகளைத் தங்கக் கம்பிகளினால் றாக்கிக் கட்டிக்கொண்டும், இராஜ ஆடை ஆபரணம் தட்டி சல்லடம் கட்டிக்கொண்டும், இடது கையிற் கட்டாரியையும் - கேடயத்தையும், வலதுகையில் இராஜ பட்டாகத்தியையும் பிடித்துக்கொண்டும், 'ஸ்ரீரங்கநாதா! இராஜகோபாலா!' என்று கூப்பிட்டு கர்ஜ்ஜித்துச் சண்டைக்குப் புறப்பட, கூடவிருந்த மன்னார் சாமிநாயடும் தக்க தட்டி சல்லடம் கட்டிக்கொண்டும், கட்டாரியுடன், கத்தியை ஏந்திக்கொண்டும், இராஜருக்கு முன் அணியாகச் சண்டைக்குப்போக, விஜயராகவலு நாயடுகாரு பார்த்து,

"அடே மன்னாறு! நீ எனக்குப் பின்வரும் அக்கிராஜா, வீரபானு முதலானவர்களுடன் பின் அணியில் நில்! ஏனெ

னில், ஒருவேளை நீ எதிரிகளுடைய கத்தியடி பட்டு விழுந்து வீரசொர்க்க மடைவாயானால் உன்னைப் பார்க்கும் என் கண்களில் (புத்திரசோகத்தினால்) கண்ணீர் ததும்பி, கண்களை மூடிக்கொள்ளும்; மேலும், நீ எனக்குமுன் இருப்பாயானால், புத்திர சோகத்தினால் என் கைகளின் வலிமை குன்றிச் சண்டைசெய்யச் சக்தியற்றுப் போகக்கூடும்'' என்றுசொல்ல, மன்னார் நாயடு கேட்டு வணங்கி, ''தந்தையே! தாங்கள் சகல சாஸ்திரங்களைக் கற்று தெளிந்தவர்; அங்ஙனமிருக்க, இப்படிச் சொல்லலாமோ! தாங்கள் தந்தை, நான் குமாரன்-தாங்கள் அரசர், நான் சேவகன், இப்படிக்கிருக்க, தங்களுடைய உப்பைத் தின்றதற்கு இப்படிப்பட்ட தருணத்திலல்லவா நான் தங்களுக்கு முன்னின்று தங்கள் பகைவரைத் தாக்காவிட்டால், நான் இருந்தும் பிரயோஜனமில்லை'' என்று பலவாறு பஞ்சிக் கெஞ்சிக் கேட்டு சமாதானப்படுத்தி, ஆயுதபாணியோடு சமர்க்களத்தின் முன் இளஞ்சிங்கம் கர்ஜ்ஜித்துக் குதிப்பதைப்போல் குதித்துவர, சொக்கநாதருடைய தளவாய் வெங்கடகிருஷ்ணப்ப நாயடுகாரும் ஆயுதபாணியோடு முன்வந்தார்.

இந்த மன்னார்சாமிநாயடும், பாலியத்தில் வில்வித்தை, மல்யுத்தம், சாமவித்தை, பட்டாகத்தி சுழல் வித்தையிற் பயின்றவ ராகையால், அவருக்கு அவ் வித்தைகளில் சமானமான சக்தியையுடைய வெங்கட கிருஷ்ணப்ப நாயடுகாரோடு வெகுநேரம் நின்று கத்திச் சண்டைகளைச் செய்துவர, முதலில் மன்னார் நாயடு தனது பட்டாகத்தியால் வெங்கடகிருஷ்ணப்பநாயடுகாருடைய சிரசைப் பார்த்து அடிக்க, அது அவர் தலைப்பாகையைத் தூக்கி எறிந்து சிறு காயப்படுத்த, வெங்கடகிருஷ்ண நாயடுகாரு மஹாவீர கோபத்துடன் மன்னார்நாயடு தலையைப் பார்த்து அடிக்கத் தலை வேறு, உடல் வேறாக அறுப்பட்டு விழுந்தன.

இதை அறிந்த விஜயராகவலு நாயடுகாரு இனி தப்புவது அபூர்வமென அறிந்து, அந்தப்புரத்துக்குச் சேதியை அனுப்ப, அங்கிருந்த இராஜமஹிஷிகளில் ஒரு இராணியார் தமது அருமையான நான்கு வயதையுடைய ஆண் குழந்தையை, அதற்குப் பால்கொடுத்த தாதியிடம் கொடுத்தும், அச் சிசுவின் போஷணைக்காகத் தாமணிந்திருந்த நவரத்தின ஆபரணங்களைக் கொடுத்தும், யாருக்கும் தெரியாமற்போய் வளர்த்துக்கொள்ளும்படி யனுப்பிவிட்டும், அந்

இராணியும் தம் கத்தியால் வெட்டிக்கொண்டு இறந்தார். இத்தியாதிகளைப் பார்த்துக்கொண்டிருந்த மங்கம்மாளும், மற்றவர்களும் தம் வாள்களால் வெட்டிக்கொண்டு வீரசொர்க்கமடைய, உடனே வெடி மருந்துக்காரன் நான்கு மூலைகளிலும் புதைத்திருந்த மருந்துப் பானைகளுக்கு தீயைமூட்ட, அவைகள் ஏககாலத்திற் குபீரென்று பீறிட்டுக்கொண்டு பல பீரங்கி சப்தங்களோடு பயங்கர இடி சப்தம்போல வெடித்து, அந்தப்புரத்தை அஸ்திவாரத்தோடு கிளப்பி வெடிக்கச் செய்து எங்கும் புகைமயமாக்கியது. இது சங்கதியை அறிந்த விஜயராகவலு நாயடுகாரு, இனி தாம் உலகிலிருப்பதில் பிரயோஜன மில்லையெனத் தெளிந்து, தமது தளவாய் முதலானவர்களோடு வெங்கடகிருஷ்ணப்ப நாயடுடன் மஹா பயங்கர சண்டைசெய்ய, அக்கிராஜாவும், வீரபாலு முதலானவர்களும் எதிரிகளால் வெட்டப்பட்டு விழுந்து இறந்தார்கள்.

இனி விஜயராகவலு நாயடுகாரு தனியாக நின்று கத்திச் சண்டை செய்கையில், எதிரியின் சேனைகள் நாலா பக்கங்களிலு மிருந்து துப்பாக்கிகளுக்கு குண்டுகளைப்போட்டுச் சுட்டுக்கொண்டுவந்து வளைத்துக்கொள்ளவே, விஜயராகவலு நாயடுகாரு பார்த்து, ஒரு தூதுவனை எதிரித் தலைவன் வெங்கட கிருஷ்ணப்ப நாயடுவிட மனுப்பி, "தூரத்திலும், மறைவிலு மிருந்து துப்பாக்கிக் குண்டுகளினுல் சுட்டுக் கொல்வது ஆண்பிள்ளைகள் செய்யும் உயுத்தமல்ல, பேடிகளான பெண்பிள்ளைகள் செய்யும் உயுத்தம்; அரசர்கள் ஆண் சிங்கங்களைப்போல ஒருவரோடு ஒருவர் நேர் நேராக நின்று சண்டை செய்வதே ஆண்பிள்ளைத்தனம்;" மஹாவிஷ்ணு பக்தனுகிய என்னைத் திரிசிராப்பள்ளியார் துப்பாக்கி குண்டில் சுட்டுக்கொன்ருல் அவர்களுக்கும் அபக்கியாதி, எனக்கும் வீரசொர்க்கம் கிட்டாமற் போகக்கூடும்," என்று சொல்லும்படி கட்டளையிட, அந்தத் தூதுவனும் அப்படியே போய்ச் சொல்ல, அதற்கு வெங்கடகிருஷ்ணப்ப நாயடுகாரும் இணங்கி, தமது சேனையில் துப்பாக்கிகளைச் சுடுபவர்களை நிறுத்திவிடும்படி கட்டளை கொடுத்துவிட்டும், கத்திக்கட்டாரிக் காரர்களை மாத்திரம் முன்வந்து நிற்கும்படி திட்டம் செய்துவிட்டும், தாமும் கத்தி கட்டாரியுடன் வந்து விஜயராகவலு நாயடுகாருடன் நேர் நேராக நின்று நெடுநேரம் சண்டை செய்தார். விஜயராகவலு நாயடுகாரு

கத்தி கட்டாரி வரிசையில் அதிக வல்லவ ரானபடியால், நெடுநேரம் பயங்கர சண்டை செய்தாலும், விருத்தாப்பிய வயதினாலும், புத்திர சோகத்தினாலும், குடும்ப சோகத்தினாலும் அதிகநேரம் நின்று சண்டை செய்ததனால் சற்றுத் தளரவே, வாலிபவயதும்-மகாவீரதீரமுமுடைய வெங்கடகிருஷ்ணப்பநாயடு வெகு மும்முரமாகத் தளராமல் சண்டை செய்ய, அவருக்குப் பக்கத்திலிருந்த ஒரு வீரன் சமயம் பார்த்துத் தனது பட்டாக் கத்தியை ஓங்கி விஜயராகவலு நாயடுகாருடைய கழுத்தைப்பார்த்து வெட்டவே, 'அரிஹரி! ஸ்ரீரங்கநாதா! இராஜகோபாலா!' என்று சொல்லிக்கொண்டு விழுந்து வீரசொர்க்கத்தை அடைந்தார். இந்தச் சண்டை தஞ்சை வடக்குக் கோட்டை வாசலுக்கு அடுத்த இராஜகோபாலசுவாமி கோவில் வாசலில் நடந்தது.

உடனே வெங்கடகிருஷ்ணப்ப நாயடுகாருடைய சேனைகள் கோட்டை மாடியின்மேலேறித் திரிசிரபுர ஜயக்கொடியை நாட்டி "சொக்கநாதவிஜயீபவா! என்று ஜயபேரிகை முதலான வாத்தியங்கள் கோஷித்தார்கள். இந்த ஜயத்தைப் பற்றி வெங்கடகிருஷ்ணப்ப நாயடு உடனே சவில்தாரமாக எழுதி இரண்டு குதிரைச் சவாரிக்காரரிடம் கொடுத்துத் திரிசிரபுரத்திற் கனுப்பினார்.

இங்குத் தஞ்சையில் இப்படி நடந்துகொண்டிருக்க, அப்போது ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தில் அதன் அர்ச்சகர்கள், இந்தச் சண்டை எப்படி முடியுமோவென்று வெகு நேரம் பேசிக்கொண்டிருந்து, அர்ச்சகர்கள் மாமூல்படி அந்த ஸ்ரீரங்கர் கோயில் பூஜைகளை முடித்துக்கொண்டு தம் தம் வீடுகளுக்குப் போயிருக்கையில், தஞ்சை விஜயராகவலு நாயடுகாரு வழக்கப்படி தமது பட்டப்பிருதுகளுடன் ஸ்ரீரங்கநாதர் சேவைக்கு வந்திருக்கிறபடியால் (அர்ச்சகர்) யாவரும் வந்து கோயிலைத் திறந்து பூஜைகள் செய்யுங்கள் என்று சேவகர்கள்போல சிலர் வந்து சொல்லவே, அர்ச்சகர்களும் ஓடிப்போய்ப் பார்க்க, விஜயராகவலு நாயடுகாரும் பல்லக்கில் வந்திருக்கக் கண்டு, 'ஒரு வேளை இரண்டு அரசர்களுக்கும் சமாதான மாகிவிட்டபடியால், மாமூல்படி கோயிலுக்கு வந்தாரோ' என்று எண்ணி, கோயிலைத் திறந்து பூஜைகளைச் செய்து, தீர்த்தம் சடகோபம் முதலான பிரசாதங்களைச் சாதித்துக்கொண்டிருக்க விஜயராகவலு நாயடுகாரும் அவருடன் வந்த ஆட்க

ளும் மாயமாக மறைந்துவிட, அர்ச்சகர்கள் ஆச்சரியப் பட்டு, "ஸ்ரீ விஜயராகவனு நாயடுகாரு மஹாபக்த சிரேஷ்டரானபடியினால், ஸ்ரீரங்கநாதருக்குள் ஐக்கியமாகிவிட்டார் போலும்" என்றெண்ணி, இது சங்கதியைத் திரிசிரபுரத்திலிருக்கும் சொக்கநாத நாயடுகாரு சமுகத்திலும் சொல்ல, ஆச்சரியப்பட்டார்களாம். இது நிற்க, தஞ்சையிலிருந்து தளவாய் வெங்கட கிருஷ்ணப்பநாயடு எழுதிய ஓலை திரிசிரபுரத்திற் சொக்கநாதர் சமுகத்தில் வந்து சேர, சொக்கநாதரும் அவருடைய மந்திரி முதலான சபையாரும், தாயார் முதலான குடும்பத்தார்களும் கேட்டு அதிகவிசனப்பட்டு, கேவலம் ஒரு பெண்ணைப்பற்றிய வார்த்தையினாலே தஞ்சாவூர் சமஸ்தானமே பேர் சொல்லக்கூடபுத்திர மித்திரகளத்திராதிகளற்றுப்போகும்படிச் சம்பவித்ததைப் பற்றி அதிகமாகச் சிந்தித்தும், 'இனி நடந்துபோன காரியத்தைப்பற்றிச் சிந்திப்பதில் பிரயோஜனமில்லை' என்று எண்ணியும், தம்மையும் தமது தூதனையும் அவமானப்படுத்திய அரசனை அடியோடு அதம் செய்து ஜயித்ததைப் பற்றிச்சந்தோஷித்தும், உடனே தஞ்சையிலிறந்தவிஜயராகவனு நாயடுகாரு முதலான இராஜ குடும்பத்தாரை இராஜ மரியாதையுடன் எடுப்பித்துத் தகனம்செய்வித்தும், அவர்களுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி கருமாதி காரியங்களை நடப்பித்தும், இராஜ பொக்கிஷத்தைப் பந்தோபஸ்து செய்வித்தும், நகரில் தகுந்த சேனைவீரரை வைத்துப் பாதுகாத்தும், தமக்குப் பால் கொடுத்து வளர்த்த சவலைத்தாய்க் குமாரரான அளகிரிசாமிநாயடுகாரிடம் ஸமஸ்தானத்தைக் கொடுத்து வரும்படி வெங்கட கிருஷ்ணப்ப நாயடுக்கு உடனே பதில் ஓலை எழுதி அனுப்பிவிட்டும், சொக்கநாதர் சகல பிருதுகளுடன் காவிரிநதிக்கு வந்து சுத்தஸ்தானம் செய்தும், 120 கோதானத்தையும்-12000 சில்லரைதானங்களையும் - 24 குதிரை தானங்களையும்-60 கன்னிகாதானங்களையும் - 1202 உபநயனதானங்களையும் - 12 கிராமங்களை அக்கிரஹாரங்களாகச் செய்வித்தும், ஸ்ரீரங்கம்-ஜம்புகேசுவரம் - மதுரை-இராமேசுவரம் முதலான க்ஷேத்திரங்களில் அபிஷேகங்களையும், இலக்ஷம் பிராம்மணர்களுக்குப் போஜனமும் செய்விக்கும்படி உத்திரவளித்துவிட்டும், தாம் அரண்மனைக்கு வந்து அன்றிரவெல்லாம் உபவாசமிருந்து, மறுநாள் உண்டு உலாவிக்கொண்டிருக்க, தஞ்சையிலிருந்து வெங்கட கிருஷ்ணப்ப நாயடு தஞ்சை பொக்கிஷத்

தையும், ஆயுதங்களையும், யானை குதிரை முதலானவைகளையும் கொண்டுவந்து தங்கபுஷ்பங்களினால் சொக்கநாதர் பாதங்களைப்பூஜித்து, தாம் தஞ்சையில் சண்டைசெய்து ஜயித்த வைபவங்களை எல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்ல, சொக்கநாதர் கேட்டுச் சந்தோஷப்பட்டு, அவர்களுக்கும் அவர்களுக்கு உதவியாகப் போன பாளையக்காரர்களுக்கும் வஸ்திராபரணங்களையும், சர்வமானியங்களையும் கொடுத்து மரியாதை செய்வித்தும், அவரவர்கள் ஸ்தலங்களுக்குப்போகும்படி கட்டளையிட்டனுப்பியதாகத் தஞ்சாவூர் ராஜாக்கள் புத்தகத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத் தஞ்சை யுத்தத்தில் இவ்வளவு பராக்கிரமத்தைக் காட்டிய வெங்கட கிருஷ்ணப்பநாயடு: திண்டுக்கல் இரங்கண்ண நாயடு குமாரரென்றும், அவருக்கு அப்போது தக்க உதவியாக நின்றவர், திண்டுக்கல் சின்ன கதிரப்ப நாயடு என்றும் தெரியவருகிறதன்றியில், இந்தச் சண்டை முடிந்த பிறகு சொக்கநாதர் சந்திரகிரி துப்பாக்கி லிங்கப்ப நாயடு குமாரத்தி மங்கம்மாளை விவாஹம் செய்துகொண்டதாகக் கனம் டெயிலரவர்கள் தமது சரித்திரம் 2-வது புத்தகம் 199-வது பக்கத்திற் சொல்லி யிருக்கிறார். நிற்க,

தஞ்சாவூர் நாயக்கர் ஸமஸ்தானசரித்திரத்தைப்பற்றி நவநாடகமாக எழுதிய ம-ா-ா-ஸ்ரீ பி. ஏ. சரவணமுத்துப் பிள்ளையவர்கள் தமது கிரந்தம் 344-பக்க முதல் 372-பக்கங்கள் வரையில் தஞ்சை யுத்தத்தின் கடைசிபாகத்தைப் பற்றி வேறுவிதமாக எழுதி யிருக்கிறார். அந்த ஸ்ரீ சரவணமுத்துப் பிள்ளையவர்கள்: பி.ஏ. பட்டதாரியாகவும், சென்னை கவர்ன்மெண்டு O. M. T. கீழ்நாட்டுக் கையெழுத்துப் பிரதி புத்தகசாலையின் தலைவராகவுமிருந்து அநேக புராதன சரித்திர சாசன ரிகார்டுகளைப்படிக்க அனுகூல மிருந்தபடியால், அவர் எழுதிய சங்கதிகள் சரியான சங்கதிகளென்று நம்பவேண்டி இருக்கின்றன; ஆகவே, அதன் சங்கிரகத்தை இதனடியிற் சுருக்கமாக எழுதுகிறோம்:

அதாவது, தஞ்சை விஜயராகவலு நாயடுகாரைச் சமாதானத்துக்கு வரச் சொக்கநாதர் பலதரம் வேண்டியும், சம்மதிக்காமல் சண்டைசெய்தே தீரவேண்டுமென்று ஒரே பிடியாகச் சாதித்துத் தமது அந்தப்புரத்திலிருக்கும் மனைவி மக்களனைவரையும் மருந்து வெடிவைத்துக் கொல்லும்படி உத்திரவளித்தபோது, அவர் புத்திரி மங்கம்மாள் கேட்டு

மதிமயங்கித் தவிக்கும்போது, அவருடைய தோழிகளான விமலையும், இலக்ஷுமியும் கூடி தஞ்சை ஸமஸ்தானத்துக்குச் சம்பவிக்கும் ஆபத்தை விவரமாகச் சொல்லி, இப்படிப் பட்ட காலத்தில் மங்கம்மாளே மாறுவேடமும், புற்காவும் போட்டுக்கொண்டு கோட்டைக்கு வெளியில் வெண்குதிரை மேல் நிற்கும் சொக்கநாதரிடம் போய் அவர் பாதத்தில் விழுந்து, தமது ஸமஸ்தான குடும்பத்தைக் கெடுக்காமல் பாதுகாக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டால், அவர் மனமிறங்குவார் என்று சொல்ல, மங்கம்மாளும் விதியின்றி இணங்கி, மாறு வேடம் தரித்துக்கொண்டு கோட்டை நந்தாவன வாசல் வழியாக இரகசியமாகப் போய்ச் சொக்கநாதருக்குச் சொல்லியனுப்ப, அவரும் பரிதாபத்தோடு ஓடிவந்தும், மங்கம்மாள் விண்ணப்பத்தைக் கேட்டு விசனப்பட்டும், விதியின்றி அவ்வளவோடு யுத்தத்தை நிறுத்திவிடும்படி வெங்கடகிருஷ்ணப்ப நாயடுக்குச் சங்கதி சொல்லியனுப்ப, அந்தத் தூதன்போய்ச் சொல்வதற்குள் விஜயராகவலு நாயடுகாரும், அவர் குமாரன் மன்னார்சாமி நாயடு முதலானவர்களும் வெட்டப்பட்டுக் கொல்லப்பட்டார்களென்றும், அந்தப்புர ஸ்திரீகளும் அக்கினிக்கு இரையாகி விட்டார்களென்றும் சங்கதிவர, சொக்கநாதர் கேட்டு அதிக விசனப்பட்டு மங்கம்மாளுக்குச் சொல்ல, அந்தம்மாள் திடீரென விழுந்து ஒப்பாரிட்டு அழ, உடனே அருகிலிருந்தவர்கள் பலவாறு தைரியஞ் சொல்லிச் சமாதானப்படுத்திவிட்டு, கோட்டைக்குள் எங்குபார்த்தபோதிலும் பிணக்காடாகக் கிடந்திருந்த பிரேதங்களில் விஜயராகவலு நாயடுகாருடையவும், மன்னார்நாயடுகாருடையவும், அவர் தாயார் முதலானவர்களுடையவும் பிரேதங்களைத் தேடி எடுப்பித்தும், அவர்களுக்கு இராஜ மரியாதைகளுடனும், யானைப்பட்டாளம்-குதிரைப்பட்டாளம்-பதாதிப்பட்டாளம்-இரண்டு பேரிகை-முரசு-கொடி முதலான வைபவக்களுடனும் எடுப்பித்துக்கொண்டு சொக்கநாதரும், மங்கம்மாள் முதலானவர்களும் மயானத்துக்குக் கூடப்போய், மங்கம்மாள் மூலமாகத் தகனம் செய்வித்து வந்து, தஞ்சையிலுள்ள பெரிய பிரபுக்களையும் உத்தியோகஸ்தர்களையும் சபையாகக் கூட்டித் தாம் (சொக்கநாதர்) எழுந்து "தஞ்சை வாசிகளே! நாம் உங்கள் தஞ்சையைப் பிடிக்க இந்த யுத்தம் செய்தோமல்லம்; எம்மையும், எமது தூதனையும் இராஜ சபையில் அவமானப்படுத்தியதைக் கருதிச் சண்

டைக்கு வந்தோம்; அப்படி வந்தும், அடிக்கடி சமாதானத்துக்கு அழைத்தோம்; விஜயராகவர் சம்மதிக்காமல் முரட்டுப் பிடியாகச் சண்டை செய்ததனால் அவர் தம் குடும்பத்தோடு சாகச் சம்பவித்தது; அதற்காக உங்களைவிட நாம் அதிக விசனப்படுகிறோம்; இனி இத்தஞ்சைக்கு யார் அரசாகஇருந்தால் உங்களுக்குச் சம்மதம்?" எனக்கேட்க, நாட்டின் பிரபுக்கள் கேட்டு, "விஜயராகவலு நாயடுகாரு தமது துர்மந்திரிகளுடைய வார்த்தைகளைக் கேட்டு இப்படிச் செய்துவிட்டார்; இனி இதைப்பற்றிப் பிரலாபிப்பதில் பிரயோஜனமில்லை; தஞ்சை சமஸ்தானத்துக்குத் தற்காலத்துக்குச் சரியான வார்சு ஸ்ரீ மங்கம்மகாராகையால், அந்த அம்மையைத் தாங்களே தரும விவாஹம் செய்துகொண்டு, தாங்களே அரசராக இருக்கவேண்டும்" என்று வேண்ட, சொக்கநாதர் கேட்டு, தமது மதுரை ஸமஸ்தானம் பெரியதாகையால், தாம் தக்க பிரதிநிதியை நியமித்து அடிக்கடி வந்து பார்ப்பதாகச் சொல்லி, மங்கம்மாளை மூடுபல்லக்கில் வைத்துத் திரிசிரபுரம் கொண்டுபோய்த் தம் தாயாரிடம் விட, அந்த அம்மை ஆலிங்கனம் செய்தும், முத்தங்கொடுத்தும், மிக்க கம்பீரமாக மங்கள விவாஹம் செய்வித்து ஆனந்தித்ததாகச் சொல்லியிருக்கிறார்.

இப்படிச் சரித்திரக்காரர்களுடைய அபிப்பிராயங்கள் ஒருவாறு வித்தியாசப்படினும், இத்தஞ்சை ஸமஸ்தானத்துக்கு நேர்ந்த நஷ்டத்தையும், கேவலம் ஒரு பெண்ணைப் பற்றியும், ஒரு கோபமானவார்த்தையைப்பற்றியும், ஒரு இராஜ குடும்பத்தின் மன்னன் மனைவி புத்திரன் புத்திரகளத்திராதிகள் பாழ்த்துப்போகச் சம்பவித்ததை எண்ணிப்பார்க்கும் எவர் மனதுதான் துடிக்காது. துர்மந்திரிகளுடைய துர்ப்போதனைகளாலேயே இப்படி நடந்ததாக அநேகர் அபிப்பிராயப்படுகிறார்கள்.

திரிசிராப்பள்ளி சங்கதிகள் இப்படியிருக்க, தஞ்சைக்குப் புது அரசனாக நியமிக்கப்பட்ட அளகிரிநாயடு சொக்கநாதருக்கு ஆதியில் பால்கொடுத்து வளர்த்த செவிலித்தாய் மகன். அவன் தஞ்சைக்கதிபதியாகவே, துர் அஹங்காரியாகியும், சொக்கரைச் சட்டைசெய்யாமலும், அவருக்கு விரோதமாக அடுத்திருந்த சில பாளையக்காரர்களை வசப்படுத்திக்கொண்டும் வந்ததன்றியில், தஞ்சை சமஸ்தானத்தில் புராதனமாக இருந்த உத்தியோகஸ்தர்

கள் சிப்பந்திகள் எல்லாரையும் வேலையைவிட்டுப் போகச் சொல்லி, அவர்களுடைய சொத்துக்களை ஸமஸ்தானச் சொத்துக்களென்று விவாதம் செய்தான்.

இப்படி நீக்கப்பட்ட வேலைக்காரர்களில் ஒருவராகிய வெங்கண்ணா என்ற ஒரு நியோகிப் பிராம்மணர். விஜயராகவலு நாயடு காலத்தில் இராயசம் வேலையிலிருந்து பழகின வர். அவரை வேலையைவிட்டு நீங்கும்படி செய்யவே, அந்தப் பிராம்மணர், தன் பழியைத் தீர்த்துக்கொள்ளச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கையில், விஜயராகவலு நாயடுவின் துவிதிய குமாரன் சுமார் நான்கு வயதுடைய பையனை ஒரு தாதி எடுத்துக்கொண்டுபோய் நாகப்பட்டணத்தில் ஒரு செட்டியாரிடம் வளர்ப்பதாகச் சங்கதி தெரிந்து போய்ப் பார்க்க, அந்தப் பையன் படித்துக்கொண்டிருக்க, அங்கு ஒரு வருஷமிருந்து, அந்தச் செட்டியாருக்கு நம்பிக்கையுண்டாகும்படி செய்வித்துக்கொண்டு, அந்தப் பையனுக்குப் பன்னிரண்டு வயதுக்குமேலாகி யிருந்தபடியால், அந்தப் பையனாகிய செங்கமல தாசனையும், அவனை வளர்த்த தாதியையும், செட்டியாரையும், தட்டிக்கொடுத்துத் தைரியம் சொல்லி, நூறு ஜனங்களையும் பல்லக்குகளையும் தயார்செய்து, அவர்களை அழைத்துக்கொண்டு பீஜப்பூர் சிகந்தர் பாதுஷாவிடம் கூட்டிக்கொண்டுபோய் நடந்த சங்கதிகளை எல்லாம் சொல்லி முறையிட, அந்தப் பாதுஷாவானவர் விஜயராகவலு நாயடு குடும்பத்துக்குச் சம்பவித்த அலங்கோலத்தைப்பற்றிப் பரிதபித்தும், அந்த ராஜாங்கத்தை அளகிரி நாயடுவினிடமிருப்பதைப் பிடுங்கி இந்தச் செங்கமலதாசநாயடு வசம் கொடுக்கவேண்டிய உதவி செய்யவேண்டுமென்று எண்ணினர். எண்ணினலுமென்ன! அப்போது தஞ்சையிலிருந்த அளகிரிநாயடு சொக்கநாதநாயடுவாரின் மனுஷனபடியாலும், அந்தச் சொக்கநாதர் மதுரைக்கதிபதியும், பெருத்த சேனைகளை உடையவராகையாலும், அவரால் நியமித்த அளகிரி நாயடையும் அவரையும் ஜயிப்பது கஷ்ட சாத்தியமாக முடியுமென்று யோசித்துக்கொண்டிருக்க, வெங்கண்ணா என்ற பிராம்மணர் ஒரு உபாயம் சொன்னர்; அதாவது, தாம் (வெங்கண்ணா) தஞ்சைக்குப்போய் அளகிரிநாயடுடன்போய் உறவுசெய்தும், அந்த அளகிரி நாயடு திரிச்சி சொக்கநாதருக்கு எழுதும் கடிதங்களை அவமரியாதையுண்டாகும்படி எழுதுவித்தும், அவைகளால்

தஞ்சை அளகிரி நாயடுக்கும், சொக்கநாத நாயடுகாருக்கும் மனஸ்தாப முண்டாக்கி, இருவரும் பகைவர்போல ஒருவருக்கொருவர் உதவிசெய்யாதபடி செய்துவிட்டு வருகிறதாகப் பாதுஷாவிடம் சொல்ல, அவரும் கேட்டு, இது நல்ல உபாயமென்று நம்ப, அந்த வெங்கண்ணுவும் தஞ்சைக்கு உடனே வந்து, அதே மாதிரியாகவே தஞ்சைக்கும், திரிசிரபுரத்தாருக்கும் சங்கடங்கள் உண்டாகும்படி சதிமோத்தைச் செய்வித்துவந்து பாதுஷாவிடம் சொல்ல, அவரும் இந்தச் சமயம் பார்த்துத் தம்மிடமிருந்த மஹாராஷ்டிர வீரனுகிய எக்கோஜியிடம் 12,000 குதிரைப் பட்டாளத்தையும்-2000 பதாதிகளையும் அனுப்பித்தர, அந்த எக்கோஜியும் பாதுஷாவின் உத்தரவின்படி வந்து, பெங்களூரில் தன் சகோதரிடம் ஒருமாதம் தங்கி, அவ்விடத்திலிருந்து கொஞ்சம் குதிரைப் பட்டாளத்தையும், பதாதிகளையும் கூட்டிக்கொண்டு ஐயம்பேட்டைக் கருகில்வந்து, அளகிரி நாயடுவின் சேனையோடு தாக்க, எக்கோஜியின் 400 மராட்டிய வீரர்களும், அளகிரிநாயடுவின் 500 வீரர்களும் மடிந்தார்கள். இதனுல் அளகிரிநாயடு இனி மராட்டியரை ஜயிப்பது கஷ்டமெனக் கண்டு, திரிசிரபுரத்திலிருக்கும் சொக்கநாதனை உதவிசெய்ய வேண்டுமென்று மன்ருட, அப்போது அருகிலிருந்த வெங்கட கிருஷ்ணப்ப நாயடு முதலானவர்கள் 'இந்த ஆபத்துக்காலத்தில் உதவிபுரிய வேண்டும்' என்று சொல்ல, இந்த அளகிரிநாயடு தஞ்சைக் கரசனுண பிறகு தம்மை அசட்டைசெய்து துர் அகங்காரியாக இருப்பதைக் கொண்டும், தமக்கு எழுதிய கடிதங்களை என் தக்க மரியாதையாக எழுதவில்லை என்றும் கேட்டதற்கு, தஞ்சாவூரார் மதுரைக்காரருக்கு மாமூலாக எழுதுவதுபோலவே தாம் எழுதியதாக வெங்கண்ணனுடைய துர்ப்போதனையினுல் கர்வத்தோடு சொல்லி யனுப்பியதால், அப்படிப்பட்ட அளகிரி நாயடுக்குத் தாம் எவ்வித உதவியும் செய்யமாட்டோமென்று சொல்லி யனுப்பிவிட்டார்.

"எட்டிமரமானுலும் தான் நட்டமரம்" என்கிற பழமொழிப்படி, அளகிரியின் அகங்காரத்தைச் சட்டைசெய்யாமல், இப்படிப்பட்ட ஆபத்துக் காலத்தில் சொக்கர் உதவிசெய்திருந்தால், தஞ்சாவூர் மராட்டியர் வசமாகாமல் இன்றளவும் நாயடு ஸமஸ்தானமாகவே இருக்கும். சொக்கநாதர் இராஜ தந்திரத்தை அனுசரிக்காமல், தஞ்சை அளகிரியின்

அதிவிநயமான வேண்டுதலுக் கிரங்கி உதவி செய்யாமற் போகவே, எக்கோஜி தஞ்சைக்கே முற்றுகைபோட்டுப் பிடிக்கும் தருணத்தில், அளகிரிநாயடு பயந்து மைசூர் எல்லைக்குள் போய்விட, அந்தத்தஞ்சை ஸமஸ்தானசிங்காசனத்தில் செங்கமலதாசு நாயடை உட்காரவைத்தும், வழக்கப்படி மகுடாபிஷேகம் செய்வித்தும், உயுத்த செலவுக்குக் கும்பகோணம், மன்னார்கோயில், பாபநாசமாகிய மூன்று தாலுக்காக்களில் நின்றிருந்த கிஸ்தித் தொகைகளை வசூல் செய்துகொண்டும் பீஜப்பூருக்குப்போகப் பிரயத்தனப்படவே, தஞ்சைக்கு விஜயராகவனுநாயடு சந்ததியே பட்டத்துக்கு வந்துவிட்ட சந்தோஷத்தினால், விஜயராகவனுநாயடு கோட்டைக்குள் புதைத்து வைத்திருந்த பொக்கிஷக் குறியை பழய பொக்கிஷாதிபதி காட்ட, அதை வெட்டிப் பார்க்கையில் அதில் 20 லக்ஷம் வராகனும், பத்து லக்ஷம் ரூபாய்களும், 6 லக்ஷம் இரத்தின நகைகளும், அநேக லக்ஷம் சாணார் காசிகளும் அகப்பட, அவைகளை எடுத்துத் தமக்கு உதவிசெய்த எக்கோஜி சொந்த செலவுக்கு 15 லக்ஷம் ரூபாயும், அவர் திவானுக்கு இரண்டு லக்ஷம் ரூபாயும், சையது சாயபுக்கு லக்ஷம் ரூபாயும், மற்ற சில்லரையாக ஐந்து லக்ஷம் ரூபாயும், தர்பார் செலவுக்கு 5 லக்ஷம் ரூபாயுமாகக் கொடுத்துத் தாமும், வெங்கண்ணரும் ஐயம்பேட்டை வரைக்கும் வெங்கோஜியோடு போய் மரியாதை செய்து பீஜப்பூருக்கு அனுப்பிவைத்தார்கள்.

இப்படிப் பட்டமடைந்த செங்கமல தாஸனுக்கு, இராயசம் வெங்கண்ணனை மந்திரியாக நியமிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, அச் செங்கமலனை வளர்த்த தாதியானவள் பிரவேசித்து, இந்தச் செங்கமலனை வளர்த்த நாகப்பட்டிணம் செட்டியாரை மந்திரியாக நியமிக்க வேண்டுமென்று வம்புகள்செய்ய, செங்கமலன் பெற்றதாயாருக்குச் சமமான தாதியின் வார்த்தைக் கிணங்கிச் செட்டியாரையே மந்திரியாக நியமிக்க நேர்ந்தது.

இப்படித் தஞ்சைசமஸ்தானத்துக்குச்செட்டியாரை மந்திரியாக நியமித்ததில், இராயசம் வெங்கண்ணுவுக்கு அதிக விசனமும் பொறாமையு முண்டாகிச் சமயம் பார்த்துப் பீஜப்பூருக்குப் போய்ப் பாதுஷாவையும், எக்கோஜியையும் கண்டும், செங்கமலதாசன் செங்கோலைச் செலுத்த சக்தியற்றவனென்றும், அதனால் குடிகள் பலவித கஷ்டங்களை யனு

பவிக்கிறார்கள் என்றும், இனி பாதுஷாவின் உயுத்த கடனும், கப்பமும் கிரமமாகச் செல்லமாட்டாதென்றும், சாக்குகள் சொல்லி, எக்கோஜியை மறுபடியும் தண்டு அனுப்பித் தஞ்சையை வசமாக்கிக்கொள்ள வேண்டுமென்று சொல்ல, பாதுஷா கேட்டு, "நாமே ஒருவனைச் சிங்காசனத்திலேற்றி அவனை நாமே சிங்காசனம் விட்டு நீக்குவது இராஜ தருமமல்ல" என்றும், "அவன் பாக்கித்தொகையை மாத்திரம் கிரமமாக வசூல் செய்துகொள்வது நியாயமானது" என்றும், பாதுஷா மனதில் தோன்றி அக்கருத்தை எக்கோஜிக்கும் தெரிவித்து, ஒரு சிறிய தண்டுடன் தஞ்சைக்கனுப்ப, அந்த எக்கோஜியும் வந்து கும்பகோணத்தில் சேனையைத் தங்கச்செய்து இளைப்பாற்றிக்கொண்டிருந்தார்.

இந்தச் செங்கமலதாசு நாயடு, விஜயராகவலு நாயடு குமாரனென்று டிஸ்டிரிக்ட்டு மானுயல் சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கினும், அவரை விஜயராகவலு நாயடு காருடைய பேரன் என்று கனம் டெயிலர் புத்தகத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும், அச்செங்கமலதாச நாயடு சதா விஷ்ணுபக்தியி லீடுபட்டுச் சத்தியத்திற்கும் சுவாமி பக்திக்கும் பயந்தவராகையால், நிரபராதியான தம்மீது எக்கோஜி படையெடுத்துவர ஏதுகாரணமுமில்லையே யென்று ஏமாந்திருந்தார். பிறகு வேவுகாரர்கள் ஓடிவந்து செங்கமலனை வணங்கி "எக்கோஜியின் சேனைகள் கோட்டைக்கருகில் வந்துவிட்டன" எனப்பலதரம் சொல்லியும், தக்க தண்டுதளாதிகளோடு போய்த் தடுக்காமல், எக்கோஜிசேனை வரும் வழியில் துளசியைக் கொண்டுபோய் போட்டுவிடுங்கள்! எக்கோஜி மராட்டியனும் மஹாமதியருடைய சேனைத் தலைவனுமாக இருப்பினும், பிறப்பில் இந்துவாகையாலும், விஷ்ணு சுவரூபமான துளசியைத் தாண்டி வரமாட்டார்" என்றும் சொல்லி அனுப்பிவிட்டு, கண்ணை மூடிக்கொண்டு விஷ்ணு பூஜையிலிருக்க, வேவுகாரர்களும் வேந்தன் உத்தரவுப்படி கோட்டையிலிருந்த இராமதுளசியைப் பிடுங்கிக் கூடைகூடையாகக் கொண்டு போய் எக்கோஜி வரும் வழியில் போட்டுவிட்டார்கள். மேற்படி துளசியின் மகிமையை அறியாத மராட்டியர் அதை மிதித்துக்கொண்டு யாதொரு தங்கு தடைகளில்லாமையால் கோட்டையை வந்து வளைந்துக்கொண்டு,

ஊயுத்த செலவையும் கப்பத்தையும் கேட்க ஆரம்பித்தார்கள்.

எக்கோஜி வந்த உத்தேசத்தை அறியாத செங்கமலதாசன், மராட்டியர் விஷ்ணுபக்தியும் இந்து மதாபிமானமுமில்லாத அசத்தியர்களென்றும், இனி அவர்களோடு எதிர்த்துச் சண்டை செய்வது சத்தியவான்களுக்கும்-சுவாமிபக்தி யுள்ளவர்களுக்கும் தகாதென்றும் எண்ணி, கோட்டையின் வாசலைத் திறந்துவிடச் சொல்லிவிட்டு, தாம் அரியலூர் பாளையக்காரரிடம் அடைக்கலம் புகுந்தார்.

இது விஷயத்தைப்பற்றித் தஞ்சாவூரிவாரு சரித்திரத்தில் வேறுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது: எக்கோஜி கும்பகோணத்தில் தங்கியிருந்தபோது பொறுமைகொண்ட வெங்கண்ணன் போய் "இப்படிப்பட்ட சோழதேசத்துக்குத் தாங்கள் இராஜராக இருப்பதுபோய் ஒரு அலுக்கனுக்குக் கீழிருந்துகொண்டு இந்தச் செங்கமலனிடம் கப்பம் வாங்கிப் பிழைப்பது புருஷத்தனமல்லவே" என்று பலவாறு சொல்ல, எக்கோஜி கேட்டு "நம்மைப்போன்ற இந்துவாகிய செங்கமலனைக் கெடுத்து, அவன் இராஜ்ஜியத்தைப் பிடுங்கி வாயில் போட்டுக்கொள்வது தருமமல்ல" என்றும், இது சங்கதியைக் கேட்டால் பாதுஷா தம்மிடம் சிறையிலிருக்கும் எக்கோஜியின் தந்தையையும், தம்மையும் கொன்றுவிடுவாரென்றும், மேலும், தஞ்சைக்கு அருகில் திரிசிரபுரத்தாரிருப்பதால், அவர்கள் செங்கமலனுக்கு உதவி செய்ய ஆரம்பித்தால், தூரதேசத்தானாகிய தனக்குக் கஷ்டம் வந்துவிடுமென்று சொல்லி வெங்கண்ணனைக் கண்டித்தும், வெங்கண்ணன் கேளாமல் ஸமஸ்தானத்தை எப்படியாவது கெடுத்துவிடவேண்டுமென்று ஒரு உபாயம் செய்தனன். அதாவது: "எக்கோஜி செங்கமலதாசனைக் கொன்று தஞ்சையைப் பிடித்துக்கொள்ளச் சமயம் பார்ப்பதாயும், உடனே கோட்டையை விட்டு வெளியே போகாவிட்டால் பிராணன் மிச்சமாகாதென்றும் பயப்படுத்தி, ஆஷாடபூதியாகிய வெங்கண்ணன் செங்கமலதாசுக்குக் கடிதம் எழுத, பதினொன்று வயதையுடைய செங்கமலதாசு பயந்து அரியலூருக்கு ஓடிப்போகவே, இது சங்கதியைப்பற்றி அந்த வெங்கண்ணன் சொல்லி, எக்கோஜியின் மனதை கலக்கவே, எக்கோஜியும் கோட்டைக்குள் வந்து செங்கமலதாசருடைய சத்தி

யத்தையும் பக்தியையும் பார்த்தும், அவர் அனுவசியமாகக் கோட்டையை விட்டுப் போனதைப்பற்றி விசனப்பட்டும், அவரை மறுபடியும் தருவித்துப் பாதுஷாவின் கப்பத்தையும் கடனையும் கட்டிவிட்டு எப்போதும்போலத் தஞ்சையை ஆண்டுவரும்படி சொல்லியனுப்ப, இராயசம் வெங்கண்ணன் இப்படிச் செய்யத்தகாதென்றும், எக்கோஜிக்குப் பலவித தந்திரோபாயங்களைச் சொல்லித் தஞ்சையைத் தாமே ஆண்டுவரும்படி வேண்ட, எக்கோஜி, இப்படிப்பட்ட அக்கிரமம் செய்தால் பாதுஷா அங்கீகரிக்க மாட்டாரென்றும், தாமும் இப்படிப்பட்ட அக்கிரமத்தை நடத்த இஷ்டப்படவில்லை என்றும் சொல்லிக்கொண்டே இருக்கையில், பீஜப்பூர் பாதுஷா இறந்துவிட்டதாகவும், அவர் சந்ததிகள் அச்சமஸ்தானத்திலிருக்கும் இந்து உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுத்திருந்த பெரிய உத்தியோகங்களைப் பிடுங்கித் தம் இனத்தாரான மகமதியருக்கே கொடுத்துவருவதாகவும் சங்கதி வந்தமையால், "பணமென்றால் பிணமும் வாய் திறக்கும்" என்கிற பழமொழிப்படி, மஹா யோக்கியரான எக்கோஜியின் மனமுங் கெட்டுத் தஞ்சாவூருக்குத் தாமே ராஜன் என்று பட்டங் கட்டிக்கொண்டார். இவரிப்படித் தஞ்சையிற் பட்டங் கட்டிக்கொள்ளவே, செங்கமலதாசு நாயடு பயந்து அரியலூருக்குப் போகச் சம்பவித்தது. அப்போது அந்த அரியலூர் மதுரை ஸமஸ்தானத்தைச் சார்ந்ததாகவும், அச் சமஸ்தானத்தார் தமது தஞ்சை குடும்பத்தாருக்குப் பழைய பகைவரானபடியினாலும், என்ன கஷ்டம் சம்பவிக்குமோ வென்று மனோராச்சியம் செய்யவே, அப்போது அந்த அரியலூருக் கதிபதியாக இருந்த இரங்கப்ப நாயடு எதிர்வந்து செங்கமலருடைய பயத்தைப் போக்கி, தக்க மரியாதையுடன் அழைத்துப்போய் ஆதரிக்க, தஞ்சை மன்னருக்கு மாட்டியரானுண்டான கஷ்டத்தைக் கேட்டுச் சேதுபதி ஒரு சிறிய தண்டுடன் சண்டைக்குவர, சேதுபதியின் உள் உளவை அறிந்த வெங்கண்ணன் 2000 குதிரைப் பட்டாளத்தோடும் 6000 பதாதிகளோடும் போய்த் தாக்கித் தந்திரமாக வசப்படுத்திச் சமாதானமாக்கிவிட்டார். பிறகு செங்கமலதாசு நாயடு புதுக்கோட்டைக்குவர அங்கு அவரையும், அவர் குமாரர்களான விஜயமன்னர் நாயடுவையும் - பங்காருசாமி நாயடுவையும் தக்க மரியாதையோடு வரவழைத்து வைத்திருக்கையில், இலங்கையைச் சார்ந்த கண்டிதேசத்தில் இராஜனாக இருந்த நாயடுகாருக்கு இந்த

விஜய மன்னாரப்ப நாயடு குமாரத்திகளை விவாஹம் செய்வித்துக் கொடுத்ததில், அவர் இவர்களுக்குப் பூண்டி நாட்டை ஜாகீராகக் கொடுத்தும், பிறகு தமக்குச் சந்ததி இல்லாமையால் இந்த விஜயமன்னார் நாயடு குமாரர் விஜயராகவலு நாயடுகாரைச் சுவீகாரம் செய்துகொண்டும், சிம்ஹளத்தீவிற்கு அரசனாக்கினார்கள். மற்றொரு குமாரராகிய பங்காரு சாமி நாயடு ஜம்புகேசுவரத்தை யடுத்த கொண்டையம் பேட்டையிற் குடிபுகுந்தார். இப்படித் தஞ்சையில் அதிக வீரதீரத்துடனும், பக்தி விசுவாசத்துடனும் ஆண்டுவந்த நாயடு ஸமஸ்தானம்: தேசாபிமானம், மதாபிமானமற்ற மன்னர்கள் காலத்தில், மற்ற மன்னர் வசமாகச் சம்பவித்தது என்ன பரிதாபமானவிஷயம்! இந்தத்தஞ்சை நாய்க்கருடைய வம்சாவளியை நாகை நீலோசனி பத்திரிகையில் ஸ்ரீமான் பி. ஏ. இராஜமய்யங்கார் எழுதிவந்த வாசகங்களிலும், ஸ்ரீ சரவணப்பிள்ளை எழுதிய மோஹனாங்கி புத்தகத்திலும், ஸ்ரீ குப்புசாமி சாஸ்திரிகள் எழுதிய நாயக்கராஜ சரித்திரத்திலும், தஞ்சை சரித்திரத்திலும் விவரமாகக் காணலாம்.

---

## தஞ்சாவூரில் மஹாராஷ்டிர ஸமஸ்தான மன்னர்கள் வம்சாவளி.

---

1. பாபாஜி பவுசைலே—இவர் புனாவுக் கருகிலுள்ள மூன்று கிராமங்களுக்குத் தலைவர்.
2. மாலோஜி—நைஜாமிடம் வேலையிலிருந்தவர்.
3. வாஞோஜி.
4. சஹோஜி—1544-ஆம் வருஷம் பிறந்தவர். துங்கா பாய் மோஹினியை மணந்தார்.
5. மேற்படி மனைவி ஜீஜிபாய்.
6. எக்கோஜி-வெங்கோஜி - தஞ்சையைச் செங்கமலனிடமிருந்து பிடுங்கினவர்.
7. சாந்தோஜி—சம்சாரி புத்திரனல்லன்.
8. சாஹோஜி—1648-1711 சந்ததியற்றவர்.
9. சார்போஜி—1711-1729 மேற்படி.
10. துக்கோஜி—1729-1736

11. பாபாசாஹிப்—1736-37 ஸ்ரீ ஜானுபாய் புருஷர்.
12. சாஹேஜி—1748-சகோதரன் சண்டைக்காக ஆங்கிலேயர் உதவியைத் தேடினர். 1765-ல் இறந்தார்.
13. பிரதாபசிங்கு மகாராஜா-வைப்பாட்டி மகன்-1778-ல் இறந்தார்.
14. துலாஜி ராஜா—1765 - 1788 - ஆற்காடு நவாப்புடன் 1767-ல் சண்டையிட்டார்.
15. அமர்சிங் மகாராஜா—1788-1798 அவிவேகன்.
16. சார்போஜி ராஜா—1798-1833 தத்து புத்திரன்.
17. சிவாஜி மகாராஜா—1833-1855 பொம்மைராஜா.
18. விஜயமோகன முத்தாம்பாபாய் கடைசிராணி.

நாயடுகாருகளுக்குப் பின் பட்டத்துக்கு வந்த மஹாராஷ்டிர மன்னர்களில் பெரும்பாலார், சிற்றின்பத்தில் காலம் போக்கி, மிதமிஞ்சிய கடன்களை வாங்கிக் கெட்டுப் போய்விட்டாலும், தஞ்சையில் சங்கீதம் சிற்பவிஞ்ஞான வித்தை முதலான சில சீர்திருத்தங்கள் விருத்தியாயின. விருத்தியாகியும் என்ன? அரசர் இராஜாங்க விஷயத்தைக் கவனிக்காமல், அருமையான காலத்தையும், அருத்தத்தையும், அரிவையர்க்கு ஈந்து அலைந்துவிட்டபடியால், 1857-ம் வருஷம் தஞ்சை நகரம் ஆங்கிலேய கவர்ன்மெண்டில் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

---

## தஞ்சையில் மஹாராஷ்டிர ராஜ்ஜிய நியமனம்.

விஜயராகவலு நாயடுகாருடைய கடைசி குமாரன் செங்கமலதாச நாயுடு பீஜப்பூர் பட்டாணி நவாப்புகளுடைய உதவியின்பேரில் தஞ்சைக்கு அரசனாகி ஆண்டுவந்தாலும் அருகிலிருக்கும் தம் இனத்தாராகிய அரசர்களால் சண்டைச்சச்சரவுகளுண்டாக மஹாராஷ்டிர தலைவனான எக்கோஜி என்பவர் தஞ்சை அரசனை யோட்டித் தானே 1674-ல் அரசராகிவிட்டார். இந்த எக்கோஜி புகழ்பெற்ற சிவாஜியின் சிறியதாயார் குமாரரும் பவுன்சலே என்னும் பெரிய குடும்பத்தைச் சார்ந்தவருமாவர். இவர் சந்ததியாகிய பிரதாப்சிங் மஹாராஜா ஆண்டுகொண்டிருக்கும்போது பட்டமிழந்த சிவாஜிதன்னைத் தாக்காதிருக்கும்படி இங்கிலீஷ்காரர் உதவி செய்தால் அவர்களுக்கு டேவிக் கோட்டையும் வேறு சில

கிராமங்களையும் கொடுப்பதாக உடன்படிக்கை செய்ய அவருக்குதவியாக ஒருசிறு தண்டை அனுப்பினார்கள். அச்சேனை ஜெயிக்காதபடியினால் மறுபடியும் ஒரு சேனை அனுப்பினதில் டேவிக் கோட்டை பிடிக்கப்பட்டது 1754-1758 வருஷங்களில் பிரான்சுக்காரர் இந்த ஜில்லாவின்மேல் படையெடுத்து வந்தார்கள். அப்போது இராஜாவுக்கு இங்கிலீஷ்காரர் உதவியிருந்தபடியால் அவர்கள் ஓடிவிட்டார்கள். 1771-1773-ல் கர்னாடக நவாப்பின் தூண்டுதலினால் இங்கிலீஷ்காரர் தஞ்சைபேரில் படையெடுத்துவந்து தாக்கி ராஜனைப் பிடித்துச்சிறையிலிட்டு நாட்டை நவாப்புக்குக் கொடுத்தார்கள். அந்தநவாப் குடிகளை வருத்திப் பணம்வாங்கிப் பங்கப்படுத்த சீமையிலிருந்த கம்பெனியின் டைரெக்டர்கள் சென்னைக் கவர்னர் செய்த அக்கிரம நடவடிக்கையைக் கண்டித்து நவாபிடமிருந்த நாட்டைத் துலாஜி இராஜாவுக்கே ஸ்வாதீனப்படுத்தினார்கள். 1781ஆ ஹைதராலி படையெடுத்துவந்தார். தஞ்சையைத் தவிர மற்ற இடங்களில் முற்றுகைபோட ஆங்கிலேயர் போட்டுநோவே என்னுமிடத்தைப் பிடித்து நாகப்பட்டணத்துக்கு வர ஆங்கிருந்த ஹைதராலியின் உதவிக்காரராகிய டச்சுக்காரர் ஓட்டம்பிடிக்க ஹைதராலி முற்றுகை நீங்கியது. 1787ஆ துலாஜிமஹாராஜா இறந்துபோகவே அவர் தத்துபுத்திரனாகிய சராபோஜி பட்டத்துக்கு வந்தார். இவர் ஸ்வார்ட்ஸ் என்னும் பாதிரியாருடைய சிஷ்யனாக இருந்தவர். சிறிய கோட்டையில் தன் குருவாகிய ஸ்வார்ட்ஸ் பாதிரியாரைப்போல் கற்சிலையைச் செய்துவைத்தார். இவர் சரஸ்வதிமஹாலுக்கு அநேக சமஸ்கிருத புத்தகங்களைச் சேர்த்தவர். 1799ஆ அக்டோபர்மீ உடன்படிக்கையின்படி தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் வேண்டிய சொத்துகளை வைத்துக்கொண்டு பென்ஷன் பெற்றுக்கொண்டு தஞ்சை ஸமஸ்தானத்தை இங்கிலீஷ்காரர் வசமாக்கிவிட்டார்.

---

## பிருஹதீஸ்வரன் கோயில்.

இந்த அழகிய கோயில் 1023ஆ முதல் 1064ஆ வரையில் தஞ்சையிலிருந்து அரசாண்ட இராஜ இராஜேந்திர சோழனால் கட்டப்பெற்றது. இந்தக் கோயிலைக் கட்டுவதற்கு அப்போது காஞ்சீபுரத்தி லிருந்த சிறந்த சிற்ப சாஸ்திரியாகிய சாமவர்மா என்பவரைத் தருவித்து இந்தக்

கட்டிடமேல் விசாரணை குழுவரைத்தலைவராக நியமித்தான். இப்படிக் கட்டிய கோயிலுக்கு அந்த இராஜ ராஜேந்திர சோழனும் அவர் குமாரர் இராஜேந்திர சோழனும் அநேக பொன் நவரத்ன ஆபரணங்களையும் தர்ம மானிய பூமிகளையும் கொடுத்ததை அந்தக் கோயில் சுவர்களில் செதுக்கப் பட்டிருப்பது இப்போதும் காணலாம். முதற் வாசற்படியில் அநேக ஹிந்துமத விக்கிரகங்கள் செதுக்கப்பட் டிருக்கின்றன. இந்த வாசலைவிட்டுக் கொஞ்சதூரம் உள்ளே சென்றால் 90 அடிகள் உயரமுள்ள ஒரு பெரிய கோபுரமும், அதைத் தாண்டிப்போனால் 60 அடிகள் உயரமுள்ள அழகிய கோபுரமும் கட்டப்பெற் றிருக்கிறது. அதைத் தாண்டிப்போனால் கோயிலின் மத்தியமண்டபம் இருக்கிறது. அதற்கருகில் பலிபீடமும் அருகிலிருக்கும் பெரிய விருஷப விக்கிரகத்திற்கு வடபாகத்தில் பெரிய நாயகியம்மன் கோயிலிருக்கிறது. அங்குப் படிக்கட்டுகளேறித் தாண்டிப் போனால் விமானத்தைக் காணலாம். மேற்சொன்ன பெரிய நாயகியம்மன் கோயிலுக்கும் அடுத்திருக்கும் பெரிய கோயிலுக்கும் இடையிலிருக்கும் சந்து வழியாகப் போனால் பல புஷ்பங்களுள்ள அக் கோயில் நந்தவன மிருக்கின்றது. இரண்டாவது கோபுரத்தின் வழியாக வந்தால் மத்திய மண்டபத்துக்கு இடதுபாகமாகத் தாசிகள் நடிக்கும் அஷ்டகோடி மண்டபத்தைக் காணலாம். அதைத் தாண்டிப்போனால் இலிங்கங்களையும் நடனசாலையையும் காணலாம். அதற்குச் சமீபத்தில் தக்ஷிணாமூர்த்தி கோயிலிருக்கிறது. அதற்கு இடது பக்கத்தில் கணபதிமண்டப மிருக்கிறது.

அதைவிட்டுச் சற்றுதூரம் போனால் மேற்கிலும் வடக்கிலும் 108 சிவலிங்கங்கள் இருக்கும் மண்டபங்களும், அவற்றின் சுவர்களில் 64 திருவிளையாடல் படங்களையும் காணலாம். அந்தக் கோபுரத்திற்கு மேற்கில் ஒரு வேப்பமர மிருக்கிறது. அதனடியில் ஒரு மஹாத்மாவின் சமாதி இருக்கிறது. பிறகு மத்திய மண்டபத்திற்கு வலப்புறம் போனால் அழகிய சுப்பிரமணியர் கோயிலொன் றிருக்கிறது. அதற்கு முன்னிருக்கும் மஹாமண்டபத்தில் மஹாராஷ்டிர இராஜர்களுடைய படங்க ளிருக்கின்றன. அங்கிருக்கும் கோபுரத்திற்கருகில் சபாபதிமண்டபமும் ஓமகுண்ட மண்டபமுமிருக்கின்றன. இந்தக் கோயிலின் விஸ்தீரணம்: 800 அடிகள் நீளமும்-415 அடிகள் அகலமு முள்ளதா யிருக்கிறது. இக்

கோயிலிலுள்ள பெரிய நந்தியானது 16 அடிகள் நீளமும் 12 அடிகள் அகலமு முள்ளதாயும், 25 டன் பளுவுள்ளதாயும் இருப்பதன்றியில், அது பின்னும் பின்னும் வளர்ந்தோங்காதபடி அதன் தலையின் பின் பக்கத்தில் ஒரு இரும்பு ஆணியை அடித்து இறுத்தியிருக்கிறார்கள். இந்த நந்தி விக்கிரகத்தைச் சுமார் 400 மைல்கள் தூரத்தில் இருந்த ஒரு சிறுமலைக் குன்றைச் செதுக்கி வேலைசெய்து இங்குக் கொண்டுவந்து வைத்ததாக ஒரு சரித்திரம் சொல்லுகின்றது. அதற்கெதிரில் சந்திரசேகரருடைய பெரிய விக்கிரகம் இருக்கிறது. இங்குள்ள விமானகோபுரம் அஸ்திபாரத்திலிருந்து கோயில் மேல்திட்டம் வரை 168 அடிகளுள்ளனவாயும், அதற்கு மேல் 216 அடிகள் உயரமுள்ளனவாயும் இருப்பதோடு, அதன் நான்கு மூலைகளில் 6 அடிகள் நீளமும் 4 அடிகள் அகலமுமுள்ள நந்திகள் கட்டப்பட்டிருக்கின்றன. அந்தக் கோபுரத்தில் சிற்பாலங்காரச் சித்திரப் பிரதிமைகள் செய்து வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஒரு பிரதிமை ஆங்கிலேயரைப்போல் தொப்பி பூட்ஸ்சுடன் இருக்கிறது.

அதைச் செய்த சிற்பியானவன் ஆங்கிலேயர் இத்தேசத்திற்கு வந்து அதை ஆளுகை செய்வார்கள் என்னும் தீர்க்க தரிசனத்தால் செய்து வைத்ததென்று சொல்லுகிறார்கள். ஆனால் அது ஐரோப்பாகண்டத்தைச் சார்ந்த டானியதேசத்தானைப்போ லிருக்கிறது. இந்தக் கோபுரத்தின் உச்சியில் தங்கக்கலசம் வைத்திருக்கும் பாகமானது $25\frac{1}{4}$ சதுர அடிகளுள்ளனவும் 80 டன் கனமுள்ள ஒரே கல் தஞ்சைக்கு நான்கு மைல்கள் தூரத்திலிருக்கும் சாரப்பள்ளம் என்னுமிடத்திலிருந்து சாரங்கள் கட்டிக் கொண்டுவந்து வைக்கப்பட்டதாம். இவ்வளவு பிரயாசையோடு செய்த இந்தக் கோபுரத்தின் பின்புறச் சுவற்றில் தண்ணீர் பீறிக்கொண்டு வந்து பக்தர்களின்மேல் விழும்படி செய்திருக்கிறதன்றியில் இந்தக் கோபுரத்திற்கு எந்தக்காலத்திலும் எந்தப்பக்கத்திலும் நிழலே சாயாதபடி சிற்பசக்தி அலங்காரமாகக் கட்டப்பெற்றிருக்கிறது. இக் கோபுரம் மாத்திரம் கட்டுவதற்குப் பன்னிரண்டு வருஷங்கள் சென்றனவாம். இந்தக் கோயிலானது ஒரேகாலத்தில் ஆரம்பித்து ஒரேவித சிற்பிகளால் கட்டப்பட்டபடியால் இதில் ஒட்டு வேலைகளில்லாமல் இக்காலத்தாரும் புகழ்ந்து கொண்டாடும்படி பிரகாசிக்கின்றது.

## தஞ்சை பிருகதீஸ்வரன் கோயிலின் ஓர் மண்டபத்திலிருந்து செய்த பிரார்த்தனை.

"ஓ பிரம்மாண்ட நாயகராகிய எம்பெருமானே! சோழர்களுடைய சிவபக்தி நேசத்தினாலும் செல்வச் செருக்கினாலும் சிற்பசாஸ்திரம் சிரித்துக் கொண்டாடும்படியாகக் கட்டப்பெற்ற இந்த விசித்திர விநோத கோயிலில் உன்னைத் தியானிக்கப் பாக்யம் பெற்றேன். ஆஹா! அக்காலத்துச் சிற்பிகளால் கர்ப்பக்கிரஹத்தின் கோபுரம் எக்காலத்திலும் எப்பக்கத்திலும் நிழல் சாயாமல் நேர் நேராக நிற்கும் நிலைமையை நோக்குந்தோறும் நினது பக்தர்களுடைய மனோரதம் எக்காலத்திலும் எப்பொழுதும் எப்பக்கத்திலும்சாயாதபடி ஒரே நிரந்தர நிலையில் நிற்கவேண்டுமென்று கற்பிக்கின்றது. இங்கிருக்கும் ரிஷபம் தினேதினே மேல் நோக்கி வளருவதைப்போல் தோன்றும் காக்ஷி மாந்தர்களுடைய மதியானது எப்போதும் நின் பக்தியில் ஓங்கி வளரும்படித் தூண்டுவதாகத் தோன்றுகின்றது. இன்னும் இம்மந்திரத்திலிருக்கும் சிற்பலங்கார சித்ரவேலைகளெல்லாம் உன்னுடைய பெருமையையே புகழ்ந்து கொண்டாடும்படி புத்தியைத் தூண்டுகின்றது. ஆகவே அநேக சோழர்களும் அவர்களுக்கும் பின் ஆண்ட நாயடு அரசர்களும், அவர்களுக்குப் பின் ஆண்ட மஹாராஷ்டிரர் முதலான மன்னர்களும், மற்றும் அநேக பக்தசிகாமணிகளும் வந்து தமது பக்தியை விருத்தியாக்கிக்கொண்ட க்ஷேத்திரமன்றோ? இப்படிப்பட்ட க்ஷேத்திரத்தில் நானும் வந்து பிரார்த்தித்து நின் பெருமையைப் புகழ்கின்றேன். எனக்கு நின்னிடமிருக்கும் பக்தியை தினே தினே விர்த்தியாக்கி நின்னிடத்தே நிலைபெறும்படி செய்வாயாக. ஓம் தத்சத்."

---

## தஞ்சை ராஜ அரண்மனை.

இராஜ அரண்மனையானது பெரிய கோட்டைக்குள் இருக்கும் ஒரு புராதன கட்டிடம். இது ரெயில்வே ஷ்டேஷனுக்கு முக்கால்மைல் தூரத்தில் கிழக்கு வாசலோடு இருக்கின்றது. இந்தக் கோட்டைக்குள் தென்பக்கத்தில் இராஜமஹால் என்னும் கட்டிடம் 90 அடிகள் உயரமுள்ளதாகவும், 5 அடுக்கு மெத்தையாகவும் கட்டப்பட்டிருக்கிறது. இவ்வளவு உயரமாகக் கட்டப்பட்டிருப்பதற்குக் காரணம் என்னவென்று விசாரித்ததில், தஞ்சையிலாண்ட அச்சுதப்ப

நாயுடு விஜயராகவலு நாயுடு மஹா வைஷ்ணவ பக்தர்களான படியால் அடிக்கடி ஸ்ரீரங்கத்தின் கோபுரங்களையும் கோயில்களையும் தஞ்சையிலிருந்து தரிசிப்பதற்கே இவ்வளவு உயரமாய்க் கட்டினதாகச் சொல்லுகிறார்கள். ஆயினும், அக்கட்டிடத்தின் அடியிலிருக்கும் அநேக அணைகள் இடிந்து சீர்கெட்டுப்போயிருக்கின்றன. அதற்குக் கிழக்கே தர்பார் ஹால் என்னும் இராஜ சபாமண்டபம் இருக்கிறது. இதில் மிஸ்டர் பிளாக்ஸ்மேன் என்பவரால் செய்யப்பட்ட சிவாஜி இராஜாவின் வெள்ளை ஸ்படிகக் கற்சிலை வைக்கப்பட்டிருக்கிறது. அச் சிலையின் சிரசிலிருந்த உருமாலை அதிக பளுவானதா யிருந்தபடியால் அதைச் சிரசிலிருந்தெடுத்து கீழேபக்கத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. அன்றியும், கனம் டேமர் என்பவரால் சிவாஜி ராஜாவுக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்ட நெல்சன் பிரபுவின் சிலையும் பிகாட் துரையினுடைய சிலையும் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த அரண்மனைக் குள்ளாகவே சரஸ்வதிமஹால் என்னும் வித்யாலயம் சேர்க்கப்பட்டு இப்போது அதில் 18,000 சம்ஸ்கிருத கையெழுத்துப் புத்தகங்க ளிருக்கின்றன. அவைகளில் 8000 புத்தகங்கள் பனையோலைகளில் எழுதப்பட்டவைகளாம். இன்னொரு பக்கத்தில் மஹாராஷ்ட்ர தர்பார் ஹால் என்னும் ஒரு சபாமண்டபம் இருக்கிறது. இதில் சிவாஜிராஜாவும் அவர் மந்திரியும் பிரதானியும் வலமிடம் இருக்கும் பாவனையாகப் படமிருக்கின்றது. அதற்குள் முன்னிருந்த சிம்மாசனத்திற்குப் பதிலாக ஒருபெரிய நாற்காலியை வைத்திருக்கிறார்கள். இக் கட்டிடத்திற்கடுத்த ஆயுதச்சாலையில் வெள்ளி தங்கம் கைப்பிடிகள் வைத்த விசித்ர விநோத கத்திகளும் - கட்டாரிகளும் - சூலாயுதங்களும்-பாங்கிகளும்-துப்பாக்கிகளும்-பிஸ்தோல்களும் - சிறு பீரங்கி முதலான சாமான்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. கோட்டையின் கிழக்கு வாசலுக்கருகிலிருக்கும் தவசுமேடு என்னுமிடத்தில் 25 அடிகள் நீளமும், 2 அடி அகலமும் உள்ள ஒரு பழைய பீரங்கி வைக்கப்பட்டிருக்கின்றது. இக்கோட்டைக்கு வெளியில் 1883ஆு தஞ்சாவூர் இராணியவர்களால் கட்டப்பட்ட ஒரு பெரிய மணி கூண்டு கோபுரமிருக்கின்றது.

## இதன் தற்கால ஸ்திதி.

இந்தத் தஞ்சாவூர் ஜில்லாவானது 3654 சதுரமைல்கள் விஸ்தீரணமுள்ளதாயும், காவிரிநதியின் நீர் வளம் நிலவள

முள்ளதாயும், சங்கீத முதலிய சாஸ்திரப் பயிற்சிக்குச் சிறந்தவிடமாயு மிருக்கிறது. ஆங்கிலேயர் முதலானவர்கள் மானம்புச்சாவிடிக் கருகில் குடியிருக்கிறார்கள். கலெக்டர் கச்சேரி முதலானவைகள் இங்கு இருக்கின்றன. இதன் குடித்தொகை 60,342. இது சென்னை தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 217¾ மைல்கள் தூரத்திலிருக்கிறது.

---

## தஞ்சாவூர் அன்னவஸ்திர வஸதி.

இத்தஞ்சாவூர் ஜில்லா, அன்னவஸ்திரத்திற்குக் குறைவற்ற ஜில்லாவென்று சொல்லலாம். எப்படியெனில் அன்னத்திற்குப் பிரதானமான அரிசியை நெல்லிலிருந்து பிரிக்கும் இயந்திர கருவிகள் இந்த ஜில்லாவைச் சார்ந்த முத்துப்பேட்டையில் ஒன்றும், பட்டுக்கோட்டையில் 1-ம், திருவாசகத்தில் 1-ம், கோயிலூரில் 1-ம், மாயவரத்தில் 1-ம், நீடாமங்கலத்தில், 3-ம், மன்னார்குடியில் 3-ம், திருவாரூரில் 3-ம், மாங்குடியில் 1-ம், தில்லைவிளாகத்தில் 1-ம், முத்துப்பேட்டையில் 2-ம், பேரளத்தில் 2-ம், கொள்ளிடத்தில் 1-ம், சீகாழியில் 1-ம், குற்றாலத்தில் 1-ம், பாபநாசத்தில் 1-ம், பூண்டியில் 1-ம், கொரடாச்சேரியில் 1-ம், அறித்துவாரமங்கலத்தில் ஒன்றுமாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றதன்றியில், பின்னும் சிலவிடங்களில் சிறு யந்திரக்கருவிகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. வஸ்திரங்கள் நெய்வதற்காகத் தஞ்சாவூர், மாரியம்மன் கோயில், அம்மாபேட்டை, மன்னார்குடி, சிக்கல், கொரநாடு, கும்பகோணம், திருநாகேஸ்வரம், அய்யம்பேட்டை, திருவையாறு, கொள்ளிடம், காவேரி, குடநுட்டி, வெட்டாறு, விண்ணாறு முதலான விடங்களில் விசேஷ தரிகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

இத்தஞ்சையானது: மஹா வீரரும் தர்ம பிரபுக்களுமாகிய அநேக அரசர்களும், இலக்கிய இலக்கண சங்கீத சாஸ்திர நிபுணர்களும், ஸ்ரீராஜா மாதவராயரைப் போன்ற மதியூகிகளும் பிறந்த விடம்.

---

## திருஆலம்பொழில்.

(ஆத்மநாதேச்சுரர், ஞானம்பிகையம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

அநந்தன் என்னும் நாகமும், அட்டவசுக்களும் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இங்குற்றுத் துயிலுகையில் "மழபாடிக்கு வர மறந்தனையோ" என உணர்த்தியருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவையாற்றிலிருந்து திருக்கண்டியூரை யடைந்து 9 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பூந்துருத்தி.

(புட்பவனநாதேச்சுரர், அழகாலமர்ந்தநாயகியம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

கந்தருவர்களாற் புட்பவனஞ் செய்து பூசிப்ப, மகிழ்ந்து வரமளித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் இங்கெழுந்தருளி, அடியார்களுக் கமுதருத்திக்கொண்டிருந்த காலையில், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் மதுரையிற் சென்று அமண்காடழித்து இங்குவர, எதிர்சென்று பிள்ளையார் சிவிகையை அரசுகள் தாங்கிச் செல்லுழி, பிள்ளையார் ஓர் தோற்றத்தால் "அப்பரெங்குற்றார்?" என்று பரிசனரை வினவியருள, அப்பமூர்த்திகள், "அடியேன், தேவரீர் சிவிகையைத் தாங்கப் பெறும் பேறுபெற் றிங்குற்றேன்" என்னும் வாசக முற்றுமுன், பிள்ளையார் சிவிகையினின்றிழிந்து அப்பரை வணங்க, அப்பமூர்த்திகளும் வணங்கித் தழுவிக்கொண்டு புட்பவன நாதேஸ்வரரைத் தரிசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது தஞ்சையிலிருந்து 'திருவையாறு திருக்கண்டியூரையடைந்து மேற்கே 8 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கண்டியூர்.

(வீரட்டானேச்சுரர், மங்கைநாயகியம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

மகாவிஷ்ணு பூசித்த தலம். ஓர் காலத்தில் பிரமவிஷ்ணுக்கள், மகாமேருகிரியின்மீ திருக்கும்போது, சில முனிவர்கள் வந்து "யாவரும்வணங்கத்தக்கபரம்பொருள் யார்?" என்று வினவ, 'யான் பரம், யான் பரம்' என்று, அவ்விருவரு முரண்டு யுத்தஞ்செய்யப் புக்குழி, பிரணவ மவர்கள்

முன்றோன்றி, 'நீவிர் பரமல்லீர்; சிவபெருமானே பரம்' என்று சொல்லவுங் கேளாது பூசலிட்டபொழுது, சிவபெருமான் றோன்றியருளினர். அவ்வாறு றோன்றியும், பிரமதேவர் முனிவு தணியாது இகழச் சிவபெருமான் வயிரவக் கடவுளைப் புரிந்தருளி, அப்பிரமனது நடுச்சிரத்தைக் கொய்து அகந்தை தீர்த்தருளவும், மற்றத் தேவர் முனிவரிடத்துஞ் சென்று, அகந்தை தீரும்பொருட்டு அவர்களுதிரத்தைப் பலியேற்று வரும்படியாகவும் ஆஞ்ஞாபித்த வண்ணம் வடுகக் கடவுள், பிரமன் சிரத்தைக் கொய்து, அகந்தை தீர்த்து உயிர் நல்கியும், விஷ்ணுவினது நெற்றியந்தலத்து நாடி கீண்டு, பத்தாயிரம் ஆண்டு உதிரம் வார்க்கப்பெற்றும், மற்றத் தேவர்களிடத்து மவ்வாறே பைக்கமேற்றும், அகந்தை தீர்த்தருளிய தலம். இது அட்ட வீரட்டானத்திலொன்று. திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது தஞ்சைக்கு வடக்கே ஆறுமைல் திருவையாற்றுக்குப் போகிறவழியி லிருக்கிறது.

---

## திருச்சோற்றுத்துறை.

(தொலையாச் செல்வேச்சுரர், ஒப்பிலாம்பிகையம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

சிவபத்தியிற் சிறந்த அருளாளனென்னு மறையவன், பசிநோயால் வருந்தும்போது, எடுக்க வெடுக்கக் குறையாதிருக்கும்படியான உலவா அமுதருளிய தலம். தேவேந்திரன் முதலியோர் பூசித்தருள்பெற்ற தலம். சமயாசாரியார் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-எ.

இது தஞ்சைக்கு வடக்கே திருவாரூருக்குப் போகும் வழியில் திருக்கண்டியூர்வழியாய் $7\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருவேதிகுடி.

(வேதபுரேச்சுரர், மங்கையர்க்கரசியம்மை, காவிரிநதி தீர்த்தம்)

வேதங்கள், சைதன்னிய மகாரிஷி, குபேரன் முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞான

சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது மேற்படி திருவாரூர் திருக்கண்டியூர் வழியில் 7 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருத்தென்குடித் திட்டை (திட்டை).

(பசுபதீச்சுரர், உலகநாயகியம்மை, பசுதீர்த்தம், சிவதீர்த்தம்.)

காமதேனு, கௌதமரிஷி, ஆதிசேடன் முதலியோர் பூசித்து அவரவர் விரும்பியவாறு பெற்றருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது தஞ்சை ஸ்டேஷனிலிருந்து 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்புள்ளமங்கை.

(திருவாலந்தரித்த ஈச்சுரர், அல்லியங்கோதையம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

தேவர்கள் அமுதங் கடைந்தபோ தெழுந்த விஷத்தை யவர்க ளுய்யும்பொருட்டு ஆலாலசுந்தரராற் கொணருவித்து அருந்தித் திருமிடற் றடக்கினமையால், அக் காரணப்பெய ருண்டாகிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது ஐயம்பேட்டை ஸ்டேஷனிலிருந்து சக்கரபள்ளி வழியில் 2 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருச்சக்கரப்பள்ளி (ஐயம்பேட்டை).

(ஆலந்துறையீச்சுரர், பசுபதிநாயகேஸ்வரர், அல்லியங்கோதையம்மை, பால்வளைநாயகியம்மை, காவிரிநதிதீர்த்தம்.)

இந்திரகுமாரனை ஜயந்தனும், தேவர்களும் பூசித்த தலம்: திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது ஐயம்பேட்டை ஸ்டேஷனிலிருந்து அரைமைல் தூரத்தி லிருக்கிறது.

66

## திருக்கருகாவூர் (திருக்களாவூர்).

(முல்லைவனேச்சுரர், கரும்பனையாளம்மை, அற்புத தீர்த்தம்.)

சந்திரன், இராசிகள் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது ஐயம்பேட்டை அல்லது பாபநாசமென்னும் ஸ்டேஷனுக்கு 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பாலைத்துறை.

பாலைவண நாதேச்சுரர், தவளவெண்ணகையம்மை, பிரமதீர்த்தம்.)

பிரமன்,தேவர்கள் முதலாயினோர் பூசித்ததலம். தாருகாவனத் திருடிகள் அனுப்பிய புலியை யுரித்துச் சிவபெருமான் தரித்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது பாபநாசம் ஸ்டேஷனிலிருந்து வடக்கே ஒரு மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநல்லூர்.

(பெரியபாண்டவேச்சுரர், திரிபுரசுந்தரியம்மை, சுந்தரதீர்த்தம்.)

பஞ்சபாண்டவர்கள், கிருஷ்ணன், வசுதேவன் முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் திருச்சத்தி முற்றத்தி லெழுந்தருளி யிருந்தபொழுது, திருவடி சூட்ட வேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்குச் சிவபெருமான், "நல்லூரில் வருக!" என்று ஆஞ்ஞாபித்தபிரகாரம் இத்தலமுற, "உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்" என்று திருவாக்கருளித் திருவடி சூட்டப்பெற்றுப் பதிகமோதியருளிய தலம்.

இது சுந்தர பெருமாள் கோவில் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 2 மைல் தூரத்தி லிருக்கிறது.

## அமர்நீதிநாயனார்.

பழையபாறையில் வைசியகுலத்தில், மார்கழிமாதச் சித்திரைநாளில் திருவவதாரஞ் செய்தருளிச் சிவத்தொண்டு செய்துவருங்கால் அவரன்பைச் சோதிக்கும்பொருட்டுச் சிவபெருமான் ஓர் துறவியாய் வடிவமெடுத்துவந்து, நாயனாரது திருமடத்துத் தங்கி நாயனாரிடத்துக் கௌபீனத்தை வைத்திருக்கும்படி. கொடுத்துவிட்டுப் போய் மறுபடியும் வந்து கேட்ப, கௌபீனங் காணுமற் போனதைப்பற்றி, அதற்குச் சரிநிறையான பொருள் கொடுக்க உடன்பட்டுத் துலையின்கண் தமதெல்லாப் பொருள்களையும் பண்டங்களையும் துறவியாரது மற்றொரு கோவணத் தட்டிற்கு நிறையாகப் பெய்தும், கோவணத் தட்டுத் தாழ்ந்தமைபற்றி, நாயனாரும் அவர் மனைவி மக்களும், அவர் செய்துவந்த தருமத்துடன் துலையேறி, ஆனிமாதப் பூரநாளில், சிவபுரமடைந்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ரு.

---

## திருச்சத்திமுற்றம்.

(சிவக்கொழுந்தேச்சுரர், பெரியநாயகியம்மை, சத்தி தீர்த்தம்.)

ஓர் காலத்தில் உமாதேவியார் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள்,

"கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை."

என்னுந் திருப்பதிகமோதச் சிவபெருமான் நல்லூருக்கு வரும்படி ஆஞ்ஞாபித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்திற்குத் தென்மேற்கே 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பட்டீச்சுரம்.

(பட்டீச்சுரர், பால்வளைநாயகியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

இங்கு ஆநிரைகளைக் காத்த காரணத்தால் பட்டீச்சுரமென்று வழங்குகின்றது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவலஞ்சுழியி லெழுந்தருளி யிருக்கும்பொழுது

மிகுந்த வெப்பத்தைத் தராநின்ற வேனிற்காலம் வர, அவ்வெப்பத்தை நோக்காது, பிள்ளையார் பாழையாறை, வடதளி, திருச்சத்திமுற்றம் முதலிய தலங்களைத் தரிசித்து இங்கெழுந்தருளச் சிவபெருமான் அவ்வெப்பந் தணித்தற்பொருட்டு முத்துப்பந்தரைப் பூதங்களிடத்தனுப்ப, அப்பூதங்கள் சிவபெருமானருளுப் பாட்டை யறிவித்து, அடியாரிடங் கொடுக்க, அப் பந்தலை மேற்கொண்டருளிய பிள்ளையார் பதிகம் பாடப்பெற்றருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்திற்குத் தென்மேற்கே நாலுமைல் தூரத்தி லுள்ளது.

---

## திருப்பாழையாறை.

(சோமேச்சுரர், சோமகலாநாயகியம்மை, சந்திரபுட்கரிணி தீர்த்தம்.)

தக்கன் பெண்களில் இருபத்தெழுவரை மணந்த சந்திரன் ரோகிணியிடத்து விசேஷ மகிழ்ச்சி வைத்திருத்தலைக் கேட்ட தக்கனால் தேய்ந்து போகும்படி சாபம் பெற்று இங்கு வந்து பூசிப்ப எஞ்சிநின்ற ஒரு கலையையும் சிவபெருமான் தம் முடிமிசைச் சாத்தியருளிச் சந்திரனை நோக்கி 'இக்கலை நம்பாலிருக்குங்காறும் உனக்கு யாதொரு குறைவுமின்றி நின் கலைகள் வளர்தலும் தேய்தலுமா யிருக்கும்' என்று வாக்களித்தருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது பட்டீச்சுரத்திலிருந்து பம்படைவழியில் ஒரு மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவடதளி.

(வடதளிநாயகேச்சுரர், கௌரியம்பிகையம்மை, விசுவ தீர்த்தம்.)

விசுவாமித்திர ரிஷி பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் இங்கெழுந்தருளியபோது சமணர்களால் மறைக்கப்பட்டுச் சிவபெருமான் காட்சிக்கு அரியராக, அவரைத் தரிசனஞ் செய்தன்றி உண்பதுவு முடிப்பதுவுமில்லை என்று

விடுத்து இராமுழுதும் வைராகஞ் சாதித்திருப்புழி, சிவபெருமான் அந்நிலையை அரசனுக் கறிவிக்க, அரசன் மற்றைநாள் அமைச்சர்களோ டெண்டி, அவ்வமணர்களை யானையாற் றேய்ப்பித்து அவர்களான் மறைத்துவைத்த சிவபெருமானை வெளிப்படுத்தி ஆலயமுதலியன செய்துதரத், திருநாவுக்கரசு சுவாமிகள் மகிழ்ந்து "அமணர்கள் மறைத்தாலும் மறைக்கொண்ணுமோ" எனப் பதிகமோதியருளிய தலம். திருப்பதிகம்-க.

---

## ஆவூர்ப்பசுபதீச்சுரம் (திருஆவூர்).

(பசுபதீச்சுரர், மங்களநாயகியம்மை, பசுத்தீர்த்தம்.)

பசுக்கள், சப்தரிஷிகள், தேவேந்திரன் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்திலிருந்து தென்மேற்கே பட்டீச்சுரம் வழியில் 8½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவாரூர்.

இது தஞ்சை ஜில்லாவில் ஒரு சிறந்த ஸ்தலம். இது ஒரு யூனியன் பட்டணமாயும், 11,658 குடிகள் வசிக்குமிடமாயுமிருக்கிறது. இங்கிருக்கும் தியாகராஜ ஈஸ்வரரென்னும் சிவஸ்தலம் ஒரு காலத்தில் விஷ்ணுஸ்தலமாக இருந்து பிறகு சிவஸ்தலமாக மாற்றப்பெற்றதாகக் கேள்வி. இக்கோயிலுக்குஅருகிலிருக்கும் கமலாலயம் என்னும் தெப்பக்குளத்தில் ஏராளமான ஜனங்கள் முக்கியமாக உற்சவ காலங்களில் வந்து ஸ்நானம் செய்கிறார்கள். பிரதிவருஷம் பங்குனி சித்திரை மாதங்களில் விசேஷ உற்சவங்கள் கொண்டாடப்படுகின்றன. ஆயினும் ருத்ரபாத உற்சவ காலத்தில் நாலா பக்கங்களிலிருந்து ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து சேவிக்கிறார்கள். இங்கே ஹிந்து ஹோட்டல்களில் பிராமணாள்களுக்கன்றி இதர ஜாதியாருக்குச் சாதம் கிடைப்பது கஷ்டம். என்றாலும் யாத்திரைக்காரர் சௌகர்யத்திற்காகச் சென்னை பச்சையப்ப முதலியாரவர்கள் சத்திரமும் வடபாதி மங்கலம் முதலியாரவர்கள் சத்திரமும் கட்டப்பட்டிருக்கின்றன. பின் குறித்த சத்திரத்தில் பிரதி தினம் 100 பிராம்மணருக்குப் போஜனமிடப்படுகிறது. இது சென்னை

தென்னிந்திய இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 254 மைல்கள் தூரத்திலும், மாயவரத்திலிருந்து (நாகூர்கிளை) 24 மைல்கள் தூரத்திலுமிருக்கிறது. அவற்றிற்கு முறையே மூன்றும் வகுப்பு சார்ஜ் ரூபாய் 2—14—0, 0—4—9 கொடுக்கவேண்டும்.

---

## திருவாரூர் கமலாலய கரையின்மேலிருந்து செய்த பிரார்த்தனை.

"ஏ தியாகேஸா! இவ்வுலகில் அநேகம் ஏழைகள் தமது குறைவை நீக்கிக்கொள்ளும்பொருட்டு எங்கு தியாகர் இருப்பரோ என்று தேடிப்பிடித்து அவரை வேண்டித் தம் வறுமையை நீக்கிக்கொள்வது உலகப்பிரசித்தம். அப்படி வரப்பட்ட ஏழைகளுடைய மிடியை நீக்கி மனம் களிப்புறச் செய்வது பிரபுக்களுக்குச் சிறப்பு. அவர்களையே தியாகர் என்றும் தருமர் என்றும் சொல்லிப் புகழ்ந்து கொண்டாடுவது சகஜம். இந்தவிடத்தில் தன தான்யங்களை வாரிவாரிக் கொடுத்து ஆதரிப்பவர் அபூர்வம். அப்படிக்கிருக்க அநேக ஆயிரம் ஜனங்கள் நாலாபக்கங்களிலிருந்து கும்பல் கும்பலாக இங்கு வரவேண்டிய காரணமேதோவென்று ஆராயுங்கால் கேவலமான உலக சுகங்களைப்பார்க்கிலும் பேரின்பத்திற் கேற்ற பக்தி சிரத்தையென்னும் பெரும் பொருள்களைக் கேட்டவர்களுக்குக் கொடுக்கும் வள்ளலாகிய தியாகர் இங்கிருப்பதாக எண்ணி ஏராளமான ஜனங்கள் வந்து வணங்கிக்கொண்டிருக்கிறார்கள். உலக சுகத்துக்கு வேண்டிய பொருள்களைத் தரும்படி நின்னை வேண்டுவதைப்பார்க்கிலும் பேரின்ப சுகத்திற் கேற்ற பக்தி ஞானம் முதலான பொருள்களைத் தரும்படி வேண்டுவதே சிலாக்கியமன்றோ? ஆகவே, அப்படிப்பட்ட பேரானந்தத்தைத் தரும் பக்தி ஞானப் பொருள்களைக் கொடுத்து என்னைப் பிரபன்னனாக்கப் பிரார்த்திக்கின்றேன். ஓம் தத்சத்."

---

## திருவலஞ்சுழி.

(சித்தீச்சுரர், கற்பகத் தீச்சுரர், நித்தியநாயகி, மங்களநாயகியம்மை, காவிரிநதிதீர்த்தம், திருக்குளத்தீர்த்தம்.)

அமிர்தங்கடையுங் காலத்து முந்தியெழுந்த நுரை அமிர்தமொத்திருந்தமையால் அந்நுரையைத் தேவேந்திரன்

ஓர் கணபதியாகச் செய்து ஆத்மார்த்தமாகப் பூசித்து வருங்கால் நந்தனவனத்திற்காக வந்த காவிரி நதியானது, இவ்விடத்து வலஞ்சுழியாகச் சுழித்துப் பாதலத்திற் செல்லத் தொடங்கிற்று. அதைக் கேட்ட தேவேந்திரன் இங்கு வந்து சிவபெருமானைப் பூசிக்கச் சென்றபொழுது, தனது ஆத்மார்த்தமாகிய அமிர்தகணேசரைப் பெட்டகத்துடன் சந்நிதி முகப்பில் வைத்துவிட்டுச் சென்று சிவபெருமானைப் பூசித்து வந்தெடுக்க, கணேசரை எடுக்கக்கூடாமற்போக அக்காலத்து ஆங்கு வதிந்துவரக் கண்ட முனிவரோடு நண்பு பூண்டு அமர்ந்திருக்கும்போது ஓர் அசரீரீ "இந்திரனே! காவிரிநதி சுழியிலாழ்ந்தது. அவ்வாறு ஆழாமற் பூமியின்மீது பிரவகிக்கவேண்டுமானால் ஓர் மகுடாமுடியேனும், ஓர் சடாமுடியேனும் பலிதரல் வேண்டும்" எனக் கேட்டுவரக் கண்ட முனிவர் இந்திரனைப் பார்த்து "நீ எங்கட்கு அரசனாதலால் யானுயிர்துறந்தேனு மிப்புனலை மீட்டுனக்குக் கொடுப்பேன்" என வாக்குத்தத்தஞ் செய்தபடி அப்புனல் சுழியிலிறங்க, உடனே காவிரி நதியானது பிரவகித்து ஓட இந்திரன் மகிழ்ந்து பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ரு.

இது கும்பகோணத்திற்கு மேற்கே 4 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருக்குடமூக்கு (கும்பகோணம்).

(கும்பேச்சுரர், மங்கள நாயகியம்மை, ஏமபுஷ்கரணி, காவிரிநதி தீர்த்தங்கள்.)

ஏமரிஷி, ஆதிசேடன் முதலியோர் பூசித்த தலம். பிரமதேவர் ஜகத்சிருஷ்டி சம்பந்தமான சர்வமூல திரவியங்களாலும் நிறைந்த சுத்தமாயா சத்தி சொரூபமாயிருக்கிற குடமொன்றைத் தமது சிருட்டிக்கு உதவியாயிருக்கும்பொருட்டு மகமேருகிரியின் சிகரத்தில் ஸ்தாபித்தபொழுது, ஒரு பிரமப் பிரளய முண்டாக, அதில் அந்தக் கும்ப மெடுபட்டு இந்த க்ஷேத்திரத்தின் ஹேமபுட்கரணி தீர்த்தத்தின் மேற் பக்கத்திற் றங்கிவிட, சிவபெருமான் பிரளய முடிந்த பின்பு, உலகத்தைச் சிருஷ்டிக்கக் கருதி வேட வடிவங்கொண் டெழுந்தருளி அந்தக் கும்பத்தைப் பாணப்பிரயோகத்தினாற் சேதித்தருள அதினின்

றுஞ் சராசரங்களெல்லா முற்பத்தியானது மல்லாமல் அமுதமும் ஐந்து குரோச எல்லை சூழப்பட்டது. இதுவே கும்பகோணம். இந்தக் கும்பமுடைந்த இடத்திலிருந்து அமிர்தங்களைத்திரட்டிச் சிவலிங்கமாக்க வேட வடிவமாகிய சிவபெருமானை பூசித்தருளிய காரணத்தால் அவ்விலிங்கத்திற்கும் கும்பேஸ்வரரென்று நாமகரணஞ் சூட்டப்பட்டது. ஹேமபுஷ்கரணிஎன்னும் சுவர்னபுஷ்கரணி தீர்த்தமானது இப்பொழுது மகாமக தீர்த்தமென்று வழங்கப்படுகின்றது. இது பிரமப் பிரளயத்திற்கு அநாதியே யுள்ளது. பாவண மகா முனிவர் தமது தாயாரின் அங்கத்தைக்கொண்டு நல்ல தீர்த்தத்திற் போடக் கருதிப் பல தீர்த்தத்துறை சென்றும் என்பாயே யிருந்த அவ்வங்கம் இத்தீர்த்தத்துறையில் வீழ்ந்ததும் பார்க்கப் பொற்றாமரைப் பூவாகமாறியது. இந்தக் காரணத்தினாலும், ஏமரிஷி பூசித்த காரணத்தினாலும் ஏமபுட்கரணி யென்று வழங்குகின்றது. சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

---

## திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் (கும்பகோணம்).

(மடந்தைப் பாகேச்சுரர், பெரியநாயகியம்மை, சிங்கக்கிணறு, சூரியபுட்கரணி தீர்த்தங்கள்.)

சூரிய மூர்த்தியானவர், விசுவகர்ம்மாவின் மகளைக் கலியாணஞ்செய்து அவருடன் சேர்ந்து வாழும்பொழுது அவள், அவரது வெப்பம் ஆற்றாதவளாய்த் தன் சாயையை ஒரு பெண்ணாக வைத்துவிட்டு, ஒளித்துக்கொண்ட சங்கதியைக் கேள்வியுற்ற விசுவகர்ம்மா, சூரியனுக்குக் காந்தியில்லாமற் போகும்படி சபிக்க, சூரியன் இங்கு வந்து பூசித்து அச் சாபவிமோசனம் பெற்ற தலம். ஐயடிகள் காடவர்கோன்நாயனர் க்ஷேத்திரவெண்பா பாடியருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்தி லிருக்கிறது.

---

## திருக்குடந்தைக்காரோணம் (கும்பகோணம்).

(சோமநாதேச்சுரர், தேனார்மொழியம்மை, சந்திர தீர்த்தம்.)

உமையவள் பூசித்துத் திருமணம் பெற்ற தலம். சந்திரன், மாந்தாதா, சத்தியகீர்த்தி, தேவசன்மா முதலாயினோர் பூசித்த தலம். கங்கை, யமுனை, சிந்து, சரஸ்வதி, நர்மதை, கோதாவிரி, காவிரி முதலிய எல்லா நதிகளும் தங்களிடத்து ஸ்நானஞ் செய்கிறவர்களுடைய பாபங்களைச் சுமக்கலாற்றாது அவற்றைத் தீர்க்கும்பொருட்டு இங்கு வந்து ஏமபுட்கரணியில் ஸ்நானஞ்செய்து இத்தலத்தில் வந்தித்து, பாபம் போக்கிக்கொண்ட தலம். இதனால் அந்நதிகளெல்லா மிக்காலத்தும் பன்னிரண்டாண்டிற் கொருகால் வருகிற மகாமகமென்கிற புண்ணியகாலத்திற் கூடுவதாக ஐதீகம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## கும்பகோணம்.

இது தஞ்சாவூர் ஜில்லாவைச் சார்ந்த தாலுக்காவின் பிரதான பட்டணமாயும், முனிசிபல் நகரமாயும், கிழக்கு மேற்காக 3 மைல்கள் நீளமும் - தென்வடல் $1\frac{1}{2}$ மைல்கள் அகலமுமாய்க் காவிரிநதி யோரத்தில் கட்டப்பட்டு 64,647 குடிகள் உள்ள ஓர் பெரிய பட்டணம். இவ்விடத்தில் அநேக சைவ வைணவ க்ஷேத்திரங்க ளிருக்கினும் அவைகளில் சாரங்கபாணி சுவாமி, சக்ரபாணி சுவாமி, இராமசுவாமி, கும்பேஸ்வரர் முதலானவை சிறந்தவைகள். சாரங்கபாணி சுவாமி கோயிலின் கோபுரம் 147 அடிகள் உயரமுள்ளதாயும், அதன்பின் 5 சிறிய கோபுரங்களும் சிற்பாலங்காரமாகக் கட்டப்பட் டிருக்கிறதன்றியில் பொற்றாமரைக் குளமும் சிறந்தது.

இங்கு இரண்டு பெரிய தேர்கள் செய்து வைக்கப் பட் டிருக்கின்றன. அதற் கருகிலிருக்கும் கும்பேஸ்வரர் கோயில் சுமார் 330 அடிகள் நீளமும், 15 அடிகள் அகலமுமுள்ள பிராகாரத்தைத் தாண்டிப்போனால் 128 அடிகள் உயரமுள்ள கோபுரமும், அதற்குள் நுழைந்து போனால் 83 அடிகள் நீளமும் - 55 அடிகள் அகலமுமுள்ள மண்டபமும் இருக்கின்றன. இந்தக் கோயிலுக்குள் வெள்ளியால் செய்யப்பட்ட வாகனங்களும் 5 தேர்களும் வைக்கப்பட் டிருக்கின்றன. அதற்குச் சமீபத்தி லிருக்கும் இராமசுவாமி கோயிலின் கோபுரம் சிறியதா யிருந்தாலும் உள் மண்டபம் சிற்பாலங்காரமாகக் கட்டப்பட் டிருக்கின்றது.

காவிரியின் கரையில் கட்டப்பட்டிருக்கும் சக்ரபாணிசுவாமி கோயிலுக்கு ஏராளமான ஜனங்கள்போய்ப் பூஜிக்கிறார்கள். இவைகள் எல்லாவற்றிலும் சிறந்தது மஹாமஹம் தெப்பக்குளமேயாம். இது சுமார் 20 ஏக்ரு விஸ்தீரண முள்ளதா யிருக்கிறது. பிரதி 12 வருஷங்களுக் கொருதரம் கங்காநதியின் ஜலம் இதில் வந்து விழுவதாகவும், முக்கியமாகப் பிரகஸ்பதியும் சிங்கமும் கூடும் பௌர்ணமி காலத்தில் நாலா பக்கங்களி லிருந்து லக்ஷாதிலக்ஷம் ஜனங்கள் வந்து ஸ்நானம் செய்கிறார்கள். ஸ்நானம் செய்யும்போது ஜனங்கள் முழுகி இறந்து போகாதபடிக்கு அக் குளத்தில் $2\frac{1}{2}$ அடிகள் ஜலத்தை மாத்திரம் விட்டு மற்ற ஜலத்தை இன்ஜின்கள் வைத்து இறைத்து விடுகிறார்கள். ஜனங்கள் இதில் ஸ்நானம் செய்த பிறகு காவிரியில் குளிக்கிறார்கள். இந்தத் தெப்பக் குளத்தைச் சுற்றி அநேக சிறிய கோயில்கள் கட்டப்பட் டிருக்கின்றன. இக் கும்பகோணமானது ஒரு காலத்தில் சோழராஜாக்களுக்குத் தலைநகரா யிருந்த தன்றியில் சில வருஷங்களுக்குமுன் ஒரு ஜில்லா கோர்ட்டு மிருந்து பிறகு தஞ்சாவூருக்கு மாற்றப்பட்டது. இப்போது சப் கலெக்டர்-சப் ஜட்ஜ் - இரண்டு முனிசீப்-தாசில்தார்-சப் மாஜிஸ்திரேட்-சப்ரிஜிஸ்டிரார் முதலானவர்களின் கச்சேரிகளும், ஸ்ரீ சங்கராசாரியர் மடமும் இருப்பதன்றியில், ஒரு பெரிய மாகாணக் காலேஜும் இருக்கிறது. இந்த காலேஜில் மிஸ்டர் போர்டர் துரையும், ராவ் பஹதூர் கோபால்ராயரும் உபாத்யாயர்களா யிருந்தகாலத்தில் அநேகர் படித்துக் கணித நிபுணர்களாகி, சர்க்கார் பெரிய உத்தியோகங்களைப் பெற்றுப் பிரகாசித்தார்கள். இதுவன்றியில் ஒரு பெரிய டவுன் ஹைஸ்கூலும், சுதேச ஹைஸ்கூலும், இன்னும் அநேக பாடசாலைகளும் இருக்கின்றன. ஸ்ரீமான்களாகிய திவான் சேஷையசாஸ்திரியார், திவான் பஹதூர் ரகுநாதராயர் முதலான மதியூகிகள் வதிந்த இடம். போர்டர் டவுன் ஹாலும், கோபால் ராயர் புத்தகசாலையும், கிளப்பு முதலான வசதிகளும் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. இவ்விடம் செம்பு வெண்கலம் பித்தளை முதலான பாத்திரங்கள் ஏராளமாகச் செய்யப்பட்டும், பெண்களுக்கான பட்டுப் புடைவை முதலானவைகள் நெய்யப்பட்டும் ஏற்றுமதியாகிவருகின்றன. இது சென்னை தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து $183\frac{1}{2}$ மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு மூன்றும் வகுப்பு சார்ஜ் ரூபாய் 2-3-0 கொடுக்கவேண்டும்.

கும்பகோணம் காவிரிநதிக் கரையிற் செய்த பிரார்த்தனை.

"ஏ ஸ்ரீநிவாசா! நீ சகல சுபகரங்களைக் கொடுப்பதால் உன்னை ஸ்ரீநிவாசா என்று அநேக ஜனங்கள் வந்து இந் நதியில் ஸ்நானம் செய்து நின் பெயரைப் புகழ்ந்துகொண்டு போகிறார்கள். மகாமக உற்சவமாகிய இன்று லக்ஷக் கணக்கான ஜனங்கள் பலபக்கங்களிலிருந்து வந்து இந்த மகாமக குளத்தில் குளித்து நின்னை மகிமைப்படுத்துகிறார்கள். ஆஹா! ஜனங்களுக்கு இருக்கும் பக்தி சிரத்தைக்குக் கங்கு கரையே யில்லை. இது ஒருவித மூட பக்தியாக இருக்கினும் உண்மையில் அவர்களுடைய இந்த சிரத்தையானது தினே தினே பல்கி உண்மை ஞானத்தைப் பெற்று உன்னுடைய அப்பிராகிருத சொரூபத்தைக் கண்டு சகல பாவங்களையும் நசிக்கச்செய்யும் நினது அமிர்தரச பிரவாகத்தில் மூழ்கிப்பாவனராகிப் பேரானந்த மடைவார்களென்று சொல்லத் தடையுண்டோ? ஆஹா ஜனங்களின் கூட்டமென்ன? கோஷமென்ன? பரபரப்புடனும் வந்து ஸ்நானம் செய்து இந் நகரிலுள்ள பலபிரபல கோயில்களில் புகுந்து பூஜித்துவரும் விநோத காக்ஷி என்ன? மஹாவித்வ சிகாமணியாகிய கோபால ராயரும், சிறந்த தேசாபிமானியாகிய திவான் பகதூர் ரகுநாத ராயரும் வதிந்த விட மிதுவன்றோ? இப்படிப்பட்ட விசேஷ ஸ்தலத்தில் நானும் வந்து நின்னைத் தியானிக்கப் பாக்கியனானேன். மேற்சொன்ன வித்வசிகாமணி தேசாபிமானிகளின் கல்வி பூஷணத்தையும் தேசாபிமானமாகிய தெய்வீக ஞானசம்பத்தையும் தந்தருள்வாய் சுவாமி! ஓம் தத்சத்."

---

## திருநாகேச்சுரம்.

(செண்பகாரணியேச்சுரர், குன்றமுலை நாயகியம்மை, இந்திரதீர்த்தம்.)

தேவேந்திரன் பூசித்த தலம். சேக்கிழார் நாயனார் வழிபட்ட தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-எ.

இது கும்பகோணத்திற்குக் கிழக்கே 4 மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவிடைமருதூர் (மத்தியார்ச்சுனம்).

(இது கும்பகோணத்திற்கு வடகிழக்கே 5 மைல் தூரத்தி லிருக்கிறது.

(மருதப்பேச்சுரர், நன்முலை நாயகியம்மை, காவிரி நதி, பூசத்துறை தீர்த்தம், திருக்குளத் தீர்த்தம், மருத விருக்ஷம்.)

உருத்திரர்கள், உமாமகேஸ்வரி, விநாயகர், முருகக் கடவுள், பிரமா, விஷ்ணு, சப்த கன்னிகையர், சரஸ்வதி, இந்திரன், அயிராவதம், துவாதசாதித்தர், சந்திரன், அஷ்டதிக்குப் பாலகர், வேதங்கள், அஷ்ட நாகங்கள், வசிஷ்டர், கபிலர், அகஸ்தியர், முப்பத்து முக்கோடி தேவர்களும் பூசித்துப் பேறுபெற்ற தலம். கயிலையின்கண் எழுந்தருளிய உமாதேவியார், சத்தியின்றிச் சிவமியங்கா தென்று எம்பெருமா னருளிய உண்மையை யுணராது, சத்தியாகிய தாமே உயர்ந்தவரென்று தம்மை வியந்த பொழுது சிவபெருமான், உன்னிடத்து யாம் சேராதவழி, உனக்கு முணர்வில்லை யெனக் காட்டும்பொருட்டு, ஓர் கணம் அசைவற்றிருந்தனர். எல்லா உலகங்களும், எழுவகைத் தோற்றங்களும் சடமாயினபின்னர், உலகத்தைப் பண்டை நிலையில் நிறுத்த உன்னி, முதலில் உருத்திரர்களுக்குஉணர்ச்சிநல்க, அவர்கள் உலகமுற்றும் இருளாயிருந்தமைபற்றி, நான்கு சாமம் மருதப்பாரைப் பூசித்துப் பிரமா, விஷ்ணு, இந்திராதித்தர்களையும், மற்ற உயிர்களையும் படைத்தருளிய தலம். அக்காலத்திற்றான், உமாதேவியார் தாட்சாயணியானது. மாணிக்கவாசக சுவாமிகள் சிவவாக்கியர் இவர்கள் வந்து வணங்கி வரம்பெற்ற தலம். மதுரையில், வரகுண தேவரைப்பற்றிய கொலைப்பழி தீர்ந்த தலம். இப்பழியி னுருவ மிக்காலத்துக் கீழ்க்கோபுர வாயிலில் நிற்கும். அவ்வரகுணதேவர், இத்தலத்து எழுந்தருளி யிருக்கும்பொழுது தாம் கண்டவையனைத்தும் சிவ ஞானப்பெருக்காற் சிவமாகத் தோற்றினமையின், ஒரு கள்ளனைக் கட்டிக் கொணர்ந்தபொழுது, அவன்மீது திருநீறு கண்டு விடுவித்தருளியும், நரிகளூளையிடுதலைக் கேட்டு அவைகள் சம்போவென்று கூவினவாகக்கொண்டு வஸ்திரங்களைக் கொடுப்பித்தும், ஜலத்தில் தவளை கூப்பிடுதலையே சிவநாம சங்கீர்த்தனமாகக் கொண்டும், ஓர் சோரன் திருமஞ்சனத்திற்காக உலர்த்திய விரை எள்ளைத் தின்பதைப் பார்த்து, அவனை அவ்வெச்சிலெள்ளுடன் பிடித்து வர, அவன் பிறப்பை நீக்கும்பொருட்டு, அத்தொழில் செய்ததாகக்கொண்டு அவனது எச்சிலையுண்டருளியும், இந்

நகர்ப்புறத்துக் கிடந்த ஓர் தலையோட்டைக் கண்டு வணங்கித் "தலையே! உன்னைப்போல என் தலை இங்குக்கிடக்க வேண்டும்" என்றுபிரார்த்தித்தருளியும், திருக்கோயில்முற்றத்திலே நாய்க்கட்ட மிருத்தல் கண்டு, அதனை நமக்கு வாய்த்ததென் றெடுத் தருளியும், வேப்பம் பழங்க ளுதிர்ந்து கிடத்தலைக் கண்டு, அவைகள் சிவரூபமாயிருத்தல் பற்றி, வேப்பமரங்களுக்கெல்லாம் விதானங் கட்டுவித்தருளியும், தாம் கலியாணஞ் செய்துகொண்டபொழுது, தமது மனைவியாரைச் சயனகிருகத்தில் பார்த்தருளி, அவர் மனோரம்மியமான திருவுருவோடிருத்தலை நோக்கி, "மனோரம்மியமான பொருள்க ளியாவும் சிவபிரானுக்கேயாம்" எனக் கருதி அவரை ஆலயத்திற் கொண்டுபோய், "மருதப்பரிடத்துச் சமர்ப்பிக்க, மருதவாணர் அவரது வலக்கை மணிக்கட்டளவும் நிற்ப, மற்ற யவயவங்களை இலிங்கத்துட் கரந்தருள, பிற்றைநா ளருச்சகராற் பெண்ணினது வலக்கை சிவலிங்கப் பெருமான்மீ திருத்தலை யுணர்ந்த வரகுணதேவர், "பாவியேன் தீண்டியகை யென்றோ விடுத்தருளியது" என்று விண்ணப்பஞ் செய்து அக்கையையும் இலிங்கத்துட் கரந்தருளும்படி செய்வித்து இவ்வாறு அனேக அற்புதங்க ணடத்தி முத்திபெற்ற தலம். கருவூர்த் தேவராற் றிருவிசைப்பாப் பாடியருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-கஉ.

---

## திரிபுவனம்.

(கம்பஹரேச்சுரர், தர்மசம்வர்த்தனியம்மை, சிவகங்கை தீர்த்தம், காவிரிநதி தீர்த்தம்.)

தேவேந்திரன், ஏகாதசருத்திரர்கள், சப்த கன்னிகைகள் முதலியோர் பூசித்த தலம். வரகுணதேவரது பழிநீங்கியும் அப்பழியின் பயத்தால் உண்டாகிய நடுக்கத்தைத் தீர்த்தருளிய தலம்.

---

## தென்குரங்காடுதுறை.

(ஆப்தசகாயேச்சுரர், பவளக்கொடியம்மை காவிரிநதி தீர்த்தம்.)

சுக்கிரீவன், மிருகண்டமகாரிஷி முதலியோர் பூசித்து வரம்பெற்ற தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவிடைமருதூர் ஸ்டேஷனுக்குக் கிழக்கே 2½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநீலக்குடி.

(நல்ல நாயகேச்சுரர், அழகாம்பிகையம்மை, காவிரி நதி தீர்த்தம்.)

வருணன், தெய்வகன்னிகையர்கள் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவிடைமருதூர் ஸ்டேஷனிலிருந்து 2½ மைல் தூரத்தி லிருக்கின்றது.

---

## திருவைகன்மாடக்கோயில்.

(வைகனுதேச்சுரர், கொம்பிளங்கோதைநாதர், வைகலாம்பிகையம்மை, கொம்பிளங்கோதைநாயகி, சூரியதீர்த்தம், அமரபுஷ்கரணி தீர்த்தம்.)

சூரியனும், தேவர்களும் பூசித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## திருநல்லம் (கோனேரிராயபுரம்).

(உமாமகேச்சுரர், மங்களநாயகியம்மை, சத்தி தீர்த்தம்.)

உமையவளும், தேவர்களும் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருவிடைமருதூருக்குக் கிழக்கே 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கோழம்பம்.

(கோகிலேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, கோகில தீர்த்தம்.)

'சந்தன் என்னும் வித்திபாதரன் தேவேந்திரனாற் சாபம் பெற்றுக் குயிலாய்ப் பலகாலஞ் சென்றபின் இத்தலமுற்றுப் பூசிப்பச். சிவபெருமானருளாற் பண்டை உருவம் பெற்ற தலம். விஞ்சா ஸ்திரிகளும், தேவர்களும் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௨.

இது நரசிங்கன்பேட்டை ஸ்டேஷனிலிருந்து 2 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவாவடுதுறை (திருஞானக்கோமுத்தி).

(மாசிலாமணியீச்சுரர், ஒப்பிலாமுலையம்மை, காவிரிநதி தீர்த்தம், சிவகங்கை தீர்த்தம், அரசவிருக்ஷம்.)

தேவேந்திரன் முதலிய தேவர்களும், அநேக ரிஷிகளும் பூசித்த தலம். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளது தந்தையார், "யாகஞ் செய்யவேண்டும்" என்கிற கருத்தை யறிவிக்கப் பிள்ளையார் பதிகம் பாடிச் சிவபெருமானிடத்து உலவாக்கிழி பெற்றருளிய தலம்.

இது நரசிங்கராயன் பேட்டை ஸ்டேஷனிலிருந்து கிழக்கே $1\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருமூலநாயனர்.

திருநந்திதேவர் மாணாக்கரு ளொருவராகிய சிவயோகியார், அகஸ்தியரிடத்துள்ள அன்பால், அவரைக் காணும்பொருட்டு இத்தலத்தின் வழியாய் வர, இங்கு மூலனென்னும் ஓர் இடையன் இறந்து கிடத்தலையும், அவன் மேய்க்கும் பசுக்கள் பலவாறு கத்துதலையு முணர்ந்த அச் சிவயோகியார் வைகாசிமாத மூலநாளில் அம் மேய்ப்பனது காயத்துட் பிரவேசித்துப் பசுக்களைக் காப்பாற்றி மீண்டும் வந்து பார்க்கத் தமது சரீரம் காணமற்போக அது திருவருளென்றெண்ணி அரசமரத்தடியில் 3000 வருட மெழுந்தருளியிருந்து வருடமொன்றுக்கு ஒரு மந்திரமாக 3000 திருமந்திரங்களைத் திருவாய் மலர்ந்தருளி, ஐப்பசிமாத அசுவினிநாளில் முத்தியடைந்த தலம். சேந்தனரால் திருவிசைப்பாப் பாடப்பெற்ற தலம், கைலாசபரம்பரையாகிய

நமசிவாயமூர்த்திகள் ஆசாரிய பரம்பரையோர் மடாலயங் கொண்டெழுந்தருளியிருக்குந் தலம். சமயாசாரியர் மூவராலுங் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-அ.

---

## திருத்துருத்தி (குற்றாலம்).

(வேதேச்சுரர், முத்தாவதேச்சுரர், அமிர்த முகிளாம்பிகையம்மை, காவிரிநதி தீர்த்தம், திருக்குள தீர்த்தம்.)

திருவொற்றியூரில் சங்கிலி நாச்சியார்பொருட்டுச் செய்த சத்தியந் தவறித் திருவாரூருக்குச் செல்ல எத்தனித்த சுந்தரமூர்த்தி சுவாமிகளின் இருநேத்திரங்களுக்கும் அபாவம் நேரிட்டதுமன்றித் தேகத்திலும் கொடிய வியாதிக ளுண்டாக அவ் வியாதியை இத்தலத்து வடதிருக்குளத்தில் மூழ்கத் தீர்த்தருளிய தலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனார் க்ஷேத்திரவெண்பாப்பாடியருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௩.

இது மாயூரத்துக்குத் தென்மேற்கே 5½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவழுந்தூர்.

(வேதபுரேச்சுரர், சௌந்தராம்பிகையம்மை, வேததீர்த்தம்.)

வேதங்கள், அஷ்டதிக்குப்பாலகர்கள், விண்ணவர்கள் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது குற்றாலம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே மூன்று மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## மயிலாடுதுறை (கௌரிமாயூரம், மாயூரம்).

(மாயூரநாதேச்சுரர், அஞ்சனயகியம்மை, இடபதீர்த்தம், காவிரிநதி தீர்த்தம்.)

கௌரியம்மையார் பெண்மயிலாய்வர, இலக்குமியாதியோரும் அவ்வாறே சூழ்ந்து இத்தலத்தடைந்தபொழுது, சிவபெருமான் ஆண்மயிலாய் வந்து நடனஞ்செய்து மறைந்தருள, அதை மயிலாகவே யெண்ணி மோகித்த அம்மை

யார், பிரிவாற்றுது பூசித்தனுக்கிரகம் பெற்ற தலம். இத ஞலே இத்தலத்திற்கு இக் காரணப்பெயராயிற்று. பிரமா, விஷ்ணு, விஷ்ணு அவதாரமூர்த்திகள், தருமன், காமன், அகஸ்தியர், இலக்குமி, விசாலன், பார்க்கவி, கலைமகள் முத லியோர் பூசித்த தலம். திலீபன், யோகவித்தமன், சுசன் மண, சயதுங்கன், தீர்க்கசங்கை, நாதசன்மன், அனவித்தை, கங்கை முதலியோரும்; யானை, குதிரைகள், கழுகு, பாம்பு, நரி, குரங்கு, பூனை, கிளி முதலியனவும் முத்தி பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது மாயவரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு காவிரியின் தென்கரையி லிருக்கிறது.

---

## மாயவரம்.

இதுவும் தஞ்சை ஜில்லாவில் ஒரு சிறந்த க்ஷேத்திர மும், முனிசிபல் பட்டணமுமாம். இதில் 27,121 குடிகள் வசித்து வருகிறார்கள். இவ்விடத்தில் சிறந்த சைவ வைணவ க்ஷேத்திரங்கள் இருக்கினும், ஐப்பசிமீ துலாகாவேரி ஸ்நா னத்திற்காக ஏராளமான ஜனங்கள் வருகிறார்கள்.

நீதிநூல், பெண்மதிமாலை முதலான கிரந்தங்களை இயற் றிய டிஸ்டிரிக்ட் முனிசீப் ம-ா-ா-ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை யவர்கள் தமது கடைசி நாளில் வாழ்ந்துவந்த இடமிதுவே யாம். பிரயாணிகளுக்கு அநேக சத்திரங்க ளிருக்கின்றன.

இது சென்னை தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டே ஷனுக்கு 175 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. மூன்றும் வகுப்பு சார்ஜ் ரூபாய் 2—0—0.

ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சுமார் ஒருமைல்தூரத்தில் கொரநாடு இருக்கிறது. இவ்விடத்தில் நெய்யப்படும் பெண்க ளுடுத்தும் பட்டுப்புடவைகள் பிரசித்தி பெற்றவை. இக் கொரநாட்டுப் புடவைகள் ஏராளமாக வேறு இடங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

---

## திருவிளநகர்.

(துறைகாட்டும் வள்ளலேசுரர், காம்பன்னதோழி யம்மை, மெய்ஞ்ஞான தீர்த்தம்.)

அருள்வித்தனென்னும் வேதியன், திருப்பள்ளித்தாம மெடுத்து நதியில் வருங்காற் பெருவெள்ளம் வந்து ஈர்த்துச் செல்லும்பொழுதும், அப் பூங்கூடையை விடாது சிவபெருமானை யுன்னிய அன்புக்கிரங்கித் துறைகாட்டிக் கறையேற விட்டு ஞானநெறியை யுபதேசித்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மாயூரத்துக்குக் கிழக்கே 4 மைல்தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பறியலூர் வீரட்டானம் (திருப்பறியலூர்).

(வீரட்டானேச்சுரர், இளங்கொம்பன்னை, சிவகங்கை தீர்த்தம்.)

தக்ஷப்பிரமாபெற்ற ஆண்பிள்ளைகள் துறவிகளாயபின், உமாமகேஸ்வரியாரைப் பெற்றுச் சிவபெருமானுக்குக் கொடுத்திருக்கையில், ஒருகாற் கயிலையில் வந்த அந்த தக்ஷப்பிரமனுக்குச் சிவபெருமான் மரியாதை செய்யவில்லையென்னுங் காரணத்தால், யாகத்தில் சிவபெருமானுக்குள்ள முதல் அவியை விலக்கி, விஷ்ணுவுக்குக் கொடுக்க உன்னி, யாகஞ் செய்த அத் தக்ஷப்பிரமாவின் சிரசை வீரபத்திர மூர்த்திகளாற் கொய்து. அவ்வியாகத்திலிட்டு, தக்ஷப்பிரமாவுக்கு ஆட்டுத்தலை கொடுத்தருளிய தலம். இது அட்ட வீரட்டானத்தொன்று. திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மாயூரம் ஸ்டேஷனிலிருந்து விழுகருக்கு 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருச்செம்பொன்பள்ளி.

(சொர்னபுரேச்சுரர், சுகந்தவனநாயகியம்மை, காவிரி நதி, இந்திர தீர்த்தம்.)

இந்திரன்: சூரனுதியரைச் செயிக்கும்படியாகப் பூசித்த தலம். குபேரன் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது திருப்பதிகம்-ந.

(இது மாயூரம் ஸ்டேஷனுக்குக் கிழக்கே $6\frac{3}{4}$ மைல் தூரத்தி லிருக்கிறது.)

## திருநனிபள்ளி.

(நற்றுணையப்பேச்சுரர், பருவதராஜபுத்திரி, காவிரி நதி தீர்த்தம்.)

அஷ்டவசுக்கள் முதலியோர் பூசித்த தலம். திருஞான சம்பந்த மூர்த்திகள், தமது குழந்தைப் பருவத்தில் தேவாரம் திருவாய்மலர்ந்தருளுதலைக்கேட்டு, ஆநந்தபரவசமடைந்த அவரது தாயின் க்ஷேத்திரமாகிய இந்நகரவாசிகள் திருஞானசம்பந்த சுவாமிகளை யிங்கழைத்துவந்து திருப்பதிகமோதுவித்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 15 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருவலம்புரம்.

(வலம்புரிநாதேச்சுரர், வடுவகிற்கண்ணம்மை, காவிரி நதி தீர்த்தம்.)

திருமால்பூசித்து வலம்புரிச்சங்கு பெற்ற தலம். சங்குகன்னன் முதலிய பூதகணங்களும் தேவர்களும் பூசித்தருள் பெற்ற தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது சீர்காழியிலிருந்து 8½ மைல் தூரத்தில் இருக்கிறது.

## திருத்தலைச்சங்காடு.

(சங்கநாயகேச்சுரர், செங்குருநாதேச்சுரர், சௌந்தரியம்மை, திருக்குள தீர்த்தம்.)

மகாவிஷ்ணு, அஷ்டகெஜங்கள், திக்குப் பாலகர்கள் முதலியோர் பூசித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது சீர்காழி ஸ்டேஷனிலிருந்து தரங்கம்பாடி வழியில் 10 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருவாக்கூர்த்தான்றோன்றி மாடம் (திருவாக்கூர்).

(சுயம்புநாதேச்சுரர், கட்கநேத்திர தேவியம்மை, அருள்தீர்த்தம், ஆநந்தபுட்கரணி.)

இந்திரன் முதலிய தேவர்கள் பூசித்த தலம். சிறப்புலி நாயனார் புரட்டாசிமாத அவிட்டநாளில் வைதீகப்பிராமண மரபிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவத் தொண்டு சிவனடியார் தொண்டு முதலியன செய்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யன்பினோடு ஜெபித்தலுஞ் செய்திருந்து, கார்த்திகை மாதப் பூராடநாளில் முத்தியடைந்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது மாயூரத்துக்குக் கிழக்கே தரங்கம்பாடி ரோட்டுக்கு 10 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருக்கடவூர்வீரட்டானம் (திருக்கடவூர்).

(அமுதகடேச்சுரர், வீரட்டானேச்சுரர், அபிராமித்தாயம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

மிருகண்டேய மகாரிஷியின் புதல்வராகிய மார்க்கண்டேயருக்குப் பதினாறுவயது செல்லுங்காலத்து, அவர் தந்தை தாயர்கள் அவருக்கு இறுதிநாள் வந்தமை யுணர்ந்து வருந்தியதை மார்க்கண்டேயர் அறிந்து சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து விதியைக் கடந்து வருவதாகச் சொல்லி இங்கு வந்து பூசித்துக்கொண்டிருக்கு நாளில் விதித்த நாள் சேர்ந்தமையால், இயமன் தனது தூதுவரை விடுப்ப, அவர்கள், தவாக்கினியால் அணுகக் கூடாமையை அறிவிக்கக்கேட்ட இயமன் வெகுண்டு தானே நேரில் வந்து அழைப்பவும், மார்க்கண்டேயர் மறுத்தமைபற்றிக் கையிலிருந்த பாசத்தை வீச, மார்க்கண்டேயர் தாம் பூசிக்கும் சிவபெருமானது திருமேனியைத் தழுவிக் கட்டிக்கொள்ள, இயமன் அவ்விருவரையும் பாசத்தில் வலிந்திழுக்கும் பொழுது, சிவபெருமான் இலிங்கத்தினின்றும் தோன்றி, இயமனை உதைத்த தலம். இது அட்டவீரட்டானத்திலொன்று.

### காரிநாயனார்.

வைகாசிமாத அத்தநாளிற் றிருவவதாரஞ் செய்தருளியியற்றமி ழுணர்ந்து, சேர, சோழ, பாண்டிய ராசாக்களிடத்துச் சொல் விளங்கிப் பொருண்மறைந்துள்ள கோவையாடிப் பொன்பெற்று, அப் பொன்னாற் றிருக்கோயில் முதல்

வியனவும் அடியவர் பூசையுஞ் செய்து, ஆடி மாதம் பூராட நாளிற் சிவபெருமான் றிருவடியை யடைந்த தலம்.

### குங்கிலியக்கலய நாயனூர்.

பிராம்மண குலத்தில், ஆடிமாத அசுவினி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, சிவாலயத்திற்குக் குங்கிலியத் தூபப்பணிவிடை செய்துவந்த காலையில் வறுமை வந்தமையால், மனைவி மக்கள் முதலாயினோர் பலநா ளுண்டியின்றி வருந்திய வருத்தஞ் சகியாது, மனைவியார் உண்பண்டம் வாங்கி வரும்படி கொடுத்த மங்கிலியத்தை, எதிரேகண்ட குங்கிலியத்திற்கு மாறிக் குங்கிலியங் கொண்டு, கோவிலில் மகிழ்ந்திருக்கும்பொழுது, சிவபெருமான் அவரது மனைவியைப் பொருண்முதலிய செல்வத்தா ணிரப்பி யருளப்பெற்றும், திருப்பனந்தாளிற் றலை வளைந்த சிவபெருமானை நேர் காணப்பெற்றும் விளங்கிய அந்நாயனூர், திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு அமுதருந்தியுபசரித்து, ஆவணிமாதமூலநாளிற் சிவபதமடைந்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது சீர்காழி ரெயில் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே தரங்கம்பாடி வழியில் 14 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கடவூர்மயானம் (திருக்கடவூர்).

(பிரமபுரேச்சுரர், தயாளமலர்க் குழன்மின்னம்மை, பிரமதீர்த்தம், காசிதீர்த்தம்.)

பிரமதேவர் ஓர் பிரளயத்துச் சிருட்டித் தொழில் மறந்து சிவபெருமானைப் பூசிக்க, அவர் எதிர்வந்தருளி, அப்பிரமதேவரை விழியினுலெரித்துநீறாக்கி, அந்நிற்றை யுடம்பிலணிந்து மற்று முயிர்ப்பித்துச் சிருஷ்டியைக் கொடுத்தருளப்பிரமதேவர் "இத்தானத்தையே என்றும் பவுத்திரதானமாகக் கொண்டருளவேண்டும்" என்றுவேண்டியபடி, திருக்கோயில் கொண்டருளிய தலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனூர் க்ஷேத்திரவெண்பாப் பாடியருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது திருகடையூருக்குக் கிழக்கே 1 மைல் தூரத்திலிருக்கிறது.

## திருவேட்டக்குடி.

(திருமேனியழகேச்சுரர், சுகந்தவனநாயகியம்மை, அழகு தீர்த்தம்.)

அருச்சுனன் தவம் செய்யும்பொழுது, சிவபெருமான் வேட ரூபமாக வந்து வேட்டஞ் செய்தருளிய தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது காரைக்காலிலிருந்து வடக்கே 3 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருத்தெளிச்சேறி (காரைக்கால் கோவிற்பத்து).

(பார்வதீச்சுரர், சத்தியம்பாளம்மை, அருந்தோளம்மை, பார்வதி தீர்த்தம், வன்னி விருக்ஷம்.)

பார்வதி தேவியார் தமது பேர் முன்னிற்பச், சிவபெருமானுக்கு நாமஞ் சூட்டப் பெறவேண்டுமென்று தவஞ் செய்து அவ் வரம் பெற்ற தலம். அருச்சுனனோடு வேடராக அமர்புரிந்து வில்லடிபட் டநுக்கிரகித்தருளிய தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இத்தலத்தினின்றும் திருஞான சம்பந்த சுவாமிகள் அடியார் குழாத்துடன் எழுந்தருளிப் போதி மங்கையென்னு மிடத்திற்குப் போகும்பொழுது திருச்சின்ன ஓசை கேட்கப் பொறாத புத்தர்கள் திருச்சின்னத்தைத் தடுப்பப் பிள்ளையாரது நல்லம்மானாகிய சம்பந்த சரணாலயர் அஸ்திரவாக்கினால் அப்புத்தர்களிற் றலைவனான புத்தநந்தி தலையில் இடி விழும்படி செய்தருளியபின்னர், புத்தர்களிற் சாரிப்புத்தன் வந்து வாதம் பேசுவதாய்ச் சொல்லியனுப்பியதற் கிணங்கி ஓரிடத்துத் தங்கி அவர்களை வாதத்தில் வென்றருளிய பின் அப்புத்தர்களையுஞ் சைவர்களாக்கியருளிய தலம்.

இது காரைக்காலிலிருந்து வடமேற்கே ¾ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## காரைக்கால்.

(கயிலாய நாதேச்சுரர், சுந்தராம்பிகையம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

பிருகுமுனி, சௌமியர் முதலியோர் பூசித்த தலம்.

## காரைக்காலம்மையார்.

ஆவணிமாதக் கிருத்திகை நாளில் வணிக குலத்திற் றிருவவதாரஞ் செய்தருளிப், புனிதவதியாரென்னும் நாமத்தோடு பரமதத்த ரென்பவருக்கு மனைவியாராய்ச், சிவனடியார்க்கு அமுதருத்தலே பெரும் பணியாகக் கொண்டு நடத்திவருங்கால், பரமதத்தரா லனுப்பப்பட்ட இரண்டு மாங்கனிகளி லொன்றை, ஓர் பெரியவ ரமுது செய்தகலப், பரமதத்தர் போசனஞ் செய்யும்பொழுது, ஒரு கனி அம்மையார் படைப்ப, அது அதிக சுவையா யிருந்தமைபற்றி, மற்றொன்றையும் விரும்பியபொழுது, பெரியவருண் டகன்றதைச் சொல்ல லாற்றாதவராய்த், திருவருளை முன்னித் தாம் முன்பு கனி வைத்திருந்த இடத்திற் கைநீட்ட, மற்றொரு கனி கிடைத்ததைக் கொணர்ந்து பரமதத்தருக்குப் பரிமாற, அவர் அதனை யுண்டு முன்னையதிலும் அதிக சுவையை யுடையதா யிருந்தமைபற்றி, "இதேது விசேஷித் திருக்கின்றதே?" எனக் கேட்ப, அம்மையார் பொய் கூறல் கூடாதென் றுன்னி, உண்மையைச் சொன்ன தறிந்த கணவனுர், அற்றேல், மற்றொரு கனி கொண்டுவரும் படிவேண்ட, எம்பிரா னருளால் மற்றொரு கனியும் பெற்று வந்து அம்மையா ரளிப்ப, அது கரத்தினின்றும் மறைந்தமை நோக்கிப் பரமதத்தர், அம்மையாரைக் குலதெய்வமாகப் பாவித்து மெல்ல அகன்று பாண்டி நாட்டிற்போய், வேறோர் விவாகஞ் செய்திருந்துவிட்டதை யுணர்ந்த அம்மையா ரங்குச் சென்றவிடத்து அவரைத் தெய்வமாக எண்ணிய பரமதத்தரும், அவரது மனைவியும், குழந்தையுடன் வந்து நமஸ்காரஞ்செய்ய, அம்மையார் அவருக்கென்று தாங்கிய உடற்சுமை தாங்க லாற்றாதவராய், உதறிப் பேய்வடிவம் பெற்றுப் பங்குனிமாதச் சுவாதிநாளிற் றிருக்கயிலையிற் றலையானடந்து சென்று, அம்மைமூத்த திருப்பதிகம், திருவிரட்டைமணிமாலை முதலியவைகளாற் றுதித்து எம்பிரான்! "அம்மையே! வா" என் றழைக்கப்பெற்று, அங்கிருந்தும் திருவாலங்காட்டை யடைந்து, ஊர்த்த தாண்டவேச்சுரர் திருநடனத்தை நீங்காது தரிசித்திருக்கும் பெருவாழ்வு பெறச் செய்த தலம்.

---

## திருத்தருமபுரம்.

(யாழ்முறிநாதேச்சுரர், சதாமதுராம்பிகையம்மை, கதலிதீர்த்தம், தரும தீர்த்தம், கதலிவன க்ஷேத்திரம்.)

பிரமா, தருமராசன், அரம் பாஸ்திரிகள் பூசித்த தலம். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளருளிய திருப்பதிகங்களை யாழில்வைத்து வாசித்துவரும் திருநீலகண்டயாழ்ப்பாண நாயனாரது தாயர் ஜனனபூமியாகிய இத்தலத்து இருந்த அவர் சுற்றத்தார், "திருப்பதிகங்கள் நாடெங்கும் பரவி வழங்குவதற்குக் காரணம் யாழ்ப்பாணரது யாழ்வலி" என்று புகழ்ந்தமை கேட்ட யாழ்ப்பாணர் மனம்பொறாராய்ப் பிள்ளையாரை யடைந்து, யாழில் அமையாவண்ணம் ஓர் பதிகம் அருளிச்செய்யும்படி வேண்ட, ஆங்ஙனமே "மாதர் மடப்பிடி" என்னும் யாழ்முறித் திருப்பதிகத்தை யருளிச்செய்ய அதனை யாழ்ப்பாணர் யாழிலமைக்க நோக்கியும் அமையாமையால், அங்ஙனம் பரீக்ஷித்த பிழைக்காகத் தாம் யாழை நிலத்தில் மோதச் செல்லுழி, பிள்ளையார் தடுத்தருளி திருப்பதிகம் சிவாஞ்ஞையால் வருவதாதலின், யாழி லியன்றளவு வாசிக்கும்படி கட்டளையிட்டருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

(இது காரைக்கால் ஸ்டேஷனுக்கு ½ மைல் தூரத்திலிருக்கிறது.)

---

## திருநள்ளாறு.

(தெர்ப்பாரண்ணியேச்சுரர், போகமார்த்த பூண்முலையம்மை, சிவகங்கை தீர்த்தம், தெர்ப்பாரண்ணிய க்ஷேத்திரம்.)

நளச்சக்கரவர்த்தி பூசித்துக் கலி நீங்கப்பெற்ற தலம். இது சத்தவிடங்கத்தலத்திலொன்று. சத்தவிடங்கத் தலங்களின் வரலாறு:—திருமால் புத்திரப்பேறு வேண்டிச் சிவபூசை செய்தபொழுது, சிவபெருமான் தேவியாரோடும் பிரசன்னராகிப் புத்திரானுக்கிரகஞ் செய்தருளத், திருமால் உமையம்மையாரை வழிபடாத நிமித்தம், அவர் "அப்பிள்ளை சிவபெருமானாலே இறக்கக் கடவது" எனச் சபித்து மறைந்தருள, மஹா விஷ்ணு: சுவாமி, அம்மை, ஸ்கந்தராகிய சோமாஸ்கந்தவடிவம் செய்து அநேகநாள் பூசிப்ப, அம்மையப்ப ரெதிர்தோன்றி, முன்னருளிச்செய்த பிள்ளை யிறப்பினும் இறவா துயிர்த்தெழுந்து சகல உயிர்களிடத்தும் அரசாட்சி செய்ய வரமருளி மறைந்த பின்னர்த், தாம் பூசித்த

சுவாமியைத் தம் மார்பே தொட்டிலாகவைத்துத் திருப்பாற் கடலிற் பூசித்துச் சயனித்திருந்தபொழுது அவ் விஷ்ணுவிடத்துத் தேவேந்திரன் சென்று, அச் சோமாஸ்கந்த மூர்த்தியைத் தரப் பெற்றுப் பூசித்து வருங்கால், வலாசுரன் உயுத்தத்திற் றுணைசெய்த முசுகுந்தசக்கரவர்த்தி, சிவபிரானிசைவுகொண்டு அந்தச் சோமாஸ்கந்தமூர்த்தியைத் தரும்படி கேட்ப, இந்திரன் தரலாற்றுதவனாய்த் திருமாலிசைவு வேண்டுமெனப் புகல்கூற, அவ்வனுமதியும் பெற்றமையுணர்ந்த இந்திரன், பின்னும் தெய்வக் கம்மியனால், அச்சோமாஸ்கந்த மூர்த்தத்தைப்போல ஆறு மூர்த்திகளைச் செய்து கொடுத்தும், அவற்றை முசுகுந்தச் சக்கரவர்த்தி யித்தலமுதலிய ஆறு தலத்தின்கண்ணும் பிரதிட்டை செய்த பின்னர்க் கடைசியாகத் திருமால் பூசித்த தியாகரையே வேண்டிப் பெற்றுத் திருவாரூரின்கட் பிரதிட்டை செய்து பூசித்தனர். அங்ஙனமாகிய ஏழு தலங்களும் சத்தவிடங்கத்தல மெனப்படும். திருஞானசம்பந்த சுவாமிகள் மதுரையிற் சமணர்களோடு வாது செய்யும்பொழுது, அக்கினி வாதம் செய்தகாலையில் தமது திருமுறையிற் கயிறு சாத்தியருள "போகமார்த்த பூண்முலையாள்" என்னு மித்தலத் திருப்பதிகம் உதயமானதை எடுத்து நெருப்பிலிட, அப் பதிகம் வேவாதிருந்தமைபற்றி இன்றளவும் அப் பதிகத்திற்குப் பச்சைப்பதிக மென்னும் பெயர் வழங்கப்படுகின்றது. இதனாலே திருமுறை முதலிய நூல்களுக்குக் கயிறு சாத்தும் வழக்கம், அக்காலத்து முள்ளனவென்று வெளியாகிறது. சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-எ.

(இது காரைக்காலுக்கு மேற்கில் 3 மைல் தூரத்திலிருக்கிறது.)

---

## திருக்கோட்டாறு.

(ஐராவதேச்சுரர், வண்டமர்பூங்குழலம்மை, ஐராவத தீர்த்தம்.)

வெள்ளை யானையும், தேவர்கள் முதலாயினோரும் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருநள்ளாறு ஸ்டேஷனிலிருந்து மேற்கே 3 மைல்தூரத்தி லிருக்கிறது.

## திரு அம்பர்ப்பெருந்திருக்கோயில்.

(பிரமபுரநாதேச்சுரர், பவளவண்ணப் பூங்குழலம்மை, பிரமதீர்த்தம்.)

பிரமா பூசித்த தலம். சோமாசிமாற நாயனுர் பிராம்மண குலத்தில் மாசிமாத மகநாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை விதிப்படி ஜெபிப்பவராய் யாகமுதலியன செய்து, திருவாரூரில் சுந்திரமூர்த்தி சுவாமிகளது நண்பு பெற்று, அவரது உபதேச அருளால் வைகாசிமாத ஆயிலியநாளிற் சிவபுரஞ்சேர்ந்த தலம். கோச்செங்கட்சோழ தேவராற் செய்யப்பட்ட ஆலயத் திருப்பணியுள்ளது. திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது அம்பர்மாகாளத்திலிருந்து $\frac{3}{4}$ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருஅம்பர்மாகாளம்.

(காளகண்டேச்சுரர், பச்சைநாயகியம்மை, மாதேவியம்மை, மாகாள தீர்த்தம்.)

அரிஹரபுத்திராது சேனைத் தலைவராகிய மாகாளர் பூசித்து, அவர் காவலி லொப்புவித்திருக்கு மிந்திராணியை யிழுத்துச்சென்ற அஜமுகியைக் கரங்குறைத்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ங.

இது அம்பர் என்னும் ஸ்தலத்திலிருந்து $\frac{3}{4}$ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருமீயச்சூர் (பேரளம்).

(திருமுயற்சிநாதேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, அற்புத தீர்த்தம்.)

வருணன், மேகங்கள் முதலாயினேரும், தேவர்களும் பூசித்துத் திருநந்தி தேவராற் றங்களுக்குற்ற சாபத்தை நீக்கப்பெற்றதலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது பேரளம் ஸ்டேஷனிலிருந்து மேற்கே 1 மைல் தூரத்திலிருக்கிறது.

## திருமீயச்சூரிளங்கோயில் (பேரளம்).

(சகலபுவனேச்சுரர், மேகலாம்பாளம்மை, சரஸ்வதி தீர்த்தம்)

பிரமா சரஸ்வதி இவர்கள் பூசித்த தலம். திருநாவுக்கரசுசுவாமிகளால் இத்தலத்துள்ள ஆலயங்கள் யாவும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மீயச்சூர் ஸ்வாமி சந்நிதிக்கு வடபுறமிருக்கிறது.

---

## திருத்திலதைப்பதி (மதிமுத்தம்).

(மதிமுத்தநாதேச்சுரர், பொற்கொடியம்மை, சோம தீர்த்தம்.)

சந்திரன், நக்ஷத்திரங்கள் பூசித்த தலம். தசரதச்சக்கரவர்த்திக்கு ஸ்ரீராமலட்சுமணர்கள் திலதர்ப்பணஞ் செய்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது பேரளம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே $3\frac{1}{4}$ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருப்பாம்புரம்.

(பாம்புரேச்சுரர், வண்டமர் பூங்குழல்நாயகியம்மை, ஆதிசேஷ தீர்த்தம்.)

ஆதிசேஷனும், நாகலோகத்தாரும் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் றிருப்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது பேரளம் ஸ்டேஷனிலிருந்து $4\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருச்சிறுகுடி.

(மங்களேச்சுரர், மங்களநாயகியம்மை, மங்கள தீர்த்தம்.)

செவ்வாயும், கருடனும், கந்தருவர்களும் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது பேரளம் ஸ்டேஷனிலிருந்து மேற்கே 5½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவீழிமிழலை.

(வீழியழகேச்சுரர், சுந்தரகுசாம்பிகையம்மை, அரிதீர்த்தம், மாதவதீர்த்தம், விண்ணிழி விமானக்கோவில், வீழிவிருக்ஷம்.)

மகாவிஷ்ணுவானவர், சிவபெருமானாற் சலந்தராசுரனைக்கொன்ற சக்கரத்தைப் பெறும்பொருட்டு, நாடோறும் ஆயிரம் தாமரைமலர்கொண்டு பூசிப்ப, ஓர்நாள் பூஜாகாலத்திலோர்மலர் குறையக்கண்டு, எழுந்து செல்லின், பூசைக்குத் தவறுண்டாவது நோக்கித், தமது கண்ணை யிடந்து அருச்சிப்ப மகிழ்ந்து சிவபெருமான் சக்கரமருளிய தலம். இதனாலே விஷ்ணுவுக்குக் கமலக்கண்ணனென்னும் பெயராயிற்று. திருநாவுக்கரசுசுவாமிகள், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், இத்தலத்தி லெழுந்தருளியிருக்கும்பொழுது, கருப்புக் காலஞ் சப்பவிப்ப, அடியார் திருக்கூட்டத்திற் கமுது செய்விக்கும்பொருட்டு அவ்விரு சுவாமிகளுக்கும், மேற்பீடத்துங் கீழ்ப்பீடத்தும் படிக்காசுவைத்தருளியும், அக்காசினால் அவ்வுபய மூர்த்திகளுந் திருவமுது படைத்துவருங்கால், திருஞானசம்பந்தசுவாமிகள் பெற்ற காசு வாசியோடு செலவாதல் நோக்கி, "வாசி தீறவே காசுநல்குவீர்" என்று பதிகம் பாடியபொழுது, சிவபெருமான் திருநாவுக்கரசு சுவாமிகளது கைத்தொண்டு மெய்த்தொண்டு முதலியவைகளுக்கிரங்கி, அங்ஙனம் வாசியின்றிக் காசு அருளியும், சீர்காழியிலிருக்குந் திருக்கோலத்தை இவ்விண்ணிழி விமானத்திற் காணச்செய்தும், அனுக்கிரகித்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உச.

இது குற்றாலம் ஸ்டேஷனிலிருந்து 6 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருவன்னியூர்.

(அக்கினியேச்சுரர், பார்வதியம்மை, அக்கினி தீர்த்தம்.)

அக்கினி பூசித்து அகோர வீரபத்திரரா லடைந்த சாபம் நீங்கப்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவீழிமிழலைக்கு வடமேற்கே 1 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கருவிலி (கொட்டிடை).

(சற்குணஈச்சுரர், சர்வாங்கநாயகியம்மை, சற்குண தீர்த்தம்.)

சற்குணனென்னும் அரசன் பூசித்துப் பிறவி சாகரத்தைக் கடந்த தலம். தேவர்களும், இந்திரனும் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நாச்சியார்கோயிலுக்குக் கிழக்கே 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பேணுபெருந்துறை.

(சிவானந்தேச்சுரர், மலையரசியம்மை, ஆநந்ததீர்த்தம்.)

சிவசத்தி, பிரம்மா, கிரகங்கள் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே 8 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநறையூர்ச் சித்தீச்சுரம்.

(சௌந்தரேச்சுரர், சித்தநாதேச்சுரர், அழகாம்பிகை, திரிபுரசுந்தரியம்மை, தேன்சித்தி தீர்த்தம்.)

குபேரன், தேவர்கள், கந்தருவர்கள் பூசித்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே 5 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## அரிசிற்கரைப்புத்தூர்.

(படிக்காசளித்த ஈச்சுரர், அழகாம்பிகையம்மை, காவிரி, அரிசில்நதி தீர்த்தம்.)

உண்மையானந்தரிஷி பூசித்த தலம். புகழ்த்துணை நாயனார் ஆதிசைவ குலத்தில், சித்திரைமாதச் சதயநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவபூசை செய்துவருங்கால், பஞ்சமேலிட்டுப் பசிநோயாற் றேகமெலிந்துந் திருப்பணி தவிராது செய்து வருபவர், ஒருநாள் திருமஞ்சன மாட்டும்போது அயர்ந்து மஞ்சனக்குடத்தைச் சுவாமிமீது விழவிட்டு, உணர்ச்சிவந்து, பின் வருத்தமுறுவதைச் சிவபிரான் றிருவுளங்கொண்டு, பஞ்சந் தீருமளவும் பீடத்தின் கீழ் ஒவ்வொரு காசு தந்தருளப்பெற்றுப் பின்னு மவ்வாறே சிவபூசை நடத்திவந்து, ஆவணிமாத ஆயிலிய நாளிற் சிவபதமடைந்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ரு.

இது கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே 4½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருச்சிவபுரம்.

(பிரமபுரி நாயகேச்சுரர், பெரியநாயகியம்மை, பிரம தீர்த்தம்.)

பிரமா பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கலயநல்லூர் (சாக்கோட்டை).

(அமிர்தகலயீச்சுரர், அமிர்தவல்லியம்மை, அமிர்த தீர்த்தம்.)

தேவர்கள் அமிர்தம் பெற்ற சந்தோஷத்தாற் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்துக்குத் தென்கிழக்கே 2¾ மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருக்கருக்குடி (வலங்கிமான்).

(சற்குணலிங்கேச்சுரர், சர்வாலங்கிர்தமின்னம்மை, சற்குண தீர்த்தம்.)

விசுவாமித்திரரிஷி பூசித்த தலம். சற்குணரென்னும் அரசன் பூசித்து அருள்பெற்ற தலம். மார்க்கண்டேயரும், தேவேந்திரனும் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்திலிருந்து தென்கிழக்கே 6½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவாஞ்சயம்.

(வாஞ்சலிங்கேச்சுரர், வாழவந்தநாயகியம்மை, சுகவாஞ்ச தீர்த்தம்.)

ஓர் நாககன்னிகை மிகு வாஞ்சையோடு பூசித்துச் சிவபெருமானைத் தழுவித் திருவுருவிற் கலந்த தலம். அயிராணியும் தேவர்களும் பூசித்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது நன்னிலம் ஸ்டேஷனுக்குக் கிழக்கே 6½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநன்னிலத்துப்பெருங்கோயில்.

(பிரகாசேச்சுரர், பிரகாசேஸ்வரியம்மை, சூரியகாந்த தீர்த்தம்.)

சூரியன் பூசித்துத் தன்னொளி மழுங்கலைப் பிரகாசஞ் செய்யப்பெற்ற தலம். கோச்செங்கட்சோழத்தேவராற் றிருப்பணி செய்யப்பெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது ஷை ஸ்டேஷனுக்கு மேற்கே 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## நன்னிலம்.

இது தஞ்சையைச் சார்ந்த நன்னிலம் தாலுக்காவின் பிரதான யூனியன் பட்டணம். இங்கே ஏராளமாக நெல் சாகுபடியாகி ஏற்றுமதியாகிறது. இதற்கு 3-4 மைல்கள் தூரத்தில் திருப்புகலூர், திருப்பனையூர் என்னுமிடங்களில்

விசேஷ சிவ க்ஷேத்திரங்களும்; திருக்கண்ணபுரம், திருச்சங்கட்டங்குடி, ஸ்ரீவஞ்சம் என்னும் விசேஷ வைணவ க்ஷேத்திரங்களு மிருக்கின்றன. இப்போது நன்னிலத்தில் 2745 ஜனங்கள் வதிந்துவருகிறார்கள். இது சென்னை தென்னிந்திய இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 189 மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு மூன்றாம் வகுப்பு ரெயில் சார்ஜ் ரூபாய் 2—2—0 கொடுக்கவேண்டும்.

---

## திருக்கொண்டீச்சுரம்.

(பசுபதீச்சுரர், சாந்தநாயகியம்மை, பசுதீர்த்தம்.)

காமதேனு பூசித்துத் தன்னால் யாவருக்கும் பல பண்டங்களும் பரோபகாரமாய்க் கொடுத்துவரும்படி வரம் பெற்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது நன்னிலம் ஸ்டேஷனுக்கு $1\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருவிற்குடிவீரட்டானம் (திருவிற்குடி).

(வீரட்டானேச்சுரர், மைவார்குழலியம்மை, சர்க்கரை தீர்த்தம்.)

இந்திரன்பொருட்டுக் கிருத்திம வடிவெடுத்து வந்த சிவபெருமானது சீற்றம் மேலைக்கடலில் விழுந்து ஓர் பிள்ளையானதைச் சமுத்திரராசன் வளர்க்குங்கால், அங்கு வந்த பிரமதேவன் அந்தக் குழந்தையை யெடுத்துப் பார்க்கும்பொழுது, அது அவரது நான்கு தாடிகளையும் பற்றியிழுத்து, பிரம்மா அழுதும் விடாமைபற்றி, அவராற் சலந்தரனெனப் பேர்தரிக்கப்பெற்றுப்பருவமடைந்தபின் மகாவிஷ்ணுவோடு நெடுநாள் யுத்தம் செய்து அவராற் புகழப்பெற்றுப் பின் தேவர்களை வருத்த, இந்திரன் பயந்து திருக்கயிலையில் அடைக்கலம் புகுத, சலந்தராசுரன் தன் மனைவி வார்த்தையையுந் தள்ளிக் கயிலைக்குச் சென்றபொழுது சிவபெருமான் ஓர் வேதிய வடிவங்கொண்டு முன்தோன்றி சலந்தராசுரனைப் பரீக்ஷிப்பவர்போல ஓர் சக்கரங் கீறி, 'இதனை எடுக்கும் ஆற்றல் உண்டாயின் சிவபெருமானை வெல்லலாம்' என்

றருளிச்செய்யச், சலந்தரன் அச் சக்கரத்தை யெடுத்துச் சிரசின்மேல் வைத்தவுடன் அது அவன் தேகத்தை யிருபிளவாக்கி உயிரைக் கொள்ளை கொள்ளச் செய்தருளிய தலம். அட்டவீரட்டானத்தொன்று. திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது வெட்டாறு ஸ்டேஷனுக்கு வடகிழக்கே 3½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்புகலூர்.

(அக்கினியீச்சுரர், கொந்தார்குழலியம்மை, அக்கினி தீர்த்தம.)

அக்கினிதேவனாற் பூசிக்கப்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் இத்தலத்தே அநேகநா ளெழுந்தருளியிருந்து, பல பதிகங்களைப் பாடியருளியது மன்றி உழவாரத் திருப்பணி செய்யும்பொழுது, எம்பிரான் சோதனையாற் பொன்னும் நவரத்தினமு மெதிர்ப்பட, அதனைப் பருக்கைக் கற்களோடொப்ப நினைத்துத் திருக்குளத்தி லெறிந்தும், சித்தநிலையைச் சோதிக்கும்பொருட்டு, அரம்பைமாதர் முதலியவர்களை விடுத்தருள "உங்களாலாட்டுணேன்" என்றும், "திருவடிக்கே போதுகிறேன்" என்றும் பதிகம்பாடிச் சித்திரைமாதச் சதய நட்சத்திரத்தில் திருவடியடைந்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பங்குனி உத்திரத் திருநாட் செலவுக்குப் பொன்வேண்டிப் பதிகம்பாடிக் கோயிற் றிருமுன்றி லெழுந்தருளியிருக்கும்பொழுது, திருவருளால் நித்திரைவர, செங்கற்களைத் தலையணையாக வைத்து நித்திரைசெய்து விழித்தபொழுது, அச் செங்கற்கள் யாவையும் பொன்கற்களாகச் செய்துகொடுத்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ரு.

இது நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம்.

(வர்த்தமானேச்சுரர், கருந்தார்குழலியம்மை, திருக்குள தீர்த்தம்.)

மேகங்கள் பூசித்த தலம். முருகநாயனுர்: பிராம்மண குலத்தில் கார்த்திகைமீ கிருத்திகை நாளிற் றிருவவதாரஞ் செய்தருளிப் பலவித பூக்களை நானுவித மாலைகளாகக் கட்டிச் சிவபெருமானுக்குச் சாத்திப் பஞ்சாட்சர ஜெபஞ் செய்துவந்து, திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளோடு சினேகஞ் செய்யப்பெற்று, அச் சுவாமிகள் திருமணத்தில், வைகாசிமீ மூல நாளிற் றிருவடியடையச் செய்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மேற்படி ஆலயத்திற்கு வடபுறத்தி லிருக்கிறது.

---

## திரு இராமனதீச்சுரம்.

(இராமநாதேச்சுரர், கருவார் குழலியம்மை, இராம தீர்த்தம்.)

இராமர், மிருகண்டரிஷி, மார்க்கண்டேயர், தேவர்கள் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்துக்கு வடகிழக்கே 5 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பயற்றூர்.

(திருப்பயற்றீச்சுரர், காவியங்கண்ணியம்மை, கருணை தீர்த்தம்.)

பைரவரிஷி பூசித்த தலம் திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாரூருக்கு வடக்கே 10½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருச்செங்காட்டங்குடிக் கணபதீச்சுரம்.

(கணபதீச்சுரர், திருக்குழனுயகியம்மை, கணபதி தீர்த்தம், ஆத்திவிருட்சம்.)

கயமுகாசுரனுற் றுன்பமடைந்த தேவர்கள் சகிக்கலாற்ருது சிவபெருமானிடத்து முறையிட, அவர் விநாயக மூர்த்தியைத் தந்தருளியபொழுது, விநாயக மூர்த்தி

யார், பூதப்படைகள் சூழ எழுந்தருளிவந்து அக் கயமுகாசுரனைத் தாம் ஒடித்தருளிய குறைக்கொம்பால் வென்றருளிய தலம். அவ் வவுணனது இரத்தம் பெருகிய காடு செங்காடா யிருந்தமைபற்றியே இதற்குச் செங்காடெனப் பெயராயிற்று. அக் கயமுகாசுரனைக் கொன்றருளியபோது, அவனாற் றேவர்க ளடைந்திருந்த துன்பமொழிய, அவன் முன்னர்ச் செய்துவந்தவண்ணம், குட்டிக்கொள்ளுதலையும், தோப்பணம் போடுதலையுந், தேவர்கள் செய்யப்பெற்ற விநாயக மூர்த்தியாரே கயமுகாசுரனைக் கொன்றபழி நீங்கும்பொருட்டுப் பூசித்த தலமாகையால் இவ் வாலயத்திற்குக் கணபதீச்சுரமெனப் பெயராயிற்று.

இது நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 5¾ மைல் தூரத்தி லிருக்கிறது.

## சிறுத்தொண்ட நாயனார்.

மாமாத்திரர் குலத்திலே பரஞ்சோதியா ரென்னும் பெயருடையவராய்த் தைமாசத்து அசுவினி நாளில் திருவவதாரஞ் செய்தருளிச் சிவபணிவிடையும், அரசன்பால் உத்தியோகமுஞ் செய்து வருகையில், அரசன் இவரது சிவானுபூதியை யுணர்ந்து, தான் இவரை ஏவல் கொள்ளாது சிவபணியில் நிறுத்திவிட, தினந்தோறும் அடியார்க் கமுதருத்தியன்றி யுண்ணு நியமம் பூண்டொழுகுங்கால், ஓர்நாள் அடியவ ரகப்படா தொழியத் தேடி வருந்துகையில், சிவபெருமான் பைரவ வைசவராய்த் திருக்கோவி லாத்திமரத்தின் கீழிருத்தலை யுணர்ந்துபோ யழைக்க, அப் பைரவர், "நற்குடியில் ஒரே பேருய் ஐந்து வயதினையுடைய பழுதில்லாத சிறுவனைப், பெற்றோரே மகிழ்ச்சியுட னறுத்துச் சமைத்துப் படைத்தாலன்றி உண்பதில்லை" என்று திருவாய்மலர்ந்தருள, இவர் அதற்கிசைந்து, அவ்வரியதொழிலுக் குடன்படுவார்பிறரின்மையால் தாமும்தம்மனைவியாரும்மனமொத்துத் தம்மருமைக் குமாரனுகிய சீராளனையே அறுத்துச் சமைத்துப் பைரவரை அமுதுசெய்ய வேண்ட, அப் பைரவர், "அடியாரோடன்றித் தனித்துண்ணேம்" என்று கூறியபொழுது, அடியார் கிடைப்பதருமையாதலாற் றம்மையும் ஒரு அடியாராகக் கொண்டு அமுது செய்யவேண்டிய இவரது வேண்டுகோளுக்கிசைந்த அப் பைரவர் அமுது செய்ய உடன்பட்டபொழுது, அவர் திருவமுது செய்யவேண்டி முன் னுண்ணப்புகும் நாயனாரை அப் பை

ரவர் தடுத்தருளி "உமக்குச் சிறுவருண்டோ?" என்ன, "உண்டு" என்ற இவர், "அவன் இப்போது உதவான்" என்று கூறியதையும் மறுத்துச், "சிறுவன் வந்தன்றி யுண்ணேம்" என்ற பைரவருக்காக மனங்கசிந்து புறத்தே போய்ச் சிறுவனை யழைப்ப இறந்த சிறுவன் உயிர் பெற்று வர, இவ்வாறு திருவருள் புரிந்த பைரவர் மறைந்தருளி இந் நாயனரைச் சகுடும்பத்தோடு சித்திரைமாதப் பரணி நாளிற் றிருவடி சேர்த்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ட.

---

## திருமருகல்.

(மாணிக்கவண்ண ஈச்சுரர், வண்டுவார் குழலியம்மை, மாணிக்க தீர்த்தம்.)

மார்க்கண்டேயரிஷி பூசித்த தலம். ஓர் வணிகன் தன் தங்கை குமாரனுக்குப் பெண்கொடுக்கு முரிமை யிருந்தும், தனக்குள்ள ஏழுபெண்களில் ஆறுபேரை அன்னியர்களுக்கு விவாகஞ் செய்து கொடுத்ததுபோலவே, மற்றொரு கன்னிகையையும் மணம்பேச, அக் கன்னிகை, "இது நியாயமல்ல" என்று தன் மாதுலன் மகனைப் பின்பற்றி மதுரைக்குச் செல்லுங்கால், இத்தலத்தோர் திருமடத்திலிரங்கி யிருக்கையில், அவ்வணிகனை அரவந் தீண்டி மாய்ந்தமையாற், கன்னிகை புலம்புதலை அங்கெழுந்தருளியிருந்த திருஞானசம்பந்த சுவாமிகள் கேட்டுச் சென்று பதிகம் பாடி அவ்வணிகனை எழுப்பியருளி, அவ்விருவருக்கும் கலியாணம் நடத்தி, மதுரைக்கனுப்பிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ட.

இது நன்னிலம் ஸ்டேஷனுக்குக் கிழக்கே $7\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருச்சாத்தமங்கை அய்வந்தி (சாத்தமங்கை).

(அய்வந்தீச்சுரர், இருமலர்க்கண்ணம்மை, அற்புத சிவகங்கை தீர்த்தம்.)

அஷ்டவக்கிரரிஷி பூசித்த தலம்.

## திருநீலநக்கநாயனார்.

பிராம்மண குலத்தில் ஆடிமாதம் பூரநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவபூசை செய்தொழுகுவோர், ஓர் நாள் சிவபூசை செய்கையில் சிவபெருமான்மீது சிலந்தி யூர்ந்ததை யுணர்ந்த அவர் பத்தினியார் வாயாலூதி யகற்ற, வாயாலூதுதல் அநுசிதமென்று கொண்ட நாயனார், மனைவியைத் தள்ளிவைப்பச், சிவபெருமான் அவரது கனவிற் றோன்றித் தம் திருமேனியைக் காட்டியருளி, அம்மாது சிரோமணியூதி யகற்றுதவிடங் கொப்புளங் கொண்டதையும், ஊதியவிடங் கொப்புளங் கொள்ளாமையையுங் காண்பித்து மனைவியாரோ டுறவாக்கிவைப்ப, நாயனார் சிவத்தொண்டு முதலிய செய்துவந்து திருஞானசம்பந்த சுவாமிகள் திருமணத்தில் வைகாசிமாத மூல நாளிற் சோதியிலொடுங்கச் செய்தருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருநள்ளாறுக்குத் தென்மேற்கே 5 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநாகைக்காரோணம் (நாகபட்டணம்).

(காயாரோகணேச்சுரர், நீலாயதாட்சியம்மை, நித்தியதீர்த்தம், வாரிதீர்த்தம், தேவதீர்த்தம், முனிவர் தீர்த்தம், சர்வதீர்த்த முதலியன. இது சப்தவிடங்கங்களிலொன்று)

புண்டரீகமகாரிஷியைக் காயத்தோடு திருவுருவிற் கலக்கச் செய்த தலம். அகத்தியர் - பிரம்மா - இயமன், விஷ்ணு-வாசுகி முதலிய நாகங்கள், அவற்றின் கன்னிகைகள், சத்தரிஷிகள், விசுவாமித்திரரிஷி முதலாயினோர் பூசித்ததலம். முசுகுந்த சக்ரவர்த்தியின் பிரமஹத்தியும், பாண்டியராசன் கயநோயும், விருத்தன் - இந்திரன்-தருமன் இவர்களைப்பற்றிய சாபங்களுந் தீரப்பெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் "பத்தூர் புக்கிரந்துண்டு" என்னும் பதிகத்திற் கேட்டுக்கொண்ட எல்லாவற்றையும் அநுக்கிரகித்த தலம். அதில் "காற்றனைய கடும்பரிமாவேறுதலும் வேண்டும்" என்றதற்குச் சாட்சியாக இக்காலத்தும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் குதிரைவாகனம் நடத்தப்பட்டு வருகின்றது.

அதிபத்தநாயனார்.

ஐப்பசிமாத இரேவதி நாளிற் பரதவர் குலத்திற் றிருவவதாரஞ் செய்தருளி, மீன்பிடித்து வாழ்பவர், தாம் பிடித்த மீனுள் ஒன்றைச் சிவபிரானுக்கென்று சலதியில் விடுத்துவருவது நியமம். சிலநாளொருமீனன்றி வேறுமீன் அகப்படாதொழிய, வேறொருநாட் சொர்ணரத்தின கசித மான ஒரு மீன் அகப்பட, அதனையுஞ் சிவபெருமானுக் கென்று விடுத்து மகிழ்ந்த அந்நாயனாரை ஆவணிமாத ஆயிலியநாளிற் சிவபதஞ் சேர்ந்தருளிய தலம். சமயாசாரி யர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-எ.

---

## நாகபட்டணம்.

இது தஞ்சாவூர் ஜில்லாவைச் சார்ந்த ஹெட் அஸிஸ் டண்ட் கலெக்டர் இருக்கும் தாலுக்காவின் பிரதானமான முனிசிபல் பட்டணம். இதில் 60,168 குடிகள் வதிந்து வரு கிறார்கள். இதன் வடபாகத்திற்குக் காடம்பாடி என்றும், தென்பாகத்திற்கு நாகபட்டணம் என்றும், மத்யபாகத் திற்கு வெளிப்பாளையம் என்றும் சொல்லுகிறார்கள். இவ் விடம் சர்க்கார் கச்சேரிகள் இருப்பதன்றியில் தென்னிந் தியா ரெயில்வே ஒர்க்ஷாப் கட்டிடமும் இருக்கிறது. இதில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வேலைசெய்து வருகிறார்கள். நாகபட்டணம் துறைமுகப் பட்டணமா யிருப்பதால் நிலக் கடலை முதலான பல சரக்குகள் ஏற்றுமதி யாகின்றன. நக ரத்திலுள்ள குடிகளில் 20 பங்குக்காரர் லப்பைகளே. இவர் கள் வர்த்தகமுயற்சி உடையவர்க ளானபடியால் இலங்கை, இரங்கூன், பினங்கு, சிங்கப்பூர் முதலான தொலை தூரங்க ளில் வர்த்தகசாலைகளை ஏற்படுத்தி வியாபாரம் செய்து வருகிறார்கள். இதன் வர்த்தக வசதியைக் கருதிப் போர்த்த கேசியர் வசமிருந்து 1660ஸு டச்சுக்காரர்வந்து பிடித் துக்கொள்ள, 1781ஸு இங்கிலீஷ்காரர் வசமாகியது.

---

## நாகூர்.

இது நாகபட்டணத்துக்கு 4½ மைல் தூரத்தில் இருக் கிறது. இங்குப் புன்னகிரவனம் என்றுதி ஹிந்து கோயில்க ளிருக்கினும் நாகூர் மீராசாயபு மசீதே சிறந்தது. இந்த மீராசாயபு எனப்பட்டவர் சுமார் 300 ஸுங்களுக்கு முன் மஹா மஹத்துவங்கள் செய்தவராம். ஆகவே அவர் சமாதி

யின்பேரில் தஞ்சை இராஜா 124 அடி உயரமுள்ள மினாரஸ் கோபுரங்கள் கட்டிவைத்து அநேக மானியங்களைக் கொடுத்திருக்கிறாராம். வருஷமொருமுறை நடக்கும் கந்திரி உற்சவத்தில் ஏராளமான ஜனங்கள் வந்து தெரிசிக்கிறார்கள். இதற்கு ஏழு மைல் தூரத்தில் காரைக்கால் என்னும் பிரான்சுக்காரர் பட்டண மிருக்கிறது.

இந்த நாகபட்டணம் சென்னை இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 266 மைல் தூரத்தி லிருக்கிறது. இதற்கு மூன்றாம் வகுப்பு சார்ஜ் ரூபாய் 3-1-0.

---

## அதிராமபட்டணம்.

இது பட்டுக்கோட்டையைச் சார்ந்த யூனியன் கிராமம். இதில் 10,021 குடிகள் இருக்கிறார்கள். ஸ்ரீ ஷேக் அலாவுதீன் அவுலியா என்னும் பக்கீர் சமாதியின்மேல் அழகாகக் கட்டப்பட்ட ஒரு மஜீத் இருக்கிறது. அவர் 400 வருஷங்களுக்குமுன் இருந்தவராம். உப்பு, தேங்காய் விசேஷமாக ஏற்றுமதி யாகின்றன. ஏராளமான நெல் இறக்குமதியாகி அதைக் குத்தி உமி நீக்கிய பிறகு இலங்கைத் தீவுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. இதற்கு இரண்டு மைல் தூரத்திலுள்ள இராஜமாட மென்னு மிடத்தில் தஞ்சாவூர் ராஜர் கட்டின ஒரு பெரிய சத்திர மிருக்கிறது.

இது தென் இந்தியா சென்னை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 237½ மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருச்சிக்கல்.

(நவனீதநாதேச்சுரர், வேனெடுங்கண்ணியம்மை, நவனீத தீர்த்தம்.)

ஸ்ரீ கிருஷ்ணன்: வெண்ணெய் திருடியுண்ட பாவம் போகப் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நாகபட்டணத்துக்கு மேற்கே 3 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருக்கீழ்வேளூர் (கீவளூர்).

அட்சயலிங்கேஸ்வரர், வனமுலைநாயகியம்மை, அட்சய தீர்த்தம்.)

(அட்சயதேவர் முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருவாரூருக்குக் கிழக்கே 7 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருத்தேவூர்.

(தேவகுருநாதேச்சுரர், மதுரபாஷிணியம்மை, பிரகஸ்பதி தீர்த்தம்.)

பிரகஸ்பதி முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது கீழ்வேலூர் ஸ்டேஷனுக்குக் கிழக்கே 2 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருப்பள்ளியின்முக்கூடல் (அரியான்பள்ளி).

(முக்கோணேச்சுரர், மைமேவுகண்ணியம்மை, முக்கூடற் தீர்த்தம்.)

மூர்க்கரிஷி முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாரூருக்கு வடகிழக்கே 6 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருவாரூர் மூலட்டானம்.

(புற்றிடங்கொண்டார், அல்லியங்கோதையம்மை, வீதிவிடங்கப்பெருமான், கமலவதியம்மை, கமலாலயமுதலிய பல தீர்த்தங்கள்.)

திருமால் மார்பகமே ஊஞ்சலாக அமர்ந்த சோமஸ்கந்த மூர்த்தியாகிய தியாகப்பெருமானை முசுகுந்தச் சக்ரவர்த்தி இந்திரனுற் பெற்று ஸ்தாபித்த தலம். இது சப்தவிடங்கத்துள் மிக்கது. வசிஸ்டர், கௌதமர், பிரம்மா, விஷ்ணு, தேவேந்திரன் முதலியோர் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம்.

இது கும்பகோணத்திற்குத் தென்மேற்கில் 8½ மைல் தூரத்தில் இருக்கிறது.

## நமிநந்தியடிகள் நாயனார்.

ஏமப்பேரூரில் பிராம்மண குலத்தில் ஐப்பசிமாத உத்திர நாளிற் றிருவவதாரஞ் செய்தருளித் திருவிளக்கிடும் பணி புரிந்துவருங்கால், ஓர்நாள் தீபநெய் முட்டுதலடையச் சைனனென்றறியாத ஒருவன் மனையில் நெய் கேட்புழி அவன், "நுங்கடவுள் அக்கினியைக் கையிலுடையரா யிருத்தலால் விளக்கு யாதுக்கு? அப்படி விளக்கெரிக்க வேண்டுமானால் நீரைவார்த் தெரியும் பார்ப்போம்" என்று பரிகாசஞ் செய்தபடி நாயனார் தண்ணீரால் விளக்கெரித்த தலம். உற்சவகாலத்தில் பலசாதியார் கூடி நெருங்கியதைத் தீட்டாக நினைத்த அந் நாயனாருக்கு, எத்திறத்தோரும் சிவகணங்களா மெனக்காட்டி வைகாசிமாதப் பூசநாளிற் றிருவடியருளிய தலம்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருக்கயிலையில், நந்தனவனத்திற் கண்ட அம்மன் சேடியர்களி லொருவராகிய் கமலினியார், உருத்திர கணிகையர் மரபிற் றிருவவதாரஞ் செய்தருளிப் பரவையாரென்னுந் திருநாமத்தோடு சிவபணிவிடை செய்துவந்து, சிவாஞ்ஞைப்படி சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருமணஞ் செய்யப்பெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சங்கிலி நாச்சியாரையு மணந்துகொண்டமைபற்றிப் புலவியடைந்த பரவையார் மனைக்கு, எம்பெருமான் திருக்கால்கள் நோவ ஒருகா லிருகால் தூதுநடந்து அவ்வூடல் நீக்கியருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூரை நீங்கியபொழுது அபாவமான கண்க ளிரண்டில் முன்னமே காஞ்சியிற் பெற்ற ஒரு கண்ணுடன் மற்றொரு கண்ணுந் தந்தருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளை மணக்கோலத்துடன் வரப்பண்ணிய சிவபெருமான், அவருள்ளத்திற் செய்த அடியார் வணக்கத்தை வெளிப்படுத்தும்பொருட்டு, உலகமறியத் "தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்துத் திருத்தொண்டத்தொகை பாடுவித்து, அதில் "திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்" என்று துதிக்கப்பெற்ற தலம்.

## விறன்மிண்ட நாயனார்.

திருச்செங்குன்றூரில் வேளாண்மரபில், ஆவணிமாத மூலநாளிற் றிருவவதாரஞ்செய்தருளித் தலயாத்திரை செய்

பவர், இத்தலத்துத் தேவாசிரியனி லமர்ந்திருக்குங்கால், சுந்தரமூர்த்தி சுவாமிகள், அடியாரை வணங்காது சென்ற தற்காக அவரையும் அவரை வலிந் தாண்டதற்காகச் சிவ பெருமானையும் புறகென் றுரைத்து, அவ் வன்றொண்டர் திருத்தொண்டத்தொகை பாடியருளிய பின்னர்க் கேண் மைகொண்டு சித்திரைமாதத் திருவாதிரைநாளில் சிவ கணங்களுக்குத் தலைவராகிய தலம்.

## தண்டியடிகள் நாயனார்.

புரட்டாசிமாத வைசாகநாளிற் றிருவவதாரஞ் செய் தருளிப் பிறவியந்தகரா யிருந்தும், திருக்குளப் பணி செய்துவரும்போது, அவர் கட்டிக் கரையேறும் அடை யாளக் கயிற்றை யறுத்துவிட்ட அமணர்கள், முகநகைக் காற்றுதவராய், சிவபிரானிடத்துக் கண்பெற்றும், தம்மை நகைத்த அச்சமணரைக் கண்ணிழக்கச் செய்தும், பங்குனி மாதச் சதய நாளிற் றிருவடியடைந்த தலம்.

## கழற்சிங்கநாயனார்.

காடவர் குலத்தில் தைமாத அசுவனி நாளிற் றிருவவ தாரஞ் செய்தருளி, அரசுபுரிந்து தலயாத்திரை செய்து வருங்கால் இத்தலத்தடைய, இவரது மனைவியார் கோயி லிற் சிந்தியிருந்த ஓர் மலரையெடுத்து மோப்ப, அதனைத் தஞ்சாவூரில் வேளாண்மரபில் தைமாத உத்திரட்டாதி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளியவரும், சிவாபராதஞ் செய்பவர்களைத் தண்டித்து நேர்படுத்துவோருமாகிய, செருத்துணை நாயனார் கண்டு அரசன் மனைவியின் நாசியைக் குறைக்க, அரசன் அம் மலரை யெடுத்து "நாசிக்கிந்தது கையர்தலால் அதனையுஞ் சேதித்தல் வேண்டும்" என்று சேதிப்ப, இவ்வரிய சிவபணிபுரிந்த கழற்சிங்க நாயனாரை வைகாசிமாதப் பரணி நாளிலும், செருத்துணை நாயனாரை, ஆவணிமாதப் பூச நாளிலும், சிவபதமடைவித்த தலம்.

மநுநீதிச் சோழமகாராஜாவை நீதி சோதிப்பான்பொரு ட்டு, வீதிவிடங்கப்பெருமானை பசுவும், இயமனை கன்று மாக வந்து, கன்றை அவ்வரசகுமாரனது தேர்க்காலி லகப் படச்செய்து, பசுவானது ஆராய்ச்சிமணியை யசைத்ததின் பொருட்டு அரசனால் அவரது குமாரனைத் தேர்க்காலி லிட றச்செய்வித்துப் பின்னர் அநுக்கிரகித்தருளிய தலம்,

பூந்துருத்தி நம்பிகாடநம்பியாற் றிருவிசைப்பாப் பாடியருளப்பெற்ற தலம். ஐயடிகள் காடவர்கோன்நாயனார், க்ஷேத்திர வெண்பாப் பாடியருளிய தலம். மாணிக்கவாசக சுவாமிகளுக்குத் தரிசனங் கட்டளையிட்டருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கு, "அத்தன் ஆரூர் ஆதிரை நாளா லதுவண்ணம்" என்றும், "ஒருவனு யுலகேத்த நின்றநாளோ" என இத்தலத்தினது பழமையைப் புகழ்ந்தும், திருப்பதிக மருளிச்செய்து புகழ்பெற்ற தலம். சேரமான் பெருமாணாயனார் மும்மணிக்கோவை பாடியருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௩௪.

---

## திருவாரூர் அறநெறி (திருவாரூர்).

(அகிலேச்சுரர், அல்லியங்கோதையம்மை, அற்புதக்கூவமுதலிய தீர்த்தங்கள்.)

அசிதரிஷி, மார்க்கண்டேயரிஷி முதலாயினோர் பூசித்த தலம். நமிநந்தியடிகள் நாயனார் நீராலே விளக்கேற்றி எரிப்பச் செய்தருளிய தலம். திருமூலட்டானத்து இரண்டாம் பிரகாரத்தில் மேற்கு முகமா எழுந்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம் ௨.

இது திருவாரூர் கோவில் 2-ம் பிரகாரத்திலிருக்கிறது.

---

## திருவாரூர்ப் பரவையுண்மண்டளி (திருவாரூர்).

(பரவையுண்மண்டலீச்சுரர், பஞ்சின்மெல்லடியம்மை, வருணபுட்கரணி முதலிய தீர்த்தங்கள்.)

துர்வாசமாமுனி பூசித்த தலம். இந்நகரமீது வருணன்விட்ட கடலை வறப்பச்செய்தமைபற்றி வருணன் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௧.

இது மேற்படி பெரிய கோயிலி லிருக்கிறது.

---

## திருவண்டாம்பாலை.

(கோகர்ணேச்சுரர், உமாதேவியம்மை, கூவதீர்த்தம்.)

காமதேனு பூசித்த தலம். விறன்மிண்டநாயனார், சுந்தரமூர்த்தி சுவாமிகளால் தியாகேசரோடு மன்ஸ்தாபமாய்,

இத்தலஞ் சென்று திருவாரூர் என்போரை வெறுத்து மற்றைய அடியவர்களை உபசரித்து மிருப்பவர், தியாகராசரே வலிதில் எழுந்தருளி வந்து செல்வத் திருவாரூரென மொழியத், தூரத்திச் சென்ற அந் நாயனாரைத் தியாகேசர் "எம்மெல்லை மிதித்தனையே" எனக் கூறக்கேட்டுத் தமது காலைக் கண்டிக்க முயன்ற நாயனாரது பத்தியை வியந்து தரிசனங் கொடுத்துத் திருவாரூருக்கு அழைத்துச்சென்று சுந்தரமூர்த்தி சுவாமிகளோடு நட்புச் செய்தருளிய தலம்.

---

## திருவிளமர்.

(பதஞ்சலி மனோகரேச்சுரர், யாழினுமென்மொழியம்மை, முத்திதீர்த்தம்.)

பதஞ்சலிமகாமுனிவர், முசுகுந்தச் சக்கரவர்த்தி முதலியோர் பூசித்த தலம். சப்தவிடங்கத் தலத்துளொன்று. திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மாயூரத்துக் கிழக்கே 4½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கரவீரம்.

(கரவீரேச்சுரர், பிரத்தியட்சமின்னம்மை, அனவரத தீர்த்தம்.)

கௌதமரிஷி முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாரூருக்கு மேற்கே 7 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பெருவேளூர்.

(பிரியாதநாயகேச்சுரர், மின்னனையாளம்மை, சத்தி தீர்த்தம்.)

சிவசத்தி பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருவாரூரிலிருந்து மேற்கே 8½ மைல் தூரத்திலிருக்கிறது.

## திருத்தலையாலங்காடு.

(ஆடவல்லவேச்சுரர், திருமடந்தையம்மை, சொர்ண தீர்த்தம்.)

கபிலரிஷி முதலியோர் பூசித்த தலம். தாருகவனரிஷிகளா லனுப்பப்பட்ட முயலகனது முதுகின்மீது சிவபெருமான் நடித்தருளிய தலம் திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கொரட்டாச்சேரு ஸ்டேஷனிலிருந்து வடக்கே 13 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்குடவாயில்.

(கோணேச்சுரர், பெரியநாயகியம்மை, திருக்குட தீர்த்தம்.)

திரணபிந்துவென்னு முனிவர் பூசிப்பச் சிவபெருமான் றிருக்குடத்தினின்றும் பிரசன்னராய் அவரது குட்டநோயை நீக்கியருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது குரட்டாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடக்கே 8 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருச்சேறை.

(செந்நெறியப்பேச்சுரர், ஞானவல்லியம்மை, மநோகர தீர்த்தம்.)

தௌமியரிஷி முதலியோர் பூசித்த தலம் திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ரு.

இது கும்பகோணத்துக்குத் தென்கிழக்கே 9 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநாலூர் மயானம்.

(பலாசவனேச்சுரர், பெரியாம்பிகையம்மை, பலாவடித் தீர்த்தம்.)

ஆபஸ்தம்பரிஷி முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற்பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருக்குடவாசலுக்கு 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் (ஆண்டாங்கோவில்).

(சொர்ணபுரீசுரர், சிவாம்பிகையம்மை, சொர்ண தீர்த்தம்.)

காசிபரிஷி முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நீடாமங்கலம் ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கே 11 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திரு இரும்பூளை (ஆலங்குடி).

(காசியாரண்ணியேச்சுரர், ஏலவார்குழலியம்மை, காசி தீர்த்தம்.)

விசுவாமித்திரரிஷி முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திரு அரதைப்பெரும்பாழி (அரித்துவாரமங்கலம்).

(பாதாளேச்சுரர், அலங்காரநாயகியம்மை, பாதாள தீர்த்தம்.)

பொன்கண்ணனென்னும் அசுரனைக் கொன்று பூமியை மீட்ட விஷ்ணுவுக்கு உன்மத்தங்கொண்டு, பூமியை அழிக்கப்புகும்பொழுது, சிவபெருமான் அப்பன்றியின் கோட்டை முறித்துத் தமது மார்பில் அணிந்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது சாலியமங்கலம் ஸ்டேஷனிலிருந்து வடக்கே 7 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திரு அவளிவணல்லூர்.

(காட்சிநாயகேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, பிரசன்னதீர்த்தம்.)

வராக அவதாரத்திற் கொம்பு பறிகொடுத்த விஷ்ணு பூசித்துக் காட்சிபெற்ற தலம். திருநாவுக்கரசுசுவாமிகள்,

திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது சாலியமங்கலம் ஸ்டேஷனுக்கு வடக்கிழக்கே 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பருதிநியமம் (பழம்பஞ்சுரம்).

(பருதியப்பேச்சுரர், மங்களநாயகியம்மை, பாஸ்கர தீர்த்தம்.)

சூரியன் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது சாலியமங்கலம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே 8 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவெண்ணியூர்.

(வெண்ணிநாயகேச்சுரர், அழகியநாயகியம்மை, அழகு சிவகங்கை தீர்த்தம்.)

தத்தாத்திரேயரிஷி முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது அம்மாபேட்டை ஸ்டேஷனுக்கு வடகிழக்கே $3\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பூவனூர்.

(புட்பவனேச்சுரர், கற்பகவல்லியம்மை கற்பக் தீர்த்தம்.)

சுகமுனிவர் கற்கரிஷி இவர்களும், சுபுத்தி - சராசந்த னென்னும் மறையவர்களுஞ் சேர்ந்து புஷ்பவனஞ் செய்து அர்ச்சித்துவந்து, கதி பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நீடாமங்கலம் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கே 2 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருப்பாதாளேச்சுரம் (பாமணி).

(சர்ப்பபுரேச்சுரர், அமிர்தநாயகியம்மை, நாகதீர்த்தம்)

ஆதிசேஷனும், நாகலோகத்தாரும் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து 10 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருக்களர்.

(களரிளமுனையேச்சுரர், அழகேஸ்வரியம்மை, திருக்குளத் தீர்த்தம்.)

பராசரமுனி, காளவமுனி இவர்கள் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருத்துறைப்பூண்டி ஸ்டேஷனுக்கு மேற்கே 9 மைல் தூரத்தில் இருக்கிறது.

## திருச்சிற்றேமம் (சிற்றும்பூர்).

பொன்வைத்த நாதேச்சுரர், அகிலாண்டேஸ்வரியம்மை, அகிலாண்ட தீர்த்தம்.)

வியாசரிஷி, அத்திரிமகாரிஷி பூசித்த தலம். ஆகாரமின்றி வருந்தும் விபுதனென்னும் அடியவருக்குப் படியின் கீழ் நாடோறும் ஒரு பொற்காசு வைத்து அவருக்குக் கனவிற் கூறியருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருத்துறைப்பூண்டி ஸ்டேஷனுக்கு வடக்கே 8 மைல் தூரத்தில் இருக்கிறது.

## திருவுசாத்தானம் (முத்துப்பேட்டைக்கோயிலூர்).

(மந்திரபுரேச்சுரர், பெரியநாயகியம்மை, சுக்கிரீவதீர்த்தம்.)

ஸ்ரீராமர், லட்சுமணர், சாம்புவன், சுக்கிரீவன், அனுமான் முதலியோர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது முத்துப்பேட்டை ஸ்டேஷனிலிருந்து வடக்கே 2 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## முத்துப்பேட்டை.

இது தஞ்சையைச் சார்ந்த திருத்துறைப்பூண்டி தாலுக்காவின் கிராமம். சமுத்திரக்கரைக்கு $7\frac{1}{2}$ மைல் தூரத்தில் இருக்கிறது. இவ்விடம் தேங்காய்கள் அதிகம். சுமார் ஒரு மைல் தூரத்தில் ஸ்ரீ ஷேக் டாட் அவுலியா ரவர்களுடைய சமாதியும் கோயிலு மிருக்கிறது. இது, சென்னைத் தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 228 மைல் தூரத்தில்இருக்கிறது. இதற்கு மூன்றும் வகுப்பு சார்ஜ் ரூபா 2-9-0. தஞ்சை டிஸ்திரிக்டு போர்ட் ரெயிலும் போகிறது.

---

## பட்டுக்கோட்டை.

இது தஞ்சையைச் சார்ந்த தாலுக்கா யூனியன் பட்டணம். இதில் இப்போது 5994 ஜனங்கள் குடியிருக்கிறார்கள். இது ரெயில்வே ஸ்டேஷனுக்கு இரண்டு மைல்கள் தூரத்திலும், கடற்கரைக்கு 7 மைல்கள் தூரத்திலு மிருக்கிறது. யாத்திரைக்காரருக்கு உபயோகமாக 25 சத்திரங்களும், ஹோட்டல்களு மிருக்கின்றன. இவ்விடத்தில் சைவ வைணவ க்ஷேத்திரங்கள் இருப்பதன்றியில், நாடியம்மன் கிராமதேவதை உற்சவத்தைச்சித்திரை மாதத்தில் விசேஷமாகக் கொண்டாடுகிறார்கள். பிரதி திங்கட்கிழமைதோறும் சந்தை கூடுகிறது. நிலக்கடலை விசேஷமாகப் பயிர் செய்யப் படுவதோடு, இங்கே விளையும் பலாப்பழம், மிளகாய், புளி, மாம்பழம் இவைகளும்-கருவாடு முதலானவைகளும் ஏற்றுமதி யாகின்றன. முன்சீப்-தாசில்-சப் மேஜிஸ்ட்ரேட் கச்சேரிகளும், ஆஸ்பத்திரி முதலானவைகளு மிருக்கின்றன. இதற்கு இரண்டு மைல் தூரத்தில் உள்ள பட்டுமெலராயன் கோட்டை இப்போது இடிந்து கிடக்கிறது. இக்கோட்டையினாலேயே இதற்குப் பட்டுக்கோட்டைஎனபெயர் வந்தது போலும். இது சென்னைத் தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 245 மைல் தூரத்தில் இருக்கிறது. இதற்கு மூன்றும் வகுப்பு சார்ஜ் ரூபாய் 2-12-0.

## திருஇடும்பாவனம்.

(சற்குணநாதேச்சுரர், மங்களநாயகியம்மை, சுமுக புட்கரணி தீர்த்தம்.)

இடும்பனென்னு மசுரன் பூசித்து வலிமைபெற்ற இக் குன்றில் புகலகர் முதலிய ரிஷிகள் பூசித்து அநுக்கிரகம் பெற்ற தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருத்துறைப்பூண்டி ஸ்டேஷனுக்குத் தென் மேற்கே 10 மைல் தூரத்தில் இருக்கிறது.

## திருக்கடிக்குளம் (கற்பகனூர்கோயில்).

(கற்பகேச்சுரர், சௌந்தரநாயகியம்மை, விநாயகர் கண்ட தீர்த்தம்.)

கற்பகப்பிள்ளையார் பூசித்துச் சிவபெருமானிடம் மாம் பழம்பெற்ற தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருத்துறைப்பூண்டி ஸ்டேஷனுக்குத் தென் கிழக்கே 10 மைல் தூரத்தில் இருக்கிறது.

## திருத்தண்டலைநீணெறி.

(நீணெறிநாதேச்சுரர், ஞானநாயகியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

கூர்மாவதாரங்கொண்ட விஷ்ணு முதுகில் மந்தரகிரியை நாட்டித் தேவர்கள் அமுதங் கடைந்தபோது, அக்கூர்மம் அகங்கரித்துக்கடலைக்கலக்குவதைப் பார்த்து முறையிட்ட தேவர்களுக்காகச் சிவபெருமான் இரங்கி அக் கூர்மத்தின் அகந்தையை ஒழித்து அவ்வாமையோட்டை யணிந்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாவூருக்குத் தெற்கே 15 மைல் தூரத்தில் இருக்கிறது.

## திருக்கோட்டூர்.

(கொழுந்தேச்சுரர், மதுரவசனியம்மை, அமிர்த தீர்த்தம்.)

தேவர்களும் குச்சரிஷியும் பூசித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நீடாமங்கலம் ஸ்டேஷனுக்குத் தெற்கே 10 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருவெண்டுறை.

(வெண்டுறைநாதேச்சுரர், வேனெடுங்கண்ணியம்மை, தாளதீர்த்தம்.)

வித்தியாதரர் முதலியோர் பூசித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நீடாமங்கலம் ஸ்டேஷனுக்குக் கிழக்கே 18 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருக்கொள்ளம்பூதூர்.

(வில்வவனநாதேச்சுரர், சௌந்தரவதியம்மை, குடமுருட்டி நதி தீர்த்தம்.)

சாண்டில்லியரிஷி முதலியோர் பூசித்த தலம். காவிரி நதியிலோடத்தாலுங் கடப்பதற்கரிய பெருவெள்ளம் வரும்போது திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கூட்டத்தோடும் ஓரோடத்திலேறி நின்று, "கொட்டமே கமழும்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி அதனாலேயே ஓடத்தை அக்கரை சேர்த்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்காய் 6 மைல் தூரத்தில் இருககிறது.

---

## திருப்பேரெயில் (பேரையூர்).

(சகலபுவனேச்சுரர், மேகலாம்பாளம்மை, வருணதீர்த்தம்.)

வருணன் முதலியோர் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது குழிக்கரை ஸ்டேஷனுக்குத் தெற்கே 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருக்கொள்ளிக்காடு.

(அக்கினியீச்சுரர், பஞ்சினுமெல்லடியம்மை, திருக்கொள்ளி தீர்த்தம்.)

சுதீட்சணரிஷி, சுமந்துரிஷி பூசித்த தலம். தக்கன் சிவபெருமானை மதிக்காது யாகஞ் செய்ததனல் சிவபெருமானுக் குண்டான கோபத்திற் பிறந்த வீரபத்திரர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது ஆத்தம்பாடி ஸ்டேஷனுக்கு $3\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருத்தெங்கூர்.

(வெள்ளிமலைநாதேச்சுரர், பெரியநாயகியம்மை, கருணாகர தீர்த்தம்.)

அரிஹரபுத்திரர் பூசித்து வரம்பெற்ற தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாரூருக்குத் தெற்கே 10 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருநெல்லிக்கா.

(நெல்லிவனநாதேச்சுரர், மங்களநாயகியம்மை, அற்புத தீர்த்தம்.)

தாருகாவனரிஷிகள் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாரூருக்குத் தெற்கே 8 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருநாட்டியத்தான்குடி.

(மாணிக்கவண்ணர், மலைமங்கையம்மை.)

யானை, புகலகரிஷி, நிபகண்டகரிஷி முதலியோர் பூசித்த தலம்.

கோட்புலிநாயனார்: வேளாளமரபில் ஆணிமாதத்திருவாதிரை நாளிற் திருவவதாரஞ் செய்தருளிச் சேனைக் காவலராய், அரசனது வினைமேற்கொண்டு செல்பவர், சிவாலய நைவேதனத்திற்காக வைத்துப்போன நெற்கோட்டைகளை, அவர் வரத் தாமதம் நேர்ந்தமையால், அப்போது நேரிட்ட பஞ்சத்திற்காற்றாத சுற்றத்தார் பின்னர்க் கொடுத்து விடலாமென்று கருதி எடுத்துப் புசிக்கப், போர்வினை முடித்துவந்த நாயனார், நைவேத்தியத்திற்கு வைத்த நெல்லைக் காணாது, அதனை யருந்திய சுற்றத்தாரை வாட்கிரையாக்கியதன்றியும், ஓர் பசுங்குழவியையும் வாளாலெற்கத் தொடங்குகையில் அயனின்றான் விலக்க, அக்குழவி அவ்வமுதுபடி யுண்டியா லூறிய பாலைப் பருகினமைபற்றி அதனையுந் துணித்தல் வேண்டுமென்று துணித்தருள, அந்நாயனாரை ஆடிமாதக் கேட்டைநாளிற் சுற்றத்தாரோடு சிவலோகத்தையடைவித்ததலம். இந்நாயனார் தமது பெண்களிருவரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் காட்டி மணஞ் செய்ய வேண்டியபொழுது, அவர்களை மகண்மைகொண்டு சிங்கடியப்பன். வனப்பகையப்பன் என நாமஞ்சூட்டிப் பதிகம் பாடியருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாரூர் ஸ்டேஷனுக்குத் தெற்கே 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநாட்டி ஏத்தங்குடி.

இது தஞ்சையைச் சார்ந்த மன்னார்குடிக்கு $\frac{3}{4}$ மைல் தூரத்தில் இருக்கும் சிவக்ஷேத்திரம். தஞ்சையிலாண்ட ஒரு சோழன் பகைவன்மீது சண்டைக்குப் போகவே தன் மனைவி மக்களுக்கும், இக்கோயிலிலுள்ள ரத்னபுரேஸ்வரர் மங்கள நாயகியம்மன் செலவுக்கும் தனித்தனியாக தானியாதிகளை வைத்துவிட்டுப்போய் இரண்டுவருஷம் கடந்து வந்து பார்க்கையில் தம் மனைவிமக்கள் இடையில் வந்துள்ள பஞ்சத்தில் ஷை கோயிலின் தானியங்களைத் தர்மார்த்தமாகக் கொடுத்தமைபற்றிக் கோபித்துத் தம் மனைவிமக்களைக் கத்திக்கிரையாக்கிக் கடைசி பிள்ளையை ஆகாயத்திலெறிந்து விழும்போது கத்தியை நீட்ட சிவபெருமான் பார்வதி தேவியோடும் வந்து தரிசனங் கொடுத்து, அவர் தம் மனைவி மக்களை எழுப்ப அவர்களும் அச்சோழனும்

கபிலைக்கேகின இடமாம். இது, சென்னை, தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனி லிருந்து 203½ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

---

## மன்னார்குடி.

இது தஞ்சை ஜில்லாவைச் சார்ந்த 21,388 குடிகள் வசிக்கும்படியான இடம். இதிலுள்ள 9 கோயில்களில் நான்கு - விஷ்ணுவுக்கும், ஐந்து-சிவனுக்கும் சேர்ந்தவை. பங்குனி சித்திரை மாதங்களில் விசேஷ உற்சவங்கள் நடை பெற்று வருகின்றன. இங்கிருக்கும் பெரிய தெப்பக்குளம் 1158 அடிகள் நீளமும், 837 அடிகள் அகலமு முள்ளது. இதன் மத்தியில் சிங்காரத் தோப்பும் கோயிலு மிருக்கின் றன. இது தஞ்சையிலாண்ட விஜயராகவலு நாயுடுகாரு வெட்டியதாம். இந் நகரிலுள்ள வீடுகளெல்லாம் கருமண் ணால் மெழுகிப் பளபளப்பா யிருக்கின்றன. இங்கு வெஸ் லியன் மிஷன் கோயில் ஒன்றிருக்கின்றது. இது, சென்னை தென்னிந்தியா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 236½ மைல் கள் தூரத்திலிருக்கும் நீடாமங்கலம் ஸ்டேஷனி லிறங்கிப் பிறகு ஜட்கா முதலான வண்டிகளில் போகலாம். இப்போது ரெயில் போடப்பட்டு வருகிறது.

### இராஜமன்னார் கோயில் தடாகத்தின் கரையின்மேலிருந்து செய்த பிரார்த்தனை.

"ஓ தயாநிதியே! தஞ்சை நாயடு சமஸ்தானத்தார் சதா துதிசெய்து கொண்டாடிய இந்த ஸ்தலத்தில் வந்து உன்னைத் தியானிப்பதற்குத் தன்னியனானேன். ஆஹா! என்ன அழகான தடாகம். இதன் மத்தியிலிருக்கும் கோயில் மண்டபத்தின் சிறப்பென்ன! தடாகத்தைப்போன்ற இம் மானிட தேகத்தில் கோபுரத்தைப்போன்ற ஜீவாத்மா வுக்குள் கோயிலிலிருக்கும் சுவாமியைப் போன்ற பர மாத்மா விளங்கும் பாவனையாகத் தத்வஞானிகள் கொண்டு நாலாபக்கங்களிலிருந்து வந்து இந்த தடாகத்தில் குளிந்து நின்னைத் தியானிக்கிறார்கள். இப்படிப்பட்ட தத்வார்த்த த்தை மந்த மதிகள் நின்னை ஜல ரூபமாகவும், பிருதுவி ரூப மாகவும், பின்னும் பலவித ரூபங்களாகவும் பாவித்துப் பிரார்த்தனை செய்வதிலும், சடங்குகள் செய்வதிலும், உற் சவத்தைக் கொண்டாடுவதிலும், வேடிக்கைகளை நாடுவதி

லும், தமது காலத்தையும் காசையும் கருத்தையும் செல வழித்துக்கொண்டு போகிறார்கள். அந்தோ! அவர்கள் தசை நிர்ப்பாக்கியமான தன்றோ? சகல பூதங்களிலும் நிறைந்து எங்குபார்க்கினும் "நான் நான்" என்று கோஷிக்கும் நினது அப்ராக்கிருத சரீரத்தைக் கண்டு ஆநந்தமடையும் காலம் அவர்களுக்கு என்று வருமோ என்று ஏக்க முறுகிறேன். மண்டலத்து மஹா மன்னர்கள் மஹிமைப்படுத்தும் மஹேஸ்வரனே! நினது அப்ராக்கிருத திவ்ய மங்கள சொரூபத்தை அறிந்து அவ்வுண்மையை அண்டத்தாரனைவர்க்கும் அறிவிக்க எனக்கு ஆயுளையும் ஆரோக்யத்தையும் அருள்வாய் சுவாமி! அருள் வள்ளலாகிய நினது அப்ரமேயத்வத்தை அனைவர்க்கும் அறிவிக்கும் தொழிலே அருந்தொழிலாகும். அப்படிப்பட்ட அருந்தொழிலைச் செய்துய்ய ஆசீர்வதித்தருள்வாய்! ஓம் தத்சத்."

## மங்கநல்லூர்.

இது மாயவரத்திற்கு முக்கால் மைல் தூரத்தி லிருக்கும் ஒரு விசேஷ சிவக்ஷேத்திரம். இதில் 1220 குடிகள் வதிந்து வருகிறார்கள். நெல் விசேஷ விளைவு. இதற்கு $1\frac{1}{2}$ மைல் தூரத்தில் இருக்கும் வாதாவூர் ஒரு விசேஷ சிவஸ்தலம். தாருகாவனத்தி லிருந்த ரிஷிகள் சிவபிரானைக் காணத் தவம் செய்கையில், அவர் இவர்களின் உண்மையான பக்தியைச் சோதிக்கும்பொருட்டு சந்நியாஸி வேடந் தரித்து நிர்வாணமாகத் திருவோடோடுவந்து இனிய கீதங்கள் பாட, ரிஷிபத்தினிகள் அவரைச் சேர ஓட, அவர் மாயமாக மறைய, ரிஷிகள் அவரைக் கொல்வதற்குப் பலவித முயற்சிகள் செய்தும், கடைசியாக ஒரு மதயானையை யனுப்ப அவர் அதன் வயிற்றைக் கிழித்துக் கொண்டுவந்து தரிசனம் கொடுத்த பாவனையாக விக்கிரகமிருக்கிறது. இது சென்னை, தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனுக்கு $179\frac{1}{4}$ மைல்கள் தூரத்தி லிருக்கிறது.

## திருக்காராயில்.

(கண்ணாயிரநாதேச்சுரர், கயிலாயநாயகியம்மை, இந்திர தீர்த்தம்.)

தேவேந்திரன், முசுகுந்தச்சக்கரவர்த்தி முதலியோர் பூசித்த தலம். சப்தவிடங்கத் தலத்துளொன்று. திருஞான

சம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாவூருக்குத் தெற்கே 8½ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருக்கன்றுப்பூர்.

(நடுத்தறியப்பேச்சுரர், மாதுநாயகியம்மை, பிரசன்ன தீர்த்தம்.)

இடும்பனென்னும் அசுரன் பூசித்து வரம் பெற்ற தலம். ஓர் மாதின் பொருட்டுக் கன்றுக்குட்டிக்கு நட்டதறியிலிருந்து ஆயுற்பவித்தவராகையால், இத்தலநாயகருக்குந் தலத்திற்கும் அக்காரணப்பெய ருண்டாயிற்று. திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவாரூர் ஸ்டேஷனுக்குத் தெற்கே 10½ மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருவலிவலம்.

(மனத்துணைநாதேச்சுரர், வாளன்னகன்னியம்மை, காரணகங்கை தீர்த்தம்.)

காரணரென்னும் ரிஷியும், கரிக்குருவியும் பூசித்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது திருவாவூருக்குத் தென்கிழக்கே 6 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருக்கைச்சின்னம்.

(கைச்சினநாதேச்சுரர், வெள்வளையம்மை, திருக்குளதீர்த்தம்.)

திருநாவிந்துவென்னு முனிவர் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருநெல்லிக்கா ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது.

## திருக்கோளிலி (திருக்குவளை, கொன்றையூர்).

(கோளிலிநாதேச்சுரர், வண்டமர் பூங்குழலம்மை, திருக்குவளை தீர்த்தம்.)

சப்தவிடங்கத் தலத்திலொன்று. கின்னரர்கள், முசுகுந்தச்சக்கரவர்த்தி முதலாயினோர் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரவையாரோடு மெழுந்தருளியிருக்கும்போது, திருவமுதுக்காக நென்முதலியன தரும் வேளாளகுலக் குண்டையூர்க்கிழார் கருப்புக்காலத்தில் நெல் வேண்டுமென்று சிவபெருமானைத் துதிக்க, அவர் நெல்மலையைத் தந்தருள, அதைக் குண்டையூர்க்கிழார் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக் கறிவிப்பச், சுவாமிக ளிங்குவந்து அதனை யெடுப்பிக்கும்பொருட்டு "ஆளிலையெம்பெருமானவையட்டித் தரப்பணியே" என்று பதிகமோதி இரவில், பூதகணங்களால் அந்நென்மலையைத் திருவாரூர் மனைகடோறும் நிரம்பும்படி செய்தருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## திருவாய்மூர்.

(வாய்மூரநாதேச்சுரர், பாலினு நன்மொழியம்மை, சண்டமாருத தீர்த்தம், வன்னிவிருக்ஷம்.)

வாயு தேவன், முசுகுந்தச் சக்கரவர்த்தி முதலியோர் பூசித்த தலம். சப்தவிடங்கத் தலத்து ளொன்று. திருமறைக்காட்டில் அப்பர் சுவாமிகள் பதிகம் நிரம்பியபின் கதவு திறந்த அருமையையும், கௌணியர்கோன் முதற்கவியிற்றானே கதவடைக்கப்பெற்ற எளிமையையும் சிந்தித்தழுது என்னையென்று இரவில் கவன்ற அப்பர் சுவாமிகளுக்குக் கனவின்கண்ணே சிவபெருமான் சிவனடியார்போற் றோன்றி "வாய்மூருக்குவா" என்றழைத்தபடி இங்குவர, முன்னாகவழிகாட்டி வந்த சிவபெருமான் அப்பர்சுவாமிகளுக் கணித்தாகாமற் செல்லும்பொழுது அங்குத் திருஞானசம்பந்தசுவாமிகளும் வர, அரசுகள், "ஓர் கவியால் கதவடைக்கப்பெற்றவர் வந்தும் சுவாமிகள் தாழ்த்தல் சரியா?" என்றபொழுது அவ்விருநாயன்மாருக்கும், சிவபெருமான் தரிசனங் கட்டளையிட்டருளி அவ்விரு சுவாமிகளாலும், பதிகம் பெற்றுள்ள தலம். திருப்பதிகம்-௩.

இது திருவாரூருக்குத்தென்கிழக்கே 15மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருமறைக்காடு (வேதாரணியம்).

(மறைக்காட்டேச்சுரர், யாழைப்பழித்தமொழியம்மை, வேத தீர்த்தம், அலைவாய்த்தீர்த்தமுதலிய தீர்த்தங்கள்.)

வேதங்களாலும் முசுகுந்தச்சக்கரவர்த்தியாலும் பூசிக்கப்பெற்ற தலம். சப்தவிடங்கத்தலத்துளொன்று. இத்தலத்தில் வேதம் பூசித்து, சாத்திய திருக்கதவம் உலகோர் திறக்கலாற்றாது வேறு வழியிற் சென்று சுவாமி தரிசனஞ் செய்து வருவதை யுணர்ந்த பிள்ளையாரும், அரசுகளும் ஆங்குச் சென்று அரசுகளாற் பதிகமோதித் திருக்கதவந் திறப்பித்துச் சுவாமிதரிசனஞ் செய்தபொழுது, பிள்ளையார் பதிகம்பாடிக் கதவை யடைப்பித்து, அன்றுமுதலனைவோருக்கும் அக்கதவம் அடைத்தல், திறத்தல் வழங்குவதாகச் செய்தருளிய தலம். இதனாலே தேவாரப்பதிகங்கள் தமிழ் வேதமேயாமென்பது பிரசித்தம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-கக.

இது நாகபட்டணத்திற்குத் தெற்கே 30 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருஅகத்தியான்பள்ளி.

(அகத்தியேச்சுரர், மங்கைநாயகியம்மை, அகஸ்திய தீர்த்தம்.)

அகஸ்தியமுனிவர் முதலிய ரிஷிகளும், தேவர்களும் பூசித்த தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது வேதாரணியத்துக்குத் தெற்கே ஒரு மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருக்கோடிக்குழகர்.

(அமிர்தகடேச்சுரர், மையார்தடங்கண்ணியம்மை, அமிர்த தீர்த்தம், அலைவாய் தீர்த்தம்.)

வாயுதேவன் இன்றும் பூசிக்கின்ற ஐதீகமாகக் கடிய காற்றெழும்புந் தலம். பலதேவர்களும், இருடிகளும் பூசித்தனுக்கிரகம் பெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது வேதாரணியத்திற்குத் தெற்கே 6 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருப்பெருந்துறை (ஆவுடையார்கோவில்).

(ஆத்மநாதேச்சுரர், உமாதேவியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

பராசரரிஷி, பிருகுரிஷி பூசித்த தலம். சமயாசாரியர்களி லொருவராகிய ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள், அரிமர்த்தனபாண்டியனிடத்து மந்திரியாயிருந்தபொழுது அரசனது ஏவலாற் பரிமாக்கொள்ளும்பொருட்டு, மிகுந்த பொற்குவையுடனித்தலத்திற்கு வரச், சிவபெருமான் குருவடிவங்கொண்டு சிவகணநாதர்களே மாணுக்கர்களாகத் தற்சூழக் குருந்தின்கீ ழெழுந்தருளியிருந்து, மாணிக்கவாசகசுவாமிகளை யடிமைகொண்டு, அவர் மனோ சந்தேகங்களை நீக்கித், தீட்சை செய்தருளி, அவரான் மாணிக்கம் போன்ற திருவாசகம் பாடக்கேட்டு, மாணிக்கவாசகரெனத் தீட்சாநாமஞ் சூட்டியருளி, அவர் திரவியமனைத்தையும் திருப்பணிமுதலிய சிவபணிவிடைக்கே ஆக்கியருளி, அவருக்கு வன நரிகளை வாம்பரியாகத் தந்தருளிய தலம். இன்றும் சகல உபசாரங்களும் மாணிக்கவாசகசுவாமிகளுக்கே நடந்துவருகின்ற தலம்.

ஆவுடையார் கோயிலாகிய ஒரு சிவஸ்தல மிருக்கிறது. இக்கோயிலுக்கு 3 பிராகாரங்களும் தங்க கலசங்கள்வைத்த 3 கோபுரங்களும் இருந்தாலும் முதல் கோபுரம் 200 அடிகள் உயரமுள்ளதா யிருக்கிறது. இக் கோயிலானது பாண்டியனுடைய மந்திரியாக இருந்து நரியைப் புரவியாக்கிய ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. வெளிப்பிராகாரம் 25 அடிகள் உயரமாய்க் கட்டப்பட்டிருக்கிறது மன்றியில், அதற்குள் அநேக மண்டபங்களும் கோயில்களும்தெப்பக்குளமும் இருக்கின்றன. கோபுரவாசல்களைத் தாண்டிப்போனால்பஞ்சாக்ஷரகல்மண்டபமிருக்கிறது. இது சிற்பாலங்காரமாகக் கடைச்சல் வேலையுள்ள 50 கல்

ஸ்தம்பங்களால் தாங்கப்பட்டிருக்கின்றது. இதற்குப் பக்கத்தில் தியாகராஜமண்டபமிருக்கிறது. அதன் கல் பொருத்தங்கள்கண்ணுக்குத் தெரியாவண்ணமாகச்சேர்க்கப்பட்டிருப்பதோடு அதில் பனையோலைகளில் கிரந்த எழுத்துக்களால் எழுதப்பட்ட புஸ்தகசாலையும்சேர்க்கப்பட்டிருக்கிறது. இதற்கு மேற்கே வெள்ளைப் பிள்ளையார் கோயில் இருக்கிறது. இதற்குப் பிறகே 200 அடிகள் நீளமும், 150 அடிகள் அகலமுமுள்ள சுத்தமு மாழமுமான தெப்பக்குள மிருக்கிறது. இதற்கு வடகிழக்கே தியாகராய மண்டபம் சிற்பாலங்காரமாகக் கட்டப்பட்டிருக்கிறது. அதில் ஒரே கல்லிலிருந்து குடைந்து செய்த கற்சங்கிலிகள் தொங்கவிடப்பட்டிருக்கின்றன. இம் மண்டபத்திற்குப் பின்னும் வடச்சுவருக்கு மத்தியில் குருந்தைமர மிருக்கிறது. இது புராதன மரமென்றுகொண்டு சுற்றிலும் மேடைகட்டி யிருக்கிறார்கள். வாகன மண்டபத்தில் வெள்ளி வாகனங்கள் செய்து வைக்கப்பட்டிருக்கின்றன. இவ்விடத்திய பூஜாரிகள் புராதன சேர்ஷிய பிராம்மண வகுப்பைச் சார்ந்த நம்பிகள். இக்கோயிலில் ஆனித் திருமஞ்சனமும், ஆருத்ரா தெரிசனமும் விசேஷ உற்சவங்களாம். இது சென்னை, தென் இந்தியா இருப்புப்பாதை ஸ்டேஷனிலிருந்து 273¼ மைல்கள் தூரத்திலிருக்கிறது. இதற்கு மூன்றும் வகுப்பு சார்ஜ் ரூபாய் மூன்று அணு இரண்டாகும்.

---

## அரந்தாங்கி.

இது ஆவுடையார் கோயிலுக்கு வடக்கே 8 மைல் தூரத்தி லிருக்கிறது. இது தஞ்சை ஜில்லாவின் ஒரு தாலுக்காவும், அதின் பிரதான பட்டணமுமாம். இதில் 3065 ஜனங்கள் வதிந்து வருகிறார்கள். இது தஞ்சை டிஸ்டிரிக்டு போர்டு ரெயில்பாதைக்கு முடிவானஸ்தலம். பிரதி செவ்வாய்க்கிழமைதோறும் பெரியசந்தை கூடுகிறது. முதல்தரமான நெல்-கம்பு-சோளம்-ராகிமுதலான தானியங்களையும், சரிகை பட்டு துணிகளையும் விற்றுவருவதோடு, மகம்மதியர் தரிக்கும் கைலேஎன்னும் துணிகள் இலங்கை முதலான இடங்களுக்கு ஏற்றுமதியாகின்றன. ரயில்வே ஸ்டேஷனுக்கு ஒரு பர்லாங்குதூரத்தில் கூடும் மாட்டுச் சந்தைக்கு ஏராளமான ஜனங்கள் வருவதன்றியில் தேவிக்கோட்டையி லிருக்கும் நாட்டுக்கோட்டைச்செட்டிமார்களும் வருகிறார்கள். ஒருபழைய

கோட்டை இந்த கிராமத்திற் கருகி லிருக்கிறது. ஒரு மைல் தூரத்தில் வீரமாகாளியம்மன் கோயி லிருக்கிறது.

காவிரியின் வடகரை, தென்கரை என்று பகுக்கப் பட்ட சோழநாட்டில், சிலதலங்களில், அறுபத்துமூன்று நாயன்மார்களில் சில அடியவர்கள் எழுந்தருளியிருந்து சிவ பத மடைந்ததாகத் தெரியவந்தபோதிலும், அத்தலங்கள் இப்போது இன்னதிக்கில் இன்னபெயருட னிருக்கிறதென் பதும், அதின் சுவாமி பேர் முதலியவைகளும் சரியாய்ப் புலப்படாமையால் அந் நாயன்மாரது சரித்திரச் சுருக்க மட்டு மிதனடியில் விவரிக்கப்பட் டிருக்கின்றன.

## திரு இளையான்குடி.

இளையான்குடிமாற நாயனுர் வேளாளமரபில் ஆடி மாதச் சதையநாளிற் திருவவதாரஞ் செய்தருளிச், சிவனடி யாருக்குத் திருவமுது படைத்தலாகிய திருத்தொண்டை மேற்கொண் டொழுகும்பொழுது, இவரது பேரன்பை உல கத்தாருக்கு உணர்த்தியருளும்பொருட்டு, சிவபெருமான் வறுமையைக் கொடுப்பவும், அவ் வறுமையிலுந் தளராத அவ்வன்பர் மனைக்கு மழைபெய்யும் நள்ளிருளில், அதிதி யாய்வந்த அடியார்பொருட்டுப் பசியினுல் வருந்தும் நாய னுர், நென்னல் விதைத்த நென்முளையை வயலிற் றடவி வாரிக் கொண்டுவந்து, அமுதாக்கிப் படைப்பச், சிவபெரு மான் அவரன்புக் கிரங்கி, ஆவணிமாத மகநாளிற் சிவபதவி யளித்தருளிய தலம்.

## திரு எயினனூர்.

ஏனாதிநாயனுர்: சான்றூர் மரபிற் பங்குனிமாதப் பூச நாளிற் திருவவதாரஞ் செய்தருளி, வாட்படை பயிற்றிவரு மூதியத்தாற் சிவனடியார்களைப் பூசித்து வருங்கால், அதி சூரனென்னு மிவரது பங்காளி, நாயனுர்மீது பொறாமை கொண்டும், இவரை வெல்வதரிதாயிருந்தமை பற்றிச் சிவவேடம் பூண்டு அவ் வேடத்தைக் கேடகத்தால் மறை த்து; அறைகூவி யுத்தந் தொடங்கியபொழுது, கேடகத் தின் மறைப்பை நீக்கித் தன் முகத்தைக் காட்ட, முகத்திற் சிவசின்னமாகிய திருநீறிருத்தலை யுணர்ந்த நாயனுர், அவ் னேடு யுத்தஞ்செய்யாமல் வாளா நின்றுவிட, அவன் நாய னுரை வாளாற் கொன்றுவிடச், சிவபெருமான் அந் நாயனு

ருக்கு எதிராகத் தோன்றிப் புரட்டாதிமாத உத்திராட நாளிற் சிவபதவி யளித்தருளிய தலம்.

---

## திருக்கணமங்கலம்.

அறிவாட்டாய நாயனர் வேளாண்மரபில் ஆனிமீ கேட்டைநாளிற் றிருவவதாரஞ் செய்தருளித், தினந்தோறும் மாவடுவுஞ், செங்கீரையும், செந்நெல்லரிசியும் திருவமுதாக்கிச் சிவபெருமானுக்கு நிவேதித்து வருங்கால், வறுமை மேலிடக், கூலிக்காகச் சென்று கொணர்ந்த செந்நெல்லாற் றிருப்பணி முட்டாது நடத்தி வருபவர், சில நாள் பசியால் வருந்தி, அவ் வருத்தத்துடன் அரிதிற் தேடிப்பெற்ற திருவமுதுகளை, சிவாலயத்திற்குக் கொண்டு செல்லும்போது, பசிமயக்கத்தாற் கால் தளர்ந்துவிழ அருகிலிருந்த மனைவியார் கைதாங்கியும், திருவமுதுக்கள், கமரிற் கவிழ்ந்த துணர்ந்த நாயனர், அரிவாளால் தம்மூட்டியினை யரிய, சிவபெருமான் 'விடேல், விடேல்' என்னு மோசையோடு அக் கமரினின்றுந் திருக்கரத்தை நீட்டித் தொண்டரைத் தடுத்தருளி, அந்நாயனருக்கும் அவரது உரை கடவாத பத்தினியாருக்கும், தைமாதத் திருவாதிரை நாளிற் சிவபத மளித்தருளிய தலம்.

---

## திருத்தலையூர்.

உருத்திரபசுபதி நாயனர்: பிராம்மணகுலத்தில் புரட்டாசிமாதச் சுவாதிநாளிற் றிருவவதாரஞ் செய்தருளித், தினந்தோறுந் தவறாது நீரினின்றும் உருத்திரஜெபஞ் செய்துவந்து, புரட்டாசிமாத அசுவினி நாளில் முத்தி பெற்ற தலம்.

---

## திருக்கொடும்பாளூர்.

இடங்கழிநாயனர்: மன்னவர் மரபில் ஆவணிமாதச் சுவாதியிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவநேசத்தோடு அரசுசெலுத்திவருங்காலத்தில், நெல்லைத்திருடிய ஒருவரை அவர்முன் கொணர, அவரை விசாரித்தபொழுது, 'சிவனடியார்க்கு அருத்துவதற்காகத் திருடினேன்' என்று நெல்லைக் கவர்ந்தவர் கூறக் கேட்டு, "எம்பொருள்க ளனைத்தினுக்கும் சிவனடியார்களே உடையோராதலின், இச்சையானவை

யில் எடுத்துக்கொள்க!" என்று, நெற்பண்டாரத்தைத் திறந்துவிட்டுச் சிவநேசராய் வாழ்ந்து ஐப்பசிமாதக் கிருத்திகையிற் றிருக்கயிலை சேர்ந்தருளிய தலம்.

---

## திருக்காம்பீலி.

நேசநாயனார்: சாலியர்குலத்தில் ஆனிமாதக் கிருத்திகை நாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, சிவனடியாருக்கு வஸ்திரங் கோவணமுதலியன கொடுத்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதிவந்து, பங்குனிமாத உரோகிணி நாளில் முத்தியடைந்தருளிய தலம்.

---

## திருமங்கலநகர்.

ஆனாயநாயனார்: ஆயர்குலத்தில் ஐப்பசிமாதச் சுவாதி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, ஆனிறை காப்பவராய், ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை வேய்ங்குழலில் வாசித்துச் சிவத்தொண்டு செய்துவருபவர், ஓர் கார்காலத்தில் புட்பித்திருந்த சரக்கொன்றை மரத்தைப் பார்த்துச், சிவபிரானைப் போலப் பாவித்து, வேய்ங்குழலால் கல்லுமுருக இசை பாடியதைக் கேட்டுச், சிவபெருமான் கார்த்திகைமாத அத்த நாளில் அவ்விசையோடுந் திருக்கயிலையிற் றமது சந்நிதியில் சேர்த்தருளிய தலம்.

---

## திருப்பெருமிழலையூர்.

பெருமிழலைக்குறும்பநாயனார்: மாசிமாதச் சுவாதியிற் றிருவவதாரஞ் செய்தருளிச், சிவநேசராய்ச் சிவயோகஞ் செய்திருந்தவர், தம் யோகக்காட்சியாற் சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பரமசிவயோகியென் றுணர்ந்து அவருக்குத் தொண்டு பூண்டொழுகுநாளில், சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு வெள்ளையானை வருந்திறத்தை யோகத்தா லறிந்து, அதற்கு முந்திச் செல்ல நினைத்து, ஆடிமாதச் சித்திரைநாளில் யோகமுயற்சியாற் பிரமரந்திரந் திறந்து திருக்கயிலாய மடைந்தருளிய தலம்.

---

## திருவரிஞ்சையூர்.

சத்திநாயனார்: வேளாள மரபில் மாசிமாத ரேவதி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச், சிவபெருமானுடைய

திருவடிகளை மறவாத நெறியைக் கைக்கொண்டு, சிவனையும் சிவனடியார்களையு மிகழ்ந்து பேசுமவர்களுடைய நாவைத் தண்டாயுதத்தா லிடுக்கிக் கத்தியினு லறிதலாகிய திருத் தொண்டைச்செய்து வந்து, ஐப்பசிமாசப் பூசநாளிற் றிருக் கயிலாய மடைந்தருளிய தலம்.

ஆகச் சோழநாடு : பதிகம் பெற்ற தலங்கள்-கசூ0; சுப்பிரமணியதலம்-க; புராதன தலம்-அ; நாயன்மார் திரு வவதாரஞ் செய்தருளிய தலம்-கூ; ஆகத் தலங்கள்-உ0அ.

அறுபத்துமூன்று நாயன்மார்களில் அந்நாட்டில் முத்தி யடைந்தவர்கள் நாற்பத்து மூவர்.



# சோழநாடு.

(காவிரியின் வடகரையிலுள்ள ஸ்தலங்கள்.)

## திருக்கோயில்.

(திருப்புலியூர், திருக்கோயில் முதலிய பல நாமங்களுள்ள சிதம்பரம்.)

(சபாநாயகர், சிவகாமியம்மை, திருமூலநாயகர், உமையம்மை, திருப்புலீச்சரதீர்த்தம், குய்யதீர்த்தம், புலிமடு, வியாக்கிரபாதம், அநந்தம், பிரமம் நரகேசரி, சிவப்பிரியை, திருப்பாற்கடல், பரமாநந்தகூப முதலிய அநேக தீர்த்தங்கள், தில்லைவன க்ஷேத்திரம், கனகசபை.)

வத்தியந்தரமுனிவர் குமாரராகிய பாலமுனிவர், தில்லைவனத்திற் பத்திமிகுதியால் மலர் கொய்தற்குப் பொழுது விடிந்தால் வண்டாலும், இருட்டானற் கண் தெரியாமையாலும் இடையூறு படுவதறிந்து, சிவாநுக்கிரகத்தால் புலிக்கண்ணும் - புலிநகமும் பெற்று, வியாக்கிரபாதரென்னும் பெயரோடு தவஞ்செய்திருந்தனர். தாருகாவனத்து நடனத்தை விஷ்ணுவா லுணர்ந்த ஆதிசேடர் அத்திரி முனிவர்பாற் பதஞ்சலியாரா யவதாரம் செய்திருந்தனர். இவ்விருவர்காண குருவாரத்தோடு கூடிய தைப்பூசத்தன்று சிவபெருமான் பஞ்சகிருத்திய ஆநந்தத் தாண்டவஞ் செய்தருளிய தலம்.

துன்மதன், துச்சன், துர்த்தெரிசனன் முதலிய அநேகர்முத்திபெற்றதலம். ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்குசிவதீட்சை செய்தருளியவரும், வியாக்கிரபாத மகாரிஷியின் புத்திரருமாகிய உபமன்னியு மகாரிஷிக்குத் திருப்பாற்கடல் அருளிய தலம். திருத்தொண்டத் தொகைக்கு முதலெடுத்துக் கொடுத்த புற்றிடங்கொண்டார் "தில்லைவாழந்தணர்கள்" என்று சிறப்பித்தருளிய திருவுடையந்தணர்கள் பூசிக்குந்தலம். வியாசமுனிவர், சுகமுனிவர், சௌனகமுனிவர், சூதமுனிவர் முதலியோர் பூசித்து அருள் பெற்ற தலம். ஜைமினிமுனிவர் மூன்றடி தம் கவியாயும், ஈற்றடி வேதமாயுமுள்ள வேதபாதஸ்தவஞ் சொல்லி ஸ்தோத்திரித்த தலம்.

சேந்தனுர்: திருவெண்காடரென்னும் பட்டினத்துப் பிள்ளையாரது கருணீகராயிருந்து, மனைவி மக்களின் வேண்டு கோளாற் பட்டினத்து ஸ்வாமிகள் திருவாக்குப்படி நீங்கிய பின்னர், மனைவிமக்களுடன் இத் தலம் புக்கு, விறகு விற்று வரும் ஊதியத்தால் ஓர் சிவனடியார்க்குப் பகிர்ந்தூட்டி யுண்ணும் நியமம் பூண்டொழுகத், தில்லைவாணர் அவர்பால் நள்ளிருளிற் குறுகிக் கூழுண்டு, அக் கூழைத் தம் திருமேனி மேல் மற்றைநாள் ஆலயத்திற் காட்டி, மூலையிலிருந்த அச் சேந்தனுரை முற்றத்தே விட்டு, அவரால் நிகழ்ந்த அற்புதத்தை ஐயுற்ற அடியார்களுக்காக, அவர் பாடியருளிய திருப்பல்லாண்டின் வழித்தாய், இரதம் தானே நடந்து வரக் கொண்டருளும்படி அநுக்கிரகித்த தலம்.

மாணிக்கவாசக சுவாமிகள்: திருப்பெருந்துறையில் இத்தலத்திற்கு வரும்படி கட்டளையிட்டருளியபடி இத்தலமடைந்து, கண்டப்பத்து - கோயில்மூத்த திருப்பதிக முதலியவை திருவாய்மலர்ந்து, பின்னர் நிஷ்டாபரரா யெழுந்தருளியிருப்ப, யாழ்ப்பாணத்துப் புத்தர் இத்தலத்தோரை வாதில் வெல்ல வந்தமையுணர்ந்து நிஷ்டை நீங்கி யெழுந்து, அவர்களை வாதில் வென்றருளி, ஊமைப் பெண்ணைப் பேசுவித்து, அதன் கூற்றுகத் திருச்சாழல் பாடியருளிச், சிவபெருமான் பிராம்மண வடிவங்கொண்டு வந்து கேட்பத், தாம் பாடியருளிய திருவாசகத்தையுந், திருக்கோவையையும் அவரது திருக்கரத்தா லெழுதுவித்தருளி, ஆனிமாத மகநாளில் சிவபிரானேடு இரண்டறக் கலந்த தலம்.

திருநீலகண்ட நாயனுர்: வேட்கோவர் குலத்தில் சித்திரைமாதக் கிருத்திகைநாளி லவதரித்துத் திருநீலகண்டமென்னும் ஆணைவலியாற் றம்மனைவியுடன் சயனித்தும் அவரைத் தீண்டாராய், முதுமைப்பருவமளவுஞ் சென்ற வயிராக்கியத்தை வெளிப்படுத்தும் கருத்துடைய சிவபெருமான் ஓர் ஓட்டைக் கொடுத்து அதனைக் காத்தருளி, அதன் பொருட்டு, அவ்விருவோரையும், நீரின் மூழ்கிச் சத்தியம் புரிவித்து, இளமை நல்கித் தைமாத வைசாகநாளில் முத்தியருளிய தலம்.

திருநாளைப் போவார் நாயனுர்: திருஆதனூரிற் புலையர் குலத்தில், மார்கழிமாதச் சித்திரையி லவதரித்து, சிவனடியாருக்குத் தோற்கருவிக்கான வார் முதலியனவும்,

அபிஷேகத்திற்கான கோரோசனை யாதியனவுங் கொடுத்து இத்தலம் தரிசிக்கும் விருப்புடையோராய், "நாளைப்போவேன்" என்று சொல்லிக்கொண்டிருந்த காரணத்தால், அப்பேர் தாங்கிச் சிவாநுக்கிரகத்தா லித்தலங் காணப் பெற்று, அக்கினியிற் குளித்து முனிவராய்ப் புரட்டாசி மாத உரோகிணி நாளில் முத்திபெற்ற தலம்.

கூற்றுவ நாயனார்: களந்தை நகரில், மன்னவர் மரபிற் கார்த்திகைமாத உத்திராதிநாளி லவதரித்துச் சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு பூண்டொழுகிச் சிவபெருமானது திருவடியையே முடியாகச் சூட்டப்பெற்று, நாடாண்டு ஆடிமாதத் திருவாதிரை நாளில் முத்திபெற்ற தலம்.

கோச்செங்கட் சோழநாயனார்: மன்னவர் மரபிற் சோழராசனது மனைவி கமலவதியார் திருவயிற்றிற் கார்த்திகை மாத மிருகசீரிடத்திற் றிருவவதாரமாய் அநேக ஆலயங்கள் கட்டுவித்துச் சிவபணிவிடை செய்து வந்து, மாசி மாத சதயநாளில் முத்திபெற்ற தலம். இந்நாயனார் முன் ஜனனத்தில் திருவானைக்காவில் யானையாயிருந்து பூசித்து இப்பத மடைந்தனர்.

கணம்புல்ல நாயனார்: திரு இருக்குவேளூரில் பங்குனி மாதச் சதயத்தில் குறுநில மன்னவர் மரபி லவதரித்துப், புல்லறுத்து விற்றுவரும் ஊதியத்தால் திருவிளக்குப் பணிசெய்தொழுகு நாளில், ஓர்நாள் அப்புல் விலைப்படாதொழிய, அதனையே திருமுன்னர் விளக்காக எரித்தும், எஞ்சிய காலத்தில் தம் குஞ்சியையே விறகாக எரித்தும் கார்த்திகைமாத கிருத்திகை நாளில் முத்தி பெற்ற தலம்.

சமயாசாரியர்களுக்குத் தனித்தனியே திருநடன தரிசனங் கட்டளையிட்டருளியதும் அல்லாமல், திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குத் தில்லைவாழந்தணர்களைச் சிவ கணங்களாகக் காட்டியருளிய தலம். ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திரவெண்பா அருளிய தலம். திருமாளிகைத்தேவர் - கருவூர்த் தேவர் - பூந்துருத்தி நம்பிகாடநம்பி - கண்டராதித்தர்-வேணாட்டடிகள்-திருவாலியமுதனார் - புருடோத்தம நம்பி - சேதிராயர் இவர்களால் திருவிசைப்பாவும், சேந்தனாரால் திருப்பல்லாண்டும் பாடியருளிய தலம்.

சந்தானசாரியர்களில் மறைஞான சம்பந்த சிவாசாரியார்: பெண்ணாடகத்திலே பிராம்மண குலத்திலே திருவவதாரஞ் செய்தருளி, இத்தலத்திற்கடுத்த திருக்காளஞ்சேரியி லெழுந்தருளியிருந்து, உமாபதி சிவாசாரியாருக்குச் சிவதீட்சை செய்தருளி, ஆவணிமாத உத்திரநாளில் முத்தி பெற்ற தலம்.

## உமாபதிசிவாசாரியர்.

தில்லைவாழந்தணர்களு ளொருவராகிய இந் நாயனார் இத் தலத்திற் கடுத்த கொற்றவன்குடியிலே யெழுந்தருளியிருந்து, சிவப்பிரகாசம் - திருவருட்பயன்-வினாவெண்பா-போற்றிப் பஃறொடை - கொடிக்கவி - நெஞ்சுவிடுதூது - உண்மைநெறி விளக்கம் - சங்கற்ப நிராகரணம் என்னும் சித்தாந்த சாஸ்திரங்களைச் செய்தருளித், திருத்தொண்டர் புராணசாரம்-திருமுறை கண்டபுராணம் - சேக்கிழார் புராணம் - திருப்பதிகக் கோவையென்னும் பிரபந்தங்களுஞ் செய்தருளினார். இவர் இத் தலமான்மியத்தை வடமொழியினின்று மொழிபெயர்த்துக் கோயிற்புராணமென்று பாடிமுடித்துப் பெட்டகத்தில் வைத்திருந்தபொழுது, நடேசர், தில்லைவாழந்தணர்களுக்குக் கனவிற் றோன்றி, 'நாம் உமாபதியினது பெட்டகத்துள் இருக்கின்றோம்' என்று அம்மான்மியத்தைக் கேட்பித்தருளிய தலம். அன்றியும், அவ்வுமாபதி சிவாசாரிய சுவாமிகள், சிவபெருமானால் அனுப்பப்பட்ட திருமுகத்தைப் பெற்றுப் பெத்தான் சாம்பானை முத்தியிற் சேர்த்தருளியபொழுது அவன் மனைவியும் அரசனும் காண முள்ளிச்செடிக்கு முத்தி கொடுத்தருளி, சித்திரைமாத அத்தநாளில் சிவமாம் பெரும்பேறு பெற்றதலம்.

சித்தாந்த சாத்திரங்களி லொன்றாகிய திருக்களிற்றுப் படியாரென்னுஞ் சாத்திரத்தைத் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் திருவாய்மலர்ந்தருளி, திருக்களிறுடைய பஞ்சாட்சரப்படியின்மீது வைக்க, அதுவே சிவபெருமானடி சேர்வார்களுக்கு நல்வழி காட்டி யென்பதுபோல, அதனை அப்படியிலிருந்த களிறு கைநிமிர்த்தெடுத்து நடேசரது திருவடியில் வைத்தருளிய தலம். இன்னுமிதன் பெருமையைக் குறிக்கில் விரியுமாதலால் விரிவஞ்சி விடுத்தனம். சமயாசாரியர், மூவராலும் திருப்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-கக.

பிறகு ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் இச் சிதம்பரத்தி லும் இதையடுத்த வடலூர் என்னுமிடத்திலும் வதிந்து திருவருட்பாத் திருமுறைகளைப்பாடி முத்திபெற்றஸ்தலம்.

இத்தலத்தைப்பற்றிச் சிறப்புப் பெயரகராதியில் பின் வருகிறபடி சொல்லப்பட் டிருக்கிறது.

சிதம்பரம்: சோணாட்டில் காவிரியின் வடகரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். பூலோக கைலாசமென்றும், பஞ்சலிங்க ஸ்தலங்களில் ஆகாயலிங்க ஸ்தலமென்றும், நிருத்த க்ஷேத் திர பஞ்ச சபைகளில் பொன்னம்பல க்ஷேத்திர மென்றுஞ் சொல்லப்படும் இந்த க்ஷேத்திரந் தரிசித்தவர்கட்கு முத்தி யளிப்பது. இதன் மகிமையைக் கூறுவன சிதம்பரபுராணம், கோயிற்புராணம், புலியூர்ப்புராணம், சிதம்பரமான்மியம், ஏமசமான்மிய மெனு நூல்கள். வியாக்கிரபாத முனிவர் பதஞ்சலிமுனிவர் முதலிய அநேகர்க்குத் திருவருள்புரிந்த க்ஷேத்திரம். திருநீலகண்ட நாயனார் இளமையானதும், துன்மதன் துச்சகன் முதலிய தீயோர்களும்-புலையர் மூவ ரும் முத்தி பெற்றதும், சிங்கவன்மச்சக்கரவர்த்தி வெண் குட்ட நீங்கி இரணியவன்மனானதும், களைத்த வேதியன் வாயில் ஒரு சாதத்தை வீழ்த்திய காகமும்-எருவை யுண்ண விறந்த முயலும் முத்தி பெற்றதும், உபமன்யு முனிவர்க்குப் பாற்கட லளித்ததும் இந்த க்ஷேத்திரமே. இதனைப் புண்ட ரீகவீடு என்பர். அது ஞானவிடய மாகலின் இங்கு விளக் கத்தக்கதன்று. இதன் மகிமை நூல்களா னுணர்க. சபா பதியும், சிவகாமி யம்மையும், திருமூலநாதரும், உமை யம்மையும் எழுந்தருளியுளர். மூவர்பாடலும் பெற்றது. சிவகங்கை முதலிய பத்துத் தீர்த்தங்களை யுடையது.

இந்த க்ஷேத்திரத்தைப்பற்றி அபிதானகோசத்தில் பின் வருகிறபடி சொல்லப்பெற்றிருக்கிறது:

சிதம்பரம்—பஞ்சலிங்கங்களுள் ஒன்றாகி ஆகாசலிங்க ஸ்தலம். இது தொண்டைநாட்டி லுள்ளது. இத் தல மான் மியங்களை யெல்லாங் கோயிற் புராணத்திற் காண்க. பிண்ட மும் பிரமாண்டமும் சமம். பிண்டமாகிய சரீரத்தில், இடபக்க நாடியாகிய இடைக்கும் வலபக்க நாடியாகிய பிங் கலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனா நாடியும், பிரமாண்டத்தி லுள்ள இப்பாரத கண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக் கும் நடுவிலுள்ள தில்லையும், சிவபெருமான் ஆனந்த நிருத்

தஞ் செய்யுந் தானமாம். சரீரம் பிரமபுரம்; சரீரத்தி னுள்ளே யிருக்கும் இருதயத்தானம் தகரமாகிய புண்டரீக வீடு; இருதயத் தானத்தினுள்ளே இருக்கும் பிரமமாகிய சிவம் ஆகாசம். புறத்தும் இப்படியே பிரமாண்டம் பிரம புரம்; பிரமாண்டத்தினுள்ளே யிருக்குந் தில்லைவனம் புண் டரீகவீடு; தில்லைவனத்தில் நிறுத்தஞ்செய்யுஞ் சிவம் ஆகா சம்; இவ்வாகாசம் பூதாகாசம்போற் சடமாகாது சித்தே யாம்; ஆதலாற் சிதம்பர மெனப்படும். இச் சிதம்பரம் எக் காலமும் நீக்கமின்றி விளங்குந் தானமாதலால், இத் தில்லை யுஞ் சிதம்பரமெனப் பெயர்பெறும். சிதம்பரத்திலே, ஞான சபையிலே, சிவபெருமான்: சிவகாமி யம்மையார் காண ஆனந்த நிறுத்தஞ் செய்தருளுவர். சிதம்பரத்தி லெழுந் தருளியிருக்கும் திருமூல ஸ்தானமாகிய சிவலிங்கப் பெரு மானுக்கு வேத சிவாகம விதிப்படி பூசை முதலியன செய் யும் பிராமணர் தில்லைவாழந்தண ரெனப்படுவர்கள். அவர்கள் மூவாயிரவர்.'' இப்போதுள்ளோர் முந்நூற்று வரே. சேக்கிழார் காலத்திலே மூவாயிரவராக இருந்தோர் இப்போது முந்நூற்றுவராயினது தமக்குரிய தருமங்களி னின்று மிழுக்கிய காரணத்தினாற்போலும். சிதம்பர மென் பதன் பொருள் ஞானகாசம்.

---

## சிதம்பரத்தின் தற்கால ஸ்திதி.

இச்சிதம்பரமானது தென் ஆற்காடு ஜில்லாவைச் சார்ந்த ஒரு தாலுக்காவாயுள்ளது. சென்னைத், தென்னிந்தியா ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 151 மைல்கள் தூரத்திலும், ஷை சிதம்பரம் ரயில்வே ஸ்டேஷனுக்கு ½ மைல்தூரத்திலும் அழகாகக் கட்டப்பட்டிருக்கும்கோயிலினால் இப்பெயர்பெற் றிருக்கிறது. இந்தக் கோயில் நகர மத்தியில் சுமார் 40 ஏக்ரு விஸ்தீரணமுள்ள நிலத்தில் கட்டப்பட்டதாயும், நான்கு பெரிய மதில்களாலும், நான்கு கோபுர வாசல்கள் உடைய தாயும் இருக்கிறது. முதற்கோபுரவாயிலைச் சார்ந்த பிராகா ரம் புல்பூண்டுகளுடையதாயிருக்கினும், இரண்டாவது பிரா காரத்தில் ஆயிரக்கால் மண்டபமும்-சொர்னவாவியும்-நந்தி விக்ரகமும்-சில சில்லறைஆலயங்களும் இருக்கின்றன. மூன் றும் பிராகாரத்தில் ஸ்ரீ லக்ஷ்மி சன்னதியும், வாகன மண்ட பங்களும், ஸ்ரீ மூலஸ்தானமும், சிவபெருமானுடைய விக்கி ரகமும், ஸ்ரீ பார்வதியம்மன் கோயிலும், யாத்திரைக்காரர்

தங்கும் மண்டபங்களும் இருக்கின்றன. நான்காவது பிராகாரத்தில் நடராஜருடைய சபாமண்டபமும், தில்லை கோவிந்த ராயரென்னும் விஷ்ணு ஆலயமும் இருக்கின்றன. ஆக இச் சிதம்பர கோயிலுக்கு கிழக்கு-தெற்கு-மேற்கு-வடக்கு ஆகிய நாலுபக்கங்களில் நான்கு வாசல்களும், அவற்றின்மேல் அழகாய்க் கட்டப்பட்ட கோபுரங்களும் இருக்கின்றன. ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்திலிருக்கும் தெற்குக்கோபுரவாசல் வழியாகப்போய், மூன்றாவது கோபுரவாசல் வழியாகச் சென்று, நான்காவது பிராகாரத்திற்குப் போனால் விஷ்ணுசிவ சன்னதிகளையும், தங்கத்தகட்டினால் மூடப்பட்டும் ஒன்பது கலசங்களாலும் வெள்ளித்தகட்டுகதவுகளாலும் பிரகாசிக்கும் விமான மண்டப கோபுரத்தையும், அதற்குள் நான்கு கரங்களோடு நடிக்கும் நடராஜ விக்கிரகத்தையும் காணலாம். இங்குச் சிவனையும் விஷ்ணுவையும் ஏககாலத்தில் தரிசிக்கலாம். பள்ளியறையையும் தரிசிக்கலாம். அடுத்த கட்டிடத்தில் அழகிய லக்ஷ்மிதேவி விக்கிரகத்தைக் காணலாம். மூலஸ்தானத்திற் கருகில் ஸ்ரீ பார்வதியம்மன் சன்னதி யிருக்கிறது. அதற்கருகில் 340 அடிகள் நீளமும், சுமார் 190 அடிகள் அகலமுமுள்ள ஆயிரக்கால் மண்டபம் இருக்கிறது. அதற்கெதிரில் 70 கருங்கம்பங்களின் மீது பெரிய பந்தல் போடப்பட்டிருக்கிறது. அதற்கருகில் 160 அடிகள் நீளமும், 100 அடிகள் அகலமுமுள்ள சிவகங்கையென்னும் குளம் இருக்கின்றது. இங்கே ஆதியில் வர்மசக்கரவர்த்தி குளித்து குஷ்டநோய் தீர்த்துக்கொண்டனராம். அந்தக் குளத்தின் வடமூலையில் வடகோபுரமும் பாண்டிய நாட்டாரதுசுப்பரமணியர் கட்டிடங்களு மிருக்கின்றன. அங்கு யானைகளைப்போலவும் மயிலைப்போலவும் கல் விக்கிரகங்கள் இருக்கின்றன. அதற்கருகில் சிவகாமி சன்னதி இருக்கின்றது. அதற்குச் சமீபத்தில் சுந்தரேசுரர் விக்கிரகமும், முக்குறுணிப் பிள்ளையாரு மிருக்கின்றன. 1749ஆம் காப்டன்கோப் என்பவர் தேவிக்கோட்டைக்குப் போகும்போது இங்கு தங்கினர். பிறகு 1759ஆம் ஆங்கிலேயரும், 1760ஆம் ஹைடராலியும், 1773ஆம் பிரன்சுக்காரரும் 1781ஆம் சர் அயர் கூட்டும் யுத்த விஷயமாக வந்தார்கள். இதில் முனிசிபல் சங்கமுண்டு. இங்கிலீஷ் சில்லறைப் பாடசாலைக ளிருக்கினும் 1850ஆம் பச்சையப்ப முதலியார் தர்ம பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டது. 1913 ஆம் அதற்கு வட்டி வரும்படி 2,01,750 ரூபாய். இப்போது இச் சிதம்பரத்தில்

21,327 ஜனங்கள் குடியிருக்கிறார்கள். சில மாதங்களுக்கு முன் அடுத்த குளங்களின் உடைப்பினால் ஏராளமான தண்ணீர் நகரத்திற்குட் புகுந்து அநேக வீடு முதலானவைகளையும், கால்நடைகளையும் சேதப்படுத்தினாலும் கோயிலுக்குள் ஜலம் புகவில்லை. இந்த ஸ்தலம் தென்னாட்டிலுள்ள சைவர்களுக்கு ஒரு விசேஷ சிவஸ்தலம். சென்னையிலிருந்து 151 மைல்களுள்ள இதற்கு ரெயில் சார்ஜ் ரூ. 1-12-0.

---

## சிதம்பரம்

(கனகசபைக் கருகில் நின்று செய்த பிரார்த்தனை.)

"ஓ நடேசா! உன்னைச் சாதாரண ஜனங்கள் படுத்துக்கொண்டிருப்பதாகவும், நின்றுகொண்டிருப்பதாகவும், உட்கார்ந்துகொண்டிருப்பதாகவும், நடித்துக்கொண்டிருப்பதாகவும், பின்னும் பலவிதமாகவும் எண்ணுகிறார்கள். அவர்கள் எண்ணங்களில் ஒன்றாகும் நீ நடித்துக்கொண்டிருக்கும் பாவனையே எனது ஏழை மனதுக்கு ஏற்றதா யிருக்கிறது. இந்த உலகமாகிய பெரிய நாடகசாலையில் அநேக பக்தர் முக்தர் முதலானவர்களுக்கு நீ இந்த அண்ட பிண்ட சராசரங்களைப் படைத்து ஆதரித்துவரும் பெருங்காரியத்தை அனைவரும் அறிந்துய்யும்படி நீ நாடகாதிபதியாக நடித்துவரும் பெருமையென்னே! கருத்தென்னே! காரியமென்னே! நீ நடிக்கும் ஆனந்தக் கூத்தைக் கண்டு அண்ட பிண்ட சராசரங்களும் நினக்குள்ளும் நினக்கு வெளியிலும் ஆடி ஆனந்தமடைகின்றன. ஆ! உன்னுடைய நடனத்தின் அற்புத காக்ஷியை அறியவல்லார் யார்? நினது நடனத்தைக்கண்டு கிருமிகீடாதி சகல ஜெந்து ஜாலங்களும் நின்னைப் புகழ்ந்து பாடுகின்றன. சகல கந்த மூல விருக்ஷங்களும் வண்ணமாக ஓங்கி வளர்ந்து ஒலிக்கின்றன. பற்பல புஷ்பங்கள் பூத்து இரமணீயமான வாசனையை வீசுகின்றன. இம்மட்டோ! பார்க்கும் எப்பொருளும் நின்னையே பாடி நின்னோடு ஆட ஆரம்பிக்கின்றன. ஆ ஹா! நினது அற்புத நடனமென்னே! அந்நடனத்தை யானுங் கண்டுய்ய ஆசீர்வதிப்பாயாக. ஓம் தத் சத்.

---

## திருநல்லூர்ப்பெருமணம் (ஆச்சாபுரம்).

(சிவலோகத் தியாகேச்சுரர், நங்கையுமை நாயகியம்மை, கொள்ளிடநதி தீர்த்தம்.)

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்: திருநீலநக்கர் முதலிய திருத்தொண்டர் வேண்டுகோளின்படி: நம்பாண்டார் நம்பியுடைய திருமகளாரை விவாகம் செய்ய ஒருவாறிசைந்து திருமணக்கோலங்கொண்டெழுந்தருளி, திருநீலநக்கநாயனர் சடங்குசெய்யப் பாணிக்கிரகணஞ் செய்தருளி, அக்கினியை வலஞ்செய்யவேண்டி, 'அக்கினியாவார் சிவபெருமானே' எனத் துணிந்து, ஆலயத்திற் கெழுந்தருளி, அத் திருக்கோயிலே சோதியா இருப்பவும்-அதனுள் ஒரு வாயில் காட்டவுங் கண்டு, அங்கு நின்று நமச்சிவாயப் பதிகங் கட்டளையிட்டுத் திருக்கல்யாணங் காணவந்த எல்லாப் பரிசனங்களுடனும், வைகாசிமாத மூலநாளில் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள், தமது மனைவியார் கையைப் பற்றிக்கொண்டு திருநீலநக்கநாயனர், முருகநாயனர், சிவபாதவிருதையர், நம்பாண்டார் நம்பி, திருநீலகண்டப்பெருமான், பாணர்முதலியோர் தம்பதிகளுடனும் சிவிகை தாங்குவோர் முதலிய பரிசனங்களும் தொழுதுவர, அச்சோதியுட் புகுந்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது கொள்ளிடம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 3 மைல் தூரத்தி லிருக்கிறது

---

## திருமயேந்திரப்பள்ளி (கோயிலடிப்பாளையம்).

(திருமேனி யழகேச்சுவரர், முல்லைநகை வடிவம்மை, கொள்ளிடநதி தீர்த்தம்.)

சிவபெருமான், உமாதேவியாரோடு ஏகாந்தமாய் வீற்றிருக்குங்கால் அங்குத் தீபநெய்யை விரும்பிவந்த ஓர் எலி தனது நாவால் அந்நெய்யை வௌவும்போது, அத் தீபம் பிரகாசமாகக், கருணாகரராகிய சிவபெருமான் அவ்வெலிமீதுண்டாகிய சந்தோஷத்தால் 'மாவெலி என்னுஞ் சக்கரவர்த்தியாகித் திரிபுவனமும் ஆளக்கடவாய்' என நல்வரங் கொடுத்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கொள்ளிடம் ஸ்டேஷனுக்குக் கிழக்கே 7 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருத்தென்முல்லைவாயில்.

(முல்லைவன நாதேச்சுரர், அணிகொண்ட கோதையம்மை, இந்திர தீர்த்தம்.)

தேவேந்திரன், சுதர்மன் பூசித்த ஸ்தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது சீர்காழிக்கு வடக்கே 3மைல்தூரத்திலிருக்கிறது.

---

## திருக்கலிக்காமூர் (அன்னப்பன்பேட்டை).

(சுந்தரேச்சுரர், அழகுவனமுலையம்மை, சிவதீர்த்தம்.)

பராசரரிஷி பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது முல்லைவாயிலுக்குத் தென்மேற்கே 3 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருசாய்க்காடு (சாயாவனம்).

(சாயாவனேச்சுரர், குயிலினு நன்மொழியம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

உபமன்னியரிஷி பூசித்த தலம். இயற்பகை நாயனுர் காவிரிப்பூம் பட்டினத்திலே வைசியகுலத்திலே தைமாதம் பூசநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச் சிவனடியாரிடத்து அன்போடு அவர் விரும்பியதை மாறாது கொடுத்துவருங்கால், விடபுருட வேதியர்போலச் சிவவேடந் தாங்கிவந்த சிவபெருமான், நாயனுரது மனைவியைக் கேட்க, உடனே கொடுத்தும், அதைத் தடுத்த சுற்றத்தாரை ஒருங்கே களைத்துச் சுவாமியை வழிவிட்டுத் திரும்புங்கால் சாயாவனேச்சுரர் அவரைப் பின்னும் அழைத்து அத் தம்பதிகளிருவருக்கும் மார்கழிமீ உத்திரநாளில் முத்தியருளிய ஸ்தலம். ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திரவெண்பா பாடியருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது சீர்காழிக்குத் தெற்கே 9 மைல் தூரத்தில் இருக்கிறது.

## திருப்பல்லவனேச்சுரம் (காவிரிப்பூம்பட்டினம்).

(பல்லவனப்பூரணேச்சுரர், சௌந்தராம்பிகையம்மை, காவிரிநதி சங்கம தீர்த்தம்.)

பல்லவனென்னும் அரசன் பூசித்த தலம். பட்டினத்துப் பிள்ளையார், இயற்பகை நாயனார், திருவவதாரம் செய்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது சீர்காழிக்குத் தென்கிழக்கே 10 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருவெண்காடு (சுவேதாரணியம்).

(சுவேதாரணியேச்சுரர், பிர்மவிர்த்தியாநாயகியம்மை, சுவேததீர்த்தம், திருக்குளதீர்த்தம், கொன்றைவிருட்சம்.)

தாருகாசுரனோடு யுத்தஞ்செய்து கொம்புகளிழக்கப்பெற்ற வெள்ளையானை பூசித்து, அக்கொம்புகளுண்டாகப் பெற்ற தலம். சாபகாரணப் பசுவானது சிவனடியாரைத் துரத்திச் செல்வதறிந்து, சிவபெருமான் ஓர் திரிசூலத்தாற் குத்திச் சந்நிதியில் வைத்த தலம். கோவில் திருக்காப்பிட்ட பின்னர், உள்ளேயிருந்த பிள்ளையை அர்ச்சகரெடுக்கக் கருதிக் கதவின் றிருக்காப்பை நீக்க, அப்பிள்ளை கொன்றைவிருட்சமாகி யிருக்கக்கண்ட தலம். சமயாசாரியார் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-சு.

இது சீர்காழிக்குத் தென்கிழக்கே 7 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருக்காட்டுப்பள்ளி.

(ஆரணிய சுந்தரேச்சுரர், அகிலாண்ட நாயகியம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

தேவேந்திரன் விருத்திராசுரனைக் கொன்றபழி பற்றித் திரிதருகையில், அவர் தேவலோகமடைந்து அரசு புரிய வேண்டுமென்று தேவர்கள் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளால் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது சீர்காழிக்குத் தென் கிழக்கே 8 மைல் தூரத்திலிருக்கிறது.

## திருக்குருகாவூர் (திருமேனிவெள்ளடை).

(திருமேனி வெள்ளடையீச்சுரர், காவியங்கண்ணியம்மை, திருக்குள தீர்த்தம்.)

சுந்திரமூர்த்தி சுவாமிகள் திருக்குழாங்களோடும் பசித்துவருவதறிந்து, சிவபெருமான் கட்டமுது தருத்துவித்து அச் சுவாமிகளாலும் திருஞானசம்பந்த சுவாமிகளாலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது சீர்காழிக்குக் கிழக்கே 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பிரமபுரம்.

(வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணீபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம், சீர்காழி, பிரமபுரேச்சுரர், திருநிலைநாயகியம்மை, சக்கரை தீர்த்தம்.)

பிரமா, விஷ்ணு, தேவேந்திரன் முதலியோர் பூசித்த தலம். மகா பிரளயத்திலும் பிரமா விஷ்ணு முதலியோருக்குச் சேதம் வாராதபடி தோணியாக மேன் மிதந்துள்ள தலம்.

பிரகலாதனைக் காக்க நினைத்துத் தூணிற் றோன்றி, இரணியனைக் கொன்ற நரசிம்மத்துக்கு உக்கிரநிலை யதிகரிப்பதறிந்து, சிவபெருமான் சாபப்பட்சி வடிவங்கொண்டு அதன் கருவ மொடுக்கிப் பின் சட்டைநாதவடிவமாக விருந்து அனுக்கிரகித்த தலம். இவற்றுள் பிரமபுரம் அடியிலும், தோணிபுரம் மத்தியிலும், சட்டைநாதர் அதன்மேலும் அடுக்கடுக்காய்க் காட்சிதந்தருளும் தலம். சூரனுதியர் செய்த இடுக்கத்தால், இந்திராணியோடு மிந்திரன் மூங்கில் வடிவமாயிருந்து பூசித்த தலம். அவ்விந்திரனு லுண்டுபண்ணிய நந்தவன விருத்தியின்பொருட்டு நதியை வருவிக்க நினைத்து, ஆபத்துவாரணப் பிள்ளையாரைப் பூசிக்க, அவர் அகத்தியமுனிவர் கொண்டு செல்லுங் கமண்டலக்காவிரி நீரைக் காக உருவாய்ச் சென்று கவிழ்த்து அந்நந்தனவன மாத்திரத்தினமையாது உலகமுழுவதும் அக் காவிரிநீரால் சுகமடைவித்தருளிய தலம்.

திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள்: பூசுரர் குலத்திலே, கௌணியர் கோத்திரத்திலே, சிவபாதவிருதயர், பகவதியாரென்னு மிருமுது குரவர் செய்த தவத்தால் ஆவணி

மாதத் திருவாதிரைநாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, மூன்றும் வயதிலே ஆலயத்திலுள்ள தீர்த்தக் கரையிலே நின்றழுதருள, அவ்வழுகையை யாற்றும்பொருட்டு உமா தேவியார் திருமுலைப்பாலில் ஞானமிர்தத்தைக் கலந்து கொடுப்ப உண்டருளியதனாலே ஞானசம்பந்தரென்னுங் காரணப்பெயரோடும் விளங்கியதை யுணராத் தந்தையார் அனுசிதமென்று கருதி, கோல்கொண்டு மிரட்ட, எம்மை யிங்ஙனஞ் செய்தவ ரிவரென்னச் சுட்டிக்காட்டிப் பதிகமோதி, அதுமுதற் சிவஞானச் செல்வராய்த் தலங்கடோறுந் தமிழ் வேதம் புகன்று வருகையில், இதனைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசு சுவாமிகள் வந்து வணங்க, 'அப்பரே! எழும்!' என்று அழைத்தருளிப் பின்னுமநேக அற்புதங்கள்செய்தருளியதலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'ஆளுடைய பிள்ளையார் அவதரித்த இத்தலத்தை மிதிக்க அஞ்சுகிறேன்' என்று இந்நகரத்தைச்சுற்றிப் பிரதக்ஷணஞ் செய்திருப்ப அவருக்குச் சிவபெருமா னருள் சுரந்து, திருக்கயிலாயத்தி லெழுந்தருளியிருக்குந் திருக்கோல தரிசனங் கட்டளையிட்டருளிய தலம். மாணிக்கவாசக சுவாமிகள் சிவபெருமானது திருவடியைப் பிடித்துக்கொண்டு பிடித்தபத்துப் பாடியருளிய தலம்.

கணநாதநாயனார்: பிரமகுலத்தில், ஆவணிமாத இரேவதி நாளி லவதரித்து, அடியாருக்குச் சிவ திருப்பணி பயிற்றுவித்துக்கிருகத்தாச்சிரமத்திலிருந்து திருஞானசம்பந்த சுவாமிகளது வழிபாட்டால் பங்குனிமாதத் திருவாதிரை நாளில் முத்தியடைந்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௭௧.

---

## சீர்காழி.

இது தஞ்சையைச் சார்ந்த சீர்காழி தாலுக்காவின் பிரதான பட்டணம். இதில் இப்போது 5992 குடிகள் வசிந்து வருகிறார்கள். இங்கிருக்கும் சைவ வைணவ க்ஷேத்திரங்கள் சிறந்தவைகளாயிருப்பதோடு சிவக்ஷேத்திரத்தையொட்டிச் சித்திரை மாதத்தில் விசேஷ உற்சவங்கள் நடைபெறுகின்றன. யாத்திரைக்காரர்களுக்குச்சில சத்திரங்களும் ஹோட்டல்களும் உபயோகமானவைகளாயிருக்கின்றன. இதையடுத்த நெடுவாசலில் ஸ்டேஷனுக்கு 8 மைல்கள் தூரத்தில் உப்புமண்டி இருக்கிறது. இங்கே முதல்தரமான கோரப்

பாய்கள் செய்யப்படுகின்றன. இது சென்னைக் கடற்கரை ஸ்டேஷனிலிருந்து 164 மைல்கள் தூரத்தி லிருக்கிறது. இதற்கு மூன்றும் வகுப்பு சார்ஜ் போட்மெயிலுக்கு ரூபாய் 2—3—0-மற்ற ரெயில்களுக்கு ரூபாய் 1—14—0 கொடுக்கவேண்டும். இங்கு லுதர்ன் மிஷன் சுதேச பாடசாலைக ளிருக்கின்றன.

இதற்குச் சில மைல்கள் தூரத்தில் காவிரிப்பட்டணம் அல்லது காவிரி சங்கமஸ்தானம் என்னும் சமுத்திரக்கரை கிராமம் இருக்கிறது. இங்குதான் காவிரிநதியானது ஒரு சாக்கடையைப்போல ஓடிச் சமுத்திரத்தில் சங்கமமாகின்றது. பிரதி ஆடியமாவாசை காலத்தில் ஏராளமான ஜனங்கள் வந்து தங்க இடமில்லாமல் தவித்து சமுத்திர ஸ்நானம் செய்துகொண்டு போகிறார்கள். இராமாயணத்தை நாடகமாகப் பாடிய ஸ்ரீ அருணாசலக் கவிராயர் பிறந்த இடம் இதுவேயாம்.

## சீர்காழிக்கடுத்த சமுத்திரத்தில் காவிரிநதி சங்கமாகுமிடத்தில் செய்த பிரார்த்தனை.

"ஓ ஆநந்தசாகரனே! இச்சமுத்திரத்திற் காவிரிநதியாயும் இந்த இடத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து குளிக்கும்விநோதமென்ன! இக்காவிரி, சமுத்திரத்திற்சங்கமமாகும் இவ்விடத்தில் ஸ்நானம் செய்வோருடைய தேகத்திலுள்ள அழுக்கையும் துணிமணிகளிலுள்ள அழுக்குகளையும் நீக்கித் தேகாரோக்கியத்தையும் மனோரம்மியத்தையும் தருமேயன்றி அவர்களுடைய பாவ எண்ணங்களாகிய பயங்கர அழுக்கை நீக்குமோ. அந்தோ! இது அறியாதாருடைய அபிப்பிராயம். இதன் தத்வார்த்தத்தைப்பற்றி யோசிப்போருக்கு வேறுவித அபிப்பிராயம் ஜனிக்கும். காவிரி நதியைப்போன்ற ஜீவாத்மாக்கள் தமது முடிவு காலத்தில் பெரும் சமுத்திரத்தைப்போன்ற பரமாத்மாவைச்சேர்ந்துபரிபூரணானந்தத்தைப் பெறுமென்பதேயாம். காவிரி நதியானது உற்பத்தியானது முதல் அநேக மலைகளையும்-மரங்களையும் - மடுகுகளையும் - நாடுநகரங்களையும் தாண்டிக்கொண்டு வருகையில் இடையிற் சம்பவிக்கும் கஷ்டங்களை நீக்கிக்கொள்வதைப்போலவே ஜீவாத்மாக்கள் ஜனித்ததுமுதல் உலக ஆசாபாஸ ஆடம்பரங்களாகிய மலைகள் காடுகள் முதலானவைகளைத் தாண்டிக்கொண்டு தமது

கஷ்ட நிஷ்டூரங்களை நீக்கிக்கொள்ளப் பிரமசாகரமென்னும் நின்னிடத்திற் சேர்ந்து சாந்தியைப் பெருகின்றன. ஆகவே இப்படிப்பட்ட தத்வஞானத்தைப்போதிக்கும் பிரம்மசாகரமாகிய நின்னிடத்தைச் சேர்ந்தேன். எனது ஆசாபாஸ கஷ்ட நிஷ்டூரங்களை நீக்கிப் பூரண சாந்தியைக் கொடுப்பாயாக. ஓம் தத் சத்.''

---

## திருக்கோலக்கா.

(சப்தபுரீச்சுரர், ஓசைகொடுத்த நாயகியம்மை, ஆனந்த தீர்த்தம்.)

கண்ணுவ மகாமுனிவர், அகஸ்திய மகாமுனிவர் பூசித்த தலம். திருஞானசம்பந்தப் பிள்ளையாரது கரதாள தேவாரகீதத்தைக் கேட்டுச் சிரவணாநந்தமடைந்த சிவபெருமான், பொற்றிருத்தாள மொன்றைக் கரத்திலருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

---

## திருப்புள்ளிருக்கும்வேளூர் (வைத்தீஸ்வரன்கோயில்).

(வைத்தியநாதேச்சுரர், தையனாயகியம்மை, சித்தாமிர்த தீர்த்தம்.)

சடாயு, சம்பாதி - பூசித்த தலம். தேவேந்திரன் பூசித்து இரத்தினவேல் பெற்ற தலம். இத் தலத்திலுறையும் முத்துக்குமார சுவாமியார் பல தொண்டர்களாலும் பல பிரபந்தப் பாமாலை சூடி யுள்ளவர். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ங,

இது ஐயம்பேட்டை ஸ்டேஷனுக்கு வடகிழக்கே 13 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## வைத்தீஸ்வரன்கோயில்.

இது மாயவரத்திற்கு $8\frac{3}{4}$ மைல்கள் தூரத்தில் சீர்காழி தாலுக்காவைச் சேர்ந்த ஒரு கிராமம். இதிலுள்ள வைத்தீஸ்வரன் கோயில்ரோட்டுப் பக்கத்தில் இத்தலம் அழகாய்க் கட்டப்பட்டிருக்கிறது. ஜனங்களுடைய வியாதிகளை நீக்குவதால் இவருக்கு வைத்தீஸ்வரரென்று பெயரிடப்பட்

டிருக்கிறது. அநேக வியாதியஸ்தர்கள் வந்து வணங்குகிறார்கள். இதற்கு இரண்டு மைல்கள் தூரத்தில் இருக்கும் திருப்பங்கூரில் பிரதி சனிக்கிழமைதோறும் சந்தை கூடுகின்றது. பிரயாணிகளுக்கு உபயோகமாகச் சில சத்திரங்களும் ஹோட்டல்களு மிருக்கின்றன.

இது வைத்தீஸ்வரன் கோவிலுக்குக் கிழக்கே ½ மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருக்கண்ணார்கோவில் (குருமாணக்குடி.)

(கண்ணாயிரேச்சுரர், முருகுவளர்கோதையம்மை, இந்திர தீர்த்தம்.)

தேவேந்திரன் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது ஆநந்த தாண்டவபுரம் ஸ்டேஷனுக்கு வடகிழகே 4 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருக்கடைமுடி (கீழூர்).

(கடைமுடிநாதேச்சுரர், அபிராம்பிகையம்மை, கருணை தீர்த்தம்.)

பிரமன் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது மாயூரத்திலிருந்து ஆநந்த தாண்டவபுரம் ஸ்டேஷனுக்குப்போய் அங்கிருந்து 10 மைல்தூரத்திலிருக்கிறது.

---

## திருநின்றவூர்.

(மகாலட்சுமேச்சுரர், உலகநாயகியம்மை, மகாலட்சுமி தீர்த்தம்.)

மகாலட்சுமி பூசித்த தலம். விஷ்ணுமூர்த்தியானவர், சலந்திராசுரனது மனைவியாகிய பிருந்தையின்மீது மயல்கொண்டு சலந்திராசுர னுருவத்தோடு சென்று அவளைப் புணர, புணர்ந்த களவறிந்த பிருந்தை தீப்பாய, அவள் மாண்ட சுடலையின்கண் மதிமாண்டழுதபோது விஷ்ணு உய்யும்வண்ணம் திருமாது பூசித்துச் சிவபெருமா னரு

ளாற் பெற்ற வித்தினை அச் சுடலையில் வித்தி, அதனாலே துளபம்-நெல்லி-அகத்தி - இவைகள் தோன்ற, அப்போது விஷ்ணுவின் மயலொழித்துத் தனக்குப் பதியாகவடைந்த தலம்.

பூசலநாயனார் : பிராமணகுலத்தில் ஆவணிமீ பூர நாளிற் றிருவவதாரஞ் செய்தருளி ஆலயங்கட்டப் பொருள் தேடிக் கிட்டாமைபற்றி மனத்தாலே நெடுங்காலம் சிறிது சிறிதாக ஒரு கோயிலைக் கட்டி அதற்குப் பிரதிட்டை நாள் பார்த்திருக்கும்பொழுது, அதேகாலத்தைக் காடவ ராசன் காஞ்சிபுரத்தில் கட்டிய கோயிலுக்கு நியமித்திருந் ததை யுணர்ந்த சிவபெருமான், அரசன் கனவிற் றோன்றி 'பூசலநாயனாரது கோயிலிற் புகுவேன்' என்று அனுக்கிர கிக்க, அவர் இத் தலமடைந்து நாயனாரைக் கண்டு, விசாரித் துண்மையை யறிந்து வணங்கிச் செல்ல, நாயனார் தமது மனோ ஆலயத்தில், குறித்த நாளில் பிரதிட்டைசெய்து நெடுங்காலம் பூசித்து, ஐப்பசிமீ கிருத்திகை நாளில் சிவ புரமடைந்த தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற் றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது ஆநந்த தாண்டவபுர ஸ்டேஷனிலிருந்து தென் மேற்கே 1 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்புன்கூர்.

சிவலோகநாதர், சொக்கநாயகியம்மை, சௌந்தரேச் சுரர், பெரியநாயகியம்மை, கணபதி கண்ட தீர்த்தம், சிவ கங்கை தீர்த்தம்.)

ஆதனூரில் புலையர்குலத்தில் தோன்றிய நந்தனாரென் னும் திருநாளைப்போவார், கோயில்வாயிலினின்றும் தரிசிக்க, குறுக்கிட்ட திருநந்திதேவரை விலகும்படி வேண்டியபடி யே அநுக்கிரகஞ்செய்து தரிசனங் கொடுத்தருளிய தலம்.

ஏயர்கோன் கலிக்காமநாயனார்: திருப்பெருமங்கலத் தில் வேளாளர் குலத்திலே ஆனிமாதப் பூராட நக்ஷத்திரத் தில் திருவவதாரஞ் செய்தருளிச் சோழராஜனிடத்துச் சேனாதிபதி உத்தியோகஞ்செய்து, சிவாலயத் திருப்பணி விடை செய்துவருங்கால் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவ பெருமானைப் பரவையாரிடத்துத் தூதாக அனுப்பிய சமா சாரத்தால் அவர்மீது செற்றங்கொண்டிருந்தனர்.

இது வைத்தீஸ்வரன் கோயிலுக்கு மேற்கே 2 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநீரேர்.

(அருட்சோமநாதேச்சுரர், வேயுறுதோளியம்மை, சிவ தீர்த்தம்.)

துவட்டாசுரனைக் கொன்ற பழி தீரவேண்டித் தேவேந்திரன் பூசித்த தலம்.

முனையடுவார் நாயனார்: வேளாளமரபிற் புரட்டாசிமீ மகநாளிற் றிருவவதாரஞ் செய்தருளித் தம்மிடத்திலுள்ள பொருள் யாவும் சிவபணிவிடைக்கும் அடியார்க்குஞ் செலவழித்தது மன்றிப் போர்முனையிற் றோற்றவர்கள் வந்து கூலி பேசினாலு மவர்களுக்காகச் சென்று போர்செய்து வென்று பொருள் சம்பாதித்து அடியார்களுக்குத் திருவமுது செய்வித்துப் பல அருமையான திருத்தொண்டுகள் செய்துவந்து பங்குனிமீ பூசநாளிற் சிவபதம் பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது ஆனைத்தாண்டவபுரம் ஸ்டேஷனுக்குத் தென் மேற்கே 1 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திரு அன்னியூர்.

(ஆப்தசகாயேச்சுரர், பெரியநாயகியம்மை, வருண தீர்த்தம்.)

வருணனாற் பூசிக்கப்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது மாயூரம் ஸ்டேஷனி லிருந்து 8 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவேள்விக்குடி.

(கல்யாணசுந்தரேச்சுரர், பரிமளசுகந்தநாயகியம்மை, கல்யாண தீர்த்தம்.)

ஓரரச புத்திரனுக்கு விவாகஞ் செய்ய நிச்சயித்த பெண்ணை, விவாக முடிக்குமுன் தந்தைதா யிறந்தமைபற்றிச் சுற்றத்தார் கொடாதொழிந்தமையை அப் பெண்ணா லுணர்ந்த அவ்வரச புத்திரன், இங்குத் தவஞ்செய்யச் சிவபெருமான் பூதத்தால் அப் பெண்ணைக் கொண்டுவந்து தாமே தீவேட்பவராயிருந்து திருமணவேள்வி செய்தருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது குற்றாலம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கே $1\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## எதிர்கொள்பாடி.

(அயிராவதேச்சுரர், மலர்க்குழன்மாதம்மை, அயிராவத தீர்த்தம்.)

அயிராவதம் பூசித்த தலம் மேற்கூறிய வேள்விக் குடியிற் றிருமணமுடித்த அரசகுமாரன் மனைவியோடு தன்னு நகர் செல்லும்போது, சிவபெருமான், அவனது மாதுலனைப்போல இத்தலத்துநின்றும் எதிர்கொண்டு அழைத்துச் சென்றதினாலே எதிர்கொள்பாடியெனப் பெயராயிற்று. சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது குற்றாலம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருமணஞ்சேரி.

(அருள்வள்ளநாயகேச்சுரர், யாழின்மென்மொழியம்மை, திருமண தீர்த்தம்.)

மன்மதன் பூசித்த தலம். வைசிய குலோற்பவராகிய நங்கை நாத்திக ளிருவர் ஒருங்கே கருப்பமுற்றுழி, பிறக்குஞ் சிசுக்களை ஒருவர்க் கொருவர் சம்பந்தஞ் செய்து கொள்ளுவ தென்கிற வாக்குறுதிப்படி ஒருத்தி யீன்ற சிசு ஆமையாயினதால், மற்றவன் தன் பெண்ணைக்கொடாதொழிய அவ்வாமை பூசித்து, சிவபெருமானால் குறித்த பெண்ணை மணஞ் செய்யப்பெற்று ஆமையுருநீங்கி மானிடவுருவம் பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞான

சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௨.

இது குற்றாலம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கே 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்குறுக்கை வீரட்டானம் (குறுக்கை).

(வீரட்டானேச்சுரர், ஞானம்பிகையம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

மார்க்கண்டேயர் பூசித்த தலம். திருமால் மனதிற் செனித்த மானசனென்கின்ற மன்மதனை, அசுராதிகளிடையூற்றால் வருந்திய தேவர்கள் சிவபெருமான் தமது யோகநிலை நீங்கி யுமையை மணக்கும்வண்ணம் சரந்தொடுத்து காம முண்டாக்கும்படி யேவ, மன்மதன் மறுத்தும் கேளாமல் அவர்கள் சாபமிட வருவதற்கு அஞ்சிச் சென்று சிவ பெருமான்மீது பாணந்தொடுத்துச் சிவபெருமான் நெற்றிக்கண் திறந்து எரித்தருளப் பெற்ற தலம். திருப்பதிகம்-ந.

இது ஆனைத்தாண்டவபுரத்திற்கு மேற்கே 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கருப்பறியலூர் (மேலைக்காழி, தலைஞாயிறு).

(குற்றம்பொறுத்தநாதேச்சுரர், கோல்வளைநாயகியம்மை, இந்திர தீர்த்தம், சிவகங்கை தீர்த்தம்.)

தேவேந்திரன் ஓர்கால் இருமாப்போடு கயிலை நோக்கிச் செல்லப், பூதவடிவத்துடனெதிர்பட்ட சிவபெருமானை யுணராது குலிசத்தா லெறிந்தபோது அவர் கோபம் கொண்டவர்போல வுக்கிரவடிவங்கொண்டு சீற்றங்காட்டப் பிழைபொறுக்க வேண்டுமென்று தாழ்ந்து பூசித்த அவ்விந்திரன் பொருட்டுத் தம் சீற்றத்தீயை மேலை சமுத்திரத்திலெறிந்து இந்திரனுக்கு அனுக்கிரகித்த தலம். அச்சீற்றந்தானே சலந்தராசுரனாயது. இத்தலம் சுந்திரமூர்த்தி சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௨.

இது வைத்தீஸ்வரன் கோயிலுக்கு மேற்கே $4\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

## குரக்குக்கா

(கொந்தளேசுரர், கொந்தள நாயகியம்மை, அநும தீர்த்தம்.)

ஹநுமார் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருக்கருப்பறியலூருக்கு வடக்கே 1மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருவாளொளிபுத்தூர் (வாழப்பூர்)

(மாணிக்கவண்ணேசுரர், வண்டார்பூங்குழலம்மை, மாணிக்கத் தீர்த்தம்.)

திருமால் மாணிக்கத்தை வைத்துப் பூசித்த தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௨.

இது வைத்தீஸ்வரன் கோயிலுக்கு மேற்கே 5 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருமண்ணிப்படிக்கரை (இலுப்பைப்பட்டு)

(நீலகண்டேசுரர், அமிர்தகரவல்லியம்மை, அமிர்த தீர்த்தம்.)

தேவர்களுக்காகச் சிவபெருமான் ஆலகால விஷத்தை அருந்தியபோது, உமாதேவியார் தமது திருக்கரத்தால் அவரது திருமிடற்றைப் பிடிக்க, அவ் விடக்கறையைச் சிவபெருமான் தமது கண்டத்தில் காண்பித்தருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௨.

இது வைத்தீஸ்வரன் கோயிலுக்கு மேற்கே 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## ஓமாம்புலியூர்

(துயர்தீர்த்த நாதர், பூங்கொடிநாயகி, சிவதீர்த்தம்.)

அங்குலனென்னும் வேடன் தன்னைத் துரத்திய ஓர் புலிக்குப் பயந்து, அருகிருந்த வில்வமரத்தி லேறிக்கொள்

ளப், புலியும் அம்மரத்தின் கீழிருக்க, இரவாகிவிட்டமை பற்றி விடியுந்தனிலும் அம்மரத்தின் இலையைப் பறித்து அவ்வேடன் அருச்சித்திருப்பக், கீழிருந்த சிவபெருமான் அவ்வழிபாட்டுக் கிரங்கி அன்றிரவு விழித்திருந்து பூசித்த தற்காக அவ் வேடனுக்கும் அதனைத் தரிசித்திருந்த புலிக்குஞ் சிவபதமருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது சிதம்பரத்துக்குத் தென்மேற்கே 19 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருகானாட்டுமுள்ளூர்

(பதஞ்சலிநாதேசுரர், கோல்வளைக்கையம்மை, கானார்குழலி, சிவதீர்த்தம்.)

பதஞ்சலி முனிவராற் பூசிக்கப்பட்ட தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது சிதம்பரத்திலிருந்து தென்மேற்கே 18 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருநாரையூர்

(சௌந்தரேசுரர், திரிபுரசுந்தரியம்மை, திருக்குளதீர்த்தம்.)

தேவதத்த னென்னும் கந்தருவன் மரத்திலேறிக் கனிபறிப்புழி அதன் கீழிருந்து நோற்ற துருவாச முனிவரது எதிரே ஓர் கனி விழுந்து அவரது நிஷ்டைக் கிடையூறு செய்தமைபற்றி 'நாரையாக!' என்று சபிக்க, நாரையான அக் கந்தருவன் பூசித்துக் கதியடைந்த தலம்.

இது சிதம்பரத்தி லிருந்து தென்மேற்கே $10\frac{1}{4}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கடம்பூர் (கரக்கோயில்)

(அமிர்தகடேசுரர், சோதிமின்னம்மை, அமிர்த தீர்த்தம்.)

அமிர்தங் கடைய எத்தனித்தபோது, நுரை யெழும்பியது கண்ட தேவேந்திரன் பூசித்து அமிர்த மெழும்படி

யாக அநுக்கிரகம் பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது ஓமாம்புலியூரி லிருந்து வடமேற்கே 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பந்தணைநல்லூர்

(பசுபதீசுரர், காம்பனதோளியம்மை, கொன்றை விருக்ஷம், பசுதீர்த்தம்.)

தேவ கன்னிகை பூசித்தது. வசிஷ்டர் செய்த விருந்தால் காமதேனுவை விரும்பிய கௌசிகராஜனுகிய விசுவாமித்திர மாமுனிவர் கொண்டிருந்த கோபத்திற் கஞ்சி காமதேனு வழிபட்டு விசுவாமித்திரருடன் சிநேகஞ் செய்துகொண்ட தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருவிடைமருதூர் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 7½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கஞ்சனூர்

(அக்கினீசுரர், கற்பகநாயகியம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

அக்கினி, பிர்ம்மா, மார்க்கண்டேயர், இந்திரன் இவர்கள் பூசித்த தலம்.

மானக்கஞ்சாற நாயனர்: வேளாளமரபில் மாசிமீ அசுவினி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளி, அரசனிடத்துச் சேனதிபதித் தொழிலில் அமர்ந்து சிவனடியாரைப் பூசித்து வருங்கால், அருந்தவத்தால் பெற்ற தமது புத்திரியைக் கலிக்காம நாயனருக்குக் கலியாணஞ் செய்துகொடுக்க இசைந்து மணவினை செய்துகொண்டிருப்புழி, மாவிரத அடியார் வடிவங்கொண்டு சிவபெருமானெழுந்தருள, நாயனர் பார்த்து அவரது திருத்தாளில் தம் புத்திரியை வணங்குவிக்கும்பொழுது, 'அக்கன்னிகையின் கூந்தல் பஞ்சவடிக்காகும்' என்று மாவிரதியர் கேட்ப, அங்ஙனமே அடியோடறுத்துத் தந்தருளினர். இத் துணிவுக்குச் சிவபெருமானிரங்கிக் காட்சிகொடுத்தும், கலியாணத்திற்கு வந்த கலிக்

காமநாயனார் 'முண்டிதபெண்ணை மணஞ்செய்ய அடாது' என்று வருந்துழி, அப்பெண்ணுக்குக் கூந்தலளித்தும் மணவினை முடிந்தருளிய தலம். மானக்கஞ்சாற நாயனார், மார்கழிமீ சுவாதிநாளிற் சிவபெருமானது சன்னிதானத்திலே அவரது பெருங் கருணைத் திறத்தைப் புகழ்ந்துபாடும் பெரும்பேறு பெற்றருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவிடைமருதூர் ஸ்டேஷனுக்கு வடகிழக்கே 9 மைல தூரத்தி லிருக்கிறது.

---

## திருக்கோடிகா

(கோடிகாசுரர், திரிநோடீசுரர், வடிவாம்பிகையம்மை, திரிபுரசுந்தரி, காவிரிநதி தீர்த்தம்.)

மூன்று கோடி ருஷிகள் பூஜித்து அவரவர் வேண்டும் வரங்களை யடைந்த தலம். ஐயடிகள்காடவர்கோன் நாயனார் க்ஷேத்திரவெண்பாப் பாடியருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது திருவிடைமருதூர் ஸ்டேஷனுக்குக் கிழக்கே 1½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருமங்கலக்குடி

(பிராணவரதேசுரர், மங்களநாயகியம்மை, காவேரிநதி தீர்த்தம்.)

ஒரு அரசனது தண்டலாளராயிருந்த சிவபக்தர், அரசிறைப்பொருளைச் செலவழித்து ஆலயத் திருப்பணி செய்ததை அரசனறிந்து அவரை அழைப்பிக்க, அச் சிவபக்தர் அரசனது ஆக்ஞைக்குப் பயந்து உயிர் துறந்தமையை அரசன் கண்டு, அவரது சரீரத்தை நகரைக்கடந்து அகற்றுவிக்கும்படி செய்தபொழுது, அச்சரீரம் திருவியலூரில்வர, அதற்குமுன் அவர் மனைவியார் மங்களநாயகிபாற் பெற்ற சுமங்கிலித்துவத்தின் பயனால் இறந்துபோன அவ்வடியவர் உயிர்பெற்றெழுந்து, சிவதரிசனஞ் செய்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருவிடைமருதூர் ஸ்டேஷனுக்கு வடகிழக்கே 3½ மைல் தூரத்திலிருக்கிறது.

## திருப்பனந்தாள் (தாடகேசுரம்)

(சடையப்பேசுரர், செஞ்சடையப்பர், பெரியநாயகியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

சிவபக்தி மிகுந்த தாடகை யென்னும் அம்மையார், சிவார்ச்சனை செய்து மாலை சாத்தப்போகும் சமயத்தில் உடை நெகிழ, அதனைத் தமது முழங்கையாலிடுக்கி, மாலை சாத்துந் திருப்பணிக்கு இடையூறு வந்ததைக் குறித்து துக்கித்ததை யுணர்ந்த சிவபெருமான் திருமுடியைச் சாய்த்துக் கொடுத்து மாலைசாத்தப் பெற்றுக்கொண்ட தலம். அம்மாலையேற்கு நிமித்தம் சாய்ந்த திருமேனியுடைய சிவபெருமானை நேர் நிறுத்தும்பொருட்டு அரசன் அநேக யானை முதலியவற்றால் வலிந்திழுத்தும் நேர்படாமையை யுணர்ந்த குங்கிலியக் கலயநாயனுர் தமது கழுத்திற்கும், சிவபெருமானுக்கும் கயிறு பூட்டி யிழுப்ப, சிவபெருமான் நேர் நின்றருளினராயினும் தாடகையாரது திருத்தொண்டையுலகோர்க்கறிவிக்கும் பொருட்டு, இக்காலத்தும் சற்றுச் சாய்ந்தேயிருக்கின்ற தலம். ஐயடிகள்காடவர்கோன்நாயனுர் க்ஷேத்திர வெண்பாப் பாடியருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்துக்கு வடகிழக்கே 10 மைல் தூரத்திலிருக்கிறது.

## திருவேரகம் (சுவாமிமலை)

(சுவாமிநாதக்கடவுள், பாலசுப்பிரமணிய சுவாமி, திருக்குள தீர்த்தம்.)

இது முருகக்கடவுளாரது ஆறுபடைவீடுகளிலொன்று. சிவதரிசனம் செய்துவந்த பிரமதேவர், முருகக்கடவுளினிளமைப்பருவத்தை நோக்கி அவருக்கு வந்தனஞ்செய்யாதேக, அவரை முருகக்கடவு ளழைத்துப் பிரணவத்திற்குப் பொருள் கேட்ப, அவர் விடைகூறுமைபற்றி அப்பிரமதேவரைக் குட்டிச் சிறையிலிட்டுச் சிருட்டித் தொழிலைத்தாமே நடத்துங்கால், தேவர்கள் வேண்டுகோளின்படி சிவபெருமான் அவரது சிறையை நீக்கச் சொல்லியும் விடாது

எம்பிரானே விடுப்ப, விடுத்தருளிய பின்னர்ச் சிவப்பிரானுக்குப் பிரணவார்த்தத்தை யுபதேசித்தருளிய தலம்.

---

## திருஆப்பாடி

(பாலுகந்தேசுரர், பெரியநாயகியம்மை, பால்தீர்த்தம், மண்ணியாறு, ஆத்திவிருக்ஷம்.)

இவ்வாயர்பாடியிலிருந்த ஓர் ஆயன் பால் கறந்து வீட்டிற் கொண்டு செல்லுகையில், இடையே தினந்தோறும் கால் தடுக்கிப் பால் கவிழ்ந்துகொண்டு வருதலை யுணர்ந்த ஆயன், கையிலிருந்த கொடுவாளால் ஓச்ச, அக்கொடுவாள் பட்ட வடுவினின்றும் குருதி சொரிதலைக் கண்டு மனமிரங்கி 'பாலுகந்த நாதரோ' என்று தொழ அனுக்கிரகித்த தலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனார் க்ஷேத்திர வெண்பாப் பாடியருளிய தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 11 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருச்சேய்ஞலூர்

(சத்தியகிரீசுரர், சகிதேவியம்மை, மண்ணிநதி தீர்த்தம்.)

சூரசம்மாரத்திற்காக எழுந்தருளி வந்த ஆறுமுகக் கடவுள் ஓர்நாள் தங்கிச் சிவபூசை செய்து ஆயுதம் பெற்ற தலம். சண்டேசுரநாயனார்: பிராமண குலத்தில் வைகாசி மாதத் திருவாதிரை நாளிற் றிருவவதாரம் செய்தருளிப் பசுநிறை காக்கும் தொழிலுடையோராய் ஓர் துறையிற் சென்று மணலாற் சிவலிங்கந் தாபித்து, ஆவின்பாலைக் குடங்களி னிரப்பிப் பூசைசெய்து வருதலை யவர் தந்தையாருணர்ந்து, அப் பால் முதலியவற்றைக் காலாற் றட்டி வீழ்த்த, சண்டேசநாயனார் கோபித்துத் தமதருகிலிருந்த கோலால் தந்தையார் தாளி லெறிய அக் கோலே மழுவாகத் தந்தை தாளைத் துணித்துவிட்டது. இந்நாயனாரது அன்புக்கிரங்கிய சிவபெருமான் இவருக்குச் சண்டேசபதமும், பரிகலப் பூசையும் திருவருள் செய்யப்பெற்று, தைமாத உத்திர நாளில் சிவபத மிருக்கப்பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்ற தலம். திருப்பதிகம்-உ.

இது கும்பகோணம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கே 9½ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருந்துதேவன்குடி

(கற்கடேசுரர், அருமருந்துநாயகியம்மை, அசுவ தீர்த்தம்.)

நண்டு பூசித்து முத்தியடைந்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்துக்குக் கிழக்கே 5 மைல் தூரத்தில் இருக்கிறது.

---

## திருவியலூர்

(யோகாநந்தேசுரர், புராதனேசுரர், வில்வாரணியேசுரர், சௌந்தரநாயகியம்மை, நிருதி தீர்த்தம்.)

திருமங்கலக்குடியிற் றிருப்பணிசெய்து தேகவியோகமான அடியவரை; இத்தலத்துக்குக் கொண்டு வரும்போது சிவபெருமான் உயிர்ப்பிக்கச் செய்தருளிய தலம். திருஞான சம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்துக்குக் கிழக்கே 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## கொட்டையூர் (கோடிசுரம்)

(கோடீசுரர், பந்தாடுநாயகியம்மை, சிவகங்கை தீர்த்தம்.)

மார்க்கண்டேயர் முதலிய மகருஷிகள் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது கும்பகோணத்திற்கு மேற்கே 2 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## இன்னம்பர்

(எழுத்தறிநாதேசுரர், கொந்தார் பூங்குழலம்மை, சௌந்தரநாயகி, நிருதி தீர்த்தம்.)

அகஸ்தியமுனிவர் பூசிப்ப, அவருக்கு இலக்கண முபதேசித்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாலும், திரு

ஞானசம்பந்த சுவாமிகளாலும், பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது கும்பகோணத்திற்கு மேற்கே 3 மைல் சென்று புளியங்குடி யென்னும் ஊரை யடைந்து, பிறகு வடக்கே 1 மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம்.

---

## திருப்புறம்பயம்

(சாட்சி நாதேசுரர், கரும்பன்னசொல்லம்மை, கூவ தீர்த்தம், வன்னி விருக்ஷம்.)

சுந்தோபசுந்தர் பூசித்த தலம். வணிக கன்னிகைக்குக் குறிப்பிட்ட மணவாளன் அரவா லிறந்தமையை யுணர்ந்த திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பதிகம் பாடி உயிர்ப் பிக்கச் செய்த தலம். சமயாசாரியர் மூவராலுங் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ந.

இது கும்பகோணத்திற்கு வடமேற்கே 6 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவையாறு (இதுவே பஞ்சநதம்)

(செம்பொற்சோதீசுரர், பஞ்சநதேசுரர், அறம்வளர்த்த நாயகியம்மை, காவிரிநதி தீர்த்தம்.)

தருமதேவதை அழியாப்பதம் பெறும்பொருட்டுப் பூசித்துத் திருநந்திதேவராய்ச் சகல வைபவங்களும் பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கயிலாய தரிசனத்துக்குச் சென்றவிடத்துக் கை கா லுடம்புறுப்புக்க ளனைத்தும் தேய்ந்து கிடப்பதை யறிந்த சிவபெருமான் ஓர் சித்த வடிவமாய் எழுந்தருளி, ஓர் பொய்கையை யுண்டாக்குவித்து, அதில் நாவரசுகளை மூழ்குவித்துத் தேய்ந்த உருப்புகள் வளர்ந்து இத்தலத்தெழும்வண்ணம் கிருபை பாலித்து, அரசுகள் விரும்பி வருந்தியடைய எத்தனித்த திருக்கயிலாயக் காட்சியைக் காட்டியருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேரமான்பெருமான் நாயனாரும் காவிரியின் தென்கரையிலிருந்து இத்தலத்தைத் தெரிசிக்க வரும்பொழுது, காவிரியின் பெரு வெள்ளத்தினாற் றடுப்புண்டு சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகம் பாடி, 'ஐயாருடைய அடிகளோ' என்றருளி அக் காவிரியின் ஜலம் பளிங்குமலைபோ னிற்பவும் மற்ற ஜலம் வடிந்து தரையில் வழி

காட்டவும், தம்பிரான் தோழரும் அவர் தோழருந் திருக்கூட்டங்களுடன் இங்கு வந்து ஐயரடிகளைத் தரிசித்துச் சென்று மேல் காவிரியைப் பெருகி ஓடும்படி செய்தருளிய தலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனார் க்ஷேத்திர வெண்பாப் பாடியருளிய தலம். சமயாசாரியர்கள் மூவராலுந் திருப்பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-௧அ.

கங்காயாத்திரை கிரந்தத்தின்படி

## பஞ்சநதி மான்மியம்



மணிகர்னிகா காட்டிற்குத் தெற்கிலுள்ள பஞ்சகங்கா காட்டில் பஞ்சநதிகளாகிய, ஆதியில் தர்மநதியும் தூதபாவையும் சேர்ந்து ஒன்றாய், அதனோடு கிரணை, கங்கை, யமுனை, சரஸ்வதியென்னும் நான்கும் சேர்ந்து பஞ்சநதியாயிற்று. இத்தீர்த்தத்திற்குறிய தான விசேஷபலன் பஞ்சபூத பௌதீகமான சரீரத்தைப் போக்கி தேஜோமயமான திவ்யசரீரத்தைக் கொடுக்கின்றது.

விரிபுனற் றருமந் தவமுயர் தூத
பாவைசொல் விந்துநற் றீர்த்த
மருவிய பஞ்ச நதமென முன்னை
யுகமுதல் வான்முறை முழங்கும்
பொருவறு நாம மிந்நத மதனிற்
படிந்துளோர் பூதமோ ரைந்தி
னுருவுடை யாக்கை யெடுத்திட ரெய்தா
முத்திவீ டுறைந்தினி திருப்பார்.''

இதன் பூர்வ விருத்தாந்தம்:—பூர்வத்தில் வேதசிரஸ் என்ற ருஷியின் நற்புத்திரி பிதாவி னனுமதிப்படி தனக்குரிய நாயகனுடன் நெடுங்காலந் தவம் புரிந்தமையால், எல்லாப் பாவத்தையும் போக்கத்தக்க யோக்கியதை பெற்றவளாய் தூதபாவை யென்னும் பெயரினைப் பெற்றாள். அப்போது யமதருமராஜன் அவளைக் காந்தருவ விவாகம் முடிக்கக்கோரினபோது, 'பிதாவினனுமதியின்றி உன்னோடு சேரமாட்டேன்' என்று கல்மனத்தோடுங் கூடி மறுத்தமையால், அத்தருமன் அவளைக் கல்லாகச் சபிக்கவே, அவளும் "நீ சஞ்சலமுடையோனதல்பற்றி ஜலரூப மடைவை" என்று சபித்தாள். பிறகு பிதாவினிடம் நடந்த விருத்தாந்தத்தைச் சொல்ல, நீர் அவயோக்கியமுள்ளவனை அங்கீகாரம்

செய்தபடியால் சந்திரகாந்தச் சிலையுருவையடைந்து, அத்தன்மநதியோடுஞ் சேர்' என்று ஆக்ஞாபித்தபடி சேர்ந்தொன்றாயிருந்தனள். அதனோடு சூரியனுடைய தபசினாலவனது வியர்வையா லுண்டான கிரணையென்னும் நதியும் சேர்ந்து அவ்விடத்தில் கங்கை, யமுனை, சரஸ்வதி யென்னும் மூன்று நதிகளுங்கூட பஞ்சநதியாயிற்றென்று மேற் காசி காண்டச் செய்யுளாற் கூறப்பட்டது.

இது கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகமிவற்றில் முறையே தர்மநதி, தூதபாவை, பிந்துதீர்த்தம், பஞ்சநதமென்னும் பெயர் பெறுவதாயிற்று.

---

## திருவையாறு (அல்லது திருவாதி)

இது தஞ்சாவூருக்கு வடக்கே ஏழு மைல் தூரத்தில் காவிரியின் வடகரையில் இருக்கிறது. இங்கிருக்கும் பஞ்சனதீசுரர் கோயில் சிற்பாலங்காரமாகக் கட்டப்பெற்றிருக்கிறது. இதைத் தக்ஷணகாசி க்ஷேத்திரமென்று எண்ணி அநேக பிராமணர்கள் தம் ஆயுள்கால முடிவில் இங்கு வந்து இறந்தால் முத்தி கிடைக்குமென்றெண்ணி வந்து இங்கு வசிக்கிறபடியால் பெரும்பான்மையான குடிகள் பிராமணர்களாகவே இருக்கிறார்கள். இங்கே இப்போதிருக்கும் பஞ்சநதிகளாவன: காவிரி, கொள்ளிடம், குடமுருட்டி, வெட்டாறு, விண்ணாறு என்பவையாம்.

---

## விசயமங்கை

(விஜயநாதேசுரர், மங்கைநாயகியம்மை, அருச்சுன தீர்த்தம்.)

பஞ்சவரி லொருவனாகிய விஜயன் பாசுபதம் பெறும் பொருட்டுப் பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகளாலும் திருஞானசம்பந்தசுவாமிகளாலும் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருப்புறம்பயம் என்னும் ஸ்தலத்திலிருந்து மேற்கே $2\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவைகாவூர்

(வில்வவனேசுரர், வளக்கைநாயகியம்மை, யமதீர்த்தம், வில்வ விருக்ஷம்.)

மகாலட்சுமி பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளால் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது விசயமங்கையிலிருந்து மேற்கே $1\frac{1}{2}$ மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## வடகுரங்காடுதுறை

(குலைவணங்கீசுரர், அழகுசடைமுடிநாதர், அழகுசடைமுடியம்மை, காவிரிநதி, வாலி தீர்த்தம்.)

வாலி பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருச்சக்கரப்பள்ளிக்கு வடக்கே 3 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பழனம்

(ஆபத்சகாயேசுரர், பெரியநாயகியம்மை, காவிரிநதி.)

திக்குப்பாலகர் பூசித்த தலம். அப்பூதியடிகள் நாயனார் திருத்திங்களூரிலே அந்தணர் குலத்திலே மார்கழிமாத பூசநாளிற் றிருவவதாரஞ் செய்தருளிச், சிவபணி விடை செய்துவருங்காலத்தில், திருநாவுக்கரசு சுவாமிகளால் நிகழ்ந்த அற்புதங்களைக் கேள்வியுற்றுத் தாம் செய்யுந் தண்ணீர்ப்பந்தல், அறச்சாலை, குளமுதலிய எத்தருமத்திலும், திருநாவுக்கரசு சுவாமிகள் தருமமெனப் பெயரெழுதி யிருந்தனர். அங்கெழுந்தருளிய திருநாவுக்கரசு சுவாமிகள் இவற்றை நோக்கி, அந்நாயனாரிடத்திற் சென்றருள, நாயனார் அங்குற்றவர்களுக்கு விருந்தளிக்கும்பொருட்டு வாழையிலை கொய்யத் தமது மூத்தகுமாரனை பெரிய திருநாவுக்கரசை யனுப்பியதில், அவன் அரவால் தீண்டி யிறந்தமையையும் பொருட்செய்யாமல், திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு அன்னம் பரிமாறுங்கால்; சுவாமிகள் அதைக் குறிப்பாலுணர்ந்து விடத்தாலிறந்த பிள்ளை யெழும்படி திருப்பதிகமோதி விருந்தருந்தி விடைபெற்றுச் செல்ல, நாயனார் பின்னரும் பல பணிவிடைகளைச் செய்தும், திருநாவுக்கரசு சுவாமிகளது திருப்பதிகத்திற் சேரப்பெற்றும், தைமாத சதய நாளிற் றிருவடிசேர்ந்த தலம். திருநாவுக்கரசு சுவாமி

கள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ரு.

இது திருவையாற்றுக்குக் கிழக்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருநெய்த்தானம் (தில்லைத்தானம்)

(நெய்யாடியப்பர், பாலாம்பிகையம்மை, இளமங்கையம்மை, காவிரிநதி.)

வாக்கின் செல்வி பூசித்த தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-ச.

இது திருவையாற்றுக்கு மேற்கே ஒரு மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருப்பெரும்புலியூர்

(வியாக்கிரபுரீசுரர், சௌந்தரநாயகியம்மை, காவிரிநதி, வியாக்கிர தீர்த்தம்.)

வியாக்கிரபாதருஷி பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவையாற்றுக்கு மேற்கே $2\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது

---

## திருமழபாடி

(வஜ்ரஸ்தம்பேசுரர், அழகாம்பிகையம்மை, கொள்ளிடநதி தீர்த்தம்.)

தேவேந்திரன் பூசித்த தலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனார் க்ஷேத்திர வெண்பாப் பாடியருளிய தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம்பெற்றுள்ளது. திருப்பதிகம்-சு.

இது திருநெய்த்தானத்திலிருந்து வடமேற்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருப்பழுவூர்

(வடவனமூலநாதேசுரர், அருந்தவநாயகியம்மை, கொள்ளிடநதி.)

சப்த கன்னியர்கள் பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவையாற்றிலிருந்து வடக்கே 10 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருவழுவூர்

(மாவுரிநாதேசுரர், வனமுலையம்மை, சிவதீர்த்தம்.)

கயாசுரனென்பவன் பிரமதேவனாற் பெற்ற வரப்பிரசாதத்தினால் சகல தேவர்களையும் வருத்துங்காலத்தில், தேவர்கள் வேண்டுகோளாற் சிவபெருமான் அநேக கோடி சூரியோதயம்போல ஒளிவிடும் உக்கிர வடிவங்கொண்டு, அக் கயாசுரனை வதைத்தபொழுது, எம்பிரானது ஒளியைக் காணக் கூசிய தேவர்கள்பொருட்டுத் தம் தேக காந்தியை அக் கயாசுரனாகிய யானையினது தோலை யுரித்துப் போர்த்து மறைத்துத் தரிசனங் கட்டளையிட்டருளிய தலம். இது அட்டவீரட்டத்துளொன்று.

---

## திருக்கானூர்

(செம்மேனி நாயகேசுரர், சிவயோக நாயகியம்மை, கொள்ளிடநதி தீர்த்தம்.)

உமாதேவியார் சிவயோகசாதனஞ் செய்திருக்கும் பொழுது சிவபெருமான் அக்கினி சொரூபமாய்த் தரிசனம் கொடுத்தருளிய தலம். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது பூதலூர் ஸ்டேஷனுக்கு வடக்கே 7 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## அம்பிலாலந்துறை (திருமாலயந்துறை)

(சத்தியவாகேசுரர், சௌந்தரநாயகியம்மை, கொள்ளிட நதி தீர்த்தம்.)

பிர்மா, விஷ்ணு, தேவேந்திரன், வாகீசரென்னு முனிவர் இவர்கள் பூசித்து அருள்பெற்ற தலம். திருநாவுககரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது பூதலூர் ஸ்டேஷனுக்கு வடக்கே 12 மைல் தூரத்தி லிருக்கிறது.

## திருமாந்துறை

(ஆம்ரவனேசுரர், அழகாலுயர்ந்த அம்மை, மகா தீர்த்தம், மாவிருக்ஷம்.)

மாவிருக்ஷம், கண்ணுவமகாரிஷி பூசித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவானைக்காவுக்கு வடகிழக்கே 10 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பாற்றுறை

(மூலநாதேசுரர், மேகலாம்பிகையம்மை, திருக்குள தீர்த்தம்.)

மார்க்கண்டருஷி பூசிக்கும்போது அபிஷேகத்திற்கு ஆவின்பால் கிடையாமல் வருந்துவதை யுணர்ந்த சிவபெருமான் பால்பெருக அநுக்கிரகித்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது திருவானைக்காவுக்கு கிழக்கு 5 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பைஞ்ஞீலி

(நீலகண்டேசுரர், ஆரணியவிடங்கர், விசாலாக்ஷியம்மை, நீணெடுங்கண்ணி, சிவகங்கை தீர்த்தம்.)

தேவர்கள் அரம்பைமாதர் முதலாயினோர் வாழை மரங்களாய்ச் சூழ்ந்து பூசித்த தலம். இதற்கு அடையாளமாக இன்றளவும் ஆலயத்து உட்பிரகாரத்திலுள்ள பாறைமீது வாழை வளர்ந்தோங்கி யிருக்கிறது. மார்க்கண்ட ருஷியின்பொருட்டாய் எமனை யுதைத்த பின்னர் எமனிறந்து போனமையாலுலகுயிர்களை முடிப்பாரின்றி பல்க,பூமிமாது பாரந் தாங்கலாற்றாதவளாய்த்,திருமாலிடத்து முறையிடத் திருமால் பிரமேந்திராதிகள் பூமிதேவியுடன் வந்து பூசித்துச் சிவபெருமா னருளால் யமனை யெழுப்பி யருளப் பெற்ற தலம். இரத்தினசபை. நடேசருக்கு இரத்தின சபாபதியென்று நாமகரணம். திருநாவுக்கரசு சுவாமிக ளித்தலத்திற்கு வரும் வழியில் பசியினைப்பு மேலிட்ட தறிந்த சிவபெருமான் ஓர் மறையவர்வடிவங்கொண்டு சென்று, ஓர்

வாவிக்கரையிற் கட்டமுதுடனிருப்ப எதிர்வந்த அரசுகளது பசி தாகத்தைப் பாதிசோறு தந்து தணித்து அழைத்துவந்து பதிகம் பெற்ற தலம். சமயாசாரியர் மூவராலும் பதிகம் பெற்றுள்ளது திருப்பதிகம்-ங.

இது திரிசிராப்பள்ளிக்கு வடக்கே 12 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## திருப்பாச்சிலாச்சிரமம் (திருவாசி)

(மாற்றறிவரதர், பாலசௌந்தரியம்மை, வன்னி விருக்ஷம்.)

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் எழுந்தருளி வருவதறிந்துகொல்லிமழவன் என்னும்அரசன், எவ்வாற்றானுந் தீராத குமரகண்ட வலியையுடைய தன்மகளை ஆலயத்துள் கொண்டுவந்து போடுவித்திருக்க, சுவாமிகளெழுந்தருளி வந்து கண்ணுற்று 'இம்மங்கை வாட மையல் செய்வதுமாண்போ' என்று பதிகமோதி அக்குமரகண்ட வலியைத் தீர்த்தருளிய தலம். சுந்தரமூர்த்திசுவாமிகள் வந்து பதிகமோதித் தொழுதும் பொருள் கொடுக்கத் தாழ்த்தமைபற்றிப் பதிகம் பாடிப் பொன்பெற்ற தலம். ஐயடிகள் காடவர்கோன் நாயனார் க்ஷேத்திரவெண்பாப் பாடியருளிய தலம். சுந்திரமூர்த்தி சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-உ.

இது திருஆனைக்காவுக்கு வடமேற்கே 3 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## திருஈங்கோய்மலை

(மரகதாசலேசுரர், மரகதவல்லியம்மை, அகஸ்திய தீர்த்தம்.)

அகஸ்தியரிஷி பூசிப்பதற்குச் சமயம் வாய்க்காமல் ஈ வடிவமாய்ச் சென்று பூசித்த தலம்.

மாணிக்கவாசக சுவாமிகளால் 'ஈங்கோய் மலையி லெழில துகாட்டியும்'என் றருளிச்செய்யப்பட்ட தலம். திருஞானசம்பந்த சுவாமிகளால் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது குழித்தலைக்கு வடமேற்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது.

## திருநாகேச்சுரம்

(செண்பகாரணியேசுரர், நாகநாதேசுரர், குன்றமுலை நாயகி, விசுவதீர்த்தம்.)

வச்சரமுனி, குத்சரமுனி, நாகராஜன், கிளி இவர்கள் முறையே நான்கு யுகங்களிலும் பூசித்து அனுக்கிரகம் பெற்ற தலம்.

இது கும்பகோணத்துக்குக் கிழக்கே 4 மைல் தூரத்திலிருக்கிறது.

---

## விஷ்ணு ஸ்தலங்கள்

### திருச்சித்திரகூடம் (சிதம்பரம்)

(இது சிதம்பரத்திலிருக்கிறது. கோவிந்தராஜன், புண்டரீகவல்லி, கனகசபையருகில் சாதகவிமானம், புண்டரீக சரசு, கிழக்கு முகமாகப் போக சயனம்.)

தில்லைமூவாயிரவருக்கும், கண்ணுவ ரிஷிக்கும் பிரத்தியட்சம். தேவர்கள்தொழ கொலுவீற்றிருக்குமிடம். குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

### திருக்காழிச் சீராமவிண்ணகரம் (இது சீகாழி)

(ஸ்ரீநிவாசன், தாடாளன், திரிவிக்கிரம நாராயணன், உலகநாயகி, புட்கலாவர்த்தக விமானம், சக்கர தீர்த்தம், சங்கபுட்கரணி.)

கிழக்கு முகமாக நின்று அஷ்டகோண மகர்ஷிக்குப் பிரத்தியட்சம். மாவலிச் சக்கரவர்த்தியினிடஞ் சென்று மூன்றடி மண் கேட்டுத் தாடான சொரூபமாகி, ஆகாயத்தையும் பூமியையும் இரண்டடியா யளந்தும், நின்ற வோரடி அச் சக்கரவர்த்தியின் சிரசையும் ஒப்புக்கொண்ட தலம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

### திருமணிமாடக்கோயில்

(நந்தாவிளக்குப்பெருமாள், அம்புஜவல்லி, புண்டரீகவல்லி, பர்ணவவிமானம், இந்திரபுட்கரணி.)

கிழக்குமுகமாக வீற்றிருந்து உபரிசரசு ராஜனுக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவைகுந்தவிண்ணகரம்

(வைகுந்தநாதன், வைகுந்தமங்கை, அநந்தசத்தியவர்த்தக விமானம், லட்சுமி புட்கரணி, உதங்கபுட்கரணி.)

கிழக்கு முகமாக வீற்றிருந்து உபரிசரசு ராசனுக்கும் உதங்க மகர்ஷிக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருஅரிமேயவிண்ணகரம்

(குடமாடியகூத்தன், விழியமுதவல்லி, உகச சாரங்க விமானம், கோடிதீர்த்தம், அமுததீர்த்தம்.)

கிழக்கு முகமாக வீற்றிருந்து உதங்கமகர்ஷிக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவண்புருடோத்தமம்

(புருஷோத்தமன், புருஷோத்தமவல்லி, சஞ்சீவிக்கிரக விமானம், திருப்பாற்கடல் தீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்று உபமன்னிமரிஷிக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருச்செம்பொன்செய்கோவில்

பேரருளாளன், கிருபாகரன், அல்லிமலர்மங்கை, கநக விமானம், கநகதீர்த்தம், நித்தியபுஷ்கரணி.)

கிழக்கு முகமாக நின்று ஏகாதச ருத்திரர்களுக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருத்தெற்றியம்பலம்

(செங்கண்மால், செங்கமலவல்லி, வேதவிமானம், சூரிய புட்கரணி, கிழக்குமுகமாக புஜங்கசயனம்.)

செங்கமலவல்லிக்கும், ஆனந்தனுக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநந்திபுரவிண்ணகரம்

(ஜகநாதன், செங்கமலமடந்தை, மந்தாரவிமானம், நந்தி தீர்த்தம்.)

மேற்குமுகமாக வீற்றிருந்து நந்திதேவருக்கும் சிபிச் சக்கரவர்த்திக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருத்தேவனூர்த்தொகை

(மாதவப்பெருமாள், தெய்வநாயகர், க்ஷீராப்திவல்லி, சோபனவிமானம் சோபனபுட்கரணி.)

மேற்கு முகமாக நின்று வசிஷ்டருக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருமணிக்கூடம்

(மணிக்கூடநாயகர், வரதன், மணிக்கூடவல்லி, திருமாமகள், கனகவிமானம், சந்திரபுட்கரணி.)

கிழக்குமுகமாக நின்று பெரிய திருவடிக்கும், சந்திரனுக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்காவளம்பாடி

(கோபாலன், மடவரல்மங்கை, செங்கமலவல்லி, சுயம்புவிமானம், தடமலர்ப்பொய்கை.)

கிழக்குமுகமாக நின்று சேனைமுதலியாருக்கும் மித்திரதேவருக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்பார்த்தன்பள்ளி

(தாமரையாள்கேள்வன், பார்த்தசாரதி, மலர்மாது, திருமாமகள், நாராயணவிமானம், சங்கசரசு.)

மேற்கு முகமாக நின்று பார்த்தனுக்கும் வருணனுக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவெள்ளக்குளம்

(கண்ணன், ஸ்ரீநிவாசன், நன்மலராள், தத்துவதோதகவிமானம், வள்ளக்குள தீர்த்தம்.)

கிழக்கு முகமாக நின்று சுவேதராஜனுக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவாலி

(வயலாலி மணவாளன், கமலவல்லி, குமுதவல்லி, அஷ்டாக்ஷர விமானம், இலாக்ஷணி புஷ்கரணி, அலாதநி புஷ்கரணி.)

மேற்கு முகமாக வீற்றிருந்து, அலாதநி, திருமங்கை மன்னன், கஞ்சமணி, பிரஜாபதி இவர்கட்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் அவதரித்து மங்களாசாசனஞ் செய்த தலம்.

## திரு இந்தளூர்

(சுகந்தவனநாதன், மருவினியமைந்தன் புண்டரீக வல்லி, சந்திரசாபவிமோசன நாச்சியார், வேதசக்கரவிமானம், இந்து புட்கரணி, கிழக்குமுகமாக வீரசயனம்.)

சந்திரனுக்குப் பிரத்தியட்சம். குலசேகராழ்வார் மங்களாசாசனம்.

## திருவெள்ளியங்குடி

(கோலவல்லிராமன், மரகதவல்லி, புஷ்பமாவர்த்தக விமானம், சுக்கிரபுட்கரணி, பிரமதீர்த்தம், கிழக்குமுகமாக புஜங்கசயனம்.)

சுக்கிரனுக்கும், பிரமனுக்கும், பராசரருக்கும், இந்திரனுக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருப்புள்ளம்பூதங்குடி

(வல்வில்லிராமன், பொற்றாமரையாள், சோபன விமானம், கிருத்திரதீர்த்தம், கிழக்குமுகமாக புஜங்கசயனம்.)

சக்கரவர்த்தித் திருமகனுக்கும் கிருத்திர ராசனுக்கும், பிரத்தியட்சமாய் மோட்சங் கொடுத்தது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவாதனூர்

(ஆண்டளக்குமையன், ஸ்ரீரங்கநாயகி, பிரணவ விமானம், சூரியபுட்கரணி, கிழக்குமுகமாக புஜங்கசயனம்.)

காமதேனுக்கும், திருமங்கையாழ்வாருக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருக்கூடலூர்

(வையங்காத்த பெருமாள், பத்மாசனவல்லி, சுத்த சத்வவிமானம், சக்கரதீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்று நந்தமகாமுனிக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கவித்தலம்

(கஜேந்திரவாதன், ரமாமணிவல்லி, பொற்றாமரையாள், ககனக்கிரதி விமானம், கஜேந்திரபுட்கரணி, கபில தீர்த்தம். கிழக்குமுகமாகப் புஜங்கசயனம்.

கஜேந்திரனுக்கும், ஆஞ்சநேயருக்கும் பிரத்தியட்சம். திருமழிசையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருஅன்பில்

(வடிவழகியநம்பி, சௌந்தரியவல்லி, தாரகவிமானம், மண்டுக புட்கரணி, கிழக்குமுகமாக நின்ற திருக்கோலம், புஜங்கசயனம்.)

பிரம்மாவுக்கும், வான்மீகருக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்பேர்நகர்

(அப்பக்குடத்தான், கமலவல்லி, இந்திரவிமானம், இந்திரதீர்த்தம், மேற்குமுகமாக புஜங்கசயனம், வலது அஸ்தத்தின் கீழே குடம், இந்திரகிரி.)

உபமன்னியருக்கும், பராசருக்கும் பிரத்தியட்சம். திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கரம்பனூர்

(புருஷோத்தமன், பூர்வாதேவி, உத்தியோக விமானம், கதம்பதீர்த்தம், வாழைவிருக்ஷம், கிழக்குமுகமாக புஜங்க சயனம்.)

கதம்ப மகர்ஷிக்கும், திருமங்கை யாழ்வாருக்கும், சனக-சனந்தக-சநாதன - சனற்குமாருக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவெள்ளறை

(புண்டரீகாக்ஷன், பங்கயச்செல்வி, சண்பகவல்லி, மணிகர்ணிகாதீர்த்தம், குசதீர்த்தம், சக்கரதீர்த்தம், திவ்வியபுட்கரணி, புட்கலதீர்த்தம். கெந்தகபுட்கரணி, சுவேதகிரி, விமலாக்கிரதிவிமானம்.)

கிழக்குமுகமாக நின்று பெரிய திருவடிக்கும், சிபிச்சக்கரவர்த்திக்கும், பூதேவிக்கும், மார்க்கண்டேயருக்கும் பிரத்தியட்சம். பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## உறையூர் நிசுளாபுரி (இது உறையூர்)

(அழகிய மணவாளப்பெருமாள், வரலட்சுமி, உறையூர்வல்லி, கலியாணதீர்த்தம், குடமுருட்டிநதி.)

வடக்குமுகமாக நின்று முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும், ரவிதர்மராஜனுக்கும் பிரத்தியட்சம். உறையூர்வல்லி திருமணம். திருப்பாணாழ்வார் திருவவதாரம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## தஞ்சைமாமணிக்கோயில் (இது தஞ்சாவூர்)

(நீலமேகப்பெருமாள், செங்கமலவல்லி, சௌந்தரியவிமானம், கன்னிகா புஷ்கரணி, அமுததீர்த்தம்.)

கிழக்குமுகமாக வீற்றிருந்து பராசர முனிவருக்குப் பிரத்தியட்சம். பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## தஞ்சையாளிநகர்

(நரசிம்மன், தஞ்சைத்தலைவி, மணிகுன்றநாயகர், அம்புயமாது, வேதசுந்தரவிமானம், சூரியபுட்கரணி, ஸ்ரீராமதீர்த்தம்.

கிழக்குமுகமாக வீற்றிருந்து மார்க்கண்டேயரிஷிக்குப் பிரத்தியட்சம்.

---

## திருக்கண்டியூர்

(அருஞ்சாபந்தீர்த்த பெருமாள் கமலமடந்தை, கமலாக்கிரதிவிமானம், கபாலதீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்று பைரவர் ஏந்திய பிரம கபாலத்தி லுதிரம் வார்த்து நிவிர்த்தித்தது. அகஸ்தியருக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்குடந்தை (இது கும்பகோணம்)

(ஆராவமுது, சாரங்கபாணி, கோமளவல்லி, வைதீக விமானம், ஏமபுட்கரணி, கிழக்குமுகமாக உத்தியோக சயனம்.)

ஏமமகாரிஷிக்குப் பிரத்தியட்சம். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருஅழுந்தூர்

(ஆமருவியப்பன், செங்கமலவல்லி, கருடவிமானம், தரிசனபுட்கரணி.)

கிழக்குமுகமாக நின்று உபரிசரசுராஜனுக்கும், காவிரிக்கும், தர்மதேவதைக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருச்சிறுபுலியூர்

(அருண்மாகடல், திருமாமகள், நந்தவர்த்தனவிமானம், அநந்தசரசு, தெற்கு முகமாக புஜங்கசயனம்.)

வியாசரிஷி, வியாக்கிரமரிஷி இவர்கட்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருதலைச்சங்கநாண்மதியம்

(வெண்சுடர்ப்பெருமாள், தலைச்சங்க நாச்சியார், செங்கமலவல்லி, சந்திரவிமானம், சந்திரபுட்கரணி)

கிழக்குமுகமாக நின்று தேவ பிரந்தங்களுக்கும், சந்திரனுக்கும்பிரத்தியட்சம். பூதத்தாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநறையூர்

(வடிவழகியநம்பி, நம்பிக்கை நாச்சியார், ஸ்ரீநிவாச விமானம், மணிமுத்தாநதி, கிழக்கு முகமாக நின்ற கோலம்.)

மேதவமுனி கன்னிகையைப் பலிபிடித்துக்கொண்டு போகும்போது அவள்முறையிட, அவனைச் சபித்து, மேதவ முனிக்கு அருள்செய்தது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவிண்ணகரம்

(உப்பிலியப்பன், பூமிதேவி நாச்சியார், விஷ்ணு விமானம், ஆர்த்தி புட்கரணி.)

கிழக்கு முகமாக நின்று மார்க்கண்டேயருக்கும், பெரியதிருவடிக்கும் பிரத்தியட்சம்; நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கண்ணபுரம்

(சௌந்தரராஜப்பெருமாள், கண்ணபுரநாயகி, உத்பலாவர்த்தக விமானம், நித்திய புட்கரணி.)

கிழக்கே திருமுகமாக நின்று கண்ணுவ மகாமுனிவர்க்குப் பிரத்தியட்சம். நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநாகை (இது நாகப்பட்டணம்)

(சௌந்தரராஜர், சௌந்தரியவல்லி, சௌந்தரிய விமானம், சாரபுட்கரணி.)

கிழக்கு முகமாக நாகராஜனுக்கும் திருமங்கை யாழ்வாருக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கண்ணங்குடி

(சாமளமேனிப் பெருமாள், தாமோதர நாராயணன், அரவிந்தவல்லி, உத்பலவிமானம், இராவணபுட்கரணி, கிழக்கு முகமாக நின்ற திருக்கோலம்.)

பிருகு, சைத்தியர், கௌதமவர் இவர்கட்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கண்ணமங்கை

(பக்தவத்சலப்பெருமாள், அபிஷேகவல்லி, உத்பல விமானம், தரிசனபுட்கரணி, கிழக்கு முகமாக நின்ற திருக்கோலம்.

வருணனுக்கும், உரோமசன்மருக்கும் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருச்சேறை (சாரக்ஷேத்திரம்)

(சாரங்கநாதன், சாரங்கவல்லி, சாரபுட்கரணி, கிழக்கு முகமாக நின்ற திருக்கோலம்.)

காவிரிக்குப் பிரத்தியட்சம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## இராசமன்னார்கோயில்

(இராசகோபாலன், செங்கமலவல்லி, சுயம்புவிமானம், அநித்திராநதி, சங்கு-சக்கர-கிருஷ்ண-ருக்குமணி-கஜேந்திர - கோப்பிரளைய - கோபிநாத - க்ஷீரசாகரமுதலிய புட்கரணிகள், நவதீர்த்தங்கள், சண்பகாரண்ணிய க்ஷேத்திரம்.)

கிழக்கு முகமாக நின்று கோபில-கோப்பிரளைய மகா முனிவர்க்குப் பிரத்தியட்சம். இது புராதனமான தலம்.

---

## ஸ்ரீரங்கம் (பெரியகோயில்) மஹாத்துவம்

### பூர்வஸ்திதி

சென்னையம்பதிக்கு தக்ஷணதிசையாகிச்சுமார் இருபது காததூரத்திலிருக்கும் சோழதேசத்தின் காவிரிநதி மத்திய பிரதேசத்தில் சந்திரபுஷ்கரணி தீர்த்தத்தில் மகாலட்சுமீகரமாக இருக்கப்பட்ட ஸ்ரீரங்கஸ்தலமென்கிற ஒரு புண்ணிய க்ஷேத்திரமுண்டு.

இந்த ஸ்தலத்தை எவனாகிலும் நினைப்பானாகில், அந்த மகாபுருஷனும் அவன் வமிசத்தில் இருபத்தொரு தலைமுறையிலுள்ள பிதுர்க்களும், பூர்வஜன்மத்திற் செய்துள்ள சகலபாவ கன்மங்களும் நீங்கிப் புண்ணியவான்களாவார்கள். எந்தத் தேசாந்திரத்தி லிருக்கின்றவனானாலும், எந்த தீவாந்திரத்தி லிருக்கின்றவனானாலும், இந்த மஹாத்துவமாகிய ஸ்ரீரங்கஸ்தல மிருக்கின்ற திசையை நோக்கி இரண்டு கைகளையுஞ் சிரசின்மேல் அஞ்சலியாகவைத்துக் கும்பிட்டு ஸ்ரீரங்காவென்று தியானஞ் செய்வானாகில், அவன் ஒருகாலத்திலும் பாவத்தைச் செய்யமாட்டான். அதுவுமல்லாமல் சந்திரபுஷ்கரணி தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து,

செப தப அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஏகமனதாய் நின்று இரண்டு கைகளையுங் கூப்பி 'ஸ்ரீரங்கா!' என்று சொல்லிக் கும்பிடுவானாகில், அவன் ஒருபோதும் நரகத்தையடையவே மாட்டான்.

இந்தத் திவ்விய ஸ்தலத்திற்குப்போய் ஏகாதசியன்று நிச்சலமாயிருந்து துளசிதீர்த்தஞ் சாப்பிட்டு, அன்று இராத்திரிமுழுதும் அந்தப் பகவானுடைய கீர்த்தனைகளைப் பாராயணஞ் செய்கின்ற பரமபாகவதர்களின் பெருமையை இவ்வளவென்றளவிட்டு எவர்களாலுஞ்சொல்லிமுடியாது. அவர்களையே ஸ்ரீமந்நாராயணமூர்த்தி யென்றறிந்து அவர்களுக்குக் பணிவிடைசெய்து எக்காலமும் வணங்கவேண்டும்.

புரட்டாசிமீ கிருஷ்ணபட்ச திரயோதசியில் இந்த ஸ்தலத்திற்குப் போய் பிதுர் தர்ப்பணம் பண்ணின பலத்தினால் அவனும் அவன் வமிசத்தி லுள்ளவர்களும் பாபவிமோசனர்களாய்ப் பரமபதத்தை யடைகின்றார்கள்.

மார்கழிமீ முழுதும் இந்தக் காவிரியிலும் சந்திர புஷ்கரணியிலும் ஸ்நானஞ்செய்து, ஏகமனதாய் நின்று ஸ்ரீரங்கநாயகரையும் பரமபாகவதர்களாகிய தாசர் கூட்டங்களையும் சேவித்தால், அவனும் அவன் குலத்திற் பிறந்த பேர்களும், கிருதகிருத்தியர்களாய்ப் பிறவிக்கடலை நீந்தி மோட்சக்கரையிற் சேருகிறார்கள்.

ஆடி-ஆவணி-புரட்டாசி-ஐப்பசி - ஆகிய இந்த நான்கு மாதங்களிலும் இந்த ஸ்தலத்திலேயே வாசமாயிருந்து, இவ்விடமிருக்கும் தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணுவார்களாகில், அவர்கள் மகத்துவத்தை இன்னபடியென்று எவர்களாலும் அளவுபடுத்திச் சொல்லிமுடியாது. இதற்கு வேறாகிய அநேக திவ்விய ஸ்தலங்களில் ஸஹஸ்ர நக்ஷத்ர சரியாய் வாசம்பண்ணித் தவஞ்செய்தவனுக்கு எந்தப் புண்ணிய பலனுண்டாகுமோ அந்தப் புண்ணிய பலனெல்லாம் இந்தத் திருவரங்கமென்னும் திவ்வியஸ்தலத்தில் ஒருராத்திரி வாசம் பண்ணினவனுக்கு அந்தக்ஷணமே பலிக்கும்.

இந்த ஸ்ரீரங்கஸ்தலமும், ஸ்ரீரங்கவிமானமும் சுயம்பாக உண்டானவை யல்லாமல் ஒருவரால் நிருமிக்கப்பட்டதல்ல; இதுபோல தெய்வீகமாய் சுயம்பாயுண்டாகி விளங்கப்பட்ட ஸ்தலங்கள் ஏழுண்டு. அவை யெவையெனில், திரு

முட்டம், திருவேங்கடாசலம், சாளக்கிராமபர்வதம், நைமிசாரணியம், தட்சணசமுத்திரத்தில் வானமாமலை, உத்திரதிசையில் புஷ்கரக்ஷேத்திரம், நாராயணுஸ்ரமம் என்று சொல்லப்பட்டவைகளாம். இந்த ஏழு ஸ்தலங்களுடன் திருவரங்கமொன்று, ஆக எட்டு ஸ்தலங்களும் சுயம்பாக உண்டானவைகள் என்று சொல்லப்படும்.

## இந்த ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தங்களும் அவைகளின் மகத்துவமும் வருமாறு.

### சந்திரபுஷ்கரணி தீர்த்த மஹத்துவம்.

இவ்விடத்தில் உபயகாவிரியல்லாமல் நவதீர்த்தங்களுண்டு. அவைகளில் முதலாவதாயுள்ள சந்திரபுட்கரணி தீர்த்தத்தில் எவனுகிலும் ஏகமனதாயிருந்து ஒருதரம் ஸ்நானம்பண்ணி நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு விமானத்தைச் சேவிப்பானுகில், அவனும் அவன் வமிசத்திலுள்ள பிதிர்தேவதைகளும் பாவவிமோசனர்களாய்ப் புண்ணியலோகத்தைப் பெறுவார்கள்.

அஃதெப்படி யென்றால், சந்திரனுனவன் தர்மகசிபருடைய சாபத்தினுல் தன்னுடைய பதினுறுகலைகளும் நீங்கிப்போய், மிகுந்த துக்காக்கிராந்தனுய் அந்த ஸ்ரீரங்கத்துக்கு வந்து, சந்திர புஷ்கரணி தீர்த்தக் கரையில் ஒரு புன்னை விருட்சத்தை வைத்துப் பயிராக்கி அதினிழலிலிருந்து நெடுநாள் தவசுபண்ணிப் பிறகு ஸ்ரீரங்கநாதருடைய கிருபாகடாட்சத்தினுல் பழையபடியே தன்னுடைய பூரண கலைகளை யடைந்து, தன்னுடைய ஸ்தானத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அந்தப் புன்னை விருட்சத்தைத் தரிசித்தவர்களுக்கும் பரிசித்தவர்களுக்கும் மகாலட்சுமி கடாட்ச முண்டாகும். அந்த விருட்சத்தைக் கண்டவுடன் சேவிக்கவேண்டும். தழுவி ஆலிங்கனம் பண்ணவேண்டும். அதின் நிழலிலிருந்து தான தருமங்கள் பண்ணவேண்டும். அந்தப் புன்னை மரத்தடியி லுட்கார்ந்து செபம் பண்ணினுல் ஒன்று கோடியாகப் பலிக்கும். எப்போதும் அந்தத் தீர்த்தக்கரையில் வேதவியாசர் வாசமாயிருப்பார். அந்தத் தீர்த்தத்திற்கு ரிஷி வேதவியாசர். அதற்குத் தேவதை வாசுதேவர். புட்கரன், புட்கராசன், காலநேமி, குமுதன் என்ற நால்வரும் இவற்றிற்குக் காவலாக

இருப்பார்கள். இவர்கள் நால்வரும் ஸ்ரீ ரங்கநாயகருக்குத் தூதுவர்களாம். ஆதலால், சந்திர புஷ்கரிணி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணவேண்டியவர்கள் அந்ததீர்த்ததுக்குக்காரண தேவதையாகிய வாசுதேவரை நினைத்துப் புட்பங்களைக் கையில் எடுத்துக்கொண்டு, அந்த தீர்த்தத்துக்குப் பிரதட்சண நமஸ்காரங்கள் பண்ணித் தியானஞ்செய்யவேண்டும். அந்தத் தியானம் எப்படியென்றால், "சகல லோகங்களுக்கும் சகல ஜீவராசிகளுக்கும் ஆதாரமாயிருக்கப்பட்ட கர்த்தா! நான் ஸ்நானம்பண்ணும்படி அனுக்கிரகஞ்செய்யவேண்டும்; என்னைப் பாசபந்தங்களினின்று நீக்கி மோட்சத்திற் சேர்க்க வேண்டும்" என்று சொல்லி ஏகமனதாயிருந்து அதில் ஸ்நானம் பண்ணும்போது அஷ்டாட்சர மந்திரத்தைச் செபிக்க வேண்டும். அதற்குமேல் கரையேறினவுடன் வாசுதேவ மூர்த்திக்கு அர்க்கியங் கொடுக்கவேண்டும். பிற்பாடு வேத வியாசருக்கும், சந்திரனுக்கு மற்றுமுண்டான தீர்த்த ரட்சகர்களுக்குப் அர்க்கியங் கொடுத்து, அதற்குமேல் பிரம்ம தேவனுக்கும், சூரியனுக்கும், இட்சுவாகு மகாராஜனுக்கும் தர்ப்பணம் பண்ணி, அதன் பிறகு பிதிர்தேவதைகளுக்குந் தர்ப்பணம் பண்ணி, தனக்குச் சக்தி உண்டான மட்டும் பிராமணர்களுக்கும் அதிதிகளுக்கும் தானதர்மங்கள் பண்ணினால் அவனுக்குப் பரமபதங் கிடைக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. அந்தத் தீர்த்தக் கரையிலிருந்து ஹரிநாமஸ்மரணை பண்ணினால் அவன் தேவபோகத்தை யனுபவிப்பான். அவன் செய்யும் புண்ணியங்கள் ஒன்று கோடியாகும். ஆதலால், அந்தத் தீர்த்தத்தில் முழுகுகின்றவர்கள் விசேஷமாகத் தான தருமங்களைச் செய்யவேண்டும்.

## வில்வ தீர்த்த மஹத்துவம்.

அப்பால் அந்த தீர்த்தத்துக்குக் கீழ்த்திசையில் ஏழு பிராகாரத்துக்கு வெளிப்புறத்தில் வில்வதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு. அது சுக்கிர பகவான் தபசு பண்ணின ஸ்தானம். எப்படியென்றால், மகாபலிச் சக்கரவர்த்தியானவன் யாகம் பண்ணின சமயத்தில், ஸ்ரீமந் நாராயண மூர்த்தியானவர் வாமனவதாரமாகப் பிரகாசித்து மூன்றடி மண் கேட்டார். அவருக்கு மூன்றடி மண் கொடுக்கும்படி சம்மதித்து மகாபலியானவன் வாமனராகிய பெருமாள் கையில் தாரை வார்க்கும்போது, சுக்கிரன் அந்தக் கமண்

டல துவாரத்திற் புகுந்திருந்து, கமண்டலஜலம் பெருமாள் கையில் விழவொட்டாமற் செய்தான். இதற்குமேல் தர்ப்பையினுல் துவாரத்தைக் குத்தித் தாரைவார்த்தான். அதனுல் சுக்கிரன் : கண் தெரியாமல் குருடனுயினுன். அதை கண்டு சுக்கிரன் மிக விசனமடைந்து, 'நாம் புத்தியில்லாமல் வாமனமூர்த்திக்குத் தானம் பண்ணுகிற காலத்தில் குறுக்கே நின்று தடுத்தபடியினுல் நமக்கு இந்தக் கதிநேர்ந்தது' என்று துக்கப்பட்டு இந்தத் தோஷநிவாரணமாகும்பொருட்டு வில்வதீர்த்தக் கரையில் ஒரு வில்வமரத்தை வைத்துப் பயிராக்கி அதின் கீழேயிருந்து வெகு காலம் சுக்கிரபகவான் தபசு பண்ணினுன். அந்தத் தீர்த்தத்துக்கு ரிஷி சுக்கிரபகவான். முகுந்தனும், கௌணநாதரும் அதற்குக் காவலாளிகள். ஸ்ரீநிவாசராகிய அச்சுதர் அதற்குத் தேவதை. அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குச் சகலதோஷ பரிகாரமும், விசேஷ பலனுமுண்டாகும். அல்லாமல் அதில் ஸ்நானம் பண்ணினவன் ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியையும், பரமபாகவதர்களையும் நிந்தனை செய்தவனுனலும் அவன்செய்த அபசாரங்களெல்லாம் நிவாரணமாகிக் கிருதார்த்தனுவான். அந்தத் தீர்த்தக் கரையிற் செய்த தானதருமங்கள் ஒன்று கோடியாய் வளரும். அந்தத் தீர்த்தத்தின் மகத்துவத்தினுல் பிரமஹத்தி தோஷமும் நீங்கும்.

## சம்பு தீர்த்த மஹத்துவம்.

அப்பால் இந்திர தீர்த்தத்துக்கு அக்கினி மூலையில் சங்குதீர்த்த மென்றெரு தீர்த்தமுண்டு. அந்தத் தீர்த்தக் கரையில் ஈசானியன் எப்போதும் வாசமாயிருப்பான். அது ஏனென்றுல், பிரமதேவனுடைய ஆக்கினையில் உலகத்திலிருக்கப்பட்ட சகல சீவராசிகளுக்கும் மயக்கம் உண்டாகும்படி பாஷண்டமதமும், அந்த மத சித்தாந்தத்துக்குத் தகுந்த பலவித சாஸ்திரங்களுமுண்டுபண்ணி, சகல ஜனங்களையு மயங்கச் செய்வித்த தோஷந் தீரவேண்டுமென்று நினைத்து அந்தத் தீர்த்தக் கரையில் ஒரு நாவல் மரத்தை வைத்துப் பயிராக்கி, அந்த மரத்தின்கீழ் வெகு காலமிருந்து தபசு பண்ணினுன். அந்தத் தீர்த்தத்திற்கு ரிஷி ஆக்கிரகபத்தர். அதற்குக் காவலாளிகள் நந்தன், கணநாதன் என்னும் இரண்டுபேர். அதற்குத் தேவதை ஈசானி

யன். அத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப் பிராமணர்களுக்கு அன்னதானங் கொடுத்தால், அவனுக்குச் சகலபாவங்களு நீங்கும். அந்தத் தீர்த்தத்துக்கு அன்னதானமே விசேஷமாகும். அதனால் ஸ்ரீரங்கநாயகர் சந்தோஷத்தை யடைந்து தம்முடைய பரமபாகவதர்கள் செய்த அபசாரங்களையெல்லாம் பொருத்து அவர்களை இரட்சித்தருளுவார்.

## அசுவதீர்த்த மஹத்துவம்.

அப்பால் சந்திர புஷ்கரிணிக்கு நேர் தெற்காகவும், காவிரிக்கு வடக்காகவும் அசுவதீர்த்த மென்றொரு தீர்த்த முண்டு. அந்தத் தீர்த்தத்தினிடத்தில் சொர்க்கலோகாதிபதியாகிய தேவேந்திரன் அகலிகையைப் பிடித்த தோஷம் நிவாரண மாகும்படி ஒரு அரசமரத்தை வைத்துப் பயிர் செய்து, அந்த மரத்தின் கீழிருந்து வெகுகாலந் தபசு பண்ணி அந்தத் தோஷத்தைப் பரிகரித்துக்கொண்டான். அந்தத் தீர்த்தத்திற்கு ரிஷி கவுதமர். அதற்குக் காவலாளி அனந்தர். அதற்குத் தேவதை இந்திரன். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி கன்னிகாதானம் வஸ்திரதானம் பண்ணினால் சகல தோஷங்களும் பரிகாரமாகும். மேலும், பதிவிரதா சிரோன்மணிகளா யிருக்கப்பட்ட ஸ்திரீகளை இச்சித்த தோஷமும் நீங்கும்படி பெருமாள் கடாட்சிப்பார்.

## புன்னாக தீர்த்த மஹத்துவம்.

அப்பால் சந்திர புஷ்கரிணிக்கு நேர் மேற்குத் திசையில் காவிரிமத்தியில் புன்னாகதீர்த்த மென்றொரு தீர்த்த முண்டு. அந்தத் தீர்த்தக்கரையில் அக்கினி தேவனானவன் ஆறு நட்சத்திரங்களைக் கூடினதோஷம் பரிகாரமாகும்படி ஒரு புன்னை விருட்சத்தை வைத்துப் பயிர்செய்து, அந்த மரத்தின்கீழ் வெகுநாள் தபசுபண்ணிக்கொண்டிருந்து அதனால் அந்த தோஷத்தை நீக்கிக்கொண்டான். அந்தத் தீர்த்தத்துக்கு ரிஷி சுபத்திரர். அந்தத் தீர்த்த இரட்சகர் வித்தியாதரர். அதற்குத் தேவதை அக்கினிதேவன். அந்தத் தீர்த்தத்தில் ஸ்ரீயஃபதியாகிய நாராயணனை நினைத்து ஸ்நானஞ்செய்து பசுவினைத் தானம்பண்ணினால் அவன் செய்த பாவங்களெல்லாம் பறந்துபோம். மேலும் பரதாரத்தை யிச்சித்த பாவமும் தீரும்படி பெருமாள் கடாட்சித்தருளுவார்.

## வகுள தீர்த்த மகத்துவம்.

அப்பால் சந்திரபுஷ்கரிணிக்கு வாயுமூலையில் வகுள தீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு. அங்கே தேவேந்திரனானவன் விருத்திராசுரனைக் கொன்ற பழி நீங்கும்படி அந்தத் தீர்த்தக்கரையில் ஒரு வகுளமரத்தை வைத்துப் பயிராக்கி, அந்த மரத்தின்கீழிருந்து சிறிதுநாள் தபசுபண்ணி அந்தப் பாவத்தைப் போக்கிக்கொண்டான். அந்தத் தீர்த்தத்துக்கு ரிஷி பிரசாபதி, அந்தத் தீர்த்தரட்சகர் சடகோபாழ்வார். அதற்குத் தேவதை இந்திரன்: அந்தத் தீர்த்தத்தில் ஸ்ரீரங்கநாதரை நினைத்து ஸ்நானஞ் செய்து தம்மால் இசைந்தமட்டும் தான தருமங்களைப் பண்ணினால் அவர்களுக்குச் சகல பாவங்களும் போம். அல்லாமலும் கோவதை, ஸ்திரீவதை, பிராம்மணவதை பண்ணின தோஷங்களும் நீங்கும்படி பெருமாள் கடாட்சஞ்செய்தருளுவார்.

## பாலாசு தீர்த்த மகத்துவம்.

அப்பால் சந்திரபுஷ்கரிணிக்கு நிருதிமூலையில் காவிரி நதிக்குத் தென்மேற்கில் பாலாசு தீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு. அந்தத் தீர்த்தக்கரையில் ஒரு திவ்யமான பூவரச விருட்ச முண்டாயிருந்தது. அந்த மரத்தடியில் தபசு பண்ணிக் குமாரக்கடவுள்: சத்தியாகிய வேலாயுதத்தைப் பெற்றார். அந்தத் தீர்த்தத்திற்கு ரிஷி அகஸ்தியர். அந்தத் தீர்த்த ரட்சகர் பலராமர். அதற்குத் தேவதை குமாரக்கடவுள். அந்தத் தீர்த்தத்தில் எவனாகிலும் சித்தசுத்தி யுடையவனாய் ஸ்நானஞ்செய்து, பிராம்மணர்களுக்குக் கோதானங் கொடுத்தால் அவனுக்கு மோட்சமுண்டாகும். அதுவுமல்லாமல் காமக்குரோதபரர்களாயிருக்கப்பட்ட துர்ச்சங்க சகவாசத்தினாலுண்டான சகல தோஷங்களும் பரிகாரமாகும்படி பெருமாள் பிரசாதித்தருளுவார்.

## கடம்ப தீர்த்த மகத்துவம்.

அப்பால் சந்ரதிபுஷ்கரிணிக்கு நேர் வடதிசையில் கொள்ளிடக்கரையில் கடம்பதீர்த்த மென்றொரு தீர்த்தமுண்டு. அந்தத் தீர்த்தக்கரையில் கடம்பவிருட்சங்கள் விஸ்தாரமாயிருக்கும். அந்த விருட்சத்தின் கீழிருந்து ஜனகமகாராஜன் வெகுநாள் யாகம்பண்ணி இஷ்டசித்திகளையும், மோட்சத்தையும் பெற்றான். அந்தத் தீர்த்தத்

திற்கு ரிஷி ஜனகர். அந்தத் தீர்த்தரட்சகர் கருடாழ்வார். அதற்குத் தேவதை சதுர்முகப் பிரம்மா. அவ்விடத்தில் புருஷோத்தமரென்கிற பெருமாள் பிரம்மதேவனை நாபியில் வைத்துக்கொண்டு பள்ளிகொண்டிருக்கிறார். ஆதலால், அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி, பிராம்மணர்களுக்கு அறுசுவை பதார்த்தங்களுடனே அன்னதானம் பண்ணினால் சகலபாவங்களும் நீங்கும். மேலும், ஒருவரிடத்தில் தானம் வாங்கின தோஷமும் தீரும்படி பெருமாள் கிருபைசெய்வார்.

## அம்பா தீர்த்த மகத்துவம்.

அப்பால் சந்திரபுட்கரிணிக்கு நேர் ஈசானிய மூலையில் கொள்ளிடத்திற்கு வடபாரிசத்தில் அம்பா தீர்த்த மென்றொரு தீர்த்தமுண்டு. அந்தத் தீர்த்தக்கரையில் ஒரு மரத்தைப் பயிர்செய்து அந்த மரத்தின்கீழ் நெடுநாளிருந்து சூரியன் தபசு பண்ணினான். அந்தத் தீர்த்தத்திற்கு ரிஷி வசிஷ்டர். அதற்குத் தேவதை சூரியன். அந்தத் தீர்த்தரட்சகர் விஷ்வக்சேனர். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப் பிராம்மணர்களுக்குப் பூதானம் பண்ணினால் அவர்களுக்குச் சகல பாவமும் நீங்கிவிடும். அல்லாமலும் அவர்களுடைய தாய் தகப்பன் செய்த பாவங்களும் பரிகாரமாகும்படி பெருமாள் கடாட்சஞ்செய்வார்.

அதுவுமல்லாமல் எட்டுத்திக்குகளில் எட்டுத் தீர்த்தங்களும் எட்டு விருட்சங்களு மிருக்கின்றன. இந்தச் சந்திர புஷ்கரிணிதீர்த்த மாத்திரம் மத்தியிலிருக்கின்றது. அதனிடத்தில் ஸ்ரீரங்கநாயகர் விமானரூடராய் ஆதிசேஷசயனத்தில் பள்ளிகொண்டிருக்கிறார். எவனாவது அந்தத் தீர்த்தத்தில் முழுகினாலும், அதைக் கையினாலள்ளிச் சிரசின்மேல் 'ஸ்ரீரங்கா' என்று சொல்லிப்ரோட்சித்துக் கொண்டாலும், அந்தத் தீர்த்தத்தைப் பானம் பண்ணினாலும், அதைத் தரிசித்தாலும், கைகளாற் பரிசித்தாலும், அதன் பெயரை வாக்கினால் வசனித்தாலும், செவிகளால் கேள்விப்பட்டாலும், அவனுக்குச் சகல பாவங்களும் நீங்கிப்போம்.

அல்லாமலும் வேறொரு நாடு நகரங்களுக்குப் போயிருந்து அவ்விடத்திலிருக்கப்பட்ட ஏரிகுளங்களில் முழுகுகிற காலத்திலும் ஒருவன் இந்தச்சந்திரபுஷ்கரிணியின் பே

ரைச்சொல்லி முழுகுவானாகில் அவனுக்கு மேற்சொல்லிய தீர்த்தத்தில் முழுகின பலனை சித்தியாகும். மேலும், முற் கூறிய நவதீர்த்தங்களிலும் ஒருபகல் முப்பது நாழிகைக் குள் ஸ்நானம்பண்ணிப் பிரதட்சண நமஸ்காரங்கள் செய்து, அப்பால் ஸ்ரீரங்கநாயகரையுஞ் சேவை பண்ணுவானாகில் அவனும் அவன் வமிசத்தில்பிறந்த இருபத்தொரு தலை முறையிலுள்ளவர்களும், அவனுக்குப் பின் முப்பது தலை முறைகளில் வரும் புத்திரர் மித்திரர்களும் ஸ்ரீரங்கநாயக ருடைய கிருபாகடாட்ச வீட்சண்யத்தினால் பரமபதவாசிக ளாவார்கள். மேலும் அந்த ஸ்தலத்தில் ஏகாதசியன்றைக்கு உபவாசமாயிருந்து நவதீர்த்தங்களிலு முழுகிப் பிரதட்சண நமஸ்காரங்கள் பண்ணி, ஸ்ரீரங்கவிமானத்தையும் பரமபாக வதர்களையுஞ் சேவித்து, அன்று இரவு முழுதும் கண்ணு றங்காமலிருந்து, மறுநாள் உதயகாலத்திலும் முற்சொல்லிய தீர்த்தங்களில் முழுகி ஸ்ரீரங்கநாயகருடைய சேவை செய் துகொண்டு பிற்பாடு அந்த ஸ்தலத்திலேயே பாரணைபண் ணினால் அவனும் அவன் வமிசத்திலுள்ளவர்களும் வைகுந் தத்தில் நித்திய சூரிகளாக வாழ்ந்திருப்பார்கள்.

அல்லாமலும் அமாவாசை பவுர்ணமி முதலான புண் ணிய திதிகளில் ஸ்நான சந்தியாவந்தனங்கள் முடித்துக் கொண்டு பரிசுத்தனாயிருந்து இந்தச் சரித்திரத்தைப் படித் தவர்களுக்கும் கேட்டவர்களுக்கும் பெருமாள் அஷ்ட ஐசு வரியமும் ஆயிராரோக்கியமுங் கொடுத்து இரட்சித்தருளு வார். அவர்களுக்கு யாகாதிகிருத்தியங்கள் பண்ணின பல னுங் கிடைக்கும் என்று நாரதமுனிவருக்குப் பரமசிவன் திருவுளம்பற்றியருளினார்.

---

## ஸ்ரீரங்கத்தின் தற்கால ஸ்திதி

சென்னை ராஜதானியைச் சார்ந்த திரிச்சிராப்பள்ளிக் குச் சுமார் பன்னிரண்டு மைல் தூரத்தில் ஓடும் காவிரிக்கு அகண்ட காவிரி என்று பெயர். அவ்விடத்தில் காவிரி ஏறக் குறைய 1200 அடிகள் அகலமிருப்பதால் அது இரண்டு கிளைகளாகப் பிரிந்து ஒன்று கொள்ளிடமென்றும், ஒன்று காவிரியென்றும் பெயர்பெற்றுப் பாய்ந்து மறுபடியும் சுமார் பத்து மைல்கள் தூரத்தில் ஒன்றாகச் சேருகின்றது. இதற்கு மத்தியில் இருக்கும் மணல்மேட்டிற்குப் பூலோக

சாஸ்திரப்படி (இரண்டு நதிகளால் சூழப்பட்ட இடத்திற்கு) அரங்கம் என்கிற பெயராதலால், இப்படிக் கொள்ளிடம் காவிரிக்கு மத்தியிலிருக்கும் அரங்கம் ஸ்ரீவிஷ்ணு க்ஷேத்ரமாகையால் ஸ்ரீரங்கம் என்கிற பெயர் பெற்றது.

இந்த ஸ்ரீரங்கம் திரிசிராப்பள்ளிக்குச் சுமார் இரண்டு மைல்கள் தூரத்தி விருக்கிறது. இடையில் ஓடும் காவிரி நதியைக் கடந்துபோக 1849 ௵ சுமார் லக்ஷம் ரூபாய் செலவில் 49 அடிகள் அகலமும், 12½ அடிகள் உயரமுமுள்ள கண்களுடனும், 1936 அடிகள் நீளத்துடன் 25 அடிகள் விஸ்தீரணமுமுள்ள ரோட்டுடன் ஒரு செங்கல் பாலம் கட்டப்பட்டிருக்கிறது. இதே மாதிரியாகவே கொள்ளிட நதியைக் கடந்துவர 1852 ௵ 60 அடிகள் அகலமும், 12 அடிகள் உயரமும், 2685 அடிகள் அல்லது சுமார் அரை மைல் நீளத்துடனும், 26 அடிகள் விஸ்தீரணமான ரோட்டுடனும் சுமார் ஒன்றரைலக்ஷம் ரூபாய் செலவில் ஒருபாலம் கட்டப்பட்டிருக்கிறது. இப்படி இந்த இரண்டு நதிகளுக்கிடையிலிருக்கும் மணல்திட்டில் இந்த ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தை எப்போது யாவரால் கட்டப்பட்டதென்று தெரிவிக்கும் சரியான சரித்திர மகப்படவில்லை. புராணரீதியாக விசாரிக்கையில் இந்த ஸ்ரீரங்க விமானம் க்ஷீராப்தியில் பிரணவாகாரமாக இருந்து பிரம்மாவின் ஆராதனையில் இருந்ததாகவும், பிறகு சூரியவம்ச இக்ஷ்வாகு மஹாராஜாவின் ஆராதனையில் அயோத்தியி லிருந்ததாகவும், பிறகு இராமபிரான் வசமாகி, அவர் விபீஷணருக்குக் கொடுக்க, இவர் இலங்கைக்குக் கொண்டுவரும்போது இந்தக் கொள்ளிடம் காவிரிக்கு இடையிலுள்ள மண்திட்டில் வைத்தெடுத்து ங்கப்போக அந்த விமானம் இவ்விடத்திலேயே நிலைபெற்றதாகவும் சொல்லுகிறார்கள்.

## ஸ்ரீரங்க விமானம்.

இப்போது இந்த ஸ்ரீரங்க விமானத்திற்குள் அரங்கநாதர் ஆதிசேடன்மேல் பள்ளிகொண்டிருக்கிறார். அருகில் லக்ஷ்மிதேவி யிருப்பதுடன் வாசற்படியின் இருபுரங்களிலும் ஜெயவிஜயர்களும், தலைப்பக்கம் துதிக்கையாழ்வானும், தாள்பக்கம் துர்க்கையும், அரங்கர் சிரசிற்கும் பாதத்திற்கும் இடையில் ரக்ஷாபதி காயத்திரியும், உச்சியில் நான்மறைகளும்-தங்கக் கலசமும் இருப்பதன்றியில், உற்ச

வர், நாய்ச்சியார்கள், பரவாசுதேவர், அழகர் முதலான தேவர் விக்கிரகங்க ளிருக்கின்றன.

### முதல் பிராகாரம்.

இந்தப் பிராகார சுவர்களில் பதிந்து கிடக்கும் எழுத்துக்களினாலும் வேறு சிலாசாசனங்களினாலும் இந்த விமானத்தைச் சுற்றியிருக்கும் பிராகாரங்களைக் கட்டிவைத்தவர்கள் இன்னவர்களென்று தெரியவருகிறபடியால் அவர்களைப் பற்றி இதனடியில் சங்கிரகமாகக் காட்டுகிறோம்.

இந்த ஸ்ரீரங்க விமானத்தைச் சுற்றியிருக்கும் முதல் பிராகாரம் தர்மவர்மா சோழன் கட்டினது. இது 240 அடிகள் நீளமும், 181 அடிகள் அகலமு முள்ளது. இந்தப் பிராகாரத்துக்குள் மேல்நாராயணன், கீழ்நாராயணன், சேஷன், நரசிம்மன் முதலான தேவ விக்கிரகங்க ளிருக்கின்றன.

### இரண்டாம் பிராகாரம்.

இது இராஜமஹேந்த்ரசோழன் கட்டினது. இது 426 அடிகள் நீளமும், 295 அடிகள் அகலமு முள்ளது. இந்தப் பிராகாரத்துக்குள் போஜன், விஜயன், பொக்கிஷச்சாலை, யாகசாலை, மண்டபம், துலுக்க நாய்ச்சியார், சீதை, சேனாபதியார், ஸ்ரீநிவாசர், சங்கநிதி, பதுமநிதி, கிருஷ்ணர், தனலக்ஷ்மி முதலான கட்டடம் தேவ விக்கிரகங்க ளிருக்கின்றன.

### மூன்றாம் பிராகாரம்.

இது குலசேகர் கட்டினது; 767 அடி நீளமும், 503 அடிகள் அகலமு முள்ளது. இதற்குள் தங்க ஜயஸ்தம்பம், மடப்பள்ளி, அயக்கிரீவன், தசமூர்த்திகள், சரஸ்வதி, துரை மண்டபம், பரமபதவாசல் முதலானவைக ளிருக்கின்றன.

### நான்காம் பிராகாரம்.

இது திருமங்கையாழ்வார் கட்டினது. 1235 அடிகள் நீளமும், 849 அடிகள் அகலமு முள்ளது. இந்தப் பிராகாரத்திற்குள் வேதபடனசாலை, சந்திரபுஷ்கரிணி, கருடமண்டபம், திருமங்கையார், மதுரகவிகள், நம்மாழ்வார் மேல் பட்டாபிராமன், கீழ்பட்டாபிராமன், தான்யலக்ஷ்மி, பேய்-பூதம்-பொய்கை ஆழ்வார்கள், பரமபதநாதன், தீர்த்த

வாசர், வியாசர், இராமர், குலசேகரர், திருமங்கையாழ்வார் முதலான விக்கிரகங்களும் இடங்களு மிருக்கின்றன.

## ஐந்தாம் பிராகாரம்.

இது சோழேந்த்ரசிங்கன் என்னும் சுந்தரபாண்டியன் கட்டியது. இது 1653 அடிகள் நீளமும், 1270 அடிகள் அகலமு முள்ளது. இந்தப் பிராகாரத்துக்குள், அரங்கவிலாசம், கடைகள், உள்ளாண்டாள் சந்நிதி, நாதமுனி, பெரியாழ்வார், வாகனமண்டபம், அமிர்த கருடன், சக்கரத்தாழ்வான், சிங்கார உள்தோப்பு, வசந்த மண்டபம், ஸ்ரீ ரங்கநாய்ச்சியார், மேட்டழகு சிங்கர், வேதாந்ததேசிகர், வெங்கடேசர், வெள்ளைக் கோபுரம் சுமார் 450 அடிகள் நீளமும், 130 அடிகள் அகலமும்-12 அடிகள் உயரமுமுள்ள 940 கம்பங்க ளுள்ளதும்: 450 அடிகள் நீளமும்-130 அடிகள் அகலமுமுள்ள மண்டபம், சேஷராயன் மண்டபம், இராமர், பிள்ளைலோகாசாரியர், பார்த்தசாரதி, உடையவர், முதலியாண்டான், தொண்டரடிப்பொடியாழ்வார், பட்டர், விட்டல கிருஷ்ணர் முதலான விக்கிரகசன்னதிக ளிருக்கின்றன.

## ஆறும் பிராகாரம்.

இது திரிவிக்கிரமசோழன் கட்டினது. இது 2108 அடிகள் நீளமும், 1846 அடிகள் அகலமு முள்ளது. இதற்குள் அநேக விக்கிரக ஸ்தலங்களும், 211 மாடமாளிகை வீடுகளும், 17 கடைகளும் இருக்கின்றன.

## ஏழாம் பிராகாரம்.

இது கலியுகராமன் கட்டினது. இது சுமார் 21 அடிகள் உயரமும், 6 அடிகள் கனதியுமுள்ள சுவர்களால் 3072 அடிகள் நீளமும், 2521 அடிகள் அகலமுமுள்ளது. இதிலும் சில கோயில்களும், விக்கிரகங்களும், 720 வீடுகளும், 80 கடைகளும் இருக்கின்றன.

## எட்டாம் பிராகாரம்.

இது விஜயரங்க சொக்கநாத நாயுடு கட்டினது. இதன் சுற்றளவு நான்குமைல்கள். இதிலும் முனியன், வெளியாண்டாள் முதலான சில விக்கிரக கோயில்களும், 1000வீடுகளும், அநேக கடைகளும் இருக்கின்றன. இவைகளில் முதல் மூன் பிராகாரங்களில் கோயில்களும், நான்கு ஐந்து

ஆறுவது பிராகாரங்களில் மடாதிபதிகளுடைய மாளிகைக ளும், மற்ற பிராம்மணர் வீடுகளும், ஏழு எட்டு இப்பிராகா ரங்களில் மற்ற ஜாதியார் வீடுகளும் கடைகளும் இருக் கின்றன. இப்படி சப்த பிராகாரங்களால் சூழப்பட்ட அர ணுன கோட்டைக் கொப்பான இந்தத் திவ்விய க்ஷேத்திரத் திற்கு நான்கு பக்கங்களில் விஸ்தீரணமும் உயரமுமான கோபுர வாசல்க ளிருக்கின்றன.

இந்த க்ஷேத்திரத்தி லிருக்கும் இருபத்தொரு கோபு ரங்களில் தாமோதர கோபுரம், 146½ அடிகள் உயரமுள்ள வெள்ளைகோபுரம் முதலான பதினைந்து கோபுரங்கள் பெரி யவைகளாக இருக்கினும் கட்டியும் கட்டாமலும் விட்டிருக் கும் இராயர்கோபுரமே சிறந்ததென்று சொல்லலாம். இது 130 அடிகள் அகலமும், 100 அடிகள் ஆழமும், 21½ அடி கள் விஸ்தீரணமுமுள்ள இடைவழியும், 43 அடிகள் உயரமு முடையது. இதற்கு மேலே பரவியிருக்கும் கற்கள் 24 அடி கள் நீளமுள்ளன. இந்தக் கோபுரத்தின் தற்காலத்திய உய ரம் 200 அடிகள். இது கட்டி முடிந்தால் 300 அடிகளுக்கு மேல் உயரும். இவ்வளவு விநோதமாக அமைக்கப்பட்ட இந்த க்ஷேத்திரம் கிழ்மேலாக 2550 அடிகள் நீளமும், தென்வடலாக 3009 அடிகள் அகலமு முள்ளது. ஒலகாலத் தில் காவிரிநதியானது இந்த க்ஷேத்திரத்துக்கு அதிக சமீ பத்தில் ஓடி எக்கலடித்துப் பிரவாக காலங்களில் கோயிலுக் குள்ளும் ஜலம் பிரவேசித்ததால் நாளாவட்டத்தில் நாணற் படுகை வளர்ந்து நதியைத் தூரத்தில் ஒதுக்கிவிட்டதாகத் தோன்றுகிறது. இந்த க்ஷேத்திரத்தைச் சுற்றியும் வில்வ தீர்த்தம், ஜம்பு தீர்த்தம், அஸ்வனி தீர்த்தம, புன்னாக தீர்த் தம், வகுள தீர்த்தம், பலாசு தீர்த்தம், கடம்ப தீர்த்தம், அம்ப: தீர்த்தம் முதலானவைகளிருக்கின்றன. இவைகளைத் தக்கபடி உபயோகப்படுத்திச் செப்பனிடாமையால் இவை சீர்கெட்டுக் கிடக்கின்றன.

---

## இந்த ஸ்ரீரங்கத்தில் வருஷ, மாச, வார, திதிகளில் நடக்கும் உத்சவ விநோதங்கள்.

### ௸தைமாதம்.

ஸ்ரீராமர் செய்தருளிய பத்துநாள் உத்ஸவம்:—முதல் நாள் உபயநாச்சியார்களுடன் அரங்கன் 'அழகிய பூமி சப்ப

ரத்தில் வீதியில் வருதல். யாகசாலையில் திருமஞ்சனம் செய்த தல். அதற்காக வெள்ளிப் பாத்திரங்களில் வெந்நீரில் சந்தனம் கரைத்துச் செய்வித்தல். இரண்டாம்நாள் காலை சூரிய பிரபை; இரவில் அம்சவாஹன மேறிவரல்; கண்ணாடியறைச்சேவை. மூன்றாம்நாள்காலையில் சிங்கவாகனமீதிலும், இரவில் யாளிவாஹனத்திலும் பூச்சக்கரக்குடைகள் நான்குடன் வருதல். நான்காம்நாள் காலையில் சந்திர பிரபையிலும், இரவில் கருடவாஹனத்தின் மீது முத்துப்பாகை தரித்தும் வருதல். ஐந்தாம்நாள் காலையில் சேஷவாகனத்திலும் இரவில் பாண்டியன் கொண்டையுடனும் கத்திகடாரியுடனும் அநுமந்தவாஹனமேறிவருதல். ஆறாம் நாள் காலையில் கற்பக விருக்ஷத்திலும், அன்றிரவு ஆணிமுத்துத் தலைப்பாகை தரித்து வெள்ளியானை வாகனத்தில் 100 பேரிழுத்து வருதல்: ஏழாம்நாள் காலை உபயநாய்ச்சிமார்களுடன் இரத்தின கிரீடம் முத்துக்கோர்வை சட்டையுடன் பூந்தேரினில் வந்து நெல்லளவுபார்த்து, தாயார்சந்நிதியில் மூவரும் திருமஞ்சனமாடி பெரியகோயிலில் வருதல். எட்டாம்நாள் காலையில் பல்லக்கில் எழுந்தருளி மண்டபம் வரல். இரவில் குதிரைவாகன மேறிக் கோணக்கோணலாக வையாளி போட்டுக்கொண்டு வருதல். எட்டாம் நாள் இரவில் கண்ணாடியறையில் ஏகாந்தமாகத் திருமஞ்சனமாடிப் பெருமாள் திருத்தோழிகையிலும், நாய்ச்சியார் இருவரும் இரண்டு பல்லக்குகளிலும் வந்து, மூவரும் தேரேறி உத்திரவீதி வருதல். அன்றிரவு பட்டர் முதலானவர்களுக்கு மரியாதைகள் செய்யப்பட்டு நாய்ச்சியார் சந்நிதிக்கு வருதல். பத்தாம்நாள் சந்தன மண்டபத்தில் மஞ்சனமாடி சத்தாவரணமென்னும் பூஞ்சப்பிரத்துடன் வீதிவலம் வருதல். பதினோராம்நாள் பகலில் விஜயரங்க சொக்கலிங்கநாயக்கர் மண்டபத்தில் விடாயாற்றிக்கொண்டு இரவில் பல்லக்கில் வருதல்.

### மாசிமாதம்.

### ஸ்ரீரங்க நாராயண ஜீயர் சுவாமிகள் செய்தருளிய திருத்தெப்ப உத்ஸவம்.

முதல் நாளில் ஹம்ஸ உற்சவம் இரண்டாம் நாள் முதல் ஆறுநாள் வரையில் பகலில் பல்லக்கிலேறி வலம் வருதல். இராக்காலங்களில் ஹம்ஸாதி வாஹனமேறி வரு

தல் 7-ம் நாள் நெல் அளவுபார்த்து, எட்டாம்நாள் தெப்ப மாடல். ஒன்பதாம் நாள் தெப்பமாடிய குளத்தின் மண்டபத்தமர்ந்து அன்று இரவு சூரியபிரபை வாகனமேறி சித்திரை வீதியில் வருதல்.

## பங்குனிமாதம்.

முதல்நாள் பகலில் திருக்கொடியேறி, அன்றிரவு நாச்சிமார்களுடன் பூஞ்சப்பிரத்தில் வீதிவலம் வந்து யாக சாலையில் மஞ்சனமாடி யாத்திராதானம் செய்து கண்ணாடியறையிலமர்ந்தும், இரண்டாம்நாள் காலையில் தோழிகைமீது மண்டபம் வந்து, அன்றிரவு கண்ணாடியறையிலமர்ந்து உடனே பல்லக்கிலேறி ஜீயர்புரத்தில் அம்மையார் தண்ணீர்ப் பந்தல் மண்டபத்துக்குப் போதல். மூன்றாம்நாள் பகலில் ஜீயர் புரமண்டபத்திலிருந்து பல்லக்கில் ஸ்ரீரங்கம் வருதல். நான்காம்நாள் வெள்ளி கருடவாஹனமேறி வருதல். அன்று இரவு உரையூர் நாச்சியாருக்குத் தன் விருகையைக் காட்டத் திருமாலை கஸ்தூரி சந்தனாதிகளை அனுப்பல். உரையூரை அலங்கரித்தல். அரங்கர் வீதிவலம்வந்து நாய்ச்சியார் கோயிலிலமர்ந்து ஆறும்நாளிரவு நாய்ச்சியார் கொடுத்த புஷ்பப் பல்லக்கில் ஏறி, சூடிக்கொடுத்த நாய்ச்சியார் திருமாலையை யணிந்து கண்ணாடியறைக்கு வந்து ஏழாம்நாள் பகல் முழுதுமிருந்து, மாலையில் உபயநாய்ச்சிமார்களுடன் நெல்லளவு பார்த்து, பூந்தேருடன் வீதிவலம்வந்து கண்ணாடியறையிலமர்தல். எட்டாம்நாள் காலையில் பல்லக்கில் எல்லைக்கரை மண்டபத்தில் வந்து அன்றிரவு குதிரைவாகனமேறிக் கோரத்தடியில் வையாளிபோட்டு ஸ்ரீரங்கம் வருதல். ஒன்பதாம் நாள் பல்லக்கில் ஏறி உத்திரவீதி சித்திரைவீதி மாளிகைகளில் காணிக்கை வாங்கிக்கொண்டு நாய்ச்சியார் சந்நிதிக்கு வருதல். அங்கு உள்ளே வரவொட்டாமல் கதவுகளை மூடிக்கொள்ள, நம்மாழ்வாரையும் அரையரையும் அனுப்ப, நாய்ச்சியார் பண்டாரிகளை யனுப்ப, வாக்குவாதமும் மட்டையடி உத்ஸவம் நடத்தல். பிறகு நாய்ச்சியாரிடம் போகவில்லையென்று சத்தியம் செய்ய உள்ளே வரச்செய்யல்; இதற்குப் பங்குனி உத்திரமென்று பெயர். பத்தாம்நாள் உதயத்தில் பெருமாள் ரதத்தின்மேல் வருதல். அன்றிரவு திருமஞ்சனமாடிச் சத்தாபரணமென்னும் சப்பரத்தில்வந்து நாய்ச்சியார் சந்நிதியில் மங்களம் கொண்டு, உடையவர் சந்நிதியில் இளநீரமுதுசெய்து கொடியேறிய ஸ்தம்பத்தின் படிப்புக்

கேட்டு, திருவரங்கமாளிகையாரை அமுது செய்வித்தல். பதினோராம்நாள் விடாயாற்றிக்கொண்டு ஆளும் பல்லக்கிலேறி வீதிவலம் வருதல்.

## சித்திரை மாதம்.

சுக்கிலபக்ஷத்தில் கோடை உற்சவம் பத்துநாளும் விஜயரங்க சொக்கநாத நாயக்கருடையது.

சித்ராபவுர்ணமி உத்ஸவம். கஜேந்திர மோக்ஷத்துக்கா கக்காவேரிக்கு வருதல். அம்மாமண்டபத்தில் தங்கல். சித்திரைத்தேர் முன் தை மாதத்தில் நடந்தபிரகாரம் நடத்தல். ஒன்றுமுதல் ஆறு நாள்களில் காலை இரவுகளில் வாகனங்களிலேறி வலம்வர ஏழாம்நாள் பூஞ்சப்பரத்தில் வந்து நாச்சியார் சந்நிதியில் திருமஞ்சனமாடல். கண்ணாடியறைச்சேர்வை. எட்டாம் நாள் காலையில் வெள்ளிக்குதிரை வண்டியூர் சப்பிரத்துடன் வந்து, அன்றிரவு தங்கக்குதிரையேறித் தேரடியில் வையாளிபோட்டு வருதல். பிறகு மறுநாள் ரத உற்சவம், சந்திரபுஷ்கரணி தீர்த்தம். ரேவதிமண்டபம். பத்தாம் நாள் கொடியிறக்கல்.

## வைகாசிமாதம்.

### வசந்த உத்சவம்.

உள் தோட்டத்தில் ஊஞ்சற் பலகையில் பெருமாள் நாச்சியார்களை வைத்து ஷடி வெளியில் தாசிகள் விநோதமாகப் பாடிக் கோலாட்டம்போடல் முதலானவைகளாம்.

## ஆனிமாதம்.

### ஜேஷ்டாபிஷேக உத்சவம்.

யானையின்மேல் தங்கக்குடத்தில் திருமஞ்ஞனஜலம் கொண்டுவந்து ஆயிரங்குடம் தீர்த்தமாக அபிஷேகம் செய்வித்தல்.

## ஆடிமாதம்.

அரங்கர் காவேரிக்கு மரியாதைசெய்யப் பல்லக்கிலெழுந்தருளிக் காவேரிமண்டபம் வருதல். அவ்விடம் சூடிக்கொடுத்தாள் மாலையைத் தரித்து அதை நாய்ச்சியார் தரிக்கக் கொடுத்தல். தாசிகள் பின்னல் கோலாட்டம் ஆடுதல்.

## ஆவணி மாதம்.

### ஸ்ரீ கிருஷ்ணஜெயந்தி.

ஸ்ரீ பண்டாரத்திலேறி மஞ்சனமாடுதல். அன்றிரவு கிருஷ்ணாவதாரம், அபிஷேகம், பலவித பலகாரப்படையல், சித்திரைவீதியில் உரியடி உற்சவம்.

### திருபவுத்திர உத்சவம் ஒன்பதுநாள்.

முதல்நாள் யாகசாலைக்கு வந்து திருமஞ்சனமாடல். தோழிலேறி மண்டபம் வருதல்.

## புரட்டாசி மாதம்.

### நவராத்திரி கொலுவு.

நாச்சியார் அலங்கரித்துக்கொண்டு மண்டபத்தில்வந்து எட்டுநாள்கள் கொலுவிருத்தல். ஒன்பதாம்நாள் திருமஞ்சனம். பத்தாம்நாள் காலையில் ரங்கர் மண்டபம்வந்து அன்று மாலை குதிரையேறி அம்புபோடல். பிறகு நாச்சிமார்களுடன் அமுதுபாறையில் திருமஞ்சனமாடி உள்ளே விநோதமாகப் போதல்.

## ஐப்பசி மாதம்.

அரங்கர் நாய்ச்சியார்களுடன் ஊஞ்சல் மண்டபத்தில் ஒன்பது நாள்கள் ஊஞ்சலாடிக் கடைசி நாளில் சந்திர புஷ்கரணி தீர்த்தம் கொடுத்து ஷெ மண்டபத்தில் திருமஞ்சனமாடல்.

## கார்த்திகைமாதம்.

### கவுசிக ஏகாதசியில் அரங்கர் அர்ச்சுனமண்டபத்துக்கு வருதல்.

பட்டர் புராணம் வாசித்தல். 360 பச்சடம் போர் 360 கர்ப்பூரமும் பச்சைக்கற்பூரமும் படியேற்றமும். மறுநாள் துவாதசியில் பிரம்மரதமரியாதை செய்தல். அரங்கர் திருச்சிக்கு வருதல். சந்தனுமண்டபத்தி லமர்ந்து நம்மாழ்வாருக்கு ஸ்ரீமுகம் எழுதியனுப்பல். கணக்குப்பிள்ளைக்கு அர்ச்சகர் உரைத்தல்; அரங்காசாரியருக்கு மரியாதை செய்து, கணக்குப்பிள்ளைக்கு யானையேற்ற மரியாதை செய்தல்.

## மார்கழி மாதம்.

இந்தமாதம் பகல்பத்தின், முதல்நாள் இரவில் நம்மாழ்வாரறையர் எழுந்து பெருமாள் சந்நிதியின் நேரே திரு

நெடுந்தாண்டகம் ஓதித் தாளம்போட்டு நடித்தல். பிறகு ஒன்பதுநாள்களும் வரையில் வெள்ளித் தோழிகைமேலேறி வருதல். பத்தாம் நாள் இரவில் மோகினிவேஷம் தரித்து வந்து திருவேந்திக் காப்புச் செய்தல்.

இராப்பத்தென்னும் கொட்டகை உத்சவம் பத்துநாள் நடந்தபிறகு ஆழ்வார்களுக்கு மரியாதை செய்தல். ஆயிரக் கால் மண்டபத்தில் திருவேந்திக்காப்புச் செய்தல் அறையர் பாடல். கொட்டகையில் பத்தி உலாவல். பிறகு அரங்கத்துள்ளே வீணைவாத்தியத்துடன் ஏகாந்தசேவை. ஏழாம் நாள் உற்சவத்தில், நம்மாழ்வார் மோகினிவேஷம் தரித்து பெருமாள் முன்வருதல். திருக்கையில் சேவை. எட்டாம் நாள் குதிரை சவாரி வருதல். கள்ளாழ்வார் என்னும் திருமங்கையாழ்வார் திருடவந்து பெருமாள் கால்விரலில் போட்டிருந்த பசும்பொன் மிஞ்சிக்காய்ப் பாதங்களைத்தொட பரமஞானம்பெறுதல். பத்தாம்நாள் பெருமாள் பரமபத வாசல் வழியே சந்திரபுஷ்கரிணியின்முன் நிற்க, செல்வர் வந்து புஷ்கரிணிதீர்த்தம் கொடுத்து உள்ளே செல்லல். பெருமாள் கொட்டகையில் வந்து உலாவி மண்டபத்தையடைந்து பட்டருக்கு பிரம்மரத மரியாதை செய்தல். திருமஞ்சனமாட்டி நம்மாழ்வாருக்கு மோக்ஷம் கொடுத்தல். கொட்டகையில் படிப்புக் கேட்டு அறையர் சேவையுடன் கோயிலுக்குட் புகுதல். அறையருக்குப் பிரம்மரத மரியாதை செய்வித்தல். மகரமாச பிரவேசத்தில் திருப்பாவை சாற்றுமுறை. மாட்டுப்பொங்கல் தினம் பெருமாள் குதிரை வாஹனத்தின் மீது ஏறி பரிவேட்டையாடுதல். திருவேந்திக் காப்பு முதலானவைகளும் இன்னும் சில உற்சவங்களுமுண்டு.

இவ்வுற்சவாதிகளின் செலவுக்காகத் தொன்றுதொட்டு அநேக மானிய பூமிகளும் விடப்பட்டிருப்பதோடு திரவியங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்த க்ஷேத்திரத்துக்கு அநேக தருமவான்களால் உபயமாக விடப்பட்டும் செய்யப்பட்டும் வருகின்றவைகளன்றியில் சர்க்கார் தரப்பில்மாத்திரம் பிரதிவருஷம் ஒன்றுக்கு ஏறக்குறைய (70,000) எழுபதினாயிரம் ரூபாய் வரையில் செலவாகி வருகின்றன. அந்த எழுபதினாயிரம் ரூபாய் வரவின் விவரத்தையும், செலவின் விவரத்தையும் பற்றி ஷை தேவஸ்தான தருமகர்த்தர்களும் கமிட்டி மெம்பர்களும் 1277-ம் பசலி முதல் 1286-ம் பசலி வரையில் ஏற்பட்ட

பத்து வருஷங்களின் சராசரி வரவுசெலவு கணக்கு விவரத்தைப்பற்றி ரிபோர்ட்டு புத்தகம் பதிப்பிக்கின்றனர்.

---

## ஸ்ரீரங்கம் கொள்ளிட நதிக்கரையில் திருமங்கைமன்னன் படுகையிற் செய்த பிரார்த்தனை.

'ஓ மங்காத புகழ்பெற்றோங்கும் மங்கள நிகேதனனே! ஸ்ரீரங்கக்ஷேத்திர மென்னும் இந்தத் திவ்ய தேசத்திற்கு அருகிலோடும் இக் கொள்ளிட நதியும் இதன் மற்றொரு கிளையாகிய காவேரிநதியும் சூழ்ந்த இத்தலத்தின் காக்ஷியை என்னென்று சொல்லவல்லேன். இந்நகரின் நாலா பக்கங்களிலும் சிறந்த கோயில்களும், கோபுரங்களும், மதில்களும், மாடமாளிகைகளும் சிற்பாலங்கார சிங்கார அமைப்பாகப் பிரகாசிக்கின்றன. இம் மாட மாளிகைகளில் வசிக்கும் வைணவர்கள் சுறுசுறுப்பாக ஸ்நானம் பானம் சந்தியாவந்தனம் செய்து திருநாமமிட்டு வேதகீதங்களைப் பாடிக்கொண்டு இக் கோயிலுக்குள்போகும் விந்தை என்னே! அநேக மைல்கள் தூரங்களிலிருந்து லக்ஷக்கணக்கான ஜனங்கள் இங்கு நடக்கும் வைகுண்ட ஏகாதசி உற்சவத்திற்கு வந்து காவேரி கொள்ளிட நதிகளில் ஸ்நானம் செய்து திருநாம கோலத்துடன் அந்நதிகளின் ஓரங்களிலும் அவைகளையடுத்த மா, பலா, தென்னை, கமுகு, அசோக முதலான விருக்ஷங்களாலும், பற்பலவித புஷ்பச் செடிகளாலும் நிறைந்து; கிளி, கோகிலம், நாகணவாய்ப் பக்ஷிகளால் இரமணீயமாகப் பாடும் கீதங்களாற் கம்பீரம் பெற்ற வனங்களிலும் தோப்புகளிலும் தோட்டங்களிலும் நின்றும் திரிந்தும் ஸ்ரீரங்கா என்று பாடிக்கொண்டும் பெருங் கோயிலுக்குள் பிரவேசித்து பக்தி சிரத்தையுடன் பூஜித்து வரும் பெருமையென்னே! இப்படிப்பட்ட ஸ்தலத்தி லன்புள்ள பெற்றனும், ஆசாரியர்களும் வந்து அங்கம் புளகிக்கப்ஆழ்வார்னர். இப்படிப்பட்ட திவ்விய ஸ்தலத்திற்கு வந்து நின்னைத் தரிசிக்கவும் துதிக்கவும் பாக்யம் பெற்றேன். அடியேனைக் கடாக்ஷித்தருளுமாறு பிரார்த்திக்கின்றேன். ஓம் தத்ஸத்.'.

## சோழநாட்டை ஆண்ட அரசர்களின் உற்பத்தி பெயர் ஆளுகை முதலியவற்றின் சங்கிரகம்.

1902ஆம் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாருக்கு அகப்பட்ட கலிங்கத்துப்பரணி யேட்டை ஆதாரமாகக்கொண்டு ம-ா-ா-ஸ்ரீ வி. கனகசபைப் பிள்ளையவர்கள் (பி.ஏ.,பி.எல்.;) சுபகிருதுஆம் கார்த்திகை, மார்கழி, தை மாதங்களின் செந்தமிழ்ப் பத்திரிகைகளில் பின்வருகிற கருத்தை எழுதியிருக்கிறார்.

ஐயங்கொண்டார்—கலிங்கத்துப்பரணியில், "சுராதிராசன் முதலாக வரும் சோழனு முனாட் சோழமண்டலமமைத்த பிறகேழுலகையு மிராசகேசரிகளா மிருவராணையெனவு மேறுவெம்புலியினாணையென நின்றவருளும்" என்றுதி பாட்டுகளின்படி சோழராஜ்ஜியத்தை முதல்முதல் ஸ்தாபித்தவன் சுராதிராஜனும், அவன் மகன் விஜயாலயன் கி-பி. 830-850ஆம் பிரகாசித்தவனும். அவன் கொடும்பை என்னும் ஏரிக்கரையோரமிருக்கும் கொடும்பாளூர் அரசன் இடங்கழியார்வழியில் தோன்றினவனும். தஞ்சையை ராஜதானியாக்கி, வரகுண பாண்டியனைத் துரத்தியடித்து, திருவிடைமருதூர் சிவாலய மேற்குவாயிற்கோபுரமமைத்தவனும். அவன் காலத்தில் அமோகவர்ஷன் என்னும் மராட்டிய மன்னன் அபிமானம் பெற்ற ஜினசேனன் என்னும் சமணமுனி மஹாபுராணத்தின் முதற்பாகமாகிய ஆதிபுராணத்தை எழுதி முடித்தாராம்.

அந்த விஜயாலயன் காலத்தில் ஆதி சங்கராசாரியர் அப்போது புகழ்பெற்ற சிவஸ்தலங்களாக இருந்த தில்லையையும், திருவிடைமருதூரையும், குடமூக்கு என்னும் கும்பகோணத்தையும் தரிசித்துப்போனாராம். பிறகு,

### ஆதித்தசோழன் கி-பி. 850-880ஆம்.

விஜயாலயன் இறந்தபிறகு, அவன் மகன் ஆதித்தன் தஞ்சையில் சிம்மாசன மேறினான். அவனுக்குக் கோவிராஜகேசரிவர்மன் என்றும், இராஜேந்திரன் என்னும் பெயர்கள் வழங்கிற்றும். அவன் கொங்குநாட்டின்மேற் படை எடுத்துப்போய், அப்போது தலைக்காடு அல்லது தவளனபுரம் ராஜதானியில் அரசுபுரிந்த பிருதுவீபதியின் மகன் சிவமாரனோடு சண்டைசெய்து, சையமலைவரையிலுள்ள கொங்கு

நாட்டைப் பிடித்தும், தஞ்சையைவிட்டு உரையூரைத் தனது ராஜதானி யாக்கிக்கொண்டானும். பிறகு காஞ்சீபுரத்திலிருந்த பல்லவராஜ கோவிஜய நிருபதுங்கவர்மனுடைய மகளை மணம்புரிந்து, பல்லவநாட்டிற்கும் அரசனானானும். பிறகு கொங்குநாட்டில் கொள்ளையடித்த பொருளைக் கொண்டு தில்லையில் கோயில் கூடகோபுரம் மாடமாளிகைகளைக் கட்டி வைத்ததாகத் தக்ஷயாகப்பரணியில் 835,836,837-ம் செய்யுட்களில் "கூடமெடுத்த குளத்தோடு கோபுர மாடமெடுத்த பிரான் மகன்வாழியே"—என ஒட்டக்கூத்தர் பாடி இருக்கிறார். அன்றியும்,

பாலாற்றங்கரையிலே, களந்தை என்னும் ஊரிலே, ஆதித்தீச்சுரம் என்னும் சிவாலயம் எடுப்பித்தானும். பிறகு தனது பகைவனான வல்லான் என்னும் அரசனை செங்குந்தரில் தலைவராகிய பழுவூர் வீரன், பழுவை நாராயணன் கச்சித்தனியன் முதலான 12 பெயர்களைக்கொண்டு ஜயசீலனாகியும், பிறகு திருச்செந்தூரிலிருந்த சுபன் என்னும் செங்குந்தனைத் துணைக்கொண்டும் ஈழநாட்டரசனை வென்றானும்.

செங்குந்தர் குலத்திலுதித்த ஒட்டக்கூத்தர்: ஆதித்தனுடைய சமுக வித்துவனாகவும், அவன் மகன் குலோத்துங்கனுக்கு உபாத்தியாயராகவு மிருந்தார். ஆதித்தனுக்கு மூப்பு அதிகரித்து, தன் மகன் குலோத்துங்கனுக்கு இளவரசு பட்டங்கட்ட உரையூரை அலங்கரித்து அநேக பெருநில குறுநில மன்னர்கள்முன் பட்டாபிஷேகம் செய்த போது, இளவரசன்பேரில் வாழ்த்துக் கவியாக ஒட்டக்கூத்தர் "ஆடும் கடைமணி நாவசை யாம லகிலமெங்கு, நீடுங் குடையைத் தரித்தபிரான்" என்று கூற, இளவரசன் கேட்டு "பாடும் புலவர் புகழொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்—சூடும் குலோத்துங்க சோழனென் றேயென்னைச் சொல்லுவரே." என்று பாடி முடித்தானும்.

இந்த ஒட்டகூத்தரே குலோத்துங்கனுக்குப் பாண்டியன் பெண்ணை விவாகம்செய்விக்கத் தூதுபோன காலத்தில் ஆதித்தன் மறைந்தானும். இந்த ஆதித்தன் காலத்தில்தான் ஸ்ரீ சங்கராசாரியருடைய சீடராகிய தேவேசுரரின் சீடர் சர்வஞாதமன் என்பவர் சம்க்ஷேப சாரீரகம் என்னும் கிரந்தத்தை எழுதினதாகத் தோன்றுகிறது. இதுநிற்க.

சோழர்கள் சந்திரவம்ச க்ஷத்திரியர்கள் என ஹரிவம்சமென்னும் புராணத்திற் சொல்லப்பட்டிருப்பதைப் போலவே, சோழர்களில் முதலரசன் துஷ்யந்தனுடைய பௌத்திரனாகிய ஆசிரதனுடைய புத்திரன் என்று அபிதானகோசத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

சோழர்களுடைய ஆதி உற்பத்தியைப்பற்றிப் பலவருஷங்களாகச் சோதித்து வரும் கவர்ன்மெண்டு சிலாசாஸன பண்டிதர் ஸ்ரீ வெங்கையரவர்கள் சோழர்கள் சூரிய வமிசத்தாரென்றும், அந்த ராஜ்ஜியத்தை முதலில் ஸ்தாபித்தவன் விஜயாலயன் என்றும் (1900ஆு நவம்பர்மீ இந்தியன் ரிவியூ புத்தகத்தில் எழுதியிருக்கிறார். (Vide Pages 504-509 A Page in South Indian History in the Indian Review No. 11, Nov. 1900)

இதற்கு ஓர் ஆதாரமாக 1837-ம் வருஷம் கல்கத்தா ஆசியாடிக் சொசைடி சரித்திர சஞ்சிகை 7-வது புத்தகம் 2-வது பாகம் 123-வது பக்கத்தில்,

"சேர சோழ பாண்டிய நாடுகள் உண்டான இடமானது ஒருகாலத்தில் தண்டகாரணியமென்னும் பெயரால் பயங்கரமான காடாகவும், அதில் புலி சிங்கம் யானை முதலான கொடியமிருகங்களும், இராக்ஷதர்களும் வதிந்து வந்ததாகவும், அப்படிப்பட்ட இடத்திற்கு அயோத்தியாவிலிருந்து ஸ்ரீராமர் தெற்கே வந்தபோது அவருடன் வந்த ஒரு வீரனுக்கு தாயமன்நல்லி என்று பெயரென்றும், அந்தத் தாயமன்நல்லி, ஸ்ரீராமருடைய உத்தரவின்படி காவேரி பாய்ந்து பாயும் திரிசிரபுரமென்னும் இடத்தில் தங்கியிருந்து அங்கிருக்கும் மலையின்மீது தனது பெயர் வழக்குப்படி "தாயமன் நல்லி சுவாமி" என்னும் நாமதேயத்தால் ஒரு சிவஸ்தலத்தை உண்டாக்கிச் சதா சிவபூஜை செய்துகொண்டு வருகையில், அந்தச் சிவபெருமானைத் தரிசிக்க வந்தவர்களுக்கு அனுகூலமாக அங்கிருந்த பயங்கரமான காட்டைக் களைந்து, வாணிகூடங்களையும், வீடுகள் கடைகள் முதலான வசதிகளை யுண்டாக்கியும், அங்குத் தங்கி வியவசாயம் செய்பவர்களுக்கு வேண்டிய கால்வாய் முதலான பாசன வசதிகளை நியமித்து ஆண்டுவந்ததாகவும், பிறகு அவனது முதல் குமாரனாகிய தர்மவர்ம சோழன் ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தின் முதல் பிராகாரத்தைக் கட்டுவித்தும், அநேக தருமங்களைச் செய்தும் ஸ்ரீரங்கத்தை ஒரு

கிராமமாக்கியதாகவும், அவனது 2-வது குமாரனாகிய வெண் சோழன் ஆண்டுவந்தபோது காவேரிநதியினால் வெண்ணூற்றைச் சேர்த்துக் குடித்தன பாசன வசதியை விருத்தியாக்கியதால், அச்சோழனுக்கு வெண்சோழன் என்ற பெயருண்டாகிய தென்றும், பிறகு அச்சோழனுடைய குமாரனாகிய கரிகால சோழன் காவேரி நதியின்மீது பெரிய அணையைக் கட்டுவித்ததாகவும் சொல்லப்பெற்றிருக்கிறது.

இச்சாசனத்தையும் சரியான சாசனமென்றுஎண்ணக்கூடவில்லை. ஏனெனில், திரிசிரபுரமானது ஒருகாலத்தில் பயங்கரமான மூன்று சிரசுகளை உடைய ஒரு ராக்ஷதன் வதிந்தவிடமென்று ஸ்தலபுராணாதிகளால்ஸ்பஷ்டமாகிறது. மேலும், அங்கிருக்கும் தாயுமானசுவாமி என்னும் சிவஸ்தலம் மஹாபுராதனமானதென்றும், அங்கிருக்கும் சிவபெருமான், ஓர் தாயற்றப் பிள்ளைக்குப் பாலைக்கொடுத்துப் பாதுகாத்தபடியால் அந்த மூர்த்திக்கு மாத்ருபுவனேசுவரர் என்று சமஸ்கிருத பாஷையிலும், தாயுமானவர் என்று தமிழிலும் வழங்கிவருகையில், வடதேசத்திலிருந்து வந்து இங்கு குடிபுகுந்த தாயுமான நல்லி என்றவன் பெயர் எப்படி வந்ததோ தெரியவில்லை.

தென்னாட்டிற் சிறந்த தமிழ்ப்பாஷையில் அச்சோழர்கள் வதிந்த காலத்தில் எழுதிய சில ஸ்தலபுராணங்களையும், முக்கியமாகக் கோயிற் புராணம், இரணியவன்மச் சருக்கம் 8, 10, 11, 17, 23, 33, 52, 53,132-கவிகளிலும், மேற்படி புராணம் திருவிழாச் சுருக்கம் 2, 3,4,5,6,7,8,9, 10, 11, 12,13-வது கவிகளிலும், பெரியபுராணம் கூற்றுவ நாயனார் சரித்திரம் 1,2,3,4, 5-வது கவிகளிலும், கலிங்கத்துப்பரணி முதலானவைகளில் சோழர்களுடைய ஆதிசரித்திரம் முதலானவைகள் சொல்லப்பெற்றிருக்கின்றன. எப்படியெனில்,

கவுடேசன் என்னும் கவுடதேசத்தை ஆண்டுவந்த மகாராஜாவுக்குச் சிங்கவர்மன், வேதவர்மன், சுமதி என்ற மூன்று குமாரர்கள் பிறந்ததில், முதற் குமாரனான சிங்கவர்மனுக்குத் தேகத்தில் வெண்குஷ்டம் கண்டு வருந்தியதனால் இனிப் பிறவித் துன்பத்தைச் சகிக்கமுடியாமல், தனது பிதுரார்ஜ்ஜிதமான ராஜ்ஜிய பாரத்தைத் தனது தந்தைக்குப் பிறகு தன் தம்பிமார்களாகிய வேதவர்மா, சுமதி என்பவர்களைப் பரிபாலனம் பண்ணச்சொல்லிவிட்டுத் தான் ஒரு

சன்னியாசியைப்போல வேடந் தரித்து, அப்போது தண்டகாரணியமாக இருந்த தென்னாட்டை நாடிவந்தும், தபோநிதியாகியும், முதலில் ஸ்ரீசைலம் காளாஸ்திரியில் தங்கியும், அங்குள்ள சிவமூர்த்திகளைப் பூசித்தும், பிறகு காஞ்சிபுரத்துக்கேகி அங்குள்ள ஏகாம்பரநாதரைப் பூசித்துப் பிறகு தில்லைவனமாக இருந்த சிதம்பரத்துக்குப் போய் அங்கிருந்த வியாக்கிரபாதரைத் தரிசித்தும், பிறகு அவருடைய உதவியினால் பதஞ்சலி மஹாமுனிவரைத் தரிசித்தும், அவரால் நடேசருடைய அருளைப்பெற்றும், அங்கிருந்த சிவகங்கை என்னும் திவ்விய தடாகத்தில் மூழ்கத் தனது தேகத்திலிருந்த வெண்குஷ்டவியாதி நீங்கிப் பொன்மேனியாக, இரணியவர்மா என்ற மறுபெயரைப் பெற்றும், சதா சிவபக்தியில் மூழ்கி வசித்துவரும்போது தனது தந்தை இறந்த சங்கதியைக்கேட்டுக் கவுடதேசம் போய்த் தானனுபவித்த சுகங்களைச் சொல்லித் தக்க தண்டுதளாதிகளுடனும், திரவியத்துடனும், அங்கிருந்த 3,000 பிரம்மரிஷிகளுடனும் தில்லைவனத்திற்குத் திரும்பிவந்து, அங்கிருந்த பயங்கரமான காட்டைக் களைந்தும், பயங்கர புலிகளைக் கொன்றும், அக்காட்டை நல்ல நாடாக்கியும், அநேக வாவி கூப கூட கோபுரங் கோயில்களையும், தாம் அழைத்துவந்த மூவாயிர பிராம்மண ரிஷிகளாகிய அந்தணர்களுக்கு அழகிய வீடுகளையும், மானியங்களையும் நியமித்தும், அந்த ஸ்தலத்துக்குச் சமீபமாகக் கீழ்புறத்தில் தான் குடியிருக்கப் படைவீடு கட்டிவைத்தும், சபாநாயகர் முதலான விக்கிரகங்களை உண்டாக்கியும், சபாநாயகர் வீற்றிராநின்ற பஞ்சாக்ஷரப்படியின்மீது வியாக்கிரர் பதஞ்சலியார்களால் பட்டாபிஷேகம் பெற்றும், புலிப்பதியாகிய சிதம்பரத்துக்கு அரசனாகியதால் புலிக்கொடியை விருதாகப்பெற்றும், பஞ்சாக்ஷர உருவாகிய திருநீற்றைத் தரித்ததனால் திருநீற்றுச் சோழன் என்ற மற்றொரு சைவப்பெயரையும் பெற்றும், தம் குடிகளிடம் ஐந்தில் ஒருகடமையாக வரிவாங்கிக்கொண்டும், பிரபலமாக ஆண்டுவந்தபிறகு, கூற்றுவநாயனார் என்னும் ஓர் சூத்திரசூரன் புஜபலபராக்கிரமத்தினால் அநேக பெருநில குருநில மன்னர்களை ஜயித்துக்கொண்டு கடைசியாகச் சிதம்பரத்துக்கு வந்து, பஞ்சாக்ஷரப் படியில் சோழனுக்குப் பட்டாபிஷேகம் செய்து கிரீடம் தரிக்கவேண்டுமென்று சொல்ல, அப்போது தில்லை மூவாயிரவர்பார்த்து, இராஜ்ஜிய பரிபாலனத்துக்கு க்ஷத்திரியனாகப்பிறந்தவனே தக்கவனாத

லால் சூத்திரனுக்குத் தகாதெனத் தடுத்துச் சொல்ல, அந்தக் கூற்றுவநாயனார் கோபத்தினால் கொக்கரித்து, அந்தத் தில்லை மூவாயிரவரை வதைக்க எத்தனிக்கையில், அந்தத் தில்லை அந்தணர் சோழனுடைய சகோதரனாகிய சேரனுடைய தேசமாகும் மலையாளத்தில் குடிபுகுந்துவிட, அவர்களை அந்த மலையாளத்தார் பட்டர்கள் என்ற பெயரால் மரியாதையுடன் பாதுகாத்து வருவதாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இந்தச் சரித்திரம் கூடியவரையில் அனுபவத்துக்கும் பொருந்தியிருக்கிறது. அந்தச் சிங்கவர்மன் அல்லது இரணியவர்மனுடைய சந்ததிகளே சோழர்கள் என்று பிரபல பெயர்களைப்பெற்றுப் பித்தர்பரமென்னும் சிதம்பரத்தையும், கொள்ளிடக்கரையில் தீவுகோட்டையையும், திரிசிரபுரம், உரையூர், தஞ்சை, கருவூர், காஞ்சி முதலான இடங்களையும் பிரதான கெடிஸ்தலங்களாகக் கொண்டு ஆண்டு வந்ததாக அநேக சாசனங்களிருக்கின்றன. இது நிற்க.

இப்போது ஆங்கில கவர்ன்மெண்டார் அதிக பொருளையும், புத்தியையும் செலவிட்டுப் புராதனசாசன சரித்திரங்களைத் தேடிக் கண்டுபிடித்து வருகின்றனர். அவர்களால் ஏவப்பட்டுத் தென்னிந்திய சரித்திரசாசனங்களைப் பரிசோதித்து கிரந்தமெழுதிய இராபர்ட்டு சுவேல் சாஸ்திரியாருடைய ஆர்கியாலோஜிகல் சர்வே சரித்திர புத்தகம், 2-வது வாலியம், 154 முதல் 140வது பக்கங்களிலும், மிஸ்டர் எலியட்டு எழுதிய இந்துதேச சரித்திரத்திலும், கனம் யோகஸ் எழுதிச் சேர்த்த சேலம் ஜில்லா சரித்திரம் முதல் வால்யம் 39-வது பக்கத்திலும் அடியிற் கண்ட சோழர்களுடைய பெயர்களும், ஆண்டகாமும் ஒருவாறு குறிக்கப்பெற்றிருக்கின்றன.

**சோழர்களின் பெயர்களும், ஆண்டகாலமும்.**

" விஜயாலயசோழன், கி-பி 855—820; ஆதித்தியவர்மா, 880—905. வீரசோழ நாராயணதேவன், 905—930; ஹரின்ஜயராஜன், மூன்றுமாதம்; தசோதி தியராயன், 930—950; பராந்தகராயன், 950—970; இவிராயன், 970—990; இராஜராஜேந்திரன், 990—995; இராஜேந்திரன், 995—998; கரிகாலசோழன், 950; இராஜராஜசோழன், 1023—1064; வீரசோழன், 1064—1112; விக்கிரமசோழன், 1113—1128; குலோத்துங்கன், 1128—1130; விக்கிரமதேவன், 1135—1146 "என்றும்,

திருத்தணியில் அகப்பட்ட சாசனத்திற்கண்ட சிட்டாவின்படி

கரிகாலசோழன், சக்கரவர்த்தி சோழன், சூடய சோழன், ருசிகசோழன், நாராயணராஜன், யாவதீய சோழன், இராஜராஜசோழன (கி. பி 1023—64) விஜயா தித்தியசோழன், 1079 விக்கிரமாதித்தியசோழன், குலத் துங்கன், 1128 ௵ கங்கைகண்டசோழன், குண்டலசோ ழன், சாரங்கதரன், விக்கிரமசோழன், ஆதொண்டசோழன் இராஜசிங்கசோழன், விப்ரதேவசோழன், 1079 வருஷம் ஆநந்தவர்மன், இராஜேந்திரன், குலத்துங்கன். 11—பராக் கிரமசோழன் என்றும்,

தஞ்சை பிருகதீசுவரர் கோயில் மஹாத்மியத்தின் வம்சாவளியின்படி.

குலத்துங்கன், தேவசோழன், சசிசேகரசோழன், சிவலிங்கன், கரிகாலன், பீமசோழன், இராஜராஜன், வீர மார்த்தாண்டன், கீர்த்திவர்த்தனன், ஜயசோழன், கனகசோ ழன், சுந்தரசோழன், காலாகலசோழன், கலியாணசோ ழன், பாத்திரசோழன் என்றும்,

காஞ்சீபுரத்தில் அகப்பட்ட சாசன சிட்டாவின்படி.

விஜயசோழன், 961 ௵ வினீதக்கியசோழன், 1011 உத்தண்டிசோழன், 1026 சுகுணசோழன், 1067 பிரபா கரசோழன், 1069 குணாகரசோழன், 1091 சுதீமணி சோழன், 1138 ஏகாம்பரசோழன், 1186 மனோஹர சோழன், 1217 கற்பூரராஜாசோழன், 1242—1262 விஜயகாந்தகோபாலன், 1260 இராஜகுமார பங்கப்பசோ ழன், 1260—72 என்றும்,

தில்லை, திரிசிராப்பள்ளி, கரூர் சிட்டாவின்படி.

இரண்மயசோழன், தாயுமானசோழன், தருமவர்ம சோழன் - ஸ்ரீரங்ககோயிலின் உட்பிராகாரம் கட்டுவித்த வன், விஜயாலயன், ஆதித்தசோழன், பாரந்தகன் அல் லது கோபகேசரிவர்மா அல்லது வீரநாராயணன், இரா ஜாதித்தன், கண்டராதித்தன், அரிஞ்ஜயன், இராஜா தித்தன், கண்டராதித்தன், ஆதித்தியவர்மா, மதுராந்த கன், பரகேசரிவர்மா, குலோத்துங்கன், ஜயதரசோழன், விஜயாதித்தன், வீரசோழன், குலோத்துங்கசோழன், ராஜராஜ குலோத்துங்கன், விக்கிரமசோழன், கிருமிகண்ட

சோழன்—ஸ்ரீராமநுஜருக்கு விரோதி, மன்னரைவென்ற ராஜன் 1240 என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கின்றது.

இப்படித் தெரிவித்திருக்கிற சோழர்களுடைய சிட்டாவைப் படிப்பவர்களுக்கு அவர்களுடைய பெயர்களும், காலமும் இடத்திற்கிடம் வித்தியாசம்பெற்றிருத்தல் பிரத்தியக்ஷமாகும். அப்படி வித்தியாசம் பெற்றிருப்பதற்குத் தக்கசாசன சரித்திரங்கள் இன்னும் அகப்படாமையே காரணமாகும்.

இனி அச்சோழர்களுடைய பெயர் இடம் காலம் காரியம்முதலானவைகளைப்பற்றி ஆங்கிலேய சரித்திர சாசனங்களுடைய கருத்துக்களைப்பற்றித் தெரிவிப்பாம்.

மைசூர் சமஸ்தான சரித்திரம் எழுதிய மிஸ்டர் ரைஸ் தமது சரித்திரம் முதம் புத்தகம் 212-வது பக்கத்தில், மைசூருக்குக் கீழ்ப்பக்கத்தில் கி-பி 867 முதல் 927௵ ஆதித்தியவர்மா, இராஜேந்திரசோழனும், 927 முதல் 977௵ வரையில் வீரசோழன் அல்லது நாராயணராஜனும், பிறகு 988௵ முதல் 1023௵ வரையில் தசோத்திபராய சோழனும், பிறகு பாண்டிரிகராயன், ஹரிமலிராயன், தேவராயன், திவியராயன், திரிபுவனன், வீரசோழன் முறையே ஆண்டதாகச் சாசனங்களகப்பட்டதாகத் தெரிவித்திருக்கிறார்.

சேலம்ஜில்லா சரித்திரத்தில் கனம் போகஸ் பாதிரியார்: மேற்படி முதல் புத்தகம் 39-வது பக்கத்தின் முதலில் விஜயாதிசோழனும், கி-பி, 878-ல் விஜயராய ஆதித்தியவர்மனும், பிறகு சிதம்பரத்தில் கனகசபையைக் கட்டுவித்த வீரசோழ நாராயணனும், அச்சோழனுக்கு ஹிரண்ஜயன், தேசோதிதிபன், பிராணதியாகராயன் முதலான குமாரர்கள் பிறக்க, அவர்களில் பிராணதியாகராயன் சேதுராபனுடைய குமாரத்தியை விவாகம் செய்துகொண்டதில் திவியராயனும், இராஜராஜேந்திரராயனும் இராஜேந்திரசோழனும் பிறந்ததாக எழுதியிருக்கிறார்.

தஞ்சையில் நீதிபதிபதியாக இருந்த மிஸ்டர் பர்னல் சாஸ்திரியார் தென்னிந்தியா பாலியோகிராபி புத்தகம் 40 வது பக்கம், முதல் நோட்டில் கி-மு 250-ம் வருஷம் வடக்கே அரசுபுரிந்த அசோக மகாராஜன் காலத்திலே, தெற்கே சோழர்கள் சோடன் என்ற பெயர்களால் பிரபல

மாக ஆண்டதாகவும், கி-பி 950ஸு கரிகாலசோழனும், 1023—1064ஸு இராஜராஜேந்திரனும், 1064-1113ஸு வீரசோழன் அல்லது குலோத்துங்கனும், 1113-1128ஸு விக்கிரமசோழனும், 1335ஸு விக்கிரமாதி சோழனும், அச்சோழர்களில் இராஜராஜேந்திரன், சாலுக்கிய ஜாதியார் குடும்பத்தில் ஒரு பெண்ணை விவாகம் செய்துகொண்டதில் காளிங்கநாடு வெங்கிக்கோட்டையும் சோழராஜ்யத்துடன் சேர்க்கப்பெற்றதாகவும், அச்சோழன்தான் 1059ஸு இலங்கையின்மீது படையெடுத்துப்போய் மகேந்திர ராஜனையும், அவன் மனைவி லோகமகாதேவியையும் பிடித்துச் சிறையில்வைத்துச் சோழநாட்டிலிருந்து ஒரு குருநில மன்னனைத் தருவித்து இலங்கைக்கு அதிபதியாக்கியதாகவும் எழுதி இருப்பதன்றியில்,

1064ஸு குலோத்துங்க சோழன் பாண்டிய நாட்டையும், அதை ஆண்டுவந்த வீரபாண்டியனையும் பிடித்ததோடு காஞ்சீபுரத்தில் அப்போது பிரபலமாக இருந்த பல்லவரை ஜயித்து வசமாக்கினான், அச்சோழனுக்குத் தான் கோபகேசரி, சோழராஜன், வீரராஜேந்திரன் என்று இபெயர்களாம். அவன்காலத்தில் சோழராஜ்யம் துங்கபத்திரா நதிக்கரைவரையில் பரவிப் பிரகாசித்ததாம். அவன் தந்தை ஜயித்த இலங்காபுரிகோட்டையைத் தக்கபடி பாதுகாத்துவந்தாலும், மகேந்திரனுடைய மகனான 26 வயதுள்ள கசியபன் சிலகாலம் காட்டில் வனவாசியாகத் திரிந்துகொண்டிருந்தும், தக்க தண்டு தளாதிகளைத் தேடிக்கொண்டுவந்தும், இலங்கையை யாண்ட சோழனுடைய பிரதிநிதியைத் தாக்கி ஜயித்தும், சிறையில் வைத்திருந்த தாய்தந்தைகளை விடுதலைசெய்தும், தானே செங்கோலைக் கைக்கொண்டு ஆண்டுவர, திடீரென்று மார்புநோய்கண்டு மரணமடையவே, அவன் மந்திரியாகிய லோகேசுவரன் ஆண்டுவர, அவனுக்குப் பிறகு அவன் குமாரன் விஜயபாஹு அரசனாகினான். அவன் சீயம் நாட்டுத் தானாபதியைத் தக்கபடி மரியாதை செய்தும் சோழனுடைய தானாதிபதியைத் தக்கபடி மரியாதை செய்யாமலும் உபேக்ஷையாக இருந்தபடியால், சோழன் தனது நாட்டில் வதிந்துவந்த சிங்களநாட்டு ஸ்தானாதிபதியைப் பிடித்துக் காது மூக்குகளை அறுத்தும், அவமானப்படுத்தியும், இலங்கைநாட்டின்மேல் படை எடுத்துப்போய்த் தாக்க, விஜய

பாகு தக்க தண்டு தளாதிகளோடு வந்து தடுத்துச் சோழனை ஓட்டிவிட்டானும்.

அந்தக் குலோத்துங்கன் 1113ஞு இறந்துவிட, அவனது இரண்டு குமாரர்களில் விக்கிரமசோழன் அரசு செய்யும்போது, சிங்களதேசத்தார் பெரும்படை எடுத்து வந்தும் ஜயித்தார்களில்லை. அந்தக் குலோத்துங்கனுடைய தாசி குமாரனான ஆதண்டசோழன் பல்லவவீரர்களை முறியடித்ததாகத் திருத்தணிகையிலும், நாராயணவனத்திலும் அகப்பட்ட சாசனங்களினால் ஸ்பஷ்டமாகிறது.

கரிகால சோழனுக்குப் பிறகு சக்கரவர்த்தி சோழனும், பிறகு சுதமான், ருசிராமன், நாராயணன் ஆண்டதாகவும்; நாராயணவன சாசனத்தின்படி ஆதண்டன், சுதர்மன், சூரியன், சிரராஜன், நாராயணன் ஆண்டதாகவும் தெரிவிக்கப்பட் டிருக்கிறது.

காளாஸ்திரியி லகப்பட்ட சாசனத்தின்படி, குலோத்துங்கனுக்குச் சாரங்கதரன் என்கிற சகோதரனும், இராஜசோழன் என்னும் குமாரனும் இருந்ததாகவும், அந்தச் சாரங்கதரன் நன்னயப்பட்டரிடம் தெலுங்கு வியாகரணம் வாசித்ததாகவும் அப்பகவி எழுதியிருக்கிறார். இக்குலோத்துங்கன் வங்காளம் வரையில் போனதாகவும் ஒரு சாசனத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

டாக்டர் கால்ட்வேல் சாஸ்திரிக்கு அகப்பட்ட சாசனத்தில், 1023 - 1064 வருஷம் இராஜராஜசோழன் ஒரு சண்டையில் கொல்லப்பட்டதாகவும், பிறகு விஜயாதித்திய சோழன் 15ஞு ஆண்டு, 1079ஞு இறந்ததாகவும், அவன் சகோதரன் விக்கிரமாதித்தியன், சாளுக்கிய குடும்பத்தில் ஒரு பெண்ணை விவாகம் செய்துகொண்டதாகவும், இராஜராஜேந்திர சோழன் மகனாகிய இராஜேந்திரவர்மன் 1079 ஞு சிங்காசனமேறி, லோகமாதாவை விவாகம் செய்துகொண்டு, 1064ஞு முதல் 1113ஞு வரையில் ஆண்டதாகவும், அவன் சகோதரனாகிய கங்கைகொண்டான்சோழன் சுந்தரபாண்டியனுக்குப் பிறகு பாண்டியநாட்டையும் ஆண்டான் என்றும், மற்றொரு சகோதரனாகிய குண்டல சோழன் சாளுக்கிய இராஜ குமாரத்தியாகிய விமலாவதியை விவாகம் செய்துகொள்ள, அவள் வயிற்றில் சாரங்கதரன் பிறந்து மகா வித்வசிகாமணியாகப் பிரகாசிக்க, அவனது

குமாரனுகிய விக்கிரமசோழன் 1116ஆம் முதல் 1128ஆம் வரையில் அரசு செய்தானென்றும், அவன் மகன் குலோத்துங்கன் 1129ஆம் பட்டத்திற்கு வந்து தமிழ் நாடெல்லாவற்றையும் ஜயித்து ஆண்டானென்றும், அவனுடைய தாசி மகனுன ஆதண்டசோழன் தொண்டமான் சக்கரவர்த்தி என்கிற பெயரைப் பெற்று அப்போது பிரபலமாகவிருந்த பல்லவரை ஜயித்தான என்றும், அவன் தம்பி இராஜராஜ சோழன் கலிங்க நாட்டையும், அவனுடைய தம்பி விஷ்ணுவர்த்தனன் 1079-1102ஆம் வரையில் கலிங்கநாட்டை ஆண்டதாகவும், அவர்களுக்குச் சோடகங்கை என்கிற ஒரு சகோதரி இருந்ததாகவும் எழுதியிருக்கிறார்.

சிங்களதேச சரித்திரத்தின்படி 1153 முதல் 1186 ஆம் வரையில்: பராக்கிரமபாகு குலசேகரபாண்டியன் மேல் படை எடுத்துப்போய் இராமேசுவரத்தை ஜயித்து அடுத்திருந்த ஆறு குறுநில மன்னர்களை ஜயித்தானும்.

காஞ்சீபுரம்—(191 Inscription) சாசனத்தின்படி, கற்பூரராஜாங்க சோழன் 1242ஆம் சிங்காசனமேறி 20ஆம் ஆண்டும்; 104-194 நெம்பர் சாசனங்களின்படி, விஜயகாந்த கோபாலசோழன் 1250ஆம் சிங்காசனமேறியும், 60-நெம்பர் சாசனத்தின்படி இராஜகுமார பங்கப்பதேவசோழன் 1265ஆம் சிங்காசனமேறி அவ்விடத்திய தேவாலயங்களில் நித்திய நைமித்திக சடங்குகளுக்கு வேண்டிய தருமங்களைத் திட்டப்படுத்தினும்.

டாக்டர் பர்ஜஸ் (Dr. Burgess), டாக்டர் பர்னல் (Dr. Burnell) சாஸ்திரிகளுக்கு அகப்பட்ட சாசனங்களாகிய தஞ்சை பிருஹதீசுவரர் மஹாத்மியத்தின்படிக்குக்குலோத்துங்க சோழனுக்குப் பிறகு தேவசோழன், சசிசோழன், சிவலிங்கசோழன், கரிகாலன், பீமசோழன், இராஜேந்திரன், வீரமார்த்தாண்டன், கீர்த்திவர்த்தனன், ஜெயசோழன், கலியாணசோழன், பத்திரசோழன், கனகசோழன், சுந்தரசோழன், காலாகலசோழன், கலியாண சோழன் ஆகிய இவர்கள் தஞ்சையைப் பிரதான பட்டணமாகக் கொண்டு ஆண்டுவந்ததாகத் தெரிவித்திருக்கின்றனர்.

1837ஆம் கல்கத்தாவில் ஜேம்ஸ் பிரன்சிப் அவர்களால் பதிப்பித்த ஜர்னல் ஆப் ஆசியாடிக் சொசைடி சஞ்சிகை 6-வது வாலியம், 507-வது பக்கத்தில் கண்டிருக்கிற

இரண்டொரு சோழர்களுடைய சரித்திர சாரத்தை இங்கெழுதுகிறோம்.

வயலவராசன் ஆதித்தியசோழனுக்கு 16-ம் வயது வந்தவுடனே திரிசிரபுரத்துக் கடுத்த காளியூரில் முடிசூட்டப் பெற்றவுடன் தனது இராஜ்ஜிய பரிபாலனத்தை மந்திரிவசத்தில் விட்டுவிட்டு, தான் சைவமதத்தைப் பரவச் செய்துவரும் நாளில், ஒரு காட்டானை வகையோசமாக நாட்டில்வந்து குடிகளை வருத்துகையில், அதைப் பிடித்து வரும்படி 100 வீரர்களை யனுப்பினான். அந்த வீரர்கள் யானையைத் துரத்திக்கொண்டு வரும்போது வழியில் ஒரு சன்னியாசி சிவன்கோயிலுக்குப்போய்ப் பூசைசெய்து புஷ்பமாலையைத் தரித்துவருவதை அந்தக்காட்டானை கண்டுவந்து அந்தச் சன்னியாசி தரித்திருந்த சிவபூஜா புஷ்பமாலையைப் பிடித்திழித்துச் சின்னபின்னமாக்க, சன்னியாசிக்கு மிதமிஞ்சிய கோபம் ஜனித்து, அந்த யானையையும், அதையோட்டிக் கொண்டுவந்த 100 ஜனங்களையும் கண்டதுண்டமாக வெட்டிக்கொல்ல, அது சங்கதியைச் சோழன் அறிந்து அந்த சன்னியாசியைக் கொல்லச் சேனையுடன்வர, அந்தச் சன்னியாசி விபூதி உருத்திராக்ஷ மாலை முதலான சைவசின்னங்களைத்தரித்திருப்பதைப்பார்த்துத்தமதுபடையைப் பின்னே நிற்க விட்டு, தான் பாதசாரியாகவந்து சன்னியாசியின் பாதத்தில் வீழ்ந்து தனது அபசாரத்தை க்ஷமிக்கவேண்டு மென்று வேண்ட, அதுகண்ட சன்னியாசி அந்தோ! இப்படிப்பட்ட சைவநெறியுள்ள மன்னனுடைய வீரரையும், யானையையும் கொன்றோமே' என்று பரிதபித்து இனி பிராணன் தரிப்பது தகாதெனத் தனது கைவாளால் குத்திக்கொண்டு தன் பிராணனைவிடப் பிரயத்தனப் படுகையில், சோழன் பார்த்து 'ஐயோ, தனது பதாதிகள் ஓடி வந்ததனாலல்லவா காட்டானை வந்து சன்னியாசியின் பூமாலையைக் கெடுத்ததாகையால், அக்குற்றம் தன்னைச் சார்ந்ததென்றும், அக்குற்றத்துக்குத் தன்னுயிரை விடுதல் தான் தருமமென்றும் தானே தன் வாளால் குத்திக்கொண்டிறந்தானாம். அப்படி சைவநெறி விஷயமாகப் பிராணனை விட்ட சோழன் மனைவி பூரணகர்ப்பவதியாக இருந்தபடியால், அப்போது ஒரு ஆண் மகனை அச்சுபதினத்திற் பெற அச்சிசுவுக்கு சுபச்சோழன் என்று பெயரிட்டார்கள்.

சுபச்சோழன் சிங்காசனம் ஏறியவுடனே ஜம்புகேசுவரத்துக்கு வந்து சிவபூசை செய்துகொண்டு 36வருஷம் ஆண்டபிறகு, அவன் குமாரன் வரகுணசோழன் பட்டத்துக்குவந்து 75வருஷம் ஆண்டு வருகையில், தனது மனைவியின் வலதுகையைப்பிடித்து இழுத்து ஜம்புகேசுவரருக்குத் தத்தம்செய்ய, அந்த ஈசுவரர் சோழன் தொட்ட வலதுகையை மாத்திரம்விட்டு, மற்ற பாகத்தை அங்கீகரிக்கச், சோழன் கண்டு தனது பாவ எண்ணங்களையும், கரத்தையும் பற்றி அநுதாபப்பட்டு வேண்ட, ஜம்புகேசுவரர் அந்த வலது கையையும் அங்கீகரித்தாராம. அவருடைய குமாரன்,

புகழ்ச்சோழன் உரையூரைத் தனது பிரதான பட்டணமாக்கிக்கொண்டு 60வருஷம் ஆண்டான். அந்தப் புகழ்ச்சோழனுடைய மந்திரி, நாட்டில் தருமசத்திர முதலானவைகளைக் கட்ட, திரவியத்துக்காகச் சேரநாட்டின்மேல் படை எடுத்துப்போக, அங்குத் தோல்வி யடைந்தபடியால், இராஜன் நம்புவதற்காகச் சுமார் 100 பெயருடைய சிரசுகளை வெட்டிக் கொண்டுவந்து காட்ட, அதில் ஒருசிரசு சிவ வேடந்தரித்திருக்கக் கண்டு 'அந்தோ! சிவபக்தனையும் கொலைசெய்தாயோ' என்று துக்கித்து, அந்தப்பாவத்துக்காகத் தன்னுயிரை மாய்த்துக்கொண்டானாம். அவனுக்குப் பிறகு அவனது குமாரனும் மஹா வித்வசிகாமணியும் சைவபக்தனும் தரும நீதிமானுமாகிய

கிருபாலசோழன் பட்டத்துக்கு வந்தான். அவன் தன் னாட்டில் ஒவ்வொருவீதியிலும் ஒருபெரிய மணியைக் கட்டித் தொங்கவிட்டுத் துஷ்டர்களாலும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களாலும் குறைவு குற்றங்கள் உண்டானால், உடனே குடிகள் போய் அந்த மணியை அடித்தால் மணியோசை உண்டானவுடனே அதிகாரிகள் போய் விசாரித்து நீதிசெலுத்தக் கட்டாய விதிகளை நியமித்திருந்தபடியால்; அச்சோழன்காலத்தில் புலியும் பசுவும் ஒரு குளத்தில் தண்ணீர் குடித்ததாம்.

அச்சோழனுடைய குமாரனாகிய வீதிவிடங்கசோழன் ஒருநாள் இரதாரூடனாக வரும்போது, ஒருதேவ பசுவும், கன்றும் எதிரேவர, இராஜ கோலாகலத்தினால் கன்று பசுவைவிட்டுப் பிரிந்து இரதத்தின் சக்கிரத்தில் சிக்கித் துண்டாக்கப்பட்டது. இதைக் கேட்ட கிருபாலசோழன்,

மிகவும் துக்கப்பட்டு, மந்திரியை அழைத்து, தன் வாளைக் கொடுத்துத் தன் குமாரனை வீதிவிடங்கனைக் கொன்று விட்டு வரும்படி உத்திரவு கொடுத்தனுப்ப, அம் மந்திரி, இராஜ குமாரனைக் கொல்ல மனமற்று, விதியின்றித் தன் பிராணனையே மாய்த்துக்கொள்ள, இராஜகுமாரன் கண்டு, 'அந்தோ! நமக்காக மந்திரி தன் பிராணனைவிடச் சம்பவித்ததே!' என்று துக்கித்து, அந்த வாளால் தன் பிராணனையும் மாய்த்துக்கொள்ள, கிருபாலசோழன், அறிந்து, ஒரு பிராணனுக்கு இரண்டு பிராணன் நஷ்டமாகியதைப்பற்றிக் கிலேசப்பட்டு, தனது ராஜ்ஜியத்தை மந்திரி குமாரனுக்குக்கொடுத்துவிட்டுத் தானும் தன் வாளால் வெட்டிக்கொண்டிறந்தான். அவனுக்குப் பிறகு,

பூபாலசோழன் 16-வது வயதில் பட்டத்திற்கு வந்தான். அவனும் மஹா சிவபக்தன். அவன் காலத்தில் ஆதி சங்கராசாரியர் பிரகாசித்ததாக ஒரு சாசனம் சொல்லுகின்றது.

இத்தியாதி வித்தியாசங்களினால் சோழராஜர்கள் ஆண்டகாலம், இடம், அவர்களுடைய செங்கோல் சிறப்பு முதலானவைகளை ஸ்பஸ்டமாகக் காட்டும் சரித்திர சாசனம் இன்னும் சரியாக அகப்படவில்லையென்பது ஸ்பஷ்டமாகும்.

சோழர்களுடைய சரித்திரத்தைப்பற்றிச் சங்கத் தமிழ் புலவர் ஒருவர் சோழர் அந்தாதி என்கிற கிரந்தத்தில் விவரித்திரிக்கிறதாகவும், அந்த நூலை நமக்குத் தருவதாகவும் ம-ா-ா-ஸ்ரீ சிவன்பிள்ளையவர்கள் சொல்லிக்கொண்டு வந்தவர், தம் உயிர் உள்ள நாள்வரையில் பலதரம் கேட்டும் தராமல் தரையைவிட்டகன்றார். இப்படி நம்மவரிடம் புராதன புத்தகங்கள் இருந்தால், பலருக்கும் பிரயோஜனமாகும்படி வெளியாக்காதிருப்பது ஆச்சரியம்.

ஆயினும் சோழர்கள் கல்வியையும், கைத்தொழில்களையும் விருத்தியாக்கியும், இப்போது தென்நாடுகளிலிருக்கும் பெரும்பான்மையான சைவ வைணவக் கோயில் கோபுரங்களைக் கட்டிவைத்தும், சதா சிவ பக்தியிலும், விஷ்ணு பக்தியிலும் சிறந்தவர்களாகிப் பிரகாசித்திருந்ததன்றியில், குடிகளிடம் ஐந்தில் ஒரு பாகமாக வரிவாங்கிக் கொண்டும், குடித்தனத்துக்கு இன்றியமையாத கால்வாய்

கள், அணைகள் முதலான பாசனவசதிகளை உண்டாக்கியும், தம் செங்கோலுக்குட்பட்ட குடிகளைத் தம் மக்களைப்போல பாலித்தும் தருமநீதியாக ஆண்டுவந்தார்கள் என்பதற்குச் சற்றும் சந்தேகமில்லை.

---

(அபிதான கோசத்தின்படி)

## தமிழ்க்கவிகளால் பாடப்பெற்ற சோழர்கள்

சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளி—சேரமான் மாந்தரஞ் சேரலிரும் பொறையனைப் போரிடை வென்றவன், சேரமான் மாவெண்கோவுக்கும் - கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதிக்கும் நட்பினன், பாண்டரங் கண்ணனாராலும் - ஔவையாராலும் - உலோச்சனாராலும் பாடப்பட்டவன்.

சோழன் நலங்கிள்ளிசேட்சென்னி—இவன் இலவந்திகைப்பள்ளியிலே பிறந்த சோழன். எறிச்சலூர்மாடலன், மதுரைக் குமாரனாராற் பாடப்பட்டவன்.

சோழன் உருவலப்பஃறேறிளஞ் சேட்சென்னி- இளஞ்சேட்சென்னி உருவப்பஃறிளையோன் என்னும் பெயர்களாலும் வழங்கப்படுவன். இவன் வீரங்கொடைகளாற் சிறந்தோன், அழுந்தூர்வேளிடத்துப் பெண்கொண்டோன் என நச்சினார்க்கினியர் கூறுவர். இவன் கரிகாற்சோழன் தந்தை. இவனைப் பரணரும், பெருங்குன்றூர்கிழாரும் பாடினர்.

சோழன் கரிகாற் பெருவளத்தோன் சோழன் கரிகாலன்—உருவப்பஃறேறிளஞ்சேட் சென்னிபுதல்வன். இவன் நாகூர் வேளாளனிடத்துப் பெண்கொண்டவன் என நச்சினார்க்கினியர் கூறுவர்.

சோழன் கிள்ளிவளவன்—கோவூர் கிழாராற் பாடப்பட்டவனும; ஆவத்தூர் கிழார், கோவூர்கிழார், மாறொக்கத் துறப்பசலையார், இடைக்காடனார் முதலிய புலவர் அநேகராற் பாடப்பட்டவனும் இவனே (புறநானூறு).

சோழன் பெருந்திருமா வளவன்—இவன் குராப் பள்ளியிலே இறந்தவன். காவிரிப்பூம்பட்டினத்துக் களிக் கண்ணனாராலும், மருத்துவள்ளுமோதரனாராலும் பாடப் பட்டவன்.

சோழன் நல்லுருத்திரன்—இவன் புலமை மிக்கோன் என்பது புறநானூற்றில் அவன் பாடலாலினிது புலப்படும்.

சோழன் மாவளத்தான்—இவன் சோழன்நலங்கிள்ளி தம்பி, தாமப்பல் கண்ணனாரால் பாடப்பட்டவன் (புறநானூறு).

சோழன் நலங்கிள்ளி—பாடும் புலமை யுடையவன். சாத்தனர், கோவூர்கிழார், ஆத்தூர்கிழாரென்னு மூவரா லும் பாடப்பட்டவன்.

சோழன் செய்தலங்கான விளஞ்சேட்சென்னி—ஊன் பொதி பசுங்குடையா ரென்பவரால் பாடப்பட்டவன்.

சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி—தித்தன் என்னும் சோழன் மகன்; தந்தையைப் பகைத்து நாடிழந்து நல்குரவாற் புல்லரிசியு முண்டு, சிலகாலமிருந்து பின்னர் நாடுகொண் டரசுபுரிந்தவன் (புறநானூறு).

சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி—சேரமான் அந்துவஞ் சேரவிரும்பொறைக்குப் பகைவன். இவனைப் பாடிய புலவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியர்.

சோழன் வெற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி—பரணராலும், கிழாத்தலையாராலும் பாமாலை சூட்டப்பட்டவன்.

சோழநாட்டுப் பிடவூர் கிழார்மகன் பெருஞ்சாத்தன் மதுரை நக்கீரனாரால் பாடப்பட்டவன். பின்னர் நச்சினார்க்கினியராலும், பொருளதிகார வுரையினுள்ளே எடுத்துக் கூறப்பட்டவன்.

சோழிய வேனாதி திருக்குட்டுவன். மிக்க கொடையாளன். எறிச்சிலூர் மாடவன், மதுரைக்குமரனாரால் பாடப்பட்டவன். பின்னும் பலருளர்.



# மலை நாடு

இது பாண்டியநாட்டுக்குத்தென்மேற்காகவும், அரபிக் கடலுக்குக் கிழக்காகவும், கொங்கு நாட்டுக்குத் தெற்காகவும் இருக்கும் மலையடர்ந்த நாடு. இது ஆதியில் சோழபாண்டிய மன்னர்களாலும், பிறகு மதுரை நாயுடுகாரு முதலான மன்னர்களாலும் இடைக்கிடை படையெடுக்கப்பட்டும் தாக்கப்பட்டும் வந்தாலும், தொன்றுதொட்டு இதற்குச் சேரநாடு என்னும் பெயருண்டாகி, இதில் விஜமன்பெருமான் வாலப்பெருமான் அவர்களின் பந்துக்கள் பானுவிக்கிரமன், வீரமார்த்தாண்டவர்மன், உதயமார்த்தாண்டன், ஆதித்தியவர்மன், வீரமார்த்தாண்டன், எரிவர்மன், கேரளவர்மன், உதயவர்மன், முத்துராஜவர்மன், வீரமார்த்தாண்டன், ஆதித்தியவர்மன், எரிவர்மன், மார்த்தாண்டன், உதயமார்த்தாண்டன், கேரளசேகரன், ஆதித்தியன், உதயன், வீரஎரி, வீரபானு, இரவிவர்மன், உள்ளிகேரளவர்மன், ஆதித்தியவர்மன், உமையம்மாள், இரவிவர்மன், உள்ளிகேளரன், இராமவர்மன், மார்த்தாண்டவர்மன், இராமவர்மன், பலராமவர்மன் கவுரிலக்ஷ்மி, கவுரிபார்வதி, இராமவர்மன், மார்த்தாண்டன், ருக்மணிபாய், இராமவர்மா, 1883ஞ பத்மநாப வஞ்சி, பலராமகுலசேகரர் ஆண்டார்கள். இதில் குலசேகர ஆழ்வார் முதலான மஹாவைஷ்ணவ ஆழ்வார்களும், சைவ சித்தாந்திகளும் ஜனித்து, சைவவைணவ மதங்களைப் பரிபாலனம் செய்து வந்தார்கள். இதில் இப்போதிருக்கும் சில விசேஷ சைவ வைணவ க்ஷேத்திரங்களாவன:—

## திருவஞ்சைக்களம்

(அஞ்சைக்களத்தீசுரர், உமையம்மை, ஆலவாய்த் தீர்த்தமுதலியன.)

பரசுராமர் தமது தாயைக் கொன்ற பழி நீங்கும் பொருட்டுப் பூசித்துப் பேறுபெற்ற தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்தி லெழுந்தருளித் தரிசனஞ் செய்து கொண்டிருக்கும்பொழுது, "என்னையினிச் சேவடிக்கீ ழிருத்திடும்" என்று பதிகம் பாடச் சிவபெருமான் வெள்ளை யானையை யனுக்கிரகித்தருள, அவ் வானையின்மீது ஆரோகணித்துக்கொண்டு தமது தோழராகிய சேரமான் பெரு

மாணுயனுரை மனதினினைத்து, அவருடன் அநேககோடி சூரியப்பிரகாசம்போல ஒளி வீசவும், அவ்வொளியை வியாக்கிரபாதரிஷியின் புத்திரரும் திருப்பாற்கடலை யுண்டவருமாகிய உபமன்னிய மகரிஷி முதலிய அனேக மகரிஷிகள் தொழவுங் கயிலைக் கெழுந்தருளித் "தானெனென்னை முன்படைத்தான்" என்னும் பதிகம் ஓதிக்கொண்டு ஆடி மாதச் சுவாதிநாளிற் சென்று முன்போலவே ஆலாலசுந்தராராய் அமர்ந்த தலம்.

சேரமான் பெருமாணுயனுர்: மகோதை என்னுங் கொடுங்கோளூரிலே மன்னர் மரபிலே சித்திரைமீ இரேவதி நாளிற் றிருவவதாரஞ் செய்தருளிப் பெருமாக்கோதையா ரென்னும் பெயர் பூண்டு, அகத்துறவு கொண்டு இத்தலத்தில் பணிவிடை செய்திருக்குங்கால், மந்திரிகள் வேண்டுகோளாற் சிவபெருமா னுத்தாரப்படி முடிசூடி, யாவரும் யாதும் கழறினவற்றை யறிதலால் கழறிற்றறிவார் என்னும் பெயர்பூண்டு யானையின்மீது பவனி வரும்போது, சாரமண் சுமந்துசெல்லும் வண்ணுனது மேனி வெளுத்திருத்தலைச் சிவசின்னந் தரித்ததாகக் கொண்டு வணங்கியும், சிவனடியார்களைச் சிவமாகப்பாவித்து அரசு செலுத்தியும் வருங்கால், மதுரையில் இசை வல்லோனுகிய பாணபத்திரன்பொருட்டுச் சிவபெருமான் "மதிமலிபுரிசை" என்னும் திருமுகங் கட்டளையிட்டருளப் பெற்று நிதிக்குவை கொடுத்து உபசரித்தனுப்பிய நாயனுர், தினந்தோறும் சிவபூசை யந்தத்தில் திருநடன சிலம்பொலி கேட்கும் நியமத்தினராய்ப் பூசித்து வருங்கால், ஓர்நாள் அச் சிலம்பொலி தாழ்க்க, அதனுற் சுந்தரமூர்த்தி சுவாமிகளை யுணர்ந்து அவரோடு தோழமை பூண்டு அவரிடத் தன்புள்ளவரா யொழுகுகையில் அவர் வெள்ளை யானையின் மீது கயிலைக்கெழுந்தருளுவதை அவர் நினைப்பாலுணர்ந்து, அங்குள்ள ஓர் குதிரையிலேறி அதன் செவியில் ஸ்ரீ பஞ்சாக்ஷர உபதேசஞ் செய்து, அதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளது யானைக்கு முன் செல்லவிட்டுக் கயிலையை யடைந்து, தாம் செய்த ஞான உலாவை அரங்கேற்றுவித்து, ஆடி மாதச் சுவாதி நாளிற் சிவகணநாதரா யமர்ந்தருளிய தலம். இந்த நாயனுர் அவ்வுலகப் பிரபந்தமன்றியும், பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை முதலிய பிரபந்தங்க ளருளிச்செய்தனர். இந்நாயனுரது பரிசனங்களில்

பலர் இந்நாயனாரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கயிலைக் கெழுந்தருளுவதைக் கண்ணுக் கெட்டினமட்டிற் பார்த்துக் கொண்டிருந்து, பின்னர்த் தம் சரீரத்தை வாளாற்றுணித்து வீரசரீரங்கொண்டு அவ்வுபய நாயன்மாரையும் அடுத்துச் சேவித்துக் கயிலையிற் சென்று முத்தியடைந்தனர். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

இது இருளூலக்கடை ஸ்டேஷனிலிருந்து மேற்கே 4 மைல் தூரத்தி லிருக்கிறது.

---

## சுவிந்திரம்

(தாணுமாலயப்பெருமான், உமாதேவியம்மை, நெய்யாறு தீர்த்தம், திருக்குள தீர்த்தம்.)

பிரமதேவர் தாம் கோவிலில்லா தொழிந்த சாபம் நீங்கும்பொருட்டுப் பூசிக்கச், சிவபெருமான் பிரசன்னராயித்தலத்துத் தம் சமீபத்திற் கோவில்கொண்டெழுந்தருளியிருக்க வரமருளிய தலம். அன்றியும், பிரமாவும் சிவபெருமானுஞ் சேர்ந்திருத்தலை யுணர்ந்த விஷ்ணுமூர்த்தியானவர் தாமுமுடனுறைதல் வேண்டுமென்று பூசித்து, அவ்வாறே யிருக்கப்பெற்றருளிய தலம். இதனுலே இத்தல நாயகருக்குச் சிவனென்றுபொருள் படுகிற தாணு, விஷ்ணுவென்று பொருள்படுகிற மால், பிரமா என்று பொருள்படுகிற அயன் எனக் காரணப்பெய ருளதாயின.

---

## கன்னியாகுமரி

(குமரியம்மை, அலைவாய் தீர்த்தம், சங்கலி தீர்த்தம்.)

பரசுராமர் பிதிர்வாக்கிய பரிபாலனூர்த்தம் தமது தாயைக்கொன்ற பழிநீங்கும்பொருட்டு சிவபெருமானைப் பூசித்துப் பரசு என்னும் ஆயுதம்பெற்று அதனுல் சமுத்திரத்தில் திடருண்டாக்கி அத்திடரைப் பரசுராமக்ஷேத்திரமென்கிற மலைநாடாக உண்டுபண்ணினபொழுது, இவ்விடத்துச் சிவசத்தியாகிய இவ்வம்மையை ஸ்தாபித்துப் பூசித்தனர். இத்தேவியார் கன்னிகையாயிருந்து மணவிருப்பத்தினுற் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்தபொழுது, சிவபெருமான் பிரசன்னராகித் திருமணத்தைக் கேளாதொழிந்த

தப்பிதத்திற்காக என்றுங் கன்னியாகவே யிருக்கும்படியாகவும், திருக்கலியாணத்திற்காகச் சேர்த்துவைத்த பண்டங்கள் யாவும் கல்லாய்ப் போகும்படியாகவும், சபிக்க, அக்குமரி தாழ்ந்து வேண்டியபொழுது கன்னியாகுமரியாகவிருந்து சீவர்களுக் கநுக்கிரகஞ் செய்யும்படி வரமருளிய தலம். இதனாலே இத் தலத்திற்கு கன்னியாகுமரி எனப் பெயராயிற்று. அரிசி, மஞ்சள் முதலிய பண்டங்கள் கல்லாய் இருத்தல் பிரத்தியக்ஷம்.

---

## திருக்காட்கரை

(அப்பன், பெருஞ்செல்வ நாயகி, புட்கலவிமானம், கபில தீர்த்தம்.)

தெற்குமுகமாக நின்று கபிலமுனிவர்க்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவண்பரிசாரம்

(திருவாழ்மார்பன், திருக்குறளப்பன், புவிமாது, கமலவல்லி, இந்திரகலியாண விமானம், லட்சுமிதீர்த்தம், கிழக்குமுகமாக வீற்றிருந்த கோலம்.)

விந்தைக்கும், காரிக்கும், உடையநங்கைக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநாவாய்

(பிரசன்ன நாராயணன், மலர்மங்கை, தாமரையாள், வேதவிமானம், செங்கமலசரசு.)

தெற்குமுகமாக வீற்றிருந்து லட்சுமிக்கும் கஜேந்திரனுக்கும் பிரத்தியக்ஷம். பொய்கையாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருமூழிக்களம்

(திருமூழிக்களத்தான், மதுரநாரணி நாச்சியார், சௌந்தர விமானம், பெருங்குள தீர்த்தம், கிழக்குமுகமாகநின்ற திருக்கோலம்.)

ஹரீதமகாமுனிக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

## திருச்செங்குன்றூர்

(இமையவரப்பன், தேவசெங்கமலை, ஜகஜோதி விமானம், திருச்சிற்றாறு சங்க தீர்த்தம்.)

மேற்கு முகமாக நின்று பஸ்மாசுரனுக்குப் பிரத்தியட்சம்.

---

## குட்டநாடு (திருப்புலியூர்)

(மாயப்பிரான், புருஷோத்தமன், பொற்கொடி, கனகவல்லி, புருஷோத்தம விமானம், பூஞ்சுனை தீர்த்தம்.)

கிழக்குமுகமாக நின்று சப்தரிஷிகளுக்குப் பிரத்தியட்சம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவநந்தபுரம்

(அநந்த பத்மநாபன், ஸ்ரீ ஹரிலட்சுமி, ஏமகூடவிமானம், மச்ச தீர்த்தம், கிழக்கு முகமாக புஜங்கசயனம்.)

சந்திரனுக்கும், இந்திரனுக்கும் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார், பெரியாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவநந்தபுரத்தின் தற்கால ஸ்திதி

மலைநாடு அல்லது சேரநாட்டிற்கு முக்கியமானக்ஷேத்திரம் திருவநந்தபுரமேயாம். இதன் தற்கால ஸ்திதியைப் பற்றிச் சங்கிரகமாக இதனடியில் தெரிவிக்கின்றோம்.

திருவநந்தபுரம் அல்லது திருவிதாங்கோடானது தக்ஷண இந்தியாவின் தென்மேற்கில் ஓர் முக்கோண வடிவாகத் தென்வடல் 174 மைல்கள் நீளமும், கிழமேல் 75 மைல்கள் அகலமும், 7129 சதுரமைல்கள் விஸ்தீரணமுமுள்ளது. இதன் பாதிக்கு மேற்பட்ட பாகம் மலைகளாலும் குன்றுகளாலும் வனங்களாலும் சூழப்பட்டிருக்கிறது. அவைகளில் தேக்கு, தேவதாரம், தென்னை, கருமரம், பலா, அஞ்சிலி முதலிய மரங்களும், ஏலம்- மிளகு முதலான விலையுயர்ந்த செடிகளும் கொடிகளும், இருப்பதோடு; புலி, யானை, சிறுத்தை, கரடி, காட்டெருமை, மான் முதலான காட்டு மிருகங்களும், பற்பலவித பக்ஷிகளும் பிரகாசித்துப் பார்ப்பவர்க்கு இரமணீயமான காக்ஷியைத் தரத்தக்கதாய் இருக்

கின்றது. மற்ற நாடுகளைவிட இங்கு மழை அதிகமா கையால் நெல் முதலிய தானியங்கள் ஏராளமாக விளைந்து அதுவே ஜனங்களின் போஜனபதார்த்தமாக விருக்கின்றது.

1911 ஹூ த்திய காணிஷ்வார் கணக்கின்படி இந்த சமஸ்தானத்தில் 34,28,375 ஜனங்களில் 17,31,363 பேர் ஆண்களும், 16,97,612 பேர் பெண்களும், இவர்களில் சுமார் 22,82,617 பேர் இந்துக்களாகவும், 90,38,68 பெயர் கிறிஸ்தவர்களும், 22,66,17 பேர் மகம்மதியர்களுமாக விருந்தார்கள்.

இது சேர சோழ பாண்டியர்கள் ஆகிய மூவேந்தரில் சேரநாட்டு வேந்தருக்குப் பாரம்பரையாய்ச் சேர்ந்து இடையில் சில குறுநில மன்னர் கிளம்பிப் பற்பல சில்லரைச் சமஸ்தானத்தை ஸ்தாபித்தாண்டாலும், 1729-58-ல் அரசு புரிந்த ஸ்ரீ மார்த்தாண்ட வர்மராஜா காலத்தில் அக்குறுமன்னர் கொட்டம் அடக்கப்பட்டு சமஸ்தானம் முழுதும் இவர் சுவாதீனம் ஆயிற்று. இந்த சமஸ்தானத்தின்பேரில் மதுரையிலாண்ட திருமலை நாயுடுகாரும் ஸ்ரீ மங்கம்ம காரும் படையெடுத்துப் போய் ஜெயித்து கப்பம் வாங்கிக் கொண்டு வந்ததோடு, மைசூர் திப்பு சுல்தான் படையெடுத்துப்போய்த் தாக்கினாலும், 1684ஹூ ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் ஒருவர்த்தகசாலையைக் கட்டி வியாபாரஞ்செய்து வந்து, 1784ஹூ சுல்தானுக்கும் கம்பெனியாருக்கும் உண்டான உடன்படிக்கையினாலும், 1788 ஹூ செய்த உடன்படிக்கையினாலும் கம்பெனியார்க்குச் சில சுதந்தரங்கள் கிட்டினாலும், 1795 ஹூ சமஸ்தானம் முழுதும் இங்கிலீஷ்காரருடைய ரட்சணைக்கு உட்பட்டுவிட்டது.

இப்போதிருக்கும் சமஸ்தானாதிபதியாகிய ஸ்ரீ பத்மநாப் தாச வனச்சி பாலா சர் ராம்வர்மா குலசேகர கீர்த்திபதி மன்னே சுல்தான் மஹாராஜ ராஜ ராம ராஜ பகதூர் ஷேம்சர்ஜெங், G. C. S. I., G. C. I. E., Member of the Royal Asiatic Society, London; Fellow of the Royal Geographical Society, London, Fellow of the Madras University, Officer De. L. Instruction Publique என்பவர் 1857 ஹூ செப்டம்பர் மீ 25 தேதி ஜனித்துக் கல்வி கேள்வி முதலியவைகளில் சிறந்தவராகி 1885 ஹூ ஆகஸ்டு மீ 19 தேதி சிங்காதனமேறினர். இவர் மனு

மக்கள் தாயம் என்னும் வழக்கத்தை யனுசரித்துச் சகோதரி புத்திரர்களுக்குப் பட்டம் கட்டுவது வழக்கம். பிரதம மஹாராணி யவர்களாகிய ஸ்ரீமதி சேதுலக்ஷ்மி பாயி அம்மையவர்கள் 1895௵ நவம்பர்மீ 19 தேதி ஜனித்தவர். இளைய ராணியாராகிய ஸ்ரீமதி சேது பார்வதிபாயி அம்மையவர்கள் 1896௵ நவம்பர்மீ 8௳ ஜனித்தவர். 1912௵ நவம்பர்மீ 7 தேதி ஒரு புத்திரன் ஜனித்திருக்கிறார்.

இச் சமஸ்தான ராஜ்ஜிய பரிபாலனத்திற்குத் திவானையும், ஆங்கில ஸ்தானாதிபதியையும், 15பேர்களடங்கிய சட்ட நிரூபண சபையார்களுடைய உதவியைக் கொண்டும், அவர்களுடைய நியமனப்படி அநேக உத்யோகஸ்தர்களுடைய உதவியைக் கொண்டும் ஆங்கிலேய ராஜ்ஜிய முறைமையை யனுசரித்துத் தர்ம பரிபாலனம் செய்துவருகிறார்கள்.

இந்த ஸமஸ்தானத்தை ரெவினியூ வருமானத்தைக் கருதி ஐந்து டிவிஷன்களாக்கி, அவைகள் ஒவ்வொன்றிற்கும் பேஷ்கர் என்னும் பெயரால் கலெக்டர் அண்டு டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட் வேலைகளைச் செய்துவரவும், அவர்களதிகாரத்திற்குள் 33 தாலுக்காக்களாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் தாசில்தார் முதலான உத்யோகஸ்தர்களை நியமித்தும், அவர்கள் ரெவினியூ மாஜிஸ்ட்ரேட் வேலைகளைச் செய்துவரவும், அவர்களதிகாரத்திற்குள் 428 பகுதிகள் அல்லது கிராமங்களைப் பிரித்துக் கொடுத்து அவைகளுக்குப் பிரவர்த்திகர் என்னும் கிராம உத்தியோகஸ்தர்களை நியமித்திருக்கிறார்கள்.

நீதிபரிபாலனத்திற்குப் பிரதம நியாயஸ்தலங்களையும், நியாயாதிபதிகளையும், முனிசிப் முதலான உத்யோகஸ்தர்களையும் நியமித்திருக்கிறார்கள். இப்படி நியமித்திருந்தாலும் குடிகளுடைய சுகதுக்கங்களை நேர்நேராக அறியும் பொருட்டு ஸ்ரீ மூலம் அல்லது ஜனப்பிரதிநிதி சபையென்றை 1904௵ அக்டோபர்மாதம் முதல் ஆரம்பித்து மறுவருஷம் முதல் குடிகளே தமது பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும் சுதந்தரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப் பிரதிநிதிகள் ௵ 1-க்கு 2000 ரூபாய் வருமானமுள்ளவர்களும், அல்லது 50 ரூபாய்க்குக் குறையாத கந்தாயம் கொடுக்கப்பட்டவர்களும், B. A. பட்டதாரிகளும், பெரிய வக்

லேல்களும் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்படும் இப்படிப்பட்ட 100 மெம்பர்களில் ஒவ்வொருவரும் தாம் கேட்க விரும்பும் இரண்டு கேள்விகளை முன்னதாக பேஷ்காருக்குத் தெரிவிக்க, அவர் இச் சபையின் தலைவராகிய திவானவர்களுக்கு அறிவிக்க, அவர் பிரதிவருஷ பிப்ரவரிமீ கூட்டுவிக்கும் சபையில் வைத்து அக் கேள்விகளைக் கேட்கச்செய்து அவைகளுக்குப் பதிலுரைப்பார். இதே காலத்தில்தான் சமஸ்தானத்தின் வரவு செலவு கணக்குகளையும் மற்ற விவரங்களையும் விபரப்படுத்துவார். சென்ற வருஷம் இச்சமஸ்தானத்தின் மொத்த வருமானம்: 1,48,11,690 ரூபாய், இதில் செலவு. 1,45,98,015 ரூபாய் இச் செலவானது சமஸ்தான சிப்பந்திகளுக்குக் கிரமமாகக் கொடுத்து வருவதன்றியில், பெரிய காலேஜ்கள், பாடசாலைகள், பெண்பாடசாலைகள், கண் காட்சி சாலை, புஸ்தகசாலை, உத்யானவனம் முதலான பல பொதுவிஷயங்களிலும் செலவிடப்பட்டுவருகின்றது. மேலும், இது பத்மநாபருடைய தர்ம க்ஷேத்திரம் என்று பரம்பரை பெயர் பெற்றிருப்பதால் ஷை தேவஸ்தானத்திற்கும் முக்கியமாக ஊட்டுப்புறையென்னும் பிராமண போஜன தர்மத்திற்கும் செலவிடப்பெற்று வருகிறது. இப்போதிருக்கும் ராஜா கல்வி கேள்விகளிற் சிறந்தவராயிருப்பதோடு மஹா பக்திமானுயிருக்கிறார். வைணவ ஆழ்வார்களில் சிறந்த குலசேகர ஆழ்வார் இந்நாட்டைச் சார்ந்தவர். சித்திரப்படங்கள் எழுதுவதில் பிரபல பெயர்பெற்ற ரவிவர்ம ராஜா இச் சமஸ்தானுதிபதியின் பந்துவானவர். இவருக்குப் பிரதம உபாத்தியாயராக இருந்த சித்திரமெழுதும் ராமசாமி நாயுடு இச் சமஸ்தான உத்யோகஸ்தர். இம்மட்டோ! ஸ்ரீ இராஜா சர். டி. மாதவராயர், ஸ்ரீ சேஷையர், ஸ்ரீ இராமையங்கார், ஸ்ரீ மாதவராயர், திவான்பகதூர் கிருஷ்ணசாமி ஐயர், ஸ்ரீஇராஜகோபாலாசாரியர், ஸ்ரீகிருஷ்ணன் நாயர்முதலான மஹா மதியூகிகள் இந்த ஸமஸ்தானத்தில் மந்திரிகளாயிருந்து மகிமை பெற்றவர்கள்.

---

## அநந்தசயனம்

இது கன்னியாகுமரியிலிருந்து வடமேற்கில் சாலை மார்க்கமாய் 55 மைலில் மேல் சமுத்திர தீரத்திலுள்ள விஷ்ணு க்ஷேத்திரம். இவ்விடம் தர்மமஹாராஜா வசிக்கிறார். விசேஷ

அன்னதானம் வகையரு தர்மங்கள் காலத்தை யனுசரித்து நடந்தேறிவருகிறது. இவ்விடத்தில் ஆறு வருஷத்திற்கு ஒரு முறை சம்பவிக்கும் இலக்ஷதீபம் வெகு விசேஷம். அநந்தபத்மநாபர், ஸ்ரீ லக்ஷ்மி நாச்சியார், பூதேவி, கனகசபை, ஏமகூடவிமானம் மச்சதீர்த்தம், பூர்வதிக்கை நோக்கிச் சயனித்திருக்கும் அநந்த பத்மநாப சுவாமி தமது வலது கையை ஒரு சிவலிங்கத்தின்மேல் நீட்டியும், பிரமதேவனை நாபிகமலத்தில் கொண்டவராயும், ஆதிசேஷன் மேல் சயனித்து மிருக்கின்றனர். இங்கு நரசிம்மஸ்வாமியும் கிருஷ்ணஸ்வாமியு மிருக்கின்றனர். இந்நகரில் ஒற்றைக்கால் மண்டப தேவாலயமும், உமாபதீஸ்வரர் ஆலயமும், அனந்த தீர்த்தம்-அக்கினிதீர்த்தம் -சங்குமுகதீர்த்த முதலியனவும் இருக்கின்றன. பிரமதேவன் கோரியவண்ணம் இரணியனைச் சம்ஹாரித்த நரசிம்மசுவாமி வசிக்கும் ஸ்தலம். அகத்தியர், மலையபருவதம், மயித்திராவருணி, மகேந்திர பர்வதம், திரிகூடபர்வதம், தாம்பிரபரணி முதலியோருக்குக் காட்சி கொடுத்து அவரவர்கள் அபீஷ்டங்களை நிறைவேற்றியருளிய ஸ்தலம். உருத்திரனுக்கும், சந்திரனுக்கும், இந்திரனுக்கும் பிரத்திபக்ஷமான ஸ்தலம். துளுவகுலத்தி லவதரித்த திவாகரன் என்னும் யதீஸ்வரர் பூஜித்து முத்தியடைந்த தலம். அநந்த பத்மநாபஸ்வாமி நியமனத்தின்படி இந்த யதீஸ்வரர் சந்ததியாரால்தான் இப்போதும் இவ்வாலய பூசை நடந்தேறி வருகிறது.

---

## அநந்த பத்மநாப விரதம்

பூர்வம் திரேதாயுகத்தில் கவுண்டின்னிய ரென்னும் பிராமணனுடைய பாரியாளாகிய சுசீலையென்பவள் அநந்த பத்மநாப விரதத்தை யனுஷ்டித்துச் சகல ஐஸ்வரியங்களையுமடைந்து, பிறகு, தன் புருஷனுக்கினையால் அதனைக் கைக்கொள்ளாது விடுத்து, அதனால் சகல கெடுதிகளையும் அநுபவித்து மறுபடியும் பத்மநாப ஸ்வாமி ஆக்கினையாகிதை யநுசரிக்க எல்லா நன்மைகளையு மடைந்தனர்.

---

## விரதக் கிரமம்

புரட்டாசிமாஸ பூர்வபக்ஷ சதுர்த்தசி திதியில் ஒரு நதிக்கரையில் மெழுகி, சுத்தஞ்செய்த மண்டலாகாரமான பூமியில் நான்கு புறத்தும் பஞ்சவர்ணங் கொண்ட கோல

மிட்டு, அதற்குத் தென்பக்கத்தில் சுத்த தீர்த்தமுள்ள கலசம் வைத்து, அதன் நடுவில் அநந்த பத்மநாப சுவாமியை ஆவாகனஞ் செய்து, சமுத்திர மத்தியில் ஸ்வேத தீபத்தில் ஏழு சிரசுகளுடனும் - வெண்மையுஞ் சிவப்பும் பொருந்திய கண்களுடனும்-சங்கு, சக்கரம், கதை, தாமரை மலர் இவற்றை நான்கு புஜங்களிலும் தரித்துக்கொண்டு அநந்தபத்மநாப சுவாமி அங்கிருப்பதாகத் தியானஞ் செய்து, அனந்த புட்பங்களா லருச்சித்து, சோடச உபசாரங்கள் செய்து, 14 வகை பலகாரங்களும், சித்திரான்னங்களும் நிவேதித்து, ஒரு கயிற்றில் 14 முடிபோட்டு, அதைக் குங்குமத்தில் நனைத்து, அங்கு வைத்து, இருபத்தெட்டதிரசம் சமர்ப்பித்து, தூபதீபங் காட்டி, சகல வரங்களும் கொடுக்கும் மூர்த்தியே யென்று துதித்து, காணிக்கை முதலியன கொடுத்து அக்கயிற்றை வலக்கரத்தில் தரிப்பதாம். இந்த விரதத்தை யனுஷ்டித்துப் பேறு பெற்றவர்கள்: அகஸ்தியர், சக்ராஜன், திலீப சக்ரவர்த்தி, பரதமஹாராஜன், அரிச்சந்திர மஹாராஜன், ஜனக மஹாராஜன், கவுண்டின்னியமுனி முதலியோர்களாவர்.

---

## ஜனார்த்தனம்

அநந்த சயனத்திற்குச் சுமார் 26 மைல் வடக்கிலுள்ள தக்ஷணகயை யென்று சொல்லப்படுகிற இந்த க்ஷேத்திரத்திற்குச் சமுத்திரக்கால்வாயில் நாவாய்களிற் செல்வது சௌகரியம். இவ்விடம் ஜனார்த்தனன், சக்கரபாணி முதலிய பதின்மூன்று தீர்த்தங்களுள. இராவணாதி இராக்ஷதர்களை வதைத்ததால், ஸ்ரீராமருக்கு நேரிட்ட பிர்ம்மஹத்தி தோஷம் நீங்கும்படி பிரமதேவன் யாகம் செய்த ஸ்தலம். பரதருக்குத் தான் வருவதாகச் சொன்ன காலந்தப்பிப் போகிறதென்று ஸ்ரீராமர் பிரமதேவன் செய்த யாகத்திற்கு வராது இலங்கையிலிருந்து அயோத்திக்கு நேராகச் சென்றமையால், யாகத்திற்கு வந்திருந்த தேவர்கள், முனிவர், இருடிகள்முதல் யாவரும், ஸ்ரீராமர் பட்டாபிஷேக மஹோற்சவத்தைப் பார்க்க அயோத்திக்குப் போயினராதலால் யாகசாலையில் காமதேனுவா லுண்டான பர்வதாகாரமான அன்ன பதார்த்தங்களைப் புசிக்க யாருமில்லை யெனப் பிரமதேவன் சிந்திக்க, மஹாவிஷ்ணு ஜனார்த்தனனென ஒரு பாலனாகி வந்து அவற்றைப் புசித்துப் பிரமதேவனுக்குக்

காக்ஷி கொடுத்த ஸ்தலம். பாகீரதி பூசித்துப் பேறுபெற்ற ஸ்தலம். அக்கினிதேவன் பூசித்துப் பிரமதேவன் செய்த யாகத்திலுண்டான பஸ்மம் தரித்தவர் கங்கை முதலிய புண்ணிய நதிகளில் ஸ்நானம் செய்த பலன்பெற வரம்பெற்ற ஸ்தலம். சாபத்தால் மானிட வுருவங்கொண்டு தவம் செய்திருந்த நவப்பிரமாக்கள் அஸ்வத்த விருக்ஷமாகவிருந்த மஹாவிஷ்ணுவுக்குப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்து கதி பெற்ற ஸ்தலம்.

சுப்பிரயஸ்ஸு என்னும் அரசன் பிரமஹத்தியினால் பீடிக்கப்பட்டு ஹிமசேது பரியந்தம் அநேக ஸ்தலவாசஞ் செய்து அகத்திய ரனுக்கிரகத்தால் இத்தல மடைந்து சகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து தவம் செய்யுங்கால், ஓர் நாள் சமுத்திரத்தில் சஞ்சரிக்கிர மஹா உன்னதமான அலையின் மத்தியில் பூர்வம் பிரம்மதேவனுக்குச் சேவை தந்தருளிய ஜனார்த்தனர் அர்ச்சாவதாரகராய்ப் பிரகாசிக்க, சுப்பிரயஸ்ஸு அதிவேகமாய் ஓடி அதைப்பற்றி யாலிங்கனஞ்செய்துகொண்டு வருகையில், சகலதேவர்களும் முனிவர்களும் அங்குவந்த விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட ஒருவிதமான மத்தியில் தேவகுருவால் பிரதிஷ்டை செய்வித்துத் தனக்குற்ற ஹத்தி நீங்கித் தன் இராச்சியஞ் சேர்ந்து சகல ஐஸ்வரியமும் அனுபவித்து முடிவில் விஷ்ணு பதவி யடைந்தனன். விசுவாமித்திரர் பூசித்துப் பிராமணத்துவமடைந்த தலம். வசிஷ்டர் ஆராதித்துப் புத்திரசோகம் போக்கிக்கொண்ட தலம். இந்த சந்நிதிக் கெதிரில் க்ஷீராப்தியில் ஆலிலைமேல் விஷ்ணுமூர்த்தி சயனித்திருந்த பாவனையாக ஒரு கோயிலும், அதற்குப் பின்புறம் ஒரு சிவஸ்தலமு மிருக்கின்றன. இவ்விட மிருந்து வடக்கில் சுமார் 100 மைலிலுள்ள கொச்சிக்கு முன்சொன்ன நாவாய் வழியாகத் தரிசித்துக்கொண்டு சென்று ரெயிலேறி அங்கிருந்து சமுத்திரக் கரையோரமாகவே சுமார் 22[illegible] இருப்புப்பாதை மார்க்கமாய் ஷோரனூர் க[illegible] வழியாய் மங்களூர்த் துறைமுகம் போகவேண்டும்.

## தள்ளிக்கோட்டைக் கடற்கரை யோரத்திற் செய்த பிரார்த்தனை.

"ஓ குன்றுவளம்பொருந்திய குணநிதியே! இக்கடலின் காக்ஷி எவ்வளவு விரிவாகவும் விநோதமாகவு மிருக்கின்றது.

இதன் அலைகள் எவ்வளவு பயங்கரமாகவும் பிரகாசமாகவும் ஜொலிக்கின்றன. இக்கடலுக்குள் எத்தனையோ அனந்த கோடி ஜீவராசிகள் சுகமாக வாழ்ந்து வருகின்றன. இந் நீரின்மீது எத்தனையோ நாவிகா கப்பல்கள் தொலை தூரங்களுக்கேகி யங்கிருக்கு மருமையான பொருள்களைத் தம்மீதேற்றிக் கொண்டுவந்து இங்கிருக்கும் ஜன கோடிகளுக்குக் கொடுத் தாதரிக்கின்றன. ஆஹா! என்ன விந்தையான நியமனம். கேவலமாகிய ஒரு சிறு கடலின் இருப்பும் காக்ஷியும் உபயோகமும் இப்படியானால் அபாரக் கடலும் ஆநந்த சாகரமுமாகிய நினது இருப்பும் காக்ஷியும் உபயோகமும் இப்படிப்பட்டதென்று சொல்லி முடியுமோ? இக்கரையோரங்களில் சுறுசுறுப்புள்ள மலையாளிகளும், அமைப்பும் அழகும் பெற்ற மலையாள ஸ்திரீகளும், அடுத்த காடுகளிலும் வீடுகளிலும் உலாவி வேலைகளைச் செய்துவரும் விந்தை மேதினியார் மெச்சத்தக்கதன்றோ. அடுத்த தோப்புகளிலும் தோட்டங்களிலும் மகிமையுள்ள மழைகள் தாரை தாரையாகப் பொழிந்து தாபத்தை நீக்குகின்றன. மலைதரும் பொருள்களில் சிறந்த மிளகு இஞ்சி முதலிய திவ்ய மருந்துகள் ஏராளமாக விளைந்து கண்கள் கொண்டாடச் செய்கின்றன. சேரமான் பெருமான் முதலான அரசர்க்கும், ஸ்ரீ சங்கராசாரியர் ஸ்ரீ குலசேகர ஆழ்வார் முதலான மஹான்களுக்கும் ஜனன ஸ்தானமாகிய இந்த மலையாள தேசத்தில் உன்னைத் தியானிப்பதற்குப் பாக்கியம் பெற்றேன். அந்த ஆசாரியருக்குக் கொடுத்த பக்தி வைராக்கியத்தையும், அரசருக் களித்த தரும எண்ணங்களையும் எனக்கும் கொடுத்து ரக்ஷிப்பாய் சுவாமி! ஓம் தத்சத்.''



# ஈழநாடு.

(அபிதானகோசத்தின்படி)

சோழபாண்டியநாடுகளுக்குத்தென்கிழ்த்திசையிலே, சமுத்திரஞ்சூழ்ந்ததாகவுள்ளது இலங்காதேசம். இதனிடத்தே திருகோணமலை, திருக்கேதீச்சுரம் என்னும் தேவாரம் பெற்ற சிவஸ்தலங்களும், சைவரும் பௌத்தரும் குருண் மதத்தரும் தத்தமதென்று சென்று தரிசிக்கப் பெறுவதாகிய ஸ்ரீசைலமுமுள. பூர்வம் குபேரனும், பின்னர் இராவணன் முதலிய இராக்ஷசரும், பின்னர் சோழரும், பின்னர் பாண்டியரும், அவருக்குப் பின்னர் மகத தேச ராஜபரம்பரையில் வந்தோரும், அவர்வழி வந்த பௌத்தரும் இடையிடையே சோழபாண்டியரும், அரசுபுரியப் பெற்றது. இது தமிழிலே ஈழமென்னும், வடமொழியில் லங்காபுரமென்னும், சிங்களத்துவீபம் என்றும், சேர நாட்டாராலும் ஆரியராலும் சேரத்துவீபமென்றும் வழங்கப்படும். சேரவமிச பாண்டியர் வென்று அரசு புரிந்தகாலத்தில் இந்நாட்டைத் தம்பெயர் விளங்கச் சேரத்துவீபமென வழங்கினர். இலங்கையிலிருந்து சிறை செய்யப்பட்டுச் சென்று சேர நாட்டிலே வசிக்குஞ் சிங்களர் ஈழவர் என்றும், ஈழுவர் என்றும் வழங்கப்படுவர். சேரநாட்டார் வாய்க்கேட்டு ஆரியரும் சேரத்துவீப மென்பாராயினர். சிங்களத்துவீபமென்பதன் பொருள் பட்டைத்திவு. சிம்ஹளம்-பட்டை, லவங்கப்பட்டை.

பாண்டியநாட்டில் விசுவநாதநாயுடு அரசு புரியுங்கால் இத்தீவின் கண்டிராஜன் அவமதித்ததைக் கருதிப் படையெடுத்துப்போய்ச் சண்டைசெய்து சிறை பிடித்து அந்த இராஜ்ஜியத்திற்குத் தமது மைத்துனர் குமார கிருஷ்ணப்ப நாயுடு என்பவரை இராஜனுக்க, அவர் சந்ததியில் விஜய பூபால மஹாராஜர் - கொண்டசாலராஜர் - அங்கிதாங்கிராஜர் - கீர்த்திசிம்ஹலராஜர்-இராசாதிராஜர்-விக்ரமசிம்ஹராஜர் முதலானவர்கள் ஆண்டார்கள். ஆண்டுவந்து அவர்களுக்குள் கலகங்களுண்டாகி, அன்னியர் வசமாகியது. சமீபகாலத்தில் திருவாரூரில் சப்ரிஜிஸ்திரார் ஆக இருந்த தியாகசிம்ஹள மகாராஜா அந்த இராஜவம்சத்தைச் சார்

ந்து பென்ஷன் பெற்றுவந்தார். அவர் சந்ததியார்கள் இப்போதும் கண்டி வடுகர் என்னும் பெயரால் திருச்சி தஞ்சை மதுரை திருநெல்வேலி முதலான விடங்களில் வதிந்து வருகிறார்கள். இதற்குச் சமீபத்திலிருக்கும் யாழ்ப்பாணம் என்னும் தீவில் தமிழ் சைவர்கள் ஏராளமாக இருக்கின்றனர். ஆறுமுகநாவலர் முதலான மஹா வித்வான்கள் இதிற் ஜனித்து பிரசித்திபெற்றவர்கள்.

இனி இந்நாட்டிலுள்ள விசேஷஸ்தலங்களின் மகத்துவங்களை இதனடியிற் சங்கிரகமாகத் தெரிவிக்கிறோம்.

---

## திருக்கோணமலை

(திருக்கோணேச்சுரர், மாதுமையாளம்மை, மகாசுனை தீர்த்தம்.)

சகத்திரிஷி, போதாயனரிஷி முதலியோரும், தேவர்களும் அசுரர்களும் பூசித்த தலம். விராதனென்னும் அரசன் பூசித்துத் தேவேந்திரனாற் றனக்குற்ற சாபம் நீங்கப்பெற்ற தலம். திருஞானசம்பந்த சுவாமிகளால் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## திருக்கேதீச்சுரம்

(கேதிச்சுரர், கௌரியம்பிகையம்மை, குளிர் பூஞ்சோலை தீர்த்தம்.)

பிருகுரிஷி, பருப்பதரிஷி முதலியோர் பூசித்த தலம். மாலியவான் என்னும் அசுரன் பூசித்து நற்கதியடைந்த தலம். திருஞானசம்பந்த சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவர்களாற் பதிகம் பெற்றுள்ளது. திருப்பதிகம்-க.

---

## கதிர்காமம்

(முருகப்பிரானது குன்றுதோறாடல்களிலொன்று.)

சிவசுப்பிரமணியக்கடவுள் பிரணவ சொரூபமாக இருந்து அநேக திருவிளையாடல்கள் நடத்திக்கொண்டெழுந்தருளியிருக்குந் தலம். தேவர்கள் பூசித்துவருகின்ற தலம்.

சற்புத்திரன் என்னும் ஓர்வணிகன் இத் தலத்துக்குச் செல்லும்போது வழியில் ஓர் யானை வந்து அவனைப் பிடிக்க அவன் 'கதிர்காமவேலோனே!' என்று கூவ, ஓர் வேடர் போல வேலோடும் வந்து, அவ் யானையைத் துணித்து, வணிகனை விடுதலை செய்தருளிய தலம். அயிராவசு என்னுமொரு கந்தருவன் தேவகுருவின் வார்த்தையைக் கடந்ததனால் யானையாகும்படி சாபம்பெற்று, இத்தலமுழுதும் பூசித்துத் தேவ உருப் பெற்றபோது அவனது வேண்டுகோளுக்காக ஒப்புக்கொண்டபடி, இக்காலத்தும் உற்சவ காலங்களில் ஒரு யானைவாகனம் எழுந்தருளச் செய்யுந் தலம். இதன் உண்மையுரைக்கில் விரியுமாதலின் விடுக்கப்பட்டது. இதில் திருப்பதிகம் பெற்ற தலம்-உ; சுப்பிரமணிய தலம்-க; ஆக-ங.

இந்நாடு, தென்கீழ்ச் சமுத்திரத்தின் மத்தியி லிருப்பதாகத் தெரிகிறது. சமயாசாரியர்களும் இக்கரையினின்றே தரிசித்ததாக விளங்குகின்றது.

---

## இலங்கை

இப்போது இந்த இலங்கையானது இந்தியாவைச் சேர்ந்த மன்னார்குடாக்கடலுக்கும் வங்காளக் குடாக்கடலுக்கும் மத்தியிலிருக்கிற ஒரு அழகிய தீவு. இது ஒரு காலத்தில் இந்தியாதேச பூமியோடு ஒரு பாகமாகச் சேர்ந்திருந்து அநேக நூற்றாண்டுகளுக்குப் பிறகு தனித்தீவாக மாற்றம் பெற்றதெனச் சில பூகோள சாஸ்திரிகள் எண்ணுகிறார்கள். இது இப்போது தென்வடல் 270 மைல்கள் தூரமும், அகன்ற விடத்தில் 145 மைல்கள் அகலமும் கூடி 25,000 சதுர மைல்கள் விஸ்தீரண முள்ளது. இதன் மத்திய பாகமாகிய பீடபூமி சமுத்திர மட்டத்திற்கு 2000 முதல் 3000 அடிகள் உயரமுள்ளனவாயும், அநேக மலைத்தொடர்களால் சூழப்பட்டனவாயும், அவற்றுள் சில 2000 முதல் 3000 அடிகள் உயரமுள்ளனவாயும். பச்சைப்பசேலென்று மரங்களாலும் செடி கொடிகளாலும் பிரகாசிக்கும் வனங்களை உடையனவாயும், அவைகளிலிருந்து மஹாவலி கங்கை முதலான ஆறுகள் பாய்ந்தோடிச் சுமார் 40 மைல்கள் வரையிலுள்ள பூமிகளுக்குப் பாய்ச்சக் கூடியதாயும் இருக்கின்றது. வடபாகத்தில் சிறுமலைகளும் யாழ்ப்பாண மென்னும் பரியாயத்தீவு மிருக்கின்றன. இது இங்கிலீஷ் கவர்ன்மெண்

டுக்குச் சேர்ந்த தனி ராஜ்ஜியமாகவுள்ளது. இது ஐந்து மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டும், ஒவ்வொன்றுக்கும் ஒரு தலைவர் நியமிக்கப்பட்டும் ஆளப்பட்டு வருகின்றது. இவ்விடத்திய கவர்னருக்குச் சட்ட நிரூபண மெம்பரும் அமுல்தார் மெம்பரும் உதவியா யிருக்கிறார்கள். நீதி பரிபாலனத்திற்கு இதன் பிரதான பட்டணமாகிய கொழும்பில் சுப்ரீம் கோர்ட்டும் அதன் அதிகாரத்திற்குள் மாகாணக் கோர்ட்டுகளு மிருக்கின்றன. 1865ஸு இந்த கவர்ன்மெண்டுக்கு 75,00,000 ரூபாய் வருமானமா யிருந்தது. இப்போது மும்மடங்கதிகப்பட் டிருக்கலாம். இவ்வருமானம் நிலக்கந்தாயம், முக்கியமாக லவங்கப்பட்டையின் வருமானம், உப்பு, மீன், தேங்காய் எண்ணெய், முதலானவைகளால் கிடைக்கிறது. இங்கிருந்து, லவங்கப்பட்டை, காப்பிக்கொட்டை, தேங்காய் எண்ணெய் இவை ஏராளமாக இங்கிலாந்துக்கு ஏற்றுமதியாகின்றன. உப்பு-பாக்கு-கயிறு-மரங்கள்-இந்தியா முதலான விடங்களுக்கு ஏற்றுமதியாகின்றன. இவைகள் முக்கியமாகக் கொழும்பு-காலி-திருக்கோணமலை, வெதுருமுனை முதலான துறைமுகப் பட்டணங்களில் ஏற்றுமதியாகின்றன. இத்தீவு லவங்கப்பட்டை விளைவிற்கு முக்கியமானது. ஒவ்வொரு குடிசைக் கருகிலும் கரும்பு - புகையிலை - காப்பி இவை ஏராளமாய் விளைகின்றன. அன்றியும் பாக்கு, ஏலக்காய், மிளகு, நெல் இவையும் ஏராளமாய் விளைகின்றன. வடக்கே பனைமரங்களும், தெற்கே தென்னையும் செழிப்பாய் விளைகின்றன.

இதன் காடுகளில் புலி ஒன்று தவிர யானை முதலான மிருகங்களும், பாம்புகளு மதிகம். வெள்ளைக்கற்கள், பச்சை, ரத்னம் முதலிய தாதுக்கள் கண்டியில் அதிகம் கிடைக்கின்றன. சிலவிடங்களில் முத்துச்சலாபம் செய்யப்பட்டு வருகின்றது. இதில் 1865ஸு 15 லக்ஷம் ஜனங்க ளிருந்தார்கள். இப்போது மும்மடங் கதிகமாயிருக்கலாம். இவர்களில் சிங்களவர்களும் இந்துக்களும், மகம்மதியர்களும், வேடர்களும் இருக்கிறார்கள். இந்துக்கள் தெற்கிலும், தென்மேற்கிலும், முக்கியமாக யாழ்பாணத்திலு மிருக்கிறார்கள். மத்தியபாகத்தில் ஐரோப்பியரும் மற்ற ஜாதியார்களு மிருக்கின்றனர். இந்துக்களிற் பெரும்பான்மையோர் தமிழ் சைவர்கள். சிங்களவர் பெரும்பான்மையோர் புத்தமதஸ்தர்கள். இவர்களில் அநேகர் ரோமன் கத்தோலிக் கிறிஸ்தவர்கள்

இங்கே அநேக கலாசாலைகளும் பெண் பாடசாலைக ளும் இருக்கின்றன. இவ்விடத்தில் ரோட்டுகள் விஸ்தீரண மாயும் அழகாயும் இருக்கின்றன. கொழும்பிலிருந்து கண்டிக்குப்போகும் வழியில் ஒருமலையை 500 அடிகள் குடைந்தெடுத்து ரோட்டு போடப்பட்டிருக்கின்றது. ரயில் ரோடுகளும் தந்தி சமாச்சாரக் கம்பிகளும் போடப்பட் டிருக்கின்றன. பிரதான பட்டணமாகிய கொழும்பில் அநேக பெரிய ரோடுகளும் கட்டடங்களு மிருக்கின்றன. இங்கிருக் கும் கோட்டை பலமானது. இதற்கு 72 மைல்கள் தூரத்தி லிருக்கும் கண்டியானது மலைகளால் சூழப்பட்டது. இது ஆதியில் அரசர் வாழ்ந்ததும், இப்போதும் கவர்னரால் போ க்குவரவு செய்யுமிடமாயு மிருக்கிறது, சுமார் 6200 அடி கள் உயரமுள்ள ரியூராலியா என்னும் மலையானது வசந்த காலவாசஸ்தலம். திருக்கோணமலை என்னப்பட்டது வடகிழ க்குப் பருவகாலத்தில் கப்பல்கள் பந்தோபஸ்தாய்த் தங்கு மிடம். யாழ்ப்பாணம் ஓர் அழகிய பட்டணம். காலி என்பது கல்கத்தா சென்னை பம்பாய் முதலான விடங்களிலிருந்து வரும் கப்பல்கள் தங்கிப்போகுமிடம்.

இவ்விடத்தில் புத்தரது கோயிலில் புத்தருடைய பல்லை ஒரு பொன் தாமரை மலர்மேல் வைத்து வணங்கி அதற்கு விசேஷ உற்சவம் கொண்டாடிவருகிறார்கள். இந்த லங்கை க்கு இந்தியாவிலிருந்து தூத்துக்குடி வழியாகப் போக்கு வரவு செய்வதில் காலதாமதமாகிறதைக் கருதி இப்போது இராமேஸ்வரத்திலிருந்து புகைவண்டி கப்பல் ரோடு போடப்பட்டிருப்பதால் பிரயாணிகள் சுலபமாகவும் சுக மாகவும் போய் வரலாம்.

## திவ்விய தேசயாத்திரையின் சரித்திரம்

2-ம் பாகம்

முற்றுப் பெற்றது.



